*Table of Contents*


பாயிரம் ........................................................ 3
கடவுள் வணக்கம் ........................................ 4
அவையடக்கம் .............................................. 7
ஆற்றுப் படலம் ........................................... 14
நாட்டுப் படலம் .......................................... 29
நகரப் படலம் ............................................... 67
அரசியற் படலம் ........................................ 114
திரு அவதாரப் படலம் .............................. 121
கையடைப் படலம் ..................................... 201
தாடகை வதைப்படலம் ............................ 218
வேள்விப்படலம் ....................................... 251
அகலிகைப் படலம் .................................. 285
மிதிலைக் காட்சிப் படலம் ...................... 307
குலமுறை கிளைத்து படலம் ..................... 400
கார்முகப் படலம் ...................................... 421
எழுச்சிப் படலம் ....................................... 460
சந்திரசயிலப் படலம் ............................... 504
வரைக் காட்சிப் படலம் ........................... 524

***பூக் கொய் படலம்...................................... 552***
***நீர்விளையாட்டுப் படலம்........................ 584***
***உண்டாட்டுப் படலம் ............................... 606***
***எதிர்கொள் படலம்.................................... 644***
***உலாவியற் படலம் ..................................... 668***
***கோலம் காண் படலம்.............................. 702***
***கடிமணப் படலம்....................................... 737***
***பரசுராமப் படலம் ..................................... 803***

# பாயிரம்

பொதுப்பாயிரம். தற்சிறப்புப் பாயிரம் என்ற இரண்டு வகையினுள் 'உலகம் யாவையும்' என்பது முதலான பாடல்கள் தற்சிறப்புப் பாயிரம் எனப்படும். 'தெய்வ வணக்கமும் செயப்படு பொருளும். எய்த உரைப்பது தற்சிறப் பாகும்' என்பது தற்சிறப்புப் பாயிர விளக்கம்.

தாம் மேற்கொண்ட முயற்சி இனிது நிறைவேற வேண்டும் என்று கருதுகின்ற கவிஞர் கடவுள் வாழ்த்துடன் தொடங்குதல் மரபு. வாழ்த்தும் வணக்கமும் என இருவகைப்படும் கடவுள் வாழ்த்து. இங்கே சரண் புகுவதை முடிபாகக் கூறுவதால் இது வணக்கத்தின்பாற் படுவதாகிறது.

## கடவுள் வணக்கம்
கலிவிருத்தம்

1. **உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்.**
**நிலைபெறுத்தலும். நீக்கலும். நீங்கலா**
**அலகு இலா விளையாட்டு உடையார்-அவர்**
**தலைவர்; அன்னவர்க்கே சரண் நாங்களே.**

**உலகம் யாவையும்** -எல்லா உலகங்களையும்; **தம் உள ஆக்கலும்** -தாம் தம் சங்கற்பத்தால் படைத்தலையும்; **நிலை பெறுத்தலும்** - நிலைத்திருக்குமாறு காப்பதையும்; **நீக்கலும்** -அழித்தலையும்; **நீங்கலா. அலகு இலா விளையாட்டு உரையார்** - என்றும் முடிவுறாததும் அளவற்றதுமாகிய விளையாட்டாக உடையவராகிய; **அவர் தலைவர்** - அவரே தலைவ ராவார்; **அன்னவர்க்கே நாங்கள் சரண்** - அப்படிப்பட்ட பரமனுக்கே நாங்கள் அடைக்கலம்.

மங்கலச் சொல்லொடு தொடங்கவேண்டும் என்பது மரபு; அம்மரபின்படி 'உலகம்' என்ற மங்கலச் சொல் கவிச்சக்கரவர்த்தியின் வாக்கில் முதலாக எழுகிறது. உலகம் என்பது நிலையியற் பொருள். இயங்கியற் பொருள் (சர. அரசம்) எனவும் உயர்திணை. அஃறிணை எனவும். உயிர்ப்பொருள். உயிரில் பொருள் எனவும் பலவாறு குறிக்கப்படுகின்ற யாவற்றையும் உள்ளடக்கியது. தாம் உள ஆக்கல்: தன்னைப் படைப்பர். பிறர் இல்லாப் பரம்பொருள் தன் சங்கற்பத்தால் படைத்தல். 'உள ஆக்கல்'; இல்லாததைப் படைத்தல் அன்று; நுண்பொருளைப் பருப் பொருளாக்குதல் என்று கூறுவர். 'இல்லது தோன்றாது' என்பது தத்துவம்.

படைத்தல். காத்தல். அழித்தல் ஆகிய மூவகை அருந்தொழில் பரமனுக்கு மிக மிக எளிது என்பதை 'விளையாட்டு' என்ற சொல்லாட்சி குறிக்கிறது. 'காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி' என முத்தொழிலை இறைவன் விளையாட்டாக மாணிக்கவாசகர் குறித்தது காண்க. (திருவெம்பாவை 12). இறைவனின் இவ்விளையாட்டுத் திறத்தை

**துன்பமும் இன்பமும் ஆகிய செய்வினையாய்**
**உலகங்களுமாய்**
**இன்பம்இல் வெம்நாடு ஆக்கி. இனியநல்**
**வான் சுவர்க்கங்களுமாய்.**
**மன்பல உயிர்களும் ஆகிப் பலபல**
**மாய் மயக்குகளால்**
**இன்புறும் இவ்விளையாட்டு உடையானைப்**
**பெற்று ஏதும் அல்லல் இலனே.**

*என்ற நம்மாழ்வார் திருவாக்கால் (3. 10. 7) உணரலாம். விளையாட்டுடைய பெருமானைப் பெற்றமையால் ஏதும் அல்லல் இல்லை என்பதனால் கவிச் சக்கரவர்த்தி 'அத்தலைவருக்கே சரண் நாங்களே' என்கிறார்.*

*நீங்கலா அலகிலா என்ற பெயரெச்சங்கள் விளையாட்டு என்ற பெயர்க்கு விளக்க அடைகளாயின.*

*அன்னவர்க்கே ஏகாரம் பிரிநிலை யாயும் தோற்றமாகவும் கொள்ளத்தக்கது.*

*கம்பர் வைணவ சமயத்தர் என்பதை நிறுவுவதற்கு எண்ணற்ற அகச்சான்றுகள் உண்டு. 'இயங்கு பல்லுயிர்க்கு ஓர் உயிர்' என நின்ற இராமன்) என்ற தொடரை ஒரு சான்றாகக் கொள்ளலாம். அயோத்தியா காண்டம். சுந்தர காண்டம் ஆகியவற்றின் கடவுள் வாழ்த்துச் செய்யுள்களில் இராம பிரானையே பரம்பொருளாகக் கவிச்சக்கரவர்த்தி காட்டுவது தெளிவு. தமக்குரிய வழிபடு கடவுளாக வெளிப்படைச் சொற்களால் இராமபிரானை / திருமாலை குறிப்பிடத் தயங்காதவர் கம்பர். அவர் காப்பியத் தொடக்கத்தில் பாடும் கடவுள் வாழ்த்தில் பொதுமை பேணுகிறார் என்பதை மனங்கொள்ளல் நலம். வலிந்து பொருள் கொள்வது என உறுதி செய்து கொண்டால் முதல் மூன்று பாடல்களுக்கும் வைணவச் சார்பான உரை வகுத்தல் கூடும். கம்பர் எண்ணியிருந்தால் பொதுமைச் சொல்லால் குறிக்காமல் வெளிப்படையாகவே திருமால் சீர் பாடியிருப்பாரே. ஏன் அவ்வாறு செய்யவில்லை எனச் சான்றோர் சிந்திக்கவேண்டும். கம்பரின் கடவுட் கொள்கை பற்றி மிக விரிவாக ஆராய்வதற்கு இங்கே இடமில்லை; எனினும். பரம்பொருள் பொதுவில் நின்று விளையாடுபவர் என்பதை ஏற்கும் வைணவர் அவர் என்று சுருங்கச் சுட்டி அமைவோம்.*

*'சரண் நாங்களே' என்ற தொடர் இராமாயணத்தைச் சரணாகதி சாத்திரம் என்று குறிக்கும் மரபை நினைவூட்டுகிறது.*

***2.*** **சிற்குணத்தர் தெரிவு அரு நல் நிலை**
**எற்கு உணர்த்த அரிது; எண்ணிய மூன்றனுள்**
**முற் குணத்தவரே முதலோர் அவர்**
**நற்குணக் கடல் ஆடுதல் நன்றுஅரோ.**

***சிற்குணத்தர்*** *- மெய்யறிவினராகிய கடவுளின்;* ***தெரிவு அரு நல் நிலை*** *-தெரிந்து கொள்ளுதற்கு அரிய நல்ல தன்மை;* ***எற்கு உணர்த்த அரிது*** *- என்னால் எடுத்துரைத்து உணர்த் தல் அரியதாகும். (ஆயினும்);* ***எண்ணிய மூன்றனுள்*** *- சான்றோர்களால் எண்ணப்பட்ட சத்துவம். இராஜசம். தாமசம் என்ற மூன்று குணங்களில்;* ***முற்குணத்தவரே முதலோர்*** *- முதலில் சொல்லப்பட்ட தத்துவ குணம் கொண்டவரே மேலோராவார்;* ***அவர் நற்குணக் கடல்*** *- அம்மேலோரின் நற்குணமாகிய கடலிலே;* ***ஆடுதல் நன்று*** *- மூழ்கித் திளைத்தல் நல்லது.*

*கடவுள் வாழ்த்துப் பகுதியில் சத்துவ குணமுடையவர் பற்றிப் பேசுவது ஏன் என்று எண்ணிப் பார்க்கத் தூண்டுகிறது. இப்பாடல் 'சிற்குணத்தர் அறிவே வடிவான / பூரண ஞானமாகிய பரம்பொருள். அப் பரம்பொருளை உணர்த்துதல் அரிது என்கிறார். முதலில். அடுத்து. முற்குணமாகிய சத்துவ குணம் கொண்டோரின் குணக்கடலில் ஆடுதல் நன்று என்கிறார். இவ்விரு கருத்துக்களுக்கும் இடையேயுள்ள தொடர்பினை உய்த்துணர வேண்டும். பிரகலாதன். அனுமன். வீடணன் போன்ற சத்துவ குணமுடையாரின் பெருமைகள் இக்காப்பியத்துள் விரித்துரைக்கப்படுகின்றன - அதாவது அன்னாரின் நற்குணக் கடலில் கவிச்சக்கரவர்த்தி ஆடித் திளைக்கிறார். அவ் வழியில் பரம்பொருளின் இயல்பினை. அவதாரமாக எழுந்தருளிய பகவானின் இயல்பினை உணர்த்த முயல்கிறார். பாகவதர்கள் வழியாக பகவானை உணர்ந்து உணர்த்தும் முயற்சி இது. எனவே இச் செய்யுளும் கடவுள் வணக்கப் பகுதியில் இடம் பெறுகிறது. சத்தும் சித்துமாய்ப் பொழியும் பரத்தை. சத்துவ குணத்தர் வாயிலாக உணர்ந்து ஆனந்தம் அடையலாகும் என சச்சிதானந்த நிலையை இச்செய்யுள் விளக்குகிறது.*

*'சிற்குணத்தர்' என்று பரம்பொருளைக் குறித்த கவிச் சக்கரவர்த்தி. 'குணங்களால் உயர்ந்த வள்ளல்' என்று (479) இராமபிரானைக் கவிக் கூற்றாகக் குறிப்பது ஒப்பிட்டுணரத் தக்கது.*

*குணக்கடல் - உருவகம். அரோ - அசை.*

***3. ஆதி. அந்தம். அரிஎன. யாவையும்***
***ஓதினார். அலகு இல்லன. உள்ளன.***
***வேதம் என்பன - மெய்ந் நெறி நன்மையன்***
***பாதம் அல்லது பற்றிலர் - பற்று இலார்.***

***அரியன யாவையும்** - அருமைப்பாடு உடையவை என்று சொல்லப்படும் எல்லாத் துறைகளையும்; **ஆதி அந்தம் ஓதினார்** - முதலும் முடிவுமாக முற்றக் கற்றவர்களும்; **அலகு இல்லன** (அலகு) **உள்ளன** - (வகைகளால்) அளவு இல்லாதவையும் (சாகைகளால்) அளவு உள்ளனவு மாகிய; **வேதம் என்பன** - வேதங்கள் என்று சொல்லப்படுவனவும்; **பற்று இலார்** - அகப்பற்றும் புறப்பற்றும் இல்லாதவர்களும்; **மெய்ந்நெறி நன்மையன்** - ஞான நெறிக் கனியாகிய இறைவனது; **பாதம் அல்லது பற்றிலர்** - ஆதாரமாகப் பிறிது ஒன்றையும் பற்ற மாட்டார்கள்.*

*முற்ற ஓதிக் கற்றவர்க்கும் வேதங்களுக்கும் பற்று அற்றவர்க்கும் கடைச்சரண் பகவானின் பாதங்களே. அறிவின் முதிர்ச்சி கலையின் முடிபு பற்றுறுதியின் எல்லை..... யாவுமே கடைத்தேற இறைவனின் சுழலொன்றே கதி என்கிறது இப்பாடல். எந்நிலை உற்றார்க்கும் அரணாவது சரணாகதியே என்பது பக்தி நெறியினர் ஏற்கும் முடிபு; அதனைக் கவிச் சக்கரவர்த்தி இப்பாடலால் உறுதி செய்கிறார்.*

*பாடலுக்குப் பொருள் காண்பதற்கு அரிய வகையில் சொற்களின் கிடக்கை அமைந்துள்ளது. இக்கிடக்கையைப் பயன்படுத்திப் பலவாறு பொருள்கொண்டனர் சான்றோர்; அவர்தம் உரைப் பெருமைத் திறத்தை குறைக்குமாறில்லை. எனினும். இங்குக் கண்ட பொருள் தெளிவு காண உதவுகிறது.*

*'கோடிப் பழமறைகள்' என்பதால் வேதங்கள் அலகு இல்லன எனவும். நான்கு' எனப் பகுக்கப்பட்டதால் அலகு உள்ளன என்றும் சொற்கூட்டிப் பொருள்கொண்டார் உண்டு. வேதம் ஓதத் தொடங்கும்போதும் ஓதி முடிக்கும்போதும் 'அரி' என ஓதுதல் சுட்டி. 'ஆதி அந்தம் அரியென' எனப் பாடங்கொண்டு உரை வகுத்தார் உண்டு. எவ்வாறு பொருள் கொண்டாலும் செய்யுளின் சொற்கிடக்கை தெளிவு அற்றதாகவும் இடர் தருவதாகவும் உள்ளது.*

*பலவாறு பொருள் கொண்டாலும் பரமன் பாதத்தைப் பற்றிடும் அடைக்கலக் கருத்து யாவர்க்கும் உடன்பாடே.*

*உலகம் யாவையும்; என்னும் திருவிருத்தம் முதல் இம்மூன்று பாட்டானும் பொதுமையாற் பிரமத்தை வணங்கினான் கம்பன். "இது மகா காவியமாகையால் இம் மூன்று பாட்டுக்கும் தனித்தனியே பொருள் விரிக்கிற் பெருகுமென அறிக"--" இராமாயணக் கருப்பொருள்" என்ற பழைய அரும்பதவுரை தரும் குறிப்பு இது. (ஐயரவர்கள் நூலகப் பதிப்புக் காண்க)*

*முதற் பாடலால் பகவானை நேரிடையாகவும் இரண்டாம் பாடலால் பாகவதர் துணையால் பகவானை மறைமுகமாகவும் மூன்றாம் பாடலால் சரணாகதியைச் சுட்டிய வகையில் பகவானை முடிநிலையாகவும் கவிச் சக்கரவர்த்தி விளக்குகிறார் என இயைபு காண்டலும் ஒன்று.*

*ஆதி அந்தம் அரியென - கம்பன் கழகம் கொண்ட பாடம்.*

### அவையடக்கம்

***4.*** **ஓசை பெற்று உயர் பாற்கடல் உற்று. ஒரு**
**பூசை முற்றவும் நக்குபு புக்கென.**
**ஆசை பற்றி அறையலுற்றேன் - மற்று. இக்**
**காசு இல் கொற்றத்து இராமன் கதைஅரோ!**

***ஒரு பூசை** -ஒரு பூனை; **ஓசை பெற்று உயர் பாற்கடல்புக்கு** - ஒலி மிகுந்ததும் உயர்ந்ததுமான பாற்கடலை அடைந்து; **முற்றவும் நக்குபு புக்கென** - (அந்தப் பாற்கடல்) முழுவதையும் நக்கப் புகுந்தாற் போல; **இக் காசு இல் கொற்றத்து இராமன் கதை** - குற்றமில்லாத வெற்றி கொண்ட இராமபிரானது இக்கதையை; **ஆசை பற்றி அறையலுற்றேன்** - ஆசை கொண்டமையால் சொல்லத் தொடங்கினேன்.*

*ஓயாத ஒலி கடலுக்கு இயல்பு; ஆதலின் 'ஓசை பெற்று உயர் பாற்கடல்' என்றார். தேவருக்கு அமுது ஈந்த சிறப்பைப் பற்றி உயர் பாற்கடல் என்றார் போலும். எளிய பூனை ஆழ்ந்து பரந்த பாற்கடல் முழுவதையும் நக்கிக் குடித்துத் தீர்த்துவிட முடியாது என்பது தெளிவு. ஆயினும். அந்த முயற்சி குறித்து ஒரு பூனை பாற்கடலை அடைந்திருக்கிறது; இம்முயற்சிக்கு ஆற்றலை விடப் பேராசையே காரணமாக இருக்கமுடியும். அதுபோலத் தன் ஒப்பார் இல்லா அப்பனாகிய நடையில் நின்றுயர் நாயகனின் புகழ்க் கடலை அளந்துரைக்க முடியாது என்பது தெளிவு. ஆயினும். ஆற்றல் கருதாத பேராசை காரணமாக மட்டுமே இச்செயலில் துணிந்து இறங்கியிருப்பதாகக் கவிச்சக்கரவர்த்தி கூறுகிறார். உவமையணி. (பூனையை உவமையாகக் கொள்ளாமல் ஆசை பற்றிய அதன் முயற்சியையே உவமையாகக் கொள்ளல் வேண்டும்)*

*நக்குபு: செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சத்தைச் செய என்னும் வாய்பாட்டு வினையெச்சமாகத் திரித்துப் பொருள் கொள்ள வேண்டும். (எச்சத் திரிபு)*

*இராமபிரானது வெற்றி குற்றமற்ற வெற்றி என்பார் 'காசு இல் கொற்றம்' என்றார். பின்னர் வாலிவதை போன்ற செய்தி வரும்போது இத்தொடரை நினைந்து கணிக்க வேண்டும்.*

***5.** **நொய்தின் நொய்ய சொல் நூற்கலுற்றேன்--என்னை!-**
**வைத வைவின் மராமரம் ஏழ் துளை**
**எய்த எய்தவற்கு எய்திய மாக்கதை**
**செய்த செய் தவன் சொல் நின்ற தேயத்தே.***

***வைத வைவின்** - (பெரியோர்கள்) சாபமிட்டு வைது சொல்லும் வசவுச் சொல் உடனே பலிப்பது போல; **மராமரம் ஏழ் தொளை எய்த** -ஏழு மாமரங்களும் எய்தவுடனேயே தொளைபடும்படி; **எய்வதற்கு எய்திய மாக்கதை** -அம்பு எய்தவனுக்கு அமைந்த பெருமை மிகு கதையை; **செய்த செய்தவன்** -ஆதிகாவியமாக இயற்றிய தவ முனிவனாகிய வான்மீகியின்; **சொல் நின்ற தேயத்தே** -வாக்கு நிலை பெற்றிருக்கின்ற இந்த நாட்டில்; **நொய்தின் நொய்ய சொல்** -எளிமையினும் எளிமையான சொற்களால்; **நூற்கலுற்றேன்** - இந் நூலை இயற்றத் தொடங்கினேன்; **எனை** -என்னே வியப்பு!*

*நொய்ம்மை: மென்மை. எளிமை. இங்கே நொய்ய சொல். கருத்தூற்றமற்ற வெள்ளைச் சொல்லைக் குறித்தது. நிறைமொழி மாதர் அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் உடன் பலிக்கும். விளைவு குறித்தது இவண் வந்த உவமை. இராமபிரானின் திறம்பற்றிய நம்பிக்கை பற்றிச் சுக்கிரீவன் மனத்தில் ஐயம் தோன்றியபோது ஏழு மராமரங்களை ஒரே கணை எய்து. கணத்தில் துளைத்துக் காட்டிய செயல் இங்கே நினைவூட்டப்படுகிறது. இராமபிரானின் கதை சொல்லுதற்கு வான்மீகி முனிவர் பெருந்தவம் செய்திருக்க வேண்டும்; இக் குறிப்பினை 'மாக்கதை செய்த செய்தவன்' என்ற தொடர் தருகிறது. ஏழு என்பதன் இறுதிக் குற்றியலுகரம் தொக்கு. 'ஏழ்' என நின்றது. நூல் என்பது உவமையாகு பெயராகக் காப்பியத்தைச் சுட்டிற்று. என்னை என்ற வியப்புச் சொல் இடைக் குறைந்து எனை (என்னை வியப்பு) என நின்றது.*

***6.	வையம் என்னை இகழவும். மாசு எனக்கு எய்தவும். இது இயம்புவது யாது எனின்.-
பொய் இல் கேள்விப் புலமையினோர் புகல்
தெய்வ மாக் கவி மாட்சி தெரிக்கவே.***

***வையம் என்னை இகழவும்*** - *உலகத்துப் பெரியோர் என்னை ஏளனம் செய்யும்படியாகவும்;* ***மாசு எனக்கு எய்தவும்*** *-அந்த ஏளனம் காரணமாக எனக்குக் குற்றம் நேரிடும்படியாகவும்;* ***இது இயம்புவது யாது எனின்*** *-இந்தக் காப்பியத்தைப் பாடுதற்குக் காரணம் யாது என்று கேட்டால்;* ***பொய் இல் கேள்விப் புலமையினோர் புகல்*** *- பொய்ம்மை இல்லாத கேள்வியினால் உண்டாகிய புலமையாளராகிய வான்மீகி முதலானோர் சொல்லிய;* ***தெய்வ மாக் கவி மாட்சி தெரிக்கவே*** *- தெய்வத் தன்மையால் பெருமை கொண்ட கவிகளின் பெருமையை உலகிற்கு உணர்த்தலே யாகும்.*

*வையம்: உலகம்; இங்குக் கல்வி. கேள்வி. ஞானங்களால் உயர்ந்த பெரியோரைக் குறித்து. 'சான்றோரின்' ஏளனத்துக்கும் புலமைக் குற்றத்துக்கும் இலக்காக நேரிடும் என்பதை உணர்த்தும். இக்காப்பியம் இயற்ற முனைந்ததற்கும் போற்றுதலுக்கும் புலமை மாண்புக்கும் இடமான வான்மீகி முதலான சான்றோர்கள் அருளிய தெய்வ மாக்கவிகளின் பெருமை புலப்படுத்தும் ஆர்வமே காரணம் என்கிறார் கவிச்சக்கரவர்த்தி. கல்வியிற் பெரிய கம்பரின் அடக்கம் இருந்தவாறு!*

*பொய் இல் கேள்விப் புலமையினோராக வடமொழியில் இராம கதை பாடிய வான்மீகி. வசிட்டர். போதாயனர் ஆகியோரைச் சொல்லுவர். பொய் இல் புலவர் என்ற சிறப்பினைத் திருவள்ளுவர்க்குச் சேர்ப்பது தமிழ் மரபு. இம்மரபின்படி குறளாசிரியர் நெறியினையே கம்பர் குறித்துப் போற்றியதாகக் கம்பனடிப் பொடி கணேசனார் விளக்குவார். அந்தக் கருத்தை மையப்படுத்தித் திரு. மு. இராமசாமி ஓர் ஆய்வு நூல் எழுதியுள்ளார்.*

***7.	துறை அடுத்த விருத்தத் தொகைக் கவிக்கு
உறை அடுத்த செவிகளுக்கு ஓதில். யாழ்
நறை அடுத்த அசுண நன் மாச் செவிப்
பறை அடுத்தது போலும்-என் பாஅரோ.***

***துறை அடுத்த*** *- பல்வேறு வகைப்பட்ட;* ***விருத்தத் தொகைக் கவிக்கு*** *-செய்யுள் தொகுதியாலாகிய கவிதைக்கு;* ***உறை அடுத்த செவிகளுக்கு*** *-இடமாக உள்ள செவிகளுக்கு;* ***என்பா ஓதில்*** *-என் கவிதைகளை ஓதினால்;* ***யாழ் நறை அடுத்த*** *- யாழிசை யாகிய தேனைப் பருகுகின்ற;* ***அசுண நன் மாச்செவிக்கு*** *-அசுணமாகிய நல்ல விலங்கின் செவிகளிலே;* ***பறை அடுத்தது போலும்*** *-(கடுமையான) பறையோசை வீழ்ந்ததைப் போன்றது. இசையில் மகிழ்ந்து திளைக்கும் அசுணம். பறையின் வல்லோசை கேட்டால் உயிர் விட்டுவிடும் என்பர். அதுபோல 'நற்கவிதைகள் கேட்டுத் திளைத்த செவிகளில் என் புல்லிய பாவின் ஓசை வீழ்ந்ததால் கேட்டோர் துன்புறுவர்' என்கிறார் கம்பர்.*

*துறை: பல பிரிவுகள்; அகத்துறை புறத்துறைகளைக் குறித்ததாகக் கொள்ளலாம். விருத்தம் என்பது ஒருவகை யாப்பு; அச்சொல் இங்கே பொதுமை நிலையில் எல்லா வகைச் செய்யுள்களையும் குறித்து வந்தது. உறை: இடம். 'யாழ்' - இங்கு யாழில் பிறக்கும் இசைக்கு ஆகுபெயர். யாழ் நறை -யாழிசையாகிய தேன்; உருவகம். விலங்காயினும் இன்னிசையில் திளைப்பதால் 'நன்மா' என்றார். பறை - ஆகுபெயராய் பறையோசையைக் குறித்தது. அரோ -அசை.*

***8. முத்தமிழ்த் துறையின் முறை நோக்கிய***
***உத்தமக் கவிஞருக்கு ஒன்று உணர்ந்தவென்:-***
***'பித்தர் சொன்னவும். பேதையர் சொன்னவும்.***
***பத்தர் சொன்னவும். பன்னப் பெறுபவோ?'***

***முத்தமிழ்த் துறையின்** -இயல். இசை. நாடகம் என்று பகுக்கப்படும் தமிழ்த் துறைகளின்; **முறை நோக்கிய** -(நூல்களின்) முறைமைகளை ஆராய்ந்தறிந்த; **உத்தமக் கவிஞர்க்கு** -உயர்ந்த புலவர்களுக்கு; **ஒன்று உணர்த்துவென்** -ஒன்றைத் தெரிவித்துக் கொள்கிறேன் (அது யாது எனில்); பித்தர் சொன்னவும் -பயித்தியக்காரர்கள் சொன்ன சொற்களும்: **பேதையர் சொன்னவும்** -அறிவற்றோர் சொன்ன சொற்களும்; **பக்தர் சொன்னவும்** - பக்தர்கள் சொன்ன சொற்களும்; **பன்னப் பெறுபவோ** - ஆராயப்ப்படுவனவோ? (ஆராயும் தகுதிடற்றவை என்பதாம்)*

*முன்னைய பாடல்களில் பொதுமையாகப் பேசிய கவிச்சக்கரவர்த்தி. இப்பாடலில் நேராகத் தமிழ்த் துறை முற்றிய புலவர்களை நோக்கிப் பேசுகிறார். 'பித்தர் மனத்தெளிவு இல்லாதவ ராதலானும். பேதையர் பகுப்பறிவு இல்லாதவ ராதலானும். பத்தர் பரவச ராதலானும் அவர்களாற் சொல்லப்பட்டனவற்றில் குணங் குற்றம் நாடப் புகல் மணற் சேற்றிற் கல் ஆய்தலாமாதலின். பித்து. பேதமை. பத்தி என்னும் மூன்றனையும் ஒருங்குடைய சொல்லினும் குணங் குற்றம் நாடல் உத்தமக் கவிகட்குத் தக்க செயல் அன்று என்றாயிற்று''- காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு அவர்கள் விளக்கம் இது.*

*'பெறுபவோ'-ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது; பன்னத் தகுதியற்றவை என்பது கருத்து. பின் இரண்டு அடிகள் பிறிதுமொழிதல் அணி.*

*'அன்பு எனும் நறவம் மாந்தி. மூங்கையான் பேசலுற்றான் என்ன யான் மொழியலுற்றேன்' என்ற கவி வாக்கு(32) இங்கு ஒப்பிட்டு நோக்கத் தக்கது.'*

***9. அறையும் ஆடரங்கும் மடப் பிள்ளைகள்***
***தறையில் கீறிடின். தச்சரும் காய்வரோ?***
***இறையும் ஞானம் இலாத என் புன் கவி.***
***முறையின் நூல் உணர்ந்தாரும். முனிவரோ?***

***மடப் பிள்ளைகள்*** *-அறியாமை யுடைய குழந்தைகள்;* ***அறையும் ஆடரங்கும் தறையில் கீறிடின்*** *-அறையும் நாடக மேடையுமாகத் தரையிலே கோடு கீறி விளையாடினால்;* ***தச்சரும் காய்வரோ*** *- சிற்பக் கலை வல்லவர்கள் அக்குழந்தைகளைக் கோபிப்பார்களோ?; (அது போல);* ***இறையும் ஞானம் இலாத என் புன்கவி*** *- சிறிதளவேனும் தெளிவு இல்லாத என் புல்லிய கவியைக் கேட்டு;* ***முறையின் நூல் உணர்ந்தோரும் முனிவரோ*** *-முறையாக நூல்களை ஓதி உணர்ந்த புலவர்கள் சினம் கொள்வாரோ? (குழந்தைகளின் தரைக் கீறல் கண்டு சிற்பிகள் சினவார்; என் புனவி கேட்டுப் புலவர்கள் சினவார்).*

*குச்சி கொண்டு தரையில் கோடுகள் இட்டுத் தம் கற்பனைக் கண்களால் மாட மாளிகைகளைக் காணும் திறம் பேதையராயினும் குழந்தைகளுக்கு உண்டு. துறையடுத்த கவித்திறம் புலமைத்திறம் இல்லெனினும் அன்பெனும் நறவம் மாந்திய பித்தனாகிய கவிஞனுக்குக் கற்பனையில்பல நற்றிறம் தோன்றும். நூலறிவால் பகுத்தறிவைப் பெருக்கியுள்ள புலவோர்க்குக் கவிப்பித்தன் நிலை எட்டாது. ஆயினும். குழந்தையைப் பழிக்காது பாராட்டும் சிற்பி போலப் பத்திமையை மேதைகள் பாராட்டுவர் என்று 'கவிச்சக்கரவர்த்தி' எதிர்பார்க்கிறார்போலும்!*

*'புன்கவி எனத் தெளிவு இன்றி'(106) என்ற தொடரிலே புன்கவியின் இயல்பு இஃது எனக் கம்பர் புலப்படுத்தியுள்ளார்.*

*'தரை' என்ற சொல் எதுகை நோக்கித் 'தறை' என மருவி நின்றது.*

*காய்வரோ. முனிவரோ: ஓகாரம் எதிர்மறை. இப்பாடல் எடுத்துக் காட்டுவமையணி கொண்டது.* *நூல் வரலாறு*

***10.*** ***தேவபாடையின் இக் கதை செய்தவர்***
***மூவர் ஆனவர் தம்முளும். முந்திய***
***நாவினான் உரையின்படி. நான் தமிழ்ப்***
***பாவினால் இது உணர்த்திய பண்புஅரோ.***

***தேவ பாடையின்*** -தெய்வ மொழி எனப்படுகின்ற வடமொழியில்; ***இக்கதை செய்தவர்*** -இந்த இராம கதையை இயற்றிய; ***மூவரானவர் தம்முளும்*** - வான்மீகி. வசிட்டர். போதாயனர் ஆகிய மூவருள்; ***முந்திய நாவினார் உரையின்படி*** - முதன்மையாராகியவரும் வாக்கிற் சிறந்தவருமாகிய வான்மீகி முனிவர் சொல்லியபடியே; ***தமிழ்ப் பாவினால்*** -தமிழ்ப் பாடல்களால்; ***இது நான் உணர்த்திய பண்பு*** - இந்த இராமாவதாரத்தை நான் சொல்லிய இயல்பாகும். வடமொழியில் இராமபிரான் கதை சொல்லியவர் மூவர்; அவர்களுள் ஆதிகவி வான்மீகி அருளிய காப்பியத்தின் வழியாலேயே கவிச் சக்கரவர்த்தி இராமாவதாரக் காப்பியத்தை நடத்துவதாக இச்செய்யுள் சொல்லுகிறது. காப்பியக் கதையின் பொது அமைப்பு ஆதிகாவியத்தின் வழியதே; எனினும். காப்பியக் கட்டமைப்புச் சீர்மையையும். தமிழ்ப் பண்பாட்டு மரபையும் கருதிக் கவிச் சக்கரவர்த்தி பல மாற்றங்கள் செய்துள்ளார் என்பதை மறந்திடுதல் கூடாது. ஆதிகவி விரிவாக ஓதியதைச் சுருக்கியும். சுருங்கக் கூறியதை விரித்தும். சில செய்திகளை விடுத்தும் புதியன சில புகுத்தியும். செய்திகளை இடம் மாற்றியும் கம்பர் தம் காவியத்தை இயற்றியுள்ளனர் என்பதையும் மனங்கொள்ளவேண்டும். (‘எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே’ என்பது தொல்காப்பிய விதி. அசைச் சொல்லாகிய ‘அரோ’ இக் குறிப்பினை உணர்த்துவதாகக் கொள்ளலாம். ‘அசை’என்பது வெற்றிடம் நிரப்புவதாக மட்டும் கொள்ளலாகாது. அசைத்தல். கட்டுதல்; கவிதை வாசித்துச் சொல்பவனைக் கட்டி நிறுத்திச் சிந்திக்க வைப்பது அசைகளின் பொருண்மையுள் ஒன்று.)

*வசிட்டர் இராமபிரானுக்கு வைராக்கிய உபதேசமாகக் கூறிய நூல் ‘யோக வாசிட்டம்’; அதில் இராம சரிதம் முழுமையாகக் கூறப்படவில்லை. போதாயனார் இராம காதை பாடினார் என்பது செய்தியளவாகவே நிற்கிறது. நூல் கிடைக்கவில்லை. கம்பர் காலத்தில் பரவியிருந்த வடமொழி இராமாயணங்கள் வான்மீக இராமாயணம். அத்யாத்ம ராமாயணம். சம்பு ராமாயணம் என்பனவே என்பர். இவற்றையே கம்பர் தம் பாடலில் குறிப்பிட்டிருக்க வேண்டும் என்று கருதலாம். வான்மீகி. வசிட்டர். போதாயனர் என்ற பட்டியலில் வசிட்டருக்குப் பதிலாக வியாசர் பெயரை இணைத்துரைப்பதும் உண்டு.*
*காவியம் பிறந்த களம்*

***11.*** **நடையின்நின்று உயர் நாயகன் தோற்றத்தின்**
**இடை நிகழ்ந்த இராமாவதாரப் பேர்த்**
**தொடை நிரம்பிய தோம் அறு மாக்கதை**
**சடையன் வெண்ணெய்நல்லூர்வயின் தந்ததே.**

***நடையின் நின்று*** -நல்லொழுக்கத்தில் நின்று; ***உயர்*** -உயர்ந்த; ***நாயகன்*** - திருமாலின்; ***தோற்றத்தின் இடை நிகழ்ந்த*** -அவதாரங்களுக்குஇடையே ஒன்றாக நிகழ்ந்த; ***இராமாவதாரப் பேர்*** -இராமாவதாரத்தைக் குறித்தும் புகழ்மிக்கதுமான; ***தொடை நிரம்பிய தோம் அறு மாக் கதை*** -செய்யுள்கள் நிறைந்த குற்றமற்ற சிறந்த இந்தக் காப்பியம்; ***சடையன்*** - வள்ளல் சடையப்பரது; ***வெண்ணெய் நல்லூர் வயின்*** -திருவெண்ணெய்நல்லூரில்; ***தந்தது*** - இயற்றப்பட்டது.

இராமாவதாரம் என்ற பெயரில் பாடப்பட்ட இக் காப்பியம் தோன்றியகளம் சடையப்பரின் திருவெண்ணெய்நல்லூராகும் என்பது செய்யுளின் செய்தி. நடையின் நின்றுயர் நாயகனாவான் இறைவனாகிய திருமால். தன் இயல்பில் வைகுந்தத்தில் எழுந்தருளியிருக்குங்கால் குணங்குறி கடந்தவனாகிய பிரான். அவதாரமெடுத்து இறங்கி/இரங்கி வரும்போது சாத்துவீக குணமுடையவனாகிறான்; இதனை உணர்த்துவது'நடையில் நின்றுயர் நாயகன் தோற்றம்' என்ற தொடர். இராமன் என்ற பெயர்கொண்ட அவதாரங்கள் மூன்று; பரசுராமன் பலராமன் ஆகியோருக்கு இடையே நிகழ்ந்த அவதாரம் தசரத ராமாவதாரம்.

தம்மை ஆதரித்த வள்ளலாகிய சடையப்பரை 394. 8264. 10327 ஆம் பாடல்களிலும் கம்பர் குறிப்பார்.

## ஆற்றுப் படலம்

பால காண்டம். அயோத்தியா காண்டம். ஆரணிய காண்டம். கிட்கிந்தா காண்டம். சுந்தர காண்டம். யுத்த காண்டம் என ஆறு காண்டங்களாகக் கம்பர் இராம காதையைப் பாடியிருக்கிறார். அவற்றுள் முதலாம் பிரிவாகிய பாலகாண்டத்துள் பெரும்பாலும் இராமபிரானது பாலப் பருவத்து நிகழ்ச்சிகள் கூறப்படும்.

பெருங்காப்பியங்களில் காண்டம் என்பது ஒரு பகுதியாக அமையும். பெருங்காப்பிய இலக்கணப்படி ஆறு. நாடு. நகரம் முதலாயின வருணிக்கப்படுதல் இன்றியமையாதது.

***12. ஆசு அலம் புரி ஐம்பொறி வாளியும்***
***காசு அலம்பு முலையவர் கண் எனும்***
***பூசல் அம்பும் நெறியின் புறம் செலாக்***
***கோசலம் புனை ஆற்று அணி கூறுவாம்.***

***ஆசு அலம்புரி*** *-குற்றத்தை மிகுதியாகச் செய்கின்ற;* ***ஐம்பொறி வாளியும்*** *- ஐந்து பொறிகளாகிய அம்புகளும்;* ***காசு அலம்பு முலையவர்*** *- மணியாரங்கள் ஒலிக்கின்ற மார்பகங்களை உடைய பெண்களின்;* ***கண் எனும் பூசல் அம்பும்*** *- கண்களாகிய போர்த்தொழில் வல்ல அம்புகளும்;* ***நெறியின்புறம் செலாக் கோசலம்*** *- ஒழுக்க நெறிக்கு அப்பால் செல்லாத கோசல நாட்டை;* ***புனை ஆற்று அணி கூறுவாம்*** *- அழகு செய்கின்ற (சரயு) ஆற்றின் அழகினைக் கூறுவோம். ஐம்பொறிகளும் மாதர் கண்களும் பொதுவாகஒழுக்க நெறிகளை மீறி நடக்கத் தூண்டுவன; கோசல நாட்டின் ஆட்சியிலே செம்மை இருப்பதால் ஐம்பொறி வாளியும் மாதரார் கண்களும் நெறியின் புறம் செல்லாதனவாயின. 'நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே' (புறநா. 312) என்ற வாக்கு நாட்டவரின் செம்மைக்கு ஆட்சியே காரணம் என அறிவுறுத்துதல் காண்க.*

*இலக்கு நோக்கி விரைந்து பாய்தலின் ஐம்பொறிகளை வாளி (அம்பு) என்றார். ஐம்பொறி வாளி. கண் எனும் அம்பும் இலக்குப் பிழையாது விரைந்து பாயும் இயல்பினது; இதுவும் உருவகமே.*

*மக்களின் நல்லொழுக்கத்துக்கும் தீயவொழுக்கத்துக்கும் அவர் வாழும் நிலத்தின் தன்மை காரணமாகும் என்பர்; கோசலத்தின் நீர்/நிலவளமே அந்நாட்டு மக்களின் ஒழுக்க மேம்பாட்டுக்குக் காரணம் என்பது குறிப்பு.*

***13. நீறு அணிந்த கடவுள் நிறத்த வான்***
***ஆறு அணிந்து சென்று. ஆர்கலி மேய்ந்து. அகில்***
***சேறு அணிந்த முலைத் திருமங்கைதன்***
***வீறு அணிந்தவன் மேனியின் மீண்டதே.***

***நீறு அணிந்த*** - திருநீற்றைத் திருமேனி முழுதும் பூசிய; ***கடவுள்*** - சிவபிரானின்: நிறத்த -(வெள்ளை) நிறத்தை உடையவனாகிய; ***வான்*** -மேகங்கள்; ***ஆறு அணிந்து சென்று*** -போகும் வழிகளைஅழகு செய்து கொண்டு போய்; ***ஆர்கலி*** - கடல்நீரை; ***மேய்ந்து*** -குடித்து; ***அகில் சேறு அணிந்த முலைத் திருமங்கைதன்*** -அகிற் குழம்பாகிய சேற்றினால் அழகு கொண்ட மார்பகத்தாளாகிய இலக்குமியால் ஏற்பட்ட; ***வீறு அணிந்தவன் மேனியின்*** -தனிச் சிறப்புடையதிருமாலின் (கரிய) நிறம் கொண்டு; ***மீண்டது*** -திரும்பின.

*கடலை நோக்கிச் சென்றபோது நீறு பூசிய சிவன்போல வெண்ணிறம் கொண்டு. கடலில் நீர் கொண்டு திரும்பும்போது திருமகளால் சீர்பெறும் திருமால் போலக் கார்நிறம் கொண்டு மேகங்கள் இயங்கினவாம். கார்மேகத்தின் நிறத்துக்குத் திருமால் நிறம் உவமையாவதை 'ஊழிமுதல்வன் உருவம் போல் மெய் கருத்து' என்ற நாச்சியார் வாக்காலும் அறியலாம். உவமைப் பொருத்து காண்க. பேராசை நிறைந்த தன்மை பற்றிக் கடலை ஆர்கலி (ஆர்: நிறைந்த. கலி: ஒலி) என்றார்; வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. வான் / ஆகுபெயர்.*

***14.*** **பம்பி மேகம் பரந்தது. 'பானுவால்**
**நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினான்;**
**அம்பின் ஆற்றதும்' என்று அகன்குன்றின்மேல்**
**இம்பர் வாரி எழுந்தது போன்றதே.**

**மேகம்** -மேகங்கள்; **பம்பிப் பரந்து** -நெருங்கி (இமயமலையில்) படிந்த காட்சி; **நம்பன் மாதுலன்** -சிவபிரானின் மாமன்; **பானுவால்** -சூரியனால்; **வெம்மையை நண்ணினான்** - வெப்பத்தை அடைந்தான்; **அம்பின் ஆட்டுதும் என்று** -நாம் தண்ணீரால் குளிப்பாட்டுவோம்' என்று; **அகன் குன்றின் மேல்** - பரந்த (இமய) மலையின் மேலே; **இம்பர்வாரி** - இவ்வுலகத்திலுள்ள கடல்; **எழுந்தது போன்றது** - எழுந்ததைப் போலக் காணப்பட்டது.

*கடலுக்கு நதிபதி என்றொரு பெயர்; ஆறுகளெல்லாம் கடலில் கலப்பதால் ஆறுகளின் கணவன் கடல் என்பது காவிய வழக்கு. ஆறுகள் மலையில் பிறப்பவை. ஆகையால். கடலுக்கு மலை மாமன் ஆகிறது. மலை மாமனின் வெப்பத்தை ஆற்றுவிக்க மேகங்கொண்டு மழை பொழிகிறதாம் கடல். இப்படியும் விளக்கலாம்.*

*மலைமேல் மேகம் படிவது இயற்கை. மேகம் படிவதற்கு ஒரு காரனத்தைக் கவிஞர் குறித்துக் கற்பித்தலால் இது தற்குறிப்பேற்ற அணி.*

*பம்பி: நெருங்கி; ஒலித்து எனப் பொருள் கொள்ளலும் ஒன்று. பானு ஞாயிறு நம்பன்; சிவபிரான். அம்பு: நீர். வாரி; இலக்கணையால் கடலைக் குறித்தது.*

***15 . புள்ளி மால் வரை பொன் எனல் நோக்கி. வான்.***
***வெள்ளி வீழ் இடை வீழ்த்தெனத் தாரைகள்.***
***உள்ளி உள்ள எல்லாம் உவந்து ஈயும் அவ்***
***வள்ளியோரின். வழங்கின - மேகமே.***

***புள்ளி மால் வரை*** *-பெருமை மிகுந்ததும் பெரியதுமான இமயமலை;* ***பொன் எனல் நோக்கி*** *- பொன்மயமாய் இருப்பதைக் கருதி;* ***வான்*** *-விஷ்ணுலகத்தவர்கள்;* ***வெள்ளி வீழ் இடை வீழ்த்தென*** *- வானத்துக்கும் மலைக்கும் இடையே வெள்ளி விழுதுகளை வீழ்த்தியது போல;* ***உள்ளி*** *-எண்ணிப்பார்த்து;* ***உள்ள எல்லாம்*** *- தம்மிடத்துள்ள எல்லாவற்றையும்: உவந்து ஈயும் - மனம் மகிழ்ந்து பிறர்க்கு வழங்கும்;* ***அவ்வள்ளியோரின்*** *- வள்ளல்களைப் போல;* ***மேகம் வழங்கின*** *- மேகங்கள் மழைத்தாரைகளைப் பொழிந்தன.*

*இமயம் பொன்மயமானது; அப்பொன்னை மேலுலகத்துக்கு ஈர்த்தெடுக்க எண்ணினர் வானவர்; பொன்னைப் பற்றி இழுக்க வெள்ளி விழுதுகளை ஏராளமாக வீழ்த்தி. பொன்மலைக்கும் வானுக்கும் இடைவெளி இல்லாமல் விழுதுகளை வீழ்த்தினர். பொன்(இமய) மலைமேல் ஏராளமாக மழைத் தாரைகள் பொழிவது இயற்கை. அதற்கு ஒரு காரணத்தைத் தம் கற்பனைக் குறிப்பால் கவிஞர் காட்டும் இக் காட்சி தற்குறிப்பேற்ற அணியாகும். மேகம் ஏராளமாகப் பொழிதலுக்கு வள்லல்கள் வழங்குதல் உவமையாயிற்று. அவ்வள்ளியோர்; உலகறிந்த புகழ் குறித்த சுட்டு - (அந்த ஆண்டவந்தான் காக்கவேண்டும் என்பதிற் போல) இரவலர் கேட்குமுன் எதனை வழங்குவது என எண்ணுதல். இரவலர் மேலும் புரவலரை நாடாதவகை என்ன கொடுக்கலாம் என எண்ணுதல் என்று பலவாறு எண்ணுதலை 'உள்ளி' என்ற சொல் குறித்தது. புள்ளி: நன்மதிப்பு.*
*4*

வெள்ளப் பெருக்கு

***16. மானம் நேர்ந்து. அறம் நோக்கி. மனு நெறி***
***போன தண் குடை வேந்தன் புகழ் என.***
***ஞானம் முன்னிய நான்மறையாளர் கைத்***
***தானம் என்ன. தழைத்தது - நீத்தமே.***

***மானம் நேர்ந்தது*** *- மான உணர்வு பொருந்தி;* ***அறம் நோக்கி*** *- தரும நெறி கருதி;* ***மனுநெறி போன*** *- மனுநீதிப்படி நடக்கும்* ***தண்குடை வேந்தன் புகழ் என*** *- குளிர்ந்த குடை நிழலின் கீழ் இருக்கும் மன்னன் புகழ் போலவும்;* ***ஞானம் முன்னிய*** *- ஞான வழியை நாடுகின்ற;* ***நான்மறையாளர் கைத்தானம் என்ன*** *- நான்கு மறைகளிலும் வல்ல வேதியர்களுக்கு வழங்கும் தானம் போலவும்;* ***நீத்தம் தழைத்தது*** *- சரயு ஆற்றில் வெள்ளம் பெருகிற்று.*

*தன் நிலையில் தாழாமையும் தெய்வத்தான் தாழ்வு வந்து உயிர் வாழாமையும் ஆம் என மானத்திற்கு விளக்கம் தந்தார் பரிமேலழகர். மானம் பேணி அறநெறி நோக்கி உயிர்க் குலத்திற்கு நல்லருட் காவல் வழங்கும் மன்னவனின் புகழ் ஓங்கும். வீயாது; தக்கார்க்கு வழங்கிய கொடையின் பயன் ஓங்கும்; வீயாது. ஓயாது இவை போலச் சரயு நதியின் வெள்ளப் பெருக்கு ஓங்கும். வீயாது. ஓயாது எனப்து உவமை விளக்கம். ஓலக்க மண்டபத்துடன் அரியாசனத்தின் மேல் நிழற்றும் குடை நிழலுக்காக ஏற்பட்டதன்று; துன்புறும் உயிர்க்குலத்தின் துயர் துடைக்கும் அருளுக்கு ஓர் அடையாளம். ஆதலின். 'தண் குடை' என்றார்; தண்மை ஈண்டு அருளாள்தல். 'கண்பொர விளங்கும் நின் விண்பொரு வியன்குடை - வெயில் மறைக் கொண்டன்றோ அன்றே. வருந்திய -குடி மறைப் பதுவே' என்ற வெள்ளைக்குடி நாகனார் வாக்கு கருதுக (புறநா.35). நான்மறையாளர். வெறுமே வேத முழக்கம் செய்வதால் மட்டுமே தக்காராகிவிடமாட்டார் என்பதை 'ஞானம் முன்னிய' என்ற முன் ஒட்டு விளக்கி நின்றது. அத்தகு தகுதிப்பாடு உடையாரின் கைப்பட்ட அறத்தின் பயன் நந்தாது நாளும் ஓங்கும்; இதனை. 'அறப்பயனுன் தான் சிறிதாயினும் தக்கார் கைப் பட்டக்கால் வான்சிறிதா போர்த்துவிடும்' என விளக்குவர். (நாலடி 38).*

*'வேந்தன்' என இப்பாடலில் தயரதனைக் கவிஞர் குறித்தார் என்பாரும் உளர்*

விலை மகளிர் : வெள்ளம்

**17. தலையும் ஆகமும் தாளும் தழீஇ. அதன்**
**நிலை நிலாது. இறை நின்றது போலவே.**
**மலையின் உள்ள எலாம் கொண்டு மண்டலால்**
**விலையின் மாதரை ஒத்தது - அவ் வெள்ளமே.**

***தலையும் ஆகமும் தாளும் தழீஇ*** *-(தம்மிடம் வரும் காமுகரின்) தலை. உடல். கால்கள் முதலியன எல்லா உறுப்புகளையும் தழுவி;* ***அதன் நிலை நிலாது*** *- (புறத்தளவில் போலியான விருப்பத்தைக் காட்டும்) அவ்வளவோடு அன்றி:* ***இறை நின்றது போல*** *- சிறிதளவு காலமே விரும்பியிருந்தது போல;* ***மலையில் உள்ள எலாம் கொண்டு*** *- மலையின் உச்சி. நடுவிடம். அடிவாரம் ஆகிய பகுதிகளில் உள்ள எல்லாவற்றையும் வாரிக்கொண்டு மண்டலால் - விரைந்து போதலால்;* ***அவ் வெள்ளம்*** *-சரயுவில் பெருகிய அந்த வெள்ளம்;* ***விலையின் மாதரை ஒத்தது*** *- விலைமகளிரை ஒத்திருந்தது.*

*சரயு நதியில் வெள்ளம் விலை மாதரை ஒத்தது என்பது கருத்து. இக் கருத்தினைச் சிலேடையோடு உவமையணியைச் சேர்த்து வழங்குகிறார். கவிச்சக்கரவர்த்தி. 'விலை மாதர் காமுகரது பொருள்களைக் கவருமளவும் அவர்களைத் தழுவிக் காண்டிருந்து. கவர்ந்தவாளறே விரைவில் விட்டு நீங்குதல் போல. வெள்ளமும் மலையில் உள்ள பொருள்களை யெல்லாம் வாரிக் கொள்ளுமளவும் மலையைத் தழுவிக் கொண்டிருந்தது. வாரிக் கொண்டவாறே விட்டு நீங்கிற்று' எனச் சிலேடை விளக்கம் தருவர் காஞ்சி இராமசாமி நாயுடு. இது செம்மொழிச் சிலேடை.*

*தழீஇ -சொல்லிசை அளபெடை. நிலாது. எலாம் என்பன இடைக்குறை.*

*வணிகர்: வெள்ளம்*

***18. மணியும் பொன்னும். மயில் தழைப் பீலியும்.***
***அணியும் ஆனை வெண்கோடும். அகிலும். தன்***
***இணை இல் ஆரமும். இன்ன கொண்டு ஏகலான்.***
***வணிக மாக்களை ஒத்தது - அவ் வாரியே.***

***மணியும் பொன்னும் மயில்தழைப் பீலியும்*** *-முத்துக்கள் பொன். மயில் இறகுகள்;* ***அணியும் ஆனை வெண்கோடும்*** *-அழகுடைய யானைத் தந்தங்கள்;* ***தன் இணை இல் ஆரமும்*** *-தனக்கு ஒப்பு இல்லாத சந்தன மரம்;* ***இன்ன கொண்டு ஏகலான்*** *- ஆகிய இத்தகையவற்றை வாரிச் செல்லுதலால்;* ***அவ்வாரி*** *-சரயுவின் அந்த வெள்ளம்;* ***வணிக மாக்களை ஒத்தது*** *-வர்த்தகர்களை ஒத்திருந்தது.*

*தழைப் பீலி - இருபெயரொட்டுப் பண்புத் தொகை. 'மணி'யை முத்து எனப் பொருள் கொண்டதால். ஆரம் சந்தன மெரமெனப் பொருள் கொள்ளப்பட்டது. ஆரம் - முத்து. சந்தனம். மாலை எனப் பல பொருள் கொண்டது.*

*வானவில்: வெள்ளம்*

***19. பூ நிரைத்தும். மென் தாது பொருந்தியும்.***
***தேன் அளாவியும். செம் பொன் விராவியும்.***
***அனை மா மத ஆற்றொடு அளாவியும்.***
***வான வில்லை நிகர்த்தது - அவ் வாரியே.***

***அவ் வாரி*** *- அந்த வெள்ளப் பெருக்கு;* ***பூ நிரைத்தும்*** *- பல நிற மலர்களை வரிசைப்படுத்தியும்;* ***மென் தாது பொருந்தியும்*** *-மென்மையான மகரந்தப் பொடி பொருத்தப் பெற்றும்;* ***தேன் அளாவியும்*** *-தேனொடு கலந்தும்;* ***செம்பொன் விராவியும்*** *-செம்பொான் கலந்தும்;* ***ஆற்றொடு*** *-ஆற்றிலே;* ***ஆனை மா மதம் அளாவியும்*** *-ஆனைகளின் மிகுந்த மதநீர் கலந்தும்;* ***வானவில்லை நிகர்த்தது*** *- பலநிறங்கள் கொண்ட வானவிலை ஒத்திருந்தது.*

*பல நிறங்கள் கொண்ட பொருள்கள் ஆற்று வெள்ளத்தில் கலந்திருந்த காட்சி வானவில்லைக் கண்டதுபோல் இருந்தது கருத்து. 8*

*வானரக் கூட்டம்: வெள்ளம்*

***20. மலை எடுத்து. மரங்கள் பறித்து. மாடு***
***இலை முதல் பொருள் யாவையும் ஏந்தலான்.***
***அலை கடல்-தலை அன்று அணை வேண்டிய***
***நிலையுடைக் கவி நீக்கம் - அந் நீத்தமே.***

***மலை எடுத்து*** - *மலைகளைப் பெயர்த்துக் கொண்டும்;* ***மரங்கள் பறித்து*** - *மரங்களை வேருடன் பறித்துக் கொண்டும்;* ***மாடு*** *-பக்கங்களில் உள்ள;* ***இலை முதல் பொருள்*** *-இலை முதலிய பொருள்களாகிய;* ***யாவையும் ஏந்தலான்*** *-எல்லாவற்றையும் ஏந்தி வருவதால்;* ***அலை கடல் தலை*** *-அலைகளையுடைய கடலிடத்தே;* ***அன்று*** *- இராமபிரான் கடலைக் கடக்க நேர்ந்த அந்தக் காலத்தில்;* ***அணை வேண்டிய*** *- அணை கட்ட விரும்பிய:* ***நிலையுடைக் கவி நீத்தம்*** *- (இராமபிரான் திருப்பணியிலே) நிலைபேறுடைய வானரப் பெருங்கூட்டத்தைப் போலவே;* ***அந் நீத்தமே*** *- அந்தச் சரயுவின் வெள்ளம் (விளங்கியது)*

*தலை ஏழாம் வேற்றுமைப் பொருளில் வந்தது. வேண்டுதல்; விரும்புதல்.*

*அணை வேண்டுதல் என்பது குரங்குச் சேனைக்குச் செல்லும்போது அணை கட்ட விரும்பியதையும். ஆற்று வெள்ளத்துக்குச் செல்லும்போது அணை கட்ட வேண்டிய நிலையையும் பொருத்திக் காண்க. இலை முதல் பொருள்; இலை. முதலானவை ஆற்று வெள்ளத்தில் ஈர்த்து வரப்படுபவன. குரங்குகளுக்கு உணவாவன.*

*குடிகாரர் : வெள்ளம்*

***21. ஈக்கள் வண்டொடு மொய்ப்ப. வரம்பு இகந்து***
***ஊக்கமே மிகுந்து. உள் தெளிவு இன்றியே.***
***தேக்கு எறிந்து வருதலின். - தீம் புனல் -***
***வாக்கு தேன் நுகர் மாக்களை மானுமே.***

***தீம்புனல்*** *- இனிய நீர்ப்பெருக்கு;* ***ஈக்கள் வண்டொடு மொய்ப்ப*** *-ஈக்கள் வண்டுகளோடு சேர்ந்து மொய்த்திட;* ***வரம்பு இகந்து*** *- அணை கடந்து ஒழுகலாற்று எல்லையை மீறி;* ***ஊக்கம் மிகுந்து*** *- எழுச்சி பெருகி (உற்சாகம் மிகுந்து) உள் தெளிவு இன்றியே - உள்ளிடத்து (உள்ளத்திலே) தெளிவே இல்லாமல்;* ***தேக்கு எறிந்து வருதலின்*** *-தேக்கு மரங்களை மோதி இழுத்து வருதலால் / ஏப்பமிட்டு வருவதால்;* ***தேன் நுகர் மாக்களை மானும்.***

*ஈக்களும் வண்டுகளும் மொய்ப்பது குடிகாரரிடத்து எழும் கள் நாற்றம் காரணமாக. ஆற்று வெள்ளம் கரை கடப்பதையும். குடிகாரர் ஒழுக்க எல்லையைக் கடப்பதையும் 'வரம்பு இகந்த' என்ற தொடர் சுட்டிற்று. ஊக்கம்: வெள்ளத்துக்கு வேகமும் குடியருக்கு எழுச்சியையும் குறித்தது. உள் தெளிவு இன்மை; வெள்ளத்தின் உட்புறம் கலங்கியிருப்பது; மனத்திலும் அறிவிலும் தெளிவின்மை குடியரிடம் இருப்பது. தேக்கு மரங்களை வீழ்த்தி இருத்திவருவது வெள்ளம்; ஏப்பமிட்டுக் கொண்டு வருவது. தேக்கெறிதல். தேன் -கள். வாக்கு தேன் - வினைத்தொகை.*

*'மஞ்சுலாம் சோலை' என்று தொடங்கும் பெரிய திருமொழிப் பாசுரத்தின் வியாக்கியானத்தில் இப்பாடலின் முதலடி பெரியவாச்சான்பிள்ளையால் எடுத்தாளப்பட்டது.*

*கடலொடு போர் செய்ய...*

***22. பணை முகக் களி யானை பல் மாக்களோடு***
***அணி வகுத்தென ஈர்த்து. இரைத்து ஆர்த்தலின்.***
***மணி உடைக் கொடி தோன்ற வந்து ஊன்றலான்.***
***புணரிமேல் பொரப் போவது போன்றதே.***

***பனை முகக் களி யானை*** - பருத்த முகமும் களிப்பும் கொண்ட யானைகள்; ***பல மாக்களோடு அணி வகுத்தென ஈர்த்து*** - பல விலங்குகளோடு அணிவகுத்தது போல இழுத்துக் கொண்டு; ***இரைந்து ஆர்த்தலின்*** - ஆரவாரத்தோடு முழங்குதலாலும்; ***மணி உடைக் கொடி தோன்ற*** - அழகான கொடிகள் தோன்றுமாறு; ***வந்து ஊன்றலால்*** - வந்து தோன்றுதலாலும்; ***புணரி மேல் பொர*** - கடலின்மீது படையெடுத்துப் போர் செய்ய ***போவது போன்றது*** -செல்வது போலச் சரயு வெள்ளம் காணப்பட்டது.

*பொருத்தம் நோக்கிச் 'சரயு வெள்ளம்' என்ற எழுவய் வருவித்து உரைக்கப்பட்டது. பொருதலை விளக்குவன யானை. பல்வகை மாக்கள் (குதிரைகள்) முழக்கம். கொடி ஆகியவை. சரயுவின் வெள்ளப் பெருக்கில் யானையும் பல்வகை விலங்குகளும் ஆரவாரிக்கும் ஒலியோடு ஈர்க்கப்படுவதாக விளங்கிக் கொள்க; இடையிடையே தாவரக் கொடிகளும் காணப்படுவது இயற்கை.*

*சரயு: அதன் தன்மையும் போக்கும்*

***23. இரவிதன் குலத்து எண் இல் பல் வேந்தர்தம்***
***பரவு நல் ஒழுக்கின் படி பூண்டது.-***
***சரயு என்பது-தாய் முலை அன்னது. இவ்***
***உரவுநீர் நிலத்து ஓங்கும் உயிர்க்கு எலாம்.***

***இரவிதன் குலத்து*** -சூரிய குலத்தில் தோன்றிய; ***எண்ணில் வேந்தர்தம்*** - எண்ணற்ற பல வேந்தர்களின்; ***பரவு நல் ஒழுக்கின்படி*** -போற்றத் தகுந்த நல்லொழுக்கத்தின் தன்மையை; ***பூண்டது*** - மேற்கொண்டதாகிய; ***சரயு என்பது*** - சரயு என்னும் பெயருடைய அந்த ஆறு; ***இவ் உரவுநீர் உலகத்து*** - உயிரினங்கள் யாவற்றுக்கும்; ***தாய் முலை அன்னது*** - பாலூட்டிப் பேணும் தாயின் மார்பகம் போன்றது.

*இரவி குலத்திலே தோன்றிய வேந்தர்கள் எண்ணற்றவர்கள்; அத்துணைப் பேரும் உலகவர் போற்றும் ஒழுக்க நலம் வாய்ந்தவர்கள். வேந்தர்களின் ஆட்சியிலே ஒழுக்கம் எவ்வாறு இடையறாது அமைந்ததோ; அவ்வாறே சரயு நதியின் நீரோட்டமும் இடையறாதாய் அமைந்தது.*

*நினைந்து ஊட்டும் தாய் போல உயிர்க் குலத்தின் தேவை அறிந்து நீர் வழங்குவது சரயு என்பது கருத்து. தாய்ப் பாலுக்கு அமுதம் (அமிர்தம்) என்ற பெயர் வழங்குவதை இவண் நினைவு கூர்க. கம்பரின் இப்படிமத்துக்கு மூலம் 'புனிறு தீர் குழவிக்கு இலிற்று முலை போலச் சுரந்த காவிரி' (புறநா. 68) என்னும் தொடராகக் கருதலாம். சோழநாட்டை வளர்க்கும் தாயாகக் கொண்டு. காவிரியை 'வாழி அவன்தன் வளநாடு வளர்க்கும் தாயாகி' (சிலப் 7:27) என இளங்கோவடிகள் குறித்தது இங்கு நினைவு கூரத்தக்கது.*

**பிள்ளை தைவரப் பெருகுபால் சொரிமுலையைத்
தாய்போல்
மள்ளர் வேனிலின் மணல்திடர் பிசைந்துகை வருட
வெள்ளநீர் இருமருங்கு கால்வழி மிதந்தேறிப்
பள்ள நீள்வயல் பருமடை உடைப்பது பாலி**

*(பொ.பு. - திருக்குறிப்புத். 22) என்ற வாக்கில் சேக்கிழார் இதே படிமத்தை விரித்து வருணித்திருப்பது ஒப்பிட்டுணரத்தக்கது.*

*உரவு நீர்;வலிய நீர்; வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாய்க் கடலைக் குறித்தது. கடலின் வலிமையை 'உரவு' என்ற சொல் குறித்தது; உலாவும் நீர் (அலைகள்). பரவு நீர் என்றும் பொருள் கொள்வாருண்டு.*

*சரயு ஈர்த்து வரும் நறுமணப் பொருள்கள்*

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

*24.* **கொடிச்சியர் இடித்த சுண்ணம்.
குங்குமம். கோட்டம். ஏலம்.
நடுக்குறு சந்தம். சிந்தூ
ரத்தொடு நரந்தம். நாகம்.
கடுக்கை. ஆர். வேங்கை. கோங்கு.
பச்சிலை. கண்டில் வெண்ணெய்
அடுக்கலின் அடுத்த தீந் தேன்.
அகிலொடு நாறும் அன்றே.**

***கொடிச்சியர் இடித்த சுண்ணம்*** - *குறிஞ்சி நிலத்துப் பெண்கள் இடித்த மணப் பொடியினையும்;* ***குங்குமம். கோட்டம். ஏலம்*** - *குங்குமப்பூ. கோட்டம். ஏலக்காய்;* ***நடுக்குறு சந்தம்*** - *தன் குளிர்ச்சியால் உடலை நடுங்கச் செய்கின்ற சந்தனம்;* ***சிந்தூரத்தொடு. நரந்தம். நாகம்*** - *வெட்சிப் பூ. நரந்தம். புல். சுரபுன்னைப்;* ***கடுக்கை. ஆர் வேங்கை. கோங்கு*** *-கொன்றை. ஆத்தி. வேங்கை. கோங்கம்;* ***பச்சிலை. கண்டில் வெண்ணெய்*** *-பல்வகைப் பச்சிலைகள். கண்டில் வெண்ணெய் என்னும் பூண்டு;* ***அடுக்கலின் அடுத்த தீந்தேன்*** - *மலையில் கட்டப்பட்ட இனிய தேன்கூடு;* ***அகிலொடு -*** *அகில் -அகில் கட்டை ஆகியவற்றையும் இழுத்து வருவதால்;* ***நாறும்*** *-சரயுவின் வெள்ள நீர் மேற்குறித்த பொருள்களின் மணத்தைக் கொண்டு இயங்கும்.*

*'சரயுவின் வெள்ள நீர்' என்ற எழுவாய் வருவித்து உரைக்கப்பட்டது. அன்று. ஏ அசைகள்.*

*வெள்ளம்; சேனை*

***25.*** ***எயினர் வாழ்சீறூர் அப்பு***
***மாரியின் இரியல் போக்கி.***
***வயின் வயின். எயிற்றி***
***மாதர். வயிறு அலைத்து ஓட. ஒட்டி.***
***அயில்முகக் கணையும் வில்லும்***
***வாரிக்கொண்டு. அலைக்கும் நீரால்.***
***செயிர் தரும்கொற்ற மன்னர்***
***சேனையை மானும் அன்றே.*** ***14***

***எயினர் வாழ் சீறூர்*** - *(சிறிய ஊரில் வாழ்கின்ற வேடர்களை (மக்களை);* ***அப்பு மாரியின்*** - *அம்பு மழையால்;* ***இரியல் போக்கி*** - *ஓடச் செய்தும்;* ***வயின் வயின்*** - *எல்லா இடங்களிலும்;* ***எயிற்றி மாதர்*** - *வேடுவப் பெண்கள்;* ***வயிறு அலைத்து ஓட ஒட்டி*** - *வயிற்றில் அடித்துக் கொண்டு ஓடும்படி விரட்டியும்;* ***அயில்முகக் கணையும்*** - *கூர்மையான முனை கொண்ட அம்புகளையும்;* ***வில்லும்*** - *விற்களையும்;* ***வாரிக்கொண்டு*** *-வாரி வந்து;* ***அலைக்கும் நீரால்*** - *அலையச் செய்கின்ற தன்மையால்;* ***(சரயுவின் வெள்ளம்) செயிர் தரும் கொற்ற மன்னர்*** - *போர் செய்து வெற்றி பெற்ற உரிய மன்னர்களின்;* ***சேனையை மானும்*** - *படையைப் போன்றது. அப்பு மாரி; அம்பு மழை என்னும் போது அப்பு வலித்தல் விகாரம்; வெள்ளத்தைக் குறிக்கும்போது அப்பு: நீர் (வட சொல்). அப்பு மாரி; உருவகம். சிலேடை. செயிர் அறும் கொற்றம் என்னும் பாடம்; குற்றமற்ற வெற்றி என்று பொருள். அன்று. ஏ அசைகள்.*

*கண்ணன் : வெள்ளம்*

*26.* ***செறிநறுந் தயிரும். பாலும்.***
***வெண்ணெயும். சேந்த நெய்யும்.***
***உறியொடு வாரி உண்டு.***
***குருந்தொடு மருதம் உந்தி.***
***மறிவிழி ஆயர் மாதர்***
***வனைதுகில் வாரும் நீரால்.***
***பொறிவரி அரவின் ஆடும்***
***புனிதனும் போலும் அன்றே.***

**செறி நறுந்தயிரும்** - *தொய்ந்து இறுகிய மணம் மிக்க தயிரையும்;* **பாலும். வெண்ணெயும். சேந்த நெய்யும்** - *பால். வெண்ணெய். சிவந்த நெய் ஆகியவற்றையும்;* **உறியொடு வாரி உண்டு** - *அவற்றைத் தாங்கியிருந்த உறிகளொடு கவர்ந்து உண்டு;* **குருந்தொடு மருதம் உந்தி** - *குருந்த மரத்தோடு மருத மரத்தையும் முறித்துத் தள்ளி;* **மறி விழி ஆயர் மாதர்** - *மானின் விழி போன்ற விழிகள் உடைய இடைக்குலப் பெண்கள்;* **வனை துகில்** - *உடுத்துகின்ற ஆடைகளை;* **வாரும் நீரால்** - *ஈர்க்கின்ற (தண்ணீரால்) தன்மையால்;* **பொறி வரி அரவின் ஆடும்** - *புள்ளிகளையு வரிகளையும் கொண்ட (காளியன்கன் என்ற) பாம்பின்மேல் ஆடிய;* **புனிதனை மானும்** - *தூய கண்ண பெருமானை (அந்த சரயு வெள்ளம்) ஒத்திருக்கும்.*

*செறி தயிர். நறுந்தயிர் எனப் பிரித்துக் கூட்டுக. செறி தயிர் - வினைத்தொகை; நறுந்தயிர் - பண்புத் தொகை. உறியிலிருந்து தனித்தனியாக எடுக்காமல் உறியோடு மொத்தமாகக் கவர்ந்த செயலை 'உறியொடு' என்ற சொல்லாட்சி குறித்தது. மறிவிழி மருளுதலைக் குறித்தது. வனை துகில்; வினைத்தொகை. வனைதல் அழகுற அணிதல். அரவின் ஆடியது -காளிங்க நர்த்தனக் கதை குறித்தது. 'இயல்பிலேயே' குற்றத்தின் நீங்கியவனாதலின் கண்ணனைப் புனிதன் என்றார்.*

*புராணச் செய்திகளைக் கற்பனை உத்தியாகக் கொள்வதை இக்காலத் திறனாய்வாளர் 'தொன்மம்' என்பர்.*

*யானை: வெள்ளம்*

*27.* ***கதவினை முட்டி. மள்ளர்***
***கைஎடுத்து ஆர்ப்ப எய்தி.***
***நுதல்அணி ஓடை பொங்க.***
***நுகர்வரி வண்டு கிண்ட.***
***ததைமணி சிந்த உந்தி.***
***தறிஇறத் தடக்கை சாய்த்து.***
***மதமழை யானைஎன்ன. மருதம்***
***சென்று அடைந்தது அன்றே.***

***கதவினை முட்டி*** - *(சரயுவின் வெள்ளம் அங்குள்ள மதகுகளின்) கதவுகளை மோதி;* ***மள்ளர் கை எடுத்து ஆர்ப்ப எய்தி*** *- உழவர்கள் கைகளை உயர்த்தி (மகிழ்ச்சியால்) ஆரவாரம் செய்யும்படி வந்து;* ***நுதல் அணி ஓடை பொங்க*** *- முன்னணியிலுள்ள ஓடைகள் பெருகுமாறு;* ***நுகர் வரி வண்டு கிண்ட*** *- (தேன்) உண்ணும் கோடுகளமைந்த (உடம்பினையுடைய) வண்டுகள் குடைய;* ***ததை மணி சிந்த உந்தி*** *- நெருங்கிய மணிகள் சிதறும்படி நீரைத் தள்ளிச் சென்று;* ***தறி இறத் தடக்கை சாய்த்து*** *- (இரு கரையிலும் நடப்பட்ட) பெரிய கழிகளை முறியும்படி அலைகளாகிய பெரிய கைகளால் சாய்த்து;* ***மத மழை யானை என்ன*** *- மத மழை பொழிகின்ற யானை போல;* ***மருதம் சென்று அடைந்தது*** *- மருத நிலத்தைச் சென்று சேர்ந்தது.*

*சரயுவின் வெள்ளத்தின் செயல்கள் மதயானையின் செயல்களோடு பொருத்திக் கூறிய நயம் பாராட்டத்தக்கது. மதகின் கதவுகளை மோதுவது நீர் வெள்ளம்; பகைவர் மதிற் கதவுகளை மோதுவது மத யானை. வெள்ளப் பெருக்கைக் கண்டு உழவர் மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்வர்; இக்கருத்தினைக் கூறும் கவித் தொடர் யானையைக் குறிக்கும்போது. தெருக்களில் நடமாடும் மக்களை எச்சரித்து விலகிப் போய்விடும்படி வீரர்கள் கை உயர்த்தி விலக்குதலைக் குறிக்கும். மள்ளர்: உழவர். வீரர். நுதல் அணி ஓடை: சரயுவின் முன்னுள்ள அழகிய நீரோடைகள் எனவும் யானையின் நெற்றியில் அணியப்படும் முகபடாஅம் எனவும் கொள்க. ஆற்றுப் பெருக்கில் கிடைக்கும் தேன் உண்ட வண்டுகள் மொய்ப்பது வெள்ளத்தில்; மதநீர் உண்ண வண்டுகள் மொய்ப்பது யானையிடத்தில் வண்டுகளின் உடலிலுள்ள கோடுகள் குறித்து வரி வண்டு என்றார்; வரி (இசை) பாடும் வண்டுகள் என்றும் கொள்ளலாம். அடித்து வரும் வெள்ளத்தில் மணிகளும் இருக்கும்; யானைக்கு மணி கட்டுவது வழக்கம். தறி: வெள்ளப்போக்கைக கட்டுப்படுத்த குதிரை மரங்கள் எனப்படும் தூண்கள்; யானை கட்டப்பட்டிருக்கும் கம்பம். தடக்கை; ஆற்றின் அலைகளாகிய பெரிய கைகள் எனவும் யானையின் பெரிய துதிக்கைகள் எனவும் காண்க. கவிச்சக்கரவர்த்தி சொல்லணியையும் கற்பனைக் களமான பொருளணியையும் சிலேடை வகையால் இணைத்த திறம் உணர்ந்து மகிழத் தக்கது.*

*'கொடிச்சியர்' எனத் தொடங்கும் பாடலில் குறிஞ்சி. அடுத்துப் பாலை. முல்லை ஆகிய பகுதிகளில் பாய்ந்த வெள்ளத்தை இப் பாடலில் மருதத்தைச் சேரச் செய்து வருணிக்கிறார். கம்பர். இனி. வரும் பாடலில் திணை மயக்கம் காணலாம்.* *இருவினை: வெள்ளம்*

***28.*** **முல்லையைக் குறிஞ்சி ஆக்கி.**
**மருதத்தை முல்லை ஆக்கி.**
**புல்லிய நெய்தல்தன்னைப் பெரு**
**அரு மருதம் ஆக்கி.**
**எல்லையில் பொருள்கள் எல்லாம்**
**இடை தடுமாறும் நீரால்.**
**செல்லுறு கதியின் செல்லும்வினை**
**என. சென்றது அன்றே.**

***முல்லையைக் குறிஞ்சி ஆக்கி*** - *முல்லை நிலத்தை குறிஞ்சி நிலமாக்கியும்;* ***மருதத்தை முல்லை ஆக்கி*** - *மருத நிலத்தை முல்லை நிலமாகச் செய்தும்;* ***புல்லிய நெய்தல் தன்னை*** - *புன்புலமாகிய நெய்தல் நிலத்தை;* ***பொரு அரு மருதம் ஆக்கி*** - *நிகரில்லாத மருத நிலமாகச் செய்தும்;* ***எல்லை இல் பொருள்கள் எல்லாம்*** - *(பல்வேறு நிலங்களின்) அளவற்ற பண்டங்களை யெல்லாம்;* ***இடை தடுமாறும் நீரால்*** - *தத்தம் இடத்தை விட்டு வேறு நிலத்துக்குக் கொண்டு செல்லும் தன்மையால்;* ***செல்லுறு கதியில் செல்லும்*** - *செலுத்தப்படுகின்ற போக்கிலே இழுத்துப் போகின்ற;* ***வினை எனச் சென்றது*** - *இரு வினைகள் போல (அந்த வெள்ளம்) சென்றது.*

*ஒரு நிலத்தை வேறு நிலத்தின் இயல்புடையதாகச் செய்யவல்லது வெள்ளம்; அதுபோலவே. தேவர்களை மனிதர்களாக்கியும் மனிதரைத் தேவராக்கியும் இவ்வாறே நான்கு கதிப் பிறவிகளையும் நிலை தடுமறச் செய்யவல்லது வினையின் போக்கு.*

*உயிர்களை இங்குமங்குமாக ஏற்றி இறக்கும் விதியின் தன்மையைக் கங்கை காண் படலத்தில் '........நாவாய்.......' அமரர் வையத்து இங்கொடு அங்கு இழித்தி ஏற்றும் இருவினை என்னல் ஆன' (2348) எனக் கம்பர் குறிப்பிடுவார்.*

*ஆற்றின் வெள்ளப் போக்கிலேயே பொருள்கள் போகும்; (கதி -போக்கு) எதிர்த்துச் செல்லா. வினைப் பயன் இழுக்கும் போக்கிலேயே பல்வேறு உயிர்கள் போகும். இக்கருத்து மூலம் புறநானூற்றுப் பூங்குன்றனார் பாடல்.*

***வானம் தண்துளி தலைஇ ஆனாது.***
***கல்பொருது இரங்கும் மல்லற் பேரியாற்று***
***நீர்வழிப் படூஉம் புனைபோல். ஆருயிர்***
***முறைவழிப் படூஉம். (புறநா. 192***

*இவ்வாறு கொள்ளாமல் செல்லுறு கதி என்பதற்கு தேவ கதி. மனித கதி. விலங்கு கதி. தாவர கதி என்று கொண்டு பொருள் கொள்ளலும் தக்கதே. (கதி: பிறவி வகை)*

*ஒரு நிலத்துப் பொருள்களை மறு நிலத்துக் கொண்டு சேர்த்து நிலத்து இயல்பை மாற்றுவதாகச் சரயு வெள்ளத்தை வருணித்தார். இது திணை மயக்கம். திணை என்னும் சொல் ஒழுகலாறு என்னும் பொருள் உடையது; உயிரினங்கள் தம் ஒழுக்கத்தின் போக்குக்கு ஏற்றபடியே வாழ்வின் போக்கினை; ஊழ் அமைதியினை: அடைகின்றன. சமய. தத்துவவாதிகளின் வினைக் கோட்பாட்டை வெள்ளத்து வருணனையிலே கவிச் சக்கரவர்த்தி எளிமையாகவும் இனிமையாகவும் விளக்குகிறார். 'ஒரு செனனத்திலே பண்ணின வினை வேறொரு செனனத்திலே வந்து செனனங்களெல்லாம் தொடர்ந்து வருகிறது போல இருந்தது'; ஒரு பழைய உரை. (ஐயரவர்கள் நூலகப் பதிப்புக் காண்க) ஆற்று வெள்ளம் இடையறாது ஒழுகுவது போலவே வினைப் போக்கும் இடையறாது என்ற நுட்பத்தை இப்பழைய உரை விளக்குகிறது. நெய்தல் தன்னை: நெய்தலை; 'தன்' என்பது சாரியை.*

*குலம்: வெள்ளம்.*

***29.*** ***காத்த கால்மள்ளர் வெள்ளக்***
***கலிப்பறை கறங்க. கைபோய்ச்***
***சேர்த்த நீர்த்திவலை. பொன்னும்***
***முத்தமும் திரையின் வீசி.***
***நீத்தம் ஆன்று. அலையஆகி***
***நிமிர்ந்து பார்கிழிய நீண்டு.***
***கோத்த கால்ஒன்றின் ஒன்று***
***குலம் எனப்பிரிந்தது அன்றே.***

***மன்னர் காத்த கால்*** - *உழவர்கள் காத்துநின்ற கால்வாயில்;* ***வெள்ளக் கலிப்பறை கறங்க*** - *வெள்ளம் வருவதைத் தெரிவிக்கும் கிணைப்பறை ஒலிக்க;* ***கை போய்*** - *ஒழுங்காகச் சென்று;* ***சேர்த்த நீர்த்திவலை*** - *திரண்ட நீர்த்திவலையும்;* ***பொன்னும் முத்தும்*** - *பொன்னும் முத்தும் ஆகியவைகளை;* ***திரையின் வீசி*** - *அலைகளால் வீசி எறிந்து;* ***நீத்தம் அன்று*** - *வெள்ளம் பெருகியும்;* ***அலைய ஆகி நிமிர்ந்து*** - *அலைகளால் உயர்ந்தும்;* ***பார் கிழிய நீண்டு*** - *நிலம் கிழியும்படி நீளச் சென்று;* ***கோத்த கால் ஒன்றின் ஒன்று*** - *முறையாகத் தொடர்கின்ற ஒரு கால்வாயிலிருந்து மற்றொரு கால்வாயாக;* ***குலம் எனப் பிரிந்தது*** - *குலம் பல கிளைகளாகப் பிரிவது போல் பிரிந்து சென்றது. சரயு வெள்ளம்.*

*சரயு ஆறு பல வாய்க்கால்களாக அங்கங்கே பிரிந்து நீளப் பாய்ந்தது. ஒரே குலம் பல கிளைகளாகப் பிரிந்து நெடிது தொடர்ந்து வாழ்வது போன்றது. இது. கால்வாய் ஒன்று பலவாகப் பிரியினும் உள்ளுறை நீர் ஒன்றே; உயிர்க்குலம் பல கிளைகளாகப் பிரிந்தாலும் உயிர் ஒன்றே. இக் கருத்து அடுத்த பாடலின் கற்பனையாக விரிகிறது. குலம் ஒன்றில் அனேகம் பெயர் உற்பவித்தாற் போல ஆற்றில் கால்கள் பல பிரிந்தன' என்பது 'இராமாயணக் கருப்பொருள்' தரும் விளக்கம். (ஐயரவர்கள் நூலகப் பதிப்புக் காண்க.)*

*சமயம்: வெள்ளம்*

***30.*** ***கல்லிடைப் பிறந்து. போந்து.***
***கடலிடைக் கலந்த நீத்தம்.***
***'எல்லைஇல் மறைகளாலும் இயம்ப***
***அரும் பொருள்ஈது' என்னத்***
***தொல்லையில் ஒன்றேஆகி.***
***துறைதொறும். பரந்த சூழ்ச்சிப்***
***பல்பெரு சமயம் சொல்லும்***
***பொருளும்போல். பரந்து அன்றே.***

***கல்லிடைப் பிறந்த போந்து*** - *இமய மலையில் தோன்றி அங்கிருந்து வந்து;* ***கடலிடைக் கலந்த நீத்தம்*** *-கடலிலே கலந்துவிட்ட சரயுவின் வெள்ளமானது;* ***'எல்லை இல் மறைகளாலும்*** - *அளவிட முடியாத வேதங்களாலும்;* ***இயம்ப அரும் பொருள் ஈது' என்ன*** - *சொல்லுதற்கரிய பரம்பொருள் (போன்றது) இவ்வெள்ளம்' என்று கூறுவதற்கு ஏற்றபடி;* ***தொல்லையில் ஒன்றே ஆகி*** - *ஆதிமுதலில் ஒன்றாகவே இருந்து;* ***துறைதொறும்*** - *ஏரி குளம் முதலிய வேவ்வேறு இடங்களிலெல்லாம்;* ***பரந்த*** - *விரிந்த;* ***சூழ்ச்சிப் பல்பெருஞ் சமயம்*** - *ஆராய்ச்சியுடைய பல்வேறு சமயவாதிகள்;* ***சொல்லும் பொருள்போல்*** - *விளக்கி உரைக்கின்ற பரம்பொருள் போல;* ***பரந்தது*** - *பரவியது.*

*பரம்பொருள் ஒன்று; அதுபோல வெள்ளநீரும் ஒன்றே. பல்வேறு சமய. தத்துவங்களின் கருத்துக்கு ஏற்பப் பரம்பொருளும் வெவ்வேறு நாம. ரூப பேதங்களாக விளகங்குகிறது; அதுபோலவே வெள்ளநீரும் ஏரி. குளம். கால்வாய் போன்ற பல இடங்களில் பல பெயர்களால் பரந்து செல்கிறது.*

*கல்: (இமய மலை; இமயத்தை 'வடபெருங்கல்' என்று குறுங்கோழியூர் கிழார் (புறநா.17) குறிப்பர். மதுரைக் காஞ்சி (70)யிலும் இவ்வாட்சி காணலாம்.*

***வேறுபாடு சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்***
***விளங்குபரம் பொருளேநின் விளையாட்டல்லால்***
***மறுபடும் கருத்தில்லை; முடிவில் மோன***
***வாரிதியில் நதித்திரள் போல் வயங்கிற்றம்மா.***
***எனத் தாயுமானவரும் (கல்லாலின் :25 பொங்குபல***
***சமயமெனும் நதிக ளெல்லாம்***
***புகுந்துகலந் திடநிறைவாய்ப் பொங்கி ஓங்கும்***
***கங்கு கரை காணாத கடலே.***

*என இராமலிங்க வள்ளலாரும் (மகாதேவ மாலை 48) இதே கருத்தைப் பேணியிருத்தல் அறிந்து மகிழத்தக்கது. ஆற்று வெள்ளமும் கடல்பரப்பும் பொதுப் படிமங்களாக இப்பெருமக்களின் வாக்கிலே அமைவதை உணர்க. கம்பர்தம் சமய தத்துவங்களை உணர உதவும் பாடல்களில் இது மதிப்புமிக்க ஒரு பாடலாகும்.*

*உயிர். மெய்; வெள்ளம்*

***31. தாது உகு சோலைதோறும்.***
***சண்பகக் காடுதோறும்.***

***போது அவிழ் பொய்கைதோறும்.***
***புது மணல் - தடங்கள்தோறும்.***
***மாதவி வேலிப் பூக வனம்தொறும்.***
***வயல்கள்தோறும்.***
***ஓதிய உடம்புதோறும் உயிர்***
***என. உலாயது அன்றே.***

***தாது உகு சோலைதோறும்*** *- மகரந்தத்தூள் சிந்துகின்ற சோலை தோறும்;* ***சண்பகக் காடுதோறும்*** *- சண்பக மரம் செறிந்த காடுகள் தோறும்;* ***போது அவிழ் பொய்கைதோறும்*** *- முற்றிய அரும்புகள் முருக்கு அவிழ்ந்து மலர்கின்ற பொய்கைதோறும்;* ***புதுமணல் தடங்கள் தோறும்*** *- புதுமணல் பரப்பையுடைய தடாகங்கள்தோறும்;* ***மாதவி வேலிப் பூக வனம்தொறும்*** *- குருக்கத்திக் கொடிபடர்ந்த வேலியையுடைய கமுகந் தோட்டந்தோறும்;* ***வயல்கள்தோறும்*** *- நெல்வயல்கள் தோறும் ஓதிய உடம்புதோறும் - உயிர் என - நான்கு கதிகளாக நூல்களால் ஓதப்பட்ட பல்வேறு உடம்புகள்தோறும் சென்று உலாவும் ஒரே உயிர்போல;* ***உலாவியது*** *- சரயுவின் வெள்ளம் பரவி உலாவிற்று.*

*சோலை முதலான பல்வேறு இடங்களிலும் ஒரே சரயுவின் நீர் உலாவியது. ஒரே ஆன்மா தான் பல உடல்களிலே உலவுகிறது என்ற தத்துவம் இங்கே கம்பரால் உவமையாகக் கொள்ளப்பட்டது. அயோத்தியா காண்டத்துக் கடவுள் வாழ்த்துப் பாடலில். 'வான் நின்று இழிந்து வரம்பு இகந்த மா பூதத்தின் வைப்பு எங்கும் ஊனும் உயிரும் உணர்வுபோல் உள்ளும் புறத்தும் உளன் என்ப' (1313) என்று பரம்பொருள் தத்துவத்தைக் கம்பர் விளக்குவார்; இங்கு அதனை இணைத்து உணரலாம்.*

*இப் படலத்தின் இறுதி மூன்று பாடல்களில் சமய. தத்துவக் கோட்பாடுகளை இயற்கைக் காட்சிகளுக்கு உவமையாக்கி விளக்கிய திறமும் காணாப்பொருளை உவமையாக்கும் திறமும் போற்றத் தக்கன.*

## *நாட்டுப் படலம்*

*கோசல நாட்டின் வளத்தை / சிறப்பைக் கூறும் படலம் என விரியும். நாடு: நாட்டின் வளம் அல்லது சிறப்பு: இதனை ஆகுபெயர் என்பர்.*

*கோசலநாட்டு மக்களின் பொழுதுபோக்கு. உழவர்களின் உயர்ந்த வாழ்க்கை. செல்வப் பொலிவு. பெண்டிர் பெருமை. நல்லன கொண்டு அல்லன நீக்கி வாழும் மக்களின் பண்பு நலம். கலை வளர்ச்சி ஒழுக்க நெறி பேணும் ஆடவர் மற்றும் மகளிரால் அங்கு அறம் நிலைபெற்றிருத்தல் போன்ற பல செய்திகள் இப்படலத்தில் விவரிக்கப்படுகின்றன.*

*கோசலத்தின் வளம்*

**அறுசீர் விருத்தம்**

***32.*** **வாங்க அரும்பாதம் நான்கும்**
**வகுத்த வான்மீகி அன்பான்.**
**தீம் கவி. செவிகள் ஆரத்**
**தேவரும் பருகச் செய்தான்;**
**ஆங்கு. அவன்புகழ்ந்த நாட்டை.**
**அன்பு எனும் நறவம் மாந்தி.**
**மூங்கையான் பேசலுற்றான் என்னை.**
**யான் மொழிய லுற்றேன்.**

***வாங்க அரும் பாதம் நான்கும் வகுத்த*** *- எடுத்துவிடுவதற்கு அரிய நான்கு அடிகள் கொண்ட சுலோகங்களால் இராமாயணம் இயற்றிய;* ***வான்மீகி என்பான்*** *- வான்மீகி முனிவர் என்று சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற முனிவன்;* ***தேவரும் செவிகள் ஆரப்பருக*** *- தேவர்களும் தம் செவி வாயாகப் பருகும்படி;* ***தீம் கவி செய்தான்*** *- இனிய அமுத கவி பெய்தான்;* ***ஆங்கு அவன் புகழ்ந்த நாட்டை*** *- ஆதி காவியத்தில் அம்முனிவன் புகழ்ந்துரைத்த நாட்டை;* ***அன்பு எனும் நறவம் மாந்தி*** *- அன்பு என்னும் மதுவைப் பருகி;* ***மூங்கையான் பேசலுற்றான் என்ன*** *- ஊமையே பேசத் தொடங்கிவிட்டான் என்றாற் போல;* ***யான் மொழிய லுற்றேன்*** *- நான் பேசலானேன்.*

*வான்மீகி பாடிய சுலோகத்தில் எந்த வரியையும் எடுத்துவிட முடியாது என்பார் வாங்க அரும் பாதம் என்றார்; அத்துணைச் செறிவு மிக்கது வான்மீகியின் வாக்கு என்பது. பாதம்: (இங்கே) பாட்டின் அடிகள். வான்மீகிக்கு முன்னர் நான்கு அடி கொண்ட சுலோகம் இல்லை யாதலின் அவ்வாறு முதலில் கவி செய்தமையால் அவர் ஆதிகவி எனப்பட்டார் என்பர். என்பான்: எனப்பட்டவன்; செயப்பாட்டு வினை.*

*தேவரும் -உயர்வு சிறப்பும்மை. 'பருக' என்ற சொல்லாட்சிக்கு ஏற்பகச் 'செவி வாயாக' எனவும் தேவர்கள் பருகியதாகக் கவி கூறியதற்கு ஏற்பக் கவியமுதம் எனவும் உருவகப்படுத்தி உரை கூறப்பட்டது. வான்மீகத்தின் பயன் கூறுமிடத்துத் தேவரும் கேட்டு மகிழ்ந்ததாகக் குறிக்கப்பட்டிருப்பதாகக் கூறுவர். ஆதிகவியை நினைந்தபோது கம்பருக்கு அடக்க உணர்வு முகிழ்த்ததை இப்பாடல் உணர்த்துகிறது. அன்பெனும் நறவம் -உருவகம். கள் உண்டவன் சொல்போலப் போதை நிறைந்த கவிச் சொல் பிறந்ததை நாம் உணரலாம். கள்ளுக்குச் 'சொல்விளம்பி' என்று ஒரு பெயருண்டு. கவிஞரா பேசுகிறார்? இல்லை. உள்ளேயுள்ள அன்பெனும் நறவம் பேசுகிறது!*

*கோசல நாட்டு வளம் இப்பாடலில் பொதுவாக. பேசப்பட்டது; இனி. விளக்கமாகப் பேசும். அடுத்த பாடல்.*

***33.*** **வரம்பு எலாம் முத்தம்; தத்தும்**
**மடை எலாம் பணிலம்; மா நீர்க்**
**குரம்பு எலாம் செம் பொன்; மேதிக்**
**குழி எலாம் கழுநீர்க் கொள்ளை;**
**பரம்பு எலாம் பவளம்; சாலிப்**
**பரப்பு எலாம் அன்னம்; பாங்கர்க்**
**கரம்பு எலாம் செந் தேன்; சந்தக்**
**கா எலாம் களி வண்டு ஈட்டம்.**

**வரம்பு எலாம் முத்தம்** *-(வயல்) வரப்புகளிலெல்லம் முத்துக்கள்;* **தத்தும் மடை எலாம் பணிலம்** *- தண்ணீர் பாயும் மடைகளிலெல்லாம் சங்குகள்;* **மாநீர்க் குரம்பு எலாம் செம்பொன்** *- மிகுந்த நீர்ப் பெருக்குடைய செய்கரை களிலெல்லாம் செம்பொன்;* **மேதிக் குழி எலாம் கழுநீர்க் கொள்ளை** *- எருமைகள் படிகின்ற பள்ளங்களிலெல்லாம் செங்கழுநீர் மலர்கள்;* **பரம்பு எலாம் பவளம்** *- பரம் படித்த இடங்களி லெல்லாம் பவளங்கள்;* **சாலிப் பரப்பு எலாம் அன்னம்** *- நெற்பயிர் நிறைந்த பரப்புகளிலெல்லாம் அன்னங்கள்;* **பாங்கர்** *- அவற்றின் பக்கங்களில் இருக்கின்ற;* **கரம்பு எலாம் செந்தேன்** *- சாகுபடி செய்யப்படாத நிலங்களி லெல்லாம் செந்தேன்;* **சந்தக் கா எலாம் களிவண்டு ஈட்டம்** *- அழகிய சோலைகளிலெல் லாம் மதுவுண்டு மகிழும் வண்டுகளின் கூட்டம்; (ஆக இவ்வாறு வளங்கள் அங்கே பெருகியுள்ளன).*

*பலவகை வளங்களும் கோசல நாட்டில் கொழித்திருந்தன என்பது கருத்து. பயிர்த்தொழிலுக்கு ஏற்பப் பண்படுத்தாத கரம்பிலும் செந்தேன் பெருக்கு இருந்தது என்பதொன்றே கோசலத்தின் வளத்தைப் புலப்படுத்தப் போதுமானது. குரம்பு: செய்கரையாகிய அணை. சந்தம்: அழகு முதம் முதலான எழுவாய்களுக்கு உள்ளன என்பது பயனிலையாக உரைக்கப்பட்டது - எச்சப் பயனிலை. மருத வளம்*

*34.* ***ஆறு பாய் அரவம். மள்ளர்***
***ஆலை பாய் அமலை. ஆலைச்***
***சாறு பாய் ஓதை. வேலைச்***
***சங்கின் வாய்ப் பொங்கும் ஓசை.***
***ஏறு பாய் தமரம். நீரில்***
***எருமை பாய் துழனி. இன்ன***
***மாறு மாறு ஆகி. தம்மில்***
***மயங்கும் - மா மருத வேலி.***

***மா மருத வேலி*** - *பெருமைக்குரிய (கோசல நாட்டின்) மருத நிலத்து எல்லைக்குள்;* ***ஆறு பாய் அரவம்*** - *ஆற்று நீர் பாய்வதால் எழும் ஓசையும்;* ***மள்ளர் ஆலை பாய் அமலை*** - *உழவர்கள் ஆலையாடுதலால் உண்டாகும் ஓசையும்;* ***ஆலைச் சாறு பாய் ஓசை*** - *அக் கரும்பாலைகளில் கருப்பஞ்சாறு பாய்வதால் எழுகின்ற ஓசையும்;* ***வேலைச் சங்கின் வாய்ப் பொங்கும் ஓசை*** - *நீர்க் கரைகளில் உள்ள சங்குகளிடமிருந்து பெருகும் ஓசையும்;* ***ஏறுபாய் தமரம்*** - *எருதுகள் தம்முள் மோதிப் பாயும்போது எழும் ஓசையும்;* ***நீரில் எருமை பாய் துழனி*** - *நீர்நிலைகளில் எருமைகள் பாய்வதால் உண்டாகும் ஓசையும்;* ***இன்ன*** - *ஆகிய இத்தகைய ஓசைகள்;* ***மாறு மாறு ஆகி*** - *வெவ்வேறாக அமைந்தனவாகி;* ***தம்மில் மயங்கும்*** - *தமக்குள் ஒன்றோடொன்று கலந்து ஒலிக்கும்.*

*ஓரிடத்து எழும் ஓசை கொண்டு அவ்விடத்தின் இயல்பினை அறியலாகும். சங்கு கடலுக்கு உரியது; புதுவெள்ளப் பெருக்கில் எதிரேறி மருத நிலத்து வந்தது. தனித்தனியே பிறக்கும் ஓசைகள் பரவும்போது கலந்து ஒலிப்பதை 'மாறு மாறு ஆகித் தம்மில் மயங்கும்' என விளக்கினார். அரவம். அமலை. ஓதை. ஓசை. தமரம். துழனி; இவை ஒரு பொருட் சொற்கள். பொருட் பின்வருநிலையணி.*

*35.* ***தண்டலை மயில்கள் ஆட.***
***தாமரை விளக்கம் தாங்க.***
***கொண்டல்கள் முழவின் ஏங்க.***
***குவளை கண் விழித்து நோக்க.***
***தெண் திரை எழினி காட்ட. தேம்***
***பிழி மகர யாழின்***
***வண்டுகள் இனிது பாட. -***
***மருதம் வீற்றிருக்கும் மாதோ.***

***தண்டலை மயில்கள் ஆட*** - *சோலைகளிலே மயில்கள் ஆடவும்;* ***தாமரை விளக்கம் தாங்க*** - *தாமரை மலர்கள் விளக்குகளை ஏந்தி நிற்கவும்;* **கொண்டல்கள் முழவின் ஏங்க** - *மேகங்கள் மத்தளம் போல ஒலிக்கவும்;* **குவளை கண் விழித்து நோக்க** - *குவளைக் கொடிகளில் மலர்கள் கண்போல் விழித்துப் பார்க்கவும்;* **தெண் திரை எழினி காட்ட** - *நீர்நிலைகளின் அலைகள் திரைச்சீலை போலக் காட்டவும்;* **தேம் பிழி மகர யாழின்** - *தேனை ஒத்த மகர யாழ் இசை போல;* **வண்டுகள் இனிது பாட** - *வண்டுகள் இனிமையாகப் பாடவும்; (இவ்வாறு இசையும் கூத்தும் பொலிகின்ற அரங்கிலே)-* **மருதம் வீற்றிருக்கும்** - *மருத நாயகி வீறு தோன்ற அமர்ந்திருப்பது போன்றிருந்தது.*

*உரையாசிரியர்கள் பிறரெல்லாம் மருத வேந்தன் என்றனர்; அது பொருத்தமே. எனினும். இயற்கையை அன்னை எனப் போற்றும் மரபினை ஓம்பி இங்கே மருதம் நாயகியாக உரைக்கப்பட்டது.''.......எதிரே கொலு வீற்றிருக்கும் அரசி மருதாயி நாச்சி இக்காட்சியைக் கண்டு களிக்கிறாள்'' என்பர் பேரா. அ. ச. ஞா. (கம்பன் கலை - பக்.4). ''இந்த இடத்தில் கவிஞன் கையாளும் உவமை. இயல்புக்கும் மரபுக்கும் ஒத்துக் கற்போர்க்கு இன்பம் பயப்பதாகும். கொண்டல் முழங்கின் மயில் ஆடும்; குவளை மலர்ந்திருக்கும் மாலைப் போதில் தாமரை குவிந்துவிடும். இந்த இயல்பு பிறழாமல் முறைப்படுத்தும் கவிஞன் திறன் துய்ப்பார்க்குச் சுவை ஊட்டுமன்றோ?'' (பக்.5)*

*தண்டலை; சோலை. குளிர்ந்த இடம் (தண் + தலை) என்ற பொருள் உடையதாய்ப் பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. குவளைக் கண் என்பது எதுகை நோக்கிக் குவளை கண் என நின்றதாகக் கொண்டு பொருள் கூறுதலும் உண்டு. யாழ்: யாழிசைக்கு ஆகுபெயர்.*

***36.*** **தாமரைப் படுவ. வண்டும்**
**தகை வரும் திருவும்; தண் தார்க்**
**காமுகர்ப் படுவ. மாதர்**
**கண்களும் காமன் அன்பும்;**
**மா முகில் படுவ. வாரிப்**
**பவளமும் வயங்கு முத்தும்;**
**நாமுதல் படுவ. மெய்யும்**
**நாம நூல் பொருளும் மன்னோ.**

**வண்டும் தகை வரும் திருவும்** - *வண்டுகளும் அழகு வளர்கின்ற திருமகளும்;* **தாமரைப் படுவ** - *தாமரை மலர்களில் தகியிருப்பனவாம்;* **மாதர் கண்களும் காமன் அன்பும்** - *விலைமாதர் கண்களும் மன்மதன் அம்புகளும்;* **தாண்தார்க் காமுகப் படுவ** - *குளிர்ந்த மாலை அணிந்த காமுகர்களை தாக்குவனவாம்;* **வாரிப் பவளமும் வயங்கு முத்தும்** - *கடலில் விளையும் பவளமும் ஒளியால் விளங்குகின்ற முத்துகளும்;* **மாமுகில் படுவ** - *கார்மேகங்களில் தங்குவனவாம்;* **மெய்யும் நாம நூல் பொருளும்** - *உண்மையும் புகழ் வாய்ந்த நூல்கள் கூறும் பொருளும்: நா முதல் படுவ - கோசல நாட்டு மக்களின் நாவிலே தங்குவனவாம்.*

*தாக்கப்பெறுவோர் காமுகராக கூறப்படுதலின் 'மாதர்' இங்கே விலைமாதர் எனப் பொருள்பட்டது. கடல் நீரைப் பருகிய மேகம் உடன் பவளங்களையும் முத்தையும் கொண்டன; மன்னுயிர்க்கு இன்றியமையா நீரைப் பொழிந்துவிட்டுப் பவளத்தையும் முத்தையும் தன்னிடத்து வைத்துக்கொண்டது. கோசல நாட்டு மக்கள் வாய்மையுடையவர். நண்ணுற் பொருளே நவில்வர் என்ற கருத்து மிகவும் பேணத்தக்கது. 'படுவ' - சொற்பொருட் பின்வரு நிலையணியாக வந்தது.*

***37.** **நீரிடை உறங்கும் சங்கம்;***
***நிழலிடை உறங்கும் மேதி;***
***தாரிடை உறங்கும் வண்டு;***
***தாமரை உறங்கும் செய்யாள்;***
***தூரிடை உறங்கும் ஆமை;***
***துறையிடை உறங்கும் இப்பி;***
***போரிடை உறங்கும் அன்னம்;***
***பொழிலிடை உறங்கும் தோகை.***

***சங்கம் நீரிடை உறங்கும்** - சங்குகள் தண்ணீரில் உறங்கிக்கொண்டிருக்கும்;* **மேதி நிழலிடை உறங்கும்** *- எருமைகள் மர நிழலில் உறங்கிக் கொண்டிருக்கும்;* **வண்டு தாரிடை உறங்கும்** *- வண்டுகள் மலர் மாலைகளிலே உறங்கிக்கொண்டிருக்கும்;* **செய்யாள் தாமரை உறங்கும்** *- திருமகள் (பெயர்தலின்றித்) தாமரை மலரிலே உறங்குவாள்;* **ஆமை தூறிடை உறங்கும்** *- ஆமைகள் சேற்றிலே உறங்கும்;* **இப்பி துறையிடை உறங்கும்;** *முத்துச் சிப்பிகள் நீர்த் துறைகளிலே உறங்கும்;* **அன்னம் போரிடடை உறங்கும்** *- அன்னங்கள் நெற்போரிலே உறங்கிக் கிடக்கும்;* **தோகை பொழிலிடை உறங்கும்** *- மயில்கள் சோலைகளிலே உறங்கிக் கொண்டிருக்கும்.*

*பிறர் இடையியீடின்றி நிம்மதியாக யாவும் தூங்குகின்றன. கவலை யின்றி. அச்சமின்றி. நிலை மாற்றமின்றித் தூங்குகின்றன. மலர் மாலை அணிந்தோர் நடமாடிக் கொண்டிருந்தாலும் அம் மாலைகளிலே வண்டுகள் உறங்குகின்றனவாம்; பலர் ஊடாடும் நீர்த் துறைகளிலே முத்துச் சிப்பிகள் உறங்குகின்றன - இவையெல்லாம் எவ்வகை இடையீடும் இல்லாமல் பெறுகின்ற நிம்மதியையும் அச்சமின்மையையும் குறித்தன. முன்பாட்டில் 'வண்டும் திருமகளும் தாமரைப் படுவ' என்றார்; தேன் நாடி. உண்டபின் வேறு இடம் நாடும் வண்டோடு திருவையும் இணைத்துச் சொன்னார். ஒரு கால் செல்வத்தின் பொதுத்தன்மை நோக்கி அவ்வாறு கம்பர் கூறியிருக்கலாம். கோசல நாடடில் திருமகள் நிரந்தரமாக; இடம் பெயர்தலின்றி செல்வம் தவறான வழியிலே பாயுமோ என்ற அச்சமின்றித் தூங்குகிறாள். 'திரு வீற்றிருந்த தீது தீர் நியமம்' என்று நக்கீரர் வருணித்த மாமதுரைக் கடைவீதி இங்கு நினைவில் எழும். உறங்கும் என ஒரே பொருளில் பன்முறை வந்தது சொற்பொருட் பின்வரு நிலையணி. 'தோகை' ஆகுபெயராய் மயிலைக் குறித்தது.*

*38.* ***படை உழ எழுந்த பொன்னும்.***
***பனிலங்கள் உயிர்த்த முத்தும்.***
***இடறிய பரம்பில் காந்தும் இன***
***மணித்தொகையும். நெல்லின்***
***மிடை பசுங் கதிரும். மீனும்.***
***மென் தழைக் கரும்பும். வண்டும்***
***கடைசியர் முகமும். போதும். -***
***கண் மலர்ந்து ஒளிரும் மாதோ.***

***படை உழ எழந்த பொன்னும்*** - *கலப்பைகள் உழுததால் மேலே எழுந்த பொன்னும்;* ***பனிலங்கள் உயிர்த்த முத்தும்*** - *சங்குகள் ஈன்ற முத்துகளும்;* ***இடறிய பரம்பில்*** - *பரம்படித்த நிலங்களில்;* ***காந்தும்*** - *ஒளி வீசுகின்ற;* ***இன மணித் தொகையும்*** - *பல்வேறு இரத்தினத் தொகையும்;* ***நெல்லின் பசுங்கதிரும்*** - *நெல்லின் செறிந்த பசுங்கதிர்களும்;* ***மீனும்*** - *மீன்களும்;* ***மென் தழைக் கரும்பும்*** - *மென்மையான தாள்களையுடைய கரும்பும்;* ***வண்டும்*** - *வண்டுகளும்;* ***கடைசியர் முகமும்*** - *உழத்தியரின் முகங்களும்* - ***போதும்*** - *(தாமரை) மலரும்;* ***கண் மலர்ந்து ஒளிரும்*** - *கண் மலர்ந்து ஒளி வீசும்.*

*பொன் முதல் போது முடிய ஒன்பது பொருள்கள் கண் மலர்ந்து ஒளிரும் என்கிறார் கவிஞர். பொன். முத்து. மணித் திரள் ஆகியவை ஒளிக் கிரணங்கள் வீசுவதைக் கண் மலர்தல் என்றார். நெல் முற்றியதால் கதிரில் எழும் ஒளி கண்மலர்தலாயிற்று; அன்றி கதிர்தொறும் நெல்மணிகள் ஒளிர்ந்ததெனவும் கொள்ளலாம். மீனும் வண்டும் கண்போல் ஒளிர்தலுடையன. கரும்பு கண் மலர்ந்து ஒளிர்தலாவது கணுக்களுடன் விளங்குதல். போது கண்மலர்ந்து ஒளிர்தல் தேனொடு விளங்கி ஒளிர்வது என்பர். 'கண் மலர்ந்து ஒளிரும்' என்ற தொடர் இறுதியில் இருந்தாலும் பாடல் முழுவதையும் தொடர்புபடுத்தி விளக்குகிறது; கடைநிலைத் தீவகம். பலவற்றுக்கும் ஒப்புமை காட்டி இணைப்பதால் ஒப்புமைக் கூட்டணியாம்.*

*39.* ***தெள் விளிச் சிறியாழ்ப் பாணர்***
***தேம் பிழி நறவம் மாந்தி.***
***வள் விளிக் கருவி பம்ப.***
***வயின் வயின் வழங்கு பாடல்.***
***வெள்ளி வெண் மாடத்து உம்பர்.***
***வெயில் விரி பசும் பொன் பள்ளி.***
***எள்ள அருங் கருங் கண் தோகை***
***இன் துயில் எழுப்பும் அன்றே.***

***தெள்விளிச் சிறியாழ்ப்பாணர்*** - *தெளிந்த இசை கொண்ட சிறிய யாழையுடைய பாணர்கள்;* ***தேம்பிழி நறவம் மாந்தி*** - *இனிமையாய் வடிக்கப்பட்ட மதுவினைக் குடித்து;* ***வள் விசிக் கருவி பம்ப*** - *வாரால் இழுத்துக் கட்டப்பட்ட முழவுகள் ஒலிக்க;* ***வயின் வயின் வழங்கு பாடல்*** - *ஆங்காங்கே பாடப்படுகின்ற பாடல்கள்;* ***வெள்ளி வென் மாடத்து உம்பர்*** - *வெள்ளை வெளேரென ஒளிவீசும் மாடங்களின் மேல்;* ***வெயில் விரி பசும்பொன் பள்ளி*** - *ஒளி உமிழும் பசும்பொன்னாலன கட்டிலிலே (உறங்குகின்ற);* ***எள்ள அருங்கருங்கண் தோகை*** - *பழிப்பதற்கு அரிய கருமை நிறக் கண்களையுடைய மயில்போலும் மகளிரை;* ***இன்துயில் எழுப்பும்*** - *இனிய உறக்கத்தி லிருந்து எழுப்பும்.*

*'வயின் வயின் வழங்கு பாடல் துயில் எழுப்பும்' என வினை முடிபு கொள்க. பாணர்கள் பாடும் இசையால் துயில் நீங்குமளவு மென்மையும் வளமையும் உடையவராகச் செல்வ மங்கையர் கோசலத்தில் வாழ்ந்தனர். எள்ள அரும் என்பது யாப்பியல் வடிவில் அகரம் தொக்கு எள்ளரும் என நிற்கும்.*

***40.*** **ஆலைவாய்க் கரும்பின் தேனும்.**
**அரி தலைப் பாளைத் தேனும்.**
**சோலை வீழ்க் கனியின் தேனும்.**
**தொடை இழி இறாலின் தேனும்.**
**மாலைவாய் உகுத்த தேனும். -**
**வரம்பு இகந்து ஓடி. வங்க**
**வேலைவாய் மடுப்ப - உண்டு.**
**மீன் எலாம் களிக்கும் மாதோ.**

***ஆலைவாய்க் கரும்பின் தேனும்*** - *கரும்பாலைகளிலிருந்தும் பெருகும் தேன் போன்ற கருப்பஞ்சாறும்;* ***அரிதலைப் பாளைத் தேனும்*** *-கள் இறக்குவோர் அரிந்த பாளையிலிருந்து வடியும் கள்ளும் சோலைவீழ்க் கனியின் தேனும் - சோலைகளில் பழுத்த பழங்களின் சாறும்;* ***தொடை இழி இறாலின் தேனும்*** *-தொடுக்கப்பட்ட இடத்தினின்று வழிகின்ற தேனடைத் தேனும் -* ***மாலை வாய் உகுத்த தேனும்*** *- மலர் மாலைகளிலிருந்து வடியும் தேனும்;* ***(ஆக இவையெல்லாம்); வரம்பு இகந்து ஓடி*** *- எல்லை மீறிப் பெருகி ஓடி; வங்க வேலைவாய் மடுப்ப -கப்பல்கள் இயங்கும் கடலிலே போய்ச் சேர;* ***மீன் எலாம் உண்டு களிக்கும்*** *- (கடலிலே வந்து கலக்கின்ற அவற்றை) மீன்களெல்லாம் பருகிக் களிக்கும்.*

*41.* ***பண்கள் வாய் மிழற்றும் இன்***
***சொல் கடைசியர் பரந்து நீண்ட***
***கண். கை. கால். முகம். வாய் ஒக்கும்***
***களை அலால் களை இலாமை.***
***உண் கள் வார் கடைவாய் மன்னர்.***
***களைகலாது உலாவி நிற்பர்;-***
***பெண்கள்பால் வைத்த நேயம்***
***பிழைப்பரோ. சிறியோர் பெற்றால்?***

***பண்கள் இன்சொல்*** *- பண்கள் இசைந்தது போன்ற இனிய சொற்களை;* ***வாய் மிழற்றும் கடைசியர்*** *- வாயால் பேசுகின்ற உழத்தியரின்;* ***பரந்து நீண்ட கண்*** *- அகன்று நீண்ட கண்கள்;* ***கை. கால். முகம். வாய் ஒக்கும்*** *- கைகள். கால்கள். முகம். வாய் ஆலியவற்றை ஒத்திருக்கும்;* ***களை அலால்*** *- (குவளை. தாமரை. ஆம்பல் என்னும் மலர்களாகிய) களைகளைத் தவிர;* ***களை இலாமை*** *- வேறு களைகள் இல்லாமையால்;* ***உண்கள் வார் கடைவாய் மள்ளர்*** *- கள் ஒழுகும் கடைவாயை உடைய உழவர்கள்;* ***களைகலாது உலாவி நிற்பர்*** *- களைகளைக் களையமாட்டாமல் இங்குமங்குமாக உலாவிக் கொண்டிருப்பார்கள்;* ***பெண்கள்பால் வைத்த நேயம் சிறியோர் பெற்றால்*** *- பெண்களிடம் வைத்த இச்சையைக் கீழோர் பெற்றால்;* ***பிழைப்பரோ*** *- பிழைப்பார்களா (பிழைக்க மாட்டார் என்றபடி)*

*சுளைகளாக உள்ள மலர்களெல்லாம் தங்கள் நேயத்துக்கு உரிய உழவர் மகளிரின் உறுப்புகள் போன்று இருத்தலால். அவற்றைக் களையமாட்டாமல் உழவர்களின் அறிவு தடுமாறினர் என்பது கருத்து. கண்ணுக்குக் குவளை; கை கால் முகங்களுக்குத் தாமரை; வாய்க்கு ஆம்பல் என்று பொருத்தி உணர்க. 'அற்ப அறிவுடையவர்கள் காமவயப்பட்டால் பிழைக்கமாட்டார்கள் என்பது இறுதி வரியால் உணர்த்தப் படுகின்ற நெறியாகும். வேற்றுப்பொருள் வைப்பணி. (சிறப்புப் பொருளை வருணித்து அதன் பெறுபொருளாகஒரு பொதுப்பொருளை விளக்குவது இவ்வணியின் தன்மை).*

*கடமையை மறக்கச் செய்யும் காம வயப்பட்ட கீழோர் பிழையார் என்பதைக் கவிச் சக்கரவர்த்தி மேலே சூர்ப்பணகை சூழ்ச்சிப் படலத்தில் விளக்குவார் (3141. 3142). இந்திரன் முதலோர் தகுதிப் பாடுடைய நேயம் பெற்றுப் பொலிவதைச் சுட்டும் சூர்ப்பணகை வாக்காக. நன்மை அவர்க்கு இலை உனக்கே' என்றும் 'எங்ஙனம் வைத்து வாழ்தி' என்றும் கூறுகிறாள். இலக்கியத் திறனாய்வரங்கில் 'நன்மை அவர்க்கு. இலை உனக்கு' எனவும் 'எப்படித் தான் அவளை வைத்து வாழப் போகிறாயோ' எனவும் எதிரொலிப் பொருள் தருவன இந்தத் தொடர்கள். பெண்கள்பால் வைத்த நேயம் சிறியோர் பெற்றால் வாழார் என்ற இப் பாடலின் குறிப்பினைச் சூர்ப்பணகை வாயிலாகக் கவிச் சக்கரவர்த்தி உணர்த்தும் குறிப்பினோடு ஒப்பிட்டு உணர்தல் தக்கது. பெண்களிடம் அன்பு கொண்டால். தவிர்க்க வேண்டிய காலத்திலும். அதைத் தவிர்க்க மாட்டார்கள்' என்ற கருத்துக்கு ஏற்பப் பொருள் கொள்ளவும் இடமுண்டு*

***42.*** ***புதுப்புனல் குடையும் மாதர்***
***பூவொடு நாவி பூத்த***
***கதுப்பு உறு வெறியே நாறும்.***
***கருங் கடல் தரங்கம்; என்றால்.***
***மதுப் பொதி மழலைச் செவ் வாய். வாள் -***
***கடைக் கண்ணின் மைந்தர்***
***விதுப்பு உற நோக்கும். அன்னார்***
***மிகுதியை விளம்பலாமோ?***

***கருங்கடல் தரங்கம்*** *- கரிய நிறத்தை உடைய கடலின் அலைகள்;* ***புதுப்புனல் குடையும் மாதர்*** *- ஆற்றில் புதுவெள்ளத்தில் நீராடும் மகளிரின்;* ***பூவொடு நாவி பூத்த கதுப்பு*** *- மலர்களும் கஸ்தூரிக் கலவையும் கமழ்கின்ற கூந்தலின்;* ***உறு வெளியே நாறும்*** *- மிகுந்த மணமே கமழும் (என்றால்) மைந்தர் விதுப்பு உற - ஆண்கள் விருப்பம் கொள்ள;* ***வாள் கடைக் கண்ணின் நோக்கும்*** *-வாள் போன்ற கடைக் கண்களால் (காதல் எழப்) பார்க்கின்ற;* ***மதுப் பொதி மழலைச் செவ்வாய்*** *- தேன் போன்ற குதலை மொழி பேசும் சிவந்த வாயைக் கொண்ட;* ***அன்னார் மிகுதியை விளம்பல் ஆமோ*** *- அந்தப் பெண்களின் எண்ணிக்கை மிகுதியைக் கூற இயலுமோ? (பெண்கள் எண்ணிக்கை மிகுதியாதலின் கூற இயலாது)*

*கடல் ஆகிய பெருநீர்ப் பரப்பு சேர்ந்த ஆற்று நீர்ப் பெருக்கால் மலர் மணமும் கத்தூரி மணமுமே மணக்க வேண்டுமெனின் எண்ணில்லாத மகளிர் ஆற்றில் நீராடியிருக்கவேண்டும். இவ்வாறு உய்த்துணர வைத்தலால் இதனை அனுமான அணி என்பர்.*

***குரும்பைவெம் முலையார் ஆடக் கூந்தலின் நறவம் தோய்ந்த***
***இரும்புலன் ஆறுபாய எறிதிரை சுருட்டும் தெண்ணீர்க்***
***கருங்கடல் புலவு நீங்கி நறுமணம் கமழு மென்றால்.***
***முருந்து உறழ் மூரலார்தம் மிகுதியை மொழிய லாமோ?***

*என்ற நைடதப் பாடலில் கம்பர் எதிரொலிப்பதை உணரலாம் (நைடதம் - நாடு. 11)*

***வெறியே*** *- ஏகாரம் தேற்றம்;* ***கடைக்கண் (கண்ணின்கடை)*** *- முன் பின்னாகத் தொக்கது விளம்பலாமோ - ஓகாரம் எதிர்மறை.*

*43.* ***வென் தளக் கலவைச் சேறும்.***
***குங்கும விரை மென் சாந்தும்.***
***குண்டலக் கோல மைந்தர் குடைந்த.***
***நீர்க் கொள்ளை. சாற்றின்.***
***தண்டலைப் பரப்பும். சாலி***
***வேலியும் தழீஇய வைப்பும்.***
***வண்டல் இட்டு ஓடு மண்ணும் -***
***மதுகரம் மொய்க்கும் மாதோ.***

***வெண்தளக் கலைச் சேறும்*** *- பச்சைக் கற்பூரம் கலந்த சாந்தும்;* ***குங்கும விரை மென் சாந்தும்*** *- குங்குமப் பூ முதலியன கலந்த சந்தனமும் பூசிய;* ***குண்டலக் கோல மைந்தர்*** *- குண்டலம் அணிந்த அழகிய ஆண்கள்;* ***குடைந்த நீர்க் கொள்ளை*** *- முழுகி நீராடிய அந்த வெள்ளப் பெருக்கை;* ***சாற்றின்*** *- சொல்லுவதாயின்;* ***தண்டலைப் பரப்பும்*** *- சோலைப் பரப்புகளிலும்;* ***சாலி வேலியும்*** *- நெற்பயிர் விளையும் வயல்களிலும்;* ***தழீஇய வைப்பும்*** *- அவற்றைச் சார்ந்துள்ள நிலப் பகுதிகளிலும்;* ***வண்டல் இட்டு ஓடும் மண்ணும்*** *- வண்டல் படியும்படி (நீர்) ஓடும் ஏனைய மண் பகுதிகளிலும்;* ***மது கரம் மொய்க்கும்*** *- வண்டுகள் மொய்த்துக் கொண்டிருக்கும். ஆடவர் பூசிய நறுமணக் குழம்பும் சாந்தும் கொண்ட எங்கணும் பரவியிருப்பதால். மணத்தின் வழியே சென்று தேன் நாடும் வண்டுகள் பல இடங்களிலும் மொய்த்துக் கிடந்தன. அவை மணம் நுகர்ந்தனவேயன்றித் தேன் காணவில்லை. வெண்டாளம்: பச்சைக் கருப்பூரம் தழீஇய -சொல்லின் அளபெடை.*

*44.* ***சேல் உண்ட ஒண் கணாரின்***
***திரிகின்ற செங் கால் அன்னம்.***
***மால் உண்ட நளினப் பள்ளி.***
***வளர்த்திய மழலைப் பிள்ளை.***
***கால் உண்ட சேற்று மேதி***
***கன்றுஉள்ளிக் கனைப்பச் சோர்ந்த***
***பால் உண்டு. துயில. பச்சைத்***
***தேரை தாலாட்டும் - பண்ணை.***

***பண்ணை*** *- வயல்களில்;* ***சேல் உண்ட ஒண் க(ண்)ணாரின்*** *- மீன் போன்ற கண்களை உடைய பெண்களைப் போல;* ***திரிகின்ற செங்கால் அன்னம்*** *- திரிகின்ற சிவந்த கால்களை உடைய அன்னங்கள்;* ***மால் உண்ட நளினப் பள்ளி*** *- பெருமையுடைய தாமரை மலர்களாகிய படுக்கையில்;* ***வளர்த்திய மழலைப் பிள்ளை*** *- கிடத்திய இளங்குஞ்சுகள்;* ***கால் உண்ட சேற்று மேதி*** *- காலில் ஒட்டிய சேறுடைய எருமைகள்;* ***கன்று உள்ளிக் கனைப்ப*** *- (ஊரகத்து உள்ள) தம் கன்றுகளை நினைத்துக் கனைத்திருப்பதால்;* ***சோர்ந்த பால் உண்டு*** *- தானே சொரியும் பாலை அருந்தி;* ***துயில*** *- உறங்க;* ***பச்சைத் தேரை தாலாட்டும்*** *- பச்சை நிறத் தேரைகள் தம் ஒலியால் தாலாட்டுப் பாடும்.*

*அன் நடையே பொதுவாக மகளிர் நடைக்கு உவமை கூறப்படும்; இங்கே எதிர்நிலை உவமையாக மகளிர் போல் நடை பயிலும் அன்னம் என வந்தது. அன்னம் தன் குஞ்சைத் தாமரை மலர்ப் படுக்கையிலே கிடத்துகிறது. அன்னக்குஞ்சு பால் அருந்துத் துயில்கிறது. அதற்குக் கிடைத்த பால் எருமை மடியில் இயல்பாகச் சுரந்தது; சுரந்தமைக்குக் காரணம் தன் கன்றை எருமை நினைந்தது. கசிந்த மேதி கனைத்தது; கனைத்த ஒலி காரணமாகப் பால் சுரந்தது. பால் அருந்தி அன்னக் குஞ்சு துயிலத் தேரை தாலாட்டுப் பாடுகிறது! இதைப் போல நளினமான கற்பனை. முன்னே (35) ஓர் இசையரங்கு: இங்கே ஒரு தாலாட்டு; நளினம்: தாமரை. கோசல நாட்டில் எருமை கூடக் கனிந்து கசிந்து வாழ்கிறது!*

*பாடல் கற்பனை 'தென்னந்தமிழின்' என்று தொடங்கும் பாடலுக்கு மூலமாய் அமைகிறது.*

***45.*** **குயில் இனம் வதுவை செய்ய.**
**கொம்பிடைக் குனிக்கும் மஞ்ஞை**
**அயில் விழி மகளிர் ஆடும்**
**பயில் சிறை அரச அன்னம் பல்**
**மலர்ப் பள்ளிநின்றும்**
**துயில் எழ. தும்பி காலைச்**
**செவ்வழி முரல்வ - சோலை.**

***சோலை*** *- சோலைகளில் உள்ள;* ***குயில் இனம் வதுவை செய்ய*** *- சேவலும் பெடையுமான குயில்கள் மணம் புணர;* ***கொம்பிடைக் குனிக்கும் மஞ்ஞை*** *- மரக் கிளைகளுக்கிடையே ஆடுகின்ற மயில்கள்;* ***அயில் விழி மகளிர் ஆடும்*** *- வேல் போன்ற கண்களையுடைய பெண்கள் ஆடுகின்ற;* ***அரங்கினுக்கு அழகு செய்ய*** *- நடன ஆடரங்கத்தை விட அழகை உண்டாக்க;* ***பயில் சிறை அன்னம்*** *- நெருக்கமான சிறகுகளை உடைய அன்னப் பறவைகள்;* ***பல் மலர்ப் பள்ளி நின்றும்*** *- பல தாமரை மலர்களாகிய படுக்கையி லிருந்தும் துயில் எழ- தூக்கம் கலைந்து எழுவதற்காக;* ***தும்பி*** *- வண்டும் காலைச் செவ்வழி பாடும் - காலை நேரத்தில் செவ்வழிப் பண்ணைப் பாடும்.*

*குயில்கள் மகிழ்ச்சியாக உள்ளன; மயில்கள் ஆடுகின்றன; அன்னங்கள் மட்டும் தூங்குகின்றன. அவற்றை எழுப்புவதற்காக வண்டுகள் பாடுகின்றன. நல்ல எண்ணம்தான்; ஆனால் காலை நேரத்தில் பூபளப் பண் பாட வேண்டும்; வண்டுகளோ மாலை நேரத்துக்கு உரிய செவ்வழிப் பண்ணை இசைக்கின்றன; தேன் உண்ட மயக்கத்தால் மாலைப் பண்ணினைக் காலை வேலையில் பாடுகின்றன. 'வள்ளல் நள்ளி வழங்கிய கொடையின் வளத்தால் திளைத்த பாணர்கள் மாலையில் மருதப் பண்ணும் காலையில் செவ்வழிப் பண்ணும் பாடி. இசை மரபை மறந்துவிட்டனர்' என்று வன்பரணர் (புறநா. ) பாடிய பாடற் செய்தி இங்கே கம்பருக்குக் கை கொடுத்திருக்கக் கூடும்.*

மக்கள் பொழுதுபோக்கு

***46. பொருந்திய மகளிரோடு வதுவையில்***
***பொருந்து வாரும்.***
***பருந்தொடுன் நிழல் சென்றன்ன***
***இயல் இசைப் பயன் துய்ப்பாரும்.***
***மருந்தினும் இனிய கேள்வி***
***செவி உற மாந்துவாரும்.***
***விருந்தினர் முகம் கண்டு. அன்ன***
***விழா அணி விரும்புவாரும்.***

***பொருந்திய மகளிரோடு*** *- எல்லா வகைப் பொருத்தங்களும் உள்ள பெண்களுடன்;* ***வதுவையில் பொருந்துவாரும்*** *- மணவினையில் பொருந்தியிருப்பவர்களும்;* ***பருந்தொடு நிழல் சென்றஅன்ன*** *- பருந்தோடு அதன் நிழலும் தொடர்ந்து செல்வது போல;* ***இயல் இசைப் பயன் துய்ப்பாரும்*** *- இயல் இசைத்த இசைப்பாடலை அனுபவிப்பவர்களும்;* ***மருந்தினும் இனிய*** *- அமுதத்தை விட இனிமை மிக்க;* ***கேள்வி செவி உற மாந்துவாரும்*** *- கேட்டறியும் நூலறிவினைச் செவியிற் பொருந்த உண்டு அனுபவிப்பவர்களும்;* ***விருந்தினர் முகம் கண்டு*** *- விருந்தினரின் முகத்தைப் பார்த்து;* ***அன்ன விழா அணி விரும்புவாரும்*** *- உண்ணும் சோறு வழங்கும் விழாவின் சிறப்பை விரும்புவாரும்*

*இச் செய்யுளோடு வாக்கியம் முற்றுப் பெறவில்லை; மேலும் தொடர்கிறது (49 முடிய). இப்படி வரும் செய்யுளைக் குளகச் செய்யுள் என்பர். ஆணுக்கும் பெண்ணுக்கும் உரிய பொருத்தங்கள் பத்து என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. (தொல். பொருள் -பொருளியல் 25)*

***பிறப்பே. குடிமை. ஆண்மை. ஆண்டொடு.***
***உருவு. நிறுத்த காம வாயில்.***
***நிறையே. அருளே. உணர்வொடு. திரு என***
***முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே***

*என்பது தொல்காப்பிய விதி. இவ்வாறு கொள்ளாமல் தினம். கணம். மகேந்திரம். ஸ்திரீ தீர்க்கம். யோனி. ராசி. ராசியதிபதி. வசியம். ரச்சு. வேதை எனச் சோதிட நூலார் கூறுவனவற்றைக் கொள்வாரும் உளர். பருந்தும் நிழலும் போலப் பாட்டும் (சாகித்தியம்) இசையும் (சங்கீதம்) பொருந்திச் செல்ல வேண்டும்; இலக்கணம் (இயல்) அமைந்த இசையை நுகர்வோர் அவ்விசையொடு கலந்து அனுபவிப்பதற்குப் பருந்தும் நிழலும் உவமையாகக் கொள்ளலும் பொருத்தமே. மருந்து: அமிர்தம். 'கற்றில னாயினும் கேட்க' என்றும் 'கற்றலிற் கேட்டலே நன்று' என்றும் கேள்விச் செல்வம் சிறப்பிக்கப்படுதலின் 'இனிய கேள்வி' என்றார்.*

*47.* **கருப்புறு மனமும். கண்ணில்**
**சிவப்புறு சூட்டும் காட்டி.**
**உறுப்புறு படையின் தாக்கி;**
**உறு பகை இன்றிச் சீறி.**
**வெறுப்பு இல. களிப்பின் வெம் போர்**
**மதுகைய. வீர வாழ்க்கை**
**மறுப்பட ஆவி பேணா வாரணம்**
**பொருத்துவாரும்;**

**கறுப்புறு மனமும்** - சினம் மிகுந்த மனமும்; **கண்ணில் சிவப்புறு சூட்டும்** - கண்களைவிடச் சிவந்த கொண்டையையும்; **காட்டிப்** - புலப்படுத்தி; **உறுப்புறு படையின் தாக்கி** - காலில் கட்டிய கத்தியினால் எதிர்க்கும் சேவலைத் தாக்கி; **உறு பகை இன்றிச் சீறி** - தமக்குள் முன்பகை இல்லாமலே சினம் காட்டி; **வெறுப்பு இல** - போர் செய்வதில் வெறுப்பு இல்லாதவனாய்; **வீர வாழ்க்கை மறுப்பட** - வீர வாழ்க்கைக்கு மாசு உண்டாகுமாயின்; **ஆவி பேணா** - உயிரையும் பெரிதாகப் போற்றாத; **வாரணம்** - சேவல்களை; **பொருத்துவாரும்** - போரிடும்படிச் செய்பவர்களும்.....

கறுப்பு: சினம். 'கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள்' என்பது தொல்காப்பியம். (தொல். சொல். உரி. 74). சூடு: சேவல் கொண்டை உறுப்பு: இங்கே கால்களாகிய உறுப்பு. உறுப்புறு படை என்பதற்குக் கால்களும் மூக்கும் ஆகிய உறுப்புகள் என்றும் கொள்ளலாம். 'காலாயுதம்' என்றே சேவலுக்கு ஒரு பெயருண்டு.

*48.* **எருமை நாகு ஈன்ற செங் கண்**
**ஏற்றையோடு ஏற்றை. 'சீற்றத்து**
**உரும் இவை' என்னத் தாக்கி.**
**ஊழுற நெருக்கி. ஒன்றாய்**
**விரி இருல் இரண்டு**
**கூறாய் வெகுண்டன; அதனை நோக்கி.**
**அரி இனம் குஞ்சி ஆர்ப்ப.**
**மஞ்சுகிற ஆர்க்கின்றாரும்;**

***எருமை நாகு ஈன்ற*** - *பெண் எருமைகள் பெற்ற;* ***செங்கண் ஏற்றையோடு ஏற்றை*** - *சிவந்த கண்களை உடைய கடாவோடு மற்றொரு கடா;* ***'சீற்றத்து உரும் இவை' என்னத் தாக்கி*** - *'கோபம் கொண்ட இடிகள் இவை' என்று சொல்லும்படியாக மோதி;* ***ஊழுற நெருக்கி*** - *முறையாக நெருங்கி;* ***ஒன்றாய் வீரி இருள்*** - *எங்கணும் ஒரே பொருளாய் விரிந்திருக்கின்ற இருட்பிழம்பு;* ***இரண்டு கூறாய்*** - *இரண்டு பகுதிகளாகப் பிரிந்து நின்று;* ***வெகுண்டன*** - *ஒன்றோடு ஒன்று கோபம் கொண்டு பொருதன;* ***அதனை நோக்கி*** - *அந்தப் போரைக் கண்டு;* ***குஞ்சி அரி இனம் ஆர்ப்ப*** - *தலை முடியில் அணிந்த மலர்களில் இருந்த வண்டுகளின் கூட்டம் (கலைந்து) ஆரவாரம் செய்யும்படியாக;* ***மஞ்சு உற ஆர்க்கின்றாரும்*** - *தமது குரல் மேகமண்டலம் வரை செல்லும்படி ஆரவாரம் செய்பவர்களும்....*

*எங்கும் பரவியுள்ள ஒரே பிழம்பு இரண்டு கூறாகப் பிரிந்து தம்முள் மோதுவது போல எருமைக் கடாக்கள் காணப்படுகின்றன. ஒரே நிறம். ஒரே தரம்; உருவம் மட்டுமே இரண்டு. அவை மோதிப் பொருவதைப் பார்த்து வீரர்கள் மகிழ்ந்து ஆர்ப்பரிக்கின்றனர். எருமையில் பெண் நாகு என வழங்கும். 'எருமையும் மரையும் பெற்றமும் நாகே' (தொல் பொருள். மரபு 63). எருமை நாகு; இருபெயரொட்டுப் பண்புத் தொகை. ஈற்றை என்பதில் ஐகாரம் சாரியை.*

***49.*** ***முள் ளரை முளரி வெள்ளி***
***முளை இற. முத்தும் பொன்னும்***
***தள்ளுற. மணிகள் சிந்த.***
***சஞ்சலம் புலம்ப. சாலில்***
***துள்ளி மீன் துடிப்ப. ஆமை தலை***
***புடை கரிப்ப. தூம்பின்***
***உள் வரால் ஒளிப்ப.***
***மள்ளர் உழு பகடு உரப்புவாரும்;***

***முள்ளரை முளரி*** - *முள் கொண்ட தண்டினை யுடைய தாமரையின்;* ***வெள்ளி முளை இற*** - *வெண்மையான முளை ஒடியவும்;* ***முத்தும் பொன்னும் தள்ளுற*** - *நிலத்தி லிருந்து முத்தும் பொன்னும் ஒதுக்கித் தள்ளப்படவும்;* ***மணிகள் சிந்த*** - *பல வகை மணிகள் சிந்தவும்;* ***சலஞ்சலம் புலம்ப*** - *சலஞ்சலம் என்ற சங்கு புலம்பவும்;* ***சாலில் மீன் துள்ளித் துடிப்ப*** - *கொழுமுனையில் புரளும் மண் திரளில் மீன்கள் துள்ளித் துடிக்கவும்;* ***ஆமை தலை புடை சுரிப்ப*** - *ஆமைகள் தலையையும் கால்களையும் ஓட்டுக்குள் சுருக்கிக் கொள்ளவும்;* ***தூம்பின் உள் வரால் ஒளிப்ப*** - *மதகுகளினுள் வரால் மீன்கள் ஒளிந்து கொள்ளவும்;* ***உழு பகடு மள்ளர் உரப்புவாரும்*** - *உழுகின்ற எருதுகளை ஓட்டி அதட்டுகின்ற உழவர்களும் (அந்நாட்டில் உள்ளனர்).*

*தாமரைத் தண்டில் முள் உண்டென்பதை 'முள்ளரைத் தாமரை முகிழ் விரி நாட்போது' (சிறுபாண். 183) என்னும் நத்தத்தனார் வாக்காலும் 'முள்ளை உடைத்தாகிய தண்டினையுடைய வெண்டாமரையினது அரும்பு விரிந்த நாட்காலத்திற் பூ' என்னும் நச்சினார்க்கினியர் உரையாலும் உணரலாம். வெள்ளி: வெள்ளை நிறம். சலஞ்சலம்: சங்கில் ஒரு வகை. புடை: பக்கம்: இங்கே ஆகுபெயராய் ஆமையின் பக்கங்களில் உள்ள கால்களைக் குறித்தது. 'பொருத்துவாரும்' (46) முதலாக 'உரப்பு வாரும்' (49) முடிய உள்ள உம்மைச் சொற்களோடு 'உள்ளனர்' என்ற முற்றை வருவித்து முடிக்க.*

*கடல் வாணிகம்*

***50.*** **முறை அறிந்து. அவாவை நீக்கி.**
**முனிவுழி முனிந்து வெஃகும்**
**இறை அறிந்து. உயிர்க்கு நல்கும். இசை**
**கெழு வேந்தன் காக்கப்**
**பொறை தவிர்த்து உயிர்க்கும் தெய்வப்**
**பூதலம்தன்னில். பொன்னின்**
**நிறை பரம் சொரிந்து. வங்கம். நெடு**
**முதுகு ஆற்றும். நெய்தல்.**

***முறை அறிந்து*** *- ஆளும் முறையை அறிந்து;* ***அவாவை நீக்கி*** *- ஆசையை அகற்றி;* ***முனிவுழி முனிந்து*** - கோபிக வேண்டிய போதில் கோபித்து; **வெஃகும் இறை அறிந்து** *- தான் விரும்பும் வரியின் அளவை அறிந்து;* **உயிர்க்கு நல்கும்** *- தன் குடிகளுக்கு இரங்கும்;* **இசைகெழு வேந்தன் காக்க** *- புகழ் அமைந்த மன்னன் பாதுகாப்பதால்;* **பொறை தவிர்த்து** *- (பாவமாகிய) சுமை நீங்கப் பெற்று;* **உயிர்க்கும் தெய்வப் பூதலம்தன்னில்** *- (அமைதியாகிய) இளைப்பாறுகின்ற தய்வத் தன்மை வாய்ந்த நிலம் போலே;* **பொன்னின் நிறை பரம் நெய்தல் சொரிந்து** - பொன்னாகிய நிறைந்த *பாரத்தை நெய்தல் நிலத்திலே இறக்கிவிட்டு;* **வங்கம் நெடுமுதுகு ஆற்றும்** *- கப்பல்கள் நீண்ட முதுகுகளை ஆற்றிக் கொள்ளும்.*

*மன்னன் முறை அறிந்து உயிர்க்கு நல்குவோனாக அமைந்து பொறுப்பை ஏற்றிருப்பதால் நிலமகள் தன் சுமை இறக்கி நிம்மதிப் பெருமூச்சு விடுகிறாள். கப்பல்கள் ஏற்றிவந்த சுமையை நெய்தக் நிலத்தில் இறக்கிவிட்டு நெடுமுதுகு ஆற்றுகின்றன. உவமையணி. முறை; அரச நெறி. இறை; ஆறில் ஒரு பங்கு வரி; பழங்கால வழக்கு இது. பரம் -பாரம் என்பதம் குறுக்கல் விகாரம்.*

*உழவர் வாழ்க்கை*

***51. எறிதரும் அரியின் சும்மை***
***எடுத்து வான் இட்ட போர்கள்***
***குறிகளும் போற்றிக் கொள்வார்;***
***கொன்ற நெல் குவைகள் செய்வார்;***
***வறியவர்க்கு உதவி. மிக்க.***
***விருந்து உண மனையின் உய்ப்பார்.***
***நெறிகளும் புதைய. பண்டி நிறைத்து.***
***மண் நெளிய ஊர்வார்.***

***எறிதரும் அரியின் சும்மை*** *-வாளால் அரியப்பட்ட நெல்லரிகளாகிய சுமைகளை;* ***எடுத்து*** *- சுமந்து சென்று;* ***வான் இட்ட போர்கள்*** *- வானம் அளாவிடக் குவித்த போர்களில்;* ***குறிகளும் போற்றிக் கொள்வார்*** *- அடையாளம் இட்டுப் பாதுகாத்துக் கொள்வார்கள்;* ***கொன்ற நெல்*** *- கதிரடித்து உதிர்த்த நெல்லை;* ***குவைகள் செய்வார்*** *- குவித்து வைப்பார்கள்;* ***வறியவர்க்கு உதவி*** *- (களத்துமேட்டுக்கு வரும்) ஏழைகளுக்கு நெல்லை உதவி;* ***மிக்க*** *- மீதியான தானியங்களை;* ***விருந்து உண மனையின் உய்ப்பார்*** *- (தம்மோடு கலந்து) விருந்தினர் உண்பதற்காக வீடுகளில் கொண்டு சேர்ப்பாராய்;* ***நெறிகளும் புதைய*** *- போகும் வழிகள் புதையும்படியாக;* ***பண்டி நிறைந்து*** *- வண்டிகளில் நிறைத்து;* ***மண் நெளிய ஊர்வார்*** *- நிலமே நெளியும்படியாகச் சுமை ஏற்றி (வண்டிகளை)ச் செலுத்துவார்கள்.*

*சுமை என்பதன் விரித்தல் விகாரம் சும்மை. இரவு நேரத்தில் நெற்கதிர்களை எவரும் எடுத்துவிட முடியாமல் நெற்போர்களில் அடையாளம் இடுவது வழக்கம். சாணமும் மண்ணும் கலந்து போர்கள் மீது அடையாளம் இடுவர். 'குறிகளும் போத்தின் கொள்வார்' என்பது கம்பன் கழகப் பதிப்பில் காணும் பாடம்; அதற்குக் 'குறிப்பின் வழியே செல்லும் கடாக்களை மிதக்கச் செய்து நெல் கொள்வார்' என்பது பொருள். 'குறிகொளும்' என்று கொண்டால்தான் அப்பொருள் பொருந்தும். வறியவர்க்கு உதவிய பின்னும் நெறிகள் புதையுமளவுக்கும் நிலம் நெளியுமளவுக்கும் வண்டிகளில் சுமை மிகுதியாயிருந்தது என்று சொன்னதால். கண்டு முதலின் மிகுதி குறிக்கப்பட்டது..*

***52. கதிர் படு வயலின் உள்ள. கடி கமழ்***
***புனலின் உள்ள.***
***முதிர் பயன் மரத்தின் உள்ள.***
***முதிரைகள் புறவின் உள்ள.***
***படுபதி கொடியின் உள்ள.***
***படி வளர் குழியின் உள்ள.-***
***மதுவளம் மலரில் கொள்ளும்***
***வண்டு என- மள்ளர். கொள்வார்.***

***கதிர்படு வயலின் உள்ள*** - *கதிர்களில் விளையும் வயல்களில் உள்ள நெல் முதலியவைகளையும்;* ***கடி கமழ் புனலின் உள்ள*** - *மணம் வீசு நீரில் உள்ள தாமரை மலர் முதலியவைகளையும்;* ***முதிர் பயன் மரத்தில் உள்ள*** - *முதிர்ந்த பயன் தரத்தக்க மரங்களில் உள்ள காய். கனி முதலியவைகளையும் முதிரைகள் புறவின் உள்ள - முல்லை நிலத்து விளையும் பருப்பு முதலியவைகளையும்;* ***பதிபடு கொடியின் உள்ள*** - *(நிலத்தில்) பதிக்கப்பட்டுள்ள கொடிகளில் விளையும் மலர். கனி முதலியவைகளையும்;* ***படி வளர் குழியின் உள்ள*** - *நிலத்தில் உண்டான குழிகளில் விளையும் கிழங்கு முதலியவைகளையும்;* ***மதுவளம் மலரில் கொள்ளும் வண்டு என*** *-தேனாகிய வளத்தைப் பல வகைப்பட்ட மலர்களிலிருந்து சேகரிக்கும் வண்டுகள் போல;* ***கொள்வார்*** - *உழவர்கள் பலவகை விளைச்சல் வளத்தைக் கொள்வார்கள். வண்டுகள் பல்வகை மலர்களிலும் தேன் கொள்வது போல உழவர்கள் வயல் முதலான பல இடங்களிலும் விளைகின்ற நெல் முதலிய பல வளங்களையும் எடுத்துக் கொள்வார் என்பது கருத்து. 'உள்ள' என வருவன அனைத்தும் வினையாலணையும் பெயர்கள். புறவு: முல்லை நிலம்.*

***53. முந்து முக் கனியின். நானா முதிரையின்.***
***முழுத்த நெய்யின்.***
***செந் தயிர்க் கண்டம். கண்டம்.***
***இடை இடை செறிந்த சோற்றின்.***
***தம் தம் இல் இருந்து. தாமும்.***
***விருந்தொடும். தமரினோடும்.***
***அந்தணர் அமுத உண்டி***
***அயிலுறும் அமலைந்து எங்கும்.***

***எங்கும்*** *-அந்த நாட்டில் எல்லா இடங்களிலும்;* ***முந்து முக்கனியின்*** - *கனிகளில் முதன்மையாக எண்ணப்படுகின்ற வாழை. பலா. மா ஆகிய முப்பழங்களுடனும்;* ***நானா முதிரையின்*** - *பல் வகைப்பட்ட பருப்புகளுடனும்;* ***முழுத்த நெய்யின்*** - *பரிமாறப்பட்ட பொருள்கள் முழுகும்படி வார்த்த நெய்யுடனும்;* ***செந்தயிர்க் கண்டம்*** - *செந்நிறமுள்ள தயிர்க் கட்டிகளுடனும்;* ***கண்டம் இடை இடை செறிந்த சோற்றின்*** - *கண்ட சருக்கரை இடையிடையே செறிந்துள்ள சோற்றுடனும்;* ***தம் தம் இல் இருந்து*** - *தங்கள் தங்கள் வீட்டில் இருந்து;* ***விருந்தொடும் தமரினோடும் தாமும்*** - *விருந்தினருடனும் உறவினருடனும் கலந்து தாங்களும்;* ***அந்தணர் அமுத உண்டி*** - *தேவர்களுக்கு உரிய அமுதம் போன்ற உணவினை;* ***அயிலும் அமலைத்து*** *- உண்ணுகின்ற ஆரவாரம் உடையது (அந்தக் கோசலம்)*

*'மூட நெய் பெய்து' என்ற கோதையார் ஆட்சி கருதத் தக்கது. சிவப்பு நிறம் வரும் வரையில் காய்ச்சிய பாலில் பிரையிட்டது செந்தயிர். 'தாமும் விருந்தொடும் தமரினோடும்' என்ற செய்யுள் தொடர் இல்லறத்தார் முறைமை நோக்கி 'விருந்தொடும் தமரினோடும் தாமும்' என நிரல் மாற்றி உரை கொள்ளப்பட்டது. அந்தணர் இங்கே தேவர். 'தம் இல் இருந்து தமது பாத்து' உண்ணுதலும். தென்புலத்தார் தெய்வம். விருந்து ஒக்கல். தான்' என்று அமைதலுமாகிய திருக்குறள் நெறியினை நினைவூட்டுவது இப்பாடல்.*

*கோசல நாட்டுச் செல்வப் பொலிவு*

***கலி விருத்தம்***

***54.*** ***பருவ மங்கையர் பங்கய வாள் முகத்து***
***உருவ உண் கணை. 'ஒண் பெடை ஆம்' எனக்***
***கருதி. அன்பொடு காமுற்று. வைகலும்.***
***மருத வேலியின் வைகின. வண்டுஅரோ.***

***வண்டு*** *- (ஆண்) வண்டுகள்;* ***பருவ மங்கையர்*** *- இளம் பெண்களின்; பங்கய வாள் முகத்து - தாமரை போன்ற ஒளிகொண்ட முகத்தில் உள்ள;* ***உருவ உண்கணை*** *- அழகுடையனவும் மை இடப்பட்டனவுமாகிய கண்களை;* ***ஒண் பெடை ஆம் எனக் கருதி*** *- ஒளி கொண்ட பெண் வண்டுகள் என்று நினைத்து;* ***அன்பொடு காமுற்று*** *- அன்போடு விரும்பி;* ***கைகலும்*** *- நாளெல்லாம்; மருத வேலியின் வைகின - மருத நிலத்திலே தங்கின.*

*வண்டுகளைப் பெண்களின் கண்களுக்கு உவமை கூறுதல் மரபு; அந்த இலக்கிய மரபை அடிப்படையாகக் கொண்டது இக் கற்பனை. பெண்களின் கண்கள் என்பது தெரியாமல் பெண் வண்டுகள் எனக் கருதி ஆண் வண்டுகள் நாளெல்லாம் காத்திருப்பதற்குக் காரணம் தக்க செவ்வி/தருணம் வாய்க்க வேண்டும் என்பதே. இலவு காத்த கிளி போல ஏமாறப் போவது தெரியாமல் மயங்கின. இது மயக்க அணி.*

*கணை + கண்ணை: தொகுத்தல் விகாரம்*

***55.*** ***வேளை வென்ற முகத்தியர் வெம் முலை.***
***ஆளை. நின்று முனிந்திடும். அங்கு ஓர் பால்;***
***பாளை தந்த மதுப்பருகி. பரு***
***வாளை நின்று மதர்க்கும் மருங்கு எலாம்.***

***அங்கு ஓர் பால்*** *- அந்த மருத நிலத்தின் ஒரு பக்கத்தில்;* ***வேளை வென்ற முகத்தியர்*** *- மன்மதனையும் வெற்றி கொண்ட முகத்தை உடைய (உழவர் குலப்) பெண்களின்;* ***வெம் முலை*** *- விருப்பத்தைக் கிளரச் செய்யும் மார்பகங்கள்:* ***ஆளை நின்று முனிந்திடும்*** *- ஆண்களை எதிர்த்து நின்று பணியச் செய்யும்;* ***மருங்கு எலாம்*** *- பக்கங்களிலெல்லாம்;* ***பாளை தந்த மதுப் பருகி*** *- பாளைகளிலிருந்து வடியும் மதுவைக் குடித்து;* ***பரு வாளை நின்று மதர்க்கும்*** *- பெரிய வாளை மீன்கள் விறைப்புடன் செருக்கும்.*

*மகளிர் மார்பகம் நின்று முனிந்த காட்சியொடு வாளை நின்று மதர்த்திடும் காட்சியைப் பிணைத்து நோக்க வேண்டும்; 'நின்று' என்ற சொல்லை ஈரிடத்தும் பெய்து இக்குறிப்பினைக் கவிச் சக்கரவர்த்தி தருகிறார். காம மயக்கந் தந்த மதர்ப்பிலே மைந்தர் நிற்பதை வாளை மீனிடத்துக் குறிப்பாகப் புலப்படுத்துகிறார் கவிஞர். இரண்டு காட்சிகளையும் உதிரிகளாக நினையாமல். இணைந்த காட்சிகளாகப் பார்ப்பதில்தான் மருதக் காட்சி செறிவுறுகிறது. கவிதைக்கும் கற்பனைக்கும் குறிப்பிற் சுட்டலே உயிர்நாடி என்பதை உணர்க. ஒரு பால் காட்சி மருங்கெலாம் மதர்ப்பாக விரிகிறது. மதர்த்தல்: களிப்பால் செருக்குதல்.*

*'வேளை வென்ற முகத்தியர்' -காம விருப்பத்தைத் தருவதில் மன்மதனையும் வென்றவர் என்பது கருத்து. வேள்: கருவேளாகிய மன்மதன்; மற்றவன் செவ்வேள். 'ஆள்' மருத நிலத்து வேலை செய்யும் ஆண்கள்' காமன் நேர் வயங்கு முகத்தியர்' என்ற வில்லி பாரதத் தொடர் (வி.ப -14ஆம் போர் 26) காம விருப்பம் எழச் செய்வதில் மன்மதனும் மகளிர் முகமும் சமமாவதை உணர்த்துகிறது. பாளை தேன் சொரிவதை முன்னும் (40) குறித்தார். 'பழனவாளை பாளை உண்டென' (பரி 7:34) என்ற பழம்பாடலிலும் இக்காட்சி காணலாம்.*

வேளையும் என்ற உயர்வுச் சிறப்பும்மை தொக்கது. வெம்மை வேண்டல *(விருப்பம்) என்பது தொல்காப்பியம் (தொல். சொல். உரி. 36). 'நின்று மதர்க்கும்' என்பதை மதர்த்து நிற்கும்' என முன் பின்னாக வைத்து விகுதி பிரித்துக் கூட்டிப் பொருள் கூறினாரும் உளர்*

***56.*** **ஈர நீர் படிந்து. இந் நிலத்தே சில**
**கார்கள் என்ன. வரும். கரு மேதிகள்;**
**ஊரில் நின்ற கன்று உள்ளிட. மென் முலை**
**தாரை கொள்ள. தழைப்பன சாலியே.**

***ஈர நீர் படிந்து*** *- குளிர்ந்த நீரிலே மூழ்கி எழுந்து;* ***இந் நிலத்தே*** *- (வானத்தில் அல்லாது) இந்த நிலத்திலே;* ***சில கார்கள் என்ன*** *- சில மேகங்களைப் போல;* ***கரு மேதிகள் வரும்*** *- கருமை நிறமுள்ள எருமைகள் நடமாடும்;* ***ஊரில் நின்ற*** *- ஊரிலே தங்கிவிட்ட;* ***கன்று உள்ளி*** *- கன்றை நினைப்பதாலே;* ***மென் முலை தாரை கொள்ள*** *- மென்மையான மடியிலிருந்து பால் தாரை சொரிவதால்;* ***சாலி தழைப்பன*** *- (அந்தப் பாலால்) செந்நெற் பயிர்கள் தழைக்கின்றன.*

*வானத்திலே கரு மேகம்; நிலத்திலே கரு மேதி -மேய வரும்போது ஊரில் விட்டுவந்த கன்றை நினைத்த மாத்திரத்திலே பால் சொரிய. அந்தப் பால் வெள்ளமெனப் பாய்ந்து. செந்நெற் பயிர் தழைத்தனவாம். வீறுகோளணி என்பர். மேல் 44ஆம் பாடலிலும் கன்றை நினைத்து எருமை பால் சொரியும் செய்தி வந்தது.*

***57.*** **முட்டு இல் அட்டில். முழங்குகிற வாக்கிய**
**நெட்டுலைக் கழுநீர் நெடு நீத்தம்தான்.**
**பட்ட மென் கமுகு ஓங்கு படப்பை போய்.**
**நட்ட செந் நெலின் நாறு வளர்க்குமே.**

***முடு இல் அட்டில்*** *- (வேண்டும் பொருள்களில்) குறைவு இல்லாத சமையல் அறையில்;* ***முழங்குற வாகிய*** *- ஒலித்தல் பெருகும்படி கீழே வடிக்கப்பட்ட;* ***நெட்டுலைக் கழுநீர்*** *- பெரிய உலையில் வைப்பதற்கு முன் (அரிசி) கழுவிய நீரின்;* ***நெடு நீத்தம்தான்*** *- மிக்க வெள்ளமானது;* ***பட்டம் மென் கமுகு*** *- நீரோடைக் கரையில் உள்ள பாக்கு மரங்கள்;* ***ஓங்கு படப்பை போய்*** *- உயர்ந்து வளர்ந்துள்ள சோலை வழியே சென்று;* ***நட்ட செந்நெலின் நாறு வளர்க்கும்*** *- வயலில் நடப்பட்டுள்ள செந்நெல் நாற்றுகளை வளர்க்கும்.*

*சமையலுக்கு வேண்டிய எல்லாப் பொருள்களும் நிறைந்திருத்தலின் 'முட்டு இல் அட்டில்' என்றார். அரிசி கழுவிக் கொட்டிய நீர். கமுகுத் தோட்டம் வழியே பய்ந்து வயலில் நடப்பட்ட நெல் நாற்றுகளை வளர்க்கும் என்பதால். சமைக்கும் உணவின் மிகுதியையும் உண்போர் மிகுதியையும் உணர்த்தினார்.*

*பட்டம்: நீரோடை. கமுகு: பாக்கு மரம். முழங்கு(தல்) - முதனிலைத் தொழிற்பெயர்.*

***58.*** **சூட்டுடைத் துணை தூ நிற வாரணம்**
**தாள்-துணைக் குடைய. தலை சால் மணி**
**மேட்டு இமைப்பன; 'மின்மினி ஆம்' எனக்**
**கூட்டின் உய்க்குமே. குரீஇயின் குழாம்அரோ.**

***சூட்டு உடைத் துணை*** *- உச்சிக் கொண்டை உடையதும் துணையானதுமான;* ***தூநிற வாரணம்*** *- தூய நிறத்தையுடைய சேவல்கள்;* ***தாள் துணைக்குடைய*** *- தம் கால்களால் (குப்பைகளைக்) குடைவதால்;* ***தகை சால் மணி*** *- தகுதி மிக்க மாணிக்கங்கள்;* ***மேட்டு இமைப்பன*** *- (அந்தக் குப்பை) மேடுகளில் ஒளிரும்;* ***குரீஇயின் குழாம்*** *- குருவிக் கூட்டம்;* ***'மின்மினி ஆம்' என*** *- (அந்த மணிகளை) மின்மினிப் பூச்சிகள் என்று நினைத்து;* ***கூட்டின் உய்க்கும்*** *- தம் கூடுகளில் கொண்டு போய் வைக்கும்.*

*கோழிகள் குப்பையைக் கிளறும்போது அக் குப்பைமேட்டில் ஒளிர்கின்ற மணிகளை மின்மினிப் பூச்சி எனத் தவறாக எண்ணி. அவற்றை ஒளி தருவதற்காகக் குருவிகள் தம் கூட்டில் கொண்டு சேர்க்கின்றனவாம். மயக்கத்தால் நிகழ்வதைக் கற்பித்துச் சொல்வதால் இது மயக்க அணியாம்.*

*இதே கற்பனைக் காட்சியைக் கம்பரே பின்னரும் தருகிறார்: "எரியும் மின்மினி மணி விளக்கின் இன்துணைக் குரீஇயினம் பெடையொடு துயில்வ" (4234)*

*'உடைய' என்ற சொல் அகரம் குறைந்து 'உடை' என நின்றது.*

***59.*** ***தோயும் வெண் தயிர் மத்து ஒலி துள்ளவும்.***
***ஆய வெள் வளை வாய்விட்டு அரற்றவும்.***
***தேயும் நுண் இடை சென்று வணங்கவும்.***
***ஆயர் மங்கையர் அங்கை வருந்துவார்.***

**தோயும் வெண் தயிர்** - *தோய்ந்துள்ள வெண்மையான தயிரைக் (கடைகின்ற);* **மத்து ஒலி துள்ளவும்** - *மத்தின் ஓசை விட்டுவிட்டு ஒலிக்கவும்;* **ஆய வெள்வளை** - *(தம் கைகளில் அணிந்துள்ள) நுட்பமான வேலைப்பாடுடைய வெண்ணிறச் சங்கு வளையல்கள்;* **வாய் விட்டு அரற்றவும்** - *வாய்திறந்து கத்துவதுபோல ஒலிக்கவும்;* **தேயும் நுண் இடை** - *மெலிந்த சிறிய இடை;* **சென்று வணங்கவும்** - *முன்புறமாக வளையவும்;* **ஆய மங்கையர்** - *இடைக்குல மகளிர்;* **அங்கை வருந்துவர்** - *அழகிய கைகள் வருந்தும்படி கடைவார்கள்.*

*வெண்டயிர் - கடைதலுக்கும் செந்தயிர் உண்டலுக்கும் உரியன.*

*துள்ளுதல்: விட்டுவிட்டு ஒலித்தல். ஆய் வளை: நுட்பமான வேலைப்பாடு கொண்ட வளையல்கள்: 'ஒய்தல் ஆய்தல் நிகழ்த்தல் சாஅய் ஆவயின நான்கும் உள்ளதன் நுணுக்கம்' என்பது தொல்காப்பியம். (தொல். சொல். உரி. 32)*

*தன்மை நவிற்சியணி*

***60.*** ***தினைச் சிலம்புவ. தீம் சொல் இளங் கிளி;***
***நனைச் சிலம்புவ. நாகு இள வண்டு; பூம்***
***புனல் சிலம்புவ. புள் இனம்; வள்ளியோர்***
***மனைச் சிலம்புவ. மங்கல வள்ளையே.***

***தீம் சொல் இளங்கிளி*** - இனிய சொற்களைப் பேசும் இளங்கிளிகள்; ***தினைச் சிலம்புவ*** - தினைப் புனங்களிலே ஒலிப்பன; ***நாகு இள வண்டு*** - இளமையான வண்டுகள்; ***நனைச் சிலம்புவ*** - மலர் அரும்புகளில் ஒலிப்பன; ***புள் இனம்*** - பறவைகளின் கூட்டம்; ***பூம் புனல் சிலம்புவ*** - நீர் நிலைகளில் ஒலிப்பன; ***வள்ளியோர் மனை*** - கொடையாளர் இல்லங்களில்; ***மங்கல வள்ளை சிலம்புவ*** - மங்கலமான உலக்கைப் பாடல்கள் ஒலிப்பன.

*தினைப்புனங்களில் கிளிப்பாட்டு: மலர் அரும்புகளில் வண்டின் பாட்டு: நீர்நிலைகளில் பறவைப் பாட்டு; வள்ளல்களின் இல்லங்களில் உலக்கைப் பாட்டு; ஆக. எங்கணும் இசைமயம். நனை: இளம் அரும்பு. நாகு -இளமை; ஒரு பொருட் பன்மொழி. மகளிர் நறுமணப் பொடி முதலியன இடிக்கும் போது தம் தலைவனைச் சிறப்பித்துப் பாடும் பாட்டு வள்ளைப் (உலக்கை) பாட்டு.*

*'புனைச் சிலம்புவ' என்றொரு பாடமும் உண்டு.*

*எதுகை நோக்கில் இப்பாடம் சிறப்புடையது. புனை எனினும் நீர் என்பதே பொருள். (பெருங். 4:7.75)*

*சிலம்புவ......சொற்பொருட் பின்வரு நிலையணி.*

*நானில வளமை*

***61. குற்ற பாகு கொழிப்பன - கோள் நெறி***
***கற்றிலாத கருங் கன் நுளைச்சியர்***
***முற்றில் ஆர முகந்து. தம் முன்றிலில்.***
***சிற்றில் கோலிச் சிதறிய முத்தமே.***

***கோள் நெறி கற்றில்லாத*** - ஆடவரின் இதயம் கவர்ந்து கொள்ளும் வழியைக் கற்றறியாத; ***கருங்கண் நுளைச்சியர்*** - கருமை நிறமான கண்களை உடைய நெய்தல் நிலத்துப் பெண்கள்; ***குற்ற பாகு கொழிப்பன*** - தறிக்கப்பட்ட பாக்கிலிருந்து கொழித்து நீக்கப்படுபவை; ***முற்றில் ஆர முகந்து*** - சிறிய முறங்களில் வாரி வந்து; ***தம் முன்றிலில் சிற்றில் கோலி*** - தம் வீட்டின் முற்றத்தில் சிறு வீடு கட்டி; ***சிதறிய முத்தமே*** - சிந்துகின்ற முத்தங்களே யாகும்.

*முற்றத்தில் முத்துக்களைக் கொண்டு பேதைப் பருவத்து சிறுமியர் சிற்றில் அமைக்கின்றன. பின்னர் குற்றிய பாக்குகளைச் சிறு முறத்தால் நிறைய வாரிக் கொழிக்கின்றனர். கொழிக்கும் போது நீக்கப் படுவன எவை? சிற்றில் அமைக்க உதவிய முத்துகளே கொழித்து நீக்கப்படுகின்றன.*

*நெய்தல் நிலத்து முத்தையும் மருத நிலத்துப் பாக்கையும் மயங்க (கலந்திட)ச் செய்து இப்பாடலின் கற்பனை இயங்குவதால் திணை மயக்கம்.*

*பாகு: இடைக்குறை. கோள் -முதனிலை நீண்ட தொழிற் பெயர்.*

***62. துருவை மென் பிணை ஈன்ற துளக்கு இலா
வரி மருப்பு இணை வன் தலை ஏற்றை வான்
உரும் இடித்தெனத் தாக்குறும் ஒல் ஒலி
வெருவி. மால் வரைச் சூல் மழை மின்னுமே.***

***துருவை மென் பிணை*** - செம்மறி இனத்தின் மென்மையான பெண் ஆடு; ***ஈன்ற*** - பெற்ற; ***துளக்கு இலா*** - அச்சம் காரணமான அசைதல் இல்லாதனவும்; ***வரி மருப்பு இணை*** - வரிகள் அமைந்த இரு கொம்புகளை உடையனவும்; ***வன் தலை ஏற்றை*** - வலிய தலைகளையும் உடைய கடாக்கள்; ***வான் உரும் இடித்தென*** - மேகத்தில் உள்ள இடி இடித்ததைப் போல; ***தாக்குறும் ஒல் ஒலி வெருவி*** - ஒன்றை ஒன்று முட்டுதலால் எழும் ஒல்லென்ற ஒலி கேட்டு அஞ்சி; ***மால் வரைச் சூல் மழை*** - பெரிய மலையில் படிந்துள்ளதும் சூல் கொண்டதுமான மேகம்; ***மின்னும்*** - மின்னலிடும்.

*செம்மறிக் கடாக்கள் ஒன்றுடன் ஒன்று மோதித் தாக்க. அதனால் எழும் ஒலி கேட்டு அஞ்சிய மேகங்கள் மின்னும் என்பது கருத்து. மென்மை கொண்ட பெண் செம்மறியிடத்துப் பிறந்த கடாக்கள் ஆண்மையால் வன்மை பெற்றிருப்பதை நோக்குக. துருவை: செம்மறியாடு முல்லை (செம்மறி) குறிஞ்சி (மலை முகட்டு முகில்) மயங்கிய திணை மயக்கம். துளக்கு. தாக்கு -முதனிலைத் தொழிற் பெயர்கள் இல்லாத. இல்லா. இலா; ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். ஏற்றை என்பதில் ஐகாரம் சாரியை இடித்தென -இடித்தால் என; 'ஒல்': ஒலிக் குறிப்பிடைச் சொல்.*

***63. கன்றுடைப் பிடி நீக்கிக் களிற்றினம்
வன் தொடர்ப் படுக்கும். வன வாரி சூழ்
குன்றுடைக் குல மள்ளர் குழூஉக் குரல்.
இன் துணை களி அன்னம் இரிக்குமே.***

***கன்றுடைப் பிடி நீக்கி*** - கன்றுடைய பெண் யானைகளை நீக்கிவிட்டு; ***களிற்றினம் வன் தொடர்ப் படுக்கும்*** -ஆண் யானைகளை வலிய சங்கிலிகளால் கட்டுகின்ற; ***வன வாரி சூழ்*** - காட்டிலே யானைகளை அகப்படுத்தும் இடங்களைச் சூழ்ந்த; ***குன்றுடைக் குல மள்ளர்*** - மலையை வாழும் இடமாகக் கொண்ட நல்ல வீரர்களின்; ***குழூஉக் குரல்*** - கூட்டம் எழுப்பும் ஆரவாரம்; ***இன் துணைக் களி அன்னம்*** - இனிய துணையாகிய பெண் அன்னங்களுடன் மகிழ்ந்திருக்கும் ஆண் அன்னங்களை; ***இரிக்கும்*** - (அச்சத்தால் நிலை கெட்டு) ஓடச் செய்யும்.

*பிடிகளையும் கன்றுகளையும் விடுத்துக் களிறுகளை மள்ளர்கள் சங்கிலியால் பிணிக்கும்போது எழும் ஆரவார ஓசையால் களித்திருக்கும் அன்னம் அச்சத்தால் நிலை கெட்டு ஓடும் என்பது கருத்து. குறிஞ்சியும் (களிறுகள்) மருதமும் (அன்னம்) மயங்கிய திணை மயக்கம். தொடர்: சங்கிலி. வாரி: யாயைப் பிடிக்க வெட்டப்படும் குழி.*

***64. வள்ளி கொள்பவர் கொள்வன. மா மணி;***
***துள்ளி கொள்வன. துங்கிய மாங்கனி;***
***புள்ளி கெள்வன. பொன் விரி புன்னைகள்;***
***பள்ளி கொள்வன. பங்கயத்து அன்னமே.***

***வள்ளி கொள்பவர்*** - வள்ளிக் கிழங்கை அகழ்ந்து எடுப்பவர்கள்; ***கொள்வன மாமணி*** - பெறுவது உயர்ந்த மணிகளாகும்; ***தூங்கிய மாங்கனி*** - கிளைகளில் தொங்கும் மாம்பழங்கள்; ***து(ள்)ளி கொள்வன*** - தேன் துளிகளைக் கொண்டிருக்கும்; ***பொன்விரி புன்னைகள்*** - பொன் நிற மகரந்தங்களைப் பரப்பும் புன்னை மலர்கள்; ***புள்ளி கொள்வன*** - புள்ளிகளைப் பெற்றிருக்கும்; ***அன்னம்*** - அன்னப் பறவைகள்; ***பங்கயத்து*** - தாமரை மலர்களிலே; ***பள்ளி கொள்வன*** - தூங்கியிருக்கும்.

*வள்ளிக் கிழங்குபெற நிலந் தோண்டுபவர்க்குப் பெருமதிப்புடைய மணிகள் கிடைக்கின்றன. சிறந்த மாங்கனி: தேனெனச் சொட்டும் சாறு கொண்டவை.....துள்ளி என்ற சொல்லுக்கு ஆமை என்ற பொருளும் உண்டு. அவ்வாறு கொண்டால் ஆமைகள் உண்ணுவதற்கு மாங்கனி கிடைக்குமெனப் பொருள் உரைக்க. வள்ளி. புன்னை. பங்கயம் - ஆகு பெயர்கள்.*

***65. கொன்றை வேய்ங்குழல் கோவலர் முன்றிலில்***
***கன்று உறக்கும்-குரவை. கடைசியர்.***
***புன் தலைப் புனம் காப்புடைப் பொங்கரில்***
***சென்று இசைக்கும்-நுளைச்சியர் செவ்வழி.***

***கடைசியர் குரவை*** - மருத நில மாதர்களின் குரவைக் கூத்துப் பாடல்; ***கொன்றை வேய்ங்குழல் கோவலர் முன்றிலில்*** - கொன்றையாலும் மூங்கிலாலும் ஆகிய குழல்களை உடைய இடையர்களின் வீட்டு முற்றங்களில்; ***கன்று உறக்கும்*** - கன்றுகளை உறங்கச் செய்யும்; ***நுளைச்சியர் செவ்வழி*** - நெய்தல் நில மகளிர் பாடும் செவ்வழிப் பண் கொண்ட பாடல்; ***புன் தலைப் புனம்*** - சிற்றிடம் கொண்ட புனங்களிலும்; காப்புடைப் பொங்கரில்; காவல் உடைய சோலைகளிலும்; ***சென்று இசைக்கும்*** - பரந்து சென்று ஒலிக்கும்.

*கொன்றைக் கனியையும் மூங்கிலையும் துருவித் துளையிட்டுக் குழல் செய்வர். உறக்கும் -உறங்கச் செய்யும். செவ்வழிப் பண் காலை நேரத்துக்கு உரியது.*

*முல்லையும் (கொன்றை) மருதமும் (கடைசியர்) நெய்தலும் (நுளைச்சியர்) கலந்த திணை மயக்கம். முன்றில் -இல்முன் என்தன் போலி. உறக்கும் -பிறவினை.*

*66.* ***சேம்பு கால் பொரச் செங்கழுநீர்க் குளத்***
***தூம்பு கால. சுரி வளை மேய்வன-***
***காம்பு கால் பொர. கன் அகல் மால் வரை.***
***பாம்பு நான்றெனப் பாய் பசுந் தேறலே.***

***காம்பு கால் பொர*** *- மூங்கில் புதரில் காற்று மோதுதலால் (தேன்கூடு சிதைய);* ***கண் அகல் மால் வரை*** *- விசாலமான பெரிய மலைகளிலிருந்து;* ***பாம்பு நான்றென*** *- பாம்புகள் தொங்குவது பொன்ற தோற்றத்துடன்;* ***பாய் பசுந் தேறல்*** *- பாய்கின்ற புதிய தேன் ஒழுக்கினையே;* ***சேம்பு கால் பொர*** *- சேப்பங் கொடியின் மடல்கள் ஒடியும்படி;* ***செங்கழுநீர்க் குளத் தூம்பு கால்*** *- செங்கழு நீர்ப் பூக்கள் கொண்ட குளத்தின் மதகுகளிலிருந்து பரவும் வாய்க்கால்களில்;* ***கரி வளை மேய்வன*** *- வளைந்த சங்குகள் மேய்கின்றன.*

*'பசுந் தேறலைச்' கரி வளை மேய்வன' எனக் கூட்டிப் பொருள் கொள்க. தூம்பு மதகு. மூங்கில் காற்றில் ஆடும்போது மலையில் தொடுத்த தேனடை சிதைந்து தேன் சொரிகிறது. தேனின் தாரை பாம்பு தொங்குவது போல் இருக்கிறது. மலை உச்சியிலிருந்து சொரியும் தேன். சேம்பு ஒடியும்படி வேகமாகப் பாய்ந்து வர. அத் தேனைச் சங்கு மேய்கிறது. உயர்வு நவிற்சிதான்; எனினும். சுவையான கற்பனை. தேறலே; பிரிநிலை ஏகாரம்; அப்படி வரும் தேனைத் தவிர வேறு எதனையும் சங்கு உண்ணவில்லை என்பது பிரிநிலை ஏகாரக் குறிப்பு.*

*மாதர் மாண்பு*

*67.* ***பெருந் தடங் கண் பிறைநுதலார்க்கு எலாம்.***
***பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்.***
***வருந்தி வந்தவர்க்கு ஈதலும். வைகலும்.***
***விருந்தும். அன்றி. விளைவன யாவையே?***

***பெருந் தடங்கண்*** *- பெரிய அகலமான கண்களை உடைய;* ***பிறை நுதலார்க்கு எலாம்*** *- பிறை வடிவமான நெற்றியை உடைய பெண்களுக்கெல்லாம்;* ***பொருந்து செல்வமும்*** *- நிலையாகப் பொருந்திய பொருட் செல்வமும்;* ***கல்வியும்*** *- நூலறிவும்;* ***பூத்தலால்*** *- நிறைந்திருப்பதால்;* ***வருந்தி வந்தவர்க்கு ஈதலும்*** *- வறுமையால் வருந்தி. உதவி நாடி வந்தோர்க்கு வழங்குதலும்;* ***வைகலும் விருந்தும் அன்றி*** *- நாள்தோறும் விருந்து ஓம்புதலும் அல்லாது;* ***விளைவன யாவை*** *- (பெற்ற செல்வத்தாலும் சேர்த்த கல்வி அறிவாலும்) விளைவன வேறு யாவை? (அவையே பயனாக விளைகின்றன என்பது வினாவின் விடை)*

*கண்ணும் நுதலும் பெண்டிர்தம் அழகைச் சுட்டின; ஈதலும் விருந்தோம்பலும் செயலைச் சுட்டின. பூத்தல் என்பது முன்னைய அரும்பு நிலையையும் பின்னைய கனிவு நிலையையும் உட்கொண்டு நிறைநிலை சுட்டிற்று. செல்வத்துப் பயனே ஈதல் என்பதை உணர்ந்தவரிடம் சேர்ந்ததால் பொருந்து செல்வம் என்றார். வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை என்னும் குறள் (221) நினைத்தற் பாலது. விருந்து ஓம்புதலைக் குறித்தலால் 'விருந்து' ஆகு பெயர்.*

*அன்ன சத்திரம்*

***68. பிறை முகத் தலை. பெட்பின். இரும்பு போழ்.***
***குறை நறைக் கறிக் குப்பை. பருப்பொடு.***
***நிறை வெண் முத்தின் நிறத்து அரிசிக் குவை.***
***உறைவ- கொட்பின் ஊட்டிடம் தோறெலாம்***

***ஊட்டு இடம்தோ றெலாம்*** *- ஆரவாரம் மிக்கனவும் (வந்தவருக்கு) உணவு வழங்குவனவுமாகிய அறச்சாலைகளிலெல்லாம்;* ***பெட்பின் பிறைமுகத் தலை இரும்பு போழ்*** *- விருப்பத்துடன் பிறை வடிவான தலையை உடைய அரிவாளால் பிளக்கப்பட்டு;* ***குறை நறைக் கறிக் குப்பை*** *- திருத்தப்பட்ட நறுமணமுடைய காய்கறிகளின் குவியலும்;* ***பருப்பொடு நிறை வெண் முத்தின் நிறத்து அரிசிக் குவை*** *- பருப்பு வகைகளும் நிறைந்த வெண்முத்துப் போன்ற அரிசிக் குவியல்களும்;* ***உறைவ*** *- கிடக்கின்றன*

*பணிசெய்வோர். உணவு நாடி வருவோர். உண்டு மீள்வோர் ஆகிய பல்வேறு கூட்டத்தினரின் ஆரவாரம் அன்ன சத்திரங்களில் பெருகியுள்ளன. இரும்பு இங்கே அரிவாள்மணை. குறை: காய்கறிகளின் அரிந்த துண்டுகள். முத்துக் குவித்தது போல அரிசிக் குவியல்கள்.*

*ஆரவாரத்தின் மிகுதியும். திருத்திய காய்கறிக் குவியல். அரிசிக் குவியல் ஆகியன சமையற் பணியின் இடையறாமையும் புலப்படுத்துகின்றன. நிறை அரிசிக் குவை. வெண் முத்தின் நிறத்து அரிசிக் குவை எனப் பிரித்துக் கூட்டிப் பொருள் அறிக.*

கொள்வன. தவிவன

***69. கலம் சுரக்கும். நிதியம்; கணக்கு இலா.***
***நிலம் சுரக்கும். நிறை வளம்; நல் மணி***
***பிலம் சுரக்கும்; பெறுதற்கு அரிய தம்***
***குலம் சுரக்கும். ஒழுக்கம் -குடிக்கு எலாம்.***

**குடிக்கு எலாம்** - கோசல நாட்டு மக்களுக்கெல்லாம்; **நிதியம் கலம் சுரக்கும்** - செல்வத்தைக் கப்பல்கள் கொடுக்கும்; **நிலம் கணக்கு இலா நிறை வளம் சுரக்கும்** - நன்செயும் புன்செயும் ஆகிய நிலங்கள் அளவற்ற நிறை வளத்தைக் கொடுக்கும்; **பிலம் நல் மணி சுரக்கும்** - சுரங்கங்கள் நல்ல இரத்தினங்களைக் கொடுக்கும்; **பெறுதற்கு அரிய தம் குலம் ஒழுக்கம் சுரக்கும்** - பெறுவதற்கு அரியதாகிய குலம் ஒழுக்கத்தைக் கொடுக்கும்.

கப்பல்கள் வளம் கொடுத்ததைக் கொண்டு கோசல நாட்டுக் கடல் வாணிபத்தை உணரலாம்; ஏற்றுமதி இறக்குமதி உண்டென்பதால் உள்நாட்டு வணிகம் சொல்லாமலே பெறப்பட்டது. எல்லாச் செழிப்புக்கும் அடிப்படை வளம் வேளாண்மையே; அதனால் கணக்கிலா வளம் சுரக்கும் நிலம் என்றார். நிறை வளம் - வினைத் தொகை என வெற்று இலக்கணக் குறிப்பாக மட்டும் கொள்ளாமல். வினைத் தொகை முக்காலத்துக்கும் ஆகும் என்பதை உணர்க. எனவே. எக்காலத்திலும் கோசலத்தின் நிலவளம் நிறைவளம் என உணர்த்துகிறார். கவிஞர். நீர் வழியாலும் நில வழியாலும் மட்டுமன்றிக் குடைந்துள்ள சுரங்க வழியாலும் மணிச் செல்வம் வாய்க்கப் பெற்றது கோசலம். இவ்வாறு பல வகையாலும் செல்வச் செழிப்பு மிக்க நாடு. கோசலம். ஆனால். இவ் வளங்களெல்லாம் வாழ்க்கைக்குத் துணை என்ற அளவே மதிப்புடையன; உயிர் வாழ்வு உயர் வாழ்வாய் விழுப்பம் பெறுவது ஒழுக்கத்தால்தான். ஒழுக்கம் விழுப்பம் தரும். கோசல நாட்டுக் குலம் என்றாலே ஒழுக்கத்தின் மறுபெயர் என்று உணர வைக்கிறார் கம்பர்.

சுரக்கும் என்ற சொல் நுட்பம் காண்க. இடையறாது தருவதே சுரத்தல். சொற்பொருட் பின்வரு நிலையணி.

***70.*** ***கூற்றம் இல்லை. ஓர் குற்றம் இல்லமையால்;***
***சீற்றம் இல்லை. தம் சிந்தனையின் செம்மையால்;***
***ஆற்றல் நல் அறம் அல்லது இல்லாமையால்.***
***ஏற்றம் அல்லது. இழித்தகவு இல்லையே.***

**ஓர் குற்றம் இல்லாமையால்** - கோசல நாட்டில் எவரிடமும் ஒரு குற்றமும் இல்லாமையால்; **கூற்றம் இல்லை** - கூற்றுவனது கொடுமை அந்நாட்டில் இல்லை; **தம் சிந்தையின் செம்மையால்** - அந்நாட்டு மக்களின் மனச் செம்மையால்; **சீற்றம் இல்லை** - சினம் அந்நாட்டில் இல்லை; **நல் அறம் அல்லது ஆற்றல் இல்லாமையால்** - நல்ல அறச் செயல் செய்வதை தவிர வேறு எச்செயலும் இல்லையாதலால்; **ஏற்றம் அல்லது இழிதகவு இல்லை** - மேன்மையைத் தவிர எவ்வகையான இழிவான கீழ்மை அந்நாட்டில் இல்லை.

கூற்றம் இல்லை யென்பதால் கோசல நாட்டில் சாவே இல்லை என்பது பொருளாகாது. இயற்கை மரணமின்றி இடையறவுபடுகின்ற அற்பாயுட் சாவு இல்லை என்பதே கருத்து. குற்றமே காக்க பொருளாக; குற்றமே அற்றம் தரூஉம் பகை என்ற குறள் (434) இங்கு நினைவுகூரத் தக்கது. ஓர் - குறுக்கல் விகாரம்.

***71. நெறி கடந்து பறந்தன. நீத்தமே;***
***குறி அழிந்தன. குங்குமத் தோள்களே;***
***சிறிய. மங்கையர் தேயும் மருங்குலே;***
***வெறியவும். அவர் மென் மலர்க் கூந்தலே.***

***நெறி கடந்து பரந்தன நீக்கமே*** - செல்லும் வழிகடந்து பரந்து செல்வது (அந்த நாட்டில்) வெள்ளமேயாம்; ***குறி அழிந்தன குங்குமத் தோள்களே*** - அடையாளம் அழிந்தவை அந்த நாட்டு மகளின் குங்குமம் அணிந்த தோள்களேயாம்; ***சிறிய மங்கையர் தேயும் மருங்குலே*** - அங்குச் சிறியவை பெண்களின் மெல்லிய இடைகளேயாம்; ***வெறியவும் அவர் மென்மலர்க் கூந்தலே*** - மணம் உடையவை அந்த நாட்டுப் பெண்களின் மலர்சூடிய கூந்தலேயாம் நெறி கடத்தல்: வழி தவறி நடத்தல். வெள்ளம் தான் நெறிகடந்து செல்லுமே யல்லாது அந்நாட்டு மக்கள் வழித் தவறான வழியில் செல்லமாட்டார்கள். செய்து குறியழிந்தவை குங்குமத் தோள்களே தவிர. தமக்குரிய குறியிலிருந்து மக்கள் மாறுபடமாட்டாகள். சிறியவை தேயும் மருங்குலே அல்லாது வேறு சிறிய செயல்கள் அந்நாட்டில் நிகழா. வெறியவும் கூந்தலே அல்லது வெறி கொண்டு அலையும் நிலை அங்கில்லை. குறி: தானியக் குவியல் - முதலியவற்றிற்குச் செய்யும் அடையாளம். இது சிலேடை பற்றி வந்த ஒழிப்பணி. வெறி: மணம் வெறுமை அல்லது குடி வெறி என்பதும் பொருளாம். 38 -ம் பாடல் தொடங்கி இப்பாட்டு முடிய அந்த நாட்டு மக்கள் நல்லன கொண்டு. அல்லன நீக்கி வாழ்ந்த வாழ்வு பேசப்பட்டது. 40.

***72. அகில் இடும் புகை. அட்டில் இடும் புகை.***
***நகல் இன் ஆலை நறும் புகை. நான்மறை***
***புகலும் வேல்வியில் பூம்புகையோடு அளாய்.***
***முகிலின் விம்மி. முயங்கின எங்கணும்.***

***அகில் இடும்புகை*** - அகில் கட்டைகளை இடுவதாலுண்டாகும் புகையும்; ***அட்டில் இடும் புகை*** - சமையல் அறைகளில் உண்டாகும் புகையும்; ***நகலின் ஆலை நறும்புகை*** - கரும்பாலைகளில் தோன்றும் புகையும்; ***நான்மறை புகலும் வேள்வியில் பூம்புகை யோடு*** - நான்கு மறைகளைப் புகன்று (அந்தணர்கள் புரியும்) வேள்வித் தீயில் தோன்றும் அழகிய புகையோடு; ***அளாய்*** - கலந்து; ***முகிலின் விம்மி*** - மேகங்களைப் போல மிகுந்து; ***எங்கணும் முயங்கின*** - எங்கும் பரந்திருந்தன.
மகளிர் அழகு

***73. இயல் புடைபெயர்வன. மயில்; மணி இழையின்***
***வெயில் புடைபெயர்வன. மிளிர் முலை; குழலின்***
***புயல் புடைபெயர்வன. பொழில்; அவர் விழியின்***
***கயல் புடைபெயர்வன. கடி கமழ் கழனி.***

***மயில் இயல்புடை பெயர்வன*** - *மயில்கள் அந்நாட்டுப் பெண்களின் சாயலைப் பெற்று நடமாடுகின்றன;* ***மிளிர்முலை மணி இழையின் வெயில்புடை பெயர்வன*** - *அப்பெண்களின் தனங்களில் அணிமணிகள் பதித்துச் செய்யப்பட்ட அணிகலங்களைப்போல வெயில் எங்கும் ஒளி வீசின;* ***குழலின் புயல்புடை பெயர்வன பொழில்*** - *அப்பெண்களது கூந்தலைப் போல மேகங்கள் சோலைகளில் சஞ்சரித்தன;* ***அவர் விழியின் கயல் கடிகமழ் கழனி புடை பெயர்வன*** - *அவர்களது கண்களைப் போல கயல் மீன்கள் மலர் மணம் கமழும் வயல்களிலே புரள்வனவாமே.*

*பெண்களின் சாயலுக்கு மயிலும். அவர்களின் அணிகலன்களின் ஒளிக்கு வெயிலும். கூந்தலுக்கு மேகமும். கண்களுக்கு மீன்களும் ஒப்பாகி. அந்நாட்டில் புடை பெயரும் என்பது கருத்து. பெண்களது சாயல் முதலிய உவமேயங்களை - உவமானங்களாக்கி. மயில் முதலியவைகளுக்கு மாற்றிக் கூறியதால் இது "எதிர் நிலை அணி" ஆகும்.*

*மயில்கள் மகளிரின் சாயலுக்குத் தோற்றும். வெயில் மணி இழைச் சுடருக்குத் தோற்றும். புயல் குழலுக்குத் தோற்றும் கயல் கருவிழிக்குத் தோற்றும் புடை பெயர்ந்தன என்று பொருள் கூறினும் பொருந்தும். புடை பெயர்தல்: அப்பால் செல்லுதல்.*

***74. இடைஇற மகளிர்கள். எறி புனல் மறுகக்***
***குடைபவர். துவர் இதழ் மலர்வன. குமுதம்;***
***மடை பெயர் அனம் என மட நடை. அளகக்***
***கடைசியர் முகம் என மலர்வன. கமலம்.***

***இடை இற. மகளிர்கள் எறிபுனல் மறுக. குடைபவர்*** *-தங்கள இடை ஒடிவது போலத் தோன்றும் பெண்கள் அலையடிக்கும் நீர் கலங்க நீராடுபவர்களின்;* ***துவர் இதழ் என*** *- பவளம் போன்ற சிவந்த உதடுகளைப் போல;* ***குமுதம் மலர்வன*** *- குமுத மலர்கள் மலர்வனவாகும்;* ***மடைபெயர் அனம் என*** *- நீர்மடைகளில் வாழும் அன்னங்களைப் போல;* ***மடநடை அளகம்*** *- மெல்லிய நடையையும். அழகிய கூந்தலையும் உடைய;* ***கடைசியர் முகம் என*** *- அந்நாட்டு உழத்தியரின் முகம் போல;* ***கமலம் மலர்வன*** *- தாமரை மலர்கள் மலர்வனவாகும்.*

*குமுதம் பெண்களின் வாயிதழ்களைப் போல மலர்ந்தன. தாமரை உழத்தியரின் முகம் போல மலர்ந்தன என. உவமானத்தை உவமேயமாகக் கூறியதால் 'எதிர்நிலையணி' யாகும்.*

*75.* ***விதியினை நகுவன. அயில் விழி; பிடியின்***
***கதியினை நகுவன. அவர் நடை; கமலப்***
***பொதியினை நகுவன. புணர் முலை; கலை வாழ்***
***மதியினை நகுவன. வனிதையர் வதனம்.***

***வனிதையர் அயல் விழி*** *- அந்நாட்டுப் பெண்களின் வேல் போன்ற கண்கள்;* ***விதியினை நகுவன*** *- நான்முகனைப் பழிப்பன;* ***அவர் நடை பிடியின் கதியினை நகுவன*** *- அவர்களது நடை பெண் யானைகளின் நடையைப் பழிப்பன;* ***புணர் முலை கமலப் பொதியினை நகுவன*** *- அப்பெண்களின் இணைந்துள்ள மார்புகள் தாமரை அரும்புகளைப் பழிப்பன;* ***வதனம் கலைவாழ் மதியினை நகுவன*** *- அவர்களது முகங்கள் கலைகளை உடைய சந்திரனைப் பழிப்பனவாகும்.*

*பெண்களின் விழிக்கு வேலும். நடைக்குப் பெண்யானை நடையும். தனங்களுக்குத் தாமரை அரும்பும். முகத்துக்குச் சந்திரனும் உவமைகளாகச் சொல்லப்படுவன. இங்கு வேல் முதலியவை விழி முதலியவைகளைவிட விஞ்சியிருப்பதால் அவைகளை நகுவனவாயின என்றது; எதிர்நிலையணியாம்.*

*44 76.* ***பகலினொடு இகலுவ. படர் மணி; மடவார்***
***நகிலினொடு இகலுவ. நளி வளர் இளநீர்;***
***துகிலினொடு இகலுவ. சுதை புரை நுரை; கார்***
***முகலினொடு இகலுவ. கடி மண முரசம்.***

***படர்மணி*** *-பரவிக் கிடக்கின்ற மணிகள்;* ***பகலினொடு இகலுவ*** *- சூரிய ஒளியுடன் மாறு கொண்டொளிர்வன;* ***நளிவளர் இளநீர்*** *- குளிர்ந்த இளநீர்கள்;* ***மடவார் நகிலினொடு இகலுவ*** *- பெண்களின் தனங்களோடு மாறுபட்டு விளங்குவனவாம் படைத்த நான்முகனே மயங்கவல்ல விழிகளாதலின் தமக்கு நிகராகா (நான்முகனை) கண்கள் பழிப்பனவாம். மலர்வதும் குவிவதுமான தாமரை முகையைப் போலல்லாது என்றும் ஒரு தனிமையாய் இருக்கும் தனங்கள் தாமரை முகைகளைப் பழித்தன. தேய்தலும் வளர்தலுமாக உள்ள மதி - என்றும் மலர்ந்தே உள்ள முகத்துக்கு நிகராகா தாதலின் மதியை முகம் பழிப்பன வாயின என்று கூறியதன் நயம் உணர்ந்து மகிழ்தற்குரியது.*

*அந்நகர மாதர் அணியும் அணிகலன்களில் பதித்துள்ள இரத்தினங்கள் சூரியன் ஒளியை விட மிக்கு விளங்குவன. அவர் தம் முலைகள் செவ்விளநீர்களை விட வடிவத்தால் திரட்சியால் சிறந்து விளங்குவன. அவர்கள் அணியும் நூலாடைகள் பால் நுரையை விட மெல்லியனவாக நொய்யனவாக விளங்குவன. மணமுரசு ஒலியோ மழை மேகத்தின் குமுறு குரலினும் மிக்கு விளங்குவது. மாறுபடல் - போட்டியிட்டும் தோல்வி காணுதல். நளி -பெருமை. செறிவு.*

***77. காரொடு நிகர்வன. கடி பொழில்; கழனிப்
போரொடு நிகர்வன. புணர்மலை; அணை சூழ்
நீரொடு நிகர்வன. நிறை கடல்; நிதி சால்
ஊரொடு நிகர்வன. இமையவர் உலகம்.***

**காரொடு நிகர்வன கடிபொழில்** - *மேகங்களுடன் அந்தநாட்டுச் சோலைகள் ஒப்பனவாகும்;* **கழனிப் போரொடு நிகர்வன புணர்மலை** - *வயல்களிலே குவித்து வைத்துள்ள நெற்போருடன் நெருங்கிய மலைகள் ஒப்பனவாகும்;* **அணை சூழ் நீரொடு நிகர்வன நிறை கடல்** - *அணைகளில் தேங்கிய நீர்த்தேக்கத்துடன் நீர் நிறைந்த கடல் ஒப்பதாகும்;* **நிதிசால் ஊரொடு நிகர்வன இமையவர் உலகம்** -*செல்வம் மிக்க அந்த நாட்டு ஊர்களோடு தேவர் உலகு ஒப்பதாகும்.*

*அந்த நாட்டுச் சோலைகள் மேகங்களை ஒத்தும். நெற் போர்கள் மலைகளை ஒத்தும். நீர்த்தேக்கங்கள் கடலை ஒத்தும் ஊர்கள் எல்லாம் தேவர் உலகை ஒத்தும் இருந்தன என்பது கருத்து. புணர்மலை: மலைத்தொடர்ச்சி.*

***78. நெல் மலை அல்லன் - நிரை வரு தரளம்;
சொல் மலை அல்லன் - தொடு கடல் அமிர்தம்;
நல் மலை அல்லன் - நதி தரு நிதியம்;
பொன் மலை அல்லன் - மணி படு புளினம்.***

**நெல்மலை அல்லன** *- அந்த நாட்டில் நெற் குவியல்களில்லாத இடங்களில்;* **நிரைவரு தரளம்** *- வரிசை வரிசையாக முத்துக் குவியல்கள் காணப்படும்;* **சொல்மலை அல்லன** *- சொன்ன அந்த முத்துக் குவியல்கள் இல்லாத இடங்களில்;* **தொடுகடல் அமிர்தம்** *- தோண்டப்பட்ட கடலில் எடுத்த உப்புக் குவியல்கள் நிறைந்திருக்கும்;* **நன்மலை அல்லன** *- அந்த உப்புக் குவியல்கள் இல்லாத இடங்களில்;* **நதிதரு நிதியம்** *- நதிகளால் கொண்டுவந்து குவிக்கப்பட்ட பொன் முதலிய பொற் குவியல்களில் பல இடங்களில்;* **மணிபடு புளினம்** *- மணிகள் நிறைந்த மணல் மேடுகள் இருக்கும்.*

*கோசல நாட்டில் நெல்லும். முத்தும். உப்பும். பொன்னும். மணியும் எங்கும் குவிந்து மலைகளைப் போல மண்டிக் கிடந்தன என்பது கருத்து. புளினம்: மணல் திட்டு.*

***79. பந்தினை இளையவர் பயில் இடம். - மயில் ஊர்
கந்தனை அனையவர் கலை தெரி கழகம். -
சந்தன வனம் அல. சண்பக வனம் ஆம்;
நந்தன வனம் அல. நறை விரி புறவம்;***

***பந்தினை இயையவர் பயில் இடம்*** - *அந்நாட்டு இளம் பெண்கள் பந்து விளையாடும் இடங்கள்;* ***சந்தன வனம் அல சண்பக வனம் ஆம்*** - *சந்தனச் சோலைகளே ஆயினும் அவர்களது மேனி மணத்தால் சண்பகச் சோலைகளாகும்;* ***கந்தனை அனையவர் கலை தெரி கழகம்*** - *முருகனை ஒத்த ஆடவர்கள் வில் முதலிய கலைகளைப் பயிலுமிடங்கள்;* ***நந்தன வனம் அல நறை விரிபுறவம்*** - *பல மலர்களை உடைய நந்தனவனங்களே ஆயினும் 'அவர்தம்' மேனி மணத்தால் முல்லைக்காடுகளாக விளங்கும்.*

*பெண்களின் மேனி சண்பக மணமும். ஆடவர் மேனி முல்லை மணமும் உடையராதலின் மகளிர் பந்தாடுமிடம் சண்பகச் சோலை ஆயின. ஆடவர் கலை பயிலுமிடம் முல்லைக் காடாக மணந்தன என்பர். "ஆண்கள் மேனிக்கு முல்லை மணம்" இயல் பென்பதை "மன்னொடும் தோளே முல்லை முகை நாறும்மே" என்று குறுந்தொகை (193) வரிகளால் அறியலாம். இளையவர் என்பது இளம் வயதினர் என்ற பொருள் உடையதாயினும் பந்தாடுதல் பாவையர்க்கே உரியதாதலின் 'இளையவர்' இளம் பெண்கள் புறவம்: காடு.*

***80. கோகிலம் நவில்வன. இளையவர் குதலைப்***
***பாகு இயல் கிளவிகள்; அவர் பயில் நடமே***
***கேகயம் நவில்வன; கிளர் இள வளையின்***
***நாகுகள் உமிழ்வன. நகை புரை தரளம்.***

**கோகிலம் நவில்வன** - *குயில்கள் கற்றுப் பேசுவன;* **இளையவள் குதலைப் பாகு இயல் கிளவிகள்** - *அந்நாட்டுப் பெண்களின் பாகு போன்ற இனியனவாகிய மழலைச் சொற்களையாம்;* **கேகயம் நவில்வன அவர் பயில் நடமே** - *மயில்கள் நடந்து பழகுவன அப்பெண்களின் நடையையாம்;* **கிளர் இள வளையின் நாகுகள்** - *விளங்கும் இளம்பெண் சங்குகள்;* **உமிழ்வன நகை புரைதரளம்** - *உமிழ்வது அப்பெண்களின் பற்களை ஒத்த முத்துக்களையேயாம்.*

*இள மகளிரைப் போலக் குயில்கள் பேசும்; அவர்களது நடையைப் போல மயில்கள் நடக்கும்; குயிலும் மயிலும் உவமானங்கள் அவற்றை உவமேயங்களாக்கிக் கூறியதால் இது "எதிர்நிலையுவமையணி"; எதிர்மறை அணி என்றும் கூறுவர். பாகு இயல் கிளவி: பாகு போன்ற இனிய மொழி. கேகயம்: மயில். நகை: பல். கிளவி: சொல். தரளம்: முத்து*

***81.***

***பழையர்தம் மனையன. பழ நறை; நுகரும்***
***உழவர்தம் மனையன. உழு தொழில்; புரியும்***
***மழவர்தம் மனையன. மணஒலி; இசையின்***
***கிழவர்தம் மனையன. கிளை பயில் வளை யாழ்.***

***பழநறை பழையர்தம் மனையன*** - பழமையான கள். கள் விற்பவர்களின் வீடுகளில் உள்ளது; ***நுகரும் உழவர்தம் மனையன*** - அந்தக் கள்ளைப் பருகும் உழவர்கள் வீடுகளிலே; ***உழுதொழில்*** - உழவுத் தொழிலுக்கான கருவிகள் உள்ளன; ***புரியும் மழவர்தம் மனையன மணஒலி*** - மணம் புரியும் இளைஞர் இல்லங்களில் மணவாத்தியங்கள் ஒலிக்கின்றன; ***இசையின் கிழவர் தம் மனையன*** - இசைவல்ல பாணர் வீடுகளில்; ***கிளை பயில் வளை யாழ்*** - கிணை என்ற நரம்பினையுடைய வளைந்த யாழ்கள் உள்ளன.

*கள் விற்போர் மனைகளில் பழங்கள் உள்ளன. அதனைப் பருகும் உழவர் மனைகளிலே உழவுக்குரிய கருவிகள் உள்ளன. மணம்புரியும் இளைஞர் இல்லங்களிலே மணமுழவு ஒலிக்கும். இசைவல்ல பாணர்களின் மனைகளிலே பலவகையான யாழ்கள் உள்ளன. அவரவர்க்குரிய தொழில்களைப் புரிந்து நலமாக வாழ்கின்றனர். அந்த நாட்டு மக்கள் என அறிகிறோம். பழையர்: கள் விற்போர். இசையின் கிழவர்: பாணர்.*

***82. கோதைகள் சொரிவன. குளிர் இள நறவம்;***
***பாதைகள் சொரிவன. பரு மணி கனகம்;***
***ஊதைகள் சொரிவன. உறை உறும் அமுதம்;***
***காதைகள் சொரிவன. செவி நுகர் கனிகள்.***

***கோதைகள் குளிர் இள நறவம் சொரிவன*** -மலர் மாலைகள் இனிய தேனைப் பொழிவனவாம்; ***பாதைகள் கனகம் சொரிவன*** - வணிகத்துக்குரிய கப்பல்கள் பெரிய மணிகளையும். பொன்னையும் கொண்டு வந்து குவிப்பனவாம்; ***ஊதைகள் உறையுறும் அமுதும் சொரிவன*** - காற்று உயிர்காக்கும் அமுதத் துளிகளைச் சொரிவனவாம்; ***காதைகள் செவிநுகர் கனிகள் சொரிவன*** - கவிஞர்களின் காப்பியங்கள் செவிக்கினிய பாடல்களைத் தருவனவாம்.

*மக்கள் அணியும் மலர் மாலைகள் தேனையும். கப்பல்கள். மணி. பொன் ஆகியவைகளையும். காற்று உயிர் காக்கும் அமுதத் திவலைகளையும் காப்பியங்கள் இனிய பாக்களையும் சொரிவனவாம் என்பது கருத்து. பாதைகள்: காலினும் கலத்தினும் உறை: துளி*

*கவியின்பம் செவியால் நுகரப்படுவதாதலின் 'செவி நுகர் கனி'' என்றார். கோதை: பெண்கள் கூந்தல் என்பதால். கூந்தலின் அணிந்த மலர் மாலை தேன் சொரியும் என்றும் பொருள் கூறலாம். சத்துருக்கள் உரையில் மாண்பினை செவிப் புலம் நுகர்வதோர் தெய்வத் தேன்கொலாம் (2266) என்று குறிப்பது இங்கு ஒப்பிடத்தக்கது.*

***83. இடம் கொள் சாயல் கண்டு. இளைஞர் சிந்தைபோல்.***
***தடங் கொள் சோலைவாய். மலர் பெய் தாழ் குழல்***
***வடம் கொள் பூண் முலை மடந்தைமாரொடும்***
***தொடர்ந்து போவன-தோகை மஞ்ஞையே.***

**தோகை மஞ்ஞை** - தோகையை உடைய ஆண் மயில்கள்; **தடம் கொள் சோலைவாய்** - விசாலமான சோலையினிடத்தே; **இடம் கொள் சாயல் கண்டு** - (தமது பெண் மயில்களின் பெருமைக்குரிய சாயலைப் பார்த்து); **இளைஞர் சிந்தை போல்** - இளம் வயதினரான ஆண்களின் (மனத்தைப் போல; **மலர் பெய்தாழ் குழல்** - மலரணிந்த நீண்ட கூந்தலையும்; **வடம் கொள் பூண் முலை** - முத்து மாலைகளை அணிந்த தனங்களையும் உடைய; **மடந்தை மாரொடு** - அந்தப் பெண்களுடனே; **தொடர்ந்து போவன** - பின்தொடர்ந்து செல்வனவாம்.

ஆண் மயில்கள் சோலையில் உலாவும் பெண்களை சாயலால் மயில் போன்றிருக்கும் அவர்களைப் பெண்மயில்கள் என்று கருதிப் பின்தொடரும் என்றது மயக்கவணி. இளைஞர்: காளைப் பருவத்தினரான ஆண்கள். இடம்: பெருமை. வடம்: முத்து வடம். தாழ்குழல்: நீண்ட கூந்தல்.

*84.* **வண்மை இல்லை. ஓர் வறுமை இன்மையால்;**
**திண்மை இல்லை. ஓர் செறுநர் இன்மையால்;**
**உண்மை இல்லை. பொய் உரை இலாமையால்;**
**வெண்மை இல்லை. பல் கேள்வி மேவலால்.**

**ஓர் வறுமை இன்மையால்** - (அந்த நாட்டில்) வறுமை சிறிதும் இல்லாததால்; **வண்மை இல்லை** - கொடைக்கு அங்கே இடமில்லை; **நேர் செறுநர் இன்மையால்** - நேருக்கு நேர் போர்புரிபவர் இல்லாததால்; **திண்மை இல்லை** - உடல் வலிமையை எடுத்துக்காட்ட வாய்ப்பில்லை; **பொய் உரை இல்லாமையால்** - பொய்ம் மொழி இல்லாமையால்; **உண்மை இல்லை** - மெய்ம்மை தனித்து விளங்கவில்லை; **பல்கேல்வி மேவலால்** - பலவகைக் கேள்விச் செல்வம் மிகுந்து விளங்குவதால்; **வெண்மை இல்லை** - வெள்ளறிவாகிய அறியாமை இல்லை.

கோசலை நாட்டில் வறுமை சிறிதும் இல்லாதலால் வண்மையின் சிறப்புத் தெரிவதில்லை; பகைகொண்டு போர்புரிபவர் இல்லாதலால் உடல் வலிமையை உணர வழியில்லை; பொய் பேசுவோர் இல்லாமையால் உண்மையின் பெருமை தெரிய வழியில்லை; கேள்வி ஞானம் மிகுந்திருப்பதால் அங்கு அறியாமை சிறிதுமில்லை என்றார். 'யாதும். கொள்வார் இலாமைக் கொடுப்பார்களும் இல்லை' (165) என்று மேலே கூறுவர்.

*85.* **எள்ளும். ஏனலும். இறுங்கும். சாமையும்.**
**கொள்ளும் கொள்ளையில் கொணரும் பண்டியும்.**
**அள்ளல் ஓங்கு அளத்து அமுதின் பண்டியும்.**
**தள்ளும் நீர்மையின். தலைமயங்குமே.**

***எள்ளும் ஏனலும் இறுங்கும் சாமையும் கொள்ளும்*** - எள்ளும். தினையும். சோளமும். சாமையும். கொள்ளும்; ***கொள்ளையில் கொணரும் பண்டியும்*** - மிகுதியாகக் கொண்டு வரும் வண்டிகளும்; ***அள்ளல் ஓங்கு அளத்து அமுதின் பண்டியும்*** - சேறு நிறைந்த உப்பளத்திலிருந்து; - உப்பைக் கொண்டு வரும் வண்டிகளும்; ***துள்ளும் நீர்மையில் தலை மயங்கும்*** - பாரமிகுதியால் இயல்பாக ஓட்டிச் செல்ல இயலாது ஆட்கள் தள்ளும் தன்மையால் ஒன்றுடன் ஒன்று கலப்பதாகும்.

*தலை மயங்கும்: தம்மில் ஒன்றுபட்டுக் கலக்கும். இதற்கு இடம் மாறுபடும் என்று பொருள் கூறுவதுமுண்டு. ஓரிடத்தில் விளைந்த எள் முதலியவை அவை விளையாத வேறு இடங்களுக்குக் கொண்டு செல்லப்படுவதால் ''இடம் மாறும்'' என்பதும் பொருந்தும்.*

***86. உயரும் சார்வு இலா உயிர்கள் செய் வினைப்***
***பெயரும் பல் கதிப் பிறக்குமாறுபோல்.***
***அயிரும். தேனும். இன் பாகும். ஆயர் ஊர்த்***
***தயிரும். வேரியும். தலைமயங்குமே.***

***உயரும் சார்விலா உயிர்கள்*** - உயர்கதியான வீடு பேறடைவதற்கு உரிய ஞானமில்லாத உயிர்கள்; ***செய்வினைப் பெயரும்பல்கதி*** - தாம் செய்த வினைப்பயனைத் துய்க்க மாறி மாறிப் பல பிறவிகளிலும்; ***பிறக்கும் ஆறு போல்*** - பிறக்கின்ற விதம் போல; ***அயிரும் தேனும் இன்பாகும்*** - சர்க்கரையும். தேனும். இனிய பாகும்; ***ஆயர் ஊர்த் தயிரும் வேரியும்*** - இடையர் ஊர்களில் கிடைக்கும் தயிரும் கள்ளும் ஆகியவை; ***தலைமயங்கும்*** - இடம் மாறுபடும்.

*ஓரிடத்தில் உற்பத்தியாகும் அயிர் முதலிய வேறிடங்களுக்குக் கொண்டு செல்லப்படுவதற்கு. உயர்கதியடையும் வாய்ப்பில்லாத உயிர்கள் வேறு வேறு பிறவிகளில் மாறிப் பிறத்தல் உவமையாகக் கூறப்பட்டது. ''உயிரும் சார்பாவது அஞ்ஞான வயத்தால் பிறந்து இறந்து தாழ்ந்த கதிகளிற் செல்லுதல் ஒழிந்து. மோட்சத்தை அடைதற்குக் கருவிகளாகிய மெய்ஞ்ஞானம்'' -இராமசாமி நாயுடு உரை. இறைவனை அடைவதற்குரிய ஏதேனும் ஒரு நெறியைக் கடைப்பிடித்து - பிறவித் துன்பத்திலிருந்து ஈடேறுவதே உயிர்களின் கடமை என்பதனை இதனால் உணர்த்தினார். பல்கதி: மக்கள். தேவர். நரகர். விலங்கு என்னும் நான்கு கதிகளாம். அயிர்: கண்ட சருக்கரை செய்வினை: தாம் செய்த நல்வினை தீவினைகள் 52-ஆம் பாட்டு முதல் இதுவரை அந்த நாட்டின் வறுமை இன்மையும் வளப்பெருக்கமும் கூறப்பட்டன.*

விழாவும் வேள்வியும்

***87. கூறு பாடலும். குழலின் பாடலும்.***
***வேறு வேறு நின்று இசைக்கும் வீதிவாய்.***
***'ஆறும் ஆறும் வந்து எதிர்ந்த ஆம்' என.***
***சாறும் வேள்வியும் தலைமயங்குமே.***

***கூறு பாடலும்*** - இசை வல்லுநர் பாடுகின்ற வாய்ப்பாட்டும்; ***குழலின் பாடலும்*** - புல்லாங் குழலால் இசைக்கும் பாட்டும்; ***வேறு வேறு நின்று*** - தனித்தனியாக நின்று; ***இசைக்கும் வீதிவாய்*** - ஒலிக்கும் வீதிகளிலே; ***ஆறும் ஆறும் வந்து எதிர்ந்த ஆம்என*** - ஒரு ஆறு. மற்றொரு ஆற்றுடன் வந்து எதிர்ப்பட்டதெனக் கூறுமாறு; ***சாறும் வேள்வியும் தலை மயங்கும்*** - விழாவுக்காகவும் திருமணத்துக்காகவும் வரும் மக்கள் கூட்டம் கலக்கும்.

*சாறு: விழா. வேள்வி: திருமணம்; யாகமென்றும் கொள்ளலாம். பாட்டொலியும். குழல் ஓசையும் தனித்தனியே கேட்கும் வீதிகளில் மக்கள் கூட்டம் நிறைந்திருக்கும் என்றார். விழாக்கள் எனவும் வேள்விக்கெனவும் மக்கள் கூடினர் என்பது கருத்து.*

***88. மூக்கில் தாக்குறும் மூரி நந்தும். நேர்***
***தாக்கின் தாக்குறும் பறையும். தண்ணுமை***
***வீக்கின் தாக்குறும் விளியும்.- மள்ளர்தம்***
***வாக்கின் தாக்குறும் ஒலியில் மாயுமே.***

***மூக்கில் தாக்குறும் மூரி நந்தும்*** - மூக்கில் வாய்வைத்து ஊதப்படும் வலிய சங்கு வாத்தியத்தின் ஒலியும்; ***நேர்தாக்கின் தாக்குறும் பறையும்*** - நேரான குறுந்தடியால் தாக்கப்படும் பறையினது ஓசையும்; ***வீக்கில் தாக்குறும் தண்ணுமை விளியும்*** - வாரால் பிணிக்கப்பட்ட மத்தள முழக்கமும்; ***மள்ளர்தம் வாக்கில் தாக்குறும் ஒலியில் மாயும்*** - உழவர்கள் உழவு மாடுகளை அதட்டும் ஒலிக்குள்ளே அடங்கிவிடும்.

*சங்கு. பறை. மத்தளம் இவைகளின் ஓசை உழவர்கள் ஆரவாரத்திலே அடங்கிவிடும் என்பதால் உழவர்களது ஆரவார ஒலியே ஓங்கி நிற்கும் என்பது கருத்து. மூக்கு என்றது சங்கின் கரிமுகத்து நுனியை. ஒன்றில் மற்றொன்று அடங்கும் என்பதால் இது மறைவணியாகும். . 57 இரு பாடல்களிலும் விழாச் சிறப்பும். வேள்விச் சிறப்பும் கூறினார்.*

சேய்க்கு ஊட்டும் செங்கை

***89. தாலி ஐம்படை தழுவு மார்பிடை***
***மாலை வாய் அமுது ஒழுகு மக்களைப்***
***பாலின் ஊட்டுவார் செங் கை. பங்கயம்***
***வாய் நிலா உறக் குவிவ மானுமே.***

***தாலி ஐம்படை தழுவு மார்பிடை*** - *ஐம்படைத் தாலி அணிந்திருக்கும் மார்பிலே;* ***மாலை வாய் அமுது ஒழுகும் மக்களை*** - *சீராக. வாயிலிருந்து 'சொள்ளு' ஒழுகும் குழந்தைகளுக்கு;* ***பாலின் ஊட்டுவார் செங்கை*** - *பாலமுதைப் புகட்டும் பெண்களின் அழகிய கைகள்;* ***பங்கயம் வாய் நிலாவுறுக் குவிவ மானுமே.*** *-தாமரை மலர்கள். நிலவு எழுதலால் குவிவதை ஒத்திருக்கும்.*

*ஐம்படைத் தாலி அணி செய்யும் மார்பிலே சொள்ளு நீர் வழியும் தம் குழந்தைகளுக்குத் தாய்மார்கள் பால் கலந்த சோறு ஊட்டுகிறார்கள். அப்போது குவிந்திருக்கும் அவர்களின் கைகள் நிலா எழுந்ததால் குவிந்த தாமரை மலர்களை ஒத்திருக்கும் என்பது கருத்து. ஐம்படை: திருமாலின் ஐந்து படைகள். காக்கும் தெய்வமான திருமால். தம் குழந்தைகளுக்கு நோய் முதலியன வராது காக்கவேண்டுமென - இந்த ஐம்படைத்தாலியைக் குழந்தைகளுக்கு அணிவிப்பதுண்டு. ஐம்படை: சங்கு. சக்கரம். கதை. வில். வாள்.*

*'மழலை சிந்துபு சின்னீர் ஐம்படை நனைப்ப' என்பது மணிமேகலை (மணி 3: 138. 7:56). பால்: பாற்சோற்றுக்கு இலக்கணை.*

*ஒழுக்கத்தின் விளைவு. அறம்*

***90.*** **பொற்பின் நின்றன. பொலிவு; பொய் இலா**
**நிற்பின். நின்றன. நீதி மாதரார்**
**அற்பின் நின்றன. அறங்கள்; அன்னவர்**
**கற்பின் நின்றன. கால மாரியே.**

**பொற்பின் நின்றன பொலிவு** - *(அந்த நாட்டு மக்களின்) அகத்தழகால் நிலைத்திருந்தது புறத்தழகு;* ***பொய்யிலா நிற்பின் நின்றன நீதி*** *- அவர்களது பொய்ம்மை இல்லாத மெய்ந்நிலையால் நீதி நிலைத்து நின்றது;* ***மாதரார் அற்பின் நின்றன அறங்கள்*** *- (அந்த நாட்டுப்) பெண்களின் அன்பால் அறங்கள் நிலைபெற்றிருந்தன;* ***அன்னவர் கற்பின் நின்றன காலமாரியே*** *-அப்பெண்களது கற்பினால் பருவமழை நிலைத்திருந்தது.*

*அந்நாட்டு மக்கள் அழகெனக் கருதுவது நற்குணத்தினையே என்பதால் 'பொற்பின் நின்றன பொலிவு' என்றார். பொய்யிலா நிற்பு: மெய்ந்நெறி நிற்றல் அன்பு: "அறத்திற்கே அன்பு சார்பென்ப" என்ற குறளுக்கேற்ப "அற்பின் நின்றன அறங்கள்" என்றார். கற்புடைப் பெண்களுக்குக் கடவுளரும் பணி புரிவர் என்பதால் 'கற்பின் நின்றன காலமாரி' என்றார்.*

*இப்பாடலை முதல் இரண்டு அடிகள் (அருமழை வேண்டினும் தருகிற்கும் தன்மையன் (கலி) ஆண்களைப் பற்றியது எனவும் கடைசி இரண்டடிகள் பெண்களைப் பற்றியது எனவும் கூறுவர். முழுவதும் பெண்களைப் பற்றியதே என்று கூறுவதும் பொருந்தும்.*

***91. சோலைமா நிலம் துருவி. யாவரே***
***வேலை கண்டு தாம் மீள வல்லவர்?-***
***சாலும் வார் புனல் சரயுவும். பல***
***காலின் ஓடியும் கண்டது இலையே!***

**சோலை மாநிலம் துருவி** - *சோலைகள் சூழ்ந்த அக் கோசல நாட்டைத் துருவிச் சென்று;* **வேலை கண்டு தாம் மீள வல்லவர் யாவரே** - *அதன் எல்லையைக் கண்டு மீண்டுவர வல்லவர் யாருளர்?:* **சாலும் வார்புனல் சரயவும்** - *மிகுந்த நீரை உடைய அந்நாட்டு நதியாகிய சரயு நதியும்;* **காலின் ஓடியும் கண்டதில்லை** - *பல கால்வாய்களால் ஓடிச் சென்றும் அந்த நாட்டின் எல்லையைக் கண்டதில்லை.*

*பல கால்களால் ஓடிச் சென்றும் சரயு நதியால் காணமுடியாத அந்த நாட்டின் எல்லையை. இரு கால்களை உடைய மனிதரால் எப்படிக் காணமுடியும்! காணமுடியாது என்பது கருத்து. இரண்டு காலுள்ள உயர்திணைப் பொருள்களாலும் பல கால்களுள்ள அஃறிணைப் பொருள்களாலும் காணக் கூடாத எல்லையுடைய கோசல தேயம்; இராமசாமி நாயுடு உரை விளக்கம்.*

*வேலை: எல்லை. கால்: வாய்க்கால். துருவி: தேடி. இதனால் கோசல நாட்டின் பரப்பு கூறப்பட்டது.*

***92. வீடு சேர. நீர் வேலை. கால் மடுத்து***
***ஊடு பேரினும். உலைவு இலா நலம்***
***கூடு கோசலம் என்னும் கோது இலா***
***நாடு கூறினாம்; நகரம் கூறுவாம்.***

**வீடு சர நீர்வேலை கால்மடுத்து ஊடு பேரினும்** - *நிலம் முழுவதும் அழியுமாறு கடல் பெருங்காற்றால் மோதுண்டு வந்தாலும்;* **உலைவு இலா** *-அழியாத;* **நலம் கூடும் 'கோசலம்' என்றும் கோதிலா நாடு கூறினாம்** - *நன்மைகள் சேர்ந்த கோசலம் என்று குற்றமற்ற நாட்டின் சிறப்பைச் சொன்னோம்;* **நகரம் கூறுமாம்** - *(இனி) அந்த நாட்டின் தலைநகரான அயோத்தி மாநகரின் சிறப்பைச் சொல்லுவோம்.*

*வீடு (விடுதலை) - முதனிலைத் தொழிற்பெயர். நாடு. நகரம் -ஆகுபெயர்கள்.*

## நகரப் படலம்

*அயோத்தி நகரின் சிறப்பினைக் கூறும் படலம் என விரியும். அயோத்தி நகரின் அழகு. அதன் அமைப்பு. மதிலின் மாட்சி. அகழியின் பாங்கு. சோலையின் தன்மை. எழுநிலை மாடங்கள் மாளிகைகள் ஆகியவற்றின் தோற்றமும் பொலிவும் ஆகியவற்றை இப்படலப் பாடல்களால் அறியலாம். நாடு. நகரம். காடு. மேடு எதுவாயினும் அங்கு வாழ்வோரின் செயலையும் சீர்மையையும் பொறுத்தே சிறப்புடையதாக முடியும். அதனால் அயோத்தி நகரத்து மக்களைப் பற்றிக் கம்பர் வருணிக்கிறார். நகரத்தாரின் ஆடல் பாடல். மகளிர் மேனியழகு. மாந்தரின் மகிழ்ச்சி ஆகியனவற்றை அறிவதோடு. ஆங்கு வாழ்வோரின் பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளையும் அறிகிறோம். செல்வச் செழிப்பின் எல்லையாக அயோத்தியில் கள்வர் இல்லை. இரப்பார் இல்லை என்று வருணிக்கிறார். எல்லோரும் கற்றுத் தெளிந்தோராதலின் எவர் கல்வி வல்லவர். எவர் அவ்வல்லமை இல்லார் என ஆய்தற்கு இடமில்லை. பொதுவாக. எல்லோரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தியிருந்தனர் என்கிறார். கம்பர். கல்விப் பயனாய் அந்நகரத்தார் பரபோகக் கனியைக் கைப்பொருளாகப் பெற்றிருந்தமையைச் சுட்டி முடிகிறது.*

**எழுசீர் விருத்தம்**

*அயோத்தியின் அழகு*

***93.*** ***செவ்விய மதுரம் சேர்ந்த நல் பொருளின்***
***சீரிய கூரிய தீம் சொல்.***
***வவ்விய கவிஞர் அனைவரும். வடநூல்***
***முனிவரும். புகழ்ந்தது; வரம்பு இல்***
***எவ் உலகத்தோர் யாவரும். தவம் செய்து***
***ஏறுவான் ஆதரிக்கின்ற***
***அவ் உலகத்தோர். இழிவதற்கு அருத்தி***
***புரிகின்றது - அயோத்தி மா நகரம்.***

***செவ்விய*** - *செம்மையானவையும்;* ***மதுரம் சேர்ந்த*** - *இனிமை பொருந்தியவையும்;* ***நல் பொருளின் சீரிய*** - *கூறும் நல்ல பொருளால் சிறந்தவையும்;* ***கூரிய*** - *நுட்பமானவையும் ஆகிய;* ***தீம்சொல்*** - *இனிய சொற்களை;* ***வவ்விய*** - *கவர்ந்து கொண்ட;* ***கவிஞர் அனைவரும்*** - *(தமிழ்) கவிஞர்களாலும் - யாவராலும்;* ***வடநூல் முனிவரும்*** - *வடமொழியில் வல்ல வான்மீகி முதலான முனிவர்கள்;* ***புகழ்ந்தது*** - *புகழப்பட்டது (அயோத்தி நகரம்); மேலும்;* ***வரம்பு இல் எவ் உலகத்தோர் யாவரும்*** - *அளவற்ற உலகங்கள் எல்லாவற்றிலும் வாழ்கின்றவர்கள் எல்லோரும்;* ***தவம் செய்து ஏறுவான்*** - *தவங்களைச் செய்து அடைவதற்கு;* ***ஆதரிக்கின்ற*** - *விரும்புகின்ற;* ***அவ் உலகத்தோர்*** - *அந்தப் பரமபதமாகிய வீட்டு உலகத்தவர்களும்;* ***இழிவதற்கு*** - *பிறப்பதற்கு;* ***அருத்தி புரிகின்றது*** - *(தகுந்த நகரம்) இது என்னும் விருப்பத்திற்கு உரியது;* ***அயோத்தி மாநகரம்*** - *அயோத்தியாகிய பெருமைக்குரிய நகரமேயாகும்.*

இராம கதையைப் பாடிய தமிழ்ப் புலவர்களும் வான்மீகி முதலான வடநூல் முனிவர்களும் புகழ்ந்தது அயோத்தி நகரையே. எல்லா உலகங்களிலும் வாழ்வோர் யாவரும் அருந்தவம் செய்து முடிவாக வீடு பேறு பெறவே விரும்புவர்; அவர்களும் அங்கே சென்றபிறகு அதனை விடவும் பெருமை மிக்கது. அயோத்தியே என்று உணர்ந்து. அங்கே அவதாரம் செய்ய விரும்புவர். அந்த அளவுக்குப் பெருமை உடையது அயோத்தி நகரம் - இது செய்யுளின் திரண்ட கருத்து.

'கவிஞர்' என்றது "இராமாயணம் பாடிய சங்கப் புலவர் முதலியோர்" என்பது ஐயரவர்கள் குறிப்புரை. (ஐயரவர்கள் நூலகத்தின் கம்பராமாயணப் பதிப்பு - பாலகாண்டம் - பக். 45). சங்க காலத்து ஓர் இராமாயணம் வழங்கியதைத் தொல்காப்பிய உரை முதலியவற்றால் உணரமுடிகிறது. அதனை பாடியவர்களை நினைந்து கம்பர் கூறியதாக ஐயரவர்கள் குறிப்பிடுகிறார்கள் வடநூல் முனிவர் என்றது இராமாயணத்தை வடமொழியில் பாடிய வான்மீகி. வசிட்டர். போதாயனர் முதலியோரை (10)

இதே படலத்துள் மேலே இரு பாடல்களில் (97. 98) இக்கருத்தை இராமபிரான்பால் சார்த்தி அயோத்தியின் சிறப்பைக் கவிச்சக்கரவர்த்தி விளக்குதல் காண்க. 'புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்கம்.... எண்ணருங் குணத்தின் அவன் (இராகவன்)... இனிது இருந்து ஆள் இடம் என்றால் ஒண்ணுமோ இதனின் வேறு ஒரு போகம் உறைவு இடம் உண்டு என உரைத்தல் (97). "யாவர்க்கும் புகலிடம் ஆன செங்கண் மால் பிறந்து அளப்பருங் காலம் திருவின் வீற்றிருந்தனன்" என்றார்; "அங்கண்மா ஞாலத்து இந்நகர் ஒக்கும் பொன் நகர் அமரர் நாட்டு யாதோ" (98) இவ்விரு பாடல்களின் தொடர்கள் இம்முதற் பாடலுக்கு ஆழமான பொருள் காண உதவுவன.

நல்ல கவிதைக்கு உரிய இயல்புகளை முற்றிலும் கொண்ட கவி நாயகராகிய கம்பர். பல இடங்களில் நற்கவிதை மற்றும் மா கவிதையின் இயல்புகளைக் கூறுவார்; அவற்றுள் இஃது ஓர் இடம். கவிதைக்கு இன்றியமையாதவை இனிய சொற்கள்; அந்தச் சொற்களிலே அழகு இருக்க வேண்டும்; அழகு என்பது பல்வகைச் செம்மையால் அமைவது. அழகோடு இனிமை சேர வேண்டும். செம்மையும் இனிமையும் மட்டும் போதா; சொல்லப்படும் பொருளும் நல்லதாக இருக்கவேண்டும். செம்மை. இனிமை. நற்பொருள் இவற்றைக் கொண்டுதரும் சொற்கள் சீரியனவாய். நுட்பம் சுட்டும் கூர்மை கொண்டனவாய் இருத்தலும் இன்றியமையாதது. 'செவ்விய. மதுரம் சேர்ந்த நல் பொருளின் சீரிய தீம் சொல் வவ்விய கவிஞர்' என்ற தொடர் கொண்டே சிறந்த இலக்கியத் திறனாய்வையும் இலக்கியக் கொள்கையையும் உருவாக்கலாம். 'மாண்டு பிறக்கும் துயர் போய் வைகுந்தம் புக்கவரும் மீண்டும் தொழக் காதலிக்கும் வேங்கடமே' என்ற திருவேங்கடமாலைச் செய்யுளில் இப் பாடலின் கருத்தைப் பிள்ளைப் பெருமாளையங்கார் அமைத்திருப்பது கருதத்தக்கது. (திருவேங்கடமாலை 10)

தொல்காப்பியப் புறத்திணையியல் (தொல் -பொருள் புறத். 21) நூற்பாவில் சுட்டப்படும் 'கட்டில் நீத்த பால்' என்ற துறைக்குப் பரதன் அரியாசனம் துறந்த செய்தி கொண்ட பாடல் எடுத்துக்காட்டப்படுகிறது. சிலப்பதிகாரத்தில் வரும் இராமகாதைச் செய்திகள் யாவரும் அறிந்தன.

*கம்பரை யன்றி அயோத்தியைப் புகழ்ந்த தமிழ்ப் புலவர் பிறர் கம்பருக்கு முன்னர் வாழ்ந்தனரோ என்ற தடை எழுதற்கு இடம் உண்டு. அத் தடைக்கு விடை வருமாறு: கம்பர் காலத்துக்கு நெடுங்கால முன்பே தமிழர்க்கு இராம கதை அறிமுகமானதுதான். ஊன்பொதி பசுங்குடையார் பாடிய பாடாண் திணைப்பாடல் ஒன்றில் கிட்கிந்தா காண்ட நிகழ்ச்சி ஒன்று காணப்படுகின்றது. இராவணனால் சிறை எடுத்துச் செல்லப்பட்டபோது சீதை கழற்றி எறிந்த அணிகலன்களின் நிலை அறியாத வானரங்கள் முறை மாற்றி அவற்றை அணிந்து பார்த்ததாக அச் செய்யுள் தெரிவிக்கின்றது. (புறநானூறு 378). தென்கோடி (தனிக்கோடி) யில் அணை அமைத்துக் கடல் கடந்து செல்லுமுன் ஆல மரம் ஒன்றின்கீழ் அமர்ந்து இராமன் தன்னவரோடு நிகழ்த்திய மந்தணப் பேரவை பற்றி மதுரைத் தமிழ்க்கூத்தனார் கடுவன் மள்ளனார் குறிப்பிடுகிறார். (அகநானூறு 70). இப்படி உதிரி நிகழ்ச்சிகளே யன்றி இராமன் கதையை முழுமையாகப் பாடிய நூல்களும் இருந்திருக்கவேண்டும் என்ற குறிப்பும் கிடைக்கிறது. 'கொள்ளார் தேஎம் குறித்த கொற்றம்' (தொல். புறத். 12) என்ற துறைக்கு விளக்கம் எழுதும்பொது. 'இராமன் இலங்கை கொள்வதன்முன் வீடணற்குக் கொடுத்த துறையும் அது' என்று நச்சினார்க்கினியர் குறிப்பிடுகிறார் கம்பர் காலத்துப் பழைய தமிழ் இராமாயண நூல்கள் வழக்கில் இருந்து. அவற்றை அவர் பயின்றிருக்கவேண்டும். அந் நூல்களில் தமிழ்க் கவிஞர்கள் அயோத்தியின் சிறப்பைப் பாடியதை அறிந்தே கம்பர் 'கவிஞர் புகழ்ந்தது' என்று நகரப் படலத்துள் குறித்திருப்பார்.*

*ஆழ்வார்கள் அருளிச் செயல்களில் கம்பருக்குப் பெரிதும் ஈடுபாடு உண்டு என்பது யாவர்க்கும் ஏற்புடைய கருத்து. ஆழ்வார்கள் வாக்கில் பதின்மூன்று இடங்களில் அயோத்தி குறிக்கப்படுகிறது. (பெரியாழ்வார் 32. 34. 316. 321. 325. 399; குலசேகராழ்வார் 724. 725. 741. 748. தொண்டரடிப் பொடியாழ்வார் ; திருமங்கையாழ்வார் நம்மாழ்வார் 2788). இவற்றுள். எட்டு இடங்கள் அயோத்தியைப் பெயரளவில் குறிக்கின்றன. ஏனைய ஐந்தும் சுருக்கமான விளக்கம் தந்து அயோத்தியை ஒருவாறு சிறப்பிக்கின்றன. தேர் அணிந்த அயோத்தி (321). அங்கண் நெடுமதிள் புடைசூழ் அயோத்தி என்னும் நகரம் (741). அம்பொன் நெடுமணிமாட அயோத்தி (748). தவளமாடம் நீடு அயோத்தி ). நற்பால் அயோத்தி (2788). அருளிச் செயல்களில் அயோத்தி பற்றிய குறிப்புகள் இவ்வளவே. மறைந்து போன -கம்பர் கண்டிருக்கக் கூடிய -தமிழ் இராமாயணங்களில் விரிவான வருணனை இருந்திருக்க வேண்டும்.*

*வடமொழியில் கம்பர் குறித்த மூவர் இராமாயணங்களில் வான்மீகம் ஒன்றே கிடைப்பது. அதில் அயோத்தி வருணனை உண்டு. "அந்த நாட்டின் (கோசலம்) தலைநகரம் அயோத்தி. மனு என்னும் புகழ்பெற்ற சூரியகுல அரசனால் நிர்மாணிக்கப்பட்ட நகரம். மிக்க அழகும் புகழும் பெற்ற நகரம்.*

*வால்மீகி வருணித்திருப்பதைப் படித்தால். தற்கால ராஜதானி நகரங்களுக்கு எந்த விதத்திலும் அயோத்தி குறைந்ததாகத் தோன்றவில்லை" என்ற கணிப்பு வான்மீகர் புகழ்ந்த அயோத்தியை விளக்கப் போதுமானது. (சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார்: இராமாயணம் பக். 18) அயோத்தி என்றசொல் போரால் (யுத்தத்தால்) பற்றமுடியாதது என்னும் பொருள் உடையது. மதுரை நகரத்து வாயிலைப் போருவாயில் என நக்கீரனார் குறிப்பது ஒப்பிடத்தக்கது.*

நல்ல கவிதைக்கு உரிய இயல்புகளை விளக்கும் இலக்கியக் கொள்கையைத் துலக்குவதற்கும் இலக்கியத் திறனாய்வு மேற்கொள்ளுதற்கும் தமிழ்க் கவிஞர் இயல்பினை விளக்கும் இச் செய்யுளின் முதற்பகுதி ஒரு கட்டளைக் கல்லாக அமைகிறது எனலாம். செம்மை வடிவு. இனிய ஓசை. விழுமிய நுவல் பொருட் சீர்மை: இவை நற்கவிதைக்கும் பெருங்கவிதைக்கும் இன்றியமையாதன. செப்பமான சொல்லும் இனிய ஓசையும் பயன்கொண்டு நிரப்புவது நற்பொருளிலே தான். கொச்சையும் சிதைவும் இல்லா நுட்பமான கூர்மை. விளையும் பயனால் இனிமை. இவை கவிதைச் சொற்களின் கட்டுக்கோப்பைப் புலப்படுத்துவன. செவ்விய. மதுரம் சேர்ந்த. நற்பொருளின் சீரிய. கூரிய: என்ற வினையாலணையும் பெயர்கள் இங்கே திட்ப நுட்பம் சிறந்தனவாய் இலக்கிய இயல் புலப்படுத்தும் சூத்திரங்களாய் பொலிகின்றன. சொல்லுக்கு விளக்கம் தருவாராய்க் கவிதை இயல் தெளிவுபடுத்தினார். கவிச்சக்கரவர்த்தி.

நல்ல சொல் கருத்தில் தலைகாட்டும் போதே கவிஞரின் உணர்வும் கலைத்தூண்டிலால் விரைந்து பற்றுவதை 'வவ்விய கவிஞர்' என்ற தொடர் புலப்படுத்துகிறது.

அவ் உலகம்: இதில் அகரம் சேய்மைச் சுட்டு. எட்டாத ஒன்றோ என்று கவலைப்படுமளவுக்குத் தொலைவான இலட்சியம் என்பதைச் சேய்மைச் சுட்டு விளக்குகிறது. இதன் நுட்பத்தைக் காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு பின்வருமாறு விளக்குகிறார்: "அவ்வுலகம் எனச் சேய்மைச் சுட்டாற் கூறினமையால். தவஞ்செய்யாதார் ஏற ஆதரித்தல் கூடாது என்னும் அருமை தோன்றா நின்றது. அத்தன்மையது பரமபதமே யாதலால் அவ்வுலகம் என்றதற்குப் பரமபதம் என்று பொருள் கூறப்பட்டது. அவ்வுலகத்துள்ளார் நிரதிசயாநந்திகளாதலால் வேறுலகத்தில் விருப்பம் வையாரென்பது தோன்ற அருத்தி புரிகின்றது என்றார்."

உபய விபூதி நாயகன் பூர்ண கலையோடு திவாகரனாய் அவதரித்த இடமாதலால் திரு அயோத்தியை மாநகரம் என்றார்.

எவ்வுலகமும் என்ற தொடரமைப்பு வினாப் பொருளது அன்று. 'உம்' சேர்ந்தமையால் எஞ்சாமைப் பொருட்டு.

அயோத்தி -யுத்தத்தால் பிறர் கைப் புகாதது. 'கன்னி மாமதில்' என்பதும். 'போரருவாயில்' என்பதும் இப்பொருளவே.

'புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்கம்' (97) எனவும். 'யாவர்க்கும் புகலிடமான செங்கண் மால் பிறந்து ஆண்டு அளப்பருங்காலம் திருவின் வீற்றிருந்தனன் என்றால் அங்கண்மா ஞாலத்து இந்நகர் ஒக்கும் பொன் நகர் அமரர் நாட்டு யாதோ (98) எனவும் மேல்வரும் தொடர்கள் இங்கு இணைத்து நோக்கத் தக்கன.

*யாவர்க்கும் புகலிடமான திருமாலே அவதரிக்கத் தேர்ந்த இடமாதலின் மா நகரம் என்றார். இங்கு மா என்னும் பல பொருளொடு சொல் அளவையும் பரப்பையும் குறியாமல் பெருமையை - மாண்புடமையைக் குறித்தது. புகழ்ந்தது புரிகின்றது..... அயோத்தி என வினைமுற்று இரண்டாய். அயோத்தி என்ற பெயர் கொண்டு முடிந்தது. யாவரும்: முற்றும்மை. அவ்வுலகத்தோர் என்பதில் தொக்க உம்மை உயர்வு சிறப்பும்மையாம். இழிவதற்கு: இறங்குவதற்கு இங்கே மேனிலையிலிருந்து கீழ் இறங்கி வருதல் என்னும் பொருளுடைய 'அவதாரம்' என்ற வடசொல்லுக்கு நேர்.*

***94. நிலமகள் முகமோ! திலகமோ! கண்ணோ!***
***நிறை நெடு மங்கல நாணோ!***
***இலகு பூண் முலைமேல் ஆரமோ! உயிரின்***
***இருக்கையோ! திருமகட்கு இனிய***
***மலர்கொலோ! மாயோன் மார்பில் நன் மணிகள்***
***வைத்த பொற் பெட்டியோ! வானோர்***
***உலகின் மேல் உலகோ! ஊழியின் இறுதி***
***உறையுளோ! யாது என உரைப்பாம்?***

***நிலமகள் முகமோ திலகமோ கண்ணோ*** - *(அயோத்தி நகரமானது) நிலமகளது முகமோ! முகத்திலணிந்த திலகமோ! அவளுடைய கண்களோ!:* ***நிறை நெடுமங்கல நாணோ*** - *நிறைவான நெடிய திருமாங்கலியக் கயிறோ?;* ***இலகு பூண் முலைமேல் ஆரமோ*** - *மார்பகங்களின் மேலணிந்து திகழும் மணிமாலையோ!;* ***உயிரின் இருக்கையோ*** - *அந்நில மகளின் உயிர் இருக்கும் இருப்பிடமோ?;* ***திருமகட்கு இனிய மலர்கொலோ*** - *திருமகளுக்கு வாழ்வதற்கினிய தாமரை மலரோ!;* ***மாயோன் மார்பில் நன்மணிகள் வைத்த பொற் பெட்டியோ*** - *திருமாலின் மார்பிலணியும் நல்ல மணிகள் வைக்கப்பட்ட பொன் பெட்டி தானோ!;* ***வானோர் உலகின்மேல் உலகோ*** - *விண்ணுலகினும் மேலான வைகுந்தமோ;* ***ஊழியின் இறுதி உறையுளோ*** - *யுகமுடிவில் உயிர்களெல்லாம் தங்கும் திருமாலின் திருவயிறோ?;* ***யாதென உரைப்பாம்*** - *வேறு எதுவென கூறுவோம்?*

*நிலமகளின் முகம். திலகம். கண். மங்கல நாண். ஆரம் முதலியனவாக அயோத்தி நகரத்தைப் புனைந்துரைத்தார். பெண்களும் மங்கல நாண் பெருமை தருவதாதலால் "நிறைநெடு மங்கல நாண்" என்றார். சிறந்த உறுப்பான முகத்தை முதலில் கூறினார். விண்ணுலகத்தினும் சிறந்தது பரமபதமாதலின் "வானோர் உலகின் மேலுலகோ" என்றார் அருந்தி: விருப்பம். ஒரே பொருளைப் பலவிதமாகக் கற்பித்த இப்பாடல் பலபடப் புனைவணி கொண்டது. 2 ஞாயிறும் திங்களும் இமையாமல் திரிவதற்குக் காரணம்*

***95. உமைக்கு ஒரு பாகத்து ஒருவனும். இருவர்க்கு***
***ஒரு தனிக் கொழுநனும். மலர்மேல்***
***கமைப் பெருஞ் செல்வக் கடவுளும். உவமை***
***கண்டிலா நகர்அது காண்பான்.***

***அமைப்பு அருங் காதல்அது பிடித்து உந்த.***
***அந்தரம். சந்திராதித்தர்***
***இமைப்பு இலர் திரிவர்; இது அலால் அதனுக்கு***
***இயம்பல் ஆம் ஏது மற்று யாதோ!***

***உமைக்கு ஒரு பாகத்து ஒருவனும்*** - *உமாதேவியை இடப்பாகத்திலே கொண்டிருக்கும் சிவபெருமானும்;* ***இருவர்க்கு ஒரு தனிக் கொழுநனும்*** - *பூமகள். நிலமகள் ஆகிய இருவருக்கும் ஒப்பற்ற கணவனாகிய திருமாலும்;* ***மலர்மேல்கமைப் பெருஞ்செல்வக் கடவுளும்*** - *தாமரை மலரில் பொறுமையே பெருஞ் செல்வமாகக் கொண்டு வாழும் பிரம தேவனும்;* ***உவமை கண்டிலா நகர் அது காண்பான்*** - *எனவே இவர்களே உவமை கூற முடியாத வேறு இந்நகரைக் காண்பதற்கு நகர் இல்லை என்பதால்;* ***அமைப்பு அருங் காதல் அது பிடித்துந்த*** - *தடுக்கொணாத விருப்பம் பிடித்துத் தள்ள (அதனால்);* ***அந்தரம் சந்திராதித்தர் இமைப்பிலர் திரிவர்*** - *வானத்திலே சந்திர. சூரியர்கள் இமைக்காதவர்களாகத் திரிகின்றனர்;* ***இது அலால் அதனுக்கு இயம்பலாம் ஏதுமற்றுயாதோ*** - *இதுவல்லாது அவர்கள் திரிவதற்குச் சொல்லக் கூடிய காரணம் வேறு எது?*

*சிவன். திருமால். பிரமன் ஆகிய மூவருமே அயோத்திக்குச் சமமான ஒரு நகரத்தைக் கண்டதில்லை. சந்தினும். சூரியனும் நாள்தோறும் கண்களை இமைக்காமல் வானத்திலே திரிந்து வரக் காரணம் இந்த நகரத்தைக் காண வேண்டும் என்பதே. அதுவல்லது வேறு காரணம் சொல்ல இயலுமோ என்பது கருத்து. இதுஒரு தற்குறிப்பேற்ற அணி. இருவர் திருமகளும் நிலமகளும்: கமை: பொறுமை. ஏது காரணம். அந்தரம்: வானம். ஆதித்தன்: சூரியன். படைத்தல். கத்தல். அழித்தல் ஆகிய முத்தொழில் புரியும் இம்மூவர் அறியாமல் வேறு ஒருநகர் இருப்பதற்கு இல்லை.*

*படைப்பிலேயே தனிநிலை*

***96. அயில் முகக் குலிசத்து அமரர்கோன் நகரும்.***
***அளகையும் என்று இவை. அயனார்***
***பயிலுறவு உற்றபடி. பெரும்பான்மை***
***இப் பெருந் திரு நகர் படைப்பான்;***
***மயன் முதல் தெய்வத் தச்சரும் தம்தம்***
***மனத் தொழில் நாணினர் மறந்தார்.***
***புயல் தொடு குடுமி நெடு நிலை மாடத்து***
***இந் நகர் புகலுமாறு எவனோ?***

***அயில் முக குலிசத்து அமரர் கோன் நகரும்*** - *கூர்மையான முகத்தை உடைய வச்சிரப்படை கொண்ட தேவேந்திரனது அமராவதி நகரும்;* ***அளகையும் என்று இவை*** - *குபேரனது நகரமான அளகாபுரியும் ஆகிய இரு நகரங்களையும்;* ***அயனார் பயிலுறவு உற்றபடி*** - *பிரமன் (படைத்தது) பயிற்சி பெறும்படியாகும்;* ***பெரும்பான்மை இப்பெருந் திருநகர் படைப்பான்*** - *மிகச் சிறப்புடைய இந்தப் பெருநகரைப் படைப்பதற்கு;* ***மயன்முதல் தெய்வத்தச்சரும்*** - *மயன் முதலான தேவ உலகச் சிற்பிகளும்;* ***தம்தம் மனத் தொழில் மறந்தார்*** - *தமது நினைப்பு மாத்திரத்தில் படைக்கும் தொழிலை மறந்துவிட்டவர்களாக. நாணினர் - (அயோத்தியை ஒத்த நகரைப் படைக்க இயலாமைக்கு) வெட்கமுற்று நிற்பர்;* ***புயல்தொடு குடுமி நெடுநிலை மாடத்து*** - *மேகங்களை தொடுமளவு நீண்ட மேல் நிலைகளை கொண்ட மாடங்களை உடைய;* ***இந்நகர் புகலும் ஆறு எவன்*** - *இந்த அயோத்தி மாளிகைகளின் சிறப்பைச் சொல்வது எவ்வாறு?*

*பிரமன் அயோத்தியை படைப்பதற்கு முன்பு. அமராவதி அளகாபுரியாகிய நகரங்களைப் படைத்தது முழுத் தேர்ச்சி பெற்ற பிறகே இந் நகரைப் படைக்க வேண்டுமெனக் கருதியதே காரணமாகும் என்றது தற்குறிப்பேற்ற அணியாகும்.*

### ***'புயல் தொடு குடுமி' என்றது உயர்வு நவிற்சி அணியாகும்***

*பயிலுறவு உற்ற படி: பயிற்சி செய்தவாறு. குடுமி: சிகரம். மறந்தனர் முற்றெச்சம்.*

போகத்திற்கு ஒரேஇடம்

***97. 'புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்கம்'***
***என்னும் ஈது அரு மறைப் பொருளே;***
***மண்ணிடை யாவர் இராகவன் அன்றி***
***மா தவம் அறத்தொடும் வளர்த்தார்?***
***என் அருங் குணத்தின் அவன். இனிது இருந்து. இவ்***
***ஏழ் உலகு ஆள் இடம் என்றால்.***
***ஒண்ணுமோ. இதனின் வேறு ஒரு போகம்***
***உறைவு இடம் உண்டு என உரைத்தல்?***

***'புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்கம்' என்னும்*** - *(இம்மையில்) புண்ணியம் செய்தவர்கள் (மறுமையில்) சுவர்க்கம் அடைவார்கள் என்னும்;* ***ஈது அருமறைப் பொருளே*** - *இது. வேதங்கள் கூறும் கருத்தாகும்;* ***இராகவன் அன்றி*** - *இராம பிரானை அல்லாது;* ***வேறு எவர்*** - *வேறு யார்;* ***மண்ணிடை மாதவம் அறத்தொடு வளர்த்தார்*** - *இந்த உலகத்திலே சிறந்த தவத்தை அறத்துடனே வளர்த்தவர்கள் இருக்கிறார்களா?;* ***எண் அருங் குணத்தின் அவன்*** - *நினைப்பதற்கரிய நற்குணங்களை உடைய அந்த இராமபிரான்;* ***இருந்து இவ் ஏழ்உலகு ஆள் இடம் என்றால்*** - *இருந்து இந்த ஏழுலகத்தினையும் ஆளும் இடம் (அயோத்தி) என்றால்;* ***இதனின் வேறு ஒரு போகம் உறைவு இடம்*** - *இதைவிடவும் மேலான 'இன்பம்' உள்ள இடம்;* ***உண்டு என உரைத்தல் ஒண்ணுமோ*** - *உண்டு எனக் கூறஇயலுமோ?*

*திருமால். பரமபதமாகிய மேலான இடத்தை விட்டு இங்கு வந்து அரசு செய்த இடம் என்றால் இதனினும் போகம் நுகருமிடம் வேறு ஒன்று உண்டென உணர்த்தல் இயலுமோ என்பதும் ஒரு பொருளாகும்.*

*மதங்கரது தவப்பள்ளியின் மாண்பினைச் சுட்டும்போதும் 'புண்ணியம் புரிந்தோர் வைகும் துறக்கமே போன்றது' (3699) என்று கம்பர் குறிப்பிடுவது இணைத்து உணரத்தக்கது.*

*துறக்கம் -சுவர்க்க லோகம்; எண்ண அருங்குணம் -அளவிட இயலாத கல்யாண குணங்கள்; போகம் -இன்ப நுகர்ச்சி; ஒண்ணுமோ - ஓகாரம் எதிர்மறை.*
*அமரர் நகரினும் சிறந்தது*

***98. தங்கு பேர் அருளும் தருமமும். துணையாத்***
***தம் பகைப் புலன்கள் ஐந்து அவிக்கும்***
***பொங்கு மா தவமும். ஞானமும். புணர்ந்தோர்***
***யாவர்க்கும் புகலிடம் ஆன***
***செங் கண் மால் பிறந்து. ஆண்டு அளப்ப அருங்காலம்***
***திருவின் வீற்றிருந்தனன் என்றால்.***
***அம் கண் மா ஞாலத்து இந் நகர் ஒக்கும்***
***பொன் நகர் அமரர் நாட்டு யாதோ?***

***தங்கு பேரருளும் தருமமும் துணையா*** *- தம்மிடம் தங்கிய மிகுந்த கருணையும் அறமுமே துணையாகக் கொண்டு;* ***தம்பகைப் புலன்கள் ஐந்து அவிக்கும்*** *- தமக்குப் பகையாகிய புலன்களைக் கட்டுப்படுத்துபவராகி;* ***பொங்குமா தவமும் ஞானமும் புணர்ந்தோர்*** *- மேன்மேலும் வளர்கின்ற தவத்தையும் மெய்யறிவையும் பெற்றிருக்கும் மேலோர்கள்;* ***யாவர்க்கும் புகலிடம் ஆன*** *- யாவருக்கும் அடைக்கலமாக அடையத்தக்க;* ***செங்கண்மால் பிறந்து*** *- அழகிய கண்களை உடைய திருமால் அவதரித்து;* ***ஆண்டு அளப்ப அருங்காலம்*** *- அங்கு (அயோத்தி நகரில்) அளவிட இயலாத பல காலம்;* ***திருவின் வீற்றிருந்தனன் என்றால்*** *- இலக்குமி தேவயின் (அவதாரமான சீதா பிராட்டியுடன் சிறப்போடு தங்கி இருந்தான் என்றால்;* ***அங்கண்மா ஞாலத்து*** *- அழகிய விசாலமான இவ்வுலகிலே;* ***இந்நகர் ஒக்கும் பொன்நகர்*** *- இந்த அயோத்திக்கு நிகரான அழகிய நகரம்;* ***அமரர் நாட்டு யாதோ?*** *- தேவ உலகில்தான் எது இருக்கிறது? இல்லை என்றபடி.*

*“தம் புலன்களை அடக்கி அருளும் அறமும் துணையாகச் சிறந்த தவத்தையும் மெய்ஞ்ஞானத்தையும் பெற்றிருக்கும் மேலோர்கள் புகலடைதற்குரிய இட மான திருமாலே இராமனாக அவதரித்து. அளவிலாக் காலம் அரசு புரிந்த இந்த அயோத்தி நகருக்கு நிகரான நகரம் தேவ உலகிலும் இல்லை” என்பது கருத்து. முந்தியப் பாடலில் கூறிய கருத்தினையே இப்பாடலில் வேறு விதமாகக் கூறினார். “அளப்பருங்காலம்” என்றது பதினோராயிரம் ஆண்டுகள் என்பர். புலன்கள் மெய்யறிவுக்குப் பகை யாதலின் “பகைப்புலன்” என்றார். அருளும் தருமமும் தவமும் ஞானமும் ஆகிய இவையே இறைவனை அடைதற்குரியன என்பதால் “அருளும்..........ஞானமும் புணர்ந்தோர் யாவர்க்கும் புகலிடம்” என்றர்.*
*உவமன் இலி*

***99. அரைசு எலாம் அவண; அணி எலாம் அவண;***
***அரும் பெறல் மணி எலாம் அவண;***
***புரைசை மால் களிறும். புரவியும். தேரும்.***
***பூதலத்து யாவையும் அவண;***
***விரைசுவார் முனிவர். விண்ணவர். இயக்கர்.***
***விஞ்சையர். முதலினோர் எவரும்***
***உரைசெய்வார் ஆனார்; ஆனபோது. அதனுக்கு***
***உவமைதான் அரிதுஅரோ. உளதோ!***

***அரசு எலாம் அவண*** *- எந்நாட்டு மன்னர்களும் அங்கேயே (அயோத்தியிலேயே) உள்ளனர்;* ***அணிஎலாம் அவண*** *- சிறந்த அணிகலன்களெல்லாம் அங்குள்ளன;* ***அரும்பெறல் மணிஎலாம் அவண*** *- பெறுதற்கரிய மணிகளெல்லாம் அங்குள்ளன;* ***புரசை மால் களிறும்*** *- கழுத்துக் கயிற்றை உடைய மத யானைகளும்;* ***புரவியும் தேரும்*** *- குதிரைகளும். தேர்களும் (இவை தவிர);* ***பூதலத்து யாவையும் அவண*** *- உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் அங்கு உள்ளன;* ***முனிவர் விண்ணவர் இயக்கர்*** *- முனிவர்களும். தேவர்களும். இயக்கரும்;* ***விஞ்சையர் முதலியோர் விரசுவார் என்றால்*** *- அங்கு வந்து கூடியிருப்பார் என்றால்;* ***எவரும் உரை செய்வார்*** *- எல்லோரும் (அயோத்தியையே) சிறப்பித்துப் பேசுவாராயினர்;* ***ஆன போது*** *- இப்படியான போது;* ***அதனுக்கு உவமை உளதோ*** *- அந்த நகருக்கு உவமை கூற வேறு நகர் இருக்கிறதோ?;* ***அரிது தான்*** *- (அயோத்தியின் பெருமைக்கு உவமை கூறுதல் எவருக்கும்) அரியதேயாகும்.*

*பல்வேறு நாட்டுத் தலைவர்களும் அயோத்திலேயே இருப்பர் என்றது. உலக அரசியலுக்கு அயோத்தியே தலைநகர் என்றவாறு. எங்கும் சென்று வரும் தவ வலிமை மிக்க முனிவர் முதலானோர் இதுபோன்ற ஒரு நகரம் தவம் பேண இல்லாமையால் இங்கே வந்து குவிகின்றனர். இதன் சிறப்பை என்னால் கூறுதல் இயலாது என்கிறார். புரசை: யானையின் கழுத்தில் கட்டும் கயிறு.*

*அவண: பலவின்பால் குறிப்பு வினைமுற்று. அரைசு: எதுகை நோக்கிய திரிபு. ஆக. அயோத்தியின் சிறப்பும் ஆன்மிகச் செல்வமும் கூறியவாறு. 7*
*மதிலின் மாட்சி*

***100.*** ***நால் வகைச் சதுரம் விதி முறை நாட்டி***
***நனி தவ உயர்ந்தன. பனி தோய்***
***மால் வரைக் குலத்து இனி யாவையும் இல்லை;***
***ஆதலால். உவமை மற்று இல்லை;***
***நூல் வரைத் தொடர்ந்து. பயத்தொடு பழகி.***
***நுணங்கிய நுவல அரும் உணர்வே***
***போல் வகைத்து; அல்லால். 'உயர்வினொடு உயர்ந்தது'***
***என்னலாம்- பொன் மதில் நிலையே.***

***நால்வகைச் சதுரம் விதிமுறை நாட்டி*** - *நான்கு சதுரமாகச் சிற்ப நூல் விதிப்படியே நாட்டப்பட்டு;* ***நனி தவ உயர்ந்தன*** - *மிகவும் உயர்ந்துள்ள மதில்கள் போன்ற;* **பனி தோய் மால் வரைக் குலத்தின் யாவையும் இல்லை** - *குளிர்ந்த பெரிய மலைக் கூட்டத்தின் எந்த மலையும் இங்கில்லை;* ***ஆதலால் உவமை மற்றில்லை*** - *ஆதலால் மதிலுக்கு உவமை கூற வேறு எதுவும் இல்லை;* **பொன்மதில் நிலை** - *அழகிய அந்நகரத்து மதில்களின் நிலைமை(பற்றிச் சொல்லு வோமானால்);* **நூல்வரை தொடர்ந்து** *-ஞான நூல்களின் எல்லை வரை சென்று;* **பயத்தொடு பழகி** *- கற்றறிதலோடு நில்லாமல் பயனாகப் பெற்று உணர்ந்து அவற்றின்;* **நுணங்கிய நுவலரும் உணர்வே** - *நுணுக்கமாகியதும். கூறுதற்கரியதும் ஆகிய மெய்யுணர்வையே;* **போல் வகைத்து அல்லால்** - *போன்ற தன்மை உடையதல்லாமல்;* **உயர்வினோடு உயர்ந்தது** - *அந்த மெய்யுணர்வைப் போலவே உயர்ந்தது (என்றும் கூறலாம்).*

*வலிமையும். பெருமையும். உயர்வும் உள்ள மலைகளை மதிலுக்கு உவமை சொல்லலாம் என்றால். அம்மலைகள் சதுரமாக இல்லை. எனவே. உவமை பொருந்தாது. தவிர. மதில்கள் மலைகளைவிட உயர்ந்துள்ளன. வரைக்குலம்: மலைகளின் தொகுதி. பயன்: அறம் முதலிய நால் வகைப்பயன்கள்.*

*நுணங்கிய நுவலரும் உணர்வு: நுட்பமாகிய சொல்லுதற்கு இயலாத மெய்யுணர்வு எனலாம். "உயர்வற உயர்வை" உடைய பரம்பொருளை எட்டிப் பிடிக்கும் உணர்வே மெய்யுணர்வாம். மதில் உயர்வுக்கு உணர்வை உவமை கூறியது உயர்வு நவிற்சி அணி. சிலேடை அணியும் கலந்த கலவையணி என்பதும்*

*பொருந்தும். பொன்மதில்: பொன்னாலாகிய மதில் என்பதும் பொருள். செம்பு இட்டுச் செய்த இஞ்சி' (7431) என்ற இடத்தில் மதில்களை உலோகம் கலந்து கட்டுவது உண்டு என்று குறிப்பது காண்க. இலங்கை மதில் செம்பு இட்டுச் செய்தது. அயோத்தி மதில் பொன் (தங்கம் அல்லது உலோகம்) கலந்து கட்டியது.*

*உயர்வு: உயரமுள்ள பொருளைக் குறிக்கும். ஆகுபெயர்.*

***101. மேவ அரும் உணர்வு முடிவு இலாமையினால்.***
***வேதமும் ஒக்கும்; விண் புகலால்.***
***தேவரும் ஒக்கும்; முனிவரும் ஒக்கும்.***
***திண் பொறி அடக்கிய செயலால்;***
***காவலின். கலை ஊர் கன்னியை ஒக்கும்;***
***சூலத்தால். காளியை ஒக்கும்;***
***யாவையும் ஒக்கும். பெருமையால். எய்தற்கு***
***அருமையால். ஈசனை ஒக்கும்.***

**மேவஅரும் உணர்வு முடிவு இலாமையினால் வேதமும் ஒக்கும்** - *(அம்மதியில்) அடைதற்கறிய அறிவால் எல்லை காண முடியாதபடி யிருப்பதால் வேதத்துக்கு ஒப்பாகும்.;* ***விண் புகலால் தேவரும் ஒக்கும்*** *- விண்ணுலகம் வரை சென்றிருப்பதால் தேவர்களையும் ஒத்திருக்கும்;* ***திண் பொறி அடக்கிய செயலால் முனிவரும் ஒக்கும்*** *- வலிய பொறிகளை உள்ளடக்கிய செயலால் முனிவர்களை ஒத்திருக்கும்;* ***காவலில் கலை ஊர் கன்னியை ஒக்கும்*** *- காக்கும் தொழிலால் மானை ஊர்தியாகக் கொண்ட துர்க்கையை ஒக்கும்.;* ***சூலத்தால் காளியை ஒக்கும்*** *- சூலம் ஏந்தி இருப்பதால் காளி தேவியை ஒத்துக் காணப்படும்;* ***யாவையும் ஒக்கும் பெருமையால்*** *- பெருமை மிக்க எல்லாவற்றையுமே ஒத்திருக்கும்;* ***எய்தற்கு அருமையால் ஈசனை ஒக்கும்*** *- எவரும் எளிதில் அடைய இயலாதிருப்பதால் இறைவனை ஒத்திருக்கும்.*

*வேதம் அங்கங்களாலும் உபாங்கங்களாலும் பரந்திருப்பது; முடிவு காண முடியாத தன்மையுடையது. மதிலும் பரந்திருப்பது எல்லை காண இயலாதது என்பதால் 'வேதமும் ஒக்கும்' என்றார். விண்ணுலகளவும் சென்றிருப்பதால் "தேவனை ஒக்கும்" என்றார். பொறிகளை அடக்கி வாழ்பவர் முனிவர். பலவகை இயந்திரப் பொறிகளை உள்ளடக்கிக் கொண்டிருப்பது மதில். எனவே "முனிவரை ஒக்கும்" என்றர். (பொறிகள் -சிலேடை) துர்க்கை காவல் தெய்வமாய் நின்று நகரத்தைக் காவல் புரிவது போல் மதிலும் காவல் புரிவதால் "கலையூர் கன்னியை ஒக்கும்" என்றார். கலை: மான். சூலம் முதலிய ஆயுதங்களை ஏந்தியிருப்பவள் காளிதேவி; மதிலிலும் பலவகைச் சூலங்கள் பொருத்தப்பட்டுள்ளன. எனவே. "காளியை ஒக்கும்" என்றார். பக்தியுடையோர்க்கல்லாது பிறர் அடைதற்கரியவன் பரமன் நண்புடையவர்க்கன்றிப் பிற அரசர்களாலும் அடைய முடியாதது மதில் என்பதால் "ஈசனை ஒக்கும்" என்றார்.*

*இந்தப் பாடல் சிலேடையை அங்கமாகக் கொண்டு வந்த 'உவமையணி' யாகும்.*

*மதிலின் உயர்வு. திண்மை. அருமை. அகலம் போன்றவைகளை எடுத்துரைத்துள்ளதை அறியலாம். சூலம்: இடிதாங்கி. சூலாயுதம் இடிதாங்கி போன்ற வடிவுடைய முத்தலைச் சூலத்தை ஏந்தியிருத்தலால் காளியும் ஒக்கும் என்றார். 9.*

**102. பஞ்சி. வான் மதியை ஊட்டியது அனைய**
**படர் உகிர். பங்கயச் செங் கால்.**
**வஞ்சிபோல் மருங்குல். குரும்பைபோல் கொங்கை**
**வாங்கு வேய் வைத்த மென் பணைத் தோள்.**
**அம் சொலார் பயிலும் அயோத்தி மா நகரின்**
**அழகுடைத்து அன்று என அறிவான்.**
**இஞ்சி வான் ஓங்கி இமையவர் உலகம்**
**காணிய எழுந்தது ஒத்துளதே!**

**பஞ்சி. வான்மதியை ஊட்டியது அனைய** - செம்பஞ்சுக் குழம்பைப் பூசி வெண்மையான சந்திரனை ஒழுங்கு பெற வைத்ததை ஒத்த; **படர் உகிர்** - ஒளி வீசும் நகங்களை உடைய; **பங்கயச் செங்கால்** - தாமரை போன்ற சிவந்த பாதங்களையும்; **வஞ்சி போல் மருங்குல்** - வஞ்சிக் கொடி போன்ற இடையையும்; **குரும்பை போல் கொங்கை** - தென்னங் குரும்பை போன்ற தனங்களையும்; **வாங்கு வேய் வைத்த மென் பணைத் தோள்** - வளைந்த மூங்கில் போன்ற மென்மையான பருத்த தோள்களையும் உடைய; **அம்சொலார் பயிலும்** - அழகிய சொற்களை உடைய மகளிர் நிறைந்திருக்கின்ற; **அயோத்தி மாநகரின்** - அயோத்தியாகிய சிறந்த நகரைவிட; **அழகுடைத்து அன்று என அறிவான்** - அழகுடையதோ அல்லவோ என்று அறிவதற்காகவே; **இஞ்சிவான் ஓங்கி** - அந்நகரத்து மதில்கள் ஆகாய மளவு உயர்ந்து; **இமையவர் உலகம் காணிய** - தேவர்கள் வாழும் உலகைக் காண; **எழுந்தது ஒத்து உளது** - எழுந்ததை ஒத்து உயர்ந்துள்ளது.

மதில் வானுற ஓங்கி உயர்ந்துள்ளது. அவ்வாறு உயர்ந்தமைக்குக் காரணம் வானுலகத்தைக் காணுதலே. அவ்வாறு காணுதல் கூடாதெனினும் அதனைப் பயனாகக் கூறினமையால் இது தற்குறிப்பேற்றவணி. 'அஞ்சொலார் பயிலும் அயோத்தி' என்றதால் அயோத்தி மகளிரை விட வானுலகத்து மகளிர் அழகுடையரோ அல்லரோ என்பதனை அறிய வேண்டி மதில் ஓங்கிற்று என்பது கருத்தாம்.

காணிய: காண செய்யிய என்று வாய்பாட்டு வினையெச்சம். பஞ்சி: செம்பஞ்சுக் குழம்பு. உகிர்: நகம். வஞ்சி: நீர்வஞ்சிக் கொடி. இஞ்சி: மதில். வாங்குவேய்: வளையும் தன்மையுள்ள இள மூங்கில்.

**103. கோலிடை உலகம் அளத்தலின். பகைஞர்**
**முடித் தலை கோடலின். மனுவின்**
**நூல் நெறி நடக்கும் செவ்வையின். யார்க்கும்**
**நோக்க அருங் காவலின். வலியின்.**
**வேலொடு வாள். வில். பயிற்றலின். வெய்ய**
**சூழ்ச்சியின். வெலற்கு அரு வலத்தின்.**
**சால்புடை உயர்வின். சக்கரம் நடத்தும்**
**தன்மையின். தலைவர் ஒத்துளதே!**

**கோலிடை உலகம் அளத்தலின்** - செங்கோலால் உலகத்தைக் காப்பதாலும் (அளவுகோலால் அளக்கப்படுதலாலும்); **பகைஞர் முடித்தலை கோடலின்** - பகை மன்னரின் மகுடமணிந்த தலைகளை அழிப்பதாலும் (தன்னிடமுள்ள இயந்திரங்களால் பகைவர் தலைகளைத் துணிப்பதாலும்); **மனுவின் நூல்நெறி நடக்கும் செவ்வையின்** - மனுநூல் நெறிப்படி நடக்கின்ற நேர்மையாலும் (சிற்பநூலின்படி அமைந்து நேராயிருப்பதலும்); **யார்க்கும் நோக்க அரும் காவலின்** - எவருக்கும் பார்க்க இயலாதபடி காக்கும் திறமையாலும் (எளிதில் எவரும் காண இயலாத காவல் உடையதாலும்); **வலியின் வேலொடு வாள்வில் பயிற்றலின்** - வலிமை மிக்க வேல் முதலிய படைக்கலப்பயிற்சி உடைமையாலும் (வீரர்கள் வேல் முதலிய படைக் கலங்களைப் பயில்வதாலும்); **வெய்ய சூழ்ச்சியின்** - கொடிய தந்திரம் கொண்டிருப்பதாலும்; **வெலற்கருவலத்தின்** - மற்றவர்களால் வெல்ல இயலாத வல்லமை உடையதாலும்; **சால்புடை உயர்வின்** - சிறப்பு மிக்க உயர்வுடைமையாலும்; **சக்கரம் நடத்தும் தன்மையின்** - ஆணை செலுத்தும் தன்மையாலும்; **தலைவர் ஒத்து உளது** - அந்த மதில் (சூரிய குலத்) தலைவர்களை ஒத்து இருக்கிறது.

சூரிய குலத்துத் தலைவர்களுக்கும். மதிலுக்கும் சிலேடை மூலமாக உவமை கூறியிருப்பதால் சிலேடை உவமையணியாகும். சால்புடை உயர்வு: உயரத்துக்கு இடமில்லை என்னும்படி உயர்தல். மனுநூல் நெறி நடத்தல் மன்னருக்குரியது. 'மனு' என்ற சிற்ப நூல் வல்லாரின் நெறிப்படி அமைதல் மதிலுக்கு உரியது. வெய்ய சூழ்ச்சி: வெளியோர் எளிதில் நுழைய இயலாத வாயில் முதலியவைகளைக் கொண்டிருப்பதாகும். 11

**104.** **சினத்து அயில். கொலை வாள். சிலை. மழு. தண்டு.**
**சக்கரம். தோமரம். உலக்கை.**
**கனத்திடை உருமின் வெருவரும் கவண் கல்.**
**என்று இவை கணிப்பு இல: கொதுகின்**
**இனத்தையும். உவணத்து இறையையும்.**
**இயங்கும் காலையும். இதம் அல நினைவார்**
**மனத்தையும். எறியும் பொறி உள என்றால்.**
**மற்று இனி உணர்த்துவது எவனோ?**

***சினத்தயில் கொலைவாள்*** - சினம் மிக்க வேலும். பகைவரைக் கொல்லும் வாளும்; ***சிலை. மழு. தண்டு சக்கரம் தோமரம் உலக்கை*** - வில்லும் மழுவும் கதையும் சக்கரம் தோமரம். உலக்கை ஆகியவையும்; ***கனத்திடை உருமின் வெருவரும் கவண்கல்*** - மேகத்திலுள்ள இடியும் அஞ்சும்படியான கவண்கல்லும்; ***என்று இவை கணிப்புஇல*** - என்று கூறப்படும் படைக்கலங்கள். அளவிட முடியாதவை; ***கொதுகின் இனத்தையும்*** - கொசுக்களின் கூட்டத்தையும்; ***உவணத்து இறையை யும்*** - பறவைகளின் வேந்தனான கருடனையும்; ***இயங்கும் காலையும்*** - விரைந்து செல்லும் காற்றையும்; ***இதமல நினைவார் மனத்தையும்*** - நன்மை யல்லாதவைகளை நினைப்பவர் மனத்தினையும்; ***எறியும் பொறிஉள என்றால்*** - கொல்லவல்ல இயந்திரங்களும் அந்த மதிலில் உள்ளன என்றால்; ***மற்ற இனி உணர்த்துவது எவன்*** - மதிலின் காவலைப் பற்றி விரித்துரைக்க என்ன இருக்கிறது.

*சினத்து அயில் வீரர்களது கோபத்தை படையின் மேலேற்றிக் கூறினார். அயோத்தி நகரத்தில் மதில் பல விதமான பொறிகளைத் தன்னுள் கொண்டு. நல்ல காவலாயிருப்பதைக் கூறினார். அந்த மதிலில் அமைந்துள்ள போர்க் கருவிகள் மிகச் சிறிய உயிரையும் கொல்லும் என்பதற்குக் கொசுவையும் மிக உயரத்தில் செல்லுவனவற்றையும் அழிக்கும் என்பதற்குக் கருடனையும். உருவமற்றவைகளையும் அழிக்கும் என்பதற்காக காற்றையும் மிக விரைந்து செல்லும் காண இயலாதனவற்றையும் துணிக்கும் என்பதற்கு மனத்தையும் கூறியுள்ள நயம் கருதத்தக்கது. உலக்கை: இரும்பு உலக்கை. தோமரம்: ஈட்டி. கவண்கல்: கவணெறிகல்லாகும்.*

**105. ‘பூணினும் புகழே அமையும்’ என்று. இனைய**
**பொற்பில் நின்று. உயிர் நனி புரக்கும்.**
**யாணர் எண் திசைக்கும் இருள் அற இமைக்கும்**
**இரவிதன் குலமுதல் நிருபர்-**
**சேணையும் கடந்து. திசையையும் கடந்து.-**
**திகிரியும். செந் தனிக் கோலும்.**
**ஆணையும் காக்கும்; ஆயினும். நகருக்கு**
**அணி என இயற்றியது அன்றே.**

***‘பூணினும் புகழே அமையும்’ என்று*** - அணிகலன்களை விடப் புகழே சிறந்த அணிகலமாக அமையும் என நினைத்து; ***இனைய பொற்பில் நின்று உயிர் நனி புரக்கும்*** - இத்தகைய நல்லொழுக்கத்தில் நின்று நாட்டு மக்களைக் காப்பவரான; ***யாணர் எண்திசைக்கும் இருளறு இமைக்கும்*** - அழகிய எட்டுத் திசைகளிலும் உள்ள இருள் நீங்கும்படி ஒளிர்கின்ற; ***இரவிதன் குலமுதல் நிருபர்*** - சூரிய குலத்தில் தோன்றிய அரசர்களின்; ***திகிரியும் செந்தனிக்கோலும் ஆணையும்*** - ஆணையாகிய சக்கரமும் செங்கோலும் கட்டளையும்; ***சேணையும் கடந்து திசையையும் கடந்து காக்கும்*** - மேலுலகத்தையும் திசைகளையும் கடந்து சென்று காக்கவல்லது எனவே; ***ஆயினும் நகருக்கு அணியென இயற்றியது அன்றே*** - ஆனாலும் அந்த மாநகருக்கு அழகு செய்ய அமைந்தது அம்மதில் மட்டுமே.

*ஆபரணங்கள் தரும் அழகு பெரிதன்றோ; புகழே சிறந்தது' என்பது சூரிய குலத்து அரசர்களின் கருத்து. அவர்களின் குல முதல்வனாகிய சூரியனும் நாளும் நாளும் புதிய ஒளி வீசி இருள் தீர்ப்பவன். (ஒளி என்ற சொல்லுக்குப் புகழ் என்ற பொருளும் உண்டு). உலகு எங்கும் புகழ் பரப்பி ஆள்பவர்கள் சூரிய குல மன்னர்; ஆதலின். அவர்கள் யாரொடும் பகை கொள்ளார். எனவே. அயோத்தி நகரில் மதில் பாதுகாப்புக்கு அன்று; அழகுக்கே - இப்பாடலின் கருத்து இது. (யாரோடும் பகை கொள்ளலன் என்றபின் போர் ஒடுங்கும் புகழ் ஒடுங்காது என்ற வசிட்டர் கருத்தொடு (1419) ஒப்பிட்டு உணரத்தக்கது.*

*யாணர் என்னும் சொல் புதிய வரவு. அழகு முதலான பலபொருள் உடையது; நாளும் புத்தழகு தருதலின் சூரியன் ஒளியைப் புதுவரவிற்று எனவும் கொள்ளலாம்.*

*திகிரி: ஆணையாகிய சக்கரம். ஆணை: கட்டளை. சேண்: மேலுலகம். யாணர்: அழகு. பொற்பு: ஒழுக்கம்.*

*அகழியின் சிறப்பு*

***106.** **அன்ன மா மதிலுக்கு ஆழி மால் வரையை***
***அலைகடல் சூழ்ந்தன அகழி.***
***பொன் விலை மகளிர் மனம் எனக் கீழ் போய்.***
***புன் கவி எனத் தெளிவு இன்றி.***
***கன்னியர் அல்குல்- தடம் என யார்க்கும்***
***படிவு அருங் காப்பினது ஆகி.***
***நல் நெறி விலக்கும் பொறி என எறியும்***
***கராத்தது;- நவிலலுற்றது நாம்.***

***நாம் நவில் உற்றது*** *- நாம் இப்போது சிறப்பித்துச் சொல்லவந்தது;* ***அகழி*** *- (அம்மதிலின் புறத்தே அமைந்த) அகழியானது;* ***அன்ன மாமதிலுக்கு*** *- மேலே கூறப்பட்ட அத்தகைய பெரிய மதிலை;* ***ஆழி மால்வரையை அலைகடல் சூழ்ந்து அன*** *- பெரிய சக்கரமான கிரியை. அலைகள் பொங்கும் பெரும்புறக்கடல் சூழ்ந்திருப்பது போலச் சூழ்ந்து;* ***பொன் விலை மகளிர் மனம் எனக் கீழ்போய்*** *- விலை மாதர்களது மனத்தைப் போல மிகக் கீழே போய்;* ***புன்கவி எனத்தெளிவின்றி*** *- இழிந்த பாடல்களைப் போல தெளிவு இல்லாமல்;* ***கன்னியர் அல்குல் தடம் என*** *- கன்னியரின் அல்குலினிடம் போல;* ***யார்க்கும் படிவரும் காப்பினது ஆகி*** *- எவருக்கும் நெருங்க இயலாத காவலை உடையதாய்;* ***நல் நெறி விலக்கும் பொறி என எறியும் கராத்தது*** *- நல்ல நெறியில் செல்ல விடாமல் தடுக்கும் ஐம்பொறிகளைப் போன்றதாகிய எதிரிகளைத் தாக்கும் முதலைகளை உடையது.*

*இது முதல் ஏழு பாடல்கள் அகழியின் சிறப்பைக் கூறுவனவாய் உயர்ந்து வளைந்துள்ள மதிலுக்குச் சக்கரவாள மலையும். அகழிக்குப் பெரும்புறக் கடலும் உவமைகளாகும். அகழியின் ஆழம் எவர்க்கும் முற்றாக உணரமுடியாது; எதுபோல் எனின் விலைமகளிர் மனக்கருத்து அறியமுடியாதது போல். ஆழமாகத் தெளிவின்மையால் புல்லறிவாளர் கவியும் அகழிக்கு உவமையாயிற்று. பொறிகள் வயபட்ட மனம் நன்னெறியில் செல்லாது தீநெறியில் செல்லும்; அதுபோல விரைந்து பாய்வன முதலைகள் என்கிறார். கராம்: முதலை. படிவு: தோய்தல்.*

*(ஒப்பு) பிரபுலிங்க லீலை மாயையின் உற்பத்திகதி. பா. 14* **எழுசீர் சந்த விருத்தம்**

***107.*** ***ஏகுகின்ற தம் கணங்களோடும்***
***எல்லை காண்கிலா.***
***நாகம் ஒன்று அகன் கிடங்கை***
***நாம வேலை ஆம் எனா.***
***மேகம். மொண்டு கொண்டு எழுந்து.***
***விண்தொடர்ந்த குன்றம் என்று.***
***ஆகம் நொந்து நின்று தாரை***
***அம் மதிற்கண் வீசுமே.***

***தம் கணங்களோடும் ஓடுகின்ற மேகம்*** *- தம் கூட்டத்துடனே செல்லும் மேகங்கள்;* ***எல்லை காண்கிலா நாகம் ஒன்று அகன கிடங்கை*** *- எல்லை காண இயலாத. நாக லோகம்வரை ஆழ்ந்துள்ள பரந்த அகழியை;* ***நாம வேலை ஆம் எனா*** *- அச்சத்தைத் தரும் கடலாகும் எனக் கருதி;* ***மொண்டு கொண்டு எழுந்து*** *- நீரை முகந்து கொண்டு எழுந்து;* ***விண் தொடர்ந்த குன்றம் என்று*** *- அம்மதிலை வானளவும் உயர்ந்த மலை என்று கருதி;* ***ஆகம் நொந்து நின்று*** *- உடல் வருந்தி அம்மதிலின் மீது நின்று;* ***தாரை அம்மதிற்கண் வீசுமே*** *- மழைத் தாரையை அம் மதிலின்மீது பொழியும்.*

*மேகம். அகழியைக் கடல் என்று மயங்கி. அதன் நீரை மொண்டு மதிலை மலையென மயங்கி நின்று - மழை பொழியும் என்பதால் மயக்கவணியாகும். அகழியின் அகலமும் ஆழமும் மலையின் உயரமும் கூறப்பட்டது.*

*நாம்: அச்சப் பொருளைத் தரும் உரிச்சொல். அ: சாரியை பெற்று நாம என நின்றது.* *15*

***108.*** ***அந்த மா மதில் புறத்து. அகத்து***
***எழுந்து அலர்ந்த. நீள்***
***கந்தம் நாறு பங்கயத்த கானம்.***
***மான மாதரார்***
***முந்து வாள் முகங்களுக்கு உடைந்து***
***போன மொய்ம்பு எலாம்***
***வந்து போர் மலைக்க. மா***
***மதில் வளைந்தது ஒக்குமே.***

***அந்தமா மதில் புறத்து*** - *அந்தப் பெரிய மதிலின் வெளிப்புறமுள்ள;* ***அகத்து எழுந்து அலர்ந்த*** - *அகழியிலே தோன்றி மலர்ந்துள்ள;* ***நீள் கந்தம் நாறும் பங்கயத்த கானம்*** - *மிகுந்த மணம் வீசும் தாமரைக் காடு;* ***மாதரார் வாள் முகங்களுக்கு*** - *பெருமை யுடைய அந்தப்புரத்துப் பெண்களின் ஒளியுடைய முகங்களுக்கு;* ***முந்து உடைந்து போன*** - *முன்பு தோற்றுப் போனமையால்;* ***மொய்ம்பு எலாம் வந்து*** - *மீண்டும் மிக்க வலிமை கொண்டு வந்து;* ***போர் மலைக்க மாமதில் வளைந்தது ஒக்கும்*** - *போர்புரிவதற்கு அந்த மதிலை வளைத்துக் கொண்டிருப்பதை ஒக்கும்.*

*மாநகரின் மதிலைச் சூழ்ந்திருக்கும் அகழியிலே மலர்ந்துள்ள தாமரை மலர்கள் - அந்தப்புரத்து பெண்களின் முகங்களுக்குத் தோற்று - மீண்டும் வலிமை பெற்றுப் போர் செய்ய அந்த மதிலை வளைத்திருப்பதை ஒத்திருக்கும். இது தன்மைத் தற்குறிப்பேற்றவணி. அயோத்தி நகரத்துப் பெண்களின் அழகைச் சிறப்பித்து இவ்வாறு கூறினார். அகத்து: அகழியினிடத்து. மானம்: பெருமை.*

***109.*** ***சூழ்ந்த நாஞ்சில் சூழ்ந்த ஆரை சுற்றும்***
***முற்று பார் எலாம்***
***போழ்ந்த மா கிடங்கிடைக் கிடந்து***
***பொங்கு இடங்கர் மா.-***
***தாழ்ந்த வங்க வாரியில். தடுப்ப***
***ஒணா மதத்தினால்.***
***ஆழ்ந்த யானை மீள்கிலாது***
***அழுந்துகின்ற போலுமே.***

***சூழ்ந்த நாஞ்சில் சூழ்ந்த ஆரை*** - *ஆய்ந்து கட்டப்பட்ட நாஞ்சில் முதலிய உறுப்புகளை உடைய நகரைச் சுற்றிலும் உள்ள அந்த மதிலின்;* ***சுற்றும் முற்று பாரெலாம்*** - *சுற்றிலும் நிறைந்திருக்கும் பாறைகளையெல்லாம்;* ***போழ்ந்து மா கிடங்கிடை*** - *பிளந்து அமைக்கப்பட்ட அந்தப் பெரிய அகழியிலே;* ***கிடந்து பொங்கு இடங்கர்மா*** - *தங்கி மேலே எழும் முதலைகள்;* ***தாழ்ந்த வங்க வாரியில்*** - *ஆழமானதும். கப்பல்களை உடையதும் ஆகிய கடலிலே;* ***தடுப்ப ஒணா மதத்தினால்*** - *தடுக்க இயலாத மதத்தினாலே;* ***ஆழ்ந்த யானை மீள் இலாது*** - *உள்ளே அழுந்திய யானை மீள முடியாமல்;* ***அழுந்துகின்ற போலும்*** - *அமிழ்ந்து எழுவன போலக் காணப்பெறும்.*

*அகழியிலே முதலைகள் ஆழ்ந்து எழுவதற்கு. கடலிலே யானைகள் ஆழ்ந்து எழுவதை உவமை கூறினார். கருமை. வலிமை. பருமை இவைகளால் முதலைக்கு யானை பண்புவமை. நாஞ்சில்: ஏப்புழை என்னும் மதிலின் உறுப்பு. முற்றும்: நிறைந்திருக்கும் பார்: பாசறை "பாருடைத்த குண்டகழி" என்பது புறநானூறு. 14.மா: பொதுவாக விலங்குகளைக் குறிக்கும் இச்சொல். நீரில் வாழும் உயிர்களையும் பறவைகளையும் குறிப்பதுண்டு.* *17*

***110.*** ***ஈரும் வாளின் வால் விதிர்த்து.***
***எயிற்று இளம் பிறைக் குலம்***

**பேர மின்னி வாய் விரித்து.**
**எரிந்த கண் பிறக்கு தீச்**
**சோர. ஒன்றை ஒன்று முன்**
**தொடர்ந்து சீறு இடங்கர் மா.-**
**போரில் வந்து சீறுகின்ற போர்**
**அரக்கர் போலுமே.**

***ஈரும் வாளின் வால் விதிர்த்து*** -அறுக்கும் ரம்பம் போன்ற வாலை அசைத்து; ***எயிற்று இளம் பிறைக் குலம்*** - பற்களாகிய பிறைக் கூட்டம்; ***பேரமின்னி வாய் விரித்து*** - ஒளி வீசுமாறு வாயைத் திறந்துகொண்டு; ***எரிந்த கண் பிறங்கு தீ சோர*** - பிரகாசிக்கும் கண்கள் தீப்பொறி சிதற; ***ஒன்றை ஒன்று முன் தொடர்ந்து*** - ஒன்றை மற்றொன்று முந்திச் சென்று; ***சீறு இடங்கர்மா*** - சீறுகின்ற முதலைகள்; ***போரில் வந்து சீறுகின்ற போர் அரக்கர் போலுமே*** -போர்க்களத்தே வந்து ஒருவருடன் ஒருவர் சினந்து போர் புரியும் அரக்கர்களை ஒத்திருக்கும்.

*முதலைகள் சீற்றம் கொண்டு ஒன்றை ஒன்று தாக்கிக் கொள்வது போர்க்களத்திலே சினந்து போர் புரியும் அரக்கர்களை ஒத்திருக்கும் என்றார். பல என்பதால் பிறைக்குலத்தை உவமை கூறினார். வாலுக்கு ஈர்வாள் உவமை. வாள் இங்கே ரம்பத்தைக் குறித்தது.*

***111.*** **ஆளும் அன்னம் வெண் குடைக்**
**குலங்களா. அருங் கராக்**
**கோள் எலாம் உலாவுகின்ற**
**குன்றம் அன்ன யானையா.**
**தாள் உலாவு பங்கயத்**
**தரங்கமும் துரங்கமா.**
**வாளும். வேலும். மீனம் ஆக.**
**மன்னர் சேனை மானுமே.**

***ஆளும் அன்னம் வெண்குடைக் குலங்களா*** - அங்குத் திரியும் அன்னங்கள் வெண்குடைக் கூட்டங்களாகவும்; ***அருங்கராக் கோளெலாம் உலாவுகின்ற குன்றம் அன்னயானையா*** - உலாவித் திரியும் மலை போன்ற யானைகளாகவும்; ***தாள் உலாவு பங்கயத் தரங்கமும் துரங்கமா*** - தாளுடன் அசையும் தாமரையை உடைய அலைகளே குதிரைகளாகவும்; ***மீனம் வாளும் வேலுமா*** - மீன்களே வாளும் வேலுமாகவும்; ***மன்னர் சேனை மானும்*** - அரசரின் படைகளை ஒத்திருக்கும். அன்னங்களே வெண் குடையாகவும். முதலைகள் யானைகள். அலைகள் குதிரகள் - மீன்கள் வாளும் வேலுமாக விளங்கி அகழியானது மன்னர் சேனை போன்றிருந்தது என்கிறார். உருவக அணியை அங்கமாக உடைய உவமை அணி.

*-indent: 30">துரங்கம் - வேகமாகச் செல்வது. எனவே குதிரையாகும். தரங்கம் - அலை.*

***112.   விளிம்பு சுற்றும் முற்றுவித்து வெள்ளி***
***கட்டி. உள்ளுறப்***
***பளிங்கு பொன்-தலத்து அகட்டு***
***அடுத்துறப் படுத்தலின்.***
***'தளிந்த கல்-தலத்தொடு. அச்***
***சலத்தினை. தனித்துறத்***
***தெளிந்து உணர்த்துகிற்றும்' என்றல்***
***தேவராலும் ஆவதே?***

***விளிம்பு சுற்றும் வெள்ளிக்கட்டி முற்றுவித்து*** - *அந்த அகழியின் ஓரம் முழுவதும் வெள்ளியினாலே கட்டி முடித்து;* ***உள்ளுறப் பளிங்கு பொன்தலத்து அகட்டு அடுத்துறப்படுத்தலின்*** - *உள்ளிடமெல்லாம் பளிங்குக் கற்களைத் தள வரிசையாகப் பதித்திருப்பதாலே;* ***'தளிந்த கல்தலத்தொடு*** - *பளிங்குக் கல்லால் தளவரிசை இடப்பட்ட நிலத்தோடு;* ***அச்சலத்தினை*** - *அந்த அகழியின் தெளிந்த தண்ணீரை;* ***தனித்துறத் தெளிந்து உணர்த்துகிற்றும்' என்றல்*** - *தனியாக வேறு பிரிந்து இது நீர் இது பளிங்கு என்று தெளிவாகப் பிறர்க்கு உணர்த்துவோம் என்று சொல்வது;* ***தேவராலும் ஆவதோ*** *-தேவர்களாலும் இயலாததொன்றாகும்.*

*அகழியின் விளிம்பு வெள்ளி - தளம் பளிங்கு; தெளிந்த நீர் எனவே நீருக்கும் பளிங்குக் கற்களுக்கும் வேறுபாட்டை அறிவது தேவர்களாலும் ஆகாதது என்பது கருத்து. இங்கே அகழியின் நீர் தெளிவாக இருப்பதாகக் குறிப்பவர் முன்னே (106) கலங்கியிருப்பதாகக் குறித்திருக்கிறார்.*

*அகழியை வளைத்த சோலை*

***113.   அன்ன நீள் அகன்***
***கிடங்கு சூழ்கிடந்த ஆழியைத்***
***துன்னி. வேறு சூழ்கிடந்த தூங்கு.***
***வீங்கு. இருட் பிழம்பு***
***என்னலாம். இறும்பு சூழ்கிடந்த***
***சோலை. எண்ணில். அப்***
***பொன்னின் மா மதிட்கு உடுத்த***
***நீல ஆடை போலுமே.***

***அன்ன நீள் அகன் கிடங்கு*** - *அத்தகைய நீண்ட. பரந்த அகழியை;* ***சூழ்கிடந்த ஆழியை*** - *சுற்றிக் கிடந்த சக்கரவாள மலையை;* ***துன்னி வேறு சூழ் கிடந்த*** - *நெருங்கி வேறாகச் சூழ்ந்து கொண்டிருக்கும்;* ***தூங்கு வீங்கு இருட்பிழம்பு*** - *அசையாது. மிகுந்திருக்கும் இருள் கூட்டமோ;* ***என்னலாம் இறும்பு*** - *என்று சொல்லத்தக்க காடு போன்று;* ***சூழ்கிடந்த சோலை எண்ணில்*** - *சூழ்ந்திருக்கும் சோலையை நினைத்தால்;* ***அப்பொன்னின் மா மதிட்கு*** - *அந்த அழகிய மதிலுக்கு;* ***உடுத்த நீல ஆடை போலும்*** - *உடுத்திய நீல ஆடையைப் போலத் தோன்றும்.*

*நகரைச் சுற்றியிருக்கும் மதில் சக்கரவாள மலை; அதனைச் சுற்றியிருக்கும் அகழி. பெரும் புறக்கடல் - அகழியைச் சூழ்ந்திருக்கும் காவற் காடு. மிகுந்து பரவிய இருள் கூட்டம். இது தன்மைத் தற்குறிப்பேற்றவணி. காடு பொன் மதிலுக்கு உடுத்திய நீல ஆடை போலக் காணப்பட்டது என்பதும் தற்குறிப்பேற்றம். கிடங்கு: அகழி. இறும்பு: செயற்கைக் காடு. இதனை 'மிளை' என்னும் காவற்காடென்பர். நீல ஆடை கண்ணெச்சில் (கண்ணேறு) படாமைக்குச் சுட்டப்பட்டது என்ப.*
*வாயில் காடு*

***114.** **எல்லை நின்ற வென்றி யானை என்ன***
***நின்ற; முன்னம் மால்.***
***ஒல்லை. உம்பர் நாடு அளந்த***
***தாளின் மீது உயர்ந்தவால்-***
***மல்லல் ஞாலம் யாவும்***
***நீதி மாறுறா வழக்கினால்***
***நல்ல ஆறு சொல்லும் வேதம் நான்கும்***
***அன்ன- வாயிலே.***

***வாயில்** - அயோத்தி நகரத்துக் கோபுர வாயில்கள் (நான்கும்); **எல்லை நின்ற வென்றியானை என்ன நின்று** - நான்கு திசைகளிலும் நிற்கும் திக்கு யானைகள் என்னும்படி நின்றன (அன்றியும்); **மால் முன்னம் ஒல்லை உம்பர் நாடு அளந்த தாளின்** - திருமால் வாமனனாகவந்து விரைவாக திருவிக்கிரமனாகி விண்ணுலகத்தை அளந்த திருவடியைவிட; **மீது உயர்ந்தவால்** - மேலும் வாயில்கள் உயர்ந்து நின்றன; **மல்லல் ஞாலம் யாவும்** - வளம் நிறைந்த உலகத்தவரெல்லாம்; **நீதி மாறுறா வழக்கினால்** - நீதி தவறாது நடக்கச் செய்வதால்; **நல்ல ஆறு சொல்லும்** - நல்ல நெறிகளைக் கூறும்; **வேதம் நான்கும் அன்ன** - நான்மறைகளையும் ஒத்திருந்தன.*

*திக்கு யானைகள் தமக்குரிய எல்லையில் நிலைபெயராது நிற்பது போல நகரின் நான்கு திசைகளிலும் உள்ள கோபுர வாயில்கள் காணப்பட்டன. அவற்றின் உயரத்தைக் குறிப்பிட. விண்ணுலகை அளந்த திருமாலின் திருவடிகளை விடவும் உயர்ந்திருந்தன என்றார். செங்கோலின் சிறப்பால் நீதி தவறாது காத்தலின். நன்னெறி கூறும் நான்மறை போன்றது என்றார்.*

*மல்லல்: வளம். நல்ல ஆறு: நல்ல நெறி. ஆல்: அசை.*

***115.* தா இல் பொன் - தலத்தின். நல்**
**தவத்தினோர்கள் தங்கு தாள்**
**பூ உயர்த்த கற்பகப் பொதும்பர்**
**புக்கு ஒதுங்குமால்-**
**ஆவி ஒத்த அன்பு சேவல்**
**கூவ வந்து அணைந்திடா**
**ஓவியப் புறாவின் மாடு**
**இருக்க ஊடு பேடையே.**

**ஆவி ஒத்து சேவல் கூவ** - *தனது உயிருக் கொப்பான ஆண் புறாவானது கூவி அழைக்கவும்;* **அன்பின் வந்து அணைந்திடாது** - *அன்புடன் வந்து தழுவிக் கொள்ளாமல்;* **ஓவியப் புறாவின் மாடு இருக்க** - *அந்த வாயிலின் புறத்தே சித்திரத்தில் அமைந்துள்ள பெண் புறாவின் பக்கம் (ஆண் புறாஉடன்);* **இருந்ததால் ஊடுபேடை** - *ஊடல்கொண்ட பெண்புறா;* **தாஇல் பொன்தலத்தில்** - *குற்றமற்ற தேவ உலகிலே;* **நல்தவத்தினோர்கள் தங்கு** - *நல்ல தவம் செய்தவர்கள் தங்கியுள்ள;* **தாள் பூவுயிர்த்த** - *தாளை உடையதும் மலர்கள் பூத்திருப்பதுமான;* **கற்பகப் பொதும்பர் புக்கு ஒதுங்குமால்** - *கற்பகச் சோலையிலே சென்று மறைந்திருக்கும்.*

*கோபுர வாயிலில் வாடும் ஆண்புறா. ஓவியப் புறாவை உண்மை என நினைத்து அதன் அருகிருக்கும் அதனைக் கண்டு ஊடிய பெண்புறா விண்ணுலகத்தின் கற்பகச் சோலையிலே புகுந்து மறைந்திருக்கும். இது மயக்கவணி. கற்பகம்: நினைத்ததைத் தருவது. சந்தானம். மந்தாரம். பாரிசாதம். கற்பகம். அரிசந்தனம் என்ற ஐவகை மரங்கள் நிறைந்திருப்பது இச்சோலை என்பர். தாவில்: குற்றமில்லாத. தாள்: அடி நாளமும் ஆம்.*

*எழுநிலை மாடம்*

***116.* கல் அடித்து அடுக்கி. வாய் பளிங்கு**
**அரிந்து கட்டி. மீது**
**எல்லுடைப் பசும் பொன் வைத்து.**
**இலங்கு பல் மணிக் குலம்**
**வில்லிடக் குயிற்றி. வாள்**
**விரிக்கும் வெள்ளி மா மரம்**
**புல்லிடக் கிடத்தி. வச்சிரத்த**
**கால் பொருந்தியே.**

**கல் அடித்து அடுக்கி** - *மணிக்கற்களைச் செதுக்கி அடுக்கிச் சுவரெழுப்பி;* **வாய்ப்பளிங்கு அரிந்து கட்டி** - *முன்புறம் பளிங்குக் கற்களை அறுத்துக் கட்டி;* **மீது எல்லுடை பசும் பொன் வைத்து** - *அதன்மேலே ஒளிவீசும் பொன்தகடு வேய்ந்து;* **இலங்கு பன்மணிக் குலம் வில்லிடக் குயிற்றி** - *விளங்குகின்ற பலவகை மணிகளை ஒளிவீசும்படி (பொன்தகட்டில்) பதித்து;* **வாள் விரிக்கும் வெள்ளி மாமரம் புல்லிடக் கிடத்தி** - *ஒளியை பரப்புகின்ற வெள்ளியால் ஆன விட்டத்தை அதன் மீது பொருந்துமாறு வைத்து;* **வச்சிரத்த கால் பொருத்தி** - *வைரத் தூண்களை அதன்மேலே நாட்டி.*

*இது முதல் மூன்று பாடல்கள் குளகம். "குளகம் பல பாட்டு ஒருவினை கொள்ளும்" என்றபடி மௌலி சூட்டி அன்னவே என்ற மூன்றாம் பாட்டில் பொருள்முற்றுப் பெரும்.*

*கல்: மணிக்கல். அதனைச் செம்மையுறச் செதுக்கிச் சுவர் எழுப்பப்பட்டுள்ளது. அதற்கு முன்புறம் பளிங்குக் கற்களை அளவுற அறுத்துக்கட்டி அதன் மேலே பென்தகடு வேய்ந்து அந்தத் தகட்டிலே பலவகை மணிகளைப் பதித்து - வெள்ளக் கை மரத்தைப் பொருததும்படி - வைத்து வைரத்தூண் நிறுத்தி என்பது கருத்து.*

***117.*** **மரகதத்து இலங்கு போதிகைத்**
**தலத்து வச்சிரம்**
**புரை தபுத்து அடுக்கி. மீது பொன் குயிற்றி.**
**மின் குலாம்**
**நிரை மணிக் குலத்தின் ஆளி நீள்**
**வகுத்த ஒளிமேல்**
**விரவு கைத்தலத்தின் உய்த்த**
**மேதகத்தின் மீதுஅரோ**

***மரகதத்து இலங்கு போதிகைத் தலத்து*** *- மரகதத்தால் செய்த விளங்கு போதிகைக் கட்டைகளின்;* ***வச்சிரம் புரைதபுத்து அடுக்கி*** *- வைரக் கற்களைக் குற்றமகற்றி அடுக்கி வைத்த;* ***மீது பொன் குயிற்றி*** *- மேலே பொன்தகட்டை வைத்து;* ***மின்குலாம் நிரைமணிக் குலத்தின் வகுத்த*** *- மின்னல் போல விளங்கும் வரிசையான இரத்தினத் தொகுதியால் ஆகிய;* ***நீள் ஆளி ஒளி மேல்*** *- நீண்ட சிங்க உருவின் வரிசை மீது;* ***விரவு கைத்தலத்தின் உய்த்த*** *- ஒழுங்கு பொருந்திய கைமரமாக வைக்கப்பட்ட;* ***மேகத்தின் மீது*** *- கோமேதத்தின்மேலே*

*முன்பாட்டில் கூறிய வைரத்தூண்களின் மீது மரகதத்தாலான போதிகைகளை அமைத்து வச்சிரக் கற்களை வரிசையாக அடுக்கிப் பதித்து - அதன் மேலே பலவகை மணிகளைப் பதித்துச் செய்யப்பட்ட சிங்க வடிவங்களை அழகுக்காக வைத்து அதன் மேல் கோமேதகக் கைகளை அமைத்துத் தளப்படுத்தி என்பது கருத்து. ஒளி: வரிசை. ஆளி: சிங்கம். மேதகம்: கோமேதகம். மின்குலம்: மின்னற் கூட்டம். புரை தபுத்து: குறை நீக்கி.*

***118.*** **ஏழ் பொழிற்கும் ஏழ் நிலத்தலம்**
**சமைத்ததென்ன. நூல்.**
**ஊழ் உறக்குவித்து அமைத்த உம்பர்**
**செம்பொன் வேய்ந்து. மீச்**
**சூழ் சுடர்ச் சிரத்து நல் மணித்**
**தசும்பு தோன்றலால்.**
**வாழ் நிலக்குலக் கொழுந்தை**
**மௌலி சூட்டியன்னவே.**

***ஏழ்பொழிற்கும் ஏழ் நிலத்தலம் சமைத்ததென்ன*** - ஏழு மேலுலகத்தவருக்கும் ஏழு இடங்களை ஏற்படுத்தி வைத்தது போல (ஏழு கிளைகள்); ***நூல் ஊழ் உறக் குறித்து அமைத்த*** - சிற்ப நூல் விதிப்படி ஆராய்ந்து அமைத்தனவான கோபுரங்கள்; ***உம்பர் செம்பொன் வேய்ந்து*** - மேலே செம்பொன் தகடு வேயப்பட்டு; ***மீ சூழ் சுடர்ச் சிரத்து*** - மேலுலகிலே சென்று ஒளிரும் சிகரத்திலே; ***நல் மணித் தசும்பு தோன்றலால்*** - சிறந்த மாணிக்கக் கலசம் தோன்றுதலால்; ***வாழ் நிலக் குலக் கொழுந்தை*** - வாழுகின்ற பூமியாகிய இளம் பெண்ணை; ***மௌலி சூட்டி அன்ன*** - முடி சூட்டியது போலத் திகழும்.

*ஏழுநிலை அமைந்து. முற்றுப் பெற்ற கோபுரங்கள் கலசம் நிறுவப்பட்டு விளங்குவது. நில மகளுக்கு முடிசூட்டி அலங்கரித்தது போலத் திகழும் என்றவாறு; ஏழ் பொழில் - ஏழு மேலுலகத்தில் உள்ளவர்களைக் குறிக்கும்; நூல் - இங்கே சிற்ப நூலைக் குறித்தது; சிரத்து - சிகரத்திலே; தசும்பு- கலசம்.*

*அயோத்தி நகரத்து கோபுரங்களைப் பூமி தேவிக்குச் சூட்டிய மணிமுடியாகியச் சிறப்பிக்கும் நயம் மகிழ்தற்குரியது. மூன்றுபாடல்கள் எழுநிலைமாடச் சிறப்பைக் கூறுவனவாகும்.*

*மாளிகைகள்*

***கலிவிருத்தம்***

***119. 'திங்களும் கரிது' என வெண்மை தீற்றிய***
***சங்க வெண் சுதையுடைத் தவள மாளிகை-***
***வெங் கடுங் கால் பொார. மேக்கு நோக்கிய.***
***பொங்கு இரும் பாற்கடல்- தரங்கம் போலுமே.***

***திங்களும் கரிது என*** - சந்திரனும் கருமை நிறத்து என்று கூறுமளவுக்கு; ***வெண்மை தீற்றிய*** - வெண்மை நிறம் பொருந்தப் பூசிய; ***சங்க வெண் சுதை உடை*** - சங்கிலிருந்து செய்த வெண்ணிறச் சுண்ணாம்புச் சாந்தால் அமைந்த; ***தவள மாளிகை*** - வெள்ளை மாளிகைகள்; ***வெங்கடுங் கால் பொர*** - கடுமையான பெருங்காற்று வீசுவதால்; ***மேக்கு நோக்கிய*** - மேல் நோக்கி எழுந்து; ***பொங்கு இரும்பாற்கடல்*** - பொங்கும் பெரிய பாற்கடலின்; ***தரங்கம் போலுமே*** - அலைகளைப் போலக் காணப்படும்.

*வானோங்கி உயர்ந்து விளங்கும் வெண்ணிற மாளிகைகள் கடும் காற்று வீசுவதால் மேலெழுந்து பாற்கடலின் அலைகளை ஒக்கும் என்றதால் நிறம் உயர்ச்சி இவை பற்றி வந்த தன்மைத் தற்குறிப்பேற்றவணியாகும். சுதை: சாந்து. தீற்றிய: பூசிய. தவளம்: வெண்மை. மேக்கு: மேலே. கால்பொர: காற்று மோத.*

***120. புள்ளிஅம் புறவு இறை பொருந்தும் மாளிகை.***
***தள்ள அருந் தமனியத் தகடு வேய்ந்தன.***
***எள்ள அருங் கதிரவன் இள வெயிற் குழாம்***
***வெள்ளி அம் கிரிமிசை விருந்த போலுமே.***

***தள்ள அருந் தமனியத் தகடு வேய்ந்தன*** - *நீக்குவதற்கரிய பொன் தகடுகள் மேலே வேயப்பட்டனவாகிய;* ***புள்ளி அம்புறவு இறை*** - *உடலில் புள்ளிகளை உடைய அழகிய மாடப் புறாக்கள்;* ***பொருந்தும் மாளிகை*** - *தங்கியிருக்கின்ற மாளிகைகள்;* ***வெள்ளி அங்கிரிமிசை*** - *அழகிய வெள்ளிமலையின் மீது;* ***எல்ல அரும் கதிரவன்*** - *இகழ்தற்கு அரிய சூரிய தேவனது;* ***இளவெயிற்குழாம் விரிந்தது போலும்*** - *இளையக்கதிர்கள் பரவியிருப்பது போலக் காணப்படும்.*

*வெண் சுதை பூசிய வெள்ளைநிற மாளிகைகளின் மீது. பொன் தகடு வேய்ந்து பொலிவது. வெள்ளிமலை மீது. கதிரவனின் இளங்கதிர்கள் விரிந்துகிடப்பது போன்று விளங்கியது என்கிறார். இதுவும் தற்குறிப்பேற்ற அணியாகும். புள்ளி: உடலின் மீதுள்ள அழகிய புள்ளிகள். புறவு இறை: புறாக்களுக்கு அரசன் (மாடப்புறா). தமனியம்: தங்கம். வெயிற்குழாம்: கதிர்களின் தொகுதி.*

***121. வயிர நல் கால் மிசை. மரகதத் துலாம்.***
***செயிர் அறப் போதிகை. கிடத்தி. சித்திரம்***
***உயிர்ப் பெறக் குயிற்றிய. உம்பர் நாட்டவர்***
***அயிர் உற இமைப்பன. அளவு இல் கோடியே.***

***வயிர நல்கால் மிசை*** - வயிரத்தாலாகிய நல்ல தூண்களின் மேலே; ***மரகதத் துலாம்*** - மரகதத்தாலாகிய உத்தரத்தை; ***செயிர் அறப் போதிகை கிடத்தி*** - குறையின்றிப் பொருந்துமாறு போதிகையின் மீது பொருத்தி; ***சித்தரம் உயிர் பெறக் குயிற்றிய*** - ஓவியங்கள் உயிருள்ளன போலத் தோன்றுமாறு செய்தனவும்; ***உம்பர் நாட்டவர் அயிர் உற இமைப்பன*** - தேவ நாட்டவரும் (தமது விமானமோ என) ஐயத்துடன் நோக்குவனவும் ஆகிய மாளிகைகள்; ***அளவில் கோடியே*** - அளவற்ற கோடிக் கணக்கானவையாகும்.

*அயோத்தி மாநகரின் மாளிகைகள் அளவற்றன என்கிறார். துலாம் - உத்தரக் கட்டை*

*போதிகை - தூண்களின் தலையில் பாரம்தாங்கும்படி வைக்கப்படும் கட்டை. இரு பாலும் கீழ்நோக்கிய வாழைப்பூ வடிவம் அமைந்திருக்கும். அயிர் - ஐயம்; வயிரம் - காழ்த்தல்*

***122. சந்திர காந்தத்தின் தலத்த. சந்தனப்
பந்தி செய் தூணின்மேல் பவளப் போதிகை.
செந் தனி மணித் துலாம் செறிந்த. திண் சுவர்
இந்திர நீலத்த. எண்இல் கோடியே.***

***சந்திர காந்தத்தின் தலத்த*** - *சந்திர காந்தக் கற்கள் பரப்பிய தரையை உடையனவும்;* ***சந்தன பந்தி செய்தூணின் மேல்*** - *சந்தன மரங்களான வரிசையாக உள்ள தூண்களின் மீது;* ***பவளப் போதிகை*** - *பவளத்தால் செய்த போதிகையில்;* ***செந்தனி மணித் துலாம் செறிந்த*** - *சிவந்த மாணிக்கத்தாலான உத்தரம் பொருந்திய யுள்ளனவும்;* ***திண் சுவர் இந்திர நீலத்து*** - *வண்மை மிக்க சுவர்கள் இந்திர நீலமணிகளால் அமைந்தனவுமான மாளிகைகள்;* ***எண்ணில் கோடி*** - *எண்ணமுடியாத கோடியாகும்.*

*சந்திர காந்தம்: சந்திரஒளி பட நீர் பொழியும் தன்மையுடைய கல் தலத்த. செறிந்த என்ற எச்சங்கள் தலத்தன. செறிந்தன என்று பொருள் உடைய பெயர்ச்சொற்கள். பந்தி: வரிசை.*

***123. பாடகக் கால்அடி பதுமத்து ஒப்பன.
சேடரைத் தழீஇயின. செய்ய வாயின.
நாடகத் தொழிலின. நடுவு துய்யன.
ஆடகத் தோற்றத்த. அளவு இலாதன.***

***பாடகக் காலடி*** - *வேலைப்பாடமைந்த தூண்களின் அடிப்பக்கம்;* ***பதுமத்து ஒப்பன*** - *தாமரை மலர் வடிவத்தில் அமைந்தனவும்;* ***சேடரைத் தழீஇயின*** - *கடைக்கால் ஆழத்தால் நாக உலகை தழுவியுள்ளனவும்;* ***செய்ய ஆயின*** - *வேலைப் பாட்டினால் செம்மை உடையனவும்;* ***நாடு அகம் தொழிலின*** - *யாவரும் விரும்பிக் காணும் தொழில் திறம் உடையனவும்;* ***நடுவு துய்யன*** - *நடுவிட மெல்லாம் தூய்மை உடையனவும்;* ***ஆடகத் தோற்றத்து*** - *பொன்னைப் போன்ற தோற்றமுடையனவும்;* ***அளவு இலாதன*** - *ஆகிய மாளிகைகள் அளவற்றனவாம்.*

*நாடு அகத் தொழிலின: கருதிச் செய்யப்படும் தொழில் திறம் உடையன என்றும் பொருந்தும். இப்பாடல் விலைமகளிரையும் குறிக்கும் வகையில் சிலேடையாக அமைந்துள்ளது. பாடகம் அணிந்த மகளிரின் பாதங்கள் தாமரை மலரை ஒப்பன; இளையரை (சேடர்). அணைத் திருப்பவர்; சிவந்த வாய் உடையவர்; நடனத் தொழில் அறிந்தவர்; இடுப்பு (நடுவு); பஞ்சின் (தூய்) நுனியை ஒத்தது - என்று தக்கவாறு பொருள்கொள்ள வேண்டும்.*

*பாடகம் - கால் அணி; பாடு அகம் - வேலைப்பாடு மிகுந்த.*

*ஒப்பன. தழீஇயின. வாயின. தொழிலின். துய்யன. தோற்றத்த - முற்றெச்செங்கள். தழீஇ - தழுவி (சொல்லிசை அளபெடை).*

**124. புக்கவர் கண் இணை பொருந்துறாது. ஒளி**
**தொக்குடன் தயங்கி. விண்ணவரின் தோன்றலால்.**
**திக்குற நிலைப்பினில் செல்லும் தெய்வ வீடு**
**ஒக்க நின்று இமைப்பன. உம்பர் நாட்டினும்.**

**புக்கவர்** - பார்க்கப் (புகுந்தவர்) வந்தவர்; **கண் இமை** - கண் இமைகள்; **பொருந்துறாது** - வியப்பின் மிகுதியால். மலர்ந்து விளங்குமே அல்லாது ஒன்றுடன் ஒன்று சேரா (கண் கொட்டாமல் பார்த்தனர் என்பது கருத்து); **ஒளி** - மாளிகைகளில் பதித்த இரத்தினங்களின்; பூசிய வெண்சாந்தின் ஒளி; **தொக்கு உடன் தயங்கி** - பார்ப்பவர் உடலின்மீது பாய்வதால் (எதிரொளி) அவர்கள் விளகம் பெற்று; **விண்ணவரின்** - தேவர்களைப் போல; **தோன்றலால்** - காட்சியளிப்பதாலும்; **திக்குற** - எல்லாத் திசைகளிலும்; **செல்லும்** - செல்ல வல்ல; **தெய்வ வீடு** - தெய்வீக விமானம்; **ஒக்க** - போல; **நின்று** - நிலத்தல் பதிந்து கிடக்கும்; **உம்பர் நாட்டின்** - அம்மாளிகைகளின் ஒளி வெள்ளம் தேவர் உலகத்தும் **; இமைப்பன** - சென்று ஒளி வீசுவன.

எப்போதும் ஒளி உமிழ்வதும் இயங்கும் இயல்பினவுமாய தேவ விமானங்கள் மண்ணகத்துத் தங்கிய போல் அம்மாளிகைகள் விளங்கின. அவற்றின் ஒளி காண்பார் உடல்களில் பதிவதாலும் கண் இமையாது இருத்தலாலும் அவர்களும் தேவராயினர் என்பது கருத்து.

**125. அணி இழை மகளிரும். அலங்கல் வீரரும்.**
**தணிவன அறநெறி. தணிவு இலாதன**
**மணியினும் பொன்னினும் வனைந்த அல்லது**
**பணி பிறிது இயன்றில; பகலை வென்றன.**

**அணி இழை மகளிரும்** - அழகிய அணிகலன்களை அணிந்த பெண்களும்; **அலங்கல் வீரரும்** - மாலையணிந்த மார்பினரான வீரர்களும்; **துணிவன அறநெறி** - அற நெறியினையே துணிவுடன் பற்றுவர்; **மணியினும் பொன்னினும் வனைந்து** - மணிகளாலும். பொன்னாலும் புனையப்பட்டுள்ள மாளிகைகள்; **தணிவு இலாதன** - என்றும் அறநெறிகளில் குறையாது நிறைந்திருப்பவை; **பிறிது பணி இயன்றில** - வேறுகல். மண் முதலியவைகளால் அவை கட்டப்பட்டவை அல்ல; **பகலை வென்றன** - தம் ஒளியால் சூரியனையும் வென்று விளங்குபவை.

மாளிகைகள் என்ற எழுவாய். தொடர்ச்சி நோக்கி வரவழைத்து உரைக்கப்பட்டது. பொன்னாலும். மணியாலும் இயன்றன ஆதலால் அம்மாளிகைகள் சூரியனைவிட ஒளிபொருந்தியனவாக ஒளிர்கின்றன என்கிறார். மாளிகைகளில் வாழும் மகளிரும் ஆடவரும் அறநெறியிலேயே நிற்பவர்; ஆதலின் அவர் மாளிகைகளும் அறநெறியில் தணிவு இலாதன ஆயின. புறவொளியால் கதிரவனை வென்றவை மாளிகைகள்; ஆயினும் அகவொளியாகிய அறநெறியால் சிறந்தவை. ஆக. பெருமைக்கு உரியது என்பது கவிஞர் குறிப்பு.

**126. வானுற நிவந்தன; வரம்பு இல் செல்வத்த;**
**தான் உயர் புகழ் எனத் தயங்கு சோதிய;**
**ஊனம் இல் அறநெறி உற்ற எண் இலாக்**
**கோன் நிகர் குடிகள்தம் கொள்கை சான்றன.**

**வான் உறு நிவந்தன** - *(அந்நகரத்து மாளிகைகள்) வானமளவும் உயரந்து இருப்பவை;* **வரம்பு இல்செல்வத்த** - *அளவற்ற செல்வத்தை உடையன;* **தான் உயர் புகழ்என** - *எங்கும் பரவியுயர்ந்த புகழ் என்னும்படி;* **தயங்குசோதிய** - *விளங்கும் ஒளி உடையன;* **ஊனம் இல் அற நெறிஉற்ற** - *குற்ற மற்ற அரநெறியைக் கடைப்பிடித்து வாழும்;* **கோன்நிகர்** - *அரசைனைப் போன்று வாழும்;* **எண்இலாக் குடிகள்தம் கொள்கை சான்றன** - *எண்ணிக்கை இல்லாத குடிமக்களது தன்மைக்குச் சான்றாக உள்ளனவாம்.*

*அந்நகரத்து மக்கள் ஒழுக்கத்தில் சிறந்து - அற நெறியில் நின்று அரசர்களைப் போல வசதியுடன் வாழ்வதற்கு அவர்கள் வாழும் இம்மாளிகைகளே சான்றாக விளங்குகின்றன என்பதாம்.*

*"கோன் நிகர்க்குடிகள்" அரசரைப் போல வாழும் குடிமக்கள். சான்றன சான்றாக உள்ளன புகழ் எனத்தயங்கு சோதிய புகழ் பரந்திருப்பது போல ஒளி எங்கும் பரந்திருக்கும் மாளிகைகள் என்பது கருத்து. கொள்கை -தன்மை.*

**127. அருவியின் தாழ்ந்து. முத்து அலங்கு தாமத்த;**
**விரி முகிற்குலம் எனக் கொடி விராயின;**
**பரு மணிக் குவையன; பசும் பொன் கோடிய;**
**பொரு மயில் கணத்தன;- மலையும் போன்றன.**

**அருவியின் தாழ்ந்து** - *(அம்மாளிகைகள்) நீர் அருவி போலத் தாழ்ந்து;* **அலங்கு முத்து தாமத்த** - *அசையும் முத்து மாலைகளை உடையவை;* **விரி முகில் குலம்என** - *பரந்த மேகக் கூட்டத்தை ஒத்த;* **கொடி வீராயின** - *கொடிகள் பரவியுள்ளவை;* **பருமணிக் குவையன** - *பெரிய மணிகளின் குவியல்களை உடையன;* **பசும்பொன் கோடிய** - *பசும்பொன் குவைகளை உடையன;* **பொரு மயிற்கணத்தன** - *வடிவொத்த மயில்களை உடையன.*

*'பொரு மயில் கணத்தன' என்பதற்கு உருவ அழகால் ஒத்த மயில் போன்ற மகளிர் கூட்டத்தை உடையவை என்பதும் பொருத்தமான பொருளாம்.*

*மலையும் போன்றுள்ள: மலையைப் போலவும் இருப்ப. அருவியும். முகிலும். மணியும். பொன்னும். மயிலும் மலையில் உள்ள பொருள்களாகும். அருவி போன்ற முத்து மாலைகளும் பன்மணித்திரள் பொன்குவயல் - ஆகியனவும் மாளிகைகளில் இருப்பதால் மலையை ஒத்திருந்தன என்கிறார். அலங்குதல்: அசைதல்: தாமதம்: மாலை: பருமணி: பருத்த மணிகள்: கணம்: கூட்டம்.*
*35*

*கொடிகளின் காட்சி*

***128. அகில் இடு கொழும் புகை அளாய் மயங்கின.***
***முகிலொடு வேற்றுமை தெரிகலா. முழுத்***
***துகிலொடும் நெடுங் கொடிச் சூலம் மின்னுவ;-***
***பகல் இடு மின் அணிப் பரப்புப் போன்றவே.***

***அகில் இடு கொழும் புகை அளாய் மயங்கின*** *- அகிலின் செழுமையான புகை மாளிகை எங்கும் கலந்தவைகளாய்;* ***முகிலொடு வேற்றுமை தெரிகலா*** *- மேகத்துடன் வேற்றுமை அறிய முடியாத;* ***முழுத்துகிலொடு*** *- பெரிய கொடிகளுடன்;* ***நெடுங்கொடிச் சூலம் மின்னுவ*** *- நீண்ட கொடி மரங்களின் நுனியில் நாட்டப்பட்ட சூலங்கள் ஒளிர்பவை;* ***பகல் இடு மின் அணிப் பரப்புப்போன்ற*** *- ஒளி வீசும் மின்னல் வரிசையின் பரப்பை ஒத்திருந்தன.*

*அகிற் புகையுடன் கலந்த கொடிகள் மேகத்தை ஒத்தும். அவை கட்டப்பட்ட கொடி மரத்தின் நுனியில் பொருந்திய சூலங்கள் மின்னுவது மின்னலை ஒத்தும் காணப்பட்டன. தற்குறிப்பேற்றவணி. மின் அணி: மின்னல் வரிசை. மாளிகைகளில் இடிதாங்கும் பொருட்டும் அழகுக்காகவும் சூலம் பொருத்துவர் ஒப்பு: திருச்சிற். 222*

*36*

***129. துடி இடைப் பணை முலைத் தோகை அன்னவர்***
***அடி இணைச் சிலம்பு பூண்டு அரற்று மாளிகைக்***
***கொடியிடை தரள வெண் கோவை சூழ்வன;-***
***கடியுடைக் கற்பகம் கான்ற மாலையே.***

***துடி இணைப் பணை முலை*** *- உடுக்கை போன்ற இடையினையும் பருத்த தனங்களையும் உடைய;* ***தோகை அன்னவர்*** *- மயில் போன்ற சாயலை உடைய மகளிர்;* ***அடியிணைச் சிலம்பு பூண்டு*** *- தங்கள் இரு கால்களிலும் சிலம்பு அணிந்து;* ***அரற்றும் மாளிகை*** *- அவை ஒலிக்கும்படி நடக்கும் மாளிகைகளிலே;* ***கொடியிடைத்தரளவெண் கோவை சூழ்வன*** *- கொடிகளுக்கு இடையில் முத்து மாலைகள் தொங்க விடப்பட்டுள்ளவை;* ***கழி உடை கற்பகம் கான்ற மாலையே*** *- மணம்மிக்க கற்பக மரங்களில் பூத்த மாலைகளை ஒத்திருந்தன.*

*மாளிகையின் கொடிகளிலே தொங்கவிடப்பட்ட முத்துமாலைகள். கற்பக மரத்தில் உள்ள பூமாலைகளை ஒக்கும் என்றார். இது காட்சியணி. இனி ''கொடியிடைத் தரள வெண் கோவை (அந்த மாளிகைளின் உயர மிகுதியில்) கற்பக மரத்தின் மாலைகளைச் சூழ்வன'' என்பது பொருந்தும். கடியுடைக் கற்பகம் என்பதற்குக் கற்பகச் சோலை எனவும் பொருள் கொள்ளலாம். 37*

***130. காண் வரு நெடு வரைக் கதலிக் கானம்போல்.***
***தாள் நிமிர் பதாகையின் குழாம் தழைத்தன;***
***வாள் நனி மழுங்கிட மடங்கி. வைகலும்***
***சேண் மதி தேய்வது. அக் கொடிகள் தேய்க்கவே.***

***நெடுவரை காண்வரு** - பெரிய மலைகளில் காணப்படும்; **கதலிக் கானம் போல்** - வாழை மரங்களை உடைய தோப்பைப் போல; **தாள் நிமிர் பதாகையின் குழாம் தழைத்தன** - கொடிமரங்கள் நீண்ட கொடிகளின் தொகுதி மிகுந்துள்ளன; **; சேண்மதி வாள்நனி மழுங்கிட மடங்கி** - வானத்திலுள்ள சந்திரன் தன் ஒளிமிக மழுங்கி வளைந்து; **வைகலும் தேய்வது** - நாள்தோறும் தேய்ந்து போவது; **அக்கொடிகள் தேய்க்கவே** - அந்த கொடிகள் உராய்வதன் காரணமாகத் தான்.*

*நகரத்துக் கொடிகள் பெரிய மலைகளில் காணப்படும் வாழை தோப்பை போலக் காணப்படும்; வானத்தில் உள்ள சந்திரன் ஒளி குறைந்து வளைந்து நாள்தோறும் தேய்ந்து காணப்படுவது அக்கொடிகள் சந்திரனுன் மீது உராய்வதனாலேயே என்றார். சந்திரன் தேய்பிறையில் தேய்வதற்குக் காரணம் கற்பித்துக் கூறியதால் இது ஏதுத் தற்குறிப்பேற்ற அணி. 38 மாட மாளிகைகளின் ஒளியும் மணமும்*

***131. பொன் திணி மண்டபம் அல்ல. பூத்தொடர்***
***மன்றுகள்; அல்லன மாட மாளிகை;***
***குன்றுகள் அல்லன மணி செய் குட்டிமம்;***
***முன்றில்கள் அல்லன முத்தின் பந்தரே.***

***பொன்திணி மண்டபம் அல்ல** - பொன்னால் கட்டிய மண்டபம் அல்லாதவை; **பூத் தொடர்** - மலர்களால் அமைந்த மண்டபங்களாம்; **மன்றுகள் அல்லன** - பலர் கூடுமிடமாகக் கட்டிய பொது மன்றங்கள் அல்லாதவை; **மாடம் மாளிகை** - மேன்மாடியோடு அமைந்த மாளிகைகளாம்; **குன்றுகள் அல்லன** - செய் குன்றுகள் அல்லாதவை; **மணி செய் குட்டிமம்** - இரத்தினங்களைக் கொண்டு அமைத்த முற்றங்களாம்; **முன்றில்கள் அல்லன** - முற்றங்கள் அல்லாதவை; **முத்தின் பந்தரே** - முத்துப் பந்தல்களேயாகும்.*

*அந்நகரத்தில் பொன் மண்டபங்களும். மலர்மண்டபங்களும் பொதுமன்றங்களும். செய் குன்றுகளும். மணி மேடைகளும். முத்துப் பந்தல்களும் எங்கும் காணப்பட்டன; வெற்றிடங்களே இல்லை என்கிறார். இது முதல் நான்கு பாடல்களில் மாட மாளிகைகளின் ஒளியும் மீண்டும் கூறப்படுகிறது. குட்டிமம்: முன்றில்கள் (தளவரிசை செய்த தரை). மன்று: பொது மன்றங்கள். மாடம்: உப்பரிகை. குன்று: செய்குன்று (கட்டு மலை எனவும் கூறுவர்).*

**132. மின் என. விளக்கு என. வெயிற் பிழம்பு என.**
**துன்னிய தமனியத் தொழில் தழைத்த அக்**
**கன்னி நல் நகர் நிழல் கதுவலால் அரோ.**
**பொன்னுலகு ஆயது. அப் புலவர் வானமே!**

**துன்னிய தமனியத் தொழில் தழைத்த** - உயர்ந்த பொன்னால் தொழில் திறம் அமைய கட்டப்பட்ட; **அக்கன்னி நல்நகர்** - அந்த அழிவில்லாத மா நகரின்; **மின்என விளக்கு என** - மின்னலைப் போலவும். விளக்கின் ஒளியினைப் போலவும்; **வெயில் பிழம்பு என** - சூரியக் கதிர்களைப் போலவும் உள்ள; **நிழல் கதுவலால்** - ஒளி தன் மீது படுவதனால்; **அப்புலவர் வானம் பொன் உலகு ஆயது** - அந்தத் தேவருலகு பொன் உலகாயிற்று.

அமரர் உலகம் பொன்னுலகமாய் பொலிவதற்குக் காரணம் அயோத்தி மாநகர் பொன்னால் அமைந்து. தீப ஒளி. சூரியனின் கதிர்கள் ஆகியவை போல ஒளிர்வதால் அப்பேரொளியால் தேவ உலகு பொன்னுலகாயிற்று என்றதால் ஏதுத்தற் குறிப்பேற்றவணி. அரோ ஏ : அசைகள். 40

**133. எழும் இடத்து அகன்று. இடை ஒன்றி. எல் படு**
**பொழுதிடைப் போதலின். புரிசைப் பொன் நகர்.**
**அழல் மணி திருத்திய அயோத்தியாளுடைய**
**நிழல் எனப் பொலியுமால்- நேமி வான் சுடர்.**

**நேமி வான்சுடர்** - வட்ட வடிவமாக வானில் ஒளிரும் சூரியன்; **எழும் இடத்து அகன்று** - உதிக்கின்ற காலத்திலே கிரணங்கள் விரிந்தும்; **இடை ஒன்றி** - நடுப்பகலில் மிக்கும்; **எல்படுபொழுது இடை போதலின்** - மாலையில் மறையும் காலத்திலே மீண்டும் கிரணங்கள் மறைந்தும் போவது; **அழல் மணி திருத்திய** - தீயைப் போல ஒளிரும் செந்நிறமான மாணிக்கங்களை ஒழுங்காக அமைத்த; **புரிசைப் பொன் நகர்** - வட்டமான பொன்னால் அமைந்த மதில் உடைய அந்த நகரம்; **அயோத்தியாள் உடை** - அயோத்தியாகிய பெண்ணினது; **நிழல் எனப் பொலியும்** - நிழலைப் போலக் கதிரவன் விளங்கும்.

கதிரவனுக்கு இயல்பான ஒளி இருக்குமாயின் உதய காலத்திலேயே ஒளியோடு விளங்க வேண்டும். அவ்வாறு இல்லை. மாலை நேரத்திலும் கதிரவனுக்கு ஒளி இல்லை எனவே அயோத்தி நகரத்தின் ஒளியைக் கொண்டே சூரியன் ஒளிர்கிறது. இது இச் செய்யுளின் கற்பனை. இது தற்குறிப்பேற்றவணி.

**134. ஆய்ந்த மேகலையவர் அம் பொன் மாளிகை**
**வேய்ந்த கார் அகில் புகை உண்ட மேகம் போய்த்**
**தோய்ந்த மா கடல் நறுந் தூபம் நாறுமேல்**
**பாய்ந்த தரையின் நிலை பகரல் வேண்டுமோ?**

***ஆய்ந்த மேகலையவர்*** - *நுட்ப வேலைப்பாடு அமைந்த மேகலை அணிந்த மகளிர்;* ***அம்பொன் மாளிகை வேய்ந்த*** - *தமது கூந்தலுக்கு மணமூட்ட. மாளிகைகளிலே எழுப்பிய;* ***கார் அகில் புகை உண்ட*** - *கரிய அகிற் புகையை உண்ட;* ***மேகம் போய்த் தோய்ந்த*** - *மேகங்கள் சென்று படிந்த;* ***மா கடல் நறும் தூபம் நாறு மேல்*** - *அந்தப் பெரிய கடலும் அகிலின் நறுமணம் கமழும் என்றால்;* ***பாய்ந்த தரையின் நிலை*** - *மேகங்களிலிருந்து கீழே விழும் மழைத்தாரையின் தன்மையை;* ***பகரல் வேண்டுமோ*** - *அதுவும் அகில் மணம் கமழ்கிறது எனச் சொல்லவா வேண்டும்?*

*மகளிர் எழுப்பிய அகில் புகையை உண்ட மேகங்கள் கடலில் படிவதால் கடலும் அகில் மணம் வீசுகிறது. மேகத்திலிருந்து கீழே விழும் மழைத் தாரை மணம் கமழ்வதைச் சொல்ல வேண்டுமோ என்பது கருத்து. இது தொடர் நிலைச் செய்யுட் பொருட் பேரணி.*

*ஆடல் பாடல் முதலிய விளையாட்டுகள்*

***135. குழல் இசை மடந்தையர் குதலை. கோதையர்***
***மழலை. -அம் குழல் இசை; மகர யாழ் இசை.***
***எழில் இசை மடந்தையர் இன்சொல் இன் இசை***
***பழையர்தம் சேரியில் பொருநர் பாட்டு இசை.***

***குழலிசை மட்சந்தையர் குதலை*** - *கூந்தல் வாரி முடிக்கமுடியாத நிலையில் உள்ள இளம் பெண்களின் குதலைச் சொற்கள்;* ***அம் குழல் இசை*** - *அழகிய குழலோசையை ஒத்திருக்கும்;* ***கோதையர் மழலை*** - *மங்கைப்பருவ மகளிரின் மழலை மொழிகள்;* ***மகர யாழிசை*** - *மகர யாழின் இசையை ஒத்திருக்கும்;* ***எழிலிசை மடந்தையர்*** - *வனப்பு பொருந்திய பெண்களது;* ***இன்சொல் இன் இசை*** - *இனிய சொற்களாகிய இன்னிசை;* ***பழையர்தம் சேரியில்*** - *கள் விற்கும் பழையர்களின் சேரியிலே;* ***பொருநர் பாட்டுஇசை*** - *கூத்தர்கள் பாடும் இசையை ஒத்திருக்கும்.*

*பருவம் நிரம்பாதவர்கள் பருவ மங்கையர் பருவ முதிர்ந்தவர் எனப் பெண்களை மூவகைப்படுத்தி அவர்களின் பேச்சுக்கு உவமை கூறினார். குதலை: வடிவச் செம்மை பெறாத சொல். இது முதல் ஆறு பாடல்கள். ஆடல் பாடல் முதலிய விளையாடல்களைக் கூறுவனவாம்.*

***136. கண்ணிடைக் கனல் சொரி களிறு. கால் கொடு***
***மண்ணிடை வெட்டுவ; வேட்கை மைந்தர்தம்***
***பண்ணைகள் பயில் இடம் குழி படைப்பன;***
***சுண்ணம்அக் குழிகளைத் தொடர்ந்து தூர்ப்பன.***

***கண்ணிடைக் கனல் சொரி களிறு*** - *(கோபத்தால்) கண்களிலே நெருப்பைச் சொரியும் ஆண்யானைகள்;* ***கால் கொடு மண்ணிடை வெட்டுவ*** - *கால்களால் நிலத்தை வெட்டுவனவாம்;* ***வேட்கை மைந்தர்தம்*** - *பார்ப்பவர் விரும்பும் அழகிய இளைஞர்களின்;* ***பண்ணைகள் பயில் இடம்*** - *விளையாட்டுகள் நடைபெறும் இடங்கள்;* ***குழி படைப்பன*** - *குழிகளை உடையனவாம்;* ***அக்குழிகளைச் சுண்ணம் தொடர்ந்து தூர்பன*** - *அந்தக் குழிகளை அவ்விளைஞர் அணிந்த வாசனைப் பொடிகள் தூர்ப்பனவாகும்.*

*இளங் குமரர்கள் யானைகளை உடன் கொண்டு சென்று விளையாடுவர். அந்த யானைகள் நிலத்தைக் காலால் வெட்டி குழி செய்கின்றன. அக் குழிகள் வாசனைப் பொடிகளால் தூர்க்கப்படுகின்றனவாம். பண்ணை - விளையாட்டு.*

***137. பந்துகள் மடந்தையர் பயிற்றுவாரிடைச்***
***சிந்துவ முத்தினம்; அவை திரட்டுவார்***
***அந்தம் இல் சிலதியர்; ஆற்ற குப்பைகள்.***
***சந்திரன் ஒளி கெட. தழைப்ப தண் நிலா.***

***பந்துகள் பயிற்றுவார் மடந்தையர் இடை*** - *பந்தாடுபவராகிய இளம் பெண்களிடமிருந்து;* ***முத்தினம் சிந்துவ*** - *(அவரது அணிகலங்களிலிருந்து) முத்துக்கள் சிந்துகின்றன;* ***அவை திரட்டுவோர்*** - *அம்முத்துக்களைச் சேகரித்துச் சேர்க்கும்;* ***அந்தம் இல் சிலதியர்*** - *அளவில்லாத பணிப் பெண்கள்;* ***ஆற்று குப்பைகள்*** - *குவித்த அந்த முத்துக் குவியல்கள்;* ***சந்திரன் ஒளிகெட தண் நிலா தழைப்ப*** - *சந்திரனது ஒளியும் குறையுமாறு குளிர்ந்த நிலா ஒளி தழைப்பனவாம். பெண்கள் பந்து விளையாடும் இடங்களில் அணிகலன் முத்துகள் சிதறி விழ. பணிப்பெண்கள் அவைகளை எல்லாம் சேகரித்து ஆங்காங்கு குவித்து வைக்கின்றனர். அந்தக் குவியல்கள் சந்திர ஒளி கெடுமாறு - வெண்மைநிற ஒளியை உடையனவாய் விளங்குகின்றன.*

*பயிற்றுவார்: ஆடுகின்ற மகளிர் தன் வினைப் பொருளில் வந்த பிற வினையாலணையும் பெயர். சிலதியர்: குற்றேவல் மகளிர்.*

*'ஆற்றின்' என்ற பெயரெச்சத்தின் இன் என்னும் இடைநிலை தொக்கு. 'ஆற்ற' என நின்றது.*

***138. அரங்கிடை மடந்தையர் ஆடுவார்; அவர்***
***கருங் கடைக் கண் அயில் காமர் நெஞ்சினை***
***உருங்குவ; மற்று. அவர் உயிர்கள் அன்னவர்***
***மருங்குல்போல் தேய்வன; வளர்வது. ஆசையே.***

***அரங்கிடை மடந்தையர் ஆடுவார்*** -*நடன அரங்குகளிலே பெண்கள் நடனம் ஆடுவார்கள்;* ***அவர கருங் கடைக்கண் அயில்*** - *அவர்களின் கருமையான கடைக்கண்களாகிய வேல்கள்;* ***காமர் நெஞ்சினை உருங்குவ*** - *காதல் மிக்க ஆடவர்களின் மனத்தை உருக்குவனவாம்;* ***மற்று அவர் உயிர் அன்னவர் மருங்குல் போல்*** - *பின்னும் அவ்வாடவரின் உயிர்கள் அப்பெண்களின் இடைகளைப் போல;* ***தேய்வன*** - *மெலிவனவாகும்;* ***வளர்வது ஆசை*** - *அந்த மைந்தர்களுக்கு அம்மகளிரின் மீது ஆசை பெருகுவதாகும்.*

*நடன அரங்கில் நடனமாடும் மகளிரின் பார்வை அவர்களது காதலர்களான ஆண்களின் உயிரை உண்ணும். அம்மைந்தர்தம் உயிர் அம்மகளிரது இடையென மெலியும். 'உறங்குவ' என்பது 'உருக்குவ' என்பதன் மெலித்தல் விகாரம். உருங்குதல்: உண்ணுதல் என்றும் பொருள் கொள்ளலாம். இதனை "அரவின் உடலுயிர் உருங்குவணம்" என்று பரிபாடலாலும் (பரி. 4: 42) அறியலாம்.*

***139. பொழிவன சோலைகள் புதிய தேன் சில;***
***விழைவன தென்றலும் மிஞிறும் மெல்லென***
***நுழைவன; அன்னவை நுழைய. நோவொடு***
***குழைவன. பிரிந்தவர் கொதிக்கும் கொங்கையோ.***

***பொழிவன சோலைகள் புதிய தேன் சில*** - *சில சோலைகள் புத்தம் புதிய தேனைச் சொரிவன;* ***விழைவன தென்றலும் மிஞிறும் மெல்லென நுழைவன*** - *அத்தேனை விரும்பி தென்றலும் வண்டும் மெல்ல அச் சோலைகளில் நுழைவனவாம்;* ***அன்னவை நுழைய*** - *அவை அவ்வாறு நுழைய;* ***பிரிந்தவர் கொதிக்குக் கொங்கை*** - *தலைவனைப் பிரிந்த மகளிரின் (காமத்தால்) கொதிக்கும் தனங்கள்;* ***நோவொடு குழைவன*** - *வருத்தத்துடன் மெலிவனவாயின. சோலைகள் அன்றலர்ந்த மலரின் மதுவைப் பொழிகின்றன. அந்தத் தேனை விரும்பித் தென்றலும் வண்டும் மெல்ல அச்சோலையினுள் நுழைகின்றன. தென்றலும் வண்டும் பிரிந்தவருக்குத் துன்பம் விளைவிப்பன என்பதால் தலைவனைப் பிரிந்த தலைவி. காம நோயால் வருந்த. தனங்கள் வருந்தி மெலிந்தனவாம்.*

***140. இறங்குவ மகர யாழ் எடுத்து இன் இசை***
***நிறங் கிளர் பாடலான் நிமிர்வ; அவ் வழி***
***கறங்குவ வள் விசி கருவி; கண் முகிழ்த்து***
***உறங்குவ. மகளிரோடு ஓதும் கிள்ளையே.***

***மகர யாழ்*** - *மகர யாழிலே எடுத்த (விரலாலே நெருடி கவர்ந்தெடுக்கப்பட்ட);* ***இன் இசை*** - *இனிய இசையொலிகள்;* ***நிறங் கிளர்*** - *உள்ளக் கிளர்ச்சி தரும் பாடல்கள் காரணமாக வாய்ப்பாட்டோடு;* ***இறங்கவே*** - *யாழ் இசை நலிந்தொலிப்பன;* ***நிமிர்வ*** - *எடுத்தொலிப்பன;* ***அவ்வழி*** - *அந்த முறையில்;* ***வள் விசி கருவி*** - *வார் கட்டிய கருவியாகிய முழவுகள்;* ***கறங்குவ*** - *ஒலிப்பன (அந்த இசையைக் கேட்டு);* ***மகளிரோடு*** - *பெண்களோடு;* ***ஓதும் கிள்ளைகள்*** - *பேசும் கிளிகள்;* ***கண்முகிழ்த்து உறங்குவ*** - *கண்ணை மூடிக் கொண்டு உறங்குவனவாம்.*

*மகரயாழ் பத்தொன்பது நரம்புகள் கொண்டது. இறங்குவனவும் நிமிர்வனவுமாகிய இசையோட்டங்களை முறையே அவரோகணம். ஆரோகணம் என்பர். யாழிசைக்கு ஏற்ப முடிவுகளும் முழங்குவனவாம். இசை நயத்தில் ஈடுபட்டுக் கிளிகள் உறங்குகின்றன. வள்: தோல். விசி கருவி: வினைத்தொகை.*

*மகளிர் மேனி*

***141. குதை வரிச் சிலைநுதல் கொவ்வை வாய்ச்சியர்***
***பதயுகத் தொழில்கொடு. பழிப்பு இலாதன***
***ததை மலர்த் தாமரை அன்ன தாளினால்.***
***உதைபடச் சிவப்பன. உரவுத் தோள்களே.***

***குதை வரிச்சிலை நுதல்*** - *நாண் பூட்டிய வரியமைந்த வில் போன்ற நெற்றியையும்;* ***கொவ்வை வாய்ச்சியர்*** - *கோவைப் பழம் போன்ற வாயையும் உடைய பெண்களின்;* ***பதயுகத் தொழில்கொடு*** - *இரண்டு பாதங்களுக்கும் (செம்பஞ்சு ஊட்டுதலாகிய) தொழிலைக் கொண்டு;* ***பழிப்புஇலாதன*** - *பிறரால் பழித்துக் கூற இயலாதனவாகிய;* ***ததை மலர்த்தாமரை அன்னதாளினால்*** - *நெருங்கிய இதழ்களை உடைய தாமரை போன்ற பாதங்களால்;* ***உதைபட*** - *(ஊடல்கொண்டு) உதை பட்டதனாலே;* ***உறவுத் தோள்கள் சிவப்பன*** - *ஆண்களின் வலிமைமிக்க தோள்கள் சிவந்து காணப்படும். ஊடலால் தலைவி. தலைவனைக் காலால் உதைப்பதுண்டு. அதனால் அத்தலைவனது வலிய தோள்கள் சிவந்தன என்கிறார்.*

*குதை: வில்நாண். வரி: கட்டு. குதை. வரி சிலை என்று வில்லைச் சிறப்பிக்கிறார். சிலை நுதல்: சிலை போன்ற நுதல் உவமைத்தொகை. பத யுகம்: இரண்டு பாதங்கள் இது முதல் மூன்று பாடல்கள் அந்நகரத்தில் வாழும் மகளிரின் மேனி அழகைக் கூறுவனவாம். 49*

***142. பொழுது உணர்வு அரிய அப் பொரு இல் மா நகர்த்***
***தொழு தகை மடந்தையர் சுடர் விளக்கு எனப்***
***பழுது அறு மேனியைப் பார்க்கும் ஆசைகொல்.***
***எழுது சித்திரங்களும் இமைப்பு இலாதவே?***

***பொழுது உணர்வு அறிய*** - *பொழுதை அறிவதற்கு அரிய;* ***அப் பொழுவுஇல் மாநகர்*** *-அந்த ஒப்பற்ற பெருநகரில் உள்ள;* ***தொழு தகை மடந்தையர்*** - *(கற்பின் சிறப்பால்) எல்லோரும் வணங்கத்தக்க பெருமையுள்ள பெண்களது;* ***சுடர்விளக்கு என பழுதுஅறு மேனியை*** - *ஒளி விளக்கு போன்ற. குற்றம் எதுவுமின்றித் திகழும் உடம்புனை;* ***பார்க்கும் ஆசை கொல்*** *-பார்க்க விரும்பும் ஆசையால்தானே;* ***எழுது சித்திரங்களும் இமைப்பு இலாத*** - *எழுதிய ஓவியங்களும் கண்களை இமைக்காதனவாய் உள்ளன.*

*பொழுது உணர்வரிய: அந்நகரத்துப் பெண்களின் அணிகலன்களின் ஒளியால் இரவா? பகலா? என்று உணர இயலாத மிக்க ஒளியுடைய நகராதலால் இவ்வாறு கூறினார். "நல்லார் அணிகலம் பகலைச் செய்ய" சிந்தாமணி (2500) ஒப்பு நோக்கத்தக்கது. அடுத்த பாடலில் (143) மகளிர் மேனிக்கு விளக்கை உவமையாக்குதல் காண்க. ஓவிய உருவங்கள் கண்களை இமைக்காமல் இருப்பதற்கு. அயோத்தி மகளிரின் பழுதறு மேனியைப் பார்க்கும் ஆசைபோலும் எனக் காரணம் கூறியதால் இது ஏதுத் தற்குறிப்பேற்ற அணி.*

***143. தணி மலர்த் திருமகள் தங்கு மாளிகை***
***இணர் ஒளி பரப்பில் நின்று இருள் துரப்பன.***
***திணி சுடர் நெய்யுடைத் தீ விளக்கமோ?***
***மணி விளக்கு: அல்லன் மகளிர் மேனியே.***

***தணிமலர்த் திருமகள்*** - *குளிர்ந்த தாமரைப் பூவில் வாழும் இலக்குமி தேவி;* ***தங்கும் மாளிகை*** - *தங்கியிருக்கும் அயோத்தி நகர மாளிகைகள்;* ***இணர் ஒளிபரப்பி நின்று*** - *மிக்க ஒளி வீசி நின்று;* ***இருள் துரப்பன*** *-இருளை ஓட்டுபவை;* ***திணிசுடர் நெய்யுடைத் தீவிளக்கமோ*** - *செறிந்த ஒளியுடைய நெய்விளக்குகளின் விளக்கமோ;* ***மணிவிளக்கல்ல*** - *மணிகளின் ஒளியோ அல்ல;* ***மகளிர் மேனியே*** - *அந்நகரத்து மகளிரின் மேனி ஒளியே. நெய் விளக்கின் ஒளியும். மணிகளின் ஒளியும் ஆகிய இரண்டிலும் மேலோங்கி இருப்பது மகளிரின் மேனி ஒளியே. அதுவே அந்நகரத்தின் இருளை நீக்குவது எனக் கூறுகிறார். இருள் ஓட்டும் இயல்பு கொண்ட விளக்கொளி. மணியொளி இரண்டையும் நீக்கி அவ்வியல்பை மகளிர் மேனிக்கு ஏற்றிக் கூறியதால் இது அவநுதியணியாம்.*

*பாடினி பாட. விறலின் ஆட*

***144. பதங்களில் தண்ணுமை. பாணி. பண் உற***
***விதங்களின். விதி முறை சதி மிதிப்பவர்***
***மதங்கியர்; அச் சதி வகுத்துக் காட்டுவ***
***சதங்கைகள்; அல்லன புரவித் தார்களே.***

***தண்ணுமை. பாணி. பண். உற*** - *மத்தள ஒலி. தாள ஓசை. பாட்டு ஒலி இவைகளுக்குப் பொருந்த;* ***விதிமுறை விதங்களின்*** - *நாட்டிய நூல்முறைப்படி பல விதங்களாக;* ***பதங்களில் சதிமிதிப்பவர்*** - *பாதங்களால் சதிபெற வைத்து நடனம் ஆடுபவர்கள்;* ***மதங்கியர்*** - *ஆடல் பாடல்வல்ல பெண்கள் ஆவர்;* ***அச் சதி வகுத்துக்காட்டுவ*** - *அந்தத் தாளச் சதியை விவரித்துக் காட்டுபவை;* ***சதங்கைகள்*** - *அப்பெண்கள் கால்களில் அணிந்துள்ள சதங்கைகளும்;* ***அல்லன புரவித்தாள்களே*** - *அவ்வாறு ஆடுகின்ற குதிரைகளின் கால்களுமே.*

*அந்த நகரத்துப் பெண்களின் நாட்டியச் சிறப்பும். குதிரைகளின் ஆட்டச் சிறப்பும் கூறப்பட்டன. குதிரை தாளத்துக்கேற்ப ஆடும் என்பதை மேலே (751) எழுச்சிப் படலத்திலும் கூறுவார். பதங்கள்: பாதங்கள். தண்ணுமை: மத்தளம். பாணி: கைத்தலம். சதி: தாளஒத்து. மதங்கியர்: ஆடு மகளிர்.*

*மகிழ்ச்சிப் புலப்பாடு*

***145. முளைப்பன முறுவல்; அம் முறுவல் வெந் துயர்***
***விளைப்பன; அன்றியும். மெலிந்து நாள்தொறும்***
***இளைப்பன நுண் இடை; இளைப்ப. மென் முலை***
***திளைப்பன. முத்தொடு செம் பொன் ஆரமே.***

***முளைப்பன முறுவல்*** - *அந்நகரத்துப் பெண்களின் முகத்திலே எப்போதும் புன்சிரிப்பு தொன்றுவன;* ***அம்முறுவல் வெந்துயர் விளைப்பன*** - *அந்த புன்சிரிப்பு. அப்பெண்கள்பால் காதல் கொண்ட ஆடவர்க்குக் கொடிய துன்பத்தை உண்டாக்கும்;* ***அன்றியும் நுண் இடை*** - *அல்லாது. அம்மகளிரின் சிறிய இடைகள்;* ***மெலிந்து நாள்தோறும் இளைப்பன*** - *நாள்தோறும் மெலிந்து இளைப்பனவாம்;* ***நுண் இடை இளைப்ப*** - *அவர்களது மெல்லிடை இவ்வாறு இளைக்க;* ***மென்முலை முத்தொடு செம்பொன் ஆரமே திளைப்பன*** - *அம்மகளிரது மென்மையான தனங்கள் முத்து வடங்களும் பொன்னரி மாலைகளும் பூண்டு திளைப்பனவாகும். பெண்களின் புன்முறுவல் - அவர்கள்பால் காதல்கொண்ட ஆண்களின் காதல் நோயை மிகுவிக்கும் பெண்களின் இடை மெலிவது கண்டு. அவர்களது கொங்கைகள் அவ்விடை மேலும் மெலிந்து வருந்துமாறு. முத்து மாலைகளையும். பொன் அணிகளையும் பூண்டு மகிழ்கின்றன என்கிறார். இதனால் ஒருவர் வருந்த. மற்றொருவர் மகிழும் உலக இயற்கை கூறப்படுகின்றது. வெந்துயர்: கொடிய துன்பம் (இங்குக் காம வேதனை). இதுமுதல் 13 பாடல்களில் அந்நகர மாந்தரின் மகிழ்ச்சி கூறப்படும்.*

***146. இடை இடை. எங்கணும். களி அறாதன:-***
***நடை இள அன்னங்கள்; நளின நீர்க் கயல்;***
***பெடை இள வண்டுகள்; பிரசம் மாந்திடும்***
***கட கரி; அல்லன மகளிர் கண்களே!***

***இடை இடை எங்கணும் களி அறாதன*** - இடங்கள்தோறும் எப்பொழுதும் மகிழ்ச்சி நீங்காமலிருப்பவை; ***நடை இள அன்னங்கள்*** - அழகிய நடையுடைய இளமையான அன்னங்களும்; ***நளின நீர்க்கயல்*** - தாமரை மலர்கள் பூத்த நீர்நிலைகளில் உள்ள கயல் மீன்களும்; ***பெடை இள வண்டுகள்*** - தம் பெண் இனத்துடன் கூடி வாழும் ஆண் வண்டுகளும்; ***பிரசம் மாந்திடும் கடகரி*** - பிரசத்தை உண்ணும் மதயானைகளும்; ***அல்லன மகளிர் கண்களே*** - இவற்றை அல்லாமல் பெண்களின் கண்களுமேயாம்.

> ***147. தழல் விழி ஆளியும் துணையும் தாழ் வரை***
> ***முழை விழை கிரி நிகர் களிற்றின் மும் மத***
> ***மழை விழும்; விழும்தொறும். மண்ணும் கீழ் உறக்***
> ***குழை விழும்; அதில் விழும். கொடித் திண் தேர்களே.***

***தழல்விழி ஆளியும் துணையும்*** - நெருப்பென விழிக்கும் கண்களை உடைய ஆண் சிங்கங்களும் துணையான பெண்சிங்கங்களும்; ***தாழ்வரை முழை விழை*** - தங்குவதற்கு ஏற்றனவாகிய மலைக் குகைகளை விரும்பும்; ***கிரி நிகர் களிற்றின் மும்மத மழைவிழும்*** - மலை போன்ற யானைகளின் மதநீர் மழை பொழியும்; ***விழும் தொறும் மண்ணும் கீழ்உற குழை விழும்*** - அவ்வாறு மழை சொரியும் தோறும் நிலமும் ஆழமாகுமாறு சேறாகும்; ***அதில் கொடித்திண் தேர்கள் விழும்*** - அந்தச் சேற்றில் கொடிகளை உடைய வலிய தேர்கள் புதை யுண்ணும்

*நெருப்பெழும் விழிகொண்ட ஆண் சிங்கமும் அதன் பெண்சிங்கமும் தங்குவதற்கு ஏற்ற குகைகள் கொண்டது அம் மலை; அந்த மலைபோன்ற யானைகளின் மும்மதமும் மழை போலப் பொழிவதால் மண்ணொடு கலங்கித் தரை சேறாகும்; அந்தச் சேற்றிலே தேர்கள் புதையுண்ணும். இப்பாடலின் செய்தி இது. 'தழல் விழி ஆளியும் துணையும் தாழ்வரை மழை விழை' என்ற நீண்ட தொடர் கிரிக்கு அடை. தாழ்தல்: தங்குதல். மும்மதம்: கன்ன மதம். கபோல மதம். பீஜ மதம்.*

> ***148. ஆடு வார் புரவியின் குரத்தை ஆர்ப்பன.***
> ***சூடுவார் இகழ்ந்த அத் தொங்கல் மாலைகள்;***
> ***ஓடுவார் இழுக்குவது. ஊடல் ஊடு உறக்***
> ***கூடுவார் வன உலை கொழித்த சாந்தமே.***

***சூடுவார் இகழ்ந்த அத் தொங்கல் மாலைகள்*** - மாலை சூடிய மகளிர் (வாடிவிட்டன என்று) இகழ்ந்து எறிந்துவிட்ட மாலைகள்; ***ஆடுவார் புரவியின் குரத்தை ஆர்ப்பன*** - ஆடுகின்ற நெடிய குதிரைகளின் குளம்புகளைப் பிணிப்பனவாகும்; ***ஊடல் ஊடு உறக் கூடுவார்*** - புலவி இடையிலே நிகழ. பின் ஆடவருடன் கூடி மகிழும் மகளிர்; ***வனமுலை கொழித்த சாந்தம்*** - அழகிய தனங்களிலிருந்து வழித்து வீதியில் எறிந்த சந்தனத் தேய்வை; ***ஓடுவார் இழுக்குவது*** - அத்தெருவில் ஓடுபவர்களை வழுக்கி விழச் செய்வனவாம்.

*மகளிர் தாம் அணிந்த மாலைகள் வாடினவென வீசியெறிய அவை குதிரைகளின் கால்களைப் பிணிக்கும். அம்மகளிர் வழித்து எறிந்த சந்தனக் குழம்பு வீதியில் ஓடுபவர்களை வழுக்கி விழச் செய்யும். குரம்: குளம்பு ஆர்த்தல்: பிணித்தல் (கட்டுதல்). "கோதை மடவார்தம் கொங்கை மிசை திமிர்ந்த சீதக் களபச் செழுஞ் சேற்றால் வீதிவாய் மானக்கரி வழுக்கும்" என்ற நளவெண்பா ஒப்பு நோக்கத்தக்கது (1: 13*

*56*

***149. இளைப்ப அருங் குரங்களால். இவுளி. பாரினைக்***
***கிளைப்பன; அவ் வழி. கிளர்ந்த தூளியின்***
***ஒளிப்பன மணி; அவை ஒளிர. மீது தேன்***
***துளிப்பன. குமரர்தம் தோளின் மாலையயே.***

***இவுளி இளைப்ப அரும் குரங்களால்*** *- குதிரைகள் வீதியிலே ஓடும்பொழுது தமது குளம்புகளால்;* ***பாரினைக் கிளைப்பன*** *- நிலைத்தைக் கிளறுகின்றன;* ***அவ்வழி கிளர்ந்த தூளியின்*** *- அங்குக் கிளர்ந்து மேலெழுந்த புழுதியினாலே;* ***மணி ஒளிப்பன*** *- (அக் குதிரைகளின் மீது ஏறிவரும் வீரர்கள் அணிந்த) மணிகள் மறைவன ஆயின;* ***அவை ஒளிர*** *-அம் மணிகள் மறுபடியும் ஒளிவீசுமாறு;* ***மீது குமரர்தம் தோளின் மாலை தேன் துளிப்பன*** *- அவற்றின் மேலே வீரர்கள் தோள்களில் அணிந்த மாலைகள் தேன் துளிகளைச் சொரிந்தன.*

*குதிரைச் சவாரி செய்யும் வீரர்கள் அணிந்த அணிகலன்களில் பதிந்த மணிகள் அக்குதிரைகளின் குளம்புகள் கிளறிய புழுதியில் மறைய அவை ஒளிரும்படி மாலைகள் தேன்பொழியும் என்பது கருத்து.*

***150. விலக்க அருங் கரி மதம் வேங்கை நாறுவ;***
***குலக் கொடி மதர் வாய் குமுதம் நாறுவ;***
***கலக் கடை கணிப்ப அருங் கதிர்கள் நாறுவ;***
***மலர்க் கடி நாறுவ. மகளிர் கூந்தலே.***

***விலக்க அருங்கரி மதம்*** *- விலக்குவதற்கு அரிய யானைகளின் மத நீர்;* ***வேங்கை நாறுவ*** *- வேங்கை மலர்களைப் போல மணக்கிறது;* ***குலக்கொடி மாதர்வாய் குமுதம் நாறுவ*** *- உயர்குடியில் பிறந்த கொடியை ஒத்த மகளிரின் வாய்கள் குமுத மலர் போல் விளங்குகின்றன;* ***கலக்கடை களிப்ப அரும் கதிர்கள் நாறுவ*** *- அம்மகளிரின் அணிகலன்களில் அளவிடற்கு அரிய ஒளிக் கதிர்கள் எங்கும் ஒளிர்கின்றன;* ***மகளிர் கூந்தல் மலர்க்கடி நாறுவ*** *- அந்த மகளிரின் கூந்தல் மலர் மணம் கமழ்கிறது.*

*யானைகளின் மத நீர் வேங்கை மலர் மணம் வீசுகிறது. உயர் குலப் பெண்களின் வாய் குமுத மலர்களைப் போல் விளங்குகிறது. அவர்கள் அணிந்துள்ள அணிகலன்களின் ஒளி எங்கும் ஒளிர்கின்றன. அம்மகளிரின் கூந்தல் மலர் மணம் கமழ்கிறது என்றார். வேங்கை மலர்ந்திருக்கும் போது. புலி போலத் தோன்றும். அதனைப் புலி என்று கருதி யானை அம்மரத்தைத் தாக்கும் அதனால் மலர்கள் யானைமீது சிந்த. அம்மலர் மணம் படிந்து - மத நீரை அந்த மணம் உடையதாகச் செய்யும் என்பர்.*

***151. கோவை இந் நகரொடு எண் குறிக்கலாத அத்***
***தேவர்தம் நகரியைச் செப்புகின்றது என்?***
***யாவையும் வழங்கு இடத்து இகலி. இந் நகர்***
***ஆவணம் கண்டபின். அளகை தோற்றதே!***

***கோவை இந் நகரொடு எண் குறிக்கலாத*** *- சிறந்த நகரங்களின் வரிசையிலே அயோத்தி நகருடன் சேர்ந்து எண்ணப்படாத;* ***அத் தேவர்தம் நகரியைச் செப்புகின்றது என்?*** *-அந்தத் தேவர் நகரமான அமராவதியை இந்த நகருக்கு இணையோ. அல்லவோ என்று எடுத்துச் சொல்வது எதற்கு?;* ***யாவையும் வழங்கு இடத்து இகலி*** *- எல்லா வளங்களையும் தரும் விதத்திலே வேறுபட்டு விளங்குவதோடு;* ***இந்நகர் ஆவணம் கண்டபின்*** *- இந்த நகரத்துக் கடைத் தெருவைப் பார்த்த பிறகு;* ***அளகை நோற்றது*** *- செல்வம் மிக்கதென்னும் அளகாபுரியே தோல்வியுற்றது.*

*அயோத்தி நகரின் கடைத் தெருவைப் பார்த்து. அளகாபுரியே தோற்றது என்னும் போது. சிறந்த நகரங்களின் வரிசையிலே கூறப்படாததான அமராவதியை அயோத்திக்கு ஒப்போ? அல்லவோ? என்று வினாவுவது எதற்காக? கோவை: வரிசை. நிரல். அமராவதி குறிப்பிடப்படவில்லை என்பதால் ''எண் குறிக்கலா'' என்றார்.*

***152. அதிர் கழல் ஒலிப்பன; அயில் இமைப்பன;***
***கதிர் மணி அணி வெயில் கால்வ; மான்மதம்***
***முதிர்வு உறக் கமழ்வன; முத்தம் மின்னுவ;***
***மதுகரம் இசைப்பன; - மைந்தர் ஈட்டமோ***

***அதிர்கழல் ஒலிப்பன*** *- அந்நகரத்திலே அதிர்கின்ற வீரக் கழல்களின் ஒலி ஆர்ப்பரித்து ஒலிப்பனவாக;* ***அயில் இமைப்பன*** *- வேல் முதலிய படைக்கலங்கள் ஒளிர்வனவாக;* ***கதிர்மணி அணி வெயில் கால்வ*** *- ஒளிமிக்க மணிகளாலான அணிகலன்கள் எங்கும் ஒளிவீசுபவையாக;* ***மான்மதம் முதிர்வு உறக் கமழ்வன*** *- கத்தூரி மிகுதியும் கமழ்வதாக;* ***முத்தம் மின்னுவ*** *- அணிகலன்களில் அமைந்த முத்துக்கள் மின்னல் போல ஒளிர்வன;* ***மதுகரம் இசைப்பன*** *- வண்டுகள் பண் பாடுவனவாக;* ***மைந்தர் ஈட்டமே*** *- (இவ்வாறாக) ஆடவர் கூட்டம் விளங்கியது.*

*மைந்தர் ஈட்டம் கழல் ஒலிக்க. அயில் இமைக்க. வெயில் கால. கமழ்வனவாக. முத்தம்மின்ன. மதுகரம் இசைக்க இழுத்தன எனக் கொண்டு கூட்டி முடிக்க.*

*மதுகரம்: தேனைச் சேகரிக்கும் வண்டுகள்; முத்தம்: முத்து மாலை முதலிய அணிகள்; மான் மதம்: கத்தூரி மானிடமிருந்து கிடைக்கும் மணப்பொருள்.*

***153. வளை ஒலி. வயிர் ஒலி. மகர வீனையின்***
***கிளை ஒலி. முழவு ஒலி. கின்னரத்து ஒலி.***
***துளை ஒலி. பல் இயம் துவைக்கும் சும்மையின்***
***விளை ஒலி.- கடல் ஒலி மெலிய. விம்முமே.***

***வளை ஒலி வயிர் ஒலி*** *- (அந்த நகரமெங்கும்) சங்குகளின் ஓசை. கொம்புகளின் ஓசை;* ***மகர வீணையின் கிளை ஒலி*** *- மகர யாழ் இனங்களின் ஓசை;* ***முழவு ஒலி கின்னரத்து ஒலி*** *- மத்தள ஓசை. கின்னர ஓசை;* ***துளை ஒலி*** *- துளைக் கருவிகளான புல்லாங்குழல் முதலியவைகளின் ஓசை;* ***பல்இயம் துவைக்கும்*** *- மற்றும் பலவகை வாத்தியங்கள் முழக்கும்;* ***சும்மையின் விளைவு ஒலி*** *- ஆரவாரத்தின் விளைவாக உண்டாகும் ஓசை;* ***கடல் ஒலி மெலிய விம்மும்*** *- (ஆகிய இவ்வோசைகள் எல்லாம்) கடல் முழக்கமும் மெலியும்படி ஒலிக்கும்.*

*அயோத்தி நகரமெங்கும் சங்கு முதலியவைகளின் ஒலி. கடல் முழக்கம் கீழ்ப்பட மேலோங்கி முழங்கும் என்கிறார். வளை: சங்கு. வீணையின் கிளை: வீணையின் இனம். கின்னரம்: ஒருவகை யாழ். துளை: துளைக் கருவிகள் (ஆகுபெயர்). சும்மை: பேரொலி. துவைக்கும்: முழக்கும்.*

***154. மன்னவர் தரு திறை அளக்கும் மண்டபம்.***
***அன்னம் மென் நடையவர் ஆடு மண்டபம்.***
***உன்ன அரும் அரு மறை ஓது மண்டபம்.***
***பன்ன அருங் கலை தெரி பட்டி மண்டபம்.***

***மன்னவர் தரு திறை அளக்கும் மண்டபம்*** *- (மன்னர் மன்னனாகிய அயோத்தி வேந்தனுக்கு அடங்கிய) சிற்றரசர்கள் செலுத்தும் கப்பத்தை எண்ணி அளவிடும் மண்டபங்களும்;* ***அன்னம் மென் நடையவர் ஆடு மண்டபம்*** *- அன்னம் போன்ற நடையையுடைய நடன மாதர்கள் நடனம் ஆடும் மண்டபங்களும்;* ***உன்னரும் அருமறை ஓதும் மண்டபம்*** *- நினைப்பதற்கும் அரியனவான சிறந்த வேதங்களை வல்லோர் ஓதும் மண்டபங்களும்;* ***பன்னரும் கலைதெரிபட்டி மண்டபம்*** *- சிறப்பித்துப் பேசுவதற்கும் அரியனவான பல கலைகளையும் அறிஞர்கள் ஆராயும் பட்டி மண்டபங்களும் (அயோத்தி நகரெங்கும் இருந்தன).*

*அரசியல் கடமைகள். கலைத் துறைப் பணிகள். சமயத் தொண்டு. அறிவு நலம் வளர்க்கும் ஆய்வு ஆகப் பலவற்றுக்கும் அயோத்தியில் வெவ்வேறு மண்டபங்கள் இருந்தன என்பது கவிஞர் செய்தி. பட்டிமண்டபம் என்றாலே கேலிக்கூத்தாகவும் பொழுதுபோக்காகவும் கருதுகிறோம். அது சரியன்று. தணிகைப் புராணம் பட்டிமண்டபத்தின் இயல்பினைக் கூறுவது காண்க: "கரிசறு கவிக்குக் கவி. கமகனுக்குக் கமகன். வாதிக்கு ஒரு வாதி - துரிசறு வாக்கி தனக்கொரு வாக்கியாய் அவர் தொன்று தொட்டு அமைந்து - வரிசையின் வந்த வேள்வியர் பெறாது வரும்இகல் கடந்த எஃகு உடையார் - பரிசில் நூற் பயிற்சி இன்பு எனக் கலை தேர் பட்டி மண்டபம் பல வயங்கும். (தணிகை. திருநகரம் 106*

*62*

***155. இரவியின் சுடர் மணி இமைக்கும். தோரணம்;***
***தெருவினின் சிறியன. திசைகள்; சேண் விளங்கு***
***அருவியின் பெரியன. ஆனைத் தானங்கள்;***
***பரவையின் பெரியன. புரவிப் பந்தியே.***

***தோரணம் இரவியின் சுடர்மணி இமைக்கும்*** *- அந்த நகரத்துத் தோரணங்கள் சூரியன் போன்ற சுடர்மிகு மணிகளால் ஒளிரும்;* ***திசைகள் தெருவினின் சிறியன*** *- நெடிய வீதிகளைவிடத் திசைகள் சிறியனவாம்;* ***சேண்விளக்கு அருவியின் பெரியன ஆனைத் தானங்கள்*** *- மலையின் மிக உயர்ந்தே இருக்கும் அருவியை விட யானையின் மதநீர் பெரியதாகும்;* ***பரவையின் பெரியன புரவிப் பந்தி*** *-கடல்களை விடவும் பெரியது. அந்நகரத்தில் குதிரைகள் கட்டும் இடம்.*

*திசைகள் தெருவினில் சிறியன என்றது உயர்வு நவிற்சியின் எல்லை தானம்: மதநீர்; பந்தி: குதிரை கட்டும் லாயம்; சேண்: உயரம்;.*

***சுடர்மணி வினைத்தொகை.*** ***63***

***156. சூளிகை மழை முகில் தொடக்கும் தோரண***
***மாளிகை மலர்வன. மகளிர் வாள் முகம்;***
***வாளிகள் அன்னவை மலர்வ; மற்று அவை.***
***ஆளிகள் அன்னவர் நிறத்தின் ஆழ்பவே.***

***சூளிகை மழை முகில் தொடக்கும்*** *- அந் நகரத்து மாளிகைகளின் உச்சி (மிக உயர்ந்திருப்பதால்) மேகத்தைப் பிணிக்கும்;* ***தோரன மாளிகை மகளிர் வாண்முகம் மலர்வன*** *- தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டு விளங்கும் மாளிகைகளிலெல்லாம் மகளிரின் ஒளிமிகு முகங்கள் மலர்ந்து பொலிவனவாகும்;* ***அன்னவை வாளிகள் மலர்வ*** *- அம்முகங்களில் அம்புகள் விளங்குகின்றன (கண்கள்);* ***மற்று அவை ஆளிகள் அன்னவர் நிறத்தில் ஆழ்ப*** *- மற்று. அவ்வம்புகள் சிங்கத்தை ஒத்த ஆடவர்களின் மார்பில் ஆழ்வனவாம்.*

*தொடக்கும்: பிணிக்கும்; வாள்முகம்: ஒளி பொருந்திய முகம்; வாளிகள்: அம்புகள்; கண்களை அம்பு என்றது உருவகம்; நிறம்: மார்பு; அன்னவை: அம்முகங்கள்; ஆளி: சிங்கம்.*

***157. மன்னவர் கழலொடு மாறு கொள்வன.***
***பொன் அணித் தேர் ஒலி. புரவித் தார் ஒலி;***
***இன் நகையவர் சிலம்பு ஏங்க. ஏங்குவ.***
***கன்னியர் குடை துறைக் கமல அன்னமே***

***மன்னவர் கழலொடு*** *- அரசர்களின் வீரக் கழல்களின் ஒலியுடன்;* ***மாறு கொள்வன*** *- மாறு கொண்டு ஒலிப்பவை;* ***பொன்னணி தேர் ஒலி*** *- பொன்னால் அலங்கரிக்கப்பட்ட தேர்களின் ஒலியும்;* ***புரவித் தார் ஒலி*** *- குதிரைப் படைகளின் ஒலியுமே ஆகும் ;* ***இன் நகையவர் சிலம்பு ஏங்க*** *- இனிய சிரிப்பு உடைய மகளிரின் சிலம்புகள் ஒலிக்கும்படியாக;* ***கன்னியர் குடைதுறை*** *- நீராடும் நீர்த்துறையில் வாழும்;* ***கமல அன்னமே ஏங்குவ*** *- தாமரையில் உள்ள அன்னங்களே ஏங்கு வனவாம்.*

*பொன் அணி தேரொலியும். புரவித் தாரொலியும். மன்னவர் கழலொடு மாறுகொண்டு ஒலிப்பன. கன்னியர் சிலம்பேங்க. அன்னங்கள் ஏங்குகின்றன. அம்மகளிரைப் போன்று நடை அமைந்திருக்கும் அம்மாதர்கள் அணிந்துள்ள சிலம்புகள் நமக்கில்லையே என அன்னங்கள் ஏங்கின என்கிறார். மன்னவர் கழலொலி. தேரொலி. புரவித் தாரொலி. சிலம்பொலி ஆகிய ஒலிகள் மிக்கது அந்நகரம். தார்: படை. படை: குதிரை. குடைதுறை: வினைத்தொகை. ஓரிடத்து எழும் ஒலிகளைக் கொண்டு அந்த இடத்தின் தன்மை அறியலாம்.*

*நகரத்தார் பொழுதுபோக்கு*

***158. ஊடவும். கூடவும். உயிரின் இன் இசை***
***பாடவும். விறலியர் பாடல் கேட்கவும்.***
***ஆடவும். அகன் புனல் ஆடி அம் மலர்***
***சூடவும். பொழுது போம் - சிலர்க்கு. அத் தொல்நகர்.***

***அத்தொல்நகர் சிலர்க்கு*** *- அந்தப் பழமை வாய்ந்த நகரத்திலே வாழும் சிலர்க்கு;* ***ஊடவும் கூடவும்*** *- காதலர்களோடு ஊடல் கொள்ளும் ஊடல் தீர்ந்து கூடி இன்புற்று மகிழவும்;* ***உயிரின் இன்னிசை பாடவும்*** *- உயிரினும் சிறந்ததான இனிய இசை பாடி மகிழவும்;* ***விறலியர் பாடல் கேட்கவும்*** *- இசையில் வல்ல விறலியர்களைப் பாடச்செய்து. அதனைக் கேட்கவும்;* ***ஆடவும்*** *- இசைக்கேற்ப நடனம் ஆடவும்;* ***அகன்புனல் ஆடி*** *- இடமகன்ற நீர்நிலைகளிலே நீராடவும்;* ***அம்மலர் சூடவும் பொழுதுபோம்*** *- அழகிய மலர்களை அணிந்து மகிழவும் ஆகிய செயல்களால் பொழுது போகும்.*

*ஊடுதல் - கூடி மகிழ்தல் - பாடுதல் - பாடல் கேட்டல். சூடுதல் - புனலாடல் - மலர் சூடல் ஆகிய செயல்களால் சிலருக்குப் பொழுது போகும்; போம்: போகும் என்பதன் தொகுத்தல் விகாரம்.*

***159.*** **முழங்கு திண் கட கரி மொய்ம்பின் ஊரவும்.**
**எழும் குரத்து இவளொடு இரதம் ஏறவும்.**
**பழங்கணோடு இரந்தவர் பரிவு தீர்தர**
**வழங்கவும். பொழுது போம் - சிலர்க்கு. அம்மாநகர்.**

***முழங்கு திண் கடகரி*** *- பிளறி முழக்கமிடும் வலிமைமிக்க மத யானைகளின் மீது;* ***மொய்ம்பின் உலாவும்*** *-தமது மிகுந்த வலிமையால் ஏறி ஊர்ந்து சென்றும்;* ***எழும் குரத்து இவுளியொடு இரதம் ஏறவும்*** *- எழுகின்ற ஆரவாரமுடைய குதிரைகளோடு தேர்களில் ஏறி ஊர்ந்து சென்றும்;* ***பழங்கணோடு இரந்தவர் பரிவு தீர்தர*** *- வறுமைத் துன்பத்தோடு வந்து இரந்தவரது துன்பம் நீங்கிட;* ***வழங்கவும் பொழுது போம் சிலர்க்கு அம் மாநகர்*** *- வேண்டிய பொன்னும் வாரி வழங்கியும் அந்தப் பெரு நகரில் வாழும் சிலர்க்குப் பொழுது போகும் யானை மீதும். குதிரை மீதும். ஏறிச் சவாரி செய்தும். தேர் ஓட்டியும் வருந்தி வந்தவருக்கு வாரி வழங்கியும் சிலருக்குப் பொழுதுபோகும் என்று கூறியதால் ஆண்களுக்குப் பொழுது போக்கும் செயல்களைக் கூறினார் எனலாம். குரத்தம்: ஆரவாரம். முழங்குதல்: முழக்கமிடுதல். மொய்ம்பு: வலிமை. பழங்கண்: வறுமைத் துன்பம். தீர்தர: தீர. யானையேற்றம் - குதிரையேயேற்றம் - தேர் ஏற்றம் போன்றவை அரசருக்குரியவை. இளவரசர்களும் அந்நகரத்துச் செல்வ இளைஞர்களும் பொழுதுபோக்கிய செயல்களைக் கூறினார் போலும். 67.*

***160.*** **கரியொடு கரி எதிர் பொருத்தி. கைப் படை**
**வரி சிலை முதலிய வழங்கி. வால் உளைப்**
**புரவியில் பொரு இல் செண்டு ஆடி. போர்க் கலை**
**தெரிதலின். பொழுது போம்- சிலர்க்கு. அச் சேண் நகர்.**

***கரியொடு கரி எதிர் பொருத்தி*** *- யானையோடு யானையை எதிர்த்துப் போர் புரியவிட்டு;* ***கைப்படை வரி சிலை முதலிய வழங்கிய*** *- கையில் உள்ள படைகளான கட்டமைந்த வில் முதலியவைகளைப் பயின்றும்;* ***வாள் உளைப்புரவிய*** *- நீண்ட பிடரி மயிரை உடைய குதிரைகளின் மீது ஏறிக்கொண்டுப்;* ***பொரு இல் செண்டு ஆடி*** *- ஒப்பற்ற 'செண்டு' என்ற பந்தாடியும்;* ***போர்கலை தெரிதலின்*** *-போருக்குரிய கலைகளைத் தெரிந்து பயின்றும்;* ***அச்சேண் நகர்*** *- அந்தச் சிறந்த நகரத்தில்;* ***சிலர்க்குப் பொழுதுபோம்*** *- மற்றும் சில பேருக்குப் பொழுது போகும்.*

*யானையுடன் யானையை மோதவிடும் வீர விளையாட்டுகளிலும். வில் முதலிய படைப்பயிற்சி செய்வதிலும். குதிரை மீதேறிப் பந்து விளையாடுவதிலும் போருக்குரிய கலைகளைப் பயில்வதிலும் அந்நகரத்தில் சிலருக்குப் பொழுது போகும் என்றதால் இங்குக் குறிப்பிடப்படுபவர்கள் போர் வீரர்கள் என அறியலாம். பொருத்தி: பொருந்தச் செய்து (பிற வினைப் பெயரெச்சம்). உளை: பிடரிமயிர். செண்டு: குதிரையில் ஏறியாடு பந்தாட்டம் (இதனை இக் காலத்தார் 'போலோ' என்பர். தெரிதல் - அரிதல். 68*

***161. நந்தன வனத்து அலர் கொய்து. நவ்விபோல்***
***வந்து; இளையவரொடு வாவி ஆடி. வாய்ச்***
***செந் துவர் அழிதரத் தேறல் மாந்தி. சூது***
***உந்தலின் பொழுது போம்- சிலர்க்கு. அவ் ஒள் நகர்.***

***நந்தனவனத்து அலர்கொய்து*** - *நந்தனவனம் சென்று மலர்ந்த மலர்களைப் பறித்தும்;* ***நவ்வியபோல் வந்து*** - *பெண்மானைப் போல வந்து;* ***இளையவரொடு வாவி ஆடி*** - *தம்மை ஒத்த இள மகளிருடன் பொய்கையில் நீராடியும்;* ***வாய்ச்செந்துவர் அழிதர*** - *தமது வாயின் பவள நிறம் அழியுமாறு;* ***தேறல் மாந்தி*** - *தேனைப் பருகியும்;* ***சூது உந்தலின*** - *தாயமாடும் முதலிய விளையாட்டுகளனைத்தும் ஆடியும்;* ***அவ்வொள் நகர் சிலருக்குப் பொழுது போம்*** - *அந்த ஒளிமிக்க நகரிலே வாழும் மற்றும் சிலருக்குப் பொழுதுபோகும்.*

*நந்தவனத்திலே மலர்கள் பறித்தும் மான் போல நடந்து இளம் பெண்களுடன் பொய்கையில் நீராடியும் வாயின் செந்நிறம் மாற. தேனைப் பருகியும் தாயமாடியும் சிலருக்குப் பொழுது போகும் என்றதால் இங்குக் கூறப்படுபவர் இளமகளிர் என அறிகிறோம். சூது: தாயமாடுதல். உந்தல்: ஆடுதல். செந்துவர்: பவளச் செம்மை. 66ஆம் பாடல் தொடங்கி நான்கு பாடல்களில் நகர மாந்தரின் பலவகைப் பொழுதுபோக்குக் கூறப்பட்டது.*

கொடிகளும் தோரண வாயிலும்

**கலித்துறை**

***162. நானா விதமா நளி மாதிர வீதி ஓடி.***
***மீன் நாறு வேலைப் புனல் வெண் முகில் உண்ணுமாபோல்.***
***ஆனாத மாடத்திடை ஆடு கொடிகள் மீப் போய்.***
***வான் ஆறு நண்ணி. புனல் வற்றிட நக்கும் மன்னோ.***

***ஆனாத மாடத்திடை ஆடு கொடிகள்*** -அந்நகரின் குறைவில்லாத மாடங்களின் மீது ஆடுகின்ற கொடிகள்; ***நானாவிதமா நளி மாதிர வீதி ஓடி*** - நாலாவிதமாகவும் பறந்து பெரிய வான வீதியிலே ஓடி; ***மீன் நாறு வேலைப்புனல்*** - மீன் நாறும் கடல் நீரினை; ***வெண் முகில் உண்ணுமா போல*** - வெண்மை நிறமுடைய மேகங்கள் பருகுவது போல; ***மீப் போய்*** - மேலே சென்று; ***வான் ஆறு நண்ணி*** - வானாறாகிய ஆகாய கங்கையை அடைந்து; ***புனல்வற்றிட நக்கும்*** - அதன் தண்ணீர் வற்றும்படி நக்கும்.

*அந்த நகரத்து மாடங்களின் மீது ஆடும் கொடிகள் வானவிதியிலே மேலே சென்று மேகங்கள் கடல் நீரைப் பருகுவது போல ஆகாய கங்கையின் நீர் வற்றும்படி நக்கும் என்றார். நானா விதமா: நாலா விதங்களிலும். ஆனாத: குறையாத. மீப் போய்: மேலே சென்று. வானாறு: ஆகாய கங்கை. மன்னோ: அசை. கொடிகளின் சிறப்பை உயர்த்திக் கூறியதால் உயர்வு நவிற்சி அணி.*

***163. வன் தோரணங்கள் புணர் வாயிலும். வானின் உம்பர்
சென்றுஓங்கி. 'மேல்ஓர் இடம் இல்' எனச் செம்
பொன் இஞ்சி
குன்று ஓங்கு தோளோர் குணம் கூட்டு இசைக் குப்பை
என்ன-
ஒன்றோடு இரண்டும். உயர்ந்து ஓங்கின. ஓங்கல் நாண.***

***வன் தோரணங்கள் புணர் வாயிலும்*** -வன்மையான தோரணங்கள் பொருந்திய வாயில்களும்; ***செம்பொன் இஞ்சி ஒன்றோடிரண்டும்*** - செம்பொன்னால் அமைந்த மதில்கள் ஒன்றோடிரண்டாகிய மூன்றும்; ***வானின் உம்பர் சென்று ஓங்கி*** -வானத்தின் மேலே சென்று உயர்ந்து; ***மேல் ஓர் இடம் இல் என*** - அதற்கு மேலே செல்ல ஒரு இடமும் இல்லை என்பதால்; ***குன்று ஓங்கு தோளோர்*** - மலை போன்ற தோள்களை உடைய அந்நகரத்து ஆண்களின்; ***குணம் கூட்டு இசைக் குப்பை என்ன*** - சிறந்த குணங்களுடன் கூடிய நட்புள்ளம் புகழ்த் தொகுதி ஆகிய நல்ல பண்புகள் உயர்ந்திருப்பது போல; ***ஓங்கல் நாண உயர்ந்தோங்கின*** - வாயில் மதில் ஆகியவைகளின் உயரத்தைக் கண்டு மலையும் நாணுமாறு உயர்ந்து விளங்கின.

*'இஞ்சி ஒன்றோடிரண்டு' என்பதற்கு அக நகர். இடை நகர். புறநகர் மதில்கள் மூன்று என்பது கருத்து. கூட்டு: நட்பு. இசைக்குப்பை: புகழ்த் தொகுதி. ஓங்கல்: மலை. இஞ்சி: மதில். 70. 71. இரண்டு பாடல்களாலும் கொடிகளும். தோரண வாயிலும் சிறப்பித்துக் கூறப்பட்டன.*

***164. காடும். புனமும். கடல் அன்ன கிடக்கும். மாதர்
ஆடும் குளனும். அருவிச் சுனைக் குன்றும். உம்பர்
வீடும். விரவும் மணப் பந்தரும். வீணை வண்டும்
பாடும் பொழிலும். மலர்ப் பல்லவப் பள்ளி மன்னோ!***

***காடும் புனமும் கடலன்ன கிடங்கும்*** - *அந்நகரைச் சூழ்ந்த காடுகளிலும் கொல்லைகளிலும் கடல் போன்ற அகழியின் ஓரங்களிலும்;* ***மாதர் ஆடும் குளனும்*** - *பெண்கள் நீர் விளையாடும் தடாகங்களிலும்;* ***அருவிச் சுனைக் குன்றும்*** - *அருவிகளையும். சுனைகளையும் உடைய மலைகளிலும்;* ***உம்பர் வீடும்*** - *மேல் வீடுகளிலும்;* ***விரவும் மணப்பந்தரும்*** - *பறபல இடங்களிலும் விரவியுள்ள முத்துப் பந்தர்களிலும்;* ***வீணை வண்டும் பாடும் பொழிலும்*** - *வீணை போல வண்டுகள் ரீங்காரம் செய்யும் சோலைகளிலும்;* ***மலர்ப்பல்லவப் பள்ளி மன்னும்*** - *(ஆகிய இடங்களிலெல்லாம்) மலர்களாலும் தளிர்களாலும் அமைந்துள்ள படுக்கைகள் நிலைத்திருக்கும்.*

*அந்நகரத்தில் வாழ்பவர்களின் செல்வச் செருக்கையும் கவலை இல்லாமையையும். களிப்பின் மிகுதியையும் காட்டி நிற்கும் பாட்டு இது. வீறு கோள் அணியாகும். மாதர்: அழகு - பண்பாகு பெயர் (பெண்களை உணர்த்தி நின்றது). பல்லவம்: இளந்தளிர். உம்பர்வீடு: மேன்மாடி. மன்னோ: அசை.*

***165. தெள் வார் மழையும். திரை ஆழியும் உட்க. நாளும்.***
***வள் வார் முரசம் அதிர் மா நகர் வாழும் மாக்கள்-***
***கள்வார் இலாமைப் பொருள் காவலும் இல்லை; யாதும்***
***கொள்வார் இலாமைக் கொடுப்பார்களும் இல்லை மாதோ.***

**தெள்வார் மழையும் திரை ஆழியும் உட்க** - *தெளிந்த நீரைத் தரும் மேகங்களும் அலைகளை உடைய கடலும் அஞ்சும்படி;* **நாளும் வள்வார் முரசம் அதிர் மாநகர்** - *நாள்தோறும் தோல் வாரினால் கட்டிய பேரிகைகள் எப்போதும் ஒலித்துக் கொண்டிருக்கும் அந்நகரில்;* **வாழும் மாக்கள்** - *வாழ்கின்ற ஐயறிவே உடைய மாக்களிடையே கூட;* **கள்வார் இலாமைப் பொருள் காவலும் இல்லை** - *களவு செய்பவர் இல்லாமையால் பொருள்களைக் காவல் காப்பவரும் இல்லை;* **யாதும் கொள்வார் இலாமை கொடுப்பார்களும் இல்லை** - *எதையும் யாசிப்பவர் இல்லையாதலால் கொடையாளிகளும் அந்த நகரத்தில் இல்லை.*

*வறுமைப் பிணியும். அதன் காரணமாகச் செய்யும் களவு முதலிய வஞ்சகச் செயல்களும் அயோத்தி நகரில் இல்லை என்பது கருத்து. மாக்கள் என்பது அறிவில் தாழ்ந்தவர்களைக் குறிக்கும் "மாவும் மாக்களும்" ஐயறிவினவே" என்பது தொல்கப்பியம் அறிவுக் குறை உள்ளவர்களிடை களவு செய்யும் கீழ்மை இல்லை என்பது கருத்து. தெள்வார் மழை என்பதற்கு தெளிவுடைய மேகம் என்றும் பொருள் கூறலாம். ஆயினும் தெளிந்த நீரைத் தரும் மேகம் என்பதே சிறப்பு. மாதோ: அசை.*

***166. கல்லாது நிற்பார் பிறர் இன்மையின். கல்வி முற்ற***
***வல்லாரும் இல்லை; அவை வல்லர் அல்லாரும் இலை;***
***எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தலாலே.***
***இல்லாரும் இல்லை; உடையார்களும் இல்லை மாதோ.***

***கல்லாது நிற்பார் பிரர் இன்மையின்*** - *நல்ல கலை நூல்களைப் படிக்காது நிற்பவர்களாகிய வீணர்கள் இல்லாமையாலே;* ***கல்வி முற்ற வல்லாரும் இல்லை*** - *கல்வியில் முற்றும் வல்லவர் என்று அங்கு எவரும் இல்லை;* ***அவை வல்லர் அல்லாரும் இல்லை*** - *அக் கல்வித் துறைகளில் வல்லவரும். அஃது இல்லாதவரும் இல்லை;* ***எல்லோரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தலாலே*** - *அந்நகரில் வாழ்பவர்கள் எல்லோரும் கல்வி. பொருள் ஆகிய எல்லாச் செல்வமும் அடைந்திருப்பதாலே;* ***இல்லரும் இல்லை உடையார்களும் இல்லை*** - *அந்த நகரத்திலே இல்லாதவரும் இல்லை. உடையவர்களும் இல்லை.*

*இப்பாடல் அந்நகரத்தவரின் அறிவுப் பெருக்கத்தையும். செல்வச் சிறப்பினையும் தெரிவிக்கிறது. கல்லாத வீணரைப் 'பிறர்' என்றார். அங்குக் கற்றவர்-கல்லாதவர் என்ற வேறுபாட்டையோ. செல்வர். வறியவர் என்ற வேறுபாட்டையோ காண இயலாது என்பது கருத்து.74*

***167. ஏகம் முதல் கல்வி முளைத்து எழுந்து. எண் இல் கேள்வி***
***ஆகும் முதல் திண் பணை போக்கு. அருந் தவத்தின்***
***சாகம் தழைத்து. அன்பு அரும்பு. தருமம் மலர்ந்து.***
***போகங் கனி ஒன்று பழுத்தது போலும் அன்றே.***

***ஏகம் முதல் கல்வி முளைத்து எழுந்து*** - *கல்வி என்னும் ஒரு வித்து ஒப்பற்றதாக முளைத்து மேலெழுந்து;* ***எண்ணில் கேள்வி ஆகும்*** - *எண்ணற்ற பல்நூல் கேள்வியாகிய;* ***முதல் திண்பணை போக்கி*** *-முதன்மையும். வலிமையும் வாய்ந்த கிளைகளை எங்கும் பரவச் செய்து;* ***அரும் தவத்தின் சாகம் தழைத்து*** - *அரிய தவமாகிய இலைகள் தழைத்து;* ***அன்பு அரும்பி*** - *எல்லா உயிர்களிடமும் செலுத்தும் அன்பாகிய அரும்பு அரும்பி;* ***தருமம் மலர்ந்து*** - *அறச் செயல்களாகிய மலர்கள் மலர்ந்து;* ***போகம் கவி ஒன்று*** - *இன்ப அநுபவம் என்னும் பழத்தை;* ***பழுத்தது போலும்*** - *பழுத்த பழ மரத்தைப் போன்று (அந்த அயோத்தி மாநகர்) பொலிந்து விளங்கியது.*

*அயோத்தியின் சிறப்பைக் கூறும் இப்பாடல் முற்றுருவகம். கல்வியால் அடக்கம்; அடக்கத்தால் நல்வாழ்வு- நல்வாழ்வால் பொருள்- அற வழியே பெற்ற பொருளால் அறம். அவ்வறத்தால் இன்ப அநுபவம் கிடைக்கும் என்பதனை நயம்படக் கூறும் பாட்டு இது எனலாம்.*

## அரசியற் படலம்

அந்தக் கோசல நாட்டின் மன்னனான தயரதச் சக்கரவர்த்தியினது ஆட்சிச் சிறப்பைக் கூறும் பகுதி இது. தயரதனின் பெருமை- குடைச்சிறப்பு - அரசு செய்யும் திறம் ஆகியவைகளை இந்தப் படலத்தில் காணலாம். முதல் ஆறு பாடல்களால் தயரத வேந்தனது தனிப்பெருஞ்சிறப்பைக் கூறுகிறார்.

***168.*** **அம் மாண்நகருக்கு அரசன் அரசர்க்கு அரசன்;**
**செம் மாண் தனிக் கோல் உலகு ஏழினும் செல்ல நின்றான்;**
**இம் மாண் கதைக்கு ஓர் இறை ஆய இராமன் என்னும்**
**மொய்ம் மாண் கழலோன்-தரு நல் அற மூர்த்தி அன்னாங்**

***அம்மாண் நகருக்கு அரசன்*** - அத்தகைய மாண்பு மிகுந்த நகரத்துக்கு அரசனாய் இருப்பவன்; ***அரசர்க்கு அரசன்*** - மன்னர்களுக் கெல்லாம் மன்னனான சக்கரவர்த்தி; ***மாண் தனிக் கோல்*** - மாட்சிமை மிக்க தனது ஒப்பில்லாத செங்கோலாகிய ஆட்சிமுறை; ***உலகு ஏழினும் செல்ல நின்றான்*** - ஏழு உலகங்களிலும் செல்லுமாறு ஆட்சி செய்து நிலைத்தவனாவான். மேலும் அவன்; ***இம்மாண் கதைக்கு ஓர் இறையாய*** - இந்தப் பெருமைபொருந்திய இராமாயணம் என்னும் கதைக்குத் தலைவனான; ***இராமன் என்னும் மொய்மாண் கழலோன்தரு*** - இராமன் என்ற பெயரை உடைய வன்மையும் பெருமையும் உள்ள வீரக்கழல் அணிந்தநம்பியைப் பெற்ற; ***அன்னான் நல்லற மூர்த்தி*** - நல்லறத்தின் வடிவமுமாவான்.

*'அம்மாண்நகர்' என்பதிலுள்ள அகரச்சுட்டு. நகரப்படலத்தில் கூறிய பெருமையை எல்லாம் குறித்து நின்றது. 'தனி': தயரதனது ஒப்பற்ற ஆட்சியை உணர்த்தும் 'கோல்': நல்லாட்சியைக் குறிக்கும் ஒரு மரபுச் சொல். இவ் வேந்தனது ஆணை எவ்வுலகினிலும் செல்லும் என்பதனை 'உலகேழினும் செல்ல' என்றார். இறை: தலைவன். மெய்: வலிமை. ராமன்: அழகன் என்ற பொருள் உடையச் சொல்லாகும். மூர்த்தி: உருவம் (வடிவம்). நல்லறமே திரண்டு ஓர் வடிவானவன் என்பது பொருள்*

***169.*** **ஆதிம் மதியும். அருளும். அறனும். அமைவும்.**
**ஏதில் மிடல் வீரமும். ஈகையும். எண் இல் யாவும்**
**நீதிந் நிலையும். இவை நேமியினோர்க்கு நின்ற**
**பாதி; முழுதும் இவற்கே பணி கேட்ப மன்னோ.**

***ஆதி மதியும் அருளும்*** - முதன்மையாகிய மெய்யறிவும். அருளும்; ***அறனும் அமைவும்*** - தனக்குக் கூறிய அறநெறி தவறாமையும் சாந்த குணமும்; ***ஏதில் மிடல் வீரமும்*** - குற்றமற்ற வலிமை பொருந்திய வீரமும்; ***ஈகையும் நீதி நிலையும்*** - கொடையும். நீதியின்கண் நிற்றலும்; ***எண்ணில் யாவும் இவை*** - போன்ற நற்பண்புகளாகிய இவை; ***நேமியினோர்க்குப் பாதிநின்ற*** - மற்ற அரசர்களுக்குப் பாதியே நின்றன; ***முழுதும் இவற்கே பணிகேட்ப*** - அக்குணங்கள் முழுவதும் இந்தத் தசரத மன்னனுக்கே ஏவல் கேட்டு நிற்பனவாகும்.

*மன் ஒ: அசைச் சொற்கள். கேட்ப: எதிர்கால வினை. அமைவு: நிறைவுமாம். 'நேமியினோர்க்கு அவை நின்று' எனவும் இவற்கு பணி கேட்ப எனவும் கூறியதன் நயம் கருதத்தக்கது. தொடர்பில்லாதவரிடமும் செல்லும் அருள்உடையான் ஆதலின் தொடர்புடையவரிடம் அன்பும் உடையான் என்பது தானே புலனாகும். 'எண்ணில்' என்றதற்கு யோசித்துப் பார்த்தால் என்பதும் பொருளாம். "நட்பும். தயையும். கொடையும் பிறவிக்குணம்" என்றபடி பிறப்பில் அமைந்த இயல்பான அறிவையே 'ஆதிமதி' என்றார். "ஆதிம்மதி" நீதிந்நிலை என ஓசை நயம் கருதி மிக்கது. விரித்தல் விகாரம்.*

***170. மொய் ஆர்கலி சூழ் முது பாரில். முகந்து தானக்***
***கை ஆர் புனலால் நனையாதன கையும் இல்லை;***
***மெய் ஆய வேதத் துறை வேந்தருக்கு ஏய்ந்த. யாரும்***
***செய்யாத. யாகம் இவன் செய்து மறந்த மாதோ.***

***மொய் ஆர்கலி சூழ் முது பாரில்*** *- நிறைந்த கடலால் சூழ்ப் பட்டதும் பழமை வாய்ந்ததுமான இந்த உலகத்தில்;* ***முகந்து தானக் கை ஆர்புனலால்*** *- வாரிமுகந்து. தானம் செய்கின்ற கையில் நிறைந்த நீரினால்;* ***நனையாதன கையும் இல்லை*** *- நனைக்கப் பெறாத கைகளும் இல்லை;* ***மெய்யாய வேதத்துறை வேந்தருக்கு*** *- நிலைபெற்ற வேத நெறியில் நிற்கும் அரசர்களுக்கு;* ***ஏய்ந்த யாரும் செய்யாத யாகம்*** *- பொருந்தியனவான வேறு எவரும் செய்ய இயலாது நின்ற யாகங்கள்;* ***இவன் செய்து மறந்த*** *- இந்த. தசரத மன்னனால் செய்யப்பட்டு மறக்கப் பெற்றவையாகும்.*

*மதோ: அசை. மொய்: வலிமை இங்கு நிறை உணர்த்தி நின்றது. ஆர்கலி: கடல் (நிறைந்த ஓசை உடையது) என்பது பொருளாம். 'முதுபார்' என்றது. உலகின் தொன்மையை நினைந்தென்க. வேந்தர்க்கு ஏய்ந்த யாகங்கள். இராச சூயம் - அசுவமேதம் முதலியனவாகும். வேறு எவராலும் செய்ய இயலாது நின்ற யாகங்கள் எல்லாம். தசரத மன்னன் எப்போதோ செய்து மறந்து விட்டவை.*

*விட்டவையாம்: தானக்கை: தானம் தரும் கை. தானம் வழங்குவதற்கு முன். நீர் வார்த்தல் மரபு. தயரதன் வார்த்த நீரால் நனையாத கைகளே இல்லை என்கிறார் கவி. இது. பிறிதினவிற்சி யணியாம்.*

***171. தாய் ஒக்கும் அன்பின்; தவம் ஒக்கும் நலம் பயப்பின்;***
***சேய் ஒக்கும். முன் நின்று ஒரு செல் கதி உய்க்கும் நீரால்;***
***நோய் ஒக்கும் என்னின் மருந்து ஒக்கும்; நுணங்கு கேள்வி***
***ஆயப் புகுங்கால். அறிவு ஒக்கும்;- எவர்க்கும் அன்னான்.***

***அன்னான்*** - *மன்னர் மன்னனான அத்தயரதன்;* ***எவர்க்கும்*** - *தனது ஆட்சிக் கடங்கியகுடிமக்கள் எவர்க்கும்;* ***அன்பின்தாய் ஒக்கும்*** *-அன்பு செலுத்துவதில் பெற்ற தாயை ஒப்பவனாவான்;* ***நலம் பயப்பின் தவம் ஒக்கும்*** - *நன்மை செய்வதில் தவத்தைப் போன்றவனாவான்;* ***முன்நின்று ஒரு செல்கதி உய்க்கும் நீரான்*** - *தாய்தந்தையரின் கடைசிக் காலத்தில் முன்னே நின்று. இறுதிச்சடங்குகளைச் செய்து அவர்களை நற்கதியில் சேரச் செய்யும் தன்மையினால்;* ***சேய் ஒக்கும்*** - *அவர்கள் பெற்ற மகனை ஒத்திருப்பான்;* ***நோய் ஒக்கும்என்னின்*** - *குடிமக்களுக்கு நோய்வருமாயின்;* ***மருந்து ஒக்கும்*** - *அதைப் போக்கி. குணப்படுத்தும் மருந்து போன்றவனுமாவான்;* ***நுணங்கு கேள்வி ஆயப்புகுந்தால்*** - *நுணுக்கமான கல்வித்துறைகளை ஆராயப்புகும் போது;* ***அறிவு ஒக்கும்*** - *நுட்பமான பொருளைக் காணும் அறிவினையும் ஒத்திருப்பான்.*

*தாயன்பு சிறந்தது. ''தாயினும் சாலப்பரிந்து'' என. இறையன்புக்கே தாயன்பை உவமையாக கூறினர் மேலோர். தனது குடிமக்களிடம் தாய் போல் அன்புடையவன். நன்மை புரிவதில் தவம் போன்றவன்; நற்கதியடையச் செய்வதில் சேய் போன்றவன்; நோயுறும் காலை. அதைப் போக்கும் மருந்து போன்றவன்; ஆராய்ச்சிக்கு உதவும் அறிவு போன்றவன் என்றெல்லாம் தயரதனுடைய பண்பைச் சிறப்பித்துக் கூறுகிறார். குருகுமாரனான சிரவணனுடைய பெற்றோர்களுக்கு இறுதிச் சடங்குகளைச் செய்து -அவர்களைச் செல்கதி உய்த்த செயல் இவனது. ''சேயொக்கும்'' என்பது சிறப்பாகப் பொருந்துவதொன்றுதானே! 'அறிவு' குணவாகு பெயராய் அறிவுடையானை உணர்த்தி நின்றது.*

***172. ஈந்தே கடந்தான். இரப்போர் கடல்; எண் இல் நுண் நூல்***
***ஆய்ந்தே கடந்தான். அறிவு என்னும் அளக்கர்; வாளால்***
***காய்ந்தே கடந்தான். பகை வேலை; கருத்து முற்றத்***
***தேய்ந்தே கடந்தான். திருவின் தொடர் போக பௌவம்.***

***இரப்போர்கடல் ஈந்தே கடந்தான்*** - *அவ்வரசன். தன்னிடம் யாசிப்பவர்கள் என்னும் கடலை 'ஈதல்' என்றும் தெப்பம்கொண்டு கடந்தான்;* ***அறிவு என்னும் அளக்கர் எண்ணில் நுண்நூல் ஆய்ந்தே கடந்தான்*** - *அறிவு என்ற கடலை. எண்ணற்ற நுண்ணிய நூலாராய்ச்சி என்ற படகு கொண்டு தாண்டினான்;* ***பகைவேலை வாளால் காய்ந்தே கடந்தான்*** - *பகைவர்கள் என்ற கடலை. வாள் முதலிய படைத்துணை கொண்டு. கோபம்காட்டி நீந்தினான்;* ***திருவின்தொடர் போகபௌவம்*** - *செல்வ வளத்தாலே தொடர்ந்து வரும் இன்பம் என்னும் கடலை;* ***கருத்து முற்றத் தோய்ந்தே கடந்தான்*** - *மனம் நிறைவு பெறும்படி துய்த்தே கடந்தான்.*

*தயரதன். தன்னை நாடிவரும் யாசகர்களை முனியாது. கொடுத்து அனுப்பும் இயல்புடையவன். உயர்ந்த நூல்களைக் கற்றுத் தெளிந்த அறிவுடையவன். எத்துணைப் பகைவர் திரண்டு வரினும் வாள் கொண்டு. கோபம்காட்டி. வெல்லும் வீறுடையவன். உலக இன்பங்களை - மனம் நிறைவுறுமாறு. துய்த்து வாழ்ந்தவன் என்பது கருத்து. அளக்கர். வேலை. பௌவம் என்பன. கடல் என்னும் பொருள் கொண்ட ஒரு பொருட் பன்மொழி. பகை: சாதி யொருமைப்பெயர். பகையரசை உணர்த்தும். இரப்போர்கடல். அறிவென்னும் அளக்கர். பகைவேலை. போக பௌவம் என்பன உருவகங்கள். போக பௌவம் இன்பக் கடல் என்று பொருள் கொண்ட வடமொழித் தொடர்.*

*173*   ***வெள்ளமும். பறவையும். விலங்கும். வேசையர்***
***உள்ளமும். ஒரு வழி ஓட நின்றவன்;***
***தள்ள அருப் பெரும் புகழ்த் தயரதப் பெயர்***
***வள்ளல்; வள உறை அயில் மன்னர் மன்னனே.***

***வள்உறை அயில்*** - *தோலால் ஆன உறையை உடைய வேலைத் தாங்கிய;* ***மன்னர் மன்னன்*** - *அரசர்களுக் கெல்லாம் அரசனாகிய;* ***தள்ள அரும் பெரும்புகழ்*** - *நீக்க முடியாத பெரும்புகழ் படைத்த;* ***தயரதப்பெயர் வள்ளல்*** - *தயரதன் என்னும் பெயருடைய வள்ளல் ஆட்சியில்;* ***வெள்ளமும். பறவையும் விலங்கும் வேசையர் உள்ளமும்*** - *வெள்ளப் பெருக்கும். பறவைகளும். விலங்குகளும். விலைமாதர் உள்ளமும்;* ***ஒருவழி ஓட நின்றவன்*** - *ஒரேவழியில் தம் எல்லை கடவாது சென்றன. இவ்வாறு செய்து புகழில் நிலைத்து நின்றான்.*

*செங்கோலாட்சியால். அறம் தவறாது ஆண்டு வருபவன் தயரதச் சக்கரவர்த்தி என்பது கருத்து. வெள்ளம் ஒரு வழி ஓடுதலாவது மழை மிகுதியாகவும் பெய்யாது. குறைவாகவும் பெய்யாது அளவோடு பெய்வதால் வெள்ளமும் கரைகடவாது செல்லுதலாம்; பறவைகளும் விலங்குகளும் பகைமையின்றித்தமக்குரிய வாழ்விலே நின்றன. பலரை நாடிச் செல்லும் விலைமாதர் மனமும் ஒருவனையே அடைந்து விரும்பி இருக்கும். தயரதனது அறம் கடவாத ஆட்சியினால் இந்த அதிசயம் நிகழ்ந்தது என்கிறார்.* *உலகுடையான்*

*174.*   ***நேமி மால் வரை மதில் ஆக. நீள் புறப்***
***பாம மா கடல் கிடங்கு ஆக. பல் பணி***
***வாம மாளிகை மலை ஆக. மன்னற்குப்***
***பூமியும் அயோத்தி மா நகரம் போலுமே.***

***நேமி மால்வரை மதில் ஆக*** - *சக்கரவாளம் என்னும் பெயருடைய உலகைச் சூழ்ந்திருக்கும் பெருமலையே மதிலாகவும்;* ***நீள்புறப் பாம மாபுறக்கடல் கிடங்காத*** - *நீண்ட. பரப்புடைய பெரும்புறக்கடல் என்னும் பெயருடைய கடலே அகழியாகவும்;* ***மலைபல் மணிவாமம் மாளிகை ஆக*** - *மலைகள் யாவும். பலவகை மணிகள் நிறைந்த அழாகான மாளிகைகள் ஆகவும் இருந்தது;* ***பூமியும் அயோத்தி மா நகரம் போலும்*** - *நிலம் முழுவதுமே அப்பேரரசனது தலைநகரமாகிய அயோத்தி போன்றிருக்கிறது.*

*உலகம் முழுவதும் அவ்வேந்தனது செங்கோல் செல்லும் என்பது கருத்து. 'சக்கரவாளகிரி' என்பது உலகைச் சூழ்ந்திருக்கும் பெருமலை. அப்பெருமலையைச் சூழ்ந்திருக்கும் பெருங்கடல். பெரும்புறக்கடல் என்னும் பெயருடையது என்பது புராண நூல் கருத்து. மால்: மயக்கம். மால்வரை: பார்ப்பவரை வியப்பால் மயங்கச் செய்யும் மலையாகும். பாமம்: பரப்பு. வாமம்: அழகு. ஏ: அசை. அயோத்தி என்பது ஒருவராலும் வெல்ல இயலாதது என்னும் பொருள் உடைய வடமொழிப் பெயர்.*

***175. யாவரும் வன்மை நேர் எறிந்து தீட்டலால்
மே வரும் கை அடை வேலும் தேயுமால்;
கோவுடை நெடு மணி மகுட கோடியால்
சேவடி அடைந்த பொன் கழலும் தேயுமால்***

***யாவரும் வன்மை நேர் எறிந்து*** - எதிர்த்து வரும் எவருடைய வலிமைக்கும் ஈடுகொடுத்து நேருக்கு நேர் நின்று வெல்லும் போரை; ***தீட்டலால்*** - அடிக்கடி செய்வதால் ஓரமும். முனையும் மழுங்கி அவற்றை அடிக்கடி நீட்டுவதாலே; ***மேவரும் கையடை வேலும் தேயும்*** - விரும்புகின்ற கைவிடாப்படைகளான வேலும் வாளும் தேயும்; ***கோ உடை நெடு மணி மகுட கோடியால்*** - தன்னை வணங்கும் அரசர்களது நீண்டமணி மகுடவரிசையால்; ***சேவடி அடைந்தபொன் கழலும் தேயும்*** - தயரது மன்னனது கால்களில் பொருந்தியுள்ள பொன்னால் ஆகிய வீரக்கழல்களும் தேயும்.

*தயரத மன்னனது போரற்றலும். மன்னர் பலரும் பணிந்து வணங்கும் பெருமையும் கூறப்பட்டது. கையடை - கைவிடாப்படை. அடிக்கடி போர் செய்வதால். மழுங்குகிறது. மீண்டும் கூர்மை ஆக்கத் தீட்டுவதால் தேய்கிறது என்பது கருத்து. சிற்றரசர்கள் பலரும் சேவடி தொழுதலால். அவர்களது மணிமுடிகள் உராய்ந்து பொற் கழல்தேய்கிறது என்கிறார். இனிப் பகைவரின்மையால் துருவேறி. கறை பிடிப்பதால் - அடிக்கடி தீட்டுதலால் தேயும் எனவும் கூறுவர். மகுட கோடி: மகுட வரிசை வேலும் என்பது உபலட்சணத்தால் பிற கருவிகளையும் குறிக்கும். சேவடி: சிவந்த பாதங்கள். வேலும். கழலும் உம்மைகள் எண்ணுப்பொருள் உடையவை.*

***176. மண்ணிடை உயிர்தொறும் வளர்ந்து. தேய்வு இன்றி.
தண் நிழல் பரப்பவும். இருளைத் தள்ளவும்.
அண்ணல்தன் குடை மதி அமையும்; ஆதலான்.
விண்ணிடை மதியினை. 'மிகை இது' என்பவே.***

***வளர்ந்து தேய்வு இன்றி*** - நாளுக்கு நாள் வளர்ந்து. தேய்தலில்லாமல்; ***மண் இடை உயிர்தொறும்*** - உலகிடை வாழும் உயிர்கள் தோறும்; ***தண் நிழல் பரப்பவும்*** - குளிர்ந்த நிழலை எங்கும் பரப்பவும்; ***இருளைத்தள்ளவும்*** - இருளே இல்லாமல் நீக்கவும்; ***அண்ணல் தன் குடைமதி*** - பெருமைமிக்க தயரதனது வெண்கொற்றக் குடையாகிய மதியே; ***அமையும் ஆதலால்*** - போதும் (பொருந்தும்) ஆதலாலே; ***விண் இடைமதியினை*** - வானில் உள்ள வளர்தலும் தேய்தலுமுடைய சந்திரனை; ***இதுமிகை என்ப*** - இந்த மதி கோசல நாட்டினுக்கு வேண்டாத ஒன்று என்பர்.

*என்ப: என்று கூறுவர் மேலோர். தசரத மன்னனது ஆட்சிச் சிறப்பால் உயிரினங்கள் அகத்துன்பமும். புறத்துன்பமும் தீரும் என்பது அகவிருள். புறவிருள் இரண்டும் நீங்கும் என்பது கருத்து.*

*விண்மதி விண்ணில் நின்று. தேய்தலும் வளர்தலும் உடையதாக உலகின் புற விருள்போக்கி. தண் ஒளி பரப்பும் தகைமை உடையது. இடை மதியோ. தேய்தலும் வளர்தலுமின்றி. மண்ணிடையும். விண்ணிடையும் வாழும் உயிர்கள் எல்லாவற்றினுடைய அக. புற இருள்களை நீக்கி. தண்ணிழலைப்பரப்புகின்றது என்கிறார். மாமன்னனின் வெண்கொற்றக்குடைச்சிறப்பு கூறியதாயிற்று.*

***177. வயிர வான் பூண் அணி மடங்கல் மொய்ம்பினான்.***
***உயிர் எலாம் தன் உயிர் ஒக்க ஓம்பலால்.***
***செயிர் இலா உலகினில். சென்று. நின்று. வாழ்***
***உயிர் எலாம் உறைவது ஓர் உடம்பு ஆயினான்.***

***வயிர வான் பூண் அணி*** *- வயிரம் இழைத்துச் செய்யப்பட்ட அழகிய அணிகலன்களை அணிந்துள்ள;* ***மடங்கல் போல் மொய்ம்பினான்*** *- சிங்கம் போன்று வலிமை உள்ள தயரத மன்னன்;* ***உயிர் எலாம் தன் உயிர் ஒக்க ஓம்பலால்*** *- மன்னுயிர் அனைத்தையும் தன்னுயிர் போலக் கருதிக் காத்துவருவதால்;* ***செயிர் இலா உலகினில்*** *- குற்றமில்லாத இப்பேருலகத்திலே;* ***சென்று. நின்று வாழ்உயிரெலாம்*** *- இயங்கியற்பொருள். நிலையிற் பொருள்களாக இருந்து வாழும் உயிரெல்லாம்;* ***உறைவது ஓர் உடம்பு ஆயினன்*** *- தங்கி வாழ்வதற்குத்தக்க பெருமைமிக்க உடம்பாகவும் ஆனான்.*

*தயரதன் அன்பாலும் அருளாலும் உயிர்கள் அனைத்தின் விருப்பம் நிறைவேற்றுகின்ற உடலாக மட்டுமே இருந்தான் என்னும் புதுக்கருத்தை கவிச்சக்கரவர்த்தி வெளியிடுகிறார். கம்பர் காலம் வரை இலக்கியங்கள் மன்னனை உயிர் எனவே கூற. கம்பன் மறுதலையான. புரட்சிகரமான இக்கருத்தை முதன் முறையாக வெளியிட்டுள்ளார்.*

*மடங்கல்: சிங்கம். "வயிரவான் பூண்" என்பதற்குத் தோளணியாகிய 'வாகுவலயம்' என்றும் கூறுவர். சென்று வாழ்உயிர். நின்றுவாழ் உயிர் எனக் கொண்டு சாம். அசாம் என்றிரண்டு வகை உயிர்களாகக்கொள்க. இது முதல் ஒன்று பாடல்களால் தயரதன் அரசு செய்யும் திறம் கூறப்படுகின்றது.*

***178. குன்றென உயரிய குவவுத் தோளினான்.***
***வென்றிஅம் திகிரி. வெம் பருதியாம் என.***
***ஒன்றென உலகிடை உலாவி. மீமிசை***
***நின்று. நின்று. உயிர்தொறும் நெடிது காக்குமே.***

***குன்று என உயரிய*** - *மலைபோலும் வளர்ந்து ஓங்கிய;* ***குவவுத் தோளினான்*** - *திரண்ட தோள்கள் கொண்ட தயரதனுடைய;* ***வென்றி அம்திகிரி*** - *வெற்றிமிக்க ஆணைச் சக்கரமானது;* ***வெம்பரிதி ஆம்என*** - *வெம்மையுடைய சூரியனோ என்னும்படி;* ***மீமிசை நின்று*** - *மிக உயரமான வானிலே நின்றும்;* ***ஒன்று என*** - *ஒன்றாகிய பரம்பொருளைப் போல;* ***உலகிடை உயிர்தொறும் உலாவி நின்று*** - *உலகில் வாழும் சர. அசரங்களாகிய உயிர்கள் தோறும் உலாவி. நின்று;* ***நெடிது காக்கும்*** - *பெரிதும் காத்தல் தொழிலைச் செய்யும்.*

*பரம்பொருள் ஒன்றாக நின்று. உயிர்தொறும் உலாவி. நெடிது காத்தல் போல வென்றியம் திகிரி. பரிதியாமென நின்று காக்கும் என்பது கருத்து. குன்று: தோளின் திரட்சி உயர்ச்சிவுண்மையாலும் உவமையாகும். 'ஒன்றென' என்பதற்கு. பொதுவறத் தனித்தே நின்று என. திகிரிக்கு ஏற்றிக் கூறினும் பொருந்தும்.*

*குன்றென. பருதியாம் என. ஒன்று என. என்றுவரும் 'என' என்பன உவமை உருபுகள். நெடிது: நீண்டகாலம் என்னும் பொருளும் கூறுதல் பொருந்தும். குவவுத் தோள்: திரண்டதோள். வெம்பருதி: வெப்பமும் ஒளியும் தரும் சூரியன். மீமிசை: மிகமேலே (மீமிசைச் சொல்). காக்குமே: என்பதில் 'ஏ' அசை. பருதிஆம்: பருதி ஆகும் (இடைக்குறை)*

***179. 'எய்' என எழு பகை எங்கும் இன்மையால்.***
**மொய் பொறாத் தினவு உறு முழவுத் தோளினான்.**
**வையகம் முழுவதும் வறிஞன் ஓம்பும் ஓர்**
**செய் எனக் காத்து. இனிது அரசு செய்கின்றான்.**

***எங்கும் எய்என எழுபகை இன்மையால்*** - *(அம் மன்னனுக்கு) எவ்விடத்திலும் விரைந்து எழுகின்ற பகைவர்கள் இல்லாமையால்;* **மொய் பொறா தினவு உறு** - *போர்த் தொழிலே பெறாமையால் தினவு கொண்டனவான;* **முழவுத் தோளினான்** - *மத்தளம் போன்ற திரண்ட தோள்களை உடைய அவ்வரசன்;* **வையகம் முழுவதும்** - *உலகில் வாழும் உயிர்கள் அனைத்தையும்;* **வறிஞன் ஓம்பும் ஓர் செய்என** - *வறியவன் தனக்குள்ள ஒரே வயலைக் கண்ணும் கருத்துமாகப் பாதுகாப்பது போல;* ***காத்து. இனிது அரசுசெய்கின்றான்*** - *பாதுகாத்து இனிமையான ஆட்சிசெய்து வருகிறான்.*

*மொய்பெறா: போர் செய்தல் இல்லாமையால் தோள்கள் தினவுறுதல் இயற்கை. தோளுக்கு 'முழவு திரட்சியால் உவமை ஆயிற்று. பெறா: பெறாத ஈறு கெட்ட எதிர் மறைப்பெயரெச்சம். ஓம்புதல்: காத்தல்; உறு தோள்: வினைத்தொகை.*

*'எய் என' என்பதற்கு அம்புகளை எய்யுங்கள் என்று சொல்லும்படி எழுகின்ற பகை எனவும் பொருள் கூறுவர்.*

## திரு அவதாரப் படலம்

*திருமாலின் அவதாரமான ராமபிரான் அவதாரம் செய்ததைக் கூறும் பகுதியாகும். இதில் தயரத மன்னன் மகப் பேறின்றி இருத்தலை வசிட்ட முனிவரிடம் கூறுதலும். வசிட்டர் தேவர்களுக்குத் திருமால் அருளியதைச் சிந்தித்தலும் புதல்வரை அளிக்கும் வேள்வி செய்யத் தயரதனுக்கு வசிட்டர் கூறுதலும். கலைக்கோட்டு முனிவரால் வேள்வி நடைபெறுதலும் வேள்வித்தீயில் எழுந்த பூதம் பிண்டம் கொண்டுதருதலும் அப்பிண்டத்தைத் தயரதன் தேவியர் மூவருக்கும் பகிர்ந்தளித்தலும் அதன் காரணமாகத் தேவியர் கருவுறுதலும் ராமன் முதலிய நால்வரும் அவதரித்தலும். புதல்வர்களுக்கு வசிட்டர் பெயர் சூட்டுதலும் பிள்ளைகளின் வளர்ச்சியும் -கல்விப் பயிற்சியும் -யாவரும் போற்ற ராமன் இனிதிருத்தலும் விவரிக்கப்படுகின்றன.*

***180.*** ***ஆயவன். ஒரு பகல். அயனையே நிகர்***
***தூய மா முனிவனைத் தொழுது. 'தொல் குலத்***
***தாயரும். தந்தையும். தவமும். அன்பினால்***
***மேய வான் கடவுளும். பிறவும். வேறும். நீ;***

***ஆயவன்*** *- (மேலே அரசியல் படலத்தில் கூறிய அப்பெருமையெல்லாம் பொருந்தியவனான) அந்தத் தயரத மன்னன்;* ***ஒருபகல் அயனையே நிகர் தூயமாமுனிவனைத் தொழுது*** *-ஒரு நாள் பிரமனுக்கு ஒப்பாகத் திகழும் தூய்மை பொருந்திய மாமுனிவனாகிய வசிட்ட முனிவனை வணங்கி;* ***தொல்குலத்தாயரும். தந்தையும். தவமும்*** *- பழமை பொருந்திய எமது குலத்தாய்மாரும் தந்தைமாரும் தவப்பயன்களும்;* ***அன்பினால் மேயவான் கடவுளும்*** *-அன்பு கொண்டு நான் விரும்பும் கடவுளும்;* ***பிறவும் வேறு நீ*** *- மற்றையோரும். வேறுபட்ட உயிர்களும் அனைத்தும் எனக்குத் தாங்களேதாம். தவம்: புண்ணியமும்ஆம். வான்: உண்மை என்றும் பொருள் கூறலாம். 'பிறவும் வேறும்' என்பது இங்குக் கூறப்படாத மற்றஎல்லாம் என்ற பொருள் தந்து நின்றது. வசிட்டரை மன்னன் எப்படி மதித்துள்ளான் என்பது இதனால் புலப்படும். இது குளகம் நான்காம் பாடலின் ''என்றுளன்'' எனவரும் சொல்லுடன் முடியும். 1*

***181.*** ***'எம் குலத் தலைவர்கள். இரவிதன்னினும்***
***தம் குலம் விளங்குறத் தரணி தாங்கினார்.***
***மங்குநர் இல் என. வரம்பு இல் வையகம்.***
***இங்கு. நின் அருளினால். இனிதின் ஓம்பினேன்.***

***எம் குலத்தலைவர்கள்*** *-எமது சூரிய குலத்தலைவர்கள் எல்லோரும்;* ***இரவிதன்னினும்*** *- தமது குல முதல்வனான சூரியனை விடவும்;* ***தம்குலம் விளங்குற*** *- தங்கள் குலம் விளக்க முறும்படியாக;* ***தரணிதாங்கினார்*** *- இவ்வுலகை ஆதரித்துக் காத்தனர்;* ***மங்குநர் இல்என*** *- புகழில் மயங்கியவர்கள் இல்லை என்னுமாறு;* ***வரம்பில் வையகம்*** *- எல்லைகாண இயலாத இவ்வுலகத்தை;* ***இங்கு நின் அருளினால்*** *- இங்கு. இவ்வயோத்தியிலிருந்தே உனது அருளின் உதவியால்;* ***இனிதின் ஓம்பினேன்*** *- இனிமையுறக் காத்து வந்தேன்.*

*தலைவர்கள்: குடிமக்களுக்குத் தலைமை பூண்டவர்களான அரசர்கள் சூரியன் எங்கும் வெப்பத்தையும். ஒளியையும் பரப்பி. உயிர்களைக் காப்பது போல. சூரிய குலவேந்தர்கள் அச்சூரியனைக்காட்டிலும் சிறப்பாகத் தமது குலத்தை விளங்கச் செய்தனர் என்பது கருத்து. மங்குதல்: அழிதல். குறைதல் என்னும் பொருள் உடையது. இங்கு 'மங்குநர்' புகழில் குறைந்தவர் என்னும் பொருளில் வந்தது. தரணி. 'வையகம்' இரண்டும் உலகம் என்ற பொருள் உடையன. 'மங்குநர்' என்பதிலுள்ள 'நர்' பெயர் விகுதி. 'வையகம்' வையம் எனவும் வழங்கப்பெறும்.*

***182. 'அறுபதினாயிரம் ஆண்டும் மாண்டு உற.***
***உறு பகை ஒடுக்கி. இவ் உலகை ஓம்பினேன்;-***
***பிறிது ஒரு குறை இலை; என பின் வையகம்***
***மறுகுவது என்பது ஓர் மறுக்கம் உண்டுஅரோ.***

***அறுபதினாயிரம் ஆண்டும்*** *-(நான் ஆட்சி செய்த) அறுபதினாயிரம் ஆண்டுகளும்;* ***மாண்டு உற*** *- கழிந்து போகும்படி;* ***உறுபகை ஒடுக்கி இவ் உலகை ஓம்பினேன்*** *- உற்ற பகைவர்களை ஒடுங்குமாறு செய்து. இவ்வுலகத்தைக் காத்து வந்தேன்;* ***பிறிது ஒரு குறை இலை*** *- (எனக்கு) வேறு ஒரு குறைவும் இல்லை;* ***என்பின் வையகம்*** *- எனது ஆட்சிக்குப் பிறகு இந்த உலகம்;* ***மறுகுவது என்பதோர்*** *- (நல்லாட்சியின்றி) குழப்பமடைய நேரிடும் என்று ஒரு;* ***மறுக்கம் உண்டு*** *- மனக்கலக்கம் (எனக்கு) இருக்கிறது.*

*'மாண்டுஉற' மாட்சி பெற்றுப் பொருந்த என்று கூறுதலும் பொருந்தும் 'உறுபகை' என்பதற்கு நேரும்பகை அல்லது மிகுபகை என்றும் பொருள் கொள்ளலாம். உற்றபகை என்பது பொருளானால் வினைத்தொகை மிக்க பகை என்பது பொருளானால் உரிச்சொல் தொடர். நாட்டை அழிப்பதில் முதலிடம் வகிக்கும் பகையை ஒடுக்கியதால் நாட்டிலே எவ்வகைத் தீங்கும் நேராவண்ணம் காத்தான் என்பது கருத்து.*

*மறுகுவது: கழல்வது அல்லது நிலைகெட்டுக் கலங்குவது மறுபக்கம்: மயக்கமுமாம் அரோ: அசை.*

***183.*** ***'அருந் தவ முனிவரும். அந்தணாளரும்.***
***வருந்துதல் இன்றியே வாழ்வின் வைகினார்;***
***இருந் துயர் உழக்குநர் என் பின் என்பது ஓர்***
***அருந் துயர் வருத்தும். என் அகத்தை' என்றனன்.***

***அருந்தவ முனிவரும்*** - *அரியதவத்தை உடைய முனிவர்களும்;* ***அந்தணாளரும்*** - *அறவோர்களாகிய அந்தணர்களும்;* ***வருந்துதல் இன்றியே*** - *யாதும் வருத்தமுறுதல் இல்லாமலே;* ***வாழ்வின் வைகினார்*** - *துன்பமற்று நல்வாழ்விலே இருந்தார்கள்;* ***என்பின் இருந்துயர் உழக்குநர்*** - *(மக்கள் பேறில்லாத) எனது ஆட்சிக்குப் பிறகு (அப் பெரியவர்கள்) மிகவும் துன்பத்தாலே வருந்துவார்களே;* ***என்பதோர் அருந்துயர்*** - *என்பதொரு அரியதுயரமானது;* ***என் அகத்தை வருத்தும் என்றனன்*** - *எனது மனத்தை வருத்திக் கொண்டிருக்கிறது என்றான்.*

*அருந்தவம் அருமைத்தவம் என்றதில் 'மை' கெட்டது. அந்தணாளர்: அந்தண்மையை ஆளுபவர் எனவே அறவோர். வைகினார்: நிலைத்து உள்ளார் என்பதும் பொருளாம். இருந்துயர்: மிகுந்த துன்பம். 'இரு' மிகுதியை உணர்த்தி நின்றது என்பின்: எனக்குப் பிறகு. வருத்தும்: வருந்தச் செய்யும் என்பது பொருள். வாழ்வின்: வாழ்வு என்பதற்கு நல்வாழ்வு என்பது பொருள்.*

*தானும். தனது முன்னோரும் காத்த நெறிகளைத் தனக்குப் பிறகும் பேணிக்காத்து. தனது நற்குணங்களையே பெற்று நாட்டை நன்னெறியில் நிறுத்தி. ஆள. ஒரு புத்திரன் வேண்டுமே என நினைத்த தயரதன் நல்லதந்தையாகத் திகழ்கிறான் எனலாம்.*

*முனிவன் முன்னிய*

***184.*** ***முரசு அறை செழுங் கடை. முத்த மா முடி.***
***அரசர்தம் கோமகன் அனைய கூறலும்.***
***விரை செறி கமல மென் பொகுட்டு மேவிய***
***வர சரோருகன் மகன் மனத்தில் எண்ணினான் -***

***முரசு அறை செழுங்கடை*** - *முரசு முழங்கும் கடைவாயிலை உடையவனும்;* ***முத்தமாமுடி அரசர் தம்கோமகன்*** - *முத்து முதலிய மணிகளால் அமைந்த மணிமுடி தரித்திருப்பவனுமான. மன்னர் மன்னனாகிய தயரதன்;* ***அனைய கூறலும்*** - *அத்தகைய சொற்களைச் சொல்லும் (அது கேட்ட);* ***விரை செறிகமலமென் பொகுட்டு மேவிய*** - *மணம் செறிந்த தாமரை மலரின் அகவிதழ் உச்சியில் அமர்ந்திருப்பவராகிய;* ***வரசரோருகன் மகன்*** - *மேலான நான் முகனது மகனாகிய வசிட்டன்;* ***மனத்தில் எண்ணினான்*** - *(பின்வருவனவற்றை) தனது மனத்திலே நினைப்பானாயினான். முரசு: கொடை. போர். மணம் என்று மூன்று வகையினது. இங்குச் செழுங்கடை என்றதால் கொடை முரசே முழங்கியது எனலாம். முத்தமாமுடி; என்று கூறினும் 'ஒரு மொழி தன் இனம் சுட்டும்' என்றபடி ஏனைய மணிகைளையும் கொள்ளலாம். ''அரசர் நம்கோமகன்'' சக்கரவர்த்தி என்ற பொருளில் வந்தது. வாம்: மேன்மை. சரொருகம்: தாமரை. நீரில் முளைப்பது (சரம் - நீர்; ருகம் -முளைப்பது) அதிலமர்ந்துள்ள பிரமனுக்குப் பெயராகும். 'மனத்தில் எண்ணினான்' என்றது. தான் முன்பே அறிந்த தாயினும் அதனை வெளிப்படுத்தலாகாமையால் ''மனத்திலெண்ணினான்'' என்றார்.*

*மகப்பேறின்மை குறித்து. மன்னன் வசிட்டனிடம் கூறி. வருந்த. அதைக் கேட்ட அம்மாமுனிவன். தேவர்களுக்கு முன்பு திருமால் அருளியதைச் சிந்தித்தான் என்பது கருத்து.*

***185. அலை கடல் நடுவண். ஓர் அனந்தன் மீமிசை.***
***மலை என விழி துயில்வளரும் மா முகில்.***
***'கொலைதொழில் அரக்கர்தம் கொடுமை தீர்ப்பென்' என்று.***
***உலைவுறும் அமரருக்கு உரைத்த வாய்மையை.***

***அலைகடல் நடுவண்*** -*அலைகள் மிகுந்துள்ள பாற்கடல் நடுவே;* ***ஓர் அனந்தன் மீமிசை*** - *ஒப்பற்ற 'அனந்தன்' எனும் பாம்பணை மேலே;* ***மலை என விழிதுயில் வளரும்*** - *கரியமலை போல. கண்வளர்கின்ற;* ***மாமுகில்*** - *பெரிய மேகம் போன்ற (நிறமும். செயலுமுடைய) திருமால்;* ***'கொலை தொழில் அரக்கர் தம் கொடுமை திர்ப்பென்'. என்று*** - *உயிர்களைக் கொல்லுதலே தொழிலாக உடைய அரக்கரின் கொடுமையைத் தீர்ப்பேன் என்று;* ***உலைவு உறும் அமரருக்கு*** - *அவ்வரக்கர்களால் வருந்தும் தேவர்களுக்கு;* ***உரைத்த வாய்மையை*** - *சொன்ன வாக்குறுதியை*

*முந்திய பாடலில் 'எண்ணினான்' என்பதனுடன் ''வாய்மையை'' என்பது முடிகிறது. அலைகடல் என்று பொதுவாகக் கூறினாலும். திருமாலின் உறைவிடமான 'பாற்கடல்' என்று பொருள் உரைக்கப்பட்டது. மீமிசை: உருபின் மேல் உருபு வந்து 'மிக மேலே' என்ற பொருள் தந்து நின்றது. 'மலை' என்ற பொதுச்சொல்லும் திருமாலைக் குறிப்பதாதலின் 'கரியமலை' என்ற பொருளை உடையதாயிற்று. தேவர்களுக்கு அரக்கரால் மரணமில்லை என்பதை உணர்த்த 'அமரர்' என்றார். அமரர்: மரணமற்றவர். வல்மை: வாக்குறுதி. அடுத்து வரும் 23 பாடல்கள் தேவர்களுக்குத் திருமால் வாக்குறுதி அளித்த செயலை விரித்துரைப்பனவாகும்.*

***186. சுடு தொழில் அரக்கரால் தொலைந்து. வான் உளோர்.***
***கடு அமர் களன் அடி கலந்து கூறலும்.***
***படு பொருள் உணர்ந்த அப் பரமன். 'யான் இனி***
***அடுகிலேன்' என மறுத்து. அவரொடு ஏகினான்***

***சுடுதொழில் அரக்கரால்*** - *சுடுகின்ற தொழிலை உடைய அரக்கர்களால்;* ***வான் உளோர் தொலைந்து*** - *வானுலகில் வாழும் தேவர்கள் வாழ்வறிந்து;* ***சுடு அமர்களன் அடிகலந்து கூறலும்*** *-நஞ்சுதங்கிய மிடற்றை உடைய சிவபெருமானது பாதங்களை அடைந்து தமது துன்பத்தைக் கூறலும்;* ***படு பொருள் உணர்ந்து அப்பரமன்*** - *மேலே நிகழவேண்டியவைகளை முன்னரே உணர்ந்துள்ள அப்பெருங்கடவுளான சிவபெருமான்;* ***இனியான் அடுகிலேன் எனமறுத்து*** - *இனி யான் அரக்கருடன் போர்புரிய மாட்டேன் என மறுத்து உரைத்து;* ***அவரொடும் ஏகினான்*** - *அவ்வமரர்களுடன். நான்முகனது இருப்பிடம் நோக்கிச் சென்றான்.*

*நினைக்கும் மனத்தையும் சுடக்கூடிய அத்துணைக் கொடுந்தொழில் என்பார் 'சுடு தொழில்' என்றார். சுடு: நஞ்சு. களன்: கழுத்து. பிறர்க்குத் துன்பம் விளைவிக்கும் நஞ்சைத் தானுண்டு. தேவர்களைக் காத்தார் என்பதைக் குறிப்பிடுவதிது. படுபொருள்: மேல்நிகழும் நிகழ்ச்சி. சிவபெருமானைப் பரமன் (பெருங்கடவுள்) எனக் கூறும் கம்பரது சமய சமரசக் கொள்கை அறிந்து மகிழ்தற்குரியது. 'படுபொருள்' என்றது 'அரக்கர் இனி இன்னாரால் அழிபடுவார்கள்' என்ற அவ் உண்மையை அறிந்தமையால் தான் அடுகிலேன் என்றான். என்றார்.*

***187. வடவரைக் குடுமியின் நடுவண். மாசு அறு***
***சுடர் மணி மண்டபம் துன்னி. நான்முகக்***
***கடவுளை அடி தொழுது. அமர கண்டகர்***
***இடி நிகர் வினையம்அது இயம்பினான் அரோ.***

***வடவரைக் குடுமியின் நடுவண்*** - *மேருமலையின் சிகரத்தின் மத்தியிலே;* ***மாசு அறு சுடர்மணிமண்டபம் துன்னி*** - *குற்றமற்ற ஒளிமிகுந்த மணிகளாலமைந்த மண்டபத்தை அடைந்து;* ***நான்முகக் கடவுளை அடிதொழுது*** - *(அங்கு வந்து சேர்ந்த) பிரமனை அடிவணங்கி;* ***அமரகண்டகர்*** - *தேவர்களுக்குப் பகைவர்களான அரக்கரது;* ***இடிநிகர் வினையம் அது*** - *இடிபோன்ற அக்கொடும் செயல்களை;* ***இயம்பினான்*** - *சொல்லலானான்.*

*வடவரை: மேருமலை. தேவர்கள் தன்னைக் காணவருவதை அறிந்த நான்முகன் மேருமலைச் சிகரத்தில் - மணிமண்டபத்தில் வந்து தங்கியிருந்தான். தேவர்கள் உடன்வர. சிவபெருமான் அங்குச் சென்று அரக்கர்தம் கொடுஞ்செயலைக். கூறினார் என்பது கருத்து.*

*மாசறு சுடர் மணிமண்டபம்: தேவர்கள் கூடி ஆலோசிக்கும் மண்டபம். கண்டமுகம்: முள் அரக்கர்கள் முள் போன்று துன்பம் விளைவிப்பவர் என்பதால் 'கண்டகர்' என்றார். வினை: செயல். 'அம்' சாரியை பெற்று 'வினையம்' என வந்தது வரை: இருமடி யாகு பெயராய் மலையைக் குறித்தது. அரோ: அசை. 8*

***188.** **பாகசாதனன்தனைப் பாசத்து ஆர்த்து. அடல்**
**மேகநாதன். புகுந்து இலங்கை மேய நாள்-**
**போக மா மலர் உறை புனிதன்- மீட்டமை**
**தோகைபாகற்கு உறச் சொல்லினான்அரோ.***

***அடல் மேக நாதன்** - (இராவணனது மகனாகிய) வலிமை மிகுந்த மேக நாதன் (இந்திரசித்து) எனுமரக்கன்; **புகுந்து பாக சாதனன் தனை** - (அமராவதி நகரக்குள்) புகுந்து தேவர்கள் தலைவனான இந்திரனை; **பாசத்து ஆர்த்து** - கயிற்றால் கட்டி; **இலங்கை மேய நாள்** - இலங்கைக்குக் கொண்டு போன போது; **போக மா மலை உறை புனிதன்** - இன்பம். தரும் அழகிய தாமரையில் வாழும் புனிதனாகிய பிரமன். தான்; **மீட்டமை தோகை பாகற்கு உற** - அந்த இந்திரனை மீட்டுவந்ததை உமையொருபாகனாகிய சிவபெருமானுக்குப் பொருந்த; **சொல்லினான்** - எடுத்தியம்பினான்.*

*பாக சாதனன்: இந்திரன் (புண்ணிய பலன்களை உயிர்கள் பெற உதவுபவன்) மேகநாதன்: பிறந்ததும் மேகத்தைப் போல முழங்கியதால் இப்பெயர் பெற்றான் என்பர். இந்திரனைப் போரில் வென்றபின் பெற்ற சிறப்புப் பெயரே "இந்திரசித்து" என்பது. மேகநாதனிடமிருந்து இந்திரனைத் தான் மீட்டுவந்ததை. நான்முகன். சிவன் முதலானவர்களுக்குச் சொன்னான் என்பது கருத்து.*

***189.** **'இருபது கரம். தலை ஈர்-ஐந்து என்னும் அத்**
**திருஇலி வலிக்கு. ஒரு செயல் இன்று. எங்களால்.**
**கரு முகில் என வளர் கருணைஅம் கடல்**
**பொருது. இடர் தணிக்கின் உண்டு. எனும் புணர்ப்பினால்.***

***கரம் இருபது தலை ஈரைந்து என்னும்** - இருபது கைகளும். பத்துத் தலைகளும் உடையவன் என்று சொல்லப்படும்; **அத்திருவிலி வலிக்கு** - அந்த அருட் செல்வமில்லாத இராவணனது உரவலிமை. வரவலிமை ஆகிய வல்லமைக்கு; **எங்களால் ஒரு செயலின்றி** - எங்களால் ஒரு எதிர்ச் செயலும் செய்ய இயலாதவர்களாக இருக்கிறோம்; **கருமுகில் என வளர்கருணையங் கடல்** - கரிய மேகம் போல (பாற்கடலில்) கண்வளர்கின்ற கருணைக் கடலாகிய திருமால் பொருது; **இடர்தணிக்கின்** - அவ்வரக்கருடன் போரிட்டு. எங்கள் துன்பத்தைத் தணித்தால்தான்; **உண்டு எனும் புணர்ப்பினார்** -எங்களுக்கு உய்வுண்டு என்னும் கருத்தினால்.*

*தருவிலி: செல்வமில்லாதவன். 'அ' என்னும் சுட்டால் உய்தற்குக் காரணமாகிய அருட்செல்வத்தை உணர்த்திநின்றது. ஒரு செயல்: சிறு செயலுமாம். 'ஒரு' சிறுமையை உணர்த்தும் அருட்செல்வத்தை மிகுதியும் உடைய திருமாலைக் ''கருணையங்கடல்'' என்றார். கைம்மாறு கருதாது உதவும் தன்மையால் ''கருமுகில்'' என்று திருமால் போற்றப்படுகிறார் அவர். பொருது - அரக்கரை அழித்தால் நமது துன்பம்தீரும் என்ற கருத்தைத் தேவர் உரைத்தனர் என்பது கருத்து. புணர்ப்பு: தந்திரம் என்ற பொருள் உடையது.*

***190. திரைகெழு பயோததி துயிலும் தெய்வவான்***
***மரகத மலையின் வழுத்தி நெஞ்சினால்***
***கரகமலம் குவித்து இருந்து காலையில்-***
***பரகதி உணர்ந்தவர்க்கு உதவு பண்ணவன்.***

**திரை கெழு பயோததி துயிலும்** - *அலைகள் கெழுமிய பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கும்;* ***தெய்வ வான் மரகத மலையினை*** - *தெய்வத்தன்மை பொருந்திய உயர்ந்த மரகதமலை போன்ற திருமாலை;* **நெஞ்சினால் வழுத்தி** - *மனத்தால் வணங்கித் துதித்து;* ***கர கமலம் குவித்து*** -*தாமரை போன்ற கைகளைக் கூப்பி;* **இருந்த காலையில்** - *(தியானித்து) இருந்தபோது;* **பரகதி உணர்ந்தவர்க்கு** - *மேலான கதியிது என உணர்ந்து துதிப்பவர்களுக்கு;* **உதவு பண்ணவன்** - *காலம் தாழ்த்தாது உதவும்திருமால்*

*'வந்து தோன்றினான்' என்ற அடுத்த பாடல் தொடருடன் பொருள் முடிவு பெறும். கெழு: கெழு முதல் (பெருகியிருத்தல்) பயம்: பால். உததி: கடல்; பயோதறி: பாற்கடல். மரகதம்: பச்சை நிறமணி. மரகத மலை: பச்சை மாமலை போன்ற திருமால் உணர்த்தும் உவமையாகு பெயர். பரகதி: மேலாம்துணை. பண்ணவன்: மெய்ஞ்ஞானியாம். நெஞ்சினால் வழுத்தல்: மனத்தால் துதித்தல். கரகமலம் குவித்தல்: கைகளால் தொழுதல். கரகமலம்: உருவகம்.*

***191. கரு முகில் தாமரைல் காடு பூத்து. நீடு***
***இரு சுடர் இரு புறத்து ஏந்தி. ஏந்து அலர்த்***
***திருவொடும் பொலிய. ஓர் செம்பொன் குன்றின்மேல்***
***வருவதுபோல். கழலுன்மேல் வந்து தோன்றினான***

***கருமுகில்*** - *ஒரு கருமைநிறமான மேகம்;* **தாமரைக்காடு பூத்து** - *தாமரை மலர்த் தொகுதியை மலர்த்திக் கொண்டும்;* **நீடு இரு சுடர் இருபுறத்தேந்தி** - *நீண்ட இரு சுடர்களை இருபுறத்தும் ஏந்திக் கொண்டும்;* **ஓர் செம்பொன் குன்றின்மேல் வருவதுபோல்** - *செம்பொன்னால் ஆகியதொரு மலைமேல் ஏறிவருவதைப்போல;* **ஏந்து அலர்த் திருவொடும்** - *மலர்ந்த தாமரையில் அமர்ந்திருக்கும் இலக்குமியோடும்;* **பொலிய கழலுன்மேல் வந்து தோன்றினான்** - *அம்மேரு மண்டபம் பொலிய கருடன்மீது வந்து காட்சி தந்தான்.*

*கை. கால். வாய் ஆகிய அனைத்தும் தாமரை போல இருப்பதால் 'தாமரைக்காடு பூத்து' என்றார். கருமுகில் திருமாலையும். தாமரைக் காடு கை. கால். கண். வாய் போன்ற திருமாலின் அங்கங்களையும். இரு சுடர். சங்கு. சக்கரங்களையும். செம்பொற்குன்று கருடனையும் குறித்து நின்ற உவமை ஆகுபெயர்களாம். கழலுன்: கருடன். பொலிதல்: திரு வொடும் பொலிதல் அல்லதுமண்டபம் பொலிதல் என்னும் பொருள் உடையதாகும். "தோன்றினான்" என்பதால் வேறோர் இடத்திலிருந்து வராது. அம் மண்டபத்திருந்தே யாவரும் காணத் தோன்றினான் என்ற கருத்துடையதாகும். எங்கும் எப்போதும் தோன்றி மறையும் தன்மையன் எம்பிரான் என்பது கருத்து.*

***192. எழுந்தனர்- கறைமிடற்று இறையும். தாமரைச்***
***செழுந் தவிசு உவந்த அத் தேவும்- சென்று. எதிர்***
***விழுந்தனர் அடிமிசை. விண்ணுளரொடும்;***
***தொழும்தொறும். தொழும்தொறும். களி துளங்குவார்***

***கறைமிடற்று இறையும்*** *- நீலகண்டனாகிய இறைவனும்;* ***தாமரைச் செழும்தவிசு உவந்த அத்தேவும்*** *- தாமரையாகிய செழித்த ஆசனத்தனை விரும்பி அமர்ந்திருக்கும் நான்முகனும்;* ***அடிமிசை விழுந்தனர்*** *-திருமாலின் திருவடிகளை வணங்கி;* ***விண்ணுளோரொடும்*** *- தேவர்களொடும்;* ***எழுந்தனர் எதிர் சென்று*** *- எழுந்தவர்களாகி. அங்குத் தோன்றிய திருமாலுக்கு எதிரே சென்று. அவரை;* ***தொழும்தொறும் தொழும் தொறும்*** *-துதித்துத் தொழும் போதெல்லாம்;* ***களிதுளங்குவர்*** *- மகிழ்ச்சியால் ஆடுவாராகி நின்றனர்.*

*சிவபெருமானும். நான்முகனும். தேவர்களும் திருமாலுக்கு எதிரே சென்று அடிதொழுது. துதித்து. தொழும் போதெல்லாம் மகிழ்ச்சியில் திளைத்து ஆடுவாராயினர் என்பது கருத்து. கறை: நஞ்சு. மிடறு: கண்டம். கறைமிடற்றிறை: சிவபிரான். தேவு: தெய்வம். அடிமிசை: மிசை ஏழனுருபு. துளங்கல்: அசைதல் இங்கு ஆடுதலைக் குறித்தது. இறை: ஈசன் தலைவன் மேம்பாடுடையவன் என்னும் பொருள் கொண்டது. கறைமிடற்றிறை என்பதற்கு மாறாகக் கடவுளர்க்கு இறை என்ற பாடமும் உண்டு.*

***193. ஆடினர்; பாடினர்; அங்கும் இங்குமாய்***
***ஓடினர்; உவகை மா நறவு உண்டு ஓர்கிலார்;***
***'வீடினர் அரக்கர்' என்று உவக்கும் விம்மலால்.***
***சூடினர். முறை முறை துவளத் தாள்- மலர்.***

***அரக்கர் வீடினர் என்று உவக்கும் விம்மலால்*** -அசுரர்கள் இறந்து பட்டார்கள் என மனம் மகிழும் பொருமலால்; ***உவகையாம் நறவுஉண்டு ஓர்கிலார்*** - (அத்தேவர்கள்) மகிழ்ச்சி என்னும் தேனைப் பருகி. எதுவும் அறியாதவர்களாய்; ***ஆடினர் பாடினர் அங்கும் இங்குமாய் ஓடினர்*** - ஆடியும். பாடியும் அங்கும் இங்குமாய் ஓடினவர்களாக; ***துளவத்தாள மலர்முறை முறை சூடினர்*** -அப்பரமனது துழாய் மணக்கும் பாத மலர்களை வரிசை வரிசையாகச் சென்று வணங்கித் தலையில் சூடிக்கொண்டார்கள். களிப்பு மிகுந்தவர்கள் ஆடுதலும் பாடுதலும் இயற்கையாம். ‘பரமனது தரிசனமே தமது துயரைப் போக்கும்’ என்ற நம்பிக்கை உடையவராதலால் துயருக்கே காரணமான அரக்கர் அழிவர் என்ற மகிழ்ச்சி மிகுதியால் ஆடிப்பாடி உவந்தனர் என்பது கருத்து. உவகையை நறவாக உருவகித்தார். விம்மல்: பொருமல்.

***194. பொன்வரை இழிவது ஓர் புயலின் பொற்பு உற.***
***என்னை ஆள் உடையவன் தோள்நின்று எம்பிரான்.***
***சென்னி வான் தடவும் மண்டபத்தில் சேர்ந்து. அரி***
***துன்னு பொற் பீடமேல் பொலிந்து தோன்றினான்.***

**பொன்வரை இழிவதோர் புயலின் பொற்பு உற** - பொன் மலையாகிய மேருவிலிருந்து கீழே இறங்குகின்ற ஒரு மேகத்தின் அழகுதோன்ற; ***என்னை ஆள் உடையவன் தோள் நின்று*** - என்னை ஆளாக ஆட்கொண்டிருக்கும் கலுழனுடைய தோள்களில் இருந்து; ***வான்தடவும் சென்னி மண்டபத்தில் சேர்ந்து*** - ஆகாய மளாவிய சிகரத்தை உடைய அம் மண்டபத்தை அடைந்து; ***அரிதுன்னு பொற்பீடமேல்*** - சிங்கவடிவுடைய பொன் ஆசனத்தின் மேல்; ***எம்பிரான் பொலிந்து தோன்றினான்*** - எம்பெருமானாகிய திருமால் பொலிவுறத் தோன்றலானான்.

*பெரிய திருவடி என்றழைக்கப்படும் திருமாலின் ஊர்தியான கருடனை ‘‘என்னை ஆளுடையவன்’’ என்று சிறப்பிக்கிறார். ‘பொன்வரை’ என்று கூறுவதால் கருடனது நிறமும் மேன்மையும் புலனாகும். அரிதுன்னு பொற்பீடம்: சிங்காதனம்.*

*‘தேவர்கள் இருந்த இடத்தில் வந்து காட்சிதந்த திருமால் கருடனது தோளிலிருந்து இறங்கி அம்மண்டபத்தே இடப்பட்ட சிங்காசனத்தின்மேல் வீற்றிருந்தான்’ என்பது கருத்து. தோள்: பிடர் அரி: சிங்கம் (எல்லா மிருகங்களையும் அழிக்க வல்லது)*

***195. விதியொடு முனிவரும். விண்ணுளோர்களும்-***
***மதி வளர் சடைமுடி முழுவலாளனும்***
***அதிசயமுடன் உவந்து. அயல் அருந்துழி-***
***கொதி கொள் வேல் அரக்கர்தம் கொடுமை கூறினார்.***

***விதியொடு முனிவரும் விண் உளோர்களும்*** - *நான்முகனும். முனிவர்களும் விண்ணுலகில் வாழும் தேவர்களும்;* ***மதிவளர்சடைமுடி மழுவலாளனும்*** - *பிறைச் சந்திரன் வாழும் சடை முடியுடைய. மழுவாளியான சிவபிரானும்;* ***அதிசயமுடன் உவந்து அயல் இருந்துழி*** - *மிகுந்த வியப்புடன். மகிழ்ந்து திருமாலுக்கு அருகிலமைந்த ஆசனங்களில் இருந்த போது;* ***கொதிகொள்வேல் அரக்கர்தம் கொடுமை கூறினார்*** - *கொதிக்கும் வேலை உடைய அரக்கர்களது கொடுந்தொழிலைச் சொன்னார்கள். 'கூறினார்' யார் என்பதற்கு 18ஆம் பாடலில் வரும் 'வானவர்' என்பதை எழுவாயாகக் கொண்டு பொருள் கொள்க. 'விதியொடு' என்பதிலுள்ள 'ஒடு' உம்மைப் பொருளில் வந்தது. 'விதியும்' என்பது பொருளாம். சாபத்தால் நாள்தோறும் கலைகள் தேய்ந்த சந்திரனுக்குத் தனது சடையில் இடம்தந்து வளரச்செய்தவன் சிவபிரான் ஆதலால் 'மதி வளர் சடை முடி' என்றார். கொலைத்தொழிலே தொழிலாக உடைய அரக்கர். தங்கள் வேல்களை அடிக்கடி கொல்லுலையில் கொதிக்க வைப்பதால் "கொதிகொள்வேல்" என்றார்.*

***196. 'ஐ-இரு தலையினோன் அனுசர் ஆதியாம்***
***மெய் வலி அரக்கரால். விண்ணும் மண்ணுமே***
***செய் தவம் இழந்தன;- திருவின் நாயக!-***
***உய் திறம் இல்லை' என்று உயிர்ப்பு வீங்கினார்.***

***திருவின் நாயக*** - *இலக்குமிக்கு நாயகனாகிய பெருமானே!;* ***ஐயிரு தலையினோன் அனுசர் ஆதியாம் மெய்வலி அரக்கரால்*** - *பத்துத்தலைகளை உடைய இராவணன் அவனுக்குப் பின் பிறந்தவர்கள் முதலான உடல்வலிமை மிக்க அரக்கர்களால்;* ***விண்ணும் மண்ணுமே செய்தவம் இழந்தன*** - *விண்ணுலகமும். மண்ணுலகமும் தாம் செய்துள்ள புண்ணியங்களை இழந்து வருந்துகின்றன;* ***உய்திறம் இல்லை என்று உயிர்ப்பு வீங்கினார்*** - *அவை உய்வதற்கு வழியே இல்லை என்று கூறி. பெரு மூச்சு விட்டனர்.*

*ஐயிரு தலையினோன்: பத்துத்தலைகளை உடைய இராவணனது கொடுமையை நினைத்து அவனைக் குறிப்பிட்டனர். அனுசர்: தம்பியர் கும்பகருணன். கரன். திரிசிரன். தூடணன் ஆகியோராம். 'விண்ணும் மண்ணும்' இடவாகு பெயராய் விண்ணுளோரையும் மண்ணுளோரையும் குறித்தது. 'செய்தவம் உய்திறம்' என்பன வினைத்தொகைகள். 'திருவின் நாயக' என்றது அவ்விருவரும் ராமனாகவும். சீதையாகவும் அவதரிக்க வேண்டினர் என்பதை உணர்த்திநின்றது.*

*தவம் செய்ய இயலாமையைக் குறித்தது. செய்தவம் எதிர் காலப்பொருளது.*

***197. 'எங்கள் நீள் வரங்களால் அரக்கர் என்று உளார்.***
***பொங்கு மூஉலகையும் புடைத்து அழித்தனர்;***
***செங் கண் நாயக! இனி தீர்த்தல்; இல்லையேல்.***
***நுங்குவர் உலகை. ஓர் நொடியில் என்றனர்.***

*எங்கள் நீள்வரங்களால்* - *எங்களுடைய மிகுந்த வரபலத்தால்;* **அரக்கர் என்றுளார் பொங்கு மூவுலகையும் புடைத்தழித்தனர்** - *அரக்கர் என்னும் 'கொடியவர்கள் வளர்ந்தோங்கிய மூவுலகத்துயிர்களையும். பொருது கொன்றனர்;* **செங்கண்மால் நாயக** - *அழகிய கண்களையுடைய தலைவனே!;* **இனித்தீர்த்தல் இல்லையேல்** - *இனி. இவ்வரக்கர்களின் கொடிய செயலைத் தீர்க்கவில்லையானால்;* **ஓர் நொடியில் உலகை நுங்குவே என்றனர்** - *வெகுவிரைவில் உலகம் முழுவதையும் அழித்துவிடுவர் என்றார்கள்.*

*நீள்வரம்: நீண்ட வாழ்வையும். நிறைந்த வலிமையையும் தரும்வரம் என்பது பொருள் (பிரமனும். சிவனுமாகிய தேவர்கள் கொடுத்தவரம்) என்பதால் 'எங்கள் நீள்வரம்' என்றனர் புடைத்து அழித்தல்: அடித்துக் கொல்லுதல். நுங்குதல்: விழுங்குதல் என்பதும் ஒரு பொருளாம்.*

***198.*** **என்றனர். இடர் உழந்து. இறைஞ்சி ஏத்தலும்.**
**மன்றல் அம் துளவினான். 'வருந்தல்; வஞ்சகர்-**
**தம் தலை அறுத்து. இடர் தணிப்பென் தாரணிக்கு;**
**ஒன்று நீ கேண்ம்' என. உரைத்தல் மேயினான்.**

**என்றனர் இடர் உழந்து இறைஞ்சி ஏத்தலும்** - *என்று கூறியவர்களான தேவர்கள் துன்பத்தால் வருந்தி. திருமாலைத் துதித்து வணங்கிடவும்;* **மன்றல் அம் துளாவினான்** - *மணமும். அழகும் உடைய துழாய் மாலையணிந்த திருமால்;* **வருந்தல் 'வஞ்சகர்தம் தலை அறுத்து தாரணிக்கு இடர் தணிப்பென்** - *(அத்தேவர்களை நோக்கி) வருந்தாதீர்கள்! வஞ்சக அரக்கர்களின் தலைகளைத் துணித்து உலகத்தின் துன்பத்தைத் தணிப்பேன்;* **ஒன்று நீர் கேண்ம் என உரைத்தல் மேயினான்** - *அதற்குரியதொன்றைக் கேளுங்கள் என்று சொல்ல. ஆரம்பித்தான்.*

*மன்றல்: மிகுமணம். வருந்தல்: அல்லீற்று எதிர்மறை வியங்கோள் எதிர் மறை. கேளும் என்பது கேண்ம் என வந்தது விகாரமும் சந்தியுமாம். 'ம்': மகரக் குறுக்கம். வஞ்சகர்: மாயத்தொழில் வல்லோர்.*

***199.*** **'வான் உளோர் அனைவரும் வானரங்கள் ஆய்.**
**கானினும். வரையினும். கடி தடத்தினும்.**
**சேனையோடு அவதரித்திடுமின் சென்று' என.**
**ஆனனம் மலர்ந்தனன்- அருளின் ஆழியான்**

***வான் உளோர் அனைவரும் வானரங்களாய்*** - விண்ணுலகில் வாழும் தேவர்கள் ஆகிய நீங்கள் எல்லோரும் குரங்கினங்களாக; ***கானினும். வரையினும் கடிதடத்தினும் சென்று சேனையோடு அவதரித்திடுமின்*** - காடுகளிலும். மலைகளிலும். அம்மலைத் தாழ் வரைகளிலும் சென்று. பிறப்பீராக; ***என. அருளின் ஆழியான் ஆனனம் மலர்ந்தனன்*** - என்று. கருணைக் கடலான திருமகள் நாயகன் திருவாய் மலர்ந்தருளினான். சேனை: கூட்டம். கூட்டத்தோடு சென்று பிறப்பீராக என்றான் என்பது பொருள். கான்: காடு. கடிதடம்: மணம்மிக்க சோலையுமாம். ஆனனம்: முகம். வடமொழியில் வாயைக் குறிக்கும் சொல் இல்லையாதலால் ஆனனம் என்பதே வாய்க்கும் ஆகிவரும் என்பதால் வாய்திறந்து கூறுதல் என்னும் பொருளில் இது வந்தது.

*இராவணன் பிரமனிடம் வரம்பெறும் போது. மனிதர். குரங்குகளை அற்பமாக எண்ணி. முனிவர். தேவர். அசுரர்களால் தனக்கு மரணம் நேரக்கூடாது என்று வரம்கேட்டு மனிதர். குரங்குகளை நினைக்காமல் விட்டான். திருமால். தான் மனிதனாகவும். தேவர்கள் வானரங்களாகவும் செல்வதே இராவணனை அழிக்கும்வழி என எண்ணிக் கூறினார் என்பது கருத்து.*

***200. 'மசரதம் அனையவர் வரமும். வாழ்வும். ஓர்***
***நிசரத கணைகளால் நீறுசெய்ய. யாம்.***
***கச ரத துரக மாக் கடல்கொள் காவலன்.***
***தசரதன். மதலைவாய் வருதும் தாரணி.***

***மசரதம் அனையவர்*** - கானல் நீரைப்போன்றவர்களாகிய அரக்கர்களுடைய; ***வரமும் வாழ்வும்*** - வரபலத்தையும். வாழ்வையும்; ***நிசரத கணைகளால் நீறு செய்ய*** - எமது குறிதவறாத அம்புகளால் சாம்பலாக்க (அழிக்க); ***யாம் கசரத துரகமாகக் கடல் கொள்காவலன்*** - யாமே. யானை. தேர். காலாள் என்னும் கடல் போன்ற நாற்பெருஞ்சேனைகளையுடைய வேந்தனான; ***தசரதன் மதலையாய் தாரணிவருதும்*** - தயரதன் புத்திரனாக உலகத்தில் வந்து அவதரிக்கின்றோம்.

*மசரதம்: பேய்த்தேர் (கானல்நீர்). நிசரதம்: உண்மை. நிசரத கணை: உண்மையான அம்புகள் (பொய்யாது தாக்கவல்லது). நீறு: சாம்பல். நீறு செய்தல்: அழித்தலாம். தாரணி: பூமி. பத்துத் தேர் கொண்டு. தன்னுடன் போர்புரிந்த சம்பானை வென்றவன் என்பதால் "தசரதன்" என்று பெயர் பெற்றான் என்பர். தசம்: பத்து. ரதன்: ரதங்களை வென்றவன். வெஞ்சினத்து அவுணர் தேர்பத்தும் வென்றுளேன்" என்பது தயரதன் தன்னைப் பற்றிக் கூறிக் கொள்வதாகும்.*

*மதலை: விழுது. புதல்வருக்கு ஆகிவந்தது உவமையாகுபெயர். வருதும்: தன்மைப் பன்மை வினைமுற்று யாம் வருதும் என முடியும்.*

**201. ‘வளையொடு திகிரியும். வடவை தீதர**
**விளைதரு கடுவுடை விரிகொள் பாயலும்.**
**இளையவர்கள் என அடி பரவ ஏகி. நாம்.**
**வளைமதில் அயோத்தியில் வருதும்’ என்றனன்..**

**வளையொடு திகிரியும்** - எமது படைக்கலங்களான சங்கும் சக்கரமும்; **வடவை தீதர விளைதரு கடு உடை விரிகொள்பாயலும்** - வடவா முகாக்கினியும் தீய்ந்து போகச் செய்யும் நஞ்சினை உடைய. எமதுபடுக்கையான அனந்தனும்; **இளையவர்கள் என அடி பரவ** - தம்பியராகப் பிறந்து எம்மை அடிவணங்க; **ஏகி. வனைமதில் அயோத்தியில் வருதும் என்றனன்** -பூமியில் சென்று சுற்றும் வளைந்த மதிலை உடைய அயோத்தி மாநகரில் அவதரிப்போம் என்றான்.

‘வினையொடு’என்பதிலுள்ள ‘ஒடு’ உம்மைப் பொருளில் வந்தது. வளை: சங்கு. வளைந்திருப்பது காரணமாக இப்பெயர் அமைந்தது. கடல் நடுவே ஒரு குதிரை இருப்பதாகவும். அதன் முகத்தில் தோன்றும் தீயில் கடல் நீர் வற்றிக் கொண்டிருப்பதாகவும் கூறுவர்.வடவை முகத்தில் தோன்றும் தீ என்பதால் ‘‘வடவைத் தீ’’ என்றார். தடு: நஞ்சு. பாயல்: படுக்கை. விரிகொள்: விரிதலை உடைய சக்கரம் பரதனாகவும். சங்கு சத்துருக்கனாகவும். அனந்தன் இலக்குவனாகவும் வந்தனர் என்பார். அயோத்திக்கு ‘சாதேகம்’ என்ற ஒரு பெயரும் உண்டு.

**202. என்று அவன் உரைத்தபோது. எழுந்து துள்ளினார்;**
**நன்றிகொள் மங்கல நாதம் பாடினார்;-**
**‘மன்றல் அம் செழுந் துளவு அணியும் மயனார்**
**இன்று எமை அளித்தனர்’ என்னும் ஏம்பலால்**

**என்று அவன் உரைத்த போது** - அத்திருமால் கூறியருளிய போது கேட்ட (அத்தேவர்கள் அனைவரும்); **மன்றல் அம் துளவு அணியும் மாயனார்** - மணம் பொருந்திய. அழகிய துழாய்மாலை அணியும் மாயனாகிய திருமால்; **இன்று எமை அளித்தனர் என்னும் ஓம்பலால்** - இன்று எங்களை யெல்லாம் காப்பாற்றி அருளினார் என்னும் மகிழ்ச்சியால்; **எழுந்து துள்ளினார் நன்றிகொள் மங்கல நாதம் பாடினார்** - எழுந்து நின்று ஆடினார்கள் நன்மையான மங்கல கீதம் பாடினார்கள்.

துள்ளுதல்: ஆடுதல். நன்றி: நன்மை. மங்கலம்: சுபம். இங்கு வெற்றிக் குறித்து நின்றது. நாதம்: ஓசை. இசையைக் குறித்தது. மன்றல்: மணம். மாயம்: சாமர்த்தியம் அதனை உடையவன் மாயன். ஏம்பல்: மகிழ்ச்சி. திருமால் கூறியது கேட்ட தேவர்கள் மகிழ்ச்சியால் ஆடிப்பாடினர் என்பது கருத்து.

***203. ‘போயது எம் பொருமல்’ என்னா.***
***இந்திரன் உவகை பூத்தான்;***
***தூய மா மலர் உளோனும்.***
***சுடர்மதி சூடினோனும்.***
***சேய் உயர் விசும்பு உளோரும். ‘தீர்ந்தது***
***எம் சிறுமை’ என்றார்;***
***மா இரு ஞாலம் உண்டோன்.***
***கழலுன்மேல் சரணம் வைத்தான்.***

**‘எம் பொருமல் போயது என்னா** - *எங்கள் துயரம் தீர்ந்தது என்று கூறி;* **இந்திரன் உவகை பூத்தான்** - *இந்திரன் மகிழ்ச்சி அடைந்தான்;* **தூய மா மலர் உளோனும்** - *தூய அழகிய தாமரையில் வாழும் பிரமனும்;* **சுடர் மதி சூடினோனும்** - *ஒளியுடைய சந்திரனைத் தலையிலணிந்துள்ள சிவபெருமானும்;* **சேய் உயர் விசும்பு உளோரும்** - *மிக உயர்வான விண்ணுலகிலே வாழ்பவர்களும்;* **தீர்ந்தது எம் சிறுமை என்றார்** - *எமது தாழ்வு தீர்ந்தது என்றார்கள்;* **மா இரு ஞாலம் உண்டோன்** - *அகன்ற பெரிய இவ்வுலகை உண்டருளிய திருமால்;* **கழலுன் மேல்சரணம் வைத்தான்** - *தான் ஏறிவந்த கருடன் மீது திருவடிகளை வைத்தான்.*

*உவகை பூத்தல்: மகிழ்ச்சியில் முகம் மலர்தல் போல்வது. தீர்ந்தது என்பன விரைவும். உறுதியும் பற்றி வந்த இறந்த காலவினை முற்றுக்கள். ‘சரணம் வைத்தான்’ கருடன் மீது திருவடிகளை வைத்துத் தனது இருப்பிடத்துக்குப் புறப்படத் தொடங்கினான் என்பது கருத்து. என்னா: என்று; செய்யா என்ற வாய்பாட்டு வினை எச்சம் செய்து என்ற பொருளையுடையது. உளோன்: ‘உள்ளோன்’ இடை குறைந்து நின்றது. மா. இரு: உரிச் சொற்கள். மிகப்பெரிய என்பதை உணர்த்தி நின்ற மீமிசைச் சொல் ஊழிப் பெருவெள்ளத்தில் உலகம் அழியாது. திருமால் அதனை உண்டு. வயிற்றில் வைத்துப் பாதுகாத்தார் என்பது புராணக் கருத்து. ‘‘உலகம் உண்ட பெருவாயன்’’ என. நம்மாழ்வாரும் இதனைக் குறிப்பிடுவார்.*

***204. என்னை ஆளுடைய ஐயன்.***
***கலுழன்மீது எழுந்து போய***
***பின்னர். வானவரை நோக்கி.***
***பிதாமகன் பேசுகின்றான்;***
***“முன்னரே எண்கின் வேந்தன்***
***யான்”- என. முடுகினேன்; மற்று.***
***அன்னவாறு எவரும் நீர்போய்***
***‘அவதரித்திடுமின்’ என்றான்.***

***என்னை ஆளுடைய ஐயன்*** -என்னை ஆட்கொண்ட தலைவனாகிய திருமால்; ***கலுழன் மீது எழுந்து பொய் பின்னர்*** - கருடன்மீது எழுந்தருளிச் சென்றதன் பின்பு; ***பிதாமகன் வானவரை நோக்கிப் பேசுகின்றான்*** - நான்முகன். தேவர்களைப் பார்த்துப் பேசலானான்; ***முன்னரே எண்கின் வேந்தன் யான் என முடுகினேன்*** - முன்பே. கரடிகட்கு அரசனான 'சாம்பவந்தன்' என்பவனாக நான் வந்து பிறந்துள்ளேன்; ***மற்று. அன்னவாறு நீர் எவரும் போய் அவதரித்திடுமின் என்றான்*** - மற்றும். அப்படியே நீங்கள் எல்லோரும் சென்று அவதரித்திடுவீராக என்று கூறினான்.

*உயிரினங்களின் தலைவர்களுக் கெல்லாம் தந்தை நான்முகன் ஆதலின் 'பிதாமகன்' என பிரமனைக் கூறுதல் மரபு. என்னை ஆளுடைய ஐயன் எனக் கூறியது. கம்பருக்குத் திருமாலிடம் மிகுந்த ஈடுபாடு இருந்ததைக் காட்டும். முடுகினேன்: கிட்டினேன் (வந்திருக்கிறேன் என்பது பொருள்). அவதரித்திடுமின்: மின்னீற்று வியங்கோள் கட்டளைப் பொருளில் வந்தது. மற்று: வினைமாற்ற வந்த அசைச் சொல். அன்று ஆறு: அந்த விதமாக (அவ்வாறே).*

205. **தருவுடைக் கடவுள் வேந்தன் சாற்றுவான். 'எனது கூறு**
**மருவலர்க்கு அசனி அன்ன வாலியும் மகனும்' என்ன;**
**இரவி. 'மற்று எனது கூறு அங்கு அவர்க்கு இளையவன்'**
**என்று ஓத**
**அரியும். 'மற்று எனது கூறுநீலன்' என்று அறைந்**
**திட்டானால்**

***தருஉடைக் கடவுள் வேந்தன் சாற்றுவான்*** -கற்பகம் முதலிய ஐந்து மரங்களையுமுடைய தேவர்களுக்கு அரசனான இந்திரன் சொல்லலுற்றான்; ***எனது கூறு மருவலர்க்கு அசனி அன்ன வாலியும் மகனும் என்ன*** - எனது அம்சமானது. பகைவர்களுக்கு இடி போன்ற வாலியும். அவன் மகன் அங்கதனும் ஆகும் என்றுரைக்க; ***இரவி மற்று எனது கூறு அங்கு அவர்க்கு இளையவன் என்று ஓத*** - சூரியன். பின்னை. எனது அம்சம் அங்கேயே அந்த வாலிக்குத் தம்பியான சுக்கிரீவன் என்று சொல்ல; ***அரியும் மற்று எனது கூறுநீலன் என்று அறைந்திட்டான்*** - நெருப்புக் கடவுள் பின்னை. எனது அம்சம் 'நீலன்' என்னும் வானர வீரனாகும் எனக் கூறினான்.

*ஆல்: அசை. கூறு: பாகம் (அம்சம்). மருவலர்: பகைவர். அரி: நெருப்பு கடவுள்: மனம். மொழி. மெய்களின் உணர்வுகளைக் கடந்து நிற்கும் பரம்பொருளைக் குறிப்பதாயினும் உபசாரமாக மற்றைத் தேவர்களையும் குறிப்பதாகும்.*

*இந்திரன் வாலி. அவன் மகன் அங்கதன் ஆகிய இருவராகவும். சூரியன் வாலியின் தம்பி சுக்கிரீவனையும். அக்கினி. நீலன் என்ற வானரத் தலைவனாகவும் பிறப்பதாகக் கூறினர் என்பது கருத்து.*

*206.* **வாயு. 'மற்று எனது கூறு மாருதி' எனலும் மற்றோர்.**
**'காயும் மற்கடங்கள் ஆகி. காசினி அதனின்மீது**
**போயிடத்துணிந்தோம்' என்றார்; புராரி. 'மற்றுயானும் காற்றின்**
**சேய் எனப்புகன்றான்; மற்றைத் திசையுளோர்க்கு அவதிஉண்டோ.**

**வாயு மற்று எனது கூறு மாருதி எனலும்** - காற்றுத் தேவனான வாயு எனது அம்சம் மாருதி என்று சொல்லலும்; **மற்றோர் காயுமற் கடங்களாகி காசினி அதனின் மீது போயிடத் துணிந்தோம் என்றார்** - மற்ற தேவர்கள் எல்லோரும் பகைவரைச் சினக்கும் வானரங்கள் ஆகி. பூமியிலே சென்று பிறக்க முடிவு செய்துவிட்டோம் என்றார்கள்; **புராரி மற்று யானும் காற்றின் சேய் எனப் புகன்றான்** - திரிபுரத்தை எரித்த சிவபிரான் யானும் வாயுகுமாரனான அனுமனாகப் பிறக் கிறேன் என்று கூறலானான்; **மற்றைத் திசையுளோர்க்கு அவதி உண்டோ** - எனவே. மற்றுமுள்ள எல்லாத்திசைகளிலும் வாழ்பவர்க்கும் எந்தத் துன்பமும் உண்டோ (இல்லை என்பதாம்).

மருந்து: காற்று மருத்தின் மகன் மாருதி (அனுமன்). புராரி: திரிபுரத்தை அழித்தவரான சிவபிரான். காற்று எனது அம்சம் என அனுமன். மற்றத் தேவர்கள் எல்லோரும் வானரங்களாகப் பிறக்க நாங்கள் முடிவெடுத்து விட்டோமென. சிவபிரான் தானும் காற்றின் சேயான அனுமனாய் அவதரிப்பதாகக் கூறினார் என்பது கருத்து. அவதி: வருத்தம் (துன்பம்) எனவே. இனிஎங்கு வாழ்பவர்களுக்கும் எந்தத் துன்பமும் இல்லையாம் என்றார்.

காசினி: உலகம். மற்கடம்: குரங்கு காய்தல்: சினத்தல். போய்+இட: போயிட. ''இட'' என்ற துணை வினை எதிர்காலம் உணர்த்தி நின்றது. போக என்பது பொருள்.

*207.* **அருல் தரும் கமலக்கண்ணன்**
**அருள்முறை. அலர் உளோனும்**
**இருள் தரும் மிடற்றினோனும்.**
**அமரரும். இனையர் ஆகி**
**மருள் தரும் வனத்தில். மண்ணில்.**
**வானரர் ஆகி வந்தார்;**
**பொருள்தரும் இருவர் தம்தம்**
**உறைவிடம் சென்றுபுக்கார்.**

***அருள்தரும் கமலக் கண்ணன் அருள்முறை*** - கருணைமிக்க தாமரைக் கண்ணனாகிய திருமால் அருள் செய்த முறைப்படியே; **அலருளோனும் இருள்தருமிடற்றினோனும்** -தாமரை மலரில் உறையும் பிரமனும் இருண்டமிடற்றை உடைய சிவபிரானும்; **அமரரும் இளையர் ஆகி** - மற்றத் தேவர்களும் மேலே கூறிய முறைப்படி வடிவெடுத்தவராகி; **மருள்தருவனத்தில்** - இருண்ட காடுகளிலும்; **மண்ணில் வானரராகி வந்தார்** - நிலத்திலும் குரங்குகளாக உருமாறி வந்துள்ளார்கள்; **பொருள்தரும் இருவர்** - எல்லோரும் பொருட்டாகக் கருதிப் போற்றும் பிரமன். சிவன் ஆகிய இருவரும்; **தம்தம் உறைவிடம் சென்று புக்கார்** - தங்கள். தங்கள் உறைவிடங்களுக்குச் சென்று சேர்ந்தார்கள்.

பாற்கடலைக் கடைந்த போது எழுந்த நஞ்சை உண்டு. தேவர்களைக் காத்தபோது அந்த நஞ்சு மிடற்றிலே நின்றுவிட சிவபிரான் நீலகண்டனாயினான். அதனையே ''இருள்தருமிடற்றினோன்'' என்றார். பொருள்தரும்: குறிப்பிட்டுக் கூறத்தக்க இருவர் பிரமனும். சிவபிரானும் என்பதைக் குறித்தது. திருமால் அருளிய முறைப்படி தேவர்கள் யாவரும் வானரங்களாகித் தங்கள் இருப்பிடங்களை அடைந்தனர் என்பது கருத்து.

***208. ஈது. முன் நிகழ்ந்த வண்ணம். என. முனி. இதயத்து எண்ணி.***
***'மாதிரம் பொருத திண் தோள் மன்ன! நீ வருந்தல்; ஏழ்- ஏழ்***
***பூதலம் முழுதும் தாங்கும் புதல்வரை அளிக்கும் வேள்வி.***
***தீது அற முயலின். ஐய! சிந்தைநோய் தீரும்' என்றான்.***

ஆறாவது பாட்டுத் தொடங்கி. இருபத்து எட்டாம் பாட்டுவரை கூறப்பட்ட நிகழ்ச்சி யாவும். திருமால் முன்பு தேவர்களுக்கு அருள் செய்ததனை வசிட்டன் தனது மனத்தில் சிந்தித்தனவாகும்.

**ஈதுமுன் நிகழ்ந்தவண்ணம்** -இது முன்பு நிகழ்ந்த செய்தியாகும்; **எனமுனி இதயத்தெண்ணி** - என்று. வசிட்டன் மனத்தில் நினைத்து (மன்னனைப்பார்த்து); **மாதிரம் பொருத திண்தோள் மன்ன!** - திசை எங்கும் சென்று போர் செய்து வென்ற. வலியதோள்களை உடைய மன்னனே!; **நீ வருந்தல்** - நீ (புத்திரப் பேற்றை எண்ணி) வருந்தாதே; **ஏழ் ஏழ் பூதலம் முழுதும் தாங்கும்** -ஈரேழாக எண்ணப்படும் உலகம் யாவையும்காக்கும்; **புதல்வரை அளிக்கும் வேள்வி** - புத்திரர்களைத் தரவல்ல வேள்வியை; **தீதறு முயலின் ஐய! சிந்தை நோய்தீரும் என்றான்** - குற்றமின்றி நீமுயன்று செய்தால் ஐய! நின்மனத் துயர் நீங்கும் என வசிட்டன் கூறினான்.

*வண்ணம்: விதம். இதயம்: மனம். திருமால் தேவர்களுக்கு அருளிய திறத்தை எண்ணிய வசிட்டமுனி. தயரதனை நோக்கி ஈரேழு உலகையும் காக்கவல்ல புதல்வர்களைத் தரவல்ல வேள்வியை நீ முயன்று செய்தால் உனது மனத்துயர் தீரும் என்றான் என்பது கருத்து. மாதிரம்: திக்குகள். பொருத: போர் செய்து வென்ற. திண்தோள்: வலிய தோள்.*

***209.*** ***என்னமா முனிவன் கூற. எழுந்த பேர் உவகை பொங்க.***
***மன்னர் மன்னன். அந்த மா முனி சரணம் சூடி.***
***'உன்னையே புகல் புக்கேனுக்கு உறுகண் வந்து அடைவது உண்டோ?***
***அன்னதற்கு. அடியேன் செய்யும் பணி இனிது அளித்தி' என்றான்.***

***என்ன மாமுனிவன் கூற*** *- என்று. மாமுனிவனாகிய வசிட்டன் கூற;* ***மன்னவர் மன்னன் எழுந்த பேருவகை பொங்க*** *- (அது கேட்ட) மன்னர் மன்னனாகிய தயரதன் மிகுந்த மகிழ்ச்சி பொங்க (எழுந்து);* ***மாமுனி சரணம் சூடி*** *- மாபெரும் முனிவனாகிய வசிட்டனது பாதங்களை வணங்கி (தலைக்கு அணியாக அணிந்து);* **உன்னையே புகல்புக்கேனுக்கு** *- தங்களையே அடைக்கலம் அடைந்திருக்கும் அடியவனாகிய எனக்கு;* **உறுகண் வந்து அடைவது உண்டோ** *-துன்பம் வந்து சேர்தல் உண்டோ? (இல்லை என்றபடி);* **அன்னதற்கு அடியேன் செய்யும் பணி இனிது அளித்தி** ***என்றான்*** *- அந்த வேள்வியைச் செய்வதற்கு அடியவனாகிய நான் செய்ய உரிய பணிவிடையை இனிதே எனக்குத் தருக என்று கூறினான்.*

*முனிவன்: உலகப் பற்றற்றவன் (உலகியலின்பங்களை வெறுத்தவன்). பொங்க. எழுந்த என்பன மகிழ்ச்சி மிகுதியைக் காட்டி நின்றன. புக்கேனுக்கு: புக்கேன் வினையாலணையும் பெயர். புக்குநின்ற நான் என்னும் பொருள்தந்து நின்றது. உறுகண்: துயரம். பணி: முதல் நிலைத் தொழிற் பெயர். வேலை என்னும் பொருள் உடையது.*

*முனிவன் கூறிய மொழி கேட்ட மன்னன். 'அந்த வேள்வியைச் செய்ய நான் செய்ய வேண்டியதைக் கட்டளை இடுங்கள்' என்று கூறினான் என்பது கருத்து.*

***210.*** ***'மாசு அறு சுரர்களோடு மற்றுளோர்தமையும் ஈன்ற***
***காசிபன் அருளும் மைந்தன். விபாண்டகன். கங்கை சூடும்***
***ஈசனும் புகழ்தற்கு ஒத்தோன். இருங் கலை பிறவும் எண்ணின்***
***தேசுடைத் தந்தை ஒப்பான். திருவருள் புனைந்த மைந்தன்.***

***மாசு அறு சுரர்களோடு*** - *குற்றமற்ற தேவர்களுடனே;* ***மற்று உளோர்தமையும்*** - *மற்று முள்ள அசுரர் முதலானோரையும்;* ***ஈன்று காசிபன் அருளும் மைந்தன்*** - *பெற்ற தந்தையான காசிபர் பெற்ற குமாரனும்;* ***கங்கை சூடும்ஈசனும் புகழ்தற்கு*** - *கங்கையாற்றைச் சடையில் தாங்கிய சிவபெருமானும் புகழ்ந்து கூறுவதற்கு;* ***ஒத்தோன்*** - *ஒத்த பெருமையுடயவனும்;* ***இருங்கலை பிறவும் எண்ணில் தேசுடைத் தந்தை ஒப்பான்*** - *மேலான கலையறிவு போன்றவைகளை எண்ணினால் சிறந்த தனது தந்தையான காசிபனை ஒத்தவனும் ஆகிய;* ***விபாண்டகன்*** - *விபாண்டகன் என்னும் முனிவனது;* ***திருஅருள் புனைந்த மைந்தன்*** - *திருவருளைப் பெற்றுத்திகழும் புத்திரன்.*

*இந்தப்பாடல் குளகம்: அடுத்த பாடலுடன் பொருள் முடிவுபெறும். தேவர்களையும். அசுரர் முதலியோரையும் பெற்றவர் காசிபர். உபபிரமாக்களில் ஒருவர் இக் காசிபரின் குமாரர்.*

*விபாண்டகர் தமது தந்தையைப் போலவே கலையறிவு மிக்கவர். இந்த விபாண்டகரின் குமாரரே கலைக்கோட்டு முனிவர் என வசிட்டர் தயரதனுக்கு முனிவர் வரலாற்றைக் கூறியதை உணர்த்தும் பாட்டு இது. மற்றுளோர்: தேவர்களல்லாது மற்றவர். இரும்+கலை: உயர்ந்த கலைகள். கங்கை சூடுமீசன்: சிவபிரான். சிவனும் புகழ்தற்கொத்த பெருமை யுடையவர் விபாண்டகர் என்கிறார். ஈசன்: எல்லோருக்கும் தலைவன் என்ற பொருள் உடையது. இது முதல் மூன்று பாடல்கள் குளகம்.*

***211. ‘வரு கலை பிறவும். நீதி மனுநெறி வரம்பும். வாய்மை***
***தரு கலை மறையும். எண்ணின். சதுமுகற்கு உவமை சான்றோன்.***
***திருகலை உடைய இந்தச் செகத்து உளோர் தன்மை தேரா***
***ஒரு கலை முகச் சிருங்க உயர் தவன் வருதல் வேண்டும்.***

***வருகலை பிறவும்*** - *வளர்ந்த கல்வியாலும் கேள்வி முதலிய பிறவற்றாலும்;* ***நீதி மனுநெறிவரம்பும்*** - *நீதியைக் கூறும்மனு நூல் வரம்பாலும்;* ***வாய்மைதரு கலைமறையும்*** - *உண்மையை உணர்த்தும் வேதங்களை ஓதி யுணர்ந்ததாலும்;* ***எண்ணின் சது முகற்கு உவமை சான்றோன்*** - *நினைத்துப் பார்த்தால் நான்முகனுக்கு ஒப்பாகிய பெருமை உடையவனும்;* ***திருகலை உடைய இந்தச் செகத்துளோர் தன்மை தேரா*** - *பலவித மாறுபட்ட இயற்கையை உடைய உலகத்தவரின் தன்மையை அறியாதவனும்;* ***ஒருகலை முகச்சிருங்க உயர்தவன் வருதல் வேண்டும்*** -*கலைமான் கொம்பு போன்ற கொம்பை முகத்தில் உடையவனுமான சிருங்கன் என்னும் பெயருடைய உயர்ந்த தவத்தை உடைய முனிவன் வரவேண்டும்.*

*கல்விகேள்விகளில் சிறந்தவன். மனுநூல் வரம்பை அறிந்தவன். வேதங்களைக் கற்றறிந்தவன். நான்முகனுடன் ஒப்பிடத்தக்க சான்றோன் பலவித மாறுபாடுகளை உடைய உலக மக்களின் தன்மையை அறியாதவன். ‘சிருங்கி’ என்ற பெயர்கொண்டவன் உயர்ந்த தவமுனிவன் (வேள்வியை நடத்த) இங்கு வரவேண்டும் என்றான் வசிட்ட என்பது பாட்டின் கருத்து.*

*வருகலை: வளர்கலை. பிறவும்: கேள்வியறிவு. மறை: வேதம். திருகல்: மயக்கம் மாறுபாடு. தலைமுகச் சிருங்கன்: கலைக்கோட்டு முனிவன். மான் கொம்பு போன்ற கொம்பு உடையவன் (நெற்றியில்). வருகலை. தருகலை. உயர்ந்தவன்: வினைத் தொகைகள்.*

***212. பாந்தளின் மகுட கோடி பரித்த பார்அதனில் வைகும்***
***மாந்தர்கள் விலங்கு என்று உன்னும் மனத்தன். மாதவத்தன். எண்ணின்***
***பூந் தவிசு உகந்து உளோனும். புராரியும். புகழ்தற்கு ஒத்த***
***சாந்தனால் வேள்வி முற்றின். தனையர்கள் உளர்ஆம்' என்றான்.***

***பாந்தளின் மகுடகோடி பரித்த*** *- பாம்பினது பல தலைகளாலும் தாங்கப் பெற்ற;* ***பார் அதனில் வைகும் மாந்தர்கள்*** *- இவ்வுலகிலே வாழும் மனிதரை;* ***விலங்கு என்று உன்னும் மனத்தன்*** *- மிருகங்கள் என நினைக்கும் மனத்தை உடையவனும்;* ***மாதவத்தன்*** *- சிறந்த பெருந்தவம் உடையவனும்;* ***எண்ணின்*** *- எண்ணிப் பார்த்தால்;* ***பூந்தவிசு உகந்து உளோனும்*** *- தாமரை ஆசனத்தை விரும்பி அதில் அமர்ந்துள்ள பிரமனும்;* ***புராரியும் புகழ்தற் கொத்த சாந்தனால்*** *- திரிபுரத்தை அழித்த சிவனும் புகழத்தக்க பொறையாளனுமான அக்கலைக்கோட்டு முனிவனாலே;* ***வேள்வி முற்றின் தனையர்கள் உளர்ஆம் என்றான்*** *- மகப் பேறளிக்கும் வேள்வியை நிறைவேற்றினால் புத்திரர்கள் உண்டாவார்கள் என்றான்.*

*பாந்தள்: பாம்பு. இங்கு ஆதி சேடனைக் குறிக்கும். மகுடகோடி: கோடி என்பது 'பல' என்ற பொருள் தந்து நின்றது. பரித்த: தாங்கிய. உலகியல் அறிவு இன்மையால் பிற மாந்தரை விலங்குகள் எனக் கருதும் தவ முனிவனும் பிரமனும். சிவனும் புகழத்தக்க பெருமை உடையவனுமான அம் முனிவனைக் கொண்டு வேள்வியை நிறைவேற்றினால் மக்கட் பேறு வாய்க்கும் என்றான் வசிட்டன் என்பது பாடற்கருத்தாம். பூந்தவிசு: தாமரை ஆசனம்.*

***213. ஆங்குரை இனைய கூறும் அருந் தவர்க்கு அரசன். செய்ய***
***பூங் கழல் தொழுது. வாழ்த்தி. பூதல மன்னர்மன்னன்***
***'தீங்கு அறு குணத்தால் மிக செழுந் தவன் யாண்டை உள்ளான்?***
***ஈங்கு யான் கொணரும் தன்மை அருளுதி. இறைவ! என்றான்***

***ஆங்கு இனைய உரை கூறும்*** - *அப்போது. இத்தகைய நல்லுரை கூறிய;* ***அருந்தவர்க்கு அரசன்*** - *அரிய தவத்தினர்களுக்கெல்லாம் தலைவனாக விளங்கும் வசிட்ட முனிவனது;* ***செய்ய பூங்கழல் தொழுது வாழ்த்தி*** - *அழகிய பாத மலர்களை வணங்கிப் போற்றி;* ***பூதல மன்னர் மன்னன்*** - *உலகத்து அரசர்க்கெல்லாம் அரசனான தயரதன்;* ***தீங்கறு குணத்தால் மிக்க செழுந்தவன்*** *-குற்றமற்ற. நற்குணங்களால் உயர்ந்த செழுமைமிக்க அந்தத் தவமுனிவன்;* ***யாண்டை உள்ளான்*** - *எங்கிருக்கிறான்?;* ***ஈங்கு யான் கொணரும்*** - *இங்கு நான் அம்முனிவனை அழைத்துக் கொண்டு வரும் விதத்தை;* ***இறைவ! அருளுதி என்றான்*** - *எனக்குத் தெய்வம் போன்றவனே! அருளிச் செய்வாயாக என்றான்.*

*உரை: சொல்லாகு பெயர். செய்ய: செம்மை என்னும் பண்படியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். பூ: அழகு. கழல்: தனியாகு பெயர். அறு குணம்: வினைத் தொகை. 'யாண்டை யாண்டு என்பது ஐகாரச் சாரியை பெற்றது. தனது குலகுருவான வசிட்டனை. தொழு குலமாகக் கருதி "இறைவ" எனத் தயரதன் அழைத்தான். செழுமை+தவம்: செழுந்தவம் உயர்ந்த தவம் என்னும் பொருள் உடையது.*

***214. 'புத்து ஆன கொடு வினையொடு அருந் துயரம்***
***போய் ஒளிப்ப.- புவனம் தாங்கும்***
***சத்து ஆன குணம் உடையோன். தயையினொடும்***
***தண் அளியின் சாலை போல்வான்.***
***எத்தானும் வெலற்கு அரியான். மனுகுலத்தே***
***வந்து உதித்தோன். இலங்கும் மோலி***
***உத்தானபாதன்- அருள் உரோமபதன்***
***என்று உளன். இவ் உலகை ஆள்வோன்;***

***புத்தான கொடுவினை யோடு*** - *புற்றுப் போலப் பெருகும் கொடிய வினைகளும் அவற்றால் விளையும்;* ***அருந்துயர் போய் ஒளிப்ப*** - *அரிய துன்பங்களும் சென்று நீங்க;* ***புவனம் தாங்கும்*** - *நாட்டைக் காத்து ஆட்சி புரியும்;* ***சத்தான குணம் உடையோன்*** - *மிக உண்மையான குணம் உடையவனும்;* ***தயையினொடும் தண்ணளியின் சாலை போல்வான்*** - *தயைக்கும் தண்ணளிக்கும் இருப்பிடம் போன்றவனும்;* ***எத்தானும் வெலற்கு அரியான்*** - *எம்முறையிலும் பகைவரால் வெல்ல அரியவனும்;* ***மனு குலத்தே வந்து உதித்தோன்*** - *மனுவின் குலத்தில் பிறந்தவனும் ஆன;* ***இலங்கும் மோலி உத்தான பாதன்*** - *விளங்கும் மணிமுடி தரித்த உத்தான பாதன் என்னுமரசன்;* ***அருள் உரோம பதன் என்று*** - *பெற்ற மகனான உரோம பதன் என்னும் பெயர் பெற்ற;* ***இவ்வுலகை ஆள்வோன் உளன்*** - *இவ்வுலகத்தை எல்லாம் ஆள்கின்ற அரசன் ஒருவன் இருக்கிறான்.*

*இது முதல் 21 பாடல்கள் உரோமபத மன்னன் வரலாறு கூறுவனவாம். புத்து: புற்று (புத்தான: புற்றாக வளர்ந்து பெருகியுள்ள). கொடுவினை: கொடிய வினையாம். சத்: உண்மை. சாலை: வழித்தடம். மோலி: மகுடம். குணமுடையோன். சாலை போல்வான். வெலற்கரியான். வந்துதித்தோன் இவை உத்தான பாதனுக்கு அடைமொழிகள் உத்தான பாதன் மகன் உரோம பதன் ஆவான். மனுகுலம்: சுவாயம்பு மனுவின் குலம். கொடு வினை: பண்புத்தொகை. 35*

***215.*** ***'அன்னவன் தான் புரந்து அளிக்கும் திரு நாட்டில்***
***நெடுங் காலம் அளவது ஆக.***
***மின்னி எழு முகில் இன்றி வெந் துயரம்***
***பெருகுதலும். வேத நல் நூல்***
***மன்னு முனிவரை அழைத்து. மா தானம்***
***கொடுத்தும். வான் வழங்காது ஆக.***
***பின்னும். முனிவரர்க் கேட்ப. "கலைக்கோட்டு-***
***முனி வரின். வான் பிலிற்றும்" என்றார்.***

**அன்னவன் தான் புரந்தளிக்கும் திரு நாட்டில்** -*அந்த உரோமபத மன்னன் காத்து ஆட்சி புரியும் அந்தச் சிறந்த நாட்டில்;* **நெடுங்காலம் அளவதாக மின்னி எழும் முகில் இன்றி** - *நீண்ட கால அளவாக. மின்னி எழுகின்ற மேகங்கள் இல்லாமையால்;* **வெந்துயரம் பெருகுதலும்** -*கொடிய துன்ப நோய் மிகவே;* **வேத நல் நூல் மன்னும் முனிவரை அழைத்து** - *அந்த அரசன். வேதங்களையெல்லாம் கற்றறிந்த முனிவர்களை அழைத்து வந்து;* **மாதானம் கொடுத்தும் வான் வழங்காதாக** - *அவர்களுக்கு வேதங்களில் கூறியபடி சிறந்த தானங்களைக் கொடுத்த போதும் மழை பெய்யாது போகவே;* **பின்னும் முனிவர்க் கேட்ப** - *மறுபடியும் முனிவர்களை அழைத்து மழை பெய்விக்க வழி யாதெனக் கேட்க;* **கலைக் கோட்டு முனிவரின் வான் பிலிற்றும் என்றார்** - *கலை கோட்டு முனிவன் வந்தால் இங்கு மழை பெய்யும் என்றார்கள்.*

*அன்னவன்: அத்தகைய பெருமையுடையவன் என்பது பொருளாம். தான்: இங்கு அசை. மின்னலோடு கூடிய கார் மேகமே மழை பொழிவதாதலால் "பின்னியெழு முகில்" என்றார். வெம்+துயரம் வெந்துயரம்: பண்புத் தொகை. வான்: இடவாகு பெயர் - மேகத்தைக் குறிக்கும். பிலிற்றல்: பெய்தல். மாதானம்: வேதங்களில் கூறியபடி செய்த உயர்ந்த தானங்கள். மன்னும்: நிலை பெற்ற.*

***216.*** ***ஓத நெடுங் கடல் ஆடை உலகினில் வாழ்***
***மனிதர் விலங்கு எனவே உன்னும்***
***கோது இல் குணத்து அருந் தவனைக் கொணரும் வகை***
***யாவது?" எனக் குணிக்கும் வேலை.***
***சோதி நுதல். கரு நெடுங் கண். துவர் இதழ் வாய்.***
***தரள நகை. துணை மென் கொங்கை.***
***மாதர் எழுந்து. "யாம் ஏகி. அருந் தவனைக்***
***கொணர்தும்" என. வணக்கம் செய்தார்.***

***ஓத நெடும் கடல் ஆடை*** - *குளிர்ந்த பெரிய கடலை ஆடையாக உடைய;* ***உலகினில் வாழ் மனிதர்*** *-இவ்வுலகிலே வாழும் மனிதர்களை எல்லாம்;* ***விலங்கு எனவே உன்னும்*** - *விலங்குகள் என்றே நினைத்திருக்கின்ற;* ***கோதில் குணத்து அருந்தவனை*** - *குற்றமற்ற குணங்களை உடைய அரிய தவத்தை உடைய அந்த முனிவனை;* ***கொணரும் வகையாவதெனக் குனிக்கும் வேலை*** - *இங்கு அழைத்து வரக்கூடிய வழி யாது என்று சிந்திக்கும் போது;* ***சோதி நுதல். கரு நெடுங்கண் துவரிதழ் வாய். தரள நகை*** - *ஒளி பொருந்திய நெற்றியையும் கருமையான நீண்ட கண்களையும் பவளம் போன்ற உதடுகளையும் கொண்ட வாயையும் முத்துப் போன்ற பற்களையும்;* ***துணை மென் கொங்கை மாதர்*** - *மெத்தென்ற இரு தனங்களையும் உடைய பெண்கள்;* ***எழுந்து யாம் ஆகி அருந்தவனைக் கொணர்தும் என வணக்கம் செய்தார்*** - *அந்த அவையிலே எழுந்து நின்று. நாங்கள் சென்று அத தவமுனியை அழைத்து வருவோம் என்று வணங்கிக் கூறினர்.*

*ஓதம்: குளிர்ச்சி. நெடுங்கடல்: பண்புத்தொகை. சுற்றிலும் கடலால் சூழப்பட்ட உலகை "கடல் ஆடை உலகு" என்றார். 'நீராரும் கடல் உடுத்த நில மடந்தை' என்பார். வாழ்மனிதர்: விதைத்தொகை. குணித்தல்: சிந்தித்தல். "சோதிநுதல்....... மாதர்" எனக் கூறியிருக்கும் வருணனைகளாலும். யாம் சென்று முனிவனை அழைத்து வருவோம் என்று கூறிய துணிவுடைமையினாலும் அம்மாதர் விலை மகளிராம் என்பது புலனாகும். "கொணர்தும்" 'தும்' காலம் காட்டும் விகுதி. தன்மைப் பன்மை வினைமுற்று.*

*மனிதர்களை விலங்குகளாகக் கருதும். அந்தக் குற்றமற்ற. தவமுனியை இங்கு அழைத்து வரும் வகை யாது என. மன்னன் சிந்திக்கின்ற வேளையில். மாதர் சிலர் எழுந்து நாங்கள் சென்று அந்த அருந்தவனை இங்குக் கொணர்வோம் என்றனர் என்பது கருத்து.*

***217.*** **"ஆங்கு அவர் அம் மொழி உரைப்ப. அரசன்**
**மகிழ்ந்து. அவர்க்கு. அணி. தூசு. ஆதி ஆய**
**பாங்கு உள மற்றவை அருளி. "பனிப் பிறையைப்**
**பழித்த நுதல். பணைத்த வேய்த் தோள்.**
**ஏங்கும் இடை. தடித்த முலை. இருண்ட குழல்.**
**மருண்ட விழி. இலவச் செவ் வாய்ப்**
**பூங்கொடியீர்! ஏகும்" என. தொழுது இறைஞ்சி.**
**இரதமிசைப் போயினாரே**

***ஆங்கு அவர் அம்மொழி உரைப்ப*** - *அங்கு. அம்மகளிர். அச் சொற்களைச் சொல்ல;* ***அரசன் மகிழ்ந்து. அவர்க்கு அணி. தூசு. ஆதியாய பாங்குள மற்றவை அருளி*** - *(அதைக் கேட்ட) மன்னன் மகிழ்ந்து அவர்களுக்கு வேண்டிய அணிகலன்கள் ஆடை மற்றும் தேவையானவைகளைக் கொடுத்து;* ***பனிப் பிறையைப் பழித்த நுதல்*** - *குளிர்ந்த பிறை மதியைப் பழித்த நெற்றி;* ***பணைத்த வேய்த் தோள்*** - *பருத்த மூங்கிலை ஒத்த தோள்கள்;* ***ஏங்கும் இடை தடித்த முலை*** - *நுண்ணிய இடை. பருத்த தனம்;* ***இருண்ட குழல் மருண்ட விழி*** *-கரிய கூந்தல். மான்போல மருண்ட கண்கள்;* ***இலவச் செவ்வாய்*** - *இலவம் பூவைப் போலச் சிவந்த வாய்;* ***பூங்கொடியீர் ஏகும் என*** - *(ஆகிய உறுப்பு நலம்வாய்ந்த) மலர்க்கொடி போன்றவர்களே சொல்லுங்கள் என்று கூற;* ***தொழுது இறைஞ்சி இரதமிசை போயினார்*** - *அரசனைப் பணிந்து. வணங்கித் தேர்ஏறிச் சென்றனர். மொழி: சொல்லாகு பெயர். அணி: அணிகலன். தூசு:ஆடை. பாங்கு உள மற்றவை: பாங்கான மற்றவைகள் உணவுப்பொருள் போன்றவையாம். ஆதிஆய: முதலானவை. வேய்+தோள்: வேய்த்தோள்: உவமைத் தொகை. பூங்கொடி: அன் மொழித் தொகை. 'யாம் ஏகி அருந்தவனைக் கொணர்தும்' என்று அம் மகளிர் கூற. அதைக் கேட்ட மன்னன் மகிழ்ந்து. அவர்களுக்கு வேண்டிய ஆடை. அணிகலன்களைக் கொடுத்துப் போகுமாறு கூற. அவர்கள் அரசனை வணங்கித் தேரேறிச் சென்றனர் என்பது கருத்து.*

*"பனிப்பிறையைப் பழித்த நுதல்.....பூங்கொடியீர்" என்ற மகளிரைப் பற்றிய வருணனை முந்திய பாடலைப் போன்றதேயாம். பெண்களின் அவயவங்களைச் சிறப்பித்துக் கூறும் நயம் காண்க. தனங்களின் அமைவைத் தாங்க இயலாது இடை வறுந்துமாறு தனங்கள் பருத்துள்ளன எனவும் பொருள் கூறுவர்.*

*பெண்களின் கண்களுக்கு மருட்சி இயல்பாதலின் மான் போல மருண்ட பார்வையை உடைய கண்கள் என உரைக்கப்பட்டது.*

***218. ஓசனை பல கடந்து. இனி ஓர் ஓசனை***
***ஏசு அறு தவன் உறை இடம் இது என்றுழி.***
***பாசிழை மடந்தையர். பன்னசாலை செய்து.***
***ஆசு அறும் அருந் தவத்தவரின் வைகினார்.***

***ஓசனை பல கடந்து*** - *(மன்னனிடம் விடைபெற்றுச் சென்ற அப்பெண்கள்) பல ஓசனை கடந்து சென்று;* ***ஏசு அறுதவன் உறை இடம்*** - *குற்றமற்ற தவ முனிவன் வாழும் இடம் இதுவாகுமென;* ***இனி ஓர் ஓசனை என்றுழி*** - *இனி ஒரு யோசனை தூரம் தானிருக்கிறது என்று கூறப்படும் இடத்தில்;* ***பன்ன சாலை செய்து*** - *தழை. குழை. கொம்புகளால் உறைவிடமமைத்து;* ***பாசு இழை மடந்தையர்*** - *பசிய அணிகலன்களை அணிந்த அப்பெண்கள்;* ***ஆசு அரும் அருந்தவத்தவரின்*** - *குற்றமறுத்த அரிய தவத்தினர் போல;* ***வைகினார்*** - *அங்கு வாழத் தொடங்கினர்.*

*ஓசனை: யோசனை. ஏசு+அறு: ஏசறு: பிறரால் பழிப்பற்ற. "பழிப்பதொழித்து" என்ற குறள் ஒப்பிடத்தக்கது. உழி: இடம். பசுமை+இழை: பாசிழை: பசுமையான அணிகலன்கள். பன்னசாலை: இலைக்குடில் அரசனைத் தொழுது. தேரேறிச் சென்ற அம்மகளிர் பல யோசனை தூரம் கடந்து - முனிவனிருக்குமிடத்திற்கு ஒரு யோசனை தூரம் தானுள்ள தென்னுமிடத்தில் உறைவிடம் அமைத்து - தவ முனிவர்களைப் போல வாழலானார் என்பது கருத்து.*

***219. 'அருந் தவன் தந்தையை அற்றம் நோக்கியே.***
***கருந் தடங் கண்ணியர். கலை வலாளன் இல்***
***பொருந்தினர்; பொருந்துபு. "விலங்கு எனாப் புரிந்து***
***இருந்தவர் இவர்" என. இனைய செய்தனர்.***

**அருந்தவன் தந்தையை அற்றம் நோக்கியே** - *அரிய தவத்தை உடைய கலைக் கோட்டு முனிவனது தந்தையாகிய விபாண்டகர் இல்லாத சமயம் பார்த்து;* **கரும் தடம் கண்ணியர் கலைவலாளன் இல்பொருந்தினார்** - *கரிய. அகன்ற கண்களை உடைய அப்பெண்கள் எல்லாக்கலைகளிலும் வல்லவராகிய அம்முனிவரின் குடிலை அடைந்தனர்;* **பொருந்துபு** - *அங்ஙனம் அடைந்த போது;* **விலங்கு எனா புரிந்து இருந்தவர்** - *மனிதர்களை விலங்கினங்களோடு ஒப்ப மதித்து இருக்குமவன். முனிவர்களே;* **இவர் என இணைய செய்தனன்** - *இவர்கள் எனக் கருதிப் பின்வருமாறு செய்யத் தொடங்கினான்.*

*அற்றம்: சமயம் (மறைவு). கண்களால் மயக்கி வசப்படுத்தும் தன்மையால் கருந்தடங் கண்ணியர்' என்கிறார். கலை வலாளன் எல்லாக் கலைகளிலும் வல்லவன் (கலைக் கோட்டு முனிவன்) பொருந்துபு: பொருந்த (செய்பு என்ற வாய்பாட்டு வினையெச்சம் எனா: என்று (செயா என்ற வாய்பாட்டு) வினனையெச்சம். தந்தை இல்லாத தருணத்தை எதிர்பார்த்திருந்த அம்முனிவனது உறையுளை அடைந்த அப்பெண்கள். தன்னைப் போன்ற தவமுனிவர்கள் இவர்கள் எனக் கருதி உபசரிக்கத் தொடங்கினான் என்பது கருத்து.*

***220. அருக்கியம் முதலினோடு ஆசனம் கொடுத்து.***
***"இருக்க" என. இருந்த பின். இனிய கூறலும்.***
***முருக்கு இதழ் மடந்தையர் முனிவனைத் தொழா.***
***பொருக்கென எழுந்து போய். புரையுள் புக்கனர்.***

**அருக்கியம் முதலினோடு** -*அருக்கியம் முதலான உபசரிப்புகளோடு;* **ஆசனம் கொடுத்து** - *அமர்வதற்கு உரிய ஆசனமும் தந்து;* **இருக்க என இருந்தபின்** - *அமர்வீராக என முனிவன் கூற அந்த மகளிர் அமர்ந்ததன் பின்னர்;* **இனிய கூறலும்** - *இனிய உரையால் முகமன் கூறி வரவேற்க;* **முருக்கு இதழ் மடந்தையர்** - *முருக்கம் பூப் போன்ற உதடுகளை உடைய அப்பெண்கள்;* **முனிவரைத் தொழா** - *அந்த முனிவனைத் தொழுது (பின்பு);* **பொருக்கென எழுந்து போய்** - *விரைந்தெழுந்து சென்று;* **புரையுள் புக்கனர்** - *தமது பன்ன சாலையை அடைந்தனர்.*

*அருக்கியம் - கைகழுவ நீர் தருதல். வீட்டுக்கு வந்த விருந்தினரை உபசரிக்கும் முறைகளாக. கை கழுவவும். கால் அலம்பவும். வாய் கொப்பளிக்கவும் நீர் தருதல் கூறப்படும் இவைகளை அருக்கியம். பாத்யம். ஆசமணீயம் என்பர் வடநூலார். அதனை இங்கு. கம்பரும் 'அருக்கியம்' என்றார். ஆசனம் - இருக்கை இனிய கூறல்: முகமன் கூறுதல். முருக்கு: முள் முருங்கைப் பூ. பெண்களின் உதடுகளுக்கு இம் மலரை உவமை கூறுவர். தொழா: தொழுது (செயா என்ற வாய்பாட்டு வினையெச்சம்) பொருக்கென: விரைவுக் குறிப்புச் சொல். புரை: வீடு இங்குப் பன்னசாலையைக் குறிக்கும்.*

*வந்த மகளிரை முனிவர்கள் எனக் கருதி - அருக்கியம் முதலியன தந்தும் ஆசனமளித்தும் - முகமன் கூறியும் உபசரித்துக் கலைக் கோட்டு முனிவனை அப்பெண்கள் தொழுது விரைந்தெழுந்ததும் உறைவிடம் சென்றனர் என்பது கருத்து.*

***221.** 'திருந்து இழையவர். சில தினங்கள் தீர்ந்துழி.*
***மருந்தினும் இனியன் வருக்கை. வாழை. மாத்***
***தருங் கனி பலவொடு. தாழை இன் கனி.***
***''அருந்தவ. அருந்து'' என. அருந்தினான்அரோ***

***திருந்து இழையவர்** - திருந்திய அணிகலன்களை அணிந்திருப்பவர்களாகிய அப்பெண்கள்; **சிலதினங்கள் தீர்ந்துழி** - சில நாட்கள் சென்ற பிறகு மருந்தினும் இனியன - அமுதத்தை விட இனிமையாகிய; **வருக்கை வாழை மா** - பலா. வாழை. மா (என்னும் மூவகை மரங்களும்; **தரும்கனி பலவொடு** - தருகின்ற பழங்கள் பலவுடனே; **தாழையின் கனி** - தேங்காய்களையும் (கொணர்ந்து); **அருந்தவ அருந்தென** -அரிய தவமுனிவரே ! இவற்றை அருந்துவீராக என வேண்ட; **அருந்தினான்** - அம்முனிவனும் அவற்றை உண்டான்.*

*அரோ: அசை. இழை: மணிகள் பதித்துச் செய்யப்பட்டமையால் இப்பெயர் பெற்றதென்பர். திருந்திழை: இப்போது அம்மகளிர் திருத்தமான நகைகள் அணிந்து வந்திருந்தனர் என்பது குறிப்பு. தீர்ந்துழி என்பதில் 'உழி' காலப் பொருளை உணர்த்தும். மருந்து: அமுதம். வருக்கை: பலா. தாழை: தென்னை. தாழையின் கனி: தேங்காய் '' தெங்கின் பழம் வீழ '' என்பது சிந்தாமணி. தமது உறைவிடம் சென்ற மகளிர். சில நாட்கள் கழித்து மீண்டும் முனிவனிடம் வந்து. பலவகைப் பழங்களைத் தந்து உண்ண வேண்டினர். அம்முனிவனும் அவற்றை உண்டான்.*

***222.** 'இன்ன பல் பகல் இறந்தபின். திரு*
***நல் நுதல் மடந்தையர். நவை இல் மாதவன்-***
***தன்னை "எம் இடத்தினும் சார்தல் வேண்டும்'' என்று***
***அன்னவர் தொழுதலும். அவரொடு ஏகினான்***

***இன்னன பல்பகல் இறந்தபின்*** -இவ்வாறு பல நாட்கள் சென்றபின்; ***திருநல் நுதல் மடந்தையர்*** - அழகிய நல்ல நெற்றியை உடைய அப்பெண்கள்; ***நவை இல் மாதவன் தன்னை*** -குற்றமில்லாத சிறந்த தவத்தை உடைய அக்கலைக் கோட்டு முனிவனை; ***எம்மிடத்தினும் சார்தல் வேண்டும் என்று*** - எங்கள் இருப்பிடத்துக்கும் தாங்கள் எழுந்தருள வேண்டும் என்று கூறி; ***அன்னவர் தொழுதலும்*** -அம்மகளிர் வணங்கிவேண்டிட; ***அவரொடும் ஏகினான்*** - அம்முனிவனும் அவர்களுடன் சென்றான்.

*இன்னன: இவ்விதமாக. இறுத்தல்: கழிதல். பகல்: நாள். திரு: அழகு. மடந்தையர்: இளம்பெண்கள்(மடம்: இளமை.) நவை: குற்றம் அப்பெண்கள் விபாண்டகர் இல்லாத சமயம் பார்த்து. பல நாட்கள் வந்து பழகியவர்கள். ஒருநாள் எம் இருப்பிடத்துக்கும் வரவேண்டும் என்று தொழுது வேண்ட. கலைக் கோட்டு முனிவன் அவர்களுடன செல்லலானான் என்பது கருத்து.*

***223. ‘விம்முறும் உவகையர். வியந்த நெஞ்சினர்.***
***“அம்ம! ஈது. இது ” என. அகலும் நீள் நெறி.***
***செம்மையின் முனிவரன் தொடரச் சென்றனர்:-***
***தம் மனம் என மருள் தையலார்களே.***

***விம்முறும் உவகையர்*** - விளங்கிப் பெருகும் மகிழ்ச்சி உடையவராயும்; ***வியந்த நெஞ்சினர்*** - பெருமிதங் கொண்ட மனத்தினராயும் உள்ள; ***மருள் தையலார்கள்*** - மருண்ட கண்களை உடைய அம்மாதர்கள்; ***செம்மையின் முனிவரன் தொடர*** - சிறந்த அம்முனிவன் அவர்களைத் தொடர்ந்து வர; ***அகலும் நீள் நெறி*** - அகன்று நீண்ட அந்த வழியிலே; ***அம்ம ஈது ஈது என*** - எங்கள் இருப்பிடம் இதுதான் இதுதான் என்று; ***தம்மனம் எனச் சென்றனர்*** - வேகமாகச் செல்லும் தமது மனம் போலச் சென்றார்கள்.

*விம்முதல்: விளங்கிப் பெருகுதல். அம்ம வியப்புக்குறிப்பு. வியத்தல்: எவராலும் இயலாத செயலைச் செய்தோம் என்னும் பெருமிதம் அடைதல். மனம் என: மனத்தின் வேகத்தைப் போல. மருள்: கண் இயல்பு. தையல்: அழகு. நீள் நெறி: நீண்ட வழி. எமது இருப்பிடம் ‘இதுதான் இதுதான்’ என்று சொல்லிக் கொண்டே நீண்ட வழியிலே அம்முனிவரை அழைத்துக் கொண்டு தமது மனம் போலவே வேகமாகச் சென்றனர் அம்மகளிர் என்பது கருத்து.*

***224. ‘வளநகர் முனிவரன் வருமுன். வானவன்***
***களன் அமர் கடு எனக் கருகி. வான் முகில்.***
***சளசள என மழைத் தாரை கான்றன-***
***குளனொடு நதிகள் தம் குறைகள் தீரவே***

***முனிவரன் வளநகர் வருமுன்*** - *கலைக் கோட்டு முனிவன் அந்த வளம் பொருந்திய நகருக்கு வரும் முன்னே;* ***வான்முகில் வானவன் களன் அமர்கடு எனக் கருகி*** - *பெரு மேகங்கள். சிவபிரானுடைய கழுத்தில் தங்கியுள்ள நஞ்சு போலக் கருநிறம் கொண்டு.;* ***குளனொடு நதிகள்தம் குறைகள் தீர*** - *குளங்களும். ஆறுகளும் குறை தீரும் படியாக;* ***மழைத்தாரை சளசள எனக் கான்றன*** *-மழைத் தாரைகளைச் சளசள என்ற ஒலியுடன் பொழிந்தன. வருமுன்: வருமளவில் (அல்லது வருவதற்கு முன்னமே) முன்: காலம். வானவன்: பெரியோன் (சிவபிரான்). களவன்: கழுத்து. கடு: நஞ்சு குறைகள் தீர. நீரில்லாமையாகிய குறை நீங்க. குளன்: ( ம -ன - போலி). சளசள: ஒலிக் குறிப்பு. கான்றன: சொரிந்தன. முனிவன் நகருக்கு வருவதற்கு முன்னே மழை பொழிந்தது என்பது கருத்து. 45*

***225. 'பெரும் புனல். நதிகளும் குளனும். பெட்பு உற.***
***கரும்பொடு செந்நெலும் கவின் கொண்டு ஓங்கிட.***
***இரும் புயல் ககனமீது இடைவிடாது எழுந்து***
***அரும் புனல் சொரிந்தபோது. அரசு உணர்ந்தனர்***

**பெரும்புனல்** - *பெய்த மழையால் பெருகிய வெள்ள நீரால்: நதிகளும் குளனும் பெட்பு உற - நீரோடும் ஆறுகளும். நீர் நிறைந்த குளங்களும் மக்கள் விரும்புமாறும்;* ***கரும்பொடு செந்நெலும் கவின் கொண்டு ஓங்கிட*** - *கரும்பும். செந்நெற் பயிரும் அழகு கொண்டு செழித்தோங்கவும்;* ***இரும்புயல் ககனமீது எழுந்து*** - *பெரு மேகங்கள் வானவீதியில் எழுந்து நின்று;* ***அரும்புனல் இடைவிடாது சொரிந்த போது*** - *அரிய மழைப் பெருக்கினை இடைவிடாமல் சொரிந்த வேளையில்;* ***அரசு உணர்ந்தனன்*** - *அந்த நாட்டு மன்னனான உரோமபதன் முனிவரது வருகையைத் தெரிந்து கொண்டான்.*

*குளம்: செயற்கை நீர்நிலை. ஓடும் நீருக்கும் தேங்கும் நீருக்கும் மழையே காரணம் என்பதால். 'நதிகளும் குளனும் பெட்புற' என்றார். பெட்பு: விருப்பம். கரும்பும் நெல்லும் உயர் பயிர்களாதலின் சிறப்பித்துக் கூறினார். இனம் கொளற் குரித்தாதலால் ஏனைய பயிர் வகைகளையும் கூறலாம். ககனம்: வானம். புயல்: மேகம் கவின் கொண்டோங்கிட: அழகு பெற்றுத் திகழ. ''மழைவர மகிழ்ந்து தழைதரு பயிர்'' என்றது ஒப்பு நோக்கத் தக்கது. அரும்புனல்: நெடுங்காலம் மழையின்மையால் அந்நாட்டில் நீர் அரிதாயிற்று என்பதைக் குறித்தது எனலாம்.*

*மழை பொழிய - அதனால் மன்னன் முனிவனது வருகையைத் தெரிந்து கொண்டான் என்பது கருத்து.*

***226. "காமமும். வெகுளியும். களிப்பும். கைத்த அக்"***
***காமுனி இவண் அடைந்தனன்கொல் - கொவ்வை வாய்த்***
***தாமரை மலர் முகத் தரள வாள் நகைத்***
***தூம மென் குழலினர் புணர்த்த சூழ்ச்சியால்?"***

***காமமும். வெகுளியும் களிப்பும் கைத்த*** -காமம். வெகுளி. மயக்கம் ஆகிய மூன்றினையும் வெறுத்து நீக்கிய; ***அக்கோ முனி*** - முனிவர்களுக்கெல்லாம் தலைவனாகிய அந்தக் கலைக் கோட்டு முனிவன்; ***கொவ்வை வாய். தாமரை மலர்முக தரள வாள் நகை. தூம மென் குழலினர்*** - கொவ்வைக் கனி போன்ற வாயையும். தாமரை மலர் போன்ற முகத்தையும் முத்துப் போன்ற ஒளிபொருந்திய பற்களையும் அகிற் புகை யூட்டிய மென்மையான குழலையும் உடைய அப்பெண்கள் ***புணர்த்த சூழ்ச்சியால்*** - செய்த சூழ்ச்சியினால்; ***இவண் அடைந்தனன் கொல்*** - இங்கு வந்து சேர்ந்தனன் போலும். காமம்: ஆசை. வெகுளி: கோபம். களிப்பு: மயக்கம். ஒரு பொருள் மீதெழும் ஆசையும். அப்பொருள் கிடைக்காத போதெழும் சினமும். இவைகளால் மனநிலை மாறுபட்டு அடையும் மயக்கமும் ஆகியவற்றை வெறுத்து நீத்தவன் என்பதால் ''காமமும்... கோமுனி'' என்றார். முனிவனை அப்பெண்கள் இனிய சொற்களைக் கூறியும். முகம் மலர்ந்து புன்னகை காட்டியும். வணக்கத்தாலுமே அழைத்து வந்தனர் என்பது. தோன்ற. வாய். முகம். நகைகளைச் சிறப்பித்தார் எனலாம். தரளம்: முத்து. ''தூம மென் குழல்'' என்பதற்குப் புகை போன்ற கூந்தல் என்பர். அதனினும். அகிற்புகையூட்டப் பெற்ற கூந்தல் என்பதே சிறப்பு. புணர்த்தல்: சேர்ப்பித்தல். இப்பாட்டு குளகம். அடுத்த பாடலுடன் பொருள்முடிவுபெறும்.

***227. 'என்று எழுந்து. அரு மறை முனிவர் யாரொடும்***
***சென்று. இரண்டு ஓசனை சேனை சூழ்சேர.***
***மன்றல் அம் குழலியர் நடுவண். மா தவக்***
***குன்றினை எதிர்ந்தனன் - குவவுத் தோளினான்.***

***என்று குவவுத் தோளினான்*** - என்று நினைத்த. திரண்ட தோள்களை உடைய அந்த மன்னன் (உரோமபதன்); ***சேனை சூழ்தர எழுந்து*** - நாற்பெரும் படையும் தன்னைச் சூழ்ந்து வர எழுந்து (புறப்பட்டு); ***அருமறை முனிவர் யாரொடும்*** - அரிய வேதங்களைக் கற்ற முனிவருடன்; ***இரண்டு யோசனை சென்று*** - இரண்டு யோசனை தூரம் எதிர் சென்று; ***மன்றல் அம் குழலியர் நடுவண்*** - மணமும் அழகும் உடைய கூந்தலை உடையவர்களான பெண்களின் நடுவே; ***மாதவக் குன்றினை எதிர்ந்தனன்*** - சிறந்த தவமலை போன்றவளாகிய கலைக் கோட்டு முனிவனைக் கண்டான்.

அருமறை: அரிய வேதம்;சூழ்தர - சுற்றிலும் வர. மாதவக் குன்று: உருவகம். நிலையில் திரியாது அடங்கியவனாதலின் 'மலை' என்றார். மாதவக் குன்று வர. மழை பொழிந்தது அதனால் மனம் மகிழ்ந்த மன்னனை. ''குவவுத் தோளினான்'' என்றதன் நயம் உணரத்தக்கது. மன்றல்: மணம். குழலினர்: கூந்தலை உடையவர்கள். யாரொடும்: யாவருடனும்.

***228. 'வீழ்ந்தனன் அடிமிசை. விழிகள் நீர் தர;***
***"வாழ்ந்தனெம் இனி" என. மகிழும் சிந்தையான்.***
***தாழ்ந்து எழு மாதரார்தம்மை நோக்கி. "நீர்***
***போழ்ந்தனிர் எனது இடர். புணர்ப்பினால்" என்றான்.***

***விழிகள் நீர் தர*** - *(அம்முனிவனைக் கண்ட மன்னன்) கண்கள் ஆனந்தக் கண்ணீர் சொரிய;* ***அடிமிசை வீழ்ந்தனன்*** - *அம்முனிவரின் திருவடிகளில் வணங்கி எழுந்து;* ***இனி வாழ்ந்தனம் என*** - *இனி யானும் எனது நாட்டு மக்களும் வாழ்வு பெற்றோம் என்று கூறி;* ***மகிழும் சிந்தையான்*** - *மகிழ்ச்சிமிக்க மனத்தையுடைய மன்னவன்;* ***தாழ்ந்து எழு மாதரார் தம்மை நோக்கி*** - *தன்னை வணங்கி எழுந்து நிற்கும் அந்தப் பெண்களைப் பார்த்து;* ***நீர் புணர்ப்பினால் எனது இடர் போழ்ந்தனிர் என்றான்*** - *நீங்கள் உங்கள் உபாயத்தினால் எனது பெருந்துன்பத்தைப் போக்கிவிட்டீர்கள் என்று கூறினான்*

*வீழ்தல்: அடிவீழ்தலாம். மிசை: ஏழனுருபு வாழ்ந்தனம்: உளப்பாட்டுத் தன்மைப்பன்மை வினைமுற்று. அம் என்பது விகுதி. பிறர்க்கு வரும் துன்பத்தையும் தனக்கு வந்ததாக நினைக்கும் பண்புடையவன் என்பதால் 'எனதிடர்' என்றான்.*

*முனிவரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி எழுந்த மன்னன் 'தங்கள் வரவால் வாழ்வு பெற்றோம்' என்று கூறி மகிழ்ந்தான். தன்னை வணங்கிய பெண்களைப் பார்த்து. 'உங்கள் செயலால் எனது துன்பத்தைப் போக்கினீர்கள்' என்று கூறினான்.*

***229. அரசனும் முனிவரும் அடைந்த ஆயிடை.***
***வர முனி. "வஞ்சம்" என்று உணர்ந்த மாலைவாய்.***
***வெருவினர் விண்ணவர்; வேந்தன் வேண்டலால்.***
***கரை எறியாது அலை கடலும் போன்றனன்.***

***அரசனும் முனிவரும்*** - *உரோமபத மன்னனும் அவனைச் சூழ்ந்து வந்த முனிவர்களும்;* ***அடைந்த ஆயிடை*** - *தன்னை வந்தடைந்த காலத்தில்;* ***வரமுனி*** - *சிறந்த முனிவனாகிய கலைக்கோட்டு முனிவன்;* ***வஞ்சம் என்று உணர்ந்த மாலைவாய்*** - *தன்னை இங்கு அழைத்து வந்து 'வஞ்சகச் செயல்' என்று தெளிந்த போதிலே;* ***விண்ணவர் வெருவினர்*** *-தேவர்கள் அஞ்சி நடுங்கினர்;* ***வேந்தன் வேண்டலால்*** - *அரசன் வேண்டிக் கொண்டதால்;* ***கரை எறியாது அலை கடலும் போன்றனன்*** - *கரையை மோதி அழித்துவிடாது அலைக்கும் கடல் போல அந்த முனிவன் கட்டுப்பட்டிருந்தான்.*

*ஆயிடை: அப்போது. 'வரமுனி' வரம் + முனி (வரம் தருமுனிவன்). உணர்ந்த: தெளிந்த (ஆய்ந்து தெளிந்த). மாலைவாய்; வாய் 'ஏழாம்' வேற்றுமை உருபு "விண்ணவர் வெருவினர்" என்ன நேருமோ என்று தேவர்கள் அஞ்சினர். கரை கடவாத கடல் போல. முனிவன் வஞ்சகம் என உணர்ந்தும் நிலை கடவாது பொறுமையுடன் இருந்தான். அலைகடல்: வினைத்தொகை.*

***230. 'வள் உறு வயிர வாள் மன்னன். பல் முறை.***
***எள்ள அரு முனிவனை இறைஞ்சி. யாரினும்***
***தள்ள அருந் துயரமும். சமைவும். சாற்றலும்.***
***உள் உறு வெகுளி போய் ஒளித்ததாம்அரோ.***

***வள் உறு வயிரவாள் மன்னன்*** - கூர்மை பொருந்திய வாளை உடைய அம்மன்னன்: ***பன்முறை எள்ளரு முனிவனை இறைஞ்சி*** - பலமுறையும் இகழ்தற்கரிய அந்த முனிவனை வணங்கி; ***யாரினும் தள்ள அரும் துயரமும்*** - யாராலும் போக்கமுடியாத (மழை இன்மையாகிய) துன்பத்தையும்; ***சமையும்*** - (அத்தகைய துன்பம் முனிவன் வருகையால்) நீங்கியதனையும்; ***சாற்றலும்*** - விரிவாகச் சொல்லவும்; ***உள்உறு வெகுளி போய் ஒளித்தது*** - (அம் முனிவனது) உள்ளத்தே உண்டான கோபம் நீங்கி மறைந்தது.

*வள் உறு: கூர்மை பொருந்திய. 'யாராலும்' இகழ்ந்து பேசமுடியாத நற்குணங்கள் அமைந்தவன் என்பதால் "எள்ளரு முனி" என்றார். எவராலும் போக்கமுடியாத துன்பத்தைத் "தள்ளருதுயர்" என்றார். சமைவு: நிகழ்ந்தது என்னும் பொருள் உடையது. காட்டில் மழை இல்லமையால் நேர்ந்த பஞ்சத் துயரையும் அதை நீக்க எவராலும் இயலாததையும் அம்முனிவனை அங்கு வருமாறு மேற்கொண்ட முயற்சியையும் அதனால் மழைபெய்ததான அப்போது நடந்ததையும் மன்னம் கூறினான் என்பது தோன்ற "சமைவும்" என்றார். உள்ளத்தே ஊன்றிய சினத்தை 'உள் உறு வெகுளி' என்றார் சாற்றல்: விரித்துரைத்தல். ஆம். அரோ: அசைகள்.*

**231. 'அருள் சுரந்து. அரசனுக்கு ஆசியும் கொடுத்து.**
**உருள் தரும் தேரின்மீது ஒல்லை ஏறி. நல்**
**பொருள் தரும் முனிவரும் தொடரப் போயினான்-**
**மருள் ஒழி உணர்வுடை வரத மா தவன்.**

***அருள் சுரந்து*** - (உள் எழுந்த சினம் நீங்கிய அம்முனிவன்) அருளைச் சுரந்து; ***அரசனுக்கு ஆசியும் கொடுத்து*** - அந்த வேந்தனுக்கு ஆசியும் கூறி; ***உருள் தரும் தேரின் மீது ஒல்லை ஏறி*** - உருண்டு செல்லும் தேரின் மீது விரைந்தேறி; ***நல்பொருள் தரும் முனிவரும் தொடர*** - நல்ல கருத்துகளையே எப்போதும் தரும் மற்ற முனிவர்களும் பின்வர; ***மருள் ஒழி உணர்வு உடை*** - மயக்கம் நீங்கிய நல்லுணர்வுடைய; ***வரத மாதவன் போயினான்*** - யாவருக்கும் வரந்தர வல்ல தவத்தையுடைய கலைக்கோட்டு முனிவன் சென்றான்;

*போயினான்: நகரை நோக்கிச் சென்றான். சினம் நீங்கி உண்மையை உணர அருள் பெருகும் என்பதால் "அருள் சுரந்து" என்றான். ஆசியும் என்பதில் உள்ள "உம்" எண்ணுப் பொருள் தந்து நின்றது. 52*

**232. அடைந்தனன். வள நகர் அலங்கரித்து எதிர்**
**மிடைந்திட. முனியொடும் வேந்தன்; கோயில் புக்கு.**
**ஒடுங்கல் இல் பொன் குழாத்து உறையுள் எய்தி. ஓர்**
**மடங்கல் - ஆதனத்திடை முனியை வைத்தனன்**

***வளநகர் அலங்கரித்து எதிர் மிடைந்திட*** - வளம் பொருந்திய அந்நகரை (மன்னன் கட்டளைப்படி) அலங்கரித்து (அந்த நகரத்து மக்கள்) எதிர்கொண்டழைத்துச் செல்வதற்குக் கூட்டமாய் நெருங்கி வர; **வேந்தன் முனியொடு** - அவ்வரசன் கலைக்கோட்டு முனிவனுடன்; **அடைந்தனன் கோயில்புக்கு** - அந்நகருள் சென்று அரண்மனைக்குள் போய்; **ஒடுங்கல் இல் பொன் குழாத்து உறையுள் எய்தி** - குறைவுபடாத பொன் திணித்துப் புனைந்த ஒரு மண்டபத்தை அடைந்து; **ஓர் மடங்கல் ஆதனத்து இடை** - ஒரு சிங்காதனத்தின் மேலே; **முனியை வைத்தனன்** - அந்த முனிவனை அமரச் செய்தான்.

*மிடைந்திட: நெருங்க. கோயில்: கோ+இல் அரசமாளிகை. பொன்குழாம்: பொன் மிகுதி. உறையுள்: இருப்பிடம் (மண்டபம்). மடங்கல்: சிங்கம். ஆதனம்: ஆசனம். முனிவன் இருந்தான் என்னாமல் அரசன் அமரச் செய்தான் என்று கூறியது. அரசனது உபசரிப்பைக் கண்ட முனிவன் பிரமித்துச் செயலாற்றிருந்தான் என்பதை உணர்த்தும். மாமுனிவனை நகரை அலங்கரித்து மக்கள் அழைத்துச் செல்ல மண்டபம் அடைந்து அரியணையில் இருத்தினான்*

***233. 'அருக்கியம் முதலிய கடன்கள் ஆற்றி. வேறு***
**உரைக்குவது இலது என உவந்து. தான் அருள்**
**முருக்கு இதழ்ச் சாந்தையாம் முகநலாள்தனை.**
**இருக்கொடு விதிமுறை இனிதின் ஈந்தனன்**

**வேறு உரைக்குவது இலதென** - (முனிவனை ஆசனத்தில் அமரச் செய்த பின்னர்) இனி வேறு உரைப்பதற்கு எதுவுமில்லை என்னும்படி; **அருக்கியம் முதலிய கடன்கள் ஆற்றி** - அருக்கியம் கொடுத்தல் முதலான கடமைகள் பலவும் செய்தளித்து; **தான் அருள் முருக்கிதழ் சாந்தையாம் முக நலாள் தனை** - மன்னன் தான் பெற்ற முருக்கம் பூப் போன்ற இதழ்களையுடைய சாந்தை என்னும் அழகிய பெண்ணரசியான தன் மகளை; **இருக் கொடு விதிமுறை** - வேத நெறிப்படி இருக்கு முதலான வேதமந்திரங்களைக் கூறி; **இனிதின் ஈந்தனன்** - இனிமையாக மணம் செய்து கொடுத்தான்.

*அருக்கியம்: பதினாறு வகை உபசாரங்களில் முதன்மையானது. கைகழுவ நீர் தருதல் முதலியனவாம். கடன்: கடமை. ஆற்றுதல்: செய்தல். உரைக்குவது: உரைப்பது. சாந்தையை இம்மன்னன். தயரதனிடமிருந்து பெற்று வளர்த்து வந்தான் என்பது வான்மீகம் கூறும் கருத்தாம். நலாள்: நல்லாள் தொகுத்தல் விகாரம்.*

***234.*** **'வறுமை நோய் தணிதர வான் வழங்கவே.**
**உறு துயர் தவிர்ந்தது. அவ் உலகம்; வேந்து அருள்**
**செறிகுழல் போற்றிட. திருந்து மா தவத்து**
**அறிஞன். ஆண்டு இருக்குநன்; அரச!' என்றனன்.**

***வறுமை நோய் தணிதர*** - *(மழை இல்லாமையால் நீண்ட காலம் அந்த நாட்டைப் பற்றியிருந்த கொடிய வறுமை நோய் தணியும்படி);* ***வான் வழங்கவே*** - *பெருமழை பொழியவே;* ***அவ்வுலகு உறுதுயர் தவிர்ந்தது*** - *அந்த நாடு மிக்க துன்பம் நீங்கப் பெற்றது;* ***வேந்து அருள் செறிகுழல் போற்றிட*** - *வேந்தன் பெற்ற செறிந்த கூந்தலையுடைய சாந்தை போற்றி உபசரிக்க;* ***திருந்து மாதவத்து அறிஞன்*** - *திருத்தமான தவத்தை உடைய அறிஞனாகிய அம்முனிவன்;* ***ஆண்டு இருக்கு நன் அரச என்றனன்*** - *அங்கே வாழ்கின்றான் அரசே என வசிட்டன் கூறினான்.*

*வசிட்டன் தயரதனுக்குக் கூறிய கலைக்கோட்டு முனிவரின் வரலாறு இது. அரசே! அம்முனிவன் உரோமபதன் நாட்டில் வாழ்கிறான் என்று வசிட்டன் கூறினான். உறுதுயர்: வினைத்தொகை. தணிதர: தணிய. உலகமென்பது நாட்டைக் குறித்து நின்றது. செறிகுழல்: வினைத்தொகை. திருந்திய தவம் அறிவுடைமைக்குக் காரணமென்பதால் '' திருந்து மாதவத்தறிஞன்'' என்றார். குழல்: கூந்தல்.*

***235. என்றலுமே. முனிவரன்தன் அடி இறைஞ்சி.***
***'ஈண்டு ஏகிக் கொணர்வென்' என்னா.***
***துன்று கழல் முடிவேந்தர் அடி போற்ற***
***சுமந்திரனே முதல்வர் ஆய***
***வன் திறல் சேர் அமைச்சர் தொழ. மா மணித் தேர்***
***ஏறுதலும். வானோர் வாழ்த்தி.***
***'இன்று எமது வினை முடிந்தது' எனச் சொரிந்தார்***
***மலர் மாரி. இடைவிடாமல்.***

***என்றலுமே முனிவரன் தன் அடி இறைஞ்சி*** - *என்று வசிட்டன் கூறியதும் தயரதன் வசிட்டனது திருவடிகளைத் தொழுது;* ***ஈண்டு ஏகிக் கொணர்வென் என்னா*** - *இப்போதே சென்று அந்த முனிவரை அழைத்து வருவேன்'' என்று கூறி;* ***துன்று கழல் முடிவேந்தர் அடி போற்ற*** - *வீரக்கழலும். மணி முடியும் அணிந்த அரசர் பலரும் அடிகளில் வீழ்ந்து வணங்கிப் போற்றவும்;* ***சுமந்திரனே முதல்வர் ஆய*** - *சுமந்திரன் முதலான வலிமை மிக்க;* ***வன்திறல் சேர் அமைச்சர் தொழ*** - *அமைச்சர்களெல்லாம் வணங்கி வாழ்த்தவும்;* ***மாமணித்தேர் ஏறுதலும்*** - *அழகிய மணிகளால் அலங்கரிக்கப்பட்ட தேரில் தயரதன் ஏறுதலுமே;* ***வானோர் வாழ்த்தி*** - *தேவர்களெல்லோரும் அரசனை வாழ்த்தி;* ***இன்று எமது வினை முடிந்தது என*** - *இன்றுடன் எங்கள் தீவிைைன யாவும் தீர்ந்து என்று;* ***மலர்மாரி இடைவிடாமல் சொரிந்தார்*** - *(மன்னனைப் போற்றி) இடைவிடாமல் தொடர்ந்து பூ மழை பொழிந்தனர்.*

*துன்று கழல்: நெருங்கிய கழல்கள் (வினைத் தொகை). கழல் தானியாகு பெயராய் காலைக் குறித்தது. 'முடிவேந்தர்' என்றமையால் தயரதன் திருவடிகளில் முடிபட வணங்கினர் என்பதைக் குறித்தது. சுமந்திரன்: தயரதனுடைய அமைச்சர்கள் எண்மரில் ஒருவன் தேரோட்டுபவனும் ஆவான். வன்றிறல்: மிக்க வன்மை (ஒரு பொருட் பன்மொழி). இராமனது அவதாரத்தை எதிர்பார்த்திருக்கும் தேவர்கள். அதனை நிறைவேற்றுவதற்குரிய வேள்வியைச் செய்ய. கலைக்கோட்டு முனிவரை அழைத்து வருதல் அவசியம் ஆதலால் 'எமது வினை முடிந்தது' என மகிழ்ந்தனர். தயரதன் தேரேறி. முனிவரை அழைத்து வரப் புறப்பட்டான். தேவர்கள் வாழ்த்தி மலர்மாரி பொழிந்து மகிழ்ந்தனர் என்றார்.*

***236. காகளமும் பல் இயமும் கனை கடலின்***
***மேல் முழங்க. கானம் பாட.***
***மாகதர்கள். அரு மறை நுல் வேதியர்கள்.***
***வாழ்த்து எடுப்ப. மதுரச் செவ் வாய்த்***
***தோகையர் பல்லாண்டு இசைப்ப. கடல் - தானை***
***புடை சூழ. சுடரோன் என்ன***
***ஏகி. அரு நெறி நீங்கி. உரோமபதன்***
***திருநாட்டை எதிர்ந்தான் அன்றே.***

***காகளமும் பல் இயமும் கனை கடலின் மேல் முழங்க*** - *எக்காளமும். வேறுபல வாத்தியங்களும் ஒலிக்கின்ற கடலை விடப் போரொலி செய்து முழங்கவும்;* ***மாகதர்கள் கானம் பாட*** - *பாடகர்கள் இன்னிசை பாடவும்;* ***அருமறை நுல் வேதியர்கள் வாழ்த்து எடுப்ப*** - *அரிய மறைவல்ல அந்தணர்கள் வேத மந்திரங்களைக் கூறி வாழ்த்திசைக்கவும்;* ***மதுரச் செவ்வாய்த் தோகையர் பல்லாண்டு இசைப்ப*** - *இன்மொழி கூறும் வாயினரான மயில் போன்ற மங்கையர் பல்லாண்டு பாடவும்;* ***கடல் தானைபுடை சூழ*** - *கடல் போன்ற படைகள் தன்னைச் சூழ்ந்து வரவும்;* ***சுடரோன் என்ன ஏகி*** - *சூரியனைப் போல விரைந்து சென்று;* ***அரு நெறி நீங்கி*** - *அரியநெறிகளையெல்லாம் கடந்து சென்று;* ***உரோமபதன் திருநாட்டை எதிர்ந்தான்*** - *உரோமபத மன்னனது அழகிய நாட்டை அடைந்தான்.*

*அன்றே: அசை. காகளம்: எக்காளம் என்னும் ஒருவகைக் கொம்பு. கனை கடல்: வினைத்தொகை. கானம்: இன்னிசை. மாகதர்: பாடகர்கள். அரசனுக்கு மெய்க்கீர்த்தி பாடுதல மாகதர் தொழில். மதுரம்: இனிமை குணவாகு பெயராய்க் குரலைக் குறித்து நின்றது. தோகை: மயில் தோகையர்: பெண்கள் உவமையாகு பெயர். பல்லாண்டு: பல ஆண்டுகள் வாழ்க எனக் குறிக்கும் வாழ்த்துப்பாடல். கடல்தானை: உவமைத் தொகை. உரோமபதன் ஆண்ட நாடு 'அங்க நாடு' எனப்படும்'. எதிர்தல்: அடைதல்.*

*பலவகை வாத்தியங்கள் முழங்க - மாகதர் பாட. வேதியர் வாழ்த்த. தோகையர் பல்லாண்டிசைப்ப - தானை புடை சூழ - நெறி நீங்கி - திருநாட்டை அடைந்தான்.*

***237. கொழுந்து ஓடிப் படர் கீர்த்திக் கோவேந்தன்***
***அடைந்தமை சென்று ஒற்றர் கூற.***

***கழுந்து ஓடும் வரி சிலைக் கைக் கடல் - தானை***
***புடை சூழ. கழற் கால் வேந்தன்.***
***செழுந் தோடும் பல் கலனும் வெயில் வீச.***
***மாகதர்கள் திரண்டு வாழ்த்த.***
***எழுந்து ஓடும் உவகையுடன் ஓசனை சென்றனன்***
***அரசை எதிர்கோள் எண்ணி.***

***கொழுந்து ஓடி படர் கீர்த்திக்கோ வேந்தன்*** - *கொழுந்து விட்டு ஓடிப் படர்கின்ற கீர்த்தியை உடைய மன்னர் மன்னான தயரதன்;* ***அடைந்தமை சென்று ஒற்றர் கூற*** - *தம் நகரை அடைந்த செய்தியை ஒற்றர்கள் உரோமபத மன்னனிடம் சென்று கூற;* ***கழற் கால் வேந்தன்*** *-வீரக் கழலணிந்த கால்களை உடைய அவ்வரசன்;* ***கழுந்து ஓடும் வரி சிலைக்கை கடல் தானைபுடை சூழ*** - *தேய்ந்து மழுங்கித் திரண்ட வரியமைந்த வில்லைக் கையிலுடைய கடல் போன்ற வீரர்கள் கொண்ட படை புடை சூழ;* ***செழுமம் தோடும் பல்கலனும் வில் வீச*** *-செழுமை மிக்க காதணிகளும் பிற அணிகலன்களும் ஒளிரவும்;* ***மாகதர்கள் திரண்டு வாழ்த்த*** - *மாகதர்கள் திரண்டு வாழ்த்தவும்;* ***எழுந்து ஓடும் உவகையுடன்*** - *மேலெழுந்து பொங்கும் மகிழ்வொடு;* ***அரசை எதிர்கோள் எண்ணி*** *-தயரத மன்னனை எதிர்கொண்டு அழைத்து வர நினைத்து;* ***ஓசனை சென்றனன்*** - *தனது நகரிலிருந்து ஒரு யோசனை துரம் சென்றான்;* ***கொழுந்து*** *-தளிர்;* ***கீர்த்தி*** - *புகழ் ''கொழுந் தோடிப் படரும்'' கொடிபோல் எங்கும் புகழ் பரப்பி வாழ்பவன் தயரதன்'' என்கிறார்.*

*கோவேந்தன்: அரசர்களுக்கு அரசன். ஒற்றர்: உளவாளிகள். கழுந்து: தேய்ந்து திரண்ட வடிவம். அடிக்கடி கையாள்வதால் தேய்ந்து மழுங்கித் திரண்டிருக்கும் 'வரிவில்' என்றார். வரிவில்: கட்டமைந்த வில் உவமைத் தொகை. தோடு: காதணி. உவகை: உவத்தல் தொழிற்பெயர். எதிர்கோள்: எதிர்கொள்ளுதல். கோள்: முதல்நிலை திரிந்த தொழிற்பெயர்.*

*வேந்தன். கோவேந்தனை எதிர்கோள் எண்ணி. எழுந்தோடும் உவகையுடன் சென்றான் என்று முடிக்க.*

*238.* ***எதிர்கொள்வான் வருகின்ற வய வேந்தன்-***
***தனைக் கண்ணுற்று. எழிலி நாண***
***அதிர்கின்ற பொலந் தேர்நின்று அரசர்பிரான்***
***இழிந்துழி. சென்று அடியில் வீழ.***
***முதிர்கின்ற பெருங்காதல் தழைத்து ஓங்க.***
***எடுத்து இறுக முயங்கலோடும்.***
***கதிர் கொண்ட சுடர் வேலான்தனை நோக்கி.***
***இவை உரைத்தான் - களிப்பின் மிக்கான்;***

***எதிர்கொள்வான் வருகின்ற வய வேந்தன் தனை*** -தன்னை எதிர் கொண்டு அழைத்துச் செல்ல வருகின்ற வெற்றி பொருந்திய உரோமபத மன்னவனை; ***கண்ணுற்று எழிலிநாண அதிர்கின்ற பொலம் தேர் நின்று இழிந்துழி*** - பார்த்து. மேகமும் நாணும்படியாக முழங்குகின்ற தனது பொன்தேரிலிருந்து தயரதன் கீழே இறங்கும் போது; ***சென்று அடியின் வீழ*** - உரோமபத மன்னன் சென்று தயரதன் பாதத்தில் வீழ்ந்து வணங்க; ***முதிர்கின்ற பெருங்காதல் தழைத்து ஓங்க*** - மேன்மேலும் முதிர்கின்ற பேரன்பு பெருகி. ஓங்க; ***எடுத்து. இறுக முயங்கலோடும்*** - உரோமபத மன்னனைத் (தன் கைகளால்) வாரி எடுத்துத் தழுவியவுடன்; ***கதிர்கொண்ட சுடர் வேலான் தனை நோக்கி*** - கதிர்விட்டு ஒளிரும் வேலையுடைய தயரதனைப் பார்த்து; ***களிப்பின் மிக்கான் இவை உரைத்தான்*** - மகிழ்ச்சி மிகக் கொண்ட உரோமபதன் பின்வருமாறு கூறலானான்.

*எதிர்கொள்வான்: வானீற்று வினையெச்சம். 'எதிர் கொள்ள' என்ற பொருளில் வந்தது. வயம்: வெற்றி. கண்ணுற்று: மிகுந்த ஆதரவுடன் பார்த்து. எழிலி: மேகம். கதிர்: ஒளிக்கற்றை (கிரணம்) பொலம்: பொன் (அழகு என்பதும் பொருளாம்) உழி: போது எதிர்கொள்வான் வருகின்ற வேந்தனைக் கண்ணுற்று. அரசர்பிரான் தேர்நின்று இழிந்துழி. அடியில் வீழ. எடுத்து முயங்க. சுடர்வேலான் தனை நோக்கி - இவை உரைத்தான் என்பது பொருள் முடிவு. இவை: பின்வரும் புகழுரைக் அடுத்த பாடலில் காணலாம். வேல்: வெல்லு தலையுடையது (ஒரு கைப்படையாம்). ஆதலால் முதன்நிலை திரிந்த தொழிற் பெயராகும்.*

***239. 'யான் செய்த மா தவமோ! இவ் உலகம்***
***செய் தவமோ! யாதோ! இங்ஙன்.***
***வான் செய்த சுடர் வேலோய்! அடைந்தது?' என.***
***மனம் மகிழா. மணித் தேர் ஏற்றி.***
***தேன் செய்த தார் மௌலித் தேர் வேந்தைச்***
***செழு நகரில் கொணர்ந்தான் - தெவ்வர்***
***ஊன் செய்த சுடர் வடி வேல் உரோமபதன்***
***என உரைக்கும் உரவுத் தோளான்.***

***வான் செய்த சுடர் வேலோய்*** - வானுலகத்தை நிலைபெறச் செய்த ஒளி மிகுந்த வேலை உடைய அரசே!; ***இங்ஙன் அடைந்தது*** - இங்குத் தாங்கள் எழுந்தருளக் காரணம்; ***யான் செய்த மாதவமோ*** - நான் செய்த பெருந்தவமோ!; ***இவ்வுலகம் செய்தவமோ*** - இந்த நாடு செய்த நல்ல தவமோ!; ***யாதோ*** - மற்றும் வேறு ஏதேனும் நற்செயல்களோ! (எனக் கூறி); ***மனம் மகிழா மணித் தேர் ஏற்றி*** -மனம் மகிழ்ந்து தயரதனைத் தேரில் ஏற்றி; ***தெவ்வர் ஊன் செய்த சுடர் வடிவேல்*** - பகைவருடலை உயிரற்ற ஊனுடலாக்கிய ஒளிமிக்க. கூரிய வேலை உடைய; ***உரோமபதன் எனவுரைக்கும் உரவுத் தோளான்*** - உரோமபதன் எனக் கூறப்படும் வலிய தோள்களை உடைய அவ்வரசன்; ***தேன் செய்த தார் மௌலி*** - தேன்பிலிற்றும் பூமாலையணிந்த மணிமுடி சூடியிருப்பவனாகிய; ***தேர் வேந்தை*** - தேர்ப்படையை உடைய தயரத வேந்தனை; ***செழு நகரில் கொணர்ந்தான்*** - செழிப்புடைய தனது நகருக்கு அழைத்து வந்தான்.

*வான் செய்த: வானுலகை நிலைபெறச் செய்து சம்பரனைக் கொன்று இந்திரனுக்கு வானுலகை மீட்டுத் தந்த தயரதன் செயலைக் குறிப்பிடும். இது கருத்துடை அடைமொழியாம். செய் தவம்: வினைத் தொகை நான் செய்த தவத்தினாலோ அல்லது நாடு செய்த தவத்தினாலோ. அல்லது வேறு ஏதேனுமோ? நீங்கள் இங்கு எய்தக் காரணம் அறியேன் என வியந்துரைத்தான். தார்: மாலை. "தெவ்வர் ஊன் செய்த சுடர் வேல்" பகைவர் உடலைப் புண் செய்த வேல் என்றும் உயிரற்ற உடலாகச் செய்த வேல் என்றும் பொருள் கூறலாம். 'என உரைக்கும்' என்பதற்கு. என்று உலக மக்களால் புகழ்ந்து பேசப்படும். எனவும் பொருள் கூறுதல் பொருந்தும். மௌலி. மகுடம். செழுநகர்: பண்புத் தொகை. மாதவமோ. செய்தவமோ. ஏதோ 'ஓ' வினாப் பொருள் உணர்த்தி நின்றது.*

***240.*** **ஆடகப் பொன் சுடர் இமைக்கும் அணி மாடத்**
**திடை. ஓர் மண்டபத்தை அண்மி.**
**பாடகச் செம் பதும மலர்ப் பாவையர் பல்-**
**லாண்டு இசைப்ப. பைம் பொன் பீடத்து.**
**ஏடு துற்ற வடிவேலோன்தனை இருத்தி.**
**கடன்முறைகள் யாவும் நேர்ந்து.**
**தோடு துற்ற மலர்த் தாரான் விருந்து அளிப்ப.**
**இனிது உவந்தான். சுரர் நாடு ஈந்தான்.**

***ஆடகப் பொன் சுடர் இமைக்கும் அணிமாடத்து இடை*** - *பொன்னொளி விளங்கும் அழகிய மாளிகை ஒன்றிலே அமைந்த;* ***ஒரு மண்டபத்தை அண்மி*** - *ஒரு மண்டபத்தை அடைந்து;* ***பாடகச் செம்பதும மலர்ப் பவையர் பல்லாண்டு இசைப்ப*** - *பாடகம் அணிந்த அழகிய பாதங்களை உடைய மகளிர் பலர் பல்லாண்டு பாட;* ***ஏடுதுற்ற வடிவேலோன் தனை பைம்பொன் பீடத்து இருத்தி*** - *மலர்களால் அலங்கரிக்கப்பட்ட கூரிய வேலை உடைய தயரதனைப் பசிய பொன்மயமான ஆசனத்திலே இருக்கச் செய்து;* ***கடன் முறைகள் யாவும் நேர்ந்து*** - *பேரரசனுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் யாவும் செய்து;* ***தோடு துற்ற மலர்த்தாரான் விருந்து அளிப்ப*** - *இதழ் நெருங்கிய மாலையணிந்த மன்னனாகிய உரோமபதன் விருந்து கொடுக்க;* ***சுரர்நாடு ஈந்தான் இனிது உவந்தான்*** - *அமரர் நாட்டை மீட்டுக் கொடுத்தவனான தயரத மன்னன் இனிதே மகிழ்ந்தான்.*

*ஆடகம்: ஒரு வகைப் பொன். ஆடகப்பொன்: இரு பெயரொட்டுப் பண்புத் தொகை. இமைத்தல்: ஒளிர்தல். அண்மி: சேர்ந்து. பாடகம்: காலில் அணியும் அணிகலன் பதுமமலர்: உவமையாகு பெயர். 'செம்பதும மலர்ப்பாயைர்' செந்தாமரையில் அமர்ந்திருக்கும் திருமகளை ஒத்த மகளிர் என்பதும் தகும். பாவை: பதுமை. உவமை யாகு பெயராய் மகளிரை உணர்த்தி நின்றது. ஏடு: இதழ். சினையாகு பெயராய் இங்கு மலர் மாலையை உணர்த்தியது. உகந்தான்: விரும்பினான். நாடு: நாடி வரத்தகுந்தது என்பதால் இப்பெயர் பெற்றதென்பர். பீடம்: ஆசனம். துற்ற: நெருங்கிய.*

*அணிமாடத் திடை - மண்டபத்தை அண்மி - பொன் பீடத்து இருத்தி - கடன் யாவும் நேர்ந்து - விருந்தளிப்ப - இனிது உவந்தான் என முடிக்க.*

*தயரதச் சக்கரவர்த்தியை உரோமபத மன்னன் அரியணையில் இருக்கச் செய்து. பேரரசனுக்குச் செய்யவேண்டிய மரியாதைகள் யாவும் செய்து விருந்தளித்தான். தயரதன் அதற்குப் பெரிதும் உவந்தான்.*

***241. செவ்வி நறுஞ் சாந்து அளித்து. தேர் வேந்தன்-***
***தனை நோக்கி. 'இவண் நீ சேர்ந்த***
***கவ்வை உரைத்து அருள்தி' என. நிகழ்ந்த பரிசு***
***அரசர்பிரான் கழறலோடும்.***
***'அவ்வியம் நீத்து உயர்ந்த மனத்து அருந்தவனைக்***
***கொணர்ந்து ஆங்கண் விடுப்பென்; ஆன்ற***
***செவ்வு முடியோய்!' எனலும். தேர் ஏறிச்***
***சேனையொடும் அயோத்தி சேர்ந்தான்.***

***செவ்வி நறும் சாந்தளித்து*** *- (விருந்து முடிந்தவுடன்) மணம் மிகுந்த சந்தனம் அளித்த உரோமபதன்;* ***தேர் வேந்தன் தனைநோக்கி*** *- தயரத மன்னனைப் பார்த்து;* ***நீ இவண் சேர்ந்த கவ்வை உரைத்தருள்தி என*** *- தாங்கள் இங்கு வந்த காரியத்தைச் சொல்லியருள வேண்டுமென்றுரைக்க;* ***அரசர் பிரான் நிகழ்ந்த பரிசு கழறலோடும்*** *- அதற்கு. அரசர்க்கு அரசனாகிய தயரதன் நிகழ்ந்த செய்தியைச் சொல்ல லோடும்;* ***அவ்வியம் நீத்து உயர்ந்த மனத்து அருந்தவனை*** *- பொறாமை முதலிய தீய குணங்களை நீக்கிய மனத்தை உடையவரான கலைக்கோட்டு முனிவரை;* ***கொணர்ந்து ஆங்கண் விடுப்பென்*** *-அயோத்திக்கு அழைத்து வந்து உன்னிடம் சேர்த்து விடுவேன்;* ***ஆன்ற செவ்வி முடியோய் எனலும்*** *-உயர்ந்த அழகிய மணிமுடி தரித்த வேந்தே! என உரோமபதன் கூறியதும்;* ***தேர் ஏறி. சேனையொடும் அயோத்தி சேர்ந்தான்*** *-உடனே தயரதன் தேரேறி. சேனையோடு அயோத்தி சென்று சேர்ந்தான்.*

*செவ்வி: அழகு. இங்குப் பக்குவம் என்னும் பொருளைத் தந்து நின்றது. நறுமை: மணம். சாந்து: சந்தனம் முதலிய மணப்பொருட் கலவை. கவ்வை: காரியம் பரிசு: தன்மை. அவ்வியம்: அழுக்காறு. அங்கண்: அங்கே முதல் நீண்டு 'ஆங்கண்' என நின்றது. நறுஞ் சாந்து: பண்புத்தொகை. விருந்துண்டு மகிழ்ந்ததும் சந்தனம். வெற்றிலை. பாக்கு ஆகியவை தந்து உபசரித்தல் மரபு. நிகழ்ந்த பரிசாவது. மக்கட்பேறளிக்கும் வேள்வி செய்ய வசிட்டன் கூறியது முதல் முனிவரை அழைத்துப் போக வந்ததுவரை நிகழ்ந்த செய்தியைத் தயரதன் உரோமபத மன்னனுக்குக் கூறினன் என்பதே.*

*சாந்தளித்து - நோக்கி - அருள்தி என. நிகழ்ந்த பரிசு சுழறலோடும். அருந்தவனை - விடுப்பன் என்றும் தேரேறி அயோத்தி சேர்ந்தான் என்றும் முடிக்க*

*உரைத்தருள்க: உரைக்க என்பதாம். 'அருள்' மரியாதை குறித்து வந்த பகுதிப் பொருள் விகுதி. கொணர்ந்து விடுப்பென் எனப்பொருள் முடிவுபெறும். 'கொணர்ந்து வினையெச்சம்.*

*242.* ***மன்னர்பிரான் அகன்றதன் பின். வய வேந்தன்.***
***அரு மறை நுல் வடிவம் கொண்டது***
***அன்ன முனிவரன் உறையுள்தனை அணுகி.***
***அடி இணைத் தாமரைகள் அம் பொன்***
***மன்னு மணி முடி அணிந்து. வரன்முறை செய்-***
***திட. 'இவண் நீ வருதற்கு ஒத்தது***
***என்னை?' என. 'அடியேற்கு ஓர் வரம் அருளும்;***
***அடிகள்!' என. 'யாவது?' என்றான்.***

***மன்னர் பிரான் அகன்றதன் பின்*** - *அரசர்க்கரசனான தசரதன் புறப்பட்டு நீங்கிய பிறகு. வயவேந்தன் - வெற்றி பொருந்திய வேந்தனான உரோமபதன்;* ***அருமறை நுல் வடிவு கொண்டது அன்ன*** - *அரிய மறைகளே வடிவெடுத்து வந்தது போன்றுள்ள;* ***முனிவரன் உறையுள் தனை அணுகி*** - *முனிவனான கலைக் கோட்டு முனியின் இருப்பிடத்தை அடைந்து;* ***அடி இணைத் தாமரைகள் அம்பொன் மன்னும்முடி அணிந்து*** - *அம்முனிவனது தாமரை போன்ற இரு பாதங்களையும் அழகிய தனது பொன்முடிக்கு அணியாகுமாறு வணங்கி. ;* ***வரன் முறை செய்திட*** - *வேண்டிய உபசாரங்களைச் செய்து நிற்க;* ***'நீ இவண் வருதற்கு ஒத்தது என்னை' என*** *-(முனிவர் அரசனைப்பார்த்து) நீ இங்கு வந்த காரியம் என்ன என்று கேட்க;* ***அடிகள் அடியேற்கு ஓர் வரம் அருளும் என யாவது என்றான்*** *-(அதற்கு மன்னன்) அடிகளே! அடியேனுக்கு ஒரு வரம் தரவேண்டும் என்று சொல்ல அது என்ன என்றான்.*

*மன்னர் பிரான்: அரசர் தலைவன் இங்குத் தசரதன். வயம்: வெற்றி. மறை நுல் மறையாகிய நூல் இரு பெயரொட்டுப் பண்புத் தொகை. அடித்தாமரை: உருவகம். வரன்முறை: முறைப்படி செய்யும் கடமை 'அடிகள்' வணக்கத்துக் குரியவர்களை அழைக்கும் மரியாதைச் சொல். முனிவர்களையும். துறவிகளையும் குறிக்கும். ''சுவாமி'' என்பதை ஒத்தது. 'அரிய மறைகளும். நுல்களுமே தவ வடிவம் தாங்கி வந்ததோ என்னும்படியான தவமுனிவன்' எனக் கலைக்கோட்டு முனியைக் கம்பர் சிறப்பித்துக் கூறுவது அம்முனிவனது சிறப்பை உணர்த்தும். தயரதன் அகன்றதன்பின் - வேந்தன் - முனிவரன் உறையுள் அணுகி. அடியிணை முடியணிந்து - வரன்முறை செய்திட - என்னை என வரமருளும் என - யாவதென்றான் என்பது பொருள் முடிவு. உரோமபதன் முனிவரது பாதங்களை வணங்கினான் என்பதை ''அடியிணைத் தாமரைகள் அம் பொன்மணி முடி அணிந்து'' எனக் கூறிய நயம் அறிந்து மகிழ்தற்குரியது.*

***243.  ‘புறவு ஒன்றின் பொருட்டாகத் துலை புக்க***
***பெருந்தகைதன் புகழில் பூத்த***
***அறன் ஒன்றும் திரு மனத்தான். அமரர்களுக்கு***
***இடர் இழைக்கும் அவுணர் ஆயோர்***
***திறல் உண்ட வடி வேலான். ‘’தசரதன்’’ என்று.***
***உயர் கீர்த்திச் செங்கோல் வேந்தன்.***
***விறல்கொண்ட மணி மாட அயோத்திநகர்***
***அடைந்து. இவண் நீ மீள்தல்!’ என்றான்.***

**புறவு ஒன்றின் பொருட்டு ஆகு துலைபுக்க** - ஒரு புறாவைக் காப்பாற்றுவதற்காகத் தன்னையே தரத்துணிந்து தராசுத்தட்டிலேறிய; **பெருந்தகை தன் புகழில் பூத்த** - பெருந்தகையான சிபிக் சக்கரவர்த்தியினது புகழ் பொருந்திய பெருங்குடியில் தோன்றிய; **அறன் ஒன்று திருமனத்தான்** - அறப்பண்பு பொருந்திய நல்ல மனத்தினனும்; **அமரர்களுக்கு இடர் இழைக்கும் அவுணர் ஆயோர் திறம் உண்ட வடிவேலான்** - தேவர்களுக்குத் துன்பம் தந்த அசுரரின் வலிமையை அழித்த வேலை உடையவனும்; **தயரதன் என்று உயர்கீர்த்தி செங்கோல் வேந்தன்** - தயரதன் என்னும் பெயர்கொண்ட புகழ்மிக்க செங்கோலுடையவனுமான வேந்தனது; **விறல் கொண்ட மணிமாட அயோத்தி நகர் அடைந்து** - வலிமையை அணியாகக் கொண்ட மணிகளால் இழைத்த மாளிகைகளையுடைய அயோத்தி நகரத்தை அடைந்து; **இவண் மீள்தல் என்றான்** - பின் இங்கு மீண்டு திரும்புதலே (நான் வேண்டும் வரமாகும்) என்று உரோமபதன் சொன்னான்.

*புறவு: புறா. புறாவுக்காகத் தராசில் ஏறிய சிபி மன்னன் வரலாறு பிரசித்தம். துலை: துலாக்கோல் (தராசு). புக்க: புகுந்த புகு என்ற பகுதி இரட்டித்து; காலம் காட்டியது (பெயரெச்சம்). பெருந்தகை: பண்புத்தொகை; புகழ் இல்: இல் குடி அல்லது குலம். பூத்தல்: உண்டாதல் அல்லது பரந்திருத்தல் என்றும் கூறலாம். இழைத்தல்: அடிக்கடி செய்தல்; உண்ட; அழித்த. இதில் அழிக்கும் தொழில் வேலின் மேலேற்றப்பட்டது. செங்கோல்: செம்+கோல்: நாட்டை நன்னெறி நிற்கச் செய்வது. விறல்: வலிமை. மீள்தல்: தொழிற்பெயர்.*

*துலைபுக்க - பெருந்தகையின் புகழில் பூத்த - மனத்தன் வடிவேலான் - வேந்தன் - நகர் அடைந்து மீள்தல் என்று பொருள் முடிவு காண்க.*

*முந்திய பாடலில் வரும் அருளும் என்று கேட்ட மன்னனை நோக்கி வரம் யாது என வினவிய முனிவனுக்கு அயோத்தி அடைந்து மீள்தலே அவ்வரம் என்றான். உரோமபதன்.*

***244.  அவ்வரம் தந்தனம்; இனித்தேர் கொணர்தி’ என***
***அருந் தவத்தோன் அறைதலோடும்.***
***வெவ்அரம் தின்று அயில்படைக்கும் சுடர்வேலோன்***

***அடி இறைஞ்சி. 'வேந்தர்வேந்தன்***
***கவ்வைஒழிந்து உயர்ந்தனன்' என்று. அதிர் குரல்தேர்***
***கொணர்ந்து. இதனில். கலை வலாள!***
***செவ்வி நுதல் திருவினொடும் போந்து ஏறுக!'***
***என. ஏறிச் சிறந்தான் மன்னோ.***

***அவ்வரம் தந்தனம் இனித் தேர் கொணர்தி என*** - *நீ கேட்ட அந்த வரத்தைக் கொடுத்தோம். இனி. தேர் கொண்டு வருக என்று;* ***அருந்தவத்தோன் அறைதலோடும்*** *-அந்தத் தவ முனிவன் கூறிய உடனே;* ***வெவ் அரம் தின்று அயில் படைக்கும் சுடர் வேலான்*** *- வெவ்விய அரத்தால் அராவப்பட்டு. கூரிய ஒளியுடைய வேலை உடைய உரோம பதன்;* ***அடி இறைஞ்சி*** *- கலைக்கோட்டு முனிவனது பாதங்களைத் தொழுது;* ***வேந்தர் வேந்தன் கவ்வை ஒழிந்து உயர்ந்தனன் என்று*** *- மன்னர் மன்னனான தயரதன் துன்பம் நீங்கி உயர்வான் என்றெண்ணி;* ***அதிர் குரல் தேர் கொணர்ந்து*** *- அதிர்ந்து ஒலிக்கும் தேரை வரவழைத்து;* ***இதனில் கலைவலாள செவ்வி நுதல் திருவினோடும் போந்து ஏறுக என*** *- கலைகளில் வல்லோனே! இதோ இத்தேரில் அழகிய நெற்றியை உடைய திருமகளைப் போன்ற சாந்தையுடன் ஏறி அருள்க! என்று கூற;* ***ஏறிச் சிறந்தான்*** *- அவ்வாறே (அம்முனிவன்) ஏறி அமர்ந்தான்.*

*மன்+ஓ: அசைகள் தந்தனம்: தன்மைப் பன்மை வினைமுற்று. கொணர்தி: ஏவல் வினைமுற்று "அரம்" இரும்புக்கருவிகளை அராவிக் கூராக்கும் கருவி. அரம் தின்று அயில் படைக்கும் அரத்தால் தேயக்கத் தேய்க்க அரம் தேய்ந்து சிறிதாகும் என்பதனை உணர்த்தும். கவ்வை துன்பம். அதிர்குரல்: வினைத்தொகை. செவ்வி: அழகு. தேர் ஏறிச் சிறந்தான்: அரிய செயல் ஒன்றைச் செய்து முடிக்கப்புறப்படுதலால் சிறந்து விளங்கினான் என்பது குறிப்பு.*

*கவ்வை ஒழிந்து உயர்வான் என்னாது உயர்ந்தனன் என இறந்த காலத்தால் கூறியது உறுதி என்பது தோன்றவாகும்.*

*வரம் தந்தனம் - தேர் கொணர்தி என - முனிவன் கூற - சுடர் வேலான் அடி இறைஞ்சி - வேந்தர் வேந்தன் கவ்வை ஒழிந்து உயர்ந்தான் என - தேர் கொணர்ந்து - திருவினொடும் ஏறுக என. ஏறிச் சிறந்தான் என்பது பொருள் முடிபாகும். திரு: திருமகளைப் போன்ற தனது மகளான சாந்தையை. செவ்வி நுதல் அழகமைந்த நெற்றியை உடையவள். தனது வளர்ப்பு மகளான சாந்தையுடன் வேள்வியை நிறைவேற்ற அயோத்தி செல்லவேண்டும் என்பது கருத்து.*

***245. குனி சிலை வயவனும் கரங்கள் கூப்பிட.***
***துனி அறு முனிவரர் தொடர்ந்து சூழ்வர.***
***வனிதையும். அரு மறை வடிவு போன்று ஒளிர்***
***முனிவனும். பொறிமிசை நெறியை முன்னினார்.***

***குனி சிலை வயவனும்*** - *வளைந்த வில்லையுடைய வெற்றி மிகுந்த வேந்தனான உரோபத மன்னனும்;* ***கரங்கள் கூப்பிட*** - *கைகளைக் குவித்து வணங்கி நிற்கவும்;* ***துனி அறு முனிவரர்*** - *குற்றம் நீங்கிய மனத்தினரான முனிவர்கள் பலரும்* ***தொடர்ந்து சூழ்வர*** - *தொடர்ந்து பின்பற்றிவரவும்;* ***வனிதையும் அருமறை வடிவு போன்று ஒளிர் முனிவனும்*** - *தனது வாழ்க்கைத் துணைவியான சாந்தையுடன். அரிய வேதங்களே உருவெடுத்து வந்தது போன்ற அந்த முனிவனும்;* ***பொறிமிசை*** - *இயந்திரத் தேர் மீது அமர்ந்து;* ***நெறியை முன்னினார்*** - *அயோத்தியின் வழியே செல்ல எண்ணினார்.*

*குனி சிலை - வளைந்த வில். குனிதல்: வளைதல் குனி சிலை வினைத் தொகை. வயவன்: வெற்றியுடையவன். வயவனும் "உம் எதிரது தழீஇயது. கூப்பிட - குவிக்க (கூப்பு+இடு+அ) 'இடு' என்பது துணை விகுதி. கூப்பு: வினை. துனி: உலக இயற்கையால் நேரும் துன்பமாம். அதனை வென்றவர்களாதலால் "துனி அறு" முனிவராயினர். பொறி: இயந்திரம் ("இயந்திர எகின மூர்ந்து") என்பது வில்லிபாரம். நினைந்த நெறியில் செல்ல வல்லது என்பதால் "தேர் ஏறி நெறியை முன்னினார்" என்று கூறப்பட்டது.*

*கரங்கள் கூப்பிட. சூழ்வர வனிதையும் முனியும் பொறிமிசை - நெறியை முன்னினார் என இயைக்கவும்.*

***246. அந்தர துந்துபி முழக்கி. ஆய் மலர்***
***சிந்தினர். களித்தனர் - அறமும் தேவரும்-***
***'வெந்து எழு கொடு வினை வீட்டும் மெய்ம்முதல்***
***வந்து எழ அருள் தருவான்' என்று எண்ணியே.***

***அறமும் தேவரும்*** - *அறக்கடவுளும் தேவர்களும்;* ***வெந்து எழு கொடு வினை வீட்டும்*** - *வெந்து எழுந்து நம்மை வருத்தும் கொடிய துன்பங்களை அழிக்கும்;* ***மெய்ம் முதல் வந்து எழ*** - *மெய். முதற் பொருளாகிய பரமன் இங்கு வந்து தோன்ற;* ***அருள் தருவான் என்று எண்ணி*** - *இம் முனிவன் அருள் புரிவான் என நினைத்து;* ***அந்தர துந்துபி முழக்கி*** - *தேவ வாத்தியங்களை முழக்கிக் கொண்டு;* ***ஆய்மலர் சிந்தினர்*** - *ஆய்ந்தெடுத்த நறுமண மலர்களைத் தூவினராக;* ***களித்தனர்*** - *மகிழ்ச்சி மிகக் கொண்டனர்.*

*அந்தரம்: விண்ணுலகம். துந்துபி: தேவ வாத்தியம். முழக்கி: வினையெச்சம். ஆய்மலர்: வினைத் தொகை. சிந்துதல்: சொரிதல். களித்தல். களி கொண்டாடுதல். அறம்: அறக்கடவுளைக் குறித்து நின்றது. வெந்தெழுதல்: வெப்பம் கொண்டு ஓங்குதல். கொடுவினை: பண்புத் தொகை. கொடுவினைகளை அழிக்கும் மெய்ம் முதல் என்பது. பொருள். மெய்: உண்மை. முதல்: காரணம். உலகுக்கு முதற் காரணமான மெய்ப் பொருளாகிய பரமனைக் குறித்தது. இங்கு ராமபிரானாக அவதரிக்க இருக்கும் திருமாலை 'மெய்ம்முதல்' என்றார்.*

*வந்தெழ: வந்து அவதரிக்க. அறமும் தேவரும் மெய்ம்முதல் வந்தெழ - அருள் தருவான் என்றெண்ணி - முழக்கி - சிந்தி - களித்தனர் என்பது கருத்து முனிவன் தேரேறி வருதல் கண்டு அறமும் தேவரும் மகிழ்ந்தனர் என்பதாம்.*

***247. தூதுவர் அவ் வழி அயோத்தி துன்னினார்;***
***மாதிரம் பொருத தோள் மன்னர்மன்னன்முன்***
***ஓதினர். முனி வரவு; ஓத. வேந்தனும்.***
***காதல் என்ற அளவு அறு கடலுள் ஆழ்ந்தனன்.***

***அவ்வழி தூதுவர்*** *- (பிறர் வருகையைத் தெரிந்து சொல்ல) அந்த வழியில் (நிறுத்தி வைக்கப்பட்டிருந்த) தூதுவர்கள் -* ***அயோத்தி துன்னினார்*** *- அயோத்தி நகரை அடைந்தனராகி;* ***மாதிரம் பொருத தோள் மன்னர் மன்னன் முன்*** *- எல்லாத்திசைகளிலுமுள்ள வேந்தர்களை வென்ற தோள்களையுடைய வேந்தர்கள் வேந்தனான தயரதனுக்கு முன் நின்று;* ***முனிவரவு ஓதினர்*** *- கலைக்கோட்டு முனிவனது வருகையைத் தெரிவித்தனர்;* ***ஓத. வேந்தனும் காதல் என்ற அளவறு கடலுள் ஆழ்ந்தனன்*** *- அவ்வாறு கூற. தயரத வேந்தனும் 'அன்பு' என்னும் அளக்க இயலாத கடலுக்குள் மூழ்கினவனானான்;* ***அவ்வழி*** *- அப்போது என்றும் கூறலாம்;* ***துன்னி*** *- நெருங்கி;* ***மாதிரம்*** *- திசை (இடவாகு பெயராகத் திக்கில் வாழ்பவரை உணர்த்தும்);* ***முன்*** *- திருமுன் என்பது பொருள்.*

*தூதுவர்: துன்னினர்: ஓதினர்; ஓத: கடலுள் ஆழ்ந்தனன் என்பது பொருள் முடிவு.*

*முனிவன் தான் எதிர் நோக்கியவாறு: வருவதனை அறிந்து அன்பு நிறைந்த மனத்தினனானான் என்பதை: காதல் என்ற அளவறு கடலுள் ஆழ்ந்தனன் என்று கூறியதன் நயம் மகிழ்தற்குரியது.*

*ஆறு கடலுள் ஆழ்ந்து. ஆம் தயரதன் என்ற பேராறு: 'காதல்' என்ற "அளப்பருங் கடலில் ஆழ்ந்தது" என்கிறார்.*

***248. எழுந்தனன் பொருக்கென. இரதம் ஏறினன்;***
***பொழிந்தன மலர் மழை. ஆசி பூத்தன;***
***மொழிந்தன பல் இயம்; முரசம் ஆர்த்தன;***
***விழுந்தன தீவினை. வேரினோடுமே.***

**பொருக்கென எழுந்தனன் இரதம் ஏறினான்** *- தயரதன் விரைவில் எழுந்து தேரில் ஏறிக் கொண்டான்;* ***மலர் மறை பொழிந்தன*** *- மலர்கள் மழை போலத் தூவப் பெற்றன;* ***ஆசி பூத்தன*** *- ஆசி மொழிகள் எழுந்தன;* ***பல் இயம் மொழிந்தன*** *- பல இன்னிசைக் கருவிகள் இசைத்தன: முரசம் ஆர்த்தன - முரசங்கள் முழங்கின;* ***தீவினை வேரினோடுமே விழுந்தன*** *-தீவினைகள் வேரொடு அற்று வீழ்ந்தனவாயின.*

*மன்னன். முனிவனின் வருகையை எதிர்நோக்கியிருந்தவன் ஆதலால் வரவேற்க விரைந்தெழுந்தான். தேரேறிச் சென்று முனிவனை வரவேற்க முந்தினான் என்பது தோன்ற "பொருக்கென" என்றார். மலர்மாரி பொழிந்தன. "ஆசி பூத்தன" என்றார் "பூத்தல்" உண்டாதலும். பரந்து செல்லுதலுமாம். "மொழிந்தன" என்றதால் பலவகை வாத்தியங்கள் முழங்க. அரசனது புகழை மொழிந்தனர் என்பதும் பொருளாம். மொழிந்தன. பூத்தன. ஆர்த்தன என்று படர்க்கை வினை கொண்டு முடிந்தது. வியப்பையும் குறிக்கும் மலர்மழை பொழிதல் முதலிய மங்கலச் செயல்களால் தீவினை வீழ்ந்தது என்கிறார்.*

249. ‘பிதிர்ந்தது எம் மனத் துயர்ப் பிறங்கல்’
என்று கொண்டு.
அதிர்ந்து எழு முரசுடை
அரசர் கோமகன்
முதிர்ந்த மா தவமுடை முனியை.
கண்களால்.
எதிர்ந்தனன். ஓசனை
இரண்டொடு ஒன்றினே. *

**அதிர்ந்தெழு முரசுடை அரசர்கோ மகன்** - ஒலித்து ஓங்கும் முரசத்தை உடைய மன்னர் மன்னனாகிய தயரதன்; **எம் மனத்துயர்ப் பிறங்கல் பிதிர்ந்தது என்று கொண்டு** - எமது மனத் துயராகிய மலை தூளாயிற்று என மனத்தில் கொண்டு; **ஓசனை இரண்டொடு ஒன்றின்** - இரண்டுடன் ஒன்றாகிய மூன்று யோசனை (சென்று); **முதிர்ந்த மாதவம் உடை முனியை** - முதிர்ச்சியுற்ற பெருந்தவமுடைய முனிவனை; **கண்களால் எதிர்ந்தனன்** - தனது கண்களால் தரிசித்தான்.

தனக்கு மக்கட் பேறில்லை என்பதைப் பெருந்துயராக. மலையை ஒத்த துன்பமாகக் கருதியிருந்தான் என்பதால் ‘‘மனத்துயர்ப் பிறங்கல்’’ என்றான். அத்துயரம் அடியோடு தீர்ந்தது என்பதால் ‘பிறங்கல் பிதிர்ந்தது‘ என்றான். ‘எம்’ என்றதால் தேவியரையும் நாட்டு மக்களையும் உட்படுத்திக் கூறினான். என்பது கருத்து. பிறங்குதல்: வளர்தல். பிதிர்தல்: சிதறுண்டு போதல். ஓங்கி: வளர்ந்து நின்ற துன்பம் அடியோடு சிதறுண்டு போயிற்று என்பது குறிப்பு. ‘கண்களால் எதிர்ந்தனன்’ என்று கண்பெற்ற பயன்பெற்றான் என்பதைக் குறிப்பிடவே ஆம். துயர்ப் பிறங்கல்: உருவகம். எழுமுரசு: வினைத்தொகை

250. நல் தவம் அனைத்து.
ஓர் நவை இலா உருப்
பெற்று. இவண் அடைந்தெனப்
பிறங்குவான்தனை.
சுற்றிய சீரையும்.
உழையின் தோற்றமும்.
முற்று உறப் பொலிதரு
மூர்த்தியான்தனை.

**நல் தவம் அனைத்தும் ஓர்** - நல்ல தவங்கள் அத்தனையும் சேர்ந்து ஒரு; **நவை இலா உருப்பெற்று** - குற்றமற்ற வடிவத்தைத் தாங்கி; **இவண் அடைந்த என** - இங்கே அடைந்துள்ளது என்று கூறும்படி; **பிறங்கு வான் தனை** - விளங்குகின்ற தொரு பெருமையுடையவனை; **சுற்றிய சீரையும்** - இடுப்பைச் சுற்றி அணிந்துள்ள மரவுரியையும்; **உழையின் தோற்றமும்** - மானைப் போன்றதொரு தோற்றமும்; **முற்றுறப் பொலிதரு மூர்த்தியான் துணை** - முழுதும் பொருத்தமுற விளங்குகின்ற வடிவம் கொண்டவனை.

*அடுத்த பாட்டுடன் பொருள் முடிவு பெறுவதாதலின் இது குளகம். பிறப்பு. உறுப்பு. தொழில். தோற்றம் இவைகளால் பெருமை மிக்க தவ முனிவன் என்பது இப்பாடல்கள் கூறும் சிறந்த பொருளாகும். நன்மை+தவம்: நற்றவம். பண்புத்தொகை. உழை: மான். பிறங்குதல்: பொலிதல். முற்றுறப் பொலிதரல்: அகமும். புறமும் ஒத்துப் பொலிதல். மூர்த்தம்: வடிவம் (உருவம்). எனவே வடிவத்தை உடையவன் என்பது பொருளாகும்.*

*இந்தப் பாடலும். அடுத்த பாடலும் கலைக்கோட்டு முனிவரின் அரிய தோற்றத்தை விவரிப்பதாகும்*

***251. அண்டர்கள் துயரமும். அரக்கர் ஆற்றலும்.***
***விண்டிடப் பொலிதரும் வினை வலாளனை.***
***குண்டிகை. குடையொடும். குலவு நூல் முறைத்***
***தண்டொடு. பொலிதரு தடக் கையான்தனை. ****

***அண்டர்கள் துயரமும்** - தேவர்களது (இதுவரை நீக்கப்படாத) துயரமும்; **அரக்கர் ஆற்றலும்** - அரக்கர்களது (இதுவரை எவராலும் வெல்லப்படாத) வலிமையும்; **விண்டிடப் பொலிதரு வினைவலாளனை** - விட்டு நீங்குவதற்குக் காரணமாக விளங்கும் செயல்திறம் வல்லவனை; **குண்டிகை குடையொடும் குலவு நூல் முறைத் தண்டொடும் பொலிதரு** - கமண்டலம் குடைகளுடன் பொருந்திய நூல் முறைப்படி அமைந்த யோகதண்டத்துடனும் விளங்கிய; **தடக்கையான் தனை** - தடக்கைகளையும் உடையவனை.*

*முன்பாட்டில் கூறிய சுற்றிய சீரைககுத்தக. குண்டிகை: குடை பொருந்திய கைகளையும். நூல் முறைத் தண்டொடும் பொலிதரு தடக்கையினையும் உடையவனாகத் திகழ்ந்தான் என்கிறார். ''அண்டர்கள் துயரமும். அரக்கர் ஆற்றலும் ஏக காலத்தில் விண்டிடப் பொலி தருவினை'' யாதெனின் ராமாவதாரத்துக்குக் காரணமாகவுள்ள வேள்வியை நிறைவேற்றுதலாகிய தொழில் என்க. குண்டிகை: கமண்டலம். குடை: உட்குடை வுள்ளதால் இப்பெயர் பெற்றது தண்டு: யோக தண்டத்தைக் குறிக்கும் (திரிதண்டம்) தடக்கை நீண்ட கை நூல்: சமய நூல்கள்.*

*பிறங்குவான்தனை. மூர்த்தியான் தனை. வினைவல்லாளனை. தடக்கையான் தனை: 'கண்களால் எதிர்ந்தனன்' என்பது கொண்டு பொருள் முடிவுபெற்றதாயிற்று*

***252. இழிந்து போய் இரதம். ஆண்டு.***
***இணை கொள் தாள் மலர்***
***விழுந்தனன். வேந்தர்தம் வேந்தன்;***
***மெய்ம்மையால்.***
***மொழிந்தனன் ஆசிகள் - முதிய***
***நான்மறைக்***
***கொழுந்து மேல் படர்தரக்***
***கொழுகொம்பு ஆயினான்.***

**வேந்தர்தம் வேந்தன்** - *மன்னர்களுக்கு மன்னனாகிய தயரதன்;* **ஆண்டு இரதம் இழிந்து போய்** - *(முனிவனைக் கண்ட) அந்த இடத்திலேயே தேரை விட்டுக் கீழே இறங்கிச் சென்று;* **இணைகொள் தாள் மலர் விழுந்தனன்** - *அம்முனிவனது தாமரை போன்ற இரண்டு பாதங்களிலும் வீழ்ந்து வணங்கினான்;* **முதிய நான்மறைக் கொழுந்து மேல்படர்தர** - *பழமையான வேதங்களாகிய கொழுந்துகள் வளர்ந்து படர;* **கொழு காம்பு ஆயினான்** - *(கொடி செழித்து வளர்ந்து தன் மீது படர) ஏற்றுக்கொள்ளும் கொழு கொம்பு போன்ற அம்முனிவன்);* **மெய்ம்மையால் ஆசிகள் பொழிந்தனன்** - *மெய்நெறிப்படியே மன்னனுக்கு ஆசி மொழிகள் கூறியருளினான்.*

*இழிதல்: இறங்குதல். ஆண்டு: முனிவனைக் கண்ட அவ்விடத்தில். இணைகொள்: இரட்டையான. தாள்மலர்: உருவகம். விழுந்தனன்: வணங்கினான். நான்மறை: கொடி. அவை கூறியுள்ள மந்திரங்கள்: கொழுந்து அக்கொடி படர்தற்குரிய கொம்பு: முனிவர். இரதம் இழிந்து: தாள் மலர் விழுந்தனன். நான்மறை படர்தரக் கொழு கொம்பாயினான் ஆசிகள் மொழிந்தனன் என்க. வேதங்கள் மிகப் பழமை வாய்ந்தவை யாதலின் முதிய நான்மறை என்றார். 'மெய்மையால்' என்பதற்கு 'நீர்மையால்' என்பதொரு பாடமுண்டு. நீர்மை: முறைமையாகும். முறைப்படி ஆசி கூறினான் என்பது அப்பாடத்துக்குப் பொருளாகும்.*

***253. அயல் வரும் முனிவரும்***
***ஆசி கூறிட.***
***புயல் பொழி தடக் கையால் தொழுது.***
***பொங்கு நீர்க்***
***கயல் பொரு விழியொடும்***
***கலை வலாளனை.***
***இயல்பொடு கொணர்ந்தனன்.***
***இரதம் ஏற்றியே.***

**அயல்வரு முனிவரும் ஆசி கூறிட** - *(அந்த முனிவனைத் தொடர்ந்து) அயலே வரும் பிற முனிவர்களும் ஆசி கூற;* **புயல் பொழி தடக்கையால் தொழுது** - *தயரதன் புயல் போலப் பொழியும் தனது கைகளால் முனிவர்களைத் தொழுது;* **பொங்கு நீர் கயல்பொரு விழியொடு** - *பொங்கும் நீரிலே வாழும் கயல்மீன் போன் கண்ணை உடைய அவர் மனைவியான சாந்தையோடும்;* **கலைவலாளனை** - *கலைகளில் தேர்ச்சி பெற்ற கலைக் கோட்டு முனிவனை;* **இரதம் ஏற்றியே** - *(தான் கொண்டு சென்ற) தேரில் ஏறச் செய்து;* **இயல்பொடு கொணர்ந்தனன்** - *உரிய மரியாதைகளுடன் நகருக்கு அழைத்து வந்தான்.*

*''புயல் பொழி தடக்கை'' வரையாது வழங்கும் மேகத்தைப் போல பயனை எதிர்பாராது வாரி வழங்கும் கைகளை உடையவன் தயரதன் என்பது கருதி. ''தருகை நீண்ட தயரதன்'' என்றார் முன்னும். நீர்க் கயல்பொரு விழி: அன்மொழித் தொகை. விழியை உடையவர் என்பது பொருளாகும். பார்வையால் குஞ்சுகளைக் காக்கும் மீன்போல. கருணை நோக்கத்தால் உலகத்து மாந்தரைக் காக்க வல்லவள் என்பது குறிப்பு. ஆணுக்குக் கலையறிவும். பெண்ணுக்குக் கருணையும் அணிகலன்கள் என்பது தோன்ற முனிவனை ''கலைவலாளன்'' என்றார். அவன் தேவியைக் கருணைக் கண்ணினள்'' என்றாரென்க.*

*ஆசி கூறிட - தொழுது - கலைவலாளனை - விழியொடு இரதமேற்றி - கொணர்ந்தனள் என்பது பொருள் முடிவாம்.*

***254.** **அடி குரல் முரசு அதிர் அயோத்தி மா நகர்**
**முடியுடை வேந்தன். அம் முனிவனோடும். ஓர்**
**கடிகையின் அடைந்தனன். - கமல வாள் முக**
**வடிவுடை மடந்தையர் வாழ்த்து எடுப்பவே.***

***கமலவாள் முகவடிவுடை மடந்தையர்** -தாமரை மலர் போன்ற ஒளி பொருந்திய முகமும். அழகும். இளமையும் வாய்ந்த சுமங்கலிகளாகிய பெண்கள்; **வாழ்த்து எடுப்ப** - வரும் வழி யெல்லாம் வாழ்த்தொலி கூற; **முடி உடை வேந்தன்** - மணி முடி தரித்த மன்னனாகிய தயரதன்: அம்முனிவனோடும் - அந்தக் கலைக்கோட்டு மாமுனியோடும்; **ஓர் கடிகையில்** - ஒரு நாழிகைப் போதிலே; **அடிகுரல் முரசு அதிர்** - குணில் கொண்டு அடிப்பதால் ஒலிமிக்குடைய முரசங்கள் முழங்கும்; **அயோத்தி அடைந்தனன்** -அயோத்தி மாநகரை அடைந்தான்.*

*அடிகுரல்: அடிக்கப்படுகின்ற குரல்; வினைத்தொகை. கடிகை: நாழிகை என்பது பொருள். இதற்கு நல்ல நேரத்திலே என்றும் கூறலாம். முனிவரது நல்ல வருகையைக் காட்ட முரசு முழங்கப்பட்டதென்க. கமலவாண்முக வடிவுடை மடந்தையர் என்பதில் கமலம் கருணையையும் வடிவு: அழகையும். மடந்தை என்பதால் இளமையையும் உடையவர்கள் அப்பெண்கள் என அறியலாம். பெரியோர்களுக்கு வாழ்த்துக் கூறி வரவேற்பவர் சுமங்கலிகளே என்பதால் இவ்வாறு பொருள் கூறப்பட்டது. வாழ்த்து: பல்லாண்டிசை.*

*மடந்தையர் வாழ்த்தெடுப்ப - வேந்தன் - முனிவனோடும் - ஓர் கடிகையில் முரசு அதிர் அயோத்தி அடைந்தனன் என்க. எடுப்பவே - 'ஏ' அசை*

***255.** **கசட்டுறு வினைத் தொழில் கள்வராய் உழல்**
**அசட்டர்கள் ஐவரை அறுவர் ஆக்கிய**
**வசிட்டனும். அரு மறை வடிவு போன்று ஒளிர்**
**விசிட்டனும். வேத்தவை பொலிய மேவினார்.***

***கசட்டுறு வினைத்தொழில்*** - குற்றங்கள் விளைவிக்கும் செயல்களை உடைய; ***கள்வராய் உழல் அசட்டர்கள்*** - கள்வர்களாகத் திரிகின்ற அறிவிலிகள் போன்ற; **ஐவரை அறுவர் ஆக்கிய வசிட்டனும்** - ஐம் புலன்களையும் அற்றுப் போவாராகச் செய்த வசிட்டனும்; **அருமறை வடிவு போன்று ஒளிர் விசிட்டனும்** - அரிய வேதங்களின் வடிவைப் போல விளங்கும் சிறந்த முனிவனான கலைக்கோட்டு முனிவனும்; **வேத்தவை பொலிய மேவினார்** -அந்த அரசவை பொலிவெய்துமாறு அடைந்தனர்.

*கசடு: குற்றம். வினைத்தொழில்: செயல். கள்வர்: களவு செய்வோன் வஞ்சகராவர். உழல் அசட்டர்: வினைத் தொகை. அசடர்: அறிவிலிகள் 'ஐவரை அறுவர் ஆக்கிய' ஐம்புலன்களையும் தத்தம் நெறியில் செல்லவிடாது தடுத்து நிறுத்திய என்பது பொருள். ஐந்து. ஆறு என்ற எண்ணுப் பெயர்களை அமைத்த நயம் கருதத்தக்கது. வசிட்டன் என்பதற்கு அண்மையில் இருப்பவன் என்பது பொருளாம். விசிட்டன்: சிறந்தவன். அரிய மறைகளெல்லாம் திரண்டு ஒரு வடிவம் கொண்டதெனத் திகழ்பவன் என்றது கலைக்கோட்டு முனிவனை. வேந்து+அவை: வேத்தவை. வேந்தவைக்கு இம்முனிவர்களால் பொலிவுண்டாயிற்று என்பது கருத்து.*

*ஐவரை அறுவராக்கிய வசிட்டனும் - மறை வடிவு போன்று ஒளிர் விசிட்டனும் - பொலிய மேவினார் என்பது பொருள் முடிவு.*

***256. மா மணி மண்டபம் மன்னி. மாசு அறு***
***தூ மணித் தவிசிடை. சுருதியே நிகர்***
***கோ முனிக்கு அரசனை இருத்தி. கொள் கடன்***
***ஏமுறத் திருத்தி. வேறு. இனைய செப்பினான்;***

***மாமணி மண்டபம் மன்னி*** - உயர்ந்த மணிகளால் அலங்கரிக்கப்பட்ட அந்த மண்டபத்தை அடைந்து: மாசு அறு தூமணித் தவிசிடை - குற்றமற்ற மணிகளால் அமைந்த அரியணையில்; **சுருதியே நிகர் கோமுனிக்கு அரசனை இருத்தி** - வேதத்துக் கொப்பான கோமுனி யான கலைக் கோட்டு முனிவனை இருக்கச் செய்து; **கொள்கடன் ஏமுறத்திருத்தி** - அம்முனிவன் ஏற்றுக் கொள்ளத்தக்க கடமைகளை மனம் களிக்கும்படி திருத்தமாகச் செய்து; **வேறு இனைய செப்பினான்** - வேறு சிறந்தவையான - பின்வருவனவற்றைக் கூறலானான்.

*முதலடி முற்று மோனை. மண்டபம்: இங்கு வேத்தவை. மன்னி: விளங்கி; மாசு: அழுக்கு (குற்றம்); தூ: தூய்மை; தவிசு: ஆசனம் (இருக்கை); சுருதி: வேதம்; கொள்கடன்: வினைத்தொகை: கடன்:கடமை: ஏமம்: அழகு ஏம் எனக் குறுகி நின்றது. திருத்தல்: செய்தல்; செப்புதல்: கூறுதல் (திசைச் சொல் என்பர்). அரசர் தலைவன். முனிவர் தலைவனையே உபசரித்தான் என்பது கருத்து.*

*மண்டபம் மன்னி. கோமுனிக்கரசனை - தவிசிடை இருத்தி -கடன் திருத்தி - இனைய செப்பினான் என்று இயைக்க.*

*257. ‘சான்றவர் சான்றவ! தருமம். மா தவம்.
போன்று ஒளிர் புனித! நின் அருளில் பூத்த என்
ஆன்ற தொல் குலம் இனி அரசின் வைகுமால்; யான் தவம்
உடைமையும். இழப்பு இன்றாம்அரோ.’*

***சான்றவர் சான்றவ*** - *பெரியோர்களால் பெரியோனே!;* ***தருமம் மாதவம் போன்று ஒளிர் புனித*** - *தருமத்தையும். தவத்தையும் போல ஒளிர்கின்ற புனிதனே!;* ***நின் புகழில் பூத்த*** - *உங்கள் அருளினால் பரந்து விளங்கும்;* ***என் ஆன்ற தொல்குலம்*** - *பெருமைமிக்க எனது பழமை வாய்ந்த இந்தச் சூரிய குலம்;* ***இனி அரசின் வைகும்*** - *(தங்கள் வருகையால்) ஆட்சியில் நிலைபெற்று விளங்கும்;* ***யான்தவம் உடைமையும் இழப்பின்றாம்*** - *எனது தவம் பொருந்திய தன்மையும் இழத்தல் இல்லாததாயிற்று.*

*சான்றவர்: மேலோர் (சால்புடையவர் என்பது கருத்து). ஆல்: அசை. தருமம் போன்று பரந்த புகழுடைமையாலும். தவம் போன்று கலங்காது நிலைத்திருந்தலாலும் ‘‘தருமம். மாதவம் போன்றொளிர் புனித’’ என்றார். பூத்தல்: பெருகல். தவம் உடைமையும் இழப்பின்று - தவமுடையன் ஆகும் தன்மையிலும் இழப்பில்லை என்பதும் பொருளாகும்.*

*இன்று: குறிப்பு வினைமுற்று. இதுவரை மகப் பேறின்மையால் செய்தவம் இழந்தவனாக எண்ணியிருந்த மன்னன். முனிவரது வருகையால் மகப்பேறு வாய்க்கும் என்னும் உறுதியால் ‘‘யான் தவம் உடைமை இழப்பின்று’’ என்றானாகும். அரோ: அசை. சூரிய குலத்தின் பெருமையும். பழமையும்’’ ஆன்ற தொல்குலம்’’ என்பதால் புலனாகும்.*

*258. என்னலும். முனிவரன் இனிது நோக்குறா.
‘மன்னவர்மன்ன! கேள்; வசிட்டன் என்னும் ஓர் நல் நெடுந் தவன்
துணை; நவை இல் செய்கையால் நின்னை இவ் உலகினில் நிருபர்
நேர்வரோ?’*

***என்னலும் முனிவரன் இனிது நோக்குறா*** - *என்று தயரதன் கூறக் கேட்டதும் அம்முனிவர் மன்னனை இனிமையுறப் பார்த்து;* ***மன்னவர் மன்ன! கேள்*** - *மன்னர்களுக்கெல்லாம் மன்னனாக விளங்கும் பெருமையுடையவனே! கேட்பாயாக;* ***வசிட்டன் என்னுமோர் நல் நெடும் தவன் துணை*** - *வசிட்டன் எனப் புகழ் பெற்ற நல்ல. நீண்ட தவத்தினை உடைய இம் முனிவனது துணையும்;* ***நவையில் செய்கையால்*** - *குற்றமில்லாத நல்ல செய்கையும் உடைமையால்;* ***நின்னை இவ்வுலகில் நிருபர் நேர்வரோ*** *-உனக்கு இவ்வுலகத்துப் பிற மன்னர்கள் ஒப்பாவார் உண்டோ?*

*என்னல்: என்று சொல்லுதல். நோக்குறா: பார்த்து: செயா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். ''தவன்துணை நவையில் செய்கையால்'' எனக் கூட்டி முனிவனது துணையாகிய குற்றமற்ற செய்கையால் எனவும் கூறலாம். சூரிய குல வேந்தர்களுக்கு இந்த வசிட்டனது நீண்ட காலம் தொடர்ந்துள்ள துணையைக் குறிப்பதாகும். நவை: குற்றம். நேர்தல்: ஒப்பாதல். நேர்வரோ என்பதில் 'ஓ' எதிர்மறைப் பொருள்தந்து நின்றது. செய்கையால்: நடத்தையால். ஒருவனை அவனது துணைவரையும் செய்கையையும் கொண்டே உலகத்தவர் அளவிடுவர் நீ நல்ல துணையைப் பெற்றிருக்கிறாய் நற்குண நற்செய்கைகளையும் உடையவனாய் இருக்கிறாய். எனவே. உனக்கு நிகரான அரசர்கள் உண்டோ? என்கிறார் முனிவர்.*

***259. என்றன பற்பல இனிமை***
***கூறி. 'நல்***
***குன்று உறழ் வரி சிலைக்***
***குவவுத் தோளினாய்!***
***நன்றி கொள் அரி மகம்***
***நடத்த எண்ணியோ.***
***இன்று எனை அழைத்தது இங்கு?***
***இயம்புவாய்!' என்றான்.***

***என்றன பற்பல இனிமை கூறி*** *- என்று பலபல இனிய மொழிகளை இயம்பி;* ***நல் குன்று உறழ் வரிசிலை குவவுத் தோளினாய்*** *- நல்ல மலையை ஒத்ததும். கட்டமைந்த வில்லைத் தாங்கி இருப்பதுமான திரண்ட தோள்களை உடையவனே!;* ***நன்றி கொள் அரிமகம் நடத்த எண்ணியோ*** *- நன்மை பயக்கும் அசுவமேத வேள்வியை நடத்துவதற்கு நினைத்தோ;* ***இன்று இங்கு என்னை அழைத்தது இயம்புவாய் என்றான்*** *- இன்று. இங்கு என்னை அழைத்த காரியத்தைச் சொல்லுவாய் என்று கலைக்கோட்டு முனிவன் கேட்டனன்.*

*இனிமை என்னும் பண்புப் பெயர் அப்பண்பை உடைய சொற்களை உணர்த்தி குணிப் பெயராக நின்றது. உறழ்: உவம உருபு. நன்றி: நன்மை. பண்புப்பெயர் அரிமகம்: அசுவமேத யாகம் என்னை என்பது 'எனை' எனத் தொகுக்கப்பட்டது. கலைக்கோட்டு முனிவன். தன்னை அழைத்த காரணத்தைத் தயரதனிடம் வினவினான் என்பது கருத்து.80*

***260. 'உலப்பு இல் பல் ஆண்டு எலாம்.***
***உறுகண் இன்றியே.***
***தலப் பொறை ஆற்றினென்;***
***தனையர் வந்திலர்;***
***அலப்பு நீர் உடுத்த பார்***
***அளிக்கும் மைந்தரை***
***நலப் புகழ் பெற. இனி***

நல்க வேண்டுமால்.'

**உலப்பு இல் பல் ஆண்டெலாம்** - முடிவில்லாத பல ஆண்டுகளாக; **உறுகண் இன்றியே** - எந்த ஒரு துன்பமும் இல்லாதிருக்கும்படி; **தலப்பொறை ஆற்றினேன்** - இந்த நிலத்தின் சுமையைத் தாங்கினேன்; **தனையர் வந்திலர்** -எனக்குப் பிறகு இந்த நாட்டை ஆளப் புத்திரர்கள் பிறக்கவில்லை; **அலப்பு நீர் உடுத்த பார்** -ஒலிக்கும் கடலால் சூழப் பட்ட இந்த உலகத்தை; **அளிக்கும் மைந்தரை** - எனக்குப் பிறகு காப்பாற்றத்தக்க மைந்தர்களை; **நலப்புகழ் பெற** - நன்மையுடன் புகழையும் நான்பெறும் பொருட்டு; **இனி நல்க வேண்டும்** - இனிமேல் எனக்குக் கொடுத்தருள வேண்டும்.

முனிவனது வினாவுக்கு விடையாகத் தசரதன் கூறியதிது. ஆல்: அசை. உறுகண்: துன்பம் தலப்பொறை: நிலச்சுமை. ஆற்றுதல்: தாங்குதல். அலப்புநீர்: ஒலிக்கின்ற கடல். அலம்பு: எதுகை நோக்கி 'அலப்பு' வலித்து நின்றது. உடுத்து: சூழ்ந்த நலம்+புகழ்: நன்மையான புகழ் என்று கூறினும் பொருந்தும். 'நன்கலன் நன்மக்கள் பேறு' என்பது குறள் கூறும் கருத்து.

'பல ஆண்டு. நாட்டின் தலப்பொறை ஆற்றினேன். மைந்தர் இன்மையால் எனக்குப் பிறகு இந்த நாட்டை நெறி நின்று காக்கவல்ல மைந்தரை இனி நீங்கள் தான் கொடுத்தருள வேண்டும்.' என்றான் தயரதன் என்பது கருத்து.

261. என்றலும். 'அரச! நீ இரங்கல்; இவ் உலகு
ஒன்றுமோ? உலகம் ஈர் -ஏழும் ஒம்பிடும்
வன் திறல் மைந்தரை அளிக்கும் மா மகம்
இன்று நீ இயற்றுதற்கு எழுக. ஈண்டு!' என்றான்.

**என்றலும்** - என்று (தயரத வேந்தன் தனது குறையைக்) கூறவே; **அரசே! நீ இரங்கல்** - (அதைக் கேட்ட முனிவன்) அரசே! நீ வருந்தாதே; **இவ்வுலகு ஒன்றுமோ உலகம் ஈரேழும் ஒம்பிடும்** - இவ்வுலகம் ஒன்று மட்டுமோ பதினான்கு உலகங்களையும் பாதுகாத்து அரசாள வல்ல; **வன்திறல் மைந்தரை அளிக்கும்** -மிகுந்த திறமை வாய்ந்த மைந்தர்களைக் கொடுத்தருளக் கூடிய; **மா மகம்** - பெரிய தொரு வேள்வியினை; **இன்று நீ இயற்றுதற்கு** - இன்றே நீ செய்வதற்காக; **ஈண்டு எழுக என்றனன்** - இப்போதே எழுவாயாக என்றான். இரங்கல்: 'அல்' எதிர்மறை விகுதி. ஒன்றுமோ 'ஒ' எதிர்மறை உணர்த்தும். வன்திறல்: ஒரு பொருட் பன்மொழி. மைந்து: வலிமை. மகம்: வேள்வி மா என்னும் குறிப்பு. மக்கட்பேறளிக்கும் வேள்வியைக் குறித்தது. இன்று இயற்றுதற்கு நீ எழுக: விரைவும் 'அவசியமும்' காட்டிற்று. ஓம்புதல்: காத்தல். எழுக: வியங்கோள் வினைமுற்று (கட்டளைப் பொருளில் வந்தது). ஈண்டு: இப்போதே.

தனக்குப் பிறகு நாடாளவல்ல மைந்தர் இல்லையே என்று வருந்திய தயரதனுக்கு இவ்வுலகம் மட்டுமோ. ஈரேழு உலகங்களையும் ஆளவல்ல புதல்வர்களைப் பெறப் போகிறாய் எனக் கூறிய மொழிகள் இராமாவதாரத்தைப் பற்றி வசிட்டன் அறிந்திருந்தது போல. கலைக் கோட்டு முனிவனும் அறிந்திருந்தான் என்பதைக் காட்டும்.

***262. ஆயதற்கு உரியன கலப்பை யாவையும்
ஏயெனக் கொணர்ந்தனர்: நிருபர்க்கு ஏந்தலும்.
தூய நல் புனல் படீஇ. சுருதி நூல் முறை
சாய்வு அறத் திருத்திய சாலை புக்கனன்.***

***ஆயதற்கு உரியன கலப்பை யாவையும்*** - *அந்த வேள்விக்கு உரியனவாகிய பொருள்கள் எல்லாவற்றையும்;* ***ஏய் எனக் கொணர்ந்தனர்*** - *ஏய் என்னும் அளவிலே பணியாட்கள் கொண்டு வந்து சேர்த்தனர்;* **நிருபர் வேந்தனும்** - *மன்னர் மன்னனான தயரதச் சக்கரவர்த்தியும்;* ***தூய நல் புனல் படீஇ*** - *தூய நல்ல நீரிலே நீராடி;* ***சுருதி நூல்முறை சாய்வரத் திருத்தி*** - *வேத நூல் முறைப்படி குறைவின்றி அமைக்கப்பட்ட;* ***சாலைபுக்கனன்*** - *வேள்விக்கென்று அமைக்கப்பட்ட வேள்விச் சாலை அடைந்தான்.*

*ஆயதற்கு: ஆய+அதற்கு (அகரம் தொக்கது). கலப்பை: பொருள்கள் உழு கலப்பை எனவும் கூறுவர். 'ஏய்' விரைவை உணர்த்தி நின்றது. ஏந்தல்: அரசன். நிருபர்: மன்னர். படீஇ: படிந்து சொல்லிசை அளபெடை வினையெச்சப் பொருளை உணர்த்தி நின்றது.*

*சாய்வு+அற: சாய்வற: ஒரு குறையும் இல்லாமல் சாய்தல் - சுருங்குதல் புக்கனன்: புகுந்தான். திருத்திய: செப்பம் செய்யப்பட்ட கொணர்ந்தனர் எவர்? பணியாட்கள் - தோன்றா எழுவாயாகும் கலப்பை என்பதற்குப் பொருள்கள் என்ற பொருள் உடைமையைக் 'காவினம் கலனே சுருக்கினம் கலப்பை' என்ற புறப்பாட்டாலும் அறியலாம்.*

*யாவையும் கொணர்ந்தனர் - ஏந்தலும் புனல் படீஇ - சாலை புக்கனன் என்பது முடிபு.*

***263. முழங்கு அழல் மும்மையும்
முடுகி. ஆகுதி
வழங்கியே. ஈர்-அறு திங்கள்
வாய்த்த பின்.
தழங்கின துந்துமி; தா
இல் வானகம்
விழுங்கினர் விண்ணவர்.
வெளி இன்று என்னவே.***

***மும்மையும் முழங்கு அழல்*** - *(வேள்வி செய்யத் தொடங்கி) காலை. பகல் மாலை ஆகிய மூன்று காலங்களிலும் எழுகின்ற அந்த வேள்வித் தீயில்;* ***ஆகுதி முடுகி வழங்கி*** *- அவிப் பொருள்களை விரைந்து கொடுத்து;* ***ஈராறு திங்கள் வாய்த்த பின்*** *- பன்னிரண்டு மாதங்கள் ஆன பின்பு;* ***தாவில் வானகம் துந்துமிதழங்கின*** *- குற்றமற்ற வானத்திலே தேவ வாத்தியங்கள் ஒலித்தன;* ***விண்ணவர் வெளி இன்று என்ன விழுங்கினர்*** *- தேவர்களும் இடைவெளி இல்லை எனுமாறு (வானத்தை) மறைத்து நின்றனர்.*

*முழங்கு அழல்: ஒலித்து எழுகின்ற வேள்வித் தீ. சதுஷ்டோமம். உந்தியம். அதிராத்திரம் ஆகிய மூன்று வேள்வி மூன்று நாட்களும் மூன்று காலத்தும் செய்யப்படுவனவாம். இவ்வாறு யாகம் நிறைவேற ஓராண்டு சென்றது என்பதால் ''ஈராறு திங்கள் வாய்ந்த பின்'' என்றார். ஆகுதி வழங்கல்: அவிப் பொருள்களை யாகத் தீயில் பெய்தல் ''வெளி இன்று என்ன விழுங்கினர்'' என்பதற்கு இடம் நோக்கி. விழுங்கினர்: மறைத்தனர் என்று உரை கூறப்பட்டது.*

*முழங்கு அழல்: வினைத்தொகை. வாய்த்தல்: பொருந்துதல். தழங்குதல்: ஒலித்தல். தாவில்: குறைதலில்லாத (குற்றமற்ற). ஈர்+அறு: ஈராறு (பன்னிரண்டு) அஃதாவது ஓராண்டு.*

***264. முகமலர் ஒளிதர் மொய்த்து. வான் உளோர்.***
***அக விரை நறு மலர் தூவி. ஆர்த்து எழ.***
***தகவுடை முனியும். அத் தழலின் நாப்பணே.***
***மக அருள் ஆகுதி வழங்கினான்அரோ.***

***வான் உளோர் முகமலர் ஒளிதர மொய்தது*** *- வானுலகில் வாழுகின்ற தேவர்கள் எல்லாம் தங்கள் முகங்களாகிய தாமரை மலர்கள் ஒளி தருமாறு அங்கு வந்து நெருங்கி நின்று;* ***அகவிரை நறுமலர் தூவி*** *- உள்ளே மணம் மிகுந்த மலர்களைச் சொரிந்து;* ***ஆர்த்து எழ*** *- ஆரவாரம் செய்து எழ;* ***தகவு உடை முனியும்*** *- தகுதியுடைய அந்தக் கலைக்கோட்டு முனிவனும்;* ***தழலின் நாப்பண்*** *- அந்த வேள்வித் தீயின் நடு இடத்திலே;* ***மகவருள் ஆகுதி வழங்கினான்*** *- பிள்ளைப் பேற்றைத் தரவல்ல ஆகுதியைக் கொடுத்தான்.*

*முகமலர்: முகமாகிய மலர் என்பதால் உருவகம். மொய்த்தல்: நெருங்குதல். விரை: மணம். நறுமலர்: பண்புத்தொகை. தூவி என்பதில் 'தூ' பகுதி. நாப்பண்: நடுவிடம். ஆர்த்து ஆரவாரித்து. ஆகுதி: இங்குப் 'பூர்ணாகுதி' யாம். தகவு: தகுதி (வேள்வியை நடைபெறச் செய்யும் தகுதியாம்). அரோ: அசை. உள்ளோர்: உளோர் எனத் தொகுக்கப்பட்டது. வானுவோர் - தூவி - மொய்த்து - எழ - முனியும் - ஆகுதி வழங்கினான் என இயைக்க.*

***265. ஆயிடை. கனலின்நின்று. அம் பொன் தட்டம் மீத்***
***தூய நல் சுதை நிகர் பிண்டம் ஒன்று. - சூழ்***
***தீ எரிப் பங்கியும். சிவந்த கண்ணும் ஆய்.***
***ஏயென. பூதம் ஒன்று எழுந்தது - ஏந்தியே.***

***ஆயிடை கனலின் நின்று*** - *அப்போது அந்த வேள்வித் தீயிலிருந்து;* ***தீ எரிப்பங்கியும் சிவந்த கண்ணுமாய்*** - *தீ எரிவது போன்ற தலை மயிரும் சிவந்த கண்ணும் உடையதாக;* ***பூதம் ஒன்று*** - *ஒரு பூதமானது;* ***அம்பொன் தட்டம்*** - *அழகிய ஒரு பொன் தட்டத்தின் மேலே;* ***தூய சுதை நிகர் பிண்டம் ஒன்று*** - *தூய்மையான அமுதத்தை ஒத்த ஒரு பிண்டத்தை;* ***ஏந்தி ஏயென எழுந்தது*** - *தாங்கிக் கொண்டு விரைந்து எழுந்தது.*

*அ+இடை: ஆயிடை (செய்யுள் விகாரம்). மீ: மேலே. சுதை: அமுதம். பிண்டம்: சோற்றுத்திரள் (பொன்தட்டிலே பாயசத்தை ஏந்தி அப்பூதம் வந்தது என்பது வான்மீகி கூற்று). பூதம்: தோற்றம் என்னும் பொருள் கொண்ட வட மொழிச் சொல்லாம். ஏய்: ஏய் எனச் சொல்வதற்குள் (ஒரு அளவைக் குறிப்பு) கம்பர் இச்சொல்லைப் பல இடங்களில் எடுத்தாண்டுள்ளார்.*

***266. வைத்தது தரைமிசை. மறித்தும் அவ் வழி***
***தைத்தது பூதம். அத் தவனும். வேந்தனை.***
***'உய்த்த நல் அமிர்தினை; உரிய மாதர்கட்கு. அத் தகு மரபினால்.***
***அளித்தியால்' என்றான்.***

***பூதம் தரை மிசை வைத்தது*** - *(அவ்வாறு தோன்றிய) அந்தப் பூதம் அப்பொன் தட்டத்தைத் தரையின் மேல் வைத்தது;* ***மறித்தும் அவ்வழி தைத்தது*** - *திரும்பவும் வந்த விதமே அந்த வேள்வித் தீயினுள் சென்று மறைந்தது;* ***அத்தவனும் உய்த்த நல் அமிர்தினை*** - *அந்தக் கலைக் கோட்டு முனிவனும் பூதம் கொடுத்த நல்ல அமுதுப் பிண்டத்தை;* ***உரிய மாதர்கட்கு*** - *உனக்குரிய பட்டத்து அரசியர்களுக்கு;* ***அத்தகு மரபினால்*** - *மூத்தவள். இளையவள் என்ற முறைப்படியே;* ***அளித்தியால் என்றான்.*** - *கொடுப்பாயாக என்று கூறினான்.*

*தரை மிசை: வேள்விச் சாலையின் தரை மீது. அவ்வழி: அந்த வழியே. தைத்தல்: குளித்தல் என்பதொரு பொருளும் உண்டு. வேள்வித் தீயிலே சென்று குளித்தது என்பதும் ஒரு பொருள். 'அம்பு தைத்தது' என்பது போல உய்த்த: சேர்த்த. வைத்த. செலுத்திய என்ற பொருள் உடையது. இங்குப் பூதம் தரைமிசை வைத்த அமிர்தம் ''என்பதால் வைத்து'' என்று கொள்ளுதல் பொருந்தும். 'அளித்தியால்' இங்கு 'ஆல்' அசை. அளித்தி: கொடு. அத்தகு மரபின்: மரபாவது மூத்தவளுக்கு முதலிலும். அதன் பின்முறைப்படி வழங்குதல் என்பதாம்.*

***267. மா முனி அருள் வழி. மன்னர்மன்னவன்.***
***தூம மென் சுரி குழல் தொண்டைத் தூய வாய்க்***
***காமரு கோசலை கரத்தில். ஓர் பகிர்.***
***தாம் உற அளித்தனன். சங்கம் ஆர்த்து எழ.***

***மாமுனி அருள் வழி*** - *மாமுனிவரான கலைக்கோட்டு முனிவர் அருள் செய்தபடியே;* ***மன்னர் மன்னவன்*** - *அரசர்க்கு அரசனான தயரதன்;* ***தூமமென் சுரிகுழல் தொண்டைத் தூயவாய்க் காமருகோசலை*** *-அகிற் புகையூட்டப்பட்ட கடை சுருண்ட கூந்தலையும் தொண்டைக் கனி போன்ற சிவந்ததான வாயையும் உடைய அழகிய கோசலையினது;* ***கரகத்தின் ஓர் பகிர்*** - *கைகளிலே அந்த அமுதத்தின் ஒரு பகுதியை;* ***சங்கம் ஆர்த்தெழ தாமுற அளித்தனன்*** - *சங்குகள் ஒலிக்கக் கொடுத்தான்;* ***அருள்வழி*** - *அருளின் வழியே (அருள் செய்தபடியே).*

*தொண்டை: கொவ்வைப் பழம். வாய்: அதரம். காமர்: அழகு காமரு என உகரச் சாரியை பெற்றது. கரம்: கை பகிர்: பகுதி தாமுற என்பதில் தாம் அசை. உறு: பொருந்த. பகிர்: சரி பாதியுமாம். சுரிகுழல்: வினைத்தொகை. ''மன்னவன் - சங்கம் ஆர்த்தெழ - கோசலை கரத்தில் ஓர் பகிர் அளித்தனன்'' என்பது கருத்து.*

***268.*** **கைகயன் தனையைதன் கரத்தும். அம் முறைச்**
**செய்கையின் அளித்தனன். தேவர் ஆர்த்து எழ-**
**பொய்கையும். நதிகளும். பொழிலும். ஓதிமம்**
**வைகுறு கோசல மன்னர்மன்னனே.**

**பொய்கையும் நதிகளும் பொழிலும்** - *பொய்கைகளிலும். ஆறுகளிலும். சோலைகளிலும்;* ***ஓதிமம் வைகுறு*** - *அன்னப் பறவைகள் வாழ்கின்ற;* ***கோசல மன்னர் மன்னன்*** - *கோசல நாட்டின் பேரரசனான தசரதன்;* ***கைகயன் தனையைதன் கரத்தும்*** - *கேகய நாட்டு மன்னனது மகளான கைகேயியின் கைகளிலும்;* ***அம்முறைச் செய்கையின்*** - *முன் சொன்ன முறையான செய்கையால்;* ***தேவர் ஆர்த்து எழ அளித்தனன்*** - *தேவர்கள் ஆரவாரித்து எழ அந்த அமுதப் பகுதியைக் கொடுத்தான்.*

*கைகயன்: கேகய நாட்டரசன். தனையை: மகள். ''அம்முறைச் செய்கையின்'' என்பதற்கு முறையினும் செய்கையினும்'' என்று பொருள் கூறுவர். முறையாவது முனிவர் கூறிய ''தருமரபு'' செய்கையாவது கோசலைக்குத் தந்த அம்முறைச் செய்கையாக என்று கூறுதல் சிறப்பு. ஓதிமம்: அன்னம். வைகுறு: 'உறு' துணை வினை. தசரதன் ஆண்ட நாடு ''கோசலம்'' என்னுமம் பெயர்கொண்டது என்று குறிப்பிடுகிறார்.*

*கோசலைக்கு ஈந்த முறையிலேயே கைகேயிக்கும் கொடுத்தான் என்பது கருத்து.*

***269. நமித்திரர் நடுக்குறு நலம்***
***கொள் மொய்ம்புடை***
***நிமித் திரு மரபுளான்.***
***முன்னர். நீர்மையின்***
***சுமித்திரைக்கு அளித்தனன் - சுரர்க்கு***
***வேந்து. 'இனிச்***
***சமித்தது என் பகை' என.***
***தமரொடு ஆர்ப்பவே.***

**நமித்திரர் நடுக்குறு நலம் கொள்** - *பகைவர்களை அஞ்சி நடுங்கச் செய்யும் வெற்றி நலம் கொண்ட;* **மொய்ம்பு உடை நிமித்திரு மரபுளான்** - *வலிமை மிகுந்தவனும் 'நிமி' பிறந்த மரபில் பிறந்தவனும் ஆன தசரத மன்னன்;* **முன்னர் நீர்மையின்** - *முன்னர் அவ்விரு தேவியர்க்கும் அளித்த தன்மையிலேயே;* **சுரர்க்கு வேந்து இனிச்சமித்தது என்பகை என** - *தேவர்களுக்கெல்லாம் தலைவனாகிய இந்திரன். எனக்கு உள்ள பகையெல்லாமே இன்றோடு அவிந்தது என்று சொல்லி;* **தமரொடு ஆர்ப்ப** - *தேவர்களான தமருடனே கூடி ஆரவாரிக்க;* **சுமித்திரைக்கு அளித்தனன்** - *தனது இளைய மனைவியான சுமித்திரை கையிலும் கொடுத்தான்.*

*நமித்திரர்: பகைவர். நடுக்குறு நலம்: நடுங்கச் செய்யும் வெற்றி. மொய்ம்பு: வலிமை. நிமி: சூரிய குல வேந்தருள் ஒருவன். இவனை இக்குவாகுவின் புதல்வன் என்பர். நீர்மை: தன்மை. இளைய தேவியான சுமித்திரைக்கும் முந்திய இரு தேவியர்க்கும் வழங்கிய தன்மையிலேயே வழங்கினான் என்பது இதன் குறிப்பாம். தயரத மன்னனின் இளைய மனைவி கைகேயி என்பான் வான்மீகி. ''இளைய மென்கொடிய'' இவ்விருவர்க் கிளையாள் என வேறிடங்களிலும் கம்பன் சுமித்திரையே இளைய மனைவி என்பதைக் குறிப்பிடுவதைக் காண்கிறோம். தமர்: தம்மவர்களான தேவரை உணர்த்தும்.*

***270. பின்னும். அப் பெருந்தகை. பிதிர்ந்து விழ்ந்தது***
***தன்னையும். சுமித்திரைதனக்கு நல்கினான்-***
***ஒன்னலர்க்கு இடமும். வேறு உலகின் ஓங்கிய***
***மன்னுயிர்தமக்கு நீள் வலமும். துள்ளவே.***

***பின்னும் அப்பெருந்தகை*** - மறுபடியும் அந்தப் பெருந்தகைமையுள்ள தயரத மன்னன்; ***பிதிர்ந்து வீழ்ந்தது தன்னையும்*** - பொன் தட்டிலே சிதறி வீழ்ந்த பிண்டத்தையும்; ***ஒன்னலர்க்கு இடமும் வேறு மன்னுயிர் தமக்குநீள் வலமும் துன்ன*** - பகைவர்களுக்கு இடப்புறமும். மற்றும் உலகத்து உயிர்களுக்கெல்லாம் வலப்புறமும் தோள். கண் முதலியன துடிக்க; ***சுமித்திரை தனக்கு நல்கினான்*** - சுமித்திரைக்கே கொடுத்தான். ஆண்களுக்கு இடம் துடித்தல் தீமை. வலம் துடித்தல் நன்மை என்பதால்: பகைவர்களுக்கு இடமும். மற்றுள்ளோர்க்கு வலமும் துடித்ததென்றான். மன்னுயிர்: விலை பெற்ற உயிர் (புகழோடு நிலவுதலாம்). தயரதன் அமுத பிண்டத்தைத் தேவியர் மூவருக்கும் முறையே கொடுத்துப் பின்னர் பிதிர்ந்து சிதறியவைகளைத் திரட்டி மறுபடியும் சுமித்திரை கைகளில் கொடுத்தான். இருபங்குகளைப் பெற்ற சுமித்திரை இரு பிள்ளைகளைப் பெற்றாள் என்பதை அறிகிறோம்.

***271. வாம் பரி வேள்வியும். மகாரை நல்குவது***
***ஆம் புரை ஆகுதி பிறவும். அந்தணன்***
***ஓம்பிட முடிந்தபின். உலகு காவலன்***
***ஏம்பலோடு எழுந்தனன் - யாரும் ஏத்தவே.***

***வாம்பரி வேள்வியும்*** - தாவிச் செல்லும் குதிரை வேள்வியான அசுவமேத யாகத்தையும்: ***மகாரை நல்குவது ஆம் புரை ஆகுதி பிறவும்*** - மக்கட் பேற்றையளிக்கும் உயர்ந்த ஆகுதியையும் அதற்கேற்ற பிற வழிபாடுகளையும்; ***அந்தணன் ஓம்பிட முடித்தபின்*** - கலைக்கோட்டு முனிவன் செய்து முடித்தபின்; ***உலகு காவலன்*** - நாடாளும் வேந்தனாகிய தயரதன்; ***யாரும் ஏத்தவே ஏம்பலோடு எழுந்தனன்*** - எல்லோரும் போற்றும்படி மகிழ்வோடு எழுந்தான்.

*வேள்வி முடிந்தபின் மன்னன் வேத்தவைக்கு வருதலைக் கூறுவது இப்பாட்டு. வாம் + பரி: வாவும் என்பதன் இடை குறைத்து வாம் என நின்றது. வாவுதல். தாவிச் செல்லுதல். மகார்: புத்திரர் (மகன் என்பதன் பன்மை). புரை: உயர்ச்சி. ஓம்பிட: 'இடு' ஆற்றல் உணர்த்தும் துணைவினையாம்; காவலன்: காத்தலின் வல்லவன். ஏம்பல்: மகிழ்ச்சி.*

*அந்தணன் ஆகுதி முடித்தபின் - காவலன் யாரும் ஏத்த எழுந்தனன் என்பது முடிவு. பரி வேள்வி: அசுவமேத யாகம். பிறவும்: மகவருள் ஆகுதியுடன் தொடர்புடைய பிற பூசனைகளாம். அந்தணன்: செந்தன்மையுடைய கலைக்கோட்டு முனிவன்.*

***272. முருடொடு பல் இயம் முழங்கி ஆர்த்தன;***
***இருள் தரும் உலகமும் இடரின் நீங்கின;***
***தெருள் தரு வேள்வியின் கடன்கள் தீர்ந்துழி.***
***அருள் தரும் அவையில் வந்து அரசன் எய்தினான்.***

***முருடு ஓடு பல்இயம்*** - *மத்தளத்துடன் கூடிய பலவகை வாத்தியங்களும்: முழங்கி ஆர்த்தன - மிக முழங்கி ஒலிக்கலாயின;* ***இருள் தரும் உலகமும்*** - *(அரக்கரால்) இருளடைந்திருந்த உலக மக்களெல்லாம்;* ***இடரின் நீங்கின*** - *தங்கள் துன்பங்களிலிருந்து நீங்கினர்;* ***தெருள் தரு வேள்வியின் கடன்கள் தீர்ந்துழி*** *-தெளிவைத் தரும் வேள்வியின் கடமைகள் யாவும் செய்து தீர்ந்தபின்னர்;* ***அரசன் அருள் தரும் அவை யில் வந்து எய்தினான்*** *- அரசனாகிய தயரதன் அருள் பொருந்திய அரசவைக்குச் சென்று சேர்ந்தான்.*

*'முருடு': ஒருவகைத் தோற் கருவி (மத்தளம் என்பர்). இயம்: வாத்தியம். முழங்கி ஆர்த்தல்: மிக்கொலித்தல். இருள்: அரக்கரால் உண்டான இடர். தெருள்: தெளிவு. மகப்பேறு உண்டு என்னும் தெளிவைத் தந்த வேள்வி என்பது பொருள். அருள் தரும் அவை: அருள்மிக்க அறிஞர் பேரவை. அருள் உணர்ச்சி தரக்கூடிய அவை எனினுமாம். 'உழி' இடம் (காலம்) பொருளைச் சுட்டி நின்றது. உலகம்: இடவாகு பெயராக மக்களை உணர்த்தும்.*

*செய்முறைக் கடன் செய்த சரயுவில் மன்னவன் நீராடுதல்*

***273. செய்ம் முறைக் கடன்அவை***
***திறம்பல் இன்றியே***
***மெய்ம் முறைக் கடவுளோர்க்கு ஈந்து.***
***விண்ணுளோர்க்கு***
***அம் முறை அளித்து. நீடு***
***அந்தணாளர்க்கும்***
***கைம் முறை வழங்கினன்.***
***கனக மாரியே.***

***செய்ம்முறைக் கடன் அவை திறம்பல் இன்றியே*** *- செய்ய வேண்டிய முறைப்படி எல்லாக் கடமைகளையும் தவறுதல் இல்லாமல்;* ***மெய் முறைக் கடவுளர்க்கு ஈந்து*** *- உண்மையான உரிமையுடைய தெய்வங்களுக்குக் கொடுத்து;* ***விண் உளோர்க்கும் அம்முறை அளித்து*** *- வானுலகிலுள்ள தேவர்களுக்கும் அந்தந்த முறைப்படி கொடுத்து;* ***நீடு அந்தணாளர்க்கும்*** *- நிறைந்த அந்தணர்களுக்கும்;* ***கனகமாரி செம் முறை வழங்கினன்*** *- பொன்மழையைக் கையின் முறைப்படி வழங்கினான்.*

*செய்ம்முறை: அவசியம் செய்யப்பட வேண்டிய முறைகள். கடன்முறை: மரியாதை முறைகள். மெய்ம் முறைக்கடவுளர்: குல தெய்வங்கள் அல்லது உண்மையும் அதிகாரமும் உடைய தேவதைகள். 'விண்ணுளோர்: தேவர்கள் கைம்முறை: கைப்பழக்கம் ''கனக மாரி'' என்பதற்கேற்ப வழங்கினன் என்ற நயம் கருதத்தக்கது. திறம்பல்: தவறுதல் (தொழிற்பெயர்). நீடு என்பதற்கு நிறைந்த புகழ்ப் பெருமைகளை உடைய என்பதும் பொருள்.*

***274. வேந்தர்கட்கு. அரசொடு. வெறுக்கை. தேர். பரி.***
***வாய்ந்த நல் துகிலொடு. வரிசைக்கு ஏற்பன***
***ஈந்தனன்; பல் இயம் துவைப்ப ஏகி. நீர்***
***தோய்ந்தனன் - சரயு நல் துறைக்கண் எய்தியே.***

**வேந்தர்கட்கு வரிசைக்கு ஏற்பன** - *தனது சிற்றரசர்களுக்கு அவரவர் பெருமைக்கு ஏற்றபடி;* **அரசொடு. வெறுக்கை. தேர். பரி வாய்ந்த நல்துகிலொடு ஈந்தனன்** *-அரசும் செல்வமும். தேர். குதிரை நல்ல ஆடைகள் ஆகிய பலவும் ஈந்தான் (பின்பு).* **பல் இயம் துவைப்ப ஏகி** - *பலவகை வாத்தியங்கள் முழங்கச் சென்று;* **சரயு நல்துறைக் கண் எய்தி நீர்தோய்ந்தனன்** - *சரயு நதித்துறையை அடைந்து நீராடினான்.*

*அரசொடு. துகிலொடு. என்பவைகளில் ஒடு 'உம்'மைப் பொருள் தந்து நின்றது. வெறுக்கை: செல்வம் (உயர்ந்த ஞானிகளால் வெறுக்கப்படுவதாதலால் இப்பெயர் வந்தது என்பார்கள்). பரி: குதிரை. துகில்:பட்டாடை. வரிசை முறை துவைத்தல்: அடித்தல் (தொழிற்பெயர்). 'துறைக்கண்' இதில் கண் ஏழாம் வேற்றுமை இடப்பொருள். வேள்வி நிறைவேறியவுடன் அரசர். அந்தணர். பணியாட்கள் ஆகியோருக்கு அவரவர் தகுதிக்கேற்ப. சன்மானம் வழங்கி. பிறகு நீராடி. புத்தாடை உடுத்து. ஆசியும் பிரசாதமும் பெறுதல் மரபு என்பதால் தயரதன் சரயு நதிக்கு நீராட ஏகினான் என்றார். நீர் தோய்தல்: நீரில் மூழ்குதல் (தோய்தல்: தொழிற்பெயர்) 95*

***275. முரசுஇனம் கறங்கிட. முத்த வெண்குடை***
***விரசி மேல் நிழற்றிட. வேந்தர் சூழ்தர.***
***அரசவை அடைந்துழி. அயனும் நாண் உற***
***உரை செறி முனிவன் தாள் வணங்கி. ஓங்கினான்.***

**முரசினம் கறங்கிட** - *முரசும். அதற்கினமான பலவகை வாத்தயங்களும் முழங்கவும்;* **முத்த வெண்குடை விரசி மேல் நிழற்றிட** - *முத்து மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட வெண்கொற்றக் குடை மேலே நிழல் தரவும்;* **வேந்தர் சூழ்தர** - *மன்னர் பலரும் சூழ்ந்துவரவும்;* **அரசு அவை அடைந்துழி** - *தயரதன் அரசவையை அடைந்தபோது;* **அயனும் நாண்உற உரை செறிமுனிவன்** - *நான்முகனும் நாணும்படி பலரும் புகழும் புகழுரை பொருந்திய முனிவனான வசிட்டனுடைய;* **தாள் இறைஞ்சி ஓங்கினான்** - *பாதங்களை வணங்கிப் பெருமை எய்தினான்.*

*'முரசினம்' முரசும். அதன் இனமும் ஆகும். முத்த வெண்குடை என்பதை 'வெண்முத்தக்குடை' என மாற்றிப்பொருள் கொள்க. விரச : நெருங்க (வினையெச்சம்). நிழற்ற: நிழல்கொடுக்க. சூழ்தர: 'அடைந்துழி' இதில் 'உழி' காலத்தை உணர்த்தும். வேள்வியை நடத்த வசிட்டனே காரணம் என்பதால் அனைவரும் புகழ்ந்த புகழ்மொழிகளுக்கு உரியவன் என்பதால் 'உரைசெறி' என்றான். வசிட்டனை வணங்கிப் பெருமை எய்தினான் மன்னன் என்பதால் 'ஓங்கினான்' என்றான்.*

***276. அரிய நல் தவமுடை***
***வசிட்டன் ஆணையால்.***
***இரலை நல் சிருங்க மா***
***இறைவன் தாள் தொழா.***

***உரிய பற்பல உரை***
***பயிற்றி. 'உய்ந்தனென்;***
***பெரிய நல் தவம் இனிப்***
***பெறுவது யாது?' என்றான்.***

***அரிய நல்தவம் உடை*** - *(தயரதன்) அரிய நல்ல தவத்தைச் செய்துள்ள;* ***வசிட்டன் ஆணையால்*** - *தனது குலகுருவாகிய வசிட்ட முனிவனது கட்டளைப்படி;* ***இரலை நல்சிருங்கமா இறைவன் தாள் தொழா*** - *கலைக்கோட்டு முனிவனது பாதங்களைத் தொழுது;* ***உரிய பற்பல உரை பயிற்றி*** - *தக்க பலப்பல துதிமொழிகளைத்தொழுது;* ***உரியனன்*** -*உன்னால் நான் உய்வுபெற்றேன்;* ***பெரிய நல்தவம் இனிப் பெறுவது யாதுஎன்றான்*** - *பெரிய நல்லதவத்தைச் செய்து நான் பெறுவது இதைவிட வேறு என்ன இருக்கிறது என்று கூறினான்.*

*அரிய: பிறரால் செய்தற்கரிய (பெயரெச்சம்). இரலை: மான். சிருங்கம்: கொம்பு. நல்மா இறைவன்: நல்ல சிறந்த குரு. தொழார்: தொழுது (செயா என்னும் வாய்பாட்டு வினைஎச்சம்) உரிய: தகுந்த. உரை: துதிமொழிகள். பயிற்றி: சொல்லி. 'பெறுவது யாது' இதில் யாது என்ற வினா எதிர்மறைப் பொருள்தந்து நின்றது. யாதொன்றும் இல்லை என்பது கருத்து.*

*277.* ***'எந்தை! நின் அருளினால் இடரின் நீங்கியே***
***உய்ந்தனென் அடியனேன்' என்ன. ஒண் தவன்.***
***சிந்தையுள் மகிழ்ச்சியால் வாழ்த்தி. தேர்மிசை***
***வந்த மா தவரொடும் வழிக்கொண்டு ஏகினான்.***

***எந்தை! நின் அருளினால்*** - *எந்தையே! உமது அருள் துணையால்;* ***இடரின் நீங்கியே உய்ந்தனன் அடியனேன் என்ன*** - *துன்பங்களில் இருந்து நீங்கி அடியவனாகிய நான் உய்ந்தேன் என்று தயரதன் சொல்லவே;* ***ஒண்தவன் சிந்தையுள் மகிழ்ச்சியால் வாழ்த்தி*** - *உயர்ந்த தவத்தினனாகிய கலைக்கோட்டு முனிவன் நிறைந்த மனமகிழ்ச்சியால் மன்னனை வாழ்த்தி;* ***வந்த மாதவ ரொடும் தேர்மிசை வழிக்கொண்டு. ஏகினான்*** - *தன்னுடன் வந்த தவமுனிவர்களோடும். தேரேறி. தமது உறைவிடம் நோக்கிச் செல்லலானான்.*

*'எந்தை' என்பதற்கு எனது தந்தை என்பது பொருளாயினும். இங்கு ஆசிரியர் என்னும் முறைமையை உணர்த்துவதாகும். கலைக்கோட்டு முனிவனது அருள் துணையால் மக்கட்பேறு வாய்ப்பது உறுதியாதலின் 'இடரின் நீங்கியே உய்ந்தனன்' என்றான். 'சிந்தையுள் மகிழ்ச்சி' என்றதால். மன்னன் செய்த குறையேதுமில்லாத உபசாரங்களால் மாமுனிவன் மகிழ்ந்தான் என்பதைக் காட்டி நின்றது. ஒண்தவன்: சிறந்த தவத்தை உடையவன் (பண்புத் தொகை). மிசை: ஏழனுருபு. வழிக்கொள்ளல்: புறப்படுதலாம். முனிவன் மனமார மகிழ்ந்து வாழ்த்தினான் என்பதைச் 'சிந்தையுள் மகிழ்ச்சி' என்பது குறித்து நிற்பதுவும் ஆம்*

***278. வாங்கிய துயருடை மன்னன். பின்னரும்.***
***பாங்குறு முனிவர் தாள் பழிச்சி ஏத்தல்கொண்டு.***
***ஓங்கிய உவகையர் ஆசியோடு எழா.***
***நீங்கினர்; இருந்தனன். நேமி வேந்தனே.***

***வாங்கிய துயர் உடை மன்னன்*** - *துயரம் நீங்கிய மன்னனாகிய தயரதன்;* ***பின்னரும் பாங்கு உறுமுனிவர் தாள்பழிச்சி*** - *பின்பு. கலைக்கோட்டு முனிவனைச் சூழ்ந்திருந்த முனிவர்களையெல்லாம் வணங்கிப் புகழ்ந்து;* ***ஏத்தல் கொண்டு ஓங்கிய உவகையர்*** - *போற்றிக் கொண்டாடியமையால் மகிழ்ச்சி கொண்ட அம்முனிவர்கள்.* ***ஆசியோடு எழா நீங்கினர்*** - *அரசனுக்கு ஆசிகூறி எழுந்து சென்றனர்;* ***நேமிவேந்தன் இருந்தனன்*** - *அத் தசரதவேந்தன் நலமே இருந்தனன்.*

*வாங்கியதுயர்: நீங்கிய துயரம். 'பாங்குடைமுனிவர்' என்பதற்கு நல்லொழுக்கம் உடைய முனிவர்கள் என்பதும் பொருளாம். பாங்கு: ஒழுக்கம். பழிச்சியேத்தல்: மிகுதியாக ஏத்துதலுமாம். நேமி: சக்கரம் ஆணையாகிய நேமி என்பர். 'பின்னரும்' என்றது. கலைக்கோட்டு முனிவனை வணங்கிய பின்னர் மற்ற முனிவர்களையும் வணங்கினான் என்பதை உணர்த்தும். எழா: எழுந்து (செயா என்ற வாய்பாட்டு வினைஎச்சம்).*

***279. தெரிவையர் மூவரும். சிறிது நாள் செலீஇ.***
***மருவிய வயாவொடு வருத்தம் துய்த்தலால்.***
***பொரு அரு திரு முகம் அன்றி. பொற்பு நீடு***
***உருவமும். மதியமோடு ஒப்பத் தோன்றினார்.***

***தெரிவையார் மூவரும்*** - *தயரதன் தேவியான மூவரும்;* ***சிறிது நாள் செலீஇ*** *-சில நாட்கள் சென்ற பின்னர்;* ***மருவிய வயாவொடு வருத்தம் துய்த்தனர்*** - *பொருந்திய ஆசையும் வருத்தமும் அடைந்தனர்:* ***பொரு அருதிருமுகம் அன்றி*** - *ஒப்பற்ற அவர்களது அழகிய முகங்களே அல்லாது;* ***பொற்பு நீடு உருவமும்*** - *அழகிய ஏனைய உறுப்புக்களும்;* ***மதியமோடு ஒப்பத்தோன்றினர்*** *- சந்திரனை ஒத்திருந்தார்கள்;* ***தெரிவையர்*** *-பெண்கள் (பேதை முதலிய ஐந்து பருவங்களையும் கடந்து நடுத்தர வயதுடையவர்கள் என்பதைக் குறிப்பிடுவதாம்).*

*செலீஇ: செல்ல (சொல்லிசை அளபெடை). வயா: கருப்பமுற்ற பெண்களுக்கு உண்டாகும் மசக்கை நோய் காரணமாகப் பொருள்கள் மேல் உண்டாகு அவாவாகும். எனவே ஆசை எனப்பொருள் கூறப்பட்டது. வருத்தம்: கருப்பத்தைத் தாங்குதலால் ஏற்படும் துன்பம். துய்த்தல்: அடைதல்; அனுபவித்தலுமாம். பொற்பு: அழகு. தோன்றுதல்: விளங்குதல். கருப்பம் வளர. வளர கருப்பிணிகளுக்கு மேனிவெளுத்தல் இயல்பாதலின் முகம் மட்டுமின்றி வேறு அங்கங்களும். சந்திரனை ஒத்து வெளுத்துக் காணப்பட்டனர். 'உருவமும்' என்பது முகமும் என்பதைத் தழுவிநின்றது. 'உம்' இறந்தது தழீஇயஎச்சஉம்மை. திருமுகமும். உருவமும் மதியோடு ஒப்பத் தோன்றினர் என்பது கருத்து. தசரதன் தேவியர் மூவரும் கருவுற்றனர் என்பது கூறப்பட்டது. அடுத்த மூன்று பாடல்கள் கோசலை வயிற்றில் திருஅவதாரம் செய்ததனைக் கூறுவதாகும்.*

***280.*** **ஆயிடை. பருவம் வந்து அடைந்த எல்லையின்.**
**மா இரு மண்மகள் மகிழ்வின் ஓங்கிட.**
**வேய் புனர்பூசமும். விண்ணுளோர்களும்.**
**தூய கற்கடகமும். எழுந்து துள்ளவே.**

***ஆயிடை பருவம் வந்து அடைந்த எல்லையின்*** *- அப்போது. மகப்பேற்றுக்குரிய பருவம் வந்து சேர்ந்த அந்தக்காலத்தில்;* ***மா இரும்மண் மகள் மகிழ்வின் ஓங்கிட*** *- மிகப்பெரிய நிலமகள் மகிழ்ச்சியில் ஓங்கவும்;* ***வேய்புனர் பூசமும்*** *- பொருந்திய 'புனர்பூசம்' என்னும் விண்மீனும்;* ***விண்ணுளோர்களும்*** *- வானுலகில் வாழும் தேவர்களும்;* ***தூயகற்கடகமும்*** *- தூய்மையானதாகிய கடக ராசியும்;* ***எழுந்து துள்ள*** *- (மகிழ்ச்சியினால்) எழுந்து துள்ளி ஆடவும்.*

*அ+ஆயிடை; செய்யுட்குரிய நீட்டல் விகாரம். பருவம்: காலம். எல்லை: போது; அளவு. மாயிரு: ஒரு பொருட் பன்மொழியாம். மா: மிகுதி (பெரிய). இரு: பெரிய மிகப்பெரிய என்னும் பொருள் உடையதாம்.*

*ராமாவதாரத்தால் தன்னையும். தன் மக்களையும் பற்றிய துயரம் தீரும் என்பதால் மண்மகள் மகிழ்ந்தாள் என்பது கருத்து. வேய்: மூங்கில் எனவே மூங்கில் போன்ற புனர்பூசம் என்பதும் பொருளாம். ராமன் அவதரித்த நாள் புனர்பூசம். ராசி கடகம் என்பதால் தமது பேற்றினை நினைந்து அவை மகிழ்ந்து எழுந்து துள்ளின என்றார். இதுமுதல் மூன்று பாடல்கள் குளகம். துள்ள. ஓங்க பயந்தனள் என்று முடிவுபெறும்.*

***281.*** **சித்தரும். இயக்கரும். தெரிவைமார்களும்.**
**வித்தக முனிவரும். விண்ணுளோர்களும்.**
**நித்தரும். முறை முறை நெருங்கி ஆர்ப்புற.**
**தத்துறல் ஒழிந்து நீள் தருமம் ஓங்கவே.**

**சித்தரும் இயக்கரும் தெரிவைமார்களும்** - சித்தர்களும். இயக்கர்களும். அவரவர்களது தேவியர்களும்; **வித்தக முனிவரும்** - அறிவில் சிறந்து விளங்கும் முனிவர்களும்; **விண்ணுளோர்களும்** - விண்ணுலகத்தில் உள்ளவர்களும்; **நித்தரும் முறைமுறை நெருங்க ஆர்ப்புற** - நித்திய சூரிகளும் முறைப்படி கூடி ஆரவாரம் செய்யவும்; **நீள் தருமம் தத்துறல் ஒழிந்து ஓங்க** - நெடிய தருமதேவதை இடையீடின்றிப் பெருகி வளரவும். சித்தர். இயக்கர்: தேவர்களுக்குள் ஒருவகையினர். வித்தகம்: அறிவு (ஆற்றலுமாம்). நித்தர்: பரமபதத்தில் திருமாலை விட்டு நீங்காது வாழும் நித்திய சூரிகள். தத்துறல்: வளர்ச்சிகுன்றல்.

'தெரிவை' இங்குப் பருவப் பெயராகாமல் பெண்ணைக் குறித்தது. நித்தியர் என்றது முக்தருக்கும் உபலட்சணம் திருமால் ராமனாக அவதரிக்கும் கருணைப்பெருக்கை எண்ணி. சித்தர் முதலானோர் மகிழ்ச்சியில் திளைத்தனர் என்பது கருத்து. நித்திய சூரிகள் வாழும் பரமபதம். தேவர்கள் வாழும் வானுலகத்திலும் உயர்ந்தது என்பது குறிப்பு. நீள் விசும்பு எனத்தேவருலகையும். பெருநிலம் எனப்பரமபதத்தையும் கூறும் திருமங்கை யாழ்வார் பாடல் நினைவுகூறத் தக்கது.

*282.* **ஒரு பகல் உலகு எலாம்**
**உதரத்துள் பொதிந்து.**
**அரு மறைக்கு உணர்வு அரும்**
**அவனை. அஞ்சனக்**
**கரு முகிற் கொழுந்து எழில்**
**காட்டும் சோதியை.**
**திரு உறப் பயந்தனள் - திறம்**
**கொள் கோசலை.**

**ஒருபகல் உலகு எலாம் உதரத்துள் பொதிந்து** -பிரளயத்தின்போது எல்லா உலகங்களையும் தனது வயிற்றிலே அடக்கி; **அருமறைக்கு உணர்வு அரும்அவனை** - அரிய மறைகளாலும் தெரிந்து கொள்ள இயலாத பரம்பொருளாகிய அப்பரமனை; **அஞ்சனக் கருமுகில் கொழுந்து எழில்காட்டும் சோதியை** - அஞ்சமனம் போன்று கரிய மேகக் கொழுந்தின் அழகைக் காட்டிநிற்கும் ஒளிவடிவாய்த் திகழ்பவனை; **திறம்கொள் கோசலை திருஉறப் பயந்தனள்** - திறமையுடைய கோசலை. உலகம் மங்கலம் பொருந்த. ஈந்தாள்.

'பகல்' கால அளவைக்குறித்து நின்றது. பிரளயத்தின் போது. அப்பெருவெள்ளத்தே அழியாதபடி எல்லா உலகங்களையும் தனது வயிற்றிலே வைத்துப் பாதுகாத்துக் கொண்டு. அவ்வெள்ளநீரிலே ஆலிலையின் மீது ஒருபாலகனாய் இருந்த திருமாலின் தன்மையை இங்குக் கூறுகிறான். முகில் கொழுந்து: மேகக் கொழுந்து. 'கொழுந்து' இங்கு நுண்மை. 'திருஉறல்' உலகும். தானும். மங்கலம் அடைய திறம் கொள்கோசலை: இங்குத்திறம் கோசலையின் புண்ணியத் திறத்தைக் குறிக்கும். பயந்தனள்: பெற்றனள். பொதிதல்: சேர்த்துக் கட்டிவைத்தல்: சோதி: பேரொளிப் பிழம்பு.

***283. ஆசையும். விசும்பும் நின்று அமரர் ஆர்த்து எழ.***
***வாசவன் முதலினோர் வணங்கி வாழ்த்துற.***
***பூசமும் மீனமும் பொலிய. நல்கினாள்.***
***மாசு அறு கேகயன் மாது மைந்தனை.***

*__ஆசையும் விசும்பும் நின்று__ - எல்லாத்திசைகளிலும் வானிலும் நின்று; __அமரர் ஆர்த்து எழ__ - தேவர்கள் ஆரவாரம் செய்து எழுந்திருக்கவும்; __வாசவன் முதலினோர்__ - இந்திரன் முதலிய தேவர்கள் எல்லோரும்; __வணங்கி வாழ்த்துஉற__ - வணங்கி. வாழ்த்தித் துதிக்கவும்; __மாசு அறு கேகயன் மாது__ - குற்றமற்ற கேகய மன்னன் மகளான கைகேயி; __பூசமும் மீனமும் பொலிய மைந்தனை நல்கினாள்__ - பூச நட்சத்திரமும். மீன ராசியும் பொலிந்து விளங்க. ஒரு மகனைப் பெற்றாள்.*

*ஆசை: திசை. விசும்பு: வானம். வாசவன்: தேவேந்திரன்.*

*வசுக்களுக்குத் தலைவன் என்பதால் வாசவன் எனப் பெயர் பெற்றான். தேவர்கள் திசைகளிலும் நின்று ஆர்த்து எழவும். இந்திரன் முதலான தேவர்களெல்லாம் வணங்கி வாழ்த்தவும். பூசமும். மீனமும் பொலிந்து தோன்றவும் கைகேயி மைந்தனைப் பெற்றாள் என்பது கருத்து. புனர்பூசத்துக்கு அடுத்த நட்சத்திரமான பூசம் பரதன் பிறந்த நட்சத்திரமாகும். பரதன் இலக்கினம் மீனம். தமக்குக் கிடைத்த பேற்றினை எண்ணிப் பூசமும். மீனமும் பொலிந்தன என்பது குறிப்பு.*

***284. தளை அவிழ் தருவுடைச் சயிலகோபனும்.***
***கிளையும். அந்தரமிசைக் கெழுமி ஆர்ப்புற.***
***அளை புகும் அரவினோடு அலவன் வாழ்வுற.***
***இளையவற் பயந்தனள். இளைய மென் கொடி.***

*__தளை அவிழ்தருஉடை__ - அரும்புகள் மலரும் கற்பகமரத்தை உடைய; __சயில கோபனும்__ - மலைகளைச்சினந்து. அவற்றின் இறகுகளைத் துண்டித்த இந்திரனும்; __கிளையும் அந்தரமிசை கெழுமி ஆர்ப்பு உற__ - அவனது தமர்களான தேவர்களும் வானுலகிலே கூடி ஆரவாரம் செய்யவும்; __அளைபுகும் அரவினோடும்__ - புற்றில்புகும் பாம்பாகிய ஆயில்யத்தோடு; __அலவன் வாழ்வு உற__ -நண்டாகிய கடக ராசியும் வாழ்வுபெற; __இளையமென்கொடி இளையவன் பயந்தனள்__ - கோசலை. கைகேயி இருவருக்கும் இளையவளாகிய மெல்லிய கொடிபோன்ற சுமித்திரை இளையவனைப் பெற்றாள்.*

*தளை: கட்டு (மலர்க்கட்டு). அரும்பு தரு: மரம். சயிலம்: மலை. கோபன்: சினந்தவன். கிளை: உறவினர் (உவமை யாகு பெயர்). கெழுமி: நெருங்கி. அனை: புற்று. அலவன்: நண்டு. இளையவன்: ராமனுக்கு இளையவனான இலக்குவன். கொடி: கொடிபோன்றவள் (உவமையாகுபெயர்). சுமித்திரை ஆயில்ய நட்சத்திரத்தில். கடக ராசியில் ஒரு மகனைப் பெற்றாள். ஆயில்யம் ஆதிசேடனுக்குரியதென்பர். ஆதிசேடன் அம்சமான இலக்குவன் இந்த நட்சத்திரத்தில் பிறந்தது பொருத்தமாகும். சுமித்திரையை 'இளையமென்கொடி' என்தால். மூவரிலும் இளையவள் சுமித்திரையே என்பது கம்பன் கருத்தாதல் காண்கிறோம்.*

***285. படம் கிளர் பல் தலைப் பாந்தள் ஏந்து பார்***
***நடம் கிளர்தர. மறை நவில நாடகம்.***
***மடங்கலும் மகமுமே வாழ்வின் ஓங்கிட.***
***விடம் கிளர் விழியினாள். மீட்டும். ஈன்றனள்.***

*__படம்கிளர் பல்தலைப் பாந்தள்__ - படம் பொலியும் பலதலைகளை உடைய பாம்பாகிய ஆதிசேடன்; __ஏந்து பார் நடம் கிளர்தர__ - தாங்குகின்ற இவ்வுலகம் மகிழ்ந்து கூத்தாடவும்; __மறை நாடகம் நவில__ - வேதமும் அந்தக்கூத்தொலியையே செய்யவும்; __விடம்கிளர் விழியினாள்__ - விடம் போன்ற விழியை உடையவளான சுமித்திரை; __மடங்கலும் மகமும் வாழ்வின் ஓங்கிட__ - சிங்க ராசியும் மக நட்சத்திரமும் வாழ்வில் மகிழ்ந்தோங்கவும்; __மீட்டும் ஈன்றனள்__ - மறுபடியும் ஓராண்மகவைப் பெற்றாள்.*

*படம்கிளர் பஃறலைப்பாந்தள்: படங்கள் கிளர்ந்துள்ள பல தலைகளையுடைய பாம்பாகிய ஆதிசேடன் படம்: பணம் அதை உடையதாதலின் பாம்புக்குப் 'பணி' என்பதும் ஒரு பெயருண்டு. கிளர்தல்: நெருங்கி ஓங்குதல். நாடகம்: கூத்து (நடனம்) மடங்கல்: சிங்கம். வாழ்வின் ஓங்கிட: வாழ்வு சிறக்க. 'விடம்கிள விழி' பெண்களின் கண்களை விடத்துக்கு ஒப்பிடுவது கவிமரபு. மீட்டும்: மறுபடியும் ஏந்துபார்: வினைத் தொகை. சுமித்திரை மக நட்சத்திரத்தில் சிங்க ராசியில் மீண்டும் ஒருபுத்திரனைப் பெற்றாள் என்பது கருத்து.*

***286. ஆடினர் அரம்பயைர்; அமுத ஏழ் இசை***
***பாடினர் கின்னரர்; துவைத்த பல் இயம்;***
***'வீடினர் அரக்கர்' என்று உவக்கும் விம்மலால்.***
***ஓடினர். உலாவினர். உம்பர் முற்றுமே.***

*__அரம்பையர் ஆடினர்__ -அரம்பை முதலிய தேவமாதர் (மகிழ்ச்சி மேலீட்டால்) ஆடினர். __கின்னரர் அமுத ஏழிசை பாடி__ - கின்னரர்கள் அமுதத்தை ஒத்த இனிய ஏழ் இசைகளைப் (பண்) பாடினர்; __பல்லியம் துவைத்த__ - பலவகை வாத்தியங்கள் கொட்டப்பட்டன; __அரக்கர் வீடினர் என்று__ - தீய அரக்கர்கள் அழிந்தனர் என்று; __உவக்கும் விம்மலால்__ - களிக்கின்ற பொருமல் காரணமாக; __ஓடினர் உம்பர்முற்றும் உலாவினர்__ - அவர்கள் ஓடி. வானவீதியெல்லாம் உலாவரலாயினர்.*

*அரம்பையர்: வானுலகத்து நடனப்பெண்கள். அமுதம்: ஆகுபெயர் இங்கு இனிமைக்கு ஆகிவந்தது. ஏழ்இசை: குரல் முதலான ஏழு என்பர். கின்னரர்: குதிரை முகத்தைக் கொண்டதேவ சாதியார் இசையில் வல்லவர்கள் என்பர். 'தும்புரு' என்பவர் இவ்வகையினரே. வீடினர்: அழிந்தனர். விரைவுபற்றி இறந்தகாலத்தால் கூறியதாம். வீடுதல்: சாதல். விம்மல்: உவகை (பொருமல்). உம்பர் இடப்பெயர் (வானகம்). துவைத்த. முழங்கின என்பர். 'உம்பர் விம்மலால் ஓடினர் உலாவினர்' எனக்கொண்டு விண்ணுலகில் உள்ளவர்கள் மகிழ்ந்து எங்கும் ஓடினர் எனினும் பொருந்தும். 'ஏழிசை' அமுதம் போன்ற ஏழிசை எனச் சிறப்பிக்கப்பட்டது. 'ச. ரி. க. ம. ப. த. நி என்னும் ஏழிசை' என்பர். குரல். துத்தம். கைக்கிளை. உழை. இளி. விளரி. தாரம் என்னும் ஏழிசை எனவும் கூறுவதுண்டு -*

***287.*** **ஓடினர் அரசன்மாட்டு. உவகை கூறி நின்று**
**ஆடினர். சிலதியர்; அந்தணாளர்கள்**
**கூடினர்; நாளொடு கோளும் நின்றமை**
**நாடினர்; 'உலகு இனி நவை இன்று' என்றனர்.**

***சிலதியர் அரசன் மாட்டு ஓடினர்*** *- பணிப்பெண்கள் தசரத மன்னனிடம் ஓடிச் சென்றனர்;* ***உவகை கூறி நின்று ஆடினர்*** *- மக்கட் பிறந்த செய்தியை மன்னருக்குச் சொல்லி நின்று களித்து ஆடினர்;* ***அந்தணானர்கள் கூடினர்*** *- அரண்மனை வேதியரெல்லாம் ஒருங்கு கூடினார்கள்;* ***நாளொடு கோளும் நின்றமை*** *-நாள்களும். கோள்களும் நின்ற தன்மையை;* ***நாடினர்*** *-ஆராய்ந்து அறிந்து;* ***உலகினி நவை இன்று என்றனர்*** *- இப்புத்திரர்களது பிறப்பினால் இவ்வுலகம் தீமையிலிருந்து காக்கப் பெறும் என்றனர்.*

*மாடு: அண்மை. உவகை: மகிழ்ச்சி. சிலதியர்: பணிப்பெண்கள். நாள்:நட்சத்திரம். கோள்: கிரகம் (சூரியன் முதலான ஒன்பது கோள்கள்). அந்தணாளர்கள் தமது கணித நூற்புலமையால் நாளும் கோளும் நின்ற நிலையை ஆராய்ந்து - இப்பிள்ளைகளின் பிறப்பால் உலகம் இனி நன்மை அடையும் என்றனர். பணிப் பெண்கள் பிள்ளைகள் பிறந்த செய்தியை மன்னருக்குத் தெரிவித்தனர் என்பதும். அந்தணாளர்கள் நாளையும். கோளையும் ஆய்ந்தறிந்து இனி உலகம் நன்மை அடையும் என்றனர் என்பதும் கூறப்பட்டது. நவை: குற்றம்;தீமையுமாம்.*

***288.*** **மா முனிதன்னொடு. மன்னர் மன்னவன்.**
**ஏமுறப் புனல் படீஇ. வித்தொடு இன் பொருள்**
**தாம் உற வழங்கி. வெண் சங்கம் ஆர்ப்புற.**
**கோ மகார் திருமுகம் குறுகி நோக்கினான்.**

***மன்னர் மன்னவன் ஏமுற*** - மன்னர் மன்னனாகிய தயரதன் மகிழ்ச்சி கொண்டு.; ***புனல்படீஇ*** - குளிர்ந்த நீரிலே நீராடியபின்; ***வித்தொடு இன்பொருள்*** - நெல்லும் மற்றும் இனிய பல பொருள்கையும்; ***தாம் உற வழங்கி*** - மிகுதியாகத் தானம் செய்து; ***வெண் சங்கம் ஆர்ப்புற*** - வெண் சங்குகள் முழங்க; ***மாமுனி தன்னொடும்*** - குலுகுருவான வசிட்ட முனிவனோடும்; ***குறுகி. கோமகார் திருமுகம் நோக்கினான்*** - சென்று. அரசிளங் குமரர்களின் அழகிய முகங்களைப் பார்த்தான்.

*மாமுனி: வசிட்டன். மா: பெருமை. மன்னர் மன்னவன்: சக்கரவர்த்தி. ஏம்உற: மகிழ்ச்சி தோன்ற புனல்படீஇ: புனல் படிந்து (அளபெடை). குழந்தை பிறந்ததைக் கேட்டவுடன் தந்தை நீரிலே நீராடி. பின் நெல் முதலியவைகளைத் தானம் செய்து. பிறகு குழந்தையின் முகம் காண வேண்டும் என்பது மரபு. இதனால் தென்புலத்தாராகிய பிதிர்த் தேவதைகள் மகிழ்ந்து ஆசி கூறுவராம். 'வித்தொடு இன் பொருள்' நெல் முதலிய எட்டுவித மங்கலப் பொருள்கள் எனவும் கூறுவர். மகார்: மக்கள். குறுகி: நெருங்கி. தயரதன் குலகுருவோடும் சென்று குழந்தைகளைப் பார்த்தான் என்பது கருத்து.*

***289. ''இறை தவிர்ந்திடுக பார். யாண்டு ஓர் ஏர்; நிதி***
***நிறைதரு சாலை தாள் நீக்கி. யாவையும்***
***முறை கெட. வறியவர் முகந்து கொள்க'' எனா.***
***அறை பறை' என்றனன் - அரசர் கோமகன்.***

***யாண்டும் ஓர் ஏழ் பார்இறை தவிர்ந்திடுக*** -ஏழாண்டுகள் நாட்டில் திறை செலுத்துவதைச் சிற்றரசர் தவிர்க்க; ***நிதி நிறைதரு சாலை*** - செல்வம் நிறைந்த பொருள் பாதுகாப்பறையை; ***தாள் நீக்கி*** - தாழ்ப்பாளை அகற்றித் திறந்து வைத்து; ***யாவையும் வறியவர் முறைகெட முகந்து கொள்க எனா*** - வரன் முறையில்லாது எல்லாச் செல்வத்தையும். ஏழை எளியவர்கள் முகந்து கொள்ளுங்கள் என்று; ***அரசர் கோமகன் பறை அறை என்றனன்*** -மன்னர் மன்னனான தயரதன் பறை அறைந்து தெரிவியுங்கள் என்றான்.

*இறை: சிற்றரசர் செலுத்தும் கப்பம் (மக்கள் செலுத்தும் வரி எனவும்) கூறுவர். யாண்டு: ஆண்டு. நிதிநிறை தரு சாலை: பொக்கிஷம். முறைகெட: இன்னார் இனியார் என்ற வரன்முறை இன்றி யாவரும் ஒருங்கே என்பது பொருள். வறியவர்: வறுமையாளர். கொள். தவிர்ந்திடுக என்பன வியங்கோள் வினை முற்றுகள். அறை: ஏவல் வினைமுற்று. எனா: என்று (செயா என்ற வாய்பாட்டு வினையெச்சம்). பறையறைதல்: எல்லோருக்கும் பொதுப்பட அறிவித்தல்.*

*பிள்ளைகள் பிறந்த மகிழ்ச்சியால் ஏழாண்டுகள் திறை தவிர்க எனவும். யாவையும் முறைகெட முகந்து கொள்க எனவும் பறை அறையுமாறு மன்னர் மன்னன் கட்டளையிட்டான் என்பது கருத்து. 110*

***290. 'படை ஒழிந்திடுக; தம் பதிகளே. இனி.***
***விடை பெறுக. முடி வேந்தர்: வேதியர்.***
***நடையுறு நியமமும் நவை இன்று ஆகுக;***

**புடை கெழு விழாவொடு பொலிக. எங்கணும்.**

***முடிவேந்தர் படை ஒழிந்திடுக*** *- நம்மால் சிறை வைக்கப்பட்ட அரசர்கள் எல்லோரும் தம்மைச் சிறைகாக்கும் படைகளிலிருந்து நீங்கட்டும்;* ***இனி தம் பதிகளே விடைபெறுக -*** *இனிமேல் தங்கள் நகரங்களுக்குச் செல்ல விடுதலை பெறட்டும்;* ***வேதியர் நடைஉறு நியமமும் நவை இன்று ஆகுக -*** *வேதம் ஓதுதலில் வல்லவரான வேதியர்கள் தமது ஒழுக்க நியமங்களில் குற்றம் நீங்க நடைபெறட்டும்;* ***புடைகெழு விழாவொடு பொலிக எங்கணும்*** *- (கோயில்கள்) எங்கும் விழாக் கோலம் பொலியட்டும்*

*படை: சேனை (சிறைகாக்கும் படை). நியமம். விரத ஒழுக்கம். நடைஉறு: நடைபெற்று வரும். புடை: பக்கம். விழாவொடு பொலிக என்றதால் கோயில்கள் எங்கும் விழாக்கள் பொலியட்டும் என்று உரை கூறப்பட்டது. சிறைப்பட்ட மன்னர்களைக் காக்கும் படைகளின் காவல் ஒழிக. அம்மன்னர்கள் தங்கள் பதிகளுக்கே விடுதலை பெறுக. வேதியர் தம் விரத ஒழுக்கம் குறையின்றி நடைபெறுக. எங்கும் விழாக்கோலம் பொலிக என்பது கருத்து. விடை பெறு: விடுதலை பெறுவார்களாக என்பது பொருள்.*

***291. ‘ஆலையும் புதுக்கு; அந்தணாளர்தம்***
***சாலையும். சதுக்கமும். சமைக்க. சந்தியும்;***
***காலையும் மாலையும். கடவுளர்க்கு. அணி***
***மாலையும் தீபமும். வழங்குக’ என்றனன்.***

***ஆலையம் புதுக்குக*** *- கடவுளர் கோவில்களை எல்லாம் புதுப்பியுங்கள்;* ***அந்தணாளர் தம் சாலையும் சதுக்கமும் சமைக்க*** *- அறவோர் சாலைகளையும் நாற்சந்திகளையும் அமையுங்கள்;* ***காலையும் சந்தியும் மாலையும்*** *- அந்தி நேரம். காலை. மாலை ஆகிய வேளைகளில்;* ***கடவுளர்க்கு அணிமாலையும் தீபமும் வழங்குக என்றனன்*** *- கோயில்களில் உள்ள தெய்வங்களுக்கு அழகிய மலர் மாலைகளும் தீபங்களும் வழங்குங்கள் என்றான்.*

*ஆலையம்: கோவில் (தேவாலயம்). புதுக்குக. சமைக்க. வழங்குக என்பன வியங்கோள் வினைமுற்றுகள். சதுக்கம்: நாற்சந்தி. சந்தி: இருபொழுது கூடும் காலம்; காலைச்சந்தி. மாலைச்சந்தி. என்பன. வழங்குக. மிகுதியாகக் கொடுங்கள் என்பது குறிப்பாகும். அணிமாலை: வினைத்தொகை*

***292. என்புழி. வள்ளுவர். யானை மீமிசை***
***நன்பறை அறைந்தனர்; நகர மாந்தரும்.***
***மின் பிறழ் நுசுப்பினார்தாமும். விம்மலால்.***
***இன்பம் என்ற அளக்க அரும் அளக்கர் எய்தினார்.***

***என்புழி வள்ளுவர் யானை மீமிசை நன்பறை அறைந்தனர்*** - என்று. மன்னர் பிரான் கட்டளையிட்டபோது வள்ளுவர் யானை மேலிருந்து அரசன் கூறியபடி பறை நன்கு சாற்றினர்; **நகர மாந்தரும்** - (இதனைக் கேட்டு) நகர மக்களும்; ***மின்பிறழ் நுசுப்பினர் தாமும்*** - மின்னலைப் போன்ற இடையை உடைய பெண்களும்; **விம்மலால் இன்பம் என்று அளக்க அரும் அளக்கர் எய்தினார்** - பெருங்களிப்பால் இன்பம் என்று சொல்லப்பபடும் அளக்க முடியாத கடலை அடைந்தனர். என்புழி: என்றபோது. 'உழி' ஏழனுருபு காலம் உணர்த்திற்று. வள்ளுவர்: தோற்கருவி கொண்டு பறை சாற்றுபவர். அரசனது உள்படு கருமத் தலைவர் இவரென்பர். யானை மேல் அமர்ந்து பறை முழக்கிச் செய்தியை அறிவிக்கும் உரிமை உடையவர்கள். மீமிசை: அடுக்கி வந்த ஏழனுருபு மிக மேலே என்பதைக் குறிக்கும். நன்பறை: நல்லபறை. எதுகை நோக்கி'ல்' என்பது 'ன்' ஆகத் திரிந்தது. பிறழ்: உவம உருபு. நுசுப்பு: இடை விம்மல்: களித்தல் அளக்கர்: கடல். மன்னன் கூறிய செய்தியை மக்களுக்கு. வள்ளுவர் யானைமேல் அமர்ந்து பறையறிந்து தெரிவித்தனர். அது கேட்டு நகரத்து மக்களும் பெண்களும் பெரு மகிழ்ச்சியால் அளப்பதற்கு அரிய இன்பக் கடலை அடைந்தனர் என்க.

***293. ஆர்த்தனர் முறை முறை அன்பினால்; உடல்***
***போர்த்தன புளகம்; வேர் பொடித்த; நீள் நிதி***
***தூர்த்தனர். எதிர் எதிர் சொல்லினார்க்கு எலாம்;-***
***'தீர்த்தன்' என்று அறிந்ததோ அவர்தம் சிந்தையே?***

***முறைமுறை அன்பினால் ஆர்த்தனர்*** - (நகர மக்களும் பெண்களும்) முறையாகக் கூடி அன்பின் மிகுதியால் ஆரவாரித்தனர்; **உடல் புளகம் போர்த்தன** - எல்லோருக்கும் உடல் புளகத்தால் மூடப்பட்டன; **வேர் பொடித்த** - வியர்வை பெருகியது; **சொல்லினார்க்கு எலாம் நீள்நிதி எதிர் எதிர் தூர்த்தனர்** - பிள்ளைகள் பிறந்த செய்தியைச் சொன்னவர்களுக்கெல்லாம் எதிர் எதிரே நிறைந்த செல்வத்தை வாரி வழங்கினர்; **அவர்தம் சிந்தை தீர்த்தனன் என்று அறிந்ததே** - அந்த நகர மக்களின் மனம் (வந்து பிறந்தது) வணங்கத்தக்க பெருமான் என்பதை அறிந்தது போலும்.

'முறை முறை' பலமுறையாக என்னும் குறிப்பு. புளகம்: மயிர்க்கூர்சசெறிதல் 'இதனைப்' புளகாங்கிதம் என்பர். வேர்: வியர்வை. பொடித்த: பொடித்தன (தோன்றின). நிதி: செல்வம். தூர்தல் மறைத்தல் (மூடுதல்). செல்வத்தால் நிலத்தையே மறைத்தனர் என்பது கருத்து. எதிர் எதிர்: ஒருவருக்கொருவர் எதிராக நின்று என்பதும் பொருளாம். தீர்த்தன்: தூயவன் வழிபடத் தக்க திருமாலே வந்து தோன்றினான் என அறிந்ததோ 'ஓ' வியப்புப் பொருள் தந்து நின்றது. சிந்தை: மனம். அயோத்தி நகர மக்கள் அளவற்ற பெரு மகிழ்ச்சி அடைந்தனர். 'திருமாலே அவதரித்தான் என அவர்கள் மனம் அறிந்ததோ' என்கிறார். ஆர்த்தனர் என்றதால் வாக்கும். அன்பினால் என்றதால் மனமும். வேர் பொடித்தன என்பதால் உடலும் மகிழ்ந்தது கூறப்பட்டன என்க. 'ஏ' அசை. நீள் நிதி: பண்புத் தொகை.

***294. பண்ணையும் ஆயமும். திரளும் பாங்கரும்.***
***கண் அகன் திரு நகர் களிப்புக் கைம்மிகுந்து.***

**எண்ணெயும் களபமும். இழுதும். நானமும்.**
**சுண்ணமும். தூவினார் - வீதிதோறுமே**

*__பண்ணையும் ஆயமும்__ - பெண்கள் கூட்டத்திலும் தோழிகள் கூட்டத்திலும்: திரளும் பாங்கரும் - ஆண்கள் கூட்டத்திலும் தோழர் கூட்டத்திலும்; __கண் அகன்திரு நகர்__ - இடமகன்ற அந்த அழகிய நகரத்திலே; __களிப்புக் கைமிகுந்து__ - மகிழ்ச்சி மேலிட்டு; __எண்ணெயும். களபமும். இழுதும். நானமும்.__ -எண்ணெய். கலவைச் சாந்து. வெண்ணெய் புழுகு வகைகளையும்; __சுண்ணமும்__ - பரிமளப் பொடி வகைகளையும்; __வீதி தோறும் தூவினார்__ - ஒவ்வொரு வீதியிலும் தூவினார்கள்.*

*பண்ணையும் திரளும். ஆயமும் பாங்கரும் என வேறுபாடு தோன்றக் கூறியது கருதத்தக்கது. கண் அகன்: ஒரு பொருட்பன்மொழி. கைமிகல்: அதிகப்படுதல். திருநகர்: அழகிய நகரம். எள்+நெய்: எண்ணெய் எனினும் எல்லா வகைகளையும் குறித்து நின்றது: நாணம்: புனுகு (கஸ்தூரியுமாம்). சுண்ணம்: பரிமளப் பொடி.*

*மன்னனுக்கு மைந்தர் பிறந்த மகிழ்ச்சியால் வீதிதோறும் எண்ணெயும். களபமும். இழுதும். நானமும் தூவி மக்கள் மகிழ்ச்சியைக் கொண்டாடினர் என்பது குறிப்பு. ''எண்ணெய் சுண்ணம் எதிரெதிர் தூவிட'' என்ற பெரியாழ்வார் பாசுரம் நினைவுகூரத்தக்கது. மூன்று பாடல்களாலும் வள்ளுவர் பறையறை செய்தியும் நகர மாந்தர் மகிழ்வும் கூறப்பட்டது.*

***295.*** **இத்தகை மா நகர். ஈர் - அற நாளும்**
**சித்தம் உறும் களியொடு சிறந்தே.**
**தத்தமை ஒன்றும் உணர்ந்திலர்; தாவா**
**மெய்த் தவன் நாமம் விதிப்ப மதித்தான்.**

*__இத்தகைய மாநகர்__ - இந்த விதமாக அயோத்தி நகர மக்கள்; __ஈர் அறு நாளும்__ - அந்தப் பன்னிரண்டு நாட்களும்; __சித்தம் உறும் களியொடு சிறந்து__ - மனம் பொருந்திய மகிழ்ச்சியால் சிறந்து; __தத்தமை ஒன்றும் உணர்ந்திலர்__ - தங்கள் தங்களையே ஒன்றும் உணராதவர் ஆயினர்; __தாவா மெய்த்தவன்__ - குறையாத தவத்தை உடைய வசிட்ட முனிவன்; __நாமம் விதிப்ப மதித்தான்__ - அக் குழந்தைகளுக்குப் பெயர் சூட்ட எண்ணினாள்.*

*தகை: தன்மை. மா: அழகு; பெருமையுமாம். அரச குலத்தவருக்குப் பிறந்த பன்னிரண்டு நாட்கள் கழிந்த பிறகே பெயர் சூட்டுதல் விதியாதலின் ''ஈர் அறு நாள்'' என்றார். ''பத்தும் கடந்த இரண்டாம் நாள்'' என்பர் பெரியாழ்வாரும். உறு: மிகுதி. சித்தம்: மனம். களி: களித்தல். தத்தமை: தங்கள் தங்களை. மாநகர் எழுவாய்; உணர்ந்திலர் பயனிலை. அந்நகரத்தார் உணர்ந்திலர் என்பது பொருள். நாமம் விதித்தல்: பெயர் சூட்டுதல்.*

*பிள்ளைகள் பிறந்த பன்னிரண்டு நாட்களும் அளவற்ற மகிழ்ச்சியால் அந்நகர மக்கள் தங்களையே மறந்து மகிழ்ச்சியில் திளைத்தனர். பன்னிரண்டு நாட்கள் கழிந்த பின்னர் வசிட்டர் குழந்தைகளுக்குப் பெயர் சூட்டக் கருதினார் என்பது கருத்து.*

***296. கரா மலை. தளர் கைக் கரி எய்த்தே.***
***'அரா-அணையில் துயில்வோய்!' என. அந் நாள்.***
***விராவி. அளித்தருள் மெய்ப்பொருளுக்கே.***
***'இராமன்' எனப் பெயர் ஈந்தனன் அன்றே.***

***கரா மலைய** -ஒரு முதலை காலைக் கவ்விக் கொண்டு வருத்த; **தளர் கைக்கரி** - அதனால் சோர்வுற்ற துதிக்கையை உடைய யானையான கஜேந்திரன்; **அரா அணையில் துயில்வோய் என** - பாம்பணையில் துயில்பவனே என அழைக்க; **அந்நாள் விராவி அளித்தருள்** -அந்த நாளிலே விரைந்து அந்த முதலையை அழித்து யானையைக் காத்தருளிய; **மெய்ப்பொருளுக்கு** - உண்மைப் பொருளான அப்பரமனுக்கு; **'இராமன்' எனப் பெயர் ஈந்தனர்** - இராமன் என்னும் பெயரை (வசிட்டன்) சூட்டினான்.*

*கரா: முதலை. தளர் கரி: வினைத்தொகை. எய்த்தல்: இளைத்தலுமாம். அராஅணை: அரவணை (பாம்புப் படுக்கை). விராவி: சேர்தலுமாம். அராஅணைத் துயில்வோய் என விளித்து தான் பன்னாள் துன்புறவும் அது பற்றிக் கவலை உறாமல் உறங்குகின்றாயே பெருமானே என்ற குறிப்புடையது. மெய்ப்பொருள்: உண்மைப் பொருளாகிய பரமன். ராமன்: அழகன். அன்றே: அசை.*

***297. கரதலம் உற்று ஒளிர் நெல்லி கடுப்ப***
***விரத மறைப் பொருள் மெய்ந்நெறி கண்ட***
***வரதன். உதித்திடு மற்றைய ஒளியை.***
***'பரதன்' எனப் பெயர் பன்னினன் அன்றே.***

***கரதலம் உற்று ஒளிர் நெல்லி கடுப்ப** - உள்ளங்கையில் விளங்கும் நெல்லிக்கனியைப் போல; **விரத மறைப் பொருள் மெய் நெறிகண்ட வரதன்** - விரதங்களைக் கடைப்பிடித்தும் மறைகளின் பொருளறிந்ததும் உண்மை நெறி கண்டுணர்ந்த வசிட்டன்; **உதித்திடு மற்றைய ஒளியை** - அடுத்துத் தோன்றிய ஒளிமயமான குழந்தையை; **பரதன் எனப் பெயர் பன்னினன்** - பரதன் என்னும் பெயரிட்டு அழைத்தான்.*

*கரதலம்: உள்ளங்கை. உள்ளங்கையில் கொண்ட நெல்லிக் கனி. ஒரு பொருளை உள்ளும் புறமும். ஒன்றாய் அறிதற்குக் காட்டும் உவமையாகக் கொண்டு கூறுவர் பெரியோர். புறத்தே இத்தனை வரிகள் இருப்பதால் அகத்தே இத்தனை வரிகள் இருக்கும் என்று கூற இயல்வதால் ''அங்கைக் கனி'' என்ற உவமை கூறப்படும். மறைகளின் உண்மைப் பொருளை நன்கறிந்து வசிட்டனது பெருமை இதனால் புலனாகும். கடுப்ப: ஒப்ப (போல). விரத நெறியால் மறைப்பொருள் கைவரும். அதன் காரணமாக மெய்ந்நெறி துலங்கும் என்பது கருத்து. இராமனை மெய்ப்பொருள் என்றும். மற்றைய மூவரையும் 'ஒளி' என்றது கருதத்தக்கது. பன்னுதல்: சொல்லுதல். அன்றே: அசை.*

***298. உலக்குநர் வஞ்சகர்; உம்பரும் உய்ந்தார்;***
***நிலக்கொடியும் துயர் நீத்தனள்; இந்த.***
***விலக்க அரு மொய்ம்பின் விளங்கு ஒளி நாமம்.***
***'இலக்குவன்' என்ன. இசைத்தனன் அன்றே.***

***உலக்குநர் வஞ்சகர்*** *- இனி வஞ்சர்களாகிய அரக்கர்கள்தாம் இறப்பவர்களாவார்;* ***உம்பரும் உய்ந்தார்*** *- தேவர்கள் உய்வு பெறுவார்கள்;* **நிலக் கொடியும் துயர் நீத்தனள்** *- நிலமகளும் துன்பம் நீங்கினாள்;* **விலக்க அரும் மொய்ம்பின்** *-(இத்தகைய பேற்றை உலகுக்குத் தரும்) நீக்க இயலாத வலிமை உடைய;* **இந்த விளங்கு ஒளிநாமம்** *-இந்த விளங்குகின்ற ஒளியின் பெயர்;* **இலக்குவன் என்ன இசைத்தனர்** *-இலக்குவன் என்று கூறினான்.*

*உலக்குநர்: அழிபவர் (உலத்தல்: அழிதல்). உம்பர்: தேவர்கள் இடவாகு பெயர். நிலக்கொடி: நிலமகள்; கொடி: உவமை ஆகுபெயர். நீத்தல்: நீக்கல். மொய்ம்பு. வலிமை. இசைத்தனன்: கூறினான்.*

*சுமித்திரை பெற்ற பிள்ளைக்கு 'இலக்குவன்' என்று வசிட்டன் பெயர் சூட்டினான் என்பது கருத்து. ல?க்ஷ்மணன் என்பதற்கு உத்தம இலக்கணங்கள் அமையப் பெற்றவன் எனவும். கைங்கரிய லட்சுமியோடு கூடியிருப்பவன் என்பதும் பொருள் என்பர். நிலமகள் துயரம் நீங்குவது உறுதியாதலில் 'நீத்தனன்' என்றார்.*

***299. 'முத்து உருக்கொண்டு செம் முளரி அலர்ந்தால்***
***ஒத்திருக்கும் எழிலுடைய இவ் ஒளியால்***
***எத் திருக்கும் கெடும்' என்பதை எண்ணா.***
***'சத்துருக்கன்' எனச் சாற்றினன் நாமம்.***

***முத்து உருக்கொண்டு*** *- முத்துக்கள் சேர்ந்து குழந்தை வடிவு கொண்டு;* **செம்முளரி அலர்ந்தால்** *- செந்தாமரை தன்னிடம் மலரப் பெற்றால்;* **ஒத்திருக்கும் எழில் உடை** *- (அதனை) ஒத்திருக்கும் அழகுடைய;* **இவ்வொளியால் எத்திருக்கும் எண்ணா** *- என்பதை எண்ணி;* ***சத்துருக்கன் என நாமம் சாற்றினன்*** *- சத்துருக்கன் எனப் பெயர் சூட்டினான்.*

*முளரி: தாமரை. எழில்: அழகு. திருக்கு: மாறுபாடு (குற்றம்) நாமம்: பெயர். சத்துருக்களை அழிப்பவன் என்பது பொருள். முதலடி: இல்பொருள் உவமை. அகப்பகை - புறப்பகைகளை ஒழிக்க வல்லவன் என்பதும் ஒரு பொருள். சத்துருக்கன் வெண்மை நிறமுடையவன் என்பதால்'' முத்து உருக்கொண்டு'' என்றார். கை. கால். முகம் மலர்ந்த தாமரை ஒத்திருந்தது என்பதால் ''முளரி அலர்ந்தால் ஒத்து'' என்கிறார். என்னா: செய்யாவகை என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இவனுக்கு எதிராக எழுபவை வேறு இன்மையின் இப்பெயர் அடக்கரு வலத்தவாகிய புலன்களை வென்றவன் என்றும் கொள்ளலாம். ஏனெனில் பொறி புலன்கள் அடங்கற்கரியன.*

***300.*** **பொய்வழி இல் முனி. புகல்தரு மறையால்.**
**இவ் வழி. பெயர்கள் இசைத்துழி. இறைவன்**
**கை வழி. எனும் நதி கலைமறையோர்**
**மெய் வழி உவரி நிறைத்தன மேன்மேல்.**

***பொய் வழியில் முனி*** - *பொய் நெறியில்லாத முனிவனாகிய வசிட்டன்;* ***புகல்தரு மறையால்*** - *கூறப்படும் மறை நெறிப்படியே;* **இவ்வழிப் பெயர்கள் இசைத்துழி** *-இந்த விதமாகக் குழந்தைகளுக்குப் பெயர் சூட்டிய பின்னர்;* **இறைவன் கைவழி நிதி எனும் நதி** *- மன்னனுடைய கைகளில் வழியே பெருகி வரும் செல்வமாகிய ஆறு;* ***கலை மறையோர் மெய்வழி உவரி*** *- கலைகளில் வல்ல அந்தணாளர்களின் மனங்களாகிய கடலை;* **மேன்மேல் நிறைத்தன** *- மேலும் மேலும் நிறையச் செய்தன.*

*பொய்வழி: பொய்யான நெறி. முனி: பற்றற்றவன். மறையால்: மறை நெறிப்படி செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து. உழி: காலப்பொருள் தந்து நின்றது. மெய்வழி: மெய்நெறி. உவரி: கடல் மெய் நெறி நிற்கும் அந்தணாளர்களின் மனமாகிய கடல் என்பது பொருள். பிள்ளைகளுக்குப் பெயர் சூட்டிய பின்னர் பெரியோர்களுக்குத் தானம் செய்தான் என்பது கருத்து. நிதியை நதியென்றதற்கேற்ப. மனத்தைக் கடல் என்று உருவகம் செய்தது பொருத்தமாகும். உருவக அணி.*

*தயரதன் தான நீருடனே கொடுத்த அளவற்ற செல்வம் அற்தணர்களின் மனத்தை நிறைவாக்கியது என்பது கருத்து.*

***301.*** **'காவியும் ஒளிர்தரு கமலமும் எனவே'**
**ஓவிய எழிலுடை ஒருவனை அலது. ஓர்**
**ஆவியும் உடலமும் இலது' என. அருளின்**
**மேவினன் - உலகுடை வேந்தர்தம் வேந்தன்.**

***காவியும் ஒளிர்தரு கமலமும் எனவே*** - நீலோற்பல மலரையும் இடையே ஒளிரும் தாமரைகளும் எனுமாறு; ***ஓவிய எழில் உடை ஒருவனை*** - ஓவியம் போன்ற அழகுடைய ஒப்பற்ற ஒருவனாகிய ராமனை; ***அலதோர் ஆவியும் உடலும் இலதென*** - அல்லது. வேறு உயிரும். உடலும் தனக்கு இல்லை எனும்படி நினைத்து; ***உலகுடைய வேந்தர்தம் வேந்தன்*** - உலகனைத்தையும் ஒரு குடைக் கீழ் ஆளும் மன்னர் மன்னனான தயரதன்; ***அருளின் மேவினன்*** - அருள் உடையவனாய் வாழ்ந்திருந்தான். 'காவி' ராமனது மேனியின் நிறத்தும். 'கமலம்' முகம். கண். கை போன்ற பிற உறுப்புகளுக்கும் உவமையாயிற்று. ஓவிய எழில்: சித்திரத்தில் எழுதி வைக்கப்பட்டது போன்ற அழகு. ஒருவன்: ஒப்பற்றவன். ஆவியும் உடலும் என்பதனை உலகுக்கு ஏற்றி உரைத்தலும் பொருந்தும்.

*உலகாளும் மன்னனான தயரதன் புதல்வர் நால்வரில் மூத்த குமாரரான ராமபிரானிடத்தில் மிகுந்த அன்புடையவனாயிருந்தான் என்பது கருத்து. அருளின் மேவினன்:பேரன்புடையவனாயிருந்தான். 122*

***302. அமிர்து உகு குதலையொடு அணி நடை பயிலா.***
***திமிரம்அது அற வரு தினகரன் எனவும்.***
***தமரமதுடன் வளர் சதுமறை எனவும்.***
***குமரர்கள் நிலமகள் குறைவு அற வளர் நாள் - -***

***அமிர்து உகு குதலையொடு*** - அமுதும் போன்ற மழலை மொழி பேசியும்; ***அணி நடை பயிலா*** - அழகான தளர் நடை பழகியும்; ***திமிரம் அது அறவரு*** - இருள் நீங்க உதித்து வருக்கின்ற; ***தினகரன் எனவும்*** - சூரியனைப் போலவும்; ***தமரம் அது உடன் வளர்*** - ஒலியுடன் வளர்ந்து வருகின்ற; ***சதுர்மறை எனவும்*** - இருக்கு முதலான நான்கு வேதங்களைப் போலவும்; ***நிலமகள் குறைவு அற*** -நிலமகளின் குறைகளெலாம் நீங்குமாறு; ***குமரர்கள் வளர்நாள்*** -இராமன் முதலிய குமாரர்கள் நால்வரும் வளர்ந்து வரும் நாளிலே.

*அமிர்து உகு: உகுதல் இங்கு உவமை: உருபுப் பொருளில் வந்தது. அமிர்தம் போன்ற என்பது பொருள். குதலை: மழலை மொழி. இதனைப் பொருள் நிரம்பாத சொற்கள் என்பர். அணிநடை: அழகான நடை. இங்குத் தளர்நடையைக் குறிக்கும். பயிலா: பயின்று செய்யா என்ற வாய்ப்பாட்டு வினையெச்சம். திமிரம்: இருள். தினகரன்: சூரியன்; தினத்தைச் செய்பவன் என்பது பொருளாம். 'நான்மறை' நான்கு பிள்ளைகளுக்கும் உவமையாயின. தமரம்: ஒலி. வேதம் எழுதப்படாதது என்பதால் ஒலிக்கின்ற வேதம் என்று பொருள் தொனிக்க 'தமரமதுடன் வரு சதுமறை' என்றார். பகையிருளை ஒழிக்கும். திறனுடையவரென்பதால் இருள் நீக்கும் தினகரனை உவமை கூறினார். நால்வராய் இருந்து உலகுக்கு நன்மை கூறுதலால் நான்மறை உவமை. இதனால் குமரர்களின் வளர்ச்சி கூறப்பட்டது.*

***303. சவுளமொடு உபநயம் விதிமுறை தருகுற்ற.***
***'இ(வ்)அளவது' என ஒரு கரை பிறிது இலவா.***
***உவள் அரு மறையினொடு ஒழிவு அறு கலையும்.***
***தவள் மதி புனை அரன் நிகர் முனி தரவே.***

***சவுள மொடு உப நயம்*** - சவுளம். உபநயனம் முதலாகிய சடங்குகளை; ***விதிமுறை தருகுற்று*** - விதிப்படி செய்து; ***இ அளவது என*** -இந்த அளவுடையது எனக் கூறும்படியான; ***ஒருகரை பிறிது இலவா*** - ஒரு எல்லை வேறு எனச் சொல்ல இயலாதபடி; ***உவள் அருமறையின் ஒடு*** - தூய்மையான வேதங்களுடன்; ***ஒழிவு அறு கலையும்*** - நீங்காத கலைகள் பலவற்றையும்; ***தவன் மதிபுனை அரன்நிகர் முனிதரவே*** - சந்திரனைத் தலையில் அணிந்துள்ள சிவபெருமானுக்கு ஒப்பான வசிட்ட முனிவன் கற்றுத்தர.

*சவுளம்: குடுமிக் கல்யாணம் என்பர் (தலை முடி திருத்துதல்).உபநயம் - உபநயனம். பூணூல் அணிவித்தல் (துணைக்கண் என்பர்). ஞானக் கண் பெறுதற்குரிய சடங்கு என்பர். தருகுற்று; தரப்பெற்று (செய்து). இவ்வளவு: இவ்வளவு (இடைக்குறை) - கரை: எல்லை (வேதத்துக்கு எல்லை இல்லை என்பது குறிப்பு). இலவா: (இல+ஆ) இல்லது ஆக. கலைகள் யாவும் மறைப் பொருளையே விளக்குவதாதலின் ''மறைவினொடு ஒழிவறு கலை'' என்றார் அரன். அடியார்களின் பாவத்தைக் போக்குபவன். சவுளம் மூன்றாம் ஆண்டிலும் உபநயனம். பத்தாமாண்டிலும் செய்யப்படுவதென்பர். தவள்: என்பதன் திரிபு.*

*சவுளம் முதலிய சடங்குகளை விதிப்படி நடத்தியபின் வசிட்ட முனிவன் வேதம் மற்றும் கலைகள் பலவற்றையும் அரசகுமாரர்களுக்கு கற்பித்தான் என்பது கருத்து. முனிவனுக்குச் சிவன் உவமை - முற்றும் உணர்தலாலும் நால்வர்க்கு அறம் கூறியதாலுமாம்.*

*மைந்தரின் படைப் பயிற்சி*

***304. யானையும். இரதமும். இவுளியும். முதலா***
***ஏனைய பிறவும். அவ் இயல்பினில் அடைவுற்று.***
***ஊன் உறு படை பல சிலையொடு பயிலா.***
***வானவர் தனிமுதல். கிளையொடு வளர.***

***யானையும் இரதமும் இவுளியும் முதலா*** - யானை. தேர். குதிரை ஆகியவைகளைச் செலுத்துதல் முதலான; ***ஏனைய பிறவும் அவ்வியல்பினில்*** - மற்றும் அரசகுமாரர்களுக்குரிய வாகனப் பயிற்சிகளையும் அந்தந்த முறையிலேயே; ***அடைவு உற்று*** - அடையப் பெற்று; ***ஊன் உறுபடை பல சிலையொடு பயிலா*** - பகைவரின் உடல்தசை அடையப் பெற்ற படைக்கலங்களை வில்வித்தையோடு பயின்று; ***வானவர் தனிமுதல்*** - தேவர்களின் ஒப்பற்ற தலைவனான ராமபிரான்; ***கிளை தனிமுதல்*** -தேவர்களின் ஒப்பற்ற தலைவனான ராமபிரான்; ***கிளையொடு வளர*** - தனது தம்பிமார்களுடனே வளர்ந்துவரும் நாளிலே.

*யானை. முதலியவை இவைகளில் ஏறிச் செலுத்துதலைக் குறிப்பது. யானையேற்றம். தேரேற்றம். முதலியவை அரசகுமாரர்களுக்கு உரியனவாம். 'ஏனைய பிற' என்றது இவையல்லாத. ஒட்டகம் முதலியவைகளில் ஏறிச் செல்லுதலைக் குறிக்கும்.*

*ஊனுறு படை: பகைவனின் ஊனைப் பொருந்திய படையாம். கிளை உவமையாகு பெயராய் உறவினரைக் குறிப்பது. இங்குத் தம்பியரை உணர்த்தி நின்றது. பயிலா: பயின்று. முதலா: முதலாக. யானை முதலான ஊர்திகளைச் செலுத்துல் -வில் முதலான பல்வேறு படைக்கல வித்தை பயில்தல் முதலியவைகளை ராமபிரான் தம்பியருடன் பயின்று வந்தான் என்பது கருத்து.*

***305. அரு மறை முனிவரும்.***
***அமரரும். அவனித்***
***திருவும். அந் நகர் உறை***
***செனமும். ' நம் இடரொடு***
***இரு வினை துணிதரும். இவர்களின்; இவண்நின்று ஒரு***
***பொழுது அகல்கிலம். உறை' என உறுவார்.***

***அருமறை முனிவரும் அமரரும்*** *- அரிய மறைகளில் வல்ல முனிவர்களும் தேவர்களும்;* ***அவனித் திருவும் அந்நகர் உறை செனமும்*** *- நிலமகளும். அந்த நகரத்தில் வாழுகின்ற பொதுமக்களும்;* ***இவர்களின்*** *- இந்த அரசிளங் குமரரால்;* ***நம் இடரொடு இரு வினைதுணிதரும்*** *- நமது துன்பங்களும் அதற்குக் காரணமான இரு வினைகளும் துணிக்கப்படும்;* ***இவண் நின்று*** *- இவர்கள் இருக்கு இந்த இடத்திலிருந்து;* ***ஒருபொழுது அகல்கிலம் உறை*** *- சிறிதுபொழுதும் அகலவே மாட்டோம்;* ***என உறுவார்;*** *என. அப்பிள்கைளுடனே தங்கியிருப்பார்.*

*அமரர்: தேவர் (அழிவில்லாதவர் என்பது பொருள்). அவனி: நிலம். ''முனிவரும். தேவரும். நிலமகளும். நகரமக்களும்' இவர்களால் நமது இடர் தீரும்' வினையும் நீங்கும் ஆதலால் இங்கிருந்து ஒருபோதும் அகலோம் இவருடனே உறைவோம்'' என்று உடன் உறைவாராயினர் என்பது கருத்து. துணிதரும்: துணியும் இருவினை: நல்வினையும் தீவினையுமாம். இவர்களின்: இவர்களால். அகல்கிலம்: தன்மைப் பன்மை வினைமுற்று. உறை அகல்கிலம்: உறைவதிலிருந்து (உடனிருப்பது). அகலமாட்டோம். முனிவர் முதலினோர் குமரரை விரும்புதல் கூறப்பட்டது.*

***306. ஐயனும் இளவலும். அணி நிலமகள்தன்***
***செய்தவம் உடைமைகள் தெரிவர. நதியும்.***
***மை தவழ் பொழில்களும். வாவியும். மருவி.***
***'நெய் குழல் உறும் இழை' என நிலைதிரிவார்.***

***ஐயனும் இளவலும்*** *- ராம பிரானும். தம்பியாகிய இலக்குவனும்;* ***அணிநில மகள்தன்*** *- அழகிய நிலமகளுக்குரிய;* ***செய்தவம் உடைமைகள் தெரிதர*** *- செய்த தவப்பயனாய்ப் பெற்றுள்ள செல்வங்களைத் தெரிந்து கொள்ள;* ***நதியும். மைதவழ் பொழில்களும் வாவியும் மருவி*** *- ஆறுகளையும். மேகங்கள் தவழும் சோலைகளையும். பொய்கைளையும் அடைந்து;* ***நெய்குழல் உறும் இழை என*** *- நெசவுக் குழ லும். அதனோடு பொருந்திய நூலியையும் போன்று;* ***நிலை திரிவார்*** *- நிலையிலே திரிவார்கள்.*

*நிலை திரிதல்:* ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்குச் செல்லுதலுமாம். நிலமகள் செய்தவத்தையும். அதனால் அடைந்த பொருட் பேற்றையும் தெரிய விரும்புவார் போல. ஆறு. சோலை. குளம் ஆகிய எல்லா இடங்களிலும் ராமனும் இலக்குவனும் சேர்ந்து திரிந்தனர் என்பது கருத்து. இராமனும் இலக்குவனும் இணைபிரியாமை கூறப்பட்டது.

**307. பரதனும் இளவலும். ஒருநொடி பகிராது.**
**இரதமும் இவுளியும் இவரினும். மறைநூல்**
**உரைதரு பொழுதினும். ஒழிகிலர்; எனை ஆள் வரதனும்**
**இளவலும் என மருவினரே.**

**பரதனும் இளவலும் ஒரு நொடி பகிராது** -பரதனும். சத்துருக்கனும். ஒரு நொடிப்பொழுதேனும் பிரியாது; **இரதமும் இவுழியம் இவரினும்** - தேரிலும். குதிரையின் மீதும் ஏறிச் சவாரி செய்யும் போதும்; **மறை நூல் உரைதரு பொழுதினும்** -வேதம் முதலிய நூலக்ளை ஓதுகின்ற காலத்தினும்; **ஒழிகிலர்** -பிரியாதவர்களாகி; **எனை ஆள் வரதனும் இளவலும் என** - என்னை ஆட்கொண்டருளிய ராமபிரானையும். இலக்குவனையும் போல; **மருவினர்** - சேர்ந்திருந்தனர்.

*நொடி:* கை நொடிப் பொழுது. இதனை மாத்திரை என்பர். தொழிலாகு பெயராய். கால அளவை உணர்த்தி நின்றது. *இவர்தல்:* ஏறுதல். *உரைதருதல்:* ஓதுதல். *ஒழிகிலர்:* முற்றெச்சம். *ஆள்வரதன்:* வினைத்தொகை. *வரதன்:* வரம் தரவல்லன். *இவுளி:* குதிரை. *பகிராது:* பிரியாது.

பரதனும். சத்துருக்கனும் தேரேறிச் சென்றாலும். குதிரைச் சவாரி செய்தாலும் வேதம் முதலான கலைகளை ஓதினாலும் ஒரு நொடிப் பொழுதும் பிரியாதவராகி இராமனையும். இலக்குவனையும் போலச் சேர்ந்திருந்தனர் என்பது கருத்து. பரத. சத்துருக்கனரின் ஒட்டுறவு கூறப்பட்டது.

**308. வீரனும். இளைஞரும். வெறி பொழில்களின்வாய்.**
**ஈரமொடு உறைதரு முனிவரரிடை போய்.**
**சோர் பொழுது. அணிநகர் துறுகுவர்; எதிர்வார். கார் வர அலர்**
**பயிர் பொருவுவர். களியால்.**

**வீரனும் இளைஞரும்** - மாவீரனாகிய ராமபிரானும். தம்பியரும்; **வெறிபொழில்களின் வாய்** - மணம் செறிந்த சோலைகளிடத்தே (சென்று); **ஈரமொடு உரைதரு** - அன்போடு (வந்தவரிடம்) உரையாடுகின்ற; **முனிவரர் இடைபோய்** -முனிவர்களிடம் (காலையில்) சென்று; **சோர் பொழுது அணிநகர் துறுகுவர்** -மாலைப் பொழுதிலே அழகிய அயோத்தி நகரை அடைவர்; **எதிர்வார்** - போகும் போதும் வரும் போதும் எதிர்ப்படும் நாட்டு மக்கள் எல்லோரும். **களியால்** - (இராம பிரானையும் தம்பியரையும் கண்ட) களிப்பில்; **கார் வர அலர் பயிர் பொருவுவர்** -மழை வர. மகிழும் பயிர்களை ஒத்துக் காணப்படுவர்.

*கார்: மேகம் (மழையைக் குறித்தது). வெறிபொழில்: மணம் கமழும் சோலை. ஈரமொடு உரைதரு: அன்போடு பேசுகின்ற. ஈரம்: அன்பு. முனிவரர்: (வசிட்டனை ஒத்த). முனிவர்கள் ''சோர் பொழுது துறுகுவர்'' என்றதால் காலையில் சென்று என உரை கூறப்பட்டது. சோர்பொழுது: வெயில் சோரும். பொழுது. துறுகுதல்: சேர்தல் எதிர்வார்: எதிரில் வருபவர்கள். மழைமேகம் கண்டு பயிர்கள் மகிழ்வது இயல்பு. மேகவண்ணனான ராமனைக் கண்டு மக்கள் மகிழ்ந்தனர் என்கிறார் என்பது எத்துணை பொருந்தும். முனிவர்கள் தம்மைக் காணவருவோரிடமும். பாடம் கேட்கும் மாணவரிடமும் அன்போடு உரையாடும் பண்பினர் என்பதால் '' ஈரமொடுவரை தரு'' என்றார். பொருவுதல்: ஒப்பாதல்.*

*அரசிளங்குமரர் நால்வரும் நாள்தோறும் காலையிலே அந்நகருக்குப் புறத்தே உள்ள சோலைகளில் வாழும் முனிவர்களிடம் சென்று - உரையாடி - நுண்ணிய நூற்பொருள் கேட்டு மாலையில் நகருக்குத் திரும்புவர். எதிர்ப்படும் மக்களெல்லாம் மழைவரக் கண்டு தழைதரு பயிர் போல. இவர்களைக் கண்டு மகிழ்வர் என்பது கருத்து.*

***309.** **ஏழையர் அனைவரும். இவர் தட முலை தோய்***
***கேழ் கிளர் மதுகையர். கிளைகளும். 'இளையார்***
***வாழிய!' என. அவர் மனன் உறு கடவுள்.***
***தாழ்குவர் - கவுசலை தயரதன் எனவே.***

***ஏழையர் அனைவரும்** - அயோத்தி நகரத்தில் வாழும் பெண்களும்; **இவர்தட முலைதோய் கேழ்கிளர் மதுகையர்** - அப்பெண்களின் தனங்களைத் தழுவி வாழும் வலிமை மிக்கவரான அவர்களது கணவர்களும்; **கிளைகளும்** - மற்றும் அங்கு வாழும் அவர்களது உறவினரும்; **இளையார் வாழிய என** - இச்சிறுவர் நீடூழி வாழ்வார் ஆக என்று கூறி; **கவுசலை தயரதன் எனவே** - கோசலையையும். தயரதனையும் ஒப்ப; **அவர் மனனுறு கடவுள் தாழ்குவர்** - தத்தம் மனம் பொருந்திய தெய்வங்களை வணங்கித் துதிப்பர்.*

*ஏழையர்: பெண்கள் (இவ்வாறு கூறுவது கவி மரபென்பர்). தோய்தல்: தழுவுதல். கேழ்: உவமை. மதுகை: வலிமை. இளையார்: இளையவர் கேழ்கிளர் என்பதால் பெண்களைத் தழுவும் உரிமையுடைய ஆடவர்களான கணவன்மார்களைக் குறித்தது. வாழிய: வியங்கோல் வினைமுற்று. தயரதனது பட்டத்தரசியர் மூவருள்ளும் முதல் தேவி என்பதால் கோசலையைக் கூறினார் எனலாம்'' ''மறுவிலன்பினின் வேற்றுமை மாற்றினாள்'' என்பறடி மக்கள் நால்வரையும் சமமாகக் கருதியவள் என்பதும் இதனால் விளங்கும். மனன்உறு கடவுள். தத்தம் குல தெய்வமுமாம் அந்த நகரத்தில் வாழும் ஆண்களும். பெண்களுமான அத்தனை பேரும் அரசகுமாரர்களின் நல்வாழ்வுக்குத் தத்தம் மனம் பொருந்திய தெய்வங்களைத் தொழுது வேண்டினர் என்பது கருத்து.*

*310. ‘கடல் தரு முகில். ஒளிர் கமலம்அது அலரா.*
*வட வரையுடன் வரு செயல் என. மறையும்*
*தடவுதல் அறிவு அரு தனி முதலவனும்.*
*புடை வரும் இளவலும்’ என. நிகர் புகல்வார்.*

***மறையும் தடவுதல் அறிவரு*** *- வேதமும் தேடி அறிதற்கு அரிய;* ***தனி முதல் அவனும்*** *- ஒப்பற்ற முதல்வனாகிய ராம பிரானும்;* ***புடைவரும் இளவலும்*** *- அவனுக்குப பக்கம் வரும் இலக்குவனும்;* ***உடன்வரு செயல்*** *-சேர்ந்து வருகின்ற செயலானது;* ***கடல்தரு முகில்*** *- கடல் தந்த கரிய மேகமானது;* ***ஒளிர் கமலம் அது அலரா*** *- விளங்கும் தாமரை மலர்கள் அலர;* ***வடவரையுடன் வரு செயல் என*** *- மேரு மலையுடன் வருவது போன்றது என;* ***நிகர் புகல்வார்*** *- (இந்த இருவரையும் பார்த்தவர்கள்) ஒப்பிட்டுக் கூறுவார்கள்.*

*கடல் தரு முகில்: கடல் தந்த கார்மேகம். அலரா: மலர்ந்து. வடவரை: வடக்கிலுள்ள மலை (மேருமலை) தடவுதல்: தேடுதல். தனிமுதல்: ஆதிபகவன் அவன்: உலகறி சுட்டாக நின்று பரமனை உணர்த்தும். புடை:பக்கம்.*

*‘கமலம் பூத்த கரு முகில்’ இராமனுக்கு உவமை. ‘வடவரை’ இலக்குவனுக்கு உவமை. ‘புகல்வார்’ என்ற பயனிலைக்கேற்ப ‘கண்டோர்’ எழுவாயாகக் கொள்ளப்பட்டது.*

*311. எதிர் வரும் அவர்களை. எமையுடை இறைவன்.*
*முதிர் தரு கருணையின் முகமலர் ஒளிரா.*
*‘எது வினை? இடர் இலை? இனிது நும் மனையையும்?*
*மதி தரு குமரரும் வலியர்கொல்?’ எனவே.*

***எதிர் வரும் அவர்களை*** *- தம்மை எதிர்ப்படும் நகர மக்களைப் பார்த்து;* ***எமை உடை இறைவன்*** *- எம்மை ஆட்கொண்ட இறைவனாகிய ராமபிரான்;* ***முதிர் தரு கருணையின்*** *- முதிர்ந்த கருணையினால் (தனது);* ***முகமலர் ஒளிரா*** *- மலர் போன்ற முகம் ஒளிர;* ***எதுவினை*** *- எம்மால் உங்களுக்கு ஆக வேண்டியதுளதோ?;* ***இடர் இலை (கொல்)*** *- துன்பமெவும் இல்லையன்றோ?;* ***நும்மனையும் இனிதுகொல்*** *- உங்கள் மனைவி நலமோ?;* ***மதிதரு குமரரும் வலியர் கொல் எனவே*** *- அறிவு மிக்க பிள்ளைகள் வலிமையுடன் வாழ்கிறார்களா? என்றெல்லாம் கேட்கவே.*

*312. அஃது. ‘ஐய! நினை எமது அரசு என உடையேம்;*
*இஃது ஒரு பொருள் அல; எமது உயிருடன் ஏழ்*
*மகிதலம் மழுதையும் உறுக. இ மலரோன்*
*உகு பகல் அளவு’ என. உரை நனி புகல்வார்.*

***அஃது ஐய*** - *ஐயனே அப்படியே எல்லாம் நலமே;* ***நினை எமது அரசு என உடையேம்*** - *உன்னை அரசனாக உடைய எங்களுக்கு;* ***இஃது ஒரு பொருள் அல*** *-இது ஒரு பொருளாகாது;* ***எமது உயிருடன் ஏழ் மகிதலம் முழுதும்*** *-எங்கள் உயிரோடு ஏழு உலகங்கள் எல்லாம்;* ***மலரோன் உகுபகல் அளவு*** *-(பிரமன் அழிகின்ற காலமான) பிரமப் பிரளய காலம் வரையும்;* ***உறுக என உரை நனி புகல்வார்*** *-நீயே ஆட்சி புரிவாயாக என்று மறுமொழி கூறுவார்கள்.*

*'அஃது ஐய' என்பதற்கு நீ நினைத்தபடியே யாவும் நன்மையே என்றனர் என்பது பொருள். மலரோன்: பிரமன். உகுபகல்: அழியும் காலம். உரை: சொல்லாகு பெயர். 'பகல்' என்ற சிறுபொழுதின் பெயர். பெரும்பொழுதை உணர்த்தும். இராமபிரானை எதிர்ப்பட்ட நகர மக்களை அவர்கள் நலம் விசாரிப்பதற்கு முன்பே தான் அவர்களின் நலம் கேட்பான். அவர்கள் மகிழ்ந்து நீ எங்களுக்கு அரசனாக இருக்க. என்ன குறைவு வரும்? நீடூழி வாழ வேண்டும் என வாழ்த்துவர் என்பது கருத்து.*

***313. இப் பரிசு. அணி நகர் உறையும் யாவரும்.***
***மெய்ப் புகழ் புனதைர. இளைய வீரர்கள்***
***தப்பு அற அடி நிழல் தழுவி ஏத்துற.***
***முப் பரம் பொருளுக்கு முதல்வன் வைகுறும்.***

***இப்பரிசு அணி நகர் உறையும் யாவரும்*** - *இந்த விதமாக அந்த நகரத்தில் வாழும் எல்லோரும்;* ***மெய்ப்புகழ் புனைதர*** *-உண்மையான புகழைக் கூறிக் கொண்டாடலும்;* ***இளைய வீரர்கள் தப்பு அற அடி நிழல் தழுவி ஏத்துற*** - *வீரர்களான தம்பியர் மூவரும் ராமனது திருவடிகளைத் தவறாது துதிக்கவும்;* ***முப்பரம் பொருளுக்கு*** - *அரி. அயன். அரன் எனும் முக்கடவுளர்க்கும்.* ***முதல்வன் வைகுறும்*** - *முதல்வனான ராமபிரான் வாழ்வானாயினான்.*

*பரிசு: தன்மை. அணிநகர். அழகான நகரம் (அயோத்தி). மெய்ப்புகழ்: மெய்க்கீர்த்தி. புனைதர: விரித்துக் கூற: ஏத்துற: துதித்து வணங்க. ''மூன்று கவடாய் முளைத் தெழுந்த மூலம்'' 'முத்தேவரின் முதற் பொருள்' என்று பின்னும் கூறுவர். பாடல் எண் 28 -ஐ இப்பாடலுடன் ஒப்பிடுக. மூலப் பரம்பொருள் இம்மூவரினும் வேறுபட்டவர் என்பதே கம்பன் கருத்து.*

## கையடைப் படலம்

தரசதன் தனது மைந்தர்களான இராமன். இலக்குவன் இருவரையும் விசுவாமித்திர முனி வசம் அடைக்கலமாக ஒப்புவித்த செய்தியைக் கூறும் பகுதியிது ‘ கையடை’ என்பதற்கு அடைக்கலம் என்பது பொருள்.

தயரதனிடம் விசுவாமித்திரன் வருதல் - மன்னன் முனிவனை வணங்கி வரவேற்றல். மன்னனை முனிவன் புகழ்ந்து பேசுதல். வேள்வியைக் காக்க இராமனைத் தன்னுடன் அனுப்புமாறு கேட்டல் - தயரதன் துயர் - தானே வேள்வி காக்க வருகிறேன் எனல் - முனிவன் சினம் கொள்ளலும் அதன் விளைவுகளும் - வசிட்டன் உரையால் தயரதன் தெளிவு அடைதல் - இராம - இலக்குவர்களை முனிவனிடம் ஒப்படைத்தல் - சினம் நீங்கிய முனிவன் அரசிளங் குமரர்களைத் தன்னுடன் அழைத்தேகல் ஆகிய - செய்திகள் இப்பகுதியில் கூறப்படும்.

***314. அரசர்தம் பெருமகன். அகிலம் யாவையும்
விரசுறு தனிக் குடை விளங்க. வென்றி சேர்
முரசு ஒலி கறங்கிட. முனிவர் ஏத்துற.
கரை செயல் அரியது ஓர் களிப்பின் வைகும் நாள்.***

***அரசர் தம் பெருமகன்*** -மன்னர் மன்னனாகிய தயரதன்; ***அகிலம் யாவையும் விரசுறு*** - உலகம் முழுதும் தன் நிழலில் வந்து சேர்வதாகிய; ***தனிக்குடை விளங்க*** - ஒப்பற்ற வெண்கொற்றக் குடை விளங்கவும்; ***வெற்றி சேர் முரசு ஒலிகறங்கிட*** -வெற்றி மிகுந்த முரசின் ஒலி திரிந்து ஒலிக்கவும்; ***முனிவர் ஏத்துற*** -முனிவர்கள் எல்லாம் புகழவும்; ***கரைசெயல் அரியது*** - அளவிடற்கு அரிதாகிய; ***ஓர் களிப்பில் வைகும் நாள்*** - மகிழ்ச்சிக் கடலில் மூழ்கியவனாக வாழ்ந்திருந்த காலத்திலே.

இந்தப் பாட்டு சில பிரதிகளில் திரு அவதாரப் படலத்தின் இறுதிப் பாடலாக அமைந்துள்ளது. கையடைப் படலத்தின் தோற்றுவாயாகக் கூறப்படுவதாகும். அரசர்தம் பெருமகன்: சக்கரவர்த்தி. ‘அகிலம்’ பரந்த என்னும் பொருளில் உலகைக் குறித்து நின்றது. சேர்தல். கரை. வரம்பு (அளவு) கரை என்னும் குறிப்பால் ‘களிப்பு’ கடல் என்னும் பொருளை ஏற்றது. ‘நாள்’ காலத்தை உணர்த்தும். ‘எய்தினான்’ என்ற அடுத்த பாட்டோடு முடியும். மகிழ்ச்சியுடன் தயரதன் வாழ்தலைக் கூறியதாகும்.

***315. நனை வரு கற்பக நாட்டு நல் நகர்
வனை தொழில் மதி மிகு மயற்கும் சிந்தையால்
நினையவும் அரியது. விசும்பின் நீண்டது. ஓர்
புனை மணி மண்டபம் பொலிய எய்தினான்.***

***நனைவரு கற்பக நாட்டு நன்னகர்*** - *அரும்புகள் விரிகின்ற கற்பக மரத்தை உடைய அமரர்கள் நாட்டு நல்ல நகரான அமராவதி நகரை;* ***வனைதொழில் மதிமிகும் மயற்கும்*** *- படைத்த தொழில் திறமும். அறிவும் மிகுந்த மயனுக்கும்;* ***சிந்தையால் நினையவும் அரியது*** *- மனத்தால் எண்ணிப் பார்க்கவும் இயலாததும்;* ***விசும்பின் நீண்டது ஓர்*** *- வான மளவும் உயர்ந்திருப்பதுமாகிய ஒரு;* ***புனைமணி மண்டபம்*** *- மணிகளால் அலங்கரிக்கப்பட்டுள்ள மண்டபம்:* ***பொலிய எய்தினான்*** *- விளக்கமுறும்படி சேர்ந்தான்.*

*முந்திய பாடலில் குறிப்பிட்ட 'அரசர்தம் பெருமகன்' என்பதே இங்குக் கூறப்பட்ட 'எய்தினான்' என்பதற்கு எழுவாயாகும். நனை: அரும்பு. நல்+நகர்: நன்னகர் இங்கு நன்மை என்பது புண்ணியம் எனும் பொருளின் வழங்குகிறது. மண்டபம்: அரசிருக்கை. பொலிதல்: சிறத்தல். மயன்: தெய்வத்தச்சன்.*

*அமரர்கள் நாடான விண்ணுலகுக்குத் தலைநகர் அமராவதி. அதனைப் படைத்த மயனுக்கும் நினைத்துப் பார்க்கமுடியாத சிறப்புடைய மண்டபம் என்பது கருத்து. 'மயன் வனைதொழில்' மதிமிகும் மயன் என்று சிறப்பிக்கப்படுகிறான். மண்டபம் மன்னனது வருகையால் பொலிந்தது என்பது கருத்து. வனை தொழில்: வினைத்தொகை இப்பாட்டு உயர்வு நவிற்சியணியாகும்.*

***316. தூய மெல் அரியணைப் பொலிந்து***
***தோன்றினான்;***
***சேய் இரு விசும்பிடைத்***
***திரியும் சாரணர்.***
***'நாயகன் இவன்கொல்?' என்று***
***அயிர்த்து. நாட்டம் ஓர்***
***ஆயிரம் இல்லை என்று***
***ஐயம் நீங்கினார்.***

***சேய்இரு விசும்பிடை*** *- உயர்ந்த பெரிய வானத்திடத்தே;* ***திரியும் சாரணர்*** *- (நிகழ்ச்சிகளை ஆராய்ந்தறியத் திரியும் தேவதூதர்கள்;* ***நாயகன் இவன்கொல் என்று அயிர்த்து*** *- நமது தலைவனான இந்திரன் இவந்தானோ என்று தயரதனைக் கண்டு சந்தேகித்து;* ***நாட்டம் ஓர் ஆயிரம் இல்லை என்று*** *- கண்கள் ஓராயிரம். காணப்படவில்லை என்றெண்ணி;* ***ஐயம் நீங்கினார்*** *- அவர்கள் கொண்ட சந்தேகம் நீங்கினாராக;* ***தூயமெல் அரி அணை*** *- தூய்மையும் மென்மையும் உடைய சிங்காதனத்திலே;* ***பொலிந்து தோன்றினான்*** *- பொலிவுற்று விளங்கினான். அரியணை: சிங்காதனம். சேய்+இரு சேயிரு: உயர்ந்த பெரிய என்பது பொருள். சாரணர்: தூதுவர். நாயகன்: தலைவன். கொல்: ஐயத்தை உணர்த்தும். நாட்டம்: கண்கள். இந்திரன் கௌதம முனிவனது சாபத்தால் ஆயிரம் கண் பெற்றவன் என்பது அகலிகைப் படலத்துச் செய்தி. இரண்டு பாடல்களாலும் தயரதன் இந்திரனுக்கு ஒப்பானவான் எனக் கூறப்பட்டது. இந்திரனுக்கு ஆயிரம் கண்கள் தயரதனுக்கு இரண்டே என்பதைத் தவிர பிற செல்வம் அதிகாரம். அழகு. வலிமை இவற்றால் இந்திரனுக்கு ஒப்பானவன் தயரதன் என்பதை விளக்கி உரைத்தார் என்க.*

***317. மடங்கல்போல் மொய்ம்பினான்***
***முன்னர். ' மன்னுயிர்***
***அடங்கலும் உலகும் வேறு***
***அமைத்து. தேவரோடு***
***இடம் கொள் நான்முகனையும்***
***படைப்பென் ஈண்டு' எனாத்***
***தொடங்கிய. துனி உறு.***
***முனிவன் தோன்றினான்.***

***மடங்கல் போல் மொய்ம்பினான் முன்னர்*** - சிங்கத்தைப் போன்ற வலிமை உடைய தயரதனுக்கு எதிரிலே: ***மன்உயிர் அடங்கலும் உலகும்*** - நிலைபெற்ற உயிரினங்கள் அனைத்தையும் அவை வாழும் உலகங்களையும்; ***வேறு அமைத்து*** - வேறு வேறாகப் படைத்து; ***தேவரோடு இடங்கொள் நான்முகனையும்*** - தேவர்களுடன் (எவ்வுயிரையும் பிறப்பிடமாகக் கொண்ட பிரமனையும்; ***ஈண்டு படைப்பென் எனா*** - இப்போதே படைப்பேன் என்று; ***தொடங்கிய துனியுறு முனிவன் தோன்றினான்*** - தொடங்கியவனான சினத்தை உடைய விசுவாமித்திர முனிவன் வந்து தோன்றினான்.

*மடங்கல்: சிங்கம். மொய்ம்பு வலிமை. அடங்கல்: எல்லாம். இடம் பிறப்பிடம். தொடங்கிய: பெயரெச்சம். துணி: பிணக்கு -சினம். திரிசங்கு மன்னனுக்குத் தேவர்கள் தங்களுலகுக்குள் நுழைய விடமாட்டோம் என மறுத்தபோது - வேறு அண்டங்களையும் நான்முகன் முதலான தேவர்களையும் நான் படைப்பேன் - எனத் தொடங்கிய தவ வலிமை மிக்கவன் விசுவாமித்திர முனிவன் என்பதைக் கூறி அம்முனிவனை முதன்முதலாக அறிமுகப்படுத்துகிறார். தயரதனை இந்திரனுக்கு ஒப்பாகக் கூறியவர். இப்பாடலில் விசுவாமித்திரனை. பிரமனுக்கு ஒப்பாக கூறுவதைக் காண்கிறோம். பிரமனது புத்திரன் குசன். அவனது புத்திரன் குசநாபன். இவன் மகன் காதி. காதியின் மகன் கௌசிகன். அரசனான கௌசிகன் தவம் செய்து சிறந்த முனிவனானான் என்பது புராணச் செய்தி.*

***318. வந்து முனி எய்துதலும். மார்பில் அணி ஆரம்.***
***அந்தர தலத்து இரவி அஞ்ச. ஒளி விஞ்ச.***
***கந்த மலரில் கடவுள்தன் வரவு காணும்***
***இந்திரன் என. கடிது எழுந்து அடி பணிந்தான்.***

***முனி வந்து எய்துதலும்*** - விசுவாமித்திர முனிவன் மண்டபத்தை அடைந்ததும்; ***மார்பில் அணி ஆரம்*** - (தயரதன்) மார்பில் அணிந்த மணிமாலை; ***அந்தர தலத்து இரவி*** - வானத்திலே ஒளிரும் சூரியனும்; ***அஞ்ச ஒளி விஞ்ச*** - தோல்வியுறும்படி ஒளி மிகுந்திருக்க; ***கந்தம் மலரில் கடவுள் தன்*** - மணம் மிகுந்த தாமரை மலரில் வாழும் பிரமனுடைய; ***வரவுகாணும் இந்திரன் என*** - வரவினைக் கண்ட இந்திரனைப் போல; ***கடிது எழுந்து அடிபணிந்தான்*** - விரைவில் எழுந்து முனிவனது திருவடிகளை வணங்கினான்.

*எய்துதல்: அடைதல். ஆரம்: மாலை அந்தரதலம்: ஆகாயம். அஞ்ச: தோல்வியுற (அஞ்சல்:தோல்வி) விஞ்சல்: மிகுதல். கந்தம்: மணம். கடிது: விரைந்து முந்திய பாடல்களில் தயரதனை இந்திரனுக்கும். விசுவாமித்திரனைப் பிரமனுக்கும் ஒப்பக் கூறியதற்கேற்ப. இப்பாடலில். ''பிரமன் வரவைக் கண்டு. எழுந்து அடிபணியும் இந்திரனைப் போல முனிவரது வரவுணர்ந்த மன்னன் எழுந்து அடிபணிந்தான்'' என்று முடித்துக் கூறியதனைக் காண்கிறோம். இது முதல் மூன்று பாடல்கள் சந்த விருத்தங்கள்.*

***319.*** **பணிந்து. மணி செற்றுபு குயிற்றி**
**அவிர் பைம் பொன்**
**அணிந்த தவிசு இட்டு. இனிது**
**அருத்தியொடு இருத்தி.**
**இணைந்த கமலச் சரண் அருச்சனை**
**செய்து. 'இன்றே**
**துணிந்தது. என் வினைத் தொடர்'**
**எனத் தொழுது சொல்லும்.**

**பணிந்து** - *(தயரத மன்னன் முனிவனை) வணங்கி;* **மணி செற்றுபு குயிற்றி அவிர் பைம்பொன் அணிந்த தவிசு இட்டு அருத்தியொடு இனிது இருத்தி** - *மணிகள் நெருங்கப் பதித்து விளங்கும் பொன்னால் அலங்கரிக்கப்பட்ட ஆசனமிட்டு (அதில்) மிக்க ஆர்வத்துடன் முனிவனை இனிதே இருக்கச் செய்து;* **இணைந்த கமலச் சரண் அருச்சனை செய்து** - *தாமரை போன்ற இரு பாதங்களையும் அருச்சித்து;* **என் வினைத் தொடர்பு** - *எனது வினைப்பயன்களின் தொடர்பு; இன்றே துணிந்தது என - இன்றே நீங்கியது என்று;* **தொழுது சொல்லும்** *-அம்முனிவனை வணங்கிக் கூறலானான்.*

*செற்றுபு: நெருங்க. குயிற்று: பதித்து. பைம்பொன். (பண்புத்தொகை); பசுமையான பொன். தவிசு: இருக்கை. அருத்தி: ஆசை. சரணம்: பாதம். அருச்சனை: பூசனை. வினைத்தொடர்பு: வினைப்பயன் இருத்தி: பிறவினை. இருவினைப் பலன்களும் 'ஆம்' நல்வினையும் பிறவிக் காரணம் என்பதால் ' இருள் சேர் இருவினை' என்றார் திருவள்ளுவரும். பெரியோர் வருகையால் வினைத் தொடர்புகள் நீங்கும் என்பது கருத்து.*

***320. ‘நிலம் செய் தவம் என்று உணரின்.***
***அன்று; நெடியோய்! என்***
***நலம் செய் வினை உண்டு எனினும்.***
***அன்று; நகர். நீ. யான்***
***வலம் செய்து வணங்க. எளிவந்த***
***இது முந்து என்***
***குலம் செய் தவம்’ என்று***
***இனிது கூற. முனி கூறும்:***

**நெடியோய். நகர் யான் வலம் செய்து வணங்க** - *நீண்ட தவம் உடையீர்! இந்த நகரத்திலே நான் வலம் வந்து வணங்கும்படியாக;* **நீ எளிவந்த இது** - *தாங்கள் எளிமையாக வந்த இந்தச் செயலானது;* **நிலம் செய்தவம் என்று உணரின் அன்று** - *இந்த நாடு செய்த தவப்பயன் தானோ எனில் அல்ல;* **என் நலம் செய்வினை உண்டு எனினும் அன்று** - *எனது நல்வினை செய்து காட்டிய பயனாலோ என்றால் அல்ல;* **எம்முந்து குலம் செய்தவம்** - *எங்களது முந்திய குலத்தினோர் செய்த தவப்பயனே யாகும்;* **என்று இனிது கூற முனி கூறும்** - *என்று தயரதன் இனிய முகமன்கூற. அதனைக் கேட்ட முனிவன் கூறுவான்.*

*நிலம்: இடவாகு பெயராய் மக்களை உணர்த்திற்று. செய்தவம்: வினைத்தொகை ‘தவம்’ தவப்பயன் அல்லது புண்ணியமும் ஆம். வலம்: வலம் வருதல். எளிமை: சுலபம். தயரதன். முனிவனை நோக்கி ‘’நெடியோய்’’ என்றது. நீண்ட தவத்தை உணர்த்தி நின்றது.*

***321. ‘என் அனைய முனிவரரும் இமையவரும்***
***இடையூறு ஒன்று உடையரானால்.***
***பல் நகமும் நகு வெள்ளிப் பனிவரையும்.***
***பாற்கடலும். பதும பீடத்து***
***அந் நகரும். கற்பக நாட்டு அணி நகரும்.***
***மணி மாட அயோத்தி என்னும்***
***பொன் நகரும். அல்லாது. புகல் உண்டோ?-***
***இகல் கடந்த புலவு வேலோய்!***

**இகல் கடந்த புலவு வேலோய்** - *போரைக் கடந்து வெற்றியடைந்த புலால் நாற்றம் வீசும் வேலை உடையோய்;* **என் அனைய முனிவரும் இமையவரும்** - *என்னைப் போன்ற முனிவர்களும் தேவர்களும்;* **இடையூறு ஒன்று உடையர் ஆனால்** - *ஏதேனும் தீங்கு சிறிது உடையவர் ஆனால்;* **பல் நகமும் நகு வெள்ளிப் பனி வரையும்** - *பல மலைகளையும் தனது ஒளியால் எள்ளி நகையாடும் வெள்ளி மலையும்;* **பாற்கடலும் பதுமபீடத்து அந்நகரும்** - *திருப்பாற்கடலும். தாமரை யாசனத்தையுடைய பிரமன் நகரமும்;* **கற்பக நாட்டு அணிநகரும்** - *கற்பகம் முதலிய சிறப்புடைய விண்நாட்டு அழகிய நகரமும்;* **மணி மாட அயோத்தி என்னும் பொன்நகரும்** - *மணிமயமான மாடங்களை உடைய அயோத்தி என்னும் இந்த நகரும்;* **அல்லாது புகல் உண்டோ** - *அல்லால் அடைக்கலம் அடைவதற்கு வேறு இடம் உண்டோ?*

*அயோத்தியைப் பனிவரை முதலியவற்றுடன் ஒப்பிட்டுக் கூறினமையின் ஒப்புமைக் கூட்டஅணி. 'என் அனைய' இதில் 'அனைய' உவமை உருபு. இடையூறு: தீங்கு. பல்நகம்: பல மலைகள். பனிமலை: கைலாயம் (இமயமலை) கைலை மலையும். பாற்கடலும் முறையே சிவபிரானுக்கும் திருமாலுக்கும் உறைவிடங்களாகும். கற்பக நாட்டணி நகரம். இந்திரனுக்குரியது. ''என்னையொத்த முனிவர்களுக்கும் தேவர்களுக்கும் ஏதேனும் தீங்கு நேர்ந்தால் கைலை முதல் அயோத்தி வரையுள்ள இந்த இடங்கள் அல்லாது வேறு புகல் உண்டோ'' என்றான் விசுவாமித்திரன் என்பது கருத்து.*

***322.*** **'இன் தளிர்க் கற்பக நறுந் தேன் இடை துளிக்கும்**
**நிழல் இருக்கை இழந்து போந்து.**
**நின்று அளிக்கும் தனிக் குடையின் நிழல் ஒதுங்கி.**
**குறை இரந்து நிற்ப. நோக்கி.**
**குன்று அளிக்கும் குல மணித் தோள் சம்பரனைக்**
**குலத்தோடும் தொலைத்து. நீ கொண்டு**
**அன்று அளித்த அரசு அன்றோ. புரந்தரன் இன்று**
**ஆள்கின்றது?-அரச!' என்றான்.**

***அரச புரந்தரன் இன்று ஆள்கின்றது*** -தயரத மன்னனே! இந்திரன் இன்று ஆண்டு கொண்டிருக்கும் அமர ருலக ஆட்சி; ***இன்தளிர்க் கற்பக நறும்தேன் இடை துளிக்கும் நிழல் இருக்கை*** - இனிய தளிர்களை உடைய கற்பக மரத்தின் பூக்கள் தேனை இடையிடையே துளிக்கின்ற நிழலை உடைய ஆசனத்தை; ***இழந்து போந்து*** - இழந்து விட்டு உன்னிடம் வந்து; ***நின்று அளிக்கும் தனிக்குடையின் நிழல் ஒதுங்கி*** - உலகனைத்தையும் நின்று காக்கின்ற உனது ஒப்பற்ற வெண்குடை நிழலில் ஒதுங்கி நின்று; ***குறை இரந்து நிற்ப நோக்கி*** - தனது குறைகளைச் சொல்லி யாசித்து நிற்க. நீ அதைப் பார்த்தபின்; ***குன்று அளிக்கும் குலமணித் தோள் சம்பரனை*** - மணிகளால் அலங்கரிக்கப்பட்ட குன்று போன்ற தோள்களையுடைய சம்பரன் என்ற அசுரனை ***குலத்தோடும் தொலைத்து*** - அவனது கூட்டத்தாரோடும் அழித்து; ***நீ கொண்டு அன்று அளித்த அரசு அன்றோ*** - நீ உனதாக ஆக்கிக் கொண்டு. அன்று இந்திரனுக்குத் தந்த அரசை அல்லவா; ***புரந்தரன் இன்று ஆள்கின்றது என்றான்*** - அவ்விந்திரன் இன்றளவும் தன்குரியதாக ஆட்சி செய்து வருவது என்று முனிவன் கூறினான். கற்பகம்: தெய்வ தரு. துளித்தல்: சொட்டுதல். போந்து. வந்து. தனிக்குடை: பொதுவறப்புரக்கும் குடை. ''குன்றளிக்கும்'' என்பதிலுள்ள அளிக்கும் இங்கு உவமைப் பொருள்தந்து நின்றது. கொண்டு: வரம் கொண்டு. அரசன்றோ: ஓகாரம் தேற்றம். புரந்தரன்: ''இந்திரன்'' தன் நிழல். இருக்கை ஒழிந்து ''உன் நிழலிருக்கையில் ஒதுங்கினான்'' எனப் பெருமை தோன்றக் கூறுகிறார். நிற்ப - நோக்கி - தொலைத்து. அளித்த அரசு புரந்தரன் இன்று ஆள்கின்றது என்று முடிக்க. இந்திரனுடைய இருக்கை 'சுதர்மை' என்னும் பெயருடையது. சம்பரனுக்குத் தோற்று ஆட்சியை இழந்தான் என்பதை 'இருக்கை இழந்து' என்பதால் குறிப்பிட்டுக் காட்டினார். சம்பரனை - குலத்தோடும் அழித்து இந்திரனுக்குத் தேவருலகாட்கியை மீட்டுத் தந்த தயரதனது பெருமையை முனிவர் கூறினார் என்பது கருத்து.

***323. உரைசெய்யும் அளவில். அவன் முகம் நோக்கி.***
***உள்ளத்துள் ஒருவராலும்***
***கரை செய்ய அரியது ஒரு பேர் உவகைக்***
***கடல் பெருக. கரங்கள் கூப்பி.***
***'அரைசு எய்தி இருந்த பயன் எய்தினென்; மற்று.***
***இனிச் செய்வது அருளுக!' என்று***
***முரைசு எய்து கடைத்தலையான் முன் மொழிய.***
***பின் மொழியும் முனிவன். ஆங்கே:***

***உரை செய்யும் அளவில் அவன் முகம் நோக்கி*** - இவ்வாறு விசுவாமித்திரன் தன்னைப் புகழ்ந்து பேசியபோது. தயரதன் அம்முனிவரது முகத்தைப் பார்த்து; ***உள்ளத்துள் ஒருவராலும் கரை செய்ய அரியதொரு*** - தனது உள்ளத்திலே எவராலும் அளத்தற்கு இயலாததாகிய ஒரு; ***பேர் உவகைக் கடல் பெருக*** - பெரிய மகிழ்ச்சி என்னும் கடல் பெருகவும்; ***கரங்கள் கூப்பி*** - தனது இரு கைகளையும் குவித்து (முனிவனை வணங்கி); ***அரசு எய்தி இருந்த பலன் எய்தினன்*** - எனது ஆட்சியை அடைந்ததன் பயனை இன்று நான் அடைந்தேன்; ***மற்று. இனிச் செய்வது அருளுக என்று*** - இனி நான் என்ன செய்யவேண்டும் என்பதை அருள்வீராக என்று; ***முரைசு எய்து கடைத்தலையான் முன் மொழிய*** - முரசுகள் முழங்கும் வாயிலை உடைய தயரதன் முன்னர் எடுத்தியம்ப; ***ஆங்கே பின்மொழியும் முனிவன்*** - அப்போதே விசுவாமித்திர முனிவன்பின் கூறுவானாயினான். உரை செய்தல்:பேசுதல்.

*அளவு' இங்குப் பொழுது குறித்தது. உவகை: களிப்பு. கூப்பி: குவித்து. அரசு. முரசு என்பன எதுகை நோக்கி அரைசு முரைசு என நின்றன. எய்தி: அடைந்து. எய்து: பகுதி. மற்று: வினைமாற்றுப் பொருளில் வந்தது. அருளுக: வியங்கோள் கடைத்தலை: தலைக்கடை என்பது மொழிமாறி நின்றது. முன்னே மன்னன் மொழியப் பின்னே முனிவன் மொழிந்தான் என்பது கருத்து. 'உவகைக் கடல்' என்பதற்கேற்ப. கரை செய்ய அரியது என்றார். 'முன்மொழியப் பின் மொழியும்' என்பது முரண்தொடை. 10*

***324. தருவனத்துள் யான் இயற்றும் தகை வேள்விக்கு***
***இடையூறா. தவம் செய்வோர்கள்***
***வெருவரச் சென்று அடை காம வெகுளி என.***
***நிருதர் இடை விலக்கா வண்ணம்.***
***''செருமுகத்துக் காத்தி'' என. 'நின் சிறுவர்***
***நால்வரினும் கரிய செம்மல்***
***ஒருவனைத் தந்திடுதி' என. உயிர் இரக்கும்***
***கொடுங் கூற்றின். உளையச் சொன்னான்.***

***தருவனத்துள் யான் இயற்றும்*** - மரங்கள் நிறைந்துள்ள காட்டில் நான் செய்கின்ற; ***தவவேள்விக்கு இடையூறா*** - பெரிய யாகத்துக்கு இடையூறாக; ***தவம் செய்வோர்கள் வெருவர*** - தவம் செய்பவர்கள் அஞ்சும்படியாக; ***சென்று அடைகாம வெகுளி என*** - அவர்தம் மனத்தைச் சென்று சேர்ந்த காமம். வெகுளி மயக்கங்களைப் போல; ***நிருதர் இடைவிலக்காவண்ணம்*** - அரக்கர்கள் கெடுக்காதபடி; ***செருமுகத்துக் காத்தி என*** - அவர்களோடு செய்யும் போர் முகத்திலே காத்தருள் வாயாக என; ***நின் சிறுவர் நால்வரினும்*** - உன்புத்திரர்கள் நால்வர்களுள்; ***கரிய செம்மல் ஒருவனை*** - கருமை நிறம் பொருந்திய செம்மலாகிய ஒப்பற்றவனை; ***தந்திடுதி என*** - அளித்திடுவாயாக என்று; ***உயிர் இரக்கும் கொடும் கூற்றின்*** - உயிரைத் தாவெனக் கேட்கும் கொடிய கூற்றுவனைப் போல; ***உளையச் சொன்னான்*** - மன்னன் மனம் வருந்தும்படி முனிவன் கூறினான்.

*'தருவனம்' - மரங்கள் அடர்ந்த வனம். தவவேள்வி - நிஷ்காம்ய வேள்வி என்பர். இடையூறு: தீமை. 'ஊறு' முதல்நிலை திரிந்த தொழிற் பெயர். செருமுகம் போர்முனை. காத்தி: ஏவலொருமை வினைமுற்று. இரத்தல்: யாசித்தல். கொடும் கூற்று: கொடிய கூற்றுவன் (எமன்) கொடிய சொல் எனவும் கொள்ளலாம். உளைதல்: மனம் வருந்துதல்.11*

***325. எண் இலா அருந் தவத்தோன் இயம்பிய சொல்***
***மருமத்தின் எறி வேல் பாய்ந்த***
***புண்ணில் ஆம் பெரும் புழையில் கனல் நுழைந்தா***
***லெனச் செவியில் புகுதலோடும்.***
***உள் நிலாவிய துயரம் பிடித்து உந்த.***
***ஆர் உயிர் நின்று ஊசலாட.***
***'கண் இலான் பெற்று இழந்தான்' என உழந்தான்***
***கடுந் துயரம் - கால வேலான்.***

***எண்இலா அருந்தவத்தோன்*** *- எண்ண முடியாத அரிய தவத்தைச் செய்த விசுவாமித்திரர்;* ***இயம்பிய சொல்*** *- சொன்ன இந்தச் சொற்களானது;* ***மருமத்தின் எறிவேல் பாய்ந்து*** *- மார்பின் மேல் எறிந்த வேல் பாய்ந்த:* ***புண்ணில் ஆம் பெரும் புழையில்*** *- புண்ணாகிய புழையிலே;* ***கனல் நுழைந்தால் என*** *- கனன்று கொண்டிருக்கும் தீ நுழைந்தது போல;* ***செவியில் புகுதலோடும்*** *- தனது காதுகளில் புகுந்த போது;* ***உள் நிலாவிய துயரம் பிடித்து உந்த*** *- உள்ளத்திலே நிலைத்துள்ள துயரம் (உயிரை) வெளியே தள்ள;* ***ஆர் உயிர் நின்று ஊசல் ஆட*** *- தயரதனது அவ்வரிய உயிர் (உள்ளே போகவும். வெளியே வரவுமாக) ஊசல்போல் ஆட;* ***கண்இலான் பெற்று இழந்தான் என*** *- கண்கள் இல்லாதவன் அதனைப் பெற்றுப் பின்னர் இழந்தான் எனக் கூறும்படி;* ***காலவேலான் கடுந்துயரம் உழந்தான்*** *- பகைவனின் உயிருக்கு இறுதிக்காலம் காட்டும் வேலையுடைய தயரத வேந்தன் கடுமையான துன்பத்தினாலே மிகு வருந்தினான்.*

*உள் நிலாவிய துயரமாவது தயரதன் சிரவணனை அம்பால் கொல்ல அவனது பெற்றோர் தந்த சாபத்தால் நிலவிய துன்பமாம். உந்த: தள்ள. கண் இலான்: பிறவிக்குருடன். இடையில் கண் பெற்றும் மீண்டும் இழத்தல் பெருந்துயர் விளைவிக்கும். பிள்ளையில்லாத தயரதன் பெற்று. பிரிவதால் பெருந்துயர் கொண்டான் என்பதற்கு உவமையாயிற்று.*

***326. தொடை ஊற்றின் தேன் துளிக்கும் நறுந் தாரான்***
***ஒருவண்ணம் துயரம் நீங்கி.***
***'படையூற்றம் இலன். சிறியன் இவன்; பெரியோய்!***
***பணி இதுவேல். பனி நீர்க் கங்கை***
***புடை ஊற்றும் சடையானும். புரந்தரனும்***
***நான்முகனும். புகுந்து செய்யும்***
***இடையூற்றுக்கு இடையூறாய். யான் காப்பென்;***
***பெரு வேள்விக்கு எழுக!' என்றான்.***

***தொடை ஊற்றின் தேன் துளிக்கும்*** - தொடையின் ஊற்றுப் போலத் தேன் துளிக்கின்ற; ***நறுந்தாரான் ஒரு வண்ணம் துயரம் நீங்கி*** - மணம் பொருந்திய மாலையணிந்த தயரதன் ஒருவாறு துயரம் நீங்கியவனாய்; ***படை ஊற்றம இலன் சிறியன் இவன்*** - படைக்கலப் பயிற்சியில் முதிர்ச்சி அடையாத சிறுவயதுடையவன் இவ்விராமன்; ***பெரியோய்*** - தவத்திலும். மற்யை சிறப்புக்களிலும் பெரியோரே!; ***பணி இதுவேல்*** - எனக்குத் தாங்கள் இடும் கட்டளை இதுவேயானால்; ***பனிநீர்க் கங்கைபுடை ஊற்றும் சடையானும்*** - குளிர்ந்த நீரையுடைய கங்கை பக்கங்களில் ஊற்றிக் கொண்டிருக்கும் சடைமுடியையுடைய சிவபிரானும்; ***நான்முகனும். புரந்தரனும்*** - நான்கு முகங்களை உடைய பிரமனும் இந்திரனும்; ***புகுந்து செய்யும் இடையூற்றுக்கு*** - அவ்வரக்கர்களுக்குத் துணையாக வந்து புகுந்து செய்கின்ற தீங்குகளுக்கு; ***இடையூறா நான் காப்பென்*** - தடையாக நின்று நான் காக்கிறேன்; ***பெரு வேள்விக்கு எழுக என்றான்*** - (நீங்கள் செய்யத் தொடங்கிய அந்தப்) பெரிய வேள்வியை நிறைவேற்ற இப்போதே எழுந்தருள்க என்றான். அன்றலர்ந்த மலர் மாலை அணிந்திருக்கிறான் ஆதலின். அம்மாலை தேனைத் துளிக்கிறது என்பார். ''தொடையூற்றின் தேன் துளிக்கும் நறுந்தாரான்'' என்றார். ஊற்றுதல்: கொட்டுதல். தொடை: தேன் கூடு. துளித்தல்: சொட்டுதல். தார்: மாலை. நறுந்தார்: பண்புத்தொகை. பணித்தல்: கட்டளையிடுதல். பணி: கட்டளை. முதல்நிலைத் தொழிற்பெயர். பனி: குளிர்ச்சி. புடை: பக்கம். சடை: மயிர்த்தொகுதி. 'இடையூற்றுக்கும்' என்பதில் உம்மை தொகுக்கப்பட்டு இடையூற்றுக்கு'' என நின்றது. காப்பென்: தன்மை ஒருமை வினைமுற்று. எழுக: வியங்கோள் வினைமுற்று. ஊற்றம்: முதிர்ச்சி ''படை ஊற்றும் இலன்'' படைக்கலப் பயிற்சியால் முதிர்ச்சி அடையாத சிறு வயதினன்' என்பது குறிப்பு. ''கங்கை புடையூற்றும் சடையான்'' கருத்துடையடை கொளணியாகும்.

***327. என்றனன்; என்றலும். முனிவோடு எழுந்தனன்.***
***மண் படைத்த முனி; 'இறுதிக் காலம்***
***அன்று' 'என. 'ஆம்' என இமையோர் அயிர்த்தனர்;***
***மேல் வெயில் கரந்தது; அங்கும் இங்கும்***
***நின்றளவும் திரிந்தன; மேல் நிவந்த கொழுங்***
***கடைப் புருவம் நெற்றி முற்றச்***
***சென்றன; வந்தது நகையும்; சிவந்தன கண்;***
***இருண்டன. போய்த் திசைகள் எல்லாம்.***

***என்றனன் என்றலும்*** - என்று தயரதன் சொன்னான். அவ்வாறு கூறலும்; ***மண்படைத்த முனி முனிவோடு எழுந்தனன்*** - உலகத்தையே படைக்கத் தொடங்கிய முனிவனாகிய விசுவாமித்திரன் சினத்தோடு எழுந்தான்; **மேல் நிவந்த கொழுங்கடைப் புருவம்** - அம்முனிவனது. மேலே உயர்ந்தனவாகிய புருவங்கள்; **நெற்றிமுற்றச் சென்றன** - அவரது நெற்றியில் முற்றவும் சென்றன; **நகையும் வந்தது** - கோபச் சிரிப்பும் வந்து சேர்ந்தது; ***கண் சிவந்த*** - அம்முனிவனது இரு கண்களும் சினத்தால் சிவந்தன; **மேல் வெயில் கரந்தது** - வானிலே உலாவிக் கொண்டிருந்த கதிரவன் அஞ்சி மறைந்தான்; ***அங்கும் இங்கும் நின்றனவும் திரிந்தன*** - அவ்வுலகத்திலும். இவ்வுலகத்திலும் நின்ற உயிரினங்கள் யாவும் நிலைகெட்டுத் திரிந்தன; **திசைகள் எல்லாம் போய் இருண்டன** - திக்குகள் எல்லாம் ஒளி இழந்து இருண்டன. **இமையோர்** - இத் தோற்றங்களைக் கண்ட தேவர்கள் எல்லோரும்; ***இறுதிக்காலம் அன்றுஎன ஆம்என அயிர்த்தனர்*** - கடையூழிக் காலமோ அல்லவோ என ஐயம் கொள்வாராயினர்.

*முனிவோடு: கோபத்துடன். 'ஓடு' மூன்றனுருபு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. ஆயினும் முனிவன் எழுவதற்கு முன் சினம் எழுந்தது என்னும் குறிப்பைக் காட்டி நின்றது. இம்முனிவனது சீற்றத்தால் விளைந்த செயல்களைக் கண்ட தேவர்கள் ஊழிக்காலமோ? அன்றோ என அஞ்சினர். அயிர்த்தனர். ஐயுற்றனர். 'வெயில்' சினையாகுபெயராய்ச் சூரியனை உணர்த்தும்' ''கண் இருண்டன'' இதில் கண் பால் பகா அஃறிணைப் பெயராதலின் பன்மைப் பயனிலைக்கு ஒருமை எழுவாயாகி நின்றது. போய்: போதல் (அழிதலுமாம்). முனிவன் கொண்ட சீற்றத்தால் நிகழ்ந்தவைகளை அழகுறச் சித்திரிக்கும் பாடல் இது வெகுளிச் சுவைக்குச் சிறந்ததொரு எடுத்துக்காட்டு இப்பாட்டு எனலாம்.*

***328. கறுத்த மா முனி கருத்தை உன்னி. 'நீ***
***பொறுத்தி' என்று அவற் புகன்று. 'நின் மகற்கு***
***உறுத்தல் ஆகலா உறுதி எய்தும் நாள்***
***மறுத்தியோ?' எனா. வசிட்டன் கூறினான்.***

***கறுத்த மாமுனி*** - சீற்றம் கொண்டெழுந்த விசுவாமித்திர முனிவனது; ***கருத்தை உன்னி*** - உள்ளக் கருத்தை நினைத்துத் தேர்ந்து (அவனை நோக்கி); **நீ பொறுத்தி என்று அவன்புகன்று** - நீ பொறத்தருள்வாயாக என அவனுக்குச் சொல்லிவிட்டு (பிறகு மன்னனைப் பார்த்து); **நின் மகற்கு** - உனது மகனாகிய ராமபிரானுக்கு; **உறுத்தல் ஆகலா உறுதி** - அடைவித்தற்கு அரிய நன்மைகளெல்லாம்; **எய்தும் நாள் மறுத்தியோ** - வந்து கூடும் நாளை வேண்டாமென மறுத்துக் கூறுவாயோ; **எனா வசிட்டன் கூறினான்** - என்று வசிட்ட முனிவன் கூறலானான்.

*கறுத்தல்: சினத்தல். உன்னி: நினைத்து. பொறுத்தி: பொறுப்பாயாக. மரியாதை உணர்த்திற்று. உறுத்தல். அடையச் செய்தல் (பிறவினை) உறுதி: நன்மை. மறுத்தியோ: மறுத்துரைப்பாயோ (அதிகாரத்தை உணர்த்திற்று). ஆக+அலா: ஆகலா: ஆகமாட்டாது.*

*சினம் கொண்டெழுந்த விசுவாமித்திரனைப் 'பொறுத்தி' எனக் கூறி அமைதியுறச் செய்தபின். மன்னனை நோக்கி. 'உன் மகனுக்கு. 'உறுத்தலாகலா உறுதி' எய்தும் நாள் இது. இதை மறுத்தியோ' என வசிட்டன் கூறினான் என்பது கருத்து.*

***329.*** ***'பெய்யும் மாரியால் பெருகு வெள்ளம் போய்***
***மொய் கொள் வேலைவாய் முடுகும் ஆறுபோல்.***
***ஐய! நின் மகற்கு அளவு இல் விஞ்சை வந்து***
***எய்து காலம் இன்று எதிர்ந்தது' என்னவே.***

***ஐய*** *- தசரத மன்னனே;* ***பெய்யும் மாரியால் பெருகு வெள்ளம்*** *- பெய்கின்ற மழையினாலே பெருகுகின்ற நீர்ப்பெருகு;* ***போய். மொய்கொள் வேலைவாய்*** *- சென்று. நிர்ச் செறிவுமிக்க கடலிடத்தே;* ***முடுகும் ஆறுபோல்*** *-விரைந்து சேரும் தன்மை போல்;* ***நின் மகற்கு*** *- உனது புத்திரனான ராமபிரானுக்கு;* ***அளவில் விஞ்சை*** *- அளத்தற்கரிய வித்தைகள் பலவும்;* ***வந்து எய்து காலம்*** *-வந்து அடையும் காலம்;* ***இன்று எதிர்ந்தது என்னவே*** *- இன்று கூடியிருக்கிறது என்று வசிட்ட முனிவன் சொல்லவும்.*

*இது குளகம். அடுத்த பாட்டுடன் பொருள் முடியும். பெருகு வெள்ளம். பெருகிய வெள்ளம் (வினைத்தொகை). போய்: நகர்ந்து சென்று. மொய்: செறிவு (வலிமை). முடுகுதல்: விரைந்து செல்லுதல். ஆறு: தன்மை. (ஆறுமாம்). கடலில் சென்று கலக்கும் வெள்ளம் அளவிடற்கரியது. அதுபோல இராமனை அடையும் வித்தைகளும் அளவிடற்கரியனவாம். முந்திய பாடலில் 'உறுதி எய்தும் நாள்' என்று கூறியதற்கேற்ப. இங்கு ' விஞ்சை வந்தெய்து காலம்' என்றார்.*

***330.*** ***குருவின் வாசகம்***
***கொண்டு. கொற்றவன்.***
***'திருவின் கேள்வனைக் கொணர்மின்.***
***சென்று' என.-***
***'வருக என்றனன்'***
***என்னலோடும். வந்து***
***அருகு சார்ந்தனன்.***
***அறிவின் உம்பரான்.***

***குருவின் வாசகம் கொண்டு*** *- குல குருவான வசிட்ட முனிவனது சொற்களைச் செவியேற்றுக் கொண்டு;* ***கொற்றவன்*** *- மன்னனாகிய தயரதன் (பக்கத்திலுள்ள பணியாட்களைப் பார்தது);* ***திருவின் கேள்வனை*** *- (இலக்குமியின் நாயகனான திருமாலின் அவதாரமான) ராமபிரானை;* ***கொணர்மின் சென்று என*** *- சென்று அழைத்துக் கொண்டு வருக என்று சொல்ல;* ***வருக என்றனன்*** *- (பணியாட்கள் சென்று ராமனை அடைந்து) தந்தை வருக என அழைத்தார்;* ***என்னலோடும்*** *- என்று சொல்லவே; அறிவின் உம்பரான் - அறிவில் உயர்ந்து விளங்கும் ராமபிரான்;* ***வந்து அருகு சார்ந்தனன்*** *- புறப்பட்டு வந்து. மன்னனருகில் சேர்ந்தான்.*

*குரு: குல குருவாகிய வசிட்டன். வாசகம்: சொல் (பேச்சு). கொண்டு: ஏற்றுக்கொண்டு. கொண்மின்: அழைத்துவாருங்கள் 'கொணர்மின்' என்றதால் ஏவப்பட்டோர் பலர் என்பது புலனாம். வருக: வியங்கோள் வினைமுற்று. சார்தல் - சேர்தல் உம்பர் தலைமை அறிவின் உம்பரான்: மேலான அறிவுடையவன் 'ஞான நாயகன்' என்னலுமாம்.17*

***331. வந்த நம்பியைத் தம்பிதன்னொடும்***
***முந்தை நான்மறை முனிக்குக் காட்டி. 'நல்***
***தந்தை நீ. தனித் தாயும் நீ. இவர்க்கு.***
***எந்தை! தந்தனென்; இயைந்த செய்க!' என்றான்.***

**வந்த நம்பியை** - *அவ்வாறு அருகு வந்து சேர்ந்த நம்பியாகிய இராமனை;* **தம்பி தன்னொடும்** - *ராமனை விட்டு நீங்காத தம்பியான இலக்குவனோடும்;* **முந்தைய நான்மறை முனிக்குக் காட்டி** - *பழைய வேதங்களை அறிந்தநல் முனிவனாகிய விசுவாமித்திரனுக்குக் காட்டி;* **நல்தந்தை நீ தனித்தாயும் நீ இவர்க்கு** *-இந்த குமாரர்களுக்கு இனித் தாயும் தந்தையும் நீங்களே தாம்;* **எந்தை தந்தனன்** *-எந்தையே! இவர்களைத் தங்களிடம் கொடுத்தேன்;* **இயைந்த செய்க என்றான்** - *இவர்களைக் கொண்டு இயைந்தபடி காரியங்களைச் செய்வீராக என்றான்.*

*நம்பி: பெருமை உடையவன் (இராமன்). 'தம்பி' எனப் பொதுப்படக் கூறினும் இலக்குவனையே குறிக்கும். காட்டுதல்: சுட்டிக் காட்டுதல். எந்தை: எந்தையே என்னும் விளி. இயைந்து: உமக்கு இயைந்த அல்லது அவர்கட் கியைந்த எனவும் பொருள் கொள்ளலாம். செய்க: வியங்கோள். இராம. இலக்குவர்களை முனிவரிடம் ஒப்படைத்தல் கூறப்பட்டது.. நம்பியை - தம்பியோடு - காட்டி - தந்தனன் - இயைந்த செய்க என்பது பொருள் முடிபாகும்.*

***332. கொடுத்த மைந்தரைக் கொண்டு. சிந்தை முந்து***
***எடுத்த சீற்றம் விட்டு. இனிது வாழ்த்தி. 'மேல்***
***அடுத்த வேள்வி போய் முடித்தும் நாம்' எனா.***
***நடத்தல் மேயினான். நவைக்கண் நீங்கினான்.***

**கொடுத்த மைந்தரைக் கொண்டு** - *தயரதன் கொடுத்த பிள்ளைகள் இருவரையும் ஏற்றுக் கொண்டு;* **முந்து சிந்தை எடுத்த சீற்றம் விட்டு** - *முன்னர் மனத்தில் ஏறிய கோபத்தை விட்டு:* **இனிது வாழ்த்தி** *- மன்னனை இனிதே வாழ்த்தி:* **மேல் அடுத்து வேள்வி போய் முடித்தும் நாம் என** - *இனிமேல் சென்று. தொடங்கிய வேள்வியை நாம் முடிப்போம் என்று.;* **நவைக்கண் நீங்கினான் நடத்தல் மேயினான்** - *குற்றம் நீங்கிய முனிவனாகிய விசுவாமித்திரன் புறப்படலானான்.*

*கொடுத்த: அடைக்கலமாகக் கொடுத்த. கொண்டு பெற்றுக்கொண்டு முந்து: முன் என்பதன் மரூஉ. எடுத்த: மேலெழுந்த. சீற்றம்: சினம். அடுத்தல். தொடங்குதல். முடித்தும். தன்மைப் பன்மை வினைமுற்று. நடத்தல்மேயினான். நடக்கத் தொடங்கினான். நவை: குற்றம்.*

***333. வென்றி வாள் புடை விசித்து. மெய்ம்மைபோல
என்றும் தேய்வுறாத் தூணி யாத்து. இரு
குன்றம் போன்று உயர் தோளில். கொற்ற வில்
ஒன்று தாங்கினான் - உலகம் தாங்கினான்***

***உலகம் தாங்கினான்*** - *காக்கும் கடவுளின் அம்சமான ராமன்;* ***வென்றி வாள் புடை விசித்து*** - *வெற்றியை உடைய வாளை இடையிலே கட்டிக் கொண்டு;* ***மெய்ம்மை போல்*** - *என்றும் அழியாத உண்மை போன்ற;* ***என்றும் தேய்வு உறா தூணி யாத்து*** - *அம்புகள் என்றும் தேயாத அம்பறாத்தூணியைத் தோளில் கட்டி;* ***குன்றம் போன்று உயர் தோளில்*** -*இரண்டு மலைகளைப் போன்று உயர்ந்த (மற்றொரு) தோளில்;* ***கொற்றவில் ஒன்று தாங்கினான்*** - *வெற்றி மிகுந்த வில் ஒன்றினையும் சுமந்தான்.*

*வென்றி: வெற்றி. வெல்: பகுதி. விசித்தல்: கட்டல். சிசி: பகுதி. புடை: பக்கம். தூணியில் அம்புகள் என்றும் அறாத்தன்மையுடைமையால் ''மெய்ம்மை போல் என்றும் தேய்வுறாத் தூணி'' என்றார். இரு குன்றம்: பெரிய மலை எனலுமாம். உலகம் தாங்கும் உறுதி தோள்களுக்கு உண்மை பற்றி உலகம் தாங்கினான் என்றார். உலகம் தாங்கினான் - விசித்து - யாத்து - வில் தாங்கினான் என்க.*

***334. அன்ன தம்பியும் தானும். ஐயன் ஆம்
மன்னன் இன் உயிர் வழிக்கொண்டாலென.
சொன்ன மா தவன் - தொடர்ந்து. சாயைபோல்.
பொன்னின் மா நகர்ப் புரிசை நீங்கினான்.***

***அன்ன தம்பியும் தானும்*** - *அவ்வாறே வில்தாங்கிய தம்பியாகிய இலக்குவனும் இராமபிரானும்;* ***ஐயனாம் மன்னன் இன் உயிர் வழிக் கொண்டால் என*** - *தமது தந்தையாகிய தசரத மன்னனது இனிய உயிரே தொடர்ந்து செல்லுதல் போலவும்;* ***சாயை போல்*** - *அம்முனிவனது நிழல் போன்றும்;* ***சொன்ன மாதவன் தொடர்ந்து*** - *மேலே சொன்ன விசுவாமித்திர முனிவனைத் தொடர்ந்து;* ***பொன்னின் மாநகர்*** - *அழகிய அந்த அயோத்தி நகரத்தின்;* ***புரிசை நீங்கினான்*** - *மதிற்புறத்தைக் கடந்து சென்றான்.*

*இராமனை மன்னன் தனது உயிரெனக் கருதி இருந்தமையால் இங்கு 'மன்னன் இன்னுயிர் வழிக் கொண்டாலென' என்றார். இங்கு உயிர் ஆன்மாவைக் குறித்து நின்றது. முனிவனைத் தொடர்தற்கு 'உயிர்வழிக் கொள்ளலும்'. அவன் பின் செல்லுதற்கு. ''சாயை''யும் உவமைகளாம் 'சொன்ன' என்பதற்குப் பொன்வடிவினனான என்பது பொருளாம். 'இதுவரை இராமன் பெருமையைச் சொன்ன' என்றும் கூறலாம். 'பொன்னின் மாநகர்' பொன்னாலமைந்த எனலும் பொருந்தும். புரிசை: மதில்: நீங்குதல்: நீங்கிப் போதல் (கடத்தல்).*

***335. வரங்கள் மாசு அற. தவம் செய்தோர்கள் வாழ்***
***புரங்கள் நேர் இலா நகரம் நீங்கிப் போய்.***
***அரங்கின் ஆடுவார் சிலம்பின் அன்னம் நின்று***
***இரங்கு வார் புனல் சரயு எய்தினார்.***

***தவம் செய்தோர்கள்*** - *தவத்தைச் செய்தவர்கள்;* ***வரங்கள் மாசு அறவாழ்*** - *அத்தவத்தால் பெற்ற வரங்களுக்குக் குறைவில்லாதபடி இருந்து வாழ்கின்ற;* ***புரங்கள் நேர் இலா நகரம்*** - *பதவிப்புரங்களான அமராவதி. அளகை ஆகியவையும் நிகரில்லாத அயோத்தி மாநகரத்தை;* ***நீங்கிப் போய்*** - *அம்மூவரும் நீங்கிச் சென்று;* ***அரங்கின் ஆடுவார் சிலம்பின் அன்ன*** - *நடன அரங்கிலே ஆடுகின்ற நாட்டிய மகளிரின் சிலம்பொலி போல;* ***நின்று இரங்கு வார்புனல்*** - *என்றும் நிலைத்து ஒலித்துக் கொண்டிருக்கும். பெருகிவரும் நீரை உடைய;* ***சரயு எய்தினார்*** - *சரயு நதியை அடைந்தார்கள்.*

*வரங்கள்: வேண்டிக்கொண்ட தவபலம். தவம்: புண்ணியமுமாம். தவம் புரிந்தோர் புகுவது துறக்கமாதலின். இங்குப் புரங்கள் அமராவதியும். அளகாபுகரியும் எனக்குறிப்பிடப்பட்டன. இவையும் அயோத்திக்கு நிகராக மாட்டா என்பதால் ''புரங்கள் நேரிலா நகரம்'' என்றார். கோவை இந்நகரொடு என்று குறிக்கலாவது. 'அத்தேவர் தம் நகரியைச் செப்புகின்றதென்' என நகரப் படலத்துள் கூறுவது நினைவுகூரத்தக்கது. அரங்கு: நடனமண்டபம். 'அன்ன' உவமைஉருபு. இரங்குதல்: ஒலித்தல் நின்று இரங்கு வார்புனல் சரயு என்றதால்' சரயு எப்போதும் ஒலித்துக் கொண்டிருக்கும்' நீர்ப் பெருக்காறு என்பது புலனாகும். 'அமரர் போற்றும் விழுநதி' என்பார் பின்னும்*

***336. கரும்பு கால் பொரக் கமுகு வார்ந்த தேன்***
***வரம்பு மீறிடு மருத வேலிவாய்.***
***அரும்பு கொங்கையார் அம் மெல் ஓதிபோல்***
***சுரும்பு வாழ்வது ஓர் சோலை நண்ணினார்.***

***கரும்பு கால்பொர*** - *கரும்புச் சோலையிலே காற்று வீசுவதால்;* ***கமுகு வார்ந்த தேன்*** - *கமுகு மரங்களிலே பெருகிவரும் தேன்;* ***வரம்புமீறிடும்*** - *வரப்பை மீறிச் செல்லும்படியான;* ***மருதவேலிவாய்*** - *மருத நிலங்களிலே;* ***அரும்பு கொங்கையார்*** - *தோன்றிவரும் தனங்களையுடைய இளமாதரது;* ***அம்மென் ஓதிபோல்*** - *அழகிய. மென்மையான கூந்தலைப் போலக் கறுத்த;* ***சுரும்பு வாழ்வது ஓர் சோலை நண்ணினார்*** - *வண்டுகள் வாழ்கின்ற ஒரு சோலையை அம்மூவரும் அடைந்தனர்.*

*கால்: காற்று. பொருதல்: வீசுதல். வார்ந்த: பெருகிய. வரம்பு: வரப்பு. மருதவேலி: மருதநிலம். அரும்புதல்: தோன்றுதல். அரும்பு கொங்கை' வினைத்தொகையாம். ஓதி: கூந்தல். வண்டின் கரு நிறத்துக்கு உவமையாகக் கூறப்பட்டது.*

***337. தாழும் மா மழை தவழும் நெற்றியால்***
***சூழி யானைபோல் தோன்றும் மால் வரைப்***
***பாழி மா முகட்டும் உச்சி. பச்சை மா***
***ஏழும் ஏற. போய் ஆறும் ஏறினார்.***

***தாழும் மா மழை*** - *படிந்திருக்கின்ற பெரு மேகங்களை;* ***தழுவும் நெற்றியால்*** - *தழுவியிருக்கும் தாழ்வரைகளால்;* ***சூழி யானை போல்*** - *முகபடாம் அணிந்துள்ள யானையைப் போல;* ***தோன்றும் மால்வரை*** - *காணப்படும் பெரிய மலையினது;* ***பாழிமா முகட்டு உச்சி*** - *பெருமை பொருந்திய உயர்ந்த சிகரத்தின் உச்சியில்;* ***பச்சைமா ஏழும் ஏற*** - *சூரியனது தேரில்பூட்டப்பட்ட பச்சைநிறக் குதிரைகள் ஏழும் ஏறும்படியான உச்சிக் காலத்தில்;* ***ஆறும் ஏறினார்*** - *அந்தச் சரயு நதியைக் கடந்து சென்றனர்.*

*இதில் முதல் இரண்டடி உவமையணியாகும். 'யானை மலைக்கு உவமையாகும். நெற்றி: தாழ்வரை (உச்சியுமாம்) தாழ்வரையில் மேகம் படிந்திருப்பதால். கருநிறைமுடைய அம்மலை. முகபடாம் அணிந்த யானையைப் போலத் தோன்றுகிறது என்பது கருத்து. பாழி: பெருமை. சூழி: முகபடாம் (நெற்றிப்பட்டம்). முகடு: சிகரம். மால்: பெரிய. பச்சைமா: பச்சைக் குதிரைகள். 'ஏழும்' ஏற: ஆறும் ?ஏறினார். ஏழு. ஆறு என்று எண்ணுப்பெயர்கள் தோன்றப் பாடிய நயம் கருதத்தக்கது. ஆக. நண்பகல் போதில் மூவரும் சரயு நதியைக் கடந்து சென்றனர் என்பது கருத்து.*

***338. தேவு மாதவன் - தொழுது. தேவர்தம்***
***நாவுள் ஆகுதி நயக்கும் வேள்வியால்***
***தாவும் மா புகை தழுவு சோலை கண்டு.***
***யாவது ஈது என்றான் எவர்க்கும் மேல் நின்றான்.***

***தேவர் தம் நாவுள்*** - *தேவர்களது நாவான நெருப்பினிடம்;* ***ஆகுதி நயக்கும் வேள்வியால்*** - *ஆகுதியை விரும்பி அளிக்கும் வேள்வியில் இருந்து;* ***தாவும் மா புகை*** - *தாவி வருகின்ற பெரும்புகையை;* ***தழுவு சோலைகண்டு*** - *தழுவி நிற்பதோர் சோலையைப் பார்த்து;* ***தேவு மாதவன் தொழுது*** - *தெய்வத்தன்மை பொருந்திய விசுவாமித்திர முனிவனை வணங்கி;* ***எவர்க்கும் மேல் நின்றான்*** - *யாவருக்கும் மேல் நின்றவனான ராமன்;* ***யாவது ஈது என்றான்.*** *இந்தச் சோலை யாது என்றான்.*

*தேவு: தே. மாதவன்: அரியதவத்தை உடையவன். வேள்வியில் தேவர்களுக்கு அளிக்கும் அவியுணவினைப் பெற்றுக்கொண்டு. அவர்களைச் சென்றடையச் செய்பவன் நெருப்புக் கடவுள் என்பதால். அந்த நெருப்புத் தேவனைத் ''தேவர் தம்நா'' என்றார். கண்டு+யாவது: கண்டியாவது - குற்றியலிகரம் எவர்க்கும் மேல் நின்றான். தனக்கு மேல் வேறொரு பொருள் இல்லாதவன் என்பது பொருள். ''மேலொரு பொருளுமில்லா மெய்ப் பொருள்'' என்பார் (வாலிவதைப்படலம்)*

வேள்விப் புகையைத் தழுவிநிற்பதோர் சோலையைக் கண்டு. இராமன் முனிவனை வணங்கி. 'இச்சோலை யாது' என வினவினன் என்பது கருத்து.

## தாடகை வதைப்படலம்

*தாடகை என்னும் அரக்கியை இராமபிரான் விசுவாமித்திர முனிவனது விருப்பத்தின்படி கொன்றருளிய கதையைக் கூறும் பகுதி இதுவாகும். அங்க நாட்டிலுள்ள காமன் ஆச்சிரமச் சிறப்பை முனிவன் ராமனுக்குக் கூறுதலும். அங்குத் தங்கி மறுநாள் மூவரும் பாலைவனம் ஒன்றை அடைதலும். பாலையின் வெம்மையைத் தாங்கும் பொருட்டு இராம. இலக்குவர்களுக்கு விசுவாமித்திரன் இரு மந்திரங்களை உபதேசித்தலும் - தாடகையின் வரலாறு கூறுதலும் - தாடகையின் வருகையும் - பெண் என நினைத்த ராமன் கணைதொடாது நிற்றலும். முனிவன் ராமனை வேண்டுதலும் - முனிவன் ஏவலுக்கு இராமன் இசைதலும் - இராமன் அம்பேவித் தாடகையைக் கொல்லுதலும் - வானவர் அதனால் மகிழ்ந்து இராமனை வாழ்த்தலும் இப்படலத்துள் விவரித்துக் கூறப்பட்டுள்ள செய்திகளாகும்.*

***339.*** **‘திங்கள் மேவும் சடைத்**
**தேவன்மேல். மாரவேள்.**
**இங்கு நின்று எய்யவும்.**
**எரிதரும் நுதல் விழிப்**
**பொங்கு கோபம் சுட. பூளை**
**வீ அன்ன தன்**
**அங்கம் வெந்து. அன்று தொட்டு**
**அனங்கனே ஆயினான்.**

***திங்கள் மேவும் சடைத் தேவன் மேல்*** *- சந்திரனைத் தாங்கியுள்ள சடைமுடியையுடைய தேவனாகிய சிவபிரான் மேல்;* ***மார வேள் இங்கு நின்று எய்யவும்*** *- மன்மதன். மலரம்புகளை இங்கு இருந்து எடுத்தெய்யவே;* ***எரிதரு நுதல் விழி*** *- நெருப்பைக் கக்கும் நெற்றிக் கண்ணில்;* ***பொங்கு கோபம்சுட*** *- பொங்கி எழுந்த சீற்றம் சுடுதலால்;* ***பூளை வீ அன்ன தன் அங்கம்வெந்து*** *- பூளைப் பூப்போன்ற தனது உடல் முழுதும் எரிந்து போய்.* ***அன்று தொட்டு அனங்கனே ஆயினான்*** *- அந்த நாள் முதல் மன்மதன் அங்க மற்றவனே ஆய்விட்டான்.*

*திங்கள்: சந்திரன். சடைத்தேவன்: சிவபிரான். மாரவேன்: மன்மதன். ‘வேள்’ என்பதற்கு விரும்பத்தக்க அழகுடையவன் என்பது பொருள். நுதல் விழி: ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத் தொகை. விழி: முதல் நிலைத் தொழிற் பெயர். வீ: நன்குமலர்ந்த மலர். அனங்கன்: அங்கம் இல்லாதவன். பூளைவீ: பூளைப்பூ காற்றில் பறக்குமளவு லேசானது. ‘மாருதமறைந்த பூளை’ என்பார் பின்னும்*

*சிவபிரானது நெற்றிக்கண் நெருப்பால் மன்மதன் எரிந்து சாம்பலானான் என்பது கந்தபுராணத்துட் கூறப்படும் செய்தியாம்.*

***340.*** ***‘வாரணத்து உரிவையான் மதனனைச்***
***சினவு நாள்.***
***ஈரம் அற்றும் அங்கம் இங்கு***
***உகுதலால். இவண் எலாம்.***
***ஆரணத்து உறையுளாய்! அங்க***
***நாடு; இதுவும். அக்***
***காரணக் குறியுடைக்***
***காமன் ஆச்சிரமமே.***

***ஆரணத்து உறை யுளாய்*** - வேதங்களை வாழும் இடமாக உடையவனே; ***வாரணத்து உரிவையான்*** - யானைத் தோலைப் போர்த்தவனாகிய சிவபிரான்; ***மதனனைச் சினவு நான்*** - மன்மதனைக் கோபித்த நாளில்; ***ஈரம் அற்று அங்கம் இங்கு உகுதலால்*** - பசையற்றுப் போய் அவனது சிதைந்த உடல் இங்குச் சிதறி வீழ்ந்ததால்; ***இவணெலாம் அங்கநாடு*** - இந்த இடமெல்லாம் அங்க நாடு என அழைக்கப்படும் இடமாகும்; ***இதுவும் அக் காரணக்குறி உடைகாமன் ஆச்சிரமமே*** - இந்த இடமும். அந்தக்காரணக் குறியை உடைய காமன் ஆச்சிரமம் என்று சொல்லப்படுவதாகும்.

*வாரணம்: யானை. உரிவை: உரித்த தோல். யானை உரித்த தோலைச் சிவபிரான் போர்வையாக உடையவன் என்பது புராணச் செய்தி. தனது யாக நிலையைக் கெடுத்து. காம இச்சையை யுண்டாக்குவதற்கு மலர்க்கணைகளை எய்த மன்மதனைக் கோபித்து எரித்த செய்தி புராணத்துட் கூறப்பட்டதாகும்; ஈரம்: உடற்பசை உகுதல்: சிதறுதல் ஆரணம்: வேதம். ஆரண+துறை எனவும். ஆரணத்து -உறையுள் எனவும் இருவிதமாகவும் விரித்துப் பொருள் கூறலாம்.*

***341.*** ***‘பற்று அவா வேரொடும் பசை அற.***
***பிறவி போய்***
***முற்ற. வால் உணர்வு மேல்***
***முடுகினார் அறிவு சென்று***
***உற்ற வானவன். இருந்து யோகு***
***செய்தனன் எனின்.***
***சொற்றவாம் அளவதோ. மற்று***
***இதன் தூய்மையே?’***

**பற்று அவா வேரொடும் பசை அற** - உலகப் பொருள்களில் பற்றியுள்ள ஆசை வேரொடு பற்றற்றுப் போகவும்; **பிறவி போய் முற்ற** - அவ்வாசையின் பயனாய் வரும் பிறவி நோய் சென்று முடியவும்; **வால் உணர்வு மேல்** - மெய்யுணர்வு பெற்ற; **முடுகினார் அறிவு** - விரைந்து சென்று அடைகின்ற ஞானிகளின் ஆன்மஞானம்; **சென்று உற்றவானவன்** - சென்று அடைகின்ற இறைவனாகிய சிவபெருமானே; **இருந்து யோகு செய்தனன் எனில்** - இங்கிருந்து யோகத்தைச் செய்தான் என்றால்; **இதன் தூய்மை சொற்றலாம் அளவதோ** - இதன் தூய்மை சொல்லத் தக்க அளவுடையதாகுமோ? ஆகாது.

அவா வேரொடும் பசையறுதல்: ஆசை வேருடன் பற்றறுதல். போய் முற்றல்: முற்றிப் போதல். வால் உணவு: மெய்யறிவு. யோகு: யோகம் (கடைக்குறை). அளவது; அளவுடையது. சிவபெருமான் ஆன்ம ஞானிகளுக்குத் தலைவன் என்றபடி.

உலகப் பொருள்களின் மீதுள்ள பற்று ஒழிந்தால் - அந்தப் பற்றுக் காரணமாக வரும் பிறவிதீரும் - பிறவி நீங்க ஆன்ம ஞானம் உண்டாகும். அந்த ஞானத்தால் இறைக்காட்சி பெறலாம் என்பதால் ''வாலுணர்வு மேல்வர முடுகினார் அறிவு சென்றுற்ற வானவன்'' எனச் சிவபெருமானைச் சிறப்பித்துக் கூறினார். அவன் இருந்து தவம்செய்த இடமாதலின் இதன் தூய்மை சொல்ல இயலாததென்றார்.

*342.* **என்று. அ(வ்) அந்தணன் இயம்பலும்.**
**வியந்து. அவ் வயின்**
**சென்று. வந்து எதிர் எழும்**
**செந் நெறிச் செல்வரோடு**
**அன்று உறைந்து. அலர் கதிர்ப்**
**பரிதி மண்டலம் அகன்**
**குன்றின்நின்று இவர. ஓர்**
**சுடு சுரம் குறுகினார்.**

**என்று அவ் அந்தணன் இயம்பலும்** - என்று அம்முனிவர் சொல்லவே; **வியந்து சென்று** - இராம. இலக்குவர் ஆச்சரியப்பட்டுப் போய்; **உவந்து எதிர்எழும்** - மகிழ்ந்து. எதிர்கொண்டழைக்க எழுந்து வரும்; **செந்நெறிச் செல்வரோடு** - செம்மையான நெறியில் செல்பவராகிய முனிவர்களுடன்; **அவ்வயின் அன்று உறைந்து** - அவ்விடத்தில் அன்று தங்கியிருந்து; **அலர்கதிர்ப் பரிதி மண்டிலம்** - விரிந்த கதிர்களையுடைய சூரியன்; **அகன்குன்றினின்று இவர** - அகன்ற மலையிலிருந்து மேலே ஏற; **ஓர் சுடுசரம் குறுகினார்** - (மூவரும்) ஒரு பாலைவனத்தை நெருங்கினர்.

*செம்மை+நெறி: செந்நெறி (நன்னெறியாளர் என்றுமாம்). அலர்கதிர்: விரிகதிர். பரிதிமண்டலம்: சூரியமண்டலம் அகன்குன்று: உதயகிரி. இவர்தல்: ஏறுதல். குறுகி: சேர்ந்து. இச்சோலை யாதெனக் கேட்ட ராமனுக்கு. சிவபிரான் யோகுசெய்த இடமென முனிவன் கூறி. அதன் தூய்மையைச் சிறப்பித்துக் கூற. பின் மூவரும் தொடர்ந்து சென்று ஒரு பாலையை எய்தினர் என்பது பொருள்.*

***343.*** **பருதிவானவன் நிலம் பசை**
**அறப் பருகுவான்**
**விருது மேற்கொண்டு உலாம்**
**வேனிலே அல்லது ஓர்**
**இருது வேறு இன்மையால்.**
**எரி சுடர்க் கடவுளும்**
**கருதின். வேம் உள்ளமு;**
**காணின். வேம் நயனமும்.**

***பருதி வானவன் நிலம் பசை அறப்பருகுவான்*** *- ?சூரிய தேவன் நிலத்தின் ஈரத்தை மிகுதியாகப் பருகும் பொருட்டு;* **விருது மேற்கொண்டு உலாம்** *- வெற்றியை மேற்கொண்டு உலாவும்;* **வேனிலே அல்லது இருது வேற இன்மையால்** *- வேனிற் காலமேயல்லாது (அந்நிலத்தில்) வேறுகாலம் இல்லாமையால்;* **எரிசுடர்க் கடவுளும் கருதின்** *- நெருப்புத் தேவனும்கூட இப்பாலையின் வெப்பத்தை எண்ணுவானானால்;* **உள்ளமும் வேம்** *- அந்தத் தீக்கடவுளின் இதயமும் வெந்து போகும்;* **காணின் நயனமும் வேம்** *- இப்பாலையைக் கண்டுவிட்டால் கண்களும் வெந்து போகும்.*

*பின் இரண்டடிகள் உயர்வு நவிற்சி யணியாகும். பருதிவானவன்: சூரிய தேவன். பசை: ஈரம். விருது: வெற்றி. உலாம்: உலாவும் என்பதன் இடைக் குறை. இருது: ருது: பருவம் என்பது பொருள். வேம்: வேகும் என்பதன் மரூஉ.*

*சூரியன் நிலத்தின் ஈரம் முழுவதையும் பருகுவேன் எனச் சூளுரைத்து - உலாவுகின்ற அப்பாலை நிலத்தில் வேனில்காலம் தவிர. வேறுபருவமே இல்லாமையால் - அந்தப்பாலையின் வெப்பம் பற்றி நினைக்கும் தீக்கடவுளின் மனமும் வெந்துபோகும் பார்த்த கண்களும் வெந்துபோகும் என்பது கருத்து. இது முதல் 12 பாடல்கள் பாலை நிலத்தின் தோற்றத்தையும் தன்மையையும் கூறுவனவாம்.*

***344.*** **படியின்மேல் வெம்மையைப்**
**பகரினும். பகரும் நா**
**முடிய வேம்; முடிய மூடு இருளும்**
**வான் முகடும் வேம்;**
**விடியுமேல். வெயிலும் வேம்; மழையும்**
**வேம்; மின்னினோடு**
**இடியும் வேம்; என்னில்.**
**வேறு யாவை வேவாதவே?**

***படியின்மேல் வெம்மையைப் பகரின்*** - *இப்பாலை நிலத்தின் வெப்பத்தைச் சொன்னாலும்;* ***பகரும்நா முடியவேம்*** - *சொல்லும் நாவும் முழுதும் வெந்து போகும்;* ***முடிய மூடு இருளும் வான்முகடும் வேம்*** - *முற்றும் மூடியுள்ள இருட்டும் வானத்து உச்சியும் வெந்து போகும்;* ***விடியுமேல் வெயிலும் வேம்*** - *விடிந்த பின்னாயின் சூரியகிரணமுமே வெந்து போகும்;* ***மழையும்வேம் மின்னினோடு இடியும் வேம்*** - *மேகமும் மழையும் வேகும் மின்னலுடன் இடியும் வெந்து போகும்;* ***என்னில் வேவாதவை யாவை*** - *என்று சொல்லக் கூடுமானால் அப்பாலையின் வெப்பத்தால் வேகாதவை எவை? (ஒன்றுமில்லை என்பதாம்).*

*படி: நிலம். இங்குப் பாலை நிலத்தை உணர்த்திற்று. வெம்மை: வெப்பம். பண்புப்பெயர். பகரு நா: வினைத்தொகை. நாக்கு. சூரிய வெப்பம் அப்பாலை நிலத்தின் மணல்முழுதும் படிந்து நீங்காத வெப்பமடைந்து இரவிலும் கொதித்திருக்கும். விடிந்த பின் தோன்றும் இளவெயிலையும் வேகச் செய்யும் என்பார் ' விடியுமேல் வெயிலும்வேம்' என்றார். வேறு+யாவை: வேறியாவை (குற்றியலிகரம்) ஏ: வினா.*

***345*** **விஞ்சு வான் மழையின்மேல் அம்பும் வேலும் பட.**
**செஞ்செவே செருமுகத்து அன்றியே. திறன் இலா**
**வஞ்சர் தீவினைகளால் மான மா மணி இழந்து**
**அஞ்சினார் நெஞ்சுபோல். என்றும் ஆறாது அரோ.**

***விஞ்சுவான் மழையின்மேல்*** - *வானிலிருந்து பெய்யும்மழை நீரைவிட மேலாக;* ***அம்பும் வேலும்பட*** - *அம்புகளும். வேல்களும். மார்பில் படும்படி:* ***செஞ்சவே செரு முகத்தன்றியே*** - *செம்மையான போர் முகத்தல்லாது;* ***திறனிலா வஞ்சகர் தீவினைகளால்*** - *(அறப்போர் செய்யும்) திறமையில்லாத வஞ்சகர்களின் சூழ்ச்சிச் செயல்களால்;* ***மான மா மணிஇழந்து*** - *(சிறைப்பிடிக்கப்பட்டு) தமது மானம் என்ற மணியை இழந்து;* ***அஞ்சினார் நெஞ்சுபோல்*** - *தோல்வியடைந்த மெய்வீரர்களின் மனம் எப்படிக் கொதிக்குமோ அது போல;* ***என்றும் ஆறாது*** - *பாலை நிலத்தின் வெப்பம் எப்போதும் ஆறாதிருக்கும்.*

*அரோ: அசை. விஞ்சுவான்: பூதங்களில் விஞ்சிய வான். வேலை: முதனிலைதிரிந்த தொழிற் பெயர் இலா: ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். அஞ்சினார்: வினையாலணையும் பெயர். போர்வீரர்க்கு அஞ்சுதலாவது வீரம் இருந்தும் அதனைக் காட்ட வழியின்றி அஞ்சியிருத்தலாம்.*

*சூழ்ச்சியால் வென்று சிறை வைக்கப்பட்ட உண்மை வீரர்களின் உள்ளக் கொதிப்பு ஆறாதது போல. பாலையின் வெப்பம் என்றும் ஆறாது என்றார்.*

***346.*** **பேய் பிளந்து ஒக்க நின்று**
**உலர் பெருள் கள்ளியின்**

***தாய் பிளந்து உக்க கார்***
***அகில்களும். தழை இலா***
***வேய் பிளந்து உக்க வெண்***
***தரளமும். விட அரா***
***வாய் பிளந்து உக்க செம் மணியுமே.***
***வனம் எனலாம்.***

***பேய் பிளந்து ஒக்க நின்று*** - *பேயின் உடலைப் பிளந்ததை ஒப்ப நின்று;* ***உலர் பெருங் கள்ளியின் தாய் பிளந்து*** - *உலர்ந்திருக்கும் பெருங்கள்ளியின் முதிர்ந்த மரங்கள் வெப்பத்தால் பிளவுப்பட்டுவிட;* ***உக்க கார் அகில்களும்*** - *அதிலிருந்து சிதறிய கரியநிறமுள்ள அகிற் கட்டைகளும்;* ***தழை இலாவேய் பிளந்து*** - *தழைகளில்லாத மூங்கில்கள் வெப்பத்தால் பிளந்து போய்;* ***உக்க வெண் தரளமும்*** - *அதிலிருந்து சிதறிய வெண்மையான முத்துக்களும்;* ***விட அரா வாய் பிளந்து*** - *விடம் உடைய பாம்புகள் வேனில் வெப்பத்தால் வாய் பிளக்கப்பெற்று;* ***உக்க செம்மணியுமே*** - *அதிலிருந்து சிதறிய செவ்விய ரத்தினங்களுமே;* ***வனம் எலாம்*** - *அப்பாலை வனமெல்லாம் நிறைந்து கிடப்பனவாம்.*

*கள்ளி வயிற்றில் அகில் பிறக்கும் - நான்மணிக்கடிகை.. ஒக்க: ஒத்திருக்க. உலர்ந்த பெரிய கள்ளி மரங்கள் பேயின் உடல் பிளந்ததை யொத்திருக்கிறதாம். காட்டில் விரிந்து நிற்கும் கள்ளியைக் கண்டவர்களுக்கு இது புலனாகும். முத்துப் பிறக்கும் இடங்களில் மூங்கிலும் ஒன்றென்பர். தரளம்: முத்து செம்மணி: நாக மாணிக்கம் அகில்கட்டைகளும். முத்துக்களும். மணிகளும் அப்பாலை நிலமெங்கும் சிதறிக்கிடக்கின்றனவாம்.*

*347.* ***பாரும் ஓடாது. நீடாது எனும் பாலதே;***
***சூரும் ஓடாது கூடாதுஅரோ; சூரியன்***
***தேரும் ஓடாது. மா மாகம் மீ; தேரின். நேர்***
***காரும் ஓடாது; நீள் காலும் ஓடாதுஅரோ.***

***பாரும் ஓடாது*** - *நிலமகளும் (வெப்பம் பொறுக்காது) அந்த நிலத்தை விட்டு ஓடிப் போகநினைத்தாலும் இயலாது;* ***நீடாது எனும்பாலதே*** - *ஏனெனில் இடத்தை விட்டுப் பெயராத தன்மை உடையவளாதலாலே;* ***சூரும் ஓடாது*** - *பாலை நிலத்துகுரிய காளியும் நீங்காள்;* ***கூடாது அரோ*** - *நிலத்தெய்வம் நிலத்தை விட்டு நீங்கமுடியாது;* ***மா மாகம் மீ*** - *அந்நிலத்துக்கு மேலே பெரிய வானத்திலே;* ***சூரியன் தேரும் ஓடாது*** - *பாலையின் வெப்பம் தாங்காது குதிரைகள் சோர்ந்து போவதால் பரிதியின் தேரும் ஓடாது;* ***தேரின் நேர்காரும் ஓடாது*** - *ஆராயின். அந்நிலத்துக்கு நேராக மேகமும் ஓடாது;* ***நீள் காலும் ஓடாது*** - *வீசுகின்ற காற்றும் அங்குச் செல்லாது. 'உம்மை' எல்லாம் எண்ணுப் பொருளன. பார்: நிலமகள். சூர்: கொற்றவை. பாலது: தன்மையது. அரோ இரண்டு அசைகள். மாகம்: வானம். கால்: காற்று. கார்: மேகம் (கருமையினடியாகப் பிறந்தது).*

***348. கண் கிழித்து உமிழ் விடக்***
***கனல் அரா-அரசு கார்***
***விண் விழித்து ஒளிரும் மின்***
***அனைய பல் மணி. வெயில்***
***மண் கிழித்திட எழும் சுடர்கள்.***
***மண்மகள் உடல்***
***புண் கிழித்திட எழும்***
***குருதியே போலுமே.***

***வெயில் மண் கிழித்திட*** - *சூரிய வெப்பம் நிலத்தை வெடிக்கச் செய்வதால்;* ***கண்கிழித்து உமிழ் விடக் கனல்*** - *கண்களைக் கிழித்துக் கொண்டு உமிழ்கிற விட நெருப்பை உடைய;* ***அரா அரசு*** - *பாதாளத்திலுள்ள பாம்பரசனது;* ***பல்மணி. கார்விண் கிழித்து ஒளிரும் மின் அனைய*** - *பல பணாமணிகளிலிருந்தும். கரிய மேகங்களைப் பிளந்து கொண்டு ஒளிவீசும் மின்னலுக்கு ஒப்பாக;* ***எழும் சுடர்கள்*** - *தோன்றுகின்ற மணிகளின் செவ்வொளியானது;* ***மண்மகள் உடல் புண்கிழித்திட*** - *நிலமகளின் உடல் புண்ணைக் கிழித்திட;* ***எ?ழும் குருதி போலுமே*** - *தோன்றுகின்ற ரத்தம் போன்றதாகும்.*

*'கண்விழித்து' என்பதற்கு ஆயிரம்தலைகைள் உடைய அரவரசனுக்கு உரிய இரண்டாயிரம் கண்கைளையும் கிழித்து கொண்டு எனப்பொருள் கொள்க. 'கார் விண்' என்பது 'கிழித்தொளிரும் மின்' என்ற குறிப்பால் மேகம் என்னும் பொருள் பெற்றது. தற்குறிப்பேற்றணி.*

***349. புழுங்கு வெம் பசியொடும் புரளும்பேர் அரா***
***விழுங்கு வந்து எழுந்து எதிர் விரித்த வாயின்வாய்.***
***முழங்கு திண் கரி புகும் முடுகி - மீமிசை***
***வழங்கு வெங் கதிர் சுட. மறைவு தேடியே!***

***புழுங்கு வெம்பசியொடு*** - *புழுக்கத்தைத்தரும் மிக்க பசியுடன்;* ***புரளும் பேரரா*** - *அந்தப் பாலையில் புரண்டுகொண்டிருக்கும் பெரிய பாம்பானது;* ***விழுங்க வந்து எழுந்து*** - *எதிரில் வருபவர்களை விழுங்க;* ***எதிர் விரித்த வாயின்வாய்*** - *விரித்துக் கொண்டிருக்கும் அதன் வாயில்;* ***மீமிசை வழங்கும் வெம்கதிர்சுட*** - *வானத்திலே சூரியன் வழங்கும் வெப்பக் கதிர்கள் சுடுதலால்;* ***மறைவு தேடி*** - *மறைந்து கொள்ளுதற்குரிய நிழல் தேடி;* ***முழங்கு திண்கரி முடுகிப்புகும்*** - *பிளிறும் யானைகள் வேகமாக நுழையும். புழுங்கல்: வெப்பத்தால் புழுங்குதல். அரா: பாம்பு (அரவு). பேரரா: பெரிய பாம்பு. கரி: யானை. மீமிசை: மேலே 'வானம்' என்ற பொருள் தந்து நின்றது.*

***350. ஏக வெங் கனல் அரசிருந்த. காட்டினில்***
***காகமும் கரிகளும் கரிந்து சாம்பின;-***
***மாக வெங்கதிர் எனும் வடவைத் தீச் சுட.***
***மேகமும் கரிந்து இடை வீழ்ந்த போலுமே.***

***ஏக வெம்கனல் அரசிருந்தகாட்டினில்*** - *கொடிய கனலே தனித்தலைவனாக அரசு செலுத்திவரும் பாலைநிலத்திலே;* ***காகமும் கரிகளும் கரிந்து சாம்பின*** - *வானில் பறக்கும் காக்கைகளும் கானில் திரியும் யானைகளும் வெந்து உயிரிழந்து கிடந்தன;* ***மாக வெங்கதிர் எனும்*** - *மிகக் கொடும்கனல் எனக்கூறப்படும்;* ***வடவைத் தீச்சுட*** - *'வடவா முகாக்கினி' நெருப்புச் சுடவே;* ***மேகமும் கரிந்து*** - *வானத்தில் திரியும் மேகங்களும் வெந்து கருகி;* ***இடை வீழ்ந்த போலும்*** - *பாலைநிலத்திடையே வீழ்ந்துள்ளன போல (காணப்படுகின்றன).*

*ஏகம்: ஒன்று. தனிமை. போன்ற பல பொருள் உடைய சொல். கனல்: வெப்பம். அரசிருந்து: ஆட்சிபுரிந்து ''காகமும்'' என்று கூறியதால் விண்ணில் பறக்கும் பறவைக்கூட்டங்களும் 'கரி' என்றதால் மண்ணில்திரியும் விலங்கினங்களும் உபலட்சணத்தால் கொள்ளப்படும். மற்றவைபற்றிக் கூறவேண்டாதாயிற்று. கரிதல்: வெந்துருகிப் போதல். மாகம்: பெருமை! வடவைத்தீ கடல்நடுவே - குதிரை முகவடிவிலே இருக்கும் பெரு நெருப்பு 'ஊழிப்பெருந்தீ' என உரைப்பர். புராண வழக்கு. 'மேகமும்' என்பதிலுள்ள 'உம்மை' தட்பத்தைக் குறிப்பது எனினும் அதனையும் வேகச்செய்வது கனல் என்ற சிறப்பை உணர்த்தும்*

***351 கானகத்து இயங்கிய கழுதின்***
***தேர்க் குலம்.***
***'தான் அகத்து எழுதலால்***
***தலைக்கொண்டு ஓடிப்போய்.***
***மேல் நிமிர்ந்து எழுந்திடில்***
***விசும்பும் வேம்' எனா.***
***வானவர்க்கு இரங்கி. நீர்***
***வளைந்தது ஒத்ததே!***

***கானகத்து இயங்கிய*** - *அந்தக்கொடிய பாலைவனத்திலே விளங்கித் தோன்றிய;* ***கழுதின் தேர்க்குலம்*** - *பேய்த்தேராகிய கானல் நீர்;* ***அகத்து தான் எழுதலால்*** - *அப்பாலை வனத்தகத்து வெம்மை தான் எழுதலாலே;* ***தலைக்கொண்டு ஓடிப்போய்*** - *(அது) மிகுதிப்பட்டு ஓடிச்சென்று;* ***மேல் நிமிர்ந்து எழுந்திடில்*** - *மேலே நிமிர்ந்து எழுந்து விட்டால்;* ***விசும்பு வேம் எனா*** - *ஆகாயம் வெந்து போகும்என நினைத்து;* ***வானவர்க்கு இரங்கி*** - *விண்ணுலகத்தினரான தேவர்களுக்காக இரங்கி;* ***நீர்வளைந்தது ஒத்ததே*** - *நீர்க்கடவுள் (வருணன்) அந்த வெப்பத்தை மேலே செல்லவிடாமல் கீழ்நோக்கிச் செலுத்தியது போன்றது.*

*கான்+அகம்: கானகம் என்ற ஒரு சொல்லாய்க் காட்டை உணர்த்தும். கழுது: பேய். கழுதின் தேர்: பேய்த்தேர் (கானல் நீர்). குலம்: கூட்டம். தலைகொண்டோடுதல்: வரம்பு மீறுதலாம். மேல்: வானம் என்றுமாம்.*

*அப்பாலை நிலம் முழுமையும் காணப்படும் கானல் நீர் மேலெழுந்தால் விண்ணையும் வேகச்செய்யுமே என வானவர்க்கு இரக்கப்பட்டு நீர்க்கடவுள் (வருணன்) பாலை நிலம் முழுமையும் நீரினால் வளைத்துக் கொண்டது போலக் காணப்பட்டது. எ ன்பது கருத்து. இது தற்குறிப்பேற்ற அணியாகும்.*

***352. ஏய்ந்த அக் கனலிடை எழுந்த கானல் - தேர்.***
***காய்ந்த அக் கடு வனம் காக்கும் வேனிலின்***
***வேந்தனுக்கு அரசு வீற்றிருக்கச் செய்தது ஓர்***
***பாய்ந்த பொன் காலுடைப் பளிக்குப் பீடமே!***

***ஏய்ந்த அக்கனலிடை*** *- அப்பாலை வனத்திலே பொருந்திய அந்த நெருப்பு மயமான நிலத்திலே;* ***எழுந்த கானல்தேர்*** *- தோன்றிய பேய்த்தேரின் தோற்றம்;* ***காய்ந்த அக்கடு வனம்*** *- எல்லாம் காய்ந்து போன கடுமை வாய்ந்த அப்பாலைவனத்தை;* ***காக்கும் வேனிலின் வேந்தனுக்கு*** *- ஆட்சிபுரியும் வேனில்காலம் என்னும் அரசனுக்கு;* ***அரச வீற்று இருக்க*** *- திருவோலக்கமா வீற்றிருக்க;* ***செய்தது ஓர்*** *- செய்யப்பட்டதாகிய ஒப்பற்ற ஒரு;* ***பாய்ந்த பொன் கால்உடை*** *- உருக்கிப் பாய்ந்த பொன்னாலான கால்களை உடையதுமான;* ***பளிங்குப் பீடமே*** *- பளிங்கினால் செய்த ஆசனமே போலுமாம்.*

*ஏய்ந்த: பொருந்திய. அக்கடுவனம்: அதிக வெப்பமான பாலைவனம். வேந்து: வேனில் அங்குத் தனியாட்சி புரிவதால் இவ்வாறு கூறினார். பாய்ந்த பொன்: உருக்கிப் பாய்ச்சிய பொன். பீடம்: இருக்கை. அப்பாலைவனத்துப் பேய்த்தேரின் தோற்றம் வேனில் வேந்தன் அங்குத் தனியரசு செய்ய - அவன் அமர்வதற்காக அமைந்த பளிங்குப் பீடம் போன்றிருந்தது என்பது கருத்து.*

***353 தா வரும் இரு வினை செற்று. தள்ள அரும்***
***மூவகைப் பகை அரண் கடந்து. முத்தியில்***
***போவது புரிபவர் மனமும். பொன் விலைப்***
***பாவையர் மனமும். போல் பசையும் அற்றதே!***

***தா வரும் இருவினை செற்று*** *- தாவி வருகின்ற நல்வினை. தீவினையாகிய இரு வினைகளையும் அழித்து;* ***தள்ள அரும் மூவகைப் பகை அரண்கடந்து*** *- தள்ளுதற்கு அரிய மூன்று வகைப்பட்ட உயிர்ப் பகை ஆகிய காவலையும் கடந்து;* ***முத்தியில் போவது புரிபவர்மனமும்*** *- வீடு பேறடைவதற்குரிய காரியங்களையே செய்யும் ஞானிகள் மனமும்;* ***பொன் விலைப் பாவையர் மனமும்*** *- பொன்னுக்குத் தமது மேனியை விலைகூறும் விலை மாதர்களின் மனமும்;* ***போல் பசையும் அற்றதே*** *- (எவ்வாறு பசையற்றிருக்குமோ அதுபோல்) இப்பாலை வனமும் பசையற்றுக் கிடந்தது.*

*தா+வரும்.: தாவிவரும். நல்வினையும் பிறப்புக்குக் காரணம் என்பதால் இருவினையும் 'செற்று' என்றார். மூவகைப் பகையாவது. காமம் வெகுளி மயக்கம் என்னும் மூன்றுமாம். இருவினை செற்று மூவகைப்பகை வென்றவர்களே வீடு பேறடைதற்கு குரியர் என்பதால் 'முத்தியில் போவது புரிபவர்' என்றார். ஞானிகள் பற்றற்றவர்கள். பாவை: உவமை யாகு பெயர். விலை மாதர் பசையற்றவராதல் - தம்மை நாடிவந்தவரிடம் இரக்க மற்றிருத்தலாம். எனவே அப்பாலைநிலம் முத்தியை விரும்பும் ஞானிகளின் மனம் போலவும் பொன் விலைபாவையர் மனம் போலவும் பசையற்றிருந்தது என்பது கருத்து. தா: துன்பமும் ஆம்.*

***354 பொரி பரல் படர்நிலம் பொடிந்து கீழ் உற***
***விரிதலின். பெரு வழி விளங்கித் தோன்றலால்.***
***அரி மணிப் பணத்து அரா - அரசன் நாட்டினும்***
***எரி கதிர்க்கு இனிது புக்கு இயங்கல் ஆயதே!***

***பொரி பரல் படர் நிலம்*** *- சூரிய வெப்பத்தால் பொரிந்துள்ள சிறுகற்கள் எங்கும் விரிந்துகிடக்கும் அந்தப் பாலைவனம்:* ***பொடிந்து கீழ் உற விரிதலின்*** *- பிளவுபட்டு. பாதளத்துக் கீழும் அகழ்ந்து போயிருப்பதால்;* ***பெருவழி விளங்கித் தோன்றலால்*** *- பெருத்த இடைவெளி விளக்கமாகத் தோன்றுவதால்;* ***அரி மணிப்பணத்து அரா அரசன் நாட்டினும்*** *- பொன்னிறமும். மணியையும் உடைய பாம்பரசனது நாடாகிய நாகலோகத்தினும்;* ***எரிகதிர்க்கு இனிதுபுக்கு இயங்கல் ஆயதே*** *- எரிந்து வெப்பம் வீசும் சூரியனுடைய கிரணங்களுக்கும் இதே புகுந்து இயங்கமுடிந்தது.*

*பொரிபரல்: பொரிந்த பரல்கற்கள் (வினைத்தொகை). படர் நிலம்: வினைத் தொகை. பொடிதல்: புழுதியாதல். கீழுறவிரிதல்: கீழ்வரை வெடித்தல். அரிமணி: உயர்ந்த மணியுமாம். பணம்: படம். அரா அரசு: பாம்புகளின் அரசன் (ஆதி சேடன்). எரிகதிர்: வினைத்தொகை. இயங்கல்: சஞ்சரித்தல். ஆயது: ஆகியது.*

*சூரிய வெப்பத்தால் பாலை நிலம் பிளந்து - சூரியனுடைய கதிர்கள் நுழைந்து சஞ்சரிக்கும்படி இருந்தது என்பது கருத்து.*

***355. எரிந்து எழு கொடுஞ் சுரம்***
***இனையது எய்தலும்.***

***அருந் தவன். 'இவர். பெரிது***
***அளவு இல் ஆற்றலைப்***
***பொருந்தினர் ஆயினும்.***
***பூவின் மெல்லியர்;***
***வருந்துவர் சிறிது' என***
***மனத்தின் நோக்கினான்.***

***எரிந்து எழு கொடும்சுரம்*** - *காய்ந்து எழுகின்ற கொடிய பாலை நிலமான;* ***இனையது எய்தலும்*** - *இத்தன்மையான நிலத்தை அடைதலும்;* ***அரும்தவன்*** - *அரியதவத்தை உடைய விசுவாமித்திர முனிவன்;* ***இவர் பெரிது அளவில் ஆற்றலைப் பொருந்தினர் ஆயினும்*** - *இந்த அரச குமாரர்கள் அளவற்ற ஆற்றல் வாய்ந்தவரானாலும்;* ***பூவின் மெல்லியர்*** - *மலரினும் மென்மையான உடலைஉடையவர் ஆதலால்;* ***வருந்துவர் சிறிது என மனத்தின் நோக்கினான்*** - *சிறிதளவேனும் வருந்துவர் என்று. மனத்தில் எண்ணி அவர்களைப் பார்த்தான்.*

*எரிந்து: காய்ந்து. கொடுஞ்சுரம்: கொடுமையான பாலைநிலம். மனத்தின் நோக்கினான்: மனத்தில் ஆழ்ந்து சிந்தித்தான்.*

***356 நோக்கினன் அவன் முகம்; நோக்க. நோக்குடைக்***
***கோக் குமரரும் அடி குறுக. நான்முகன்***
***ஆக்கின விஞ்சைகள் இரண்டும் அவ் வழி***
***ஊக்கினன்; அவை அவர் உள்ளத்து உள்ளினார்.***

***அவர் முகம் நோக்கினன்*** - *(விசுவாமித்திர முனிவன்) அந்த அரசகுமரர்களுடைய முகங்களைப் பார்த்தான்;* ***நோக்க. நோக்குடைக் கோக்குமரரும்*** - *அவ்வாறு பார்க்கவே. அக்குறித்த பார்வையில் நோக்கமுடை அவ்வரச குமாரர்களும்;* ***அடிகுறுக*** - *முனிவரின் பாதங்களை வணங்க;* ***நான்முகன் ஆக்கிய விஞ்சைகள் இரண்டும்*** - *பிரம தேவனால் செய்யப்பட்டுத் தனக்களிக்கப்பட்ட இரண்டு அரிய வித்தைகளை;* ***அவ்வழி ஊக்கினன்*** *-அப்பார்வையின் வழியே அவர்கள் மனத்தில் பதியுமாறு ஊக்குவித்தான்;* ***அவை அவர் உள்ளத்து உள்ளினார்*** - *அவைகளை அக்குமரர் தமது உள்ளத்தில் நினைத்தனர்.*

*நோக்கின் வழி ஊக்கினன் என்பது நயன தீட்சை எனப்படும்.*

*நோக்கு: நோக்கம் 'நோக்குடைக் கோக்குமரர் அடிகுறுக' என்றது. முனிவரது மனக் குறிப்பை உணர்ந்த குமாரர்கள் அவரை அடைந்து அருள் செய்யுமாறு வணங்கி நின்றனர் எனும் கருத்துடையதாகும். நான் முகன் ஆக்கிய விஞ்சைகள் இரண்டு. பலை அதிபலை என்ற மந்திரங்களாகும். இவைகளை முனிவருக்குச் சொன்னது பிரமன் என்பது கம்பர் கருத்து. விஞ்சை: வித்தை. ஊக்குதல்: செலுத்துதல். உள்ளுதல் - நினைத்தல் பூவின் மெல்லியர் வருந்துவர் என நினைத்த முனிவர் இராம இலக்குவர்களைப் பார்க்க. அவர்கள் முனிவனது மனக்கருத்தை அறிந்து அடிகுறுக. நான்முகன் ஆக்கிய விஞ்சைகள் ஊக்கினர். அவற்றை அவர் உள்ளத்து உன்னினர் என்பது கருத்து.*

***357 உள்ளிய காலையின் ஊழித் தீயையும்***
***எள்ளுறு கொழுங் கனல் எரியும் வெஞ் சுரம்.***
***தெள்ளு தண் புனலிடைச் சேறல் ஒத்தது;***
***வள்ளலும் முனிவனை வணங்கிக் கூறுவான்;***

***உள்ளிய காலையின்*** - *அவ்வாறு அவ்விருவரும் அம்மந்திரங்களை எண்ணியபோது;* ***ஊழித் தீயையும் எள்ளுறு*** - *ஊழிக் காலத்துப் பெரு நெருப்பையும் இகழக் கூடியதான;* ***கொழுங்கனல் எரியும் வெஞ்சுரம்*** - *மிகுந்த நெருப்புப் பற்றி எரியும் வெம்மை மிகுந்த அப்பாலைவனம்;* ***தெள்ளு தண்புனலிடைச் சேறல் ஒத்தது*** - *தெளிந்த குளிர்ந்த நீரினிடையே செல்லுதல் ஒத்திருந்தது (அப்போது);* ***வள்ளலும் முனிவனை வணங்கிக் கூறுவான்*** - *இராமபிரானும் அம்முனிவனை வணங்கிக் கூறலுற்றான்.*

*காலை: காலம். ஊழி: யுகமுடிவு. எள்ளுறு இதில் ''உறு'' துணைவினை. கொழுமை+கனல்: கொழுங்கனல்: பண்புத்தொகை. சேறல்: செல்லுதல் தெள்ளுதண்: 'உ' சாரியை புனலிடை: 'இடை' ஏழனுருபு. வெம்மை+சுரம்: வெஞ்சுரம்(பண்புத் தொகை). முனிவர் கற்றுத் தந்த மந்திரங்களை இராம. இலக்குவர் மனத்தில் எண்ணினர். அவ்வாறு எண்ணியபோது. ஊழித்தீயையும் இகழும்படியான மிகுந்த வெம்மையை உடைய அப்பாலைவனம் குளிர்ந்த நீரிலே செல்லுதலைப் போன்ற தாயிற்று என்பது குறிப்பு. ந்திரத்தின் ஆற்றலால் பாலையின் கொடுமை தோன்றவில்லை என்பது கருத்து.*

***358 'சுழி படு கங்கைஅம் தொங்கல் மோலியான்***
***விழி பட வெந்ததோ? வேறுதான் உண்டோ?***
***பழி படர் மன்னவன் பரித்த நாட்டினூங்கு***
***அழிவது என்? காரணம். அறிஞ! கூறு' என்றான்.***

***சுழிபடுகங்கை அம்தொங்கல் மோலியான்*** - *சுழித்து வரும் நீர்ப் பெருக்கை உடைய கங்கையும். கொன்றை மாலையும் அணிந்த முடியை உடைய சிவபிரானது;* ***விழிபட வெந்ததோ*** - *நெற்றிக்கண் பட்டு இப்படி வெந்துபோனதோ?;* ***;*** ***வேறு தான் உண்டோ*** - *அல்லது வேறு காரணம் ஏதேனும் உண்டோ?;* ***பழிபடா மன்னவன் -*** *பழிச்சொல் படாத மன்னனாகிய எம் தந்தை;* ***பரித்த நாட்டின் ஊங்கு -*** *நல்லாட்சி செய்யும் நாட்டிலும் இவ்விடம்;* ***அழிவதென் காரணம் -*** *இப்படி அழிந்து போதல் என்ன காரணமோ?;* ***அறிஞ! கூறு என்றான் -*** *யாவுமறிந்த பெரியோய்! சொல்லுக என்றான். அழி: பகுதித் தொழிற்பெயர். தொங்கல்: மாலை (தொங்குமாறணிவது). மோலி: மகுடம் (இங்குச் சடைமுடி). ''விழிபட வெந்ததோ? வேறுதானுண்டோ?'' என்றது ஐயவணி. பழிபடா: பழிக்காளாகாத. அறிஞ: அண்மைவிளி. ஊங்கு: முன்புள்ள இடத்தை உணர்த்தும். 'உப்பக்கம்' என்பர் வள்ளுவர். அது போன்றது என்க. 'விழிஎனக் கூறினும் இங்கு நெற்றிக்கண்ணை உணர்த்தும். தீக்கண் அதுதானே!*

***359 என்றலும். இராமனை நோக்கி.***
***'இன் உயிர்***
***கொன்று உழல் வாழ்க்கையள்.***
***கூற்றின் தோற்றத்தள்.***
***அன்றியும் ஐ-இருநூறு***
***மையல் மா***
***ஒன்றிய வலியினள்.***
***உறுதி கேள்' எனா.***

***என்றலும் இராமனை நோக்கி*** - *என்று சொன்னதும். இராமனைப் பார்த்து (விசுவாமித்திரன்);* ***இன்உயிர் கொன்று உழல்வாழ்க்கையள்*** - *இனிய உயிர்களை எல்லாம் கொன்று திரியும் வாழ்க்கை உடையவளும்;* ***கூற்றின் தோற்றத்தள்*** - *எமனைப் போன்ற தோற்றம் உடையவளும்;* ***அன்றியும் ஐ இருநூறுமையல்மா*** - *ஆயிரம் மதயானைகளுக்கு ஒப்பான.;* ***ஒன்றிய வலியினள்*** - *பொருந்திய வலிமை உடையவளுமான;* ***உறுதி கேள் எனா*** - *(ஒருத்தி) செய்தியைக் கேட்பாயாக என்று.*

*இன்னுயிர்: இனிய உயிர். அவராவார்: முனிவர் முதலானோர். உழல் வாழ்க்கை வினைத்தொகை (திரிகின்ற வாழ்க்கை). கூற்று: எமன். தோற்றத்தள்: தோற்றம் உடையவள். ஐ இரு நூறு: ஆயிரம். மையல்: வலிமை. மா: மிருகம் (யானை). ஒன்றிய: பொருந்திய. உறுதி: செயல். எனா: என்று செயா என்ற வாய்பாட்டு வினையெச்சம். இதுமுதல் ஏழுபாடல்கள் தாடகையின் வரலாறு கூறுவனவாம். 'பழிபடா மன்னவன் பரித்த நாட்டின் ஊங்கு அழிவதென் எனக்கேட்ட இராமனுக்கு அழிவுக்குக் காரணமான தாடகையைப் பற்றிக் கூறுவனவாம்.*

***360. 'மண் உருத்து எடுப்பினும்.***
***கடலை வாரினும்.***
***விண் உருத்து இடிப்பினும்.***
***வேண்டின். செயகிற்பாள்;***
***எண் உருத் தெரிவு அரும்***
***பாவம் ஈண்டி. ஓர்***
***பெண் உருக் கொண்டெனத்***
***திரியும் பெற்றியாள்;***

***உருத்து மண் எடுப்பினும்*** - *கோபித்து. இந்தப் பூமியை எடுப்பதாயினும்;* ***கடலை வாரினும்*** - *கடல்நீரையெல்லாம் அள்ளுவதானாலும்;* ***உருத்து விண் இடிப்பினும்*** - *கோபம்கொண்டு மேகத்தை இடிப்பதானாலும்;* ***வேண்டின் செய்கிற்பாள்*** - *அவள் விரும்பினால் செய்ய வல்லவளாவாள்;* ***எண் உரு தெரி வரும்*** - *எண்ணத்தினால் செய்யப்படும் நுண்மையான பாவமும் (உடலால்) செய்யப்படும் பருமையான பாவமும் உருவம் கொண்டு;* ***பாவம் ஈண்டி*** - *ஒரு சேரச் சேர்ந்து;* ***ஓர்பெண் உருக்கொண்டு என*** - *ஒரு பெண்வடிவைக் கொண்டது என்னும்படி;* ***திரியும் பெற்றியார்*** - *இங்குத் திரிகின்ற தன்மை உடையவள்.*

*'மண்' சினையாகு பெயராய்ப் பூமியை உணர்த்தும். உருத்தல்: சினத்தல். வாரினும்: வாருதல் (அள்ளுதலுமாம்). விண்: வானம்: இங்கு மேகத்தை உணர்த்தும். நுண்மையான பாவம் பருமையான பாவம் என்பன கண்ணால் காண முடியாதது. பெற்றி: தன்மை. பூமியை எடுக்கவும். கடல் நீரை அள்ளவும். மேகத்தை இடிக்கவும் செய்யவல்லவள். பாவமெல்லாம் திரண்டு ஒரு பெண் வடிவம் கொண்டது போன்ற தன்மையள் என்பது கருத்து.*

***361** 'பெரு வரை இரண்டொடும். பிறந்த நஞ்சொடும்.*
***உரும் உறழ் முழக்கொடும். ஊழித் தீயொடும்.***
***இரு பிறை செறிந்து எழும் கடல் உண்டாம்எனின்.***
***வெருவரு தோற்றத்தள் மேனி மானுமே:***

**பெரு வரை இரண்டொடும்** - *பெரியமலைகள் இரண்டுடனும்;* **பிறந்த நஞ்சொடும்** - *தன்னிடம் தோன்றிய நஞ்சுடனும்;* **உரும் உறழ் முழக்கொடும்** - *இடிக்கு ஒப்பான முழக்கத்துடனும்;* **ஊழித் தீயொடும்** - *ஊழிக் காலத்துப் பெரு நெருப்புடனும்;* **இரு பிறை செறிந்து** - *இரண்டு பிறைச் சந்திரர்கள் சேர்ந்து;* **எழுகடல் உண்டாம் எனின்** - *எழுகின்ற கடல் ஒன்று உண்டென்றால் அது;* **வெருவரு தோற்றத்தள் மேனிமானும்** - *யாவரும் அஞ்சத்தக்க தோற்றத்தை உடைய அவளது உடலை ஒத்ததாகும்.*

*பெருவரை: பெரியமலை. கொங்கைகள் இரண்டும் மலைகள் கண்கள் இரண்டும். நஞ்சு: பெருங்குரல். இடிமுழக்கம். கூந்தல்: ஊழித்தீ. கோரைப்பற்கள். பிறைச் சந்திரன் இவையெல்லாம் உடைய கடல் ஒன்று உண்டெனில் இவள் உடலுக்கு ஒக்கும் எனக் கூறியது இல்பொருள் உவமை யணியாம். மானும்: ஒத்திருக்கும்.*

***362** 'சூடக அரவு உறழ் சூலக் கையினள்;*
***காடு உறை வாழ்க்கையள்; கண்ணின் காண்பரேல்.***
***ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்!-***
***''தாடகை'' என்பது அச் சழக்கி நாமமே;****

**ஆடவர் கண்ணில் காண்பரேல் பெண்மையை அவாவும் தோளினாய்** - *ஆண்களும் உன்னைக் காண்பாராயின் பெண்தன்மையை விரும்பத் தகுந்த தோளாற்றலுடையவனே;* **சூடகம் அரவு உறழ் சூலம் கையினள்** - *கையணியாகப் பாம்புகளை உடையவள் சூலம் உடையவள்;* **காடு உறை வாழ்க்கையள்** - *இவ்வனத்தில் வாழும் வாழ்க்கை உடையவள்;* **அச் சழக்கி நாமம் தாடகை என்பது** - *இத்தகைய இக்கொடியவளது பெயர் தாடகை என்பதாம்.*

*சூடகம்: கையில் அணியும்அணி (வளையல்). அரவு: பாம்பு. சூடகமாக அரவுறழ் கை: சூலக்கை எனக்கூட்டி உரை காண்பர் கையணியாக நாகங்களை அணிந்திருக்கிறாள். சூலம் ஏந்தியிருக்கிறாள் என்பது பொருள். உறை வாழ்க்கை: வினைத்தொகை. ராமனது தோளாற்றல் கண்ட ஆண்களும். பெண்மையை அவாவுவர் என்றார். அவாவுதல்: விரும்புதல். சழக்கி: கொடியவள். நாமம்: பெயர். கண்டார் விரும்பும் தோளாற்றல் உடையவன் என்பதால் உலகுயிர்கள். ஆண். பெண் அடங்க அனைத்தும் பெண் தன்மையே என்பதும் கருத்தாம்.*

***363. 'உளப் பரும் பிணிப்பு அறா உலோபம் ஒன்றுமே***
***அளப்ப அருங் குணங்களை அழிக்குமாறுபோல்.***
***கிளப்ப அருங் கொடுமையை அரக்கி கேடு இலா***
***வளப் பரு மருத வைப்பு அழித்து மாற்றினாள்;***

**உளம் பரும் பிணிப்பு அறா** - *உள்ளத்தில் பருத்த பிணிப்பு நீங்காத;* **உலோபம் ஒன்றுமே** - *உலோபகுணம் ஒன்று மட்டுமே;* **அளப்ப அரும் குணங்களை** - *அளப்பதற்கரியபல நற்குணங்களை எல்லாம்;* **அழிக்கும் ஆறுபோல்** - *அழிக்கின்ற தன்மையைப் போல;* **கிளப்ப அரும் கொடுமைய அரக்கி** - *சொல்ல முடியாத கொடுமைகளை உடைய இந்த அரக்கி;* **கேடு இலா வளம் பரும் மருதவைப்பு** - *கேடே இல்லாத வளம் நிறைந்த இந்த மருத நிலத்தை எல்லாம்;* **அழித்து மாற்றினாள்** - *கொன்று. தின்று பாலைநிலமாக மாற்றிவிட்டாள்.*

*உளம்+பரும்+பிணிப்பு+அறா: உளப்பரும் பிணிப்பறா; உள்ளத்தின் பெரிய பிணிப்பு நீங்காத. உலோபம்: ஈகையற்ற தன்மை. குணம். குலம். கல்வி. கேள்வி. அறிவு. ஆற்றல் ஆகியபல நல்ல குணங்களை உடையவராயினும் உலோபம் என்ற ஒன்று இருந்தால் அந்த நல்ல குணங்களை அழித்துவிடும். அது போல வளம்மிக்க மருதநிலத்தை அழித்துப் பாலைநிலமாக்கி விட்டாள். அத்தகைய கொடிய அரக்கி இவள் என்றான். விசுவாமித்திரமுனிவன் என்பது பொருள். முதல் இரண்டடிகள் உவமையணியாகும்.*

***364. 'இலங்கை அரசன் பணி***
***அமைந்து. ஓர் இடையூறா.***
***விலங்கல் வலிகொண்டு. எனது வேள்வி***
***நலிகின்றாள்;-***
***அலங்கல் முகிலே! - அவள்***
***இ(வ்) அங்க நிலம் எங்கும்***
***குலங்களொடு அடங்க நனி கொன்று***
***திரிகின்றாள்;***

***இலங்கை அரசன் பணி அமைந்து*** - *இலங்கை வேந்தனான இராவணனுடைய கட்டளையை மேற்கொண்டு;* ***விலங்கல் வலிகொண்டு*** - *மிருக பலம் கொண்டவளாய் (எனக்கு);* ***ஓர் இடையூறாய்*** - *ஒரே இடையூறாக இருந்து கொண்டு;* ***எனது வேள்வி நலிகின்றாள்*** - *(அரக்கர்கள்) எனது வேள்வியை (நிறைவேறவிடாமல்) துன்புறுத்துகின்றாள்;* ***அலங்கல் முகிலே*** - *மாலையணிந்த மேகம் போன்றவனே!;* ***அவள் இவ்வங்க நிலம் எங்கும்*** - *அவ்வரக்கி. இந்த அங்க நாட்டில் வாழ்பவர்களை எல்லாம்;* ***குலங்களொடு அடங்க*** - *அவர்களது குலத்தோடு முழுதும்;* ***நனிகொன்று திரிகின்றாள்*** - *மிகவும் அழித்துக் கொன்று திரிந்து கொண்டிருக்கிறாள்;* ***பணி*** - *கட்டளை (வேலையுமாம்).*

*பணி: கட்டளை (வேலையுமாம்). வலி: மிருகபலம் (மூர்க்கத்தனமான வலிமை). நலிதல்: வருத்துல் அலங்கல்: மாலை. முகில்: மேகம். இந்தப் பகுதியெல்லாம்: அங்கநாடு. இங்கு வாழ்பவர்களை எல்லாம் இந்த அரக்கி குலத்தோடு கொன்று தின்று திரிகிறாள். இராவணனது கட்டளைப்படி அரக்கர்கள் எனது வேள்விக்கு இடையூறு செய்து துன்புறுத்துகின்றனர் என்றான். முனிவன் என்பது கருத்து.*

***365 ‘முன் உலகு அளித்து முறை நின்ற உயிர் எல்லாம்***
***தன் உணவு எனக் கருது தன்மையினள்; மைந்த!***
***என் இனி உணர்த்துவது? இனிச் சிறிது நாளில்***
***மன்னுயிர் அனைத்தையும் வயிற்றின் இடும்’ என்றான்***

***முன் உலகளித்து*** - *முற்பட உலகத்துயிர்களை யெல்லாம் காத்து;* ***முறை நின்ற உயிரெல்லாம்*** - *(அவ்வாறு காக்கப்பட்டதால்) முறையே நிலைத்து நின்ற உயிர்களை எல்லாம்;* ***தன் உணவு எனக்கருது*** - *தனது உணவு பொருள் போலவே என்னும்;* ***?தன்மையவள் மைந்தா*** - *தன்மையுடையவள். தயரதனது மைந்தனே!;* ***என் இனி உணர்த்துவது*** - *இனிச் சொல்லவேண்டியதென்ன உண்டு;* ***இனிச்சிறிது நாளில்*** - *இன்னும் சில நாட்களிலே;* ***மன்னுயிர் அனைத்தையும்*** - *நிலைபெற்ற உயிர்களை எல்லாம்;* ***வயிற்றின் இடும் என்றான்*** - *வயிற்றிலே போட்டுக்கொள்வாள் என்றான்.*

*தயரதன். மன்னுயிர். தன்னுயிர் எனக்கருதுபவன். தாடகையோ மன்னுயிர் கொன்று திரிபவள் எனத் தாடகையின் கொடுமையைத் தயரதனுடைய பெருமையைக் கூறியுணர்த்துவதாக அமைந்திருப்பது சிறப்பு.*

*உலகளித்தல்: பரிபாலித்தல் மன்: பெருமை.*

***366. அங்கு. இறைவன் அப் பரிசு***
***உரைப்ப. அது கேளா.***
***கொங்கு உறை நறைக் குல***
***மலர்க் குழல் துளக்கா.***
***'எங்கு உறைவது. இத் தொழில்***
***இயற்றுபவள்?' என்றான் -***
***சங்கு உறை கரத்து ஒரு தனிச்***
***சிலை தரித்தான்.***

***அங்கு இறைவன் அப்பரிசு உரைப்ப*** - *அங்கு ஆசிரியனாகிய தவ முனிவன் அத்தன்மையைக்கூற;* ***அது கேளா*** - *அதனைக்கேட்டு;* ***சங்கு உரை கரத்து ஒரு தனிச்சிலைதரித்தான்*** - *சங்கிருக்கும் கையில் ஒப்பற்ற வில்லைப் பிடித்திருக்கும் ராமபிரான்;* ***கொங்கு உறை நறைக் குலமலர்*** - *மணம் பொருந்திய தேன்மிகுந்த மலர்களை அணிந்துள்ள;* ***குழல் துளக்கா*** - *தலையை அசைத்து;* ***இத்தொழில் இயற்றுபவள்*** - *இத்தகைய கொலைத்தொழில் புரியும் அக்கொடிய அரக்கி;* ***எங்கு உறைவது என்றான்*** - *வாழ்வது எங்கே என்று கேட்டான்.*

*இறைவன்: ஆசிரியன் (இங்கு விசுவாமித்திரன்). பரிசு: தன்மை. கேளா: கேட்டு (செயா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்). கொங்கு: தேன். நறை: மணம். குழல்: கூந்தல் (இங்குத் தலையை உணர்த்துகின்றது). துளக்கா: துளக்கி (செயா என்ற வாய்பாட்டு வினையெச்சம்).' எங்குறைவது இத்தொழில் இயற்றுபவள்' என்பது வழுவமைதி. ''சங்கு உறை கரத்து ஒரு தனிச்சிலைதரித்தான்'' இடக்கையில் சங்கைப் பிடித்தவன் அதில் வில்லைத் தரித்திருக்கிறான் எனவும். சங்கை மறைத்து வில்லைப் பிடித்துள்ளான் எனவும் சங்கு ரேகையுடைய கையில் அதன் பயனாக வில்லைத் தரித்தான் எனவும் பொருள் கூறுவர். சிலை: வில். தரித்தல்: பிடித்தல்.*

***367 கைவரை எனத் தகைய***
***காளை உரை கேளா.***
***ஐவரை அகத்திடை அடைத்த***
***முனி. 'ஐய!***
***இவ் வரை இருப்பது அவள்'***
***என்பதனின் முன்பு. ஓர்***
***மை வரை நெருப்பு எரிய***
***வந்ததென. வந்தாள்.***

***கைவரை எனத்தகையகாளை*** - துதிக்கையையுடைய மலையை ஒத்ததான யானை போன்றவனும். காளையை ஒத்தவனுமாகிய இராமன்; **உரைகேளா** - உரையைக் கேட்டு; ***ஐவரை அகத்திடை அடைத்தமுனி*** - இந்திரியங்கள் ஐந்தினையும் மனத்தில் அடக்கியமுனிவன்; ***ஐய! அவள் இருப்பது இவ்வரை*** - இராம அந்தத் தாடகை இருப்பது இந்த மலைதான்; ***என்பதனின் முன்பு*** - என்று சுட்டிப் காட்டுவதற்கு முன்பாக; ***ஓர்மைவரை நெருப்பு எரிய*** - ஒரு கரியமலை. உச்சியில் நெருப்பு எரிந்து கொண்டிருக்க; ***வந்தது என வந்தாள்*** - எதிரில் வந்தது போலத் தாடகை எதிரே வந்தாள்.

*கைவரை: கையையுடைய மலை (அதாவது யானை). உவமை ஆகுபெயராய் ராமனை உணர்த்தும். ராமனுக்குக் காளை உவமையாம். உரை: முதனிலைத் தொழிற்பெயர். கேளா: செயா என்ற வாய்பாட்டு வினையெச்சம். ஐவர்: ஐந்து இந்திரியங்கள். அர்: சிறப்பு விகுதி. அகம்: மனம். 'ஓர் மைவரை நெருப்பு எரிய வந்தது' என்பது உருவகம். மை:கருமை. இத்தொழில் இயற்றுபவள் எங்கு உறைவது எனக்கேட்ட இராமபிரானுக்கு 'அவள் இருப்பது இவ்வரை' என முனிவன் கூறுவதற்கு முன் தாடகை எதிரே வந்தாள் என்பது பொருள்.*

***368. சிலம்புகள் சிலம்பிடை செறித்த கழலோடும்***
***நிலம் புக மிதித்தனள்; நெளித்த குழி வேலைச்***
***சலம் புக. அனல் தறுகண் அந்தகனும் அஞ்சிப்***
***பிலம் புக. நிலக் கிரிகள் பின் தொடர. வந்தாள்.***

***சிலம்புகள் சிலம்பிடை செறித்த கழலோடும்*** - கால்களில் அணிந்த சிலம்புகளுக்கிடையே மலைகளைச் செறியும்படி வைத்த கால்களோடும்.; ***நிலம்புக மிதித்தனள்*** - நிலம் கீழே புகும்படி மிதித்தாள்; **நெளித்த குழி வேலைச்சலம் புக** - அதனால் நெளியப்பெற்ற குழியில் கடல் நீர்புகவும்; ***அனல்தறுகண் அந்தகனும்*** - நெருப்பென விழிக்கும் வலிமைமிக்க எமனும்; ***அஞ்சிப் பிலம்புக*** - பயந்து. குகையில் புகுந்து ஒளியவும்; ***நிலக்கிரிகள் பின்தொடர வந்தாள்*** - நிலத்திலுள்ள மலைகளெல்லாம் பின்னே தொடர்ந்து வரவும் தாடகை வந்தாள்.

*சிலம்புகள்: மலைகள். சிலம்பு; பாதச் சிலம்பு. செறித்த; அமைத்த; மலைகளைப் பதித்துச் செய்த காற்சிலம்புகளை அணிந்திருக்கிறாள் என்பது கருத்து. கழல்: பாதம். நெளித்து: நெளியச் செய்த (பிறவினை). அந்தகன்: எமன். பிலம்: குகை. பாதத்தாலம் நிலம் கீழே செல்ல மிதித்தாள். அதனால் உண்டான குழியில் கடல் நீர்வந்து புகுந்தது. எமனும் அவளைக் கண்டு அஞ்சியோடி குகையில் சென்று ஒளியலானான். நிலத்திலுள்ள மலைகளெல்லாம் தன்னைப் பின் தொடர்ந்துவர. அவ்வரக்கி வந்தாள் என்பதாம். சலம்: நீர். தறுகண்: வலிமை. தாடகையின் வருகையையும். அவளது தோற்றத்தையும் இவ்வாறு புனைந்து கூறுகிறார்.*

***369. இறைக்கடை துடித்த புருவத்தள்.***
***எயிறு என்னும்***
***பிறைக் கடை பிறக்கிட மடித்த***
***பில வாயள்.***

***மறைக் கடை அரக்கி. வடவைக் கனல்***
***இரண்டு ஆய்***
***நிறைக் கடல் முளைத்தென.***
***நெருப்பு எழ விழித்தாள்.***

***இறை. கடைதுடித்த புருவத்தள்*** *- சிறிது கடைப்பாகம் துடிக்கின்ற புருவத்தை உடையவளும்;* ***எயிறு என்னும் பிறை கடை பிறக்கிட*** *- பற்கள் என்னும் சந்திரப் பிறைகள் கடைப்பகுதி விளக்கமுறும்படி;* ***மடித்த பிலவாயள்*** *- மடித்துக் கொண்ட. குகை போன்ற வாயை உடையவளுமான;* ***மறைக் கடை அரக்கி*** *- மறை நெறியின் வரம்பு கடந்த அரக்கியான அந்தத் தாடகை;* ***வடவைக்கனல் இரண்டாய்*** *- வடவைத் தீ இரண்டு கூறாகி;* ***நிறைக்கடல் முளைத்தென*** *- நீர் நிறைந்த கடலில் முளைத்தது என்று கூறும்படி வந்து;* ***நெருப்பு எழ விழித்தாள்*** *- கண்களில் நெருப்பு எழும்படி விழித்துப் பார்த்தாள்.*

*பிறக்கிட: பிறவினை. எயிறு: பற்கள். மறை நெறி கடந்தவள் என்பதால் ‘மறைக் கடையரக்கி’ என்றார். ‘நிறைக்கடல்’ தாடகையின் உடலுக்கும். ‘வடவைக் கனல் இரண்டு’. அவளது கண்களுக்கும் உவமையாயின. சினத்தால் புருவங்களின் கடைதுடிக்க. பற்கள் என்னும் பிறைமதி பிறங்க. மடித்த குகை போன்ற வாயை உடையவளாய் - வடவைத்தீ இருகூறாகிக் கடலில் தோன்றியது போன்ற கண்களை உடையவளாய் நெருப்பெழ விழித்தாள் என்பது பொருள். இல்பொருள் உவமை (வடவைக் கடல் இரண்டு).*

***370 கடம் கலுழ் தடங் களிறு***
***கையொடு கை தெற்றா.***
***வடம் கொள. நுடங்கும் இடையாள்.***
***மறுகி வானோர்***
***இடங்களும். நெடுந் திசையும்.***
***ஏழ் உலகும். யாவும்.***
***அடங்கலும் நடுங்க. உரும் அஞ்ச.***
***நனி ஆர்த்தாள்***

***கடம் கலுழ் தடங்களிறு*** - *மதம் பொழிகின்ற பெரிய யானைகளை;* ***கையொடு கை தெற்றா*** - *ஒன்றன் துதிக்கை யோடு. மற்றொன்றன் துதிக் கையை முடித்து;* ***வடம் கொள*** - *மாலையாக அணிந்து கொண்டு இருப்பதால்;* ***நுடங்கும் இடையாள்*** - *அசைகின்ற இடையை உடையவளான அந்த அரக்கி;* ***வானோர் இடங்களும்*** - *விண்ணோர் வாழும் இடங்களும்;* ***நெடும்திசையும் ஏழுலகும்*** - *நெடிய திசைகளும். ஏழு உலகங்களும்;* ***யாவும் அடங்கலும் நடுங்க*** - *ஆகிய அனைத்தும் மற்றும் உயிர்கள் முழுதும் மயங்கி நடுங்கவும்;* ***உரும் அஞ்சநனி ஆர்த்தாள்*** - *இடியும் அஞ்சவும் மிகவும் ஆர்ப்பரித்தாள். கலுழ் களிறு: வினைத்தொகை. தெற்றா; தெற்றி. தெற்றா: செய்யா என்ற வாய்பாட்டு வினையெச்சம். நுடங்குதல்: அசைதல். மறுகி: கலங்கி. அடங்கலும்: முழுவதும். நனி: மிக. நனி: உரிச்சொல். மதம் பொழியும் யானைகளை ஒன்றன் துதிக்கையை மற்றொன்றன் துதிக்கையொடு முடிந்து தனது கழுத்தில் மாலையாக அணிந்திருக்கிறாள். இடை நுடங்க நடந்து வருகிறாள். வானுலகங்களும் திசைகளும் ஏழுலகங்களும் மற்ற யாவும் நடுங்க: இடியும் அஞ்சப் பெரு முழக்கம் செய்தாள் என்பது கருத்து. ஆர்த்தல்: முழங்குதல்.*

*371.* ***ஆர்த்து. அவரை நோக்கி***
***நகைசெய்து. எவரும் அஞ்ச.***
***கூர்த்த நுதி முத் தலை***
***அயில் கொடிய கூற்றைப்***
***பார்த்து. எயிறு தின்று***
***பகு வாய்முழை திறந்து. ஓர்***
***வார்த்தை உரைசெய்தனள் - இடிக்கும்***
***மழை அன்னாள்***

***இடிக்கும் மழை அன்னாள்*** - *இடிக்கின்ற மேகத்தைப் போன்றவளான அந்தத் தாடகை என்னும் அரக்கி;* ***ஆர்த்து அவரை நோக்கி*** - *முழக்கமிட்டு. அம்மூவரையும் பார்த்து;* ***நைசெய்து எவரும் அஞ்ச*** - *கோபச்சிரிப்புச் சிரித்து எவரும் அஞ்சும்படி;* ***கூர்த்த நுதி முத்தலை அயில் கொடிய கூற்றைப் பார்த்து*** - *கூர்மையான முனையை உடைய மூன்று கவடாக உள்ள தனது சூலமான கொடிய எமனைப் பார்த்துப் பின்;* ***எயிறுதின்று பகுவாய் முழைதிறந்து*** - *தனது பற்களைக் கடித்துக் கொண்டு வாயாகிய குகையைத் திறந்து;* ***ஓர் வார்த்தை உரை செய்தனள்*** - *ஒரு வார்த்தை சொல்லலானாள்.*

*ஆர்த்து: முழக்கமிட்டு. கூர்த்த: கூர்மைசெய்யப்பட்ட. நுதி: முனை. முத்தலை அயில்: முக்கவட்டுக் சூலம். 'கொடிய கூற்று' சூலத்தைக் கூற்றுவனாக உருவகித்தார். பார்த்து: ஒரு முறை பார்த்துக் கொண்டு என்பது பொருள். பகுவாய்: பெரியவாய். வாய்முழை: உருவகம் 'அயில்' என்பதற்கு வேல் என்பது பொருள் ஆயினும் 'முத்தலை அயில்' என்றதால் முக்கவட்டுச் சூலம் எனப்பொருள் கொள்ளப்பட்டது. 'எவரும் அஞ்ச' இராமபிரானைத் தவிர மற்றைய எல்லோரும் அஞ்ச என்பது பொருள். ஒரு வார்த்தை: ஒரு சொல். 33*

*372.* ***'கடக்க அரும் வலத்து எனது காவல் இது; யாவும்***
***கெட கருவறுத்தனென்; இனி. ''சுவை கிடக்கும்***
***விடக்கு அரிது' எனக் கருதியோ? விதிகொடு உந்த.***
***படக் கருதியோ? - பகர்மின். வந்த பரிசு!'' என்றே.***

***கடக்க அறும் வலத்து எனது காவல் இது*** - *வெல்லுதற் கரிய வலிமை உடைய என்னுடைய ஆட்சிக்கு உட்பட்டது இது;* ***யாவும் கெட கரு அறுத்தனென்*** - *இங்குள்ள எல்லாம் கெடும்படி கரு வறுத்துவிட்டேன்;* ***இனி சுவை கிடக்கும் விடக்கு அரிது எனக்கருதியோ*** - *இனிமேல் எனக்குச் சுவைமிக்க ஊன் கிடைப்பது அரியது என்று எண்ணியோ (அல்லது);* ***விதிகொடு உந்த படக் கருதியோ*** - *விதி தனது வலிமைகொண்டு தள்ள நீங்கள் அழிந்து போக நினைத்தோ;* ***வந்த பரிசு பகர்மின் என்றே*** - *இங்குவந்த தன்மையைச் சொல்லுங்கள் எனச் சொல்லி.*

*''என்றே. ஒரு வார்த்தை உரை செய்தனள்'' எனக் கூட்டிப் பொருள் கூறினும் பொருந்தும். கடக்க+அரும்: கடக்கரும் 'அகரம் தொக்கது வலத்த (வலம்+அத்து+அ) பெயரெச்சம். காவல்: தொழிற்பெயர். கரு அறுத்தல்: இளமையிலேயே அழித்துவிடல் விடக்கு: ஊன் 'கொண்டு' என்பது இடைக் குறையாய் 'கொடு' என நின்றது. பட: அழிய பகர்மின்: ஏவற்பன்மை பரிசு: விதம் எவராலும் வெல்ல முடியாதவள்யான். எனது காவலுக்குரிய இந்த நிலத்திலே உள்ளதெல்லாம் அழியும்படி கருவறுத்துவிட்டேன். எனக்குத் தின்ன ஊன் கிடையாதென்றெண்ணி. உணவாக வந்தீர்களோ. விதி உந்த அழிய வந்தீர்களோ? கூறுங்கள் என்றாள் என்பது பொருள்.*

*373* ***மேகம்அவை இற்று உக***
***விழித்தனள்; புழுங்கா.***
***மாக வரை இற்று உக உதைத்தனள்;***
***மதித் திண்***
***பாகம் எனும் முற்று எயிறு***
***அதுக்கி. அயில் பற்றா.***
***'ஆகம் உற உய்த்து. எறிவென்' என்று.***
***எதிர் அழன்றான்.***

***மேகம் அவை அற்று உகவிழித்தனள்*** - *மேகங்கள் தொடக்கற்று உதிரும்படி பார்த்தவளாகி;* ***புழுங்கா*** - *மனப்புழுக்கத்தை அடைந்து;* ***மாகவரை அற்று உக உதைத்தனள்*** - *தான் வரும் அப்பெரிய மலையும் அற்றுப் போய் உதிருமாறு உதைத்தவளாகிய தாடகை;* ***மதித்திண் பாகம் எனும்முற்று எயிறு அதுக்கி*** - *சந்திரனது வலிமைமிக்க ஒரு பாகம் என்று சொல்லத்தக்க முதிர்ந்த பற்களை அதுக்கி;* ***அயில்பற்றா ஆகம் உற உய்த்து எறிவென்*** - *தனது சூலத்தைப் பற்றிக் கொண்டு. உங்கள் உடலில் பொருந்துமாறு இதை எறிவேன்;* ***என்று எதிர் அழன்றான்*** - *என்று சொல்லி. எதிரே நின்று சினம் கொண்டு சீறினாள்.*

*மேகம் அவை: மேகங்கள் என்று சொல்லப்படும் அவை. புழுங்கா: செயா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். 'பற்றா' என்பதும் அது. பாகம்: பிரிவு முற்று எயிறு: முதிர்ந்தபல் உய்த்தல்: அழல்தல்: சினத்தல். தாடகையின் பற்களை 'மதித்திண் பாகம் எனும் எயிறு' என்றார் 'சந்திரனது திண்ணிய ஒரு பகுதியோ என்று நினைக்கும்படியான பற்கள்' என்பது பொருள் உய்த்து: செலுத்தி என்பது பொருள். ஆகம்: மார்பு ஆகம் உறு: மார்பில் பொருந்தும்படி வீசுவேன் என்றாள் என்பது பொருளாகும்.*

***374.*** **அண்ணல் முனிவற்கு அது
கருத்துஎனினும். 'ஆவி
உண்' என. வடிக் கணை
தொடுக்கிலன்; உயிர்க்கே
துண்ணெனும் வினைத்தொழில்
தொடங்கியுளளேனும்.
'பெண்' என மனத்திடை
பெருந்தகை நினைந்தான்.**

**அண்ணல் முனிவற்கு** - *பெருமை பொருந்திய விசுவாமித்திர முனிவனுக்கு;* **அது கருத்து எனினும்** - *அந்த அரக்கியை. கொல்வது தான் கருத்து என்றாலும்;* **ஆவி உண் எனவடிக்கணை தொடுக்கிலன்** - *அவள் உயிரை உண்டுவா வென்று கூரிய அம்பை ராமன் விடவில்லை;* **உயிர்க்கே துண் எனும்** - *உயிர்களெல்லாம் நடுங்கி அஞ்சுமாறு வினைத்தொழில் தொடங்கி* **உள்ளேனும்** - *கெட்ட செயலைத் தொடங்கியுள்ளாள் என்றாலும்;* **பெருந்தகை. பெண் என மனத்திடை நினைந்தான்** - *பெருந்தைமை உடைய இராமன் அவள் பெண் ஆயிற்றே என்று மனத்தில் எண்ணலாயினான்.*

*அண்ணல்: வெருமையுடையவன். அது: தாடகையைக் கொல்வது. துண்; நடுக்கம். பெருந்தகை: இராமன் (அன்மொழித் தொகை). பெண்கொலை என்பதால் - முனிவன் விரும்பினாலும் பெருந்தகையான இராமன் விரும்பவில்லை என்பதால் ''ஆவி உண் என வடிக்கணை தொடுக்கிலன் பெண்என மனத்திடை நினைத்தான்'' என்றார்.*

***375.*** **வெறிந்த செம் மயிர் வெள் எயிற்றாள். தனை
எறிந்து கொல்வென் என்று ஏற்கவும். பார்க்கிலாச்
செறிந்த தாரவன் சிந்தைக் கருத்து எலாம்
அறிந்து. நான்மறை அந்தணன் கூறுவான்.**

***வெறிந்த செம்மயிர் வெள் எயிற்றாள் தனை*** - *தீய நாற்ற முடையவளும் சிவந்த தலைமயிரும். வெண்மையான பற்களையும் உடையவளுமான அந்தத் தாடகை;* ***எறிந்து கொல்வென் என்று ஏற்கவும்*** - *சூலத்தைச் செலுத்திக் கொல்லுவேன் என்று கூறி. கையில் ஏற்றபொழுதும் கூட;* ***பார்க்கிலாச் செறிந்ததாரவன்*** - *அதனைக் கண்டுகொள்ளாத அடர்ந்த மாலையை அணிந்துள்ள இராமபிரானது;* ***சிந்தைக்கருத்தெலாம் அறிந்து*** - *உள்ளக் கருத்தை யெல்லாம் உணர்ந்து;* ***நான்மறை அந்தணன் கூறுவான்*** - *நான்கு வேதங்களிலும் வல்ல அந்தணனாகிய விசுவாமித்திரன் கூறுவானானான்.*

*வெறிந்த: மணம் வீசுகின்ற (இங்குத் தீயநாற்றம் வீசுகின்ற). சிவந்த கூந்தலை உடையவளாதலின் ' செம்மயிர்' என்றார். ஏற்றல்: ஏற்றுக்கொள்தல். பார்க்கிலா: ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். ராமன் வாய்திறந்து கூறவில்லையாயினும்; மனத்திடை நினைந்ததை அறிந்த முனிவனை ''நான்மறை அந்தணன்'' எனச் சிறப்பித்தார்.*

***376. 'தீது என்றுள்ளவை யாவையும் செய்து. எமைக்***
***கோது என்று உண்டிலள்; இத்தனையே குறை;***
***யாது என்று எண்ணுவது? இக் கொடியாளையும்.***
***மாது என்று எண்ணுவதோ? மணிப் பூணினாய்!***

***தீது என்று உள்ளவையாவையும் செய்து*** - *தீமை என்று இருப்பவையாகிய எல்லாச் செயல்களையும் செய்துமுடித்து;* ***எமை. கோது என்று உண்டிலள்*** - *எம்மைப் போன்ற முனிவர்களைச் (சாரமில்லாத) சக்கை என்று உண்ணாது விட்டனள்;* ***இத்தனையே குறை*** - *அவள் செய்த தீய செயல்களில் இவ்வளவவே குறை;* ***யாது என்று எண்ணுவது*** - *இத்தகையவளை என்னவென்று நினைப்பது;* ***இக்கொடியாளையும்*** - *இத்தகைய கொடுஞ்செயல் உடையவளையும்;* ***மணிப்பூணினாய்*** - *மணிகளாலான அணிகலன்களை அணிந்திருக்கும் ராம பிரானே!;* ***மாது என்று எண்ணுவதோ*** - *பெண் என்று நினைத்தல் ஒண்ணுமே? கூடாது என்றபடியாம்.*

*தீது: தீய செயல்கள். உள்ளவை: குறிப்பு வினையாலணையும் பெயர். எம் உளப்பாட்டுப் பன்மை. கோது: சாரமற்றது (சக்கை). குற்றம் குறை: குறைவு. அரசகுமாரன் என்பதால் ''மணிப்பூணினாய்'' என்றார்.*

***377. 'நாண்மையே உடையார்ப் பிழைத்தால். நகை;***
***வாண்மையே பெற்ற வன் திறல் ஆடவர்***
***தோண்மையே இவள் பேர் சொலத் தோற்குமேல்.***
***ஆண்மை என்னும் அது ஆரிடை வைகுமே?***

***நாண்மையே உடையார்ப் பிழைத்தால் நகை*** - *நாணம் முதலான பெண்மைக் குணம் உடையவர்களுக்குத் தீங்குசெய்தால் அது கண்டு வீரம் மிக்க ஆடவர் நகைத்துப் பரிகசிப்பர்;* **வாண்மையே பெற்ற வன்திறல் ஆடவர் தோண்மையே** - *வாள்முதலான போர்க் கருவிகளில் வல்ல வலிமைமிக்க வீரர்களான ஆண்களின் தோளாற்றலும்;* **இவள் பேர் சொலத் தோற்கு மேல்** - *இத்தாடகையின் பெயரைச் சொல்லக் கேட்டவுடன் தோற்று விடுமென்றால்;* **ஆண்மை என்னும் அது ஆரிடை வைகும்** - *ஆண்மை என்று கூறும் அந்த அஞ்சாத பண்பு யாரிடம் இருக்கும். (சிந்தித்துப்பார்) என்றபடி. நாண்மை: நாணம். உடையார்: உடையாரை. பிழைத்தால்: தவறுசெய்தால். நகை: சிரிப்புக் கிடமாகும். வன்திறல்: வலியதிறமை. தோண்மை: தோளாற்றல் ஆண்மை யாரிடம் இருக்கும்? பெண் வடிவுடைய இவளிடமா? இவள் பெயரைக் கேட்டதும் தோற்கும் ஆண்களிடமா? என்று கேட்டான். விசுவாமித்திரன் என்பது கருத்து. வைகும்: தங்கும்.*

***378. ‘இந்திரன் இடைந்தான்; உடைந்து ஓடினார்.***
***தந்திரம் படத் தானவர். வானவர்;***
***மந்தரம் இவள் தோள்எனின். மைந்தரோடு.***
***அந்தரம் இனி யாதுகொல். ஆண்மையே?***

***இந்திரன் இடைந்தான்*** - *இந்திரன் இவளுடன் எதிர்க்கவந்து பின்னிட்டு ஓடினான்;* ***தானவர் வானவர்*** - *அரக்கர்களும் தேவர்களும்;* **தந்திரம்பட உடைந்து ஓடினர்** - *தமது சேனைகள் அழிய. சிதறி ஓடிவிட்டார்கள்;* **இவள் தோள் மந்திரம் எனின்** - *இவளது தோள்கள் மந்தர மலை போன்றது என்றால்;* **மைந்தரோடு ஆண்மை இனி அந்தரம்யாது** - *தக்க ஆண்களோடு ஆண்மையில் என்ன பேதம் இருக்கிறது?*

*இடைந்தான்: பின்னிட்டான் (பின்வாங்கினான்). உடைந்து: சிதறி. தந்திரம்: படை. பட: அழிய. மந்திரம்: மந்தரமாலை. மைந்தர்: வலிமையுடை ஆண்கள். அந்தரம்: வேறுபாடு (பேதம்). பெண்ணாகிய இவளுக்கும். வலிமைமிக்க ஆண்களுக்கும் என்ன வேறுபாடிருக்கிறது? இந்திரன் முதலானோரும் தோற்று ஓடும்படி செய்த இவளைப் பெண் என நினைக்கலாமா.*

***379. ‘கறங்கு அடல் திகிரிப்***
***படி காத்தவர்***
***பிறங்கடைப் பெரியோய்!***
***பெரியோரொடும்***
***மறம்கொடு. இத் தரை மன்னுயிர்***
***மாய்த்து. நின்று.***
***அறம் கெடுத்தவட்கு ஆண்மையும்***
***வேண்டுமே?***

***கறங்கு அடல் திகிரிப்படி காத்தவர்*** - *எங்கும் சுழன்று வரும் ஆணையாகிய சக்கரம் செலுத்தி உலகைக் காத்தவர்;* **பிறங்கடை பெரியோய்** - *மரபில் வந்த பெரியோனே!;* **'மறம் கொடு பெரியோரொடும்** - *பாவச் செயலை மேற்கொண்டு. பெரியோர்களாகிய முனிவரோடும்;* **இத்தரை மன் உயிர்மாய்த்து நின்று** - *இப்பூமியில் உள்ள உயிர்களை எல்லாம் அழித்து நின்று;* **அறம் கெடுத்தவட்கு ஆண்மையும் வேண்டுமோ** - *அறத்தை அழித்தவளாகிய இவளுக்கு ஆண்வடிவம் வேண்டுவதோ! கறங்குதல்: சுழல்தல். திகிரி: ஆணையாகிய சக்கரம். படி: நிலம். காத்தவர்: சூரிய குலத்தரசர்கள். பிறங்கல்: விளங்கல். மறம்: பாவம். அடைபெரியோய்; வினைத்தொகை. மன்னுயிர்: நிலைபெற்ற உயிர்கள். மாய்த்து: அழித்து.'' ஆண்மை: இங்கு ஆண்வடிவத்தை உணர்த்திற்று. சூரிய குலத்தரசர் மேலும் விளக்கமுறவந்து தோன்றிய ராமனைப் 'பெரியோய்' என்றார். பெண் உருவிலே இத்தனை பேரழிவு செய்து அறம்கெடுத்த இவளுக்கு ஆண் உருவம் வேண்டுமோ? வேண்டுவதில்லை. என்பது கருத்து.*

***380. 'சாற்றும் நாள் அற்றது எண்ணி. தருமம் பார்த்து.***
***ஏற்றும் விண் என்பது அன்றி. இவளைப்போல்.***
***நாற்றம் கேட்டலும் தின்ன நயப்பது ஓர்***
***கூற்றும் உண்டுகொல்? கூற்று உறழ் வேலினாய்!***

**கூற்று உறழ் வேலினாய்** - *எமனுக்கு ஒப்பான வேலேந்திய வீரனே!;* ***சாற்றும் நாள் அற்றது எண்ணி*** - *முன் வினைப்படி ஏற்பட்ட வயது தீர்ந்துவிட்டதை நினைத்து;* ***தருமம் பார்த்து ஏற்றும் விண் என்பது அன்றி*** - *அறப்பயனை நினைத்து. விண்ணுலகம் புகச் செய்தல்லாது;* **இவளைப் போல்** - *புதிய எமனாகிய இவ்வரக்கியைப் போல;* **நாற்றம் கேட்டலும் தின்ன நயப்பதோர்** - *மணம் தெரிந்தவுடன் உயிர்களைத் தின்ன விரும்புவதாகிய;* **ஒரு கூற்று உண்டோ** - *ஒரு எமன் இவ்வுலகத்துண்டோ?*

*சாற்றும்: ஏற்படுத்தும். நாள்: ஆயுட்காலம். நாற்றம்: மணம். கேட்டல்: தெரிந்து கொள்ளல். ''நாற்றம் கேட்டலும் தின்ன நயத்தல்'' எமனுக்கு உரிய குணமன்று. புது வழக்கமுடைய இவள் 'புதிய கூற்று' எனப்பட்டாள். உறழ்தல்: பொருவுதல் (நிகராதல்). 'உண்டோ' என்பதில் 'ஓ' எதிர்மறைப் பொருளில் வந்தது. 'இல்லை' என்றபடியாம். சாற்றும் நாள்: நியமித்த நாள் என்றபடி.*

***381. 'மன்னும் பல் உயிர் வாரி. தன் வாய்ப் பெய்து***
***தின்னும் புன்மையின் தீமை எதோ - ஐய!-***
***''பின்னும் தாழ் குழல் பேதைமைப் பெண் இவள்***
***என்னும் தன்மை. எளிமையின் பாலதே!***

***மன்னும் பல் உயிர்வாரி*** - உலகில் நிலைபெற்றுள்ள பல உயிர் வகைகளையும் அள்ளி எடுத்து; ***தன்வாய் பெய்து தின்னும்*** - தனது வாயில் போட்டுத் தின்னுகின்ற; ***புன்மையின் தீமை எதோ*** - புன்மையான தீமை வேறு எது உண்டு; ***ஐய! பின்னும் தாழ்குழல் பேதைமைப் பெண் இவள் என்னும் தன்மை*** - தலைவ! அப்படியிருந்தும் தாழ்ந்த கூந்ததை உடைய பேதைத்தன்மை வாய்ந்த பெண் இவள் என்று நினைக்கும் தன்மை; ***எளிமையின் பாலதே*** - இகழ்ச்சிக்கு உரியதாம்.

*மன்னும்; நிலைத்திருக்கும். வாய்ப்பெய்து: வாயில்கொட்டி. புன்மை: புல்லியதன்மை. தீமை: தீயதொழில். ஐய: தலைவனே. தாழ்குழல்: வினைத் தொகை. பேதைமை: மனமிரங்கும் தன்மை. 'பேதைமை என்பது மாதர்க் கணிகலம்' என்பதை நினைவு கூர்க. எளிமை: இகழ்ச்சி. இவளைப் பெண் என்பது இகழ்ச்சிக்குரியது என்பது கருத்து. பாலது: தன்மையது: உயிர்களைக் கொன்று தின்பதைவிட தீயசெயல் எது உள்ளது? இப்படிப்பட்டவளைப் பெண் என்று சொல்வது இகழ்ச்சிக்குரியதேயாகும் என்பது கருத்து. எளிமை: அறியாமையுமாம்.*

***382. 'ஈறு இல் நல் அறம் பார்த்து இசைத்தேன்; இவட்***
***சீறி நின்று இது செப்?பகின்றேன் அலேன்;***
***ஆறி நின்றது அறன் அன்று; அரக்கியைக்***
***கோறி' என்று. எதிர் அந்தணன் கூறினான்.***

***ஈறில் நல் அறம் பார்த்து இசைத்தேன்*** - அழிவில்லாத நல்லறத்தை நோக்கியே கூறினேன்; ***இவள் சீறி நின்று இது செப்புகின்றேன் அலேன்*** - இவளைக் கோபித்து நின்று இதனை நான் சொல்கிறேன்; ***ஆறி நின்றது அறன் அன்று*** - எனவே அரச குலத்தவனாகிய நீ இவளது தீச்செயலை அறிந்தும் இவ்வாறு தணிந்து நிற்பது தருமம் அல்ல; ***அரக்கியைக் கோறி என்று எதிர் அந்தணன் கூறினான்*** - இந்த அரக்கியைக் கொல்வாயாக என்று எதிர் நின்று விசுவாமித்திரன் கூறினான்.

*ஈறு: முடிவு (அழிவுமாம்). நல்லறம்: உயிர்களுக்கு நன்மை தரும்பொருட்டுச் செய்யும் அறம். இசைத்தல்: சொல்லுதல். சீறி: சினம்கொண்டு. செப்புதல்: சொல்லுதல். ஆறி: தணிந்து. கோறி: கொல்லுதி. கொலையிற் கொடியாரை வேற்தொறுத்தல் பைங்கூழ் களைகட்டதனோடு நேர் என்பது குறளறம். உயிர்களுக்குத் தீங்கு செய்யும் இவளைக் கொல்வதுதான் அறம். ஆறி நின்றது அறம் அன்று என்பது கருத்து.*

***383. ஐயன் அங்கு அது கேட்டு. 'அறன் அல்லவும்***
***எய்தினால். ''அது செய்க!'' என்று ஏவினால்.***
***மெய்ய! நின் உரை வேதம் எனக் கொடு***
***செய்கை அன்றோ! அறம் செயும் ஆறு' என்றான்.***

***ஐயன் அங்கு அது கேட்டு*** - மேலோனாகிய ராமன் அங்கு அந்த முனிவன் கூறியதைக் கேட்டு; ***அறம் அல்லவும் எய்தினால்*** - அறம் அல்லாதனவும் ஒருக்கால் வந்து நேருமாயின்; ***அதுசெய்க என்று ஏவினால்*** - அதைச் செய்க என்று எனக்குக் கட்டளை இடுவீரேல்; ***மெய்ய! நின் உரைவேதம் எனக்கொடு*** - மெய்ம்மை நெறி நின்ற மேலோனே! உமது வாக்கை வேத வாக்காகக் கொண்டு; ***செய்கை அன்றோ*** - செய்வதே; ***அறம் செய்யும் ஆறு என்றான்*** - எனக்குரிய அறம் என இராமபிரான் கூறினான். ஐயன்: மேலோன். அறன்:அறம். அறனல்லவும் என்பதால் மறன் அன்று. என்பது குறிப்பு. அல்லவும் என்பதன் 'உம்மை' அறன் அல்லாதது நேராது என்பது உணர்த்தும். மெய்ய: அண்மைவிளி. 'மெய் நெறிநின்று ஒழுகுபவனே' என்பது பொருள். கொடு: கொண்டு என்பதன் இடைக்குறை. ஆறு: விதம். அறம் செய்யும் விதம் என்பது கருத்து. முனிவன் ஏவலுக்கு இராமன் இசைந்தான் என்பது கருத்து.

***384. கங்கைத் தீம் புனல் நாடன் கருத்தை. அம்***
***மங்கைத் தீ அனையாளும் மனக்கொளா.***
***செங் கைச் சூல வெந் தீயினை. தீய தன்***
***வெங் கண் தீயொடு மேற்செல வீசினாள்.***

***கங்கைத் தீம்புனல் நாடன் கருத்தை*** - கங்கையின் இனிய நீர் பாய்ந்து வளப்படுத்தும் கோசல நாட்டை உடைய இராமபிரானது எண்ணத்தை; ***அம்மங்கைத் தீ அனையாளும் மனக்கொளா*** - அந்த நெருப்பைப் போன்ற தாடகையை மனத்தில் கொண்டு; ***செங்கைச் சூல வெம்தீயினை*** - தனது சிவந்த கையிலுள்ள சூலமாகிய கொடிய நெருப்பினை; ***தன் வெம் கண்தீயொடு*** - தனது கொடிய கண்களிலிருந்து சொரியும் நெருப்புடன்; ***மேல்செல வீசினான்*** - ராமன் முதலிய மூவர் மேலும் சென்று படும்படி எறிந்தாள்.

தீம்புனல்: இனிய நீர். புனல்நாடு: மருதநிலம். தன் கண் தீயுடன் எறியும் தாடகையின் சூல வெந்தீயினை அவிக்கும் ஆற்றலுடைய இராமனது சிறப்புத் தோன்ற ''கங்கைத் தீம்புனல் நாடன்'' என்றார். நாடன்: நாட்டை உடையவன். உயிர்களைக் கொல்வதால் ரத்தக்கறை படிந்த கைகளை உடையவளாதலின் ''செங்கை'' என்றார். கொளா: கொண்டு (செயா என்ற வாய்பாட்டு வினைஎச்சம்). செம்மை: சிவப்புமாம். வெம்மை: வெப்பம்.

***385. புதிய கூற்று அனையாள் புகைந்து ஏவிய***
***கதிர் கொள் மூஇலைக் கால வெந் தீ. முனி***
***விதியை மேற்கொண்டு நின்றவன்மேல். உவா***
***மதியின்மேல் வரும் கோள் என. வந்ததே.***

***புதிய கூற்று அனையாள்*** - புதிய எமனைப் போன்றவளாகிய தாடகை; ***புகைந்து ஏவிய கதிர்கொள் மூவிலைக் காலவெம்தீ*** - கோபித்து வீசிய ஒளிபொருந்திய இலை போலும் மூன்று முனைகளை உடைய பகைவர்களுக்கு இறுதிக் காலம் தரும் கொடிய தீயாகிய அந்தச் சூலமானது; ***முனி விதியை மேற்கொண்டு நின்றவன்மேல்*** - முனிவனது கட்டளையை மேற்கொண்டு நின்ற இராம பிரான்மீது; ***உவாமதியின் மேல்வரு கோள் எனவந்ததே*** - முழுமதியின் மேல் வரும் இராகு என்னும் கோள் போலப் பாய்ந்து வந்தது. முன்பு ''நாற்றம் கேட்டலும் தின்ன நயப்பதோர் கூற்றுண்டே'' எனக் கூறியதற் கேற்ப. இங்குப் ''புதிய கூற்றனையாள்'' என்றார். முன்பு ''செங்கைச் சூல வெந்தீ'' என்றதற்கேற்ப ''மூவிலைக் காலவெந்தீ'' என்றார். கதிர்: ஒளிக்கற்றை. விதி: கட்டளை. உவாமதி: முழுமதி. 'கோள்' எனப் பொதுவாகக் கூறினாலும் ராகு என்னும் கோளே மதியைப் பிடிப்பாதலின் இங்கு 'ராகு' என்று பொருள் கூறப்பட்டது. காலம்: உயிர்களுக்கு இறுதிசெய்யும் காலமாம்.

***386. மாலும். அக் கணம் வாளியைத் தொட்டதும்.***
***கோல வில் கால் குனித்ததும். கண்டிலர்;***
***காலனைப் பறித்து அக் கடியாள் விட்ட***
***சூலம் அற்றன துண்டங்கள் கண்டனர்.***

***மாலும் அக்கணம் வாளியைத் தொட்டதும்*** - திருமாலின் அவதாரமான ராமபிரான் அக்கணமே அம்பைத் தொடுத்ததும்; ***கோல வில் கால் குனித்ததும்*** - அழகிய தனது வில்லின் நுனியை வளைத்ததும் ஆகிய செயல்களை; ***கண்டிலர்*** - விண்ணகத்துத் தேவரும் மண்ணில் நின்ற முனிவரும் கண்டாரிலர்; ***காலனைப் பறித்து அக்கடியாள் விட்ட*** - யமனை அவன் இடத்திலிருந்து பறித்துச் சூலவடிவாக்கி அக்கொடிய அரக்கி வீச அந்த; ***சூலம் அற்றன துண்டங்கள் கண்டனர்*** - சூலம் சிதைந்துபோய்ப் பலதுண்டங்களாக வீழ்ந்ததைப் பார்த்தனர்.

*மால்: அழகு. இங்குத் திருமாலின் அம்சமான ராமனைச் சுட்டியது. வாளி. அம்பு. தொட்டது: தொடுத்தது. கோலம்: அழகு. வில்கால்: வில்லின் முனை. குனித்தல்: வளைத்தல். காலன்: எமன். பறித்தல்: எடுத்தல். கடியாள்: கடுமை உடையவள். அற்றன: வினையாலணையும் பெயர். பகுதி இரட்டித்துக் காலம் காட்டியது. துண்டம்: துண்டிக்கப்பட்ட சிறுபகுதி. தாடகை ஏவிய சூலத்தை ராமன் அழித்தமை கூறப்பட்டது.*

***387. அல்லின் மாரி அனைய நிறத்தவள்.***
***சொல்லும் மாத்திரையின். கடல் தூர்ப்பது ஓர்***
***கல்லின் மாரியைக் கைவகுத்தாள்; அது***
***வில்லின் மாரியின். வீரன் விலக்கினான்.***

***அல்லின் மாரி அனைய நிறத்தவள்*** - *இருட்டில் பெய்யும் மழை போன்ற கரிய நிறம் கொண்ட தாடகை;* ***சொல்லும் மாத்திரையின்*** - *ஒரு சொல் சொல்லும் கால அளவிலேயே;* ***கடல் தூர்ப்பதோர் கல்லின் மாரியே*** - *கடலையும் தூர்த்துவிடக் கூடியதான கற்களை மலைபோல;* ***கைவகுத்தாள்*** - *கைகளால் எடுத்து வீசினாள்;* ***அது வில்லின் மாரியின் வீரன் விலக்கினான்*** - *அதனை. தனது வில்லிலிருந்து பொழியும் அம்பு மழையினால் வீரனாகிய ராமன் விலக்கலானான். அல்: இருட்டு. மாரி: மழை. இருட்டில் பெய்யும் மழை. அல்லது இருளாகிய மழை எனவும் தகும். தாடகையின் கரிய நிறத்தை இவ்வாறு கூறினார். மாத்திரை: கால அளவு. கைவகுத்தல்: கைக்கடுமை காட்டல். 'வில்லின் மாரி' இதில் 'மாரி' உவமை ஆகு பெயராய் அம்புகளை உணர்த்தும். வீரன்: வீரம் மிக்கவன். தாடகையின் கொடிய தோற்றம் கண்டும் அவளது போர்ச்செயல் கண்டும் வீரத்துடன் போர் புரியும் திறத்தைக் காட்டும். தாடகையின் கல் மழையை. இராமபிரானது அம்புமழை தடுத்தது என்பது கருத்து.*

***388.*** **சொல் ஒக்கும் கடிய வேகச்**
***சுடு சரம். கரிய செம்மல்.***
***அல் ஒக்கும் நிறத்தினாள்மேல்***
**விடுதலும். வயிரக் குன்றக்**
***கல் ஒக்கும் நெஞ்சில் தங்காது.***
***அப்புறம் கழன்று. கல்லாப்***
**புல்லார்க்கு நல்லோர் சொன்ன**
***பொருள் என. போயிற்று அன்றே!***

**சொல் ஒக்கும் கடிய வேகச் சுடுசரம்** - *நிறைமொழி மாந்தரின் சாபச் சொற்களை ஒத்த கடிய வேகமுடைய ஒரு சுடுசரத்தை;* ***கரிய செம்மல் அல் ஒக்கும் நிறத்தினாள் மேல் விடுதலும்*** - *கரிய நிறமும். அழகும் உடைய இராமபிரான் இருள் போன்ற நிறத்தை உடைய தாடகையின் மீது செலுத்தி விடவே;* ***வயிரக் குன்றக்கல் ஒக்கும் நெஞ்சில் தங்காது*** - *(அந்த அம்பு) வைரம் பாய்ந்த கல்போன்ற அத்தாடகையின் நெஞ்சில் தங்கியிராமல்;* ***அப்புறம் கழன்று*** - *(நெஞ்சில் பாய்ந்து) பின் முதுகின் புறமாகக் கழன்று;* ***கல்லாப்புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள் என*** - *கல்வி அறிவில்லாத புன்மையாளருக்கு நல்லவர்கள் சொன்ன நல்ல பொருளைப் போல;* ***போயிற்று*** - *ஓடிப்போய்விட்டது.*

*'சொல்' என்று பொதுவாகக் கூறினாலும். நிறை மொழி மாந்தரின் மறை மொழியையே குறித்து நின்றதென்க. - உறுதி. சுடுசரம்: சுடுகின்ற அம்பு. இராமனுடைய அம்புக்குக் கடுமை. வேகம். அருமை ஆகிய பண்புகள் உண்டாம் என்பதை உணர்த்தினார். கரிய செம்மல்: கருநில அழகன். அல்: இருட்டு. இராமது அம்பு மார்பில் புகுந்து. முதுகின்புறம் போந்தது என்பதை உணர்த்த 'அப்புறம் கழன்று' என்றார். கல்வியறிவில்லாத கீழோருக்கு அறிவாற்றல் மிக்க மேலோர் கூறும் அறம் உள்ளத்தில் நிலை பெறாது ஒரு காதில் புகுந்து மறுகாது வழிப்போவதுபோல. தாடகையின் முதுகுப்புறம் ராமனது அம்பு விரைந்து சென்றது என்ற உவமை நயம் உணரத்தக்கது.*

***389.*** ***பொன் நெடுங் குன்றம் அன்னான். புகர்***
***முகப் பகழி என்னும்***
***மன் நெடுங் கால வன் காற்று***
***அடித்தலும். - இடித்து. வானில்***
***கல் நெடு மாரி பெய்யக்***
***கடையுகத்து எழுந்த மேகம்.***
***மின்னொடும் அசனியோடும்***
***வீழ்வதே போல - வீழ்ந்தாள்.***

***பொன் நெடும் குன்றம் அன்னான்*** - *நீண்டு. உயர்ந்த பொன் மலையாகிய மேருமலையைப் போன்ற சலியாத் தன்மை வாய்ந்த இராமபிரானது;* ***புகர்முகப் பகழி என்னும்*** - *முன்புறம் புள்ளிகளையுடைய அம்பு என்ற;* ***அ நெடும் கால வன் காற்று*** - *நெடிய. கடையூழிக் காலத்து வலியகாற்று;* ***அடித்தலும்*** - *அடித்த உடனே;* ***இடித்து வானில் கல்நெடுமாரி பெய்ய*** - *வானத்தே இடி முழக்கம் செய்து கல்மழை பெய்வதற்காக;* ***கடையுகத்து எழுந்த மேகம்*** - *யுகத்தின் கடைசியில் எழுந்த மேகமானது;* ***மின் ஒடும் அசனியோடும்*** - *மின்னலோடும். இடியோடும்* ***வீழ்வதே போல வீழ்ந்தாள்*** - *வீழ்வது போல. தாடகை வீழ்ந்தாள்.*

*கரிய நிறத்தினனான ராமனைப் 'பொன் நெடுங்குன்றம்' என்றது நிறம் கருதியன்று. சலியாத்தன்மை கருதியே யாகும். புகர்: புள்ளி. முகம்: முன்புறம் பகழி: அம்பு. கடையுகம்: யுகக்கடை. சொல்மாற்று. மேகம்: புயல். தாடகைக்கு மேகம் உவமை. அவளது கூந்தலும் குரலும் மின்னலும் இடியும் போன்றவை என்க. இராமபிரானது அம்பாகிய கால வன் காற்று அடித்ததும். இடி. மின்னலோடு கூடிய ஊழிக் காலத்து மேகம் வீழ்வது போல. தாடகை வீழ்ந்தாள் என்க*

***390.*** ***பொடியுடைக் கானம் எங்கும்***
***குருதிநீர் பொங்க வீழ்ந்த***
***தடியுடை எயிற்றுப் பேழ் வாய்த்***
***தாடகை. தலைகள்தோறும்***
***முடியுடை அரக்கற்கு. அந் நாள்.***
***முந்தி உற்பாதம் ஆக.***
***படியிடை அற்று வீழ்ந்த***
***வெற்றிஅம் பதாகை ஒத்தாள்.***

**பொடி உடைக் கானம் எங்கும்** - புழுதி நிறைந்த அந்தக் காடெல்லாம்; **குருதிநீர் பொங்க வீழ்ந்த** - இரத்தம் நிறைந்து பொங்கும்படி வீழ்ந்த; **தடிஉடை எயிற்றுப் பேழ்வாய்த் தாடகை** - தடித்த உடலும் கோரைப் பற்களும் குகை போன்ற வாயும் கொண்ட தாடகை என்னும் அவ்வரக்கி; **தலைகள் தோறும் முடியுடை அரக்கற்கு** - தலைகள் தோறும் மணிமுடியை உடைய பத்துத் தலைகளை உடைய அரக்கனாகிய இராவணனுக்கு; **முந்தி உற்பாதம் ஆக** - பின்னால் அழிவதற்கு முந்திய கேடுகால அறிகுறியாக; **அந்நாள் படியிடை இற்று வீழ்ந்து** அந்த நாளில் பூமியில் ஒடிந்து வீழ்ந்த; **வெற்றி அம் பதாகை ஒத்தாள்** - வெற்றிக் கொடியை ஒத்திருந்தாள்.

பொடி: புழுதி. கானம்: காடு. குருதிநீர்: இரத்தம். தடியுடை எயிறு; பற்களிடையே புலால் துண்டுகள் சிக்கியிருக்கும். பேழ்வாய்: திறந்தவாய். உற்பாதம்: கெடுங்கால அறிகுறி. அழிவுக் காலத்தின் முன்அறிகுறி. தடித்த உடலை உடைய தாடகை வீழ்ந்தது - இராவணனது வெற்றிக் கொடி ஒடிந்து வீழ்ந்ததை ஒத்திருந்தது என்பது கருத்து. இது தற்குறிப்பேற்ற அணி.

**391. கான் திரிந்து ஆழி ஆகத்**
**தாடகை கடின மார்பத்து**
**ஊன்றிய பகழி வாயூடு**
**ஒழுகிய குருதி வெள்ளம்**
**ஆன்ற அக் கானம் எல்லாம்**
**ஆயினது - அந்த மாலைத்**
**தோன்றிய செக்கர் வானம் தொடக்கு**
**அற்று வீழ்ந்தது ஒத்தே!**

**தாடகை கடின மார்பத்து ஊன்றிய பகழி** - அந்த அரக்கியின் உறுதி வாய்ந்த மார்பில் சென்று ஊன்றிய அம்பாலுண்டான; **வாயூடு ஒழுகிய குருதிவெள்ளம்** - புண்ணிலிருந்து ஒழுகிய ரத்தப் பெருக்கு; **கான் திரிந்து ஆழி ஆக** - அந்தக் காடே மாறி. கடலாகும்படி; **ஆன்று அக்கானம் எல்லாம்** - நிறைந்த அந்தக் காடெல்லாம்; **அந்திமாலை தோன்றிய செக்கர்வானம்** - அந்திமாலையில் தோன்றிய சிவந்த வானம்; **தொடக்கு அற்று வீழ்ந்தது ஒத்த ஆயினது** - வானத்தின் சம்பந்தம் நீங்கிக் கீழே வீழ்ந்து கிடந்ததைப்போல் ஆய்விட்டது.

கான்: காடு. ஆழி: கடல். பகழிவாய்: அம்புபட்டுப்பிளந்த புண்வாய். வெள்ளம்: பெருக்கு. ஆன்று: நிறைந்த. செக்கர்வானம்: செவ்வானம். இராமபிரானது அம்புபட்ட புண்வாயிலிருந்து பெருகிய ரத்தம் வெள்ளமாய்ப் பெருகி - அந்தக் காட்டைக் கடலாக்கிவிட்டது. அந்திமாலையின் சிவந்த வானம் - வானத்தின் தொடர்பு நீங்கி. கீழேவிழுந்து கிடப்பதைப் போல அந்தக்காடு காணப்பட்டது என்பது கருத்து.

***392. வாச நாள்மலரோன் அன்ன***
***மாமுனி பணி மறாத.***
***காசு உலாம் கனகப் பைம் பூண்.***
***காகுத்தன் கன்னிப்போரில்.***
***கூசி. வாள் அரக்கர்தங்கள்***
***குலத்து உயிர் குடிக்க அஞ்சி.***
***ஆசையால் உழலும் கூற்றும்.***
***சுவை சிறிது அறிந்தது அன்றே.***

***வாச நாள் மலரோன் அன்ன மாமுனி*** - *மணம் பொருந்திய அன்றலர்ந்த தாமரை மலரில் இருக்கும் பிரமனுக்கு ஒப்பாகிய தவமுனிவனாகிய விசுவாமித்திரனுடைய;* ***பணி மறாத*** - *கட்டளையை மறுக்காத;* ***காசு உலாம் கனகப் பைம்பூண் காகுத்தன்*** - *மணிகள் பொருந்தியதும் பொன்னால் அமைந்ததுமாகிய பசிய அணிகலன்களை அணிந்துள்ள காகுத்தனாகிய இராமனது;* ***கன்னிப் போரில்*** *- இவ்விளம்போரில் (முதல் போர்);* ***வாள் அரக்கர் தங்கள் குலத்து*** - *வாள்முதலிய படைக்கலங்களைக் கொண்ட அரக்கர் குலத்தினரது;* ***உயிர் குடிக்க அஞ்சி*** - *உயிரை உண்பதற்குப் பயந்து;* ***கூசி ஆசையால் உழலும் கூற்றும்*** - *இதுவரை நடுங்கி. (ஆனால்) ஆசையால் திரிந்து கொண்டிருந்த எமனும்;* ***சுவை சிறிது அறிந்தது .*** *கொஞ்சம் ருசி தெரிந்து கொண்டான்.*

*நாண்மலர்: அன்றலர்ந்த மலர். மலரோன்: பிரமதேவன் பிரமனைப் போல மன்னுயிர் அடங்கலும் படைப்பேன் எனத்தொடங்கிய முனிவனாதலின் பிரமனை உவமை கூறினாரென்க. பணி: கட்டளை. மறாத: மறுக்காத (எதிர் மறைப் பெயரெச்சம்). காசு: மணி. உலாம்: உலாவும் என்பதன் இடைக்குறை (பொருந்தும்). பசுமை+பூண்: பைம்பூண். காகுத்தன்: காகுந்தன் மரபில் தோன்றியவன் (இராமன்). இந்திரன் காளையாகிச் சுமக்க - அரக்கர்களை வென்று இந்திரனுடைய ஆட்சியை மீட்டுக் கொடுத்த சூரியகுலத்து மன்னன்; இவன் பெயர் புரஞ்சயன் என்பது. காகுத்தன் என்பது இந்திரனாகிய காளையின் பிடரில் நின்றவன் என்னும் பொருள் உடையதாகும். கன்னிப்போர்; இளம்போர். இராவணனுக்கு அஞ்சி - அரக்கர் உயிர் உண்ண ஆசையிருந்தும் உண்ண இயலாத எமன் - இராமனது கன்னிப்போரில் சிறிது சுவை அறிந்தான் என்பது கருத்து.*

***393. 'யாமும் எம் இருக்கை பெற்றேம்;***
***உனக்கு இடையூறும் இல்லை;***
***கோமகற்கு இனிய தெய்வப்***
***படைக்கலம் கொடுத்தி' என்னா.***
***மா முனிக்கு உரைத்து. பின்னர்.***
***வில் கொண்ட மழை அனான்மேல்***
***பூமழை பொழிந்து வாழ்த்தி.***
***விண்ணவர் போயினாரே.***

**யாமும் எம் இருக்கை பெற்றேம்** - தேவர்களாகிய நாங்களும் இழந்த எங்கள் இருப்பிடங்களை அடைந்துவிட்டோம்; **உனக்கு இடையூறும் இல்லை** - உனக்கோ அரக்கர்களால் இனி எந்த இடையூறும் உண்டாக மாட்டாது; **கோமகற்கு இனிய தெய்வப் படைக்கலம் கொடுத்தி என்னா** - அரசிளங் குமாரனாகிய ராமபிரானுக்கு இனிய தெய்வத் தன்மையுடைய படைக்கலங்களைக் கொடுப்பாயாக என்று; **மாமுனிக்கு உரைத்து** - மாபெரும் முனிவனான விசுவாமித்திரனுக்குச் சொல்லி; **பின்னர். வில்கொண்ட மழை அனான் மேல்** - பிறகு. வில்லை ஏந்திய மேகம் போன்றவனான இராமபிரான்மீது; **பூமழை பொழிந்து** - மலர்மாரி பெய்து; **வாழ்த்தி விண்ணவர் போயினார்** - அவனை வாழ்த்தித் தேவர்கள் சென்றனர்.

'யாமும்' என்பதிலுள்ள 'உம்மை' எதிரது தழீஇய எச்ச உம்மை. யாம்: தேவர்களாகிய யாம். இருக்கை: இருப்பிடம் (உறையுள்). பெற்றேம் என்பது தன்மைப்பன்மை வினைமுற்று. இடையூறு. தீங்கு. கோமகன்: அரசகுமாரன். கொடுத்தி: முன்னிலை ஏவல் வினைமுற்று 'விற்கொண்ட மழை' இல்பொருள் உவமையாம். பூமழை: மலர்மாரி. நாங்களும் எங்கள் இடங்களைத் திரும்பப் பெற்றோம். என்றது. அரக்கர்கள் அத் தேவர்களை விரட்டி. அவர்களது இடங்களைத் தமக்கு உரிமையாக்கிக் கொண்டனர். அரக்கர்கள் இனி அழிதல் திண்ணம் என்பதால் 'யாமும் எம் இருக்கை பெற்றோம்'' என்றர். கால வழுவமைதி.

## வேள்விப்படலம்

*விசுவாமித்திரன் தனது வேள்வியைச் செய்து முடித்ததைக் கூறும் பகுதியாகும். தேவர்கள் கூறியபடி இராமனுக்கு விசுவாமித்திரன் படைக்கலம் தருவதும். அப்படைக் கலன்கள் இளையவனைப் போலப் பணிபுரிவோம் என முன்வருதலும் பிறகு மூவரும் வேள்வி செய்வதற்குரிய இடம் நாடிச் சேர்தலும் முனிவன் வேள்வியைத் தொடங்குவதும் அரக்கர் வருகையும் முனிவர்கள் ராமனைச் சரண் அடைய - அவர்களைக் கலங்க வேண்டா என்று கூறி இராமன் அரக்கரை அழித்தலும் சுபாகுவைக் கொன்று. மாரீசனைக் கடலில் சேர்த்தும். விசவாமித்திரன் இராமனைப் பாராட்டுதலும் சனகன் வேள்வியைக் காண மூவரும் மிதிலை நோக்கிச் செல்லத் தொடங்குதலும் வேள்விப் படலத்துள் கூறப்படும் நிகழ்ச்சிகளாகும்.*

***394.*** **விண்ணவர் போய பின்றை.**
**விரிந்த பூமழையினாலே**
**தண்ணெனும் கானம் நிங்கி.**
**தாங்க அருந் தவத்தின் மிக்கோன்.**
**மண்ணவர் வறுமை நோய்க்கு**
**மருந்து அன சடையன் வெண்ணெய்**
**அண்ணல்தன் சொல்லே அன்ன.**
**படைக்கலம் அருளினானே.**

***விண்ணவர் போய பின்றை*** *- தேவர்கள் வாழ்த்திச் சென்ற பிறகு;* ***விரிந்த பூ மழையினாலே*** *- தேவர்கள் பொழிந்த விரிந்த மலர் மாரியாலே;* ***'தண்' எனும் கானம் நீங்கி*** *- குளிர்ந்த அந்தக் கானத்தை விட்டகன்று;* ***தாங்க அரும் தவத்தின் மிக்கோன்*** *- தாங்குதற்கரிய தவம் மிகுந்த விசுவாமித்திர முனிவன்;* ***மண்ணவர் வறுமை நோய்க்கு*** *- உலகத்தவரின் 'வறுமை' என்னும் நோய்க்கு;* ***மருந்து அன சடையன் வெண்ணெய் அண்ணல்*** *- மருந்தைப்போன்றதான சடையப்ப வள்ளலாகிய திருவெண்ணெய் நல்லூர் அண்ணலுடைய;* ***சொல்லே அன்ன படைக்கலம் அருளினான்*** *- சொல்லையே போன்றதாகிய படைக்கலங்களை இராம. இலக்குவர்களுக்கு ஈந்து அருளினான். ''பின்றை'' என்பது பின் என்பதன் மரூஉ. விண்ணவர்: தேவர்கள். விரிதல்: மலர்தல். தண்:தண்மை (குளிர்ச்சி). கானம்: கான். மிக்கோன்: உயர்ந்தவன். வறுமை நோய்: இல்லாமை நோய். 'வெண்ணெய்ச்சடைய அண்ணல்தன் சொல்' - மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தாகும் என்பது கருத்து. படைக்கலத்துக்குச் சொல் உவமையாயிற்று. அருளுதல்: ?கொடுத்தல். அன. அன்ன: என்பன உவமை உருபுகள்.*

*விண்ணவர் இராமனை வாழ்த்திச் சென்றபின் - விசுவாமித்திர முனிவன் - இராம. இலக்குவர்களுக்குத் தேவர்கள் கூறியபடி படைக்கலங்களைக் கொடுத்தருளினான் என்பது பொருளாகும்.*

***395. ஆறிய அறிவன் கூறி***
***அளித்தலும். அண்ணல்தன்பால்.***
***ஊறிய உவகையோடும்.***
***உம்பர்தம் படைகள் எல்லாம்.***
***தேறிய மனத்தான் செய்த***
***நல்வினைப் பயன்கள் எல்லாம்***
***மாறிய பிறப்பில் தேடி***
***வருவபோல். வந்த அன்றே.***

***ஆறிய அறிவன் கூறி அளித்தலும்*** *- துயர்தீரப்பெற்ற அறிவனாகிய முனிவன் உரிய மந்திரங்களைக் கூறி. ஈந்ததும்;* ***உம்பர்தம் படைகள் எல்லாம்*** *- தெய்வத்தன்மை உடைய அப்படைக்கலன்களெல்லாம்;* ***தேறிய மனத்தான் செய்த*** *- தெளிந்த மனம் உடையவன் முன்பு செய்த;* ***நல்வினைப் பயன்கள் எல்லாம்*** *- நல்வினைப் பயன் அனைத்தும்;* ***மாறிய பிறப்பில் தேடிவருவ போல்*** *- மாறி எடுத்த அடுத்த பிறவியிலும் செய்தவனைத் தேடிவந்து அடைவது போல;* ***ஊறிய உவகை யோடும்*** *- ஊற்றம் மிக்க களிப்போடும்;* ***அண்ணல் தன்பால் வந்த*** *- பெருமைமிகுந்த ராமபிரானிடம் வந்து சேர்ந்தன.*

*ஆறிய: துயர் நீங்கிய. இந்திரியச் செயல்கள் தணியப்பெற்ற எனவும் கூறுதல் பொருந்தும். அறிவன்: ஞானி. கூறி அளித்தல்: உபதேசம் செய்து கொடுத்தல். செய்த: முற்பிறப்பில் செய்த. மாறிய பிறப்பு: வேறாகிய பிறப்பு. அன்று. ஏ: அசைகள். விசுவாமித்திர முனிவன் - கூறி அளித்தலும் - படைகள் நல்வினைப்பயன் செய்தவனை நாடி வந்தடைதல் போல வந்தன என்பது கருத்து.*

***396. 'மேவினம்; பிரிதல் ஆற்றேம்;***
***வீர! நீ விதியின் எம்மை***
***ஏவின செய்து நிற்றும்.***
***இளையவன் போல' என்று***
***தேவர்தம் படைகள் செப்ப.***
***'செவ்வியது' என்று அவனும் நேர.***
***பூவைபோல் நிறத்தினாற்குப் புறத்தொழில்***
***புரிந்த அன்றே.***

***வீர! மேவினம் பிரிதல் ஆற்றேம்*** *- வீரனே! நாங்கள் வந்து உன்னை அடைந்தோம். பிரிதல் செய்யோம்;* ***நீ விதியின் எம்மை ஏவின செய்து*** *- நீ முறைப்படி எங்களை ஏவிட்ட காரியத்தைச் செய்து;* ***இளையவன் போல நிற்றும் என்று*** *- இளையவனாகிய இலக்குவனைப்போலப் பணிபுரிந்து நிற்போம் என்று படைக்கலத் தேவதைகள் கூற;* ***அவனும் செவ்விது என்று நேர*** *- இராமபிரானும் நல்லது. என்று ஒப்புக்கொள்ள;* ***பூவை போல் நிறத்தினாற்கு*** *- காயாம்பூவைப் போன்ற நிறம் கொண்ட இராமபிரானுக்கு;* ***புறத்தொழில் புரிந்த*** *- ஏவல் தொழிலைச் செய்திருந்தன.*

மேவினம். ஆற்றேம் என்பன தன்மைப் பன்மை வினைமுற்றுகள். பிரிதல்: தொழிற்பெயர். விதியின் முறைப்படி. நிற்றும்: செவ்விது: அழகிது. நேர: ஒப்ப. பூவை: காயாம்பூ. புறத்தொழில்: ஏவல் தொழில். தெய்வப்படைக் கலங்களுக்குரிய தேவதைகள் இராமனை நோக்கி ''வீரனே! நாங்கள் உன்னை அடைந்தோம். இனிப்பிரிய மாட்டோம். நீ ஏவிய பணியைச் செய்து இலக்குவனைப் போல. நிற்போம் என். இராமனும் அழகிது என்று ஒப்புக் கொள்ள - அப்படைக்கலத் தேவதைகள் இராமனுக்கு ஏவல்தொழிலைச் செய்திருந்தன என்பது பொருள்.

***397. இனையன நிகழ்ந்த பின்னர்.***
***காவதம் இரண்டு சென்றார்;***
***அனையவர் கேட்க. ஆண்டு ஓர்***
***அரவம் வந்து அணுகித்தோன்ற***
***'முனைவ! ஈது யாவது?' என்று.***
***முன்னவன் வினவ. பின்னர்.***
***வினை அற நோற்று நின்ற***
***மேலவன் விளம்பலுற்றான்;***

**இனையன நிகழ்ந்த பின்னர்** - இவையெல்லாம் நடந்த பின்பு **காவதம் இரண்டு சென்றார்** - இராமன் முதலிய மூவரும் இரண்டு காததூரம் நடந்து சென்றனர்; **ஆண்டு அனையவர் கேட்க** - அங்கு அந்த மூவரும் கேட்டுகும்படியாக; **ஓர் அரவம் வந்து அணுகித்தோன்ற** - ஒருபெருத்த குரல் பக்கத்தே எழ; **முனைவ! ஈது யாவது என்று முன்னவன் வினவ** - முனிவரே இந்த ஓலம் எதனால் தோன்றியது என ராமன் கேட்க; **பின்னர் வினை அற நோற்று நின்ற மேலவன் விளம்பல் உற்றான்** - பின்பு. இரு வினையும் நீங்கத் தவம் செய்து மாமுனிவனாக நின்ற விசுவாமித்திர முனிவன் சொல்லானான். நிகழ்தல்: நடத்தல். காவதம்: காதம் (பத்து நாழிகைத் தூரம்). அரவம்: பேரொலி. முனைவன்: வினையின் நீங்கி விளங்கிய மேலோன். முனைவன்: மூத்தவன் அனைவருக்கும் முன்னோனான முதல்வன். வினையற: தீவினை நீங்க (இருவினையும் நீங்க). தோற்றல்: நோன்பு. நின்ற: நற்குண நற்பண்புகளில் நினைத்த. விளம்பல்: சொல்லல். உற்றான்: பொருந்தினான். 'உறு' என்று பகுதி இரட்டித்து இறந்த காலம் காட்டிற்று.

***398. 'மானச மடுவில் தோன்றி***
***வருதலால். ''சரயு'' என்றே***
***மேல் முறை அமரர் போற்றும்***
***விழு நதி அதனிேனாடும்***
***ஆன கோமதி வந்து எய்தும்***
***அரவம்அது' என்ன. அப்பால்***
***போனபின். பவங்கள் தீர்க்கும்***
***புனித மா நதியை உற்றார்.****

***மானச மடுவில் தோன்றி வருதலால்*** - *மானசம் என்னும் பெயருடைய மடுவிலே தோன்றிப் பெருகிவருதலால்;* ***சரயு என்றே மேல்முறை அமரர் போற்றும் விழுநதி*** - *சரயு என்னும் பெயர் கொண்டு மேலாம் முறையிலொழுகும் தேவர்கள் போற்றும் விழுநதியாகிய;* ***அதனினோடும் ஆன கோமதி வந்து எய்தும் அரவம் அது என்ன*** - *அந்த நதியுடனே கோமதி என்னும் பெயருடைய ஆறு வந்து சேர்வதால் உண்டாகும் ஓசையே அது என்று விசுவாமித்திர முனிவன் சொல்ல;* ***அப்பால் போனபின் பவங்கள் தீர்க்கும் புனித மாநதியை உற்றார்*** - *அதற்கு அப்புறம் சென்றபின் பிறவிப் பிணியைப் போக்க வல்ல புனிதமான ஒரு பெரிய நதியைச் சென்று சேர்ந்தார்கள்.*

*மானசம் என்ற மடு பிரமனது மனத்தால் தோன்றியதென்பதல் இப்பெயர் பெற்றது. 'சரசு' குளம் இதிலிருந்து தோன்றியதால் சரயு என்று பெயர் பெற்றது. சரயுநதி விழுமிய நதியுமாம். கோமதி மற்றொரு ஆறு. இரு நதிகளும் கூடும் இடமிது. 'எய்தும் அரவம்' இந்த இரண்டு ஆறுகளும் கலந்து சேர்வதால் உண்டாகும் ஒலி என்பது பொருள். 'புனிதமாநதி' கௌசிகை என்னும் நதியாகும். 'பவங்கள்' என்பதில் 'பவம்' பிறப்பு.*

***399. 'சுரர் தொழுது இறைஞ்சற்கு ஒத்த***
***தூநதி யாவது' என்று.***
***வரமுனிதன்னை. அண்ணல்***
***வினவுற. மலருள் வைகும்***
***பிரமன் அன்று அளித்த வென்றிப்***
***பெருந்தகைக் குசன் என்று ஓதும்***
***அரசர்கோன் மனைவி தன்பால்***
***அளித்தவர் நால்வர் ஆகும்.****

***சுரர் தொழுது இறைஞ்சற்கு ஒத்த*** - *தேவர்களெல்லாம் துதித்து வணங்குவதற்கு ஒத்ததாகிய;* ***தூநதி யாவது என்று*** - *தூய நதி யாதாகும் என்று;* ***வரமுனி தன்னை அண்ணல் வினவுற*** - *சிறந்த முனிவனாகிய விசுவாமித்திரனைப் பெருமைமிக்க ராமன் கேட்க;* ***மலருள் வைகும் பிரமன் அன்றளித்த*** - *தாமரை மலரில் தங்கியிருக்கும் பிரமன் முன்பு பெற்ற;* ***வென்றிப் பெருந்தகை குசன் என்று*** - *வெற்றியை உடைய பெருந் தன்மையன் ஆகிய குசன் என்று;* ***ஓதும் அரசர் கோன்*** - *பெரியோர்கள் புகழ்ந்து பேசும் மன்னர் மன்னன்;* ***மனைவி தன்பால் அளித்த மைந்தர் அருமறை அனையார் நால்வர்*** - *தன் மனையாள்பால் பெற்ற பிள்ளைகள் அரியமறைகளைப் போன்ற நால்வராவர்.*

*சுரர்: தேவர். ஒத்த: போன்ற. தூ: தூய்மை. வைகல்: தங்கல். வினைவுறு: கேட்க. ஓதல்: புகழ்ந்து சொல்லுதல். மறை: வேதம். அரசர்கோன்: மன்னர் மன்னன்.*

தேவர்களும் வணங்கும் அந்த நதி யாவது என ராமபிரான் விசுவாமித்திர முனிவனைக் கேட்க. அதன் வரலாறு கூறுகிறான் முனிவன். பிரமனுக்கு மகன் குசன் என்னும் வேந்தன். அவன் பெற்ற மைந்தர்கள் நான்மறைக் கொப்பான நால்வர் என்பது கருத்து.

***400.*** ***'அவர்களின் குசநா பற்கே***
***ஐ-இருபதின்மர் அம் சொல்***
***துவர் இதழ்த் தெரிவை நல்லார்***
***தோன்றினர் வளரும் நாளில்***
***இவர் பொழில் - தலைக்கண் ஆயத்து***
***எய்துழி. வாயு எய்தி.***
***கவர் மனத்தினனாய். அந்தக்***
***கன்னியர் தம்மை நோக்கி.****

***அவர்களின் குசநாபற்கே*** - அந்த நால்வருள் ஒருவனான குசநாபன் என்பனுக்கு; **ஐ இரு பதின்மர் அம்சொல் துவர் இதழ் தெரிவை நல்லார் தோன்றினர்** - அழகிய சொற்களும். பவளம் போன்ற உதடும் கொண்ட பெண்கள் நூறு பேர் பிறந்தனராகி; **வளரும் நாளில் இவர் பொழில் தலைக்கண் ஆயத்து எய்துழி** - வளர்ந்து வரும் காலத்திலே இப்பெண்கள் சோலையிலே தோழியர் கூட்டத்துடன் சென்றபோது; **வாயு எய்தி** - காற்றுக் கடவுளான வாயு தேவன் அங்கே வந்து; **கவர்மனத்தினனாய் அந்தக் கன்னியர்தம்மை நோக்கி** - கவரப் பெற்ற மனத்தை உடையவனாகி அந்தப் பெண்களைப் பார்த்து. நல்லார்: பெண்கள். ஆயம்: தோழியர் கூட்டம். 'தலைக்கண்' உருபின் மேல் உருபு புணர்ந்து. கவர்மனம்: வினைத் தொகை. கன்னியர்: கன்னித்தன்மை. நீங்காத பருவத்தினர். 'அம்சொல்' நாணம் தோன்றாமையும். 'துவர் இதழ்' செம்மை குறையாமையும் கன்னியர் என்பதை உணர்த்தும். குசன் மக்கள் நால்வரில் ஒருவனான குசநாபன் என்பவனுக்கு நூறு பெண்கள்; ஒரு நாள் தோழிகளுடன் சோலைக்கு அவர்கள் செல்ல வாயுதேவன் அவர்களை நோக்கி என்பது பொருள் இது குளகப்பாட்டு.

***401.*** ***'கொடித் தனி மகரம் கொண்டான்***
***குனிசிலைச் சரத்தால் நொந்தேன்;***
***வடித் தடங் கண்ணீர்! என்னை***
***மணத்திர்' என்று உரைப்ப. ''எந்தை***
***அடித் தலத்து உரைப்ப. நீதோடு***
***அளித்திடின். அணைதும்'' என்ன.***
***ஒடித்தனன் வெரிநை; வீழ்ந்தார்.***
***ஒளி வளை மகளிர் எல்லாம்.****

***தனிமகரம் கொடிகொண்டோன்*** - ஒப்பற்ற மகரமீனைக் கொடியாகக் கொண்டவனான மன்மதனுடைய; ***குனிசிலைச் சரத்தால் நொந்தேன்*** - வளைந்த வில்லம்புகளால் நான் மிகவும் வருந்தினேன்; ***வடித்தடம் கண்ணீர்*** - (ஆகையால்) மாம்பிஞ்சின் பிளவு போன்ற அகன்ற கண்களை உடைய பெண்களே; ***என்னை மணத்திர் என்று உரைப்ப*** - என்னை மணம் செய்து கொள்வீராக என்று வாயுதேவன் கூற; ***எந்தை அடித்தலத்து உரைப்ப*** - (நீ சென்று) எங்களது தந்தையை வணங்கி அவரிடம் கேட்க; ***நீரோடு அளித்திடின் அணைதும் என்ன*** - (அவர்) எம்மை நீருடன் தாரை வார்த்துக் கொடுத்தால் நாங்கள் உன்னை (மணந்து) அணைவோன் என்று கூற; ***வெரிநை ஒடித்தனன்*** - வாயு கோபம் கொண்டு (அவர்களது) முதுகை ஒடித்துவிட்டான்; ***ஒளிவளை மகளிர் எல்லாம் வீழ்ந்தனர்*** - ஒளிபொருந்திய வளைகளை அணிந்த அப்பெண்களெல்லாம்

*மன்மதன் மீனைக் கொடியாக உடையவன் என்பதால் ''கொடித்தனி மகரம் கொண்டோன்'' என்று சிறப்பிக்கப்பட்டான். குனிசிலை: வளைந்த வில் (வினைத் தொகை). சரம்: அம்பு. வடி: மாம்பிஞ்சின் பிளவு. வடிக்கண்: உவமைத் தொகை. ''எந்தை அடித்தலத்து (நீர்) உரைப்ப. (அவர்) நீரோடும் அளித்திடின்'' என்று கூட்டிப் பொருள் கொள்க. வெரிநை: முதுகு. வளை: வளையல். வளை மகளிர்: இரண்டனுருபும் பயனும் உடன் தொக்கத் தொகை. மன்மத பாணத்தால் நொந்தேன் - என்னை மணந்து கொள்ளுங்கள் என. வாயு கேட்க. அப்பெண்கள் - எங்கள் தந்தையிடம் நீகேட்டு? அவர் தாரைவார்த்து மணம் செய்து வைத்தால் நாங்கள் உன்னைச் சேர்ந்து அணைவோம் என்றனர். சினம் கொண்ட வாயுதேவன் அவர்களது முதுகை ஒடித்தான். அம்மகளிர் நிற்க இயலாது கீழே வீழ்ந்தனர் என்பது பொருளாகும்.*

***402 'சமிரணன் அகன்றதன்பின்.***
***தையலார். தவழ்ந்து சென்றே***
***அமிர்து உகு குதலை மாழ்கி.***
***அரசன் மாட்டு உரைப்ப. அன்னான்.***
***நிமிர்குழல் மடவார்த் தேற்றி.***
***நிறை தவன் சூளி நல்கும்***
***திமிர் அறு பிரமதத்தற்கு***
***அளித்தனன். திரு அனாரை.****

***சமிரணன் அகன்றதன் பின்*** - வாயுதேவன் அங்கிருந்து சென்று பின்பு; ***தையலார் தவழ்ந்து சென்றே*** - அப்பெண்கள் நிலத்தில் தவழ்ந்தே சென்று; ***அரசன் மாட்டு மாழ்கி அமிர்து உகு குதலை உரைப்ப*** - தமது தந்தையான மன்னனிடம். அமுதம் போன்ற மழலை மொழிகளால் நிகழ்ந்த செய்தியைக் கூறி மயங்க; ***அன்னான் நிமிர்குழல் மடவார்த் தேற்றி*** - அரசன் வளர்ந்த கூந்தலையுடைய அவ்விளம் பெண்களைத் தேறுதல் செய்து; ***நிறைதவன் சூளி நல்கும் திமிர் அறு பிரமதத்தற்கு*** - நிறைந்த தவத்தை உடைய சூளி என்பவனது மகனாகிய மயக்கமற்ற பிரமதத்தன் என்பவனுக்கு; ***திரு அனாரை அளித்தனன்*** - திருமகளுக்கு ஒப்பான அப்பெண்களை மணம் செய்து கொடுத்தான்.

*சமிரணன்: காற்றுத்தேவன். தையலார்: அழகுடைய பெண்கள். உகு குதலை: வினைத்தொகை. குதலை: உருத்தெரியாச் சொற்கள். மாழ்கி: மயங்கி. 'அரசன்மாட்டு' இதில் மாட்டு என்பது ?ஏழனுருபாம். மடவார்: இளம் பெண்கள் தேற்றி: தேறுதல் செய்து (தேறு: பகுதி). நிறைதவன்: வினைத்தொகை. திமிர்: அகங்காரம் (மயக்கம்) இருள். திமிரம் என்பது கடை குறைந்தது. பிரமதத்தன்: பிரமனால் கொடுக்கப்பட்டவன் என்பது பொருள். ''காற்றுக் கடவுளால் இடுப்பொடிக்கப்பட்ட அந்தப் பெண்கள் நூற்றுவரும் தந்தையிடம் சென்று முறையிட - ஆறுதல் கூறித்தேற்றிப்பின் அவர்களைப் பிரமதத்தன் என்பனுக்கு மணம் செய்து தந்தான்' என்பது பொருள்.*

***403.*** **அவன் மலர்க் கைகள் நீவ.**
**கூன் நிமிர்ந்து. அழகு வாய்த்தார்.**
**புவனம் முற்றுடைய கோவும்.**
**புதல்வர் இல்லாமை. வேள்வி**
**தவர்களின் புரிதலோடும்.**
**தகவு உற. தழலின் நாப்பண்.**
**கவன வேகத் துரங்கக்**
**காதி வந்து உதயம் செய்தான்.***

***அவன் மலர்க் கைகள் நீவ*** *- பிரமதத்தன் அப்பெண்களைத் தனது மலர்க் கரத்தாலே நீவ (அவர்கள்);* ***கூன் நிமிர்ந்து அழகுவாய்த் தார்*** *- கூன் நீங்கி. அழகு பெற்றார்;* ***புவனம் முற்று உடைய கோவும்*** *- உலகம் முழுதுமுடைய மன்னனான குசநாபன்;* ***புதல்வர் இல்லாமை*** *- புத்திரப்பேறு இல்லாமையாலே;* ***வேள்வி தவர்களின் புரிதலோடும்*** *- மக்கட் பேற்றுக்குரிய வேள்வியைத் தக்க தவமுனிவர் தம்முடன் சேர்ந்து செய்யவே;* ***தகவு உறு அத்தழலின் நாப்பன்*** *- தகுதியுடைய அந்த வேள்வித்தீயின் மத்தியில் இருந்து;* ***கவன வேகத் துரங்கம் காதி*** *- வேகமுடைய குதிரையைப் பெற்ற 'காதி' என்னும் புத்திரன்;* ***வந்து உதயம் செய்தான்*** *- வந்து உதித்தான்.*

*மலர்க்கை: மலர் போன்ற கை (உவமைத் தொகை). கூன: முதுகின் வளைவு. நாப்பண்: நடு. துரங்கம்: குதிரை. செல்லுதலில் விரைவுடையது என்பதால் கவன வேகத்துரங்கம் என்றார். உதயம்: தோற்றம்; பிரமதத்தன் தனது கைகளால் நீவ. அப்பெண்கள் கூன்நீங்கி அழகு பெற்றனர். குசநாபன். தனக்கு நூறுபெண்கள் இருந்தும் ஆண்மகவில்லையே என்பதால். மக்கள் பேறு கருதி வேள்வி செய்ய. அந்த வேள்வித்தீயின் மத்தியிலே '' காதி'' என்பவன் வந்து தோன்றினான் என்க. அரசர்க்குரிய சிறப்புத் தோன்றப் பிறந்தான் என்பதைக் 'கவன வேகத் துரங்கத் காதி' என்பதுணர்த்தி நின்றது. ''வந்து உதயம் செய்தான்''. தோன்றி உதித்தான் என்க.*

***404.*** ***'அன்னவன் தனக்கு. வேந்தன்.***
***அரசொடு முடியும் ஈந்து.***
***பொன்னகர் அடைந்த பின்னர்.***
***புகழ்மகோதயத்தில் வாழும்***
***மன்னவன் காதிக்கு. யானும்.***
***கவுசிகை என்னும் மாதும்.***
***முன்னர் வந்து உதிப்ப. அந்த***
***முடியுடை வேந்தர்வேந்தன்.****

**அன்னவன் தனக்கு வேந்தன்** - *அந்தக் காதி என்னும் பெயருடைய அரச குமாரனுக்கு. தந்தையான குசநாபன்;* **அரசொடு முடியும் ஈந்து** - *ஆட்சியுடன் அதற்குரிய மணிமுடியும் தந்து;* **பொன்னகர் அடைந்த பின்னர்** - *விண்ணுலகு சென்றபின்பு;* **புகழ் மகோயத்தில் வாழும் காதிக்கு** - *புகழ்மிகுந்த மகோதயம் என்ற நகரில் அரசு புரிந்து வாழ்ந்து வந்த காதிக்கு;* **யானும் கவுசிகை என்னும் மாதும் முன்னர் வந்து உதிப்ப** - *யானும் எனக்கு முன்பு வந்துதித்த கவுசிகை என்ற பெண்ணும் வந்து பிறக்க;* **அந்த முடி உடை வேந்தர் வேந்தன்** - *மணிமுடி புனைந்த அந்த மன்னர் மன்னனான காதி வேந்தன்.*

*இது குளகப்பாட்டு. அடுத்த பாட்டுடன் பொருள் முடியும். முடி மகுடம். பொன் நகர்: சுவர்க்கம். 'பொன்' உயர்வைக் குறிக்கும் உபசாரச் சொல் 'காதிக் கியானும்' இதில் 'கி' குற்றியலிகரம். மாதர்: அழகு. பண்பாகு பெயராய்ப் பெண்களை உணர்த்தும். 'எம்முனாள்' எனப் பின்னும் கூறுவது கொண்டு. 'முன்னர் வந்து உதிப்ப' எனப்பொருள் கூறப்பட்டது. ''குசநாபமன். தனது மகனான காதிக்கு அரசும் முடியும் தந்து. பின் விண்ணுலகேக. காதிக்கு கவுசிகை என்ற மாதும். யானும் (விசுவாமித்திரன்) வந்து பிறந்தோம்.'' என்றான்.*

***405.*** ***'பிருகுவின் மதலை ஆய.***
***பெருந்தகைப் பிதாவும் ஒவ்வா.***
***இரிசிகன் என்பவற்கு***
***மெல்லியலாளை ஈந்தான்;***
***அருமறையவனும் சில்நாள்***
***அறம் பொருள் இன்பம் முற்றி.***
***விரிமலர்த் தவிசோன் தன்பால்***
***விழுத்தவம் புரிந்து மீண்டான்.****

***பிருகுவின் மதலைஆய*** - பிருகு என்பனுக்குப் புத்திரன் ஆனவனும்; ***பெருந்தகைப் பிதாவும் ஒவ்வா*** - பெருந்தகைமை வாய்ந்த தந்தையும் ஒப்பாகாத தன்மையினனுமான; ***இரிசிகன் என்பவற்கு*** - இரிசிகன் என்ற பெயர் கொண்டவனுக்கு; ***மெல்லியலாளை ஈந்தான்*** - மென்மைத் தன்மையினளான கௌசிகையை (எனது தமக்கையை) மணம் செய்து தந்தான்; ***அருமறையவனும் சில்நாள்*** - அரிய வேதங்கள் வல்ல அந்த இரிசிக முனியும் சில காலம் (அம்மங்கையுடன் வாழ்ந்து); ***அறம் பொருள் இன்பம் முற்றி*** - அற வாழ்வில். பொருளீட்டி இன்பம் துய்த்து வாழ்ந்து முடித்து. பின் வீடு பேறெய்த விரும்பி; ***விரிமலர்த் தவிசோன் தன்பால்*** - விரிந்த தாமரை மலரில் வாழ்கின்ற பிரமதேவனிடத்தே; ***விழுத்தவம் புரிந்து மீண்டான்*** - சிறந்த தவம் செய்து அங்கு அடைந்தான்.

*மதலை: விழுது. விழுதுபோன்ற மக்களைக் குறித்தது. பிதா: தந்தை. ஒவ்வா: ஒவ்வாத (ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்). முற்றி: முற்றுப்பெற்று. தவிசு: இருக்கை. விழுத்தவம்: சிறந்ததவம். புரிதல்: செய்தல். மெல்லியலாள்: மென்மைக் குணம் உடையவள். ''பிதாவும் ஒவ்வா இரிசிகன்'' என்றதால் பெருந்தகை வாய்ந்த தந்தையான பிருகுவைவிடச் சிறந்தவன் என்பது கருத்தாகும். ''இத்தகைய முனிவனான இரிசிகனுக்கு. காதிமன்னன். 'கவுசகி' என்ற தன் மகளை மணம் செய்து தந்தான். இல்லறத்தில் இனிதே வாழ்ந்து வீடு பேறடைய விரும்பிய இரிசிகன் அதற்குரிய தவம் செய்து பிரமலோகம் சேர்ந்தான்.*

***406. காதலன் சேணின் நீங்க.***
***கவுசிகை தரிக்கலாற்றாள்.***
***மீது உறப் படரலுற்றாள்.***
***விழு நதி வடிவம் ஆகி.***
***மாதவர்க்கு அரசு நோக்கி.***
***''மா நிலத்து உறுகண் நீக்கப்***

***போதுக. நதியாய்'' என்னா.***
***பூமகன் உலகு புக்கான்.****

***காதலன் சேணின் நீங்க*** - கணவனான இரிசிகன் செய்த தவப்பலனால் வான்வழி செல்வதற்குத் தன்னை விட்டு நீங்க; ***கவுசிகை தரித்தல் ஆற்றாள்*** - என் முன்னவளான கவுசிகை பொறுக்க இயலாதவளாகி; ***விழு நதி வடிவமாகி*** - பெரிய ஒரு நதிவடிவம் எடுத்துக்கொண்டு; ***மீது உறப்படரல் உற்றால்*** - மேலே போகப் புறப்பட்டாள்; ***மாதவர்க்கு அரசு நோக்கி*** - முனிவர்களுக்கு அரசனான இரிசிகன் அதனைப் பார்த்து; ***மாநிலத்து உறுகண் நீக்க*** - நிலவுலகத்துத் துன்பத்தைப் போக்க; ***நதியாய்ப் போதுக என்னா*** - ஆறாகப் பெருகிச் செல்வாயாக என்று (கூறி); ***பூமகன் உலகு புக்கான்*** - பிரமன் உலகைச் சென்றடைந்தான்.

*காதலன்: கணவன். சேண்: உயர்வு இங்கு வானைக் குறிக்கும்). தரிக்கல்: பொறுத்தல். மீது: உயர்வழி. படரல்: நகர்தல். உறுகண்: துன்பம். போதுக: போவாயாக. வியங்கோள்வினைமுற்று. பூமகன்: மலரில் இருப்பவன். புக்கான்: புகுந்தான்.*

*கணவன் விண்ணுலகேக. பொறுக்கலாற்றாத கவுசிகை நதியாகி மேலே தொடர. இரிசிகன் உலகத்துத் துன்பம் நீக்க. ஆறாகச் செல்க எனக்கூறி. பிரமனுலகு சென்றான் என்க. என்னா: என்று கூறி. செய்யா என்ற வாய்பாட்டு வினையெச்சம்.*

***407.*** **'எம் முனாள் நங்கை இந்த**
**இரு நதி ஆயினாள்' என்று.**
**அம் முனி புகல. கேளா.**
**அதிசயம் மிகவும் தோன்ற.**
**செம்மலும் இளைய கோவும்.**
**சிறிது இடம் தீர்ந்த பின்னர்.**
**'மைம் மலி பொழில் யாது?' என்ன.**
**மா தவன் கூறலுற்றான்;**

***எம்முனாள் நங்கை*** *- எனது தமக்கையாகிய கவுசிகை என்பாள்;* ***இந்த இரு நதி ஆயினாள்*** *- இந்தப் பெரிய நதிவடிவம் ஆனாள்;* ***என்று அம்முனி புகலக்கேளா*** *- என்று அந்த விசுவாமித்திர முனிவன் சொல்லக் கேட்டு;* ***செம்மலும் இளைய கோவும்*** *- தலைமகனாகிய இராமனும். இளையவனாகிய இலக்குவனும்.* ***அதிசயம் மிகவும் தோன்ற*** *- ஆச்சரியம் மிக உண்டாக;* ***சிறிது இடம் தீர்ந்த பின்னர்*** *- சிறிதுதூரம் நடந்துசென்ற பிறது (அங்கு காட்சியளித்த சோலை ஒன்றைக் கண்டு);* ***மைம்மலி பொழில்யாது என்ன*** *- மேகம் கவிந்துள்ள இந்தச் சோலை யாவது என்று கேட்க;* ***மாதவன் கூறல் உற்றான்*** *- சிறந்த தவமுனியாகிய விசுவாமித்திரன் கூறத் தொடங்கினான். 'முன்னாள்' என்பது இடைகுறைந்து 'முனாள்' என நின்றது. முன்பு பிறந்தவள் (தமக்கை) என்பது பொருள். கேளா: கேட்டு (செயா என்ற வாய் பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். செம்மல்: தலைமகன். அழகன். இளையகோ: இளங்கோ (இளவரசன்). மை: மேகம். மலி: நிறைந்த அல்லது கருமை நிறைந்த எனினுமாம். மை: கருமை. இருநதி: உரிச்சொல்தொடர்.*

*எனது தமக்கையான 'கவுசிகை' இந்த நதியானாள் என்று முனிவன் கூறக் கேட்ட இராம இலக்குவர் அதிசயித்தனர். பின்னர் சிறிது தூரம் செல்ல. எதிரே காணப்பட்ட சோலை ஒன்றைக் கண்டு. இது யாதென முனிவன் கூறலானான் என்க.*

*408. ‘**தங்கள் நாயகரின் தெய்வம்**
**தான் பிறிது இலை’ என்று எண்ணும்**
**மங்கைமார் சிந்தை போலத்**
**தூயது; மற்றும் கேளாய்;**
**எங்கள் நான்மறைக்கும். தேவர்**
**அறிவிற்கும். பிறர்க்கும். எட்டாச்**
**செங் கண் மால் இருந்து. மேல்நாள்**
**செய் தவம் செய்தது அன்றே.***

***தங்கள் நாயகரின் தெய்வம் தான்பிறிது இலை*** - *தங்களது கணவரைக் காட்டிலும் தெய்வம் வேறுஇல்லை;* ***என்றெண்ணும் மங்கைமார்*** - *என்று கருதும் பெண்ணரசிகளது;* ***சிந்தை போலத் தூயது*** - *மனத்தைப்போல (இச்சோலை) தூய்மையானது;* ***மற்றும் கேளாய்*** - *பின்னும் சொல்லுகிறேன் கேட்பாயாக;* ***எங்கள் நான் மறைக்கும்*** - *எங்களுடைய நான்கு வேதங்களுக்கும்;* ***தேவர் அறிவிற்கும்*** - *தேவர்களின் நுட்பமான அறிவுக்கும்;* ***பிறர்க்கும் எட்டாச் செங்கண்மால்*** - *மற்றவர்களுக்கும் (உள்ளம். உரை) செயல்களால் எட்டமுடியாத திருமால்;* ***இருந்து மேல் நாள்*** - *இங்குத் தங்கி முன் ஒரு காலத்திலே;* ***செய்தவம் செய்ததன்றே*** - *செம்மையான தவத்தைச் செய்த இடமல்லவா?*

*நாயகன்: தலைவன். கணவன். ‘மங்கை’ பருவப் பெயரேயாயினும் பெண்களைப் பொதுவாக இப்பெயரில் குறிப்பிடுவது மரபு. மார்: பலர்பால் விகுதி. சிந்தை: மனம். ‘எங்கள் நான்மறை’ என்றது. அறநெறி நிற்கும் அறிவுடையோர்க்கு உரியது என்பதை உணர்த்தி நின்றது. எட்டா: எட்டாத (ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்). எட்டு: பகுதி. செங்கண்மால் தவம் செய்த சிறப்புடையது இச்சோலை என்றானென்க. அன்றே: அல்லவா என்பது பொருள். அசை எனினும் பொருந்தும்.*

*409. ‘‘**பாரின்பால். விசும்பின்பாலும்.**
**பற்று அறப் படிப்பது அன்னான்**
**பேர்’’ என்பான்; ‘‘அவன் செய்மாயப்**
**பெரும் பிணக்கு ஒருங்கு தேர்வார்**

**ஆர்?’’ என்பான்; அமல மூர்த்தி**
**கருதியது அறிதல் தேற்றாம்;**
**ஈர்-ஐம்பது ஊழிக்காலம் இருந்தனன்**
**யோகத்து. இப்பால்.***

***பாரின்பால் விசும்பின் பாலும்*** - *மண்ணுலகிலும் விண்ணுலகிலும்;* ***பற்று அறப்படிப்பது*** - *(பிறப்புக்குக் காரணம் ஆன) உலகப் பற்றுக்கள் நீங்க. சொல்லப் பெறுவது;* ***அன்னான் பேர் என்பார்*** - *அத்திருமாலின் பெயர்களே என்று சொல்லிய கோசிகன் மேலும்;* ***அவன் செய் மாயப் பெரும்பிணக்கு*** - *அப்பரமன் செய்யும் மாயமாகிய பெருங்கலகத்தை;* ***ஒருங்கு தேர்வார் ஆர் என்பான்*** - *ஒரு சேரத்தெளிந்து தேர்பவர் யாரென்று சொல்லும் தெளிவுடையவர் எவரும் இலர் என்று கூறிவிட்டு;* ***அமலமூர்த்தி கருதியது*** - *களங்கமற்ற அப்பரமன் நினைத்துள்ளதை;* ***அறிதல் தேற்றாம்*** - *அறிந்து சொல்லும் தெளிவில்லேன்;* ***ஈரைம்பது ஊழிக்காலம்*** - *நூறு யுகம்வரையும்;* ***இருந்தனன் யோகத்து இப்பால்*** - *இவ்விடத்திலே யோகத்தில் இருந்தான் என்றான்.*

*பார்: நிலம். விசும்பு: வான். 'பால்' இரண்டிடத்தும் ஏழனுருபுகள். பற்று: ஆசை (முதல்நிலைத் தொழிற்பெயர்). பெரும்பிணக்கு: இன்ப துன்பங்களைத் துய்க்கச் செய்யும் பெருங்கலகம் என்பர். என்பாம்: என்று சொல்வோம். மூர்த்தம்: வடிவம். அமலம்: குற்றமற்றது. தேற்றாம்: தேறமாட்டோம். ஊழி: யுகம் (பேரளவைக் காலம்). ஈரைம்பான்: இரண்டு ஐம்பது (எனவே நூறு). இப்பால்: இவ்விடம். இருந்தனன்: இருந்தான்.*

*விண்ணும் மண்ணும் பற்றுக்கள் நீங்கச் சொல்லுவது அப்பரமன் பெயர்களே. உலகத்தவரை இன்ப. துன்பங்களை அடையச் செய்ய. அவன் செய்யும் மாயப் பிணக்கை எல்லாம் தேர்ந்து தெளிவார் யார்? அத்தகைய பெருமான் ஒரு நூறு யுகங்கள் இவ்விடம் யோகத்தில் இருந்தான் என்க.*

***410. 'ஆனவன் இங்கு உறைகின்ற அந்நாள்வாய்***
***ஊனம் இல் ஞாலம் ஒடுங்கும் எயிற்று ஆண்***
***ஏனம் எனும் திறல் மாவலி என்பான்.***
***வானமும் வையமும் வவ்வுதல் செய்தான்;***

***ஆனவன் இங்கு உறைகின்ற அந்நாள்வாய்*** - *அத்தகைய திருமால் இங்கு வாழ்ந்து வருகின்ற அந்தக் காலத்திலே;* ***ஊனம் இல்ஞாலம் ஒடுங்கும் எயிற்று*** - *குற்றமற்ற இவ்வுலகம் ஒடுங்கத் தகுந்த இரு பற்களை உடைய;* ***ஆண் ஏனம் எனும் திறல்*** - *ஆதிவராகத்தோடு ஒப்பு கூறத்தக்கவன் இவனே என்னுமாறு;* ***மாவலி என்பான்*** - *மகா பலி என்னும் பெயருடைய அசுரர்குலத் தலைவன்;* ***வானமும் வையமும்*** - *விண்ணுலகத்தையும். மண்ணுலகத்தையும்.* ***வவ்வுதல் செய்தான்*** - *கவர்ந்து தனக்குரியதாக்கிக் கொண்டான். ஆன+அவன்: ஆனவன் அகரம் தொக்கது. 'அந்நாள்வாய்' இதில் 'வாய்' ஏழனுருபு. ஊனம்: குறைபாடு. 'எயிறு' இங்குப் பற்களாகும். 'ஞாலம் ஒடுங்கும் எயிற்று ஆண் ஏனம்' உலகத்தைத் தனது ஒற்றைக் கொம்பிலே தாங்கிய வராக மூர்த்தியை இவ்வாறு சிறப்பிக்கிறார். ''பன்றியால் படி எடுத்த பாழியான்'' என்பர்; அது உன். வென்றியார் உன்னெயிற்றின் மென்துகள் போன்று இருந்ததால்'' என்ற அஷ்டப் பிரபந்தப் பாடல் ஒப்பிடத் தக்கதாம். வையம்: பூமி.*

*ஆதிவராகத்தை ஒத்த வலிமைபடைத்த மகாபலி. விண்ணையும். மண்ணையும் கவர்ந்த தனக்குச் சொந்தமாக்கிக் கொண்டான் என்க.*

***411. 'செய்தபின். வானவரும் செயல்ஆற்றா***
***நெய் தவழ் வேள்வியை முற்றிட நின்றான்;***
***ஐயம் இல் சிந்தையர் அந்தணர்தம்பால்.***
***வையமும் யாவும் வழங்க. வலித்தான்;***

***செய்த பின்*** - *மாவலி அவ்வாறு விண்ணையும் மண்ணையும் வவ்வுதல் செய்த பிறகு;* ***வானமும் செயல் ஆற்றா*** - *தேவர்களும் செய்ய இயலாத;* ***நெய்தவழ் வேள்வியை*** - *நெய்மிகுந்து அவி வழங்கும் வேள்வியை;* ***முற்றிட நின்றான்*** - *செய்து நிறைவேற்ற நிலைத்தவனாகி;* ***ஐயம் இல் சிந்தையர்*** - *ஐயமில்லாத உள்ளம் உடையவராகிய;* ***அந்தணர் தம்பால்*** - *அந்தணர்களிடத்திலே;* ***வையமும் யாவும்*** - *பூமியையும் மற்றெல்லாவற்றையும்;* ***வழங்க வலித்தான்*** - *வழங்கத் துணிந்தான்.*

*செயல்: செய்தல் (?தொழிற்பெயர்). ஆற்றா: முடியாத. 'நெய்தவழ் வேள்வி' என்று குறிப்பால் 'ஊன்' விலக்கியது குறிக்கப்பட்டது. நின்றான்: முற்றெச்சம் (நின்றானாகி). வலித்தான்: துணிவு கொண்டான். தேவர்களும் செய்ய முடியாத வேள்வியைச் செய்து முடிக்க நினைத்து - அந்த வேள்விக் காலத்தே வையமும் யாவும் - ஐயமில் சிந்தையரான அந்தணருக்கு வழங்கத் துணிந்தான் என்பது கருத்து.*

***412. 'ஆயது அறிந்தனர் வானவர். அந் நாள்;***
***மாயனை வந்து வணங்கி இரந்தார்;***
***''தீயவன் வெந் தொழில் தீர்'' என நின்றார்;***
***நாயகனும். அது செய்ய நயந்தான்.***

***வானவர் ஆயது அறிந்தனர்*** - *தேவர்கள் மாவலியின் அந்தச் செய்தியைத் தெரிந்தனர்;* ***அந்நாள் மாயனை வந்து வணங்கி நின்றார்*** - *அப்போது திருமாலை வந்து வணங்கி நின்றனர்;* ***தீயவன் வெந்தொழில் தீர் என இரந்தார்*** - *கொடியவனான மாவலியினது கொடுந் தொழிலைத் தீர்ப்பாய் எனக் கெஞ்சிக் கேட்டனர்;* ***நாயகனும் அது செய்ய நயந்தான்*** - *தலைவனாகிய திருமாலும் அக்காரியத்தைச் செய்ய ஒருப்பட்டான். ஆய+அது: ஆயது; அகரம் தொக்கது. அறிந்தனர்: முற்றெச்சம். மாயன்: மாயச் செயல்களில் வல்லவன். இரத்தல்: குறை வேண்டல். வெந்தொழில்: கொடுந்தொழில் (பண்புத் தொகை). நாயகன்: உலகத் தலைவன். நயத்தல்: சொல்லத் தொடங்குதல்*

*மாவலியின் அச்செயலறிந்த வானவர் திருமாலிடம் வந்து வணங்கி. இத்தீயவனது கொடுந் தொழிலைத் தீர்க்க வேண்ட மாயவனும் அதைச் செய்ய ஒருப்பட்டான் என்க.*

***413. ‘காலம் நுனித்து உணர் காசிபன் என்னும்***
***வால் - அறிவற்கு அதிதிக்கு ஒரு மகவு ஆய்.***
***நீல நிறத்து நெடுந்தகை வந்து. ஓர்***
***ஆல் அமர் வித்தின் அருங் குறள் ஆனான்.***

***காலம் நுனித்து உணர்*** *- முக்காலங்களையும் சூக்குமமாகக் கணித்து எதனையும் உணரவல்ல;* ***காசிபன் என்னும் வால் அறிவற்கு*** *- காசிபன் என்ற பெயருடைய மெய்யறிவுடைய முனிவனுக்கும்;* ***அதிதிக்கும் ஒருமகவாய்*** *- அவனது மனைவியான அதிதி என்பவளுக்கும் ஒப்பற்ற குழந்தையாக;* ***நீல்நெடுந்தகை வந்து*** *- நீல நிறத்தை உடைய திருமால் வந்து பிறந்து;* ***ஓர் ஆல்அமர் வித்தின்*** *- ஆலமரம் நுண்ணுருவில் தங்கியிருக்கத் தகுந்த அந்த ஆலம் விதையை ஒத்து;* ***அரும் குறள் ஆனான்*** *- அரிய குறள் உருவத்தில் வளர்ந்து வந்தான்.*

*காலம்: முக்காலங்களையும் உணர்த்தி நின்றது. நுனித்துணர்: நுண்மையாய் அறிதல். காசிபன்: பிரமனுக்கு மரீசி என்பனது மகன். வாலறிவன்: மெய்யறிவு படைத்தவன். நீல நிறத்து நெடுந்தகை. திருமால். ஒரு பெரிய ஆல மரத்தினது முழு வளர்ச்சிக்குரிய நுண்ணிய உறுப்புக்கள் அதன் வித்தினுள் அடங்கியிருப்பது போலப் பின்னர் எடுக்கத் தக்க ‘ஓங்கி உலகளந்த’ திருமாலின் பேருருவத்தை உள்ளடக்கியிருப்பதை உணர்த்தும். ‘‘ஆல் அமர் வித்தின் அருங்குறள்’’ என்ற உவமையின் நயமுணர்க. குறள்: இரண்டடி. எனவே. ‘குறளன்’ குறுகிய வடிவமுடைய வாமன மூர்த்தி என்க.*

***414. ‘முப்புரிநூலினன். முஞ்சியன். விஞ்சை***
***கற்பது ஓர் நாவன். அனல் படு கையன்.***
***அற்புதன். - அற்புதரே அறியும் தன்***
***சிற்பதம் ஒப்பது ஓர் மெய்க்கொடு - சென்றான்.***

***அற்புதன்*** *- ஆச்சரிய மாயையில் வல்லவனாகிய திருமால்;* ***முப்புரி நூலினன்*** *- மூன்றாகத் திரிக்கப்பட்ட பூணூலை அணிந்தவனாகியும்;* ***முஞ்சியன்*** *- முஞ்சி என்னும் புல்லாலாகிய அரைநாணை உடையவனாகியும்;* ***விஞ்சை கற்பது ஓர் நாவன்*** *- வேதவித்தையைச் சொல்லுகின்ற நாவைக் கொண்டவனாகவும்;* ***அனல்படு கையன்*** *- அனல் தோன்றும் கையை உடையவனாவும்;* ***அற்புதரே அறியும்*** *- அற்புத ஞானம் வாய்ந்த மேலோர்களே அறிந்து கொள்ளத் தகுந்த தான;* ***தன் சிற்பதம் ஒப்பது ஓர்*** *- தனது ஞான நிலைக்கு ஒப்பதாகிய ஒரு;* ***மெய்க்கொடு சென்றான்*** *- வடிவத்தை எடுத்துக் கொண்டு மாவலியின் வேள்விச் சாலைக்குச் சென்றான்.*

*முப்புரி நூல்: பூணூல். புரிதல்: திரித்தல். முஞ்சி: ஒரு வகைப்புல். பிரமச்சாரிகள் அணிய வேண்டிய அரை நாண் என்பர். ‘அனல் படுகையன்’ பிரமசரிய நோன்புக்குரிய சமிதாதானம் என்னும் வேள்வியைச் செய்யும் பழக்கத்தால் தோன்றிய அவ்வனல் தோன்றும் கையை உடையவன் என்பது பொருள். ‘கொடு’ கொண்டு என்பதன் இடைக்குறை. விஞ்சை கற்பதொர் நா: வேத மந்திரங்களாகிய வித்தையை எப்போதும் சொல்லிக் கொண்டிருக்கும் நாவாகும்.*

**415. ‘அன்று அவன் வந்தது அறிந்து. உலகு எல்லாம்**
**வென்றவன். முந்தி வியந்து எதிர் கொண்டான்;**
**‘‘நின்தனின் அந்தணர் இல்லை; நிறைந்தோய்!**
**என்தனின் உய்ந்தவர் யார் உளர்?’’ என்றான்.**

**அன்று அவன் வந்தது அறிந்து** - அன்று அந்த வாமனன் வந்ததை அறிந்து; **உலகு எல்லாம் வென்றவன்** - உலகையெல்லாம் வென்றவனான மாவலி; **முந்தி விரைந்து எதிர் கொண்டான்** - முற்பட விரைந்து சென்று எதிர்கொண்டு அழைத்து வந்தான். பின்பு; **நிறைந்தோய்** - நிறைந்த தவம் உடைய மேலோனே; **நின்தனில் அந்தணர் இல்லை** - உன்னைவிடச் சிறந்த அந்தணர் வேறில்லை; **என்தனின் உய்ந்தவர் யார் இனி என்றான்** - என்னைவிட உய்வு பெற்றவர் இனி இங்கு யார் இருக்கிறார்கள் என்றான்.

உலகெல்லாம் வென்றவன்: மகாபலிச் சக்கரவர்த்தி. முந்தி: முன். நின்தன் என்தன் இவைகளில் ‘தன்’ இரண்டும் ‘அசைகள்’ ‘‘எதிர் கொண்டான்’’ எதிர் கொண்டு. அழைத்து வந்தான் என்பது பொருள். நிறைந்தோய்: தவத்தாலும். தன்மையாலும் நிறைந்தவன் என்பதை உணர்த்தும். வாமனன் வந்ததை அறிந்த மகாபலி எதிர்சென்று அழைத்து வந்து நிறை தவத்தோய் நின்னில் உயர்ந்தாருமில்லை. என்னில் உய்ந்தாருமில்லை எனக் கூறி மகிழ்ந்தான் என்க.

**416. ‘ஆண்தகை அவ் உரை கூற. அறிந்தோன்.**
**‘‘வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசி.**
**நீண்ட கையாய்! இனி. நின்னுழை வந்தோர்**
**மாண்டவர்; அல்லவர் மாண்பு இலர்’’ என்றான்.**

**ஆண்தகை அவ்வுரை கூற** - வீரம் மிக்க மாவலி அவ்விதமாகச் சொல்லவே; **அறிந்தோன்** - அனைத்தும் அறிந்தவனாகிய அவ்வாமனமூர்த்தி; **வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசி நீண்ட கையாய்** - வேண்டி வந்தவர்களது விருப்பத்துக்கு மேற்படும்படி வாரி வழங்கி அதனால் நீண்டிருக்கும் கைகளை உடையோய்!; **இனி நின் உழை வந்தோர் மாண்டவர்** - உன்னிடம் வந்தவர்கள் மாண்புடையவராவர்; **அல்லவர் மாண்பிலர் என்றான்** - அல்லாதவர் மாட்சியில்லாதவரே என்றான்.

ஆண்தகை: வீரம் பொருந்தியவன் (இங்கு மாவலி). தனக்குத் தீங்கு வருவது கண்டும் மேற்கொண்ட செயலில் ஊக்கமுடையவன் என்பதைக் குறிக்கும். வேண்டினர்: வேண்டி வந்த இரவலர். வேட்கை: விருப்பம். நீண்ட கை: கொடையில் நிண்ட கை; (தருகை நீண்ட கை). ‘நின்னுழை’ இதில் ‘உழை’ ஏழனுருபு. வீசுதல்: வழங்குதல்.

மாவலி அவ்வாறு கூற. வாமனன். வேண்டிவந்து கேட்பவர்களின் விருப்பத்துக்கும் மிகுதியாக வழங்கும் நீண்ட கையுடையவனே! உன்னிடம் வந்ததடைந்தவர்கள் மாண்புடையர். அல்லாதவர்கள் மாண்பில்லார் என்று பாராட்டினான் என்பது கருத்து.

***417. 'சிந்தை உவந்து எதிர். ''என் செய?'' என்றான்;***
***அந்தணன். ''மூஅடி மண் அருள். உண்டேல்;***
***வெந் நிறலாய்! இது வேண்டும்'' எனாமுன்.***
***''தந்தனென்'' என்றனன்; வெள்ளி. தடுத்தான்;***

***சிந்தை உவந்து*** - *(மாவலி இதைக் கேட்டு) மனம் மிக மகிழ்ந்து;* ***என் செய என்றான்*** - *மறு மொழியாக நான் என்ன செய்யவேண்டும் என்று கேட்டான்;* ***அந்தணன்*** - *அதைக் கேட்ட வாமனனாக வந்த திருமால்;* ***வெந்திறலாய்*** - *கொடிய வலிமை வாய்ந்த மாவலியே;* ***உண்டேல் மூவடிமண் அருள் இது வேண்டும்*** - *உள்ளதாயின் என் காலால் மூன்றடி மண் தருவாயாக இதுவே வேண்டும்;* ***எனா முன் தந்தனென் என்றான்*** - *என்று சொல்லுதற்கு முன்பே (மாவலி) தந்தேன் என்றான்;* ***வெள்ளிதடுத்தான்*** - *அப்போது அசுர குருவாகிய சுக்கிரன் த்ராதே என்று தடுத்தான்.*

*சிந்தை: மனம். உவந்து: மிக மகிழ்ந்து. உண்டேல்: உள்ளதாயின் (என்றது உற்சாகத்தின் பொருட்டு). வெந்திறல்: வெம்மையாகிய திறல் (பண்புத்தொகை) எனா: செயா என்ற வாய்பாட்டு வினையெச்சம். எனாமுன்: என்று கூறி முடிப்பதற்கு முன்பே. தந்தனென்: தந்தேன் விரைவு பற்றி வந்த இறந்த கால வினைமுற்று. தருவேன் என்பது பொருள். வழு அமைதி. சுக்கிரன் என்ற வடமொழிப் பெயரின் தமிழாக்கம் வெள்ளி.*

***418. ''கண்ட திறந்து இது கைதவம்; ஐய!***
***கொண்டல் நிறக் குறள் என்பது கொள்ளேல்;***
***அண்டமும் முற்றும் அகண்டமும். மேல்நாள்.***
***உண்டவன்ஆம்; இது உணர்ந்துகொள்'' என்றான்.***

***ஐய! இது கண்ட திறத்திது கைதவம்*** - *தலைவனாகிய மாவலியே! ஆராய்ந்து உணர்ந்தால் இந்த அந்தண வடிவம் கபடமானது;* ***கொண்டல் நிறக் குறள் என்பது கொள்ளேல்*** - *(இதனை) மேகம் போன்ற நிறமுடைய குறள் வடிவம் என நினைக்காதே;* ***அண்டமும் முற்றும் அகண்டமும்*** - *இந்தப் பூமியையும் அதனைச் சூழ்ந்துள்ள பேரண்டங்களையும்;* ***மேல் நாள் உண்டவன் ஆம்*** - *முன் ஒரு காலத்திலே உண்டவனாகிய திருமாலே ஆகும்;* ***இது உணர்ந்து கொள் என்றான்*** - *இதை அறிந்து கொள்வாய் என்று கூறினான்.*

*திறம்: உணர்ச்சித் திறம். கைதவம்: பொய்மை. கொண்டல்: மேகம். குறள்: குறுகிய வடிவம். கொள்ளேல்: கொள்ளாதே. எதிர்மறை ஏவல் வினைமுற்று. முற்றுதல்: சூழ்தல். அல்லது வளைதல். கண்டறிந்து: ஆராய்ந்து உணர்ந்த போது. அண்டம்: உலகம். அகண்டம்: பேரண்டம்.*

*அசுர குருவாகிய சுக்கிரன். மாவலியை நோக்கி. ஐய! ஆராய்ந்துணர்ந்தல் இந்த வடிவம் வஞ்சகம்; பொய்மையானது. கொண்டல் நிறத்துக் குறள் வடிவம் என்று எண்ணாதே. அண்டமும் அகண்டமும் உண்டவனான திருமாலே என்பதைத் தெரிந்துகொள் என்றான் என்பது கருத்து.*

***419. ''நினைக்கிலை; என் கை நிமிர்ந்திட வந்து.***
***தனக்கு இயலாவகை தாழ்வது. தாழ்வு இல்***
***கனக் கரியானது கைத்தலம் என்னின்.***
***எனக்கு இதன்மேல் நலம் யாதுகொல்?'' என்றான்.***

***நினைக்கிலை*** - *சுக்கிரனே! நீ நினைத்துப் பார்த்துக் கூறினாயில்லை;* ***என் கை நிமிர்ந்திட*** - *என்னுடைய கை மேலாக நிமிர்ந்து நிற்க;* ***தனக்கு இயலா வகை வந்து தாழ்வது*** - *தனது தன்மைக்குப் பொருந்தாத விதத்தில் தானே வந்து என் முன் தாழ்ந்து நிற்பது;* ***தாழ்வு இல் கனக் கரியானது கைத்தலம் என்னின்*** - *எவ்விதத்திலும் தாழ்வில்லாத மேகம் போன்ற கரிய நிறத்தை உடைய திருமாலின் கை என்றால்;* ***எனக்கு இதன்மேல் நலம்*** - *எனக்கு இதைவிட மேலான நன்மை;* ***யாது கொல் என்றான்*** - *ஏது இருக்கிறது என்று மாவலி கூறினான்.*

*நினைக்கிலை: நினைத்துப் பார்த்துச் சொல்லவில்லை. நிமிர்ந்து: ஓங்கி. மேலாக 'இயலா வகை' இதில் 'இயலா' என்பது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். 'தாழ்வது......கைத்தலம்' என்று முடிக்க. கனம்: மேகம். யாது: எது. கைத்தலம். கை; இங்கு உள்ளங்கையைக் குறித்து நின்றது. யாசிப்பவர் கையை விரித்து ஏற்றல் இயல்பாதலின் என்க. மேல்நலம்: மேலான நன்மை. யாது கொல் இதில் 'கொல்' எதிர் மறைப் பொருளை உணர்த்தி நின்றது.*

*என்கை உயர்ந்து மேலே நிற்க. தானே வந்து என்முன் தாழ்ந்து நிற்பது - தனக்குப் பொருந்தாத வகையிலே. வாமனனாக வந்த திருமாலின் கை என்றால் இதைவிட மேலான நன்மை எது இருக்கிறது என்றான். மாவலி என்பது கருத்து.*

***420. ''துன்னினர் துன்னலர் என்பது சொல்லார்.***
***முன்னிய நல் நெறி நூலவர்; 'முன்வந்து.***
***உன்னிய தானம் உயர்ந்தவர் கொள்க'***
***என்னின். இவன் துணை யாவர் உயர்ந்தார்?***

***நன்னெறி முன்னிய நூலவர்*** - *நல்ல நெறியினையே நினைந்துள்ள நூலறிவு வாய்ந்த பெரியோர்கள்;* ***துன்னினர் துன்னலர் என்பது சொல்லார்*** - *நெருங்கியவர். நெருங்காதவர் என்ற வேறுபாடு கருதார்;* ***உன்னிய தானம்*** - *தாம் செய்வதாக நினைத்த தானப் பொருள்;* ***உயர்ந்தவர் முன்வந்து கொள்க*** - *உயர்ந்தோர் முற்பட வந்து கொள்க;* ***என்னின்*** - *என்று சொல்லிவிட்ட பிறகு அதனைப் பெறவந்திருக்கும் பலருள்ளும்;* ***இவன் துணை யாவர் உயர்ந்தார்*** - *இந்த வாமனனுக்கு இணையாகக் கல்வி கேள்விகள் வல்ல உயர்ந்தோர் யாருண்டு?*

*துன்னினர்: நெருங்கியவர் அல்லது உறவினர். துன்னலர்: பகைவர். சொல்லார்: சொல்லாதவராகி (முற்றெச்சம்). நூலவர்: நூலறிவு வாய்ந்த மேலோர். உன்னிய: நினைத்த. தானம்: கொடை. கொள்க: வியங்கோள் வினைமுற்று. துணை: ஒப்பு யாவர்: யார்.*

*நன்னெறி கருதிய மேலோர் வேண்டியவர் வேண்டாதவர் என்ற வேறுபாட்டை எண்ணாது. தாம் செய்ய நினைத்த தானத்தை உயர்ந்தோர் கொள்க என்று சொல்லுவராயின். இந்த வாமனனை விட வேறு உயர்ந்தோர் எவருண்டு என்றான் மாவலி என்பது கருத்து.*

***421. ''வெள்ளியை ஆதல் விளம்பினை. மேலோர்***
***வள்ளியர் ஆகில் வழங்குவது அல்லால்.***
***எள்ளுவ என் சில? இன் உயிரேனும்***
***கொள்ளுதல் தீது; கொடுப்பது நன்றால்.***

***வெள்ளியை ஆதல் விளம்பினை*** *- நீ வெள்ளறிவுடையனாதலின். உன் இயற்கைக்கேற்ப சொல்லினை;* ***மேலோர்*** *- மேன்மைக் குணம் உடைய பெரியோர்கள்;* ***வள்ளியர் ஆக*** *- தாம் வள்ளமை உடையோராயின்;* ***இன் உயிரேனும்*** *- தமது இனிய உயிரையே என்றாலும்;* ***வழங்குவர் அல்லால்*** *- கொள்வோர்க்குக் ?கொடுப்பாரே அல்லாமல்;* ***எள்ளுவ என்சில*** *- சில கூறி பரிகசிப்பரோ?;* ***கொள்ளுதல் தீது கொடுப்பது நன்று*** *- பிறர்பால் ஏற்றல் தீமை ஈதலே நன்மையாகும்.*

*வெள்ளியை: பெயருக்கேற்ப. வெள்ளறிவுடையவன் என்று நயம்படக் கூறினார். வள்ளியர்: வள்ளன்மை உடையோர். கொள்ளுதல் தீது கொடுப்பது நன்று 'நல்லாறெனினும்' கொளல் தீது மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று'' என்ற திருக்குறள் கருத்து அமைந்த பாட்டிது. 'எள்ளுவ என் இதில் 'என்' வினாப் பொருட்டு. விளம்பினை: முன்னிலை வினைமுற்று. ஆல்: அசை.*

***422. ''மாய்ந்தவர் மாய்ந்தவர் அல்லர்கள்; மாயாது***
***ஏந்திய கைகொடு இரந்தவர்;- எந்தாய்! -***
***வீந்தவர் என்பவர்; வீந்தவரேனும்.***
***ஈந்தவர் அல்லது இருந்தவர் யாரோ?***

***மாய்ந்தவர் மாய்ந்தவர் அல்லர்கள்*** *- இறந்தவர்கள் இறந்தவர்களாக எண்ணப்படுபவர்கள் அல்லர்;* ***மாயாது ஏந்திய கை கொடு இரந்தவர்*** *- இழிவு வந்த போதும் இறந்து படாமல் ஏந்திய கைகளைக் கொண்டு. வசதி உள்ளவர் முன் சென்று யாசிப்பவர்களே;* ***வீழ்ந்தவர்*** *- இறந்தவர்களாகக் கருதப்படுவோராவர்;* ***எந்தாய் வீந்தவ ரேனும்*** *எனது தந்தைக் கொப்பானவே! பருவுடல் மறைந்து இறந்தவரே எனினும்;* ***இருந்தவர் -*** *உயர்ந்தவர்தம் மனத்தில் மறையாது புகழுடம்புடன் இருந்தவர்கள்;* ***ஈந்தவரே அல்லது யாரே -*** *நாடிவந்தோர்க்கு ஈந்தவரே அல்லாது வேறு யார்?*

*தனது ஆசிரியனான வெள்ளியை எந்தையே என்றது மரபு நோக்கி என்க. ‘இறந்தவர் இறந்தவரன்று. இழிவு நேர்ந்த போதும்’ இறந்து படாமல் பிறரிடம் யாசித்து நிற்பவரே இறந்தோர். ‘கொடையில் சிறந்தோர் தம் பருவுடல் மறைந்தாலும் புகழுடம்புடன் என்றும் இருப்பவர் ஆவர்’ என்பது கருத்து. மாய்ந்தவர். வீந்தவர். இரண்டும் இறந்தோர் என்ற பொருள் உடையன. ‘கை கொடு’ இதில் ‘கொடு’ என்பது கொண்டு என்பதன் இடைக்குறை. ‘யாரே’ இதில் ஏகாரம் எதிர்மறைப் பொருள் தந்து நின்றது. ‘’மாயாது. ஏந்திய கை கொடு இரந்தவர்’’ என்றது இரத்தலின் இழிவை உணர்த்திற்று’’ ‘மன்னா உலகத்து’ என்ற புறப்பாடல் ஒப்பு நோக்கத்தக்கது.*

***423.** **‘’அடுப்ப வரும் பழி செய்ஞ்ஞரும் அல்லர்;***
***கொடுப்பவர் முன்பு. ‘கொடேல்’ என நின்று.***
***தடுப்பவரே பகை; தம்மையும் அன்னார்***
***கெடுப்பவர்; அன்னது ஓர் கேடு இலை’’ என்றான்.***

***அடுப்ப அரும்பழி செய்ஞ்ஞரும் அல்லர்** - பிறர் அழியும்படி பழிச்செயல் செய்யும் தீத்தொழிலுடையோர் பகைவரல்லர்; **கொடுப்பவர் முன்பு** - கொடுப்பவருக்கு எதிரே நின்று கொண்டு; **கொடேல் என நின்று தடுப்பவரே பகை** - கொடுக்காதே என்று கூறித் தடுப்பவரே பகைவராவார்; **அன்னார் தம்மையும் கெடுப்பவர்** - அத்தகையோர் கொள்வாரையும் கொடுப்பாரையுமல்லாது தம்மையும் கெடுத்துக் கொள்பவரே ஆவர்; **அன்னது ஓர் கேடு இலை என்றான்** - (ஈவது விலக்கும்) அதனை ஒத்த கேடு வேறில்லை என்றான். அடுப்ப: கெட. பழி: பாவச் செயல். செய்ஞ்ஞர்: செய்வோர். கொடேல்: எதிர்மறை வியங்கோள். அன்னது: போன்றது. அன்னர்: அத்தகையோர். இலை: இல்லை என்பதன் இடைக்குறை. பழிபாவங்களைச் செய்வோர் பகைவரல்லர். கொடுப்பதைத் தடுப்பவரே பகைவராவார். கொள்வோரையும். கொடுப்போரையும் அல்லாது தடுப்போர் தம்மையே கெடுத்துக் கொள்வோராவார் என்பது கருத்து. 30*

***424.** **‘’கட்டுரையின். தம கைத்து உள போழ்தே***
***இட்டு. இசைகொண்டு. அறன் எய்த முயன்றோர்***
***உள் தெறு வெம் பகைஆவது உலோபம்;***
***‘விட்டிடல்’ என்று விலக்கினர் தாமே.’***

***தமகைத்து உள போழ்தே** - தமது செல்வம் இருக்கும் காலத்திலே; **இட்டு இசை கொண்டு** - இரப்போர்க்கு ஈந்து புகழ் பெற்று: **அறன் எய்த முயன்றோர்** - அறத்தை அடைய முயல்பவர்களான அறவாளர்; **உள்தெறு வெம்பகை யாவது உலோபம்** - மனத்தை அழிக்கும் கொடிய பகையாய் இருப்பது உலோப குணமாகும்; **விட்டிடல் என்று** - (அதனை) விட்டுவிட வேண்டும் என்று; **தாம் கட்டுரையின் விலக்கினர்** - (மேலோர்) நீதி நூல்களில் விளக்கிக் கூறியுள்ளனர்.*

*கட்டுரை: நீதி நூல் (வரையறுத்த உரைகள் என்பது பொருள்.) கைத்து: பொருள் (செல்வம்). இட்டு: இரப்போர்க்குக் கொடுத்து. இசை: புகழ். முயன்றோர்: வினையாலணையும் பெயர். உள்தெறு: உள்ளத்தை அழித்து. உலோபம்: ஈகையின்மை (உளப்பரும் பிணிப்பு அரு உலோபம் ஒன்றுமே அளப்பருங்குணங்களை அழிக்குமாறு போல் - எனத் தாடகை வதைப்படலத்தும் கூறுவது நினைவு கூரத்தக்கது. விட்டிடல்: விட்டு விடுக. அல்லீற்று வியங்கோள் வினைமுற்று. செல்வம் இருக்கும் போதே ஏற்பவர்களுக்கு ஈந்து புகழ் பெற வாழ வேண்டும். உள்ளத்தை அழிக்கும் கொடிய பகை உலோபம். அதனை விட்டொழிக்க வேண்டும் என்பதே நீதி நூல்களின் துணிவு என்பது கருத்து.*

***425.*** **'எடுத்து ஒருவர்க்கு ஒருவர் ஈவதனின் முன்னம்**
**தடுப்பது நினக்கு அழகிதோ. தகவு இல் வெள்ளி?**
**கொடுப்பது விலக்கு கொடியோய் உனது சுற்றம்**
**உடுப்பதுவும் உண்பதுவும் இன்றிவிடுகின்றாய்!***

**தகவு இல்வெள்ளி** - *பெருந்தன்மை இல்லாத சுக்கிரனே;* **ஒருவருக்கு ஒருவர் எடுத்து ஈவதனின் முன்னம்** - *நாடி வந்திருக்கும் ஒருவருக்கு உடையவர் ஒருவர் பொருளை எடுத்துக் கொடுப்பதற்கு முன்பு;* **தடுப்பது நினக்கு அழகிதோ** - *கொடுக்க வேண்டாமெனத் தடுப்பது உனக்கு அழகாகுமோ?;* **கொடுப்பது விலக்கு கொடியோய்** - *ஈவதை விலக்கும் கொடிய குணம் கொண்டவனே!;* **உனது சுற்றம்** - *உன்னைச் சார்ந்து நிற்கும் உனது சந்ததியானது;* **உடுப்பது?வும் உண்பதுவும் இன்றி** - *உடுக்கத் துணியும். உண்ண உணவும் இல்லாமல்;* **விடுகின்றாய்** - *விடுகின்றாய் என்பதை அறிவாயாக.*

*''கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம் - உண்பதூஉம் இன்றிக் கெடும்'' என்ற குறளை நினைந்து பாடிய செய்யுள் இது. ஈவது: கொடுப்பது 'அழகிதோ' இதில் ஓகாரம் எதிர்மறை வினாப் பொருள் தந்து நின்றது. தகவு: தகைமை. சுற்றம்: இனத்தார். கொடுப்பதைத் தடுத்த வெள்ளியைத் தகவில் வெள்ளி என்றார்.*

***426.*** **முடிய இம் மொழி எலாம்**
**மொழிந்து. மந்திரி.**
**''கொடியன்'' என்று உரைத்த சொல்**
**ஒன்றும் கொண்டிலன்;**
**''அடி ஒரு மூன்றும். நீ.**
**அளந்து கொள்க'' என.**
**நெடியவன் குறிய கை**
**நீரில் நீட்டினான்.**

***இம்மொழி யெலாம் முடிய மொழிந்து*** - இத்தகைய நீதிகளை எல்லாம் முற்றும் எடுத்துச் சொல்லி; ***மந்திரி கொடியன் என்று உரைத்த சொல்*** - அமைச்சனும். புரோகிதனுமான சுக்கிரன் வாமனனைக் கொடியன் என்று கூறிய சொற்களை; ***ஒன்றும் கொண்டிலன்*** - ஒரு சிறிதும் ஏற்றுக் கொள்ளாதவனாகி; ***நீ அடி ஒரு மூன்றும்*** - (வாமனனைப் பார்த்து) நீ என்னைக் கேட்ட அந்த மூன்றடி அளவுள்ள நிலத்தை; ***அளந்து கொள்க என*** - உனது காலால் அளந்து கொள்க என்று சொல்ல; ***நெடியவன் குறிய கை*** - திருமால் தனது குறுங்கைகளை; ***நீரில் நீட்டினான்*** - மாபலி வார்த்த தான நீரில் நீட்டினான்.

*முடிய: முடிவு பெற. 'மொழி' என்பது சொல்வாகு பெயராய் நீதிமொழிகளை உணர்த்தி நின்றது. சுக்கிரன் ஆசிரியனும் அமைச்சனுமாம். 'ஒன்றும்' இங்குச் சிறிதும் என்று பொருள் தந்து நின்றது. 'ஒரு' சிறுமை குறித்த சொல்லாகும். நெடியவன்: திருமால். இங்குக் குறளுருவான வாமன வடிவத்திலேய - பின் எடுக்கப் போகும் பேருருவம் அடங்கியிருக்கிறது என்பதை உணர்த்த ''நெடியவன் குறியகை'' என்றார் என்க.*

***427. கயம் தரு நறும் புனல் கையில் தீண்டலும்.***
***பயந்தவர்களும் இகழ் குறளன். பார்த்து எதிர்***
***வியந்தவர் வெருக் கொள. விசும்பின் ஓங்கினான்***
***உயர்ந்தவர்க்கு உதவிய உதவி ஒப்பவே.***

***கயம் தரு நறும் புனல்*** - குளத்தின் நறுமணமுள்ள அந்தத் தான நீர்; ***கையில் தீண்டலும்*** - தனது கைகளில் தீண்டபப்பட்டவுடனே; ***பயந்தவர்களும் இகழ் குறளன்*** - பெற்றவரும் இகழும்படியான குறுகிய வடிவு கொண்ட வாமன மூர்த்தி; ***எதிர்பார்த்து வியந்தவர்*** - எதிர்நின்று பார்த்து வியந்து கொண்டிருந்தவர்களும்; ***வெருக்கொள*** - அஞ்சும்படியாக; ***உயர்ந்தவர்க்கு உதவிய உதவி ஒப்ப*** - அறிவு ஒழுக்கங்களில் சிறந்த மேலோருக்குச் செய்த உதவி சிறந்து விளங்குவதுபோல; ***விசும்பின் ஓங்கினான்*** - வானத்தின் அளவுக்கு வளர்ந்து நின்றான்.

*கயம்: குளம். நறும்புனல்: தெளிந்து குளிர்ந்துள்ள நீராம். உதவி வரைத்தன்று உதவி உதவி செயப்பட்டார் சால்பின் வரைத்து என்ற குறட்கருத்துத் தோன்ற. உயர்ந்தவருக்கு உதவிய உதவி சிறந்து விளங்குவது போல. வாமன மூர்த்தி வானுற ஓங்கி. வளர்ந்து நின்றான் என்பது கருத்து. பயந்தவர்: பெற்றோர் (தாய். தந்தையர்). வியத்தல்: ஆச்சரியபடுதல் வெருக்கொள: அச்சமுற.*

***428. 'நின்ற கால் மண் எலாம் நிரப்பி. அப்புறம்***
***சென்று பாவிற்றிலை. சிறிது பார் எனா;***
***ஒன்ற. வானகம் எலாம் ஒடுக்கி. உம்பரை***
***வென்ற கால் மீண்டது. வெளி பெறாமையே.***

***நின்ற கால்*** *- நிலத்தில் ஊன்றி நின்ற கால்;* ***மண் எலாம் நிரப்பி*** *- நிலத்தின் பரப்பை யெல்லாம் மூடி;* ***பார் சிறிது எனா*** *- இப்பூமி சிறிய அளவுடைய தென்று;* ***அப்புறம் சென்று பாவிற்றிலை*** *- அப்புறம் போய்ப் பாவவில்லை;* ***உம்பரை வென்ற கால்*** *- வானம் சிறிதாகுமாறு மேலே நீண்டு உயர்ந்து வென்ற காலானது;* ***வானகம் எலாம் ஒன்ற ஒடுக்கி*** *- வானத்தை எல்லாம் ஒருமிக்கச் சிறிதாகும் படி தனக்குள் ஒடுக்கி;* ***வெளி பெறாமையால் மீண்டது*** *- மேலும் இடம் கிடைக்காமையால் மீண்டது.*

*நின்ற: ஊன்றிய. நிரப்புதல்: மூடுதல். பாவிற்றிலை: பாவவில்லை ''பார் சிறிதெனா அப்புறம் சென்று பாவிற்றிலை'' என்றது. பூமி விரிந்தால். அதுவும் விரியும் என்னும் கருத்தை உள்ளடக்கி நின்றது. உம்பர்: வானம். ஒடுக்கி: உள்ளடக்கி. வெளி: இடம். ஒன்ற: ஒரு சேர. எனா: (செயா என்ற வாய்பாட்டு வினையெச்சம்).*

***429. 'உலகு எலாம் உள்ளடி***
***அடக்கி. ஓர் அடிக்கு***
***அலகு இலாது. அவ் அடிக்கு.***
***அன்பன் மெய்யதாம்.***
***இலை குலாம் துழாய் முடி***
***ஏக நாயகன். -***
***சிலை குலாம் தோளினாய்!***
***சிறியன் சாலவே!***

***ஓரடி உலகு எலாம் உள் அடி அடக்கிற்று*** *- ஊன்றிய காலாகிய ஒரு அடி உலகத்தை எல்லாம் பாதத்துள் அடக்கிவிட்டது;* ***அலகு இலா அவ்வடிக்கு*** *- அளந்து கொள்ள இடமில்லாத அந்த மூன்றாம் அடிக்கு;* ***அன்பன் மெய் அது ஆம்*** *- பக்தனாகிய மகாபலியின் தலையே அளவடியாக ஆயிற்று;* ***சிலைகுலாம் தோளினாய்*** *- வில் பொருந்திய தோளினை உடைய இராமா!;* ***இலைகுலாம் துழாய்முடி*** *- இலைகள் மிகுந்த துளப மாலையை அணிந்துள்ள;* ***ஏகநாயகன்*** *- உலகுக்கு ஒரு தனி முதல்வனான அத்திருமாலாகிய;* ***சாலச் சிறியன்*** *- மிகச் சிறிய வடிவினானா அவ்வாமனன்.*

*இது குளகம். அடுத்த பாட்டுடன் பொருள் முடிவு பெறும். உலகு: நிலம். உள்ளடி: அடியுள் என்பது மொழிமாறி நின்றது. அலகு: அளவு. மெய் அது ஆம்: மெய்யதாம். மாவலியின் உடம்பே அளவடியாக ஆனது என்பது கருத்து. ஏக நாயகன்: தனிப்பெருந்தலைவன். ஏகம்: தனிமை. 'சாலச்சிறியன்' திருமால் கொண்ட வாமன வடிவைக் குறித்ததாம். இச்சிறிய வடிவமா உலகத்தை யெல்லாம் ஓரடியுள் அடக்கியது என வியந்து கூறியதுமாம். சால: மிக. ஏ: அசை.*

*430. ''உரியது இந்திரற்கு இது'' என்று.*
*உலகம் ஈந்து போய்.*
*விரி திரைப் பாற்கடல்*
*பள்ளி மேவினான்;*
*கரியவன். உலகு எலாம்*
*கடந்த தாள் இணை*
*திருமகள் கரம் தொடச்*
*சிவந்து காட்டிற்றே!*

**உரியது இந்திரற்கு இது என்று** - இம்மூவுலகாட்சியும் இந்திரனுக்கே உரிமை உடையது என்று கூறி; **ஈந்து போய்** - அவற்றை அந்த இந்திரனுக்கு தந்து போய்; **விரிதிரைப் பாற்கடல் பள்ளி மேவினான்** - விரிந்த அலைகளை உடைய பாற்கடல் படுக்கையை அடைந்தான்; **உலகு எலாம் கடந்து** - மூவுலகத்தையும் அளந்த; **கரியவன் தாள் இணை** - கருமை நிறம்வாய்ந்த அத்திருமாலின் பாதங்கள்; **திருமகள் கரம் தொட** - திருமகளான இலக்குமி தொட்டு வருடவே; **சிவந்து காட்டின** - செந்நிறம் கொண்டு விளங்கின.

உரியது: உரிமை உடையது. இந்திரன்: வானவர்க்கு அரசன். பள்ளி: படுக்கை. கரியவன். கருநிறம் உடையவன். கரி: சாட்சி. உலகுக்குச் சாட்சி யானவன். என்றும் கூறுவர். தாளிணை: இரண்டு பாதங்கள். திருமகள்: பெரிய பிராட்டி. கரம்: கை இவ்வாறு மாவலி வரலாற்றை முனிவன் கூறினான்.

*431 'ஆதலால். அரு வினை அறுக்கும்; ஆரிய!*
*காதலால் கண்டவர் பிறவி காண்குறார்;*
*வேதநூல் முறைமையால் வேள்வி முற்றுவேற்கு.*
*ஈது அலாது இல்லை. வேறு இருக்கற்பாலதே.*

**அருவினை அறுக்கும் ஆரிய** - உயிர்களைப் பற்றி வருத்தும் அரிய வினைகளை அழித்துக் காக்கும் மேலோனே!; **காதலால் கண்டவர்** - (இந்தத் தூய்மையான இடத்தை) காதல் கொண்டு காண்பவர்கள்; **பிறவி காண்குறார்** - பிறவி நோயைக் காணமாட்டார்கள்; **ஆதலால். வேதநூல் முறைமையால்** - ஆதலாலே. வேதநூல்களில் கூறியமுறைப்படி; **வேள்வி முற்றுவேற்கு** - வேள்வியை நடத்த நினைத்திருக்கும் எனக்கு; **இருக்கற்பாலது** - வீற்றிருந்து செய்யத்தக்க இடம்; **ஈது அலாது வேறு இல்லை** - இவ்விடம் அல்லாது வேறில்லை.

*ஈது அலாது வேறு இல்லை. இவ்விடம் அல்லாது வேறில்லை. 'ஆதலால் அருவினை அறுக்கும்' என்று கொண்டு. திருமால் இருந்த இடமாதலால் தீவினைகளை அழிக்கவல்லதிது எனக் கூறினும் ஆம் 'அருவினை' கடத்தற்கரிய வினைகளாம். காதல்: அன்பு (பக்தி). வேதநூல்: வேதமும் நூல்களும் (உம்மைத் தொகை). முற்றுதல்: நிறைவேறச் செய்தல். முற்றுவேன்: வினையாலணையும் பெயர். இருக்கல்: இருத்தல். பால்: தன்மை. ஏ: அசை. வேள்வி: யாகம். வேள்வி செய்ய ஏற்ற இடமிதுவே என முனிவன் கூறினானென்பது கருத்து.*

***432.*** **'ஈண்டு இருந்து இயற்றுவென்**
**யாகம். யான்' எனா.**
**நீண்ட பூம் பழுவத்து**
**நெறியின் எய்தி. பின்**
**வேண்டுவ கொண்டு. தன்**
**வேள்வி மேவினான்.**
**காண்தகு குமரரைக்**
**காவல் ஏவியே.**

**ஈண்டு இருந்து இயற்றுவன் யாகம் யான் எனா** - இவ்விடத்திலிருந்து நான் வேள்வியைச் செய்வேன் என்று; **நீண்ட பூம்பழுவத்து** - நீண்ட மலர் நிறைந்த அச்சோலையிடத்து; **நெறியின் எய்தி** - முறையாகச் சென்று; **பின் வேண்டுவ கொண்டு** - பின் வேள்விக்குரியன சேகரித்துக்கொண்டு; **காண் தகு குமரரை** - அழகுடைய அரசிளங்குமரர்களாகிய இராம இலக்குவர்களை. காவல் ஏவி . காவல் புரியுமாறு கட்டளையிட்டு; **தன் வேள்வி மேவினான்** - தனது வேள்வியைத் தொடங்கினான். ஈண்டு: இவ்விடம். இயற்றுவன்: செய்வேன் (தன்மை ஒருமை வினை முற்று). பூம்பழுவம்: அழகிய சோலையுமாம். காண்தகு: காணத்தக்க 'நோக்குடை' என முன்னும் கூறியது காண்க. காவல்: காக்கும் செயல்.. மேவி: பொருந்தி. ஏவி: கட்டளையிட்டு.

அரசிளங் குமரர்களைக் காவலுக்கு ஏவி. விசுவாமித்திர முனிவன். இங்கிருந்து வேள்வியைச் செய்து முடிப்பேன் என்று. வேள்விக்கு வேண்டியவைகளைச் சேகரித்துக் கொண்டு வேள்வியைத் தொடங்கினான் என்பது கருத்து.

***433.*** **எண்ணுதற்கு. ஆக்க. அரிது**
**இரண்டு-மூன்று நாள்**
**விண்ணவர்க்கு ஆக்கிய**
**முனிவன் வேள்வியை.**
**மண்ணினைக் காக்கின்ற**
**மன்னன் மைந்தர்கள்.**
**கண்ணினைக் காக்கின்ற**
**இமையின் காத்தனர்.**

***மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்*** - *நல்லாட்சி செய்து காக்கும் மன்னனான தயரதனுடைய மைந்தர்களான இராம. இலக்குவர்கள்;* ***முனிவன் விண்ணவர்க்கு ஆக்கிய வேள்வியை*** - *விசுவாமித்திர முனிவர் தேவர்களின் பொருட்டுச் செய்த வேள்வியை;* ***கண்ணினைக் காக்கின்ற இமையின்*** - *கண்விழியைக் காக்கும் இமைபோல;* ***இரண்டு மூன்று நாள் காத்தனர்*** - *ஆறு நாட்கள் வரை காப்பாற்றினர்;* ***எண்ணுதற்கு ஆக்க அரிது*** - *(இச்செயல்) நினைத்துப் பார்ப்பதற்கும் செய்தவற்கும் அரியதேயாம்.*

*வேள்வி எண்ணுதற்கு ஆக்கரிது என்றும் பொருள் கொள்வர். விண்ணவர்: தேவர். அவர் பொருட்டுச் செய்ததாதலின் ''விண்ணவர்க் காக்கிய வேள்வி'' என்றார். மைந்தர்: புத்திரர். மண்: பூமி. இராம. இலக்குவர்களின் காவலின் வேள்வி ஆறு நாட்கள் நடந்தது என்பது கருத்து.*

***434. காத்தனர் திரிகின்ற***
***காளை வீரரில்***
***மூத்தவள். முழுது உணர்***
***முனியை முன்னி. 'நீ***
***தீத் தொழில் இயற்றுவர்***
***என்ற தீயவர்.***
***ஏத்த அருங் குணத்தினாய்! வருவது***
***என்று?' என்றான்.***

***காத்தனர் திரிகின்ற*** - *வேள்வியைக் காத்தவாகளாக. அந்த வேள்விச் சாலையைச் சுற்றித் திரிந்துகொண்டிருந்த;* ***காளை வீரரில்*** - *அந்தக் காளை போன்ற இரு வீரர்களில்;* ***மூத்தவன்*** - *மூத்தவனாகிய இராமபிரான்;* ***முழுது உணர்முனியை முன்னி*** - *யாவும் அறிந்த முனிவனாகிய விசுவாமித்திரனை அடைந்து;* ***ஏத்த அரும் குணத்தினாய்*** - *போற்றுதற்கரிய உயர்குணத்தோய்;* ***நீ தீத்தொழில் இயற்றுவர் என்ற தீயவர்*** - *கொடுந்தொழில் செய்பவர் என்று நீ கூறிய அந்தக் கொடிய அசுரர்கள்;* ***வருவது என்று என்றான்*** - *இந்த வேள்விச் சாலைக்கு வருவதுதான் எப்போது? என்று கேட்டான்.*

*காத்தனர்: முற்றெச்சம். காளைவீரர்: காளைப்பருவத்தினரான வீரர்கள் எனவும் கூறலாம். முழுதுணர்முனி: அனைத்தும் அறிந்தவன். உணர்முனி: வினைத்தொகை. ஏத்து+அரும்: போற்றற்கரிய. வருவது: வருவதாகிய காலத்தின் மேல் நின்றது. ''ஆறுநாட்களும் வராதவர் என்றுதான் வருவது'' என ஐயம் தோன்றக் கேட்டனன் எனலாம்.*

***435. வார்த்தை மாறு உரைத்திலன்.***
***முனிவன். மவுனியாய்;***
***போர்த் தொழில் குமரனும்.***
***தொழுது போந்தபின்.***
***பார்த்தனன் விசும்பினை;***
***பருவ மேகம்போல்***
***ஆர்த்தனர். இடித்தனர்.***
***அசனி அஞ்சவே.***

***முனிவன் மௌனியாய்*** - *விசுவாமித்திர முனிவன் வாய் பேசாதவனாகி;* ***வார்த்தை மாறு உரைத்திலன்*** - *மறுமொழி கூறவில்லை;* ***போர்த்தொழில் குமரனும்*** - *போர்த் தொழில் வல்ல இராமபிரானும்;* ***தொழுது போந்தபின்*** - *(அஃதறிந்து) முனிவனை வணங்கிச் சென்றபின்னர்;* ***விசும்பினைப் பார்த்தனன்*** - *வானத்தை நோக்கினான்;* ***பருவ மேகம் போல் ஆர்த்தனர்*** - *(அப்போது அரக்கர் வந்து) பருவகால மேகத்தைப் போல ஆரவாரித்தவராகி;* ***அசனி அஞ்ச இடித்தனர்*** - *இடியும் அஞ்சும்படி இடித்தார்கள்.*

*வார்த்தை மாறு: மறு வார்த்தை (மறுமொழி). மௌனி: மௌனவிரதம் மேற்கொண்டவன். போந்த: வந்த. அசனி: இடி. ஆர்த்தல்: ஆரவாரித்தல். பருவ மேகம்: மழைக்காலத்து மேகம். ''தீயவர் என்று வருவது'' எனக்கேட்ட ராமனுக்கு முனிவன் மறுமொழி கூறவில்லை. வணங்கி மீண்ட. ராமன் வானத்தைப் பார்த்தான். அரக்கர் வந்து ஆரவாரித்தனர் என்க.*

***436. எய்தனர்;எறிந்தனர்; எரியும். நீருமாய்ப்***
***பெய்தனர்; பெரு வளர பிடுங்கி வீசினர்;***
***வைதனர்; தெழித்தனர்; மழுக் கொண்டு ஓச்சினர்;***
***செய்தனர். ஒன்று அல தீய மாயமே.***

***எய்தனர்*** - *(அவ்வரக்கர்) அம்புகளை வில்லில் தொடுத்து எய்தார்கள்;* ***எறிந்தனர்*** - *சூலம் வேல் முதலியவைகளை எடுத்து மேலே எறிந்தார்கள்;* ***எரியும் நீரும் ஆய் பெய்தனர்*** - *நெருப்பையும் தண்ணீரையும் பெய்தார்கள்;* ***பெருவதை பிடுங்கி வீனர்*** - *பெரிய மலைகளைப் பிடுங்கி வீசினார்கள்;* ***வைதனர் தெழித்தனர்*** - *வைதார்கள். அதட்டினார்கள்;* ***மழுக்கொண்டு ஓச்சினர்*** - *மழுவை எடுத்துக் கொண்டு வீசினார்கள்;* ***ஒன்றல தீய மாயம் செய்தனர்*** - *பலவிதமான மாயச் செயல்களைச் செய்தார்கள்.*

*எய்தல்: அம்பெய்தல். பெய்தல்: கொட்டுதல். எறிதல் : வேலெறிதல். வரை: மலை. வைதல்: நிந்தித்தல். தெழித்தல்: அதட்டுதல். மழு: மழுப்படை. ஒச்சல்: வீசுதல். மாயம்: மாயச் செயல்கள். ஒன்று அல: ஒன்றல்லாத பல செயல்கள் என்ற பொருளை உணர்த்தும்.*

***437.  ஊன் நகு படைக்கலம் உருத்து வீசின.
காளகம் மறைத்தன. கால மாரிபோல்;
மீன் நகு திரைக் கடல் விசும்பு போர்த்தென.
வானகம் மறைத்தன. வளைந்த சேனையே.***

***உருத்து வீசின ஊன் நகுபடைக்கலம்*** - *(அந்த அரக்கர்களால்) உருத்து எறியப்பட்ட பகைவர் உடல் வன்மையை எளிதாக மதித்து உள்ளே புகும் படைக்கருவிகள்;* ***காலமாரி போல் கானகம் மறைத்தன*** - *பருவ கால மழையைப் போல் காட்டையே மூடிவிட்டன;* ***மீன் நகு திரைக்கடல்*** - *மீன்களைக் கொண்ட அலைகடல்;* ***விசும்பு போர்த்த என*** - *மேலெழுந்து வானத்தை மறைத்தது போல;* ***வளைந்த சேனை வானகம் மறைத்தன*** - *(வேள்விச் சாலையை) வளைத்துக் கொண்ட அந்தச் சேனை வானவீதியையே மூடி நின்றது.*

*ஊன் நகு படைக்கலம்: உடம்பை இகழும் படைக்கலங்கள் என்றது எவரது உடலும் அதற்குப் பொருட்டல்ல என்பதை உணர்த்தும். நகுதல்: இகழ்ந்து நகைத்தல்.. உருத்து: சினம் கொண்டு (கோபித்து). வீசின: வீசினவான படைக்கலம் - வினையாலணையும் பெயர். கானகம் என்பவைகளில் அமைந்த ''அகம்'' அடைமொழி.. 'மீன்நகு' இதில் நகுதல்: ஒளிர்தலாம். திரைக்கடல்: அலைகளை உடைய கடல். இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்கத் தொகை. போர்த்தது+என போர்த்தென என நின்ற தொகுத்தல் விகாரம். அரக்கர்கள் சினம் கொண்டு வீசிய படைக்கலங்கள் - பருவகால மழை போல. அந்தக் காட்டையே மூடிவிட்டன. வேள்விச் சாலையை முற்றுகையிட்டுச் சுற்றி வளைத்துக் கொண்ட அசுரசேனை அலைகளை உடைய கடலே மேலெழுந்து - வானத்தை மூடிக் கொண்டது போலக் காணப்பட்டது.*

***438.  வில்லொடு மின்னு. வாள் மிடைந்து உலாவிட.
பல் இயம் கடிப்பினில் இடிக்கும் பல் படை.
'ஒல்' என உரறிய ஊழிப் பேர்ச்சியுள்
வல்லை வந்து எழுந்தது ஓர் மழையும் போன்றதே.***

***மின்னும் வாள் வில்லொடு மிடைந்து உலாவிட*** - *மின்னுகின்ற வாட்கள் விற்களுடன் கலந்து பெயர்ந்துவர;* ***கடிப்பினில் பல்இயம் இடிக்கும்*** - *குறுந்தடிகளால் பலவகை வாத்தியங்களை அடித்துக் கொண்டு வரும்;* ***பல்படை ஒல் என உரறிய*** - *பலவிதமான படைகள் 'ஒல்' என்று ஒலித்தன;* ***ஊழிப் பேர்ச்சியுள்*** - *(இச் செயல்) யுகம் முடியும் காலத்தில்;* ***வல்லை வந்து எழுந்ததோர்*** - *உலகை முடிக்க. விரைந்து எழுந்து வந்த ஒரு;* ***மழையும் போன்றது*** - *பெருமழை போலவும் காணப்பட்டது.*

*மின்னுவாள்: வினைத்தொகை. மின்னு: உகரம் சாரியை. வில். வாள் என்பன ஒளி என்னும் பொருள் கொண்டனவாம். ஒல்: ஒலிக்குறிப்பு. உலாவுதல்: பெயர்தல். உரறிய: ஒலித்த. ஊழிப்பேர்ச்சி: யுகம் முடிவு. வல்லை: விரைவு. ஓர்: ஒப்பற்ற. 'மழையும்' இதில் உம்மை. இறந்தது தழிஇய எச்ச உம்மை. வந்தெழுந்தது: எழுந்து வந்தது (சொல் மாற்று). வில்லும். வாளும் உலாவ. பலவகை வாத்தியங்கள் ஒலிக்க வந்த படைகள் - ஒலித்த ஒலியால் ஊழிப் பெருங்காலத்தில் விரைந்து வந்த மேகம் போலவும் இருந்தது என்பது கருத்து. அரக்கர் சேனையின் போர்த்திறம் மூன்று செய்யுள்களால் கூறப்பட்டதாம்.*

***439. கருவடை எயிற்றினர்; கடித்த வாயினர்;***
***துவர் நிறப் பங்கியர்; சுழல் கண் தீயினர்;***
***'பவர் சடை அந்தணன் பணித்த தீயவர்***
***இவர்' என. இலக்குவதற்கு இராமன் காட்டினான்.***

***கவர் உடை எயிற்றினர்*** *- பிளவுப்பட்ட பற்களை உடையவர்களும்;* ***கடித்த வாயினர்*** *- பற்களால் உதட்டைக் கடித்த வாயை உடையவர்களும்;* ***துவர் நிறப்பங்கியர்*** *- பவளம் போன்ற நிறமுடைய தலை மயிரை உடையவர்களும்;* ***சுழல்கண் தீயினர்*** *- சுழலுகின்ற கண்களிலே தீயை உடையவர்களும் ஆகிய இவர்களே;* ***பவர் சடை அந்தணன்*** *- செறிந்த சடை முடியை உடைய விசுவாமித்திரரின்;* ***பணித்த தீயவர் இவர்*** *- சொன்ன கொடிய அரக்கர்களாகும்;* ***என இலக்குவனுக்கு இராமன் காட்டினான்*** *- என்று இலக்குவனுக்கு இராமன் சுட்டிக் காட்டினான். கவர்: பிளவு. எயிறு: பல். துவர்: பவளம். பங்கி: மயிர். பவர்: செறிவு*

***440. கண்ட அக் குமரனும். கடைக் கண் தீ உக.***
***விண்தனை நோக்கி. தன் வில்லை நோக்கினான்;***
***'அண்டர் நாயக! இனிக் காண்டி. ஈண்டு அவர்***
***துண்டம் வீழ்வன' என. தொழுது சொல்லினான்.***

***கண்ட அக்குமரனும்*** *- இராமபிரான் காட்டக் கண்ட அந்த இளையவனான இலக்குவனும்;* ***கடைக் கண்ட தீ உக*** *- கடைக் கண்களிலே தீ சிதறும்படியாக;* ***விண்தனை நோக்கி*** *- வானத்தையும் பார்த்து;* ***தன் வில்லை நோக்கினான்*** *- தனது வில்லையும் பார்த்தான் (பின்பு);* ***அண்டர் நாயக*** *- (இராமனைப் பார்த்து) தேவர்களுக்குத் தலைவனே!;* ***இனி வீழ்வன இவர் துன்டம்*** *- இனி. கீழே வீழ்வது இவர்களுடைய உடலின் துண்டங்களே;* ***ஈண்டு காண்டி*** *- இப்போதே காண்பாயாக;* ***என. தொழுது சொல்லினான்*** *- என்று இராமனை வணங்கிக் கூறினான்.*

*அக்குமரன்: இளையவன். 'கடைக்கண்': கண்கடை சொல் மாற்று. உக: கக்க. அண்டர்: தேவர்கள். துண்டம்: சிதைந்த துணுக்கு. 'வீழ்வன' வினையாலணையும் பெயர். விண்தனை: 'தன்' அசை விண்ணை நோக்கி. வில்லையும் நோக்கினான் என்பது இராமன் ஆணையை எதிர்நோக்கி நின்றான் என்க.*

***441. ‘தூம வேல் அரக்கர்தம் நிணமும் சோரியும்***
***ஓம வெங் கனலிடை உகும்’ என்று உன்னி. அத்***
***தாமரைக் கண்ணனும். சரங்களே கொடு.***
***கோ முனி இருக்கை. ஓர் கூடம் ஆக்கினான்.***

***தூம வேல் அரக்கர் தம்*** - *புகை காலும் வேலையுடைய அவ்வரக்கரது;* ***நிணமும் சோரியும்*** - *சதைத் துண்டங்களும் இரத்தமும்;* ***ஓம வெம் கனல் இடை உகும்*** - *தூய வேள்வித் தீயிலே சிதறி விழக்கூடும்;* ***என்று உன்னியே*** - *என்று நினைத்தவனாய்;* ***தாமரைக் கண்ணனும்*** - *தாமரை மலர் போன்ற கண்களை உடைய இராபிரான்;* ***சரங்களே கொடு*** - *தனது அம்புகளைக் கொண்டே;* ***கோமுனி இருக்கை*** - *அரச முனிவனான விசுவாமித்திரனுடைய இருப்பிடத்தை;* ***ஓர் கூடம் ஆக்கினான்*** - *ஒரு கூடாராமாகக் செய்து விட்டான்.*

*தூமம்: புகை. நிணம்: உடற்சதை. சோரி: இரத்தம். ஓமம்: வேள்வி. உன்னி: நினைத்து. வெங்கனல்: பண்புத்தொகை. இருக்கை: இருப்பிடம். அரக்கரது நிணமும். ரத்தமும் வேள்வித் தீயில் விழாதபடி. இராமன் முனிவரது இருக்கையை. அம்புகளாலேயே ஒரு கூடாரமாக்கினான் என்பது கருத்து.*

***442. நஞ்சு அட எழுதலும் நடுங்கி. நாள்மதிச்***
***செஞ் சடைக் கடவுளை அடையும் தேவர்போல்.***
***வஞ்சனை அரக்கரை வெருவி. மா தவர்.***
***‘அஞ்சனவண்ண! நின் அபயம் யாம்’ என்றார்.***

***நஞ்சு அட எழுதலும்*** - *(பாற்கடலைக் கடைந்த போது) நஞ்சு தம்மை அழிப்பதற்கு எழுந்து வர;* ***நடுங்கி. நாள்மதிச் செஞ்சடைக் கடவுளை அடையும் தேவர் போல்*** - *நடுக்கம் கொண்டு பிறைச் சந்திரனை அணிந்துள்ள சிவந்த சடைமுடியினான சிவபிரானை அடைக்கலம் அடைந்த தேவர்களைப் போல்;* ***வெஞ்சின அரக்கரை வெருவி*** - *கொடுஞ் சினமுடைய அரக்கர்களுக்கு அஞ்சி;* ***மாதவர்*** - *வேள்விச் சாலையிலிருந்த முனிவர்கள் எல்லாம்;* ***அஞ்சன வண்ண*** - *மை போன்ற நிறத்தை உடைய இராம பிரானே!;* ***யாம் நின் அபயம் என்றனர்*** - *நாங்கள் உன் அடைக்கலம் என்றார்கள்.*

*அட: அழிக்க. அடல்: தொழிற்பெயர். நாள்மதி: ஒருகலைச் சந்திரன். செம்மை+சடை: செஞ்சடை. வெருவுதல்: அஞ்சுதல். அஞ்சனம்: மை. வண்ணம்: நிறம். பாற்கடலில் நஞ்சுஎழ. அஞ்சிய வேதர்கள் சிவபெருமானை அடைக்கலம் அடைந்தது போல. அரக்கர்களுக்கு அஞ்சிய முனிவர்கள் இராமபிரானை அடைக்கலம் அடைந்தனர் என்பது கருத்து.*

*443.* ***கவித்தனன் கரதலம்; 'கலங்கலீர்' என.***
***செவித்தலம் நிறுத்தினன். சிலையின் தெய்வ நாண்;***
***புவித்தலம் குருதியின் புணரி ஆக்கினன்;***
***குவித்தனன். அரக்கர்தம் சிரத்தின் குன்றமே.***

***கலங்கலீர் என*** - *முனிவர்களே! கலக்கமுறாதீர்கள் என்று கூறி;* ***கரதலம் கவித்தனன்*** - *கைகளைக் கவித்து அவர்களை அமர்த்திய இராமபிரான்;* ***சிலையின் தெய்வ நாண்*** - *தனது வில்லின் தெய்வீகமான நாணை;* ***செவித்தலம் நிறுத்தினன்*** - *காதுவரை இழுத்து நிறுத்தினவனாய்;* ***புவித்தலம் குருதியின் புணரி ஆக்கினான்*** - *அந்தக் காட்டினையே இரத்தக் கடலாக்கினவனாய்;* ***அரக்கர் தம் சிரத்தின் குன்றம் குவித்தனன்*** - *அரக்கர்களின் தலைகளை மலையாகக் குவித்து விட்டான். கவித்தல்: அமர்த்தல். கரதலம்: உள்ளங்கை. செவித்தலம்: இரு பெயரொட்டுப் பண்புத் தொகை. நாண்: கயிறு. குருதி: இரத்தம். புணரி: கடல். சிரத்தின் குன்றம்: உருவகம் கலங்காதீர்கள் எனக் கூறி. கையமர்த்தி வில்லின் நாணைக் காதுவரை இழுத்து நிறுத்தி - அந்தக் காட்டையே இரத்தக் கடலாக்கி - அரக்கர்களின் தலை மலைகளைக் குவித்துவிட்டான் இராமபிரான் என்பது கருத்து.* *50*

*444.* ***திருமகள் நாயகன் தெய்வ வாளிதான்.***
***வெருவரு தாடகை பயந்த வீரர்கள்***
***இருவரில் ஒருவனைக் கடலில் இட்டது; அங்கு***
***ஒருவனை அந்தகபுரத்தின் உய்த்ததே.***

***திருமகள் நாயகன்*** - *இலக்குமி கேள்வனாகிய இராமபிரானுடைய;* ***தெய்வவாளிதான்*** - *தெய்வத்தன்மை வாய்ந்த அம்பானது* ***வெரு வரு தாடகை பயந்த*** - *மூவுலகும் அஞ்சும்படியான தாடகை பெற்ற;* ***வீரர்கள் இருவரில்*** - *வீரர்களான சுபாகு. மாரீசன் என்னும் இரண்டு பேரில்;* ***ஒருவனைக் கடலில் இட்டது*** - *ஒருவனான மாரீசனைக் கடலில் தள்ளிவிட்டது;* ***அங்கு ஒருவனை*** - *மற்றவனான சுபாகு என்பவனை;* ***அந்தக புரத்தில் உய்த்தது*** - *எம்புரியில் கொண்டு போய்ச் சேர்த்தது.*

*திருமகள் நாயகன் திருமால்: திருவின் அவதாரமான ராமனை இப்பெயரால் குறிப்பிட்டார். முன்பும் ''திருமாலின் கேள்வன் என்றது நினைவுகூரத் தக்கது. தெய்வ வாளி: தெய்வத்தன்மை வாய்ந்த அம்பு. அந்தகன்: எமன். புரம்: ஊர். உய்த்தல்: செலுத்துதல். ராமபிரானது தெய்வத்தன்மை வாய்ந்த அம்பு தாடகையின் பிள்ளைகளில் ஒருவனைக்கடலில் சேர்த்தது. மற்றொருவனை அந்தகனூர்க்குக் கொண்டு போய்ச் சேர்த்தது என்பது கருத்து.*

***445. துணர்த்த பூந் தொடையலான் பகழி தூவினான்;***
***கணத்திடை விசும்பினைக் கவித்துத் தூர்த்தலால்.***
***‘பிணத்திடை நந்து இவர் பிடிப்பர் ஈண்டு’ எனா***
***உணர்த்தினர். ஒருவர்முன் ஒருவர் ஓடினார்***

***துணர்த்த பூந்தொடையலான்*** - *கொத்தாக விரிந்தமலர் மாலையை அணிந்த ராமபிரான்;* ***பகழி தூவினான்*** - *(மற்றுமுள்ள அரக்கர்களின் மேல்) அம்புகளை ஏவினான்;* ***கணத்திடை விசும்பினைக் கவித்து*** - *அவ்வம்புகள் ஒரு கணப்போதில் வானத்தைச் சூழ்ந்து கொண்டு;* ***தூர்த்து*** - *மூடிவிட்டது;* ***இவர் பிணத்திடை நடந்து*** - *இந்த அரசகுமாரர்கள் பிணங்களின் மீது நடந்து வந்தேனும்;* ***ஈண்டு பிடிப்பர் எனா இங்கு*** - *நம்மைப் பிடித்துக் கொள்வார்கள் என்று;* ***உணர்த்தினர்*** - *ஒருவருக் கொருவர் தெரிவித்துக் கொண்டவர்களாய்;* ***ஒருவர்முன் ஒருவர் ஓடினர்*** - *அந்த அரக்கர்கள் ஒருவருக்கு முன் மற்றொருவராக ஓடலாயினர்.*

*துணர்த்த: கொத்தாக விரிந்த. தொடை: மாலை. பகழி: அம்பு. கவித்தல்: சூழுதல். தூர்த்தல்: மூடுதல் அல்லது மறைத்தல். விசும்பு: வானம். எனா: என்று. செயா என்ற வாய்பாட்டு வினையெச்சம். உணர்த்தினர். - முற்றெச்சம். ராமபிரான் அம்புகளை ஏவ அவை வானையும் மறைத்துவிட்டது. அஞ்சிய அரக்கர்கள் பிணத்தின் மேல் நடந்தேனும் நம்மைப் பிடித்துவிடுவார் என ஒருவருக்கு முன் ஒருவராக ஓடலாயினர் என்பது கருத்து.*

***446. ஓடின அரக்கரை உருமின் வெங் கணை***
***கூடின; குறைத் தலை மிறைத்துக் கூத்து நின்று***
***ஆடின; அலகையும். ஐயன் கீர்த்தியைப்***
***பாடின; பரந்தன. பறவைப் பந்தரே.***

***ஓடின அரக்கரை*** - *அவ்வாறு பயந்து ஓடிய அரக்கர்களை;* ***உருமின் வெங்கணை*** - *அவர்களைக் கொல்லுமாறு ராமபிரானால் ஏவப்பட்ட கொடிய அம்புகள்;* ***கூடின*** *-உரிய இலக்கைப் போய்ச் சேர்ந்தன;* ***குறைத்தலை*** - *(அதனால் அரக்கர்கள் கொல்லப்பட அவர்களது குறையுடல்களான கவந்தங்கள்;* ***மிறைத்து நின்று ஆடின*** - *விறைத்து நின்று ரத்த வெள்ளத்தில் ஆடலாயின;* ***அலகையும்*** - *பிணங்களை வாரித்தின்ன வந்த பேய்களும்;* ***ஐயன்கீர்த்தியைப் பாடின*** - *இராமபிரானது வெற்றிப் புகழைப் பாடலாயின;* ***பறவைப் பந்தர் பரந்தன*** - *பந்தல் போலப் பறவைக் கூட்டம் வானத்தில் விரிந்தன.*

*உருமு: இடி. உருமின் வெங்கணை: இடி போன்ற கொடிய அம்பு. குறைத்தலை: தலை துணிக்கப்பட்ட முண்டம் (கவந்தம்). மிறைத்தல்: விறைத்தல். அலகை: பேய். ஐயன்:மேலோன்: கீர்த்தி: புகழ். பரந்தல்: விரிதல். பந்தர்: பந்தர் ஈற்றுப் போலி.*

***447. பந்தரைக் கிழித்தன. பரந்த பூ மழை;***
***அந்தர துந்துமி முகிலின் ஆர்த்தன;***
***இந்திரன் முதலிய அமரர் ஈண்டினார்.***
***சுந்தர வில்லியைத் தொழுது வாழ்த்தினார்.***

***பரந்த பூ மழை*** *- தேவர்கள் பொழிந்த மலர்;* ***பந்தரைக் கிழித்தது*** *- பறவைக் கூட்டப் பந்தலைக் கிழித்துக் கொண்டு கீழே வீழ்ந்தது;* ***அந்தர துந்துமி முகிலின் ஆர்த்தன*** *- வானத்திலிருந்து துந்துமி வாத்தியங்கள் மேகங்களைப் போல முழங்கின;* ***இந்திரன் முதலிய அமரர் ஈண்டினர்*** *- இந்திரன் முதலான தேவர்கள் வானவீதியிலே வந்து திரண்டனராய்;* ***சுந்தர வில்லியைத் தொழுது வாழ்த்தினார்*** *- அழகிய வில்லாளனாகிய ராமனைத் தொழுது வாழ்த்தினார்கள்.*

*கிழித்தன: கிழித்துக் கொண்டு கீழே இறங்கின என்பது பொருள். பூமழை: மழை மிகுதிப் பொருளைத் தந்து நின்றது. துந்துமி - தேவர்கள் இசைக்கருவி. ஈண்டுதல்: கூடுதல் (திரள்தல்). சுந்தரம்: அழகு. வில்லி: வில்லை உடையவன். தொழுது: வணங்கி. வாழ்த்தினர்: துதித்தனர்: அரக்கர்களால் அல்லலுற்ற தேவர்கள் அவ்வல்லல் தீர்ந்தமையால் மகிழ்ந்து. ராமனை வணங்கி வாழ்த்தினர் என்பது கருத்து.*

***448. புனித மா தவர் ஆசியின் பூ***
***மழை பொழிந்தார்;***
***அனைய கானகத்து மரங்களும்***
***அலர் மழை சொரிந்த;***
***முனியும். அவ் வழி வேள்வியை***
***முறைமையின் முற்றி.***
***இனிய சிந்தையன். இராமனுக்கு***
***இனையன இசைத்தான்.***

***புனித மாதவர்*** *- புனிதமான தவமுனிவர் எல்லோரும்;* ***ஆசியின் பூமழை பொழிந்தார்*** *- ஆசிமொழிகளாகிய மலர்மாரி பொழிந்தனர்;* ***அனைய கானகத்து மரங்களும்*** *- அந்தக் காட்டில் உள்ள பல வகை மலர்மரங்களும்;* ***அலர் மழை சொரிந்த*** *- மலர்மழை பொழிந்தன;* ***அவ்வழி முனியும்*** *- அப்போது விசுவாமித்திர முனிவனும்;* ***வேள்வியை முறைமையின் முற்றி*** *- வேள்வியை முறைப்படி செய்து முடித்து;* ***இனிய சிந்தையன்*** *- மகிழ்ந்த மனம் உடையவனாய்;* ***இராமனுக்கு இனையன இசைத்தான்*** *- இராமபிரானைப் பார்த்துப் பின் வருமிவற்றைச் சொல்லலானான்.*

*புனிதம்: தூய்மை. மாதவர்: சிறந்த முனிவர்கள். ஆசி: ஆசிமொழி. பொழிதல்: மிகப் பொழிதலாம். வினை உருவகம். அனைய: அந்த. கானகம்+அத்து: கானகத்து. இதில் 'அத்து' சாரியை. அலர்: நன்கு விரிதல். முற்றி: நிறைவேற்றி. இனிய சிந்தையன் என்பதை இராமனுக்குக் கூட்டி உறை கூறினும் அமையும். இசைத்தல்: சொல்லுதல்*

***449.*** ***‘பாக்கியம் எனக்கு உளது என***
***நினைவுறும் பான்மை***
***போக்கி. நிற்கு இது பொருள் என***
***உணர்கிலென் - புவனம்***
***ஆக்கி. மற்றவை அனைத்தையும்***
***அணி வயிற்று அடக்கி.***
***காக்கும் நீ. ஒரு வேள்வி***
***காத்தனை எனும் கருத்தே.’***

***புவனம்*** - *அனைத்துள உலகங்களை;* ***ஆக்கி*** - *(பிரமனாய் இருந்து) படைத்தும்;* ***மற்று*** - *அதன் பின் (ஊழிப் பெரு வெள்ளக் காலத்தில்);* ***அவை அனைத்தையும்*** - *அவ்வுலகத்து. இயங்கியல். நிலையியல் பொருள்கள் அனைத்தையும்;* ***அணிவயிற்று*** - *நின் அழகிய திருவயிற்றில்;* ***அடக்கிக் காக்கும் நீ*** - *அவை அழிவுறா வண்ணம் அடக்கிக்கொண்டு (திருமாலாய் இருந்து) காப்பாற்றுவாய்; அத்தகு பெருமைக்குரிய நீ* ***; ஒரு வேள்வி*** - *நான் செய்த இவ் வேள்வியினை;* ***காத்தனை -*** *இடையூறு வாராவண்ணம் பாதுகாத்தாய்;* ***எனும் கருத்து -*** *என்று உலகத்தவர் என்னும் எண்ணத்தால்;* ***பாக்கி யம் எனக்கு உளது என*** - *இத்தகையது ஒரு பெரும்பேறு நானே பெற்றேன் என;* ***நினைவு உறும் பான்மை போக்கி*** - *நினைப்பதே அல்லாமல்;* ***நிற்கு இது*** - *உனக்கு இச்செயல் ஒரு;* ***பொருள் என*** - *பொருளாகும் என்று;* ***உணர்கிலென்*** - *நான் எண்ணவில்லை.*

*இராமனது பரத்துவ நிலை நன்கு மனத்து இருத்தியவர் உபசார வார்த்தைகள் பொழிகிறார். ஊழிக்காலத்தில் உலகு ஒடுக்கும் திருவயிற்றுத் திருமாலே காக்கக் கடவியவன் நீயே! எத்துணைப் பெரியை நீ எளிவந்து எனக்காக என் யாகம் காத்தாய் என்பது உலகத்தவர்க்கு ஒரு தோற்றம் அம்மட்டே. உனக்கு அது ஒரு பொருளோ? ஆனால் எனக்கு அது பெரும் பாக்கியமே அல்லவா என்கிறார்.*

***450.*** ***என்று கூறிய பின்னர். அவ்***
***எழில் மலர்க் கானத்து.***
***அன்று. தான் உவந்து. அருந்தவ***
***முனிவரோடு இருந்த***
***குன்றுபோல் குணத்தான் எதிர்.***
***கோசலை குருசில்.***
***‘இன்று யான் செயும் பணி என்கொல்?***
***பணி!’ என இசைத்தான்***

***என்று கூறிய பின்னர்*** - என்று முனிவன் ராமனைப் பாராட்டிக் கூறிய பின்பு; ***அவ்வெழில் மலர்க்கானத்து*** - அழகிய மலர்கள் நிறைந்த அந்தக் கானகத்தில்; ***தான் அருந்தவ முனிவரோடு*** - அரிய தவத்தை உடைய மற்ற முனிவர்களோடும் சேர்ந்து; ***அன்று உவந்து இருந்தான்*** - மகிழ்வுடன் தங்கி இருந்தான்; ***கோசலை குருசில்*** - கோசலை பெற்ற குமாரனான இராமன்; ***இன்று யான் செயும் பணி என்கொல்*** - இன்று. இனிமேல் நான் செய்யவேண்டிய பணி என்னவோ; ***பணி என*** - கட்டளை இட்டருளக என்று; ***குன்றுபோல் குணத்தான் எதிர்*** - மலை போலும் அளவிடற்கரிய குணத்தவனான விசுவாமித்திரனிடம்; ***இசைத்தான்*** - கேட்பானாயினான்.

*எழில்: அழகு. மலர்க்கானம்: மலரையுடைய கானகம். உவந்து: மகிழ்ந்து. இருத்தல்: தங்கியிருத்தல். இன்ப. துன்பங்களுக்குச் சலியாதிருக்கும் குணம் உடைமையால் ''குன்றுபோல் குணத்தான்'' என முனிவன் சிறப்பிக்கப்பட்டான் என்பர். 'குருசில்': வெருமைமிக்கோன் பணி: கட்டளை. இசைத்தான்: சொன்னான்.*

***451. 'அரிய யான் சொலின். ஐய! நிற்கு***
***அரியது ஒன்று இல்லை;***
***பெரிய காரியம் உள; அவை***
***முடிப்பது பின்னர்;***
***விரியும் வார் புனல் மருதம் சூழ்***
***மிதிலையர் கோமான்***
***புரியும் வேள்வியும். காண்டும் நாம்;***
***எழுக! என்று. போனார்.***

***ஐய! அரிய யான்சொலின்*** - மேலோனே! அரிய செயல் என்று நான் சொல்வேனானால்; ***நிற்கு அரியது ஒன்று இல்லை*** - உனக்குச் செய்வதற்கு அரியசெயல் எதுவுமே இல்லை (ஆயினும்); ***பெரிய காரியம் உள*** - அரியபெரிய செயல்களும் உள்ளன; ***அவை முடிப்பது பின்னர்*** - அவற்றைச் செய்து முடிக்கத் தக்க காலம் பின்னால் வரப் போகிறது. (எனவே); ***வார்புனல் விரியும்*** - பெருகிவரும் நீர்நிறைந்துள்ள; ***மருதம் சூழ்மிதிலையர் கோமான்*** - மருத நிலங்கள் சூழ்ந்துள்ள மிதிலை நாட்டின் மன்னனான சனகன்; ***புரியும் வேள்வியும் காண்டும் நாம்*** - செய்கின்ற வேள்வி ஒன்றினையும் நான் சென்று பார்ப்போம்; ***எழுக*** - எழுந்து என்னுடன் வருவீர்களாக; ***என்று போனார்*** - (என்று கூறி அழைத்தேக) மூவரும் சென்றனர்.

*சொலின்: சொல்லியன் என்பது தொகுக்கப்பட்டது 'ஐ' என்பதற்கு அழகு என்பதும் பொருள். எனவே 'ஐய' என்பதற்கு 'அழகனே' என்பதும் பொருந்துவதே. ஒன்று: ஒரு சிறிதும் எனவும் கூறுவர். வார்புனல்: பெருகிவரும் நீர்.*

## அகலிகைப் படலம்

***படல விளக்கம்:*** *கௌதம முனிவனின் மனைவியும் சனகனின் புரோகிதனான சதானந்த முனிவனுடைய தாயுமான அகலிகை இந்திரனால் ஏமாற்றப் பட்டு அவனோடு கூடிப் பின்னர்க் கௌதம முனிவனது சாபத்தால் கல்லுருவம் அடைகிறாள். இராமனும் இலக்குவனும் விசுவாமித்திரனோடு மிதிலைக்குச் செல்லும்போது இராமனது திருவடித் துகள்பட்டுத் தனது சாபம் நீங்கி முன்னைய பெண் வடிவத்தை அடைந்த வரலாற்றைக் கூறுவது இப் படலம்.*

*விசுவாமித்திரன் முதலான மூவரும் சோணை நதியை அடைந்து சோலையில் தங்குகின்றார்கள்; பின்பு கங்கையைக் கண்டு மிதிலை நாடு சேர்கின்றார்கள். அப்பொழுது அதன் மதிற்புறத்தே கல்லாய்க் கிடந்த அகலிகைக்குப் பெண்ணுருவம் தருகின்றான் இராமன். வியப்புற்ற இராமன் கேட்டதற்கிணங்க விசுவாமித்திரன் அகலிகை வரலாறு கூறுகின்றான். பின்னர் மூவரும் அகலிகையைக் கௌதம முனிவனிடம் சேர்ப்பித்து மிதிலையின் புறமதிலை அடைகின்றார்கள்.*

*விசுவாமித்திரன். இராமன். இலக்குவன் மூவரும் சோணை நதியை அடைந்து சோலையில் தங்குதல்.*

***கலித்துறை***

***452. அலம்பும் மா மணி ஆரத்தோடு***
***அகில் அளை புளின***
***நலம் பெய் பூண்முலை. நாகு இள***
***வஞ்சியாம் மருங்குல்.***
***புலம்பும் மேகலைப் புது மலர்.***
***புனை அறல் கூந்தல்.***
***சிலம்பு சூழும் கால். சோணை ஆம்***
***தெரிவையைச் சேர்ந்தார்.***

***அலம்பும் மாமணி ஆரத்தோடு*** *- கழுவப்பட்ட சிறந்த இரத்தினங்களும் சந்தனமும்;* ***அகில் அளை புளினம்*** *- அகிலும் (தன்னிடம்) பொருந்திய மணற் குன்றுகளாகிய;* ***நலம் பெய் பூண் முலை*** *- இன்பத்தைத் தருகின்ற ஆபரணங்களை அணிந்த தனங்களையும்;* ***நாகு இள வஞ்சி ஆம் மருங்குல்*** *- மிக இளமையான வஞ்சிக்கொடி போன்ற இடையையும்;* ***புதுமலர் புலம்பும் மேகலை*** *- அப்பெழுது பூத்த புது மலரே (ஒலிக்கும்) மேகலை என்னும் அணிகலனாகவும்;* ***புனை அறல் கூந்தல்*** *- அழகிய கருமணலாகிய கூந்தலையும்;* ***சிலம்பு சூழும் கால்*** *- மலையைச்சுற்றி செல்லும் வாய்க்கால்களாகிய சிலம்பென்னும் அணியைச் சுற்றிலும் பூண்டுள்ள பாதங்களையும் உடைய;* ***சோணை ஆம் தெரிவையை*** *- சோணை என்னும் நதியாகிய பெண்ணை;* ***சேர்ந்தார்*** *- (விசுவாமித்திரன். இராமன். இலக்குவன் ஆகிய) மூவரும் போய் அடைந்தார்கள்.*

*இது உருவக அணி. இங்கு நதி பெண்ணாக உருவகப்படுத்தப் பெறுகிறது; அதனால் பெண்ணின் தன்மை நதியிடத்து ஏற்றிக் கூறப்பட்டுள்ளது. மணற்குன்று - முத்து முதலிய இரத்தினங்களும். சந்தனக் கட்டையும் அகிற்கட்டையும் மலையிலிருந்து ஓடிவரும் ஆற்றினால் கொண்டு வரப்பட்டு மணற் குன்றைச் சேர்ந்துள்ளன. சிலேடை: நதி - மாமணி ஆரத்தோடு அகில் பொருந்துதல்; மணற்குன்றுகள்; வஞ்சிக்கொடி; மலர்கள்; கருமணல் மலையைச் சுற்றிச் செல்லும் வாய்க்கால்கள். பெண்: மாமணி ஆரத்தோடு அகில் பொருந்திய அணிகளோடு கூடிய தனங்கள்; இடை (வஞ்சிக்கொடி); மேகலை என்னும் இடையணி (மலர்வரிசை); கூந்தல் (கருமணல்); சிலம்பு என்னும் அணியை அணிந்துள்ள பாதங்கள். அறலும் கூந்தலும். நெளிவாலும் கருமையாலும் அழகாலும் கூந்தலுக்கு அறல் உவமையாயிற்று. சிலம்பு: மலை; காற்சிலம்பு. கால்: வாய்க்கால்; பாதம். சோணை: மகத நாட்டின் வழியே ஓடுவதும் கங்கையில் கலப்பதுமான ஓர் உபநதி.*

***453.*** **நதிக்கு வந்து அவர் எய்தலும்.**
**அருணன்தன் நயனக்**
**கதிக்கு முந்துறு கலின மான்**
**தேரொடும். கதிரோன்.**
**உதிக்கும் காலையில் தண்மை**
**செய்வான். தனது உருவில்**
**கொதிக்கும் வெம்மையை ஆற்றுவான்**
**போல். கடல் குளித்தான்.**

***அவர்*** *- அம் மூவரும்;* ***நதிக்கு வந்து எய்தலும்*** *- சோணையாற்றுக்கு வந்து சேர்ந்த சமயத்தில்;* ***கதிரோன் உதிக்கும் காலையில்*** *- ஆயிரம் கதிர்களையுடைய சூரியன் மறுநாள் தான் கிழக்குத் திசையில் உதிக்கும் பொழுது;* ***தண்மை செய்வான்*** *- (அம்மூவர்க்கும்) குளிர்ச்சி தரும் பொருட்டு;* ***தனது உருவில் கொதிக்கும் வெம்மையை*** *- தனது வடிவத்திலே இயல்பாக எப்பொழுதும் கொதிக்கின்ற வெப்பத்தை;* ***ஆற்றுவான்போல்*** *- இப்பொழுது தணித்துக் கொள்பவனைப்போல;* ***அருணன் தன் நயனம்*** *- (தன் சாரதியாகிய) அருணனுடைய கண்கள்;* ***கதிக்கும்*** *- விரைந்து செல்வதைக் காட்டிலும்;* ***முந்துறு கலினம் மான்*** *- முந்திச் செல்லுகின்ற கடிவாளத்தைக் கொண்ட குதிரைகள் பூட்டிய;* ***தேரொடும்*** *- தனது தேருடன்;* ***கடல் குளித்தான்*** *- மேற்குக் கடலில் மூழ்கினான்.*

*தற்குறிப்பேற்ற அணி: மேற்கில் கதிரவன் மறைதலை. அவன் தன் வெம்மையைத் தணிக்கும்பொருட்டு மேற்குக் கடலில் மூழ்கியதாக வருணித்தார். கதிரவன் முதலான கிரகங்கள். நட்சத்திரங்கள் மேற்கே மறைந்து கிழக்கே உதிக்கும். அதனை மேற்குக் கடலில் மூழ்கி மறைந்து கிழக்குக் கடலில் மீண்டும் எழுவதாகக் கூறுதல் கவிமரபு. தேர்ப்பாகனும் குதிரையும்: தேர்ச் சாரதியின் கண் பார்வை எவ்வளவு தூரம் செல்லுமோ அதைவிட அதிக தூரம் அவனது குதிரைகள் செல்லும். அருணன்: கதிரவனின் தேர்ப்பாகன்.*

*454.* ***கறங்கு தண் புனல். கடி நெடுந்***
***தாளுடைக் கமலத்து***
***அறம் கொள் நாள்மலர்க் கோயில்கள்***
***இதழ்க் கதவு அடைப்ப.***
***பிறங்கு தாமரைவனம் விட்டு.***
***பெடையொடு களி வண்டு***
***உறங்குகின்றது ஓர் நறு மலர்ச்***
***சோலை புக்கு. உறைந்தார்.***

***கறங்கு தண்புனல்*** *- ஒலிக்கின்ற குளிர்ந்த நீர்நிலைகளிலுள்ள;* ***கடி நெடுந்தாள் உடை*** *- மணத்தையும் நீண்ட தண்டினையும் உடைய;* ***நாள் கமலத்து மலர்*** *- அன்று பூத்த தாமரையின் மலர்களாகிய;* ***அறம் கொள் கோயில்கள்*** *- (விருந்தாக வருகிற வண்டுகளின் தாகம் தீர அவற்றிற்குத் தேனைத் தருதலாகிய) தருமத்தைக் கொண்டுள்ள; சிறந்த மாளிகைகள்;* ***இதழ்க் கதவு அடைப்ப -*** *தம்முடைய இதழ்களாகிய வாயில் கதவுகளை மூடிவிட்டதனால் (அங்கே சென்று மதுவைக் குடித்து மயங்கித் தூங்க முடியாமல்);* ***பிறங்கு தாமரை வனம் விட்டு -*** *கண்களுக்குக் கவர்ச்சியாக விளங்குகின்ற அத்தாமரைக் காட்டை நீங்கி;* ***களிவண்டு -*** *மதுவால் களிப்படையும் ஆண் வண்டுகள்;* ***பெடையொடும் உறங்குகின்றது -*** *பெண் வண்டுகளுடன் சென்று உறங்குவதற்கு இடமான;* ***ஓர் நறுமலர்ச் சோலை -*** *மணம் பரப்பும் பூக்களையுடைய ஒரு சோலைக்குள்ளே;* ***புக்கு உறைந்தார்*** *- புகுந்து (அன்றிரவு அம் மூவரும்) தங்கினார்கள்.*

*வண்டும் சோலையும்: குவிந்த தாமரைப் பூக்களின் தேனைப் பெறாமையால். வண்டுகள் அம் மலர்களை விட்டுச் சோலைகளிலுள்ள பல வகையான மலர்களின் தேனைக் குடித்து மயங்கின. இரக்க வருகின்றவர்கள் ஒன்றும் கொடுக்காமல் கொடையாளிகளின் வீட்டின் கதவம் அடைத்திருப்பத னால் வேறு இடம் சென்று அவர்களிடம் தாம் விரும்பியதைப் பெற்று மகிழ்வார்கள். இந்த உலக இயல்பை அறிந்து இவ்வாறு கம்பர் வருணித்தார்.*

*வான்மிகம்: முனிவர் முதலோர் சோணை நதியைக் கடந்தபின் பல வனங்களையும் பார்த்தவாறு கங்கையை அடைந்தனர். அக் கங்கையின் வரலாற்றைக் கேட்டபின் அதன் வடகரையைக் கடந்து அங்குள்ள விசாலை என்னும் நகரத்தைச் சேர்ந்தனர். நயம்: தாமரை மலரில் தேனைப் பெறாத வண்டுகள் அவற்றை விட்டுச் சோலையிலுள்ள பலவகை மலர்களை நாடும். தன் மனைவியிடம் இன்பம் பெறாமல் அவளைவிட்டு அகலிகையைத் தேடிச் சென்றான் இந்திரன் என்பது இங்கு அறியத் தக்கது.*

*கங்கையைக் காணல்*

455. காலன் மேனியின் கருகு இருள்
கடிந்து. உலகு அளிப்பான்
நீல ஆர்கலி. தேரொடு
நிறை கதிர்க் கடவுள்.
மாலின் மா மணி உந்தியில்
அயனொடு மலர்ந்த
மூல தாமரை முழு மலர்
முளைத்தென. முளைத்தான்.

**காலன் மேனியின்** - யமனது நிறம்போலக்; **கருகு இருள் கடிந்து** - கறுத்துள்ள இருட்டை நீக்கி; **உலகு அளிப்பான்** - உலகத்தைக் காக்கும் பொருட்டு; **நிறை கதிர்க் கடவுள்** - நிறைந்த கதிர்களையுடைய கதிரவன்; **தேரொடு** - தனது இரதத்தோடு; **நீலம் ஆர்கலி** - நீலக்கடலிலே; **மாலின் மாமணி அயனொடு வந்த** - திருமாலின் கரிய அழகிய உந்தியிலே பிரமனோடு தோன்றிய; **மூலத் தாமரை முழுமலர் முளைத்தென** - முதன்மையான பெரிய தாமரை மலர் முளைத்தது போல; **முளைத்தான்** - உதித்தான்.

தற்குறிப்பேற்ற அணி. கடலுக்குத் திருமால்; அக் கடலில் கதிரவன் தோன்றுகிற உதயமலைக்குத் திருமாலின் உந்தி; கதிரவனுக்கும் பிரமன்; தேருக்குத் தாமரை மலர் ஆகியவை உவமைகள் ஆயின.

456. அங்கு நின்று எழுந்து.
அயன் முதல் மூவரும் அனையார்.
செங் கண் ஏற்றவன் செறி சடைப்
பழுவத்தில் நிறை தேன்
பொங்கு கொன்றை ஈர்த்து ஒழுகலால்.
பொன்னியைப் பொருவும்
கங்கை என்னும் அக் கரை பொரு
திரு நதி கண்டார்.

**அயன்முதல் மூவரும் அனையார்** - (கதிரவன் உதயமானவுடன்) பிரமன் முதலாகிய மும்மூர்த்திகளையும் ஒத்தவராகிய விசுவாமித்திரன் முதலான மூவரும்; **அங்கு நின்று எழுந்து** - அச்சோலையிலிருந்து புறப்பட்டு; **செங்கண் ஏற்றவன்** - சிவந்த கண்களைக் கொண்ட காளையை ஊர்தியாகவும் கொடியாகவும் உடைய சிவனது; **செறிசடைப் பழுவத்தில்** - அடர்ந்த சடையாகிய காட்டிலுள்ள; **நிறை தேன் பொங்கு** - நிறைந்த தேனொடு விளங்குகின்ற; **கொன்றை ஈர்த்து ஒழுகலால்** - பொன்னிறமுள்ள கொன்றை மலரை இழுத்துக் கொண்டு பெருகுவதாலே; **பொன்னியைப் பொருவும்** - (பொன்னி என்னும் பெயரொடு பொன்னைக் கொழிந்து வரும்) காவிரி நதியை ஒத்துள்ள; **கங்கை என்னும்** - கங்கை என்கிற; **அக்கரை பொரு** - அந்த இரு கரைகளிலும் மோதுகின்ற; **திருநதி கண்டார்** - அழகும் மேன்மையும் மிக்க ஆற்றைக் கண்டனர்.

*காவிரி - கங்கை: திருமாலின் பரம பதத்திற்கு அருகிலுள்ள விரசை நதிபோல விளங்குவது காவிரி. இது நிலவுலகில் திருவரங்கத்தின் இரு பக்கங்களிலும் மாலைபோலச் சூழ்ந்துள்ளது. இத்தகைய சிறப்புடைய காவிரி கங்கைக்கு உவமையாயிற்று. அயன் முதல் மூவர்: பிரம்ம ரிஷிப் பட்டத்தை அரிய முயற்சியால் பெற்ற விசுவாமித்திரனுக்குப் பிரமனும். திருமாலின் அவதாரச்சிறப்புடைய இராமனுக்கு விஷ்ணுவும். மிக்க கோபமுள்ள இலக்குவனுக்கு அழிக்குங் கடவுளான உருத்திரனும் உவமையாயினர்.*

*மிதிலை நாடு சேரல்*

***457. பள்ளி நீங்கிய. பங்கயப்
பழன நல் நாரை.
வெள்ள வான் களை களைவுறும்
கடைசியர் மிளிர்ந்த
கள்ள வாள் நெடுங் கண் நிழல்.
கயல் எனக் கருதா.
அள்ளி. நாணுறும். அகன் பணை
மிதிலை நாடு அணைந்தார்.***

***பங்கயப் பழனம்** - தாமரைகளையுடைய வயல்களிலே; **பள்ளி நீங்கிய** - அப்போதுதான் உறக்கம் நீங்கிய; **நல் நாரை** - நல்ல நாரைகள்; **வெள்ள வான்களை** - நீர் பெருக்கிலே தோன்றுகின்ற நீண்ட களைகளை; **களைவுறும்** - பறிக்கின்ற; **கடைசியர்** - உழத்தியரின்; **மிளிர்ந்த** - பிறழுகின்ற; **கள்ள வாள் நெடுங்கண்** - (ஆண்களின் உள்ளத்தை மயக்கும்) ஒளியுள்ள கண்களின்; **நிழல்** - சாயையை; **கயல் எனக் கருதா** - கயல் மீன்களென்று கருதி; **அள்ளி** - தம் மூக்கால் குத்தியெடுத்து; **நாணுறும்** - (அவை மீன்களாக இல்லாமையால்) வெட்கம் அடைவதற்கு இடமான; **அகல் பணை** - பரப்புடைய மருதநிலம் சூழ்ந்த; **மிதிலை நாடு அணைந்தார்** - மிதிலை நாட்டை மூவரும் சேர்ந்தார்கள்.*

*மிதிலை நாடு: வயல்களில் உள்ள பங்கய மலர்களிலே அப்பொழுதான் உறக்கம் நீங்கிய நாரைகள் இன்னும் தூக்கக் கலக்கத்தால் மயங்கியுள்ளன. வயலில் களைபறிக்கும் உழத்தியரின் கண் பிரதி பிம்பத்தை அந்த நாரைகள் கயலென்று கருத்திக் கொத்தி அவை மீன்கள் அல்ல என்பதை அறிந்து வெட்கமடைந்து மறைதற்கு இடமான வயல் நிலத்திற்குச் சென்றன. மயக்க அணி: மகளிர் கண்களின் நிழலைக் கயல் மீன் என்று கருதி நாரைகள் மயங்கினவாகக் கூறியதால். வான்களை: வயல்களில் தாமரைகளே களைகளாக உள்ளன. ஒப்புமை: கண்ணும் கயலும்: வடிவமும் பிறழ்ச்சியும் பற்றிக் கண்ணிற்குக் கயல் உவமையாயிற்று. கம்பன்.41*

*மிதிலையின் வளம்*

***458. வரம்பு இல் வான் சிறை மதகுகள்***
***முழவு ஒலி வழங்க.***
***அரும்பு நாள்மலர் அசோகங்கள்***
***அலர் விளக்கு எடுப்ப.***
***நரம்பின் நான்ற தேன் தாரைக் கொள்***
***நறு மலர் யாழின்.***
***சுரும்பு. பாண் செய.***
***தோகை நின்று ஆடுவ - சோலை.***

***சோலை*** - *(அந்த மிதிலைநாட்டுச்) சோலைகளில்;* ***வரம்பு இல்*** *- அளவில்லாத;* ***வான்சிறை மதகுகள்*** *- பெரிய நீர் நிலையின் மதகுகள்;* ***முழவு ஒலி வழங்க*** *- மத்தள ஓசையைத் தரவும்;* ***அசோகங்கள்*** *- அசோக மரங்கள்;* ***அரும்பு நாள் மலர்*** *- அரும்புகின்ற புதிய மலர்களாகி;* ***அலர் விளக்கு எடுப்ப*** *- பொலிவுள்ள விளக்குகளை ஏந்தவும்.* ***நரம்பின் நான்ற*** *- யாழின் நரம்பு போல நீண்ட* ***தேன் தாரை கொள்*** *- சிறந்த தேனின் ஒழுக்கைக் கொண்ட;* ***நறுமலர் யாழில்*** *- நறுமணம் வீசும் மலர்களாகிய யாழிலே;* ***சுரும்பு பாண் செய*** *- வண்டுகள் பாடவும்;* ***தோகை நின்று ஆடுவ*** *- மயில்கள் நின்று கூத்தாடுகின்றன.*

*மயிலும் மகளிரும்: ஆடும் மகளிரின் தன்மை மயில்களுக்கு ஏற்றிக் கூறப்பெற்றுள்ளது. உருகப் பாங்கு. சோலைகளின் மதகுகளில் நீர் பாயும்போது உண்டாகும் ஒளியை மத்தள ஒலியாகவும். மலர்களை விளக்கின் ஒளிப்பிழம்பாகவும். தேன் தாரைகளை யாழின் நரம்பாகவும். மலரை யாழாகவும். வண்டுகளைப் பாடகராகவும். மயில்களைக் கூத்தாடும் மகளிராகவும் உருவகப்படுத்தியுள்ளார். அசோகம்: இப்போது அசோகு என்று குறிக்கப்படும் மரமன்று. சிறை: நீரைத் தேக்கி வைத்திருக்கும் ஏரி. குளம் போல்வன; அணை என்றும் கூறலாம். ஒப்புமை: கம்பன் -35; அகநானூறு 82. 7*

***459. பட்ட வாள் நுதல் மடந்தையர்.***
***பார்ப்பு எனும் தூதால்.***
***எட்ட ஆதரித்து உழல்பவர்***
***இதயங்கள் கொதிப்ப.***
***வட்ட நாள் மரை மலரின்மேல்.***
***வயலிடை மள்ளர்***
***கட்ட காவி அம் கண்கடை***
***காட்டுவ - கழனி.***

***கழனி*** - *(அந் நாட்டு) வயல்களில்;* ***பார்ப்பு எனும் தூதால்*** *- தங்கள் பார்வையாகிய தூதால்;* ***எட்ட ஆதரித்து*** *- (தம் கணவரைச்) சேர்வதற்கு விரும்பி;* ***உழல்பவர்*** *- சஞ்சரித்துத் திரிபவராகிய;* ***பட்டம்*** *- நீர்நிலையிலுள்ள;* ***வாள்நுதல்*** *- ஒளிபொருந்திய நெற்றியையுடைய;* ***மடந்தையர் இதயங்கள்*** *- உழவ மகளிரின் மனம்;* ***கொதிப்ப .*** *வெறுப்பு அடையுமாறு;* ***வயலிடை மள்ளர் -*** *வயல்களிலே உழவர்கள்;* ***வட்ட நாள்மரை மலரின் மேல் -*** *வட்ட வடிவமான புதிய தாமரை மலர்களின்மேல்;* ***கட்ட காவி -*** *களை பறித்தெறிந்த கருங்குவளை மலர்களாகிய;* ***அம்கண் கடை -*** *அழகிய கடைக்கண்களை;* ***காட்டுவ -*** *வெளிப்படுத்துகின்றன.*

*வேறு உரை: உழத்தியரின் பார்வைத் தூதால் மயங்கி அவர்களைச் சேர விரும்பும் ஆடவர் மனம் வெறுக்குமாறு வயல்களில் புதிய தாமரை மலர்களின்மேல் அம்மகளிர் களைந்து எறிந்த குவளை மலர்கள் (பெண்களின்) கண்களின் கடைப் பகுதிகளைக் காட்டுகின்றன. ஆடவர் வெறுப்புக்குக் காரணம்: தாமரை மலரில் பொருந்திய குவளைப் பூக்களை நோக்கித் தம்மைக் குறிப்பினால் கண் காட்டி அழைக்கின்ற முகமென மயங்கி அவற்றின் அருகில் வந்த ஆடவர்கள் உண்மையறிந்து வெறுத்தனர். மயக்க அணி: தமது குளிர்ந்த கண் பார்வையால் உழவரைத் தம் வசப்படுத்தித் தழுவ வந்த உழத்தியர் அவ்வயலெங்கும் தாமரைமேல் கருங்குவளைமலர் படிந்திருப்பதைக் கண்டு. தமக்கு முன்னரே அந்த உழவர்களைக் கவர்வதற்கு வேறுசில மகளிர் அவர்களைக் கண்களால் நோக்குகின்றார்களென மயங்கினார்கள்: இனி தமது எண்ணம் கை கூடுமோ கூடாதோ என்ற ஐயத்தின் மிகுதியால் மனம் வெறுத்தனர் எனக் கொள்ளலாம்.*

***460. தூவி அன்னம் தம் இனம் என்று***
***நடை கண்டு தொடர.***
***கூவும் மென் குயில் குதலையர்***
***குடைந்த தண் புனல்வாய்.***
***ஓவு இல் குங்குமச் சுவடு உற.***
***ஒன்றொடு ஒன்று ஊடி.***
***பூ உறங்கினும். புள் உறங்***
***காதன - பொய்கை.***

***பொய்கை*** - *(அம் மிதிலை நாட்டிலுள்ள) நீர் நிலைகளில்;* ***தூவி அன்னம் நடை கண்டு*** *- சிறகுகளையுடைய அன்னங்கள் (மகளிரின்) நடையழகைப் பார்த்து;* ***தம் இனம் என்று தொடரும்*** *- தன் இனமான அன்னப் பறவை என்று மயங்கி (அவர்) பின் தொடர்ந்தன;* ***கூவும் மென்குயில் குதலையர்*** *- (இனிமையாகக்) கூவுகின்ற மென்மையான குயிலின் குரல்போன்ற மழலைச் சொற்களையுடைய மகளிர்;* ***குடைந்த*** *- மூழ்கி விளையாடின;* ***தண்புனல் வாய்*** *- குளிர்ந்த நீரில்;* ***ஓவு இல்*** *- விட்டு நீங்காத;* ***குங்குமம் சுவடு உற*** *- குங்குமக் குழம்பின் சுவடுகள் (தம்மேல்) பொருந்தியதால்;* ***ஒன்றோடு ஒன்று ஊடி*** *- ஒன்றுடன் ஒன்று பிணங்கி;* ***பூ உறங்கினும்*** *- (தண்ணீரிலுள்ள தாமரை முதலிய) மலர்கள் உறங்கினாலும்;* ***புள் உறங்காதன*** *- (அவற்றிலுள்ள) பறவைகள் தூங்காமல் கிடக்கின்றன.*

*மயக்க அணி: குளங்களில் பெண்கள் இறங்கி விளையாகின்றார்கள். அப்பொழுது. அவர்கள் உடம்பில் அணிந்துள்ள குங்குமக் கலவை அக்குளங்கிலுள்ள பறவைகளின் உடல்மேல் படிகிறது. அந்நிலையில் பிற பறவைகள் ஒன்றை ஒன்று நோக்கும்போது தம் இனப் பறவைகளையே பிற இனப்பறவைகளென மயங்கித் தம்முள் மாறுபடுகின்றன. கலவிக் குறி: நிறம் வேறுபடுதலும் நன்மணம் உறுதலும். பூவிக்குத் தூக்கம்: இதழ்குவிதல். பறவைக்குத் தூக்கம்: கலவயையின்றி இளைப்புத் தீரத் தூங்குதல்.*

***461.*** **முறையினின் முது மேதியின்**
**முலை வழி பாலும்.**
**துறையின் நின்று உயர்மாங்கனி**
**தூங்கிய சாறும்.**
**அறையும் மென் கரும்பு ஆட்டிய**
**அமுதமும். அழி தேம்**
**நறையும் அல்லது. நளிர் புனல்**
**பெருகலா - நதிகள்.**

***நதிகள்** - (மிதிலை நாட்டு) ஆறுகளில்; **முறையினில்** - ஒன்றைத் தொடர்ந்து ஒன்றாக; **முது மேதியின் முலைவழி பாலும்** - முதிய எருமைகளின் மடிகளில் இருந்து பெருகின்ற பாலும்; **துறையிலே நின்று** - கரைகளிலே நிறைபெற்று; **உயர் மாங்கனி** - ஓங்கி வளர்ந்துள்ள மாமரங்களின் பழங்களிலிருந்து; **தூங்கிய சாறும்** - வழியும் சாறும்; **அறையும் மென் கரும்பு** - வெட்டப்பட்ட இனிய சுவையான கரும்புகளை; **ஆட்டிய அமுதமும்** - (ஆலையில் வைத்து) ஆட்டுவதால் பெருகும் அமுதம் போன்ற இனிய பாலும் (கரும்புப் பால்); **அழிதேன் நறையும்** - தேன் கூடுகள் சிதைவதால் சிந்திப் பெருகும் மணமுள்ள தேனும்; **அல்லது** - (என்னும் இவை மாறி மாறிப் பெருகுவதேயல்லாமல்) இவையல்லாமல்; **நளிர்புனல் பெருகலா** - குளிர்ந்த நீர் பெருக இடம் பெறாதன.*

*நதி வளம்: நதிகளை வருணிக்குங்கால் தாமாகப் பால் சுரக்கின்ற எருமை வளம். மாமரச் சோலை வளம் கரும்புக் குவியல். தேன் பெருக்கம் ஆகியவற்றைக் கூறி நாட்டு வளத்தையும் புலப்படுத்தினார். முதுமேதி: பருவம் நிரம்பிக் கன்றை ஈன்ற எருமை. மேற்கோள் ‘கனைத்திளங் கற்றெருமைகன்றுக் கிரங்கி நினைத்து முலைவழியே நின்று பால் சோர’ - திருப்பாவை -12*

***462. இழைக்கும் நுண் இடை இடைதர.***
***முகடு உயர் கொங்கை.***
***மழைக் கண். மங்கையர் அரங்கினில்.***
***வயிரியர் முழவம்***
***முழக்கும் இன் இசை வெருவிய***
***மோட்டு இள மூரி***
***உழக்க. வாளைகள் பாளையில்***
***குதிப்பன - ஓடை.***

**ஓடை** - *(அந்த நாட்டிலுள்ள) நீரோடைகள்;* **இழைக்கும் நுண் இடை** - *(பஞ்சின்) நூலைக் காட்டிலும் நுட்பமான இடையானது;* **இடைதர** - *(சுமையைப் பொறுக்கமாட்டாமல் மெலிந்து) பின்வாங்குமாறு;* **முகடு உயர் கொங்கை** - *மலைச்சிகரம்போல் ஓங்கியுள்ள தனங்களையும்;* **மழைக்கண்** - *மழைத்துளிபோல் குளிர்ந்த கண்பார்வையையும் உடைய;* **மங்கையர்** - *இளம் பெண்கள்;* **அரங்கினில்** - *(நடனம் ஆடுகின்ற) நாடக சாலையிலே;* **வயிரியர் முழவம் முழக்கும்** - *தம்மோடு இருக்கும் பாடகர்கள் மத்தளத்தை முழக்குவதனால் உண்டாகிய;* **இன் இசை வெருவிய** - *இனிமையான ஓசையைக் கேட்டு அஞ்சி ஓடுகிற;* **மோடு இள மூரி** - *பெரிய இளமையான எருமைகள்;* **உழக்க** - *(படிந்து) கலக்குவதால்;* **வாளைகள் பாளையில் குதிப்பன** - *(அதற்கு அஞ்சி) வாளை மீன்கள் பக்கங்களிலுள்ள (தென்னை. கமுகுகளின்) பாளைகளில் மேல் தாவிப் பாயப் பெறுவன. நடன அரங்கில் மங்கையர் ஆடும்போது வயிரியர் மத்தளம் கொட்டுகிறார்கள்; அதைக் கேட்டு அஞ்சிய எருமைகள் ஓடிச்சென்று ஓடைகளில் பாய்ந்து நீரைக் கலக்குகின்றன. அதனால் அங்குள்ள வாளைகள் பாளைகளில் பாய்கின்றன. வயிரியர்: மத்தளம் கொட்டுபவர்.*

***463. படை நெடுங் கண் வாள் உறை புக.***
***படர் புனல் மூழ்கி.***
***கடைய முன் கடல் செழுந்திரு***
***எழும்படி காட்டி.***
***மிடையும் வெள் வளை புள்ளொடும்***
***ஒலிப்ப. மெல்லியலார்***
***குடைய. வண்டினம் கடி மலர்***
***குடையவன - குளங்கள்.***

***குளங்கள்*** - *(அந்த நாட்டிலுள்ள) தடாகங்கள்;* **மெல்லியலார் நெடுங்கண்** - *மென்மைத் தன்மையுள்ள பெண்களின் கண்களாகிய;* **வாள்படை உறைபுக** - *வாள்கள் (இமைகளாகிய) நீண்ட கண்களாகிய;* **வாள் உறைபுக** - *வாங்கள் (இமைகளாகிய) உறைக்குள்ளே புகும்படி (கண்களை இறுக மூடிக்கொண்டு);* ***படர் புனல் மூழ்கி*** - *பரந்த நீரிலே இறங்கிக் குளித்து (அந்த நீரைவிட்டு எழுதல்);* ***முன்கடல் கடைய*** - *முன்பு திருப்பாற்கடலைக் கடைய;* **செழுந்திரு எழும்படி** - *(அங்கிருந்து) அழகுமிக்க இலக்குமி எழுந்த தன்மையை;* ***காட்டி*** - *தோற்றுவிக்கும்;* ***மிடையும்*** **வெள்வளை** - *நீரோடு மகளிர் நெருக்கமாக அணிந்துள்ள வளையல்கள்;* **புள்ளொடும் ஒலிப்ப** - *நீர்ப்பறவைகளோடு சமமாக ஒலிக்கும்படி;* ***குடைய*** - *நீரிலே மூழ்கித் திளைக்க;* **வண்டு இனம்** - *வண்டுகள்;* ***கடிமலர் குடைவன*** - *நறுமணமுள்ள பூக்களைக் குடைந்து மதுவைக் குடித்துக் களிக்கும்.*

*மகளிரும் திருமகளும்: மகளிர் தம் வளையல்கள் ஒலிக்கக் குளத்தில் மூழ்கி எழுகின்றார்கள். அது. தேவர்களும் அசுரர்களும் பாற்கடல் கடையும்பொழுது அக் கடலிலிருந்து திருமகள் மேலே எழுவதுபோல் உள்ளது. இதில் காட்சி அணி அமைந்துள்ளது. பாற்கடல் குளத்துக்கும். திருமகள் மிதிலை நாட்டுப் பெண்களுக்கும் உவமையாகும். உருவக அணி: கண்களை வாளாகவும். இமைகளை உறையாகவும் உருவகம் செய்துள்ளார். நயம்: மெல்லியலார் நீர் குடைகின்றார்: வண்டுகள் மலர் குடைகின்றன.*

*மிதிலை நகரின் மதிற்புறத்தே அகலிகை கல்லாய்க் கிடந்த மேட்டைக் காணல்*

***464. இனைய நாட்டினில் இனிது சென்று.***
***இஞ்சி சூழ் மிதிலை***
***புனையும் நீள் கொடிப் புரிசையின்***
***புறத்து வந்து இறுத்தார்;***
***மனையின் மாட்சியை அழித்து இழி***
***மா தவன் பன்னி***
***கனையும் மேட்டு உயர் கருங்கல் ஓர்***
***வெள்ளிடைக் கண்டார்.***

***இனைய நாட்டினில்*** - *இத்தகைய மிதிலை நாட்டிலே;* **இனிது சென்று** - *இனிய மகிழ்ச்சியோடு அடைந்து;* ***இஞ்சி சூழ் மிதிலை*** - *மதில்களால் சூழப்பட்டுள்ள மிதிலை நகரை; புனையும் அலங்கரிக்கின்ற;* ***நீள்கொடிப் புரிசையின்*** - *உயர்ந்த கொடிகளையுடைய புறமதிலின்;* **புறத்து வந்து இறுத்தார் -** *வெளியிலே வந்து தங்கினார்கள்;* **மனையின் மாட்சியை -** *(அவ்வாறு தங்கி) இல்லறத்திற்குச் சிறப்பான கற்பினை;* ***அழித்து இழி*** *- அழியச்செய்ததால் இழிவை அடைந்தன;* ***மாதவப் பன்னி -*** *பெருந்தவத்தனான கௌதமரின் மனைவியான அகலிகையின்;* ***கனையும் மேடு உயர் -*** *(சாப உருவில்) அடர்ந்த மேடாக உயர்ந்து தோன்றுகின்ற;* ***கருங்கல் -*** *கருங்கல்லாகக் (கிடப்பதனை);* ***ஓர் வெள்ளிடைக் -*** *ஒரு வெட்டவெளியிலே;* ***கண்டார் -*** *கண்டார்கள்.*

*விசுவாமித்திரன் முதலிய மூவரும் மிதிலையின் மதிலுக்குப் புறத்தே தங்கினர். அப்பொழுது கௌதம முனிவன் மனைவியான அகலிகை அம்முனிவனின் சாபத்தால் கல்லாய்க் கிடக்கும் இடத்தைப் பார்த்தார்கள். பன்னி: பத்நி(மனைவி) என்னும் வடசொல் பன்னி என மருவியது.*

*இராமனது திருவடி பட அகலிகை முன்னை வடிவம் பெறல்.*

***465.*** ***கண்ட கல்மிசைக் காகுத்தன்***
***கழல் - துகள் கதுவ.-***
***உண்ட பேதைமை மயக்கு அற***
***வேறுபட்டு. உருவம்***
***கொண்டு. மெய் உணர்பவன்***
***கழல் கூடியது ஒப்ப.-***
***பண்டை வண்ணமாய் நின்றனள்;***
***மா முனி பணிப்பான்;***

***கண்ட கல்மிசை*** *- (அவ்வாறு) கண்ட கல்லின்மேலே;* ***காகுத்தன் கழல் துகள்*** *- இராமனது திருவடித் துகள்;* ***கதுவ*** *- பட்டதால்;* ***உண்ட பேதைமை*** *- (தான்) மனத்திற் கொண்டுள்ள அறியாமையாகிய;* ***மயக்கு அற*** *- இருள் மயக்கம் நீங்குமாறு;* ***மெய் உணர்பவன்*** *- உண்மையான தத்துவ ஞானம் பெற்றவன்;* ***வேறுபட்டு*** *- தனது அஞ்ஞானமாகிய அறியாமை நிலை மாறி;* ***உருவம் கொண்டு*** *- உண்மை வடிவம் (புது ஞானஸ்வரூபி) அடைந்து;* ***கழல் கூடியது ஒப்ப*** *- பரமனது திருவடிகளை அடைவதைப் போல;* ***பண்டை வண்ணமாய்*** *- (அந்த அகலிகை) முன்னைய வடிவத்தோடு;* ***நின்றனள்*** *- எழுந்து நின்றனள்;* ***மா முனி பணிப்பான்*** *- (அதனைக் கண்ட) விசுவாமித்திரன் இராமனை நோக்கிப் பின்வருமாறு கூறினான். அகலிகை நல்லுருவம் பெறல்: திருமாலின்திருவடி சேர்பவர் தம் கருமம் ஒழிந்து இப் புன்மையான உடம்பை ஒழித்து ஒளிமிக்க உருவத்தை அடைவதுபோல. இராமனது திருவடிப்பொடி சேர்ந்த அளவில் இவளது சாபம் நீங்கியது. தனது கல்லுருவம் மாறி முன்னைய நல்லுருவத்தைப் பெற்றாள். பேதைமை மயக்கு: அவிச்சை (அஞ்ஞான) யின் தொடர்ச்சி. மெய்யுணர்தல்: பிறப்பு. இறப்பு. வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்கள் நீங்கி உண்மையாக அறிதல். முக்தி பெறுவார்நிலை: நிலம் முதலான ஐம்பூதங்களாலான இந்தக் கரும வினையுடலை நீக்கி. ஒளிமிக்க தெய்வீக உடம்பைப் பெறுதல் வான்மீகம் - மிதிலைக்கு அருகில் செல்லும் போது ஆச்சிரமம் ஒன்று பாழடைந்து கிடப்பது குறித்து இராமன் விசுவாமித்திரனைக் கேட்டான். அப்பொழுது அம் முனிவன் அகலிகையின் வரலாறு கூறி. அந்த ஆச்சிரமம் செல்லுமாறு வேண்டுகிறான். இராமனும் சாப விமோசனம் உண்டாகுமென்று கருதி அங்கே சென்றான்.*

*அகலிகை வரலாற்றை இராமன் முனிவனிடம் கேட்டல்*

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

***466.*** ***‘மாஇரு விசும்பின் கங்கை***
***மண்மிசைக் கொணர்ந்தோன் மைந்த!***
***மேயின உவகையோடு***
***மின் என ஒதுங்கி நின்றாள்.***
***தீவினை நயந்து செய்த***
***தேவர்கோன்தனக்குச் செங் கண்***
***ஆயிரம் அளித்தோன். பன்னி;***
***அகலிகை ஆகும்’ என்றான்.***

***மா இரு விசும்பின்*** - *மிகப் பெரிய ஆகாயத்திலிருந்து;* ***கங்கை மண்மிசை*** - *கங்கா நதியை இப்பூமிக்கு;* ***கொணர்ந்தோன் மைந்த*** - *கொண்டு வந்த பகீரதன் என்னும் பேரரசன் (குலத்தில் பிறந்த) மைந்தனே!;* ***மேயின உவகையோடு*** - *பொருந்தின மகிழ்ச்சியோடு;* ***மின்னென*** - *மின்னல்கொடிபோல;* ***ஒதுங்கி நின்றாள்*** - *ஒருபக்கத்தே (நாணத்தால்) ஒதுங்கி நின்ற இவள்;* ***தீவினை*** - *(மற்றொருவன் மனைவியைச் சேர்தலாகிய) கொடுந்தொழிலை;* ***நயந்து செய்த*** - *விரும்பிச் செய்த;* ***தேவர்கோன் தனக்கு*** - *தேவர்கள் தலைவனான இந்திரனுக்கு;* ***செங்கண் ஆயிரம்*** - *சிவந்த ஆயிரம் கண்களை;* ***அளித்தோன் பன்னி*** - *கொடுத்த கௌதம முனிவனுடைய பத்தினியான;* ***அகலிகை ஆகும்*** - *அகலிகை ஆவாள் என்றான்.*

*அகலிகை: தன் சிலை வடிவம் நீங்கி பெண்வடிவு பெற்று மகிழ்ச்சியோடு நாணத்தால் ஒதுங்கி நிற்பவளே. கௌதம முனிவனின் மனைவியான அகலிகையாவாள் இந்திரன் ஆயிரம் கண்கள் பெற்றமை: இந்திரன் மாற்றான் மனைவியைச் சேர்தலாகிய கொடுஞ்செயலை விரும்பிச் செய்ய அதன் பொருட்டுக் கௌதம முனிவர் அவனுக்குச் சாபம் தந்தார். பின்னர் அம் முனிவரை வேண்டக் குறிகள் ஆயிரம் கண்களாகுமாறு அருள் பெற்றான்.*

***467.*** ***பொன்னை ஏர் சடையான் கூறக்***
***கேட்டலும். பூமி கேள்வன்.***
***‘என்னையே! என்னையே! இவ்***
***உலகு இயல் இருந்த வண்ணம்!***
***முன்னை ஊழ் வினையினாலோ!***
***நடு ஒன்று முடிந்தது உண்டோ?***
***அன்னையே அனையாட்கு இவ்வாறு***
***அடுத்தவாறு அருளுக!’ என்றான்.***

***பொன்னை ஏர் சடையான்*** - *பொன்னைப் போன்ற சடை முடியுடைய கோசிக முனிவன்;* ***கூறக் கேட்டலும்*** - *இவ்வாறு சொல்லியதைக் கேட்டவுடனே;* ***பூமி கேள்வன்*** - *பூமி தேவிக்கு நாயகனான இராமன்;* ***இவ் உலகு இயல்*** - *(வியப்போடு அம் முனிவனை நோக்கி) இந்த உலகத்தின் இயல்பு;* ***இருந்த வண்ணம்*** - *இருந்த விதம்;* ***என்னையே என்னையே*** - *எத்தன்மையது! எத்தன்மையது! முடிந்தது* - *இவ்வாறு நிகழ்ந்தது;* ***முன்னை ஊழ்வினையினாலோ*** - *முற்பிறப்பில் செய்த வினையின் பயனாலோ?;* ***நடு ஒன்று உண்டோ*** - *(அல்லது இதற்குக் காரணமாக) இடையிலே நேர்ந்த ஒரு செயல் உண்டோ?;* ***அன்னையே அனையாட்கு*** - *தாய் போன்ற அகலிகைக்கு;* ***இவ்வாறு அடுத்தவாறு*** - *இப்படி ஏற்பட்ட காரணத்தை;* ***அருளுக*** - *கூறி அருளுக;* ***என்றான்.*** *என்று இராமன் வேண்டினான்.*

*உலகத்தாயும் ஊழும்: அகலிகை தாய்போலக் குற்றம் அற்றவளாக விளங்குகின்றாள். இத்தகைய தன்மையுடையவளுக்கும் கல்லாக மாறும் நிலை ஏற்படுமா? அத்தகைய பரிதாபநிலை ஏற்படுமென்றால் இந்த உலக இயல்பை என்னவென்று சொல்வது? இவ்வாறு இவள் உருவம் மாறுபட்டதற்குக் காரணம் என்னவாக இருக்க முடியும்? முந்தின பிறப்பில் அமைந்த விதியா? அதுவல்லாமல் இப் பிறப்பில் ஏதேனும் நேர்ந்தது உண்டோ? இக் காரணத்தை அறியுமாறு கூற வேண்டுமென்று விசுவாமித்திரனை இராமன் கேட்கிறான். என்னையே! என்னையே! வியப்பைக் குறிக்கும் அடுக்கு.*

*முனிவன் அகலிகையின் வரலாறு உரைத்தல்*

***468. அவ் உரை இராமன் கூற.***
***அறிவனும். அவனை நோக்கி.***
***'செவ்வியோய்! கேட்டி; மேல் நாள்***
***செறி சுடர்க் குலிசத்து அண்ணல்***
***அவ்வியம் அவித்த சிந்தை***
***முனிவனை அற்றம் நோக்கி. நவ்விபோல் விழியினாள் தன்***
***வன முலை நணுகலுற்றான்;***

***அவ் உரை இராமன் கூற*** - *இவ்வாறு இராமன் கேட்க;* ***அறிவனும்*** - *முனிவனும் (அந்த வார்த்தைகளைக் கேட்டு);* ***அவனை நோக்கி*** - *இராமனைப் பார்த்து (கூறத் தொடங்கினான்);* ***செவ்வியோய்*** - *எல்லா நற்குணங்களும் உடையவனே!;* ***கேட்டி*** - *(நான் கூறுவதைக்) கேட்பாயாக;* ***மேல்நாள்*** - *முன்னொரு காலத்திலே;* ***செறிசுடர்க் குலிசத்து*** - *மிகுந்த ஒளியுள்ள வச்சிரப்படை ஏந்திய;* ***அண்ணல்*** - *பெருமை மிக்க இந்திரன்;* ***அவ்வியம் அவித்த*** - *பொறாமை முதலான தீய குணங்களை நீக்கிய;* ***சிந்தை முனிவனை*** - *மனம் படைத்த கௌதம முனிவர்;* ***அற்றம் நோக்கி*** - *(ஆச்சிரமத்தில்) இல்லாத சமயம் பார்த்து (அங்கே சென்று);* ***நவ்வி போல் விழியினாள்தன்*** - *மான் விழியாளான அகலிகையின்;* ***வனமுலை நணுகல் உற்றான்*** - *அழகிய தனங்களைச் சேர விரும்பினான்.*

*அகலிகை: படைப்புக்கடவுளான பிரமன் முன்பு படைத்த மக்களின் உடம்பிலுள்ள உறுப்பு அழகைச் சிறிது சிறிதாக எடுத்து அழகான ஒரு பெண்ணைப் படைத்தான். அவளுக்கு அ?ஹல்யா என்னும் பெயரிட்டான். ?ஹலம். ?ஹல்யம் - அழகின்மை. அ?ஹல்யா - அழகின்மை இல்லாதவள். அகலிகை வரலாறு இந்திரன் இத்தகைய அழகிய பெண்ணுக்குத் தக்க கணவர்தானே என்று செருக்குக்கொண்டு அவளைத் தன் தாரமாகக் கருதினான். ஆனால் பிரமன் அவனது எண்ணத்தோடு மாறுபாடு கொண்டான். அதனால் அவளைக் கௌதமனிடம் தந்து. 'இவளை நீதான் பாதுகாக்கவேண்டும்' எனக் கூறி ஒப்படைத்தான். முனிவனும் அவளைப் பலகாலம் காத்துப் பிரமனிடம் சேர்த்தான். பிரமனோ அம்முனிவனின் சபலமின்மையையும். உயர்ந்த தவத்தையும் அறிந்து அவளை அம்முனிவனுக்கே மணம் புரிவித்தான். அதனால் பொறாமை கொண்ட இந்திரன் வேற்று வடிவத்திலே அவளைச் சேரமுற்பட்டான் என்பது வரலாறு.*

***469.*** **'தையலாள் நயன வேலும்.**
**மன்மதன் சரமும். பாய.**
**உய்யலாம் உறுதி நாடி**
**உழல்பவன். ஒரு நாள் உற்ற**
**மையலால் அறிவு நீங்கி.**
**மா முனிக்கு அற்றம் செய்து.**
**பொய் இலா உள்ளத்தான்தன்**
**உருவமே கொண்டு புக்கான்.**

**தையலாள் நயன வேலும்** - *அகலிகையின் கண்களாகிய வேல்களும்;* **மன்மதன் சரமும் பாய** - *மன்மதனுடைய மலர் அம்புகளும் தன்மேல் பாய்வதனால்;* **உய்யல் ஆம்** - *(மிக வருந்தி) (அவளைச் சேர்ந்து அக்காம நோயிலிருந்து நீங்கிப்) பிழைக்கக் கூடிய;* **உறுதி நாடி** *-ஓர் உபாயத்தைத்தேடி;* **உழல்பவன்** - *அலைபவனான அந்த இந்திரன்;* **ஒருநாள் உற்ற மையலால்** - *ஒரு தினத்தில் அளவற்ற காம மயக்கத்தால்;* **அறிவு நீங்கி** - *நல்லறிவுகெட்டு;* **மாமுனிக்கு** - *பெருமையுள்ள அக்கௌதம முனிவனுக்கு;* **அற்றம் செய்து** - *பிரியுமாறு உண்டாக்கி;* **பொய்யிலா உள்ளத்தான்தன்** - *பொய்யில்லாத மனத்தையுடைய அம்முனிவனது;* **உருவமே கொண்டு** - *உருவத்தையே தான் எடுத்துக் கொண்டு;* **புக்கான்** - *அவனது ஆச்சிரமத்துள்ளே புகுந்தான்.*

*இந்திரன் நிலை: அகலிகையின் கண்களாகிய வேலும். மன்மதனின் காம பாணங்களும் ஒரே சமயத்தில் தாக்க. அக் காம மயக்கத்தால் அறிவை இழந்தான் இந்திரன். காமத்தால் வருந்திய அவன் அதிலிருந்து பிழைக்க. ஒரே வழி 'கௌதம முனிவன் உருவத்திலே சென்று அகலிகையைச் சேர்வதே' என உறுதி கொண்டான். அதன் பொருட்டு அம்முனிவனை அப்பால் போகுமாறு தந்திரம் செய்கிறான். அம் முனிவனது வடிவிலே ஆச்சிரமத்திற்குள் நுழைகிறான். முனிக்கு அற்றம் செய்தல்: பொழுது புலர்வதன் முன்னே கோழி கூவுமாறு இந்திரன் செய்தான். கௌதம முனிவனும் காலைக் கடன் கழித்தற் பொருட்டு வெளிப்புறம் சென்றான்.*

***470. ‘புக்கு அவளோடும். காமப்***
***புது மண மதுவின் தேறல்***
***ஒக்க உண்டு இருத்லோடும்.***
***உணர்ந்தனள்; உணர்ந்த பின்னும்.***
***‘தக்கது அன்று’ என்ன ஓராள்;***
***தாழ்ந்தனள் இருப்ப. தாழா***
***முக்கணான் அனைய ஆற்றல்***
***முனிவனும். முடுகி வந்தான்.***

**புக்கு** - *(இவ்வாறு இந்திரன் முனிவனது உருவம் (கொண்டு) சென்று;* **அவளோடும் காமம்** - *அந்த அகலிகையோடு புதுக் கலப்பில் அமைந்த காமமாகிய;* **புதுமணம் மதுவில் தேறல்** - *மணமுள்ள மதுவின் தெளிவை;* **ஒக்க உண்டு இருத்தலோடும்** - *(இருவரும்) சமமாக அனுபவித்து கொண்டிருக்கும்போது;* **உணர்ந்தனள்** - *(தன்னோடு மகிழ்பவன் இந்திரனே என்ற) தவற்றை அறிந்தாள்;* **உணர்ந்த பின்னும்** - *(அவ்வாறு) அறிந்த பின்பும்;* **தக்கது அன்று என்ன** - *(இத்தீய செயல் தனக்குத்) தகுதியானதாக இல்லை என்று;* **ஓராள்** - *சிந்தனை செயலுக்குத் தானும் மனம் பொருந்தியவளாக இருக்க (அச் சமயத்தில்);* **தாழா முக்கணான் அனைய** - *(எந்த வகையிலும்) குறைவு இல்லாத முக்கண்ணனாகிய சிவனை ஒத்துள்ள;* **ஆற்றல் முனிவனும்** - *வல்லமை நிரம்பிய அம்முனிவனும்;* **முடுகி வந்தான்** - *(தாழாமல்) விரைவாக மீண்டு தன் ஆச்சிரமம் வந்தான்.*

*அகலிகையும் இந்திரனும்: கௌதமன் உருவில் வந்த இந்திரனைத் தன் கணவன் என்றே நினைந்து அவனோடு கூடி மகிழ்ச்சியாக இருக் கையில் இது புது மண மது என்பதை உணர்ந்தாள்; அவ்வாறு உணர்ந்தும் அவள் இது தகுதியன்று என ஆராய்ந்து விலக்கக் கூடிய அறிவுத் திறனைப் பெறாமல் இழிந்த அச்செயலுக்கு உடந்தையாக இருந்தாள். அவ்வேளையில் முனிவன் விரைந்து வந்தான். ஏனெனில். தான் எழுந்து புறப்பட்டுப் போனது நள்ளிரவு என்றும். அவ்வாறு தான் செல்வதற்கு இந்திரன் வஞ்சனை செய்தான் என்றும். முனிவன் தன் ஞான உணர்வால் அறிந்ததே ஆகும். காமப் புதுமண மதுவின் தேறல்: பிறன் மனைவியை விரும்புதலும். கள்ளும். ஒழுக்கத்தையும் நல்லுணர்வையும் அழிப்பதில் ஒன்றோடு ஒன்று ஒத்துள்ளன. அதனால் இவ்வாறு கம்பர் உருவகப்படுத்தினார். முக்கணான் அனைய ஆற்றல் முனிவன்: அழிக்கும் தொழிலை நிறைவேற்ற நெற்றிக் கண்ணைத் திறந்துள்ள உருத்திர மூர்த்தியைப் போலச் சினம்கொண்டவனானான் கௌதமன்.*

*471.* ***‘சரம் தரு சாபம் அல்லால்***
***தடுப்ப அருஞ் சாபம் வல்ல***
***வரம் தரு முனிவன் எய்த***
***வருதலும். வெருவி. மாயா.***
***நிரந்தரம் உலகில் நிற்கும்***
***நெடும் பழி பூண்டாள் நின்றாள்;***
***புரந்தரன் நடுங்கி. ஆங்கு ஓர்***
***பூசை ஆய்ப் போகலுற்றான்.***

***சரம் தரு சாபம் அல்லால்*** - *(தடுக்கக்கூடிய) அம்புகளை தொடுக்கின்ற வில்லின்தொழிலால் அல்லாமல்;* **தடுப்ப அரும்** - *யாராலும் தடுக்க முடியாது;* **சாபம் வல்ல** - *சாபத்தைக் கொடுக்கவும் அருளிக் கூறவும் வல்ல;* **வரம் தரு முனிவன்** - *வரங்களை எல்லாம் கொடுக்க வல்ல கௌதமன்;* **எய்த வருதலும்** - *ஆச்சிரமத்திற்கு அருகில் வந்த அளவில்;* **நிரந்தரம் உலகில்** - *எக்காலத்திலும் நிலவுலகில்;* **மாயா நிற்கும்** - *அழியாமல் நிலைத்திருக்கக்கூடிய;* **நெடும்பழி பூண்டாள்** - *பெரும்பழிச் செயலைச் செய்தவளாகிய அகலிகை;* **வெருவி நின்றாள்** - *அச்சத்தால் மனம் பதறி நின்று விட்டாள்;* **புரந்தரன் நடுங்கி** - *இந்திரன் (செய்யத்தகாத செயலைச் செய்ததனால் உண்டான அச்சத்தால்) மனமும் உடம்பும் நடுங்க;* **ஆங்குப் போகல் உற்றான்** - *அந்த இடத்திலிருந்து வெளியே செல்லத் தொடங்கினான்.*

*அகலிகை. இந்திரன் செயல்கள்: தன் கணவன் திரும்பி வந்ததை அறிந்த அகலிகை தன் செயலுக்கு வருந்தி அம் முனிவன்முன் நடுங்கி நின்றாள். இந்திரனோ. ஒரு பூனையின் வடிவைத் தாங்கி வெளியே செல்லத் தொடங்கினான். நெடும்பழி பூண்டாள்: தன் அறியாமையால் பிற ஆடவனோடு கூடியதால் முழுமையாகவே இவள் மேல் பழி சுமத்த இயலாது. ஆனால் தன்னைச் சேர்ந்துள்ளவன் இந்திரனே என்று தெரிந்தும் அத் தீய செயலை விலக்க வேண்டுமென்ற அறிவுத் தெளிவு இவளிடம் உண்டாகாததே இவள் மேல் உள்ள குறையாகும். நயம்: சரந்தரு; சாபம்: வில். தடுப்பருஞ் சாபம்: சபித்தல் - தடுக்கக் கூடிய வில்லம்பை விடத் தடுக்க முடியாத சொல்லம்பு மிகக் கொடியது என்பது விளங்கும்.*

*472.* ***‘தீ விழி சிந்த நோக்கி.***
***செய்ததை உணர்ந்து. செய்ய***
***தூயவன். அவனை. நின் கைச்***
***சுடு சரம் அனைய சொல்லால்.***
***‘‘ஆயிரம் மாதர்க்கு உள்ள***
***அறிகுறி உனக்கு உண்டாக’’ என்று***
***ஏயினன்; அவை எலாம் வந்து***
***இயைந்தன. இமைப்பின் முன்னம்.***

*(அப்பொழுது)* ***செய்ய தூயவன்*** *- (நடுநிலை வழிச் செல்லக் கூடிய) மனத் தூய்மையுடைய அம் முனிவன்;* ***விழி தீ சிந்த நோக்கி*** *- கண்கள் தீப்பொறியைக் கக்குமாறு கோபித்துப் பார்த்து;* ***செய்ததை உணர்ந்து*** *- (இருவரும்) செய்த தீச்செயலை அறிந்து;* ***நின்கைச் சுடு சரம் அனைய சொல்லால்*** *- உனது கையால் ஏவப்படும் கொடிய அம்பு போன்ற சுடு சொல்லால்;* ***அவனை*** *- அந்த இந்திரனை;* ***ஆயிரம் மாதர்க்கு உள்ள*** *- பெண்களுக்கு உள்ள ஆயிரம்;* ***அறிகுறி உனக்கு*** *- குறிகள் உனக்கு;* ***உண்டாக என்று*** *- உண்டாகட்டும் என்று;* ***ஏயினன்*** *- சாப வார்த்தையை ஏவினான்;* ***அவை எலாம்*** *- (அவ்வாறே) அப்பெண்குறிகள் ஆயிரமும்;* ***இமைப்பின் முன்னம்*** *- இமைப் பொழுதிலே;* ***இயைந்தன*** *- அவன் உடம்பில் வந்து பொருந்தின.*

*செய்ய தூயவன்: தன்னோடு எவ்வித உறவும் இல்லாத இந்திரனுக்குச் சாபம் கொடுத்தான். அத்தோடு அமையால் தன் மனைவிக்கும் ஒரு சார் அன்பு காட்டாமல் சாபம் கொடுத்தான். ஆதலின் கௌதமன் தூயவன் ஆனான். இந்திரனுக்கு அமைந்த சாபம்: ஒரு பெண்ணின் குறியிடத்து இந்திரன் மிகவிருப்பம் கொண்டு இழிந்த செயல் புரிந்தமையால் அதனிடம் வெறுப்பு உண்டாகும் பொருட்டு அவனுடம்பு முழுவதும் பெண்குறிகள் அமையுமாறு சாபம் அளிக்கப் பெற்றது. சுடு சரம் அனைய சொல்: இராமனது அம்பு பகைவரைக் கொல்லுதலாகியத் தன் பயனை விரைந்து தருதல்போல முனிவர் சொல் கொடியவரை அழித்தலாகிய தன் பயனைத் தவறாமல் விரைந்து தரும் என்பது குறிப்பு.*

***473. 'எல்லை இல் நாணம் எய்தி.***
***யாவர்க்கும் நகை வந்து எய்தப்***
***புல்லிய பழியினோடும்***
***புரந்தரன் போய பின்றை.***
***மெல்லியலாளை நோக்கி.***
***''விலைமகள் அனைய நீயும் கல் இயல் ஆதி'' என்றான்;***
***கருங்கல் ஆய். மருங்கு வீழ்வாள்.***

***புரந்தரன் எல்லை இல்*** *- (தன் உடம்பு முழுவதும் சாபத்தால் கெட்டு விட்டதனால்) இந்திரன் அளவில்லாத;* ***நாணம் எய்தி*** *- நாணத்தை அடைந்து;* ***யாவர்க்கும்*** *- (தனது நிலையைப் பார்த்தவர்கள். கேட்டவர்கள்) எல்லோர்க்கும்;* ***நகை வந்து எய்த*** *- பரிகாசச் சிரிப்பு வந்தெய்தும்படி; புல்லிய பழியினோடும் - தனக்கு நேர்ந்த பழியோடும்; போயபின்றை - வானுலகத்திற்குச் சென்ற பின்பு;* ***மெல்லியலாளை நோக்கி*** *- (அம் முனிவன்) மெல்லியலாளான தன் மனைவியைப் பார்த்து;* ***விலைமகள் அனைய நீயும்*** *- (தீய ஒழுக்கத்தால்) வேசியைப் போன்ற நீயும்;* ***கல் இயல்*** *- கல் வடிவம்;* ***ஆதி என்றான்*** *- ஆகுக என்று சபித்தான்;* ***கருங்கல்ஆய்*** *- (உடனே) அவள் கருங்கல் வடிவாய்;* ***மருங்கு வீழ்வாள்*** *- பக்கத்திலே வீழ்வாள் ஆயினாள்.*

*விலைமகள் அனையவள்: உண்மையில் அகலிகை நெஞ்சறியக் கற்பிழந்தவள் ஆகாள். இருந்தும் கௌதமன் சினத்தால் உண்மையை. ஆராய்ந்து பாராமல் 'விலைமகள் போன்றவள்' அகலிகை என்று கூறுகிறான்.*

*474* ***''பிழைத்தது பொறுத்தல் என்றும்***
***பெரியவர் கடனே; அன்பால்.***
***அழல் தருங் கடவுள் அன்னாய்!***
***முடிவு இதற்கு அருளுக!'' என்ன.***
***''தழைத்து வண்டு இமிரும் தண் தார்த்***
***தசரதராமன் என்பான்***
***கழல்-துகள் கதுவ. இந்தக்***
***கல் உருத் தவிர்தி'' என்றான்.***

*(அவ்வாறு விழுகின்ற அகலிகை அம் முனிவனை நோக்கி)* **அழல் தரும்** - *(தன்னுடைய நெற்றிக் கண்ணிலிருந்தும். புன் சிரிப்பிலிருந்தும்)* நெருப்பைச் சிதறும்; **கடவுள் அன்னாய்** - உருத்திர மூர்த்தியை ஒத்த முனிவனே!; **பிழைத்தது பொறுத்தல்** - சிறியோர் செய்த பிழையைப் பொறுப்பது; **என்றும் பெரியவர் கடனே** - எக்காலத்தும் பெரியோர்களின் கடமையே ஆகும்; **என்பர்** - என்று கூறுவர் *(முன்னோர்);* **இதற்கு முடிவு** - *(ஆதலால்)* இச் சாபத்திற்கு ஒரு முடிவை; **அருளுக என்ன** - அருள்வீராக என்று வேண்டி நிற்க; **தழைத்து வண்டு** - *(அதற்கு இரங்கிய அம் முனிவன்)* செழிப்புடையதாய் வண்டுகள்; **இமிரும் தண்தார்** - ஒலிக்கும் குளிர்ந்த பூமாலையை அணிந்த; **தசரத ராமன் என்பான்** - தசரத ராமன் என்பவனது; **கழல் துகள் கதுவ** - திருவடித் தூள் உன்மேல் படியும் போது; **இந்தக் கல் உரு** - இந்தக் கருங்கல் வடிவம்; **தவிர்தி என்றான்** - நீங்குவாய் என்று *(சாபம் நீங்கும் வழியும்)* அருளினான். *சிறியர் பெரியர்:* சிறியவர் செய்த பிழை பெருங்கேடு தருவதாக இருப்பினும் பெரியவர் அதனைப் பொறுக்க வேண்டும்; அதுவே அவர்களது உயர்வான கடமையாகும். *அழல் தரும் கடவுள்:* நெருப்புப் போன்ற செந்நிறம் பொருந்திய சிவன்: அக்கினி தேவனைப் போன்ற தூய்மையுடையவன் - என்று சொல்லலாம். *23*

*475.* ***'இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம்;***
***இனி. இந்த உலகுக்கு எல்லாம்***
***உய்வண்ணம் அன்றி. மற்று ஓர்***
***துயர் வண்ணம் உறுவது உண்டோ?***
***மை வண்ணத்து அரக்கி போரில்.***
***மழை வண்ணத்து அண்ணலே! உன்***
***கை வண்ணம் அங்குக் கண்டேன்;***
***கால் வண்ணம் இங்குக் கண்டேன்.'***

***இவ் வண்ணம்*** - இச் செய்தியே; நிகழ்ந்த வண்ணம் - (முற்காலத்து) நடந்த முறையாகும்; ***இனி இந்த*** - இனிமேல் (நீ இவ்வுலகில் பிறந்து தீயவரை அழித்து நல்லவர்களைப் பாதுகாத்தல் என்பது ஏற்பட்ட பிறகு) இந்த; ***உலகுக்கு எல்லாம்*** - உலகத்திலுள்ள உயிர்களுக்கெல்லாம்; ***உய்வண்ணம் அன்றி*** - (துன்பம் நீங்கிக்) கடைத் தேறும் வழியே அல்லாமல்; ***மற்று ஓர் துயர் வண்ணம்*** - அதற்கு வேறானதொரு துன்பத்தின் வழியை; ***உறுவது உண்டோ*** - அடைதல் கூடுமோ? (கூடாது); ***மழை வண்ணத்து அண்ணலே*** - மேகம் போன்ற கரிய திருமேனியுடைய இராமனே! ***அங்கு*** - வருகிற வழியில் (வனத்தில்); ***மைவண்ணத்து அரக்கி*** - அஞ்சனம் போலும் கரிய நிறத்தையுடைய தாடகை என்னும் அரக்கியோடு; ***போரில்*** - செய்த போரில்; ***உன் கைவண்ணம் கண்டேன்*** - உன் கையின் திறத்தைப் (வில்லினது ஆற்றலை) பார்த்தேன்; ***இங்குக் கால் வண்ணம்*** - இந்த இடத்தில் உன் திருவடியின் திறத்தை; ***கண்டேன்*** - பார்க்கலானேன்.

*மழை வண்ணத்து அண்ணல்: கண்டாரின் மனக் கொதிப்பை நீக்கும் குளிர்ந்த தன்மையுடையவன்; கருநிறம் பொருந்தியவன்; கைம்மாறு கருதாது கருணையை மழையாகப் பொழிபவன் இராமன். மைவண்ணத்து அரக்கி: பொய். கொலை. வஞ்சனை முதலான தீய பண்புகளுக்கு உறைவிடமானவள் தாடகை - இருவரின் கருநிறத்துக்கும் வேறுபாடு காட்டப்பெற்றுள்ளது. கை வண்ணமும் கால் வண்ணமும்: முறையே தீயவர்களை அழித்தலும் நல்லவர்களைக் காத்தலும் ஆகிய இருவகைத் திறன்கள்.24*

***476. தீது இலா உதவிசெய்த***
***சேவடிக் கரிய செம்மல்.***
***'கோது இலாக் குணத்தான் சொன்ன***
***பொருள் எலாம் மனத்தில் கொண்டு.***
***மாதவன் அருள் உண்டாக***
***வழிபடு:படர் உறாதே.***
***போது நீ. அன்னை!'' என்ன.***
***பொன் அடி வணங்கிப் போனாள்.***

***தீது இலா உதவி*** - தீமையில்லாத பேருதவியை; செய்த - அகலிகைக்குச் செய்தருளிய; ***சே அடிக் கரிய செம்மல்*** - செம்மையான திருவடிகளையுடைய கரிய இராமன்; ***கோது இலா*** - குற்றமற்ற; ***குணத்தான் சொன்ன*** - நற்குணங்களையுடைய விசுவாமித்திரன் சொல்லிய; ***பொருள் எலாம்*** - செய்தி முழுவதையும்; ***மனத்தில் கொண்டு*** - தன் உள்ளத்தில் கொண்டு; ***அன்னை*** - (அகலிகையை நோக்கி) தாய் போன்றவளே!; ***மாதவன் அருள்*** - மிக்க தவத்தால் மேம்பட்ட கௌதமனது கருணை; ***உண்டாக*** - (உன் பக்கம்) உண்டாகும்படி; ***நீ வழிபடு*** - நீ அவனுக்குப் பணிவிடை செய்வாயாக; ***படர் உறாதே*** - (இடையிலே உனக்கு ஏற்பட்ட துன்பத்தை நினைந்து) வருந்தாதே!; ***போது என்ன*** - செல்க என்று கூற; ***பொன்அடி*** - (அகலிகை) இராமனுடைய அழகிய திருவடிகளை; ***வணங்கிப் போனாள்*** - வணங்கி அப்பால் சென்றாள்.

*தீதிலா உதவி: பிறருக்குத் தீமை பயவாதது; கைம்மாறு கருதாதது; முன் செய்த உதவியை நோக்காதது. சேவடிக் கரிய செம்மல்: முரண் தொடை. ஒப்புமை: 'திருவடியும் கையும் கனிவாயும் செய்ய கரியவன்' - (சிலம்பு: ஆய்ச். குரவை. படர்க்கை. பரவல் 2*

*கௌதமனிடம் அகலிகையைச் சேர்ப்பித்து மூவரும் மிதிலைப் புறமதிலைச் சார்தல்*

***477. அருந் தவன் உறையுள்தன்னை***
***அனையவர் அணுகலோடும்.***
***விருந்தினர் தம்மைக் காணா.***
***மெய்ம்முனி. வியந்த நெஞ்சன்.***
***பரிந்து எதிர்கொண்டு புக்கு.***
***கடன் முறை பழுதுறாமல்***
***புரிந்தபின். காதி செம்மல்***
***புனித மா தவனை நோக்கி.****

***அருந்தவன்** - சிறந்த தவத்தைப் புரியும் கௌதம முனிவனது; **உறையுள் தன்னை** - ஆச்சிரமத்தை; **அனையவர் அணுகலோடும்** - அவர்கள் மூவரும் அடைந்ததும்; **மெய்ம்முனி** - தத்துவ ஞானம் பொருந்திய கௌதம முனிவன்; **விருந்தினர் தம்மைக் காணா** - விருந்தினராகிய அவர்களைப் பார்த்து; **வியந்த நெஞ்சன்** - ஆச்சரியத்தோடு கூடிய மனம் கொண்டவனாகி; **பரிந்து எதிர்கொண்டு** - அன்பு பூண்டு எதிரே போய் (அவர்களை) அழைத்து வந்து; **கடன்முறை பழுதுறாமல்** - (விருந்தினர்க்குச் செய்யக்கூடிய) கடமையாகிய விருந்து உபசரிப்பு சிறிதும் குறைவுபடாமல்; **புரிந்தபின்** - செய்த பின்னர்; **காதி செம்மல்** - காதி என்னும் முனிவனின் மைந்தனான விசுவாமித்திரன்; **புனித மாதவனை நோக்கி** - தவத்தால் தூயவரான அக் கௌதமரைப் பார்த்து.*

*வான்மீகச் செய்தி: கௌதமன். தன் மனைவியான அகலிகை. இந்திரன் ஆகிய இருவரையும் சபித்ததால் நேர்ந்த பாவத்தைப் போக்கிக் கொள்வதற்காக இமயமலைச் சாரலுக்குச் சென்றான். தனது ஞானக் கண்ணால் தன் மனைவியின் சாப விமோசனத்தை உணர்ந்து ஆச்சிரமம் திரும்பி. விருந்தினரை உபசரித்தான். வியந்த நெஞ்சன்: சிறந்த விருந்தினர் தன் ஆச்சிரமம் வருவதற்குக் காரணமாகத் தான் செய்த பெருந்தவம் யாதோ என்று வியந்தான். வந்த விருந்தினரை உபசரிப்பதற்கு உதவியாக உள்ள தன் மனைவியைப் பிரிந்த நாள் முதல் எந்த விருந்தினரையும் தன் பக்கம் வரக் காணாத அம் முனிவன். இன்று தன் மனைவியோடு விருந்தினரும் வருவதைப் பார்த்து வியப்புற்றான் என்றும் கருதலாம்.*

*478.* ***‘அஞ்சன வண்ணத்தான்தன்***
***அடித் துகள் கதுவாமுன்னம்.***
***வஞ்சிபோல் இடையாள் முன்னை***
***வண்ணத்தள் ஆகிநின்றாள்;***
***நெஞ்சினால் பிழைப்பு இலாளை***
***நீ அழைத்திடுக!’ என்ன.***
***கஞ்ச மா மலரோன் அன்ன***
***முனிவனும். கருத்துள் கொண்டான்.****

***அஞ்சன வண்ணத்தான் தன்*** *- மைபோல் கரியதிரு மேனியுடைய இராமனது;* ***அடித்துகள்*** *- திருவடிப்பொடி;* ***கதுவாமுன்னம்*** *- தன்மேல் படுவதற்கு முன்பே (பட்டதும்);* ***வஞ்சிபோல் இடையாள்*** *- வஞ்சிக்கொடிபோலும் இடையுடைய அகலிகை;* ***முன்னை வண்ணத்தள்*** *- பழைய வடிவத்தை;* ***ஆகி நின்றாள்*** *- உடையவளாக எழுந்து நின்றாள்;* ***நெஞ்சினால் பிழைப்பு இலாளை*** *- நெஞ்சாரக் குற்றம் செய்யாத இவளை;* ***நீ அழைத்திடுக என்ன*** *- நீ அழைத்துச் சேர்த்துக் கொள்க என்று விசுவாமித்திரன் கூற;* ***கஞ்ச மா மலரோன் அன்ன முனிவனும்*** *- தாமரை மலரில் தோன்றிய பிரமனைப் போன்ற கௌதம முனிவனும்;* ***கருத்துள் கொண்டான்*** *- (அச் சொற்களை) மனத்திலே ஏற்றுக்கொண்டான். நெஞ்சறியக் குற்றம் செய்யாத அகலிகையை ஏற்க வேண்டுமென்று விசுவாமித்திரன் சொல்ல. அதை உணர்ந்த கௌதமனும் ஏற்கலானான். நெஞ்சில் பிழைப்பிலாள்: நெஞ்சினால் சிறிதும் குற்றம் செய்ய எண்ணாதவள்.*

*479.* ***குணங்களால் உயர்ந்த வள்ளல்***
***கோதமன் கமலத்தாள்கள்***
***வணங்கினன். வலம்கொண்டு ஏத்தி***
***மாசு அறு கற்பின் மிக்க***
***அணங்கினை அவன்கை ஈந்து. ஆண்டு***
***அருந்தவனோடும். வாச***
***மணம் கிளர் சோலை நீங்கி.***
***மணி மதில் கிடக்கை கண்டார்.****

***குணங்களால் உயர்ந்த*** *- நற்குணங்கள் அனைத்திலும் மேம்பட்டவனும்;* ***வள்ளல்*** *- வள்ளலுமாகிய இராமன்;* ***கோதமன் கமலத் தாள்கள்*** *- கௌதமனுடைய தாமரைத் திருவடிகளை;* ***வணங்கினன்*** *- வணங்கி;* ***வலம் கொண்டு ஏத்தி*** *- வலமாகச் சுற்றித் துதிசெய்து;* ***மாசு அறு கற்பின் மிக்க*** *- குற்றமற்ற கற்பினால் மிக்க;* ***அணங்கினை*** *- அத்தெய்வப் பெண் போன்ற அகலிகையை;* ***அவன் கை ஈந்து*** *- அம் முனிவனது கையிலே ஒப்படைத்து;* ***ஆண்டு அருந்தவனோடும்*** *- அப்பொழுதே அரிய தவத்தையுடைய விசுவாமித்திரனோடு;* ***வாசம் மணம் கிளர்*** *- நறுமணம் கமழும்;* ***சோலை நீங்கி*** *- அச்சோலையை நீங்கி;* ***மணிமதில் கிடக்கை*** *- அழகிய நவமணிகள் இழைத்த (மிதிலா நகரின்) புறமதிலை;* ***கண்டார்*** *- (அம் மூவரும்) பார்த்தார்கள்.*

*இராமன் பண்பு: குணங்களால் உயர்ந்தவன்; (அருளை வாரி வழங்கும்) வள்ளல்.*
*அகலிகை பண்பு: மாசறு கற்பின் மிக்க அணங்கு; கற்பிலே குற்றம் இல்லாதவள்; தெய்வப் பெண் போன்றவள்; தவிர வணங்கத் தக்கவள்.*

## *மிதிலைக் காட்சிப் படலம்*

*சனக மன்னனின் நாடு விதேக நாடு. அதன் தலைநகரான மிதிலையின் தோற்றத்தை இராம இலக்குவரும். விசுவாமித்திரனும் கண்ட வரலாறு கூறுவது இப்படலம்.*

*விசுவாமித்திரன் முதலான மூவரும் மிதிலை நகருள் பல காட்சிகளைக் காண்கிறார்கள். கன்னி மாடத்தில் நின்ற சீதையும் இராமனும் ஒருவரை ஒருவர் கண்டு காதல் கொள்கின்றனர். இராமனது நினைவால் சீதை உற்ற துன்பநிலை - அம் மூவரும் சனகன் எதிர்கொள்ளச் சென்று மாளிகையில் தங்குதல் - இராமனுக்குச் சதனாந்தர் விசுவாமித்ரின் வரலாறு கூறுதல் - கௌசிக முனிவன் தவம் செய்தல் - தேவர்கள் கௌசிகனைப் பிரம ரிசியாக்குதல் - சீதையின் உரு வெளிப்பாடு கண்டு இராமன் கலங்குதல் - பின் அந்த இராமன் முனிவரோடும் தம்பியோடும் சனகனது வேள்விச் சாலையை அடைதல் - சனகன் விசுவாமித்திரனை வினவல் - அவரும் விடையளித்தல் ஆகியன அடங்கியுள்ளன.*

*மிதிலைக் கொடிகளின் தோற்றம்*

***480.** **‘மை அறு மலரின் நீங்கி.***
***யான் செய் மா தவத்தின் வந்து.***
***செய்யவள் இருந்தாள்’ என்று.***
***செழு மணிக் கொடிகள் என்னும்***
***கைகளை நீட்டி அந்தக்***
***கடி நகர். கமலச் செங் கண்***
***ஐயனை. ‘ஒல்லை வா’ என்று***
***அழைப்பது போன்றது அம்மா!***

***அந்த கடிநகர்** -காவல் மிக்க அந்த மிதிலா நகரம்; **செய்யவள்** - திருமகள்; **மை அறு மலரின் நீங்கி** - குற்றமற்ற தாமரை மலரை விட்டுப் பிரிந்து; **யான் செய் மாதவத்தின்** - நான் புரிந்த மிகப் பெரிய தவத்தால்; **வந்து இருந்தாள்** - என்னிடம் வந்து பிறந்துள்ளாள்; **என்று செழுமணிக் கொடிகள் என்னும்** - என்று கூறிப் பெரிய அழகிய கொடிகள் என்கின்ற; **கைகளை நீட்டி** - (தன்) கைகளை மேலும் கீழுமாக அசைத்துக் காட்டி (அவற்றால்); **கமலம் செங்கண் ஐயனை** - தாமரை போன்ற கண்களைக் கொண்ட இராமனை; **ஒல்லை வா என்று** - விரைவில் வந்து சேர்க என்று; **அழைப்பது போன்றது** - அழைப்பதைப் போன்றுள்ளது.*

*அணி: தன்மைத் தற்குறிப்பேற்றவணி. இராமன். அருகிலே செல்லும் போது அந்நகரத்து மதில்கள் மேலுள்ள கொடிகள் அசைவது. திருமகள் தன்னிடத்தில் சீதையாகப் பிறந்துள்ளாள் என்பதைக் குறிப்பாகச் சொல்லி அவளுக்குக் கணவனாவதற்கு ஏற்ற இராமனை விரைவிலே வந்து மணம் புரியுமாறு அந்த நகரம் கைகாட்டி அழைப்பது போன்றது. உருவகம்: கொடிகளாகிய கைகள். தாமரை மலரின் குற்றம்: மலர்தலும் பின் குவிதலும். வாட்டம் அடைதலும் ஆகும். யான் செய் மாதவத்தின் வந்து: திருமகள் தன் இயற்கையான இடத்தைவிட்டு விருப்பத்தோடு தன்னிடம் பிறப்பதற்கு ஏற்ற தகுதி உயர்ந்த தவத்தால் அமைய வேண்டும்.*

***481. நிரம்பிய மாடத்து உம்பர்***
***நிரை மணிக் கொடிகள் எல்லாம்.***
***'தரம் பிறர் இன்மை உன்னி.***
***தருமமே தூது செல்ல.***
***வரம்பு இல் பேர் அழகினாளை***
***மணம் செய்வான் வருகின்றான்' என்று***
***அரம்பையர் விசும்பின் ஆடும்***
***ஆடலின். ஆடக் கண்டார்.***

***பிறர் தரம் இன்மை உன்னி*** *- (சீதையைத் திருமணம் செய்து கொள்வதற்கு இராமனைத் - தவிர) வேறு எவர்க்கும் தகுதி இல்லாமையை நினைத்து;* **தருமமே தூது செல்ல** *- அறக் கடவுளே தூது போய்த் தெரிவிக்க;* **வரம்பு இல்** *- அளவில்லாத;* **பேர் அழகினாளை** *- சிறந்த அழகுடைய சீதையை;* **மணம் செய்வான்** *- திருமணம் செய்து கொள்ளும் பொருட்டு (அந்த இராமன்);* **வருகின்றான் என்று** *- வருகின்றான் என்று மகிழ்ந்து;* **அரம்பையர்** *- தெய்வ மகளிர்;* **விசும்பின் ஆடும்** *- வானத்திலே மகிழ்ச்சியால் ஆடுகின்ற;* **ஆடலின்** *- ஆடலைப் போல;* **நிரம்பிய மாடத்து உம்பர்** *- (அந்த நகரத்தில்) நிறைந்துள்ள மாடங்களையுடைய வீடுகளின் மேலே;* **நிரைமணிக் கொடிகள்** *- வரிசையாக உள்ள அழகிய கொடிகள்;* **எல்லாம் ஆட** *- யாவும் காற்றில் ஆடுவதை;* **கண்டார்** *- (அம்மூவரும்) பார்த்தார்கள்.*

*மாட மாளிகைகளின்மேலுள்ள கொடிகளின் காட்சி இதில் கூறப்பட்டுள்ளது. அணி: தன்மைத் தற்குறிப்பேற்றவணி - கொடிகள் அசைவதை. தரும தேவதை தூண்ட இராமன் சீதையை மணம்புரிய வருவதற்காகத் தெய்வப் பெண்கள் ஆடுவதாகக் குறித்தார். தருமத்தின் பயன்: உருவத்திலும் ஒருவர் மணம்புரிதல் தருமமாகும். 2*

***482. பகல் கதிர் மறைய. வானம்***
***பாற்கடல் கடுப்ப. நீண்ட***
***துகில் கொடி. மிதிலை மாடத்து***
***உம்பரில் துவன்றி நின்ற.***
***முகில் - குலம் தடவும்தோறும்***
***நனைவன. முகிலின் சூழ்ந்த***
***அகில்புகை கதுவும்தோறும்***
***புலர்வன. ஆடக் கண்டார்.***

***பகல் கதிர் மறைய*** - *பகற்பொழுதிற்குக் காரணமான கதிரவனின் ஒளிக்கதிர்கள் மறையவும்;* ***வானம் பாற்கடல் கடுப்ப*** - *வானம் திருப்பாற்கடலைப் போன்று காட்சியளிக்கவும்;* ***மிதிலை மாடத்து உம்பரில்*** - *மிதிலை நகரின் உப்பரிகை வீடுகளின் மேல்;* ***துவன்றி நின்ற*** - *நெருங்கிய;* ***நீண்ட துகில் கொடி*** - *நீளமான கொடிச் ்சீலைகள்;* ***முகில் குலம்*** - *மேகக் கூட்டம்;* ***தடவும் தோறும்*** - *(தம்மை வந்து) வருடும் பொழுதும்;* ***நனைவன*** - *அதன் நீரினால் நனைவனவாகவும்;* ***முகிலின் சூழ்ந்த*** - *(அம்) மேகம்போலச் சூழ்ந்து கொண்ட;* ***அகில்புகை கதுவும் தோறும்*** - *அகிற் கட்டையின் புகை (தம்மில் வந்து) படியும் பொழுதும்;* ***புலர்வன*** - *உலர் வனவாகவும்;* ***ஆடக் கண்டார்*** - *ஆடுதலைப் பார்த்தார்கள்.*

*கொடிகளின் நெருக்கம். மிகுதி. மேகக் கூட்டத்தை அளாவும் உயர்ச்சி. அகிற்புகையின் மிகுதி ஆகியன இதில் உணர்த்தப் பெறுகின்றன. அணி: தொல்லுப்பெறலணி -துகிற்கொடி மேகங்களால் நனைவதும். அகிற் புகையால் உலர்ந்து பழைய நிலையை அடைவதும் இவ்வணியாகும். பாற்கடலும் துகிலும்: 'பாற்கடல் போன்ற துகில்' என்றதால் துகில் வெண்ணிறமுடையது என்பது தெரிகிறது.*

*மூவரும் நகரினுள் புகுதல்*

***483. ஆதரித்து. அமுதில் கோல் தோய்த்து.***
***'அவயமம் அமைக்கும் தன்மை***
***யாது?' எனத் திகைக்கும் அல்லால்.***
***மதனற்கும் எழுத ஒண்ணாச்***
***சீதையைத் தருதலாலே.***
***திருமகள் இருந்த செய்ய***
***போது எனப் பொலிந்து தோன்றும்.***
***பொன் மதில். மிதிலை புக்கார்.***

***ஆதரித்து*** - *(மன்மதன் சீதையின் மேனியைப் போன்ற ஓர் அழகிய வடிவத்தை) எழுத விரும்பி;* ***அமுதில் கோல் தோய்த்து*** - *அமுதத்தில் எழுதுகோலைத் தோய்த்துக் கொண்டு;* ***அவயவம் அமைக்கும்*** - *அவள் உறுப்புகளைச் சித்திர்க்கும்;* ***தன்மை யாது என*** - *விதம் (அறியாமல் அவ்வகை) எதுவோ என்று;* ***திகைக்கும் அல்லால்*** - *திகைத்து நிற்பானேயல்லாமல்;* ***மதனற்கும்*** - *அந்த மன்மதனுக்கும்;* ***எழுத ஒண்ணா*** - *எழுத முடியாத;* ***சீதையைத் தருதலாலே*** - *பேரழகு மிக்க சீதையைப் பெற்றதால்;* ***திருமகள் இருந்த*** - *இலக்குமி வாழும்;* ***செய்ய போது என*** - *செந்தாமரை மலர் போல;* ***பொலிந்து தோன்றும்*** - *விளக்கமுற்றுத் தோன்றும்;* ***பொன் மதில் மிதிலை*** - *பொன்மதில் சூழ்ந்த மிதிலை நகரினுள்ளே;* ***புக்கார்*** - *(மூவரும்) சென்றார்கள்.*

*சீதையின் அழகு: மன்மதன் உலகத்தவர் அனைவரது அழகையும் வரையறுத்து உணர்ந்தவன்; ஆண் பெண்களாகிய மக்களின் மனத்திலே தோன்றியுள்ளவன்: தனக்கு வடிவம் இல்லாமல் இருந்தும் ஐந்து அம்புகளைக் கொண்டு மூவுலகையும் தன்வயப்படுத்தும் திறமை பெற்றுள்ளான். இத்தகைய இயல்புடைய அம் மன்மதன் எல்லையில்லாத பேரழகு உடைய சீதையின் உருவத்தைத் தானே சித்திரத்தில் அமைக்கக் கருதினான்; அதற்கு வண்ணப் பொருள் அமுதமேயெனத் தீர்மானித்து. அந்த அமுதத்திலே எழுதுகோலைத் தோய்த்து எடுத்து எழுதத் தொடங்கினாலும் அவளது அழகை முழுமையாக எழுத முடியாமல் திகைப்பானேயல்லாமல் அச் சீதையின் உறுப்புகளுள் ஒன்றைக் கூடச் சரியாக எழுத முடியாதாம்.*

*தெருக்களின் சிறப்பு*

***484. சொற்கலை முனிவன் உண்ட***
***சுடர் மணிக் கடலும். துன்னி***
***அல் கலந்து இலங்கு பல் மீன்***
***அரும்பிய வானும் போல.***
***வில் கலை நுதலினாரும்.***
***மைந் தரும். வெறுத்து நீத்த***
***பொன் கலன் கிடந்த மாட***
***நெடுந் தெருஅதனில் போனார்.***

**சொற்கலை முனிவன்** - *தமிழிலே இலக்கண நூலைச் செய்த அகத்திய முனிவனால்;* **உண்ட** - *பருகப்பட்டு;* **சுடர்மணிக் கடலும்** - *(நீர் வற்றிய) ஒளி பொருந்திய இ ரத்தினங்கள் கிடக்கும் கடலும்;* **அல் கலந்து** - *இரவுக் காலத்தில் பொருந்தி;* **துன்னி இலங்கு** - *நெருங்கி விளங்கும்;* **பல்மீன் அரும்பிய** - *நட்சத்திரங்கள் பல தோன்றிய;* **வானும் போல** - *ஆகாயமும் போல;* **வில்கலை நுதலினாரும்** - *ஒளியுள்ள பிறை போன்ற நெற்றியுடைய மகளிரும்;* **மைந்தரும்** - *ஆடவரும்;* **வெறுத்து நீத்த** - *வெறுப்புற்றுக் கழற்றியெறிந்த;* **பொன்கலன் கிடந்த** - *பொன் அணிகள் தெருவெங்கும் விழுந்துகிடக்கின்ற;* **மாட நெடுந்தெருவதனில்** - *மாடங்களையுடைய நீண்ட வீதியிலே;* **போனார்** - *(அம் மூவரும்) சென்றார்கள். சுடர்மணிக் கடலும் பொற்கலனும்; மைந்தரும் மகளிரும் ஊடற்காலத்தே வெறுத்து எறிந்த அணிகலன்கள் தெருவெங்கும் பரவிக் கிடக்கின்றன; அந்த வீதி. அகத்திய முனிவன் குடித்ததால் தண்ணீர் இல்லாமல் இரத்தினங்கள் விளங்கும் கடல்போலவும். நட்சத்திரங்கள் விளங்கும் வானத்தைப் போலவும் தோன்றுகிறது. அணி: வீறுகோளணி - இங்குச் செல்வத்தின் மிகுதி சொல்லப் பெற்றமை அறியத்தக்கது. சொற்கலை முனிவன்: அகத்தியன்; தமிழ்மொழி இலக்கணத்தைச் சிவனிடம் நன்கு கற்றுப் பேரகத்தியம். சிற்றகத்தியம் என்னும் இலக்கண நூல்களை இயற்றித் தமிழைச் செழிக்கச் செய்தார். ஆதலின் அவர் இவ்வாறு போற்றப் பெற்றார். இலக்கண நூலை வடமொழியாளர் 'சப்த சாஸ்திரம்' என்பர் (சப்தம் - சொல்: சாஸ்திரம் -கலை).*

***485.*** ***தாறு மாய் தறுகண் குன்றம்***
***தட மத அருவி தாழ்ப்ப.***
***ஆறும் ஆய். கலின மா விலாழியால்***
***அழிந்து. ஓர் ஆறு ஆய்.***
***சேறும் ஆய். தேர்கள் ஓடத்***
***துகளும் ஆய். ஒன்றோடு ஒன்று***
***மாறு மாறு ஆகி. வாளா***
***கிடக்கிலா மறுகில். சென்றார்.***

***தாறு மாய்*** - *(களிப்பு மிகுதியால்) அங்குசத்தை முறிக்கின்ற;* ***தறுகண் குன்றம்*** - *அஞ்சாமையுள்ள மலைபோன்ற யானைகள்;* ***தடமத அருவி*** - *மிக்க மத நீர்ப் பெருக்கை;* ***தாழ்ப்ப*** - *சொரிய விடுவதால்;* ***ஆறும் ஆய்*** - *(கரிய) ஒரு நதி தோன்றி;* ***கலினம் மா விலாழியால்*** - *கடிவாளம் பூண்ட குதிரைகளின் வெண்மையான வாய் நுரையால்;* ***அழிந்து*** - *அக் கரிய நிறம் மாறி;* ***ஓர் ஆறு ஆய்*** - *வேறொரு வெண்ணிற நதியாகி;* ***தேர்கள் ஓட*** - *இரதங்கள் இடைவிடாமல் ஓடித் திரிவதால்;* ***சேறும் ஆய்*** - *(நீர் சிறிது உலர்ந்து) சேறாகியும்;* ***துகளும் ஆய்*** - *(மீண்டும் தேர்கள் ஓடுவதனால்) புழுதியாகவும்;* ***துகளும் ஆய்*** -*(மீண்டும் தேர்கள் ஓடுவதனால்) புழுதியாகவும் ஆகி;* ***ஒன்றோடு ஒன்று*** - *(இவ்வாறு அடிக்கடி) ஒன்றோடு ஒன்று;* ***மாறு மாறாகி*** - *பெரிதும் மாறுபடும் தன்மையுடையதாய்;* ***வாளா கிடக்கிலா*** - *(சிறிது பொழுதும்) ஒரே தன்டையுடையதாக இல்லாத;* ***மறுகில் சென்றார்*** - *பெருவீதியிலே (மூவரும்) போனார்கள். கரிய ஆறும் வெள்ளாறும்: யானையின் மதநீரால் ஒரு கரிய ஆறு தோன்றியது; பின்னாக் குதிரையின் வாய்நுரை அதில் கலந்தமையால் அக்கருநிறம் சிறிது மாறி வெண்ணிற நதியாயிற்று. மறுகு - தெரு: தேர்கள் இடை உலர்ந்த அந்த இடம் புழுதியாக மாறிற்று. இவ்வாறு மீண்டும் யானை முதலியன செல்லுவதால் மாறி மாறிக் கருநிற நதியும்; வெண்ணிற நதியும் உண்டாகும் வீதி எனலாம்.*

***486. தண்டுதல் இன்றி ஒன்றி.***
***தலைத்தலைச் சிறந்த காதல்***
***உண்டபின். கலவிப் போரின்***
***ஒசிந்த மென் மகளிரேபோல்.***
***பண் தரு கிளவியார்தம்***
***?புலவியில் பரிந்த கோதை.***
***வண்டொடு கிடந்து. தேன்சோர்.***
***மணி நெடுந் தெருவில் சென்றார்.***

***தண்டுதல் இன்றி*** - *நீங்காமல்;* ***தலைத் தலை ஒன்றி*** - *(கணவன மனைவி என்கிற) இரண்டு இடங்களிலும் ஒரு தன்மைய தாய்;* ***சிறந்த காதல்*** - *மிகுதியான ஆசையின் பயனான காம இன்பத்தை;* ***உண்டபின்*** - *(ஆடவரும் மகளிரும்) ஒருசேர அனுபவித்த பின்பு;* ***கலவிப் போரின்*** - *அந்தப் புணர்ச்சியாகிய போரிலே;* ***ஒசிந்த*** - *சோர்ந்து கிடந்த;* ***மென் மகளிரே போல்*** - *மென்மையான பெண்களைப் போல;* ***பண்தரு கிளவியார்தம்*** - *இசைப் பண்ணைப் போன்ற சொற்களைப் பேசும் பெண்களின்;* ***புலவியில்*** - *ஊடல்களிலே;* ***பரிந்த கோதை*** - *(அவர்களால்) கழற்றி வீசப்பட்ட மாலைகள்;* ***வண்டொடு கிடந்து -*** *(தம்மேல் மொய்த்த) வண்டுகளுடன் கீழே விழுந்து கிடந்து ;* ***தேன் சோர்*** - *தேன் வழிவதற்கு இடமான;* ***மணி நெடுந்தெருவில் -*** *அழகிய பெருவீதிகளில் ;* ***சென்றார் -*** *போனார்கள்.*

*மாதரும் பூமாலைகளும்: புணர்ச்சிக்குப்பின் மெலிந்து உறங்குகிற பெண்களைப்போல் அம்மகளிரால் ஊடலால் வீசியெறியப்பட்ட பூமாலைகள் வாடிக் கிடக்கின்றன. மிதிலைத்தெரு: மிதிலையின் தெருக்கள் பலவகைப் பட்டன என்பதைத் தெரிவிக்க மூன்று பாடல்கள் அமைந்துள்ளன.*

*வீதிகளில் கண்ட காட்சிகள்*

***487. நெய் திரள் நரம்பின் தந்த***
***மழலையின் இயன்ற பாடல்.***
***தைவரு மகர வீணை***
***தண்ணுமை தழுவித் தூங்க.***
***கை வழி நயனம் செல்ல***
***கண் வழி மனமும் செல்ல.***
***ஐய நுண் இடையார் ஆடும்***
***ஆடக அரங்கு கண்டார்.***

***நெய்திரள் நரம்பின்** - தேன் ஒழுக்குப் போலத் திரண்ட யாழின் நரம்பால் எழும் இசை போல; **தந்த மழலையின் இயன்ற** - (கேட்பதற்கு இனிமையாகப்) பாடப்பட்ட மழலைச்சொற்க ளால் அமைந்த; **பாடல்** - வாய்ப்பாட்டு இசையும்; **தைவரும் மகர வீணை** - (கைவிரலால்) தடவி வாசிக்கப்படுகிற மகர வீணையின் இசையும்; **தண்ணுமை** - மத்தளத்தின் ஓசையும்; **தழுவித் தூங்க** - மாறுபடாமல் ஒன்றோடு ஒன்று ஒத்து ஒலிக்கவும்; **கைவழி நயனம் செல்ல** - (பலவகையாகக் குறிப்புக் காட்டுகின்ற தம்முடைய) கைகள் செல்லும் வழியே தம் கண்களின் குறிப்புப் பார்வை செல்லவும்; **கண் வழி மனமும் செல்ல** - அக்கண்களின் பார்வை செல்லும் வழியிலே மனத்தின் குறிப்புச் செல்லவும்; **ஐயம் நுண் இடையார்** - உள்ளதா இல்லையா என்று கண்டவர் சந்தேகப்படும்படியான சின்ன இடையை உடைய மகளிர்; **ஆடும்** - நாட்டியம் ஆடுகின்ற; **ஆடக அரங்கு** - பொன்மயமான நடன சாலைகளை; **கண்டார்** - பார்த்தார்கள்.*

*நடனத்தில் செய்யும் முறை நான்கு: கண்கள். கை. மனம். உடல் என நான்கன் தொழில்களாலும் நடனமுறை நிகழும். கைவழி நயனம் செல்ல: கையில் தொழில். கண்வழி மனமும் செல்ல: கருத்தில் தொழில். மழலையின் இயன்ற பாடல்: மிடற்றின் தொழில். ஆடும்: உடலின் தொழில் யாழின் நரம்புக்கு உவமை: தேன் ஒழுக்கு. நெய்: இங்கே 'தேன்' என்னும் பொருள் தருகிறது. யாழ்வகை நான்கு: 1. பேரியாழ்; 2. மகர யாழ்; 3. சகோட யாழ்; 4. செங்கோட்டி யாழ்; மகரயாழ்: 19 நரம்புகளைக் கொண்டது. நரம்பு. வீணை. தண்ணுமை (ஒலிகள்) - கருவியாகு பெயர்கள்.*

*488.* ***பூசலின் எழுந்த வண்டு***
***மருங்கினுக்கு இரங்கிப் பொங்க.***
***மாசு உறு பிறவி போல***
***வருவது போவது ஆகி.***
***காசு அறு பவளச் செங் காய்***
***மரகதக் கமுகு பூண்ட***
***ஊசலில். மகளிர். மைந்தர்***
***சிந்தையோடு உலவக் கண்டார்.****

***மாசு உறு பிறவிபோல்*** - *குற்ற நிறைந்த பிறவி போல;* ***வருவது போவது ஆகி*** - *(மாறி மாறி) வருவதும் போவதுமாகிய;* ***காசு அறு*** - *குற்றம் அற்ற;* ***பவளச் செங்காய்*** - *பவளம் போலச் சிவந்த காய்களையுடைய;* ***மரகதக் கமுகு*** - *மரகதம் போலப் பச்சை நிறப் பாக்கு மரங்களிலே;* ***பூண்ட*** - *பிணைக்கப்பட்டுள்ள;* ***ஊசலின் மகளிர்*** - *ஊஞ்சல்களிலே பெண்கள் ஆட;* ***பூசலின் எழுந்த வண்டு*** - *ஆரவாரத்தோடு மேலே எழுந்த வண்டுகள்;* ***மருங்கினுக்கு*** - *அவர்களின் இடையின் மென்மைக்காக;* ***இரங்கிப் பொங்க*** - *இரக்கப்பட்டு ஒலிக்க;* ***மைந்தர் சிந்தையோடு*** - *ஆண்களின் மனத்தோடு;* ***உலவக் கண்டார்*** - *ஆடுவதைப் பார்த்தார்கள். தற்குறிபேற்றவணி: மகளிர் ஊஞ்சலில் அமர்ந்து வேகமாக ஆடும் பொழுது. அந்த அதிர்ச்சியால் அவர்களின் உடம்பிலுள்ள பூமாலைகளில் மொய்த்திருந்த வண்டுகள் மேலே எழுந்து பேரொலி செய்கின்றன. அவ் வண்டுகள் இப்பெண்களின் மெல்லிய இடை இவ்வேகத்தைப் பொறுக்காது என்று இரக்கமுற்று வாய்விட்டு அழுவது போலவும் எனக் காட்டினார். - பிறப்புக்கு ஊஞ்சலாட்டம் ஒப்புமையாகிறது. -கமுக மரங்களில் கயிறுகளைப் பிணைத்து ஊஞ்சலாடுவது இன்றும் வழக்கமாக உள்ளது.*

*489.* ***வரப்பு அறு மணியும். பொன்னும்.***
***ஆரமும். கவரி வாலும்.***
***சுரத்திடை அகிலும். மஞ்ஞைத்***
***தோகையும். தும்பிக் கொம்பும்.***
***குரப்பு அணை நிரப்பும் மள்ளர்***
***குவிப்புற. கரைகள்தோறும்***
***பரப்பிய பொன்னி அன்ன***
***ஆவணம் பலவும் கண்டார்.****

***வரம்பு அறு அணியும்*** - அளவில்லாத இரத்தினங்களையும்; ***பொன்னும் ஆரமும்*** - பொன்னையும் முத்துக்களையும்; ***கவரி வாலும்*** - கவரிமானின் வாலையும்; ***சுரத்திடை அகிலும்*** - காடுகளில் கிடைக்கின்ற அகில் கட்டைகளையும்; ***மஞ்ஞைத் தோகையும்*** - மயிற் பீலிகளையும்; ***தும்பிக் கொம்பும்*** - யானைத் தந்தங்களையும் கொண்டு; ***குரம்பு அணை*** - வயல்களுக்கு வரப்புகளாகிய கரைகளை; ***நிரப்பும் மள்ளர்*** - உழவர்கள் கட்டி முடிக்குமாறு; ***குவிப்புற*** - (குட்டுக் குட்டாகக்) குவித்து வைக்கும்; ***கரைகள் தோறும் பரப்பிய*** - கரைகள் எங்கும் பரவச் செய்கின்ற; ***பொன்னி அன்ன*** - காவிரி நதியைப் போன்ற; ***ஆவணம் பலவும்*** - கடைவீதிகள் பலவற்றையும்; ***கண்டார்*** - பார்த்தார்கள்.

*கடைவீதி - காவிரி - கடைவீதியின் இரு பக்கங்களிலும் மணி முதலிய பண்டங்கள் பரவிக் கிடப்பது காவிரியின் இருகரைகளிலும் மலைபடு திரவியங்கள் குவிந்து கிடப்பனபோல் உள்ளன. -'யாறு கிடந்தன்ன அகல் நெடுந் தெருவின்' - மதுரைக்: 359. வரப்பு.. குரப்பு என்பன வலித்தல் விகாரம்*

***490.*** **வள் உகிர்த் தளிர்க் கை நோவ**
**மாடகம் பற்றி. வார்ந்த**
**கள் என நரம்பு வீக்கி.**
**கையொடு மனமும் கூட்டி.**
**வெள்ளிய முறுவல் தோன்ற.**
**விருந்து என மகளிர் ஈந்த**
**தெள் விளிப் பாணித் தீம் தேன்**
**செவி மடுத்து. இனிது சென்றார்.**

***மகளிர்*** - அந்நகரத்துப் பெண்கள்; ***வள் உகிர்த் தளிர்க்கை*** - கூர்மையான நகங்களையுடைய தளிர்போன்ற மெல்லிய (தம்) கைவிரல்கள் வருந்தும்படி; ***மாடகம் பற்றி*** - வீணையின் முறுக் காணிகளைப் பிடித்துத் திருகி; ***வார்ந்த கள்ளென*** - ஒழுகும் தேன் தாரை போன்ற; ***நரம்பு வீக்கி*** - அந்த யாழ் நரம்பை இறுக்கமாகக் கட்டி; ***கையொடு மனமும் கூட்டி*** - (அந்த நரம்புகளின் மேல் வருடச் செல்கிற) கைவிரல்களின் குறிப்புடனே மனத்தையும் பதியச் செய்து; ***வெள்ளிய முறுவல் தோன்ற*** - (தம்) வெண் முறுவல் வெளிப்பட; ***விருந்து என ஈந்த*** - (புதிதாக வந்தவர்க்குச்) சுவையான உணவு வழங்குதல் போல கொடுத்த; ***தெள்விளிப் பாணி*** - தெளிந்த இசையோடு கூடிய பாட்டு (என்னும்); ***தீம்தேன்*** - இனிய தேனை; ***செவி மடுத்து*** - இரு காதுகளாலும் கேட்டு; ***இனிது சென்றார்*** - (அம்மூவரும்) இன்புற்றுச் சென்றார்கள்.

*வீணையும் விருந்தும் - வீணைவாசிப்போர்க்கு அவ் வாசிப்பால் இயல்பாக மனமகிழ்ச்சியைக் காட்டும் இனிய பார்வையும் புன்னகையும் தோன்றும். இதனை. விருந்தினரை இனிது நோக்கிப் புன்னகை பூத்து உபசரிக்கும் செயலாக அமைந்துள்ளமையைக் காணலாம். யாழ் உறுப்புகள்: கோடு. பத்தர். ஆணி. நரம்பு. மாடகம். மாடகம்: நால் விரல் அளவான பாலிகை வடிவாய் நரம்பை இறுக்கும் கருவி. பாணித் தீம்தேன்: நாவுக்கு இனிமை தரும் தேன் போலக் காதுக்கு இனிமை தரும் பாட்டு. விளிப்பாணி: வாய்ப்பாட்டு இசை. 11*

***491. கொட்பு உறு கலினப் பாய் மா.***
***குலால் மகன் முடுக்கி விட்ட***
***மட் கலத் திகிரி போல.***
***வாளியின் வருவ. மேலோர்***
***நட்பினின் இடையறாவாய்.***
***ஞானிகள் உணர்வின் ஒன்றாய்.***
***கட்புலத்து இனைய என்று***
***தெரிவு இல. திரியக் கண்டார்.***

***குலால் மகன்*** - *குயவனால்;* ***முடுக்கிவிட்ட*** - *வேகமாகச் சுழற்றிவிடப்பட்ட;* ***மண்கலத் திகிரிபோல*** - *மண்கலம் செய்யும் கருவியான சக்கரம் போல;* ***வாளியின் வருவ*** - *வட்டகதியாய் ஓடி வரக் கூடியனவும்;* ***மேலோர் நட்பினின்*** - *பெரியவர்கள் (தமக்குள் பூணும்) நட்பும் (இடையில் நீங்காமல் தொடர்வது) போல;* ***இடை அறாவாய்*** - *இடையில் விட்டு நீங்காதனவும்;* ***ஞானிகள் உணர்வின்*** - *தத்துவ ஞானிகளின் அறிவு (பல பொருள்களிடத்தும் செல்லாது ஒரு பொருளிலே செல்வது) போல ஒரு தன்மையுடையனவுமாகி;* ***கண் புலத்து*** - *கண்ணின் பார்வைக்கு;* ***இனைய என்று*** - *இத்தன்மையன என்று;* ***தெரிவு இல*** - *அறிய முடியாதனவான;* ***கொட்பு உறு*** - *சுழன்று ஓடுகின்ற;* ***கலினப் பாய்மா*** - *கடிவாளம் பூண்டு பாய்ந்து செல்லும் இயல்புள்ள குதிரைகள்;* ***திரியக் கண்டார்*** - *எங்கும் திரிவதைப் பார்த்தார்கள்.*

*குதிரைகள் இயல்பு: இடையில் நிற்காமலும். வழியைவிட்டு விலகாமலும் குதிரைகள் ஓடும் இயல்புடையன. ''கூட்டுகிற முடுக்கிவிட்ட குயமகன் திகிரிபோல வாள்திறல் தேவதத்தன் கலினமா திரியுமன்றே'' - சிந்தா:786. ஞனிகள் - குதிரைகள். ஞானிகளின் அறிவு ஒன்றாயிருந்தும் சிறிது நேரத்திலே பல பொருளிடத்தும் செல்லுதல்போலக் குதிரை ஒன்றாயிருந்தும் சிறிது. நேரத்திலே. பல இடத்தும் செல்லும் தன்மையது. மேலோர் நட்பு இடையறாமை: 'நிறை நீர நீரவர் கேண்மை பிறைமதி' -குறள்782. ''பெரியவர் கேண்மை பிறைபோல நாளும் வரிசை வரிசையா நந்தும்'' -நாலடியார்:125*

***492. தயிர் உறு மத்தின் காம***
***சரம் பட. தலைப்பட்டு ஊடும்***
***உயிர் உறு காதலாரின்.***
***ஒன்றை ஒன்று ஒருவகில்லா.***
***செயிர் உறு மனத்த ஆகி.***
***தீத் திரள் செங் கண் சிந்த.***
***வயிர வான் மருப்பு யானை***
***மலை என மலைவ கண்டார்.***

***காம சரம்பட*** - *மன்மதனது அம்பு வந்து தாக்குவதால்;* ***(மனம் கலங்கி) தயிர் உறு மத்தின்*** - *தயிர் கடையும் மத்தைப் போல;* ***ஊடும்*** - *(புணர்ச்சியின்பத்திற்குப்பின் ஊடே விளையாட்டாக ஒருவரைஒருவர்) பிணக்குக் காட்டி;* ***தலைப்பட்டு*** - *(ஒருவரோடு ஒருவர்) புணரத் தொடங்கி;* ***உயிர் உறு காதலாரின்*** - *(ஒருவர்க்கு ஒருவர்) உயிரைப் போன்ற அன்புள்ள மனைவி கணவன் போல;* ***வயிர வால் மருப்புயானை*** - *வயிரம் போன்ற உறுதியும் வெண்மையான தந்தங்களும் உடைய யானைகள்;* ***செயிர் உறு*** - *கோபம் மிகுந்த;* ***மனத்த ஆகி*** - *மனத்தை உடையவனாய்;* ***செங்கண் தீத்திரள்*** - *(கோபத்தால்) சிவந்த கண்கள் நெருப்புத்திரளை உமிழும்படி;* ***ஒன்றை ஒன்று*** - *ஒன்றை ஒன்று விட்டு;* ***ஒருவகில்லா*** - *நீங்காமல்;* ***மலை என மலைவ*** - *இருமலைகள் (ஒன்றோடு ஒன்று போர் செய்வன) போலப் போர் செய்வதை;* ***கண்டார்*** - *பார்த்தார்கள்.*

*யானைப்போர்: அந் நகர மைந்தர்களால் வேடிக்கைக்காக விடப்பட்ட யானைகள் ஒன்றோடு ஒன்று சண்டையிடுகின்றன. அணி: உவமை யணி -ஆண்பெண் தம் மனத்தில் பகையுணர்ச்சி இல்லாதிருக்கவும் புணர்ச்சிக் காலத்து ஒருவரோடு ஒருவர் பிணக்குக் கொள்வது போல. யானைகள் தம் மனத்தில் பகை கொள்ளாதிருக்கவும் வெளிப் பார்வைக்கு விளையாட்டாகப் பகையை விளைத்துக்கொண்டு போர் செய்தன. மத்து. மன்மத பாணம் - மத்து. தயிரைக் கலக்குவது போல மன்மதனது அம்பு மனத்தைக் கலக்குகிறது. மலை. யானை: பருமை. வலிமை. கம்பீரமான தோற்றம். மதநீர் பொழிதல் ஆகியன பற்றி மலையானது யானைக்கு உவமையாயிற்று.*

***493. வாளரம் பொருத வேலும்.***
***மன்மதன் சிலையும். வண்டின்***
***கேளொடு கிடந்த நீலச்***
***சுருளும். செங் கிடையும். கொண்டு.***
***நீள் இருங் களங்கம் நீக்கி.***
***நிரை மணி மாட நெற்றிச்***
***சாளரம்தோறும் தோன்றும்***
***சந்திர உதயம் கண்டார்.***

***வாளரம்*** - *அரம் என்னும் வாள் வகையால்;* ***பொருத வேலும்*** - *அராவிய வேலும்;* ***மன்மதன் சிலையும்*** - *காமதேவனது வில்லும்;* ***வண்டின் கேளொடு*** - *வண்டுகளின் இனத்தோடு;* ***கிடந்த நீலச் சுருளும்*** - *பொருந்திய நீல மணிச்சுருளும்;* ***செங்கிடையும்*** - *சிவந்த நெட்டி என்னும் சடையையும்;* ***கொண்டு*** - *(தன்னிடத்தே) கொண்டு;* ***நீள் இருங் களங்கம்*** - *நீண்ட காலம் தம்மிடம் தங்கியிருந்த பெரிய களங்கத்தை;* ***நீக்கி*** - *போக்கி;* ***நிரைமணி மாடம்*** - *இரத்தினங்கள் பதித்த வரிசையாக உள்ள மாட மாளிகைகளின்;* ***நெற்றிச் சாளரம் தோறும்*** - *மேலிடத்தில் உள்ள பலகணி வாயில்கள் தோறும்;* ***தோன்றும்*** - *காணப்படுகின்ற;* ***சந்திர உதயம்*** - *முழுச் சந்திரர்களின் உதயத்தை;* ***கண்டார்*** - *பார்த்தார்கள்.*

*சாளரப் பெண்கள்: வீதியில் நடக்கும் நிகழ்ச்சிகளைக் காண்பதற்காக உப்பரிகையின்மேல் சாளரங்கள்தோறும் பெண்கள் நிற்கின்றார்கள்; அவர்களின் முகத்தோற்றத்தைக் கண்ட காட்சியே இங்குச் சித்தரிக்கப் பெற்றுள்ளது. அணி: உருவக உயர்வு நவிற்சியணி: மதியும் பெண்களின் முகமதியும்: வான்மதி; வானத்தில் காணக்கூடிய மதி ஒன்று; பகலில் ஒளி மழுங்கக்கூடியது; களங்கம் உள்ளது. பெண்மதிகள்: பகலில் ஒளி மழுங்காது; களங்க மற்ற நிலை; பல சந்திரர்கள் (முகங்கள்) உதயமாதல். உவமை: வேல் - கண்களுக்கு; சிலை - புருவத்துக்கு; வண்டோடு கிடந்த நீலச்சுருள் - கூந்தலுக்கு; செங்கிடை (அதரம்) - உதட்டுக்கு; சந்திரன் - பெண்களின் முகங்களுக்கு.*

***494.* பளிக்கு வள்ளத்து வாக்கும்**
**பசு நறுந் தேறல் மாந்தி.**
**வெளிப்படு நகைய ஆகி.**
**வெறியன மிழயற்றுகின்ற.**
**ஒளிப்பினும். ஒளிக்க ஒட்டா**
**ஊடலை உணர்த்துமாபோல்.**
**களிப்பினை உணர்த்தும் செவ்விக்**
**கமலங்கள் பலவும் கண்டார்.**

***பளிங்கு வள்ளத்து*** *- பளிங்குக் கிண்ணத்திலே;* ***வாக்கும்*** *- ஊற்றப்படும்;* ***பசு நறுந்தேறல்*** *- புதிய மணமுள்ள தெளிந்த மதுவை;* ***மாந்தி*** *- குடித்து;* ***வெளிப்படு நகைய ஆகி*** *- அதனால் வெளிப்படுகின்ற சிரிப்பை உடையனவாயும்;* ***வெறியன மிழற்று கின்ற*** *- வெறியுணர்ச்சிகொண்ட வார்த்தைகளைப் பிதற்றுகின்ற;* ***ஒளிப்பினும்*** *- மறைத்துவைக்க முயன்றாலும்;* ***ஒளிக்க ஒட்டா*** *- மறைக்க முடியாத;* ***ஊடலை உணர்த்துமாபோல்*** *- ஊடலைப்புலப்படுத்தும் வகைபோல;* ***களிப்பினை உணர்த்தும்*** *- மதுக் களிப்பை வெளிப்படுத்துகின்ற;* ***செவ்விக் கமலங்கள்*** *- அழகிய செந்தாமரைப் பூக்கள்;* ***பலவும் கண்டார்*** *- பலவற்றையும் கண்டார்கள்.*

*அணி: உருவக உயர்வு நவிற்சியணி. மகளிர் முகங்கள் இங்குக் கமலங்கள் என்று உருவகிக்கப்பெற்றுள்ளன. கள் குடித்தவர் இயல்பு: காரணமின்றிச் சிரித்தல். வெறிகொண்ட பேச்சுக்களைப் பேசுதல். மறைத்து வைக்கத்தக்க பொருளை வெளிப்படுத்திச் சொல்லிவிடுதல். களிப்பு மிகுதல் ஆகியன.*

***495.* மெய் வரு போகம் ஒக்க**
**உடன் உண்டு விலையும் கொள்ளும்**
**பை அரவு அல்குலார்தம்**
**உள்ளமும். பளிங்கும். போல.**
**மை அரி நெடுங் கண் நோக்கம்**
**படுதலும் கருகி. வந்து**
**கை புகின் சிவந்து. காட்டும்**
**கந்தகம் பலவும் கண்டார்.***

**மெய்வரு போகம்** - உடலின் சேர்க்கையால் உண்டாகிய காம இன்பத்தை; **ஒக்க உடன் உண்டு** - ஆண்களோடு பொருந்தத் தாமும் அனுபவித்து; **விலையும் கொண்டு** - (அந்த இன்பத்திற்காகத் தாம் (ஆடவரிடத்திலிருந்து) விலைப் பொருளைப் பெற்றுக் கொள்கிற; **அரவு பை அல்குலார்தம்** - பாம்பின் படத்தைப் போன்ற அல்குலையுடைய வேசியர்களின்; **உள்ளமும் பளிங்கும்போல** - மனமும் பளிங்கும் போல; **மை அரி நெடுங்கண் நோக்கம்** - மையிட்ட செவ்வரி படர்ந்த நீண்ட தம் கண்களின் பார்வை; **படுதலும் கருகி** - படுகின்றபோது கருநிறம்கொண்டு; **வந்து கைபுகின்** - கைகளிடம் வந்து பொருந்தும்போது; **சிவந்து காட்டும்** - செந்நிறம் கொண்டும் தோன்றுகின்ற; **கந்துகம் பலவும்** - பந்துகள் பலவற்றையும்; **கண்டார்** - கண்டார்கள். விலைமகளிர்; பளிங்கு: வேசியர்க்குப் பொருளாசையே உள்ளது; தம்மை அடைந்த ஆண்களிடம் உண்மையான காதல் இல்லை. இருந்தாலும். அந்த விலைமகளிர் தம் மனத்தில் அவரிடம் அன்பு உள்ளவர்போல நடிப்பார்கள்; பளிங்குக் கல்லுக்குத் தனக்கென ஒரு நிறம் இல்லை; ஆனாலும் சேர்ந்த பொருளின் நிறம் தன்னிடம் உள்ளது போலக் காட்டும். இவ்வாறு. வேசியர் மனமும் பளிங்கும் போலவே மகளிர் ஆடும் பந்துகள் உள்ளன; அப்பந்துகள் பெண்களின் கண்பார்வை தம்மீது படும்போது தம்மிடம் கருநிறம் இல்லாவிட்டாலும் அக் கண்ணின் கரிய நிறத்தையும். அம்மகளிரின் செந்நிறமான கையில் படும்போது தம்மிடம் செந்நிறம் இல்லாவிட்டாலும் அந்தக் கையின் செந்நிறத்தையும் தம்மிடம் கொண்டு காட்டும். அடுத்தது காட்டும் பளிங்குபோல்' - குறள்.706 16

*496.* கடகமும். குழையும். பூணும்.
ஆரமும். கலிங்க நுண் நூல்
வடகமும். மகர யாழும்
வட்டினி கொடுத்து. வாசத்
தொடையல் அம் கோதை சோர.
பளிக்கு நாய் சிவப்பத் தொட்டு;
படை நெடுங் கண்ணார் ஆடும்
பண்ணைகள் பலவும் கண்டார்.*

**கடகமும் குழையும்** - கைவளைகளையும் காதணிகளையும்; **பூணும் ஆரமும்** - மேலும் பல அணிகளையும் இரத்தின மாலைகளையும்; **நுண் நூல்** - மெல்லிய நூல் இழைகளால் நெய்யப் பெற்ற; **கலிங்கம் வடகமும்** - கலிங்க நாட்டு விலையுயர்ந்த மேலாடைகளையும்; **மகர யாழும்** - மகர விணைகளையும்; **வட்டினி கொடுத்து** - பந்தயப் பொருளாக வைத்து; **வாசத்தொடையல்** - மணமுள்ள பூமாலைகளை அணிந்த; **அம் கோதை சோர** - அழகான (தம்) கூந்தல் தளரும்படி; **பளிங்கு நாய்** - பளிங்கால் அமைந்த நாய் எனப்படும் காய்கள்; **சிவப்பத் தொட்டு** - செந்நிறம் அடையுமாறு (அவற்றைத் தம் செங்கைகளால்) தொட்டு; **படைநெடுங்கண்ணார்** - வேல் போன்ற நீண்ட கண்களையுடைய பெண்கள்; **ஆடும் பண்ணைகள்** - விளையாடுகிற இடங்கள்; **பலவும் கண்டார்** - பலவற்றையும் பார்த்தார்கள்.

கலிங்க நுண்ணூல் - 'விலை வரம்பு அறியலாகா இன்னுரைக் கலிங்கம்' - சிந்தா: 697. பளிங்கு நாய்: 'பலகை செம்பொனாகப் பளிங்கு நாயாய்ப் பரப்பி' - சிந்தா:927. வடகம்: மேலாடை;பண்ணை; விளையாடும் இடம்.

497. பங்கயம். குவளை. ஆம்பல்.
படர் கொடி வள்ளை. நீலம்.
செங் கிடை. தரங்கம். கெண்டை.
சினை வரால். இனைய தேம்ப.
தங்கள் வேறு உவமை இல்லா
அவயவம் தழுவி. சாலும்
மங்கையர் விரும்பி ஆடும்
வாவிகள் பலவும் கண்டார்.

**பங்கயம் குவளை** - தாமரை மலர்களும் கரு நெய்தல் பூக்களும்; **ஆம்பல்** - செவ்வாம்பல் மலர்களும்; **படர் கொடி வள்ளை** - பரவியுள்ள வள்ளைக்கொடியின் இலைகளும்; **நீலம் செங்கிடை** - நீலோற்பல மலர்களும் சிவந்த கிடையாகிய சடைகளும்; **தரங்கம்** - நீர் அலைகளும்; **கெண்டை** - கெண்டை மீன்களும்; **சினைவரால்** - சூல்கொண்ட வரால் மீன்களும்; **இனைய** - இன்னும் இவை போன்ற நீர் வாழும் உயிர்கள் பலவும்; **தேம்ப** - (பெண்களின் உறுப்புகளுக்கு ஒப்பு ஆகாமையால்) வருந்தும்படி; **தங்கள் வேறு** - தங்களுக்குத் (தாங்களே யல்லாமல்) வேறு; **உவமை இல்லா** - உவமைப் பொருள் இல்லாத; **அவயவம் தழுவி** - (தங்களது முகம் முதலாய) உறுப்புகளோடு பொருந்தி; **சாலும் மங்கையர்** - சிறந்த மகளிர்; **விரும்பி ஆடும்** - விருப்பத்தோடு நீராடுகின்ற; **வாவிகள் பலவும்** -தடாகங்கள் பலவற்றையும்; **கண்டார்** - பார்த்தார்கள்.

தாமரை - முகத்திற்கும்; குவளையும் கெண்டையும் - கண்ணுக்கும். ஆம்பல் - வாய்க்கும். வள்ளை - காதுக்கும். நீலம் - கூந்தலுக்கும். கிடை - அதரத்திற்கும். அலை - வயிற்று மடிப்புக்கும். வரால் மீன் - கணைக்காலுக்கும் ஒப்பாக அமையாமல் வருந்துகின்றன என்பது உணரப்படுகிறது.

மகளிர் குடைந்து நீராடுவதால் உடல்கள் வருந்துகின்றன.

498. இயங்கு உறு புலன்கள் அங்கும்
இங்கும் கொண்டு ஏக ஏகி.
மயங்குபு திரிந்து நின்று
மறுகுறும் உணர்வு இது என்ன.
புயங்களில் கலவைச் சாந்தும்.
புணர் முலைச் சுவடும். நீங்கா.
பயங் கெழு குமரர் வட்டு - ஆட்டு
ஆடு இடம் பலவும் கண்டார்.

***இயங்கு உறு புலன்கள்*** - *(பல இடத்தும்) செல்வதற்குரிய ஒட்டிய ஐம்புலன்களும்;* ***அங்கும் இங்கும் கொண்டு ஏக*** - *தத்தமக்குரிய பல வழிகளிலே இழுத்துக் கொண்டு செல்ல;* ***ஏகி*** - *(அவற்றின் வழியிலே) சென்று ;* ***மயங்குபு*** - *மயக்கமுற்று;* ***திரிந்து நின்று*** - *அலைந்து கொண்டே;* ***மறுகுறும்*** - *கலங்குகின்ற;* ***உணர்வு இது என்ன*** - *சிற்றறிவு இது என்று சொல்லும்படி;* ***கலவைச் சாந்தும்*** - *(குங்குமப்பூ முதலிய நறுமணப் பொருள்களோடு கூடிய) சந்தனக் கலவையும்;* ***புணர்முலைச் சுவடும்*** - *(ஒன்றோடு ஒன்று) நெருங்கிய மகளிர் முலைகள் (இறுகத் தழுவுங் காலத்துப்) பொருந்திய தழும்பும்;* ***புயங்களில் நீங்கா*** - *(தம்முடைய) தோள்களில் நீங்காத;* ***பயம்கெழு குமரர்*** - *(கல்வி. செல்வம் முதலான) பயன்கள் மிகுந்த இளைய வீரர்கள்;* ***வட்டு ஆட்டு ஆடு இடம்*** - *உருட்டுகின்ற இடங்கள் தோறும் செல்லும் வட்டுக்காய் வைத்து விளையாடும் வட்டாட்டிடம்;* ***பலவும் கண்டார்*** - *பலவற்றையும் பார்த்தார்கள்.*

*புலனறிவும் வட்டும்: ஐம்பொறிகளுக்கும் உரிய ஐம்புலன்கள். பலவற்றின் வழியே சென்று சுழலுகின்ற அறிவு. வீரர்கள் விளையாடும்போழுது எங்கும் சுற்றும்வட்டுக்கு உவமையாகும். வட்டு: உருட்டுக் காய். 'அரங்கின்றி வட்டாடி யற்றே' - (குறள் 431).*

***499.*** **வெஞ் சினம் உருவிற்று என்னும்**
**மேனியர். வேண்டிற்று ஈயும்**
**நெஞ்சினர். ஈசன் கண்ணில்**
**நெருப்பு உறா அனங்கன் அன்னார்.**
**செஞ் சிலைக் கரத்தர். மாதர்**
**புலவிகள் திருத்திச் சேந்த**
**குஞ்சியர். சூழ நின்ற**
**மைந்தர்தம் குழாங்கள் கண்டார்**

***வெஞ்சினம் உருவிற்று*** - *கொடுமையான சீற்றத்தின் வடிவமெடுத்து;* ***என்னும் மேனியர்*** - *(இவ்வுலகில்) வந்தது போன்ற உடல்வலி உடையவர்களும்;* ***வேண்டிற்று ஈயும்*** - *(வேண்டுகின்றவர்) வேண்டு பொருள்களைத் தருகின்ற;* ***நெஞ்சினர்*** - *அருள் நெஞ்சமுடையவர்களும்;* ***ஈசன் கண்ணில்*** - *சிவனது நெற்றிக்கண்ணில் உள்ள;* ***நெருப்பு உறா*** - *நெருப்புக்கு இலக்காகி எரிந்திடாத;* ***அனங்கன் அன்னார்*** - *(தன் இயல்பான வடிவத்திலே உள்ள) மன்மதனை (அழகில்) ஒத்தவர்களும்;* ***செஞ்சிலைக் கரத்தர்*** - *வில்லேந்திய செங்கை உடையவர்களும்;* ***மாதர் புலவிகள் திருத்தி*** - *பெண்களின் ஊடல்களைத் தவிர்த்து நின்றதனால்;* ***சேந்த குஞ்சியர்*** - *(அதனால்) சிவந்த முடியுடையவர்களும் ஆகிய;* ***சூழநின்ற*** - *இளங்குமரர்களின் கூட்டங்களை;* ***கண்டார்*** - *பார்த்தார்கள்.*

*சேந்த குஞ்சியர்: மகளிர் கொண்ட ஊடலைத் தணிக்கும் பொருட்டு ஆடவர் அவர்களின் அடிகளிலே தம் முடிகள் படும்படி விழுந்து வணங்குவர். அப்பொழுது அம் மகளிரின் காலிலுள்ள செம்பஞ்சுக்குழம்பு ஆண்களின் முடியில் படுவதால் முடி செந்நிறம் அடைந்தது. குஞ்சி - ஆண் மயிர். 'கொடுமை ஒழுக்கம் கோடல் வேண்டி அடிமேல் வீழ்ந்த கிழவன்' - (தொல். பொருள். கற்பி.6*

*20*

***500.** **பாகு ஒக்கும் சொல் பைங்கிளி**
**யோடும் பல பேசி.**
***மாகத்து உம்பர் மங்கையர்***
***நாண மலர் கொய்யும்***
**தோகைக் கொம்பின் அன்னவர்க்கு**
**அன்னம் நடை தோற்றுப்**
**போகக் கண்டு. வண்டுஇனம்**
**ஆர்க்கும் பொழில் கண்டார்.**

*__பாகு ஒக்கும்__ - சர்க்கரைப் பாகு போன்ற; __பலசொல்__ பல இனிய சொற்களை; __பைங்கிளியோடும் பேசி__ - பச்சைக்கிளியோடும் பேசி; __மாகத்து உம்பர்__ - வானத்தின் மேல் வாழும்; __மங்கையர் நாண__ - தெய்வப் பெண்களும் (தமது வடிவழகிற்குத் தோற்று) வெட்கம் அடையும்படி; __மலர் கொய்யும்__ - பூக்களைப் பறிக்கின்ற; __தோகை__ - (சாயலால்) மயிலையும்; __கொம்பின் அன்னவர்க்கு__ - (மென்மையான உருவத்தால்) பூங்கொம்பையும் ஒத்துள்ள மாதர்களுக்கு; __அன்னம் நடை__ - அன்னம் நடையழகிலே; __தோற்றுப் போக__ - (ஒப்புமை ஆகாமையால்) தோல்வியுற்றுப் பின் செல்ல; __கண்டு__ - அதனைப் பார்த்து; __வண்டுஇனம் ஆர்க்கும்__ - வண்டுகளின் கூட்டம் ஆரவாரம் செய்தற்கு இடமான; __பொழில் கண்டார்__ - சோலைகளைப் பார்த்தார்கள்.*

*ஒரு செயலில் உயர்ந்தவர் வெல்வதையும் தாழ்ந்தவர் தோற்பதையும் கண்ட பார்வையாளர் வென்றவர்க்கு மகிழ்ச்சியும் தாற்றவர்க்கு அவமானமும் உண்டாகுமாறு ஆரவாரம் செய்வது இயல்பு. அவ்வாறே இயல்பாகப் பேரொலி செய்கிற வண்டுகளை அன்னப் பறவை மகளிர் நடைக்குத் தோற்றுப் போனதற்காக ஆரவாரிப்பதாகக் காட்டுகிறார். தோகைக் கொம்பு: கூந்தலையுடைய மாதர்க்கு உவமை.*

*அரண்மனையைச் சூழ்ந்துள்ள அகழி*

***501.*** ***உம்பர்க்கு ஏயும் மாளிகை***
***ஒளி நிழல் பாய.***
***இம்பர்த் தோன்றும் நாகர்தம்***
***நாட்டின் எழில் காட்டி.***
***பம்பிப் பொங்கும் கங்கையின்***
***ஆழ்ந்த. படை மன்னன்***
***அம் பொன் கோயில் பொன் மதில்***
***சுற்றும். அகழ் கண்டார்.***

***உம்பர்க்கு ஏயும்*** *- (இந்திரன் முதலான) தேவர்களுக்கு (தங்குவதற்கு) ஏற்ற;* ***மாளிகை ஒளி நிழல்*** *- மாளிகை வரிசைகளின் சாயை;- பாய - (தன்னிடத்தே) படிவதால்;* ***இம்பர்த் தோன்றும்*** *- நிலவுலகில் காணப்படுகிற;* ***நாகர் தம் நாட்டின் எழில்*** *- வானுலக அழகினை;* ***காட்டி*** *- (தன்னிடம்) காண்பித்து;* ***பம்பிப் பொங்கும்*** *- (அலைகள்) மிகுந்து மேலே (தண்ணீர்) பொங்குகின்ற;* ***கங்கையின் ஆழ்ந்த*** *- கங்கா நதிபோல ஆழமாகவுள்ள;* ***படை மன்னன்*** *- சேனைகளையுடைய சனக மன்னனது;* ***அம்பொன் கோயில்*** *- பொன்மயமான அரண்மனை;* ***பொன்மதில் சுற்றும்*** *- சுற்றிமுள்ள பொன்னாலாகிய உள்மதிலைச் சூழ்ந்துள்ள அகழியை;* ***கண்டார்*** *- கண்டார்கள்.*

*நீர்நிலை அகழி: அழகிய பொன்மயமான மாளிகைகளின் வரிசைகளோடு கூடிய அரண்மனையைச் சூழ்ந்துள்ள;பொன்மயமான வானுலகத்தின் பிம்பத்தைத் தனது நடுவிலே காட்டும் நீர் நிலையை ஒக்கும் என்றார். அணி: தற்குறிப்பேற்றவணி.*

*கன்னிமாடத்தில் நின்ற சீதையின் பேரெழில் சிறப்பு*

***502.*** ***பொன்னின் சோதி. போதினின்***
***நாற்றம். பொலிவேபோல்***
***தென் உண் தேனின் தீம் சுவை.***
***செஞ் சொற் கவி இன்பம்-***
***கன்னிம் மாடத்து உம்பரின்***
***மாடே. களி பேடோடு***
***அன்னம் ஆடும் முன்துறை***
***கண்டு. அங்கு. அயல் நின்றார்.***

***கன்னி மாடத்து*** - கன்னிகையர் வாழும் மாடத்தின்; ***உம்பரின் மாடு*** - மேல் இடத்திற்கு அருகே; ***களிபேடோடு அன்னம் ஆடும்*** - மகிழ்ச்சியோடுள்ள பெட்டை அன்னங்களோடு ஆண் அன்னங்கள் கூடிக் குலாவும்; ***முன்துறை*** - முற்றத்திடத்து; ***பொன்னின் சோதி*** - பொன்னின் ஒளியும்; ***போதின் இன் நாற்றம்*** - பூவின் நறுமணமும்; ***தென் உண் தேனின்*** - வண்டுகள் உண்ணும் தேனின்; ***தீம்சுவை*** - இனிமையான சுவையும்; ***செஞ்சொல் கவி இன்பம்*** - தகுதியான சொற்களால் அமைந்த கவிதை இன்பமும்; ***பொலிவே போல்*** - (என்னும் இவை ஒரு வடிவம் எடுத்து) விளங்குவது போல (சீதை தோன்றியதை) ; ***கண்டு*** - பார்த்து; ***அங்கு அயல் நின்றார்*** - (மூவரும்) அந்த இடத்திற்கு அருகில் நின்றார்கள். சீதை வடிவு: பொன்னின் சோதி. பூவின் நறுமணம். தேனின் தீஞ்சுவை. செஞ்சொல் கவியின்பம் ஆகியவை ஒரு வடிவம் எடுத்தாற்போலச் சீதை விளங்குகிறாள். ஐம்பொறி இன்பம்: ஐம்பொறிகளால் பெறப்படும் இன்பங்களில் ஒளி. நாற்றம். சுவை. ஓசை என்ற நான்கைக் கூறி ஊற்றின்பத்தை உபலட்சணத்தால் உணரவைத்தார். கவி என்பது வளம்பெற்ற சொற்களைத் தனது உயிர்நிலையாகக் கொண்டது. ஆதலால் 'செஞ்சொற்கவி' எனப்பட்டது. 'பொலிவே போல்' என்பதைக் 'கவியின்பம்' என்பதனோடு சேர்க்க வேண்டும். வேறு உரை: பொன்னிலே ஒளி பொலிதல் போலவும். மலரில் நறுமணம் பொலிதல் போலவும். தேனிலே இன்சுவை பொலிதல் போலவும். கவிஞர் பாவில் செவ்விய ஓசையின்பம் பொலிதல் போலவும் (ஒளி முதலியவற்றோடு விளங்குபவளாகி) கன்னி மாடத்தின் மேல் அன்னப்பேடு பொன்ற தோழியரோடு பெண் அரச அன்னம் போன்ற சீதை விளையாடும் முற்றத்தைக் கண்டு அருகில் நின்றார்கள். தென் - தேன் என்பதன் குறுக்கல் விகாரம். பேடு - பறவையின் பெண்பாய் பெயர்.

***503. செப்பும்காலை. செங்கம***
***லத்தோன் முதல் யாரும்.***
***எப் பெண்பாலும் கொண்டு***
***உவமிப்போர் உவமிக்கும்.***
***அப் பெண் தானே ஆயின***
***போது. இங்கு. அயல் வேறு ஓர்***
***ஒப்பு எங்கே கொண்டு. எவ் வகை***
***நாடி. உரை செய்வோம்?***

***செப்புங்காலை*** - (அச்சீதைக்கு உவமை) சொல்லுமிடத்து; ***செங்கமலத்தோன் முதல்*** - செந்தாமரை மலரில் வாழும் பிரமன் முதலாக; ***யாரும்*** - (எளிய மாந்தர் இறுதியாக) உள்ளவர் எவரும்; ***எப்பெண்பாலும் கொண்டு*** - எந்தப் பெண்ணுக்கும் எண்ணத்தகுந்த பகுதிகள் எல்லாவற்றிலும் ஒப்புப் பொருளை ஆராய்ந்து; ***உவமிப்போர்*** - உவமிப்பவர்கள்; ***உவமிக்கும்*** - உவமானமாக எடுத்துச் சொல்கிற; ***அப்பெண் தானே*** - (அப்பெண்களிலே சிறந்த) அத்திருமகளே; ***ஆயின போது*** - (சீதையாக அந்த இடத்திற்கு) வந்துள்ளதால்; ***இங்கு*** - இந்த இடத்தில்; ***அயல் வேறு ஓர் ஒப்பு*** - அத்திருமகளைவிட வேறு ஓர் உவமைப் பொருளை; ***எங்கே நாடி*** - எந்த இடத்திலே; ***எவ்வகை கொண்டு உரைசெய்வேம்*** - கண்டு எவ்வாறு எடுத்து உரைப்போம்?

*சீதைக்கு உவமை கூற இயலாது: ஏனென்றால் அவள் உவமை கடந்தவள். எவ்வாறெனில். எல்லாப் பெண்களுக்கும் எல்லாராலும் உவமையாக எடுத்துச் சொல்லப்படுகிறவள் திருமகள். அவளே இப்போது மிதிலையில் சீதையாகப் பிறந்திருக்கிறாளே! அப்படியிருக்க அவளுக்கு வேறுயாரை உவமையாகக் கூறமுடியும்?*

***504. உமையாள் ஒக்கும் மங்கையர்`***
***உச்சிக் கரம் வைக்கும்***
***கமையாள் மேனி கண்டவர்.***
***காட்சிக் கரை காணார்.***
***'இமையா நாட்டம் பெற்றிலம்'***
***என்றார்; 'இரு கண்ணால்***
***அமையாது' என்றார் - அந்தர***
***வானத்தவர் எல்லாம்.***

***உமையாள் ஒக்கும் மங்கையர்*** *- உமாதேவி போன்ற சிறப்புடைய மாதர்களும்;* ***உச்சிக் கரம் வைக்கும்*** *- (தங்கள்) தலைமேல் கைகளை வைத்து வணக்கம் செய்வதற்குரிய;* ***கமையால்*** *- பொறுமை முதலிய நற்பண்புகளையுடைய சீதையின்;* ***மேனி கண்டவர்*** *- உடல் அழகைப் பார்த்த மண்ணுலகத்தவர்;* ***காட்சிக் கரை காணார்*** *- இந்த அழகின் எல்லையை (முழுதும்) காணாமல்;* ***இமையா நாட்டம்*** *- (நாங்கள்) இமை மூடப்பெறாத கண்களை;* ***பெற்றிலம் என்றார்*** *- பெறவில்லையே என்று குறை பட்டனர்;* ***அந்தரம் வானத்தவர் எல்லாம்*** *- (இமையாத கண்களைப் பெற்றுள்ள) வான் உலகத் தேவர்கள் எல்லாரும்;* ***இரு கண்ணால் அமையாது*** *- (இந்த அழகைப் பார்க்க) நம்முடைய இரண்டு கண்களால் முடியாது;* ***என்றார்*** *- என்று கூறி வருந்தினர்.*

*மண்ணவர். விண்ணவர்: சீதையைப் பார்த்தவர்கள்அவளது மேனி யழகிற்கு எல்லை காண முடியாது வருந்தினார்கள். அவர்களிலே நிலவுலகத்தவர் தேவர்களைப் போலத் தமக்கு இமையா நாட்டம் இல்லையே என்று வருந்தினர். ஆனால் அவ் வானத்தவரோ தமக்கு இமையா நாட்டம் இருந்தும் அவை இரண்டாக அமைந்தமையால் சீதையின் அழகை முற்றும் ஒருங்கே பார்க்க அவை போதா என்று குறைபட்டனர்.*

**கலித்துறை**

*505.* ***வென்று அம் மானை. தார் அயில்***
***வேலும் கொலை வாளும்***
***பின்ற. மானப் பேர் கயல்***
***அஞ்ச. பிறழ் கண்ணாள்.***
***குன்றம் ஆட. கோவின்***
***அளிக்கும் கடல் அன்றி.***
***அன்று அம் மாடத்து உம்பர்***
***அளிக்கும் அமுது ஒத்தாள்.***

**அம் மானை வென்று** - *(புலவர்கள் உவமை கூறும்) அழகியமானை (ப்பார்வையில்) வென்று;* **தார் அயில் வேலும்** *-மாலையணிந்த கூரிய வேலும்;* **கொலை வாளும்** - *கொலைத்தொழிலில் வல்ல வாளும்;* **பின்ற** - *(ஒப்பாகாமல்) பின்னிடும்படியாகவும்;* **மானம் பேர்கயல் அஞ்ச** - *(மற்ற பெண்களின்கண்களுக்கு உவமையாகக் கூறப்படும்) சிறந்த பெரிய கயல் மீன்களும்(ஒப்பாகாமல்) அஞ்சிப் பின்னே நிற்கும்படியாகவும்;* **பிறழ்கண்ணாள்**- *பிறழும் கண்களையுடைய சீதையானவள்;* **குன்றம் ஆட** *- (மந்தர) மலை (தன்னிடத்தில்) சுழலும்படி;* **கோவின் அளிக்கும்** *-'கோ' என்னும் ஆரவாரத்தோடு (அமுதத்தைத்) தந்த;* **கடல் அன்றி** *- கடலால் அல்லாமல்;* **அன்று அம்மாடத்து** - *அக் காலத்திலேஅக் கன்னி மாடத்தின்;* **உம்பர் அளிக்கும்** - *மேலிடம் தந்த ;***அமுது ஒத்தாள்** *- அமுதத்தை ஒத்தவள் ஆவாள்.*

*கடல் முது. சீதை: கடலானது வேறு ஒன்றினால் கடையப்பட்டு மிக நலிந்து பெற்ற அமுதம் இந்தச் சீதைக்கு ஒப்பாகாது;ஏனெனில் மாடத்தின் மேலிடம் ஒரு சிறந்த அமுதத்தை எளிதாகப் பெற்றாற் போல்பவள் இவள். தார் அயில் வேல்; தார் அயில் கொலைவாள் என அமையும். அவ்வாறே. கொலைவாள். கொலைவேல் என அமையும். கோ -ஒலிக் குறிப்பு. இடைச்சொல்.*

*506.* ***'பெருந் தேன் இன் சொல் பெண் இவள்***
***ஒப்பாள் ஒரு பெண்ணைத்***
***தரும் தான்' என்றால். நான்முகன்***
***இன்னும் தரலாமே?-***
***அருந்தா அந்தத் தேவர்***
***இரந்தால். அமிழ்து என்னும்***
***மருந்தே அல்லாது. என் இனி***
***நல்கும் மணி' ஆழி?***

***பெருந்தேன் இன்சொல்*** - *பெருமை மிக்க தேன் போன்ற இனிய சொல்லையுடைய;* ***பெண் இவள் ஒப்பாள்*** - *இந்தப் பெண்ணை ஒப்பவளான;* ***ஒரு பெண்ணைத் தான் த(£)ரும்*** - *(சிறந்த) ஒரு பெண்ணை நீ படைத்துத் தருக;* ***என்றால்*** - *என்று (தேவர்கள் திரண்டு வந்து) வேண்டினாலும்;* ***நான்முகன் இன்னும் தரலாமே*** - *(படைத்தல் கடவுளான) நான்கு முகங்களையுடைய பிரமனால்தான் இனிமேல் படைக்க முடியுமோ? (முடியாது);* ***அருந்தா*** - *(அமுதத்தைத் தவிர வேறொன்னையும்) உண்ணாத;* ***அந்தத் தேவர்*** - *சிறப்புடைய அத்தகைய தேவர்கள்;* ***இரந்தால்*** - *(திரண்டு வந்து) வேண்டினாலும்;* ***மணி ஆழி*** - *இரத்தினங்களுக்கு இருப்பிடமான கடல்;* ***அமிழ்து என்னும்*** - *அமுதம் என்று சொல்லக்கூடிய;* ***மருந்தே அல்லாது*** - *சிறந்த மருந்தையே மீண்டும் கொடுப்பதல்லாமல்;* ***இனி என் நல்கும*** *-இனி வேறு எதனைக் கொடுக்க இயலும்? எடுத்துக் காட்டு உவமையணி: அமுதத்தை அல்லாமல் அதை விடச் சிறந்த ஒரு பொருளைக் கடலால் தர முடியாது: அதுபோலத்தான் படைத்துப் பழகிய மாதரைப் போன்ற பெண்களையல்லாமல் இச் சீதையைப் போன்ற சிறந்த மங்கை ஒருத்தியைப் பிரமனாலும் படைக்க இயலாது. இன்னும் - இதுவரை படைக்கப்பட வில்லை என்பதை உணர்த்தும்.*

***507. அனையாள் மேனி கண்டபின்.***
***அண்டத்து அரசு ஆளும்***
***வினையோர் மேவும் மேனகை***
***ஆதி மிளிர் வேற் கண்***
***இனையோர். உள்ளத்து இன்னலியோர்;***
***தம் முகம் என்னும்***
***பனி தோய் வானின் வெண்மதிக்கு***
***என்றும் பகல் அன்றே?***

***அண்டத்து*** - *விண்ணுலகில்;* ***அரசு ஆளும்*** - *ஆட்சிபுரிகின்ற;* ***வினையோர்*** - *நல்வினையுடைய இந்திரன் முதலான தேவர்கள்;* ***மேவும்*** - *விரும்புகின்ற;* ***மேனகை ஆதி*** - *மேனகை முதலான;* ***மிளிர்வேல் கண்*** - *ஒளிமிக்க வேல் போன்ற கண்களையுடைய ;* ***இனையோர்*** - *இத் தெய்வப் பெண்கள்;* ***அனையாள் மேனி*** - *அந்தச்சீதையின் மேனியழகை;* ***கண்டபின்*** - *பார்த்த பின்பு;* ***உள்ளத்து இன்னலினோர்*** - *(தத்தம் அழகெல்லாம் சேர்ந்தாலும் அவளது அழகு ஒன்றுக்கும் ஈடாகாது என்று அறிந்து) மனத்தில் சஞ்சலத்தைக் கொண்டவரானார்கள்; ?****தம் முகம் என்னும்*** - *(மேலும்) அந்த மேனகை முதலான பெண்களின் முக மண்டலம் என்கின்ற;* ***பனிதோய் வானின்*** - *குளிர்ச்சி நிறைந்த வானத்தில்;* ***வெண்மதிக்கு*** - *விளங்கும் வெண்ணிறமான சந்திரமண்டலத்திற்கு;* ***என்றும் பகல் அன்றே -*** *(பகல் இரவு என்னும் வேறுபாடு இல்லாமல்) எப்பொழுதும் பகலாகவே இருக்கும்.*

*தெய்வப் பெண்கள் முகம்: மேனகை முதலான தெய்வ மகளிர் சீதையின் மேனியழகைக்கண்டு நம்முடைய அழகு இதற்கு ஈடாகாது என்று மனம் வாடினர். அதனால் அவர்களின் முகம் பகல்நிலாவைப் போல எப்பொழுதும் ஒளி மழுங்கியிருக்கும் என்பது கருத்து.*

***508. மலர்மேல்நின்று இம் மங்கை இவ்***
***வையத்திடை வைக.***
***பல காலும் தம் மெய் நனி***
***வாடும்படி நோற்றார்***
***அலகு ஒவு இல்லா அந்தணரோ?***
***நல் அறமேயோ?***
***உலகோ? வானோ? உம்பர்கொலோ?***
***ஈது உணரேமால்!***

***இம் மங்கை*** - இத் தன்மையைச் சீதையானவள்; ***மலர்மேல் நின்று*** - செந்தாமரை மலர் மேலிருந்து (இறங்கி); **இவ்வையத்திடை வைக** - இந்த மண்ணுலகில் தங்கியிருக்கும் பொருட்டு; ***பலகாலும்*** - பல காலமாக; ***தம் மெய் நனி*** - தமது உடம்பு (விரதங்களால்) மிகவும்; ***வாடும்படி*** - வாட்டம் அடையுமாறு; ***நோற்றார்*** - அருந்தவம் புரிந்தவர்கள்; ***அலகு ஒவு இல்லா*** - எண்ணிக்கை குறைவு இல்லாத; ***அந்தணரோ*** - அந்தணர்கள்தாமோ?; ***நல் அறமேயோ*** - நல்ல தருமதேவதைதானோ?; ***உலகோ*** - இந்நிலவுலகு தானோ?; ***வானோ*** - விண்ணுலகுதானோ?; ***உம்பர் கொலோ*** - எல்லாத் தேவர்களுமோ? ; ***ஈது உணரேம்*** - இதன் உண்மையை அறிகின்றோம் இல்லை.

*சீதை இலங்கையில் சிறையிலிருந்து வானவர்க்கும் நிலவுலகில் வாழும் அந்தணர் முதலோர்க்கும் பெருந்துன்பம் செய்து வந்த இராவணன் முதலான அரக்கர்களை அழித்தும் பாவம் அகலவும். புண்ணியம் ஓங்கவும் செய்யப்போவதால் வேதியர் முதலோரால் வருந்திச் செய்யப்பட்ட தவத்தின் பயனாலேதான் அச் சீதை இப்பூமியில் வாழ்கிறாள் என்பது கருத்து. கொல் - அசைநிலை.*

***509. தன் நேர் இல்லா மங்கையர்.***
***'செங்கைத் தளிர் மானே!***
***அன்னே! தேனே! ஆர் அமிழ்தே!'***
***என்று அடி போற்றி..***
***முன்னே. முன்னே. மொய்ம் மலர்***
***தூவி. முறை சார.***
***பொன்னே சூழும் பூவின்***
***ஒதுங்கிப் பொலிகின்றாள்.***

***தன் நேர் இல்லா*** - *தன் தனக்கு உவமையாகும் பொருளைப் பெறாத;* ***மங்கையர்*** - *தோழியர் பலர்;* ***செங்கைத்தளிர் மானே*** - *சிவந்த தளிர் போலும் கைகளை உடைய மான் போன்றவளே!;* ***அன்னே*** - *தாயே!;* ***தேனே*** - *தேன்போல் இனியவளே!;* ***ஆர் அமிழ்தே*** - *(பெறுதற்கு) அரிய அமிர்தம் போன்றவளே;* ***என்று*** - *எனச் சொல்லி அழைத்து;* ***அடிபோற்றி*** - *(அவளுடைய) அடிகளை வணங்கி;* ***முன்னே முன்னே*** - *(நடந்து செல்லக்கூடிய) முன்னிடங்களில்;* ***மொய்ம்மலர் தூவி*** - *அடர்ந்த பூக்களைக் கொண்டு வந்து தூவி;* ***முறை சார*** - *முறையே நிரம்பி நிற்க;(அந்த மலர்களின் மேல்);* ***பொன்னே சூழும்*** - *மகரந்தப்பொடி நிரம்பிய;* ***பூவின*** - *(தூவப் பெற்ற) அந்தப் பூவிலே;* ***ஒதுங்கிப் பொலிகின்றாள்*** - *நடந்து (சீதை) விளங்குகின்றாள். சீதையின் மென்மை: தோழியர் சீதையின் அடிகளைப் போற்றி மலர் தூவி நிற்க. அம்மலர்களின் மேல் அச்சீதை தன் அடிகளை வைத்து நடக்கின்றாள் என்பதால் அவளது மென்மை புலனாகும். 'அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம்' - குறள் 1120 ஒப்பு நோக்கத்தக்கது. முன்னே பின்னே - அடுக்கு. தொறுப் பொருளுடையது (ஊர்தொறும்).*

***510. பொன் சேர் மென் கால் கிண்கிணி.***
***ஆரம். புனை ஆரம்.***
***கொன் சேர் அல்குல் மேகலை.***
***தாங்கும் கொடி அன்னார்***
***தன் சேர் கோலத்து இன் எழில்***
***காண. சத கோடி***
***மின் சேவிக்க மின் அரசு***
***என்னும்படி. நின்றாள்.***

***பொன்சேர்*** - *பொன்னாலாகிய;* ***மென்கால் கிண்கிணி*** - *மெல்லிய பாதங்களில் அணிகிற சலங்கைகளையும்;* ***ஆரம்*** - *இரத்தின மாலைகளையும்;* ***புனை ஆரம்*** - *சூடக்கூடிய பூமாலைகளையும்;* ***கொன்சேர் அல்குல் மேகலை*** - *பெருமை மிக்க இடையில் அணியும் மேகலை என்னும் அணிகலனையும்;* ***தாங்கும்*** - *அணியும்;* ***கொடி அன்னார்*** - *பூங்கொடி போன்ற தோழியர் பலர்;* ***தன்சேர் கோலத்து*** - *தன்னிடம் பொருந்திய வடிவத்தின்;* ***இன்னெழில் காண*** - *இனிய அழகை ஆசையோடு பார்த்து நிற்க;* ***சதகோடிமின்*** - *(அவர்களின் இடையிலே) நூறுகோடி மின்னல்கள்;* ***சேவிக்க*** - *(சுற்றிலும் இருந்து வணங்கிப் பணி செய்ய;* ***மின் அரசு என்னும்படி*** - *(அவற்றுக்கு இடையே நின்ற ஒரு) மின்னல்களுக்கு அரசு என்று கருதுமாறு ;* ***நின்றாள்*** - *(சீதை) நின்று கொண்டிருந்தாள்.*

*பெண்களும் விரும்பும் சீதையின் அழகு என்பது 'கொடியன்னார் தன்சேர் கோலத்து இன்னெழில் காண' என்னும் அடியால் பெறப்படுகிறது. மின் சேவிக்க.....நின்றாள்: தற்குறிப்பேற்றவணி.*

*511.* ***‘கொல்லும் வேலும் கூற்றமும்***
***என்னும் இவை எல்லாம்***
***வெல்லும் வெல்லும்’ என்ன***
***மதர்க்கும் விழி கொண்டாள்;***
***சொல்லும் தன்மைத்து அன்று அது;***
***குன்றும். சுவரும். திண்***
***கல்லும். புல்லும். கண்டு உருக.***
***பெண் கனி நின்றாள்.***

**கொல்லும் வேலும்** - *கொலைத் தொழிலில் வல்ல வேலும்;* **கூற்றமும்** - *இயமனும்;* **என்னும் இவை எல்லாம்** - *என்ற இவை எல்லாவற்றையும்;* **வெல்லும் வெல்லும் என்ன** - *வெற்றி கொள்ளும் என்று சொல்லுமாறு;* **மதர்க்கும்** - *களிப்பு அடையும்;* **விழி கொண்டாள்** - *கண்களைப் பெற்றுள்ளாள் (சீதை) ;* **அது** - *சீதையின் அந்த நிலைமை;* **சொல்லும் தன்மைத்து அன்று** - *(யாவராலும் சிறப்பித்து) சொல்லி முடிக்கக்கூடிய தன்மையுடையதாக இல்லை;* **பெண்கனி** - *(ஏனெனில்) பெண்வடிவு கொண்ட கனி போன்ற அச்சீதை;* **குன்றும்** - *பெருந் தோற்றமுடைய மலைகளும்;* **சுவரும் திண்கல்லும்** - *(சிறிய) சுவர்களும் வலிய கற்களும்;* **புல்லும்** - *(மெல்லிய) புற்களும்;* **கண்டு உருக .** *(இப்படிப்பட்ட அசையாத பொருள்களும்) தன் அழகைப் பார்த்து உருக்கம் அடையுமாறு;* **நின்றாள் -** *நின்றிருந்தாள்.*

*வெல்லும் வெல்லும் - அடுக்கு. துணிவுப் பொருள் தருவது. 32*

*512.* ***வெங் களி விழிக்கு ஒரு***
***விழவும் ஆய். அவர்***
***கண்களின் காணவே***
***களிப்பு நல்கலால்.***
***மங்கையர்க்கு இனியது ஓர்***
***மருந்தும் ஆயவள்.***
***எங்கள் நாயகற்கு. இனி.***
***யாவது ஆம்கொலோ?***

**வெங்களி விழிக்கு** - *(பார்க்கும் ஆடவர்களின்) விரும்பத்தக்க களிப்பையுடைய கண்களுக்கு;* **ஒரு விழியும் ஆயவர்** - *சிறந்த ஒரு திருவிழாக் காட்சி போன்று உற்சாகம் தருகின்ற மகளிர்;* **கண்களில் காணவே** - *(தத்தம்) கண்களால் (தன்னைக்) காணுந்தோறும்;* **களிப்பு நல்கலால்** - *(அப் பெண்களுக்கும்) உள்ளக் களிப்பைத் தருவதால்;* **மங்கையர்க்கு** - *அம் மங்கையர்க்கெல்லாம்;* **இனியது ஓர் மருந்தும்** - *இனிய சுவையைத் தரக் கூடிய அமுதம் போன்ற;* **ஆயவள்** - *சீதையானவள்;* **இனி எங்கள் நாயகற்கு** - *இனிமேல் எங்கள் தலைவனான இராமனுக்கு;* **யாவது ஆம் கொலோ** - *எத்தகைய பொருளாவாளோ?*

*ஆடவர்களின் கண்களுக்குக் களிப்பு தருகின்ற பெண்களும் கூடச் சீதையின் அழகைக்கண்டு களிப்படைகின்றார்கள். அப்படியிருக்க ஆண்களில் அழகனாகிய இராமனுக்கு இவளது அழகு எத்தன்மையதாக இருக்குமோ? கனியான சீதை இங்கு அமுதமாகிறாள்; ஏனெனில் சீதை அமுதினும் இனியவள் ஆதலின்.*

***513. இழைகளும் குழைகளும் இன்ன. முன்னமே.***
***மழை பொரு கண் இணை மடந்தைமாரொடும்***
***பழகிய எனினும். இப் பாவை தோன்றலால்.***
***அழகு எனும் அவையும் ஓர் அழகு பெற்றதே!***

**குழைகளும்** - *காதணி முதலான சிறிய அணிகலன்களும்;* **இழைகளும்** - *(கழுத்தில் அணியும்) ஆரம் போன்ற பேரணிகலன்களும்;* **இன்ன** - *இத்தன்மையனவாம்;* **முன்னமே** - *(இச்சீதை) மண்ணில் பிறப்பதற்கு முன்பே;* **மழைபொரு கண் இணை** - *மழையொத்துக் குளிர்ந்த கண்களையுடைய்;* **மடந்தைமாரொடும்** - *அழகிய பெண்களுடனே;* **பழகிய எனினும்** - *பழகியவையாக இருந்தாலும்;* **இப்பாவை தோன்றலால்** - *இந்தச் சீதை பிறந்ததனால்;* **அழகு எனும் அணியும்** - *பிறர்க்கு அழகு தரக்கூடிய அந்த அணிகலன்களும்;* **ஓர் அழகு பெற்றவே** - *புதியதோர் அழகினைப் பெற்றன.*

*அணி: பிறரால் அணியப்பட்டு அழகு செய்வதால் அணிகலன்களுக்கு 'அணி' என்று பெயர். அத்தகைய அணிகள் பிற பெண்களின் உடம்பில் அணியப் பெற்று அவர்களுக்கு அழகு தரும்; அவர்களால் தாம் அழகைப் பெறுவதில்லை. ஆனால். சீதையின் உடம்பில் இவை அணியப் பெற்றமையால் தாம் அழகைப் பெற்றன என்பது கருத்து. எனவே. அணிகளுக்கும் அழகு கொடுக்கக் கூடியது சீதையின் பேரழகு. 'ஆபரணங்களுக்கு அழகு கொடுக்கும் பெருமாள்' என்று திருமாலைச் சிறப்பித்துக் கூறுவதுண்டு. சிற்றணிகலம்: குழை முதலியன. பேரணிகலம்: ஆரம். மேகலை போல்வன.*

*இராமனும் சிதையும் ஒருவரையொருவர் கண்டு காதல் கொள்ளுதல்*

***514. எண்ண அரு நலத்தினாள் இனையள் நின்றுழி.***
***கண்ணொடு கண் இணை கவ்வி. ஒன்றை ஒன்று***
***உண்ணவும். நிலைபெறாது உணர்வும் ஒன்றிட.***
***அண்ணலும் நோக்கினான்: அவளும் நோன்கினாள்.***

***எண்ண அரு நலத்தினாள்*** - *அழகின் எல்லை இதுதான் என மனத்தால் நினைப்பதற்கும் அரிய அழகுடைய சீதை;* ***இனையள் நின்றுழி*** - *இத் தன்மையுடையவளாய் நின்றபொழுது;* ***கண்ணொடு*** *ஒருவர் கண்களோடு;* ***கண்இணை*** *- மற்றொருவர் கண்கள்;* ***கல்வி -*** *கவர்ந்து பற்றிக்கொண்டு;* ***ஒன்றை ஒன்று உண்ணவும் -*** *ஒன்றை ஒன்று கவர்ந்து சுவைக்கவும்;* ***உணர்வும் -*** *இருவரது அறிவும்;* ***நிலை பெறாது -*** *(தம்தம் இடங்களில்) நிலைபெற்று இருக்காமல்;* ***ஒன்றிட*** *(ஒன்றையொன்று கூடி) ஒன்றுபடவும்;* ***அண்ணலும் நோக்கினான் -*** *இராமனும் (சீதையைப்) பார்த்தான்;* ***அவளும் நோக்கினாள்*** *- சீதையும் (இராமனைப்) பார்த்தாள். இராமனும் சீதையும். இராமனது பார்வை சீதைமேல் செல்ல. அவள் கண் இராமன் மேல் பாய். அப்போது இருவரது மனவுணர்ச்சியும் ஒன்றுபட்டு ஒரு தன்மைத்தான காதலைக் கொண்டது புலனாகும்.*

***515. நோக்கிய நோக்கு எனும் நுதி கொள் வேல் இணை***
***ஆக்கிய மதுகையான் தோளின் ஆழ்ந்தன;***
***வீக்கிய கனை கழல் வீரன் செங்கணும்***
***தாக்கு அணங்கு அனையவள் தனத்தில் தைத்தவே.***

***நோக்கிய*** - *(அவ்வாறு சீதை) பார்த்த;* ***நோக்கு எனும்*** *- பார்வையாகிய;* ***நுதிகொள் வேல் இணை*** *- கூரிய இரண்டு வேல்கள்;* ***ஆக்கிய மதுகையான்*** *- ஆக்கம் பெற்ற வன்மையுடைய இராமனின்;* ***தோளின் ஆழ்ந்தன*** *- தோள்களிலே அழுந்தின;* ***வீக்கிய கணைகழல்*** *- ஒலிக்கும் வீரக்கழல் கட்டிய;* ***வீரன் செங்கணும்*** *- வீரனான இராமனுடைய சிவந்த கண்களும்;* ***தாக்கு அணங்கு*** *- பிறரை வேட்கையால் தாக்குகின்ற மோகினியாகிய பெண் தெய்வத்தை;* ***அனையவள்*** *- போன்ற சீதையின்;* ***தனத்தில் தைத்த*** *- கொங்கைகளில் தாக்கின.*

*இராமன். சீதை ஆகிய இருவரும் ஒருவரை ஒருவர் கண்களால் பருகினர். ஓர் ஆவிற்கு இரு கோடுபோல ஒத்த காதல் கொண்டவராயினர். 'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள். என்ன பயனும் இல' - குறள்:1100*

*தாக்கணங்கு: பார்க்கின்ற ஆடவர்க்கு வேட்கையை விளைவித்து அதனால் அவர்களைத் தாங்கும் தேவதை.*

***516. பருகிய நோக்கு எனும் பாசத்தால் பிணித்து.***
***ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்.***
***வரி சிலை அண்ணலும் வாள் - கண் நங்கையும்.***
***இருவரும் மாறிப் புக்கு. இதயம் எய்தினார்.***

***பருகிய நோக்கு*** - *(தமக்குள் ஒருவரது அழகை ஒருவர்) விழுங்கிய கண்பார்வை;* ***எனும் பாசத்தால் பிணித்து*** *- என்னும் கயிற்றால் கட்டி;* ***ஒருவரை ஒருவர் தம் உள்ளம்*** *- ஒருவரை மற்றொருவரது மனம்;* ***ஈர்த்தலால்*** *- இழுத்து நின்றதால்;* ***வரிசிலை அண்ணலும்*** *- கட்டமைந்த வில்லையுடைய இராமனும்;* ***வாள்கண் நங்கையும்*** *- வாள் போன்ற கண்களையுடைய பெண்களில் சிறந்த சீதையும்;* ***இருவரும்*** *- ஆகிய இருவரும்;* ***இதயம் மாறிப் புக்கு*** *- (ஒருவர்) மனத்துள் (ஒருவர்) மாறிப் புகுந்து;* ***எய்தினார்*** *- அடைந்தார்கள். சீதை. இராமன்: இருவரும் தம் கண் பார்வையால் காதல் கொண்டு ஒருவரது மனத்தில் மற்றொருவர் குடிகொண்டார் எனலாம். இங்கே இராமனுக்குச் சீதையும். சீதைக்கு இராமனும் உயிராவார்கள் என்பது குறிப்பு. விற்படையும் வாட்படையும். தலைமகனாகிய இராமனுக்கு விற்படை. ஆதலால் தலைவியான சீதைக்கு வாள்படை கூறியது நயம். 'தானும் தன்னுடைத் திண்பால் நெஞ்சினைத் திரிதல் ஒன்றின்றி 'என்னுழை நிறீஇ' (பெருங் 3:8:96 -97)*

*'நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக் கூட்டி யுரைக்கும் குறிப்புரையாகும்' (தொல். பொருள். 66*

*37*

***517. மருங்கு இலா நங்கையும். வசை இல் ஐயனும்.***
***ஒருங்கிய இரண்டு உடற்கு உயிர் ஒன்று ஆயினார்-***
***கருங் கடல் பள்ளியில் கலவி நீங்கிப் போய்ப்***
***பிரிந்தவர் கூடினால். பேசல் வேண்டுமோ?***

***மருங்கு இலா நங்கையும்*** *- இடையில்லாத (நுண்ணிய இடையைக் கொண்ட) சீதையும்;* ***வசை இல் ஐயனும்*** *- குற்றம் இல்லாத இராமனும் (ஒருவர் மேல் ஒருவர் கொண்ட மிக்க காதலால்);* ***ஒருங்கிய இரண்டு உடற்கு*** *- ஒன்றுபட்ட இரண்டு உடல்களுக்கு;* ***உயிர் ஒன்று ஆயினார்*** *- ஓர் உயிர் என்று சொல்லுமாறு ஆனார்கள்;* ***கருங்கடல் பள்ளியில்*** *- மிகப் பெரிய பாற்கடலில் ஆதிசேடனாகிய பாம்புப் படுக்கையிலே;* ***கலவி நீங்கி*** *- (ஒருவரோடு ஒருவர் கலந்திருந்த) கூட்டம் நீங்கி;* ***போய்ப் பிரிந்தவர்*** *- (தனித்தனியே) பிரிந்து சென்றவர்கள்;* ***கூடினால்*** *- மீண்டும் (ஓர் இடத்தில்) சேர்ந்தால்;* ***பேசல் வேண்டுமோ?*** *- (அவர்களுக்குள் உண்டாகும் காதலைச்) சொல்லவும் வேண்டுமோ?*

*ஈருடல் ஒருயிர் - இராமனும் சீதையும் ஒருவரை ஒருவர் பார்த்த அளவில் இரு உடல்களுக்கு ஓர் உயிர் அமைந்ததுபோல மனம் ஒன்றுபட்டார்கள் என்றார்கள். 'காகத்து இரு கண்ணிற்கு ஒன்றே மணி கலந்தாங்கு' (திருக்கோவை) அவ்விருவர் ஆன்மாவும் ஒன்றே என்று காட்டுகிறார். கரிய கடல் நீலமணி நிறத்தவனான திருமாலின் திருமேனிச் சாயையால் அப்பாற்கடலின் நிறம் மாறியது என்பது குறிப்பு. நயம்: சீதை மருங்கு இலா நங்கை;இராமன்; வசை இல் ஐயன்.*

*சிந்தையைச் சீதையிடத்துவிட்டு இராமன் முனிவருடன் போதல்*

**518. அந்தம் இல் நோக்கு இமை அணைகிலாமையால். பைந்தொடி. ஓவியப் பாவை போன்றனள்; சிந்தையும். நிறையும். மெய்ந் நலனும். பின் செல. மைந்தனும். முனியொடு மறையப் போயினான்.**

**அந்தம் இல்** - *(செல்லும் இராமனைத் தொடர்ந்து போன) முடிவில்லாத;* **நோக்கு இமை** - *(கண் இமையாது பார்த்துக் கொண்டேயிருப்பதால்) பார்வை உடைய அவளது இமைகள்;* **அணைகிலாமையால்** - *பொருந்தாதலால்;* **பைந்தொடி** - *பொன் தொடி அணிந்த சீதையானவள்;* **ஓவியப் பாவை போன்றனள்** - *சித்திரப் பதுமை போல (அசைவற்று) நின்றாள்;* **சிந்தையும் நிறையும்** - *அவளது மனத்தின் நினைப்பும் உறுதியும்;* **மெய்ந் நலனும்** - *உடல் அழகும்;* **பின்செல்** - *(தன்பின்னே) தொடரும்படி;* **மைந்தனும்** - *இராமனும்;* **முனியொடு** - *விசுவாமித்திர முனிவனோடு;* **மறையப் போயினான்** - *கண் பார்வை மறையுமாறு சென்றான்.*

*இராமன். சீதை இராமன் முனிவர் பின்னே செல்லும்போது சீதையின் பார்வை அந்த இராமனையே தொடர்ந்து செல்ல. அச்சீதையே கண் இமைத்தால் அழகனைக் காண்பது நின்றுவிடுமே எனக் கருதிக் கண்கொட்டாது நின்றாள். அப்படி நின்றநிலை ஓவியப் பாவை போன்றது என்றார்.*

*சீதையின் மனம் அவன்பின்னே சென்றதால் பெண்மைக் குணத்தை அவளால் அடக்க இயலவில்லை;ஆதலால். தன் மனக் காதலை வெளிப்படுத்தினாள்; இத்தகைய காம விகாரத்தால் அவளது உடலழகும் குறைவுற்றது*

*சீதையின் காதல் நோய்*

**519. பிறை எனும் நுதலவள் பெண்மை என் படும்?-**
**நறை கமழ் அலங்கலான் நயன கோசரம்**
**மறைதலும். மனம் எனும் மத்த யானையின்**
**நிறை எனும் அங்குசம் நிமிர்ந்து போயதே!**

**நறை கமழ் அலங்கலான்** - *நறுமணம் கமழும் பூமாலை அணிந்த இராமன்;* **நயன கோசரம் மறைதலும்** - *சீதையின் கண்ணின்; பார்வைக்குப் புலனாகாமல் மறைந்த அளவில்;* **மனம் எனும் -** *(அவளது) மனம் என்ற;* **மத்த யானையின் -** *மதம் பிடித்த யானையை அடக்குகின்ற;* **நிறை எனும் அங்குசம் -** *(நிறை) உறுதியாகிய அங்குசமும்;* **நிமிர்ந்து போயது -** *நிமிர்ந்து போயிற்று. (அவ்வாறு நிமிர்ந்து போக);* **பிறை எனும் நுதலவள்** - *பிறைச் சந்திரனைப் போன்ற நெற்றியுடைய அச் சீதையின்* **; பெண்மை என்படும்** - *நாணம் முதலான பெண்மைக் குணங்கள் (வேறு) என்ன நிலைமையை அடையும்?*

*தன் கண்களுக்கு யானைப் பாகன் மறைந்த கணமே மதம் பிடித்த யானை தன்னை அடக்குகின்ற அங்குசத்தை நிமிரச் செய்து அதைத் தள்ளிவிட்டுத் தான் விரும்பின வழியே செல்லுதல்போலத் தான் விரும்பும் தலைவனான இராமன் மறைந்து சென்ற அளவிலே சீதையின் மனம் தன்னை அடக்கி வைக்கும் நிறை என்னும் குணத்தை நீக்கித் தான் விரும்பியவழிச் சென்றது என்றார். சிந்தை. நிறை. மெய்ந்நலன்களாகிய பெண்மைக் குணங்கள் யாவும் சிதைந்து ஒழிந்தன என்பது குறிப்பு. 'எழில்மருப்பு எழில்வேழம் இருகரு கடாத்தால். தொழில் மாறித்தலைவைத்த கோட்டிகை நிமிர்ந்தாங்கு' - (கலித். 138)*

*'துடக்குவரை நில்லாது தோட்டி நிமிர்ந்து. மதக்களிறு இரண்டுடன் மண்டியா அங்கு' (பெருங். 1. 32; 37 -38*

*40*

## *520. மால் உற வருதலும். மனமும் மெய்யும். தன் நூல் உறு மருங்குல்போல். நுடங்குவாள்; நெடுங் கால் உறு கண் வழிப் புகுந்த காதல் நோய். பால் உறு பிரை என. பரந்தது எங்குமே.*

***மால் உற வருதலும்*** *- காமம் மிகுதியாகத் தோன்றுதலும்;* ***மனமும் மெய்யும்*** *- நெஞ்சமும் உடலும்;* ***நூல் உறு*** *- நூல் இழையை ஒத்துள்ள;* ***தன் மருங்குல் போல்*** *- தனது நுண்ணிய இடைபோல;* ***நுடங்குவாள்*** *- தளர்கின்ற சீதையின்;* ***கால் உறு நெடுங்கண்*** *- கரிய நீண்ட கண்களின் மூலம்;* ***வழிப் புகுந்த காதல்நோய்*** *- உள்ளே புகுந்த காதல் நோயானது;* ***பால் உறு பிரை என*** *- பாலில் சேர்ந்த பிரைத் துளிபோல;* ***எங்கும் பரந்தது*** *- உடம்பு முழுதும் பரவியது.*

*பிரை: பாலை உறையச் செய்யும் மோர்த் துளி. அது முதலிலே பாலின் ஓர் இடத்தில் சேர்ந்து உடனே அப்பால் முழுவதையும் மாற்றுகிறது. அதுபோலக் காமநோய் முதலில் கண்வழியே உள்ளே சென்று உடனே உடம்பு முழுவதும் பரவியது என்றார்.*

*காதல் நோயால் உடல் நூல்போல் ஒடுங்கியது. காதல் புகுதற்குக் கண்ணின் கருமணியே வழியாகும்.*

*'குடப்பால் சில்லுறைபோலப் படைக்கு நோயெல்லாம் தான் ஆயினனே' - புற. 276 வேறு உரை;நீர் ஓரிடத்தில் சேர்ந்து பரவுவதற்கு வாய்க்கால் வழியாக அமைவதுபோலக் காம ஆசை மனத்தில் சென்று பரவக் கண் வழியாக உள்ளது. கண்களுக்குக் கால்வாய் உவமை; காதல் நோய்க்கு நீர்ப் பெருக்கு உவமை; கால் உறு கண்: கருமணி பாவை.*

## *521. நோம்; உறும் நோய் நிலை நுவலகிற்றிலள்; ஊமரின். மனத்திடை உன்னி. விம்முவாள்; காமனும். ஒரு சரம் கருத்தின் எய்தனன் - வேம் எரிஅதனிடை விறகு இட்டென்னவே.*

**நோம்** - (சீதை காமநோயால்) வருந்துவாள்; **உறும்நோய் நிலை நுவலகிற்றிலள்** - (கணத்திற்குக் கணம் தன்னிடம்) மிகுகின்ற அக் காமநோயின் நிலையை எவருடனும் சொல்ல முடியாதவளாய்; **ஊமரின் மனத்திடை** - ஊமைகள் போல மனத்திற்குள்ளேயே; **உன்னி விம்முவாள்** - நினைந்து தேம்புவாள் ; **காமனும்** - (அப்பொழுது) மன்மதனும்; **ஒரு சரம்** - ஓர் அம்பினை; **கருத்தில்** - அவளது மனத்திலே; **வேம் எரி அதனிடை** - எரிகிற நெருப்பிலே; **விறகு இட்டு என்ன** - விறகைப் போட்டாற்போல; **எய்தனன்** - எய்தான்.

மன்மதன். பாணம்: மன்மதன் தன் ஐங்கணைகளுள் நினைப்பை மிகுவிக்கக் கூடிய தாமரை மலரைச் சீதைமேல் எறிந்தான்.

**522.** **நிழல் இடு குண்டலம்**
**அதனின். நெய் இடா.**
**அழல் இடா. மிளிர்ந்திடும்**
**அயில் கொள் கண்ணினாள்.**
**சுழலிடு கூந்தலும்**
**துகிலும் சோர்தர.**
**தழல் இடு வல்லியே**
**போல. சாம்பினாள்.**

**நிழல் இடு** - ஒளி வீசுகின்ற; **குண்டலம் அதனின்** - காதணியான குண்டலம் வரை சென்று; **நெய் இடா** - நெய் தடவப் பெறாமலும்; **அழல் இடா** - நெருப்பிலே வைத்துக் காய்ச்சப் பெறாமலும்; **மிளிர்ந்திடும் அயில்கொள்** - விளங்கும் வேல் போன்ற; **கண்ணினாள்** - விழிகளையுடைய சீதை; **சுழலிடு கூந்தலும்** - கடை குழன்ற தன் கூந்தலும்; **துகிலும் சோர்தர** - உடையும் நெகிழும்படி; **தழல்இடு** - நெருப்பிலே போட்ட; **வல்லியே போல** - பூங்கொடி போல; **சாம்பினாள்** - வாடினாள்.

நெய் இடா அழல் இடா மிளிர்ந்திடும் அயில்: இல்பொருள். உவமை. சுழல் இடு கூந்தல்: பனிச்சை. சீதை நினைப்பு மிகுதியால் உடற்சோர்வுற்று மிக வருந்தினாள்.

**523.** **தழங்கிய கலைகளும். நிறையும். சங்கமும்.**
**மழுங்கிய உள்ளமும். அறிவும். மாமையும்.**
**இழந்தவள் - இமையவர் கடைய. யாவையும்**
**வழங்கிய கடல் என - வறியள் ஆயினாள்.**

***தழங்கிய கலைகளும்*** - ஒலிக்கின்ற மேகலை அணிகளையும்; ***நிறையும்*** - மனவுறுதியையும்; ***சங்கமும்*** - சங்கு வளையல்களையும்; ***மழுங்கிய உள்ளமும்*** - வாட்டம் அடைந்த மனத்தையும்; ***அறிவும்*** - அறிவையும்; ***மாமையும்*** - மேனியின் நிறத்தையும்; ***இழந்தவள்*** - (அப்பொழுது காதல் நோயால்) இழந்துநின்ற சீதை; ***இமையவர் கடைய*** - தேவர்கள் கடலைக் கடைந்தபொழுது; ***யாவையும் வழங்கிய*** - (தன்னிடமுள்ள சிறந்த பொருள்கள்) எல்லாவற்றையும் கொடுத்துவிட்ட; ***கடல் என*** - கடல் போல; ***வறியள் ஆயினாள்*** - எந்த ஒரு சிறந்த பொருளும் தன்னிடம் இல்லாதவள் ஆனாள்.

பெண்களுக்குச் சிறந்த அணிகளாகிய மேகலை முதலியவற்றையும். குணங்களான நிறை முதலானவற்றையும் சீதை இழந்ததால் 'வறியள் ஆயினாள்' என்றார். மேகலைகள் எட்டுக் கோவைகள் உள்ளமைபற்றி கலைகள் என்றார். இமையவர்: கண் இமையாதவர்: இமையில் சிறப்பு உள்ளவர்.

சோர்ந்த சீதையைத் தோழியர் மலர்ப்படுக்கையில் சேர்த்தல்

**524. கலம் குழைந்து உக. நெடு நாணும் கண் அற.**
**நலம் குழைதர. நகில்முகத்தின் ஏவுண்டு.**
**மலங்கு உழை என. உயிர் வருந்திச் சோர்தர.**
**பொலங் குழை மயிலைக் கொண்டு. அரிதின் போயினார்.**

***கலம் குழைந்து உக*** - அணிகள் நெகிழ்ந்து விழவும்; ***நெடு நாணும் கண்அற*** - மிக்க நாணமும் (தன்னிடமிருந்து) ஒழியவும்; ***நலம் குழைதர*** - அழகு மாறவும்; ***நகில் முகத்தின்*** - தன் முலைகளிடத்தில்; ***ஏ உண்டு*** - காம பாணத்தால் அடிப்பட்டு; ***மலங்கு உழை என*** - (வேடனது அம்பால் அடிபட்டு) வருந்தும் மான்போல; ***உயிர் வருந்திச் சோர்தர*** - உயிர் வருந்தி(ச்சீதை) வாடி நிற்க; ***பொலங்குழை மயிலை*** - (அதைப் பார்த்த தோழியர்) பொன்குழையாகிய காதணியை அணிந்த மயில்போலும் சாயலையுடைய அச்சீதையை; ***அரிதின்*** - சிரமப்பட்டு; ***கொண்டு போயினார்*** - அழைத்துச் சென்றார்கள்.

சீதை காமநோயால் வருந்தினாள்; அதனால் அதைத் தணிக்கும்பொருட்டு அவளைத் தக்க இடத்திற்குத் தோழியர் கொண்டு போயினர்.

**525. காதொடும் குழை பொரு கயற் கண் நங்கைதன்**
**பாதமும் கரங்களும் அனைய பல்லவம்**
**தாதொடும் குழையொடும் அடுத்த. தண் பனிச்**
**சீத நுண் துளி. மலர் அமளிச் சேர்த்தினார்.**

***காதொடும்*** - காதுடன்; ***குழைபொரு*** - குண்டலங்களையும் முட்டுகின்ற; ***கயல்கண்*** - கயல்மீன்போல் பிறழும் கண்ணினையுடைய; ***நங்கைதன்*** - சீதையின்; ***பாதமும் கரங்களும்*** - திருவடிகளையும் கைகளையும்; ***அனைய பல்லவம்*** - ஒத்துள்ள பல்லவம் என்று சொல்லப்படுகின்ற; ***குழையொடும்*** - செந்தளிர்களுடனும்; ***தாதொடும்*** - பூந்தாதுகளுடனும்; ***அடுத்த*** - பொருந்தியதும்; ***தண்பனிச் சீதம் நுண்துளி*** - மிகக் குளிர்ந்த நுட்பமான பனித்துளிகள் தெளிக்கப் பட்டதுமான; ***மலர் அமளி*** - பூக்காளல் ஆகிய படுக்கையில்; ***சேர்த்தினர்*** - (சீதையைத் தோழியர்) கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். பல்லவம்: மென்மையான தளிர். மலர் அமளி: சீதையின் வெம்மையைத் தணிவிக்கப் பூந்தாதுகளையும் தளிர்களையும் கீழே இட்டு மலர் பரப்பிய படுக்கை. தண் சீதப் பனி நுண்துளி என மாற்றுக.

***526. நாள் அறா நறு மலர் அமளி நண்ணினாள்-***
***பூளை வீ புரை பனிப் புயற்குத் தேம்பிய***
***தாள தாமரைமலர் ததைந்த பொய்கையும்.***
***வாள் அரா நுங்கிய மதியும். போலவே.***

***பூளைவீ புரை*** - பூளைப் பூவைப் போன்ற; ***பனிப் புயற்கு*** - (மெல்லிய வெண்ணிறமான) பனிமழைக்கு; ***தேம்பிய தாள தாமரை மலர்*** - தாள்களைக் கொண்ட வாடிய தாமரைப் பூக்கள்; ***ததைந்த பொய்கையும்*** - நெருங்கின தடாகத்தையும்; ***வாள் அரா*** - வாள் போல் கொடிய பாம்பினால்; ***நுங்கிய மதியும் போல*** - விழுங்கப்பட்ட சந்திரனையும் ஒப்ப (அந்த மலர்ப் படுக்கை) வாட்டத்தை அடையுமாறு; ***நாள் அறா நறுமலர்*** - அன்று பூத்த நறுமலர்களைக் கொண்டு பரப்பப்பட்ட; ***அமளி நண்ணினாள்*** - அப்படுக்கையில் (சீதை) சேர்ந்தாள்.

*தோழியர் அமைத்த மலர்ப்படுக்கையில் சீதை சேரவும் அப்படுக்கை அவளது மேனி வெப்பத்தால் தீய்ந்துவிட்டது.*

***527. மலை முகட்டு இடத்து உகு***
***மழைக்கண் ஆலிபோல்.***
***முலை முகட்டு உதிர்ந்தன.***
***நெடுங் கண் முத்து இனம்; சிலை நுதற்கடை உறை செறிந்த***
***வேர்வு. தன் உலை முகப் புகை நிமிர் உயிர்ப்பின் மாய்ந்ததே.***

***சிலை நுதற் கடை*** - வில் போன்ற நுதலின் கடைப்பால் புருவ விளிம்பில்; ***உறை செறிந்த*** - பொருந்திய துளிர்த்த மிக்க; ***வேர்வு*** - வியர்வைத்துளிகள்; ***தன்*** - அவனது; ***உலை முகப்புகை*** - கொல்லன் உலைக்களத்து எழும்புகை போன்ற வெப்பம்; ***நிமிர் உயிர்ப்பின்*** - நெட்டுயிர்ப்பினால்; ***மாய்ந்ததே*** - புலர்ந்து (உலர்ந்து) போயிற்று; ***மலை முகட்டு இடத்து*** - மலைச் சிகரங்களின் மேற்பால்; ***உகு -*** சிந்துகின்ற. பொழிகின்ற ; ***ஆலிபோல்*** - மழைத்துளிகள் போல; ***முலை முகட்டு -*** அவளது தடங்கொங்கைகளின் மேற்பால் ***; நெடுங்*** கண் - நீண்ட கண்கள் பெருக்கிய; ***முத்து இனம்*** - முத்து போன்ற கண்ணீர்த் துளிகள்; ***உதிர்ந்தன*** - சிந்தின.

*வான்கண் விழித்த (மேகம் பொழிந்த) நீர்த்துளிகள் மலைச் சிகரத்தில் வீழ்தல்போல் மான்கண் இழித்த முத்து போன்ற நீர்த்துளிகள் மலைச் சிகரங்களில் வீழ்ந்தன.*

*வியர்வைத்துளிகள் நெட்டுயிர்ப்பால் உலர்ந்து போயின என்பது குறிப்பு. மழைக்கண் காரணக்குறி என்பார் சுந்தர காண்டத்தும்.*

***528. கம்பம் இல் கொடு மனக் காம வேடன் கை
அம்பொடு சோர்வது ஓர் மயிலும் அன்னவள்.
வெம்புறு மனத்து அனல் வெதுப்ப. மென் மலர்க்
கொம்பு என. அமளியில் குழைந்து சாய்ந்தனள்.***

***கம்பம் இல்*** *- கலக்கம் இல்லாத;* ***கொடு மனம்*** *- வலிய மனத்தையுடைய;* ***கானவேடன்*** *- காட்டில் வாழும் வேடனது;* ***கை அம்பொடு*** *- கையால் எய்யப்பட்ட அம்பினால்;* ***சோர்வது ஓர் மயிலும்*** *- தளர்ந்து விழுவதோர் மயில் பறவையை;* ***அன்னவள்*** *- ஒத்தவளான சீதை;* ***வெம்புறு மனத்து*** *- கொதிக்கின்ற தன் மனத்தில் உண்டான;* ***அனல் வெதுப்ப*** *- காமத்தீ எரிப்பதால்;* ***மென்மலர்க் கொம்பு என*** *- (அனல்பட்ட அளவில் எரிக்கப்பட்ட) பூங்கொம்பு போல;* ***அமளியில்*** *- அம் மலர்ப்படுக்கையில்;* ***குழைந்து*** *- வாடி;* ***சாய்ந்தனள்*** *- சாய்ந்தாள்.*

*வேடனது அம்பால் எய்யப்பட்ட மயிலானது தளர்ந்து வீழ்வது போலச் சீதை மன்மதனது மலர்க் கணையால் அடிப்பட்டுச் சோர்ந்து வீழ்ந்தாள். கம்பம்: சலனம். நிலை மாறுதல். அம்பொடு: ஒடு - கருவிப் பொருளில் வந்துள்ளது.*

***529. சொரிந்தன நறு மலர் சுறுக் கொண்டு ஏறின; பொரிந்தன
கலவைகள். பொரியின் சிந்தின; எரிந்த வெங் கனல் சுட.
இழையில் கோத்த நூல் பரிந்தன; கரிந்தன. பல்லவங்களே.***

*(அப்பொழுது)* ***சொரிந்தன*** *- படுக்கையில் பரப்பிய;* ***நறுமலர்*** *- மணமுள்ள மலர்கள்;* ***சுறுக்குண்டு ஏறின*** *- (அவளுக்கு மென்மை செய்யாமல்) கூர்மையாகித் (உடம்பில்) தைத்தன;* ***பொரிந்தன கலவைகள்*** *- (அவளது உடம்பின் காமத் தீயால்) பொரிந்து போன கலவைச் சந்தனங்கள்;* ***பொரியின்*** *- சிந்தின தீப்பொறிகள் போல உதிர்ந்தன;* ***எரிந்த வெங் கனல் சுட*** *- (அவளது உடம்பில் பற்றி) எரிகிற காமத்தீயானது சுடுவதால்;* ***இழையில் கோத்த*** *- அணிகலன்களில் கோக்கப்பட்டுள்ள;* ***நூல் பரிந்தன*** *- நூல்கள் அறுபட்டு நீங்கின;* ***பல்லவங்கள்*** *- (படுக்கையில் பரப்பட்ட) தளிர்கள் கரிந்தன - கரிந்து போயின. சுறுக் கொள்ளுதல் தீய்ந்து சுருளுதல்;கூர்மையை அடைதல்*

*தாதியர் செய்த பரிகாரம்*

**530. தாதியர். செவிலியர். தாயர். தவ்வையர்.**
**மா துயர் உழந்து உழந்து அழுங்கி மாழ்கினர்;**
**'யாதுகொல் இது?' என. எண்ணல் தேற்றலர்;**
**போதுடன் அயினி நீர் சுழற்றிப் போற்றினர்.**

*(சீதையின்)* ***தாதியர்*** *- பணிப் பெண்களும்;* ***செவிலியர்*** *- செவிலியர்களும்;* ***தாயர்*** *- ஐந்துவகைத் தாய்மார்களும்;* ***தவ்வையர்*** *- தமக்கை முறையினரும்;* ***மாதுயர் உழந்து உழந்து*** *- (சீதை அடைந்த நோயால்) கடுந் துன்பத்தை மிக அடைந்து;* ***அழுங்கி*** *- பெரிதும் வருந்தி;* ***மாழ்கினர்*** *- மனம் கலங்கினவர்களாகியும்;* ***இது யாது கொல்என*** *- இந்த நோய் எந்த நோயோ என;* ***எண்ணல் தேற்றலர்*** *- ஆலோசித்து அறியமாட்டாதவர்களாகியும்;* ***போதுடன் அயினிநீர்*** *- பல பூக்களோடு கூடிய ஆலத்தி நீரை;* ***சுழற்றிப் போயினர்*** *- சுற்றி (அவளுக்குக் கண்ணூறு கழித்து) வாழ்த்தினார்கள்.*

*சீதையின் காமநோயை அறியாமல் தோழியர் முதலோர் கண்ணூறெனக் கருதி அதற்குப் பரிகாரம் தேடினர்; அயினிநீர். செஞ்சோற்றுடன் கூடிய நீர். கண்ணூறு அச்சம் ஆகியவற்றால் உண்டாகிய குற்றம் களைவது.*

*தாயர் ஐவர்: 1. ஆட்டுவாள் 2. ஊட்டுவாள் 3. ஒல் உறுத்துவாள் 4. நொடி பயிற்றுவாள் 5. கைத்தாய். செவிலியர்: வளர்க்கும் தாயர். 51*

*காதல் நோயுற்ற சீதையின் தோற்றம்*

**531. அருகில் நின்று அசைக்கின்ற ஆலவட்டக் கால்**
**எரியினை மிகுத்திட. இழையும். மாலையும்.**
**கரிகுவ. தீகுவ. கனல்வ. காட்டலால்.**
**உருகு பொற் பாவையும் ஒத்துத் தோன்றினாள்.**

***அருகில் நின்று*** *- பக்கத்திலே இருந்து;* ***அசைக்கின்ற ஆலவட்டம்*** *- (தோழியர்) வீசுகின்ற ஆலவட்டங்களின்;* ***கால் எரியினை மிகுத்திட*** *- காற்றானது காமத் தீயை வளர்க்க;* ***இழையும் மாலையும்*** *- (சீதையணிந்த) அணிகளும் பூமாலைகளும்;* ***கரிகுவ*** *- கரிந்தும்;* ***தீகுவ*** *- தீய்ந்தும்;* ***கனல்வ*** *- எரிந்தும்;* ***காட்டலால்*** *- ஆகிவிட்டமையால்;* ***உருகுபொன் பாவையும்*** *- (நெருப்பில் உருகு கின்ற பொன்னாலாகிய பாவையை;* ***ஒத்து*** *- போன்று;* ***தோன்றினாள்*** *- காணப்பட்டாள்.*

*அணி: தற்குறிப்பேற்ற அணி. அணிந்த அணிகள். மாலைகள் காமத் தீயால் கருகியும் தீய்ந்தும் எரிந்தும் போயின;தவிர. அச்சீதையும் நெருப்பில் உருகும் பொற்பாவைபோல் ஆகிவிட்டாள். ஆலவட்டம்: பெருவிசிறி.*

**532. ‘அல்லினை வகுத்தது ஓர் அலங்கற் காடு’ எனும்; ‘வல் எழு ; அல்லவேல். மரகதப் பெருங் கல்’ எனும். ‘இரு புயம்’ ; ‘கமலம் கண்’ எனும்; ‘வில்லொடும் இழிந்தது ஓர் மேகம்’ என்னுமால்.**

*(சீதை)* **அல்லினை வகுத்தது** - இருளைக் கொண்டு; **ஓர்அலங்கல் காடு** - அமைக்கப்பட்ட பூமாலைகள் உள்ள காடு (இராமனதுமுடி); **என்னும்** - என்று சொல்வாள்; **இருபுயம் -** அவனுடைய இரண்டு தோள்களும்; **வல் எழு -** வலிய தூண்களாம்; **அல்லவேல் -** அவை இல்லாவிட்டால்; **மரகதப் பெருங்கல் -** மரகதக் கற்கள் மயமான பெருமலைகளே; **எனும் .** என்பாள் **; கண் கமலம் எனும்** - (அவனுடைய) கண்கள் செந்தாமரை மலர் என்பாள்; **வில்லொடும் இழிந்தது -** (அவனது திருமேனி) இந்திரவில்லுடன் வானத்திலிருந்து இறங்கிய; **ஓர்மேகம் என்னும் -** ஒரு மேகம் என்று சொல்வாள்.

இராமனிடம் தன்மனம் செல்லப் பெற்ற சீதை அவனைக் குறித்து வாய் பிதற்றுவதாகும். அல் வகுத்ததோர் காடு: குடுமியின் கருமையும். மயிர்களின் அடர்த்தியும் கருதியது. எழு - இரும்புத்தூண்: தோள்கள் திரண்டு உருண்டு நீண்டிருத்தலால் தோளுக்கு இரும்புத் தூண் உவமையாயிற்று.

**533. ‘நெருக்கி உள் புகுந்து. அரு**
**நிறையும் பெண்மையும்**
**உருக்கி. என் உயிரொடு**
**உண்டு போனவள்**
**பொருப்பு உறழ் தோள்**
**புணர் புண்ணியத்தது**
**கருப்பு வில் அன்று; அவன் காமன் அல்லனே!**

**நெருக்கி உள்புகுந்து** - (என் மனத்துள்ளே) நெருக்கிப் புகுந்து; **அருநிறையும்** - அழிக்க முடியாத என் மன உறுதியையும்; **பெண்மையும்** - (நாணம் முதலிய பிற) பெண்மைக் குணங்களையும்; **உருக்கி** - இளகச் செய்து; **என் உயிரொடும்** - (அவற்றை) எனது உயிருடன்; **உண்டு போனவன்** - கவர்ந்து சென்ற உத்தமன். (மன்மதனோ என்றால்); **பொருப்பு உறழ்தோள்** - மலைபோன்ற தோளிலே; **புணர் புண்ணியத்தது** - சேர்ந்த நல்வினையுடையது; **கருப்பு வில் அன்று** - கரும்பு வில் அன்று (ஆதலால்); **அவன் காமன் அல்லனே** - அவன் மன்மதன் இல்லை.

இராமனது அழகிலே மயங்கிய சீதை இவன் மன்மதனோ என ஐயுற்றாள். பின் கையில் கரும்பு வில் இல்லாமல் மூங்கில் வில்லையே வைத்திருந்ததால் இவன் காமன் இல்லை என்று தெளிந்தாள்.

**534. ‘உரைசெயின். தேவர்தம் உலகு உளான் அலன்-**
**விரைசெறி தாமரை இமைக்கும் மெய்ம்மையால்;**
**வரி சிலைத் தடக் கையன். மார்பின் நூலினன்.**
**அரசிளங் குமரனே ஆகல்வேண்டுமால்.**

**உரை செயின்** - *(அவ் ஆண்மகனை இன்னான் என்று) சொல்லப் புகுந்தால்;* **தேவர்தம் உலகு** - தேவர் *உலகத்தில்;* **உளான் அலன்** - *உள்ள ஒரு விண்ணவன் அல்லன்;* **விரைசெறி தாமரை** - *(ஏனெனில்) மணமுள்ள செந்தாமரை போலும்;* **இமைக்கும் மெய்ம்மையான்** - *கண்கள் இமைக்கும் தன்மையுடையவன்;* **வரிசிலை தடக்கையன்** - *கட்டமைந்த வில்லை ஏந்திய பெரிய கையையுடையவன்;* **மார்பின் நூலினன்** - *மார்பில் பூணூல் தரித்தவன் (அவன்);* **அரசு இளங்குமரனே** - *இளம்பருவமுடைய அரச குமாரனாகவே;* **ஆகல் வேண்டும்** - *இருத்தல் வேண்டும்.*

*அவனை முதலில் தேவனோ என்று ஐயப்பட்டவள் கண்ணிமைத்தலால் அந்த ஐயம் நீங்கினாள். பின் கைவில்லும். மார்பின் நூலும் கண்டமையால் 'அரசகுமாரனே அவன்' என்று தெளிந்தாள். அணி: ஐயவணி.*

*535.* **'பெண்வழி நலனொடும். பிறந்த நாணொடும்.**
**எண்வழி உணர்வும். நான் எங்கும் காண்கிலேன்-**
**மண்வழி நடந்து. அடி வருந்தப் போனவன்.**
**கண்வழி நுழையும் ஓர் கள்வனே கொலாம்?**

**பெண்வழி** - *பெண்ணிடம் இயல்பாக உள்ள;* **நலனொடும்** - *அழகையும்;* **நாணொடும்** - *உடன்பிறந்த நாணத்தையும்;* **எண்வழி உணர்வும்** - *மனத்திலுள்ள அறியையும்;* **எங்கும் காண்கிலேன்** - *(அம் மைந்தன் வந்து போனபின்) நான் காண்கிறேன் அல்லேன்;* **அடி வருந்த** - *(ஆதலால்) தன் திருவடிகள் வருந்துமாறு;* **மண்வழி நடந்து போனவன்** - *தரையிலே நடந்து சென்ற அந்த இளைஞன்;* **கண்வழி நுழையும்** - *கண்களின் வழியே மனத்திற்குள்ளே செல்லவல்ல;* **ஓர்கள்வனே கொல் ஆம்** - *ஒரு கள்வன் போலும்! 'கண்வழி நுழையும் ஓர் கள்வன்' - விசித்திரமான கள்ளன். அம் மைந்தனை நான் கண்டவுடனே 'என்னுடைய நலன். நாண். உணர்வு என்ற இவற்றை இழந்தேன். ஆகையால். அம் மைந்தன் கண்டார் கண்வழியே புகுந்து கரந்து செல்ல வல்லவன்' என்கிறாள் சீதை. எண்வழி: எண்ணுமிடத்து; எண் வழியுணர்வு - எண்ணத்தின் வழியே செல்கின்ற அறிவு.*

*இராமனை நினைந்து சீதை உருகுதல்*

*536.* **'இந்திர நீலம் ஒத்து இருண்ட குஞ்சியும்.**
**சந்திர வதனமும். தாழ்ந்த கைகளும்;**
**சுந்தர மணி வரைத் தோளுமே. அல;**
**முந்தி. என் உயிரை. அம் முறுவல் உண்டதே!**

***இந்திர நீலம் ஒத்து*** - *இந்திர நீலம் என்ற மணிக்கு ஒப்பாக;* ***இருண்ட குஞ்சியும்*** - *கறுத்த மயிர்முடியும்;* ***சந்திர வதனமும்*** - *முழுநிலவு போன்ற முகமும்;* ***தாழ்ந்த கைகளும்*** - *(முழங்கால் வரை) தொங்கும் கைகளும்;* ***சுந்தர மணிவரை*** - *அழகிய நீலமணிமலைகள் போன்ற - தோளுமே - தோள்களும் என்னும் இவையே;* ***அல*** - *அல்ல (அவ்வாறாயின் பின் யாது என்றால்);* ***அம் முறுவல்*** - *அந்தப் புன்னகைதான்;* ***முந்தி*** - *(இவை எல்லாவற்றுக்கும்) முற்பட்டு;* ***என் உயிரை உண்டது*** - *எனது உயிரைக் கவர்ந்தது.*

*முறுவர்: மகிழ்ச்சிக் குறிப்பு. இந்திர நீலம்: சிறந்த சாதி நீல மணி. என் காதலனுடைய குஞ்சி முதலியன என் உயிரை உண்டன என்றாலும் முற்பட்டு உயிரை உண்டது அவனது புன்முறுவலே என்று வருந்திக் கூறுகிறாள் சீதை.*

***537. 'படர்ந்து ஒளி பரந்து உயிர் பருகும் ஆகமும்.***
***தடந் தரு தாமரைத் தாளுமே. அல;***
***கடம் தரு மா மதக் களி நல் யானைபோல்.***
***நடந்தது. கிடந்தது. என் உள்ளம் நண்ணியே.***

***படர்ந்து ஒளிபரந்து*** - *அகன்ற ஒளி பரந்து;* ***உயிர் பருகும்*** - *காண்போர் உயிரைப் பருகக் கூடிய ;* ***ஆகமும்*** - *அவனது திருமார்பும்;* ***தடம் தரு*** - *பெருமை மிக்க;* ***தாமரைத் தாளுமே*** - *செந்தாமரை போன்ற திருவடிகளும் என்னும்;* ***அல*** - *இவையே அல்ல;* ***கடம்தரு மாமதம்*** - *கன்னத்திலிருந்து வழியும் மிக்க மதநீரையும்;* ***களி நல்யானை போல்*** - *களிப்பையும் உடைய சிறந்த ஆண் யானை போல;* ***நடந்தது*** - *(அந்த இளைஞன்) நடந்துசென்ற நடையழகு;* ***என் உள்ளம் நண்ணி*** - *என் மனத்தில் பொருந்தி;* ***கிடந்தது*** - *(எப்பொழுதும் நீங்காது) பதிந்துள்ளது.*

*சீதை இராமனது மார்பின் அழகு. தாமரைத் திருவடிகளின் அழகு என்ற இவற்றைவிட அவனது நடையழகில் தன் மனம் பதிந்தமையைத் தெரிவிக்கின்றாள். தடம் தரு தாமரை: தடாகத்தில் பூத்த தாமரை என்றும் கூறலாம். பறிக்கப்பட்டு வாடிப் போகாத அன்று பூத்த மலர் எனலாம்.*

***538. 'பிறந்துடை நலம் நிறை பிணித்த எந்திரம்.***
***கறங்குபு திரியும் என் கன்னி மா மதில்***
***எறிந்த அக் குமரனை. இன்னும். கண்ணிற் கண்டு.***
***அறிந்து. உயிர் இழக்கவும் ஆகுமேகொலாம்?'***

***பிறந்த உடை*** - *(என்) உடன் பிறந்து எனக்கு உடைமையாயுள்ள;* ***நலம்நிலை*** - *நல்ல மனவுறுதி ஆகிய;* ***பிணித்த எந்திரம்*** - *கட்டமைந்த இயந்திரம்;* ***கறங்குபு திரியும்*** - *சுழன்று திரிதற்கு இடமான;* ***என் கன்னி மாமதில்*** - *(காவல் புரியும்) மதிலின் மேல் பொருத்தப்பெற்றுப் பிறரை அணுகவிடாது காக்கும் எனது கன்னித் தன்மையாகிய பெரிய மதிலை;* ***எறிந்த*** - *அழித்துச் சென்ற;* ***அக்குமரனை*** - *அந்தக் குமரனை;* ***இன்னும்*** - *மற்றொருமுறை;* ***கண்ணில் கண்டு*** - *கண்களால் கண்டு;* ***அறிந்து*** - *அவனை (இன்னான் இத்தகையவன் என) அறிந்து;* ***உயிர் இழக்கவும்*** - *(அதன் பின்பு) எனது உயிரை இழக்கவாயினும்;* ***ஆகுமே கொல் ஆம்*** - *கூடுமோ?*

*கன்னிமை மனத்துள்ளே ஓர் ஆடவனும் செல்லமுடியாதபடி காத்து வருதால் அதனை 'மதில்' என்றார்; நிறை அந்தக் கன்னிமைக்கும் காவலாய் நின்று உறுதி தருவதால் அதனை 'எந்திரம்' என்றார். உருவகம்: ''காமக் கணிச்சி உடைக்கும் நிறையென்னும். நாணுத்தாழ் வீழ்ந்த கதவு'' (குறள்: 1251). அந்தக் குமரனைக் கண்டு அவனை அணைய முடியாது போயினும் இன்னான் இனையான் என அறிய இயலுமா? நானோ காம தேவனைப் பட்டு உயிர் துறப்பது உறுதி; ஆனால் அவனை என் கணகளால் கண்டு களித்தால் அதன்பின் என் உயிர் போவதாயினும் போகுக. அதுவும் எனது பேறே. இயந்திரம் மதில் உறுப்பு.*

***539. என்று இவை இனையன விளம்பும் ஏல்வையின்.***
***'நின்றனன். இவண்' எனும்; 'நீங்கினான்' எனும்;***
***கன்றிய மனத்து உறு காம வேட்கையால்.***
***ஒன்று அல. பல நினைந்து. உருகும்காலையே.***

***என்று இவை*** - *என்று இவற்றையும்;* ***இனையன*** - *இவை போன்ற பலவற்யையும்;* ***விளம்பும் ஏல்வையின்*** - *(சீதை) தனக்குள் கூறுகின்ற பொழுதில்;* ***இவண் நின்றனன் எனும்*** - *(உரு வெளிப்பாட்டில் அவன் தன் எதிரில் தோன்ற) நான் முன்பு பார்த்த வீரன் இதோ இங்கு நிற்கின்றான் என்பாள்;* ***நீங்கினான் எனும்*** - *(உடனே அவ்வுரும் மறைதலால்) நீங்கிவிட்டான் என்பாள்;* ***கன்றிய மனத்து*** - *(இவ்வாறு சீதை) வெதும்பிய மனத்தில்;* ***உறு காம வேட்கையால்*** - *மிகுந்த காம விருப்பத்தால்;* ***ஒன்று அல பல நினைந்து*** - *ஒன்று மட்டுமல்ல. பலவற்றையும் எண்ணி எண்ணி;* ***உருகும் காலை*** - *மனம் உருகும்பொழுது; காம வேட்கை; காமனால் உண்டாகிய வேட்கை; காமமாகிய வேட்கை.*

*கதிரவன் மறைதலும் அந்திமாலையின் தோற்றமும்*

***540. அன்ன மென் நடையவட்கு அமைந்த காமத் தீ.***
***தன்னையும் சுடுவது தரிக்கிலான் என.***
***நல் நெடுங் கரங்களை நடுக்கி. ஓடிப்போய் -***
***முன்னை வெங் கதிரவன் - கடலில் மூழ்கினான்.***

***அன்ன மென்*** - *அன்னம் போன்ற மெல்லிய;* ***நடையவட்கு*** - *நடையை உடைய சீதைக்கு;* ***அமைந்த*** - *(உடம்பு முழுதும்) பொருந்தின்;* ***காமத்தீ*** - *காமமாகிய நெருப்பு;* ***தன்னையும் சுடுவது*** - *(மேலே எழுந்து இயல்பாக வெப்பம் கொண்ட) தன்னையும் எரிப்பதை;* ***தரிக்கிலான் என*** - *பொறுக்கமாட்டாதவன்போல்;* ***முன்னை வெம் கதிரவன்*** - *பழைமையான வெப்பக் கதிர்களையுடைய சூரியன்;* ***நல் நெடு கரங்களை*** - *தன்னுடைய நீண்ட கைகளை;* ***நடுக்கி*** - *நடுங்கச் செய்து;* ***ஓடிப்போய்*** - *விரைந்து சென்று;* ***கடலில் மூழ்கினான்*** - *(மேற்குக்) கடலிலே மூழ்கினான்.*

*சீதையின் காமத் தீ இயற்கை வெப்பமுள்ள கதிரவனையும் சுடும் வல்லமை பெற்றதாயிற்று. வெப்பம் முதலானவற்றால் துன்பப்படுகின்றவர்க்கு கைகள் நடுங்குதல் இயல்பு.*

***541. விரி மலர்த் தென்றல் ஆம் வீசு பாசமும்.***
***எரி நிறச் செக்கரும். இருளும். காட்டலால்.***
***அரியவட்கு அனல் தரும் அந்திமாலையும்***
***கரு நிறச் செம் மயிர்க் காலன் தோன்றினான்.***

***விரிமலர்த் தென்றலாம்*** - *மலர்ந்த பூக்களின் படிந்து வரும் தென்றலாகிய;* ***வீசு பாசமும்*** - *வீசிப் பிணிக்கும் பாசாயுதமும்;* ***எரிநிறச் செக்கரும்*** - *தீயைப் போன்ற நிறமுடைய செவ்வானமாகிய செம்பட்டை மயிரும்;* ***இருளும்*** - *இருளாகிய கரிய நிறத்தையும்;* ***காட்டலால்*** - *தன்னிடத்தே தோன்றக் காண்பித்தலாலே;* ***அரியவட்கு*** - *அருமையானவளாகிய சீதைக்கு;* ***அனல் தரும்*** - *காமத் தீயை வளர்க்கின்ற;* ***அந்தி மாலை ஆம்*** - *அந்திக் காலம் என்கின்ற;* ***கருநிறம்*** - *கரிய நிறமும்;* ***செம் மயிர்*** - *சிவந்த மயிர்களையும் உடைய;* ***காலன் தோன்றினான்*** - *இயமன் வந்தான்.*

*சீதை காமவேதனையால் வருந்தும்பொழுது அதை மேலும் வளர்க்கும். அந்திப்பொழுது வந்தது; அது அவளுக்கு இயமன் வந்து தோன்றியதுபோல இருந்தது. என்றார். செக்கர்: செவ்வானம் - பண்பாகுபெயர். அரியவள்: பிற பெண்களிடம் காணப்பெறாத அருமையான பண்புகளையுடையவள்.*

***542. மீது அறை பறவை ஆம் பறையும். கீழ் விளி***
***ஓத மென் சிலம்பொடும். உதிரச் செக்கரும்.***
***பாதக இருள் செய் கஞ்சுகமும். பற்றலால்.***
***சாதகர் என்னவும் தகைத்து - அம் மாலையே.***

***மீது அறை*** - *மேலே (வானத்திலே) ஒலிக்கின்ற;* ***பறவையாம்*** - *பறவைகளாகிய;* ***பறையும்*** - *பறை என்னும் வாத்தியத்தையும்;* ***கீழ்விளி*** - *கீழே (நிலத்திலே) ஒலிக்கின்ற;* ***ஓதம் என்*** - *கடலாகிய;* ***சிலம்பொடும்*** - *காற்சிலம்பையும்;* ***செக்கர்*** - *செவ்வானமாகிய;* ***உதிரமும்*** - *இரத்தக் குறிகளையும்;* ***பாதக இருள்செய்*** - *(சீதைபோலக் காமவேதனை கொண்டவர்க்குத்) துன்பத்தை விளைக்கும் இருளாகிய்;* ***கஞ்சுகமும்*** - *கருஞ்சட்டையையும்;* ***பற்றலால்*** - *கொண்டிருப்பதனால்;* ***அம் மாலை*** - *அந்த மாலைப் பொழுது;* ***சாதகர் என்னவும்*** - *சாதகர் என்ற பெயரிய ஒருவகைக் கடுமையான விரதத்தராம் தேவி உபாசகர் என்று சொல்வதற்கும்;* ***தகைத்து*** - *தகுதியுடையது.*

*பறை: தமருகம் முதலிய வாத்தியம். சாதகர்: கடுநோன்பும் சூளுறவும் கொண்ட தேவி உபாசகர். மாலைக் காலமானது பறவையொலியையே பறை ஒலியாகவும். கடல் ஒலியையே காற்சிலம்பொலியாகவும் கொண்டு இருளாகிய கருஞ்சட்டையைத் தரித்துச் செக்கராகிய உதிரத்தை ஏந்தி உபாசகர் போன்று இருந்தது. அணி: தற்குறிப்பேற்றவணி.*

*மாலை வருகையும் சீதையின் புலம்பலும்*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

**543. *கயங்கள் என்னும் கனல் தோய்ந்து.***
***கடி நாள்மலரின் விடம் பூசி.***
***இயங்கு தென்றல் மன்மதவேள்***
***எய்த புண்ணினிடை நுழைய.***
***உயங்கும் உணர்வும். நல் நலமும்.***
***உருகிச் சோர்வாள் உயிர் உண்ண***
***வயங்கு மாலை வான் நோக்கி.***
***'இதுவோ கூற்றின் வடிவு?' என்றாள்.***

***கயங்கள் என்னும்*** *- பொய்கைகள் என்கிற;* ***கனல் தோய்ந்து*** *- நெருப்பிலே படிந்து (உடம்பு காய்ந்து);* ***கடி நாள் மலரின்*** *- மணமுள்ள புதிய பூக்களிலிருந்து;* ***விடம் பூசி*** *- (மகரந்த மாகிய) நஞ்சை எடுத்து மேலே பூசிக்கொண்டு;* ***இயங்குதென்றல்*** *- உலாவும் தென்றல் காற்று (ஆகிய கூர்வேல்);* ***மன்மதவேள் எய்த*** *- மன்மதன் (தன் அம்புகளை) எய்ததால் உண்டான;* ***புண்ணின் இடை நுழைய*** *- புண்களின் துளைகளிலே மேலும் (தைத்து) உள் செல்ல;* ***உயங்கும் உணர்வும்*** *- (அதனால்) குலையும் அறிவும்;* ***நல் நலனும்*** *- பெண்மைக் குணங்களும்;* ***உருகிச் சோர்வாள்*** *- அழிந்து தளர்பவளாகிய சீதை;* ***உயிர் உண்ண*** *- (தனது) உயிரைக் கவரும் பொருட்டு;* ***வயங்கும்*** *- வந்து தோற்றமளிக்கும்;* ***மாலை வான்*** *- மாலைப் பொழுதோடு கூடிய வானத்தை;* ***நோக்கி*** *- பார்த்து;* ***கூற்றின் வடிவு*** *- இயமனது அஞ்சத்தக்க வடிவம்;* ***இதுவோ என்றாள் இதுதானோ என்று எண்ணி அஞ்சினாள்.***

*மலரின் மகரந்தம் விடமாகும்; தென்றல் வேற்படையாகும். தென்றலாகிய வேல் காமபாணம் தைத்த புண்ணில் நுழைந்தது. மாலையும் தென்றலும் பிறர்க்கு இன்பத்தைச் செய்வன. ஆயினும் தம் விருப்பத்திற்கு உகந்தவரைச் சேராத தலைவர் தலைவியர்க்குக் காமத்தை வளர்ந்து வருத்தும்.*

*544.* ***'கடலோ? மழையோ? முழு நீலக்***
***கல்லோ? காயா நறும் போதோ?***
***படர் பூங் குவளை நாள்மலரோ?***
***நீலோற்பலமோ? பானலோ?-***
***இடர்சேர் மடவார் உயிர் உண்பது***
***யாதோ?' என்று தளர்வாள்முன்.***
***மடல் சேர் தாரான் நிறம் போலும்***
***அந்தி மாலை வந்ததுவே!***

***கடலோ - கருங்கடலோ?;*** ***மழையோ*** *- காள மேகமோ? முழு நீலக்கல்லோ - பெரிய இந்திர நீலத்தின் மலையோ?;* ***காயா நறும்போதோ*** *-காயாச் செடியின் மணமுள்ளபூவோ;* ***படர் பூங்குவளை நறுமலரோ*** *- படரும் அழகுள்ள கருங்குவளையின் நறுமணப்பூவோ?;* ***நீலோற்பலமோ*** *- நீலோற்பல மலரோ;* ***பானலோ*** *- கருநெய்தல் மலரோ?;* ***இடர்சேர் மடவார்*** *- பலவகைத் துன்பங்களும் வந்து அடைவதற்கு இடமான இளம்பெண்களின்;* ***உயிர் உண்பது யாதோ*** *- உயிரைக் கவர்வது (மேற்கூறியவற்றுள்) எதுவோ?;* ***என்று*** *- என்று நினைந்து;* ***தளர்வாள்முன்*** *- (மனமும் உடம்பும்) தளர்பவளாகிய அச் சீதையின் எதிரிலே;* ***அடல்சேர் அசுரர்*** *- வலிமை மிக்க அசுரரின்;* ***நிறம் போலும் அந்திமாலை*** *- நிறத்தைப் போன்ற மாலைப் பொழுதும்;* ***வந்தது*** *- வந்து சேர்ந்தது. கடல் முதலான ஏழும் இராமனது திருமேனி நிறத்துக்கு உவமையாகும்.*

*545.* ***'மை வான் நிறத்து. மீன் எயிற்று.***
***வாடை உயிர்ப்பின். வளர்செக்கர்ப்***
***பை வாய் அந்திப் பட அரவே!***
***என்னை வளைத்துப் பகைத்தியால்***
***எய்வான் ஒருவன் கை ஓயான்;***
***உயிரும் ஒன்றே; இனி இல்லை;***
***உய்வான் உற. இப் பழி பூண.***
***உன்னோடு எனக்குப் பகை உண்டா?***

***வான்*** - ஆகாயத்திலே பரவிய; ***மைநிறத்து*** - கரு நிறத்தையும்; ***மீன் எயிற்று*** - நட்சத்திரங்களாகிய நச்சுப் பற்களையும்; ***வாடை உயிர்ப்பின்*** - வாடைக் காற்றாகிய பெருமூச்சையும்; ***வளர் செக்கர்*** - பரவிய செவ்வானமாகிய; ***பை வாய்*** - நச்சுப்பை கொண்ட வாயையும் உடைய; ***அந்தி*** - அந்திப் பொழுதாகிய; ***படம் அரவே*** - படத்தையுடைய நாகமே! (நீ) எக்காரணத்தால்; ***என்னை வளைத்து*** - என்னை வளைத்துப்பற்றி; ***பகைத்தி*** - என்னோடு பகைத்து (என்னை) வருத்துகிறாய்?; ***எய்வான் ஒருவன்*** - (என்மேல்) அம்புகளை எய்பவனாகிய மன்மதன்; ***கை ஓயான்*** - (எய்யும் தொழிலில்) கை சிறிதும் தளர்கிறவன் அல்லன்; ***உயிரும் ஒன்றே*** - (எனக்கு உள்ளதோ) ஓர் உயிர்தான்; ***இனி இல்லை*** - (அதனை அவன் கவர்ந்துவிட்டால்) உன்னால் கவர என்னிடம் வேறு உயிர் இல்லை; ***உய்வான் உற*** - (அம் மன்மதனிடமிருந்து) தப்பிப் பிழைக்க நான் முயன்று வருங்காலத்து; ***இப் பழி பூண*** - இப் பெண் பழியை ஏற்பதற்கு; ***என்னோடு உனக்கு*** - என்னிடம் உனக்கு; ***பகை உண்டோ*** - என்ன பகை உள்ளதோ?

*உருவக அணி: அச்சம் தருவதால் இருளைக் கருநிறமாகவும். பள பளத்தலால் வானத்து மீனைப் பல்லாகவும். அனல் வீசுவதால் வாடையைப் பெருமூச்சாவும். தன்னை விழுங்குவது போன்று இருத்தலால் செவ்வானத்தை வாயாகவும். சொல்ல வருதலால் மாலையைப் பாம்பாகவும் உருவகப்படுத்தினாள். காற்று: வடக்கிலிருந்து வீசும் காற்று.*

***546. ‘ஆலம் உலகில் பரந்ததுவோ?***
***ஆழி கிளர்ந்ததே? அவர்தம்***
***நீல நிறத்தை எல்லோரும்***
***நினைக்க. அதுவாய் நிரம்பியதோ?***
***காலன் நிறத்தை அஞ்சனத்தில்***
***கலந்து குழைத்து. காயத்தின்***
***மேலும் நிலத்தும். மெழுகியதோ?-***
***விளைக்கும் இருளாய் விளைந்ததுவே!***

***விளைக்கும்*** - (துன்பம்) உண்டாக்குகின்ற; ***இருளாய்*** - இருள் உருவமாய்; ***விளைந்தது*** - முதிர்ச்சி அடைந்துள்ளது; ***ஆலம் உலகில்*** - ஆலகால நஞ்சு உலகெங்கும்; ***பரந்ததுவோ*** - பரவியதுதானோ?; ***ஆழி கிளர்ந்ததோ*** - கருங்கடல் மேலே பொங்கி எழுந்ததுதானோ?; ***அவர்தம் நீல நிறத்தை*** - அந்த உத்தமனது திருமேனியின் நீல நிறத்தை; ***எல்லோரும் நினைக்க*** - (உலகில்) யாவரும் நினைத்தால்; ***அதுவாய் நிரம்பியதோ*** - எங்கும் அந்நிறமே ஆகி வியாபித்ததுதானோ?; ***காலன் நிறத்தை*** - இயமனது கருநிறத்தை; ***அஞ்சனத்தில் கலந்து*** - மையோடு கலந்து; ***குழைத்து*** - குழைத்து (அதனை); ***காயத்தின் மேலும்*** - வானத்தின் மேலும்; ***நிலத்தும்*** - பூமியின் மீதும்; ***மெழுகியதோ*** - (முழுவதும்) பூசியதுதானோ?

*காயம்: ஆகாயம். முதற்குறை: அணி: தற்குறிப்பேற்றவணி. ஆலம். காலன் நிறம்; யாவர்க்கும் அச்சம் ஊட்டுவன. ஆழி: பிரிந்தார்க்கு வருத்தம் ஊட்டுவது.*

***547. ‘வெளி நின்றவரோ போய் மறைந்தார்;***
***விலக்க ஒருவர்தமைக் காணேன்;***
***‘‘எளியன். பெண்’’ என்று இரங்காதே.***
***எல்லியமாத்து இருளூடே.***
***ஒளி அம்பு எய்யும் மன்மதனார்.***
***உனக்குஇம் மாயம் உரைத்தாரோ?***
***அளியென் செய்த தீவினையோ!***
***அன்றில் ஆகி வந்தாயோ?***

***(ஓ பறவையே) வெளிநின்றவரோ*** - *(என் கண்முன் சிறிது நேரம்) வெளிப்பட்டுத் தோன்றிய தலைவரோ;* ***போய் மறைந்தார்*** - *(இப்பொழுது) மறைந்து சென்றார்;* ***விலக்க*** - *(அவ்வாறு போகும் அவைரப் போக விடாமல்) டுப்பதற்கு;* ***ஒருவர்தமைக் காணேன்*** - *ஒருவரையும் (நான்) காணவில்லை;* ***எளியள் பெண் என்று*** - *(இப்படிக் கதியற்ற) எளிமையுள்ள பெண் என்று கருதி;* ***இரங்காதே*** - *(சிறிதும்) இரக்கம் கொள்ளாமல்;* ***எல்லியாமத்து*** - *இரவுக் காலத்தின்;* ***இருள் ஊடே*** - *இருளிடையே;* ***ஒளி அம்பு எய்யும்*** - *ஒளிந்து நின்று அம்புகளை (என்மேல்) எய்யும்;* ***மன்மதனார்*** - *காமதேவன்;* ***உனக்கு இம் மாயம்*** - *உனக்கு இந்த வஞ்சகச் செயலை;* ***உரைத்தாரோ*** - *சொல்லிக் கொடுத்தானோ?;* ***அளியென் செய்த*** - *(அல்லாது) எளியவள் முற்பிறப்பில் செய்த;* ***தீவினையோ*** - *பாவமோ;* ***அன்றில் ஆகி*** *(இந்தப் பிறப்பில்) அன்றில் உருவங்கொண்டு* ***; வந்தாயோ*** - *(என்னை) வருத்த வந்தாயோ?*

*அன்றில் - இப்பறவை இனத்தில் ஆணும் பெண்ணும் எப்பொழுதும் கூடிய இருக்கும். இது இரவில் துணையைப் பிரிந்தால் வருந்தும். அந்த நலிவால் கூவுகின்ற குரலோசை தலைவரைப் பிரிந்து வருந்துகின்ற மகளிர்க்கு அவ் வருத்தத்தை வளர்ப்பதாகக் கூறுதல் கவி மரபு. இம் மாயம்: இருளில் நின்று எனக்குத் தீங்கு இழைக்கும் வித்தை. கொடுமை. யாமம்: ஏழரை நாழிகை - இங்குப் பொழுது என்ற பொருளில் வந்தது*

. *தோழியர் நெய்விளக்கு அகற்றி மணிவிளக்கு அமைத்தல்*

***548. ஆண்டு. அங்கு அனையாள். இனைய நினைந்து***
***அழுங்கு ஏல்வை. அகல் வானம்***
***தீண்ட நிமிர்ந்த பெருங்கோயில்.***
***சீத மணியின் வேதிகைவாய்.***
***‘நீண்ட சோதி நெய் விளக்கம்***
***வெய்ய’ என்று. அங்கு அவை நீக்கி.***
***தூண்டல் செய்யா மணி விளக்கின்***
***சுடரால். இரவைப் பகல் செய்தார்.***

***ஆண்டு*** - *அந்த இடத்திலே;* ***அனையாள்*** *- அச் சீதை;* ***இனைய நினைந்து*** *- இவற்றையும் இவை போன்றவற்றையும் எண்ணி;* ***அங்கு*** *- அவ்வாறு;* ***அழுங்கும் ஏல்வை*** *- வருந்தும் போது (தோழியர்;* ***அகல் வானம்*** *- அகன்ற வானத்தையும்;* ***தீண்ட நிமிர்ந்த*** *- தொடும்படி உயர்ந்துள்ள;* ***பெருங்கோயில்*** *- கன்னி மாடத்தில்;* ***சீத மணியின்*** *- குளிர்ந்த சந்திர காந்த மணியால் இழைத்த;* ***வேதிகை வாய்*** *- மேடையில்;* ***நீண்ட சோதி*** *- மிக்க ஒளிதரும்;* ***நெய் விளக்கம்*** *- நெய்யினாலே ஏற்றப்படும் விளக்குகள்;* ***வெய்ய என்று*** *- வெப்பம் தருவன என்று கருதி;* ***அங்கு அவை நீக்கி*** *- அவ்விடத்தில் அவற்றை நீக்கி விட்டு;* ***தூண்டல் செய்யா*** *- (யாரும்) தூண்ட வேண்டாத;* ***மணி விளக்கின்*** *- இரத்தின விளக்குகளின்;* ***சுடரால்*** *- ஒளியால்;* ***இரவைப் பகல் செய்தார்*** *- இரவுப்பொழுதைப் பகல் போல வெளிச்சம் உண்டாகும்படி செய்தார்கள்.*

*சீதை வருந்தும் போது நெய் விளக்கும் அச் சீதையின் வெப்பத்தை மிகுதியாக்கும் என்று தோழியர் கருதி அவற்றை நீக்கிவிட்டு மணி விளக்கால் அங்கு வெளிச்சம் உண்டாக்கினர்.*

*சீத மணி - சந்திரகாந்தக்கல் 'ஆனாதே இருள் பருகும் அருமணி' - (சீவக.169*

*69*

*திங்களின் தோற்றம்*

***549. பெருந்தின் நெடுமால் வரை நிறுவி.***
***பிணித்த பாம்பின் மணித் தாம்பின்***

***விரிந்த திவலை பொதிந்த மணி***
***விசும்பின் மீனின் மேல் விளங்க.***
***அருந்த அமரர் கலக்கிய நாள்.***
***அமுதம் நிறைந்த பொற்கலசம்***
***இருந்தது இடை வந்து எழுந்தது என***
***எழுந்தது - ஆழி வெண்திங்கள்.***

***பெருந்திண்*** *- சிறந்த வலிய* ***நெடுமால்*** *- மிகவும் உயர்ந்த வரை நிறுவி - மந்தர மலையை (மத்தாக) நாட்டி பிணித்த - (அதில்) கட்டிய;* ***பாம்பின்*** *- (வாசுகி என்னும்) பாம்பாகிய;* ***மணித்தாம்பின்*** *- முறுக்கேறிய கடைகயிற்றால்;* ***அமரர் அருந்த*** *- தேவர்கள் உண்ணுவதற்காக;* ***கலக்கிய நாள்*** *- (பாற்கடலைக்) கடைந்த காலத்தில்;* ***விரிந்த திவலை*** *- (வெளியே) தெறித்துப் பரவிய நீர்த்துளிகளும்;* ***உதிர்ந்த மணி*** *- சிதறின இரத்தினங்களும்;* ***விசும்பின் மீனின்மேல்*** *-வானத்து நட்சத்திரங்களைவிட மிகுதியாக;* ***விளங்க*** *- விளங்குமாறு;* ***இடை இருந்தது*** *- அக் கடலின் இடையிலே இருந்ததாகிய;* ***அமுது நிறைந்த*** *- அமுதம் நிறைந்த;* ***பொன் கலசம்*** *- பொன் கலசமானது;* ***வந்து எழுந்தது என*** *- மேல் எழுந்து தோன்றியதுபோல்;* ***வெண் திங்கள்*** *- வெண்மை நிறமுள்ள சந்திரன்;* ***ஆழி*** *- கருங்கடலிருந்து;* ***எழுந்தது*** *- உதித்தது.*

*கடலிடையே தோன்றிய சந்திரனைப் பாற்கடலின் நடுவே தோன்றிய அமுதப் பொற்கலசமாகக் குறித்தார். அணி: தற்குறிப்பேற்றவணி. சந்திர ஒளியால் வெண்ணிறம் அடைதல் பற்றிக் கருங்கடலுக்குப் பாற்கடலும். அமுத கிரணனான சந்திரனுக்கு அமுத கலசமும் ஏற்ற உவமையாகும். மணித்தாம்பு - மணிக்கயிறு.*

***550.*** ***வண்டு ஆய் அயன். நான் மறை பாட.***
***மலர்ந்தது ஒரு தாமரைப்போது.***
***பண்டு ஆலிலையின்மிசைக் கிடந்து.***
***பாரும் நீரும். பசித்தான் போல்.***
***உண்டான் உந்திக் கடல் பூத்தது;***
***ஓதக் கடலும். தான் வேறு ஓர்***
***வெண் தாமரையின் மலர் பூத்தது.***
***ஒத்தது - ஆழி வெண் திங்கள்.***

***பண்டு*** *- முற்காலத்திலே;* ***ஆல் இலையின் மிசை*** *- ஆல் இலையின் மேலே;* ***கிடந்து*** *- பள்ளி கொண்டு;* ***பசித்தான் போல்*** *- பசி உடையவன்போல;* ***பாரும் நீரும்*** *- உலகங்களையும் கடல் களையும்;* ***உண்டான்*** *- உண்டவனான திருமாலின்;* ***உந்திக் கடல்*** *- நாபியாகிய கடலானது;* ***அயன்*** *- பிரமன்;* ***வண்டு ஆய்*** *- வண்டையொத்து (மேலே தங்கியிருந்து);* ***நான்மறை பாட*** *- நான்கு வேதங்களும் பாட;* ***மலர்ந்தது*** *- பூத்துள்ள;* ***ஒரு தாமரைப் போது*** *- ஒரு செந்தாமரை மலரை;* ***பூத்தது*** *- உண்டாக்கியது;* ***ஓதக் கடலும்*** *- (அதை நோக்கி இனி) அலைகளையுடைய கடலும்;* ***தான் வேறு ஓர்*** *- தான் வேறொரு;* ***வெண் தாமரையின் மலர்*** *- வெண்டாமரை மலரை;* ***பூத்தது ஒத்தது*** *- பூத்ததை ஒத்திருந்தது;* ***ஆழி வெண்திங்கள்*** *- கடலிலிருந்து தோன்றிய சந்திரன்.*

*அணி: தற்குறிப்பேற்றவணி. ' பசித்தான் போல்' - கடவுளின் எண்குணங்களுள் பசியின்மையும் ஒன்று. ஆயினும் அதை மறுப்பது போன்று பசித்தான் எனக் கூறினார். ஒப்பு நோக்குக: 'உறுபசி ஒன்று இன்றியே உலகு அடைய உண்டனையே' (சிலம்பு: ஆய்ச்சி. குரவை) உண்ணும் சோறு உலகமாகவும். பருகும் நீர் கடலாகவும். வண்டின் ரீங்காரம் நான் முகனது வேதப் பாடலாகவும் கொள்ள வேண்டும். திருமாலின் உந்திக் கடல் செந்தாமரை பூத்ததுபோல இக் கடல் வெண் தாமரை பூத்தது. கலை நிறைந்த சந்திரன் இதழ் விரிந்த வெண்தாமரை மலரை ஒக்கும்.*

***551.*** ***புள்ளிக் குறி இட்டென ஒள் மீன்***
***பூத்த வானம் பொலி கங்குல்***
***நள்ளில். சிறந்த இருட் பிழம்பை***
***நக்கி நிமிரும் நிலாக் கற்றை-***
***கிள்ளைக் கிளவிக்கு என்னாம்கொல்?***
***கீழ்ப்பால் திசையின்மிசை வைத்த***
***வெள்ளிக் கும்பத்து இளங் கமுகின்***
***பாளை போன்று விரிந்துளதால்.***

***புள்ளிக்குறி இட்டு என*** - *புள்ளிகளை அடையாளமாக இட்டாற்போல;* ***ஒள்மீன் பூத்த*** - *ஒளிமிக்க நட்சத்திரங்கள் விளங்குகின்ற;* ***வானம்*** - *ஆகாயத்திலே;* ***பொலி*** - *விளங்கும்;* ***கங்குல் நள்ளில்*** - *இரவின் நடுப்பொழுதில்;* ***சிறந்த இருள் பிழம்பை*** - *திரண்ட இருள் கூட்டத்தை;* ***நக்கி நிமிரும்*** - *உண்டு சிறக்கின்ற;* ***நிலாக் கற்றை*** - *நிலாத் தொகுதியானது;* ***கீழ்ப் பால் திசையின்*** - *கிழக்குத் திக்கிலே;* ***மிசை வைத்த*** - *மேலிடமாக வைக்கப்பட்ட;* ***வெள்ளிக் கும்பத்து*** - *வெள்ளிமயமான பூரணகும்பத்தின் பக்கத்திலுள்ள;* ***இளங் கமுகின் பாளை போன்று*** - *இளங் கமுகின் பாளையை ஒத்து;* ***விரிந்துளது*** - *பரவியுள்ளது;* ***கிள்ளைக் கிளவிக்கு*** - *(இது) கிளிமொழியாகிய சீதைக்கு;* ***என் ஆம் கொல்*** - *எத்தகையது ஆகுமோ?*

*தற்குறிப்பேற்றவணி. சந்திரனது நிலாக் கற்றை வெள்ளிக் கும்பத்தில் நாட்டிய வெண்பாளைக் கமுகு போன்றது என்றார். வெள்ளிக் கும்பம் - சந்திரனுக்கும். கமுகம் பாளை நிலாக் கற்றைக்கும் ஒப்பு. பூரண கும்பம் வைத்தலும். விரிந்த பாளைகளை அதில் அமைத்தலும் மலங்கலமாகும்.*

***552. வண்ண மாலைக் கைபரப்பி.***
***உலகை வளைந்த இருள் எல்லாம்***
***உண்ண எண்ணித் தண் மதியத்து***
***உதயத்து எழுந்த நிலாக் கற்றை.-***
***விண்ணும் மண்ணும் திசைஅனைத்தும்***
***விழுங்கிக்கொண்ட விரி நல்நீர்ப்***
***பண்ணை வெண்ணெய்ச் சடையன்தன்***
***புகழ்சூபால் - எங்கும் பரந்துளதால்.***

***வண்ணம் மாலை*** - *நிறமுள்ள ஒளிமிக்க மாலைப் பொழுதாகிய;* ***கை பரப்பி*** - *(தனது) கையை விரித்து நீட்டி;* ***உலகை வளைந்த*** - *உலகினைச் சூழ்ந்துள்ள;* ***இருள் எல்லாம்*** - *இருள் முழுவதையும்;* ***உண்ண எண்ணி*** - *உண்ணுவதற்கு எண்ணி;* ***தன் மதியத்து உதயத்து*** - *குளிர்ந்த சந்திரனின் உதய காலத்தில்;* ***எழுந்த*** - *வெளிப்பட்ட;* ***நிலாக் கற்றை*** - *நிலாத் தொகுதியானது;* ***விண்ணும் மண்ணும்*** - *விண்ணுலகமும் மண்ணுலகமும்;* ***திசை அனைத்தும்*** - *எல்லாத் திசைகளுமாகிய உலகம் முழுவதையும்;* ***வீழுங்கிகொண்ட*** - *(தன்னுடையதாக்கி) விழுங்கிய;* ***விரி நல் நீர்*** - *பரவிச் சிறந்த நீர் வளமுள்ள;* ***பண்ணை*** - *கழனிகள் வாய்ந்த;* ***வெண்ணெய்ச் சடையன் தன்*** - *திருவெண்ணெய் நல்லூரில் வாழ்கிற சடையப்ப வள்ளலின்;* ***புகழ்போல்*** - *புகழைப்போல;* ***எங்கும் பரந்துளது*** - *எங்கும் பரவியுள்ளது.*

*இருள் தொகுதியாகிய அரக்கர் கூட்டம் மாலைக் காலமாகிய கையைப்பரப்பி உலகம் முழுவதையும் வளைத்துக் கொண்டது. அவ் விருளை ஒழிக்கக் கருதிய சந்திரனின் நிலாக் கற்றையாகிய படை சடையன் புகழ் போல எங்கும் பரவியது என்றார். புகழை வெண்ணிறம் உடையதாக வருணித்தல் கவி மரபு. சடையப்ப வள்ளல் -சோழ நாட்டு வெண்ணெய் நல்லூர்த் தலைவர்.*

***553.	நீத்தம் அதனில் முளைத்து எழுந்த***
***நெடு வெண் திங்கள் எனும் தச்சன்.***
***மீ. தன் கரங்கள் அவை பரப்பி.***
***மிகுவெண் நிலவு ஆம் வெண்சுதையால்***
***'காத்த கண்ணன் மணி உந்திக்***
***கமல நாளத்திடைப் பண்டு***
***பூத்த அண்டம் பழையது' என்று***
***புதுக்குவானும் போன்றுளதால்.***

***நீத்தம் அதனில்*** *- கடலின் வெள்ளத்திலே;* ***முளைத்து எழுந்த*** *- உதித்து மேலெழுந்த;* ***நெடுவெண் திங்கள் எனும்*** *- மிக்க வெண்ணிறமுள்ள சந்திரன் என்கிற;* ***தச்சன்*** *- சிறந்த சிற்பி;* ***காத்த கண்ணன்*** *- காத்தளிக்கும் திருமாலின்;* ***மணி உந்திக் கமலம்*** *- அழகிய உந்தித் தாமரையின்;* ***நாளத்திடை*** *- நாளத்தின் இடமாக;* ***பண்டு பூத்த*** *- முன்பு தோன்றின;* ***அண்டம்*** *- அண்ட கோளமாகிய வீடு;* ***பழையது என்று*** *- (இப்பொழுது) பழையதாகி விட்டதென்று கருதி;* ***தன் கரங்கள் அவை*** *- தன் கதிர்களான கைகளை;* ***மீ பரப்பி*** *- மேலே பரப்பி;* ***மிகு வெள் நிலவு ஆம்*** *- மிக்க வெண்ணிலவான;* ***வெண்சுதையால்*** *- வெள்ளைச் சுண்ணாம்புச் சாந்தால்;* ***புதுக்குவானும்*** *- அதனைப் புதுப்பிப்பவன்;* ***போன்று உளது*** *- போன்றும் (உலகெங்கும்) நிலாக் கற்றை பரவி இருந்தது.*

*பழுதடைந்த வீட்டை முழுவெண் சாந்து பூசிப் புதுப்பித்தலும் தச்சன் தொழிலாற்று. வெண் சாந்து மங்கல வண்ணமாதலின் மங்கல நாளுக்கு முன் அவனிடமிருந்து பூத்த அண்ட கோளமாகிய வீடு வெள்ளையடித்துப் புதுப்பிக்கப்பட்டது போலும். தற்குறிப்பேற்றவணி. புதுக்குவான் - தொழிற் பெயர். நெடுந்தச்சன்: திருமாலினால் படைக்கப்பட்ட அண்ட கோளம் முழுவதையும் ஒரு வீடு போலக் கொண்டு தான் ஒருவனே புதிதாக ஆக்கவல்ல ஆற்றலுடைய சிற்பி எனலாம்.*

*தாமரை குவிய ஆம்பல் அலர்தல்*

***554.	விரை செய் கமலப் பெரும்போது.***
***விரும்பிப் புகுந்த திருவினொடும்***
***குரை செய் வண்டின் குழாம் இரிய.***
***கூம்பிச் சாம்பிக் குவிந்துளதால்; உரை செய் திகிரிதனை***
***உருட்டி. ஒரு கோல் ஒச்சி. உலகு ஆண்ட அரைசன் ஒதுங்க.***
***தலை எடுத்த குறும்பு போன்றது. அரக்கு ஆம்பல்.***

*(இவ்வாறு சந்திரன் உதித்தபொழுது)* **விரைசெய்** - மணங்கமழும்; **கமலப்பெரும்பொது** - பெரிய தாமரை மலர்; **விரும்பிப் புகுந்த** - விருப்பத்தோடு தன்னிடம் புகுந்த; **திருவினொடும்** - திருமகளுடன்; **குரை செய்** - ஒலிக்கும்; **வண்டின் குழாம் இரிய** - வண்டுகளின் கூட்டமும் *(தன்னை விட்டு)* நீங்கி போகும்படி; **கூம்பி** - இதழ் குவிந்து; **சாம்பி** - வாடி; **குவிந்ததுளது** - மூடிக்கொண்டுள்ளது; **அரக்கு ஆம்பல்** - செவ்வாம்பல் பூவானது; **உரைசெய் திகிரிதனை** - புகழப்படும் *(ஆணைச்)* சக்கரத்தை *(எங்கும் தடையில்லாதபடி)*; **உருட்டி** - சுழலச் செய்து; **ஒரு கோல்ஓச்சி** - ஒப்பற்ற செங்கோலைச் செலுத்தி; **உலகு ஆண்ட** - உலகமுழுதும் ஆட்சி செய்து வந்த; **அரசன் ஒதுங்க** - அரசன் ஒழிந்த அளவில்; **தலையெடுத்த** - *(வீறுடன்)* தலையெடுத்த; **குறும்பு** - குறுநில மன்னனை; **போன்றது** - போல மலர்ந்தது. கதிரவன் மறைந்த அளவில் தாமரை குவிதலும். ஆம்பல் மலர்தலுமாகிய இயல்பு வருணிக்கப்பட்டது. ஒற்றைத் தேராழியை உருட்டி ஒப்பற்ற கதிரை வீசி உலகம் முழுவதும் ஆண்ட சூரியன் மறைந்தது. அதனால் ஆம்பல் பூக்கள் மலர்ந்தன. *'சீர் அரசாண்டு தன் செங்கோல் சிலநாள் செலீஇக் கழிந்த. பார் அரசு ஒத்து மறைந்தது ஞாயிறு'* - நாலா. திருவிருத்.*80*

*75*

*சீதை திங்களைப் பழித்தல்*

***555.** 'நீங்கா மாயை அவர் தமக்கு*
*நிறமே தோற்றுப் புறமே போய்.?*
*ஏங்காக் கிடக்கும் எறி கடற்கும்.*
*எனக்கும். கொடியை ஆனாயே-*
*ஓங்கா நின்ற இருளாய் வந்து.*
*உலகை விழுங்கி. மேன்மேலும்*
*வீங்கா நின்ற கரு நெருப்பின்*
*இடையே எழுந்த வெண் நெருப்பே!**

**ஓங்கா நின்ற** - வளர்கின்ற; **இருள் ஆய்** - இருளின் வடிவமாய்; **வந்து** - வந்து; **உலகை விழுங்கி** - உலக முழுவதையும் கவர்ந்து; **மேன் மேலும்** - மேலும் மேலும்; **வீங்கா நின்ற** - வளர்ச்சி அடையும்; **கரு நெருப்பின் இடையே** - கரிய தீயின் இடையே; **எழுந்த** - தோன்றும்; **வெண்நெருப்பே** - வெண்ணிறமுள்ள நெருப்பே; **நீங்காமாயை** - நீங்காத மாயையை; **அவர் தமக்கு** - செய்து வரும் அந்த உத்தமனுக்கு; **நிறமே தோற்று** - நிறத்தால் தோல்வியுற்று; **புறமே போய்** - *(உலகிற்குப்)* புறம்பாகச் சென்று; **ஏங்காக் கிடக்கும்** - ஏங்கிக் கிடக்கின்ற; **எறி கடற்கும்** - அலை வீசுகிற கடலுக்கும்; **எனக்கும்** - *(காம வேதனையால் வருந்தும்)* எனக்கும்; **கொடியயை ஆனாயே** - *(நீ)* கொடுஞ்சொல் புரிவாய் ஆயினை

*பிரிந்தவர்களுக்குத் தென்றல். சந்திரன் ஆகியவை காதல் நோயை மிகுவிக்கும் பொருள்கள் துயரத்தை விளைத்தலால் அன்னவர் அவற்றை வெறுத்துக் கூறுதல் இயற்கை. சந்திரன்: தன் காம வேதனையை மிகச் செய்தும். கடலைப் பொங்கச் செய்தும் அலைத்தலால் சந்திரனை நோக்கிக் 'கடற்கும்' எனக்கும் கொடியை ஆனாயே' என்றாள் சீதை. ஏங்காக் கிடத்தல்: (சிலேடையாக) ஒலித்தல் ஏங்கிக் கிடத்தல். 'மாயை யவர்தமக்கு நிறமே தோற்று' - கடலின் கரு நிறத்தைக் காட்டிலும் இராமனது திருமேனி நிறமே மிகக் கறுத்துள்ளது.*

**கலி விருத்தம்**

***556. 'கொடியை அல்லை: நீ யாரையும் கொல்கிலாய்;***
***வடு இல் இன் அமுதத்தொடும். வந்தனை.***
***பிடியின் மென்நடைப் பெண்ணொடு; என்றால். எனைச்***
***சுடுதியோ? - கடல் தோன்றிய திங்களே!***

***கடல் தோன்றிய*** *- கடலிலிருந்து உதித்த;* ***திங்களே*** *- சந்திரனே!;* ***நீ கொடியை அல்லை*** *- நீ இயற்கையில் கொடியவன் அல்லன்;* ***யாரையும் கொல்கிலாய்*** *- (அது எவ்வாறு எனில்) உலகத்தில் எவரையும் கொல்கின்றாய் இல்லை;* ***வடு இல்*** *- (தவிர நீ) குற்றமற்ற;* ***இன் அமுதத்தொடும்*** *- இனிய அமுதத்துடனும்;* ***பிடியின் மென்னடை*** *- பெண்யானை போன்ற நடையுடைய;* ***பெண்ணொடும்*** *- திருமகளுடனும்;* ***வந்தனை*** *- பிறந்தாய்;* ***என்றால்*** *- இவ்வாறு இருப்பதால்;* ***எனைச் சுடுதியோ*** *- என்னைச்சுடுவதும் தக்கதோ?*

*'சந்திரனே! நீ எல்லோரையும் கொல்லும் தன்மையை இயற்கையாகப் பெற்றாய் இல்லை; ?ஏனெனில் கடலினின்று தோன்றியவன் ஆதலால் இயல்பாகவே குளிர்ச்சி பொருந்தியவன்; அமுதத்தோடு பிறந்தவனாதலால் பெண்ணிடம் அன்பு வைக்கத் தக்கவன். அவ்வாறு இருக்க நீ பெண்ணாகிய என்னை வருத்துவது முறையோ' என்கிறாள் சீதை.*

***காதல் நோயால் சீதை பட்ட துன்பம*** ◌ஂ

***557. மீது மொய்த்து எழு வெண் நிலவின் கதிர்***
***மோது மத்திகை மென் முலைமேல் பட.***
***ஓதிமப் பெடை வெங் கனல் உற்றென.***
***போது மொய்த்த அமளிப் புரண்டாள் அரோ!***

***மீது*** *- வானில்;* ***மொய்த்து எழு*** *- நெருங்கி எழுகின்ற;* ***நிலவின் கதிர்*** *- வெண்ணிலாவின் கதிர்களாகிய;* ***மோது மத்திகை*** *- அடிக்கும் சம்மட்டி;* ***மென்முலை மேல் பட*** *- தன் மெல்லிய தனங்கள் மேல் படுதலால்;* ***ஓதிமப் பெடை*** *- (சீதை) பெண் அன்னம்;* ***வெம்கனல் உற்றென*** *- கொடிய நெருப்பிலே அகப்பட்டுதுபோல;* ***போது மொய்த்த*** *- தாமரை மலர்கள் நிறைந்த;* ***அமளி புரண்டாள்*** *- படுக்கையில் விழுந்து புரண்டாள்.*

*சந்திரனைச் சம்மட்டி என்றதால் மென்முலை அதை எறிதற்குரிய பட்டடை ஆயிற்று. போது மொய்த்த அமளி அவளுக்குத் தீ பரப்பிய குண்டமாயிற்று. தற்குறிப்பேற்றவணி. தாமரை மலர்ப் படுக்கையில் சீதை புரண்டதற்கு ஒப்புமை அமையப் பெடையன்னம் நெருப்பிலே பொருந்தியது போலும் என்றார்.*

***558. நீக்கம் இன்றி நிமிர்ந்த நிலாக் கதிர்***
***தாக்க. வெந்து தளர்ந்து சரிந்தனள்;***
***சேக்கை ஆகி மலர்ந்த செந்தாமரைப்***
***பூக்கள் பட்டது அப் பூவையும் பட்டனள்.***

***நிக்கமின்றி*** *- நீங்குதல் இல்லாமல்;* ***நிமிர்ந்த*** *- (எங்கும்) பரவிய;* ***நிலாக்கதிர்*** *- கந்திரனின் ஒளிக்கதிர்;* ***தாக்க*** *- தாக்குவதால்;* ***வெந்து*** *- (சீதை) உடல் வெதும்பி;* ***தளர்ந்து*** *- (மனம்) தளர்ந்து;* ***சரிந்தனள்*** *- கீழே விழுந்தாள்;* ***சேக்கை ஆகி*** *- (முன்பு அவளுக்கு) தங்கும் இடமாகி;* ***மலர்ந்த*** *- விரிந்த;* ***செந்தாமரைப் பூக்கள்*** *- செந்தாமரை மலர்கள் (இரவில் அச்சீதைக்குப் படுக்கை மெத்தையாய்);* ***பட்டது*** *- அவள் புரண்டபோது அவளது காமச் சூட்டினால் அடைந்த நிலைமகளை;* ***அப் பூவையும்*** *- அச் சீதையும்;* ***பட்டனள்*** *- அடையலானாள்;*

*முன்பு சீதைக்குத் தங்கும் இடமாகி மலர்ந்த செந்தாமரை இப்பொழுது பள்ளியணையாய்க் காமவேதனையால் புரண்டபோது துன்பம் தந்தது என்க. தாமரைப் பூக்கள் பட்ட தன்மை: கூம்பிச் சாம்பிப் பொலிவிழந்து வாடி ஒடுங்கியமை. பூவை: உவமையாகுபெயர்.*

***559. வாச மென் கலவைக் களி வாரி. மேல்***
***பூச பூசப் புலர்ந்து புழுங்கினாள்;***
***வீச வீச வெதும்பினள். மென் முலை.-***
***ஆசை நோய்க்கு மருந்தும் உண்டாம்கொலோ?***

***மென்முலை*** *- மென்மையான தனங்களையுடைய சீதை;* ***வாசம் மெல்*** *- மணமும் மென்மையும் வாய்ந்த;* ***கலவைக்களி*** *- கலவைச் சந்தனக்குழம்பை;* ***வாரி*** *- அள்ளிக்கொண்டு;* ***மேல் பூசப் பூச*** *- (தோழிமார்) தன்னுடலில் பூசுந்தோறும்;* ***புலர்ந்து*** *- உடம்பு வெதும்பி;* ***புழுங்கினள்*** *- தவித்தாள்;* ***வீச வீச வெதும்பினள்*** *- (ஆல வட்டம் முதலியவற்றால்) வீசுந்தோறும் (சீதை) வெப்பம் அடைந்தாள்;* ***ஆசை நோய்க்கு*** *- காம நோயைத் தீர்க்க;* ***மருந்தும் உண்டாம்*** *- கொல் மருந்தும் உலகில் உண்டோ?*

*காம வேதனையால் வாடும் சீதையின் வெப்பத்தைத் தணிக்கத் தோழியர் செய்யும் பரிகாரம் யாவும் அவளுக்கு மேலும் வெப்பத்தை வளர்த்தன என்பதாம். ஆசை நோய்க்கு வேறு பரிகாரம் இல்லை: 'மருந்து பிறிதில்லை யானுற்ற நோய்க்கே' (நற்.80) மென்முலை: அன்மொழித்தொகை. வேற்றுப் பொருள் வைப்பணி.*

*மலர்ப்படுக்கை வெம்மையால் கரிந்துபோதல்*

***560.	தாயரின் பரி சேடியர். தாது உகு
வீ. அரித் தளிர். மெல்அணை. மேனியில்
காய் எரிக் கரியக் கரிய. கொணர்ந்து.
ஆயிரத்தின் இரட்டி அடுக்கினார்.***

**மேனியில்** - *(சீதையின்) திருமேனியில்;* **காய்** - *எரியும்;* **எரி** - *காமத் தீயினால்;* **தாது உகு வீ** - *மகரந்தப் பொடிகள் சிந்தப்பெற்ற மலர்களைக் கொண்டும்;* **அரித்தளிர்** - *மெல்லிய தளிர்களைக்கொண்டும்;* **மெல் அணை** - *(அமைக்கப்பட்ட) மெல்லிய அவளுடைய படுக்கை மெத்தைகள்;* **கரியக் கரிய** - *கருகிக்கொண்டேயிருக்க;* **தாயரின் பரி சேடியர்** - *தன்னைப் பெற்ற தாயரைவிட மிக்க அன்பு காட்டும் (சீதையின்) தோழியர்;* **ஆயிரத்தின் இரட்டி** - *இரண்டாயிரம் படுக்கை மெத்தைகளை;* **கெணர்ந்து** - *(ஒன்றன்பின் ஒன்றாகக்) கொண்டு வந்து;* **அடுக்கினார்** - *மேன்மேல் அடுக்கி அமைத்தார்கள்.*

*தோழியர் அன்போடு படுக்கைகளை அடிக்கடி மாற்றிக் கொண்டே இருந்தார்கள். ஆயிரத்து இரட்டி மிகப்பல. அரித்தளிர் அடர்த்தியை உடைய தளிர். பொன்னிறமான தளிர். ஒளியுள்ள தளிர்.*

***561.	கன்னி நல் நகரில். கமழ் சேக்கையுள்.
அன்னம். இன்னணம் ஆயினள்; ஆயவள்.
மின்னின் மின்னிய. மேனி கண்டான் எனச்
சொன்ன அண்ணலுக்கு உற்றது சொல்லுவாம்.***

**கன்னி நல் நகரில்** - *அழகிய கன்னி மாடத்தில்;* **கமழ் சேக்கையுள்** - *மணம் வீசும் மலர்ப்பள்ளி மெத்தையில்;* **அன்னம்** *-அன்னப்பெடை போன்ற சீதை;* **இன்னம் ஆயினள்** - *இவ்வாறு காம வேதனை அடையலானாள்;* **ஆயவள்** - *(இனி) அச்சீதையினது;* **மின்னின் மின்னிய மேனி** - *மின்னலைப் போல விளங்கும் திருமேனியை;* **கண்டான் எனச் சொன்ன** - *பார்த்தான் என்று மேலே கூறிய;* **அண்ணலுக்கு** - *இராமனுக்கு;* **உற்றது** - *உற்ற நிலைமைகளை;* **சொல்லுவோம்** - *(இனிக்கூறத்) தொடங்குவோம்.*

*கன்னி மாடம் பெரிய நகரம் போல் விளங்கியதால் 'கன்னி நன்னகர்' என்றார். மின்னிய மேனியை - பெயரெச்சம். விசுவாமித்திரர் முதலிய மூவரும் சனகன் எதிர்கொள்ளச் சென்று மாளிகையில் தங்குதல்*

***562.	ஏகி. மன்னனைக் கண்டு. எதிர் கொண்டு அவன்
ஓகையோடும் இனிது கொண்டு உய்த்திட.
போக பூமியில் பொன்னகர் அன்னது ஓர்
மாக மாடத்து. அனைவரும் வைகினார்.***

***அனைவரும்*** - *(விசுவாமித்திரன் முதலிய) அம்மூவரும்;* ***ஏகி*** - *அரசனது அரண்மனைக்குள் சென்று;* ***மன்னனை*** - *சனகராசனை;* ***கண்டு*** - *பார்த்து;* ***அவன்*** - *அவ்வரசன்;* ***ஓகையோடும்*** - *மகிழ்ச்சியுடன்;* ***எதிர்கொண்டு*** - *எதிரில் வந்து உபசரித்து;* ***இனிது*** - *இனிமையாக;* ***கொண்டு*** - *அழைத்துக்கொண்டு போய்;* ***போக பூமியில்*** - *(அதன்பின்) இன்ப பூமியான;* ***பொன் நகர் அன்னது*** - *அமராவதியில் உள்ள ஆடக மாடம் போலச் சிறந்த;* ***ஓர் மாக மாடத்து*** - *ஒரு வான் அளாவிய மாளிகையில்;* ***உய்த்திட*** *-சேர்ப்பிக்க;* ***வைகினார்*** - *(அங்கே) தங்கினார்கள்.*

*பொன்னகர் - பொன்மயமான மாளிகை; ஆடகமாடம் என்பர். 83*

*சதானந்த முனிவர் வந்து முகமன் உரைத்தல்*

***563. வைகும் அவ் வழி. மா தவம் யாவும் ஓர்***
***செய்கை கொண்டு நடந்தென. தீது அறு***
***மொய் கொள் வீரன் முளரி அம் தாளினால்***
***மெய் கொள் மங்கை அருள் முனி மேவினான்.****

***தீது அறு*** - *குற்றம் இல்லாத;* ***மொய்கொள் வீரன்*** - *வலிமையுள்ள வீரனான இராமனது;* ***முளரி அம் தாளினால்*** - *செந்தாமரை போலும் திருவடித் துகளால்;* ***மெய்கொள் மங்கை*** - *பழைய உண்மை வடிவம் அடைந்த அகலிகை;* ***அருள்*** - *பெற்றருளிய;* ***முனி*** - *சதானந்த முனிவன்;* ***வைகும் அவ்வழி*** - *அவர்கள் தங்கிய மாளிகையிடத்தில்;* ***மாதவம் யாவும்*** - *பெருந்தவங்கள் எல்லாம்;* ***ஓர் செய்கை கொண்டு*** - *சீலமாகிய ஓர் உருவம் கொண்டு;* ***நடந்து என*** - *நடந்து வந்தது போல;* ***மேவினான்*** - *வந்தான். கௌதம முனிவனுக்கும் அகலிகைக்கும் பிறந்தவன் சதானந்த முனிவன். அவன் விசுவாமித்திரன் முதலியோர் வருகையை யறிந்து அவர்கள் தங்கிய மாளிகைக்குச் சென்றான். இவன் சனக அரசனது புரோகிதன். செய்கை - சீலம். ஒழுக்கம்.*

***564. வந்து எதிர்ந்த முனிவனை வள்ளலும்***
***சிந்தை ஆர வணங்கலும். சென்று எதிர்.***
***அந்தம் இல் குணத்தான் நெடிது ஆசிகள்***
***தந்து. கோசிகன்தன் மருங்கு எய்தினான்.***

***வந்து எதிர்ந்த*** - *(இங்ஙனம்) வந்து தோன்றிய;* ***முனிவனை*** - *அம் முனிவனை;* ***வள்ளலும்*** - *வரையாது அருள் செய்யும் இராமனும்;* ***சிந்தை ஆர*** - *மனம் மகிழ;* ***வணங்கலும்*** - *அடி வீழ்ந்து வணங்கியபின்;* ***அந்தம் இல் குணத்தான்*** - *எல்லையற்ற நற்குணங்கள் வாய்ந்த அச் சதானந்த முனிவன்;* ***ஆசிகள் நெடிது தந்து*** - *(இராமனுக்கு) ஆசி மொழிகள் மிகுதியும் கூறி;* ***சென்று எதிர்*** - *(தன்னை) எதிர்கொண்ட;* ***கோசிகன் தன் மருங்கு*** - *விசுவாமித்திரன் அருகில்;* ***எய்தினான்*** - *அடைந்தான்.*

*வள்ளல்: அகலிகைக்கு அருள் செய்தமை கருதியது.*

***565. கோதமன் தரு கோ முனி கோசிக***
***மாதவன்தனை மா முகம் நோக்கி. 'இப்***
***போது நீ இவண் போத. இப் பூதலம்***
***ஏது செய்த தவம்?' என்று இயம்பினான்.****

**கோதமன் தரு** - *கௌதம முனிவன் பெற்று அருளிய;* **கோ முனி** - *முனிவர் தலைவனான சதானந்தன்* *மாதவன் கோசிகன் தனை* - *பெருந் தவத்தையுடைய கௌசிக முனிவனது* *மாமுகம் நோக்கி* - *திருமுகத்தைப் பார்த்து இப்போது நீ இவண்* - *இப்பொழுது நீங்கள் இவ்விடம் போத - வருமாறு இப் பூதலம்* - *இந்த மிதிலை நகரம்;* **செய்த தவம்** - *பண்ணிய தவம்;* **ஏது** - *யாதோ;* **என்று இயம்பினான்** - *என்று உபசார மொழிகளைக் கூறலானான்.*

*விசுவாமித்திரன் இராமனது பெருமை பேசுதல்*

***566. பூந் தண் சேக்கைப் புனிதனையே பொரு***
***ஏய்ந்த கேண்மைச் சதானந்தன் என்று உரை***
***வாய்ந்த மா தவன் மா முகம் நோக்கி. நூல்***
***தோய்ந்த சிந்தைக் கௌசிகன் சொல்லுவான்:****

**தண் பூச் சேக்கை** - *குளிர்ந்த தாமரை ஆசனத்தையுடைய;* **புனிதனையே** - *தூய குணமுள்ள பிரமனை;* **பொரு ஏய்ந்த** - *ஒத்துள்ளவனும்;* **கேண்மை** - *எல்லரிடத்திலும் நட்புடையவனுமான;* **சதானந்தன் என்று உரை** - *சதானந்தன் என்று சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற;* **வாய்ந்த மா தவன்** - *பெருமுனிவனது;* **மாமுகம் நோக்கி** - *சிறந்த திருமுகத்தைப் பார்த்து;* **நூல் தோய்ந்த** - *கலைகளிலே ஆழ்ந்த;* **சிந்தையின் கௌசிகன்** - *மனத்தையுடைய விசுவாமித்திரன்;* **சொல்லுவான்** - *(பின் வருமாறு) சொல்ல முற்படுவான்.*

*முனிவனுக்குப் பிரமன் உவமை. 1. வேதம் ஓதுவதில் 2. நல்லொழுக்கத்தில். 3. பெருந்தவமுடைமையில். 4. பிராமணர்க்குத் தலைம பூணுவதில். சதானந்தன்: மிகுதியான ஆனந்தத்தை உடையவன். நூல் தோய்ந்த சிந்தை: அனைத்துக் கலைகளையும் முழுவதும் உணர்ந்த மனம்.*

***567. 'வடித்த மாதவ! கேட்டி இவ் வள்ளல்தான்***
***இடித்த வெங் குரல் தாடகை யாக்கையும்..***
***அடுத்து என் வேள்வியும். நின் அன்னை சாபமும்.***
***முடித்து. என் நெஞ்சத்து இடர் முடித்தான்' என்றான்.***

***வடித்த மாதவ*** - *தெளிந்து செய்த பெரிய தவமுனிவரே;* **கேட்டி** - *(நான்கூறுவதைக்) கேட்பீராக;* **இவ்வள்ளல்தான்** - *இந்த வள்ளலான இராமன்;* **இடித்த வெம்குரல்** - *இடிபோன்ற குரலுடைய;* ***தாடகை யாக்கையும்*** - *தாடகை என்னும் அரக்கியின் உடம்பையும்;* **என் வேள்வியும்** - *என் யாகத்தையும்;* ***நின் அன்னை சாபமும்*** - *உன் தாயான அகலிகையின் சாபத்தையும்;* ***அடுத்து முடித்து*** - *ஒன்றன்பின் ஒன்றாக முடித்து;* ***என் நெஞ்சத்து*** - *என் நெஞ்சில் கிடந்த;* **இடர்முடித்தான்** - *துயரங்களைத் தீர்த்து வைத்தவன் ஆவான்.*

*மூவகை முடித்தல்களைச் செய்தவன் இராமன்: 1. தாடகையைக் கொன்று முடித்தல். 2. வேள்வியை முடித்தது. 3. அகலிகையின் சாபம் ஒழித்து நீக்கியது. முடித்தல் என்ற சொல் பல பொருளில் வந்தது. சொற் பின்வரு நிலையணி.*

*சதானந்தர் கோசிகனைப் பாராட்டுதல்*

***568. என்று கோசிகன். கூறிட. ஈறு இலா***
***வன் தபோதனன். 'மா தவ! நின் அருள்***
***இன்றுதான் உளதேல். அரிது யாது. இந்த***
***வென்றி வீரர்க்கு?' எனவும் விளம்பி. மேல்.***

***என்று கோசிகன் கூறிட*** - *என்று விசுவாமித்திரன் சொன்ன அளவில்;* ***ஈறு இலா*** - *எல்லையற்ற;* **வன் தபோதனன்** - *கடுந்தவத்தையுடையவனான சதானந்த முனிவன்;* **மாதவ** - *(விசுவாமித்திரனை நோக்கி) மிக்க தவமுடையவரே;* **நின் அருள்** - *உமது கருணை;* **இன்று உளதேல்** - *(இக்குமரர்களிடம்) இப்பொழுது இருப்பதனால்;* **இந்த வென்றி வீரர்க்கு** - *வெற்றி வீரராகிய இந்த இராம லக்குவர்க்கு;* **அரிது** - *செய்யமுடியாத அருஞ்செயல்;* ***யாது*** - *என்ன இருக்கின்றது (ஒன்றுமில்லை);* **எனவும் விளம்பி** - *என்றும் கூறி;* **மேல்** - *மேலும்;*

*தபோதனன்: யாவரும் செல்வத்தை விரும்பிப் பாதுகாப்பது போலத் தன் தவத்தை விரும்பிப் பாதுகாக்கும் முனிவன்.*

*இராமனுக்குச் சதானந்தர் உரைத்த விசுவாமித்திரர் வரலாறு.*

***569. எள் இல் பூவையும். இந்திர நீலமும்.***
***அள்ளல் வேலையும். அம்புத சாலமும்.***
***விள்ளும் வீயுடைப் பானலும். மேவும் மெய்***
***வள்ளல்தன்னை மதிமுகம் நோக்கியே.****

***எள் இல் பூவையும்*** - பழிப்பதற்கு இடமில்லாத காயாமலரையும்; ***இந்திர நீலமும்*** - இந்திர நீல இரத்தினத்தையும்; ***அள்ளல் வேலையும்*** - சேறுள்ள கடலையும்; ***அம்புத சாலமும்*** - மேகக் கூட்டத்தையும்; ***விள்ளும் வீ உடை*** - மலர்ந்த பூக்களைக் கொண்ட; ***பானலும்*** - நீலோற்பலத்தையும்; ***மேவும்*** - உவமையாகப் பொருந்திய; ***மெய்*** - திருமேனியுடைய; ***வள்ளல்தன்னை*** - இராமனது; ***மதிமுகம் நோக்கி*** - சந்திரன் போன்ற திருமுகத்தைப் பார்த்து.

*விசுவாமித்திரன் அரசனாய் ஆண்டமை*

***570. ‘நறு மலர்த் தொடை நாயக! நான் உனக்கு***
***அறிவுறுத்துவென். கேள்; இவ் அருந் தவன்***
***இறை எனப் புவிக்கு ஈறு இல் பல் ஆண்டு எலாம்***
***முறையினின் புரந்தே அருள் முற்றினான்.***

***நறுமலர்த் தொடை*** - மணமுள்ள மலர்களால் ஆகிய மாலையை அணிந்த; ***நாயக*** - தலைவனே! நான் உனக்கு - உனக்கு நான்; ***அறிவுறுத்துவென்*** - (ஒரு செய்தியை) தெரிவிக்கிறேன்; ***கேள்*** - (அதனை) கேட்பாயாக!; ***இவ் அருந்தவன்*** -இந்த அரிய தவமுனிவனான கௌசிகன்; ***புவிக்கு இறையென*** - (முதலில்) நிலவுலகத்திற்கு ஓர் அரசனாகி; ***ஈறு இல்*** - எல்லையில்லாத; ***பல் ஆண்டு எலாம்*** - பல ஆண்டுகள் அளவும்; ***முறையினின் புரந்து*** - அரச நீதிப்படி பாதுகாத்து; ***அருள் முற்றினான்*** - (உயிர்களிடம்) கருணை நிரம்பி இருந்தான்.

*வேட்டைமேல் காடு சென்ற அரசன்*

*வசிட்டனைச் சார்தல்*

***571. ‘அரசின் வைகி அறனின் அமைந்துழி.***
***விரசு கானிடைச் சென்றனன். வேட்டைமேல்;***

***உரைசெய் மா தவத்து ஓங்கல் வசிட்டனாம்***
***பரசு வானவன்பால் அணைந்தான்அரோ.***

***அறனின் அமைந்துழி*** - அறநெறியிலே அமைந்து; ***அரசின் வைகி*** - (இங்ஙனம் இவன்) அரசாட்சியிலே பொருந்தி வருங்கால்; ***வேட்டைமேல்*** - (ஒரு நாள்) வேட்டையின் நிமித்தம்; ***விரசு கானிடைச் சென்றனன்*** - அடர்ந்த காட்டினிடையே சென்று; ***உரைசெய்*** - சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற; ***மா தவத்து ஓங்கல்*** - தவத்திலே மேம்பட்ட; ***வசிட்டன் ஆம்*** - வசிட்டமுனிவனாகிய; ***பரசுவான்*** - யாவராலும் துதிக்கப்படுகிற; ***அவன்பால்*** - அந்த முனிவனிடத்தில்; ***அணைந்தான்*** - சேர்ந்தான்.

*வசிட்டன் சுரபிமூலம் விருந்து அளித்தல்*

**அறுசீர் விருத்தம்**

*572.* ***'அருந்ததி கணவன் வேந்தற்கு***
***அருங் கடன் முறையின் ஆற்றி.***
***''இருந்தருள் தருதி'' என்ன.***
***இருந்துழி. ''இனிது நிற்கு***
***விருந்து இனிது அமைப்பென்'' என்னா.***
***சுரபியை விளித்து. ''நீயே***
***சுரந்தருள் அமிர்தம்'' என்ன.***
***அருள்மறை சுரந்தது அன்றே.***

***அருந்ததி கணவன்*** - *(அப்பொழுது) அருந்ததி கணவனான வசிட்டமுனிவன்;* **வேந்தற்கு** - *(இந்தக்) கௌசிக முனிவனுக்கு;* ***அருங் கடன்*** - *செய்வதற்கு அரிய உபசாரக் கடமைகளை;* ***முறையின் ஆற்றி*** - *முறை தவறாமல் செய்து;* **இருந்து** - *(நீர் இங்கே) தங்கியிருந்து செல்ல;* ***அருள் தருதி என்ன*** - *கருணை செய்க என்று கேட்டுக்கொள்ள;* **இருந்த உழி** - *(கௌசிகன் அவ்வாறே அவ்விடம்) இருந்தபொழுது;* **இனி நிற்கு** - *இனி உமக்கு;* **விருந்து இனிது** -*விருந்திட்டு இனிதாக;* **அமைப்பென் என்னா** - *உபசரிப்பேன் என்று கூறி;* ***சுரபியை விளித்து*** - *(உடனே) காம தேனுவை அழைத்து;* ***நீயே அமிர்தம் சுரந்து அருள் என்ன*** - *அமுதம் (போன்ற உணவு முதலியவற்றை) நீயே இவருக்கு இப்போது சுரந்து அளிப்பாயாக என்று நியமிக்க;* ***அருள் முறை*** - *(அத் தெய்வப் பசு) வசிட்டன் அருளியபடியே;* ***அன்றே*** - *அப்பொழுதே (உணவு முதலிய உபசாரப் பண்டங்களை);* ***சுரந்தது*** - *சுரந்து அளித்தது.*

*அருந்ததி:* ***வசிட்டரின் மனைவி; கற்பு நிலையில் மிக மேம்பட்டவள்; கற்புத் தன்மைக்கு இவளையே உவமையாகக் கொள்வர்.***
***சுரபி - காமதேனு - இது பாற்கடலைக் கடைந்த காலத்து அதனினின்று தோன்றியது; வேண்டுகின்றவர் வேண்டு பொருள் அனைத்தையும் உடனே சுரந்து அளிப்பது.***

*573.* ***''அறு சுவைத்து ஆய உண்டி.***
***அரச! நின் அனிகத்தோடும்***
***பெறுக!'' என அளித்து. வேந்தோடு***
***யாவரும் துய்த்த பின்றை.***
***நறு மலர்த் தாரும் வாசக்***
***கலவையும் நல்கலோடும்.***
***உறு துயர் தணிந்து. மன்னன்***
***உய்த்து உணர்ந்து உரைக்கலுற்றான்.***

*(வசிட்டன் கோசிகனை நோக்கி)* ***அரச*** - *மன்னவ!;* ***அறு சுவைத்து ஆய உண்டி*** - *அறுசுவைகளோடு கூடிய இந்த உணவுகளை;* ***நின் அனிகத்தோடும்*** - *நும்சேனகைளுடன்;* ***பெறுக*** - *பெற்று உண்பீராக;* ***என*** - *என்று சொல்லி;* ***அளித்து*** - *(காமதேனு சுரந்தவற்றை யெல்லாம்) அருளொடு கொடுத்து;* ***வேந்தோடு யாவரும்*** - *கோசிகனும் படையினரும்;* ***துய்த்த பின்றை*** - *உண்ட பின்னர்;* ***நறுமலர்த் தாரும்*** - *நறு மணமுள்ள பூமாலைகளையும்;* ***வாசக் கலவையும்*** - *மணமிக்க கலவைச் சந்தனமும்;* ***நல்கலோடும்*** - *யாவர்க்கும் அளித்து உதவ;* ***மன்னன்*** - *இந்த விசுவாமித்திரன்;* ***உறுதுயர் தணிந்து*** - *தாம் அடைந்திருந்த களைப்புத் தீர்ந்தபின்;* ***உய்த்து உணர்ந்து*** - *ஆராய்ந்து உணர்ந்தவராய்;* ***உரைக்கல் உற்றான்*** - *(வசிட்டனை நோக்கி ஒரு வார்த்தை) சொல்லத் தொடங்கினான்.*

*அறுசுவை: உப்பு. புளிப்பு. துவர்ப்பு. தித்திப்பு. கார்ப்பு. கைப்பு என்பன. உறுதுயர்; வழிநடையாலும். வேட்டைத் தொழிலாலும் நேர்ந்த இளைப்பு.*

*சுரபியை அரசன் விரும்புதலும் முனிவர் விடையும்*

***574.*** ***''மாதவ! எழுந்திலாய். நீ;***
***வயப்புடைப் படைகட்கு எல்லாம்***
***கோது அறும் அமுதம் இக் கோ***
***உதவிய கொள்கைதன்னால்.***
***தீது அறு குணத்தால் மிக்க***
***செழு மறை தெரிந்த நூலோர்.***
***'மே தகு பொருள்கள் யாவும்***
***வேந்தருக்கு' என்கைதன்னால்.***

***மாதவ*** - *பெருந்தவ முனிவரே!;* ***நீ எழுந்திலாய்*** - *நீவிர் (உமது இருப்பிடத்தை விட்டு) எழுந்தீருமில்லை;* ***(இப்படி இருக்க) இக்கோ*** *-இந்தத் தெய்வப் பசு;* ***கோது அறும் அமுதம்*** - *குற்றமற்ற நல்ல உணவுகளை;* ***வயப் புடை*** - *வெற்றிதரும்;* ***படை கட்கு எல்லாம்*** - *சேனைகள் எல்லாவற்றிற்கும்;* ***உதவிய*** - *கொடுத்து உதவிய;* ***கொள்கை தன்னால்*** - *சிறப்பு உடைமையாலும்;* ***தீது அறு குணத்தால்*** - *குறைவில்லாத நற்குணங்களால்;* ***மிக்க செழுமறை*** - *மிக்கவர்களும் சிறந்த வேதங்கள் முதலிய;* ***தெரிந்த நூலோர்*** - *கலைகளை அறிந்தவர்களும் ஆன பெரியோர்கள்;* ***மேதகு பொருள்கள்*** - *மேன்மையுள்ள பொருள்கள்;* ***யாவும் வேந்தருக்கு*** - *எல்லாம் அரசருக்கே;* ***என்கை தன்னால்*** - *உரியன என்று சொல்லுவதனாலும்.*

*'சிறந்த பொருளைக் கொள்வதற்கு உரியவன் அரசன்' மறைக்குச் செழுமை. அறம் பொருள். இன்பம். வீடு என்னும் நாற்பயன்களையும் அளிக்கும் வன்மை.*

575. ''நிற்கு இது தகுவது அன்றால்.
நீடு அருஞ் சுரபிதன்னை
எற்கு அருள்'' என்றலோடும்.
இயம்பலன் யாதும்; பின்னர்
''வற்கலை உடையென் யானோ
வழங்கலென்; வருவதுஆகின்.
கொற் கொள்வேல் உழவ! நீயே
கொண்டு அகல்க!'' என்று கூற.

**நிற்கு** -உனக்கு; **இது** - இப் பசு; **தகுவது அன்று** -தகுதியுடையது அன்று; **ஆல்** - (அதனால்); **நீடு அரும்** - சிறப்பு மிக்க; **சுரபி தன்னை** - இக் காமதேனுவை; **எற்கு அருள்** - எனக்குக கொடுத்தருளுக; **என்றலோடும்** - (என்று கௌசிகன்) சொன்ன அளவில்; **யாதும் இயம்பலம்** - வசிட்டன் (சிறிது நேரம்) ஒன்றும் கூறாதவனாய்; **பின்னர்** - பின்பு; **கொன் கொள்** - (பகைவர்க்கு) அம்சம்தரும்; **வேல் உழவ** - வேற்படையுள்ள அரசே; **வற்கலை உடையென்** - மரவுரியை ஆடையாக உடைய முனிவனான; **யானோ வழங்கலென்** - நானோ (இதனை உமக்குக்) கொடுக்கும் உரிமை உடையவன் அல்லன்; **வருவது ஆகின்** - (அப் பசு உம்மிடம்) வருவதனால்; **நீயே கொண்டு** - நீரே அழைத்துக் கொண்டு; **அகல்க** - செல்வீராக; **என்று கூற** - என்று கூறிய அளவில்.

வற்கலை உடையென் யானோ வழங்கலென் - முனிவர்க்கு அரசர் பசு முதலிய பொருள்களைக் கொடுத்திடுவது மரபேயொழிய முனிவர் அரசர்க்குக் கோதானம் செய்வது தக்கது அன்று என்ற கருத்தும் குறிப்பாக உணரப்படுகிறது. சொல் கொள்வேல் - கொலைத் தொழிலைக் கொண்ட வேல். கொல்லனது உலைக் களத்தில் வடிக்கப்பட்ட வேல். வேல் உழவன்: பகைவரது உடம்பாகிய விளைநிலத்தைத் தனது வேலாகிய கலப்பையைக் கொண்டு உழுது போராகிய பயிரை வளர்த்து வெற்றியாகிய பயனை விளைவிப்பவன். கொன்: அச்சம் (தொல் இடை -6) யானோ: ஒ -இழிவு சிறப்பு. உருவக அணி.

விசுவாமித்திரன் சுரபியைப் பற்ற அதன் மேனியிலிருந்து வெளிவந்த விரர் பொருதல்

576. ''பணித்தது புரிவென்'' என்னா.
பார்த்திபன் எழுந்து. பொங்கி.
பிணித்தனன் சுரபிதன்னை;
பெயர்வுழி. பிணியை வீட்டி.
''மணித் தடந் தோளினார்க்குக்
கொடுத்தியோ. மறைகள் யாவும்
கணித்த எம் பெரும?'' என்ன.
கலை மறை முனிவன் சொல்வான்:

*(அது கேட்டு)* ***பார்த்திபன்*** *- கௌசிக மன்னவன்;* ***பணித்தது புரிவென்*** *- முனிவன் சொன்ன. மொழிப்படியே செய்வேன்;* ***என்னா*** *- என்று;* ***எழுந்து பொங்கி*** *- உற்சாகத்தோடு எழுந்து;* ***சுரபிதன்னை*** *- அந்தக் காமதேனுவை;* ***பிணித்தனன்*** *- பிணித்துக் கொண்டு;* ***பெயர்வுழி*** *- புறப்படும் பொழுது;* ***பிணியை வீட்டி*** *- (அந்தப் பசு) கட்டை அறுத்துக் கொண்டு. வசிட்டனை நோக்கி;* ***மறைகள் யாவும்*** *- வேதங்களை எல்லாம்;* ***கணித்த எம்பெரும*** *- ஆராய்ந்து அளவிட்டு அறிந்த எம்பெருமானே;* ***மணித்தடம் தோளினாற்கு*** *- அழகிய தோள்களையுடைய விசுவாமித்திரனுக்கு;* ***கொடுத்தியோ*** *- என்னை அளித்து விட்டாயோ;* ***என்ன*** *- என்று கேட்க;* ***கலை மறை முனிவன்*** *- தருமநூல் முதலிய கலைகளையும் வேதங்களையும் அறிந்த வசிட்டன்;* ***சொல்வான்*** *- விடை கூறுபவன் ஆனான்.*

*வீட்டுதல்: விடுவித்தல் மணி: கருவியாகு பெயர் (இரத்தின அணிகள்) வேதம் வல்ல அந்தணன் அரசனுக்குக் கோதானம் புரிதல் தகாது என்பது புலப்பட நின்றது.*

***577. ''கொடுத்திலென். யானே; மற்று இக்***
***குடைகெழு வேந்தன்தானே***
***பிடித்து அகல்வுற்றது" என்ன.***
***பெருஞ் சினம் கதுவும் நெஞ்சோடு.***
***''இடித்து எழு முரச வேந்தன்***
***சேனையை யானே இன்று***
***முடிக்குவென். காண்டி'' என்னா.***
***மொய்ம் மயிர் சிலிர்த்தது அன்றே.***

***யானே கொடுத்திலென்*** *- (உனது உடன்பாடு இல்லாமல் உன்னை) நானே கௌசிகனுக்குக் கொடுக்கவில்லை;* ***இக் குடை கெழு*** *- வெற்றிக் குடையுடைய;* ***வேந்தன் தானே*** *- அவ்வரசனே (உன்னை);* ***பிடித்து அகல்வுற்றது*** *- பிடித்துக் கொண்டு போகத் தொடங்கிய செயல் இது;* ***என்ன*** *-என்று முனிவன் விடை கூற;* ***(அது கேட்டு);*** ***பெருஞ் சினம்*** *- (அப்பசு) பெருங்கோபம்;* ***கதுவும் நெஞ்சோடு -*** *கொண்ட மனத்தோடு;* ***இடித்து எழும் முரசம் -*** *இடியை ஒத்து எழுகிற ஓசையுடைய முரசங்களை;* ***வேந்தன் சேனையை -*** *கொண்ட இவ்வரசனது படைகளை;* ***யானே இன்று முடிக்குவென் -*** *நானே இன்று அழித்துவிடுவேன்;* ***காண்டி என்னா -*** *(அதைக்) காண்பாயாக என்று சபதமிட்டு;* ***அன்றே மொய்ம்மயிர்சிலிர்த்தது -*** *அப்பொழுதே அடர்ந்த தன் உடம்பின் மயிர்களைச் சிலிர்த்தது.*

*அகல்வுற்றது: தொழிற்பெயர் 'வருவதாகில் கோவைக் கொண்டு அகல்க' என்றதால் 'நான் கொடுக்கவில்லை; வேந்தனே உன்னைக் கொண்டு அகல்வுற்றான்' என்பது பெறப்பட்டது.*

***578.	‘பப்பரர் யவனர் சீனர்***
***சோனகர் முதல பல்லோர்***
***கைப்படை அதனினோடும்***
***கபிலைமாட்டு உதித்து. வேந்தன்***
***துப்புடைச் சேனை யாவும்***
***தொலைவுறத் துணித்தலோடும்.***
***வெப்புடைக் கொடிய மன்னன்***
***தனயர்கள் வெகுண்டு மிக்கார்.***

*(அங்ஙனம் காமதேனு மயிரைச் சிலிர்த்தவுடனே)* ***பப்பரர்*** *- பப்பரர்களும்;* ***யவனர்*** *- யவன தேசத்தார்களும்;* ***சீனர்*** *- சீனர்களும்;* ***சோனகர்*** *- சோனகர்களும்;* ***முதல*** *- முதலான;* ***பல்லோர்*** *- மிலேச்ச வீரர்கள் பலர்;* ***கைப்படை அதனினோடும்*** *- கைகளில் ஆயுதங்களோடும்;* ***கபிலை மாட்டு உதித்து*** *- அப் பசுவினிடம் தோன்றி;* ***வேந்தன் துப்பு உடை*** *அக் கௌசிக மன்னனுடைய வலிமையுள்ள;* ***சேனை யாவும்*** *- படைகளையெல்லாம்;* ***தொலைவு உற*** *- அழியும்படி;* ***துணித்தலோடும்*** *- கண்ட துண்டங்களாக்கின அளவிலே;* ***வெப்பு உடை*** *- (இயற்கையில்) சினம் கொண்ட;* ***கொடிய மன்னன் தனயர்கள்*** *- கொடியவர்களாகிய கௌசிக மன்னனுடைய மைந்தர்கள்;* ***வெகுண்டு மிக்கார்*** *- கோபித்துத் தாக்கலானார்கள்.*

*பப்பரம். சீனம். சோனகம் - மிலேச்ச சாதி பேதங்கள் - விளங்காத வேற்றுமொழிகள் பேசுகின்ற புற நாட்டவர். வசிட்டனின் சினத்தால் அரச குமாரர் இறப்பு*

***579.	‘’சுரபிதன் வலி இது அன்றால்;***
***சுருதி நூல் உணர வல்ல***
***வர முனி வஞ்சம்’’ என்னா.***
***‘’மற்று அவன் சிரத்தை இன்னே***
***அரிகுதும்’’ என்னப் பொங்கி.***
***அடர்த்தனர்; அடர. அன்னான்***
***எரி எழ விழித்தலோடும்.***
***இறந்தனர் குமரர் எல்லாம்.***

*சினம் மிக்க கோசிக குமாரர்கள்;* ***இது*** *- இவ்வாறு பசுவினிடம் மிலேச்சர் தோன்றி நமது சேனையை அழித்தது;* ***சுரபி தன் வலியன்று*** *- காமதேனுவின் வலிமையல்ல;* ***சுருதி நூல் உணர வல்ல*** *- வேதக் கலைகளை அறியவல்ல;* ***வரமுனி*** *- வரம் பெற்ற வசிட்ட முனிவனது;* ***வஞ்சம் என்னா*** *- வஞ்சகச் செயலாகும் என்று சொல்லி;* ***அவன் சிரத்தை*** *- அம் முனிவனது தலையை;* ***இன்னே அரிகுதும்*** *- இப்பொழுதே அறுத்திடுவோம்;* ***என்ன*** *- என்று வீரமொழி கூறி;* ***பொங்கி*** *சினந்து எழுந்து;* ***அடர்த்தனர்*** *- எதிர்த்து நெருக்கினார்கள்;* ***அடர*** *- அவ்வாறு நெருக்க (அப்போது);* ***அன்னான்*** *- அவ் வசிட்ட முனிவன்;* ***எரி எழ விழித்தலோடும்*** *- தீப்பொறி பறக்கும்படி கண்களால் விழித்துப் பார்த்த அளவிலே;* ***குமரர் எல்லாம்*** *- விசுவாமித்திரன் குமாரர் யாவரும்;* ***இறந்தனர்*** *- மடிந்தொழிந்தார்கள்.*

*விசுவாமித்திரன் வசிட்டன் போர்*

***580. 'ஐ - இருபதின்மர் மைந்தர்***
***அவிந்தமை அரசன் காணா.***
***நெய் பொழி கனலின் பொங்கி.***
***நெடுங் கொடித் தேர் கடாவி.***
***கை தொடர் கணையினோடும்***
***கார்முகம் வளைய வாங்கி.***
***எய்தனன்; முனியும். தன் கைத்***
***தண்டினை. ''எதிர்க'' என்றான்.***

*(அப்பொழுது);* ***அரசன்*** *- இக் கௌசிகராசன்;* ***ஐ இரு பதின்மர்மைந்தர்*** *- தன் புத்திரர் நூறு பேர்களும்;* ***அவிந்தமை காணா*** *- இறந்ததைக் கண்டு;* ***நெய் பொழி கனலின் பொங்கி*** *- நெய் சொரிந்த நெருப்புப் போலச் சீறியெழுந்து;* ***நெடுங்கொடித் தேர்*** *- நீண்ட கொடியமைந்த தன் தேரை;* ***கடாவி*** *- செலுத்தி;* ***கார்முகம் வளைய வாங்கி*** *- வில்லை நன்கு வளைத்து;* ***கை தொடர் கணையினோடும்*** *- தன் கையிலிருந்து தொடர்ச்சியாக விடப்படும் அம்புகளால்;* ***எய்தனன்*** *- (வசிட்டன்மேல்) எய்யத் தொடங்கினான்;* ***முனியும்*** *- வசிட்ட முனிவனும்;* ***தன் கைத் தண்டினை*** *- தன் கையிலுள்ள;* ***பிரமதண்டத்தை நோக்கி; எதிர்க என்றான் -*** *நீ அந்த ஆயுதங்களை எதிராக ஏற்றிடு என்று நியமித்தான்.*

*கணையினோடு: கணையினால்: ஒடு கருவிப் பொருள். வளைய வாங்குதல்: ஒரு பொருட் பன்மொழி.*

***581. 'கடவுளர் படைகள் ஈறாக்***
***கற்றன படைகள் யாவும்***
***விட விட. முனிவன் தண்டம்***
***விழுங்கி. மேல் விளங்கல் காணா.***
***வடவரை வில்லித்ன்னை***
***வணங்கினன் வழுத்தலோடும்.***
***அடல் உறு படை ஒன்று ஈயா.***
***அன்னவன் அகன்றான் அன்றே.***

***கடவுளர் படைகள்*** - (சிறிய அம்புகள் முதல்) தேவர்களின் அத்திரங்கள்; ***ஈறா*** - இறுதியாக; ***கற்றன படைகள் யாவும்*** - அறிந்து பழகிய ஆயுதங்கள் யாவற்றையும்; ***விட விட*** - கௌசிகன் எய்து கொண்டுவர; ***முனிவன் தண்டம்*** - வசிட்டனது பிரமதண்டமானது; ***விழுங்கி*** - அவற்றையெல்லாம் தன்னுள் கொண்டு; ***மேல் விளங்கல்*** - மேன்மை பெற்று விளங்குதலை; ***காணா*** - கண்டு; ***(கோசிகன்); வடவரை வில்லிதன்னை*** - மேருவை வில்லாகக் கொண்ட உருத்திர மூர்த்தியை; ***வணங்கினன்*** - வணங்கி; ***வழுத்தலோடும்*** - துதித்த அளவில்; ***அன்னவன்*** - அச் சிவபிரான்; ***(எதிர் தோன்றி); அடல் உறு*** - வலிமை மிக்க ஒப்பற்ற; ***படை ஒன்று ஈயா*** - படை ஒன்றை அளித்துவிட்டு; ***அகன்றான்*** - மறைந்தான்.

*படை ஒன்று: ஒப்பற்ற படைக் கலங்கள் என்றும் கொள்ளலாம். 102*

***582. விட்டனன் படையை வேந்தன்;***
***விண்ணுளோர். ''உலகை எல்லாம்***
***சுட்டனன்'' என்ன. அஞ்சித்***
***துளங்கினர்; முனியும் தோன்றி.***
***கிட்டிய படையை உண்டு***
***கிளர்ந்தனன். கிளரும் மேனி***
***முட்ட வெம் பொறிகள் சிந்த;***
***பொரு படை முரணது இற்றே.***

***வேந்தன்*** - விசுவாமித்திரன்; ***படையை*** - அந்தப் படையை; ***விட்டனன்*** - (வசிட்டன்மேல்) ஏவினான்; ***விண் உளோர்*** - (அதனைக் கண்ட) தேவர்களும் (இப்படையால்); ***உலகை எல்லாம்*** - எல்லா உலகையும்; ***சுட்டனன் என்ன*** - எரித்தவன் இவன் என்று; ***அஞ்சித் துளங்கினர்*** - பயந்து நடுங்கினார்கள் (ஆயினும்); ***முனியும்*** - வசிட்ட முனிவனும்; ***தோன்றி*** - எதிரில் வந்து; ***கிட்டிய படையை*** - நெருங்கிய அந்த உருத்திரப் படையை; ***உண்டு*** - (தானே) உட்கொண்டு; ***கிளரும் மேனி*** - (அந்த அத்திர நெருப்பால்) பொலிகின்ற; ***முட்ட வெம்பொறிகள்*** - தன் உடம்பிலிருந்து வெப்பமான நெருப்புப் பொறிகள்; ***சிந்த*** - வெளிப்பட; ***கிளர்ந்தனன்*** - (தன்னைத் தாக்கிய அப்படையின் வலிமை அழியுமாறு செய்து) ஆற்றலால் பொலிவுற்று நின்றான்; ***பொருபடை முரண் அது*** - போர் செய்து அழிப்பதற்குரிய உருத்திரப் படையின் அவ்வலிமை; ***இற்று*** - (வசிட்டனிடம்) இப்படி ஆயிற்று.

*சுட்டனன் - தெளிவு குறித்த கால வழுவமைதி.*

*கௌசிகன் தவம் மேற்கொள்ளல்*

***583. ‘கண்டனன் அரசன்; காணா.***
***‘’கலை மறை முனிவர்க்கு அல்லால்***
***திண்திறல் வலியும் தேசும்***
***உள எனல் சீரிது அன்றால்;***
***மண்டலம் முழுதும் காக்கும்***
***மொய்ம்பு ஒரு வலன் அன்று’’ என்னா.***
***ஒண் தவம் புரிய எண்ணி.***
***உம்பர்கோன் திசையை உற்றான்.***

*(தான் விட்ட உருத்திரப் படை செயலற்றதை)* **அரசன்** - இந்தக் கௌசிகன்; **கண்டனன்** - பார்த்தான்; **காணா** - (அவ்வாறு) பார்த்து; **திண்திறல் வலியும்** - உறுதியான வெற்றியும் வலிமையும்; **தேசும்** - ஒளியும்; **கலை மறை** - வேதக் கலைகளை அறிந்த; **முனிவர்க்கு அல்லால்** - முனிவர்களுக்கு மாத்திரம் அல்லாமல்; **உள எனல்** - (பிறர்க்கு) உள்ளன என்று கருதுதல்; **சீரிது அன்று** - சிறப்பானது அல்ல; **மண்டலம் முழுதும்** - உலகம் முழுவதையும்; **காக்கும் மொய்ம்பு** - அரசாளும் வலிமை; **ஒரு வலி அன்று** - (முனிவர் வலிமைக்கு முன்) ஒரு வலிமையாக மாட்டாது; **என்னா** - என்று உறுதியாக அறிந்து; **ஒள்தவம் புரிய எண்ணி** - சிறந்த தவத்தைச் செய்ய நினைத்து; **உம்பர்கோன்** - தேவந்திரனது; **திசையை உற்றான்** - திசையான கிழக்குத் திக்கை அடைந்தான்.

அரசர் ஆற்றலைவிட முனிவர் ஆற்றலே சிறப்புடையது என்பதை அறிந்த கௌசிகன் அதைப் பெறக் கருதித் தவம் செய்யச் சென்றான். திறல் - வெற்றி; **திறல் வலி** - வெற்றிக்குக் காரணமான வலிமை. *104*

இந்திரன் அவனது தவத்தைக் கெடுத்தல்

***584. ‘மாண்ட மா தவத்தோன் செய்த***
***வலனையே மனத்தின் எண்ணி.***
***பூண்ட மா தவத்தன் ஆகி***
***அரசர்கோன் பொலியும் நீர்மை***
***காண்டலும். அமரர் வேந்தன்***
***துணுக்குறு கருத்தினோடும்***
***தூண்டினன். அரம்பைமாருள்***
***திலோத்தமை எனும் சொல் மானை.***

*(இவ்வாறு)* ***அரசர்கோன்*** *- அரசர் தலைவனான கௌசிகன்;* ***மாண்ட மாதவத்தோன்*** *- மாட்சிமை பெற்ற மாதவத்தனான வசிட்டன்;* ***செய்த வலனையே*** *- பெற்ற வெற்றிச்செயலையே;* ***மனத்தின் எண்ணி*** *- மனத்திலே இடைவிடாது சிந்தித்து;-* ***பூண்ட மா தவத்தன் ஆகி*** *- மேற்கொண்ட பெருந்தவம் புரிந்தவனாய்;* ***பொலியும்*** *- திகழும்;* ***நீர்மை*** *- தன்மையை;* ***காண்டலும்*** *- நோக்கிய அளவில்;* ***அமரர்வேந்தன்*** *- தேவர் தலைவனான இந்திரன்;* ***துணுக்கு உறு*** *- அச்சம் மிகுந்த;* ***கருத்திேனாடும்*** *- கருத்தோடு;* ***அரம்பை மாருள்*** *- அரம்பை முதலிய தெய்வப் பெண்களுள்;* ***திலோத்தமை எனும்*** *- திலோத்தமை என்ற;* ***சொல் மானை*** *- புகழ்கொண்ட மான் போன்ற பெண்ணை;* ***தூண்டினான்*** *- (அக் கௌகினன் தவத்தைக் கலைக்கும் பொருட்டு) ஏவினான்.*

*சொல்: புகழ். இந்திரன் துணுக்குற்றதன் காரணம் பெருந்தவம் செய்பவரின் கபாலத்திலிருந்து ஒருவகை நெருப்பு மேல் எழுந்த தன் பொன்னுலகைச் சுட்டெரிக்கும் என்கிற அச்சம். மாண்ட - மாண் என்ற வினைமுதல் அடியாக வந்த பெயரெச்சம். 'மாண்ட என்மனைவியொடு மக்களும் நிரம்பினர்' (புறம்.191*

*105*

***585. 'அன்னவன் மேனி காணா.***
***அனங்க வேள் சரங்கள் பாய.***
***தன் உணர்வு அழிந்து காதற்***
***சலதியின் அழுந்தி. வேந்தன்***
***பன்ன அரும் பகல் தீர்வுற்று.***
***பரிணிதர் தெரித்த நூலில்***
***நல் நயம் உணர்ந்தோன் ஆகி.***
***நஞ்சு எனக் கனன்று. நக்கான்.***

***வேந்தன்*** *- அரசனான கௌசிகன்;* ***அன்னவள் மேனி காணா*** *- திலோத்தமையின் மேனியழகைக் கண்டு;* ***அனங்க வேள்*** *- மன்மதனுடைய;* ***ரங்கள் பாய*** *- அம்புகள் (தன்மேற்) பட்டுத் தைத்தலால்;* ***தன் உணர்வு அழிந்து*** *-தனது நல்லறிவு கெட்டு;* ***காதல் சலதியின் அழுந்தி*** *- அவளது காமக் கடலிலே மூழ்கி;* ***பன்னரும் பகல் தீர்வுற்று .*** *சொல்ல முடியாத பல நாட்கள் அதிலே கழியப் பெற்று;* ***பரிணிதர் தெரிந்த நூலின் -*** *(பின்பு) நல்லறிஞர் ஆராய்ந்து கூறின கலைகளின்;* ***நல் நயம் உணர்ந்தோன் ஆகி*** *- சிறந்த பொருள்களை உணர்ந்தவனாகி;* ***நஞ்சு எனக் கனன்று*** *- (அச்சிற்றின்பத்தை) நஞ்சுபோல் வெறுத்து;* ***நக்கான் -*** *நகைத்தான்.*

*தனது தவம் குலையக் காரணமான திலோத்தமையை எண்ணிச் சினமும் தனது செய்கையில் வெறுப்பும் கொண்டு கௌசிகன் சிரித்தான். சிரித்தற்குக் காரணம் - செய்யக் கூடாத ஒழுக்கத்தைச் செய்து விட்டதால். பரிணிதர் - அறிவின் பக்குவம் முதிர்ந்தவர்.*

விசுவாமித்திரன் தென்திசை சென்று தவம் செய்தல்

***586.   ''விண் முழுதுஆளி செய்த***
***வினை'' என வெகுண்டு. ''நீபோய்.***
***மண்மகள் ஆதி'' என்று.***
***மடவரல்தன்னை ஏவி.***
***கண் மலர் சிவப்ப. உள்ளம்***
***கறுப்புறக் கடிதின் ஏகி.***
***எண்மரின் வலியன் ஆய***
***யமன்திசைதன்னை உற்றான்.***

*(இவ்வாறு தன் தவம் அழிந்தது)* **விண் முழுது ஆளி** *- தேவலோகம் முழுவதும் ஆட்சி புரியும் இந்திரனது;* **செய்த வினை என** *- வஞ்சனைச் செயலாகும் என்று அறிந்து;* **வெகுண்டு** *- சினம் கொண்டு;* **நீ போய் மண்மகள் ஆதீ** *- நீ நிலவுலகம் சென்று மானிடகப் பெண்ணாகப் பிறப்பாயாக;* **என்று மடவரல் தன்னை** *- என்று அத்திலோத்தமையை;* **ஏவி. சபித்து விட்டு; - கண்மலர் சிவப்ப** *- (சினத்தால்) தாமரை போன்ற கண்கள் செந்நிறம் அடையவும்;* **உள்ளம் கறுப்பு உற** *- மனம் கோபப்படவும்;* **கடிதின் ஏகி** *- (அவ்விடம் விட்டு) விரைவிலே சென்று;* **எண்மரில் வலியன் ஆய** *- எண் திசைப் பாலகர்களில் வலிமையுள்ளவனான;* **யமன் திசை தன்னை** *- யமனது திசையை;* **உற்றான்** *- அடைந்தான் (கௌசிகன்).*

*தனது தவம் குலையக் காரணமான திலோத்தமையைச் சபித்த பின் கௌசிகன் தவம் செய்யத் தென்திசை சென்றான். தென்திசைப் பாலகன் - இயமன். 'கூற்றத் தன்ன மாற்றரு முன்பின் - (புறம் 362) எண்மரில் இயமன் வலியன் என்பது பெறப்படும்.*

*திரிசங்கு வசிட்டனை அணுகிப் பெற்ற சாபம்*

***587.   'தென் திசைஅதனை நண்ணிச்***
***செய் தவம் செய்யும் செவ்வி.***
***வன் திறல் அயோத்தி வாழும்***
***மன்னவன் திரிசங்கு என்பான்***
***தன் துணைக் குருவை நண்ணி.***
***''தனுவொடும் துறக்கம் எய்த***
***இன்றுஎனக்கு அருளுக!'' என்ன.***
***'யான் அறிந்திலென் அது' என்றான்.***

*(இவ்வாறு கௌசிகன்)* ***தென்திசை அதனை*** *- தெற்குத் திக்கை;* ***நண்ணி*** *- அடைந்து;* ***செய்தவம் செய்யும் செவ்வி*** *- செய்ய வேண்டிய தவத்தை நடத்தும் பொழுது;* ***வன்திறல் அயோத்தி வாழும்*** *- அயோத்தி நகரில் வாழுகின்ற மிக்க வலியனான;* ***மன்னவன் திரிசங்கு என்பான்*** *- திரிசங்கு என்னும் மன்னவன்;* ***தன் துணைக் குருவை நண்ணி*** *- தனக்குத் துணை நிற்கும் குலகுருவான வசிட்டனிடம் சென்று;* ***தனுவொடும் துறக்கம் எய்த*** *- இந்தப் பூத உடம்போடு சுவர்க்கம் அடையும்படி;* ***இன்று எனக்கு அருளுக*** *- இப்போது எனக்கு அருள் செய்வாயாக;* ***என்ன*** *- என்று வேண்ட;* ***யான்*** *- (வசிட்டன்) நான்;* ***அது அறிந்திலன்*** *- இந்த உடலோடு துறக்கம் செலுத்தவல்ல செயலை அறிய வில்லை;* ***என்றான்*** *- என்று (அவன் வேண்டுகோளை) மறுத்துக் கூறினான்.*

*திரிசங்கு: இவனது இயற்பெயர் சத்தியவிரதன். இவ்வேந்தன் தன் தந்தை சொல்லையும் மீறி மறையவர் கன்னியைக் கவர்ந்தான்; குருவான வசிட்டனது பசுவைக் கொன்றான்; நீர் தெளித்துப் புனித மாக்கப்படாத ஊனை உண்டான். இம்மூன்று குற்றங்களையுடையவனாதலால் 'திரிசங்கு' எனப் பெயர் பெற்றான். இவனே அரிச்சந்திரன் தந்தை என்பர்.*

***588. ''நினக்கு ஒலாதுஆகின். ஐய!***
***நீள் நிலத்து யாவரேனும்***
***மனக்கு இனியாரை நாடி.***
***வகுப்பல் யான். வேள்வி" என்ன.***

***"சினக் கொடுந் திறலோய்! முன்னர்த்***
***தேசிகற் பிழைத்து. வேறு ஓர்***
***நினக்கு இதன் நாடி நின்றர்;***
***நீசன் ஆய் விடுதி" என்றான்.***

*(திரிசங்கு வசிட்டனை நோக்கி)* ***ஐய*** *- தலைவனே!'' நினக்கு ஒலாது ஆகின் - (என்னை இவ்வுடம்போடு சொர்க்கம் ஏற்றும் செயல்) உனக்கு முடியாது என்றால்;* ***நீள் நிலத்து*** *- பெரிய இப்பூவுலகில்;* ***யாவரேனும்*** *- எவராயினும்;* ***மனக்கு இனியாரை நாடி*** *- என் மனதுக்கு இசைந்தவரைத் தேடி;* ***யான் வேள்வி வகுப்பல்*** *- (அவரைக் கொண்டு) எண்ணிய யாகத்தை நான் செய்வேன்;* ***என்ன*** *- என்று கூற;* ***(வசிட்டன் கோபங்கொண்டு அவனை நோக்கி); சினம் கொடு திறலோய்*** *- சினமும் கொடிய வலிமையும் உடையவனே!;* ***முன்னர்த் தேசிகன் -*** *முன்னோர்களின் குருவினிடம்;* ***பிழைத்து -*** *அபசாரப்பட்டு (அவனை நீக்கி);* ***வேறு ஓர் நினக்கு இதன்*** *- உனக்கு விருப்பமானவேறொரு குருவை;* ***நாடி நின்றாய்*** *- (நீ) தேடி நின்றாய்;* ***(ஆதலால்); நீசன் ஆய் -*** *புலையனாய்;* ***விடுதி -*** *ஆகி விடுவாய்;* ***என்றான் -*** *என்று சபித்தான்.*

*பரம்பரையான ஆசிரியன் தகுந்தவனாகியிருக்க அவனை அவமதித்து வேறொரு குருவைத் தேடுதல் முறைகேடானது. இதன் - ஹிதன்; நீசன் - சண்டாளன். 109*

**589. 'மலர் உளோன் மைந்தன் - மைந்த! -**
**வழங்கிய சாபம்தன்னால்**
**அலரியோன்தானும் நாணும்**
**வடிவுஇழந்து. அரசர் கோமான்.**
**புலரிஅம் கமலம்போலும்.**
**பொலிவு ஒரீஇ. வதனம். பூவில்**
**பலரும் ஆங்கு இகழ்தற்கு ஒத்த**
**படிவம் வந்துற்றது அன்றே.**

**மைந்த** - *இளைஞனான இராமனே!* மலருளோன் **மைந்தன்** - *பிரமதேவன் மகனான வசிட்டன்;* **வழங்கிய சாபம் தன்னால்** - *இட்ட சாபத்தால்;* **அரசர் கோமான்** - *அரசர் தலைவனான திரிசங்கு;* **அலரியோன் தானும்** - *கதிரவனும்;* **நாணும் வடிவு இழந்து** - *வெட்கப்படுமாறு இருந்த தன் அரச வடிவத்தை நீங்கி;* **புலரி அம் கமலம் போலும்** - *உதய காலத்தில் மலர்கின்ற தாமரை போன்ற;* **வதனம் பொலிவு ஒரீஇ** - *திருமுகத்தின் அழகு கெட்டு;* **பூவில் பலரும்** - *பூவுலகில் எல்லோரும்;* **இகழ்தற்கு ஒத்த படிவம்** - *இகழ்தற்கரிய சண்டாள வடிவம்;* **ஆங்கு அன்றே** - *அவ்வரசனுக்கு அந்த இடத்தில் அப்போதே;* **வந்து உற்றது** - *வந்து அடைந்தது.*

*திரிசங்கு. தன்மேனி முகப்பொலிவு யாவும் நீங்கிச் சண்டாள வடிவத்தை அடைந்தான். அலரி: ஆயிரம் கதிர்களால் விளங்குபவன்.*

**590. 'காசொடு முடியும் பூணும்**
**கரியதாம் கனகம் போன்றும்.**
**தூசொடும் அணியும் முந்நூல்**
**தோல் அரும் தோற்றம் போன்றும்.**
**மாசொடு கருகி. மேனி**
**வனப்பு அழிந்திட. ஊர் வந்தான்; "சீசி" என்றுயாரும்**
**எள்ள. திகைப்பொடு பழுவம் சேர்ந்தான்.**

**காசொடு** - *மணி மாலைகளும்;* **முடியும்** - *கிரீடமும்;* **பூணும்** - *மற்ற அணிகளும்;* **கரியது ஆம்** - *கரும் பொன்னான;* **கனகம் போன்றும்** - *இரும்பை ஒத்தும் (கறுத்த நிறத்தை அடைந்தும்);* **தூசொடும்** - *உடுத்த ஆடைகளும்;* **அணியும் முந்நூல்** - *தரித்த முப் புரிநூலும்;* **தோல்தரும்** - *தேலால் ஆன;* **தோற்றம் போன்றும்** - *தன்மையை ஒத்தும்;* **மேனி** - *உடம்பானது;* **மாசொடு கருகி** - *அழுக்குடன் கூடிக் கறுத்து;* **வனப்பு அழிந்திட** - *அழகு கெட (திரிசங்கு) ஊர் வந்தான் -தனது நகரம் சேர்ந்த அளவில் (அப்போது);* **சீசி என்று** - *சீச்சீ என்று;* **யாரும் எள்ள** - *எல்லாரும் தன்னை இகழ்தலால்;* **திகைப்பொடு** - *கலக்கத்தோடு;* **பழுவம் சேர்ந்தான்** - *காட்டை அடைந்தான்.*

பூண்ட அணிகலன்கள் இரும்பினால் இயன்றனவாகவும். உடுத்த உடையும் பூணூலும் தோலாகவும் மாறவும். உடல் கருகித் தோன்றவும் தீரிசங்கு முன்னை வடிவம் நீங்கிச் சண்டாள வடிவோடு அயோத்தி சேர்ந்தான். அப்போது அவனைக் கண்டு யாவரும் இகழ்ந்தனர். அது பொறாத அவன் காடு சேர்ந்தான். கரியது ஆம் கனகம் - கரும்பொன் - இரும்பு.

கௌசிகனிடம் திரிசங்கு தன் செய்தி தெரிவித்தல்

***591. 'கானிடைச் சிறிது வைகல்***
***கழித்து. ஓர் நாள். கௌசிகப்பேர்க்***
***கோன் இனிது உறையும் சோலை***
***குறுகினன்; குறுக. அன்னான்.***
***"ஈனன் நீயாவன்? என்னை***
***நேர்ந்தது. இவ் இடையில்?" என்ன.***
***மேல் நிகழ் பொருள்கள் எல்லாம்***
***விளம்பினன். வணங்கி. வேந்தன்.***

***கானிடை*** - வனத்திலே; ***சிறிது வைகல் கழித்து*** - சில நாட்களைப் போக்கி; ***ஓர் நாள்*** - ஒரு நாள்; ***கௌசிகன் பேர் கோன்*** - கௌசிகன் என்ற நாமம் பெற்ற இவ்வரசன்; ***இனிது உறையும்*** - இனிதாகத் (தவம் செய்வது) வசிக்கிற; ***சோலை குறுகினன்*** - சோலையைத் (திரிசங்கு நாடிச்) சேர்ந்தான்; ***குறுக*** - அணுகிய அளவில்; ***அன்னான்*** - அக்கௌசிகன்; ***ஈனன் நீ யாவன்*** - சண்டாளனான நீ யார்; ***இவ் இடையின் நேர்ந்தது என்னை*** - இந்த இடத்திற்கு வந்ததன் காரணம் என்ன; ***என்ன*** - என்று வினவ; ***வேந்தன்*** - திரிசங்கு; ***வணங்கி*** - (கௌசிகனை) வணங்கி; ***மேல் நிகழ் பொருள்கள்*** - முன் நடந்த செய்திகள்; ***எல்லாம் விளம்பினன்*** - அனைத்தையும் சொன்னான்.

வசிட்டனுக்குப் பகைவன் விசுவாமித்திரன் என்று கருதித் திரிசங்கு அவ் விசுவாமித்திரனை அடைந்தான். மேல் நிகழ் பொருள்கள்: வசிட்ட சாபம் முதலியன.

கௌசிகன் வேள்விசெய்து.திரிசங்குவை வானுலகு ஏற்றுதல்

***592. "இற்றதோ?" என நக்கு. அன்னான்***
***"யான் இரு வேள்வி முற்றி.***
***மற்று உலகு அளிப்பென்" என்னா.***
***மா தவர் தம்மைக் கூவ.***
***சுற்றுறு முனிவர் யாரும்***
***தொக்கனர்; வசிட்டன் மைந்தர். "கற்றிலம். அரசன்***
***வேள்வி கனல் துறை புலையற்கு ஈவான்."***

***அன்னான்*** - அதுகேட்ட கோசிகன்; ***இற்றதோ என*** - இவ்வளவுதானா என்று இகழ்ச்சியாகச் சொல்லி; ***நக்கு*** - சிரித்து; ***யான் இருவேள்வி*** - நான் பெரியதொரு வேள்வியை; ***முற்றி*** - (உனக்காக) செய்து முடித்து; ***உலகு அளிப்பென் என்னா*** - வான் உலகத்தைத் (இந்த உம்பொடு அடைய) தந்திடுவேன் என்று சொல்லி; ***மாதவர் தம்மைக் கூவ*** - மாதவ முனிவர்களை அழைக்க; ***சுற்றுறு முனிவர் யாரும்*** - சுற்றுப் பக்கங்களில் உள்ள அம்முனிவர் அனைவரும்; ***தொக்கனர்*** - (அங்கே வந்து) கூடினார்கள் (அப்போது); ***வசிட்டன் மைந்தர்*** - வசிட்ட குமாரர்கள்; ***அரசன் புலையற்கு*** - அரசன் ஒருவன் சண்டாளன் ஒருவனுக்காக; ***கனல்துறை*** - அக்கினியிலே; ***வேள்வி*** - வேள்வியை; ***ஈவான்*** - முடித்துத் தருவதை; ***கற்றிலம்*** - (நாங்கள் எந்த நூலிலும்) படித்து அறிந்தோம் இல்லை. மற்று உலகு: இவ் வுலகினும் வேறாகிய உலகம்: சுவர்க்கம். நூற்கொள்கைக்கு மாறாக அரசனான விசுவாமித்திரன் வேள்வி செய்யப் புரோகிதன் ஆதலும். யாகம் செய்யும் தலைவனாகச் சண்டாளன் அமைதலும் தகாத செயல்கள் ஆதலால் வசிட்ட குமாரர் கௌசிகன் அழைப்பை ஏற்கவில்லை எனலாம். நகுதல் -வசிட்டனை இகழ்தல் காரணமாகப் பிறந்தது.

***593. 'என்று உரைத்து. "யாங்கள் ஒல்லோம்"***
***என்றனர்; என்னப் பொங்கி.***
***"புன்தொழில் கிராதர் ஆகிப்***
***போக" எனப் புகறலோடும்.***
***அன்று அவர் எயினர் ஆகி.***
***அடவிகள்தோறும் சென்றார்;***
***நின்ற வேள்வியையும் முற்றி..***
***'நிராசனர் வருக!' என்றான்.***

***என்று உரைத்து*** - என்று கூறி; ***யாங்கள் ஒல்லோம்*** - 'நாங்கள் இச்செயலுக்கு உடன்படமாட்டோம்'; ***என்றனர்*** - என்று சொன்னார்கள்; ***என்ன*** - என்று கூற (அதனைக் கேட்ட கௌசிகன்); ***பொங்கி*** - கொதிப்பு அடைந்து; ***புன்தொழில் கிராதர்*** - (அவர்களைக் குறித்து) இழிந்த செயல்புரியும் வேடர்கள்; ***ஆகிப்போக என*** - ஆகிவிடக் கடவீர்கள் என்று; ***புகறலோடும்*** - சாபமொழி கூறிய அளவில்; ***அன்று*** - அப்பொழுதே; ***அவர்*** - அவர்கள்; ***எயினர் ஆகி*** - வேடர்களாகி; ***அடவிகள் தோறும்*** - காடுகள் தோறும்; ***சென்றார்*** - போய்விட்டார்கள்; ***நின்று*** - (கோசிகனோ) தொடங்கிய செயலில் சிறிதும் சலியாமல் நிலைநின்று; ***வேள்வியையும் முற்றி*** - வேள்வியை முடிக்கத் தொடங்கி; ***நிராசனர் வருக*** - (ஆகுதியை உண்ணுதற் பொருட்டு) தேவர்களே! நீவிர் வருவீர்களாக!; ***என்றான்*** - என்று அவர்களை அழைத்தான். நிராசனர்: தேவர். உணவை வேண்டாதவர் என்பது பொருள். *114*

***594. “அரைசன் இப் புலையற்கு என்னே
அனல்துறை முற்றி. எம்மை
விரைசுக வல்லை என்பான்!
விழுமிது!” என்று இகழ்ந்து நக்கார்.
புரைசை மா களிற்று வேந்தை.
“போக நீ துறக்கம்; யானே உரைசெய்தேன். தவத்தின்”
என்ன. ஓங்கினன் விமானத்து உம்பர்.***

*(அழைக்கப்பட்ட தேவர்கள்)* ***அரைசன்*** *- விசுவாமித்திரன்;* ***இப் புலையற்கு*** *- இந்தப் புலையனுக்காக;* ***அனல் துறைமுற்றி*** *- யாக காரியத்தை நிறைவேற்றத் தொடங்கி;* ***எம்மை*** *- எங்களை;* ***வல்லை விரைசுக என்பான்*** *- விரைவில் வருவீராக என்று அழைக்கின்றான்;* ***என்னே விழுமிது*** *- மிக நன்று இச்செயல்;* ***என்று இகழ்ந்து*** *- என்று நிந்தித்து;* ***நக்கார்*** *- ஏளனம் செய்து சிரித்தார்கள் - புரைசை மாக்களிறு - (ஆயினும் கோசிகன் விடாமல்) கழுத்திலே கயிறு கொண்ட யானைப்படையுடைய வேந்தை - அத் திரிசங்குவை நோக்கி நீ துறக்கம் போய்ச் சேர்ந்திடுக;* ***யானே தவத்தின்*** *- நானே எனது தவத்தால்;* ***உரை செய்தேன்*** *- கட்டளையிட்டுக் கூறுகிறேன்;* ***என்ன*** *- என்று சொல்ல (அவ்வாறே திரிசங்கு);* ***விமானத்து உம்பர்*** *-(கிடைத்த ஒரு) விமானத்தின் மேல்;* ***ஓங்கினன்*** *- ஏறி உயரச் சென்றான்.*

*கோசிகன் வெகுநேரமாக மந்திரங்களைச் சொல்லி அழைத்தும் அவிர்ப் பாகத்தைப் பெறத் தேவர்கள் வாராமையால் பெருஞ்சினம் கொண்டான்; ஓமம் செய்யும் அகப்பையை உயர எடுத்து. 'யாகம் இருக்கட்டும் என் தவத்தின் பயனால் இவ் வுடம்புடன் சுவர்க்கம் செல்லுக. என்றான்; முனிவர் யாவரும் காணத் திரிசங்கு சுவர்க்கம் சென்றான் என்பது. விழுமிது - இகழ்ச்சிக் குறிப்பு: எதிர் மறை இலக்கணை.*

*தேவர்கள் தள்ளிய திரிசங்குவைக் கௌசிகன் மேலேயே நிற்கச் செய்தல்*

***595. 'ஆங்கு அவன் துறக்கம் எய்த.
அமரர்கள் வெகுண்டு. “நீசன்
ஈங்கு வந்திடுவது என்னே?
இரு நிலத்து இழிக!” என்ன.
தாங்கல் இல் கவிழ்வான். மற்று.
“தாபதா! சரணம்” என்ன.
ஓங்கினன். “நில் நில்!” என்ன
உரைத்து. உரும் ஒக்க நக்கான்.***

***ஆங்கு*** - *அவ்வாறு;* ***அவன்*** - *அவ்வரசன்;* ***துறக்கம் எய்த*** - *சுவர்க்கத்தை அடைய;* ***அமரர்கள்*** - *(அதுகண்ட) தேவர்கள்;* ***வெகுண்டு*** - *சினந்து;* ***நீசன் ஈங்கு*** - *சண்டாளனான நீ அவ்வுடம்போடு இவ்விடத்தே;* ***வந்திடுவது என்னே*** - *வந்து சேர்வது என்ன நீதி?;* ***இரு நிலத்து இழிக*** - *பூமியிலே இறங்கு வாயாக;* ***என்ன*** - *என்று கூறித் தள்ள;* ***தாங்கல் இல்*** - *தன்னைத் தாங்குவார் இல்லாதவனாய்;* ***கவிழ்வான்*** - *(தலைகீழாக) விழும் அத்திரிசங்கு;* ***மற்று*** - *பின்பு (கோசிகனை நோக்கி);* ***தாபதா*** - *முனிவனே;* ***சரணம் என்ன*** - *'நீயே எனக்குப் புகலிடம்' என்று ஓலமிட (அதுகேட்ட கோசிகன்);* ***நில் நில் என்ன*** *-(நிமிர்ந்து நின்று) அந்த இடத்தேயே நிற்பாயாக என்று;* ***ஓங்கினன் உரத்து*** - *உரக்கச் சொல்லி;* ***உரும் ஒக்க*** - *இடி முழக்கம் போல;* ***நக்கான்*** - *சிரித்தான்.*

*சிரிப்பு: தேவர்களின் மீது உள்ள வெகுளியாலும் எள்ளலாலும் ஆகியது. நில்நில் - அடுக்கு விரைவு பற்றியது.*

*கௌசிகன் சினத்தினால் வேறோர் உலகு படைத்தல்*

***596.*** **"பேணலாது இகழ்ந்த விண்ணோர்**
**பெரும் பதம் முதலா மற்றைச்**
**சேண் முழுது அமைப்பல்" என்னா.**
**"செழுங் கதிர். கோள். நாள். திங்கள்.**
**மாண் ஒளி கெடாது. தெற்கு**
**வடக்கவாய் வருக!" என்று.**
**"தாணுவோடு ஊர்வ எல்லாம்**
**சமைக்குவென்" என்னும் வேலை.**

*(சினந்த விசுவாமித்திரன்);* ***பேணலாது*** - *(என் வார்த்தையை) மதிக்காமல்;* ***இகழ்ந்த*** - *(என்னையும் திரிசங்குவையும்) அவமதித்த;* ***விண்ணோர்*** - *தேவர்களது;* ***பெரும் பதம் முதலா*** - *பெரிய பதவி முதலாக;* ***மற்றைச் சேண்முழுது*** - *மற்றை விண்ணுலக முழுவதையும்;* ***அமைப்பல் என்னா*** - *வேறு படைப்பேன் என்று சொல்லி;* ***செழுங் கதிர்*** *-(என்னால் படைக்கப்பட்டு என் கட்டளைக்கு உட்படும்) செழுங்கதிர்களையுடைய கதிரவனும்;* ***திங்கள்*** - *சந்திரனும்;* ***கோள்*** - *மற்றைய கிரகங்களும்;* ***நாள்*** - *நட்சத்திரங்களும்;* ***மாண் ஒளி கெடாது*** - *மாட்சிமை மிக்க தத்தம் ஒளி குன்றாமலும்;* ***தெற்கு வடக்கவாய்*** - *தென்திசை உதயமும் வடதிசை மறைவும்;* ***ஆய் வருக*** - *உடையனவாகவும் சஞ்சரித்து வருக;* ***என்று*** - *எனக் கட்டளையும் இட்டு;* ***தாணுவோடு*** - *நிலை இயல் பொருள்களுடேன;* ***ஊர்வ*** - *இயங்கு இயல் பொருள்களும்;* ***எல்லாம்*** - *ஆகிய எல்லாவற்றையும்;* ***சமைக்குவென்*** - *(இப்பொழுதே) படைத்திடுவேன்;* ***என்னும் வேலை*** - *என்று தொடங்கும் பொழுது.*

*தாணு: நிலை இயல் பொருள். கோள்கள்; அங்காரகன். புதன். குரு. சுக்கிரன். சனி. இராகு. கேது (சூரியன். சந்திரன்) நாள் - அசுவினி முதலிய ஒளிகள்: ஆகுபெயர். மாண் ஒளி கெடாது -இடம். காலங்களின் வேற்றுமைகளால் நேரக்கூடிய ஒளிக்குறைவின்றி என்பது.*

தேவர்கள் கௌசிகனைச் சாந்தப்படுத்துதல்

***597. 'நறைத் தரு உடைய கோனும்.***
***நான்முகக் கடவுள்தானும்.***
***கறைத் தரு களனும். மற்றைக்***
***கடவுளர் பிறரும். தொக்கு.***
***"பொறுத்தருள். முனிவ! நின்னைப்***
***புகல் புகுந்தவனைப் போற்றும்***
***அறத் திறன் நன்று; தாரா***
***கணத்தொடும் அமைக. அன்னான்.***

***நறைத் தரு உடைய** - மணமுள்ள கற்பகத் தருவையுடைய; **கோனும்** - இந்திரனும்; **நான்முகக் கடவுள்தானும்** - நான் முகனான பிரமனும்; **கறைத் தருகளனும்** - நஞ்சுக் கண்டமுடைய உருத்திர மூர்த்தியும்; **மற்றைக் கடவுளர் பிறரும்** - மற்றத் தேவர்களும். முனிவர்களும்; **தொக்கு** - ஒருங்கு கூடி; **முனிவ** - (கௌசிகனை நோக்கி) முனிவனே; **பொறுத்தருள்** - (தேவர்கள் உன்னை இகழ்ந்ததை) பொறுத்தருள்க; **நின்னைப் புகல் புகுந்தவனை** - உன்னைச் சரணம் அடைந்தவனை; **போற்றும்** - கைவிடாது காக்கும்; **அறத்திறன்** - தருமநெறி; **நன்று** - மிக நன்று; **அன்னான்** - அந்தத் திரிசங்கு அரசன்; **தாரா கணத்தொடும்** - நட்சத்திரக் கூட்டத்தோடும்; **அமைக** - பொருந்தி இருப்பானாக.*

கௌசிகன் மேலைத்திசை சென்று தவம் புரிதல்

***598. "அரச மா தவன் நீ ஆதி;***
***ஐந்து நாள் தென்பால் வந்து. உன்***
***புரை விளக்கிடுக!" என்னா.***
***கடவுளர் போய பின்னர்.***
***நிரை தவன் விரைவின் ஏகி.***
***நெடுங் கடற்கு இறைவன் வைகும்***
***உரவு இடம்அதனை நண்ணி.***
***உறு தவம் உஞற்றும் காலை.***

***அரச மாதவன்*** - *சிறந்த அரசமுனி;* ***நீ ஆதி*** - *நீ ஆவாய்;* ***ஐந்து நாள் தென்பால்*** - *(வடக்கேயுள்ள இருபத்தேழு நட்சத்திரங்களுள்) ஐந்து நட்சத்திரங்கள் தெற்குத் திசை;* ***வந்து உன்புரை*** - *வந்திருந்து உன் மேன்மையை ;* ***விளக்கிடுக*** - *தெரிவிக்க கடவன;* ***என்னா*** - *என்று சொல்லி (கௌசிகனைச் சமாதானப்படுத்திவிட்டு);* ***கடவுளர் போய பின்னர்*** - *தேவர்கள் புறப்பட்டுப் போன பின்பு;* ***நிரை தவன்*** - *நேர்மையான அத்தவ முனிவன்;* ***விரைவின் ஏகி*** - *வேகமாகச் சென்று;* ***நெடுங்கடற்கு இறைவன்*** - *பெரிய கடலுக்குத் தலைவனான வருணன்;* ***வைகும்*** - *(திக்குப் பாலகனாக) தங்கப்பெற்று;* ***உரவு இடம் அதனை*** - *வலிய இடமான மேற்குத் திசையை;* ***நண்ணி*** - *அடைந்து;* ***உறுதவம்*** - *மிக்க தவத்தை;* ***உஞற்றும் காலை*** - *செய்து வருங் காலத்து.*

*ஐந்து நட்சத்திரங்கள்: அனுடம். கேட்டை. மூலம். பூராடம். உத்திராடம். படைப்புக் காலம் தொடங்கி வடதிசையில் இருந்த இவை விசுவாமித்திரனுக்காக தென் திசைக்கு வந்தன என்பர்.*

*அம்பரீடன் நரமேதம் செய்ய மகவு பெறுதல்*

***599.*** **‘குதை வரி சிலை வாள் தானைக்**
**கோமகன் அம்பரீடன்.**
**சுதை தரு மொழியன். வையத்து**
**உயிர்க்கு உயிர் ஆய தோன்றல்.**
**வதை புரி புருடமேதம்**
**வகுப்ப ஓர் மைந்தற் கொள்வான்.**
**சிதைவு இலன். கனகம் தேர்கொண்டு.**
**அடவிகள் துருவிச் சென்றான்.**

***குதை*** - *குதையுள்ளதும்;* ***வரி சிலை*** - *கட்டமைந்ததுமான விற்களையும்;* ***வாள்*** - *வாள்களையும் உடைய;* ***தானை*** - *சேனையோடு கூடிய;* ***கோமகன்*** - *இராச குமாரனும்;* ***சுதை தரு மொழியன்*** - *அமுதம் போன்ற இன்சொற்களை உடையவனும்;* ***வையத்து உயிர் ஆய*** - *உலகத்தின் உயிர்களுக்கெல்லாம் உயிர்போல;* ***தோன்றல்*** - *அன்பில் சிறந்தவனுமாகிய;* ***அம்பரீடன்*** - *அம்பரீடன் என்பவன்;* ***வதை புரி*** - *மனிதன் ஒருவனைக் கொன்று;* ***புருட மேதம் வகுப்ப*** - *ஓமம் செய்தவனாகிய புருடமேதம் செய்வதற்காக;* ***ஓர் மைந்தன் கொள்வான்*** - *இளைஞன் ஒருவனைப் பொருள் கொடுத்து வாங்கும் பொருட்டு;* ***சிதைவு இலன்*** - *முயற்சியில் குறைவு அற்றவனாய்;* ***கனகம் தேர் கொண்டு*** - *பொற் காசுகளைத் தேரின்மேல் (நிறைய வைத்துக்) கொண்டு;* ***அடவிகள் தோறும்*** - *காடுகள் தோறும்;* ***துருவிச் சென்றான்*** - *தேடிச் செல்பவனானான்.*

*புருட மேத ஓமம்: யாகம் செய்பவன் அதற்குரிய பசு காணாமற் போய் விடுமாயின். அதற்கு ஈடாக மனிதன் ஒருவனைக் கொன்று. ஓமம் செய்து யாகத்தை நிறைவேற்றுவது நூல் துணிபு. வையகத்து உயிர்க்கெல்லாம் உயிராய மன்னவனாய் இருப்பினும் வைதிகச் செயலில் ஊற்றம் உடையவனாதலால் அதனை முடிக்கும்பொருட்டு ஆளைத் தேட முற்பட்டான்.*

***600.*** ***'நல் தவ ரிசிகன் வைகும்***
***நனை வரும் பழுவம் நண்ணி.***
***கொற்றவன் வினவலோடும்.***
***இசைந்தனர்; குமரர்தம்முள்***
***பெற்றவள். "இளவல் எற்கே"***
***என்றனள். பிதா. "முன்" என்றான்;***
***மற்யை மைந்தன் நக்கு.***
***மன்னவன்தன்னை நோக்கி.***

**கொற்றவன்** - *(அவ்வாறு சென்ற) அம்பரீடன்;* **நல் தவம் ரிசிகன்** - *சிறந்த தவ முனிவனான ரிசிகன்;* **வைகும் நனைவரும்** - *வசிக்கும் அரும்பு மலரும்;* **பழுவம் நண்ணி** - *சோலையை அடைந்து;* **வினவலோடும்** - *(வந்த செய்தி கூறி அவனுடைய மக்களில் ஒருவனை விலைக்கு) கேட்ட அளவில்;* **இசைந்தனர் குமரர் தம்முள்** - *தன் புதல்வர்களாக அமைந்த மூவருள்;* **இளவல் எற்கே** - *இளையவன் எனக்கே உரியவன் (அவனை விற்க முடியாது);* **என்றனள் பெற்றவள்** - *என்று சொன்னாள் தாயான ரிசிகன் மனைவி;* **பிதா முன் என்றான்** - *தந்தையோ மூத்தவன் தனக்கே உரியவன் என்று சொன்னான்;* **மற்றைய மைந்தன்** - *எஞ்சி நின்ற நடுப்பிள்ளை யான சுனச்சேபன் என்பன்;* **நக்கு** - *(பெற்றோர் இருவரும் பெற்று வளர்த்த தன்னை விலைப்படுத்தற்கு உடன்பட்டதை அறிந்து) சிரித்து;* **மன்னவன் தன்னை நோக்கி** - *(தான்) அம்பரீட மன்னனைப் பார்த்து.*

*பிருகுதுங்க மலையில் தங்கியிருந்த ரிசிகளை அம்பரீடன் கண்டான்; தன் கருத்தைத் தெரிவித்தான். தந்தையோ மூத்த மகனை விலைக்குத் தர இயலாது என்றான்; தாயோ இளைய மைந்தனைக் கொடுக்க முடியாது என்றாள். இது கண்டு வருந்திய நடுப்பிள்ளை தன் குடும்பத்தின் வறுமை அகல அம்பரீடனிடம் தன் இசைவைத் தெரிவித்தான். முன் - காலவாகு பெயர். சுனச்சேபனைப் பெற்ற அம்பரீடன் வழியில் கோசிகனைக் காணல்*

***601.*** ***"கொடுத்தருள் வெறுக்கை வேண்டிற்று.***
***ஒற்கம்ஆம் விழுமம்குன்ற.***
***எடுத்துஎனை வளர்த்த தாதைக்கு"***
***என்று அவன்-தொழுது. வேந்தன்***
***தடுப்ப அருந் தேரின் ஏறி.***
***தடை இலாப் படர்தலோடும்.***
***சடர்க் கதிர்க் கடவுள் வானத்து***
***உச்சி அம் சூழல் புக்கான்.***

***எனை எடுத்து வளர்த்த*** -என்னை எடுத்து வளர்த்த; ***தாதைக்கு*** - தந்தைக்கு (ரிசிகனுக்கு); ***ஒற்கம்ஆம் விழுமம் குன்ற*** - வறுமைத் துன்பம் கெடும்படி; ***வேண்டிற்று வெறுக்கை*** - (அவன்) விரும்பும் செல்வத்தை; ***கொடுத்து அருள்*** - (எனக்கு விலையாகக்) கொடுத்தருள்க; ***என்று*** - என்று (அரசனை நோக்கிக்) கூறி; ***அவன் தொழுது*** - தந்தையை வணங்கி; ***வேந்தன் தடுப்பரும்*** -அரசனது தடுக்க இயலாத; ***தேரின் ஏறி*** - இரதத்தின் மேல் ஏறிக் கொண்டு; ***தடை இலாப் படாத்லோடும்*** - ஒரு தடையும் இல்லாமல் இருவரும் செல்லுகையில்; ***சுடர்க் கதிர்க் கடவுள்*** - ஒளிவிடும் கதிர்களையுடைய சூரியன்; ***வானத்து உச்சி*** - வானத்தின் நடுப்பகுதியாகிய; ***அம் சூழல் புக்கான்*** - இடத்தை அடைந்தான்.

*ஒற்கம்: வறுமையால் உண்டான தளர்ச்சி. தன்னை இதுவரை பேணி வளர்த்த உதவிக்குக் கைம்மாறாகத் தன்னை விற்றுச் செல்வம் பெறுமாறு வேண்டினான். தேரின் ஏறி: தேரின் ஏற. செயவென் எச்சம் செய்தெனத் திரிந்தது.*

***602. 'அவ் வயின் இழிந்து வேந்தன்***
***அருங் கடன் முறையின் ஆற்ற.***
***செவ்விய குரிசில்தானும்***
***சென்றனன். நியமம் செய்வான்;***
***அவ்வியம் அவித்த சிந்தை***
***முனிவனை ஆண்டுக் காணா..***
***கவ்வையினோடும் பாத***
***கமலம்அது உச்சி சேர்த்தான்***

*(அப்பொழுது)* ***வேந்தன்*** *- அம்பரீடன்;* ***அவ்வயின்*** *- (கோசிகன் தவம் புரியும்) அந்த இடத்தில்;* ***இழிந்து*** *- தேரிலிருந்து இறங்க;* ***அருங் கடன் முறையின்*** *- அரிய கடைக்காலக் கடமைகளை முறைப்படி;* ***ஆற்ற*** *- செய்வதற்காக;* ***செவ்விய குரிசில்தானும்*** *- உத்தமனான சுனச்சேபனும்;* ***நியமம் செய்வான்*** *- நடுப்பகலில் வைதிகக் கடனைச் செய்யும் பொருட்டு;* ***சென்றனன்*** *- (தேரிலிருந்து இறங்கிப்) போனான்;* ***ஆண்டு*** *- (போனவன்) அந்த இடத்திலே;* ***அவ்வியம் அவித்த*** *- பொறாமை முதலிய தீக் குணங்களை நீக்கிய;* ***சிந்தை முனிவனை*** *- தூய மனத்தனான கோசிக முனிவனை;* ***காணா*** *- கண்டு;* ***கவ்வையினோடும்*** *- துன்பத்துடனே;* ***பாத கமலம் அது*** *- திருவடித் தாமரைகளை;* ***உச்சி சேர்த்தான்*** *- தலைமேல் சூடினான்.*
*கவ்வை: மரண அச்சம்* *சுனச்சேபன் தன் குறையைக் கோசிக முனிக்குக் கூறல்*

***603. 'விறப்பொடு வணக்கம் செய்த***
***விடலையை இனிது நோக்கி.***
***சிறப்புடை முனிவன். "என்னே***
***தெருமரல்? செப்புக!" என்ன.***
***"அறப் பொருள் உணர்ந்தோய்! என்தன்***
***அன்னையும் அத்தன்தானும்***
***உறப்பொருள் கொண்டு. வேந்தற்கு***
***உதவினர்" என்றான். உற்றோன்.***

***விறப்பொடு*** *- சாவின் அச்சத்தோடு;* ***வணக்கம் செய்த*** *- வணக்கம் புரிந்த;* ***விடலையை*** *- அந்த இளைஞனை;* ***சிறப்பு உடை முனிவன்*** *- சீரிய பண்புள்ள கோசிக முனிவன்;* ***இனிது நோக்கி*** *- இனிமை ததும்பப் பார்த்து;* ***தெருமரல் என்னே*** *- (நீ இவ்வாறு கலங்குவது) என்ன காரணத்தால்?;* ***செப்புக*** *- சொல்லுக;* ***என்ன*** *- என்று கேட்க;* ***உற்றோன்*** *- (அவனைச் சரணாக அடைந்த) சுனச்சேபன்;* ***அறம் பொருள்*** *- தரும நூல்களின் உட் பொருளை;* ***உணர்ந்தோய்*** *- அறிந்தவனே;* ***என்தன்*** *-என்னுடைய;* ***அன்னையும்*** *- தாயும்;* ***தந்தை தானும்*** *- தந்தையும்;* ***உறப் பொருள்*** *- மிகுதியான செல்வத்தை;* ***கொண்டு*** *- பெற்றுக் கொண்டு;* ***வேந்தற்கு*** *- அம்பரீட மன்னவனுக்கு;* ***உதவினர்*** *- (நரமேத வேள்விக்காக) என்னைக் கொடுத்துவிட்டார்கள்;* ***என்றான்*** *- என்று (நடந்த செய்தியைச்) சொன்னான்.*

*சிறப்பு: சரண் அடைந்தவனைக் கைவிடாது காக்கும் உறுதியும் தவ ஒழுக்கமும். அறம் - காரியவாகு பெயர். 'விறப்பே வெரூஉப் பொருட்டு மாகும்' தொல். உரி.52 சேனா.*

*கோசிகன் அவனுக்குப் பதில் தன் மக்களுள் ஒருவரை ஏகுமாறு சொல்ல அவர் மறுத்தல்*

***604. 'மைத்துனனோடு முன்னோள்***
***வழங்கிய முறைமை கேளா.***
***"தத்துறல் ஒழி நீ; யானே***
***தடுப்பென். நின் உயிரை" என்னா.***
***புத்திரர் தம்மை நோக்கி.***
***"போக வேந்தோடும்" என்ன.***
***அத் தகு முனிவன் கூற.***
***அவர் மறுத்து அகறல் காணா.***

***முன்னோள்*** *- (தனக்கு) முன் பிறந்தவளும்;* ***மைத்துனனோடு*** *- (அவள் கணவனாகிய மைத்துனன்) ரிசிகனும்;* ***வழங்கிய*** *- (பிள்ளையை) விலைக்குக் கொடுத்துவிட்ட;* ***முறைமை*** *- செய்கையை;* ***கேளா*** *- கேட்டு;* ***அத் தகு முனிவன்*** *- தக்கவனாகிய அம்முனிவன்;* ***நீ*** *- (சுனச்சேபனை நோக்கி) நீ;* ***தத்துறல் ஒழி*** *- அச்சப்படுவதை நீக்குவாயாக;* ***யானே நின் உயிரை*** *- நானே உனது உயிரை;* ***தடுப்பேன் என்னா*** *- காப்பேன் என்று கூறி;* ***புத்திரர்தம்மை நோக்கி*** *- தன் மைந்தர்களைப் பார்த்து;* ***வேந்தொடும் போக*** *- (உங்களில் ஒருவன்) இந்த அரசனுடன் (நரமேதத்திற்காக இவனுக்கு ஈடாகச்) செல்லுக;* ***என்னா கூற*** *- என்று சொல்ல;* ***அவர் மறுத்து அகறல்*** *- அம் மக்கள் அனைவரும் கட்டளையை மறுத்து நீக்குதலை;* ***காணா*** *- கண்டு.*

*பெற்றோரால் கைவிடப்பட்ட தன் மருமகனுக்கு அபயம் அளித்து என் மக்களில் யாரேனும் ஒருவன் இவனுக்காகச் செல்லுக என்றான் முனிவன்;ஆனால் அதற்கு ஒருவனும் உடன்படவில்லை. மறுத்த மைந்தர்களைக் கௌசிகன் சபித்தல்*

***605.*** ***‘எழும் கதிரவனும் நாணச்***
***சிவந்தனன் இரு கண்; நெஞ்சம்***
***புழுங்கினன்; வடவை தீய***
***மயிர்ப்புறம் பொறியின் துள்ள.***
***அழுங்கல் இல் சிந்தையீர்! நீர்***
***அடவிகள்தோறும் சென்றே.***
***ஒழுங்கு அறு புளிஞர் ஆகி.***
***உறு துயர் உறுக!’ என்றான்.***

***எழும் கதிரவனும்*** - *உதிக்கும் சூரியனும்;* ***நாண*** - *வெட்கம் அடையும்படி;* ***இருகண் சிவந்தனன்*** - *(தன்னுடைய) இரண்டு கண்களும் செந்நிறம் டைந்து;* ***நெஞ்சம் புழுங்கினன்*** - *மனம் தவித்தவனாய்;* ***வடவை தீய*** - *வடவைத் தீயும் தீய்ந்து போகுமாறு;* ***மயிர்ப்புறம் பொறியின்*** - *எனது உடம்பின் உரோமத் துவாரங்கள்;* ***துள்ள*** - *தீப்பொறிகளை வெளியிட;* ***அழுங்கல் இல்*** - *(கோசிகன் தன் மைந்தர்களைப் பார்த்து) இரக்கம் இல்லாத;* ***சிந்தையீர்*** - *மனம் உடையவர்களே!;* ***நீர் அடவிகள்தோறும்*** - *நீங்கள் காடுகள் எங்கும்;* ***சென்று*** - *திரிந்து;* ***ஒழுங்கு அறு*** -*நாகரிகம் இல்லாத;* ***புளிஞர் ஆகி*** - *வேடர்களாய்;* ***உறு துயர் உறுக*** - *மிக்க துன்பத்தை அடைவீராக;* ***என்றான்*** - *என்று சபித்தான்.*

*கதிரவன் நாணுதல்: கோசிகன் கண்களின் செந்நிறம் தனது கதிர் மண்டலத்தில் செந்நிறத்தைக் காட்டிலும் மிக்கிருத்தல்: அவனது கோபம் தனது கதிர்களின் வெப்பத்தை விடக் கூடியிருத்தல். வடவை - வடவாமுகாக்கினி. கௌசிகன் சுனச்சேபனுக்கு மந்திரன் உரைத்து விடை தரல்*

***606.*** ***‘மா முனி வெகுளிதன்னால்***
***மடிகலா மைந்தர் நால்வர்***
***தாம் உறு சவரர் ஆகச்***
***சபித்து. எதிர். “சலித்த சிந்தை***
***ஏமுறல் ஒழிக! இன்னே***
***பெறுக!” என இரண்டு விஞ்சை***
***கோ மருமகனுக்கு நல்கி.***
***பின்னரும் குணிக்கலுற்றான்;***

***மாமுனி*** - *பெருந்தவ முனிவனான வசிட்டனது;* ***வெகுளி தன்னால்*** - *கோபத்தால்;* ***மடிகலா*** - *(முன்பு) இறவாது இருந்த;* ***மைந்தர் நால்வர்தாம்*** - *தன் மைந்தர் நால்வரும்;* ***உறு சவரர் ஆக*** - *இழிந்த வேடராகும்படி;* ***சபித்து*** - *(விசுவாமித்திரன்) சபித்துவிட்டு;* ***எதிர்*** - *(அதன்பின்பு) தனக்கு எதிரில் நின்ற;* ***கோ மருகனுக்கு*** - *மருமகனான சுனச்சேபனுக்கு;* ***சலித்த சிந்தை*** - *கலங்கிய மனத்தோடு;* ***ஏமுறல் ஒழிக*** - *துன்பம் அடைவதை நீக்குக;* ***இன்னே*** - *இப்பொழுதே;* ***இரண்டு விஞ்சை*** - *இரண்டு மந்திரங்களை;* ***பெறுக*** - *பெற்றுக் கொள்க;* ***என நல்கி*** - *என்று அவற்றை (உபதேசம் மூலம்) கொடுத்தருளி;* ***பின்னரும்*** - *மீண்டும்;* ***குணித்தல் உற்றான்*** - *வரையறுத்து உரைக்க முற்பட்டான்.*

*மடிகலார்: காமதேனுவைக் கோசிகன் அடைய முயன்ற காலத்தில் வசிட்டனால் சபிக்கப்பட்டவன். எஞ்சியவர் நால்வர் மட்டுமே. சவரர்-சபரர். வேடர்.*

***607.* அரசனோடு ஏகி யூபத்து**
**அணைக்குபு இம் மறையை ஓதின்.**
**விரசுவர் விண்ணுளோரும்**
**விரிஞ்சனும் விடைவலோனும்;**
**உரை செறி வேள்வி முற்றும்;**
**உனது உயிர்க்கு ஈறு உண்டாகா;**
**பிரசமென் தாரோய்!" என்ன.**
**பழிச்சொடும் பெயர்ந்து போனான்.**

***பிரசம் மென் தாரோய்*** - *தேனுடைய மென்மையான பூமாலை தரித்தவனே;* **அரசனோடு ஏகி** - *அம்பரீட மன்னனோடு சென்று;* **யூபத்து அணைக்குபு** - *(அவன்) யூபத் தூணிலே கட்டும் போது;* **இம் மறையை ஓதின்** - *இந்த மந்திரங்களைச் சொன்னால்;* **விண்ணுளோரும்** - *தேவர்களும்;* **விரிஞ்சனும்** - *பிரமனும்;* **விடைவலோனும்** - *காலை ஊர்தியான சிவபிரானும்;* **விரசுவர்** - *(தத்தம் அவிர்ப் பாகத்தை பெற) வந்து சேர்வார்கள்;* **உரை செறி** - *புகழ் மிக்க;* **வேள்வி முற்றும்** - *யாகமும் நிறைவுறும்;* **உனது உயிர்க்கு** - *உன் உயிர்க்கும்;* **ஈறு உண்டாகா** - *இறுதி உண்டாகாது;* **என்ன** - *என்று (தன் மருமகனிடம்) சொல்ல;* **பழிச்சொடும்** - *(அது கேட்டு அவன்) வணங்கித் துதிமொழிகள் கூறியவனாக;* **பெயர்ந்து போனான்** - *(அவ்விடத்தை விட்டு) நீங்கி அரசனோடு சென்றான்.*

*அணைக்குபு: அணைக்க; அரசன் முனி மைந்தனைச் சந்தனம். மாலை முதலியவற்றால் அலங்கரித்து நரமேத்திற்காக அழைத்துச் சென்றானாதலால் கோசிகன் அவைனைப் 'பிரசம் மென் தாரோய்' என விளித்தான். யூபம்: யாகப் பசுவைக் கட்டும் தூண். இரண்டு மந்திரங்கள் 1. பலியை உண்பவனாகிய இந்திரனைத் துதிப்பது. 2. யூபத் தூணின் தேவதையான உபேந்திரனைத் துதிப்பது.*

வேள்வி முற்றலும் கௌசிகன் வடதிசை ஏகலும்

***608.* 'மறை முனி உரைத்த வண்ணம்**
**மகத்து உறை மைந்தன் ஆய.**
**சிறை உறு கலுழன். அன்னம்.**
**சே. முதல் பிறவும் ஊரும்**
**இறைவர் தொக்கு அமரர் சூழ.**
**இளவல்தன் உயிரும். வேந்தன்**
**முறை தரு மகமும். காத்தார்;**
**வடதிசை முனியும் சென்றான்.**

***மறைமுனி*** - வேதங்களையறிந்த கோசிக முனிவன்; ***உரைத்தவண்ணம்*** - கூறியபடியே; ***மைந்தன்*** - அந்தக் குமாரன்; ***மகத்து உரை*** - யாகம் செய்யும் இடத்தில் (தியானிக்க); ***சிறை உறுகலுழன்*** - வலிமையான சிறகுள்ள கருடனும்; ***அன்னம்*** - அன்னமும்; ***சே*** - காளையும்; ***முதல் பிறவும்*** - முதலிய பிற ஊர்திகளையும்; ***ஊரும்*** - ஏறி நடத்தும்; ***இறைவர்*** - (திருமால். பிரமன். சிவன் முதலிய) தலைமைத் தேவர்கள்; ***அமரர் சூழ*** - மற்றைத் தேவர்கள் தம்மைச் சூழ்ந்து வரும்படி; ***தொக்கு*** - (அவ் வேள்விச் சாலைக்கு) திரண்டு வந்து; ***இளவல்தன் உயிரும்*** - அந்த இளைஞனது உயிரையும்; ***முறைதரு*** - வேதமுறைப்படி செய்யப்படும்; ***வேந்தன் மகமும்*** - அவ்வரசனது யாகத்தையும்; ***காத்தார்*** - (அழியாதவாறு) பாதுகாத்தார்; ***முனியும்*** - கோசிக முனிவனும்; ***வடதிசை சென்றான்*** - (மேற்குத் திசையில் தனது தவம் முடியாததால்) வடதிசை நோக்கி போனான்.

*ஊர்திகள்; இந்திரனுக்கு - வெள்ளை யானை. அக்கினிக் கடவுளுக்கு - ஆட்டுக்கடா. இயமனுக்கு - எருமைக்கடா. கெசிகன் தவ மகிமை*

***609.*** ***வடா திசை முனியும் நண்ணி.***
***மலர்க் கரம் நாசி வைத்து. ஆங்கு.***
***இடாவு பிங்கலையால் நைய.***
***இதயத்தூடு எழுந்து ஒன்று எண்ணி.***
***விடாது பல் பருவம் நிற்ப.***
***மூல மா முகடு விண்டு.***
***தடாது இருள் படலை மூட.***
***சலித்தது எத் தலமும். தாவி.***

***முனியும்*** - கோசிக முனிவனும்; ***வடாதிசை நண்ணி*** - வடக்குத் திக்கை அடைந்து; ***ஆங்கு*** - அவ்விடத்தில்; ***மலர்க்கரம் நாசி வைத்து*** - தாமரை போன்ற கையின் விரல்களை மூக்கின் மேல் வைத்து; ***இடாவு பிங்கலையால் நைய*** - இடைகலையானது பிங்கலையோடு அடங்கும்படி (பிராணாயாமம் செய்து); ***இதயத்து ஊடு எழுத்து ஒன்று*** - மனத்திலே பிரணவ மகாமந்திரத்தை; ***எண்ணி*** - தியானித்துக் கொண்டு; ***பல்பருவம்*** - பல ஆண்டுகள் வரை; ***விடாது நிற்ப*** - (தவத்தில்) நிலைத்து நிற்க; ***மூலம் மா முகடு விண்டு*** - (அப்பொழுது) மூலாக்கினியால் (அவனது) பெரிய காபலம் வெடித்து விரிந்து; ***இருள் படலை*** - (அதிலிருந்து) இருளின் கூட்டத்தையொத்த புகை மண்டலம்; ***தடாது*** - தடுக்கப்படாமல்; ***தாவி*** - மேல் எழுந்து; ***மூட*** - எங்கும் கவிந்து நின்ற அளவிலே; ***எத்தலமும்*** - எல்லாவுலகும்; ***சலித்தது*** - சலிப்புற்றன.

*இடைகலை என்னும் நாடியிலிருந்து இட மூக்கால் விடும் மூச்சுக் காற்றை இடைகலை என்றும். பிங்களை என்னும் நாடியிலிருந்து வலமூக்கால் விடும் மூச்சுக் காற்றை பிங்கலை என்றும். இவை பிராணாயாமம் செய்யும் போது நிகழ்வன என்றும் கூறுவர். இருள்படலை: இருளின் தொகுதி. இடை பிங்கலை என்பன: தசநாடிகளில் சேர்ந்தவை. முகடு: தலையோட்டின் உச்சி.*

**கலிவிருத்தம்**

***610. ‘எயில் எரித்தவன் யானை உரித்த நாள்.
பயிலுறுத்து உரி போர்த்த நல் பண்பு என.
புயல் விரித்து எழுந்தாலென. பூதலம்
குயிலுறுத்தி. கொழும் புகை விம்மவே.***

***எயில் எரித்தவன்*** - திரிபுரத்தை எரித்தவன் சிவன்; ***யானை உரித்த நாள்*** - யானையை உரித்த காலத்தில்; ***பயில் உறுத்தி*** - (உடலோடு) செறியச் செய்து; ***உரி போர்த்த*** - அந்த யானைத் தோலை மேலே போர்த்துக் கொண்ட; ***நல்பண்பு என*** -நல்ல தன்மை போலவும்; ***புயல்*** - மேகங்கள்; ***விரித்து எழுந்தால் என*** - எங்கும் பரவி எழுந்தது போலவும்; ***பூதலம் குயிலுறுத்தி*** - பூமி முழுவதையும் நெருங்கச் சய்து; ***கொழும் புகை*** - அந்த மூலாக்கினியின் புகையானது; ***விம்ம*** - மிகுதியாக.

*புகை எங்கும் பரவுதல்: சிவன் யானையை உரித்து அதன் தோலைப் போர்த்தது போல - பூமியில் எங்கும் கருமேகம் விரிந்து எழுந்தது போல இருந்தது எனல். எயில்: பட்டணத்தைக் குறிக்கும் - ஆகுபெயர்.*

***611. ‘தமம் திரண்டு உலகு யாவையும் தாவுற.
நிமிர்ந்த வெங் கதிர்க் கற்றையும் நீங்குற.
கமந்த மாதிரக் காவலர் கண்ணொடும்.
சுமந்த நாகமும். கண் சும்புளித்தவே.***

***தமம்*** - இருளானது; ***திரண்டு*** - மிகுதியாக ஒருங்கு சேர்ந்து; ***உலகு யாவையும்*** - உலகங்கள் எல்லாம்; ***தாவுற*** - பரவி நிற்க (அதனால்); ***நிமிர்ந்த வெம்கதிர்*** - சூரியனது வெப்பமான கதிர்களின்; ***கற்றையும் நீங்குற*** - தொகுதியும் மறைந்து போக; ***கமந்து மாதிரக் காவலர்*** - வானுலகில் நிறைந்த திக்குப் பாலகர்களின்; ***கண்ணொடும்*** - கண்களுடன்; ***சுமந்த நாகக் கண்ணும்*** - பூமியைத் தாங்கும் திக்கு யானைகளின் கண்களும்; ***சும்புளித்தவே*** - கூசின.

*கமந்த: ‘கமம்’ என்ற உரிச்சொல்லின் வினை விகற்பமாகும். (தொல். உரி.59) சும்புளித்தல்: மாதிரக் காவலர்: கிழக்கு -இந்திரன். தென் கிழக்கு - அக்கினி. தெற்கு - இயமன். தென்மேற்கு -நிருதி. மேற்கு - வருணன். வடமேற்கு - வாயு. வடக்கு - குபேரன். வடகிழக்கு - ஈசானன்.*

***612. ‘திரிவ நிற்ப செக தலத்து யாவையும்.
வெருவலுற்றன; வெங் கதிர் மீண்டன; கருவி உற்ற ககனம்
எலாம் புகை உருவி உற்றிட. உம்பர் துளங்கினார்.***

***கருவி*** - உலகமும் உலகத்து உயிர்களும் வாழ்வதற்குக் காரணமான மேகங்கள்; ***உற்ற*** - நிறைந்துள்ள; ***ககனம் எலாம்*** - விண் முழுதும்; ***புகை*** - புகையானது; ***உருவி உற்றிட*** - ஊடுருவிச் சென்றதால்; ***செகம் தலத்து*** - பூமியில்; ***திரிவ*** - சஞ்சரிக்கும் பொருள்களும்; ***நிற்ப*** - நிலை நிற்கும் அசையாப் பொருள்களும்; ***யாவையும்*** - (ஆகிய) எல்லாப் பொருள்களும்; ***வெருவல் உற்றன*** - அச்சத்தை அடைந்தன; ***வெம் கதிர்*** - கொடிய வெப்பமான சூரியக் கதிர்களும்; ***மீண்டன*** - (ஒளி வீசாமல்) திரும்பிவிட்டன; ***உம்பர்*** - தேவர்களும்; ***துளங்கினார்*** - (அச்சத்தால்) நடுக்கமுற்றார்கள்.

*கருவி: இடி. மின்னல் முதலிய தொகுதி.133 தேவர்கள் கௌசிகனைப் பிரம இருடியாக்கல்*

***613. 'புண்டரீகனும். புள் திருப் பாகனும்.***
***குண்டை ஊர்தி. குலிசியும். மற்று உள***
***அண்டர்தாமும். வந்து. அவ் வயின் எய்தி. வேறு***
***எண் தபோதனன்தன்னை எதிர்ந்தனர்.***

***புண்டரீகனும்*** - தாமரையில் வாழும் பிரமனும்; ***புள் திருப் பாகனும்*** - கருடனுக்குச் சிறந்த பாகனாகிய திருமாலும்; ***குண்டை ஊர்தி(யும்)*** - காளை வாகனத்தையுடைய சிவனும்; ***குசிலியும்*** - வச்சிரப் படையுடைய இந்திரனும்; ***மற்று உள அண்டர்தாமும்*** - மற்றுமுள்ள தேவர்களும்; ***வேறு வந்து அவ்வயின் எய்தி*** - தனித் தனியாக வந்து அவ்விடத்தில் சேர்ந்து; ***எண் தபோதனன் தன்னை*** - யாவராலும் மதிக்கப்படும் தவச் செல்வனான முனிவனை; ***எதிர்ந்தனர்*** - சந்தித்தார்கள்.

*படைத்தல். காத்தல். அழித்தல் என்னும் தொழில்களின் முறைமைப்படி பிரமன். திருமால். சிவன் என்று வைத்தார். புள் - பறவைக்கு அரசாகிய கருடன். குண்டை ஊர்தி - பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.*

***614. 'பாதி மா மதி சூடியும். பைந் துழாய்ச்***
***சோதியோனும். அத் தூய் மலராளியும்.***
***"வேத பாரகர்" வேறு இலர். நீ அலால்;***
***மா தபோதன!" என்ன வழங்கினர்.***

***மா பாதி மதி சூடியும்*** - கலை குறைந்த சிறந்த பிறைச் சந்திரனைத் சூடிய சிவனும்; ***பைந்துழாய்*** - பசுமையான திருத்துழாய் அணிந்த; ***சோதியோனும்*** - சோதியான திருமாலும்; ***அத் தூய்மலர் ஆளியும்*** - தூய தாமரை மலரில் உறையும் பிரமனும் (ஆகிய மும்மூர்த்திகளும்); ***மா தபோதன*** - (அம் முனிவனை நோக்கி) சிறந்த தவச் செல்வனான பெருமுனிவனே; ***வேத பாரகர்*** - வேதங்களின் கரை கண்டு உணர்ந்தவர்; ***நீ அலால் வேறு இலர்*** - உன்னை அல்லாமல் (உலகில்) வேறு யாரும் இலர்; ***என்ன வழங்கினர்*** - என்று உபகார மொழி கூறிப் புகழ்ந்தார்கள்.

*'வேத பாரகனும் மா தபோதனனும் நீயே' என்றதனால் 'பிரம இருடியே நீ' என்பது விளங்கும். திருமகள் வாழும் இடமாதலின் தாமரை மலர் தூய்மலர் எனப்பட்டது.*

***615. ‘அன்ன வாசகம் கேட்டு உணர் அந்தணன்.***
***சென்னி தாழ்த்து. இரு செங்கை மலர் குவித்து.***
***“உன்னு நல் வினை உற்றது” என்று ஓங்கினான்.***
***துன்னு தேவர்தம் சூழலுள் போயினார்.***

***அன்ன வாசகம்*** - *(பெருந்தேவர்களின்) அந்த வார்த்தைகளை;* ***கேட்டு உணர்*** - *செவிகளில் கேட்டு அறிந்த;* ***அந்தணன்*** - *கௌசிக முனிவன்;* ***சென்னி தாழ்ந்து*** - *தலைவணங்கி;* ***இரு செங்கமலம் குவித்து*** - *தாமரை போன்ற இரு கைகளையும் கூப்பி;* ***உன்னும் நல்வினை*** - *யாவராலும் கருதப்படுகின்ற நல்ல தவப்பயன்;* ***உற்றது*** - *(எனக்கு வந்து) பொருந்தியது;* ***என்று ஓங்கினான்*** - *என்று பூரிப்படைந்தான்;* ***துன்னு தேவர்*** - *(பின்பு) அங்கு வந்து சேர்ந்த தேவர்களும்;* ***தம் சூழலுள்*** - *தத்தம் இடத்திற்கு;* ***போயினார்*** - *சென்றார்கள்.*

*சதானந்தர் குமரர்களை வாழ்த்திப் பெயர்தல ்*

***616. ‘ஈது முன்னர் நிகழ்ந்தது; இவன் துணை***
***மா தவத்து உயர் மாண்பு உடையார் இலை;***
***நீதி வித்தகன்தன் அருள் நேர்ந்தனிர்;***
***யாது உமக்கு அரிது?’ என்றனன். ஈறு இலான்.***

***முன்னர்*** - *முன்னே;* ***நிகழ்ந்தது ஈறு*** - *நடந்த வரலாறு இதுவாம்;* ***இவன் துணை*** - *இந்தக் கௌசிகனுக்கு ஒப்பாக;* ***மா தவத்து உயர்*** - *பெருந்தவத்தால் உயர்ந்த;* ***மாண்பு உடையார்*** *-மாட்சிமையுடையவர்;* ***இலை*** - *வேறு யாரும் இல்லை;* ***நீதி வித்தகன்தன்*** - *நியம நீதி தவறாதவனும் மெய்யுணர்வுடையவனும் ஆகிய இம் முனிவனது;* ***அருள் நேர்ந்தனிர்*** - *கருணையை நீங்கள் பெற்றுள்ளீர்கள்;* ***உமக்கு அரிது யாது*** - *(ஆதலால்) உங்களுக்குச் செய்வதற்கு அரிய செயல் யாது உள்ளது;* ***என்றனன்*** - *என்று (இராம இலக்குவர்களை நோக்கிச்) சொல்லி முடித்தான்;* ***ஈறு இலான்*** - *(சொன்னவன் யாரென்றால்) எல்லையில்லாத நற்குணத்தவனான சதானந்த முனிவன்.*

*ஈறு இலான்: ஆனந்தத்திற்கு முடிவு இல்லாதவன் என்பர்.*

***617. என்று கோதமன் காதலன் கூறிட.***
***வென்றி வீரர் வியப்பொடு உவந்து எழா.***
***ஒன்று மா தவன் தாள் தொழுது ஓங்கிய***
***பின்றை. ஏத்திப் பெயர்ந்தனன். தன் இடம்.***

*__என்று கோதமன்__ - என்று (இவ்வாறு) கௌதம முனிவனுடைய; __காதலன் கூறிட__ - மைந்தனாகிய சதானந்த முனிவர் சொல்ல; __வென்றி வீரர்__ - வெற்றி வீரர்களாகிய இராமலக்குவர்; __வியப்பொடு__ - அதியத்தோடு (கேட்டு); __உவந்து எழா__ - மகிழ்ச்சியடைந்து எழுந்து; __ஒன்றும் மாதவன்__ - பெருமை பொருந்திய தவத்தோனான அம்முனிவரின்; __தாள் தொழுது__ - அடிகளில் விழுந்து வணங்கி; __ஓங்கிய பின்றை__ - (எழுந்த) பின்பு; __ஏத்தி__ - அச் சதானந்த முனிவன் (அக் குமாராக்ளை) - வாழ்த்திவிட்டு; __தன் இடம் பெயர்ந்தனன்__ - தன் இடத்திற்குப் போனான்.*

*இராமன் சீதையை நினைத்தல்*

***618. முனியும் தம்பியும் போய். முறையால் தமக்கு***
***இனிய பள்ளிகள் எய்தியபின். இருட்***
***கனியும். போல்பவன். கங்குலும். திங்களும்.***
***தனியும். தானும். அத் தையலும். ஆயினான்.***

*__முனியும்__ - கோசிக முனிவனும்; __தம்பியும்__ - இலக்குமணனும்; __போய்__ - சென்று; __முறையால்__ - வழக்கப்படியே; __தமக்கு இனிய__ - தத்தமக்கு இனிமையான; __பள்ளிகள்__ - படுக்கையிடங்களை; __எய்திய__ - அடைந்த; __பின்__ - பின்பு; __இருள் கனியும்__ இருள் மயமான கனியை; __போல்பவன்__ - ஒப்பவனான இராமபிரான்; __கங்குலும்__ - இரவும்; __திங்களும்__ - சந்திரனும்; __தனியும்__ - தனிமைப்பாடு என்ற ஒன்றும்; __தானும்__ - தானும்; __அத் தையலும்__ - அச் சீதையாக; __ஆயினான்__ - ஆனான்.*

*இரவில் நிலா வீசும்பொழுது இராமன் தனியனாகத் தான் இருந்த நிலையில் சீதை பற்றிய சிந்தனையே ஆகி அவளை உருவெளிப்பாட்டில் கண்டு காதல் மயக்கமுற்றுத் துயிலின்றி இருந்தான் என்பது கருத்து. இருள்கனி: கருநிறத்தாலும். யாவராலும் விரும்பப்படுவதலாலும் இது இராமனுக்கு உவமையாயிற்று. இருள்கனியும்: உம்மை இசைநிறை.*

*சீதையின் உருவெளிப்பாடு கண்ட இராமனின் நிலை*

***619. 'விண்ணின் நீங்கிய மின் உரு. இம் முறை.***
***பெண்ணின் நல் நலம் பெற்றது உண்டேகொலோ?***
***எண்ணின். ஈது அலது என்று அறியேன்; இரு***
***கண்ணினுள்ளும் கருத்துளும் காண்பெனால்.***

*__விண்ணின் நீங்கிய__ - மேகத்திலிருந்து நீங்கின; __மின்உரு__ - மின்னலின் வடிவம்; __இம்முறை__ - இவ்வாறு; __பெண்ணின் நல்நலம்__ - பெண்ணின் பேரழகை; __பெற்றது__ - அடைந்துள்ள தன்மை; __உண்டே கொலோ__ - உண்டோ?; __எண்ணின்__ - ஆராய்ந்து பார்த்தால்; __ஈது அலது ஒன்று அறியேன்__ - (என் கண்ணிற்குப் புலப்படுகின்ற) இந்தப் பெண் வடிவம் கொண்டு வந்தது வேறு அன்று என்று சொல்வதற்கு இல்லை (ஏனென்றால்); __கண்ணினுள்ளும்__ - (இந்த வடிவத்தை) கண்களிலும்; __கருத்துளும்__ - மனத்துள்ளும்; __காண்பென்__ - (நான்) காண்கிறேன்.*

*சீதையின் உருவம் அடுத்தடுத்துத் தோன்றியும் மறைந்தும் நிகழ்வதற்கு மின்னல் உருவம் ஏற்புடைத்தால் அறியத் தகும். புறக்கண்ணாலும் அகக்கண்ணாலும் காண்கின்றேன் என்பதைக் கண்ணினுள்ளும் கருத்துளும் காண்பேன் எனக் குறித்தார். காண்பென்: கால வழுவமைதி.*

***620. வள்ளல் சேக்கைக் கரியவன் வைகுறும்***
***வெள்ளப் பாற்கடல் போல் மிளிர் கண்ணினாள்.***
***அள்ளல் பூமகள் ஆகும்கொலோ - எனது***
***உள்ளத் தாமரையுள் உறைகின்றதே?***

**வள்ளல் சேக்கை** - *வரையாது கொடுக்கும் தன்மை கொண்ட (ஆதிசேடனை) படுக்கையாகக் கொண்ட;* **கரியவன்** - *கரிய நிறமுள்ள திருமால்;* **வைகுறும்** - *பள்ளி கொள்ளும்;* **வெள்ளம்** - *வெள்ளமாகிய;* **பாற்கடல்போல்** - *திருப்பாற்கடலைப்போல;* **மிளிர்** - *விளங்குகின்ற;* **கண்ணினாள்** *கண்களையுடைய பெண்;* **எனது உள்ளத் தாமரையுள்** - *என் இதயமாகிய தாமரையில்;* **உரைகின்றதால்** - *வசிக்கின்ற காரணத்தால்;* **அள்ளல்பூமகல்** - *செந்தாமரை மலரில் (எப்போதும்) வாழ்கின்ற திருமகள்;* **ஆகும் கொலோ** - *ஆவாளோ?*

*பாற்கடலில் பாம்புப் படுக்கையில் பள்ளி கொண்டருளும் திருமால் - வெண்ணிறமுள்ள கண்ணின் கருநிறக் கண்மணியில் தோன்றும் பாவை. திருமாலின் திருமேனி நிறச் சிறப்பால் கறுத்துத் தோன்றும் சேடனாகிய பாம்பு - பாவையைத் தன்னுள்ளே கொண்டிருக்கும் கருவிழி. பாற்கடல் வெள்ளம் - கருமணியைச் சூழ்ந்துள்ள வெண்ணிறப் பரப்பு.*

***621. 'அருள் இலாள் எனினும். மனத்து ஆசையால்.***
***வெருளும் நோய் விடக் கண்ணின் விழுங்காலால்.***
***தெருள் இலா உலகில். சென்று. நின்று. வாழ்***
***பொருள் எலாம். அவள் பொன் உரு ஆயவே!***

**அருள் இலாள் எனினும்** - *(அவள் என்னிடம்) கருணை இல்லாதவள் ஆயினும்;* **மனத்து ஆசையால்** - *என் மனத்தின் (அவளிடம் உண்டான) காதலால்;* **வெருளும் நோய்விட** - *கலக்கத்தை உண்டாக்கும் காம நோய் நீங்குமாறு;* **கண்ணின்** - *தன் கண்களால்;* **விழுங்கலால்** - *(அவள் என்னை) உட்கொண்டதால்;* **தெருள் இலா உலகில்** - *தெளிவில்லாத இவ்வுலகிலே;* **சென்று நின்று** - *அசைவனவும் இயங்கா தனவுமாகியும;* **வாழ் பொருள் எலாம்** - *வாழ்கிற எல்லாப் பொருள் களும்;* **அவள் பொன் உரு ஆய** - *(எனக்கு) அந்த நங்கையின் பொன்மயமான வடிவமாகிவிட்டன.*

*அருளிலாள்: இராமன் உற்ற நோயினை அவனை உடனே தழுவித் தணித்து அருளாதவள். சென்று நின்று வாழ்பொருள் - சர அசரங்களாகிய பொருள்கள். இதனால் 'நோக்குவ எல்லாம் அவையே போறல்' என்ற அவத்தை கூறப்பெற்றது. சீதையின் திருமேனி உருக்கிய பொன்னின் நிறத்தை உடையதாதலால் 'பொன்னுரு' எனப்பட்டது.*

*622.* ***'பூண் உலாவிய பொற் கலசங்கள் என்***
***ஏண் இல் ஆகத்து எழுதலஎன்னினும்;***
***வாள் நிலா முறுவல் கனி வாய் மதி***
***காணல் ஆவதுஓர் காலம் உண்டாம் கொலோ?***

***பூண் உலாவிய*** *- அணிகலன்கள் அசையப் பெற்ற;* ***பொன்கலசங்கள்*** *- பொன் கலசங்களைப் போன்ற (அப் பெண்ணின் கொங்கைகள்;* ***என் ஏண் இல்*** *- பெருமையற்ற எனது;* ***ஆகத்து*** *- மார்பிலே;* ***எழுதல என்னினும்*** *- அழுந்திப் பதியாமல் போயினும்;* ***வாள் நிலா முறுவல்*** *- ஒளியுடைய சந்திரகாந்தி போன்ற புன்சிரிப்பையும்;* ***கனிவாய்*** *- கொவ்வைப் பழம் போன்ற அதரத்தையும் உடைய;* ***மதி*** *- (அவளது முகமாகிய) சந்திரனை;* ***காணல் ஆவது*** *- (மீண்டும்) பார்ப்பதற்கு;* ***ஓர்காலம்*** *- ஒரு காலமேனும்;* ***உண்டாம் கொலோ*** *- உண்டாகுமோ?*

*சீதையைத் தழுவும் கைகூடாவிட்டாலும் அவளது முகதரிசனமானது இன்னொருமுறை கூடினால் போதுமென இராமன் தன் காதல் மிகுதியை வெளியிடுகிறான். முறுவலைக் கண்ட இராமன் அதன் அருகிலுள்ள அதரத்தையும் கண்டு 'முறுவல் கனிவாய்மதி' எனக் கூறினான். கலசம். மதி - உவமையாகு பெயர்கள்.*

*623.* ***'வண்ண மேகலைத் தேர் ஒன்று. வாள் நெடுங்***
***கண் இரண்டு. கதிர் முலைதாம் இரண்டு.***
***உள்நி வந்த நகையும் என்று ஒன்று உண்டால்;***
***எண்ணும் கூற்றினுக்கு இத்தனை வேண்டுமோ?***

***எண்ணும்*** *- (நான் எப்பொழுதும்) நினைத்துக் கொண்டிருக்கின்ற;* ***கூற்றினுக்கு*** *- (கன்னியாகிய) இயமனுக்கு;* ***வண்ணம் மேகலை*** *- அழகிய மேகலை என்னும் அணிகலன் அணிந்த;* ***தேர் ஒன்று*** *தேர்த்தட்டுப் போன்ற அல்குல் ஒன்றும்;* ***வாள் நெடுங்கண் இரண்டு-*** *வாள்கள் போன்ற நீண்ட கண்கள் இரண்டும்;* ***கதிர்முலை தாம் இரண்டு -*** *பெருத்த தனங்கள் இரண்டும்;* ***உள் நிவந்த நகை -*** *வாயிடமாக அடங்கிப் பொலிந்த புன்சிரிப்பு;* ***என்ற ஒன்றும் -*** *என்ற ஒன்றும் உண்டு;* ***இத்தனை வேண்டுமோ*** *- (என்னைக் கொல்லக் கருதுகின்ற கூற்றுவனுக்கு இத்தனை கருவிகளும் வேண்டுமோ)*

*சீதையின் அல்குல். கண். முலை. நகை என்ற இவற்றுள் ஒவ்வொன்றும் என்னை வருத்துகின்றன. ஆனால். இவற்றுள் ஒன்றே என்னை வருத்தப் போதுமே! என்பது கருத்து. 'பண்டறியேன் கூற்றென் பதனை இனியறிந்தேன். பெண்தகையால் பேரமர்க் கட்டு' - குறள் 1083. தேர் - உவமையாகு பெயர்.*

*624.* ***'கன்னல் வார் சிலை கால் வளைத்தே மதன்.***
***பொன்னை முன்னிய பூங் கணை மாரியால்.***
***என்னை எய்து தொலைக்கும் என்றால். இனி.***
***வன்மை என்னும் இது ஆரிடை வைகுமே?***

***கன்னல் வார்சிலை*** - *கரும்பாகிய நீண்ட வில்லை;* ***கால் வளைத்தே*** - *வளைத்து;* ***மதன்*** - *மன்மதன்;* ***பொன்னை முன்னிய*** - *திருமகள் போன்ற சீதையை நினைக்கும் பொருட்டு;* ***பூங் கணை மாரியால் எய்து*** - *(என்மேல்) தொடுக்கும் மலரம்பு மழையால் எய்து;* ***என்னை*** - *(யார்க்கும் வலி தொலையாத) என்னை;* ***தொலைக்கும் என்றால்*** - *வலியழிப்பான் என்றால்;* ***இனி*** - *இனிமேல்;* ***வன்மை என்னும் இது*** - *வலிமை என்று சொல்லப்படுகின்ற குணம்;* ***யாரிடை வைகும்*** - *யாரிடத்திலே தங்கியிருக்கும்.*

*முன்னிய - செய்யிய என்னும் வினையெச்சம். இதுவரை வலிய வில்லம்புகளோடு கட்டமைந்த உடம்புமுடைய வீரர் யார்க்கும் வலி தொலையாத நான் இப்பொழுது மெல்லிய கரும்பு வில்லையும் மலர் அம்புகளையும் உடைய மன்மதனிடம் வலிமை இழக்கும்படி ஆயிற்றே என்று இராமன் வருந்தினான்.*

***625. 'கொள்ளை கொள்ளக் கொதித்து எழு பாற்கடல்***
***பள்ள வெள்ளம் எனப் படரும் நிலா.***
***உள்ள உள்ள உயிரைத் துருவிட.***
***வெள்ளை வண்ண விடமும் உண்டாம்கொலோ?***

***கொள்ளை கொள்ள*** - *(உலக முழுவதையும்) கொள்ளை கொள்வதற்கு;* ***கொதித்து எழு*** - *பொங்கி எழுகின்ற;* ***பாற்கடல் பள்ளம்*** - *ஆழமான பாற்கடலினது;* ***வெள்ளம் என*** - *வெள்ளம் போல;* ***படரும் நிலா*** - *பரவியுள்ள நிலாவானது;* ***உள்ள உள்ள*** - *நான் (அந்த நங்கையை) நினைப்பதனால் தரித்துள்ள;* ***உயிரை*** - *என் உயிரை;* ***துருவிட*** - *அரிப்பதால்;* ***வெள்ளை வண்ணம்*** - *வெண்மை நிறமுள்ள;* ***விடமும்*** - *ஒரு நஞ்சும்;* ***உண்டாம் கொல்*** - *லகில் உள்ளதோ?*

*கொள்ளை கொள்ளுதல்: ஒருங்கே கவர்ந்து தன்வசமாக்குதல். நஞ்சு கரிய நிறமுடையது என்று கூறுவது மரபு. ஆனால். நிலா என்னும் வெள்ளை நிறமுடைய விடம் காணப்படுகிறதே! என்று காதல் நோயால் வருந்தும் இராமன் தன்னை வருத்துகின்ற நிலாவைப் பழித்து கூறுகின்றான். கொள்ளை கொள்ளக் கொதித்தெழு நிலா: எனது உயிரை நானும் அறியாமல் கவர்ந்து செல்வதற்குச் சீறியெழும் நிலா என்றும் உரைக்கலாம்.*

***626. ஆகும் நல்வழி; அல்வழி என் மனம் ஆகுமோ? இதற்கு ஆகிய***
***காரணம். பாகுபோல் மொழிப் பைந்தொடி. கன்னியே ஆகும்;***
***வேறு இதற்கு ஐயுறவு இல்லையே!***

***ஆகும்*** - *ஆக்கத்திற்குரிய;* ***நல்வழி அல்வழி*** - *நல்வழி அல்லாத தீய நெறி;* ***என்மனம் ஆகுமோ*** - *எனது நேர்மையான மனம் செல்லுமோ?;* ***அதற்கு ஆகிய காரணம்*** - *(அப்படியிருக்க என் மனம் இம் மங்கையிடம் காதல் கொண்டு சென்றதற்குப்) பொருந்திய காரணம்;* ***பாகுபோல் மொழி*** - *பாகுபோன்ற இனிய சொற்களையும்;* ***பைந்தொடி*** - *பசும்பொன் தொடியையும் உடைய இந்நங்கை;* ***கன்னியே கும்*** - *(திருமணமாகாத) கன்னிகையே ஆவாள்;* ***இதற்கு வேறு ஐயுறவு இல்லை*** - *(இந்த முடிவுக்கு மாறாக) ஐயப்பட வேண்டியது ஒன்றுமில்லை.*

*தனது மனம் அம் மங்கையிடம் சென்றதால் அவள் திருமணமாகாத கன்னிப் பெண்ணாக இருக்கவேண்டுமென்று இராமன் கருதுகின்றான். சான்றோர்க்குத் தூய மனச்சான்றே அளவுகோல். நல்வழியல்லாத அல்வழி: பிறன் மனைவியை விழைதல்.* *திங்களின் மறைவு*

***627. கழிந்த கங்குல் அரசன் கதிர்க் குடை***
***விழுந்தது என்னவும். மேல் திசையாள் சுடர்க்***
***கொழுந்து சேர் நுதற் அறு சுட்டி போய்***
***அழிந்தது என்னவும். ஆழ்ந்தது - திங்களே.***

***கழிந்த*** - இறந்து போன; ***கங்குல் அரசன்*** - இரவாகிய அரசனது; ***கதிர்க்குடை*** ஒளியுள்ள வெண்கொற்றக் குடையானது; ***விழுந்தது என்னவும்*** - (கீழே) விழுந்தது போலவும்; ***மேல்திசையாள்*** - மேற்குத் திசையான பெண்ணினுடைய; ***சுடர்க் கொழுந்து சேர்*** - இளமையான ஒளி பொருந்திய; ***நுதல் கோது அறு சுட்டி*** - நெற்றியில் அணிந்துள்ள குற்றமற்ற சுட்டி என்னும் அணியானது; ***போய் அழிந்தது என்னவும்*** - கெட்டு அழிந்தது போலவும்; ***திங்கள்*** - சந்திரன்; ***ஆழ்ந்தது*** - (மேற்கடலில்) மூழ்கியது.

*வெண் கொற்றக்குடை வீழ்தல்: அரசன் ஒழிந்த நிலையையும். அவன் தேவியின் நெற்றிச்சுட்டி அழிந்தமை மேற்குத் திசை அரசியின் துக்கக் குறி யையும் உணர்த்தும் என்பது குறிப்பு. தற்குறிப்பேற்றவணி. திலகம் இடாமை. நெற்றிச்சுட்டி அணியாமை முதலியன கணவரை இழந்த பெண்களுக்கு உரியன.*

***628. வீசுகின்ற நிலாச்சுடர் வீழ்ந்ததால் -***
***ஈசன் ஆம் மதி ஏகலும். சோகத்தால்***
***பூசு வெண் கலவைப் புனை சாந்தினை***
***ஆசை மாதர் அழித்தனர் என்னவே.***

***ஈசன் ஆம் மதி*** - உயிருக்கு உயிரான சந்திரன் என்னும் கணவன்; ***ஏகலும்*** - தம்மைப் பிரிந்து போன பின்பு; ***ஆசை மாதர்*** - திசைகளாகிய (அவனுடைய) ஆசை மனைவியர்; ***பூசுவெள்*** - (அக்கொழுநனால் பூசப்பட்ட) வெண்மையான; ***கலவைப் புனை சாந்தினை*** - கலவையாகிய சந்தனக் குழம்பை; ***சோகத்தால்*** - அவனைப் பிரிந்த துயரத்தால்; ***அழித்தனர் என்ன*** - அழித்துவிட்டவர்களைப் போல; ***வீசுகின்ற நிலாச்சுடர்*** - (சந்திரன் மறைந்த அளவில்) முன்பு (எல்லாத் திசையிலும்) பரவியிருந்த அவனது ஒளியாகிய நிலா; ***வீந்தது*** - (ஒளி) ஒழிந்தது.

*ஆசை மாதர்: திசைகளாகிய மனைவியர்; காதலுடைய மாதர் எனவும் பொருள் தரும். தற்குறிப்பேற்றவணி.* *கதிரவன் தோற்றம்*

***629 ததையும் மலர்த் தார் அண்ணல் இவ் வண்ணம்***
***மயல் உழந்து. தளரும் ஏல்வை.***
***சிதையும் மனத்து இடருடைய செங்கமலம்***
***முகம் மலர. செய்ய வெய்யோன்.***
***புதை இருளின் எழுகின்ற புகர் முக***
***யானையின் உரிவைப் போர்வை போர்த்த***
***உதைய கிரி எனும் கடவுள் நுதல் கிழித்த***
***விழியேபோல். உதயம் செய்தான்.***

***ததையும் மலர்த்ததார்*** - *நெருங்கிய மலர்மாலையணிந்த;* ***அண்ணல்*** - *இராமன்;* ***இவ் வண்ணம்*** - *இவ்வாறு;* ***மயல் உழந்து*** - *காதல் மயக்கத்தால் வருந்தித்;* ***தளரும் ஏல்வை*** - *தளர்ச்சி அடைகிற காலத்தில்;* ***செய்ய வெய்யோன்*** - *செங்கதிர்களையுடையவனான சூரியன்;* ***சிதையும் மனத்து*** -*நிலை குலைகின்ற தம் நெஞ்சிலே;* ***இடர் உடைய*** - *சோகத்தையுடைய;* ***செங்கமலம்*** - *செந்தாமரைகளாகிய தன் மனைவியரின்;* ***முகம் மலர*** - *முகங்கள் (வந்து தான் கூடுவதால்) மலர்ச்சி பெறும்படி;* ***புதை இருளின்*** -*ஆழ்ந்த இருளாகிய;* ***எழுகின்ற புகர் முகம்*** - *உயர்ந்து தோன்றுகின்ற செம்புள்ளிகளைக் கொண்ட முகத் தோடு கூடிய;* ***யானையின் உரிவை*** - *யானையினது தோலாகிய;* ***போர்வை*** - *போர்வையை;* ***போர்த்த*** - *(தன்மேல்) தரித்துள்ள;* ***உதயகிரி எனும் கடவுள்*** - *உதயமலையாகிய உருத்திர மூர்த்தியின்;* ***நுதல் கிழித்த*** - *நெற்றியிலிருந்து திறந்து தோன்றின;* ***விழியே போல்*** - *நெருப்புக் கண்போல;* ***உதயம் செய்தான்*** - *உதித்தான்.*

*கதிரவனைக் கண்ட அளவில் தாமரை மலர்தலும். அவனைப் பிரிந்த கணமே அது குவிந்ததுமாகிய இயல்புபற்றித் தாமரைகளாகிய பெண்களுக்குக் கதிரவனைத் தலைவனாகக் கூறுதல் கவி மரபு. சுருங்கச் சொல்லல் அணிக்கு அங்கமாக உருவக அணியும் உவமையணியும் வந்துள்ளன. கரிய இருளிலே மறைந்துள்ள உதயமலைக்குக் கரிய நிறமுள்ள யானையின் தோலைப் போர்த்த சிவனும். அம் மலையின் உச்சியிலே உதித்து விளங்கும் கதிரவனுக்கு அச்சிவனது நெற்றியில் விளங்கும் நெருப்புக் கண்ணும் உவமை. யானையின் முகப் புள்ளிகளுக்கு உதயத்துத் தோன்றும் விண்மீன்களை உவமையாகக் கொள்ளலாம்.*

***630. விசை ஆடல் பசும் புரவிக் குரம் மிதிப்ப.***
***உதயகிரி விரிந்த துளி***
***பசை ஆக. மறையவர் கைந் நறை மலரும்***
***நிறை புனலும் பரந்து பாய.?***
***அசையாத நெடு வரையின் முகடுதொறும்***
***இளங் கதிர் சென்று அளைந்து. வெய்யோன்.***
***திசை ஆளும் மத கரியைச் சிந்தூரம்***
***அப்பியபோல் சிவந்த மாதோ!***

***விசை*** - வேகமும்; ***ஆடல்*** - வலிமையும்; ***பசும்புரவி*** - பசுமையுடைய குதிரைகளின்; ***குரம்*** - குளம்புகள்; ***மிதிப்ப*** - மிதித்தலால; ***உதயகிரி*** - உதயமலையில்; ***விரிந்த தூளி*** - பரவிய செந்துகள் - பசையாக - நனையும்படி; ***மறையவர் கை*** - வேதியர்கள் கையால் - நறை மலரும் - தேன் நிறைந்த மலர்களும்; ***நிறை புனலும்*** - நிறைந்த அர்க்கிய நீரும்; ***பரந்து பாய*** - பரவிப் பாய்ந்திட (அப்பசையான செந்தூளியைக் கொண்டு); ***வெய்யோன்*** - சூரியன்; ***திசை ஆளும்*** - கிழக்குத் திசையை இடமாகக் கொண்ட. மத கரியை - மத யானைக்கு; ***சிந்துரம் அப்பிய போல்*** - சிந்தூரத் திலகத்தை அப்பியது போல; ***அசையாத நெடுவரையின்*** - சலனமில்லாத அவ் உதய மலையின்; ***முகடு தொறும்*** -சிகரங்களில் எல்லாம்; ***இளங்கதிர் சென்று*** - இளமையான சூரிய கதிர்கள் சென்று; ***அளைந்து*** - படிந்து; ***சிவந்த*** - சிவந்த நிறமாய் விளங்கின.

*கிழக்கில் உள்ள உயர்ந்த சிகரத்தில் விளங்கும் சூரியக் கதிர்கள். கிழக்குத் திசைக்குரிய யானையின் முகத்தில் தீட்டப்பட்ட சிந்தூரத் திலகம் போன்று இருந்து - தற்குறிப்பேற்றவணி. காலையந்தி வழிபாட்டில் மறையவர் மந்திரத்தின் மூலம் எடுத்துவிடும் அருக்கிய நீர். அந்த வேளையில் மந்தேகர் என்ற அசுரரால் சூரியனது தேர். தடை செய்யப்படுவதை வச்சிரப் படையாகச் சென்று தடுத்து. அவர்களையும் அழித்து வருகின்றது என்பது நூல் மரபு.*

***631. பண்டு வரும் குறி பகர்ந்து. பாசறையின்.***
***பொருள் வயினின். பிரிந்து போன***
***வண்டு தொடர் நறுந் தெரியில் உயிர் அனைய***
***கொழுநர் வர மணித் தேரோடும்.***
***கண்டு மனம் களி சிறப்ப. ஒளி சிறந்து.***
***மெலிவு அகலும் கற்பினார்போல்.***
***புண்டரிகம் முகம் மலர. அகம் மலர்ந்து***
***பொலிந்தன - பூம் பொய்கை எல்லாம்.***

***பண்டு*** - (தலைவியரைப் பிரிவதற்கு) முன்பு; ***வரும்குறி பகர்ந்து*** - தாம் மீண்டு வரும் காலத்தைக் குறிப்பிட்டுக் கூறி; ***பாசறையின்*** - போர் செய்யும் பொருட்டும்; ***பொருள் வயினின்*** - பொருள் தேடல் பொருட்டும்; ***பிரிந்துபோன*** - தலைவியரைப் பிரிந்து சென்ற; ***வண்டு தொடர்*** - வண்டுகள் இடைவிடாது மொய்ப்பதற்கு உரிய; ***நறுந் தெரியல்*** - மணமுள்ள பூமாலைகளையுடைய; ***உயிர் அனைய*** - உயிரை யொத்த; ***கொழுநர்*** - தலைவர்; ***மணித் தேரோடும் வர*** - (குறித்த காலத்தில்) அழகிய தேரிலே மீண்டு வர; ***கண்டு*** - அதைப் பார்த்து; ***மனம் களி சிறப்ப*** - மனம் பெரிதும் பூரித்து; ***ஒளி சிறந்து*** - (தலைவரைப் பிரிந்த காலத்து மங்கியிருந்த) முகங்களின் பொலிவு மிகக் கூடி; ***மெலிவு அகலும்*** - தளர்வு நீங்கிய; ***கற்பினார் போல்*** -கற்புடைய மனைவியர் போல; ***புண்டரிகம் முகம் மலர*** - (தம்மைப் பிரிந்து சென்ற கதிரவனாகிய தலைவன் தேரிலே வரக் கண்டு பூரித்து) முகங்களாகிய தாமரைகள் மலர; ***(அதனால்) பூம் பொய்கை*** -அழகிய பொய்கைகள்; ***எல்லாம்*** - யாவும்; ***அகம் மலர்ந்து பொலிந்தன*** - உள்ளிடம் செழித்துப் பொலிவுற்றன.

*பாசறை: திய வீடு. பாசறையிற் பிரிதல் என்றதால் போர் செய்ய எழுதலாயிற்று. மணித்தேர்: ஒலிக்கும் மணிகள் கட்டிய தேரும் இரத்தினங்கள் பதித்துள்ள தேரும். பொருள் வயிற் பிரிவு: இல்லறம் இனிது நடத்த வேண்டிப் பொருள் ஈட்டற்குக் கலத்திலேனும் காலிலேனும் பிரிதல். பிரிந்து சென்ற தலைவர் தேரிலே திரும்பிவர மகிழ்ந்த கற்புடை மகளிரைக் கதிரவன் தேரிலே வருவதைக் கண்டு முகம் மலர்ந்த தாமரைப் பொய்கைக்கு உவையாக்கினார்.*

***632. எண்ண அரிய மறையினொடு கின்னரர்கள்***
***இசை பாட. உலகம் ஏத்த.***
***விண்ணவரும். முனிவர்களும். வேதியரும்.***
***கரம் குவிப்ப. வேலை என்னும் மண்ணும் மணி முழவு அதிர.***
***வான் அரங்கில்***
***நடம்புரி வாள் இரவி ஆன***
***கண்ணுதல் வானவன். கனகச் சடை விரிந்தா***
***லென விரிந்த - கதிர்கள் எல்லாம்.***

***எண் அரிய*** *- அளத்தற்கு அரிய;* ***மறையினொடு*** *- வேதப் பாடல்களோடு;* ***கின்னரர்கள்*** *- கின்னரர்;* ***இசைபாட*** *- கானம் பாடவும்;* ***உலகம் ஏத்த*** *- உயர்ந்தவர் துதிக்கவும்;* ***விண்ணவரும்*** *- தேவர்களும்;* ***முனிவர்களும்*** *- முனிவர்களும்;* ***வேதியரும்*** *- அந்தணர்களும்;* ***கரம் குவிப்ப*** *- கை கூப்பி வணங்கவும்;* ***வேலை என்னும்*** *- கடல் என்கிற;* ***மண்ணும் மணி முழவு*** *-மார்ச்சனை பூசிய அழகிய மத்தளம்;* ***அதிர*** *- முழங்கவும்;* ***வான் அரங்கின்*** *- வானமாகிய நடன சபையிலே;* ***நடம் புரி*** *- நடனம் ஆடுகின்ற;* ***வாள் இரவி ஆன*** *- ஒளி பொருந்திய சூரியனாகிய;* ***கண் நுதல் வானவன்*** *- நெருப்புக் கண்ணை நெற்றியிலே உடைய உருத்திர மூர்த்தியின்;* ***கனகம் சடை*** *- பொன்னிறமான சடைகள்;* ***விரிந்தால் என*** *- விரிந்தது போல;* ***கதிர்கள் எல்லாம்*** *-(செந்நிறமுள்ள)ஒளிக் கதிர்கள் யாவும்;* ***விரிந்த*** *- எங்கும் பரவின.*

*வானத்திலே சூரியனின் கதிர்கள் பரவுதல் வானத்தை அளாவி ஓங்கி உயர்ந்து சிவனது செஞ்சடை விரிதலை ஒத்துள்ளது என்றார் - தன்மைத் தற்குறிப்பேற்ற அணி. சிவனது நடனத்துக்கு மிருதங்க நாதம் போலக் கதிரவனின் நடனத்திற்குக் கடல்முழக்கம்; சிவனுக்கு அம்பலம் போலக் கதிரவனுக்கு அம்பரம். மண்: மத்தளத்திற்குத் தடவும் மாப்பசை. இராமன் துயில் நீங்கியபின் முனிவரோடும் தம்பியோடும் சனகனது வேள்விச் சாலையைச் சார்தல்*

***633. கொல் ஆழி நீத்து. அங்கு ஓர் குனி வயிரச்***
***சிலைத் தடக் கைக் கொண்ட கொண்டல்.***
***எல் ஆழித் தேர் இரவு இளங் கரத்தால்***
***அடி வருடி அனந்தல் தீர்ப்ப.***
***அல் ஆழிக் கரை கண்டான் - ஆயிர வாய்***
***மணி விளக்கம் அழலும் சேக்கைத்***
***தொல் ஆழித் துயிலாதே. துயர் ஆழி***
***நெடுங் கடலுள் துயில்கின்றானே.***

*__அங்கு__ - பாற்கடலில்; __கொல் ஆழி__ - கொல்ல வல்ல சக்கரப் படையை; __நீத்து__ - நீக்கிவிட்டு; __ஓர் குனி வயிரச்சிலை__ - வளைந்து உறுதி வாய்ந்த ஒப்பற்ற கோதண்ட வில்லை; __தடக் கைக் கொண்ட__ - பெரிய கையிலே கொண்டு எழுந்தருளிய; __கொண்டல்__ - மேக நிறத்தவனான இராமன்; __ஆயிரம் வாய்__ - ஆயிரம் முகங்களிலும்; __மணி விளக்கம் அழலும்__ - மாணிக்கமான விளக்குகள் ஒளி செய்யப்பெற்ற; __சேக்கை__ - (ஆதிசேடனாகிய) படுக்கையிலே; __தொல் ஆழி__ - பழமையான பாற் கடலில்; __துயிலாது__ - தூங்காமல் (இருந்து); __துயர் ஆழி__ - (பாற்கடலில் பாம்பு அணையில் பள்ளிக் கொள்ளாமல் இராமனாக அவதரித்து) (சீதையைச் சேராமல் உண்டாகிய) மனத்துன்பமாகிய; __நெடுங் கடலுள்__ - பெரிய கடலில்; __துயில்கின்றான்__ - மயங்கிக் கிடக்கின்றன; __எல் ஆழித் தேர்__ - (அவனை) ஒளியுடைய ஒற்றைச் சக்கரத் தேரைக் கொண்ட; __இரவி__ - சூரியன்; __இளங்கரத்தால்__ - மெல்லிய கைகளால்; __அடி வருடி__ - (திருவடிகளை இனிதாகத் தடவிக் கொடுத்து; __அனந்தல் தீர்ப்ப__ - (அந்த இராமனின்) துயில் மயக்கத்தைத் தீர்க்க (அதனால்); __அல் ஆழிக் கரை__ - இரவாகிய கடலின் எல்லையை; __கண்டான்__ - பார்த்தான்.*

*பகலவன் உதித்து அவனுடைய கதிர்கள் வெளிப்பட்டு விளங்கிய அளவில் இராமன் துயில் உணர்ந்தான். உயர்ந்தோரைத் துயில் உணர்த்த வேண்டுபவர் தம் மெல்லிய கைகளால் அவர் திருவடிகளை வருடித் துயில் எழுப்புதல். முறையாகும். அதனால் 'இரவி இளங்கரத்தால் அடிவருடி அனந்தல் தீர்ப்ப' என்றார். கொண்டல் - உவமையாகு பெயர்.*

***634. ஊழி பெயர்ந்தெனக் கங்குல் ஒருவண்ணம்  
புடை பெயர. உறக்கம் நீத்த  
சூழி யானையின் எழுந்து. தொல் நியமத்  
துறை முடித்து. சுருதி அன்ன  
வாழி மாதவற் பணிந்து. மனக்கு இனிய  
தம்பியொடும். வம்பின் மாலை  
தாழும் மா மணி மௌலித் தார்ச் சனகன்  
பெரு வேள்விச் சாலை சார்ந்தான்.***

*__ஊழி பெயர்ந்தென__ - யுகமே கழிந்தாற் போல; __கங்குல்__ - இரவுக் காலமானது; __ஒரு வண்ணம்__ - ஒருவாறு; __புடை பெயர__ - (தன்) நிலையிலிருந்து நீங்க; __உறக்கம் நீத்த__ - (இராமன்) தூக்கத்தை விட்டு எழுந்த; __சூழி யானையின்__ - முகபடாமுள்ள யானை போல; __எழுந்து__ - துயில் நீங்கி எழுந்து; __தொல் நியமத் துறை__ - பழமையான நித்தியக் கடன்களை; __முடித்து__ - நிறைவேற்றி; __சுருதி அன்ன மாதவன்__ - வேதத்தின் உருவம் போன்ற கோசிக முனிவனை; __பணிந்து__ - வணங்கி (அவனொடும்); __மனக்கு இனிய__ - (தன்) மனத்திற்கு இனிய; __தம்பியொடும்__ -தம்பியான இலக்குவனுடனும்; __வம்பின் மாலை தாழும்__ - மணங் கமழும் மாலை தாழ்ந்த; __மா மணி மௌலி__ - சிறந்த மணி மகுடத்தையும்; __தார்__ - குலத்திற்குரிய மாலையையும் அணிந்த; __சனகன்__ - சனக மன்னனது; __பெரு வேள்விச் சாலை__ - பெரிய யாக சாலையை அடைந்தான். 'ஊழி பெயர்ந்தெனக் கங்குல் ஒரு வண்ணம் புடைபெயர' என்றதனால் காதல் வயப்பட்டவர்க்கு இரவு நீட்டித்து நிற்றல் விளக்கப்படுகிறது.*

வேள்வி முற்றிய சனகன் முனிவர் முதலாயினார் புடைசூழ வீற்றிருத்தல்

**635. முடிச் சனகர் பெருமானும். முறையாலே**
**பெரு வேள்வி முற்றி. சுற்றும்**
**இடிக் குரலின் முரசு இயம்ப. இந்திரன்போல்.**
**சந்திரன் தோய். கோயில் எய்தி.**
**எடுத்த மணி மண்டபத்துள். எண் தவத்து**
**முனிவரோடும். இருந்தான் - பைந் தார்**
**வடித்த குனி வரி சிலைக் கைம் மைந்தனும்.**
**தம்பியும். மருங்கின் இருப்ப மாதோ.**

**முடிச் சனகர் பெருமானும்** - பொன்முடி தரித்த சனக மன்னனும்; **முறையால்** - (அப்பொழுது) வேதவிதி முறைப்படியே; **மறைவேள்வி முற்றி** - வேத மந்திரங்களோடு கூடிய யாகத்தை முடித்துவிட்டு; **சுற்றும்** - எல்லாப் பக்கங்களிலும்; **இடிக் குரலின்** - இடி முழக்கம் போன்று; **முரசு இயம்ப** - பேரிகைகள் ஒலிக்க; **இந்திரன் போல்** - தேவேந்திரன் போல; **சந்திரன் தோய்** - சந்திர மண்டலத்தை அளாவி உயர்ந்துள்ள; **கோயில் எய்தி** - அரண்மனையை அடைந்து; **எடுத்த** - அங்கே உயர்ந்து அமைந்த; **மணி மண்டபத்துள்** - நவரத்தின மண்டபத்திலே (விசுவாமித்திரன் முதலியோரை உபசரிக்க); **எண் தவத்து** - மதிக்கத்தக்க தவத்தையுடைய; **முனிவரொடும்** - விசுவாமித்திர முனிவனுடன்; **பைந்தார்** - பசுமையான வெற்றி மாலை சூடிய; **வடித்த குனி வரிசிலை** - வளையும் இயல்புள்ள கட்டமைந்த நீண்ட வில்லை ஏந்திய; **கை மைந்தனும்** - கையையுடைய இராமனும்; **தம்பியும்** - அவன் தம்பியாகிய இலக்குமணனும்; **மருங்கின் இருப்ப** - (தன்) பக்கத்திலே வீற்றிருக்க; **இருந்தான்** - இனிதாக அமர்ந்திருந்தான் சனகன்.

சனகன் தன் வேள்வி முடிந்ததும் அரண்மனை மண்டபத்தில் வேள்வி கண்டு வந்த விசுவாமித்திரனும். இராம லக்குவர்களும் உடன் இருக்கத் தங்கினான் எனலாம். சிலைக் கைம் மைந்தன்: வில்லாற்றலும் தோள் வலிமையும் மிக்கவன் இராமன்.

சனகன் வினாவும் விசுவாமித்திரன் உரையும்

**636. இருந்த குலக் குமரர்தமை. இரு கண்ணின்**
**முகந்து அழகு பருக நோக்கி.**
**அருந் தவனை அடி வணங்கி. 'யாரை இவர்?**
**உரைத்திடுமின். அடிகள்!' என்ன.**
**'விருந்தினர்கள்; நின்னுடைய வேள்வி**
**காணிய வந்தார்; வில்லும் காண்பார்;**
**பெருந் தகைமைத் தயரதன் தன் புதல்வர்' என.**
**அவர் தகைமை பேசலுற்றான்;**

**இருந்த குல குமரர்தமை** - *(சனகன்) தன் அருகில் அமர்ந்திருந்த உயர்குல மைந்தர்களை;* **இருகண்ணின்** - *(தன்) இரண்டு கண்களாலும்;* **அழகு முகந்து பருக** - *அழகை அள்ளி முழுவதும் பருகும் படி;* **நோக்கி** - *பார்த்து;* **அருந்தவனை** - *(உடனே) அருந்தவத்தவனான கோசிகனை;* **அடிவணங்கி** - *திருவடிகளில் விழுந்து வணங்கியவனாய் (அவரை நோக்கி);* **அடிகள்** - *தவ வேதியரே!' யாரை இவர் - இக் குமாரர்கள் யாவர்?;* **உரைத்திடுமின்** - *(இவர்கள் இத்தன்மையர் என்று) சொல்வீராக;* **என்ன** - *என்று கேட்க (கோசிக முனிவன்);* **விருந்தினர்கள்** - *(உன்பக்கம்) புதியவராக வந்த இவர்கள்;* **பெருந்தகைமை** - *பெருந்தகைமை நிரம்பிய;* **தயரதன் தன் புதல்வர்** - *தசரத மன்னரின் மைந்தர்கள்;* **நின்னுடைய வேள்வி** - *உனது யாகத்தை;* **காணிய வந்தார்** - *காணும் பொருட்டு வந்துள்ளார்கள் (அது தீர்ந்துவிட்டதால் இனி);* **வில்லும் காண்பார்** - *(உன்னிடமுள்ள) சிவதனுசையும் பார்ப்பார்கள்;* **என** - *என்று கூறி;* **அவர் தகைமை** - *அம் மன்னரின் மைந்தர் தம் பெருமைகளை;* **பேசல் உற்றான்** - *சொல்லத் தொடங்கினான்.*

*யாரை இவர் உரைத்திடுமின் - 'ஐ' இடைச்சொல். அவரது குலப்பெருமை அவர் பெருமையே என்பது உணருமாறு 'அவர் தகைமை பேசல் உற்றான்' என்றார். வில்லும் காண்பார்: மற்றவர் போல் வேள்வியைக் கண்களால் காண்டலோடு அமையாமல் நீ கன்னி மணத்தின் பொருட்டு. வைத்துள்ள சிவதனுசையும் வளைக்க வல்லவர்கள் என்ற குறிப்பும் தோன்றும்.*

# குலமுறை கிளைத்து படலம்

*படல அமைப்பு: ?சூரிய குலத்தவர்களது பெருமையைக் கோசிகமுனிவன் சனக மன்னனுக்குக் கூறுகின்ற செய்தியைச் சொல்லும் பகுதி என்று பொருள்.*

***படலச் சுருக்கம்:***

*இராம லக்குவரின் குலமரபைக் கோசிக முனிவன் சனக மன்னனிடம் மொழிகின்றான்; தயரதனின் மகப்பேற்று வரலாற்றை உரைக்கின்றான்; அம்மன்னனின் குமரர்கள் கல்வி கற்ற வரலாற்றை எடுத்துக் கூறுகிறான்; பின். இராமன் வேள்வி காத்த திறத்தைச் சொல்கிறான்; அந்த இராமனது வில்லாற்றலைப் பாராட்டுகிறான்; அகலிகைக்கு முன்னயை வடிவத்தைத் தந்த இராமனது பெருமையைப் பேசுகிறான்.*

*இராம-இலக்குவரின் குலமரபை முனிவன் மொழிதல்*

***637. 'ஆதித்தன் குல முதல்வன்***
***மனுவினை யார் அறியாதார்?***
***பேதித்த உயிர் அனைத்தும்***
***பெரும் பசியால் வருந்தாமல்.***
***சோதித் தன் வரி சிலையால்***
***நிலமடந்தை முலை சுரப்ப.***
***சாதித்த பெருந் தகையும்.***
***இவர் குலத்து ஓர் தராபதிகாண்!***

***ஆதித்தன் குலம்*** *- சூரிய வமிசத்தில் பிறந்த;* ***முதல்வன் மனுவினை*** *- முதல் மைந்தனான மனு என்னும் மன்னனை;* ***அறியாதார் யார்*** *- (உலகத்தில்) அறியாதவர் எவர் (எல்லோரும் அறிவர்);* ***பேதித்த உயிர் அனைத்தும்*** *- பல்வேறு வகைப்பட்ட உயிர்த் தொகுதிகள் எல்லாம்;* ***பெரும்பசியால் வருந்தாமல்*** *- மிக்க பசியால் நலியாதபடி;* ***சோதித் தன் வரிசிலையால்*** *- ஒளிமிக்க தனது கட்டமைந்த வில்லால்;* ***நில மடந்தை*** *- பூமியாகிய பெண்;* ***முலை சுரப்ப*** *- முலைப்பால் சுரக்குமாறு;* ***சாதித்த*** *- (செயற்கரிய செயலை) முயற்சியால் செய்து முடித்த;* ***பெருந் தகையும்*** *- பெருமைக் குணம் நிரம்பியவனும்;* ***இவர் குலத்து*** *- இம் மைந்தர்களின் (சூரிய) வமிசத்திலே தோன்றின;* ***ஓர் தராபதி காண்*** *- (பிருது என்னும்) ஓர் அரசனே என்று அறிவாய்.*

*மனு: காசியப மகா முனிவரின் மனைவியருள் ஒருத்தியான அதிதி தேவியினிடம் விவஸ்வான் என்ற பெயருள்ள சூரியன் தோன்றினான். அந்தச் சூரியன் மகனே மனு. இவனே இராமனின் வமிசத்துக்கு ஆதி மனிதன். இந்த மனு மனுக்கள் பதினால்வரில் ஏழாமவனாவான்.*

*பிருது மன்னன்: வேனன் என்னும் அரசன் பண்புகெட்டவன்; தீமை செய்வதில் விருப்பம் உடையவன்; திருமாலை நிந்தித்து வேள்வி முதலானவற்றைச் செய்யவொட்டாமல் தடுத்தான்; அதனால் முனிவர்கள் அவனைத் தருப்பைகளால் அடித்துக் கொன்றார்கள். ஆனால். அவனது வம்சம் பெருக வேண்டி ஒரு மகனை அவன் மூலம் உண்டாக்க விரும்பினர். அதற்காக அவனது வலக்கையைக் கடைந்து நெருப்பை உண்டாக்கி அதில் பிரமனைக் குறித்து வேள்வி செய்ய. அதில் பிருது என்பான் நாராயணன் அம்சம் உடையவனாகத் தோன்றினான். நாட்டில் எங்கும் உணவின்றித் தவித்த மக்கள் இப் பிருது மன்னனிடம் முறையிட்டார்கள். மன்னனும் பூமிதேவியை எதிர்த்து போர் செய்யப் பசுவின் வடிவிலுள்ள அவளும் சுவாயம்புவ மனுவான கன்றினிடம் தான் அடக்கி வைத்திருந்த பொருள்கள் அனைத்தையும் சுரக்கச் செய்தாள். குடிமக்களும் அவன் உண்டாக்கின உணவினாலே வலிமைபெற்று உயிர்வாழ்ந்தார்கள். பேதித்த உயிர் நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பினவாய்ப் பகுக்கப்பட்டுள்ள உயிர்வகைகள்.*

***638.*** ***'பிணி அரங்க. வினை அகல.***
***பெருங் காலம் தவம் பேணி.-***
***மணி அரங்கு அம் நெடு முடியாய்!-***
***மலர் அயனை வழிபட்டு.***
***பணி அரங்கப் பெரும் பாயற்***
***பரஞ் சுடரை யாம் காண.***
***அணி அரங்கம் தந்தானை***
***அறியாதார் அறியாதார்!***

***மணி*** *- நவரத்தினங்களும்;* ***அரங்கு*** *- அழுத்திப்பதித்த;* ***அம் நெடுமுடியாய்*** *- அழகிய பொன்முடியையுடைய சனக மன்னனே! பிணி அரங்க - நோய் நீங்கவும்;* ***வினை அகல*** *- (அவற்றிற்குக் காரணமாகிய) தீவினைகள் ஒழியவும்;* ***பெருங்காலம்*** *- அநேக ஆண்டுகள்;* ***தவம்பேணி*** *- தவத்தை விருப்பத்தோடு செய்து;* ***மலர் அயனை*** *- தாமரைப் பூவில் தோன்றிய பிரமனை;* ***வழிபட்டு*** *- வணங்கி வழிபட்டு;* ***பணி அரங்கம்*** *- (அவன் அருளால்) ஆதி சேடனாகிய பாம்பின் உடலை;* ***பெரும்பாயல்*** *- பெரிய பள்ளி மெத்தையாக;* ***பரஞ் சுடரை*** *- கொண்டுள்ள ஒளிவடிவமான திருமாலை;* ***யாம்காண்*** *- எம்மைப் போன்றவரும் கண்டு உய்யுமாறு;* ***அணி அரங்கம்*** *- அழகிய திருவரங்க விமானத்தோடு;* ***தந்தானை*** *- (சத்திய உலகிலிருந்து பூமிக்கு) கொண்டு வந்த இந்த வம்சத்தவனான இட்சுவாகு மன்னனை;* ***அறியாதார்*** *- அறியாதவர்;* ***அறியாதார்*** *- அறிவில்லாதவரே ஆவர்.*

*திருவரங்கம்: வைகுண்டம். திருப்பாற்கடல். யோகியரின் உள்ளத் தாமரை என்னும் இவற்றைக் காட்டிலும் திருமால் மனம் உவந்து எழுந்தருளியிருக்கும் இடமாதல் பற்றி இவ் விமானத்திற்கு 'ரங்கம்' (அரங்கம்) எனப் பெயர் அமைந்தது. இட்சுவாகு மன்னன்: வைவச்சுவத மனுவின் மகனாகிய இட்சுவாகு மன்னன் பிரமனை நோக்கிப் பலகாலம் தவம் புரிந்து அவன் அருளால் திருமாலைப் பெற்றுத் திருவயோத்திக்கு எழுந்தருளச்செய்து பிரதிட்டை செய்து வழியாடு செய்தான். அந்த அரங்கநாதனே இரவிகுல மன்னவர்க்குக் குலதெய்வமாக விளங்கினான். பரஞ்சுடர் - கதிரவன். சந்திரன். நெருப்பு என்னும் முச்சுடர்களிலும் மேம்பட்ட ஒளியுருவம்.*

***639. 'தான். தனக்கு வெலற்கு அரிய***
***தானவரை. "தலை துமித்து. என்***
***வான் தரக்கிற்றிகொல்?" என்று***
***குறை இரப்ப. வரம் கொடுத்து. ஆங்கு***
***ஏன்று எடுத்த சிலையினன் ஆய்.***
***இகல் புரிந்த இவர் குலத்து ஓர்***
***தோன்றலை. பண்டு. இந்திரன்காண்.***
***விடை ஏறாய்ச் சுமந்தானும்.***

***தான்*** *- இந்திரன் (தான்);* ***தனக்கு வெலற்கு அரிய*** *- தன்னால் வெல்வதற்கு முடியாத;* ***தானவரை*** *- அசுரர்களின்;* ***தலை துமித்து*** *- தலைகளைத் துணித்து;* ***வான் தரக்கிற்றி கொல்*** *- தேவலோகத்தை (அவர்களிடமிருந்து) மீட்டுக் கொடுக்க வல்லமையுடையவரா நீர்?;* ***என்று*** *- என்று கூறி;* ***குறை இரப்ப*** *- (தனது) குறையைச் சொல்லி வேண்ட;* ***வரம் கொடுத்து*** *- (அவ்வாறே செய்வதாக வாக்களித்து இந்திரனுக்கு) அந்த வரத்தைக் கொடுத்து;* ***ஆங்கு ஏன்று*** *- அப்பொழுதே (அச்செயலை) மேற்கொண்டு;* ***எடுத்த சிலையினனாய்*** *- கையில் வில்லைப் பிடித்தவனாக;* ***இகல் புரிந்த*** *- (அசுரர்களோடு) போர் செய்த;* ***இவர் குலத்து*** *- இந்தக் குமாரர் தோன்றிய இரவி வம்சத்திலே பிறந்த;* ***ஓர் தோன்றலை*** *- புரஞ்சயன் என்னும் ஓர் அரசனை;* ***பண்டு*** *- முன் காலத்தில்;* ***விடை ஏறு ஆய்*** *- காளை வடிவமாய்;* ***சுமந்தானும்*** *- (அப்பொழுது) சுமந்து நின்றவனும்;* ***இந்திரன் காண்*** *- தேவர்தலைவனான அந்த இந்திரனே யாவான்.*

*ககுத்தன்: முன் காலத்தில் தேவர்க்கும் அசுரர்க்கும் நிகழ்ந்த போரில் தேவர்கள் தோற்றார்கள். அதனால் தேவர்கள் திருமாலிடம் முறையிட அவனும் அவர்களை நோக்கி 'நான் பூமியில் இட்சுவாகுவின் மகனான சசாதன் மகனாகப் புரஞ்சயன் என்னும் மன்னனாகத் தோன்றி அந்த அசுரர்களை அழிப்பேன்' என்றான். தேவர்கள் அவனிடம் சென்று கூற. அப் புரஞ்சயனும் 'இந்தி ரன் வாகனமாக எனக்கு அமைந்தால் அவன்மேல் ஏறிப் போர்செய்து அசுரரை மாய்ப்பேன்' என்றான். அப்பொழுது இந்திரனும் தடைசொல்லாது காளை வடிவம் எடுக்கப் புரஞ்சயன் அதிலேறிப் போர் செய்து அசுரரை அழித்தான் எருது வடிவான இந்திரனின் 'ககுத்' எனப்படும் முசுப்பில் ஏறி இருந்தமையால் 'ககுத்தன்' எனப்பட்டான்.*

***640. 'அரைசன் அவன் பின்னோரை.***
***என்னாலும் அளப்பு அரிதால்;***
***உரை குறுக நிமிர் கீர்த்தி***
***இவர் குலத்தோன் ஒருவன்காண்-***
***நரை திரை மூப்பு இவை மாற்றி***
***இந்திரனும் நந்தாமல்.***
***குரை கடலை நெடு வரையால்***
***கடைந்து. அமுது கொடுத்தானும்.***

***அரைசன்*** - *அந்தக் ககுத்த மன்னனது;* ***அவன் பின்னோரை*** - *குலத்தில் பின்பு தோன்றிய அரசர்களை;* ***அளப்பு*** - *(இத்தன்மையுடையவர் என்று) அளவிட்டுச் சொல்லுதல்;* ***என்னாலும் அரிது*** - *என்னாலும் முடியாது;* ***நரை*** - *முடி வெளுத்தலும்;* ***திரை*** - *உடம்பின் தோல் சுருங்குதலும்;* ***மூப்பு*** - *(இவற்றிற்குக் காரணமான) முதுமைத் தன்மையும்;* ***இவை*** - *என்னும் இவற்றை;* ***மாற்றி*** - *நீக்கி;* ***இந்திரனும்*** - *தேவேந்திரனும்; (மற்ற தேவர்களும்);* ***நந்தாமல்*** - *சாகாதபடி;* ***குரைகடலை*** - *ஒலிக்கின்ற பாற்கடலை;* ***நெடுவரையால் - பெரிய (மந்தர) மலையால்; கடைந்து*** - *கடைந்து;* ***அமுது கொடுத்தானும் -*** *(அதிலிருந்து) தேவர்களுக்கு அமுதத்தை எடுத்துக் கொடுத்தவனும்;* ***உரை குறுக -*** *(மொழியில்) சொற்கள் குறையும்படி.* ***நிமிர் கீர்த்தி*** - *மிகுதியான புகழையுடைய;* ***இவர் குலத்தோன்*** - *இந்த மைந்தர்களது குலத்தில் உதித்த;* ***ஒருவன் காண்*** - *ஓர் அரசனே ஆவான்.*

*உரை குறுக நிமிர்கீர்த்தி - இக் குமாரர்களின் பெரும்புகழ் சொல்லுக்கு அடங்காது. அதாவது இவர்களின் புகழைக் கூறுவதற்கு வேண்டிய சொற்கள் உலகிலே இல்லை என்பது. இந்திரனும் - எச்சவும்மை. உயர்வு சிறப்பும்மை.*

***641. 'கருதல் அரும் பெருங் குணத்தோர்.***
***இவர் முதலோர் கணக்கு இறந்தோர்***
***திரி புவனம் முழுது ஆண்டு***
***சுடர் நேமி செல நின்றோர்;-***
***பொருது உறை சேர் வேலினாய்!-***
***புலிப் போத்தும் புல்வாயும்***
***ஒரு துறையில் நீர் உண்ண.***
***உலகு ஆண்டான் உளன் ஒருவன்.***

***பொருது உறை*** - போர்புரிந்த பின் உறையில்; ***சேர் வேலினாய்*** - செருகிய வேற்படையை உடைய சனகனே!; ***சுடர்நேமி செல*** - ஒளியுடைய தமது ஆணைச் சக்கரம் (எங்கும் தடையில்லாமல்) செல்லுமாறு; ***திரிபுவனம்*** - மூன்று உலகங்களையும்; ***முழுது ஆண்டு நின்றோர்*** - முழுவதும் ஆட்சி புரிந்தவர்களும்; ***கருதல் அரும்பெரும்*** - நினைக்கவும் முடியாத (இரக்கம் முதலிய) சிறந்த; ***குணத்தோர்*** - குணங்களையுடையவர்களும் ஆகிய; ***இவர் முதலோர்*** - இக் குமாரர்களின் குலத்திலே தோன்றிய முந்தைய அரசர்கள்; ***கணக்கு இறந்தோர்*** - எண்ணற்றவர்கள் (இவர் குலத்துள்) ஒருவன்; ***புலிப்போத்தும்*** - (இயல்பாகவே பகைமையுடைய) ஆண்புலிகளும்; ***புல்வாயும்*** - மான்களும்; ***ஒருதுறையில்*** - (அப் பகையுணர்ச்சியின்றி) ஒரே நீர்த்துறையிலே; ***நீர் உண்ண*** - (இறங்கித்) தண்ணீர் குடிக்கும்படி; ***உலகு ஆண்டோன்*** - உலகத்தை அரசாண்டவன்; ***ஒருவன் உளன்*** - (மாந்தாதா) இருந்தான்.

*அரசனது ஆணையிடத்துத் தமக்குள்ள அச்சத்தால் எவையும் நலியத்தக்கனவும் நலியாமல் உள்ள நீதிமுறை கூறியது. இந்த அரசன் மாந்தாதா என்பவன். அவன் அரசாண்ட காலத்தில் நாடெங்கும் சத்துவ குணம் நிலவியிருந்ததால் மிருகங்கள் முதலியனவும் அன்பும் அருளும் பூண்டு வாழ்ந்தன. புல் வாய் - புல்லையுண்ணும் வாயையுடைய (மான்) - காரணப்பெயர். வேற்றுமைத் தொகையன்மொழி.*

***642. 'மறை மன்னும் மணிமுடியும்***
***ஆரமும் வாளொடு மின்ன.***
***பொறை மன்னு வானவரும்***
***தானவரும் பொரும் ஒரு நாள்!-***
***விறல் மன்னர் தொழு கழலாய்!-***
***இவர் குலத்தோன். வில் பிடித்த***
***அறம் என்ன. ஒரு தனியே***
***திரிந்து அமராபதி காத்தோன்.***

***விறல் மன்னர்*** - வெற்றியையுடைய அரசர்கள்; ***தொழு கழலாய்*** - பலரும் வணங்குகிற அடிகளை யுடையவனே; ***பொறை மன்னு*** - பொறுமை மிக்க; ***வானவரும்*** - தேவர்களும்; ***தானவரும்*** - (பொறுமையற்ற) அரக்கர்களும்; ***பொரும்*** - (முன்பு ஒருவரோடு ஒருவர்) போர்செய்த; ***ஒரு நாள்*** - ஒரு காலத்தில்; ***இவர் குலத்தோன்*** - இந்த மைந்தர்களது குலத்தைச் சேர்ந்தவனான ஓர் அரசன்; ***மறை மன்னு*** - வேத விதிப்படி; ***(முடிசூட்டப்பெற்று); மணி முடியும்*** - பொருந்திய நவரத்தின முடியும்; ***ஆரமும்*** - மாலைகளும்; ***வாளொடு மின்ன*** - ஒளியோடு மின்னுமாறு; ***வில் பிடித்த*** - கையில் வில்லேந்திய; ***அறம் என்ன*** - தருமதேவதை போல; ***ஒரு தனியே திரிந்து*** - தான் ஒருவனாகவே (வாளும் கையுமாக வான் உலகு சென்று) சஞ்சரித்து; ***அமராபதி காத்தோன்*** - (இந்திரனது) அமராவதி நகரத்தைக் காத்து நின்றான் (முசுகுந்தன்).

*முசுகுந்தன்:* வானுலகில் அசுரர்கள் தேவர்களோடு போர் செய்து அவர்களைத் துரத்தினர்; இந்திரன் முதலான தேவர்கள் இந்த அரசனை அடைந்து உதவ வேண்டினர். அதனைக் கேட்ட மன்னவன் வான் சென்று அசுரர்களைக் கொன்று முருகன் சேனைத்தலைவனாக வருகின்ற வரையிலும் வானுலகைக் காத்திருந்தான். வில்பிடித்த அறம் - இல் பொருள் உவமை.

***643.*** ***'இன் உயிர்க்கும் இன் உயிராய்***
***இரு நிலம் காத்தார் என்று***
***பொன் உயிர்க்கும் கழலவரை***
***யாம் போலும். புகழ்கிற்பாம்?-***
***மின் உயிர்க்கும் நெடு வேலாய்! -***
***இவர் குலத்தோன். மென் புறவின்***
***மன் உயிர்க்கு. தன் உயிரை***
***மாறாக வழங்கினனால்!***

***மின் உயிர்க்கும்*** - *மின்னல்போல ஒளி விடுகின்ற;* **நெடுவேலாய்** - *நீண்ட வேல் தாங்கிய சனகனே;* **பொன் உயிர்க்கும் கழலவரை** - *விளங்கும் வீரக் கழலைப் பூண்ட இக்குலத்து மன்னர்களை;* **இன் உயிர்க்கும்** - *(உலகிலுள்ள) இனிமையான உயிர்கள் எல்லாவற்றிற்கும்;* **இன் உயிராய்** - *தாம் இனிய உயிர் ஆக இருந்து;* **இரு நிலம் காத்தார்** - *பெரிய நிலவுலகை அரசாண்டார்கள்;* **என்று** - *என்று சொல்லி;* **புகழ்கிற்பாம்** - *புகழவல்லோம்;* ***யாம் போலும்*** - *நாம்தான் போலும்! (புகழ் நம்மால் முடியாது; ஏனெனில்);* **இவர்குலத்தோன் -** *இக் குமாரர்களின் குலத்தில் தோன்றிய அரசன் ஒருவன்;* **மென் பறவை - மெல்லியபறவை ஒன்றின்; மன் உயிர்க்கு** - *நிலைபெற்ற உயிர்க்கு;* ***மாறாக - ஈடாக; தன் உயிரை*** - *தனது ஆருயிரை ;* **வழங்கினன்** - *கொடுத்தான். இங்குக் கூறப் பெற்றவன் சிபி மன்னவன். இவன் நூறு அசுவ மேதயாகம் புரிந்து நான்காம் மனுவந்தரத்தில் இந்திரனாக அமர்ந்திருந்தவன். போலும் - ஒப்பில் போலி - எதிர்மறைப் பொருள் தந்தது.*

*7*

***644.*** ***'இடறு ஓட்ட. இன நெடிய***
***வரை உருட்டி. இவ் உலகம்***
***திடல். தோட்டம். எனக் கிடந்தது***
***என இரங்கி. - தெவ் வேந்தர்***
***உடல் தோட்ட நெடு வேலாய்!-***
***இவர் குலத்தோர். உவரி நீர்க்***
***கடல் தோட்டார்எனின். வேறு ஓர்***
***கட்டுரையும் வேண்டுமோ?***

**தெவ் வேந்தர்** - பகை அரசர்களது; **உடல் தோட்ட** - உடல்களைத் துளைத்த; **நெடுவேலாய்** - நீண்ட வேலினை உடைய மன்னனே!; **இவர் குலத்தோர்** - இம் மைந்தர்களின் குலத்து அரசர்கள்; **இரங்கி** - (தங்கள் தந்தையின் அசுவமேதக் குதிரை காணாமல் போக) வருந்தி; **நெடிய வதை** - பெரிய மலைகளை; **இடறு ஓட்டம் இனம்** - காலால் இடறத் தக்க தேங்காய் ஓடுகளைப் போல; **உருட்டி** - (வெளியே) புரட்டித் தள்ளி; **இவ் உலகம்** - இந்த நிலவுலகம்; **திடல் கோட்டம் என** - திட்டாகவும் மேடாகவும்; **கிடக்கும் வகை** - இருக்கும்படி; **உவரிநீர்** - உப்புச் சுவை மிக்க நீரைக் கொண்ட; **கடல் தோட்டார்** - கடலை(த் தத்தம் வலிமையால்) தோண்டினார்கள்; **எனின்** - என்றால்; **வேறு ஓர் கட்டுரையும்** - (இக் குலத்தின் பெருமைக்கு) வேறு நிகழ்ச்சியாக எடுத்துச் சொல்ல ஓர் உறுதி மொழியும்; **வேண்டுமோ** - வேண்டுமா? (வேண்டா).

இதில் சொல்லப்பட்டவர் சகர குமாரர். இவர்கள் தோண்டின பள்ளமே கடலாயிற்று. திடல் தோட்டம் - ஒரு பொருட் பன்மொழி.

***645. 'தூ நின்ற சுடர் வேலாய்!***
***அனந்தனுக்கும் சொலற்கு அரிதேல்.***
***யான் இன்று புகழ்ந்துரைத்தற்கு***
***எளிதோ? ஏடு அவிழ் கொன்றைப்***
***பூ நின்ற மவுலியையும்***
***புக்கு அளைந்த புனற் கங்கை.***
***வான்நின்று கெணர்ந்தானும்***
***இவர் குலத்து ஓர் மன்னவன்காண்!***

**தூநின்ற சுடர்** - (பகைவரின்) தசை படிந்த ஒளிமிக்க; **வேலோய்** - வேலையுடைய மன்னவனே!; **அனந்தனுக்கும்** - (ஆயிரம் முகமுடைய) ஆதிசேடனுக்கும்; **கொலற்கு அரிது ஏல்** - (இவர்களின் குலப் பெருமையை) சொல்வது கடினம் என்றால்; **யான் இன்று** - (ஒரு முகமும் ஒரு நாவும் உடைய) நான் தளர்ச்சியடையாமல் இப்பொழுது; **புகழ்ந்து உரைத்தற்கு** - புகழ்ந்து சொல்வதற்கு; **எளிதோ** - எளிதாகுமோ? (ஆகாது); **ஏடு அவிழ்** - இதழ் விரியும்; **கொன்றைப் பூ நின்ற** - கொன்றை மலர்களைச் சூடிய; **மவுலியையும்** - திருமுடியில்; **புக்கு அளைந்த** - வந்து பொருந்திய; **புனல்** - புனித நீரையுடைய; **கங்கை** - கங்கை நதியை; **வான் நின்று** - வானுலகத்திலிருந்து; **கொணர்ந்தானும்** - (இப் பூவுலகிற்குக்) கொண்டு வந்தவனும்; **இவர் குலத்து** - இச் சிறுவர்களது குலத்தில் பிறந்த; **ஓர் மன்னவன் காண்** - (பகீரதன் என்னும்) ஓர் அரசனே ஆவான்.

**மவுலியையும் - உயர்வு சிறப்பும்மை.**

***646. ‘கயற் கடல் சூல் உலகு எல்லாம்***
***கைந் நெல்லிக் கனி ஆக்கி.***
***இயற்கை நெறி முறையாலே***
***இந்திரற்கும் இடர் இயற்றி.-***
***முயற் கறை இல்மதிக் குடையாய்!-***
***இவர் குலத்தோன் முன் ஒருவன்.***
***செயற்கு அரிய பெரு வேள்வி***
***ஒரு நூறும் செய்து அமைத்தான்.***

**முயல் கறை இல்** - முயலாகிய களங்கம் இல்லாத; **மதிக்குடையாய்** - சந்திரனைப் போல விளங்கும் வெண்கொற்றக் குடையுடையவனே!; **இவர் குலத்தோன்** - இம் மைந்தர்களது குலத்திலே; **முன்னொருவன்** - முன்புதோன்றினான் ஓர் அரசன்; **கயல் கடல் சூழ் உலகு எல்லாம்** - மீன்கள் வாழும் கடலால் சூழப்பட்டுள்ள நிலவுலகம் முழுவதையும்; **கைந் நெல்லிக் கனி** - உள்ளங்கையிலுள்ள நெல்லிக் கனிபோல; **ஆக்கி** - எளிதாக தன் ஆட்சிக்குக் கொண்டு வந்து; **இந்திரற்கும்** - தேவேந்திரனுக்கும்; **இடர் இயற்றி** - (பதவி இழத்தலாகிய) துன்பத்தை யுண்டாக்கி; **செயற்கு அரிய** - (பிறரால்) செய்வதற்கு அருமையான; **பெருவேள்வி ஒருநூறும்** - ஒப்பற்ற பெரிய நூறு அசுவமேதயாகங்களையும்; **இயற்கை நெறிமுறையால்** - வேதங்களின் விதி முறைமை வழுவாமல்; **செய்து அமைத்தான்** - செய்து முடித்தான். இப் பாடலில் குறிக்கப் பெற்றவன் சுதாசன் என்பவர். நகுடன் என்று குறிப்பாரும் உண்டு. சந்திரனிடமுள்ள களங்கத்தை முயலென்றும். மான் என்றும் பூச் சாயை என்றும். மறு என்றும் கூறுவது கவிமரபாகும். 10

***647. ‘சந்திரனை வென்றானும்.***
***உருத்திரனைச் சாய்த்தானும்***
***துந்து எனும் தானவனைச்***
***சுடு சரத்தால் துணித்தானும்.***
***வந்த குலத்திடை வந்த***
***ரகு என்பான். வரி சிலையால்.***
***இந்திரனை வென்று. திசை***
***இரு-நான்கும் செரு வென்றான்.***

**சந்திரனை வென்றானும்** - சந்திரனை வெற்றிகண்ட ஒரு மன்னனும்; **உருத்திரனைச் சாய்த்தானும்** - உருத்திர மூர்த்தியைத் தோற்கடித்த ஓர் அரசனும்; **சுடுசரத்தால்** - (பகைவரை எரிக்கவல்ல) அம்பினால்; **துந்து எனும் தானவனை** - துந்து என்னும் அசுரனை; **துணித்தானும்** - கொன்ற வேந்தனும்; **வந்த குலத்திடை** - இக்குமாரர்கள் பிறந்த இச் சூரிய வம்சத்தில்; **வந்த ரகு என்பான்** - தோன்றின இரகு என்னும் அரசன்; **வரிசிலையால்** - கட்டமைந்த வில்லால்; **இந்திரனை வென்று** - தேவேந்திரனை வென்று; **திசை இருநான்கும்** - எட்டுத்திசைகளில் உள்ளவரையும்; **செரு வென்றான்** - போரில் தோற்கடித்து வெற்றி பெற்றான்.

*சந்திரன் சார்பான அசுரர்களுக்கும் பிருகஸ்பதியின் சார்பான தேவர்களுக்கு போர் நடக்குங் கால் தேவர்கள் சூரியவம்சத்தவனாகிய திலீபன் உதவியை நாடினர். அம் மன்னன் அசுரர்களைக் கொன்று சந்திரனை வென்றான்.*

*பகீரதன் அசுவமேதம் பரியை விடுத்தான்; ஆறுமுகன் அப் பரியைக் கவர்ந்து சென்றான்; தன்னை எதிர்த்த உருத்திர மூர்த்தியோடு போர் செய்து வென்றான்.*

*உதங்க முனிவருக்குப் பகைவனான துந்து என்னும் அசுரனைக் குவலயாசுவன் என்பவன் கொன்றான்.*

*இரகு மன்னன் இந்திரனுக்குரிய கீழ்த் திசை உட்பட அனைத்துத் திசையெங்கும் சென்று வெற்றிகண்டான். இவன் பெயரால் இக்குலத்திற்கு 'ரகுகுலம்' என்றும். இக் குலத்தில் தோன்றிய இராமனுக்கு 'இராகவன்' என்றும் பெயர்கள் வழங்கலாயின.*

***648. 'வில் என்னும் நெடு வரையால்***
***வேந்து என்னும் கடல் கலக்கி.***
***எல் என்னும் மணி முறுவல்***
***இந்துமதி எனும் திருவை.***
***அல் என்னும் திரு நிறத்த***
***அரி என்ன. - அயன் என்பான் -***
***மல் என்னும் திரள் புயத்துக்கு***
***அணி என்ன வைத்தானே!***

***அயன் என்பான்*** - *(இம் மைந்தர் குலத்தில் உதித்த) அசன் என்னும் மன்னன்;* **வில் என்னும் நெடுவரையால்** - *தனது வில் என்கின்ற பெரிய மந்தர மலையாகிய மத்தினால்;* **வேந்து என்னும் கடல்** - *பகையரர்களாகிய பாற்கடலை;* **கலக்கி** - *கலங்கச் செய்து (கடைந்து);* **எல் என்னும் மணி முறுவல்** - *ஒளி வடிவமான முத்துப் போன்ற பற்களையுடைய;* **இந்துமதி என்னும்** - *இந்துமதி என்னும் பெயருடைய;* **திருவை** - *இலக்குமி போன்றவளை;* **அல் என்னும்** - *இருள் போல;* **திரு நிறத்த அரி என்ன** - *கரிய நிறமுடைய திருமால் போன்று;* **மல் என்னும்** - *மல் தொழிலின் வடிவம் என்று சொலத்தக்க;* **திரள் புயத்துக்கு** - *திரண்ட தன் தோள்களுக்கு;* **அணி என்ன வைத்தான்** - *ஓர் அணிகலனாக அணிந்தான்.*

*முன்பு திருமால் மந்தரமலையைக் கொண்டு பாற்கடலைக் கடைந்து அதில் தோன்றிய திருமகளைத் தன் மார்பில் வைத்துக்கொண்டது போல அஎனும் வில்லாகிய மலையைக் கொண்டு பகைமன்னராகிய கடலைக் கடைந்து அதில் கிடைத்த இந்துமதி என்னும் திருமகளைத் தன் தோளில் வைத்துக் கொண்டான் என்பது கம்பரின் கவித்திறன். இந்துமதி சுயவரத்தில் மற்றையரசரை மதியாமல் அயனுக்கு உவந்து மாலை சூட்டினாள். அது கண்டு பொறாமை கொண்ட அரசர் போர் செய்ய அவர்களை அயன் வென்றான் என்பது அறியத்தக்கது. திருமகள் உவமை: பேரழகு உடைமையால். செல்வச் சிறப்பால் இந்துமதிக்குத் திருமகள் உவமை உருவக அணி (உவமை அங்கமாக).*

*தயரதன் மகப்பேற்று வரலாற்றை உரைத்தல்*

***649. 'அயன் புதல்வன் தயரதனை***
***அறியாதார் இல்லை; அவன்***
***பயந்த குலக் குமரர் இவர்***
***தமை உள்ள பரிசு எல்லாம்***
***நயந்து உரைத்துக் கரை ஏறல்***
***நான்முகற்கும் அரிது ஆம்;-பல்***
***இயம் துவைத்த கடைத் தலையாய்! -***
***யான் அறிந்தபடி கேளாய்;***

***பல் இயம்*** *- பல்வேறு வாத்தியங்கள்;* ***துவைத்த*** *- முழங்கக் கூடிய; கடைத் தலையாய் தலைவாசலையுடைய சனக மன்னனே!;* ***அயன் புதல்வன் -*** *(முன் சொன்ன) அய மன்னனின் மகனாகிய;* ***தயரதனை -*** *தசரத மன்னனை;* ***அறியாதார் இல்லை -*** *அறியாதவர்கள் (இந்த உலகில்) யாரும் இல்லை;* ***அவன் பயந்த -*** *(உலகப் புகழ் வாய்ந்த) அந்த மாமன்னன் பெற்ற;* ***குலக்குமரர்*** *- குலத்தின் சிறந்த மைந்தர்களாகிய;* ***இவர்தமக்கு*** *- இவர்களுக்கு;* ***உள்ள*** *- இருக்கின்ற;* ***பரிசு எல்லாம்*** *- சிறந்த இயல்புகள் முழுவதையும்;* ***நயந்து உரைத்து*** *- விருப்பத்தோடு சொல்லி;* ***கரை ஏற*** *- (இவர்களின் புகழ்க் கடலினது) கரையைச் சேர்வதற்கு;* ***நான்முகற்கும்*** *- பிரமனுக்கும்;* ***அரிது ஆம்*** *- அரியதாகும்;* ***யான் அறிந்தபடி*** *- (இருப்பினும்) அதை நான் அறிந்தபடி;* ***கேளாய்*** *- சிறிது சொல்லக் கேட்பாயாக.*

*நான்கு முகமுடைய பிரமனுக்கும் ஓரளவே உணர்த்தக் கூடிய இராமலக்குவரது வரலாற்றை ஒரு முகமுடைய மனிதனாகிய என்னால் எவ்வாறு முழுதும் கூற இயலும்?*

***650. ‘துனி இன்றி உயிர் செல்ல.***
***சுடர் ஆழிப் படை வெய்யோன்***
***பனி வென்றபடி என்ன.***
***பகை வென்று படி காப்போன்.***
***தனு அன்றித் துணை இல்லான்.***
***தருமத்தின் கவசத்தான்.***
***மனு வென்ற நீதியான்.***
***மகவு இன்றி வருந்துவான்;***

***துனி இன்றி*** *-துன்பம் இல்லாமல்;* ***உயிர் செல்ல*** *- (உலகத்திலுள்ள) உயிர்கள் யாவும் வாழும்படி;* ***சுடர் ஆழிப் படை*** *- ஒளிமிக்க திருமாலின் சக்கரப்படை போன்ற;* ***வெய்யோன்*** *- சூரியன்;* ***பனி வென்றபடி என்ன*** *- பனியை (எளிதாக ஒழித்து) வெற்றி கொண்ட தன்மைபோல;* ***பகை வென்று*** *- பகையரசர்களை (எளிதில்) வெற்றி கொண்டு;* ***படி காப்போன்*** *- உலகத்தைக் காப்பவனும்;* ***தனு அன்றி*** *- (தன்) கை வில்லை அல்லாமல்;* ***துணை இல்லான்*** *- வேறு துணையாக (எதையும் யாரையும்) விரும்பாதவனும்;* ***தருமத்தின் கவசத்தான்*** *- தருமத்தையே கவசமாகக் கொண்டவனும்;* ***மனுவென்ற நீதியான்*** *- (அரச தர்ம சாத்திரங்களை இயற்றிய) மனுவையே நீதிநெறியில் வென்றவனும் ஆகிய தசரதன்;* ***மகவு இன்றி வருந்துவான்*** *- குழந்தைப் பேறு இல்லாமல் மன வருத்தம் உற்றிருந்தான்.*

*சூரியன் - மன்னனுக்கும். பனி - பகைவர்க்கும். ஒளி - வில்லுக்கும் உவமையாகும். தனுவன்றித் துணையில்லான் - ஆற்றல் மிக்க வீரன்.*

***651. ‘சிலைக் கோட்டு நுதல். குதலைச்***
***செங் கனி வாய். கரு நெடுங் கண்.***
***விலைக்கு ஓட்டும் பேர் அல்குல்.***
***மின் நுடங்கும் இடையாரை.***
***‘‘முலைக் கோட்டு விலங்கு’ என்று.***
***தொடர்ந்து அணுகி முன் நின்ற***
***கலைக் கோட்டுப் பெயர் முனியால்.***
***துயர் நீங்கக் கருதினான்;***

**சிலைக் கோட்டு நுதல்** - *வில்லைப் போல வளைந்த நெற்றியையும்;* **குதலைச் செங்கனிவாய்** - *(குழந்தைகளின்) மழலை போல இனிய சொற்களைப் பேசுகின்ற சிவந்த கொவ்வைப் பழம் போன்ற வாயையும்;* **கரு நெடுங்கண்** - *கரிய நீண்ட கண்களையும்;* **விலைக்கு ஓட்டும்** - *விலைப் பொருளுக்குத் தருகின்ற;* **பேரல்குல்** - *பெரிய அல்குலையும்;* **மின் நுடங்கும்** - *மின்னல் கொடிபோலத் துவளுகின்ற;* **இடையாரை** - *சின்ன இடையையும் உடைய வேசியரை;* **முலைக்கோட்டு** - *தனங்களாகிய கொம்புகளையுடைய;* **விலங்கு என்று** - *சில மிருகங்கள் என்று கருதி;* **தொடர்ந்து அணுகி** - *தன் ஆச்சிரமத்திலிருந்து அவ் விலைமாதர்களைத் தொடர்ந்து;* **முன்நின்ற** - *(உரோம பாத மன்னது) முன்னே வந்து சேர்ந்த;* **கலைக் கோட்டுப் பெயர்** - *கலைக் கோட்டு முனிவன் என்னும் பெயர் தாங்கிய;* **முனியால்** - *முனிவனைக் கண்டு;* **துயர் நீங்கக் கருதினான்** - *(குழந்தைப் பேறு இல்லாத) தன் துயரத்தைப் போக்கிக் கொள்ள நினைந்தான்.*

*கலைக்கோட்டு முனிவன் - தலையில் கொம்பு உடையவன். ருசியசிருங்கர் - வடமொழி வழக்கு.*

***652. "தார் காத்த நறுங் குஞ்சித்***
***தனயர்கள். என் தவம் இன்மை.***
***வார் காத்த வன முலையார்***
***மணி வயிறு வாய்த்திலரால்;***
***நீர் காத்த கடல் புடை சூழ்***
***நிலம் காத்தேன்; என்னின். பின்.***
***பார் காத்தற்கு உரியாரைப்***
***பணி. நீ" என்று அடி பணிந்தான்.***

**என் தவம் இன்மை** - *(முற்பிறப்பில்) நான் நற்றவம் செய்யாமையால்;* **தார் காத்த** - *பூமாலை யணிகின்ற;* **நறுங்குஞ்சி** - *நறுமணமுள்ள முடியை உடைய;* **தனயர்கள்** - *மைந்தர்கள்;* **வார் காத்த வனமுலையார்** - *கச்சு அணிந்த அழகிய தனங்களையுடைய என் மனைவியரின்;* **மணி வயிறு வாய்த்திலர்** - *அழகிய கருப்பத்தி(ல்) தோன்றவில்லை - ஆல் - ஆதலால்;* **நீர் காத்த கடல் காத்த** - *நீர் நிறைந்த கடலால் சூழப்பட்ட;* **நிலம் காத்தேன்** - *நிலவுலகம் முழுவதையும் ஆட்சி புரிந்த;* **என்னின்பின்** - *எனக்குப் பின்பு;* **பார் காத் தற்கு** - *இந்த உலகைக் காப்பதற்கு;* **உரியாரை** - *உரிய நல்ல மைந்தரை;* **நீ பணி என்று** - *(நான் பெறுமாறு) நீ அருள் செய்க என்று கூறி;* **அடி பணிந்தான்** - *(தசரதன் அக் கலைக்கோட்டு முனிவரின்) திருவடிகளை வணங்கினான்.*

*'கோசலைதன் மணிவயிறு வாய்த்தவனே' (பெருமாள் திரு.8:1).* வயிறு *வாய்த்தல் -* பண்புடைய மக்களைக் *கருப்பத்தில் கொள்ளுதல்.*

***653. ‘அவ் உரை கேட்டு. அம் முனியும்.***
***அருள் சுரந்த உவகையன் ஆய்.***
***“இவ் உலகம் அன்றியே.***
***எவ் உலகும் இனிது அளிக்கும்***
***செவ்வி இளஞ் சிறுவர்களைத்***
***தருகின்றேன்; இனித் தேவர்***
***வவ்வி நுகர் பெரு வேள்விக்கு***
***உரிய எலாம் வருக” என்றான்.***

**அவ்வுரை கேட்டு** - *(தசரதன் கூறிய) அந்த வார்த்தையைக் கேட்டு;* **அம் முனியும்** - *அந்த ருசிய சிருங்க முனிவனும்;* **அருள் சுரந்த** - *கருணை பொழிந்த;* **உவகையனாய்** - *மகிழ்ச்சியுடையவனாகி; (அவ்வரசனை நோக்கி);* **இவ்வுலகம் அன்றியே** - *இந்த நிலவுலகம் ஒன்றை மாத்திரம் அல்லாமல்;* **எவ் உலகும்** - *எல்லா உலகங்களையும்;* **இனிது அளிக்கும்** - *இனிதாக (எளிதில்) காத்திடும் படியான;* **செவ்வி இளஞ்சிறுவர்களை** - *அழகிய இளைய மைந்தர்களை;* **தருகின்றேன்** - *(உனக்கு நான் இப்பொழுது) கொடுத்திடுவேன்;* **இனி** - *இனிமேல்;* **தேவர் வவ்வி நுகர்** - *தேவர்கள் (அவிசுகளைப் பெற்று உண்ணக் கூடிய;* **பெருவேள்விக்கு** - *பெரிய யாகத்தைச் செய்வதற்கு;* **உரிய எலாம்** - *வேண்டிய பொருள்கள் யாவும்;* **வருக என்றான்** - *(இங்கு) வந்து சேரட்டும் என்று சொன்னான்.*

*தருகின்றேன் - விரைவும் தெளிவும் குறித்து எதிர்காலம் நிகழ்காலமாக மயங்கிற்று. ‘எவ்வுலகும் இனிது அளிக்கும்’ - காத்தல் தொழிலுக்கு உரிய திருமாலின் அம்சமானவர் என்பது அறியப்பெறுகிறது.*

***654. ‘காதலரைத் தரும் வேள்விக்கு***
***உரிய எலாம் கடிது அமைப்ப.***
***மா தவரில் பெரியோனும்.***
***மற்றதனை முற்றுவித்தான்;***
***சோதி மணிப் பொற் கலத்துச்***
***சுதை அனைய வெண் சோறு ஓர்***
***பூதகணத்து அரசு ஏந்தி.***
***அனல்நின்றும் போந்ததால்.***

***காதலரைத் தரும்*** - *(அவ்வாறே மாமன்னரும்) மைந்தர்களைக் கொடுத்திடும்;* ***வேள்விக்கு உரிய எலாம்*** - *பெரிய வேள்விக்கு உரிய பொருள்கள் எல்லாவற்றையும்;* ***கடிது அமைப்ப*** - *விரைவாகக் கொண்டுவந்து சேர்க்க;* ***மற்று*** - *பின்னர்;* ***மாதவரில் பெரியோனும்*** - *பெருந் தவமுடைய முனிவர்களில் சிறந்த கலைக்கோட்டு முனிவனும்;* ***அதனை முற்றுவித்தான்*** - *அந்த வேள்வியைச் செய்து முடித்தான்;* ***அனல் நின்றும்*** - *அந்த ஓம நெருப்பிலிருந்தும்;* ***ஓர் பூத கணத்து அரசு*** - *பூதக் கூட்டங்களுக்குத் தலைவனான சிறந்த ஒரு பூதமானது;* ***சோதி மணி*** - *ஒளிமிக்க அழகிய;* ***பொன்கலத்து*** - *பொன்தட்டிலே;* ***சுதை அனைய வெண்சோறு*** - *அமுதம் போன்ற வெண்ணிறமான பயசத்தை;* ***ஏந்தி*** - *எடுத்துக் கொண்டு;* ***போந்தது*** - *வெளிப்பட்டது.18*

***655. ‘பொன்னின் மணிப் பரிகலத்தில்***
***புறப்பட்ட இன் அமுதை.***
***பன்னு மறைப்பொருள் உணர்ந்த***
***பெரியோன்தன் பணியினால்.***
***தன் அனைய நிறை குணத்துத்***
***தசரதனும். வரன்முறையால்.***
***நல் நுதலார் மூவருக்கும்.***
***நாலு கூறிட்டு. அளித்தான்.***

***பொன்னின் மணி*** - *பொன்னாலாகிய அழகிய;* ***பரி கலத்தில்*** - *பாத்திரத்துடன்;* ***புறப்பட்ட இன் அமுதை*** - *வெளிப்பட்ட அந்த இனிய உணவை;* ***பன்னு மறைப் பொருள்*** - *சிறப்பாகச் சொல்லப்படுகின்ற வேதங்களின் பொருள்களை;* ***உணர்ந்த பெரியோன்தன்*** - *அறிந்த (அறிவொழுக்கங்களில் மேம்பட்ட) அக் கலைகோட்டு முனிவனது;* ***பணியினால்*** - *கட்டளையால்;* ***தன் அனைய*** - *தனக்குத் தானே நிகரான;* ***நிறைகுணத்து*** - *நிறைந்த நற்பண்புகளைக் கொண்ட;* ***தசரதனும்*** - *தசரத மன்னனும்;* ***வரன்முறையால்*** - *வரிசை முறைப்படி;* ***நல் நுதலார் மூவருக்கும்*** - *அழகான நெற்றியுடைய (கோசலை முதலான) பட்டத்தரசிகள் மூவருக்கும்;* ***நாலு கூறு இட்டு*** - *நான்கு பங்காக்கி;* ***அளித்தான்*** - *கொடுத்தான்*

*மூன்கு பங்குகளை முறையே கோசலை. கைகேயி. சுமித்திரை ஆகியோர்க்குக் கொடுத்து எஞ்சிய நான்காம் பங்கினை மீண்டும் சுமத்திரைக்கு அளித்தான் என்ப.*

***656. ‘விரிந்திடு தீவினை செய்த***
***வெவ்விய தீவினையாலும்.***
***அருங் கடை இல் மறை அறைந்த***
***அறம் செய்த அறத்தாலும்.***
***இருங் கடகக் கரதலத்து இவ்***
***எழுத அரிய திருமேனிக்***
***கருங்கடலைச் செங் கனி வாய்க்***
***கவுசலை என்பாள் பயந்தாள்.***

***விரிந்திடு தீவினை*** - *(உலகில்) பரவிய பாவங்கள்;* ***செய்த வெவ்விய*** - *பண்ணின கொடிய;* ***தீவினையாலும்*** - *பாவச் செயலாலும்;* ***அருங் கடை இல்*** - *(அறிவதற்கு) அரிய எல்லையில்லாத;* ***மறை அறைந்த*** - *வேதங்களில் சொல்லப்பட்டுள்ள;* ***அறம் செய்த*** - *தருமங்கள் செய்த;* ***அறத்தலும்*** - *தருமத்தாலும்;* ***செங்கனிவாய்*** - *சிவந்த கொவ்வைக் கனி போன்ற வாயையுடைய;* ***கவுசலை என்பாள்*** - *(மூத்தவளான) கவுசலை எனப்படுபவள்;* ***இருங் கடகக் கரதலத்து*** - *பெரிய கடகம் என்னும் அணி அணிந்த கைகளையும்;* ***எழுது அரிய திருமேனி*** - *சித்திரத்தில் எழுத முடியாத அழகிய உடலையுமுடைய;* ***இக் கருங்கடலை*** - *கடல் போன்ற கரிய நிறமுடைய இந்த இராமனை;* ***பயந்தாள்*** - *பெற்றாள்.*

*பாவம் அழியவும். புண்ணியம் வளரவும் இராமன் இவ்வுலகில் அவதாரம் எடுத்தான் என்பதை 'தீவினை செய்த தீவினையாலும் அறம் செய்த அறத்தாலும் பயந்தாள்' எனக் குறிப்பிட்டார். கடல் - உவமையாகு பெயர்.*

***657. 'தள்ள அரிய பெரு நீதித்***
***தனி ஆறு புக மண்டும்***
***பள்ளம் எனும் தகையானை.***
***பரதன் எனும் பெயரானை.***
***எள்ள அரிய குணத்தாலும்***
***எழிலாலும் இவ் இருந்த***
***வள்ளலையே அனையானை.***
***கேகயர்கோன் மகள் பயந்தாள்.***

***தள்ள அரிய*** - *(அறிந்தவர்களால்) விலக்கமுடியாத;* ***பெரு நீதி*** - *சிறந்த நீதிகளாகிய;* ***தனி ஆறு*** - *ஒப்பில்லாத பெருநதிகள்;* ***புக*** - *(தன்னிடம்) வந்து சேர்வதால்;* ***மண்டும்*** - *நிறைந்துள்ள;* ***பள்ளம் எனும்*** - *ஆழமான கடலென்று சொல்லத்தக்க;* ***தகையானை*** - *நல்ல பண்புகளைக் கொண்டவனும்;* ***எள்ள அரிய*** - *(யாராலும்) இகழமுடியாத;* ***குணத்தாலும்*** - *நற்குணங்களாலும்;* ***எழிலாலும்*** - *அழகாலும்;* ***இவ் இருந்த*** - *இங்கே அமர்ந்துள்ள;* ***வள்ளலையே*** - *இந்த இராமனையே;* ***அனையானை*** - *ஒத்தவனுமாகிய;* ***பரதன் என்னும் பெயரானை*** - *பரதன் என்னும் பெயருள்ள குமாரனை;* ***கேகயர்கோன் மகள்*** - *கேகய நாட்டு மன்னன் மகளான கைகேயி;* ***பயந்தாள்*** - *பெற்றெடுத்தாள்.*

*தமக்குத் தாடகை முதலியோரால் நிகழ்ந்த துன்பத்தைப் போக்கி இன்பம் தந்தமையால் இராமனை விசுவாமித்திரன் வள்ளல் என்றான். நீதியாறுபுக மண்டும் பள்ளம் ஆற்று நீர் நிறைந்த கடல்போல் நீதி நிரம்பினவன் எனலாம்.*

*658. ‘அரு வலிய திறலினர் ஆய்.*
*அறம் கெடுக்கும் விறல் அரக்கர்*
*வெருவரு திண் திறலார்கள்.*
*வில் ஏந்தும் எனில் செம் பொன்*
*பரு வரையும். நெடு வெள்ளிப்*
*பருப்பதமும் போல்வார்கள்.*
*இருவரையும். இவ் இருவர்க்கு*
*இளையாளும் ஈன்று எடுத்தாள்.*

**அரு வலிய** - *(பிறரால் வெல்லுதற்கு) அரிய வலிமையுடைய;* **திறலினர் ஆய்** - வெற்றியுடையவர்களாய்; **அறம் கெடுக்கும்** - தருமத்தை அழிக்கின்ற; **விறல்** - வன்மைமிக்க; **அரக்கர்** - இராக்கதர்கள் எல்லோரும்; **வெருவரு** - அஞ்சத்தக்க; **திண் திறலார்கள்** - மிக்க வலிமையுடையவர்களும்; **செம்பொன் பருவரையும்** - சிவந்த பொன்மயமான பெரிய மேரு மலையும்; **நெடுவெள்ளிப் பருப்பதமும்** - வெள்ளிமயமான உயர்ந்த கைலாய மலையும்; **வில் ஏந்தும் எனின்** - *(கையில் தனித்தனியே)* வில்லை எடுத்து நிற்குமாயின்; **போல்வார்கள்** - *(அவற்றை)* ஒப்பவர்களுமாகிய; **இருவரையும்** - *(இலக்குமணன். சத்துருக்கனன் என்னும்)* இரண்டு மைந்தர்களையும்; **இவ் இருவர்க்கு** - *(கோசலை. கைகேயி ஆகிய)* இரண்டு மனைவியர்க்கும்; **இளையாளும்** - இளையவளாகிய சுமித்திரையும்; **ஈன்று எடுத்தாள்** - பெற்றெடுத்தாள்.

இலக்குவன் பொன்னிறத்தவன்: சத்துருக்கனன் வெண்ணிறத்தவன்; இருவரும் வில் ஏந்தும் வீரர். ஆதலால் அவர்க்கு முறையே மேரு மலையும். கைலாய மலையும் உவமையாகக் கூறப்பெற்றன.

குமரர்கள் கல்வி கற்ற வரலாறு

*659. ‘தலை ஆய பேர் உணர்வின்*
*கலைமகட்குத் தலைவர் ஆய்.*
*சிலை ஆயும் தனு வேதம்*
*தெவ்வரைப்போல் பணி செய்ய.*
*கலை ஆழிக் கதிர்த் திங்கள்*
*உதயத்தில் கலித்து ஓங்கும்*
*அலை ஆழி என வளர்ந்தார் -*
*மறை நான்கும் அனையார்கள்.*

***மறை நான்கும் அனையார்கள்*** - நான்கு வேதங்களையும் ஒத்துள்ள அந்தக் குமாரர் நால்வரும்; ***தலையாய*** - முதன்மையான; ***பேருணர்வின்*** - செய்திகளையெல்லாம் அறியக் கூடிய முதிர்ந்த அறிவில்; ***கலை மகட்குத் தலைவராய்*** - கலைமகளுக்கும் மேம்பட்டவராய்; ***சிலை ஆயும்*** - வில் திறத்தை ஆராய்ந்து கூறுவதான; ***தனுவேதம்*** - தனுர் வேதமானது; ***தெவ்வரைப் போல் பணி செய்ய*** - (தம்முடைய) பகைவர் (தோற்றுத் தம்மிடம் குற்றேவல் செய்வது) போலத் தமக்குக் குற்றேவல் செய்யுமாறு; ***கலை ஆழிக் கதிர்த் திங்கள்*** - கலைகள் நிறைந்த வட்டவடிவமான ஒளியையுடைய முழு நிலவின்; ***உதயத்தில் கலித்து*** - உதய காலத்தில் ஒலித்து; ***ஓங்கும்*** - பொங்குகின்ற; ***அலை ஆழியென*** - அலைகளையுடைய கடல்கள் போல; ***வளர்ந்தார்*** - வளர்ந்து வந்தார்கள்.

*மறை நான்கும் அனையார்கள் - அறம் முதலான நாற்பொருட் பயன்களையும் அளிக்கும் தன்மையர் எனலாம். தம் ஆசிரியர் முன்னிலையில் தம் அறிவாகிய அலைகள் பொங்கிக் காணக் கலைப் பயிற்சி பெற்று அக்குமாரர் வளர்ந்தனர் என்பதைத் திங்கள் உதயத்தில் கலித்தோங்கும் அலையாழி என்னும் தொடரால் குறித்தார்.*

***660.*** **‘திறையோடும் அரசு இறைஞ்சும்**
**செறி கழற் கால் தசரதன் ஆம்**
**பொறையோடும் தொடர் மனத்தான்**
**புதல்வர் எனும் பெயரேகாண்!-**
**உறை ஓடும் நெடு வேலாய்!**
**உபநயன விதி முடித்து.**
**மறை ஓதுவித்து. இவரை**
**வளர்த்தானும் வசிட்டன்காண்.**

***உறை ஓடும்*** - (பகைவரை வென்று) உறையில் அடங்கும்; ***நெடு வேலாய்*** - நீண்ட வேலினை உடையவனே!; ***திறையோடும்*** - (இம் மைந்தர்களுக்கு) திறைப் பொருள்கள் கொண்டு வந்து; ***அரசு இறைஞ்சும்*** - எல்லா அரசர்களும் வணங்கக் கூடிய; ***செறி கழல் கால்*** - நெருங்கிய வீரக்கழல் பூண்ட அடிகளையுடைய; ***தசரதன் ஆம்*** - தச ரத மன்னனாகிய; ***பொறையோடும் தொடர்*** - பொறுமைப் பண்புடனே பொருந்திய; ***மனத்தான்*** - மனத்தையுடையவனுக்கு; ***புதல்வர்*** - மைந்தர்கள்; ***எனும் பெயரே காண்*** - என்று சொல்லுகின்ற பெயர் ஒன்று மாத்திரமே; ***உப நயனம் விதி முடித்து*** - (ஆனால்) வேத விதிப்படி செய்யத்தக்க உபநயனச் சடங்குகளைச் செய்வித்து; ***மறை ஓதுவித்த*** - வேதங்களைப் பயிலுமாறு செய்து; ***இவரை வளர்த்தானும்*** - இவர்களை வளர்த்தவன்; ***வசிட்டன் காண்*** - வசிட்ட முனிவனே ஆவான்.

*தசரதன் நால்வர்க்கும் தந்தை ஆயினும் இக் குமாரர்களின் நன்மையை நாடிச் சகல கலைகளிலும் வல்லவராகுமாறு வளர்த்தமையால் வசிட்டனே உண்மைத் தந்தையெனத் தக்கான் என்றார்.*

*இராமன் வேள்வி காத்த திறம்*

***661. ‘ஈங்கு இவரால். என் வேள்விக்கு***
***இடையூறு கடிது இயற்றும்***
***தீங்குடைய கொடியோரைக்***
***கொல்விக்கும் சிந்தையன் ஆய்.***
***பூங் கழலார்க் கொண்டுபோய்***
***வனம் புக்கேன். புகாமுன்னம்.***
***தாங்க அரிய பேர் ஆற்றல்***
***தாடகையே தலைப்பட்டாள்.***

***என் வேள்விக்கு*** - *என யாகத்திற்கு;* ***கடிது*** - *விரைந்து;* ***இடையூறு இயற்றும்*** - *தடைகளைச் செய்கின்ற;* ***தீங்கு உடைய*** - *கொடிய செயலையுடைய;* ***கொடியோரை*** - *தீய குணமுள்ள அரக்கர்களை;* ***ஈங்கு இவரால்*** - *இங்குள்ள இந்த இராம லக்குவரால்;* ***கொல்விக்கும்*** - *கொல்லச் செய்யவேண்டுமென்ற;* ***சிந்தையனாய்*** - *கருத்துடையவனாகி;* ***பூங்கழலார்*** - *பூவின் மென்மையுடைய வீரக் கழல்பூண்ட இம் மைந்தர்களை;* ***கொண்டுபோய்*** - *(தசரதனிடமிருந்து) அழைத்துக் கொண்டு;* ***வனம் புக்கேன்*** - *தவ வனத்துள் சென்றேன்;* ***புகாமுன்னம்*** - *(அவ்வாறு அவ் வனத்திற்குள்) சேர்வதற்கு முன்பே (சேர்ந்தவுடனே);* ***தாங்கு அரிய*** - *(பிறரால் பொறுத்துக் கொள்ளமுடியாத;* ***பேராற்றல்*** - *மிக்க வலிமையையுடைய;* ***தாடகையே*** - *தாடகை என்னும் அரக்கியே;* ***தலைப்பட்டாள்*** - *முதலில் எதிர்த்து வந்தாள். ‘பூங்கழலார்க் கொண்டு போய் வனம் புக்கேன்’ என்பதில் இவர்தம் மெல்லிய அடிகளைப் பரல் நிரம்பிய வனத்தில் நடக்கச் செய்தேனே என்ற இரக்கக் குறிப்பும் புலனாகின்றது.* 25

***662. ‘அலை உருவக் கடல் உருவத்து***
***ஆண்தகைதன் நீண்டு உயர்ந்த***
***நிலை உருவப் புய வலியை***
***நீ உருவ நோக்கு ஐயா!***
***உலை உருவக் கனல் உமிழ் கண்***
***தாடகைதன் உரம் உருவி.***
***மலை உருவி. மரம் உருவி.***
***மண் உருவிற்று. ஒரு வாளி!***

***ஐயா*** - *மன்னவனே!;* ***அலை உருவம்*** *- அலைகளின் வடிவமாகக் காட்சியளிக்கின்ற;* ***கடல் உருவத்து*** *- கடல்போன்ற கரிய திருமேனியுடைய;* ***ஆண் தகைதன்*** *- ஆண்மைத் தன்மையுள்ள இந்த இராமனது;* ***நீண்டு உயர்ந்த*** *- நெடிதாக உயர்ந்துள்ள;* ***நிலை உருவப்புயம்*** *- நிலையான அழகுடைய தோள்களின்;* ***வலியை*** *- ஆற்றலை;* ***நீ உருவ நோக்கு*** *- நீ உற்றுப் பார்ப்பாயாக!;* ***ஒருவாளி*** *- (இராமனது தோள் வலியால் எய்யப்பட்ட) அம்பு ஒன்றுதான்;* ***உலை உருவம்*** *- உலைக் களத்திலுள்ள சிவந்த;* ***கனல் உமிழ் கண்*** *- நெருப்பைக் கக்குகின்ற கண்களையுடைய;* ***தாடகை தன்*** *- தாடகையினது;* ***உரன் உருவி*** *- மார்பைத் துளைத்து;* ***மலை உருவி*** *- (அடுத்து நின்ற); மலைகளையும் துளைத்து;* ***மலை உருவி*** *- பல மரங்களையும் துளைத்து;* ***மண் உருவிற்று*** *- (எதிரே வேறு பொருள் இல்லாமையால்) நிலத்தையும் துளைத்துச் சென்றது.*

*‘இராமனைச் சிறுவன் என்று கருதாதே’ இவனது ஓர் அம்பு செய்த செயலால் இவனது வீரம் எத்தகையது என்று ஆராய்ந்து பார்’ என்கிறான் முனிவன். அணி - திரிபு என்னும் சொல்லணி. பல பொருள்களையும் துளைக்குமாறு அம்பு எய்யும் வில் திறம் ‘வல்வில்’ என்ற அடையால் புலப்படும்.*

***663. ‘செக்கர் நிறத்து எரி குஞ்சிக்***
***சிரக் குவைகள் பொருப்பு என்ன***
***உக்கவோ முடிவு இல்லை;***
***ஓர் அம்பினொடும். அரக்கி***
***மக்களில். அங்கு ஒருவன் போய்***
***வான் புக்கான்; மற்றையவன்***
***புக்க இடம் அறிந்திலேன்;***
***போந்தனென். என் வினை முடித்தே.***

***செக்கர் நிறத்து*** *- செவ்வானம் போன்ற நிறம் கொண்ட;* ***எரி குஞ்சி*** *- நெருப்புப் போல மயிர்களையுடைய;* ***சிரம் குவைகள்*** *- (எனது வேள்விக்கு இடையூறு செய்த அரக்கர்களின்) தலைகளின் குவியல்;* ***பொருப்பு என்ன*** *- மலைகளைப் போல;* ***உக்கனவோ*** *- அறுபட்டு விழுந்து கீழே சிதறியவற்றிற்கோ;* ***முடிவு இல்லை*** *- ஓர் அளவே இல்லை;* ***அங்கு*** *- அப்போது; (அந்த இடத்தில்);* ***அரக்கி மக்களில் ஒருவன்*** *- அத் தாடகையின் மைந்தர் இருவருள் ஒருவனான சுபாகு;* ***ஓர் அம்பினொடும்*** *- (இராமன் எறிந்த) அம்பு தைத்த மாத்திரத்தில்;* ***போய் வான் புக்கான்*** *- உயிர் நீத்து வானுலகம் சேர்ந்தான்;* ***மற்றையவன்*** *- மற்றொரு மைந்தனான மாரீசன்;* ***புக்க இடம்*** *- (இவன் எய்த அம்பால்) போய் விழுந்த இடத்தை;* ***அறிந்திலேன்*** *- யான் அறியவில்லை (இவ்வாறு இடையூறு அகப்பட்ட பின்பு);* ***என் வினை முடித்து*** *- என் வேள்வியை நிறைவாகச் செய்து முடித்து;* ***போந்தனென் - (இங்கே) வந்தேன்.***

*பொருப்பு: இந்திரனால் சிறகு அரியப்பட்டு மண்ணில் விழுந்த மலைகள்.*

*இராமனது வில்லாற்றல்*

***664. ‘ஆய்ந்து ஏற உணர் - ஐய!-***
***அயற்கேயும் அறிவு அரிய;***
***காய்ந்து ஏவினன். உலகு அனைத்தும்***
***கடலோடும் மலையோடும்***
***தீய்ந்து ஏறச் சுடுகிற்கும்***
***படைக் கலங்கள். செய் தவத்தால்***
***ஈந்தேனும் மனம் உட்க.***
***இவற்கு ஏவல் செய்குனவால்.***

***ஐயா** - அரசே!; **அயற்கேயும் அறிவு அரிய** - பிரமனாலும் அறிய முடியாத இராமனின் பெருமைகளை; **ஆய்ந்து ஏற உணர்** - ஆராய்ந்து முழுவதும் உணர்க; **உலகு அனைத்தும்** - உலகங்கள் எல்லாவற்றையும்; **கடலோடும்** - கடல்களுடனும்; **மலையோடும்** - மலைகளுடனும்; **காய்ந்து** - எரிந்து; **தீய்ந்து ஏற** - கரிந்து போகும்படி; **சுடுகிற்கும் படைக்கலங்கள்** - எரிக்கவல்ல படைக்கருவிகள்; **செய் தவத்தால்** - செய்த தவப் பயனால்; **ஈந்தேனும்** - பெற்றுக் கொடுத்த நானும்; **மனம் உட்க** - நெஞ்சு நடுங்குமாறு; **இவற்கு ஏவல் செய்குன** - இந்த இராமனுக்கு குற்றேவல் செய்து நிற்கின்றன.*

*‘ஈந்தேனும் மனம் உட்க’ என்றது தன்னிடத்திலும் இராமனிடம் ஆயுதங்கள் மிக்க அன்புபூண்டு பணி செய்கின்றன’ என்பதாம் ஆல். ஏ - அசைகள்.*
*அகலிகைக்கு முன்னை உருத் தந்த பெருமை*

***665. ‘கோதமன்தன் பன்னிக்க***
***முன்னை உருக் கொடுத்தது. இவன்.***
***போது நின்றது எனப்பொலிந்த.***
***பொலங் கழற் கால் பொடி கண்டாய்;***
***காதல் என்தன் உயிர்மேலும்***
***இக் கரியோன்பால் உண்டால்;***
***ஈது. இவன்தன் வரலாறும்.***
***புய வலியும்’ என உரைத்தான்.***

***இவன்** - இந்த இராமனது; **போது நின்றது என** - செந்தாமரை (வாடி வதங்காமல் எப்பொழுதும் ஒரு தன்மையாகப் பொருந்தி நின்றது) என்னுமாறு; **பொலிந்த** - விளங்குகின்றன; **பொலன் கழற்கால்** - பொற்கழலை யணிந்த திருவடியின்; **பொடி** - தூளியே; **கோதமன் தன் பன்னிக்கு** - கௌதம முனிவனின் மனைவியான அகலிகைக்கு; **முன்னை உரு** - பழைய வடிவத்தை; **கொடுத்தது கண்டாய்** - (சாபம் நீக்கி) தந்து அருளியதைக் காண்பாய்; **என்தன் உயிர் மேலும்** - எனக்கு (எனது) உயிரிடத்து உள்ளதைக் காட்டிலும்; **இக்கரியோன்பால்** - கரிய இந்த இராமனிடத்தில்; **காதல் உண்டு** - அன்பு மிகுதியாக உள்ளது; **இவன்தன் வரலாறும்** - இந்த இராமனது தூய வரலாறும்; **புய வலியும்** - தோள் ஆற்றலும்; **ஈது என** - இதுவாம் என்று; **உரைத்தான்***

*- (கோசிக முனிவன் சனகனுக்குத் தசரதன் மகனான இராமனது பண்புகளைக்) கூறி முடித்தான். இராமனது திருவடி கூடப் பெருமைமிக்கது என்றால் இவன் திருமேனியின் பெருமை கூறல் வேண்டா என்பது இராமன்: கரிய நிறம் உடையவன். அதனால் இராமனைக் 'கரியோன்' என்றார். 'இவ்வளவு பெருமைமிக்க இராமனிடம் என் உயிரினும் எனக்கு அன்பு மிகுதியாக உள்ளது' என்றான் விசுவாமித்திரன் பன்னி - பத்நீ என்பதன் திரிபு. காதல் - பத்திமை. 'காதலால் நெஞ்சம் அன்பு கலந்திலேன்' - திருமாலை - 26*

# கார்முகப் படலம்

*பெயர்க் காரணம்: கார்முகத்தைப் பற்றிய படலம் எனலாம். இராமன் சிவனது வில்லை (சிவதனுசு) நாணேற்றி முறித்தமையைக் கூறும் பகுதி இது. கார்முகம் - வில்.*

*படலச் சுருக்கம்: இராமன் வில்லை நாணேற்றினால் துயர் நீங்குமென்று சனகன் கூறுகின்றான். அந்த வில்லை ஏவலர் அவைக்குக் கொண்டு வருகின்றார்கள். வில்லைப் பார்த்தவர்கள் பலவாறு பேசுகின்றார்கள். சதானந்த முனிவன் வில்லினது வரலாற்றை உரைக்கின்றான். பின்னர் விசுவாமித்திரனது முகக்குறிப்பை அறிந்த இராமன் வில்லை நோக்கி எழுகின்றான். அந்த வில்லினை எடுத்து இராமன் நாணேற்றுகின்றான்;வில் முறிந்த ஓசையை யாவரும் கேட்டு அஞ்சுகின்றனர். மிதிலை நகர மக்களின் மகிழ்ச்சி வெளிப்படுகிறது. காதல் நோயால் நைந்த சீதைக்கு அவள் தோழியான நீலமாலை மகிழ்ச்சியான செய்தியைக் கூறுகின்றாள்; சனகன் உவந்து கோசிகனிடம் திருமணம் குறித்து வினவுகின்றான். அம் முனிவன் மொழிப்படியே சனகன் தசரதனுக்குத் தூது விடுக்கின்றான்.*

*இராமன் வில்லை நாணேற்றினால் துயர் நீங்கும் எனச் சனகன் கூறுதல்*

***666. 'மாற்றம் யாது உரைப்பது?***
***மாய விற்கு நான்***
***தோற்றனென் என***
***மனம் துளங்குகின்றதால்;***
***நோற்றனள் நங்கையும்;***
***நொய்தின் ஐயன் வில்***
***ஏற்றுமேல். இடர்க் கடல்***
***ஏற்றும்' என்றனன்.***

*(சனகன் விசுவாமித்திரனை (நோக்கி)* ***மாற்றம் யாது*** - உமது வார்த்தைக்கு மாற்றமாக என்ன; ***நான் உரைப்பது*** - நான் சொல்ல இருக்கின்றது; ***மாய விற்கு*** - வஞ்சனையமைந்த இந்த வில்லை; கன்னியின் திருமணத்திற்கு காரணமாக வைத்தால்; ***மனம் -*** *(எனது)* விருப்பம்; ***தோற்றனென் என -*** தோற்றுவிட்ட தன்மையை எண்ணும்போது; ***துளங்குகின்றது -*** மிகக் கலங்குகின்றது; ***ஐயன் -*** வியத்

*தகு பண்புகளையுடைய இக்குமாரன்;* ***நொய்தின்*** *- விரைவாக;* ***வில் ஏற்றுமேல்*** *- சிவ தனுசை வளைத்து நாண் ஏற்றுவானேயானால்;* ***இடர்க்கடல் ஏற்றும்*** *- (என்னையும்) துயரக் கடலிலிருந்து கரையேற்றினவனாவான்;* ***நங்கையும்*** *- என் மகளான சீதையும்; 'முனிவரே! இம் மைந்தரின் குலவரலாற்றோடு தோள்வலிமையையும் கூறினீர். உமது வார்த்தைக்கு மறமாற்றம் சொல்வேனோ? ஆனால் பெண்ணின் திருமணத்தின் பொருட்டு வைத்த இந்த வில்லை இதுவரை எந்த வீரரும் வளைத்து நாணேற்றினாரில்லை;அதனால் என் மகள் திருமணமும் நடைபெறாமல் என் மனம் கலங்கியுள்ளது. இச் சிவ தனுசை இச் சிறுவன் நாணேற்றினால் என் துன்பமும் நீங்கும்; இச் சீதையும் தவப் பேற்றைப் பெற்றவளாவாள் என்றான். எவராலும் வளைக்கமுடியாமல் இருந்ததால் இதனை 'மாயவில்' என்றார். 1*

***நோற்றனள்*** *- (முன் செய்த) தவப்பேற்றைப் பெற்றவளாவாள்;* ***என்றனன்*** *- என்று கூறினான். ஏவலர் வில்லினை அவைக்குக் கொண்டுவரல்*

***667. என்றனன். ஏன்று. தன்***
***எதிர் நின்றாரை. 'அக்***
***குன்று உறழ் வரி சிலை***
***கொணர்மின். ஈண்டு' என.***
***'நன்று' என வணங்கினர்.***
***நால்வர் ஓடினர்;***
***பொன் திணி கார்முகச்***
***சாலை புக்கனர்.***

***என்றனன்*** *- என்று கூறிய சனகன்;* ***ஏன்று*** *- தன் கட்டளையை ஏற்று;* ***எதிர் நின்றாரை*** *- தனக்கு எதிரே நின்ற ஏவலாட்களை நோக்கி;* ***குன்று உறழ் வரிசிலை*** *- மலையைப் போன்ற அக்கட்டமைந்த (சிவ) வில்லை;* ***ஈண்டு கொணர்மின்என*** *- இங்கே கொண்டு வாருங்கள் என்று ஆணையிட;* ***நால்வர்*** *- அவர்களுள் நான்கு பேர்;* ***நன்று என வணங்கினர்*** *- நல்லது என்று கூறி வணங்கிவிட்டு;* ***ஓடினர்*** *- விரைவாகச் சென்று;* ***பொன்திணி*** *- பொன் இழைத்த;* ***கார்முகச் சாலை*** *- அந்த வில் வைக்கப்பட்டுள்ள இடம்;* ***புக்கனர்*** *- சென்றார்கள்.*

*சிவதனுசை அச் சிறுவர்க்குக் காட்டுமாறு அதனை அங்கே கொண்டு வரச் சனகன் ஏலாட்களுக்குக் கட்டளையிட்டான்; அதனை மேற்கொண்ட சிலர் அவ் வில் வைத்திருக்குமிடம் சென்றார்கள். நன்று - அரசனது பணியை ஏற்று ஏவலாளர் கூறும் ஒரு மரியாதைச் சொல்.*

*668.   உறுவலி யானையை ஒத்த மேனியர்.*
*செறி மயிர்க் கல் எனத் திரண்ட தோளினர்.*
*அறுபதினாயிரர். அளவு இல் ஆற்றலர்.*
*தறி மடுத்து. இடையிடை. தண்டில் தாங்கினர்.**

*(விற்சாலையுள் புகுந்த ஏவலாளர் தெரிவித்தவாறு)* ***உறுவலி யானையை*** *- மிக்க வலிமையுடைய யானையை;* ***ஒத்த மேனியர்*** *- ஒத்த திடமான உடலையுடையவர்களும்;* ***கல் எனத் திரண்ட*** *- மலை போலத் திரண்டு;* ***மயிர் செறி தோளினர்*** *- மயிர் அடர்ந்த தோளினரும்;* ***அளவு இல் ஆற்றலர்*** *- அளவிடமுடியாத வல்லமையுடையவர்களுமாகிய;* ***அறுபதினாயிரர்*** *- அறுபதினாயிரம் வீரர்கள்;* ***இடை இடை*** *- (அந்த வில்லின்) நடு இடங்களில்;* ***தறி மடுத்து*** *- தூண்களை வைத்து;* ***தூண்டில்*** *- (அத் தூண்களோடு நெடுகக் கட்டிய) தண்டுகளில்;* ***தாங்கினர்*** *- (தம் தோள்களில் வைத்து சுமந்து வந்தார்கள்.*

*669.   நெடு நிலமகள் முதுகு ஆற்ற. நின்று உயர்*
*தட நிமிர் வடவரைதானும் நாண் உற.*
*'இடம் இலை உலகு' என வந்தது. - எங்கணும்*
*கடல் புரை திரு நகர் இரைத்துக் காணவே.*

***நெடுநில மகள்*** *- பெரிய இப் பூமிதேவி;* ***முதுகு ஆற்ற*** *- (நெடுங்காலமாக அந்த வில்லைத் தாங்கியதனால் ஏற்பட்ட) முதுகின் நோவை ஆற்றிக் கொள்ளவும்;* ***நின்று உயர்*** *- நிலைபெற்று ஓங்கிய;* ***தடம் நிமிர் வடவரைதானும்*** *- பெரிய மேரு மலையும்;* ***நாண் உற*** *- (வில்லின் தோற்றம் கண்டு) வெட்கம் அடையவும்;* ***கடல் புரை திருநகர்*** *- கடல்போல் பரந்துபட்ட மக்கள்;* ***உலகு எங்கணும்*** *- உலகத்திலே எங்கும்;* ***இடம் இலை என*** *- இடம் இல்லை என்று சொல்லும்படி;* ***வந்தது*** *- (அச்சிவ) வில்லானது (சுமக்கப்பட்டு) வந்தது.*

*உலகத்தவர் திரண்டு காணுமாறு அச்சிவ வில் ஆயிரக் கணக்கான பணியாளரால் தாங்கப்பட்டு வந்தது. நெடுங்காலமாகச் சிவதனுசைத் தாங்கியதனால் நோவுற்ற பூமிக்கு இப்போது இளைப்பாற இடம் ஏற்பட்டது. நகர் - ஆகு பெயர்.*

*வில்லினைக் கண்டோர் விளம்பியமை*

*670.   'சங்கொடு சக்கரம்*
*தரித்த செங் கை அச்*
*சிங்க ஏறு அல்லனேல்.*
*இதனைத் தீண்டுவான்*

***எங்கு உளன் ஒருவன்?***
***இன்று ஏற்றின். இச் சிலை.***
***மங்கைதன் திருமணம்***
***வாழுமால். என்பார்***

***சங்கொடு சக்கரம்*** - சங்கு சக்கரங்களை; ***தரித்த செங்கைய*** - தாங்கிய செம்மையான கைகளையுடைய; ***சிங்க ஏறு அல்லனேல்*** - ஆண்சிங்கம் போன்ற திருமால் (நாணேற்றி) வளையாமல் போனால்; ***இதனை*** - இந்தச் சிவதனுசை; ***தீண்டுவான் ஒருவன்*** - தீண்டுவதற்கும் தகுதியுள்ள ஒருவன்; ***எங்கு உளன்*** - (வேறு) எங்கே இருக்கிறான்?; ***இன்று*** - இன்றைய தினம்; ***இச்சிலை ஏற்றின்*** - (அத் திருமாலே வந்து) இந்த வில்லை நாணேற்றி வளைப்பானாயின்; ***மங்கைத்தன் திருமணம்*** - சீதையின் திருமணமானது; ***வாழும்*** - நல்வாழ்வு பெறும்; ***என்பார்*** - என்று கூறினர் (சிலர்).

*சிங்க ஏறு - திருமால். விசுவாமித்திரன் அழைத்து வந்த இச்சிறுவன் திருமாலாயிருப்பின் இது கைகூடுதலும். சீதை நன்மணம் பெறுதலும் கூடும் என்பதாம். ஏனெனில். திருமாலைத் தவிர வேறு யாராலும் .இவ்விலல்லைத் தீண்டுதல் என்பதும் இயலாது.*

***671. 'கைதவம். தனு எனல்;***
***கனகக் குன்று' என்பார்;***
***'செய்தது. அத் திசைமுன்***
***தீண்டி அன்று; தன்***
***மொய் தவப் பெருமையின்***
***முயற்சியால்' என்பார்;***
***'எய்தவன் யாவனோ.***
***ஏற்றிப் பண்டு?' என்பார்.***

***தனு எனல்*** - வில்லென்று சொல்லுதல்; ***கைதவம்*** - வஞ்சக் சொல்லே; ***கனக் குன்று*** - (இது) பொன்மலையான மேருவாகும்; ***என்பார்*** - என்று கூறுபவர்களும்; ***அத் திசைமுகன்*** - பிரமன்; ***செய்தது*** - (இதனை) இயற்றியது; ***தீண்டி அன்று*** - (தன்கையால்) தொட்டுப் பார்த்து இல்லை; (பின் எவ்வாறு இயற்றியது); ***தன் மொய்தவம்*** - தனது நிறைந்த பெரிய தவத்தின்; ***பெருமையின் முயற்சியால்*** - பெருமையால்; ***என்பார்*** - என்பாரும் ஆயினர்; ***பண்டு ஏற்றி எய்தவன்*** - முற்காலத்தில் நாண் ஏற்றி (இதனை) எய்தவன்; ***யாவனோ என்பார்*** - எவனோ என்று கூறுபவர்களும்.

*சிவ தனுசிடம் அத்தன்மையை மறுத்து மேருவின் தன்மையை ஏற்றிக் கூறியது - அவநுதியணி. இத்துணைப் பெரிய வில்லைப் பிரமன் தன் கையால் இயற்றவில்லை; தன் தவலிமையால் இயற்றினான்.*

***672.  ‘திண் நெடு மேருவைத்***
***திரட்டிற்றோ?’ என்பார்;***
***‘வண்ண வான் கடல் பண்டு***
***கடைந்த மத்து’ என்பார்;***
***‘அண்ணல் வாள் அரவினுக்கு***
***அரசனோ?’ என்பார்;***
***விண் இடு நெடிய வில்***
***வீழ்ந்ததோ?’ என்பார்.***

*(இந்த வில்); **திண்நெடு மேருவை** - வலிய நெடிய மேருவை; **திரட்டிற்றோ** - திரட்டிச் செய்ததோ; **என்பார்** - என்று சொல்பவர்களும்; **வண்ணவான் கடல்** - அழகிய நீண்ட பாற்கடலை; **பண்டு கடைந்த** - முன்பு கடைந்த; **மத்து என்பார்** - மத்தாகிய மந்தர மலையே என்று சொல்பவர்களும்; **அண்ணல் வாள்** - பெருமை மிகுந்த ஒளியுள்ள; **அரவினக்கு அரசனோ** - பாம்புகளுக்கு அரசனாகிய ஆதிசேடனோ; **என்பார்** - என்று கூறுபவர்களும்; **விண் இடு** - வானத்தில் இடுகின்ற; **நெடிய வில்** - நீண்ட இந்திரவில்லே; **வீழ்ந்ததோ என்பார்** - தவறிக் கீழே விழுந்துவிட்டதோ என்று சொல்பவர்களும்.*

*வில்லைக் கண்டவர் பலபடியாகப் புனைந்து கூறினர் என்பது - தற்குறிப்பேற்ற அணி. பாம்பு வில்லுக்கு உவமையாதல் - ‘அரவின் தோற்றமே போலும் சிலை’ - சீவக. 2158*

*7*

***673.  என். “இது கொணர்க” என.***
***இயம்பினான்?’ என்பார்;***
***‘மன்னவர் உளர்கொலோ***
***மதி கெட்டார்?’ என்பார்;***
***‘முன்னை ஊழ் வினையினால்***
***முடிக்கில் ஆம்’ என்பார்;***
***கன்னியும் இச் சிலை***
***காணுமோ?’ என்பார்.***

***இது கொணர்க என** - இந்த வில்லைக் கொண்டு வருக என்று; **என் இயம்பினான்** - எதற்காகச் சொன்னான் (இம் மன்னன்); **என்பார்** - என்று கூறுபவர்களும்; **மதி கெட்டார்** (வில்லை வளைக்க விரும்பிய) இம் மன்னனைப் போல; **மன்னவர் உளர்கொல் -** அறிவற்ற அரசர் வேறு யாரேனும் இருக்கினறார்களா?; **என்பார் -** என்று சொல்பவர்களும்; **முன்னை ஊழ்வினையினால் -** முற்பிறப்பில் செய்த நல்வினையால்; **முடிக்கில் ஆம் என்பார் -** ஒரு*

வேளை வளைத்தலும் கூடும் என்று கூறுபவர்களும்; **கன்னியும் இச்சிலை** - கன்னியான சீதையும் இந்த வில்லை; **காணுமோ என்பார்** - கண்டிருப்பாளோ என்று சொல்பவர்களும்.

இந்த வில்லைக் கன்னியின் திருமணத்தின் பொருட்டு வைத்த இவனைப் போல மதிகெட்ட அரசர் இருக்கமுடியாது என்பது. வளைக்கப்படாது கிடக்கும் இந்த வில்லைச் சீதை கண்டாள் கலங்குவாள் என்றார்.

***674. 'இச் சிலை உதைத்த கோற்கு***
***இலக்கம் யாது?' என்பார்;***
***'நச் சிலை நங்கைமேல்***
***நாட்டும். வேந்து' என்பார்;***
***'நிச்சயம் எடுக்கும்கொல்***
***நேமியான்!' என்பார்;***
***சிற்சிலர். 'விதி செய்த***
***தீமை ஆம் என்பார்.***

**இச்சிலை** - இந்த வில்; **உதைத்த கோற்கு** - (தன்னிடத்திலிருந்து) செலுத்திய அம்புக்கு; **இலக்கம் யாது** - குறியாக அமைவது எது; **என்பார்** - என்று சொல்பவர்களும்; **வேந்து** - சனக மன்னன்; **நச்சிலை** - பெருமை மிக்க இந்த வில்லை; **நங்கை மேல்** - நங்கையான இச் சீதையின் திறத்திற்காகவே; **நாட்டும்** - நிலை நிறுத்தி?யுள்ளான்; **என்பார்** - என்று கூறுபவர்களும்; **நேமியான்** - சக்கரப் படை ஏந்திய திருமாலாகிய இந்த இராமனும்; **நிச்சம் எடுக்கும் கொல்** - உறுதியாக இந்த வில்லை எடுத்து வளைப்பானா; **என்பார்** - என்று கூறுபவர்களும்; **சிற்சிலர்** - சிலபேர்; **விதி செய்த தீமை தான்** - ஊழ்வினை விளைத்த தீமையே (இவ்வாறு அமைந்தது); **என்பார்** - என்று வருந்துபவர்களும் (ஆனார்).

வில்லைக் குறித்துக் கண்டவர் பலபடப் புனைந்து கூறுவது. உயர்வு குறிக்கும் இடைச்சொல்.

### வில்லைக் கண்ட வேந்தவர்கள் கைவிதிர்த்தல்

***675. மொய்த்தனர் இன்னணம்***
***மொழியாக. மன்னன் முன்***
***உய்த்தனர். நிலம் முதுகு***
***உளுக்கிக் கீழ் உற.***
***வைத்தனர்; 'வாங்குநர்***
***யாவரோ?' எனா.***
***கைத்தலம் விதிர்த்தனர்.***
***கண்ட வேந்தரே.***

***மொய்த்தனர்*** - (அங்கே) நெருங்கிக் கூடியிருந்த மிதிலை மக்கள்; ***இன்னணம் மொழிய*** - இவ்வாறு பலபடியாகச் சொல்லிக் கொண்டிருக்க; ***மன்னன் முன்*** - (அதனைச் சுமந்து வந்த பணியாளர்) சனகன் முன்பு; ***உய்த்தனர்*** - கொண்டு வந்து; ***நிலம் முதுகு உளுக்கி*** - நிலமகளின் முதுகு (சுமை தாங்காமல்) நெளிந்து குழிந்து போகும்படி; ***கீழ்உற வைத்தனர்*** - (பூமியின் மேல்) அந்த வில்லை வைத்தார்கள்; ***கண்ட வேந்தர்*** - (அந்த வில்லை) நேரே பார்த்த அரசர் யாவரும்; ***வாங்குநர் யாவரோ*** - (இந்த வில்லை) வளைக்கப் போகின்றவர் யாரோ? (எவராலும் வளைக்கமுடியாது); ***எனா*** - என்று கூறி; ***கைத்தலம் விதிர்த்தனர்*** - (அந்த வில்லைத் தொடுவதற்கும் கூசி) கைந் நடுக்கம் எடுத்தனர்.

*பணியாளர் அவ்வில்லை அரசன்முன் வைத்த அளவில் அதைக் கண்ட அரசர் இவ்வில்லை வளைக்க எவராலும் முடியாது எனக் கூறிக் கைந்நடுக்கம் எடுத்தனர் என்பது.*

*சதானந்த முனிவன் வில்லின் வரலாறு உரைத்தல்*

***676. போதகம் அனையவன்***
***பொலிவை நோக்கி. அவ்***
***வேதனை தருகின்ற***
***வில்லை நோக்கி. தன்***
***மாதினை நோக்குவான். தன்***
***மனத்தை நோக்கிய***
***கோதமன் காதலன்***
***கூறல் மேறினான்;***

***போதகம் அனையவன்*** - யானைக் கன்றை யொத்தவனாகிய இராமனது; ***பொலிவு நோக்கி*** - அழகைக் கண்டு; ***வேதனை தருகின்ற*** - (அவனுக்குத் தன் மகளைத் திருமணம் செய்விக்க விரும்பி) துன்பம் தருகின்ற; ***அவ் வில்லை நோக்கி*** - (தனது விருப்பத்திற்கு இடையூறாக உள்ள) அந்த வில்லின் தன்மையையும் பார்த்து; ***தன் மாதினை நோக்குவான்*** - (இந்த வில் மணமுடிக்கத் தடையாக உள்ளதே; இவள் கன்னியாகவே மூப்பாளோ என்ற மனக் கவலையோடு) தன் மகளைப் பார்க்கின்ற சனகனது; ***மனத்தை*** - மனக் கலக்கத்தை; ***நோகிய*** - உணர்ந்த; ***கோதமன் காதலன்*** - கௌதமன் மகனாகிய சதானந்தன்; ***கூறல் மேயினான்*** - சொல்லத் தொடங்கினான்.

*போதகம்: இள வயதுடைய யானைக் கன்று. வில்லின் வரலாற்றைச் சனகராசன் கூறுவதாக முதனூலில் உள்ளது. இங்கே சதானந்தன் உரைப்பதாக அமைத்துள்ளார். தன் மாதினை நோக்குவான் மனம் என்றது தன் அருமைப் பெண் கன்னியாகவே மூத்துக் கழிய நேருமோ என்ற மனக் கவலையைக் குறிக்கும்.*

***677. ‘இமைய வில் வாங்கிய ஈசன். “பங்கு உறை***
***உமையினை இகழ்ந்தனன் என்ன” ஓங்கிய***
***கமை அறு சினத்தன் இக் கார்முகம் கொளா.***
***சமை உறு தக்கனார் வேள்வி சாரவே.***

***இமையவில்*** - *மேருமலையை வில்லாக;* ***வாங்கிய ஈசன்*** - *வளைத்த சிவன்;* ***பங்கு உறை*** - *(தன்) இடப்பக்கத்திலே வாழும்;* ***உமையினை*** - *உமா தேவியை;* ***இகழ்ந்தனன் என்ன*** - *(தந்தையான தக்கன்) அவமதித்தான் என்ற காரணத்தால்;* ***ஓங்கிய*** - *பொங்கியெழுந்த;* ***கமை அறுசினத்தன்*** - *பொறுமையற்ற சினத்தை யுடையவனாய்;* ***இக் கார்முகம் கொளா*** - *இந்த வில்லை எடுத்துக்கொண்டு;* ***சமை உறு*** - *நடந்து கொண்டிருக்கின்ற;* ***தக்கனார் வேள்வி*** - *தக்கனது யாக சாலையை;* ***சார*** - *(நோக்கிச்) சேர.*

*மந்தரம். இமயம். கைலாயம் என்பவற்றை மேருவுடன் வேறுபாடின்றிக் கூறுவது நூல் வழக்காகும். ‘இமயவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்’ - கலித். 3*

*12*

***678. ‘உக்கன பல்லொடு கரங்கள். ஓடினர்;***
***புக்கனர். வானவர் புகாத சூழல்கள்;***
***தக்கன் நல் வேள்வியில் தழலும் ஆறின;***
***முக் கண் எண் தோளவன் முனிவும் மாறினான்.***

***பல்லொடு*** - *(அவ் வேள்விக்கு வந்த தேவர்களின்) பற்களும்;* ***கரங்கள்*** - *கைகளும்;* ***உக்கன*** - *கீழே சிந்தின;* ***வானவர்*** - *(அல்லாமலும்) தேவர்களில் சிலர்;* ***ஓடினர்*** - *ஓடி;* ***புகாத சூழல்கள்*** - *அதுவரை தாம் சென்று அறியாத இடங்களில்;* ***புக்கனர்*** - *பதுங்கிக் கொண்டார்கள்;* ***தக்கன் நல்வேள்வியில் தழலும்*** - *தக்கனின் வேள்விக் குண்டங்களில் எழுப்பிய நெருப்பும்;* ***ஆறின*** - *ஆறிவிட்டன;* ***முக்கண் எண்தோளவன்*** - *(இவ்வாறெல்லாம் ஆன பின்பே) மூன்று கண்களையும் எட்டுத் தோள்களையும் உடைய சிவன்;* ***முனிவு மாறினான்*** - *(தன்) சினமும் தணிந்தான்.*

*பல் உக்கது - கதிரவனுக்கு.*

***679. ‘தாளுடை வரி சிலை. சம்பு. உம்பர்தம்***
***நாள் உடைமையின். அவர் நடுக்கம் நோக்கி. இக்***
***கோளுடை விடை அனான் குலத்துள் தோன்றிய***
***வாளுடை உழவன் ஓர் மன்னன்பால் வைத்தான்.***

***சம்பு*** - *(தன் சினம் மாறிய) சிவன்;* ***அவர் நடுக்கம் நோக்கி*** - *தேவர்கள் அஞ்சி நடுங்குவதைப் பார்த்து;* ***உம்பர்தம் நாள்*** - *அத்தேவர்கள் வாழ்நாட்கள்;* ***உடைமையின்*** - *நீண்டு இருந்தமையால்;* ***தாள்உடை*** - *வலிய அடித்தண்டையுடைய;* ***வரிசிலை*** - *கட்டமைந்த அவ்வில்லை;* ***இக்கோள் உடை*** - *வலிமையுடைய;* ***விடை அனான்*** - *இந்தக் காளை போன்ற சனகனது;* ***குலத்துள் தோன்றிய*** - *குலத்திலே பிறந்த;* ***வாள் உடை உழவன்*** - *வாளாகிய ஏர் கொண்டு உழுபவனான;* ***ஓர் மன்னன்பால்*** - *ஓர் அரசனிடத்தில்;* ***வைத்தான்*** - *கொடுத்தான்.*

*சிவன் அந்த வில்லைத் தேவராதனிடம் கொடுத்து வைத்தான். 'வில்லேர் உழவர்' என்றாற்போல 'வாளுடை உழவன்' என்றார். 'வாளேருழவன்' - புற. 368. 'வில்லேர் உழவர்' 'சொல்லேர் உழவர்' - திருக். 882*

*14*

***680. 'கார்முக வலியை யான் கழறல் வேண்டுமோ?***
***வார் சடை அரன் நிகர் வரத! நீ அலால்.***
***யார் உளர் அறிபவர்? இவற்குத் தோன்றிய***
***தேர் முக அல்குலாள் செவ்வி கேள்' எனா.***

***கார்முக வலியை*** - *இந்த வில்லின் வலிமையை;* ***யான் கழறல் வேண்டுமோ*** - *நான் எடுத்துக் கூற வேண்டுமோ?;* ***வார் சடை அரன்*** - *நீண்ட சடைமுடியுடைய சிவபிரானை;* ***நிகர்வரத*** - *ஒத்த முனிவனே!;* ***நீ அலால்*** - *உன்னையல்லாமல்;* ***அறிபவர்*** - *(இதன் வலிமையை) உண்மையாக அறியக் கூடியவர்;* ***யார் உளர்*** - *யார் இருக்கின்றார் (யாருமில்லை);* ***இவற்கு*** - *இந்தச் சனகராசனுக்கு;* ***தோன்றிய*** - *(மகளாகப்) பிறந்த;* ***தேர்முக அல்குலாள்*** - *தேர்த்தட்டுப் போன்ற அல்குலையுடைய சீதையின்;* ***செவ்வி*** - *வரலாற்றை;* ***கேள்*** - *கேட்பாயாக;* ***எனா*** - *என்று சொல்லி.*

*கார்முக வலியை நான் சொல்ல வேண்டுவதில்லை. ? ஏனெனில். அதை அறுபதினாயிரம் பேர் சுமந்து வந்ததை நீரே நேரில் கண்டதால் அதன் வலிமை உமக்குத் தெரியும். வில்லை அளித்த சிவபெருமான் அனைய நீயே அவ்வில்லை வளைப்பிக்கவும். சானகியின் திருமணத்தை நிறைவேற்றி வைக்கவும் அருள் புரியவேண்டும் என்பது. 'வார்சடை அரன் நிகர் வரத' என்ற விளியால் உணர்த்தப் பெறுகிறது - கருத்துடையடைகொளியணி.*

***681. 'இரும்பு அனைய கரு நெடுங் கோட்டு***
***இணை ஏற்றின் பணை ஏற்ற***
***பெரும் பியலில் பளிக்கு நுகம் பிணைத்து.***
***அதனோடு அணைத்து ஈர்க்கும்***
***வரம்பு இல் மணிப் பொன் - கலப்பை***
***வயிரத்தின் கொழு மடுத்திட்டு***
***உரம் பொரு இல் நிலம். வேள்விக்கு.***
***அலகு இல் பல சால் உழுதேம்.***

**வேள்விக்கு** - *வேள்வி செய்யும் பொருட்டு;* **இரும்பு அனைய** - *இரும்பை ஒத்த (வலிய);* **கரு நெடு** - *பெரிய நீண்ட;* **இணைக் கோட்டு** - *இரு கொம்புகளையுடைய;* **ஏற்றின்** - *காளையின்;* **பணை ஏற்ற பெரும் பியலில்** - *பருத்த பெரும் பிடரியின் மேல்;* **பளிங்கு நுகம் பிணைத்து** - *பளிங்கால் இழைத்த நுகத்தடியைப் பூட்டி;* **அதனோடு அணைத்து** - *அதனோடு சேர்க்கப்பட்டு;* **ஈர்க்கும்** - *இழுத்துக்கொண்டு போகப்படுகின்ற;* **வரம்பு இல் மணி** - *எண்ணற்ற இரத்தினங்கள் பதித்த;* **பொன் கலப்பை** - *பொன் கலப்பையில்;* **வயிரத்தின் கொழு** - *வயிரத்தால் ஆகிய கொழுவை;* **மடுத்திட்டு** - *சேர்த்து;* **உரம் பொருவு இல்** - *உரவளத்தில் ஒப்பு இல்லாத;* **நிலம்** - *பூமியை;* **அலகு இல் பல சால்** - *அளவற்ற பல சால்கள்;* **உழுதேம்** - *(பன்முறை) நாங்கள் உழலானோம்.*

*வேள்வி செய்வதற்காக நிலத்தை உழுத பாங்கு இதிற் சொல்லப்படுகிறது. சால்: வயலில் ஒரு முறை நீள உழுதல்.*

***682.*** **'உழுகின்ற கொழு முகத்தின்.**
**உதிக்கின்ற கதிரின் ஒளி**
**பொழிகின்ற. புவி மடந்தை**
**திரு வெளிப்பட்டெனெ. புணரி**
**எழுகின்ற தெள் அமுதோடு**
**எழுந்தவளும். இழிந்து ஒதுங்கித்**
**தொழுகின்ற நல் நலத்துப்**
**பெண் அரசி தோன்றினாள்.**

**உழுகின்ற** - *(அவ்வாறு) உழுது வந்த;* **கொழு முகத்தின்** - *கொழுவின் முனையில்;* **உதிக்கின்ற கதிரின் ஒளி** - *உதிக்கும் கதிரவனின் ஒளியை;* **பொழிகின்ற** - *வீசுகின்ற;* **புவி மடந்தை திரு** - *பூமி தேவியின் திருவுருவம்;* **வெளிப்பட்டென** - *வெளிப்பட்டாற் போல;* **புணரி எழுகின்ற** - *பாற்கடலில் தோன்றிய;* **தெள் அமுதோடு** - *தெள்ளிய அமுதுடன்;* **எழுந்தவளும்** - *பிறந்த இலக்குமியும்;* **இழிந்து** - *(தன்னழகு) தாழ்ந்து;* **ஒதுங்கி** - *ஒதுங்கி நின்று;* **தொழுகின்ற** - *(கை கூப்பி) வணங்குகின்ற;* **நன்னலத்து** - *மிக்க பேரழகு படைத்த;* **பெண் அரசி** - *பெண்களின் தலைவியான;* **தோன்றினாள்** - *இவள் (இந்தச் சீதை) தோன்றினாள்.*

*சீதை கொழுமுகத்தில் தோன்றினாள் என்றார். சீதையின் திருமேனி பொன்னிறமாதலால் 'உதிக்கின்ற கதிரின் ஒளி பொழிகின்ற புவிமடந்தை' என்றார் - தன்மைத் தற்குறிப்பேற்ற அணி. சீதா - உழுபடை சால். இலக்குமியும் தாழ்ந்து வணங்கத்தக்க பேரழகு படைத்தவள் சீதை என்பது.*

***683.  ‘குணங்களை என் கூறுவது?***
***கொம்பினைச் சேர்ந்து. அவை உய்யப்***
***பிணங்குவன; அழகு. இவளைத்***
***தவம் செய்து பெற்றதுகாண்;***
***கணங் குழையாள் எழுந்ததற்பின்.***
***கதிர் வானில் கங்கை எனும்***
***அணங்கு இழியப் பொலிவு இழந்த***
***ஆறு ஒத்தார். வேறு உற்றார்.***

***குணங்களை*** *- (இந்தப் பெண்ணின்) குணங்களைப் பற்றி;* ***என் கூறுவது*** *- என்னவென்று நான் சொல்வது? (என்னால் சொல்ல முடியாது);* ***அவை*** *- (ஏனெனில்) அந்தக் குணங்கள் யாவும்;* ***கொம்பினை*** *- பூங்கொம்பு போன்ற மெல்லிய சீதையை;* ***சேர்ந்து*** *- அடைந்து;* ***உய்ய*** *- நல்வாழ்வு பெறும்பொருட்டு;* ***பிணங்குவன*** *- (நீயோ நானோ முற்பட்டுச் சேர்வது என மாறுபட்டு) கலகம் புரிகின்றன;* ***அழகு*** *- (இது மட்டுமா?) அழகு என்பதோ;* ***தவம் செய்து*** *- தவத்தைச் செய்து;* ***இவளைப் பெற்றது*** *- இவளை அடைந்தது;* ***கணம் குழையாள்*** *- திரண்ட குழையென்னும் காதணி அணிந்த இந்தச் சீதை;* ***தோன்றியபின்*** *- (பூமியிலிருந்து) வெளிப்பட்டபின்;* ***வேறு உள்ளார்*** *- மற்றை மங்கையர் யாவரும்;* ***கங்கை எனும் அணங்கு*** *- கங்கை என்று சொல்லப்படுகின்ற தெய்வப்பெண்;* ***கதிர் வானின் இழிய*** *- கதிரவன் இயங்கும் வானத்திலிருந்து (இந்தப் பூமிக்கு) இறங்கி வந்ததனால்;* ***பொலிவு இழந்த ஆறு*** *- தமது அழகை இழந்த மற்றை நதிகளை;* ***ஒத்தார்*** *- போன்று தமது பொலிவை இழந்தார்கள்.*

*குணங்கள் யாவும் இச் சீதையைச் சேர்தலால் சிறப்புப் பெற்றன. அவை இவளிடம் செயற்கையாகவன்றி இயற்கையாகவே அமைந்துள்ளன. அழகு இவளைத் தவம் செய்து பெற்றது. ஏனெனில். உலகத்தில் மங்கையர்தான் அழகைத் தவஞ் செய்து பெறுவர். இங்குக் குணமும் அழகும் ஓரிடத்து இயைந்து நிற்கும் அருமை தோன்றுகிறது. சீதை உத்தம அழகு. குணங்களுடன் தெய்வத் தன்மையும் வாய்ந்தவள் என்பதை விளக்குகின்றார் இப்பாடலில்.*

***684.  ‘சித்திரம் இங்கு இது ஒப்பது***
***எங்கு உண்டு - செய்வினையால்***
***வித்தகமும் விதி வசமும்***
***வெவ்வேறே புறம் கிடப்ப.***
***அத் திருவை அமரர் குலம்***
***ஆதரித்தார் என. அறிஞ!***
***இத் திருவை நில வேந்தர்***
***எல்லாரும் கதாலித்தார்!***

***அறிஞ*** *- யாவும் அழிந்தவனே;* ***செய்வினையால்*** *- (தாம்) செய்யும் தொழிலைக் கொண்டு;* ***வித்தகமும்*** *- தம் (வில் வன்மை முதலிய திறமையும்;* ***விதி வசமும்*** *- ஊழ்வினையின் பயனும்;* ***வேறுவேறு புறம்*** *- வேறுவேறான இடத்திலே;* ***கிடப்ப*** *- பிரிந்து கிடந்த நிலையில்;* ***அத் திருவை*** *- (திருப்பாற் கடலிலிருந்து தோன்றிய) அத்திருமகளை;* ***குல அமரர்*** *- தேவர் கூட்டத்தார்;* ***ஆதரித்தார் என*** *- விரும்பியவாறே;* ***இத் திருவை*** *- (எமக்குக் கிடைத்த) இந்தச் சீதையை;* ***நில வேந்தர் எல்லாரும்*** *- நிலவுலகை ஆளும் அரசர் எல்லாரும்;* ***காதலித்தார்*** *- விரும்பினர்;* ***இது ஒப்பது*** *- இச்செய்தியை ஒப்பதாகிய;* ***சித்திரம்*** *- அதிசயம்;* ***இங்கு*** *- இவ் வுலகத்தில்;* ***எங்கு உண்டு*** *- எங்கே உள்ளது (எங்கும் இல்லை).*

*செய்வினையால் வித்தகம்: சிவதனுசை வளைத்து நாணேற்றி அம்பு எய்யக் கூடிய திறமை. 'சிவ தனுசை வளைத்தவனுக்கே சீதை உரியவள்' என்ற விதி உள்ளது. தவிர. இவளைப் பெறக்கூடிய இராமன் அவதரித்துள்ளான். இவ்வாறு இருக்கத் தம்மிடம் அவ்வகைத் திறமை சற்றுமில்லாத மற்றை நிலவேந்தர்கள் இச் சீதையை விரும்பினார்களே! இது என்ன அதிசயம்!*

***685. 'கலித் தானைக் கடலோடும்***
***கைத் தானக் களிற்று அரசர்***
***ஒலித்து ஆழி என வந்து.***
***மணம் மொழிந்தார்க்கு எதிர். "உருத்த***
***புலித் தானை. களிற்று உரிவைப்***
***போர்வையான் வரி சிலையை***
***வலித்தானே மங்கை திரு***
***மணத்தான்" என்று. யாம் வலித்தோம்.***

***கை*** *- துதிக்கையும்;* ***தானம்*** *- மதநீரும் உடைய;* ***களிறு அரசர்*** *- யானைப்படை கொண்ட மன்னர்;* ***கலித் தானைக் கடலோடும்*** *- ஆரவாரமுடைய சேனையாகிய கடலோடு;* ***ஆழி என ஒலித்து வந்து*** *- கடல்போல முழக்கம் செய்து வந்து;* ***மணம் மொழிந் தார்க்கு*** *- மணத்தைக் குறித்து மகள் பேச அவர்களுக்கு;* ***எதிர்*** *- (எல்லாம்) எதிர்மொழியாக;* ***உருத்த புலித்தானை*** *- சினம் கொண்ட புலித்தோலை ஆடையாகவும்;* ***களிறு உரிவைப் போர்வையான்*** *- யானைத் தோலைப் போர்வையாகவும் கொண்டுள்ளவனாகிய சிவன்;* ***வரிசிலையை*** *- போரில் எடுத்த கட்டமைந்த வில்லை;* ***வலித்தானே*** *- தன் வலிமை கொண்டு வளைத்தவனே;* ***மங்கை திருமணத்தான்*** *- இந்தச் சீதையின் மணமகனாவதற்கு உரியவன்;* ***என்று யாம்*** *- என்று நாங்கள்;* ***வலித்தேம்*** *- உறுதியாகத் தெரிவித்தோம்.*

*முதல் வலித்தல்: வளைத்தல். இறுதியில் வரும் வலித்தல்: உறுதி கூறல்.*

***686.*** ***'வல் வில்லுக்கு ஆற்றார்கள்.***
***மார வேள் வளை கருப்பின்***
***மெல் வில்லுக்கு ஆற்றாராய்.***
***தாம் எம்மை விளிகுற்றார்;***
***கல் வில்லோடு உலகு ஈந்த***
***கனங் குழையைக் காதலித்து.-***
***சொல் வில்லால் உலகு அளிப்பாய்!-***
***போர் செய்யத் தொடங்கினார்.***

***சொல் வில்லால்*** *- சொல்லாகிய வில்லைக் கொண்டு;* ***உலகு அளிப்பாய்*** *- உலகத்தைப் பாதுகாப்பவனே!;* ***வல் வில்லுக்கு*** *- இந்த வலிய வில்லை;* ***ஆற்றார்கள்*** *- வளைக்கும் ஆற்றல் இல்லாத அரசர்கள்;* ***மாரன் வேள்*** *- மன்மதனது;* ***வளை கருப்பின்*** *- வளைந்த கரும்பாகிய;* ***மெல் வில்லுக்கு*** *- மெல்லிய வில்லைத் தாங்குவதற்கும்;* ***ஆற்றாராய்*** *- வலிமையற்றவராய்;* ***கல் வில்லோடு*** *- மலை போன்ற இந்த வில்லோடு;* ***உடன்வந்த*** *- சேர்ந்து வந்த;* ***கனங்குழையை*** *- குழை பூண்ட சீதையை;* ***காதலித்து*** *- விரும்பி;* ***தாம்*** *- அவ்வரசர்கள்;* ***எம்மை விளிகுற்றார்*** *- எங்களை அழைத்துப் போர் செய்யத் தொடங்கினார்கள்.*

*பணயமாக வைத்த வில்லை அசைக்கவும் முடியாத அவ்வரசர்கள் பெண்ணின் மையலாலும் பட்ட அவமானத்தாலும் சினம் கொண்டு ஒன்று கூடிப் போர்புரியலாயினர் என்பது. வரத்தால் விருப்பமானவர்க்கு அருள் புரிந்தும். சாபத்தால் மாறானவர்க்குத் தீங்கு விளைத்தும் தம் சொல் வலிமையைக் காட்டுபவராதலின். விசுவாமித்திரனைச் 'சொல் வில்லால் உலகளிப்பாய்' என்றார்.*

***687.*** ***'எம் மன்னன் பெருஞ் சேனை***
***ஈவதனை மேற்கொண்ட***
***செம் மன்னர் புகழ் வேட்ட***
***பொருளேபோல் தேய்ந்ததால்;***
***பொம்மென்ன வண்டு அலம்பும்***
***புரி குழலைக் காதலித்த***
***அம் மன்னர் சேனை. தமது***
***ஆசைபோல் ஆயிற்றால்.***

***இம் மன்னன்*** - இந்தச் சனகனது; ***பெருஞ்சேனை*** - பெரிய படை; ***ஈவதனை மேற்கொண்ட*** - (இடைவிடாது புரிந்த போரினால்) கொடைத் தொழிலை மேற்கொண்டுள்ள; ***செம்மன்னர்*** - நீதியுள்ள அரசரின்; ***புகழ்வேட்ட*** - புகழையே விரும்பிய; ***பொருளே போல்*** - செல்வம் போல; ***தேய்ந்தது*** - வரவரக் குறையலாயிற்று; ***பொம்மென்ன*** - (ஆயினும்) 'பொம்' என்னும் ஒலியுண்டாக; ***வண்டு அலம்பும்*** - வண்டுகள் ஒலிக்கப் பெற்றதும்; ***புரிகுழலை*** - கடை குழன்றதுமான கூந்தலையுடைய சீதையை; ***காதலித்த*** - விரும்பிய; ***அம் மன்னர் சேனை*** - (பகை) அரசர்களின் சேனை; ***தமது ஆசை போல்*** - தமது ஆசை போல; ***ஆயிற்று*** - பெருகிற்று.

*வேந்தர் பலர் கூடி இடைவிடாது செய்த போர்களாதலால் தனித்து நின்ற சனகனது படை சுருங்கியது. பகைவர் சேனைகள் பெருகின என்பது.*

***688. 'மல் காக்கும் மணிப் புயத்து***
***மன்னன் இவன். மழவிடையோன்***
***வில் காக்கும் வாள் அமருள்***
***மெலிகின்றான் என இரங்கி.***
***எல் காக்கும் முடி விண்ணோர்***
***படை ஈந்தார் என. வேந்தர்.***
***அல் காக்கை கூகையைக் கண்டு***
***அஞ்சினவாம் என. அகன்றார்.***

***எல்காக்கும் முடி*** - ஒளிவிடும் முடியணிந்த; ***விண்ணோர்*** - தேவர்கள்; ***மல் காக்கும்*** - வலிமை பெற்ற; ***மணிப் புயத்து*** - அழகிய தோள்களைக் கொண்ட; ***மன்னன் இவன்*** - இந்தச் சனகன்; ***மழ விடையோன் வில்*** - காளை ஊர்தியை உடைய சிவனது வில்லை; ***காக்கும் வாள் அமருள்*** - காப்பதற்காகச் செய்யப்படும் கொடிய போரில்; ***மெலிகின்றான்*** - வரவரத் தளர்ச்சியடைகின்றான்; ***என*** - என்ற காரணத்தினால்; ***இரங்கி*** - இரக்கம் கொண்டு; ***படை*** - நால்வகைப் படைகளை; ***ஈந்தார் என*** - அளித்து உதவினார் என்பதால்; ***வேந்தர்*** - பகையரசர்; ***அல்*** - இரவில்; ***காக்கை*** - காக்கைகள்; ***கூகையைக் கண்டு*** - கோட்டானைப் பார்த்து; ***அஞ்சின என*** - அஞ்சியவற்றைப் போல; ***அகன்றார்*** - அஞ்சி ஓடினார்கள்.

*பகைவர்களோடு சனகன் போர் செய்து தளரும்போது வானவர் படையைத் தந்தனர். அதனால் இனி இவ்வரசனுடன் பொரமுடியாது எனப்பகைவர் அஞ்சியோடினர் என்பது. இனம் பெரியவாயும் வலியவாயும் உள்ள காக்கைக் கூட்டங்கள் கூகைகளைப் பகலில் வெல்லுமாயினும் இரவில் வலியற்ற சில கூகைகளுக்கு அவை அஞ்சிப் பதுங்கும் என்பது. 'பகல் வெல்லும் கூகையைக் காக்கை' குறள் - 481*

**689.** ***'அன்று முதல். இன்று அளவும்.***
***ஆரும் இந்தச் சிலை அருகு***
***சென்றும் இலர்; போய் ஒளித்த தேர் வேந்தர் திரிந்தும் இலர்;***
***"என்றும்இனி மணமும்இலை" என்று இருந்தேம்; இவன்***
***ஏற்றின். நன்று; மலர்க் குழல் சீதை நலம் பழுது ஆகாது'***
***என்றான்.***

***அன்று முதல் இன்றளவும்*** - அன்று முதல் இன்று வரை; ***ஆரும்*** - எந்த அரசனும்; ***இந்தச் சிலை அருகு*** - இந்தச் சிவவில்லின் பக்கத்தில்; ***சென்றும் இலர்*** - சென்றதும் இல்லை; ***போய் ஒளித்த*** - ஓடி ஒளிந்து கொண்ட; ***தேர்வேந்தர்*** - தேர்வீரரான மன்னவர்; ***திரிந்தும் சிலர்*** - திரும்பி வரவுமில்லை; ***இனி*** - இனிமேல்; ***என்றும்*** - (சீதைக்கு) எப்பொழுதும்; ***மணமும் இல்லை*** - திருமணம் நிகழாது; ***என்று இருந்தேம்*** - என்று கருதியிருந்தோம்; ***இவன் ஏற்றின்*** - இந்த இராமன் (இச்சிவதனுசை) நாணேற்றினால்; ***நன்று*** - நல்லதாகும்; ***மலர்க்குழல் சீதை*** - (அப்போது) மலரணிந்த கூந்தலையுடைய சீதையின்; ***நலம்*** - கன்னிமை அழகும்; ***பழுது ஆகாது*** - வீணாகாது; ***என்றான்*** - என்று கூறி முடித்தான்.

*இராமன் வில்லை நாணேற்றி வளைத்தால் சீதை இடர்க்கடல் நீங்கும் என்பது. முன்பு சனகன் கூறியதை இப்பொழுது சதானந்தனும் கூறி முடித்தான்.*

*விசுவாமித்திரன் முகக்குறிப்பை அறிந்த இராமன் வில்லினை நோக்கி எழுதல்*

**690.** ***நினைந்த முனி பகர்ந்த எலாம்***
***நெறி உன்னி. அறிவனும் தன்***
***புனைந்த சடை முடி துளக்கி.***
***போர் ஏற்றின் முகம் பார்த்தான்;***
***வனைந்தனைய திருமேனி***
***வள்ளலும். அம் மா தவத்தோன்***
***நினைந்த எலாம் நினைந்து. அந்த***
***நெடுஞ் சிலையை நோக்கினான்.***

***அம் முனி*** - அந்தச் சதானந்த முனிவன்; ***நினைந்து*** - ஆலோசித்து; ***பகர்ந்த எலாம்*** - கூறியவற்றை யெல்லாம்; ***அறிவனும்*** - ஞானியான கோசிகனும்; ***நெறி உன்னி*** - முறைப்படி சிந்தித்து; ***தன் சடை புனைந்த முடி*** - (சதானந்தன் கூறிய சொல்லுக்கு உடன் பட்டதைக் குறிப்பிக்குமாறு) அழகிய தன் சடைமுடியை; ***துளக்கி*** - அசைத்தவனாய்; ***போர் ஏற்றின்*** - போர் செய்ய வல்ல காளை போன்ற இராமனது; ***முகம் பார்த்தான்*** - முகத்தை (இந்த வில்லை நீ முறிப்பாயாக என்னும் குறிப்பில்) நோக்கினான்; ***வனைந்தது அனைய*** - ஓவியத்தில் எழுதியது போன்ற; ***திருமேனி வள்ளலும்*** - திருமேனிப் பொலிவுள்ள அந்த இராமனும்; ***அம் மாதவத்தோன்*** - பெருந்தவத்தை யுடையவனான விசுவாமித்திரன்; ***நினைந்த எலாம்*** - எண்ணிய மனக் குறிப்பையெல்லாம்; ***நினைந்து*** - தானும் கருதி (பிறகு); ***அந்த நெடுஞ்சிலையை*** - நெடிய அந்தச் சிவதனுசை; ***நோக்கினான்*** - பார்த்தான்.

*'நினைந்து முனி பகர்ந்த எலாம் நெறியுன்னி' என்றது தெய்வ இயல்பு வாய்ந்தவள் சனகன் மகள் என்பதனையும் அவளை அடைவதன் அருமைகளையும் 'இவன் ஏற்றின் நன்று' என்று சதானந்தர் கூறியதையும் உட்கொண்டு. வனைந்தனைய - வனைந்தது அனைய. அல்லது வனைந்தால் அனைய எனலாம். வில்லை நோக்கியது - இந்த வில்லை எந்த இடத்தில் பற்றி எடுக்கலாம் என்ற ஆலோசனையால் 'போரேறு' - 'புட்குழிளம் போரேற்றை' - (பெரிய திருமடல். 117*

*25*

**கலி விருத்தம்**

***691. பொழிந்த நெய் ஆகுதி வாய்வழி பொங்கி***
***எழுந்த கொழுங் கனல் என்ன எழுந்தான்;***
***'அழிந்தது. வில்' என. விண்ணவர் ஆர்த்தார்;***
***மொழிந்தனர் ஆசிகள். முப் பகை வென்றார்.***

***பொழிந்த நெய்*** *- ஒருசேரச் சொரிந்த நெய்யாகிய;* ***ஆகுதி வாய்வழி*** *- ஆகுதி வீழ்ந்த இடத்திலிருந்து;* ***பொங்கி எழுந்த*** *- பொங்கி மேல் எழுந்த;* ***கொழுங்கனல் என்ன*** *- நன்றாக எரிகின்ற நெருப்புப் போல;* ***எழுந்தான்*** *- (இராமன் சிவதனுசு வைத்துள்ள இடம் நோக்கி) செல்லலானான்;* ***விண்ணவர்*** *- (அப்போது) தேவர்கள் (இராமன் வில்லை முறிப்பது உறுதி என்ற துணிவால்);* ***வில் அழிந்தது என*** *- சிவதனுசு முறிந்து விட்டது என்று;* ***ஆர்த்தார்*** *- ஆரவாரம் செய்தார்கள்;* ***முப்பகை வென்றார்*** *- (காமம். வெகுளி. மயக்கம் என்ற) மூன்று உட்பகைகளையும் வென்ற முனிவர்;* ***ஆசிகள்*** *- (இராமனுக்கு) வாழ்த்துக்களை;* ***மொழிந்தனர்*** *- கூறினார்கள்.*

*முனிவனது குறிப்பு தன் வீரத்தைத் தூண்டியதும் அந்த வில்லை நோக்கிய இராமன் உடனே எழுந்தான் என்பது. வேள்வி நெருப்பில் ஒருசேரப் பொழியப்பெற்ற நெய்யின் ஆகுதி. இராமனது வீரக் கனலைத் தூண்டிய முனிவரது குறிப்பு நோக்கத்திற்கு ? ஏற்ற உவமையாயிற்று. 'நெய்பெய் தீயின் எதிர்கொண்டு' - குறுந். 106. வேள்விக் கனல் உவமையால் தூய்மையும் நன்மையும் தொனிக்கும். 26*

*மங்கையரின் மனநிலையும் வாய்மொழியும்*

***692. தூய தவங்கள் தொடங்கிய தொல்லோன்***
***ஏயவன் வல் வில் இறுப்பதன் முன்னம்.***
***சேயிழை மங்கையர் சிந்தைதொறு எய்யா.***
***ஆயிரம் வில்லை அனங்கன் இறுத்தான்.***

***தூய தவங்கள்*** *- புனிதமான தவங்களை;* ***தொடங்கிய தொல்லோன்*** *- தொடங்கி முடித்த பழையவனான கோசிக முனிவனால்;* ***ஏயவன்*** *- ஏவப்பெற்ற இராமன்;* ***வல்வில் இறுப்பதன் முன்னம்*** *- அந்த வலிய வில்லைக் (கையில் எடுத்து முறிப்பதற்கு முன்பே;* ***அனங்கன்*** *- மன்மதன்;* ***சேயிழை மங்கையர்*** *- செவ்விய அணிகள் பூண்ட பெண்களின்;* ***சிந்தை தொறு எய்யா*** *- மனம் தோறும் (மலர் அம்புகளை) எய்து;* ***ஆயிரம் வில்லை*** *- மிகப்பல விற்களை;* ***இறுத்தான்*** *- முறித்தான்.*

*இராமன் சிவதனுசைக் கையில் எடுக்கச் சென்றபோது பார்த்த மங்கையர் பலரும் காமதேவனின் மலர்க் கணைக்கு இலக்காயினர் என்பது.*

*தொடங்கிய பெருந் தவங்களை விடாது செய்து முடித்து முழு வெற்றியும் பெற்ற முதியோன் ஆதலின் 'தூய தவங்கள் தொடங்கிய தொல்லோன்' என்றார்.*

***693. 'காணும் நெடுஞ் சிலை கால் வலிது' என்பார்;***
***'நாணுடை நங்கை நலம் கிளர் செங் கேழ்ப்***
***பாணி. இவன் படர் செங் கை படாதேல்.***
***வாள் நுதல் மங்கையும் வாழ்வு இலள்' என்பார்.***

*(சில மாதர்)* ***காணும்*** *- காணப்படுகின்ற;* ***நெடுஞ்சிலை*** *- நீண்ட இந்த வில்;* ***கால் வலிது என்பார்*** *- அடிப் பகுதி வலிமையுடையது என்றுசொல்வார்கள்;* ***நாண் உடை நங்கை*** *- (சில மாதர்) நாணத்தையுடைய சீதையின்;* ***நலம்கிளர்*** *- அழகு விளங்கும்;* ***செங்கேழ்ப் பாணி*** *- சிவந்த கையில்;* ***இவன் படர் செங்கை*** *- இந்த*

*இராமனது நீண்ட கைகள்;* ***படாதேல்*** *- பற்றாமல் போனால்; (இராமன் சீதையைப் பாணிக் கிரகணம் செய்யா விட்டால்);* ***வாள் நுதல் நங்கையும்*** *- ஒளியுள்ள நெற்றி படைத்த சீதையும்;* ***வாழ்வு இலள்*** *- (இனி) வாழ்வு அற்றவளே;* ***என்பார்*** *- என்று சொல்வார்கள்.*

*நங்கையும் - உம்மை இராமனும் வாழ்வு இலன் என்பதைக் குறிக்கும். நங்கை வாழ்விலள் என்பதற்கு - சீதை மணமின்றிக் கன்னியாகவே இருக்க வேண்டியவள்தான் என்ற கருத்துப் புலனாகும். இதுவரை ஆற்றல் மிக்க அரசர் பலரும் தோற்றோடிய செயலை அறிந்தவராதலால் இந்தக் குமரனும் அத்தகையவன் ஆவனோ என்று மாதர் இரங்கிக் கூறினர்.*

***694. கரங்கள் குவித்து. இரு கண்கள் பனிப்ப.***
***'இருங் களிறு இச் சிலை ஏற்றிலன் ஆயின்.***
***நரந்த நறைக் குழல் நங்கையும். நாமும்.***
***முருங்கு எரியில் புக மூழ்குதும்' என்பார்.***

***கரங்கள் குவித்து*** - *(சில மாதர் தம் வழிபடு தெய்வங்களை நினைந்து) தம் கைகளைக் கூப்பிக் கொண்டு;* ***இருங்களிறு*** *- ஆண்யானை போன்ற இக்குமரன்;* ***இச் சிலை*** *- இந்த வில்லை;* ***இரு கண்கள் பனிப்ப*** *- எங்களுடைய இரு கண்களும் ஆனந்தக் கண்ணீர் சொரியுமாறு;* ***ஏற்றிலன் ஆயின்*** *- நாண் ஏற்றாமல் போவானேயானால்;* ***நரந்தம் நறை*** *- கஸ்தூரி மணம் கமழும்;* ***குழல் நங்கையும்*** *- கூந்தலையுடைய சீதையும்;* ***நாமும்*** *- நாமும்;* ***முருங்கு எரியில்*** *- எரிக்கும் நெருப்பில்;* ***புக*** *- அழுந்தி;* ***மூழ்குதும்*** *- மூழ்குவோம்;* ***என்பார்*** *- என்று சொல்வார்கள்.*

*'இக் குமரன் வில் இறுக்காவிட்டால் சீதை கன்னியாகவே இறக்கவேண்டிவரும். அதைவிட நெருப்பில் பாய்ந்து உயிர் விடுதலே மேலானது. நம் அன்பான தோழி அவ்வாறு செய்தால் நாமும் அவளோடு எரிபுகுந்து இறப்போம்' என்றார் சில பெண்கள். நரந்தம் - கத்தூரி 'நரந்தம் அரைப்ப நறுஞ்சாந்து மறுக' - மதுரைக் காஞ்சி. 553*

*29*

***695. 'வள்ளல் மணத்தை மகிழ்ந்தனன் என்றால்***
***"கொள்" என முன்பு கொடுப்பதை அல்லால.***
***வெள்ளம் அணைத்தவன் வில்லை எடுத்து. இப்***
***பிள்ளை முன் இட்டது பேதைமை' என்பார்.***

***வள்ளல்*** *- கொடுக்கும் குணமுடைய சனக மன்னன்;* ***மணத்தை*** *- (சீதையின்) திருமணத்தைச் (செய்ய) ;* ***மகிழ்ந்தனன் என்றால்*** *- விரும்பியிருப்பான் என்றால்;* ***முன்பு*** *- (இந்த இராமனைக் கண்டவுடனே) முதலில் தானே;* ***கொள் என*** *- (இச் சீதையை) மணந்து கொள்க என்று;* ***கொடுப்பதை அல்லால்*** *- (அவளை) கொடுப்பதை விட்டு;* ***வெள்ளம் அணைத்தவன்*** *- கங்கையைத் தன் சடையிலே தாங்கிய சிவனது;* ***வில்லை எடுத்து*** *- வில்லை எடுத்து வந்து;* ***இப் பிள்ளைமுன் இட்டது*** *- (அதை நாணேற்றி வளைக்குமாறு) இந்தக் குமரன் முன்னே வைத்தது;* ***பேதைமை என்பார்*** *- அறிவீனமே என்று சொல்வார் சிலர் (மாதர்).*

*சீதையின் மணத்தை முடிக்க வேண்டுமென்ற எண்ணம் சனகனுக்கு இருந்திருந்தால் தக்க வரன் வந்தபோது அவளை அவனுக்கு மணம் முடிக்க வேண்டும். அதைவிட்டுச் சிவவில்லை வளைக்க வேண்டும் என்பது முறையற்றது. இதனால் ஒன்று அவனுக்குச் சீதையின் திருமணத்தில் விருப்பம் இல்லாதிருக்க வேண்டும். அல்லது. அவன் அறிவற்ற மூடனாக இருக்கவேண்டும்.*

*வள்ளல் - இராமனைக் குறிப்பதாகக் கொண்டும் பொருள் கூறலாம்.*

***696. 'ஞான முனிக்கு ஒரு நாண் இலை' என்பார்;***
***'கோன் இவனின் கொடியோன் இலை' என்பார்;***
***'மானவன் இச் சிலை கால் வளையானேல்.***
***பீன தனத்தவள் பேறு இலள்' என்பார்.***

***ஞான முனிக்கு*** - *தத்துவ ஞானியான விசுவாமித்திரனுக்கு;* ***ஒரு நாண் இலை*** - *சிறிதும் நாணமில்லை;(உலகத்தவர் நம்மைப் பற்றி என்ன நினைப்பார்களோ என்ற எண்ணம் சிறிதும் இல்லாமல் இப் பெரிய வில்லை இச் சிறியவனை நாணேற்றுமாறு செய்தான்);* ***என்பார்*** - *என்று சில மாதர் கூறுவர்;* ***கோன் இவனின்*** - *(இச் சிறுனை வில்லை வளைக்குமாறு கூறிய) இந்த அரசனைக் காட்டிலும்;* ***கொடியோன்*** - *கொடியன் ஒருவன்;* ***இலை என்பார்*** - *இல்லை என்று சொல்வார்கள் (சில மாதர்);* ***மானவன்*** - *வீரனாகிய இந்தக் குமரன்;* ***இச் சிலை*** - *இச் சிவ தனுசை;* ***கால் வளையானேல்*** - *இரு முனைகளையும் வளைக்கா விட்டால்;(அப்போது);* ***பீன தனத்தவள் -*** *பருத்த கொங்கைகளுள்ள இச் சீதை;* ***பேறு இலள் -*** *திருமண வாழ்க்கையை இழந்தவளாவாள்;* ***என்பார் -*** *என்று கூறுவர் (சில மாதர்).*

*ஞான முனி - உலக நடை அறியாதவன் என்பது குறிப்பு. மானம் - பெருமை. வீரம். பீனம் - பருமை.* *31*

*வில்லினை எடுத்து இராமன் நாண் ஏற்றலும் வில்லொடிந்த ஓசையை அனைவரும் கேட்டலும்*

***697. தோகையர் இன்னன சொல்லிட. நல்லோர்***
***ஓகை விளம்பிட. உம்பர் உவப்ப.***
***மாக மடங்கலும். மால் விடையும். பொன்***
***நாகமும். நாகமும். நாண நடந்தான்.***

***தோகையர்*** - *மயிலைப் போன்ற மகளிர்;* ***இன்னன சொல்லிட*** - *இவை போன்றவற்றைச் சொல்லிக்கொண்டிருக்கும்போது;* ***நல்லோர்*** - *நல்லோரான முனிவர்கள்;* ***ஓகை விளம்பிட*** - *நல்வாழ்த்துக்கள் கூறவும்;* ***மாகம் அடங்கலும்*** - *வானுலகம் முழுவதிலுமாக;* ***உம்பர் உவப்ப*** - *தேவர்கள் மகிழ்ச்சியடையவும்;* ***மால் விடையும்*** - *(இராமன்) பெரிய காளையும்;* ***பொன் நாகமும்*** - *பொன் மலையான மேருவும்;* ***நாகமும் நாண*** - *யானையும் வெட்கம் அடையுமாறு;* ***நடந்தான்*** - *(வில் இருக்கும் இடம்) சென்றான்.*

*இராமன் நடக்கும்போது அவனது பெருந்தோற்றம் கண்டு மேருமலையும். இவனைப் போல மிடுக்கோடு நடக்க முடியாமை பற்றிக் காளையும் யானையும் நாணின என்பது. நாகம் - மலை. யானை.*

***698. ஆடக மால் வரை அன்னதுதன்னை.***
***'தேட அரு மா மணி. சீதை எனும் பொன்***
***சூடக வால் வளை. சூட்டிட நீட்டும்***
***ஏடு அவிழ் மாலை இது' என்ன. எடுத்தான்.***

***மால்ஆடகம் வரை*** - பெரிய பொன் மலையை; ***அன்னது தன்னை*** - ஒத்தாகிய அச்சிவ வில்லை; **தேட அரு** - தேடுதற்கரிய; **மாமணி** - சிறந்த இரத்திரனம் போன்றவளும்; ***சீதை எனும்*** - சீதை எனுப்படுபவளுமான; **பொன்சூடகம்** - பொன்னாலாகிய சூடகம் என்ற; **வால்வளை சூட்டிட** - கை வளையலையணிந்த நங்கைக்குச் சூட்டும் பொருட்டு; **நீட்டும்** - நீட்டுதற்கு உரிய; **ஏடு அவிழ்மாலை** - மலர்ந்த பூமாலையே; **என்ன** - என்று எண்ணுமாறு; **எடுத்தான்** - எளிதாகத் தூக்கி எடுத்தான்.

*சிவதனுசை இராமன் எடுத்தது சீதையை மணத்தற்குக் காரணமாவதால் அதைச் சீதைக்குச் சூட்டுதற்காக நீட்டும் மாலை போலும் என்றார்.*

***699. தடுத்து இமையாமல் இருந்தவர். தாளில்***
***மடுத்ததும். நாண் நுதி வைத்ததும். நோக்கார்; கடுப்பினில் யாரும்***
***அறிந்திலர்; கையால்***
***எடுத்தது கண்டனர்; இற்றது கேட்டார்.***

***தடுத்து இமையால்*** - கண் கொட்டுவதைத் தடுத்து இமையாதபடி; **இருந்தவர் யாரும்** - (நிகழ்வதை) பார்த்து நின்ற அவையோர் யாவரும்; **தாளில் மடுத்ததும்** - (இராமன்) தன் திருவடியால் அவ்வில்லின் முனையை மிதித்ததையும்; **நாண் துதி வைத்ததும்** - (அதை வளைத்து) மற்ற முனையில் நாண் ஏற்றியதையும்; **கடுப்பினில்** - (செயலின்) வேகத்தால்; **நோக்கார்** - காணமுடியாதவராயினர்; **அறிந்திலர்** - அன்றியும் மனத்தாலும் இன்னது தான் நிகழும் என்று கருதவும் இயலாதவர் ஆகினர்; **கையால் எடுத்தது** - (ஆயினும்) இராமன் தன் கையால் (அவ் வில்லை) எடுத்ததை; **கண்டனர்** - பார்த்தார்கள்; **இற்றது கேட்டார்** - (அந்தவில்) முறிந்து விழுந்த பேரொலியைக் கேட்டார்கள்.

*கண் இமை கொட்டினால் இராமன் வில்லையெடுத்து நாணேற்றுவதைக் காணாமற்போய் விடுவோம் என்று கண் கொட்டாது பார்த்தவர்களும் அந்த இராமன் வில்லை எடுத்ததையும். அது முறிந்த ஓசையையும் கேட்டனரே அல்லாமல் அதை நாணேற்றியதைக் காண முடியாதவராயினர் என்பது. இற்றது - இறுதலால் தோன்றிய ஒலி*

*வில் இற்ற ஓசையால் மூவுலகத்தும் தோன்றிய அச்சம்*

***700. 'ஆரிடைப் புகுதும் நாம்?' என்று.***
***அமரர்கள். கமலத்தோன்தன்***
***பேருடை அண்ட கோளம்***
***பிளந்தது' என்று ஏங்கி. நைந்தார்;***
***பாரிடை உற்ற தன்மை***
***பகர்வது என்? பாரைத் தாங்கி.***
***வேரெனக் கிடந்த நாகம்***
***இடி என வெருவிற்று அன்றே!***

***அமரர்கள்*** - *(வில் முறிந்த ஓசையைக் கேட்ட) தேவர்கள்;* ***கமலத்தோன்தன்*** - *பிரமன் படைத்த;* ***பேருடை அண்ட கோளம்*** - *பெரிய அண்ட கோளமே;* ***பிளந்தது என்று*** - *பிளந்து விட்டது என்று கருதி;* ***ஏங்கி*** - *ஏக்கம் கொண்டு;* ***ஆர் இடை*** - *இனி எவரிடத்தில்;* ***நாம் புகுதும் என்று*** - *நாம் அடைக்கலம் புகுவோம் என்று;* ***நைந்தார்*** - *வருந்தினார்கள்;* ***பார் இடை உற்ற*** - *(விண்ணுலகமே இவ்வாறாயின்) இம் மண்ணுலகில் நிகழ்ந்த;* ***தன்மை பகர்வது என்*** - *தன்மை பற்றி நாம் சொல்ல வேண்டுவது என்ன உள்ளது?;* ***பாரைத் தாங்கி*** - *பூமியின் கீழ் அதைத் தாங்கிக் கொண்டு;* ***வேர் எனக் கிடந்த*** - *இந்தப் பூமியின் வேர்போலக் கிடக்கின்ற;* ***நாகம்*** - *ஆதிசேடன் என்னும் நாகமும்;* ***இடி என*** - *இடி (தன்மேல்) விழுகின்றதென்று;* ***வெருவிற்று*** - *கருதி அஞ்சுவதாயிற்று.*

*அவ் வில் இற்றதனால் தோன்றிய ஓசை விண். மண். பாதலம் என்னும் மூவுலகத்தார்க்கும் அச்சம் விளைத்தது என்பது. கமலத்தோன்தன் பேருடையண்டம் - பிரமாண்டம்.*

*வானகத்தார் வாழ்த்தும் மண்ணகத்தார் மகிழ்ச்சியும்*

***701. பூ மழை சொரிந்தார் விண்ணோர்;***
***பொன் மழை பொழிந்த மேகம்;***
***பாம மா கடல்கள் எல்லாம்***
***பல் மணி தூவி ஆர்த்த;***
***கோ முனிக் கணங்கள் எல்லாம்***
***கூறின ஆசி; - 'கொற்ற***
***நாம வேல் சனகற்கு. இன்று.***
***நல்வினை பயந்தது' என்னா.***

***கொற்றம்*** - *வெற்றியையும்;* ***நாமவேல்*** - *(பகைவர்க்கு) அச்சந் தரும் வேற்படையையும் உடைய;* ***சனகற்கு*** - *சனகமன்னனுக்கு;* ***இன்று*** - *இன்றுதான்;* ***நல்வினை*** - *முற்பிறப்பில் செய்த நல்வினை;* ***பயந்தது*** - *பயனை அளித்தது;* ***என்னா*** - *என்று எண்ணி;* ***விண்ணோர்*** - *(அதனால்) தேவர்கள்;* ***பூமழை சொரிந்தார்*** - *மலர்மழை பொழிந்தார்கள்;* ***மேகம்*** - *வானமானது;* ***பொன்மழை*** - *பொன்மாரி;* ***பொழிந்தது*** - *பொழிந்தது;* ***பாம மா கடல்கள் எல்லாம்*** - *பரந்துள்ள கடல்கள் யாவும்;* ***பல்மணி தூவி*** - *பலவகை மணிகளைச் சிதறி;* ***ஆர்த்த*** - *ஆரவாரித்தன;* ***கோமுனிக் கணங்கள்*** - *சிறந்த முனிவர் கூட்டங்கள்;* ***எல்லாம் ஆசி கூறின*** - *யாவும் வாழ்த்து மொழிகளைக் கூறின.*

*பாமம் - பரப்பு; ஒளி என்ற பொருளும் உண்டு. வில்லொடித்த ஓசை கேட்டு முதலில் துணுக்குற்றாராயினும் பின்னர் இராமன் சிவதனுசை முறித்த ஓசையே என அறிந்து பூமழை பொழிதல் முதலியவற்றைச் செய்தனர் என்பது.*

*702.* ***மாலையும். இழையும். சாந்தும்.***
***சுண்ணமும். வாச நெய்யும்.***
***வேலை வெண் முத்தும். பொன்னும்***
***காசும். நுண் துகிலும். வீசி.***
***பால் வளை. வயிர்கள். ஆர்ப்ப;***
***பல் இயம் துவைப்ப; முந்நீர்***
***ஓல் கிளர்ந்து உவா உற்றென்ன.***
***ஒலி நகர் கிளர்ந்தது அன்றே!***

***நகர்*** - *அந்த மிதிலை மாநகர்;* ***பால்வளை*** - *வெண் சங்குகளும்;* ***வயிர்கள் ஆர்ப்ப*** - *ஊது கொம்புகளும் முழங்க;* ***பல் இயம் துவைப்ப*** - *பலவகை வாத்தியங்களும் ஒலிக்க;* ***மாலையும்*** - *மலர்மாலைகளையும்;* ***இழையும்*** - *அணிகலன்களையும்;* ***சாந்தும்*** - *சந்தனக் குழம்பையும்;* ***சுண்ணமும்*** - *நறுமணப் பொடியும்;* ***வாச நெய்யும்*** - *மணமுள்ள தைலவகையும்;* ***வேலை வெண்முத்தும்*** - *கடலின் வெண் முத்தையும்;* ***பொன்னும்*** - *பொன்னையும்;* ***காசும்*** - *இரத்தினங்களையும்;* ***நுண்துகிலும்*** - *மெல்லிய ஆடைகளையும்;* ***வீசி*** - *(ஒருவர்க்கொருவர்) வழங்கி;* ***உவா உற்று*** - *பருவகாலம் வந்ததால்;* ***முந்நீர் ஓல்*** - *கடல் ஆரவாரத்தால்;* ***கிளர்ந்து என்ன*** - *கிளர்ந்தது போல;* ***ஒலி கிளர்ந்தது*** - *ஒலி மிகுதி யாயிற்று.*

*இராமன் வில்லை முறித்தமையால் இனிச் சீதையின் திருமணம் நடைபெறப் போகின்றது என்ற மகிழ்ச்சியால் மிதிலை நகரத்தவர் மாலை முதலியவற்றை வீசிப் பேராரவாரம் செய்தனர் என்பது. பௌர்ணமி நாளில் கடல் பொங்கி ஒலித்தல் வில் முறிபட்ட தினத்தில் நகரின் முழக்கத்துக்கு உவமையாகும். ஓல் - ஓலம் - கடைக்குறை.*

*703.* ***நல் இயல் மகர வீணைத்***
***தேன் உக. நகையும் தோடும்***
***வில் இட. வாளும் வீச.***
***வேல் கிடந்தனைய நாட்டத்து***
***எல் இயல் மதியம் அன்ன***
***முகத்தியர். எழிலி தோன்றச்***
***சொல்லிய பருவம் நோக்கும்***
***தோகையின் ஆடினாரே!***

***வேல் கிடந்து அனைய*** - *வேல் தங்கியது போன்ற;* ***நாட்டத்து*** - *கண்களையும்;* ***எல்லியல் மதியம் அன்ன*** - *இரவில் எழும் சந்திரன் போன்ற;* ***முகத்தியர்*** - *முகத்தையும் உடைய மங்கையர்கள்;* ***சொல்லிய பருவம்*** - *(மேகம் வரக்கூடிய) கார்ப் பருவத்தில்;* ***எழிலி தோன்ற*** - *(வானத்தில் மேகங்கள் காணப்பட;* ***தோகையின்*** - *மயில்கள் ஆடுவதுபோல;* ***நல் இயல்*** - *நல்லிலக்கணம் அமைந்த;* ***மகரவீணைத் தேன் உக*** - *மகரயாழின் இசைத் தேன் சிந்தவும்;* ***நகையும் தோடும்*** - *புன்சிரிப்பும் காதணியும்;* ***வில் இட வாள் வீசு*** - *முறையே ஒளியைப் பரப்பிவிடவும்;* ***ஆடினர்*** - *ஆடினார்கள்.*

பற்களின் ஒளி விடாது தோன்றுவதால் 'வில்இட' என்றும். காதணிகள் விட்டுவிட்டு ஒளிவிடுவதால் 'வாள்வீச' என்றும் இவற்றால் வில்லையும் வாளையும் வீசிக்கொண்டு மகளிர் ஆடினர் என்பது நயம்.

*704.* ***உண் நறவு அருந்தினாரின்***
***சிவந்து ஒளிர் கருங் கண் மாதர்.***
***புண் உறு புலவி நீங்க.***
***கொழுநரைப் புல்லிக்கொண்டார்;***
***வெண் நிற மேகம் மேன்மேல்***
***விரி கடல் பருகுமாபோல்.***
***மண் உறை வேந்தன் செல்வம்.***
***வறியவர் முகந்துகொண்டார்.***

**உண் நறவு அருந்தினாரின்** - (அறிவைக் கெடுக்கின்ற) கள்ளைக் குடித்தவர்போல; **சிவந்து ஒளிர் கருங்கண்** - செந்நிறத்துடன் விளங்கும் கரிய கண்களையுடைய; **மாதர்** - பெண்கள்; **புண் உறு புலவி நீங்க** - கணவர் மனத்தைப் புண்படச்செய்யும் ஊடல் நீங்குமாறு; **கொழுநரைப் புல்லிக் கொண்டார்** - தம் கணவரைத் தழுவிக் கொண்டார்கள்; **மேன்மேல் விரிகடல்** - அலைகள் மேன்மேலும் பரவும் கடலில்; **வெண்ணிற மேகம்** - வெண் மேகங்கள்; **பருகுமா போல்** - (நீரைப்) பருகுவது போல; **மண்உறை வேந்தன் செல்வம்** - நிரம்பப்பெற்ற சனகனுடைய செல்வத்தை; **வறியவர்** - வறியவர்கள்; **முகந்து கொண்டார்** - (வேண்டியபடி) வாரிக் கொண்டு சென்றார்கள்.

வில்லிறுத்த ஓசை செவிப்பட்டதால் சீதையின் திருமணம் நிகழப் போகின்றதென்ற மகிழ்ச்சியால் ஊடல்கொண்ட மகளிரும் அப்புலவி நீங்கித் தம் கணவரைத் தழுவிக் கொண்டனர் என்பது. உட்புறம் முழுவதும் சிவந்து இமைப்பக்கம் கறுத்திருந்த கண்ணென்பார் 'சிவந்தொளிர் கருங்கண் மாதர்' என்றார். மகளிர்க்குப் புலவியால் கண் சிவத்தல் இயல்பு.

*705.* ***வயிரியர் மதுர கீதம்.***
***மங்கையர் அமுத கீதம்.***
***செயிரியர் மகர யாழின்***
***தேம் பிழி தெய்வ கீதம்.***
***பயிர் கிளை வேயின் கீதம்.***
***என்று இவை பருகி. விண்ணோர்***
***உயிருடை உடம்பும் எல்லாம்***
***ஓவியம் ஒப்ப நின்றார்.***

***வயிரியர்*** - *கூத்தர்களின்;* ***மதுர கீதம்*** - *இனிய பாடல்களும்;* ***மங்கையர் அமுதகீதம்*** - *மகளிரின் அமுதப் பாடல்களும்;* ***செயிரியர்*** - *யாழினை மீட்டும் பாணர்;* ***மகரயாழின் தேன்பிழி*** - *மகரயாழிலே தோன்றும் தேன் பிழிந்தாற் போன்ற;* ***தெய்வ கீதம்*** - *பாடும் தெய்வத்தன்மையுள்ள பாடல்களும்;* ***வேயின் பயிர்கிளை*** - *புல்லாங் குழலிலிருந்து ஏழிசை அடிப்படையில் தோன்றும் பல்வேறு ராகங்கள்;* ***கீதம்*** - *ஒலிக்கவும்;* ***என்ற இவை*** - *என்ற இவற்றை;* ***பருகி*** - *செவியிற் கேட்டு;* ***விண்ணோர்*** - *தேவர்கள்;* ***உயிர்உடை*** - *உயிருள்ள;* ***உடம்பு எல்லாமும்*** - *உடல் எல்லாம்;* ***ஓவியம் ஒப்ப நின்றார்*** - *சித்திரம் போல (அசைவற்று) நின்றார்கள். சீதையின் திருமணம் விரைவில் நிகழும் என்ற மகிழ்ச்சியால் பாணர் முதலியோரின் கீதங்கள் நிகழ்ந்தன; அப் பாடல் இனிமையில் ஈடுபட்டு விண்ணவர் சித்திரம்போல நின்றனர் என்பது.*

***706. ஐயன் வில் இறுத்த ஆற்றல்***
***காணிய. அமரர் நாட்டுத்***
***தையலார் இழிந்து. பாரின்***
***மகளிரைத் தழுவிக் கொண்டார்-***
***செய்கையின். வடிவின். ஆடல்***
***பாடலின் தெளிதல் தேற்றார்.-***
***மைஅரி நெடுங் கண்நோக்கம்***
***இமைத்தலும். மங்கி நின்றார்.***

***அமரர் நாட்டுத் தையலார்*** - *விண்ணுலகத்து மகளிர்;* ***ஐயன் வில் இறுத்த*** - *இராமன் வில்லை முறித்த;* ***ஆற்றல் காணிய*** - *வல்லமையைக் காணும் பொருட்டு;* ***இழிந்து*** - *(வானிலிருந்து) இறங்கி வந்து;* ***செய்கையின் வடிவின்*** - *(செய்யும்) செயலாலும் வடிவத்தாலும்;* ***ஆடல் பாடலின்*** - *ஆடல் பாடல்களாலும்;* ***தெளிதல் தேற்றார்*** - *(தமக்கும் மண்ணுலக மடந்தையர்க்கும்) வேறுபாடு காண முடியாதவர்களாய்;* ***பாரின் மகளிரை*** - *மண்ணுலக மங்கையரை;* ***தழுவிக் கொண்டார்*** - *(வானுலக மங்கையர் என்று கருதி மகிழ்ச்சியால்) தழுவிக் கொண்டார்கள்;* ***மை அரி நெடு நோக்கம்*** - *(அப்போது) அம் மங்கையரின் மையிட்டுச் செவ்வரி படர்ந்த நீண்ட பார்வையுள்ள;* ***கண் இமைத்தலும்*** - *கண்கள் இமைகொட்டி நின்ற அளவில்;* ***மயங்கி நின்றார்*** - *(இவர் நம் இனத்தவர் அல்லர் என்று) மயங்கி நின்றார்கள்.*

*வானத்திலிருந்து இறங்கிவந்த தேவ மகளிர் செயல் முதலானவற்றால் ஒத்திருந்த நிலவுலக மடந்தையரைத் தம்மவர் எனக்கருதி மகிழ்ச்சியால் தழுவிக் கொள்ள. அப்பொழுது அவர்களின் கண் இமைத்தலைக் கண்டு திகைத்தனர் என்பது - மயக்கவணி.*

*மிதிலை நகர மக்களின் உவகை மொழிகள்*

***707. ‘தயரதன் புதல்வன்’ என்பார்;***
***‘தாமரைக் கண்ணன்’ என்பார்;***
***‘புயல் இவன் மேனி’ என்பார்;***
***‘பூவையே பொருவும்’ என்பார்;***
***‘மயல் உடைத்து உலகம்’ என்பார்;***
***‘மானிடன் அல்லன்’ என்பார்;***
***‘கயல் பொரு கடலுள் வைகும்***
***கடவுளே காணும்’ என்பார்.***

*(அந்நகர மக்களில் சிலர்);* ***தயரதன் புதல்வன் என்பார்*** *- (இவன்) தயரதன் திருமகன் என்று கூறுவார்கள்;* ***தாமரைக் கண்ணன் என்பார்*** *- (சிலர் இவன்) செந்தாமரைக் கண்ணனான திருமாலே என்று சொல்வார்கள்;* ***இவன் மேனி*** *- (சிலர்) இவனது மேனியின் நிறம்;* ***புயல் என்பார்*** *- கருமேகம் என்பார்கள்;* ***பூவையும் பொருவும்*** *- (தவிர) காயாம் பூவையும் ஒத்துள்ளது;* ***என்பார்*** *- என்பார்கள் (சிலர்);* ***மானிடன் அல்லன்*** *- (எவ்வாறாயினும் இவன்) மானுடன் அல்லன்;* ***என்பார்*** *- என்று கூறுவார்கள் (சிலர்);* ***கயல் பொரு கடலுள்*** *- (பின்னை இவன் யாரென்றால்) கயல்மீன்களையுடைய பாற்கடலில்;* ***வைகும் கடவுளே*** *- தங்கியுள்ள திருமாலே ஆவான்;* ***என்பர்*** *- என்று சொல்வார்கள்;* ***மயல் உடைத்து உலகம்*** *- இந்த உலகத்தின் இயல்பு மயக்கம் உடையது;* ***என்பார்*** *- என்று கூறுவார்கள் (சிலர்) (இவ்வாறு மக்கள் பலபடி கூறினர்).*

*பூவையும் - இறந்தது தழீஇய எச்ச உம்மை.*

***708. ‘நம்பியைக் காண நங்கைக்கு***
***ஆயிரம் நயனம் வேண்டும்;***
***கொம்பினைக் காணும்தோறும்.***
***குரிசிற்கும் அன்னதே ஆம்;***
***தம்பியைக் காண்மின்!’ என்பார்;***
***‘தவம் உடைத்து உலகம்’ என்பார்;***
***‘இம்பர். இந் நகரில் தந்த***
***முனிவனை இறைஞ்சும்’ என்பார்.***

***நம்பியைக் காண*** - *(மற்றும் சிலர்) இராமனது வடிவழகைக் காண்பதற்கு;* ***நங்கைக்கு ஆயிரம் நயனம்*** - *சீதைக்குக் கண்கள் ஆயிரம்;* ***வேண்டும்*** - *வேண்டும் (என்று கூறுவார்);* ***கொம்பினை*** - *பூங்கொம்பு போன்ற இவளை (சீதையை);* ***காணும்தோறும்*** - *பார்க்கும்தோறும் (புதிய புதிய வடிவழகே புலப்படுவதால்);* ***குரிசிற் கும்*** - *இப் பெருமானாகிய இராமனுக்கும்;* ***அன்னதே*** - *(ஆயிரம் கண்கள் வேண்டும் என்பது) அத்தன்மையதே;* ***தம்பியைக் காண்மின்*** - *(தமையன் இருக்கட்டும்) அவன் தம்பியான இவன் வடிவழகைப் பாருங்கள்;* ***என்பார்*** - *என்று சொல்வார்;* ***உலகம் தவம் உடைத்து*** - *(இப்படிப்பட்ட அழகுள்ளவர்களைப் பெற்றதால்) இந்த நிலவுலகம் தவம் செய்ததாயிற்று;* ***என்பார்*** - *என்று சொல்லுவர் (சிலர்);* ***இம்பர் இந்நகரில்*** - *(மற்றும் சிலர்) உள்ள இந்த உலகத்தில் மிதிலை நகரில்;* ***தந்த முனிவனை*** - *இம் மைந்தர்களை அழைத்துவந்த விசுவாமித்திர முனிவனை;* ***இறைஞ்சும் என்பார்*** - *(எல்லாரும்) வணங்குங்கள் என்றுசொல்வார்கள்.*
*கொம்பினைப் பார்க்கும்தோறும் இமைத்தல் முதலிய இடையீடுகளால் பார்வை தடைப்படும். அவ்வாறு விட்டுவிட்டுப் பார்க்குமிடத்து முன்னிலும் புதிய பொலிவு புலப்படுவதால் ஆயிரம் ஆயிரம் கண்கள் இந்த இராமனுக்கும் வேண்டும் என்றவாறு. 'காணுந்தோறும்' என்றமையால் சீதையின் ஒவ்வோர் உறுப்பும் தனியான அழகு படைத்துள்ளது என்பது பெறப்படும். அழகை பருகுவோர்க்கு இமைத்தலும் தடையாகும். பெரியவனை மாயவனை.......கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்ணென்ன கண்ணே - ஆய்ச்சியர் படர் - 2*

*காதல் நோயால் சீதை உள்ளம் நைந்து உருகுதல்*

***709. இற்று. இவண் இன்னது ஆக. -***
***மதியொடும் எல்லி நீங்கப்***
***பெற்று. உயிர் பின்னும் காணும்***
***ஆசையால். சிறிது பெற்ற.***
***சிற்றிடை. பெரிய கொங்கை.***
***சேயரிக்கரிய வாள் - கண்.***
***பொன்-தொடி.- மடந்தைக்கு அப்பால்***
***உற்றது புகலலுற்றாம்.***

***இவண்*** - *சனகனது அரச சபையில்;* ***இற்று*** - *இந்த நிகழ்ச்சியானது;* ***இன்னது ஆக*** - *இப்படி நடக்க;* ***மதியொடும்*** - *சந்திரனோடு;* ***எல்லி நீங்கப் பெற்று*** - *இரவு கழிந்து;* ***உயிர் பின்னும்*** - *அந்தக் குமரனை மறுபடியும்;* ***காணும் ஆசையால்*** - *காணவேண்டுமென்ற ஆர்வத்தால்;* ***சிறிது பெற்ற*** - *(தேய்ந்து வரும்) உயிரைச் சிறிது பெற்றுள்ள;* ***சிற்றிடைப் பெரிய கொங்கை*** - *சிறுத்த இடையையும் பெருத்த தனங்களையும்;* ***சேய் அரிக் கரிய*** - *செவ்வழி படர்ந்த கரியவாய;* ***வாள்கண்*** - *ஒளிமிக்க கண்களையும்;* ***பொன்தொடி*** - *பொன்னாலாகிய வளைக்கைகளையும்;* ***மடந்தைக்கு*** - *அணிந்த சீதைக்கு;* ***அப்பால்*** - *(கன்னி மாடமாகிய) அந்த இடத்தில்;* ***உற்றது*** - *நேர்ந்ததை;* ***புகலல் உற்றாம்*** - *(இனி) கூறத் தொடங்குவோம்.*

*முன்பே சீதை வருந்திக் கொண்டிருக்க வேதனைக்குக் காரணமான சந்திரனும் இரவும் நீங்க மீண்டும் இராமனைக் காணலாம் என்ற ஆசை உண்டாகிறது. அதனால் சிறிது உயிர் தங்கிய சீதைக்கு நேர்ந்ததைக் கம்பர் கூறத்தொடங்குகின்றார். சீதை இராமனைத் தன்னுயிர் என்றே கருதினாலாதலின் 'உயிர்' என்றார்.*

***710. ஊசல் ஆடு உயிரினோடும்.***
***உருகு பூம் பள்ளி நீங்கி.***
***பாசிழை மகளிர் சூழ.***
***போய். ஒரு பளிக்கு மாட.***
***காசு இல் தாமரையின் பொய்கை.***
***சந்திர காந்தம் ஈன்ற***
***சீத நீர் தெளித்த மென் பூஞ்***
***சேக்கையை அரிதின் சேர்ந்தாள்.***

***ஊசல் ஆடு*** *- (சீதை) ஊஞ்சல் போலப் போவதும் வருவதுமான;* ***உயிரினோடும்*** *- உயிருடன்;* ***உருகு பூம்பள்ளி நீங்கி*** *- உடம்பு உருகுவதற்குக் காரணமான மலர்ப் படுக்கையை விட்டு நீங்கி;* ***பாசிழை மகளிர்*** *- பசும்பொன் அணிகள் பூண்ட மகளிர்;* ***சூழப் போய்*** *- சூழ்ந்து வர (அவ்விடத்தை விட்டுப்) போய்;* ***காசு இல் தாமரையின்*** *- குற்றமற்ற தாமரைத்;* ***பொய்கை*** *- தடாகத்தின் கரையிலுள்ள;* ***ஒரு பளிங்குமாடம்*** *- பளிங்கு மாடத்தில்;* ***சந்திரகாந்தம் ஈன்ற*** *- சந்திரகாந்தக் கற்கள் வெளிப்படுத்துவதும்;* ***சீதம் நீர் தெளித்த*** *- குளிர்ந்துள்ளதுமான நீர் தெளித்த;* ***மென்பூஞ் சேக்கையை*** *- மென்மையான பூம்படுக்கையை;* ***அரிதின் சேர்ந்தாள்*** *- அரிதிலே சேர்ந்தாள்.*

*சீதை முன்னிருந்த மலர்ப் படுக்கையை விட்டுத் தாமரைத் தடாகத்தின் கரையிலிருக்கும் பளிங்கு மாடத்தில் அமைத்துள்ள. சந்திரகாந்தக் கற்கள் வெளிக்கக்கும் குளிர்ந்த நீர் தெளித்த மலர்ப் படுக்கையில் சிரமப்பட்டுச் சேர்ந்தாள் என்றார். சந்திரகாந்தம்: நிலவைக் கண்ட இடத்து நீரைக் கக்குவதொரு கல் தாமரையின் பொய்கைப் பளிக்குமாடம் என இயைபுடுத்தவேண்டும்.*

***711. "பெண் இவண் உற்றது" என்னும்***
***பெருமையால். அருமையான***
***வண்ணமும் இலைகளாலே***
***காட்டலால். வாட்டம் தீர்ந்தேன்;-***
***தண் நறுங் கமலங்காள்! - என்***
***தளிர் நிறம் உண்ட கண்ணின்***
***உள் நிறம் காட்டினீர்; என்***
***உயிர் தர உலோவினீரே!***

***தண் நறுங் கமலங்காள்*** - குளிர்ந்த நறுமணமுள்ள தாமரைக் கொடிகளே!; ***பெண்*** - ஒரு பெண்ணிற்கு; ***இவண்*** - இப்போது இந்த இடத்தில்; ***உற்றது*** - (பிரிவுத் துயர்) நேர்ந்துள்ளது; ***என்றும்*** - என்று கருதுகின்ற; ***பெருமையால்*** - பெருந்தன்மை உங்களுக்கு உண்டானதால்; ***அருமையான வண்ணமும்*** - (அப்பிரானது காண்பதற்கு அரிய) திருமேனி நிறத்தையும்; ***இலைகளாலே*** - (உங்கள்) இலைகள் மூலம்; ***காட்டலால்*** - காட்டுவதால்; ***வாட்டம் தீர்ந்தேன்*** - மனவாட்டம் நீங்கப் பெற்றேன் (அல்லாமலும்); ***நீர்*** - நீங்கள்; ***என் தளிர் நிறம் உண்ட*** - எனது தளிர் போன்ற நிறத்தைக் கவர்ந்த; ***கண்ணினுள்*** - அவருடைய கண்களிலுள்ள; ***நிறம்*** - நிறத்தையும்; ***காட்டி னீர்*** - (மலர்களைக் கொண்டு) காட்டினீர் (அவ்வாறு காணச் செய்தும்); ***என் உயிர் தர*** - எனது உயிராகிய அவரைத் தருவதற்கு; ***உலாவினீரே*** - பின்வாங்கினீரே (இதற்கு என்ன காரணம்).

*இராமனது நிறத்தையும் கண்களையும் தாமரை காட்டி நின்றதைப் புகழ்ந்து அந்த இராமனைத் தன் முன்னே கொண்டு வரத் தவறியதனால் பழித்தாள் சீதை என்றார். உயிர்: இராமனைக் குறிக்கும்; சீதையின் உயிரும் ஆகும். தான் அழகழிந்து உடல் முழுவதும் பகலைப் போர்க்கும்படி தன் மனத்தை அவன் கண்ணழகு கவர்ந்ததால் 'தளிர் நிறமுண்ட கண்' என்பது. வண்ணமும் - எச்சவும்மை. உலோவுதல் - உலோப குணங் கொள்ளுதல்; கடும் பற்றுள்ளம் கொள்ளுதல். சீதை. தாமரைகளே! என் உயிரான காதலனுடைய உடலின் நிறமும் கண் நிறமும் காட்டினீர். ஆதலால் அந்த உயிர் உம்மிடமே உள்ளது. அதனைக் கொடுக்கவேண்டும் என்று உங்களை இரக்கின்றேன். ஆனால். இவ்வாறு கொடுக்காமல் உலோபம் செய்யலாமா?' என்று நொந்து குறை கூறினான் என்ற கருத்தைச் சுருங்கிய சொற்களால் கம்பர் புலப்படுத்துகின்றார்.*

கலிவிருத்தம்

***712. 'நாண் உலாவு மேருவோடு***
***நாண் உலாவு பாணியும்.***
***தூண் உலாவு தோளும். வாளி***
***யூடு உலாவு தூணியும்.***
***வாள் நிலாவின் நூல் உலாவும்***
***மாலை மார்பும். மீளவும்***
***காணல் ஆகும்? ஆகின். ஆவி***
***காணல் ஆகுமேகொலாம்.***

*அந்த இராமனது தோளின் அழகைக் கண்டு)* ***நாண் உலாவு மேருவோடு*** - *ஆதிசேடனாகிய நாணோடு மேரு மலை போன்ற வில்லுடன்;* ***நாண் உலாவு*** - *(அவ் வில்லின்) நாணில் உலாவுகின்ற;* ***பாணியும்*** - *கையும்;* ***தூண் உலாவு தோளும்*** - *தூண்களை ஒத்த தோள்களும்;* ***வாளி ஊடு*** - *அம்புகள் இடையே;* ***உலாவு தூணியும்*** - *செருகப் பெற்ற அம்பறாத் தூணியும்;* ***வாள் நிலாவின்*** - *ஒளிமிக்க சந்திரனைப் போன்ற;* ***நூல் உலாவு*** - *பூணூல் அலையும்;* ***மாலை மார்பும்*** - *வெற்றிமாலை சூடிய திருமார்பும்;* ***மீளவும்*** - *மறுமுறையும்;* ***காணல் ஆகும் ஆகின்*** - *காணக் கூடுமாயின்;* ***ஆவி*** - *என்னுயிரை;* ***காணல் ஆகும்*** - *நான் காணமுடியும் (அது கூடுமா?).*

*'என் ஆவி வில்லும் கையுமாகியும். தூணியும் தோளுமாகியும். பூணூலும் மார்புமாகியும் உள்ளது. அத்தகைய ஆவியைக் காணின் எனது ஆவியைக் கண்டதாகும். அவ்வாறு காணாவிட்டால் உயிர் இழப்பேன்' என்று சீதை கூறுகிறாள்.*

*தூண் உலாவு - உலாவு - உவம உருபு. உலாவ என்பது வெவ்வேறு பொருளில் வந்தது - சொற்பொருள் பின்வருநிலையணி.*

***713. 'விண்தலம் கலந்து இலங்கு***
***திங்களோடு. மீது சூழ்***
***வண்டு அலம்பு அலங்கல் தங்கு***
***பங்கியோடும். வார் சிலைக்***
***கொண்டல் ஒன்று. இரண்டுகண்ணின்***
***மொண்டுகொண்டு. என் ஆவியை***
***உண்டது உண்டு; என் நெஞ்சில் இன்னும்***
***உண்டு; அது என்றும் உண்டு அரோ!***

***விண்தலம்*** *- வானுலகத்தில்;* ***கலந்து இலங்கு*** *- சேர்ந்து விளங்கும்;* ***திங்களோடு*** *- சந்திரனோடும்;* ***மீது சூழ் வண்டு அலம்பு*** *- (தேனைப் பருக) மேலே சுற்றிவரும் வண்டுகள் ஒலிக்கின்ற;* ***அலங்கல் தங்கு*** *- மாலை சூடிய;* ***பங்கியோடும்*** *- மயிர் முடியோடும் (குஞ்சி) கூடிய;* ***வார்சிலை*** *- நீண்ட வில்லைத் தரித்த;* ***கொண்டல் ஒன்று*** *- மேகம் ஒன்று;* ***இரண்டு கண்ணின்*** *- (தன்) இரு கண்களால்;* ***என் ஆவியை*** *- எனது உயிராகிய நீரை;* ***மொண்டு கொண்டு*** *- முகந்து;* ***உண்டது உண்டு*** *- பருகிவிட்டது என்பது உண்மைதான்;* ***அது*** *- அந்த மேகமானது;* ***என் நெஞ்சின்*** *- எனது மனத்தில்;* ***இன்றும் உண்டு*** *- (நீங்காமல்) இப்பொழுதும் உள்ளது;* ***என்றும் உண்டு*** *- (அது மட்டுமா) எப்போதும் அது தங்கியிருக்கும்.*

*முகத்தைத் 'திங்கள்' எனவும் இராமனை 'வார்சிலைக் கொண்டல்' எனவும் உருவகத்தால் சீதை கூறினாள்.*

*மேகம் ஆவியால் ஆனது என்ற வழக்கிற்கும் ஏற்பக் 'கொண்டல் என் ஆவியை மொண்டு உண்டது' எனக் கூறிய நயம் உணரத்தக்கது.*

***714. 'பஞ்சு அரங்கு தீயின் ஆவி***
***பற்ற. நீடு கொற்ற வில்***
***வெஞ் சரங்கள் நெஞ்சு அரங்க.***
***வெய்ய காமன் எய்யவே.***
***சஞ்சலம் கலந்தபோது.***
***தையலாரை. உய்ய வந்து.***
***"அஞ்சல்! அஞ்சல்!" என்கிலாத***
***ஆண்மை என்ன ஆண்மையே?***

***வெய்ய காமன்*** - *கொடுமையுள்ள மன்மதன்;* ***நீடு கொற்ற வில்*** - *நீண்ட வெற்றியுடைய வில்லினால்;* ***வெம் சரங்கள்*** - *கொடிய அம்புகளை;* ***பஞ்சு அரங்கு தீயின்*** - *பஞ்சை அழிக்கும் நெருப்புப் போல;* ***ஆவி பற்ற*** - *என்னுயிரைப் பற்றி நிற்கவும்;* ***நெஞ்சு அரங்க*** - *(அதனால்) என் மனம் சிதையுமாறு;* ***எய்ய*** - *பிரயோகித்த லால்;* ***சஞ்சலம் கலந்த*** - *துன்பம் வந்து கலங்கும்;* ***போது*** - *இப்போது;* ***உய்ய வந்து*** - *(நான்) உயிர் பிழைக்கும்படி என் அருகே வந்து;* ***தையலாரை*** - *(ஆதரவற்ற) பெண்களை;* ***அஞ்சல் அஞ்சல் என்கிலாத*** - *அஞ்சாதீர். அஞ்சாதீர் என்று கூறி அபயம் அளிக்காத;* ***ஆண்மை*** - *ஆண்மை;* ***என்ன ஆண்மையோ*** - *எத்தகைய ஆண்மையோ?*

*வருந்தும் பெண்களை அணுகி அஞ்சல் என்று அபயம் அளிப்பதே ஆண்மைக்கு அழகு. ஆனால். அப்படிச் செய்யாத இப்பிரானது ஆண்மை என்ன ஆண்மை என்று வெறுப்பினால் இயற்பழிக்கின்றாள் சீதை.*

***715. 'இளைக்கலாத கொங்கைகாள்!***
***எழுந்து விம்மி என் செய்வீர்?***
***முளைக்கலா மதிக்கொழுந்து***
***போலும் வாள் முகத்தினான்.***
***வளைக்கலாத விற் கையாளி.***
***வள்ளல். மார்பின் உள்ளுறத்***
***திளைக்கல் ஆகும்ஆகில். ஆன***
***செய் தவங்கள் செய்ம்மினே!***

***இளைக்கலாத*** - *இளைக்காது பருத்து வரும்;* ***கொங்கைகாள்*** - *தனங்களே;* ***எழுந்து விம்மி*** - *(நீங்கள்) மேன்மேல் எழுந்து பருத்து வருதலால்;* ***என் செய்வீர்*** - *என்ன காரியத்தைச் சாதித்து விடுவீர்?;* ***முளைக்கலா*** - *வானில் தோன்றாத;* ***மதிக் கொழுந்து போலும்*** - *என்றும் ஒரு தன்மைத் தாயுள்ள சந்திரனைப் போன்ற;* ***வாள் முகத்தினான்*** - *ஒளியுள்ள முகத்தை யுடையவனும்;* ***வளைக்கலாத வில்*** - *(யாராலும்) வளைக்கமுடியாதபடி அரிதான வில்லை;* ***கை ஆளி வள்ளல்*** - *கையில் ஏந்தியவனுமாகிய அருள்மிக்க அவனுடைய;* ***மார்பினுள்*** - *திருமார்பை;* ***உறத் திளைக்கலாகும் ஆகில்*** - *இறுகத் தழுவக் கூடிய வழி ஏற்படுமாயின்;* ***ஆன செய்தவங்கள்*** - *அதற்கேற்ப செய்யத் தக்க தவங்களை;* ***செய்ம்மினே*** - *செய்யுங்கள்.*

*'கொங்கை முளைத்தெழுவதன் பயன் அவனது மார்பைத் தழுவிக் கொள்ளுதலேயாகும். அந்த நிலை கிடைப்பதற்கான வழி இருந்தால் அதைச் செய்யுங்கள். அதைவிட்டு நீங்கள் எழுந்து விம்முவதால் பயன் எதுவுமில்லை' என்று சீதை கூறுகிறாள்.*

***716. 'எங்கு நின்று எழுந்தது. இந்த***
***இந்து? வந்து என் நெஞ்சு உலா***
***அங்கு இயன்று. அனங்கன் எய்த***
***அம்பின் வந்த சிந்தை நோய்***

***பொங்குகின்ற கொங்கைமேல்***
***விடம் பொழிந்தது; என்னினும்***
***கங்குல் வந்த திங்கள் அன்று;***
***அகம் களங்கம் இல்லையே!***

***என் நெஞ்சு*** - *எனது மனத்திலே;* ***உலாவந்து*** - *உலாவி வந்து;* ***அங்கு*** - *அந்த இடத்திலே;* ***இயன்று*** - *அச்செயலோடு பொருந்தி;* ***அனங்கன் எய்த*** - *மன்மதன் செலுத்திய;* ***அம்பின் வந்த*** - *அம்பினால் உண்டான;* ***சிந்தைநோய்*** - *மன நோயானது;* ***பொங்குகின்ற*** - *பெரிதும் வெளிப்படும் இடமான;* ***கொங்கைமேல்*** - *(என்) தனங்கள்மேல்;* ***விடம் பொழிந்தது*** - *நஞ்சினை ஊற்றியது;* ***என்னினும்*** - *என்றாலும்;* ***கங்குல் வந்த*** - *(இது) நேற்றிரவில் தோன்றி வருந்திய;* ***திங்கள் அன்று*** - *சந்திரன் அன்று;* ***அகம்*** - *(ஏனென்றால்) இதன் மத்தியில்;* ***களங்கம் இல்லை*** - *களங்கம் காணப்படவில்லை;* ***இந்த இந்து*** - *இந்தச் சந்திரன்;* ***எங்கு நின்று*** - *எங்கிருந்து;* ***எழுந்தது*** - *வந்ததோ? (தெரியவில்லை)*

*உரு வெளிப்பாட்டில் இராமனது முகச் சந்திரன் தோன்ற அதனால் உண்டான துயரத்தைச் சீதை வெளிப்படுத்துகிறாள். அவள் முகச்சந்திரனைப் பார்த்து இது நஞ்சு பொழிந்ததனாலும் நடுவிலே களங்கத்தைப் பெறவில்லை ஆதலாலும் இது நேற்றிரவு தோன்றிய சந்திரன் அன்று; இந்தச் சந்திரன் இரவு அல்லாத இப்போது எவ்வாறு தோன்றியதோ என்று வருந்துகின்றாள்.*

*717.* ***'அடர்ந்து வந்து. அனங்கன். நெஞ்சு***
***அழன்று சிந்தும் அம்பு எனும்***
***விடம் குடைந்த மெய்யின்நின்று***
***வெந்திடாது எழுந்து. வெங்***
***கடம் துதைந்த காரி யானை***
***அன்ன காளை தாள் அடைந்து.***
***உடன்தொடர்ந்து போன ஆவி***
***வந்தவா என்? - உள்ளமே!***

***உள்ளமே*** - என் மனமே; ***அனங்கன்*** - மன்மதன்; ***நெஞ்சு அழன்று*** - மனம் கொதிக்குமாறு; ***அடர்ந்து வந்து*** - நெருங்கி வந்து; ***சிந்தும் அம்பு எனும் விடம்*** - நஞ்சு தோய்ந்த அம்பு; ***குடைந்த*** - குடைதலினால்; ***மெய்யின் நின்று*** - உடம்பினுள்நிலைத்து; ***வெந்திடாது எழுந்து*** - வெந்தழியாமல் வெளிப்பட்டு; ***வெங்கடம் துதைந்த*** - வெப்பமான மதநீர் பெருகும்; ***காரி யானை அன்ன*** - கறுத்த யானையைப் போன்ற; ***காளை தாள் அடைந்து*** - காளை போன்ற பிரானுடைய திருவடிகளைச் சரணடைந்து; ***உடன் தொடர்ந்துபோன*** - அவனோடு தொடர்ந்து சென்ற; ***ஆவி*** - என் உயிரானது; ***வந்தவா*** - திரும்பி வந்த விதம்; ***என்*** - என்னவோ? 'அனங்கன் எய்த அம்பால் வெந்த உடம்பிலிருந்து தான் வேகாதிருக்கத் தப்பி வந்த என்னுயிர் தொடர்ந்து சென்று இராமன் திருவடியைச் சரணடைந்தும் இப்போது துன்பப் படுமாறு திரும்பிவந்ததே! இது வியப்பாக உள்ளது' என்று இரங்கிக் கூறுகிறாள் சீதை.

***718. 'விண்ணுளே எழுந்த மேகம்***
***மார்பின் நூலின் மின்னொடு. இம்***
***மண்ணுளே இழிந்தது என்ன.***
***வந்து போன மைந்தனார்.***
***எண்ணுளே இருந்த போதும்.***
***யாவரென்றுதோகிலென்;***
***கண்ணுளே இருந்த போதும்.***
***என்கொல் காண்கிலாதவே?***

***விண்ணுள்*** - வானத்தில்; ***எழுந்த மேகம்*** - தோன்றிய மேகமானது; ***மின்னொடு*** - மின்னலுடன்; ***இம் மண்ணுள்*** - இந்த மண்ணுலகில்; ***இழிந்தது என்ன*** - இறங்கியது என்று சொல்லுமாறு; ***மார்பின் நூலின்*** - மார்பில் அணிந்துள்ள முப்புரி நூலுடன்; ***வந்துபோன*** - (கன்னிமாடத்தின் முன் என் கண்கள் காணுமாறு) வந்து சென்ற; ***மைந்தனார்*** - அப்பிரான்; ***எண்ணுளே*** - என் மனத்திற்குள்ளே; ***இருந்தபோதும்*** - நீங்காது இருந்தாலும்; ***யாவர் என்று*** - இவர் யாரென்று; ***தேர்கிலேன்*** - தெரிந்து கொள்ள முடியவில்லை; ***கண்ணுளே*** - (என்) கண்களுக்கு எதிரே; ***இருந்தபோதும்*** - காணப்பட்டாலும்; ***காண்கிலாதது*** - (இன்னாரென்று) அறிந்து கொள்ள முடியாமல் இருப்பதற்குக் காரணம்; ***என்கொல்*** - என்ன?

*கண்ணிற்குள்ளே இருப்பவரை இன்னாரென்று காணாமையும் காலத்தாலும் இடத்தாலும் சேய்மையானவற்றையும் அறியவல்ல மனம் தன்னுள் இருப்பவரை இன்னாரென்று தெரியாமல் இருப்பதும் வியப்பானதே என்று சீதை கூறுகிறாள். பூணூல் தரித்த இராமனுக்கு மின்னலோடு கூடிய மேகம் உவமையானது.*

*719.* ***'பெய் கடல் பிறந்து. அயல்***
***பிறக்கொணா மருந்து பெற்று.***
***ஐய பொற் கலத்தொடு அங்கை***
***விட்டு இருந்த ஆதர்போல்.***
***மொய் கிடக்கும் அண்ணல் தோள்***
***முயங்கிடாது முன்னமே.***
***கைகடக்க விட்டு இருந்து***
***கட்டுரைப்பது என்கொலோ?'***

**பெய் கடல் பிறந்து** - *பல வளங்களும் நிறைந்த பாற்கடலிலே தோன்றி;* **அயல் பெறற்கு ஒணா** - *வேறிடத்தில் பெற முடியாத;* **மருந்து பெற்று** - *அமுதத்தைத் தம் நல்வினைப் பயனால் அடைந்தும்;* **ஐய பொன் கலத்தொடு** - *(அதனை உடனே பருகாமல்) அழகிய பொன்கலசத்தோடு;* **அம்கை விட்டிருந்து** - *தம் கையிலிருந்து அதனை நழுவவிட்ட;* **ஆதர்போல்** - *அறிவற்ற மூடர்களைப் போல;* **மொய் கிடக்கும்** - *வலிமை மிக்க;* **அண்ணல்தோள்** - *அப் பெருமானின் தோள்கள் (காணப் பெற்றும்);* **முன்னமே முயங்கிடாது** - *(கண்ட) அப்போதே தழுவிக் கொள்ளாமல்;* **கைக் கடக்க** - *கைநழுவிப் போகும்படி;* **விட்டிருந்து** - *விட்டொழித்துப் பின்;* **கட்டுரைப்பது** - *தனியிருந்து பலவாறாகக் கூறிப் புலம்புவது;* **என்கொல்** - *எதற்காக?*

*அமுதம் கண்ணிற்பட்டால் உடனே அது நிறைந்துள்ள பொற்கலத்தைக் கைப்பற்றி உண்பது முறை. ஆனால். அப்படிச் செய்யாது கைநழுவவிட்ட மூடர்போல இராமனைக் கண்ணால் கண்டபோது நான் அவனைத் தழுவிக் கொள்ளாமல் விட்டுவிட்டு இப்போது பலவாறு பேசி என்ன பயன்' என்கிறாள் சீதை. ஆதர் - அறிவில்லாதவர்.*

*720.* ***என்று கொண்டு. உள் நைந்து நைந்து.***
***இரங்கி. விம்மி விம்மியே.***
***பொன் திணிந்த கொங்கை மங்கை***
***இடரின் மூழ்கு போழ்தின்வாய்.***
***குன்றம் அன்ன சிலை முறிந்த***
***கொள்கை கண்டு. குளிர் மனத்து***
***ஒன்றும் உண்கண் மதி முகத்து***
***ஒருத்தி செய்தது உரைசெய்வாம்.***

***பொன்திணிந்த*** - (பொன்போன்ற) தேமல் நெருங்கிய; ***கொங்கை மங்கை*** - தனங்களையுடைய சீதை; ***என்று கொண்டு*** - என்று பலவாறு சொல்லி; ***உள் நைந்து*** - மனம் மிகவும் நைந்து; ***இரங்கி*** - இரக்கமுற்று; ***விம்மி விம்மி*** - பெரிதும் விம்மி; ***இடரில் மூழ்கு போழ்தின் வாய்*** - துன்பத்தில் அழுந்திய பொழுது; ***குளிர் மனத்து ஒன்றும்*** - குளிர்ந்த மனத்தோடு கூடியவளும்; ***உண்கண் மதிமுகத்து*** - மைதீட்டிய கண்களும் சந்திரன் போன்ற முகமும் கொண்டவளான; ***ஒருத்தி*** - ஒரு தோழி; ***குன்றம் ஒன்று சிலை*** - மலை போன்ற வில்; ***முறிந்த கொள்கை*** - முறிபட்ட செயலை; ***கண்டு*** - நேரிலே கண்டுவந்து; ***செய்தது*** - கூறிய செய்தியை; ***உரை செய்வாம்*** - இனிச் சொல்லுவோம்.

*நீலமாலை உரைத்த மகிழ்ச்சிச் செய்தி*

**கலி விருத்தம்**

***721. வடங்களும் குழைகளும் வான வில்லிட.***
***தொடர்ந்த பூங் கலைகளும் குழலும் சோர்தர.***
***நுடங்கிய மின் என நொய்தின் எய்தினாள்.***
***நெடுந் தடங் கிடந்த கண் நீலமாலையே.****

***நெடுந் தடம் கிடந்த*** - பெரிய தடாகத்தில் கிடந்த; ***கண்நீலமாலை*** - குவளை போன்ற கண்களையுடைய நீலமாலை என்பவள்; ***வடங்களும்*** - (தன் கழுத்தில் பூண்ட) ஆரங்களும்; ***குழைகளும்*** - காதணியான குழைகளும்; ***வானவில் இட*** - வானவில்லைப் போலப் பல நிற ஒளிகளை வீசவும்; ***தொடர்ந்த பூங்கலைகளும்*** - உடுத்த உடையும்; ***குழலும் சோர்தர*** - மலரணிந்த கூந்தலும் அவிழ்ந்து சரியவும்; ***நுடங்கிய மின் என*** - துவண்ட மின்னல் போல; ***நொய்தின் எய்தினாள்*** - விரைவாக ஓடி வந்தாள்.

*சீதைக்குத் திருமணம் நடக்குமாறு இராமன் வில் முறித்த செய்தியை விரைவில் தெரிவிக்க வேண்டுமென்ற ஆர்வத்தோடு சீதை இருக்குமிடம் வந்தாள் என்பது.*

*தோழியின் பெயர் நீலமாலை. வானவில் இடுதல் - இந்திரவில்லின் தன்மையவாய்ப் பலநில ஒளி வீசுதல். 'திருவில் இட்டுத் திகழ்தரு மேனியன்' - சிலப். 15 -156*



***722. வந்து அடி வணங்கிலள்; வழங்கும் ஓதையள்;***
***அந்தம் இல் உவகையள். ஆடிப் பாடினள்;***
***'சிந்தையுள் மகிழ்ச்சியும். புகுந்த செய்தியும்.***
***சுந்தரி! சொல்' என. தொழுது சொல்லுவாள்;***

***வந்து அடி*** - வந்ததும் சீதையின் அடிகளை; ***வணங்கிலள்*** - விழுந்து வணங்கவில்லை; ***வழங்கும் ஓதையள்*** - ஆரவாரம் செய்பவளும்; ***அந்தம் இல் உவகையள்*** - எல்லையில்லாத மகிழ்ச்சியுடையவளுமாகி; ***ஆடிப் பாடினள்*** - ஆடுவதும் பாடுவதும் ஆயினாள் (அதைக் கண்ட சீதை அவளை நோக்கி); ***சுந்தரி*** - அழகானவளே; ***சிந்தையுள் மகிழ்ச்சியும்*** - உன் மனமகிழ்ச்சியின் காரணத்தையும்; ***புகுந்த செய்கையும்*** - (பெரு மகிழ்ச்சிக்குக் காரணமாக) நடந்துள்ள செயலையும்; ***சொல்*** - சொல்லுவாய்; ***என*** - என்று கேட்க; ***(அந்தத்தோழி சீதையை) தொழுது*** - வணங்கி; ***சொல்லுவாள்*** - கூறலானாள்.

*தலைவியைக் கண்டவுடன் தோழி வணங்கவேண்டுவது முறையாகும். ஆனால் பெரு மகிழ்வால் அத் தோழி வணங்காமல் ஆடிப் பாடிக் கொண்டிருந்தாள். பின்னர்ச் சீதை அவளைக் கேட்கச் செய்தியைக் கூற முற்பட்டாள்.*

***723. 'கய ரத துரகமாக் கடலன். கல்வியன்.***
***தயரதன் எனும் பெயர்த் தனிச் செல் நேமியான்.***
***புயல் பொழி தடக் கையான். புதல்வன்; பூங் கணை***
***மயல் விளை மதனற்கும் வடிவு மேன்மையான்;***

***கயம் ரதம்*** - யானையும் தேரும்; ***துரகம் மாகடலன்*** - குதிரையும் ஆகியவற்றைக் கடலெனப் படைத்தவனும்; ***கல்வியன்*** - பெருங்கல்வியில் மேம்பட்டவனும்; ***புயல் பொழி தடக்கையான்*** - மேகம் மழை பொழிவதுபோல் செல்வம் பொழிகின்ற நீண்ட கையையுடையவனுமான; ***தயரதன் எனும்*** - தசரதன் என்று; ***பெயர்த் தனிச் செல்*** - உலகம் புகழத் தனிச் செங்கோல் செலுத்தும்; ***நேமியான்*** - பெருமன்னனின்; ***புதல்வன்*** - மைந்தன்; ***பூங்கணை மயல் விளை*** - மலர் அம்புகளால் உலகத்தில் மயக்கத்தை உண்டாக்கும்; ***மதனற்கும்*** - மன்மதனைக் காட்டிலும்; ***வடிவு மேன்மையான்*** - வடிவழகு மிக்கவன் (ஒருவன் இருக்கின்றான்).

***724. 'மரா மரம் இவை என***
***வலிய தோளினான்;***
***"அரா -அணை அமலன்" என்று***
***அயிர்க்கும் ஆற்றலான்;***
***'இராமன்' என்பது பெயர்;***
***இளைய கோவொடும்.***
***பராவ அரு முனியொடும்.***
***பதி வந்து எய்தினான்;***

*(அந்தக் குமரன்)* ***இவை மராமரம் என*** *- மராமரம் என்னும்படி;* ***வலிய தோளினான்*** *- வன்மையான தோள்களையுடையவன்;* ***அரா அணை அமலன் என்று*** *- ஆதி சேடனாகிய படுக்கையில் பள்ளி கொள்ளும் திருமால்தான் அவதரித்தானோ என்று;* ***அயிர்க்கும் ஆற்றலான்*** *- ஐயுறக் கூடிய ஆற்றல் படைத்தவன்;* ***பெயர்*** *- (அவனுக்கு) அவனது பெயர்;* ***இராமன் என்பது*** *- இராமன் என்பது (அவன்);* ***இளைய கோவொடும்*** *- தம்பியான அரச குமாரனோடும்;* ***பராவ அரு முனியொடும்*** *- அளவிட்டுப் புகழ்வதற்கு அரிய முனிவனோடும்;* ***பதி*** *- (நம்) நகரை;* ***வந்து எய்தினான்*** *- வந்து சேர்ந்தான்.*

*தசரதன் மைந்தனான இராமன் தம்பியோடும் விசுவாமித்திரனுடனும் மிதிலை நகர்க்கு வந்தான்.*

***725. ' "பூண் இயல் மொய்ம்பினன்.***
***புனிதன் எய்த வில்***
***காணிய வந்தனன்"***
***என்ன. காவலன்***
***ஆணையின் அடைந்த வில்***
***அதனை. ஆண்தகை.***
***நாண் இனிது ஏற்றினான்;***
***நடுங்கிற்று உம்பரே!***

***பூண் இயல்*** *- வாகு வலயங்களை அணிந்த;* ***மொய்ம்பினன்*** *- தோள்களையுடைய அக்குமாரன்;* ***புனிதன் எய்த வில்*** *- புனிதனான சிவன் கைக்கொண்டு எய்த வில்லை;* ***காணிய வந்தனன்*** *- காணும் பொருட்டு வந்துள்ளான்;* ***என்ன*** *- என்று (விசுவாமித்திரன்) சொல்ல;* ***காவலன் ஆணையின்*** *- சனக ராசனின் கட்டளையால்;* ***அடைந்த*** *- அங்கு வந்து சேர்ந்த;* ***வில் அதனை*** *- அந்த வில்லை (வளைத்து);* ***ஆண் தகை*** *- ஆண்மையுள்ளவனான அக்குமாரன்;* ***இனிது நாண் ஏற்றினான்*** *- மிக எளிதாக நாணேற்றினான்;* ***உம்பர் நடுங்கிற்று*** *- வானுலகும் நடுங்கியது.*

*மொய்ம்பு - வலிமை வலிமை;கொண்ட தோளுக்காயிற்று. 'பூந்தாது மொய்ம்பினவாக' - கலித். 88*



***726. 'மாத்திரை அளவில் தாள் மடுத்து. முன் பயில்***
***"சூத்திரம் இது" என. தோளின் வாங்கினான்;***
***ஏத்தினர் இமையவர்; இழிந்த. பூ மழை;***
***வேத்தவை நடுக்குற முறிந்து வீழ்ந்ததே!***

***மாத்திரை அளவில்*** - ஒரு நொடிப்பொழுதில்; ***தாள் மடுத்து*** - (அவ்வில்லின் அடிப்பக்க முனையை) தன் காலால் மிதித்துக் கொண்டு; ***முன் பயில் சூத்திரம்*** - முன்பு பழகிய இயந்திரம்; ***இது என*** - இதுவெனக் (கண்டவர்) கருதுமாறு; ***தோளின் வாங்கினான்*** - (அந்த இராமன்) தன் தோள்வலியால் அதனை வளைத்தான் (அப்போது); ***இமையவர்*** - தேவர்கள்; ***ஏத்தினர்*** - (இராமனைப்) புகழ்ந்தார்கள்; ***பூ மழை*** - மலர் மழை; ***இழிந்த*** - (வானத்திலிருந்து) பொழிந்தது; ***வேந்து அவை*** - (அந்த வில்) அரச சபையினர்; ***நடுக்குற*** - நடுநடுங்கும்படி; ***முறிந்து வீழ்ந்தது*** - இடையே முறிந்து கீழே விழுந்து விட்டது.

*அவை - ஆகுபெயர்.*

*சீதை தன் ஐயம் நீங்கலும் அகத்துள் உறுதி பூணலும்*

*727.* ***'கோமுனியுடன் வரு கொண்டல்" என்ற பின்.***
***'தாமரைக் கண்ணினான்' என்ற தன்மையால்.***
***'ஆம்; அவனேகொல்' என்று. ஐயம் நீங்கினாள்;***
***வாம மேகலையினுள் வளர்ந்தது. அல்குலே!***

***கோ முனியுடன்*** - பெருமை மிக்க முனிவனுடன்; ***வரு கொண்டல்*** - வந்த மேகம் போன்றவன்; ***என்றபின்*** - என்று கூறிய பின்பு; ***தாமரைக் கண்ணினான்*** - தாமரைக் கண்ணனான திருமாலைப் போன்ற ஆற்றல் உடையவன்; ***என்ற தன்மையால்*** - என்று சொல்லிய வகையால்; ***ஆம் அவனே கொல்*** - (சீதை) அப்பொழுது (கன்னி மாடத்து அருகே) கண்ட அவனே போலும்; ***என்று ஐயம் நீங்கினாள்*** - என்று தான் கொண்ட சந்தேகம் (சிறிது) நீங்கப் பெற்றாள்; ***வாம மேகலையினுள்*** - அழகிய மேகலை அசைய; ***அல்குல் வளர்ந்தது*** - (அவளது) இடைப்பக்கம் பருத்தது.

*தோழியின் வார்த்தையால் வில்லிறுத்தவன் தான்கண்ட ஆடவனே என்று துணிந்து மனத்திலிருந்த சந்தேகத்தைச் சிறிது நீக்கினாள் சீதை என்பது.*

*728.* ***'இல்லையே நுசுப்பு' என்பார்.***
***'உண்டு. உண்டு' என்னவும்.***
***மெல்லியல். முலைகளும்.***
***விம்ம விம்முவாள்; 'சொல்லிய குறியின். அத் தோன்றலே***
***அவன்; அல்லனேல். இறப்பென்' என்று. அகத்துள்***
***உன்னினாள்.***

**நுசுப்பு இல்லையே** - *(இவளுக்கு) இடையானது இல்லவே இல்லை;* **என்பார்** - *என்று சொல்பவர் (உடல் பூரித்துள்ள இப்போது இடையும் தோன்ற) ;* **உண்டு உண்டு என்னவும்** - *(இடை) இருக்கின்றது இருக்கின்றது என்று சொல்லவும்;* **மெல்லியல்** - *சீதை;* **முலைகளும் விம்ம** - *தனங்களும் பருக்க;* **விம்முவாள்** - *(தானும்) உடல் பூரிப்பவளாய்;* **சொல்லிய குறியின்** - *(இவள்) சொன்ன அடையாளங்களால்;* **அவன்** - *வில்லை முறித்தவன்;* **அத்தோன்றலே** - *(நான் கன்னி மாடத்திலிருந்து கண்ட) அந்த ஆடவனேயாவான்;* **அல்லனேல்** - *(அப்படி) அவனாக இல்லாவிட்டால்;* **இறப்பென்** - *உயிரை விட்டொழிப்பேன்;* **என்று அகத்துள்** - *என்று மனத்திலே;* **உன்னினாள்** - *உறுதி கொண்டாள்.*

*என்னவும்: இசை நிறை; முலைகளும்; இறந்தது தழீஇய எச்சம்.*

*சனகன் உவந்து கோசிகனிடம் திருமணம் குறித்து வினாவுதல்*

***729. ஆசையுற்று அயர்பவள் அன்னள் ஆயினள்; பாசடைக்***
***கமலத்தோன் படைத்த வில் இறும்***
***ஓசையின் பெரியது ஓர் உவகை எய்தி. அக்***
***கோசிகற்கு ஒரு மொழி. சனகன் கூறுவான்;***

**ஆசை உற்று** - *காதல் பெருகி;* **அயர்பவள்** - *தளர்பவளான சீதை;* **அன்னள் ஆயினள்** - *அவ்வாறான நிலையில் இருந்தாள் (அவ்வாறு அது இருக்க);* **சனகன்** - *சனக மன்னன்;* **பாசு அடை** - *பசுமையான இலைகளையுடைய;* **கமலத்தோன்** - *தாமரையில் தங்கும் பிரமன்;* **படைத்த வில் இறும்** - *படைத்த வில் இற்று வீழ்ந்த;* **ஓசையின்** - *ஓசையைக் கேட்டதால்;* **பெரியதோர் உவகை** - *மிக ஒப்பற்ற மகிழ்ச்சியடைந்து;* **அக் கோசிகற்கு** -*அந்த விசுவாமித்திரனுக்கு;* **ஒரு மொழி கூறுவான்** - *ஒரு வார்த்தை சொல்லலானான்.*

*வில்லை வளைத்தல் என்பது நடைபெறுமா என்று ஏங்கிக் கொண்டிருந்த சனகன் வில் இறுத்த ஓசை கேட்டும் பேருவகை கொண்டான் என்பது.*

***730. 'உரை செய் - எம் பெரும!***
***உன் புதல்வன் வேள்விதான்.***
***விரைவின். இன்று. ஒரு பகல்***
***முடித்தல் வேட்கையோ?***
***முரசு எறிந்து அதிர் கழல்***
***முழங்கு தானை அவ்***
***அரசையும். இவ் வழி.***
***அழைத்தல் வேட்கையோ?***

***எம் பெரும*** - எம் பெருமானே! உன் புதல்வன் - உன்னால் அழைத்துவரப் பெற்ற மைந்தனது; **வேள்விதான்** - திருமணமானது; **விரைவின்** - தாமதம் இல்லாமல்; **இன்று ஒரு பகல்** - இன்றைய தினமே; **முடித்தல் வேட்கையோ** - நிறைவேற்ற வேண்டும் என்பது விருப்பமா? (அல்லது); **முரசு எறிந்து** - மணமுரசை எங்கும் முழக்கி; **அதிர்கழல்** - அதிர்கின்ற வீரக் கழலையும்; **முழங்கு தானை** - ஆரவாரம் மிக்க படைகளையுமுடைய; **அவ் அரசையும்** - அத் தசரத மன்னனையும்; **இவ்வழி** - இந்த நகரத்துக்கு; **அழைத்தல்** - வரவழைத்து (திருமணத்தை) நடத்துதல்; **வேட்கையோ** - உமக்கு விருப்பமா?; **உரை செய்** - (இவ் விரண்டினுள்) எது விருப்பம் என்பதைச் சிந்தித்துச் சொல்க (என்று சனகன் கோசிகனை வினவினான்.)

*முனிவன் மொழிந்தபடியே சனகன் தயரதனுக்குத் தூது விடுத்தல்*

***731. மல் வலான் அவ் உரை பகர. மா. தவன்.***
***'ஒல்லையில் அவனும் வந்துறுதல். நன்று' என.***
***எல்லை இல் உவகையான். 'இயைந்தவாறு எலாம்***
***சொல்லுக' என்று. ஓலையும் தூதும் போக்கினான்***

***மல் வலான்*** - மற்போரில் வல்ல சனக மன்னன்; **அவ் உரை பகர** - அந்த மொழிகளைச் சொல்ல; **மாதவன்** - விசுவாமித்திரன்; **ஒல்லையில் அவனும்** - விரைவில் அத் தசரதனும்; **வந்து உறுதல்** - இங்கு வந்து சேருதல்; **நன்று என** - நலமாகும் என்று தெரிவிக்கவே; **எல்லையில் உவகையான்** - எல்லையற்ற மகிழ்ச்சி கொண்ட சனகன்; **இயைந்த ஆறு எலாம்** - இங்கே நடந்த செய்திகளையெல்லாம்; **சொல்லுக என்று** - (தசரத மன்னனிடம்) சொல்லுக என்று கூறி; **ஓலையும் தூதும்** - திருமண ஓலையையும் தூதுவரையும்; **போக்கினான்** - (அயோத்திக்கு) அனுப்பி வைத்தான்.

*திருமணத்தை நாளோட்டாமல் விரைவில் செய்யவேண்டு மென்பது முறையாகும். ஆயினும். பெற்றோரின் அனுமதியில்லாமல் திருமணத்தை நடத்துவது முறையன்று என்று கருதிய விசுவாமித்திரன் 'ஒல்லையில் அவனும் வந்துறுதல் நன்று' என்றான்.*

## *எழுச்சிப் படலம்*

*படலத்தின் பெயரமைதி: தன் மைந்தர்களின் திருமணத்திற்காகத் தசரதன் மிதிலைக்குப் புறப்படுவதைத் தெரிவிக்கும் பகுதியாதலால் எழுச்சிப் படலம் எனப் பெயர் பெற்றது இப் படலம்.*

*படலச் செய்திச் சுருக்கம்: சனகன் அனுப்பிய தூதர் தசரதனிடம் செய்தியைத் தெரிவிக்கின்றனர். சனகனது ஓலையின் செய்திகேட்டுத் தசரதன் உவகையடைந்து. அத் தூதருக்கு அணிகலன் முதலிய வழங்குகின்றான். வள்ளுவன் அரசன் ஆணைப்படி மணமுரசு அறைய. நால்வகைப் படைகளும் எழுகின்றன. படைகளின் பயணம் தொடங்குகின்றது. பப்பரர் பாரம் சுமந்து செல்லுகின்றார். மகளிர் மனங் களித்து ஏகுகின்றனர். மங்கையர். ஆடவர் மகிழ்ந்து செல்லுகின்றனர். யானையின் வருகையைக் கேட்டு மகளிர் நிலைகெட்டு ஓடுகின்றார்கள். பாணரும் விறலியரும் இசை எழுப்புகின்றார்கள். தசரதனின் நேய மாதரும் பட்டத்து அரசியாரும் போகின்றார்கள். அப்பொழுது மெய்க்காப்பாளர் காவல் புரிகின்றார்கள். வசிட்டர் சிவிகையில் செல்ல. அவருக்குப்பின்னே பரதனும் சத்துருக்கனனும் செல்லுகின்றார்கள். யாவரும் சந்திர சயிலச் சாரலில் தங்குகின்றார்கள்.*

*சனகன் தூதர் தயரதனையடுத்துச் செய்தி தெரிவித்தல்*

***732. கடுகிய தூதரும். காலில் காலின் சென்று.***
***இடி குரல் முரசு அதிர் அயோத்தி எய்தினார்;***
***அடி இணை தொழ இடம் இன்றி. மன்னர்தம்***
***முடியொடு முடி பொரு வாயில் முன்னினார்.***

***கடுகிய தூதரும்*** *- (சனகனால் அனுப்பப்பெற்று) விரைந்து சென்ற தூதர்களும்;* ***காலில் சென்று*** *- காற்றைப் போல விரைந்து சென்று;* ***இடிக்குரல்*** *- இடியின் குரலைப் போல;* ***முரசு அதிர்*** *- பேரிகைகள் முழங்குகின்ற;* ***அயோத்தி எய்தினார்*** *- அயோத்தி நகரை அடைந்தனர்;* ***அடி இணை தொழ*** *- அம்மன்னனுடைய பாதங்களைத் தொழுவதற்கு;* ***இடம் இன்றி*** *- (உள்ளே செல்ல) இடம் கிடைக்காததால்;* ***மன்னர் தம் முடியொடு?*** *- சிற்றரசர்களின் பொன்முடிகளோடு;* ***முடி பொரு*** *- முடிகள் தாக்கிக் கொள்கின்ற;* ***வாயில்*** *- அரண்மனை வாயிலை;* ***முன்னினார்*** *- அடைந்தார்கள். மணச் செய்தி சொல்ல வருகின்ற தூதர்களுக்கு ஏற்ப மங்கலமாக 'முரசு அதிர் அயோத்தி' என்றார்.*

*மன்னர்கள் தசரதனை வணங்க முந்துகின்றார்கள். அதனால் அவர்களின் பொன்முடியோடு முடிகள் மோதுகின்றன என்றார்.*

*733. முகந்தனர் திருவருள். முறையின் எய்தினார்;
திகழ்ந்து ஒளிர் கழல் இணை தொழுது. செல்வனைப்
புகழ்ந்தனர்; 'அரச! நின் புதல்வர் போய பின்
நிகழ்ந்ததை இது' என. நெடிது கூறினார்.*

***திருவருள் முகந்தனர்*** - *(வாயிலையடைந்த தூதர்) உள்ளே செல்ல அரசனது அருளைப்பெற்றவராய்;* ***முறையின் எய்தினார்*** - *அரசவையில் செல்ல வேண்டிய முறைப்படி அரசன் முன்பு சென்று;* ***திகழ்ந்து ஒளிர்*** - *மிக விளங்குகின்ற;* ***கழல் இணை தொழுது*** - *தசரத மன்னனின் அடிகளை வணங்கி;* ***செல்வனைப் புகழ்ந்தனர்*** - *அவ்வரசனைப் புகழ்ந்து;* ***அரச*** - *மன்னரே;* ***நின் புதல்வர்*** - *உன் மைந்தர்;* ***போய பின்*** - *(விசுவாமித்திரனுடன்) இங்கிருந்து சென்றபின்;* ***நிகழ்ந்ததை*** - *நடந்த செயல்;* ***இது என*** - *இதுவாகும் என்று;* ***நெடிது கூறினார்*** - *விரிவாகக் கூறினர்.*

*அரசவைக்கு அன்னிய நாட்டுத் தூதுவர் வருங்காலத்து வாயில் காப்பவர் 'அரசனிடம் சென்று இந்த நாட்டுத் தூதுவர் வந்துள்ளார்' என்று உணர்த்தி. அவனது உத்தரவின்படி உள்ளே விடுதல் மரபாகும். முறை: அரசவையில் செல்லும் தூதர்கள் அடக்கத்துடன் நிற்கும் முறைமையை உணர்த்தியது. செல்வனைப் புகழ்தல்: தூதர்கள் அரசனை வணங்கி எழுந்ததும் அவனைப்புகழ்தல் மரபாகும்.*

*சனகனது ஓலையை வாசிக்கக் கேட்டுத் தயரதன் உவகை கொள்ளல்*

*734. கூறிய தூதரும். கொணர்ந்த ஓலையை.
'ஈறு இல் வண் புகழினாய்! இது அது' என்றனர்;
வேறு ஒரு புலமகன் விரும்பி வாங்கினான்;
மாறு அதிர் கழலினான். 'வாசி' என்றனன்.*

***கூறிய தூதரும்*** - *(அவ்வாறு இராமனது வீரச் செயலை) கூறிய தூதர்களும்;* ***கொணர்ந்த ஓலையை*** - *(தாம்) கொண்டு வந்த திருமண ஓலையைக் குறித்துக் காட்டி;* ***ஈறு இல் வண் புகழினாய்*** - *முடிவில்லாத வளமான புகழையுடையவனே!;* ***அது*** - *அந்தச் சனக மன்னன் கொடுத்த ஓலை;* ***இது*** - *இதுவாகும்;* ***என்றனர்*** - *என்று சொல்லி (அந்த ஓலையை) நீட்டினர்;* ***வேறு ஒரு புலமகன்*** - *(அவையில் ஓலை வாசிப்பதற்கு என்றுள்ள) வேறு ஓர் அறிஞனாகிய திருமந்திர ஓலை நாயகம். (அரசனது ஆணையினால்);* ***விரும்பி வாங்கினான்*** - *(மகிழ்ச்சியோடு) விருப்பத்தோடு அதை வாங்கினான்;* ***மாறு அதிர் கழலினான்*** - *ஒன்றோடு ஒன்று மாறி ஒலிக்கின்ற வீரக் கழலை யணிந்த தசரதன்;* ***வாசி என்றனன்*** - *(ஓலை நாயகத்தைப் பார்த்து) வாசிக்க என்று ஆணையிட்டான்.*

*கூறிய: இராம லக்குவர் அயோத்தியை விட்டுப் போன பின்னர் நிகழ்ந்த 1. பலை. அதிபலை ஆகிய இரு மந்திரங்களைப் பெற்றது. 2. தெய்வீக அம்புகளைப் பெற்றது. 3. தாடகையை வதம் செய்தது. 4. விசுவாமித்திரன் செய்த வேள்வியைக் காத்தது. 5. அகலிகையின் சாபம் தீர்த்தது. 6. சிவதனுசை முறித்தது ஆகிய வீரச் செயல்களைக் கூறல்.*

***735. இலை முகப் படத்து அவன் எழுதிக் காட்டிய***
***தலை மகன் சிலைத் தொழில் செவியில் சார்தலும்.***
***நிலை முக வலையங்கள் நிமிர்ந்து நீங்கிட.***
***மலை என வளர்ந்தன. வயிரத் தோள்களே.***

***இலைமுகப் படத்து*** - *பனையோலையின் முகப்பாகிய படத்தில்;* ***அவன் எழுதிக் காட்டிய*** - *அச் சனக மன்னன் எழுதிக் காண்பித்த;* ***தலைமகன் சிலைத் தொழில்*** - *(தன்) மூத்த மைந்தனாகிய இராமனது வில்லாற்றலானது;* ***செவியில் சார்தலும்*** - *(தன்) காதில் பட்டவுடனே;* ***வயிரத் தோள்கள்*** - *(தசரதனுடைய) வயிரம் போன்ற உறுதியான தோள்கள்;* ***நிலைமுக வலையங்கள்*** - *தம்மிடம் நிலை பெற்ற தோள்வளைகள்;* ***நிமிர்ந்து நீங்கிட*** - *வாய்விட்டுக் கழன்றுபோகும்படி;* ***மலை என வளர்ந்தன*** - *மலைபோலப் பூரித்தன.*

*தன் மூத்த மைந்தனான இராமனது வீரச் செயலை வேறொரு மன்னன் புகழ்ந்து எழுதியதைக் கேட்டுத் தசரதன் மகிழ்ச்சியடைந்து தோள் பூரித்தான் என்பது.*

***736. வெற்றிவேல் மன்னவன். 'தக்கன் வேள்வியில்.***
***கற்றை வார் சடை முடிக் கணிச்சி வானவன்.***
***முற்ற ஏழ் உலகையும் வென்ற மூரி வில்***
***இற்ற பேர் ஒலிகொல் அன்று இடித்தது. ஈங்கு?' என்றான்.***

***வெற்றிவேல் மன்னவன்*** - *வெற்றி பொருந்திய வேலை ஏந்திய தசரதன்;* ***கற்றை வார் சடைமுடி*** - *தொகுதியான நீண்ட சடை முடியையும்;* ***கணிச்சி வானவன்*** - *மழுப்படையையும் உடைய தேவனாகிய சிவ பெருமான்;* ***தக்கன் வேள்வியில்*** - *தக்கனது யாகத்தை அழித்த போது;* ***ஏழ் உலகையும்*** - *ஏழு உலகத்தையும்;* ***முற்றவும் வென்ற*** - *முற்றும் வெற்றிகண்ட;* ***மூரிவில்*** - *வலிய வில்லானது;* ***இற்ற*** - *முறிந்ததனால் உண்டான;* ***பேரொலிகொல்*** - *பெரிய ஓசையோ;* ***அன்று*** - *அன்றைய தினம்;* ***ஈங்கு இடித்தது*** - *இங்கே இடித்தது;* ***என்றான்*** - *என்று வியந்து கூறினான். வெற்றிவேல்- உடையவனது தன்மை உடைமைப் பொருள் மேல் ஏற்றப் பெற்றது. தக்கன் வேள்விக்கு வந்த. வானுலகில் வாழும் சிறந்த தேவர்களின் வலிமைக்கும் விஞ்சியது ஆதலின் அவ் வில்லுக்கு 'முற்ற ஏழுலகையும் வென்ற' என்ற அடைமொழி? தந்தார்.*

*தூதருக்கு அணிகலன் முதலியன வழங்குதல்*

***737. என்று உரைத்து எதிர். எதிர் இடைவிடாது. 'நேர்***
***துன்றிய கனை கழல் தூதர் கொள்க!' எனா.***
***பொன் திணி கலங்களும் தூசும் போக்கினான் -***
***குன்று என உயரிய குவவுத் தோளினான். ****

***குன்று என உயரிய*** - *மலைபோலத் திரண்ட;* ***குவவுத் தோளினான்*** - *பருத்த தோள்களையுடைய தசரதன்;* ***என்று எதிர் எதிர்*** - *(என்று வசிட்டர் முதலோர் முன்) மறுமொழிகள்;* ***உரைத்து*** - *சொல்லி;* ***நேர் துன்றிய*** - *ஒன்றோடு ஒன்று ஒத்துள்ள;* ***கனைகழல் தூதர்*** - *ஒலிக்கின்ற வீரக் கழலையணிந்த தூதர்கள்;* ***கொள்க என*** - *பெற்றுக்கொள்வார்களாக என்று;* ***பொன்திணி கலங்களும்*** - *பொன்னாலான அணிகலன்களையும்;* ***தூசும்*** - *ஆடைகளையும்;* ***இடைவிடாது போக்கினான்*** - *இடைவிடாது மேலும் மேலும் கொடுக்கச் செய்தான்.*

*தன் மைந்தனது வீரச் செயலைக் கேட்ட தசரதன் மகிழ்ச்சிப் பெருக்கால் தூதுவர்க்கு அணிகலன் முதலியவற்றைக் கொடுத்தான் என்பது.*

*தயரதன் ஆணைப்படி வள்ளுவன் மணமுரசு அறைதல்*

***738.*** **‘வானவன் குலத்து எமர் வரத்தினால் வரும்**
**வேனில் வேள் இருந்த அம் மிதிலை நோக்கி. நம்**
**சேனையும் அரசரும் செல்க. முந்து!’ எனா.**
**‘ஆனைமேல் மணமுரசு அறைக!’ என்று ஏவினான்.**

***வானவன் குலத்து*** - *சூரிய குலத்தில் தோன்றிய;* ***எமர் வரத்தினால்*** - *எம்முன்னோர்கள் செய்த புண்ணியப் பயனாக;* ***வரும்*** - *பிறந்த;* ***வேனில் வேள்*** - *மன்மதனை ஒத்த இராமன்;* ***இருந்த*** - *இருந்த;* ***அம் மிதிலை நோக்கி*** - *அந்த மிதிலை நகரை நோக்கி;* ***நம் சேனையும்*** - *நம் படைகளும்;* ***அரசரும்*** - *அரசகுமாரரும்;* ***முந்து செல்க என*** - *முன்னே செல்க என்று;* ***ஆனைமேல்*** - *யானையின் மேல் வைத்து;* ***அணிமுரசு*** - *அழகிய மண முரசு;* ***அறைக*** - *(வள்ளுவர்) முழக்கட்டும்;* ***என்று ஏவினான்*** - *என்று (தசரதன்) கட்டளையிட்டான். வானவன் - வானத்திலே உலாப் போகின்றவன் - கதிரவன். மன்மதன் உள்ள இடங்களில் எல்லாம் வசந்தனும் கூடவே இருப்பானாதலின் ‘வேனில் வேள்’ என்றார். அது போலவே இராமனைப் பிரியாமல் இலக்குவன் இருக்கும் நிலையை உணர்த்துகின்றார். மணம் முதலிய மங்கல நிகழ்ச்சிகளை வள்ளுவர் யானைமேல் முரசை வைத்து அதை முழக்கி ஊருக்கு அறிவித்தல் மரபு.*

***739.*** **வானம் பரி விரி திரைக் கடலை. வள்ளுவன்.-**
**தேம் பொழி துழாய் முடிச் செங் கண் மாலவன்.**
**ஆம் பரிசு. உலகு எலாம் அளந்துகொண்ட நாள்.**
**சாம்புவன் திரிந்தென. - திரிந்து சாற்றினான்.**

**தேம் பொழி** - தேனைச் சொரிகின்ற; **துழாய்முடி** - துழாய் மாலையணிந்த திருமுடியையும்; **செங்கண் மாலவன்** - சிவந்த கண்களையும் கொண்ட திருமால்; **ஆம் பரிசு** - (தன்) முறைமைக்கு ஏற்றவாறு; **உலகு எலாம்** - (சுவர்க்கம். மத்திமம். பாதாளம் என்ற) மூவுலகங்களையும்; **அளந்து கொண்டநாள்** - (தன் மூவடியால்) அளந்து கொண்ட காலத்தில்; **சாம்புவன்** - (அச்செய்தியை) சாம்பவான்; **திரிந்து என** - பறையறைந்து திரிந்தது போல; **வாம்பரி** - தாவிச் செல்லும் குதிரைகளாகிய; **விரிதிரைக்கடலை** - விரிந்த அலைகளையுடைய கடலுக்கு (சேனைக்கு); **வள்ளுவன்** - பறையறையும் வள்ளுவன்; **திரிந்து சாற்றினான்** - திரிந்து (முரசு அறைந்து) செய்தி தெரிவித்தான்.

வள்ளுவன் - முரசு அறைந்து செய்தி தெரிவிப்போன். மாலவன் உலகெலாம் அளந்து கொண்ட நாள் சாம்புவன் திரிந்தென வள்ளுவன் திரிந்து சேனைக் கடலுக்குக் கூறினான். தாவிச் செல்லும் குதிரைகளைக் கடல் அலைகளுக்கு ஒப்புக் கூறுதல் மரபு.

நால்வகைப் படைகளின் எழுச்சி

***740. விடை பொரு நடையினான் சேனை வெள்ளம். 'ஓர்***
***இடை இலை. உலகினில்' என்ன. ஈண்டிய;***
***கடையுக முடிவினில். எவையும் கால் பட.***
***புடை பெயர் கடல் என. எழுந்து போயதே.***

**உலகினில்** - உலகத்தில்; **ஓர் இடை** - சிறிது இடமும்; **இலை என்ன** - இல்லை என்று சொல்லுமாறு; **ஈண்டிய** - நெருங்கிய; **விடைபொரு** - காளையைப் போன்ற; **நடையினான்** - நடையுடைய தசரதன்; **சேனை வெள்ளம்** - சேனைக் கூட்டமானது; **கடையுக முடிவினில்** - உலக முடிவுக் காலத்தில்; **எவையும்** - எல்லாப் பொருள்களும்; **கால்பட** - எழும் பெருங்காற்றால் அழிந்து பட; **புடை பெயர்** - (அப்போது) கரைபுரண்டு வருகின்ற; **கடல் என** - கடலைப்போல; **எழுந்து போயது** - எழுந்து சென்றது.

பெருமிதம் பற்றிக் காளையின் நடை அரசனது நடைக்கு உவமையாயிற்று. தன்மைத் தற்குறிப்பேற்றவணி - தசரதன் சேனை யுக முடிவில் பொங்கியெழும் கடல் போல எழுந்தது என்றார்.

***741. சில் இடம் உலகு எனச் செறிந்த தேர்கள்தாம்***
***புல்லிடு சுடர் எனப் பொலிந்த. வேந்தரால்;***
***எல் இடு கதிர் மணி எறிக்கும் ஓடையால்.***
***வில் இடும் முகில் எனப் பொலிந்த. வேழமே.***

***உலகு சில் இடமென*** - உலகம் சிறிய இடத்தையுடையது என்று சொல்லுமாறு; ***செறிந்த தேர்கள் தாம்*** - நெருங்கின தேர்கள்; ***வேந்தரால்*** - (தம்மேல் ஏறியுள்ள) மன்னர்களால்; ***புல்லிடு சுடரென*** - பொருந்திய கதிரவனைப் போல; ***பொலிந்த*** - விளங்கின; ***வேழம்*** - யானைகள்; ***எல்லிடு கதிர்மணி*** - சூரியனின் கதிர்கள் போல ஒளிவிடும் இரத்தினங்கள்; ***எறிக்கும் ஓடையால்*** - இழைத்த முகபடாம் அணிந்திருப்பதால்; ***வில் இடும் முகிலென*** - வானவில் இடப்பட்ட மேகம்போல; ***பொலிந்த*** - விளங்கின.

தேர் மேல் ஏறியுள்ள மன்னவர்க்குத் தேர்மேல் விளங்கும் சூரியனும். இரத்தினங்கள் இழைத்துச் செய்யப்பட்ட நெற்றிப் பட்டம் அணிந்த யானைகளுக்கு இந்திர வில்லோடு கூடிய மேகங்களும் உவமையாகும். தேர் உதயமலையாகவும். வேந்தர்கள் சூரியர்களாகவும். யானை முகிலாகவும். ஓடை மின்னலாகவும் உவமை கொள்ளத்தக்கன.

***742. கால் விரிந்து எழு குடை. கணக்கு இல் ஓதிமம்.***
***பால் விரிந்து. இடை இடை பறப்ப போன்றன;***
***மேல் விரிந்து எழு கொடிப் படலை. விண் எலாம்***
***தோல் உரிந்து உகுவன போன்று தோன்றுமால்!***

***கால் விரிந்து*** - (அச்சேனைகளின் இடையே பிடிக்கக் கூடிய) காம்பிலிருந்து விரிந்து; ***எழுகுடை*** - எழுந்துள்ள வெண் குடைகள்; ***கணக்கு இல் ஓதிமம்*** - எண்ணில்லாத அன்னப் பறவைகள்; ***பால் விரிந்து*** - பால் போன்ற தம் வெண் சிறகுகளைப் பரப்பி; ***விண்*** - வானத்தில்; ***பறப்ப*** - பறப்பன; ***போன்றன*** - போன்றன; ***மேல் விரிந்து*** - வானத்தில் விரிந்து; ***எழு கொடிப் படலை*** - எழுகின்ற கொடிகளின் கூட்டம்; ***விண் எலாம்*** - விண் முழுவதும்; ***தோல் உரிந்து*** - தோல் உரியப் பெற்று; ***உகுவன போன்று*** - சிந்துவன போன்று; ***தோன்றும்*** - தோன்றும். சேனைகளின் இடையே பல வெண்ணிறக் குடைகள் பிடிக்கப் படுபவை. பல அன்னப் பறவைகள் தம்முடைய வெண்மையான சிறகுகளை விரித்து வானத்தில் பறந்து போவதையும். வெண்கொடி ஆடுபவை. வானம் தோலுரிக்க அவை அங்கிருந்து சிந்துவனவற்றையும் ஒத்துள்ளன என்பார். தற்குறிப்பேற்ற அணி.

***743. நுடங்கிய துகிற் கொடி நூழைக் கைம் மலைக்***
***கடம் கலுழ் சேனையை. 'கடல் இது ஆம்' என.***
***இடம் பட எங்கணும் எழுந்த வெண் முகில்.***
***தடம் புனல் பருகிடத் தாழ்வ போன்றவே.***

***நுடங்கிய துகில்கொடி*** - *(யானையின்மேல்) அசைந்து ஆடுகின்ற வெண்மையான கொடிகள்;* ***கடம் கலுழ்*** - *மத நீர் ஒழுகுகின்ற;* ***நூழைக் கைம்மலை சேனையை*** - *உள்துளையோடு கூடிய துதிக்கையையுடைய யானைப்படையை;* ***இது கடல் ஆம் என*** - *இது ஒரு கடலாம் என்று கருதி;* ***இடம்பட எங்கணும்*** - *இடம் மறையும்படி (வானத்தில்) எங்கும்;* ***எழுந்த வெண்முகில்*** - *எழுந்த வெண்மையான மேகங்கள்;* ***தடம்புனல்*** - *மிகுதியாக (கடல்) நீரை;* ***பருகிடத் தாழ்வ*** - *குடிக்க இறங்குவனவற்றை;* ***போன்ற*** - *ஒத்திருந்தன.*

*மதநீர் ஒழுகுகின்ற யானைப்படை கடலை ஒத்துள்ளது; அந்த யானைப்படை மேல் அசைந்தாடும் வெண்கொடிகள் அக்கடலின் நீரைப் பருகுமாறு வந்த வெண்மேகங்களை ஒத்துள்ளன. தன்மைத் தற்குறிப்பேற்ற அணி.*

***744. இழையிடை இள வெயில் எறிக்கும்; அவ் வெயில்.***
***தழையிடை நிழல் கெடத் தவழும்; அத் தழை.***
***மழையிடை எழில் கெட மலரும்; அம் மழை.***
***குழைவுற முழங்கிடும். குழாம் கொள் பேரியே.***

***இழை இடை*** - *(சேனையிலுள்ள மாதரும் வீரரும் அணிந்துள்ள) அணிகலன்களிலிருந்து;* ***இளவெயில் எறிக்கும்*** - *இளவெயில் வீசும்;* ***அவ் வெயில்*** - *அந்த வெயிலானது;* ***தழை இடை*** - *மயில்பீலிக் குடைகளினிடையே தோன்றும்;* ***நிழல்கெட*** - *நிழல் ஒழியும்படி;* ***தவழும்*** - *எங்கும் பரவும்;* ***அத் தழை*** - *அந்தப் பீலிக்குடைகள்;* ***மழை இடை எழில்*** - *நீரைக் குடித்த மேகங்களின் அழகு;* ***கெட மலரும்*** - *அழியும்படி விளங்கித் தோன்றும்;* ***அம்மழை குழைவு உற*** - *அம் மேகங்கள் தளர்ச்சியடையும்படி;* ***குழாம் கொள் பேரி*** - *கூட்டமான பேரிகைகள்;* ***முழங்கிடும்*** - *முழங்கும். அணிகலன்களின் இளவெயில் வீசும்;அவ்வெயில் மயில் பீலிக் குடைகளின் நிழல் அழியுமாறு அந்த நிழலில் தவழும். அப் பீலிக் குடைகள் தம் நீல நிறத்தால் மேகங்களின் அழகு கெட அங்கங்கே விளங்கித் தோன்றும்; அம் மேகங்களும் இத்தகைய இனிய பேரொலி நமக்கு இல்லையே என்று நாணிக் குழைய முரசக்கூட்டங்கள் முழங்கும் என்பது.*

***745. மன் மணிப் புரவிகள் மகளிர் ஊர்வன.***
***அன்னம் உந்திய திரை ஆறு போன்றன;***
***பொன் அணி புணர் முலைப் புரி மென் கூந்தலார்***
***மின் என. மடப் பிடி மேகம் போன்றவே.***

***மகளிர் ஊர்வன*** - *மகளிர் ஏறிச் செலுத்தக்கூடிய;* ***மணி மன் புரவிகள்*** - *கிண்கிணி மாலை பூண்ட குதிரைகள்;* ***அன்னம் உந்திய*** - *அன்னப் பறவைகளைச் சுமக்கின்ற;* ***திரை ஆறு போன்றன*** - *அலைகளையுடைய ஆறுகளை ஒத்தன;* ***பொன் அணி புணர்முலை*** - *பொன் அணிகளைப் பூண்ட நெருங்கிய தனங்களையும்;* ***புரிமென் கூந்தலார்*** - *பின்னப்பட்ட மெல்லிய கூந்தலையுமுடைய மகளிர்;* ***மின் என*** - *மின்னலைப் போலத் தோன்ற;* ***மடப்பிடி*** - *(அவர்கள் ஏறியிருந்த) இளம்பெண் யானைகள்;* ***மேகம் போன்ற*** - *மேகத்தை ஒத்தன.*

*கிங்கிணியின் ஓசை அன்னத்தின் குரலையும். குதிரைகள் அலைகளையும். மகளிர் அன்னப் பறவையையும் ஒத்துள்ளமை காணலாம். - தற்குறிப்பேற்ற அணி.*

*மகளிர் பெண்யானைகள்மேல் ஊர்தல் மரபு: களிறு ஆணாதலால் கற்பிற்கு இழுக்காதல் நோக்கியும் களிறு மதம் கொள்ளின் அதனை அடக்கியாளும் வன்மை இவர்களுக்கு இல்லையாதலானும் எனலாம்.*

*746.* **இணை எடுத்து இடை இடை**
**நெருக்க. ஏழையர்**
**துணை முலைக் குங்குமச்**
**சுவடும். ஆடவர்**
**மணி வரைப் புயத்து மென்**
**சாந்தும். மாழ்கி. மெல்**
**அணை எனப் பொலிந்தது -**
**அக் கடல் செல் ஆறுஅரோ.**

**இடை இடை** - *(அச்சேனை செல்லும்)* இடங்களில் எல்லாம்; **இணை எடுத்து** - *(கூட்ட மிகுதியால்)* ஒருவரை ஒருவர் இணைதலைப் பொருந்தி; **நெருக்க** - நெருக்குதலால்; **ஏழையர் துணைமுலை** - மகளிரின் இரு முலைகளிலும்; **குங்குமச் சுவடும்** - அணிந்த குங்குமக் குழம்பும்; **ஆடவர் மணி** - ஆண்களின் அழகிய; **வரைப் புயங்களில் சாந்தும்** - மலைபோன்ற தோள்களில் பூசிய சந்தனக் குழம்பும்; **மாழ்கி** - *(கீழே உதிருமாறு)* அழிந்து போய்; **அக்கடல் செல் ஆறு** - அந்தக் கடல் செல்லுகின்ற வழியானது; **மெல் அணை என** - *(ஆண்களும் மகளிரும் கலவி நிகழ்த்தும்)* மெல்லிய படுக்கைபோலப்; **பொலிந்தது** - பொலிவுற்றது.

*கூட்ட மிகுதியால் இடையிடையே நெருக்கம் உண்டாக. அதனால் ஒருவர்மேல் ஒருவர் உராய்தலால் சந்தனமும் குங்குமமும் உதிர்ந்தன. அவ்வாறு உதிர்ந்த அக்குழம்புகள் கலந்து செல்லும் வழி படுக்கைபோல விளங்கிற்று என்பது. - தன்மைத் தற்குறிப்பேற்ற அணி.*

*மகளிர் ஆடவர் திரள்*

*747.* **முத்தினால். முழு நிலா எறிக்கும்; மொய்ம் மணிப்**
**பத்தியால். இள வெயில் பரப்பும்;- பாகினும்**
**தித்தியா நின்ற சொல் சிவந்த வாய்ச்சியர்**
**உத்தராசங்கம் இட்டு ஒளிக்கும் கூற்றமே.**

***பாகினும் தித்தியாநின்ற*** - *வெல்லப் பாகைக் காட்டிலும் தித்திக்கும்;* ***சொல் சிவந்த வாய்ச்சியர்*** - *சொல்லையும். சிவந்த வாயையும் உடைய பெண்களின்;* ***உத்தராசங்கம் இட்டு*** - *மேலாடையிட்டு;* ***ஒளிக்கும்*** - *மறைத்து வைத்துள்ள;* ***கூற்றம்*** - *இயமனைப் போன்ற வருத்தும் தனங்கள்;* ***முத்தினால்*** - *(தாம் அணிந்துள்ள) முத்து மாலைகளால்;* ***முழு நிலவு எறிக்கும்*** - *நிறை மதியின் ஒளியை வீசும்;* ***மொய்ம் மணி பத்தியால்*** - *நெருங்கிய இரத்தின மணிகளின் வரிசையால்;* ***இளவெயில் பரப்பும்*** - *இளவெயிலைப் பரவ விடும்.*

*தனங்களைக் கூற்றம் என்று உருவகப்படுத்தினார்.*

*தனங்களில் அணிந்த முத்துமணி வடங்களால் நிலவு. வெயில் என்ற இரண்டும் ஒரே காலத்தில் தோன்றும் என்ற நயம் கருதத் தக்கது.*

*உத்தராசங்கம் - மேலாடை (வடசொல்). கூற்றம் உயிர்களை உடலிலிருந்து பிரிக்க நோய் முதலியவற்றில் மறைந்துநின்று பிரித்தல் போல இக்கூற்றமான கொங்கை மேலாடையில் மறைந்து நின்று வருத்துகின்றது என்பது.*

*748.* ***வில்லினர்; வாளினர்; வெறித்த குஞ்சியர்;***
***கல்லினைப் பழித்து உயர் கனகத் தோளினர்;***
***வல்லியின் மருங்கினர் மருங்கு. மாப் பிடி***
***புல்லிய களிறு என. மைந்தர் போயினார்.***

***வெறித்த குஞ்சியர்*** - *(மலர்மாலை முதலியவற்றால்) மணம் பொருந்திய தலைமயிரினையுடையவரும்;* ***கல்லினைப் பழித்து*** - *மலையைத் தமன்கு ஒப்பாகாது என இகழ்ந்து;* ***உயர் கனகத் தோளினர்*** - *மேம்பட்ட பொன்னணிகளைப் பூண்ட தோள்களையுடையவருமாகிய;* ***மைந்தர்*** - *ஆடவர்;* ***வில்லினர்*** - *வில்லை ஏந்தியவரும்;* ***வாளினர்*** - *வாளினை ஏந்தியவருமாகி;* ***மாப் பிடி புல்லிய*** - *பெருமை மிக்க பெண் யானையைத் தழுவிய;* ***களிறென*** *-ஆண்யானையைப் போல;* ***வல்லியின் மருங்கினர்*** - *கொடிபோன்ற இடையை யுடையவர்களாகிய தத்தம் மனைவியரின்;* ***மருங்கு போயினார்*** - *பக்கத்தில் சென்றனர்.*

*மகளிரின் படைக்குப் பாதுகாவலாக அவர்களை யடுத்து வில்லும் வாளும் ஏந்திய மைந்தர் சென்றார் என்பது கருத்து.*

*மகளிரின் பக்கத்தே செல்லும் ஆடவர்க்குப் பெண்யானையைப் புல்லிய களிறு உவமையாயிற்று. வில்லினர் வாளினர் - முற்றெச்சங்கள்*

*749.* ***மன்றல் அம் புது மலர் மழையில் சூழ்ந்தெனத்***
***துன்று இருங் கூந்தலார் முகங்கள் தோன்றலால்.***
***ஒன்று அலா முழுமதி ஊரும் மானம்போல்.***
***சென்றன தரள வான் சிவிகை ஈட்டமே.***

***மன்றல் அம் புதுமலர்*** - *நல்ல மணத்தோடு கூடிய அழகிய புதுமலர்கள்;* ***மழையிற் சூழ்ந்தென*** - *மேகத்தில் சூழ்ந்தாற் போல;* ***துன்று*** - *(மலர்கள்) நெருங்கிய;* ***இரு கூந்தலார்*** - *மிக்க கூந்தலையுடைய பெண்களின்;* ***முகங்கள் தோன்றலால்*** - *முகங்கள் மட்டும் காணப்படுவதால்;* ***ஒன்று அலா முழுமதி*** - *ஒன்று அல்லாத மிகப் பலவாகிய நிறைமதிகள்;* ***ஊரும்*** - *ஏறிச் செல்லுகின்ற;* ***மானம் போல்*** - *விமானங்களைப் போல;* ***அவர் சிவிகை ஈட்டம்*** - *மகளிர் ஏறிச் செல்லுகின்ற பல்லக்குக் கூட்டங்கள்;* ***சென்றன*** - *சென்றன.*

*கூந்தல்மேல் மலர் சூழ்ந்திருப்பது மேகத்தில் மலர் சூழ்ந்திருப்பதுபோலும் என்றார்.*

*பல்லக்குகளில் பெண்கள் தம் முகம் மட்டும் தெரியுமாறு முக்காடிட்டு ஊர்ந்து செல்வதால் அச் சிவிகைகள் பல நிறைமதிகள் ஏறிச் செல்லும் விமானங்களைப் போலும் என்றார். - தற்குறிப்பேற்ற அணி. மழை - ஆகுபெயர். மானம் - விமானம் என்பதன் முதற்குறை.*

*யானை குதிரைகளின் செலவு*

***750. மொய் திரைக் கடல் என முழங்கு மூக்குடைக்***
***கைகளின். திசை நிலைக் களிற்றை ஆய்வன. -***
***மையல் உற்று. இழி மத மழை அறாமையால்.***
***தொய்யலைக் கடந்தில. சூழி யானையே.***

***சூழியானை*** - *முகபடாத்தை அணிந்த யானைகள்;* ***இழி மதமழை*** - *ஒழுகுகின்ற மதப்பெருக்கு;* ***அருமையால்*** - *எப்பொழுதும் நீங்காததால்;* ***தொய்யலை*** - *(மதநீரால் தோன்றிய) சேற்றை;* ***கடந்தில*** - *கடந்து கரையேற மாட்டாது;* ***மையல் உற்று*** - *மயக்கமுற்று;* ***மொய்திரைக் கடலென*** - *நெருங்கிய அலைகளையுடைய கடல்போல;* ***முழங்கும் மூக்குஉடை*** - *முழங்கும் மூக்கோடு கூடிய;* ***கைகளின்*** - *(தம்) கைகளினாலே;* ***திசை நிலைக் களிற்றை*** - *எட்டுத்திக்கு யானைகளை;* ***ஆய்வன*** - *துழாவி ஆராய்கின்றன.*

*(வி.ரை) யானைகள் சேற்றில் விழுந்து கரையேற மாட்டாமல் கடல் போல ஒலித்துக் கைகளால் திசையானைகளைத் துழாவித் தேடின என்பது. தன்மைத் தற்குறிப்பேற்ற அணி. தொய்யல் - சேறு நிரம்பிய பள்ளம்.*

***751. சூருடை நிலை என. தோய்ந்தும் தோய்கிலா***
***வாருடை வன முலை மகளிர் சிந்தைபோல்.***
***தாரொடும் சதியொடும் தாவும் ஆயினும்.***
***பாரிடை மிதிக்கில - பரியின் பந்தியே.***

***பரியின் பந்தி*** - *குதிரைக் கூட்டங்கள்;* ***சூர் உடை நிலை என*** - *தெய்வத்தின் தன்மை போலவும்;* ***தோய்ந்தும் தோய்கிலா*** - *வெளியில் அன்பர்போலக் காட்டியும் (அகத்தில்) அன்பு கொள்ளாத;* ***வார் உடை வனமுலை*** - *கச்சு அணிந்த அழகிய தனங்களையுடைய;* ***மகளிர் சிந்தைபோல்*** - *(விலை) மகளிர் மனம் போலவும்;* ***தாரொடும் சதியொடும்*** - *கழுத்தில் அணிந்துள்ள கிண்கிணி மாலையின் ஒலியோடும்;* ***தாவுமாயினும்*** - *அடிவைத்துத் தாவிப் பாயுமாயினும்;* ***பாரிடை மிதிக்கில*** - *பூமியில் பொருந்தாமல் சென்றன.*

*விலைமகளிரின் சிந்தையானது பெற்ற பொருளளவிற்கு ஏற்பத் தாவிக் கொண்டே இருப்பதுபோலக் குதிரைகளும் ஒரு நிலையில் நில்லாமல் தாவின என்பது. தார் (ஒலி) - ஆகுபெயர். சதி - ஒத்த அடி வைப்பினால் உண்டாகும் ஓசை - ஆகுபெயர்.*

*குதிரைகள் பூமியின்மேல் செல்லும்போது அவற்றின் பாதங்கள் பூமியிலே படாமல் இருப்பதற்கு தேவதைகளின் பாதம் பூமியில் பதியாமல் இருப்பதையும். வேசியரின் மனம் ஒருவர்மேல் அன்பு கொள்ளாமலே செல்வதையும் உவமையாக்கினார்.*

*ஊடிய மகளிரின் போக்கு*

***752. ஊடிய மனத்தினர். உறாத நோக்கினர்.***
***நீடிய உயிர்ப்பினர். நெரிந்த நெற்றியர்;***
***தோடு அவிழ் கோதையும் துறந்த கூந்தலர்;***
***ஆடவர் உயிர் என அருகு போயினார்.***

***ஊடிய மனத்தினர்*** - *(தம் கணவர்மீது) பிணக்கு கொண்ட மகளிரும்;* ***உறாத நோக்கினர்*** - *(தம் கணவர்மீது) கண்பார்வையைச் செலுத்தாதவர்களும்;* ***நீடிய உயிர்ப்பினர்*** - *பெருமூச்சு விடுபவர்களும்;* ***நெரிந்த நெற்றியர்*** - *(கோபத்தால்) புருவம் நெரிந்த நெற்றியையுடையவர்களும்;* ***தோடு அவிழ் கோதையும்*** - *இதழ் விரிந்த மலர் மாலையையும்;* ***துறந்த கூந்தலர்*** - *துறந்த கூந்தலம் உடையவர்களாகிய மகளிர்;* ***ஆடவர் உயிரென*** - *ஆண்களது உயிர் பெண்ணுருக் கொண்டதுபோல என்று சொல்லுமாறு;* ***அருகு*** - *(அந்த ஆடவரின்) பக்கத்திலே;* ***போயினார்*** - *சென்றார்கள்.*

*முன்பு ஊடின பெண்கள் இராமனது திருமணச் செய்தி கேட்டவுடன். அவ் ஊடல் நீங்கித் தத்தம் கணவரோடு அவர்களின் உயிர்போலச் சென்றனர் என்பது. தன்மை நவிற்சியணி.*

***753. மாறு எனத் தடங்களைப் பொருது. மா மரம்***
***ஊறு பட்டு இடையிடை ஒடித்து. சாய்ந்து. உராய்.***
***ஆறு எனச் சென்றன - அருவி பாய் கவுள்.***
***தாறு எனக் கனல் உமிழ் தறுகண் யானையே.***

**அருவி பாய் கவுள்** - அருவிபோல மதநீர் பாயும் கன்னத்தையும்; **தாறு எனக் கனல் உமிழ்** - அங்குசம் என்ற சொல்லைக் கேட்டதும் தீயைக் கக்குகின்ற; **தறுகண் யானை** - அஞ்சாமையுடைய யானைகள்; **மாறு என** - தமக்குப் பகையென்று கருதி; **தடங்களைப் பொருது** - இரு கரைகளை மோதி இடித்து; **மாமரம்** - பெரிய மரங்களை; **ஊறு பட்டு இடைஇடை** - முடியும்படி நடுநடுவே; **ஒடித்து** - ஒடித்தும்; **சாய்த்து** - கீழே முறித்துச் சாய்த்தும்; **உராய்** - (அம்மரங்களின் மேல்) உரசியும்; **ஆறு என** - ஓர் ஆறு செல்வது போல; **சென்றன** - போயின.

கரைகளோடு மோதுதல். மரங்களை ஒடித்தல். சாய்த்துத் தள்ளுதல். உராய்தல் - இவை யானைக்கும். ஆற்றுக்கும் ஒத்துள்ளன. அதனால் யானை செல்வது ஆறு செல்வது போன்றது என்றார்.

பொருது. ஒடித்து. சாய்த்து. உராய் என்னும் வினையெச்சங்கள் யானைக்கும் ஆற்றுக்கும் பொருள்படுமாறு பொதுவாக அமைந்தன. தாறு - குத்துக் கோல். அங்குசம்.

படைப் பெருக்கம்

***754. உழுந்து இட இடம் இலை***
***உலகம் எங்கணும்.***
***அழுந்திய உயிர்க்கு எலாம்***
***அருட் கொம்பு ஆயினான்***
***எழுந்திலன்; எழுந்து இடைப்***
***படரும் சேனையின்***
***கொழுந்து போய்க் கொடி மதில்***
***மிதிலை கூடிற்றே!***

**அழுந்திய உயிர்க்கு எலாம்** - (துன்பத்தில்) ஆழ்ந்துள்ள உயிர்களுக்கு எல்லாம்; **அருட் கொம்பு ஆயினான்** - அருள் புரியும் கொழு கொழும்பான தசரதன்; **எழுந்திலன்** - (இன்னும் அயோத்தியை விட்டு) எழுந்து புறப்படவில்லை; **உலகம் எங்கணும்** - (அப்படி இருக்கையில்) உலகத்தில் எங்கும்; **உழுந்திட இடம் இலை** - ஓர் உழுந்துகூடப்போட இடமில்லை (என்று சொல்லும்படி); **எழுந்து** - (அயோத்தியிலிருந்து) புறப்பட்டு; **இடை** - (அயோத்தி - மிதிலை) இடையிலே; **படரும்** - செல்லுகின்ற; **சேனையின் கொழுந்து** - படையின் முன்னணி; **போய்** - சென்று; **கொடிமதில் மிதிலை** - கொடிகள் அசையும் மதில் சூழ்ந்த மிதிலை நகரை; **கூடிற்று** - அடைந்தது.

*புறப்படத் தொடங்கிய தசரதனது முன்னணிச் சேனை மிதிலை நகரை அடைந்தது. உயர்வு நவிற்சியணி.*

*சேனை முழுவதும் ஒரே காலத்தில் எழுந்தால் அயோத்தியிலிருந்து மிதிலை வரையிலும் நின்றாலும் நிற்க இடம் போதாது என்றார்.*

*உழுந்திட இடமிலை என்றது சேனையின் நெருக்கம் கூறியது. சேனையின் கொழுந்து - முன்சேனை.*

*வண்டியில் வயங்கிய மகளிர்*

***755. கண்டவர் மனங்கள் கைகோப்பக் காதலின்.***
***வண்டு இமிர் கோதையர் வதன ராசியால்.***
***பண் திகழ் பண்டிகள் பரிசின் செல்வன.***
***புண்டரிகத் தடம் போவ போன்றவே.***

***கண்டவர் மனங்கள்*** *- (தம்மைப்) பார்த்த ஆடவரின் மனம்;* ***காதலின் கைகோப்ப*** *- காதலால் கலக்க;* ***பண்திகழ் பரிசின்*** *- பூட்டு விளங்குகின்ற தன்மையோடு;* ***செல்வன*** *- செல்லுகின்ற;* ***பண்டிகள்*** *- வண்டிகள்;* ***வண்டு இமிர் கோதையர்*** *- வண்டுகள் ஒலிக்கின்ற கூந்தலையுடைய மகளிரின்;* ***வதன ராசியால்*** *- முகங்களது கூட்டத்தால்;* ***புண்டரீகம் தடம் போவ*** *- தாமரை மலர்ந்த தடாகங்கள் செல்வதை;* ***போன்ற*** *- ஒத்தன வண்டியில் செல்லும் மகளிரின் முகங்கள் பூத்த தாமரைகள் போல் விளங்கின. அதனால் வண்டி செல்வது தாமரைத் தடாகமே போவது போன்றது என்றார். தற்குறிப்பேற்ற அணி..*

***756. பாண்டிலின் வைத்த ஓர் பாவைதன்னொடும்***
***ஈண்டிய அன்பினோடு ஏகுவான். இடைக்***
***காண்டலும். நோக்கிய கடைக்கண் அஞ்சனம்.***
***ஆண்தகைக்கு இனியது ஓர் அமுதம் ஆயதே!***

***பாண்டிலின் வைத்த*** *- வண்டியில் ஏற்றப்பட்ட;* ***ஓர் பாவை*** *- ஒரு பெண்;* ***ஈண்டிய அன்பினோடு*** *- நெருக்கமான அன்பு கொண்டவனாகி;* ***தன்னொடும் ஏகுவான்*** *- தன்னோடு ஓடி வருகின்ற இளையவனை;* ***இடை காண்டலும்*** *- இடை வழியிலே தன் பார்வையைச் செலுத்தவும்;* ***நோக்கிய*** *- (அவனை) பார்த்த;* ***கடைக்கண்*** *- அந்தக் கடைக்கண்ணினது;* ***அஞ்சனம்*** *- மையானது;* ***ஆண் தகைக்கு*** *- (அப் பெண்ணால் பார்க்கப் பெற்ற) அந்த ஆடவனுக்கு;* ***இனியது*** *- இனிமையான;* ***ஓர் அமுதம்*** *- சிறந்த அமுதம்;* ***ஆயது*** *- ஆயிற்று.*

*ஓர் ஆண்மகன் ஒருத்தியை வண்டியில் ஏற்றிவிட்டு அதன்பின்னாலே ஓடிவருகிறான்; அவன் மேல் அவள் தன் கடைக்கண் பார்வையைச் செலுத்துகின்றாள்; அவன் அப் பார்வையைக் கண்டது அவனுக்கு அமுதத்தை உண்டதுபோன்று இருந்தது என்றார்.*

*ஓர் ஆடவன் நிலை*

***757. பிள்ளை மான் நோக்கியைப் பிரிந்து போகின்றான்.***
***அள்ளல் நீர் மருத வைப்புஅதனில். அன்னம்ஆம்***
***புள்ளும் மென் தாமரைப் பூவும் நோக்கினான்.***
***உள்ளமும் தானும் நின்று ஊசலாடினான்.***

***பிள்ளை மான் நோக்கியை*** *- இளைய மான் போன்ற கண்களைக் கொண்ட காதலியைப்;* ***பிரிந்து போகின்றான்*** *- பிரிந்து செல்லுகின்ற ஓர் ஆடவன்;* ***அள்ளல்நீர்*** *- சேரும் நீரும் நிறைந்த;* ***மருத வைப்பு அதனில்*** *- மருத நிலத்தில் (வயல்);* ***அன்னமாம் புள்ளும்*** *- அன்னப் பறவையையும்;* ***மென்தாமரைப் பூவும்*** *- மெல்லிய தாமரைமலர்களையும்;* ***நோக்கினான்*** *- பார்த்து (தன் மனைவியின் நடையும். அடிகளும் நினைவுக்குவர) ;* ***உள்ளமும் தானும்*** *- மனமும் தானுமாக;* ***நின்று*** *- தனியாக நின்று;* ***ஊசல் ஆடினான்;- ஊஞ்சல் போலத் தடுமாறினான்.***

*தாமரைப் பூவையும் அன்னத்தையும் ஓர் ஆடவன் வயலிலே கண்டதும் தன் மனைவியின் அடிகளும். நடையழகும் நினைவிற்கு வந்தன என்பது. அவளை அவன் பிரிந்தமையால் அவற்றைக் காணமுடியவில்லையே என்று வருந்தினான். தானையின் செலவுக்காட்சி*

***758. அம் கண் ஞாலத்து அரசு மிடைந்து. அவர்***
***பொங்கு வெண்குடை சாமரை போர்த்தலால்.***
***கங்கை யாறு கடுத்தது - கார் எனச்***
***சங்கு. பேரி. முழங்கிய தானையே.***

***சங்கு பேரி*** *- சங்குகளும் பேரிகைகளும்;* ***கார் என முழங்கிய*** *- மேகம் முழங்குவது போல முழங்கிய;* ***தானை*** *- அச்சேனையானது;* ***பொங்கு வெண்குடை*** *- விளங்கும் வெண்ணிறக் குடைகளும்;* ***சாமரை*** *- வெண்சாமரங்களும்;* ***போர்த்தலால்*** *- நிரம்பியிருப்பதால்;* ***கங்கை ஆறு*** *- கங்கா நதியை;* ***கடுத்தது*** *- ஒத்தது;* ***அம்கண்*** *- அழகிய இடமுள்ள;* ***ஞாலத்து அரசு*** *- நிலவுலகில் அரச சின்னங்கள்;* ***மிடைந்த*** *- நெருங்கின.*

*சங்கும் பேரிகைகளும் முழங்குகின்ற அந்தச் சேனையில் வெண்குடைகளும் வெண்சாமரங்களும் நெருங்கி எங்கும் வெண்ணிறத்தோடு காட்சியளித்தமையால் அச்சேனை கங்கையாறு போலத் தோன்றிற்று என்பது.*

***759. அமரர் அம் சொல் அணங்கு அனையார் உயிர்
கவரும் கூர் நுதிக் கண் எனும் காலவேல்.
குமரர் நெஞ்சு குளிப்ப வழங்கலால்.
சமர பூமியும் ஒத்தது - தானையே.***

***தானை*** - *அந்தச் சேனையானது;* ***அம்சொல் அமரர் அணங்கு*** - *இனிய மொழி பேசுபவரும். தெய்வப் பெண்ணை;* ***அனையார்*** - *ஒத்தவருமாகிய மகளிர்;* ***உயிர் கவரும்*** - *(தமக்கு இலக்கானவரின்) உயிரைக் கவரவல்ல;* ***கூர் நுதிக்கண் எனும்*** - *கூரிய நுனியோடு கூடிய கண்கள் என்று சொல்லப்படுகின்ற;* ***காலன்வேல்*** - *இயமனுடைய வேற்படையை;* ***குமரர் நெஞ்சு*** - *காளையர் நெஞ்சில்;* ***குளிப்ப வழங்கலால்*** - *தைக்கும்படி செலுத்துவதால்;* ***சமர பூமியும்*** - *போர்க்களத்தையும்;* ***ஒத்தது*** - *ஒத்துள்ளது.*

*போர்க்களம் வீரர் நெஞ்சு தைக்க வேல் வழங்குவது போலத் திருமணத்திற்காகச் செல்லும் சேனையில் உள்ள பெண்களின் கண் என்று சொல்லக்கூடிய கூற்றுவன் வேல் காளையர் நெஞ்சில் பதியச் செலுத்துவதால் தானை போர்க்களமாயிற்று என்பது - அவநுதியணி. 28*

***760. தோள் மிடைந்தன. தூணம் மிடைந்தென;
வாள் மிடைந்தன. வான்மின் மிடைந்தென;
தாள் மிடைந்தன. தம்மி மிடைந்தென;
ஆள் மிடைந்தன. ஆளி மிடைந்தென;***

***தூணம்*** - *கல்தூண்கள்;* ***மிடைந்து என*** - *நெருங்கினாற் போல;* ***தோள் மிடைந்தன*** - *(வீரர்களின்) தோள்கள் நெருங்கின;* ***வான்மின்*** - *வானத்து மின்னல்கள்;* ***மிடைந்து என*** - *நெருங்கியிருந்தாற் போல;* ***வாள் மிடைந்தன*** - *(அவர்களின்) வாட்படைகள் நெருங்கின;* ***தம்மி மிடைந்து என*** - *தாமரைமலர் பின்னிய போல;* ***தாள் மிடைந்தன*** - *பாதம் நெருங்கின;* ***ஆளி மிடைந்து என*** - *யாளிகள் நெருங்கினாற் போல;* ***ஆள் மிடைந்தன*** - *காலாட் படைகள் நெருங்கின.*

*வீரர்கள் ஒருவரோடு ஒருவர் கைகலந்தாற் போல அவர்கள் பாதங்களும் நெருங்கின. உவமையணியும். சொற்பொருள் பின்வரு நிலையணியும் சேர்ந்து அமைந்துள்ளன. தூணம் - தூண் (அம் - சாரியை)*

*காதல் நாடகம்*

***761. வார் குலாம் முலை வைத்த கண் வாங்கிடப்
பேர்கிலாது பிறங்கு முகத்தினான்
தேர்கிலான். நெறி; அந்தரில் சென்று. ஒரு
மூரி மா மத யானையை முட்டினான்.***

***வார்குலாம் முலை*** - *(ஒரு பெண்ணின்) கச்சணிந்த தனங்களில்;* ***வைத்த கண்*** - *பதித்த கண்களை;* ***வாங்கிடப் பேர்கிலாது*** - *(அவற்றை) விட்டு வாங்காமல்;* ***பிறங்கு*** - *விளங்கும்;* ***முகத்தினான்*** - *முகத்தையுடைய ஒருவன்;* ***நெறி தேர்கிலான்*** - *(தான் செல்லும்) வழி அறிய முடியாதவனாய்;* ***அந்தரில் சென்று*** - *குருடர் போலச் சென்று;* ***ஒரு மூரி மா மதம்*** - *ஒப்பற்ற வலிய பெரிய மதமுள்ள;* ***யானையை*** - *யானையின் மேல்;* ***முட்டினான்*** - *முட்டிக் கொண்டான்.*

*மகளிர் தனங்களில் அழுந்திய தன் கண்ணை மீட்க முடியாத ஒருவன் போகும்வழியில் ஒரு மத யானைமீது மோதிக் கொண்டான் என்பது. வாங்கிட - செய்து என் எச்சம் 'செய' எனத் திரிந்தது. காமத்தால் கண் கெடுதல் இயல்பாதலின் அந்தரில் சென்று என இருபக்கமும் பொருந்திய உவமையைத் தந்தார்.*

***762. சுழி கொள் வாம் பரி துள்ள. ஒர் தோகையாள்***
***வழுவி வீழலுற்றாளை. ஒர் வள்ளல்தான்.***
***எழுவின் நீள் புயத்தால் எடுத்து ஏந்தினான்;***
***தழுவி நின்று ஒழியான்; தரைமேல் வையான்.***

***சுழிகொள்*** - *நற்சுழிகளையுடைய;* ***வாம்பரி*** - *தாவும் குதிரையானது;* ***துள்ள*** - *துள்ளிப் பாய;* ***ஓர் தோகையாள்*** - *(அஞ்சிய) மயிலைப் போன்ற சாயலையுடையவளாகி;* ***வழுவி வீழலுற் றாளை*** - *(குதிரையிலிருந்து நழுவி விழுந்தவளை;* ***ஓர் வள்ளல் தான்*** - *இரக்கப் பண்புள்ள ஒரு வீரன்;* ***எழுவின்*** - *கணைய மரம் போன்ற;* ***நீள் புயத்தால்*** - *நீண்ட கையால்;* ***எடுத்து ஏந்தினான்*** - *வாரி எடுத்துத் தாங்கியவனாக;* ***தரைமேல் வையான்*** - *தரைமேல் வையாதவனாய்;* ***தழுவி நின்று ஒழியான்*** - *(அவளை) தழுவியபடியே நின்றுவிட்டான்.*

*குதிரை துள்ளிப் பாய. அதன்மேல் இருந்த ஒருத்தி தவறிக் கீழே விழ அப்போது பக்கத்திலிருந்த வீரன் அவளைத் தன் கைகளால் தழுவிக் கொண்டு நின்றான். அவளை நிலத்தின்மேல் விடவில்லை என்பது.*

***763. துணைத்த தாமரை நோவத் தொடர்ந்து. அடர்***
***கணைக் கருங் கணினாளை ஒர் காளைதான்.***
***'பணைத்த வெம் முலைப் பாய் மத யானையை***
***அணைக்க. நங்கைக்கு. அகல் இடம் இல்' என்றான்.***

***துணைத்த தாமரை*** - *இரண்டான தாமரை போன்ற கால்கள்;* ***நோவ*** - *வருந்தும்படி;* ***தொடர்ந்து*** - *தொடர்ந்து நடந்து வந்து;* ***அடர்*** - *(தன்னை) வருத்துகின்ற;* ***கணைக் கருங்கணினாளை*** - *அம்பைப் போன்று கூரிய கருங்கண்களையுடைய ஒரு பெண்ணைப் (பார்த்து);* ***ஓர் காளை*** - *ஒரு வீரன்;* ***நங்கைக்கு*** - *இந்தப் பெண்ணின்;* ***பணைத்த வெம்முலை*** - *பருத்த விரும்பத்தக்க முலைகளாகிய;* ***மதம் பாய் யானையை*** - *மதநீர் ஒழுகும் யானையை;* ***அணைக்க*** - *தழுவிக் கொள்ள;* ***அகல் இடம்*** - *(மார்பாகிய) விரிந்த இடம்;* ***இல் என்றான்*** - *இல்லை என்று கூறினான்.*

*(வி.ரை)* *ஒருவனது மார்பில் அடங்காதவாறு இப் பெண்ணின் தனங்கள் பருத்துள்ளன என்பது. கணைக் கணினாள் - உவமைத் தொகை - உருவக அணி.*

***764. சுழியும் குஞ்சிமிசைச் சுரும்பு ஆர்த்திட.***
***பொழியும் மா மத யானையின் போகின்றான்.***
***கழிய கூரிய என்று ஒரு காரிகை***
***விழியை நோக்கி. தன் வேலையும் நோக்கினான்.***

***சுழியும் குஞ்சிமிசை*** *- சுருண்டுள்ள (தன்) தலைமயிர் மேல்;* ***சுரும்பு*** *- வண்டுகள்;* ***ஆர்த்திட*** *- ஆரவாரிக்க;* ***மாமதம் பொழியும்*** *- மிக்க மதநீரைப் பொழிகின்ற;* ***யானையின்*** *- யானையைப் போல;* ***போகின்றான்*** *- செல்கின்ற ஒருவன்;* ***ஒரு காரிகை விழியை*** *- ஒரு பெண்ணின் விழிகளை;* ***கழிய கூரிய என்று நோக்கி*** *- மிகக்கூர்மையானவை என்று பார்த்து;* ***தன் வேலையும்*** *- (கண் போல இவ்வேற்படை கூர்மையானதா என்று) தன் வேற்படையையும்;* ***நோக்கினான்*** *- பார்த்தான். வீரன் கையில் பிடிக்கும் வேலைக் காட்டிலும் அந்தப் பெண்ணின் கண்கள் மிகக் கூர்மையானவை என்பது. சுழிதல்: சுழிசுழியாகச் சுருண்டிருத்தல். உயிரின் பாய்ந்து துளைக்கும் இயல்புடைய கண்களைவிட உடலில் மாத்திரம் பாய்ந்து துளைத்துச் செல்லும் வேல் இழிந்தது என்று அவ்வீரன் கருதினான்.*

***765. தரங்க வார் குழல் தாமரைச் சீறடிக்***
***கருங் கண் வாள் உடையாளை. ஒர் காளைதான்.***
***'நெருங்கு பூண் முலை நீள் வளைத் தோளினீர்!***
***மருங்குல் எங்கு மறந்தது நீர்' என்றான்.***

***தரங்க வார்குழல்*** *- அலைபோன்று நீண்ட கூந்தலையும்;* ***தாமரைச் சீறடி*** *- தாமரை போன்ற சிறிய அடிகளையும்;* ***வாள் கருங்கண்*** *- வாள் போன்ற கரிய கண்களையும்;* ***உடையாளை*** *- உடைய ஒரு பெண்ணை;* ***ஒர் காளை*** *- ஒரு வீரன்;* ***நெருங்கு பூண் முலை*** *- அணிகள் பூண்ட நெருங்கிய முலைகளையும்;* ***நீள்வளைத் தோளினீர்*** *- வளையல்களையணிந்த நீண்ட தோள்களையும் உடையவரே;* ***மருங்குல்*** *- (நீங்கள்) உமது இடையை;* ***எங்கு*** *- எந்த இடத்தில்;* ***மறந்தது*** *- மறந்து வைத்து விட்டீர்கள்;* ***என்றான்*** *- என்று கேட்டான்.*

*அந்த மங்கையின் இடை கண்ணுக்குப் புலனாகாதவாறு மிக நுண்ணியதாக இருந்தது. அப்பெண்ணோடு உரையாட விரும்பியே அந்த இளைஞன் இவ்வாறு வினாவினான்.*

***766. கூற்றம் போலும் கொலைக் கணினால் அன்றி.***
***மாற்றம் பேசுகிலாளை. ஒர் மைந்தன்தான்.***
***'ஆற்று நீரிடை. அம் கைகளால் எடுத்து***
***ஏற்றுவார் உமை. யாவர் கொலோ?' என்றான்.***

**கூற்றம் போலும்** - இராமனைப் போல; **கொலை** - கொல்லும் தன்மையுள்ள; **கணினால் அன்றி** - கண்களால் அல்லாமல்; **மாற்றம் பேசுகிலாளை** - (வாய் திறந்து) மறுமொழி பேசாத ஒரு பெண்ணை (பார்த்து); **ஓர் மைந்தன்** - ஒரு காளை; **ஆற்று நீரிடை** - (வழியிலே) ஆற்றின் நீரிலே; **உமை** - உம்மை; **அம் கைகளால் எடுத்து** - அழகிய கைகளால் தூக்கி எடுத்து; **ஏற்றுவார்** - (கரை) ஏற்றவல்லவர்; **யாவர் கொல்** - யார்தாமோ?; **என்றான்** - என்று வினவினான்.

ஆற்றைக் கடக்கும்போது உம்மைக் கரை சேர்க்க ஆடவன் வேண்டுமே! அப்போது வாய் திறந்து கூப்பிட்டால் தானே அது முடியும். இந்த மவுன விரதம் அப்போது கலையாதோ' என்று வினவுகின்றான். 'கண்ணினா லன்றி மாற்றம் பேசுகிலாளை' - 'கண்ணொடு கண்ணினை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள். என்ன பயனும் இல' - குறள் 1100. 35

ஒட்டகம் சென்ற பான்மை

**767. தள்ள அரும் பரம் தாங்கிய ஒட்டகம்.**
**தெள்ளு தேம் குழை யாவையும் தின்கில;**
**உள்ளம் என்னத் தம் வாயும் உலர்ந்தன.**
**கள் உண் மாந்தரின் கைப்பன தேடியே.**

**தள்ள அரு** - இறக்கி வைக்கமுடியாத; **பதம்** - பெரிய சுமையை; **தாங்கிய ஒட்டகம்** - சுமந்து சென்ற ஒட்டகம்; **தெள்ளு தேம் குழை** - தெளிந்த இனிய தளிர்கள்; **யாவையும்** - எவற்றையும்; **தின்கில** - தின்னாமல்; **கைப்பன தேடி** - கசக்கும் வேப்பந்தழை முதலியவற்றைத் தேடி; **கள் உண் மாந்தரில்** - கள்ளைக் குடிக்கும் மக்களைப் போல; **உள்ளம் என்ன** - (தம்) நெஞ்சு உலர்ந்தது போல; **தம் வாயும் உலர்ந்தன** - வாயும் உலர்ந்தன.

கட் குடியர் பால் முதலிய இனிய சுவையான பொருள்கள் பல இருப்பினும் அவற்றை விரும்பாது கள்ளைத் தேடி அலைவது போல. இன்சுவைத் தளிர் பல இருப்பினும் அவற்றை விரும்பாது ஒட்டகம் வேப்பந்தழையையே நாடி அலைந்தது; வாயும் நெஞ்சும் உலர்ந்தது. 36

பப்பரர் பாரம் சுமந்து செல்லுதல்

**768. அரத்த நோக்கினர். அல் திரள் மேனியர்.**
**பரித்த காவினர். பப்பரர் ஏகினார் -**
**திருத்து கூடத்தைத் திண் கணையத்தொடும்**
**எருத்தின் ஏந்திய மால் களிறு என்னவே.**

***அரத்த நோக்கினர்*** - *சிவந்த கண்களையுடையவர்களும்;* ***அல் திரள் மேனியர்*** - *இருள் சேர்ந்தாற் போன்ற மேனியை உடையவர்களுமாகிய;* ***பப்பரர்*** - *பப்பர தேசத்தவர்;* ***திருத்து கூடத்தை*** - *தன்னைக் கட்டி வைத்திருக்கும் கட்டுத் தறியையும்;* ***திண் கணையத் தோடும்*** - *வேகமாகச் செல்லமுடியாதபடி தடைசெய்யும் வலிய கணையமரத்தையும்;* ***எருத்தின் ஏந்திய*** - *(தம்) பிடரியில் தாங்கிய;* ***மால் களிறு என்ன*** - *மதயானை போல;* ***பரித்த காவினர்*** - *காவடித் தண்டினைச் சுமந்தவர்களாய்;* ***ஏகினார்*** - *சென்றார்கள்.*

*தோளில் காவடித் தண்டினைத் தூக்கிய பப்பரர்களுக்குக் கணைய மரத்தைத் தூக்கிய யானை உவமையாயிற்று. கா: காவடித் தண்டு. கணையம்: யானைகள் ஒன்றோடு ஒன்று முட்டிக் கொள்ளாதபடி குறுக்காக இடப்படும் மரம்.*

*பிடியின்மேல் ஏகும் மங்கையர்*

***769. பித்த யானை பிணங்கி. பிடியில் கை***
***வைத்த. மேல் இருந்து அஞ்சிய மங்கைமார்.***
***எய்த்து இடுக்கண் உற்றார். புதைத்தார்க்கு இரு***
***கைத்தலங்களில் கண் அடங்காமையே.***

***பித்த யானை*** - *வெறி பிடித்த யானைகள்;* ***பிணங்கி*** - *மாறுபட்டு;* ***பிடியில் கை வைத்த*** - *பெண்யானைகளின் மேல் கையை வைத்தன;* ***மேல் இருந்து அஞ்சிய*** - *(அப்போது) அப் பெண் யானைகளின் மேல் இருந்து அஞ்சிய;* ***மங்கைமார்*** - *மகளிரின்;* ***கண் புதைத்தார்க்கு*** - *(இரு கைகளாலும்) கண்களை மூடத் தொடங்கியவர்க்கு;* ***இரு கைத்தலங்களில்*** - *இரண்டு கைகளுக்குள்;* ***அடங்காமை*** - *(அக் கண்கள்) அடங்காமையால்;* ***எய்த்து*** - *(அவர்கள்) இளைத்து;* ***இடுக்கண் உற்றார்*** - *வருத்தம் அடைந்தார்கள்.*

*பிடியின் மேல் இருந்த பெண்கள் அஞ்சிக் கண்களைப் புதைத்தனர் என்பது. கண்கள் கைகளில் அடங்காமையால் அவர்கள் மிக வருந்தினர்.*

*சிந்தர்தம் செலவு*

***770. வாம மேகலையாரிடை. வாலதி***
***பூமி தோய் பிடி. சிந்தரும் போயினார் -***
***காமர் தாமரை நாள்மலர்க் கானத்துள்.***
***ஆமைமேல் வரும் தேரையின் ஆங்குஅரோ.***

***காமர் தாமரை*** - *அழகிய தாமரையின்;* ***நாள் மலர்க் கானத்துள்*** - *அன்று பூத்த பூங்காட்டில்;* ***ஆமைமேல் வரு*** - *ஆமை மேல் வருகின்ற;* ***தேரையின்*** - *தேரையைப் போல;* ***வாலதி பூமி தோய்*** - *வால்கள் பூமியில் படியக்கூடிய;* ***பிடி*** - *பெண் யானைகளில்;* ***வாமம் மேகலையாரிடை*** - *அழகிய மேகலையணிந்த பெண்களோடு;* ***சிந்தரும் போயினார்*** - *சிந்தரும் சென்றார்கள்.*

*தாமரைக் காடு மகளிர்க்கும். ஆமை பெண் யானைக்கும். தேரை சிந்தர்க்கும் உவமையாயின என்பது. சிந்தர்: மூன்றடி உயரமுள்ளவர் - அந்தப்புரத்தில் மெய்க்காப்பாளராவார். பெண்யானைக்கு வால் பூமியில் தோய்தல் உத்தம இலக்கணமாகும்.*

*மாது ஒருத்தியைக் கொண்டு ஓடும் குதிரைத் தோற்றம்*

*771.* ***'இம்பர் நாட்டின் தரம் அல்லள். ஈங்கு இவள்;***
***உம்பர் கோமகற்கு' என்கின்றது ஒக்குமால் -***
***கம்ப மா வர. கால்கள் வளைத்து ஒரு***
***கொம்பு அனாளைக் கொண்டு ஓடும் குதிரையே!***

***கம்ப மா வர*** *- யானை தொடர்ந்து வர;* ***ஒரு கொம்பு அனாளை*** *- பூங்கொம்பு போன்ற ஒருத்தியை;* ***கொண்டு*** *- சுமந்து கொண்டு;* ***கால்கள் வளைத்து*** *- முன்னங் கால்களை வளைத்து;* ***ஓடும் குதிரை*** *- ஓடுகின்ற குதிரையானது;* ***ஈங்கு இம்பர் நாட்டின்*** *- இங்கே இவ்வுலகத்திலே (வாழ்வதற்கு);* ***தரம் அல்லள்*** *- ஏற்றவளாக இல்லை;* ***இவள்*** *- இந்தப் பெண்;* ***உம்பர் கோமகற்கு*** *- தேவர்கள் தலைவனான இந்திரனுக்கு (உரியவள்);* ***என்கின்றது*** *- என்று கூறுவதை;* ***ஒக்கும்*** *- ஒத்திருக்கும்.*

*ஒரு குதிரை ஒரு பெண்ணையேற்றிக் கொண்டு தாவிச் செல்லும்போது வானத்தில் செல்வதுபோல் உள்ளது. அது தேவர்களின் தலைவனான இந்திரனுக்கு உரியவள் இவள் என்று அவனிடம் அவளைக் கொண்டு செல்வது போன்றுள்ளது என்றார் - தற்குறிப்பேற்ற அணி. கம்ப மா - யானை.*

*மகளிர் மனம் களித்து ஓடுதல்*

*772.* ***சந்த வார்குழல் சோர்பவை தாங்கலார்.***
***சிந்து மேகலை சிந்தையும். செய்கலார்.***
***'எந்தை வில் இறுத்தான்' எனும் இன் சொலை***
***மைந்தர் பேச. மனம் களித்து ஓடுவார்.***

*(பெண்கள்)* ***எந்தை*** *- எம் தந்தையான இராமன்;* ***வில் இறுத்தான்*** *- சிவ தனுசை முறித்தான்;* ***எனும் இன் சொலை*** *- என்னும் இனிய வார்த்தையை;* ***மைந்தர் பேச*** *- ஆடவர் சொல்ல;* ***மனம் களித்து*** *- (அது கேட்டு) மனம் மகிழ்ந்து;* ***சோர்பவை*** *- அவிழ்ந்து விழக்கூடிய;* ***சந்தம் வார் குழல்*** *- அழகிய நீண்ட கூந்தலை;* ***தாங்கலார்*** *- ஏந்திக் கொள்ளாதவர்களாயும்;* ***சிந்தும் மேகலை*** *- (அறுந்து) விழுகின்ற மேகலையணியை;* ***சிந்தையும் செய்கலார்*** *- (பொறுக்கியெடுக்க) எண்ணாதவர்களுமாகி;* ***ஓடுவார்*** *- (இராமனது திருமணம் கருதி) ஓடுவார்கள்.*

மடந்தையர் களித்து. தாங்கலார். செய்கலார். ஓடுவார் என இயைக்கவும். ஆடவர் இராமனது வீரச் செயலைச் சொல்ல. அது கேட்ட மடந்தையர் திருமணத்தைக் காணும் விருப்பத்தால் ஓடுகின்றார். அவ்வாறு அவர்கள் ஓடும்போது கூந்தல் அவிழ்தல். மேகலை சிந்துதல் ஆகியவற்றையும் கருதாமல் செல்கின்றார் என்பது.

அந்தணர் முற்பட்டுச் செல்லுகை

*773.* **குடையர். குண்டிகை தூக்கினர். குந்திய**
**நடையர். நாசி புதைத்த கை நாற்றலர். - -**
**கட களிற்றையும் காரிகையாரையும்**
**அடைய அஞ்சிய. அந்தணர் - முந்தினார்.**

**கட களிற்றையும்** - மத யானையையும்; **காரிகையாரையும்** - மகளிரையும்; **அடைய** - பக்கத்தில் செல்ல; **அஞ்சிய அந்தணர்** - அச்சம் கொண்டுள்ள அந்தணர்; **குடையர்** - குடை பிடித்தவர்களும்; **குந்திய நடையர்** - குதிகால் தரையில் படாமல் உந்திச் செல்பவர்களும்; **குண்டிகை தூக்கினர்** - கமண்டலத்தை ஏந்தியவர்களும்; **நாசி புதைத்த கை** - மூக்கை மூடிய கையை; **நாற்றலார்** - எடுக்காதவர்களுமாகிய; **முந்தினார்** - முற்பட்டுச் சென்றார்கள்.

குந்திய நடையினர்: தம் நடையால் எவ்வுயிர்க்கும் தீங்கு வராதபடி பாதத்தால் உந்தி நடக்கும் நடையை உடையவர். நாசி புதைத்த கை - பிராணாயாமம் செய்யும் வலக்கையைக் கீழே தொங்கவிடமாட்டார்கள். மாதரை நெருங்கினால் ஈட்டிய தவமும். புண்ணியப் பயனும். உயிரினும். மேலான ஒழுக்கமும் அழியும். அதனால் அவர்கள் நெருங்க அஞ்சினர்.

நங்கையர் திரளின் செலவு

*774.* **நாறு பூங் குழல் நங்கையர் கண்ணின் நீர்**
**ஊறு நேர்வந்து உருவு வெளிப்பட.**
**'மாறு கொண்டனை வந்தனை ஆகில். வந்து**
**ஏறு தேர்' எனக் கைகள் இழிச்சுவார்.**

**நாறு பூங்குழல்** - மணம் வீசுகின்ற மலரையணிந்த கூந்தலையுடைய; **நங்கையர்** - பெண்கள்; **கண்ணின்** - (தம்) கண்களில்; **நீர் ஊறும்** - நீர் சுரக்குமாறு; **நேர்வந்து உருவு** - நேரே வந்து உருவம்; **வெளிப்பட** - வெளிப்பட்டுத் தோன்ற (தம் காதலர் நேரே வந்ததாகக் கருதி அந்த உருவத்தைப் பார்த்து); **மாறு கொண்டனை** - எம்மை எதிர்கொண்டு வந்தாயானால்; **வந்து** - (இப்பொழுது) வந்து; **தேர் ஏறு** - (இந்தத்) தேரிலே ஏறிக் கொள்க; **என** - என்று சொல்லி; **கைகள் இழிச்சுவார்** - (தம் ) கைகளைத் தாழ்த்துவார் (அழைக்கலாயினர்).

***775.*** ***குரைத்த தேரும். களிறும் குதிரையும்.***
***நிரைத்த வார் முரசும். நெளிந்து எங்கணும்***
***இரைத்த பேர் ஒலியால். இடை. யாவரும்***
***உரைத்த உணர்ந்திலர்; ஊமரின் ஏகினார்.***

***குரைத்த தேரும்*** - *ஒலித்த தேர்களும்;* ***களிறும்*** - *யானைகளும்;* ***குதிரையும்*** - *குதிரைகளும்;* ***நிரைத்த வார் முரசும்*** - *வரிசையான நீண்ட முரசு வாத்தியமும்;* ***எங்கணும்*** - *எல்லா இடத் தும்;* ***நிமிர்ந்து இரைத்த*** - *மிகுந்து ஒலித்த;* ***பேரொலியால்*** - *பேரொலியால்;* ***இடை*** - *(அந்த) இடத்திலே (செல்லுகின்ற) ;* ***யாவரும்*** - *எவரும்;* ***உரைத்த உணர்ந்திலர்*** - *(ஒருவர் சொல்ல மற்றவர்) அறிய மாட்டாதவராகி;* ***ஊமரின் ஏகினார்*** - *ஊமைகள் போலப் பேசாமல் சென்றார்கள்.*

*தேர் முதலியன செல்வதாலும். முரசு முழங்குவதாலும் மிகப் பேரொலி தோன்றுகிறது. அவ்வோசையால் ஒருவர் சொல்வது மற்றொருவர்க்குக் கேட்கவில்லை. ஆதலால். ஒருவரோடு ஒருவர் பேசுவதை ஒழித்து ஊமையர்போலச் சென்றார்கள் என்பது.*

***776.*** ***நுண் சிலம்பி வலந்தன நுண் துகில்.***
***கள் சிலம்பு கருங் குழலார் குழு***
***உள் சிலம்பு சிலம்ப ஒதுங்கலால்.***
***புள் சிலம்பிடு பொய்கையும் போன்றதே.***

***நுண் சிலம்பி*** - *சிறிய சிலந்திப் பூச்சி;* ***வலந்தன*** - *பின்னியது போன்ற;* ***நுண் துகில்*** - *மெல்லிய ஆடைகளையணிந்த;* ***கள் சிலம்பு*** - *வண்டுகள் (மொய்த்து) ஒலிக்கின்ற;* ***கருங் குழலார்*** - *கரிய கூந்தலையுடைய மகளிரின்;* ***குழு*** - *கூட்டம்;* ***சிலம்பு உள் சிலம்ப*** - *(அடிகளில் பூண்ட) சிலம்புகள் உள்ளே உள்ள பரல்கள் ஒலிக்க;* ***ஒதுங்கலால்*** - *நடந்து செல்வதால்;* ***புள் சிலம்பிடு*** - *பறவைகள் ஒலிக்கின்ற;* ***பொய்கையும்*** - *தடாகத்தையும்;* ***போன்றது*** - *ஒத்தது.*

*மெல்லிய ஆடையணிந்த மகளிர் கூட்டம் அலைபரந்த நீரையுடைய பொய்கைக்கு ஒப்பாயிற்று. அவர்தம் காற் சிலம்பொலி பொய்கையிலுள்ள அன்னப் பறவைகளின் ஒலிக்கு ஒத்தாயிற்று.*

*மகளிர் கண்களைக் கண்ட ஆடவர் மகிழ்ச்சி*

***777.*** ***தெண் திரைப் பரவைத் திரு அன்னவர்.***
***நுண் திரைப் புரை நோக்கிய நோக்கினை.***
***கண்டு இரைப்பன. ஆடவர் கண்; களி***
***வண்டு இரைப்பன. ஆனை மதங்களே.****

***தெண்திரைப் பரவை*** - *தெளிந்த அலைகளோடு கூடிய பாற்கடலில்;* ***திரு அன்னவர்*** - *தோன்றிய திருமகளைப் போன்ற பெண்கள்;* ***நுண் திரை*** - *மெல்லிய திரைச் சீலையிலுள்ள;* ***புரை நோக்கிய*** - *துளையினால் பார்க்கின்ற;* ***நோக்கினை*** - *பார்வையை;* ***கண்டு*** - *கண்டு;* ***ஆடவர் கண் இரைப்பன*** - *காளையரின் கண்கள் மகிழ்ந்து ஆரவாரம் செய்தன;* ***யானை மதங்கள்*** - *யானைகளின் மதநீரைக் கண்டு;* ***களிவண்டு*** - *களிப்புள்ள வண்டுகள்;* ***இரைப்பன*** - *(மகிழ்ச்சியான) ஆரவாரம் செய்தன. மகளிர் சிவிகையில் போகும் பொழுது திரையிட்டுச் செல்கின்றார்கள். திரையின் துளையால் வெளிப்படும் அப்பெண்களின் கண்களைக் கண்டு ஆடவரின் கண்கள் மகிழ்ந்தன என்பது. யானையின் மதநீரைக் கண்டு வண்டுகள் மகிழ்வதும். மகளிர் கண்களைக் கண்டு ஆடவரின் கண்கள் மகிழ்வதும் சேனையில் நிகழக் கூடியன. இவ்விரண்டையும் தனித்தனியே ஒன்றுபடக் கூறியது தொடர் முழுதும் உவமையணியாகும்.*

*778.* ***உழை கலித்தன என்ன உயிர்த் துணை***
***நுழை கலிக் கருங் கண்ணியர் நூபுர***
***இழை கலித்தன; இன் இயமா. எழும்***
***மழை கலித்தென. வாசி கலித்தவே.***

***உயிர்த்துணை நுழை*** - *ஆண்களின் உயிர்வரை சென்று நுழையும்;* ***கலி*** - *வலிமையுள்ள;* ***கருங்கண்ணியர்*** - *கரிய கண்களையுடைய மாதர்கள் பூண்ட;* ***நூபுரம் இழை*** - *சிலம்பென்னும் அணிகள்;* ***உழை கலித்தன என்ன*** - *மான்கள் செருக்கி எழுந்தன எனத்தக்க தோற்றமுடைய உழை என்னும் பண் ஒலித்தாற் போல;* ***கலித்தன*** - *ஒலித்தன;* ***இன் இயமா*** - *(அவ்வாறு ஒலித்தவற்றுக்கு) இனிய பக்கவாத்தியமாக;* ***எழுமழை கலித்து என*** -*(வானத்தில்) எழும் மேகம் இடித்தாற் போல;* ***வாசி கலித்த*** - *குதிரைகள் கனைத்தன.*

*ஒருவர் பாடுகையில் அதனைச் சிறப்பித்தற்காக மத்தளம் முதலிய வாத்தியங்கள் முழக்கப்படுவது மரபு; அதுவே பக்கவாத்தியம் எனப்படும். மாதர் சிலம்புகள் ஒலிக்க அந்த இசைக்குப் பக்க வாத்தியம் என்று சொல்லுமாறு குதிரைகள் கனைத்தன. இழை - இழைத்துச் செய்யப்பெறும் ஓர் அணி.*

*779.* ***மண் களிப்ப நடப்பவர் வாள் முக***
***உண் களிக் கமலங்களின் உள் உறை***
***திண் களிச் சிறு தும்பி என. சிலர்***
***கண் களித்தன. காமன் களிக்கவே.***

***மண் களிப்ப*** - *பூமிதேவி மகிழ;* ***நடப்பவர்*** - *மெல்லடி வைத்து நடக்கும் மகளிரின்;* ***வாள்முகம்*** - *ஒளி பொருந்திய முகமாகிய;* ***களி உண் கமலங்களினுள் உறை*** - *மது உண்டு தாமரையில் தங்கியுள்ள;* ***திண்களி*** - *மிக்க களிப்புடைய;* ***சிறு தும்பி என*** - *சிறு வண்டுகளாகிய கண்கள் (ஆடவரை மயக்கி மகிழ்வது போல்);* ***காமன் களிக்க*** - *மன்மதனும் மகிழும்படி;* ***சிலர் கண்களித்தன*** - *சில ஆடவர் கண்களும் மாதர் முகக்கமலம் கண்டு மகிழ்ந்தன.*

*தூளி எழுந்து நிறைய யாவரும் செல்லுதல்*

***780. எண்ண மாத்திரமும் அரிதாம் இடை.***
***வண்ண மாத் துவர் வாய். கனி வாய்ச்சியர்.***
***திண்ணம் மாத்து ஒளிர் செவ் இளநீர். இழி***
***சுண்ணம் ஆத்தன; தூளியும் ஆத்தவே.***

***எண்ணம் மாத்திரமும்*** - *நினைக்கவும் கூட;* ***அரிது ஆம்*** - *அரிதாகிய;* ***இடை*** - *இடையையும்;* ***வண்ண மாத் துவர்வாய்*** - *சிறந்த பவளம் போன்ற அழகிய வாயையும்;* ***கனி வாய்ச்சியர்*** - *கனிகளின் சுவை போன்ற இனிமையான சொற்களையுடைய மாதர்களின்;* ***திண்ணம் ஆத்து*** - *(வாரால்) உறுதியாகக் கட்டப்பெற்று;* ***ஒளிர்*** - *விளங்குகின்ற;* ***செவ் இளநீர்*** - *செவ்வு இளநீர் போன்ற தனங்களிலிருந்து;* ***இழி சுண்ணம்*** - *உதிர்ந்த நறுமணப் பொடிகளும்;* ***ஆத்தன*** - *எங்கும் நிறைந்தன;* ***தூளியும்*** - *(சேனையால் எழுப்பப்பட்ட) தூசியும் நிறைந்தன.*

*பெண்களின் நறுமணப் பொடியும் சேனைகள் எழுப்பிய புழுதியும் எங்கும் நிறைந்தன என்பது. சுண்ணம். தூளி இரண்டும் ஆத்தன என்ற ஒரு பொதுத் தன்மையைத் தனித்தனி பெற்று வந்தது - தொடர் முழுது உவமையணி. ஆத்து - யாத்து என்பதன் மரூஉ.*

***781. சித்திரத் தடந் தேர் மைந்தர் மங்கையர்.***
***உய்த்து உரைப்ப. நினைப்ப. உலப்பிலர்.***
***இத் திறத்தினர் எத்தனையோ பலர்.***
***மொய்த்து இரைத்து வழிக்கொண்டு முன்னினார்.***

***உய்த்து உரைப்ப*** - *(இவ்வளவு என்று) ஊகித்து உரைக்கவும்;* ***நினைப்ப*** - *நினைக்கவும் முடியாதபடி;* ***உலப்பு இலர்*** - *எண்ணற்றவர்களாகிய;* ***சித்திரத் தடந்தேர்*** - *ஓவிய வேலைப்பாடு அமைந்த பெரிய தேரில் சென்ற;* ***மைந்தர் மங்கையர்*** - *ஆடவரும் மங்கையருமாகிய;* ***இத் திறத்தினர்*** - *இப்படிப் பட்டவர்கள்;* ***எத்தனையோ பலர்*** - *மிகப் பலர்;* ***மொய்த்து*** - *நெருங்கி;* ***இரைத்து*** - *ஆரவாரித்து;* ***வழிக்கொண்டு*** - *செல்லும் வழியைக் குறியாகக் கொண்டு;* ***முன்னினார்*** - *முற்பட்டுச் சென்றார்கள்.*

*ஆடவரும் மகளிரும் பலவாறு ஆரவாரம் செய்துகொண்டு வழி நடந்தனர் என்பது.*

அறுசீர் ஆசிரிய விருத்தம்

*782.* **குசை உறு பரியும். தேரும்.**
**வீரரும். குழுமி. எங்கும்**
**விசையொடு கடுகப் பொங்கி**
**வீங்கிய தூளி விம்மி.**
**பசை உறு துளியின் தாரைப்**
**பசுந் தொளை அடைத்த. மேகம்.**
**திசைதொறும் நின்ற யானை**
**மதத்தொளை செம்மிற்று அன்றே.**

*(ப. ரை)* **குசை உறு பரியும்** - கடிவாளம் பூண்ட குதிரையும்; **தேரும் வீரரும்** - தேரும் வீரர்களும்; **எங்கும் குழுமி** - எல்லா இடத்திலும் கூடி; **விசையொடு கடுக** - வேகமாக விரைந்து செல்ல; **பொங்கி வீங்கிய** - (அதனால்) மிகுதியாக மேல் எழுந்த; **தூளி** - புழுதியானது; **விம்மி** - பெருகி; **மேகம் பசையுறு** - மேகத்தின் ஈரம் பொருந்திய; **துளியின் தாரை** - நீர்த்துளியின் தாரைகள்; **பசுந் தொளை** - (வெளிப்படுவதற்கு உரிய) பசிய தொளைகளை; **அடைத்த** - தூர்த்தன; **திசைதொறும் நின்ற** - (அல்லாமலும்) (எட்டுத்) திக்குகளில் காவலாகி நிற்கின்ற; **யானை** - திசை யானைகளின்; **மதம் தொளை** - மதநீர் ஒழுகுகின்ற தொளைகளிலும் சென்று; **செம்மிற்று** - தூர்த்து விட்டன.

குதிரை. தேர். வீரர் எல்லாம் கூடி விரைந்து செல்வதால் புழுதி மிகுதியாக எழுந்து வானத்திலும். எட்டுத் திக்குகளிலும். பரவிற்று என்பது. இத்தூளி மேகத்தின் துளியின் தாரைப் பசுந்துளையையும். திசை யானைகளின் மதத்துளையையும் தூர்த்தன - உயர்வு நவிற்சியணி.

மங்கையர் ஆடவர் மகிழ்ந்துசெல் காட்சி

*783.* **கேடகத் தடக் கையாலே.**
**கிளர் ஒளி வாளும் பற்றி.**
**சூடகத் தளிர்க் கை. மற்றைச்**
**சுடர் மணித் தடக்கை பற்றி.**
**ஆடகத்து ஓடை யானை**
**அழி மதத்து இழுக்கல் ஆற்றில்.**
**பாடகக் காலினாரை.**
**பயப் பயக் கொண்டு போனார்.**

*(அங்கே சென்ற வீரர்கள்)* ***கேடகத் தடக் கையாலே*** *- கேடகத்தை ஏந்திய பெரிய கையில்;* ***கிளர் ஒளி வாளும்*** *- ஒளி விளங்கும் வாளையும்;* ***பற்றி*** *- பிடித்துக் கொண்டு;* ***மற்றைச் சுடர் மணி*** *- விளங்கும் இரத்தினக் கடகங்களை அணிந்த;* ***தடக் கை*** *- பெரிய மற்றொரு கையிலே;* ***பாடகக் காலினாரை*** *- பாடகம் அணிந்த தம் மனைவியரை;* ***சூடகத் தளிர்க் கை பற்றி*** *- சூடகம் என்னும் அணிபூண்ட தளிர் போன்ற கைகளைப் பற்றிக் கொண்டு;* ***ஆடகத்து ஓடை*** *- பொன்னால் செய்யப்பட்ட நெற்றிப் பட்டத்தை அணிந்த;* ***யானை அழி மதத்து*** *- யானைகளின் மத நீரால்;* ***இழுக்கல் ஆற்றின்*** *- உண்டாகிய வழுக்குகின்ற வழியில்;* ***பயப்பய*** *- மெல்ல;* ***கொண்டு போனார்*** *- அழைத்துச் சென்றார்கள். யானையின் மதநீரால் வழுக்குகின்ற வழி ஆயிற்று. வீரர்கள் வலக்கையிலுள்ள வாளை இடக் கையில் கேடயத்தோடு சேர்த்துப் பிடித்துக் கொண்டு வலக்கையிலே தம் மனைவியரைப் பற்றி மெல்ல அழைத்துச் சென்றனர் என்பது. பையப் பைய என்பது பயப்பய என விகாரமாயிற்று. கேடகம்: பலகை. தோல். பாடகம்: காலில் அணியும் ஒருவகை அணி. சூடகம்: வளையல்.*

***784. செய்களின் மடுவில். நல் நீர்ச்***
***சிறைகளில். நிறையப் பூத்த***
***நெய்தலும். குமுதப் பூவும்.***
***நெகிழ்ந்த செங் கமலப் போதும்.***
***கைகளும். முகமும். வாயும்.***
***கண்களும். காட்ட. கண்டு.***
***'கொய்து. அவை தருதிர்' என்று.***
***கொழுநரைத் தொழுகின்றாரால்.***

***செய்களில்*** *- வயல்களிலும்;* ***மடுவில்*** *- மடுவிலும்;* ***நல் நீர்ச் சிறைகளில்*** *- நல்ல நீருள்ள குளங்களிலும்;* ***நிறையப் பூத்த*** *- நிறைய மலர்ந்துள்ள;* ***நெய்தலும்*** *- நெய்தற் பூவும்;* ***குமுதப் பூவும்*** *- குமத மலரும்;* ***நெகிழ்ந்த செங்கமலப் போதும்*** *- மலர்ந்த செந்தாமரைப் பூவும் (ஆகிய இவை தம்முடைய);* ***கைகளும்*** *- கைகளையும்;* ***முகமும்*** *- முகத்தையும்;* ***வாயும்*** *- வாயையும்;* ***கண்களும்*** *- கண்களையும்;* ***காட்ட*** *- காட்ட;* ***கண்டு*** *- (அவற்றை) பார்த்து;* ***இவை*** *- இந்த நெய்தல் முதலியவற்றை;* ***கொய்து தருதிர்*** *- பறித்துத் தாருங்கள்;* ***என்று*** *- என்று;* ***கொழுநரை*** *- (தம்) கணவரை;* ***தொழுகின்றார்*** *- வணங்கிக் கேட்டார்கள்.*

*நெய்தல் பூக்கள் கண்களுக்கும். குமுதம் வாய்க்கும் கமலம் கை. முகம் என்பவற்றுக்கும் உவமையாகும். எதிர் நிரல் நிரையணி. நெய்தல் முதலியன தம் உறுப்புகளை ஒத்தலின் அவற்றைப் பறித்துத் தாருங்கள் என்று அவற்றின் வீறு கெடுக்கும் நோக்கில் வேண்டினர் என்பது.*

*யானை வரவு கேட்டு மகளிர் நிலைகெட்டு ஓடுதல்*

***785.*** ***பந்தி அம் புரவிநின்றும்***
***பாரிடை இழிந்தோர். வாசக்***
***குந்தள பாரம் சோர.***
***குலமணிக் கலன்கள் சிந்த.***
***சந்த நுண் துகிலும் வீழ.***
***தளிர்க் கையால் அணைத்து. 'சார***
***வந்தது வேழம்' என்ன.***
***மயில் என இரியல் போவார்.***

***பந்திஅம் புரவி நின்றும்*** - *வரிசையாகச் செல்லும் அழகிய குதிரைகளிலிருந்து;* ***பாரிடை இழிந்தோர்*** - *நிலத்தில் இறங்கின மகளிர்;* ***வேழம் சார*** - *யானை அருகே;* ***வந்தது என்ன*** - *வந்தது என்று;* ***வாசக் குந்தளம்*** - *மணம் கமழும் கூந்தல்;* ***பாரம் சோர*** - *சுமை அவிழ்ந்து தொங்கவும்;* ***குல மணிக் கலன்கள்*** - *இரத்தினங்கள் பதித்த அணிகலன்கள்;* ***சிந்த*** - *கீழே சிதறவும்;* ***சந்தம் நுண்துகிலும்*** - *அழகிய நுண்ணிய ஆடையும்;* ***வீழ*** - *கீழே விழ;* ***தளிர்க் கையால்*** - *(ஆடையை) தளிர் போன்ற கையால்;* ***அணைத்து*** - *(ஆடை விழாமல்) பற்றிக் கொண்டு;* ***மயில் என*** - *மயிலைப் போல;* ***இரியல் போவார்*** - *நிலை தடுமாறி ஓடினார்கள்.*

*பந்தி: குதிரை லாயம் - தன்மை நவிற்சியணி. குதிரையிலிருந்து இறங்கின மகளிர். அருகே யானை வரக்கண்டு அஞ்சித் தமது கூந்தல் விரிந்ததையும். அணிகள் சிதறுவதையும் பொருட்படுத்தாமல் அரையாடை அவிழ்ந்ததனால் மானத்திற்கு இழுக்கு நேருமே என்ற கருத்தில் அதனை மட்டும் அவிழாவாறு கைகளால் தழுவிப் பிடித்துக் கொண்டு மயில்போல நிலைகெட்டு ஓடலாயினர் என்பது.*

*குடை கொடிகளின் நெருக்கம்*

***786.*** ***குடையொடு பிச்சம். தொங்கல்***
***குழாங்களும். கொடியின் காடும்.***
***இடை இடை மயங்கி. எங்கும்***
***வெளி கரந்து இருளைச் செய்ய.***
***படைகளும். முடியும். பூணும்.***
***படர் வெயில் பரப்பிச் செல்ல-***
***இடை ஒரு கணத்தினுள்ளே.***
***இரவு உண்டு; பகலும் உண்டே!***

**குடையொடு** - குடைகளும்; **பிச்சம்** - பீலிக்குஞ்சக் குடைகளும்; **தொங்கல் குழாங்களும்** - மாலைக் கூட்டங்களும்; **கொடியின் காடும்** - கொடிகளின் தொகுதிகளும்; **இடை இடை மயங்கி** - தம்முள் கலந்து; **எங்கும் வெளிக் கரந்து** - எல்லா இடத்திலும் வெற்றிடம் இல்லாதவாறு மறைத்து; **இருளைச் செய்ய** - இருளை உண்டாக்க; **படைகளும்** - (வில்முதலான) படைக்கருவிகளும்; **முடியும் பூணும்** - பொன் மகுடமும் அணிகளும்; **படர்வெயில்** - பரவிய ஒளியை; **பரப்பிச் செல்ல** - பரப்பிக் கொண்டு போக; **இடை** - (அச்சேனை செல்லும்) இடத்தில்; **ஒரு கணத்தினுள்** - ஒரே கணப்பொழுதிலே; **இரவு உண்டு** - இரவும் உள்ளது; **பகலும் உண்டு** - பகலும் உண்டு.

குடைகள் வெயிலை மறைக்கின்றன; யானையின் மேனி கருமையாக உள்ளது; மாலை. கொடி முதலியன விண்ணை மறைத்து நிற்கின்றன. ஆகவே. இவற்றால் எங்கும் இருள் பரவியுள்ளது. ஆனால். படைக்கலம் முதலியன வெயிலை உண்டாக்குகின்றன. அதனால். கண நேரத்தில் இரவும் பகலும் ஒருசேர உள்ளன என்பது.

மகளிர்க்கு வழிவிட்டு ஆடவர் விலகுதல்

*787.* **முருக்கு இதழ் முத்த மூரல்**
**முறுவலார் முகங்கள் என்னும்**
**திருக் கிளர் கமலப் போதில்**
**தீட்டின கிடந்த கூர் வாள்.**
**'நெருக்கு இடை அறுக்கும்; நீவிர்**
**நீங்குமின் நீங்கும்' என்று என்று.**
**அருக்கனில் ஒளிரும் மேனி**
**ஆடவர் அகலப் போவார்.**

**முருக்கு இதழ்** - கல்யாண முருங்கைப் பூவைப் போன்ற உதட்டையும்; **முத்தம் மூரல்** - முத்துப் போன்ற பற்களையும்; **முறுவலார்** - புன்சிரிப்பையும் உடைய மகளிர்; **முகங்கள் என்னும்** - (தம்முடைய) முகங்கள் என்கின்ற; **திருக் கிளர் கமலப் போதில்** - அழகுமிக்க தாமரைப் பூவில்; **தீட்டின கிடந்த** - தீட்டியனவாய்க் கிடந்த; **கூர்வாள்** - கூரிய வாட் படைகள் (கண்கள்); **நெருக்கு** - நாம் நெருங்கியுள்ளதை; **இடை அறுக்கும்** - ஊடுருவிச் சென்று நீக்கும்; **நீங்கள்** - (ஆதலால். ஆடவரே) நீங்கள்; **நீங்குமின் நீங்கும்** - விலங்குகள் விலகுங்கள்; **என்று என்று** - என்று தெரிவித்தபடி; **அருக்கனில் ஒளிரும் மேனி** - கதிரவனைப் போல் விளங்கும் உடம்பைப் படைத்த; **ஆடவர்** - ஆண்கள்; **அகலப் போவார்** - வழிவிட்டுச் செல்வார்.

நெருங்கிச் செல்லும் ஆடவர் மகளிர் கூட்டத்தைக் கண்டு நாம் நெருக்கிச் சென்றால் தீட்டிக் கிடக்கின்ற வாள்கள் அறுத்துவிடும். விலகுங்கள். விலகுங்கள் என்று சொல்லிக் கொண்டே விலகினர் என்பது.

நீங்குமின் நீங்கும் - அடுக்கு. விரைவுப் பொருளது - மின். உம் என்ற இரண்டும் ஏவல் பன்மை விகுதிகள்.

*788.* ***நீந்த அரு நெறியின் உற்ற***
***நெருக்கினால் சுருக்குண்டு அற்று.***
***காந்தின மணியும் முத்தும்***
***சிந்தின. கலாபம் சூழ்ந்த***
***பாந்தளின் அல்குலார்தம்***
***பரிபுரம் புலம்பு பாதப்***
***பூந் தளிர் உறைப்ப. மாழ்கி.***
***'போக்கு அரிது' என்ன நிற்பார்.***

***நீந்த அரு*** - *கடப்பதற்கு அரிய;* ***நெறியின் உற்ற*** - *வழியிலே உள்ள;* ***நெருக்கினால்*** - *(மக்கள்) நெருக்கத்தால்;* ***சுருக்குண்டு அற்று*** *-(மணிவடங்கள்) சுருக்கேறி அறுந்து கிடக்கும்;* ***காந்தின மணியும்*** - *ஒளிவிடும் இரத்தினங்களும்;* ***முத்தும்*** - *முத்துக்களும்;* ***சிந்தின*** - *சிதறிக் கிடப்பவை;* ***கலாபம் சூழ்ந்த*** - *பதினாறு கோவையணி சூழ்ந்துள்ளதும்;* ***பாந்தளின் அல்குலார்*** - *பாம்பின் படம்போன்றதுமான அல்குலையும் உடைய மகளிர்;* ***தம் பரிபுரம்*** - *தம் காற்சிலம்பு;* ***புலம்பு பாதம்*** - *ஒலிக்கின்ற பாதங்களாகிய;* ***பூந்தளிர் உறைப்ப*** - *தளிர்களிலே உறுத்த;* ***மாழ்கி*** - *தடுமாறி;* ***போக்கு*** - *(இனி) அவர்கள் நடந்து செல்வது;* ***அரிது என்ன*** - *இயலாது என்று;* ***நிற்பார்*** - *நிற்பார்கள்.*

*மக்களின் நெருக்கத்தால் முத்தாரமும். மணியும் சுருக்குண்டு அற்றுச் சிதறிக் கிடக்கின்றன; அவை தளிர்போன்ற மெல்லிய பாதங்களில் உறுத்துகின்றன; அதனால் இனிப் போக முடியாது என்று மகளிர் அங்கேயே நிற்பார் என்பது. - தற்குறிப்பேற்ற அணி. கலாபம் - பதினாறு கோவையுள்ள மாதரின் இடையணி.*

*இசை ஒலியும் எருதுகளும்*

*789.* ***கொற்ற நல் இயங்கள் எங்கும்***
***கொண்டலின் துவைப்ப. பண்டிப்***
***பெற்ற ஏறு. அன்னப் புள்ளின்***
***பேதையர் வெருவி நீங்க.***
***முற்று உறு பரங்கள் எல்லாம்.***
***முறை முறை. பாசத்தோடும்***
***பற்று அற வீசி ஏகி.***
***யோகியின் பரிவு தீர்த்த.***

***கொற்ற நல் இயங்கள்*** - வெற்றி பொருந்திய நல்ல வாத்தியங்கள்; ***எங்கும்*** - எவ்விடத்தும்; ***கொண்டலின் துவைப்ப*** - மேகங்களைப் போல ஒலிக்க; ***பண்டிப் பெற்றம் ஏறு*** - (அதனால் அஞ்சிய) வண்டியில் பூட்டப்பெற்ற எருதுகள்; ***அன்னப் புள்ளிகள்*** - அன்னப் பறவையைப் போல; ***பேதையர்*** - பேதைப் பெண்கள்; ***வெருவி நீங்க*** - அஞ்சி அகன்று செல்லுமாறு; ***முற்று உறு*** - (தம்மேல்) முழுதும் பொருந்திய; ***பரங்கள் எல்லாம்*** - சுமைகள் எல்லா வற்றையும்; ***முறைமுறை*** - வரிசை வரிசையாக; ***பாசத்தோடும்*** - (அவற்றைக் கட்டிய) கயிறுகளோடும்; ***பற்று அற வீசி*** - தொடர்பு அற்றுப் போக (அப் பண்டங்களைச்) சிதறச் செய்துவிட்டு; ***ஏகி*** - ஓடிப் போய்; ***யோகியின்*** - தவயோகியர் போல; ***பரிவு தீர்ந்த*** - துன்பம் நீங்கின.

*சுமை ஏற்றிய வண்டிகளில். பூட்டப்பெற்ற எருதுகள். பல வாத்தியங்களின் பேரொலியால் வெருண்டு வண்டியில் உள்ள பொருள்கள் எல்லாம் சிதறுமாறு. தம் கட்டுகளையும் அறுத்துக் கொண்டு மூர்க்கத்தனமாகச் சென்றன என்பது. பாசம் நீங்குதல். பரிவுதீர்தல். பேதையர் வெருவி நீங்குதல் - இவ் இயல்புகளால் யோகி. வண்டி எருதுக்கு உவமை. யோகிக்கு: பாசம் தீர்தல் - ஆசை ஒழிதல். பரிவுதீர்தல் - பிறவித் துன்பம் நீங்குதல். எருதுக்கு: பாசம் தீர்தல் - கட்டிய கயிறு அற்றுப்போதல்: பரிவு தீர்தல் - சுமைத் துயரம் நீங்குதல்.*

*நீர் நிலைகளில் படிந்த யானை*

***790. கால் செறி வேகப் பாகர்***
***கார்முக உண்டை பாரா.***
***வார்ச் செறி கொங்கை அன்ன***
***கும்பமும் மருப்பும் காணப்***
***பால் செறி கடலில் தோன்றும்***
***பனைக் கை மால் யானை என்ன.***
***நீர்ச் சிறை பற்றி. ஏறா***
***நின்ற - குன்று அனைய வேழம்.***

***குன்று அனைய வேழம்*** - மலையைப் போன்ற யானைகள்; ***நீர்ச்சிறை பற்றி*** - நீர்நிலையிலே இறங்கி; ***பாகர் கால் செறி*** - பாகர்களின் காற்றை யொத்த; ***வேகம் கார்முகம் உண்டை*** - வேகமுள்ள வில்லால் எறியப்பட்ட மண் உருண்டையையும்; ***பாரா*** - பொருட்படுத்தாமல்; ***வார்சிறைக் கொங்கை அன்ன*** - கச்சாகிய சிறைக்குள்ளிருக்கும் தனங்களையொத்த; ***கும்பமும் மருப்பும் காண*** - (தம்) மத்தகமும் கொம்பும் வெளியில் தெரியும்படி; ***பால் செறி கடலில்*** - பாற்கடலில்; ***தோன்றும் பனைக்கை*** - தோன்றிய பனைமரம் போன்ற கையினையுடைய; ***மால் யானை என்ன*** - பெரிய ஐராவதம் என்னும் யானையைப் போல; ***ஏறா நின்ற*** - கரையேறாமல் நின்றன.

*யானைகள் வழியில் நீர்நிலையில் இறங்கிப் பாகனுடைய வில்லுண்டையையும் பொருட்படுத்தாமல் பாற்கடலில் இறங்கி வெளிப்பட்ட ஐராவதம் போல நின்றன என்பது.*

*பாணர் விறலியர் இசை*

***791.*** ***அறல் இயல் கூந்தல். கண் வாள்.***
***அமுது உகு குமுதச் செவ் வாய்.***
***விறலியரோடு. நல் யாழ்ச்***
***செயிரியர். புரவி மேலார்.***
***நறை செவிப் பெய்வது என்ன.***
***நைவள அமுதப் பாடல்***
***முறை முறை பகர்ந்து போனார்.***
***கின்னர மிதுனம் ஒப்பார்***

*. **கின்னர மிதுனம் ஒப்பார்** - கின்னர மிதுனம் என்னும் தேவசாதியை ஒப்பவர்களாகிய; **அறல் இயல் கூந்தல்** - கருமணல் போன்ற கூந்தலையும்; **வாள்கண்** - வாள் போன்ற கண்களையும்; **அமுது உகு குமுதச் செவ்வாய்** - அமுதம் சிந்தும் செவ்வல்லி போன்ற சிவந்த வாயையும் உடைய; **விறலியரோடு** - விறலியரோடு; **நல்யாழ் செயிரியர்** - நல்ல யாழை வாசிக்கும் பாணர்கள்; **புரவி மேலார்** - குதிரைகளின்மேல் ஏறிக்கொண்டவர்களாய்; **செவிநறை பெய்வது என்ன** - செவியில் தேனைச் சொரிவது போல; **நைவள அமுதப் பாடல்** - நைவளம் என்ற பண்ணோடு கூடிய இனிய பாடலை; **முறைமுறை பகர்ந்து** - முறை பிறழாது பாடிய வாறே; **போனார்** - சென்றார்கள்.*

*பாணர்கள் விறலியரோடு குதிரைமேல் ஏறிக் கொண்டு நைவளப் பண்ணைப் பாடியவாறே சென்றனர் என்பது. அறல் கருங்கூந்தலுக்கு உவமை.*

*மதயானைகளின் போக்கு*

***792.*** ***அருவி பெய் வரையின் பொங்கி.***
***அங்குசம் நிமிர. எங்கும்***
***இரியலின் சனங்கள் சிந்த.***
***இளங் களிச் சிறு கண் யானை.***
***விரி சிறைத் தும்பி. வேறு ஓர்***
***வீழ் மதம் தோய்ந்து. மாதர்***
***சுரி குழல் படிய. வேற்றுப்***
***பிடியொடும் தொடர்ந்து செல்ப.***

***அங்குசம் நிமிர** - பாகன் கையிலுள்ள அங்குசம் ஓங்கிஎழ; **அருவி பெய் வரையின்** - அருவி நீரைப் பொழியும் மலை போன்ற தோற்றத்தோடு; **பொங்கி** - கிளர்ந்தெழுந்து; **இரியலின்** - நிலைகெட்டு ஓடுவதால்; **எங்கும் சனங்கள்** - எல்லா இடத்திலும் மக்களை; **சிந்த** - சிதறச் செய்கின்ற; **இளங்களிச் சிறுகண்** - இளமையையும். மதக்களிப்பையும். சிறிய கண்களையும் உடைய; **யானை** - யானையிலிருந்து; **விரி சிறைத் தும்பி** - விரிந்த சிறகுகளையுடைய வண்டுகள்; **வேறு ஓர் வார் மதம்** - வேறொரு (யானையின்) பெருகும் மதநீரில்; **தோய்ந்து** - படிந்து; **மாதர் சுரிகுழல் படிய** - பெண்களின் சுருண்ட கூந்தலில் தோயுமாறு; **வேற்றுப் பிடியொடும்** - வேறு ஒரு பெண் யானையை; **தொடர்ந்து செல்ப** - தொடர்ந்து செல்வன வாயின.*

பாகன் தன் கையிலிருந்த அங்குசத்தை ஓங்க. அதனால் கிளர்ந்தெழுந்து நிலைகெட்டு ஓடுவதால் எல்லாவிடத்தும் மக்களைச் சிதற அடிக்கும் யானையிடமிருந்து சிறைத் தும்பிகள் நீங்கி வேறொரு பெண் யானையின் மீது அமர்ந்து வரும் பெண்களின் கூந்தலில் படியுமாறு சென்றன என்பது.
தயரதன் நேய மாதரும் அரசியரும் போதல்

*793.* **நிறை மதித் தோற்றம் கண்ட**
**நீல் நெடுங் கடலிற்று ஆகி.**
**அறை பறை துவைப்ப. தேரும்.**
**ஆனையும். ஆடல் மாவும்.**
**கறை கெழு வேல் கணாரும்.**
**மைந்தரும். கவினி. ஒல்லை**
**நெறியிடைப் படர. வேந்தன்**
**நேய மங்கையர்தாம் செல்வார்.***

**நிறைமதி** - கலைகள் நிரம்பிய சந்திரனின்; **தோற்றம் கண்ட** - எழுச்சியைக் கண்ட; **நீல்நெடுங் கடலிற்று ஆகி** - நீல நிறமான கடலின் தன்மையுடையதாகி; **அறைபறை துவைப்ப** - அடிக்கப்படுகின்ற வாத்தியங்கள் முழங்க; **ஆனையும் தேரும்** - யானையும் தேர்களும்; **ஆடல் மாவும்** - வெற்றி வாய்ந்த குதிரைகளும்; **கறை கெழு வேல்** - குருதிக் கறை படிந்த வேல்போன்ற; **கணாரும்** - கண்களையுடைய மகளிரும்; **மைந்தரும்** - காளையரும்; **கவினி** - அழகாகக் கூடி; **ஒல்லை** - விரைவாக; **நெறியிடைப் படர** - வழியிலே செல்லவும்; **வேந்தன் நேய மங்கையர்** - தசரதனின் அன்புக் குரிய பெண்கள்; **எழுந்தார்** - புறப்பட்டார்கள்.

நிறைமதி தோன்றக் கடல் பொங்கியொலிக்கும். ஆதலால். ஆரவாரிக்கின்ற சேனைகளுக்கு ஒப்புக் கூறப் பெற்றது. நிறைமதியின் தோற்றம் கண்ட கடல்போல வாத்தியங்கள் முழங்க நால்வகைப் படையும். மகளிரும். மைந்தரும் முன்னே செல்லத் தசரதனின் உரிமை மனைவியர் பின்னே சென்றனர் என்பது.

*794.* **பொய்கை அம் கமலக் கானில்**
**பொலிவது ஓர் அன்னம் என்ன**
**கைகயர் வேந்தன் பாவை.**
**கணிகையர் ஈட்டம் பொங்கி**
**ஐ-இருநூறு சூழ்ந்த.**
**ஆய் மணிச் சிவிகைதன்மேல்.**
**தெய்வ மங்கையரும். நாண.**
**தேன் இசை முரல. போனாள்.**

***பொய்கை*** *- தடாகத்தின்;* ***அம் கமலக் கானில்*** *- (மலர்ந்த) அழகிய தாமரைக் காட்டிலே;* ***பொலிவது*** *- விளங்குகின்ற;* ***ஓர் அன்னம் என்ன*** *- அன்னப் பறவை போல;* ***கைகயர் வேந்தன் பாவை*** *- கேகய அரசனின் மகளாகிய கைகேயி;* ***கணிகையர் ஈட்டம்*** *- பணிப் பெண்களின் கூட்டம்;* ***பொங்கி ஐ இரு நூறு சூழ*** *- எழுச்சியோடு ஆயி ரவர் தன்னைச் சூழ்ந்து வர;* ***தெய்வ மங்கையரும் நாண*** *- தெய்வப் பெண்களும் (தன் சிறப்பைக் கண்டு) வெட்கம் அடையவும்;* ***தேன் இசை முரல*** *- வண்டுகள் இசையோடு பாடவும்;* ***ஆய்மணி*** *- ஆராய்ந்து பதிக்கப்பட்ட மணிகளால் செய்யப் பெற்ற;* ***சிவிகைதன் மேல்*** *- பல்லக்கிலே;* ***போனாள்*** *- சென்றாள்.*

*கணிகையர் சூழச் செல்லும் கைகேயிக்குக் கமலத் தடாகத்தில் பொலியும் அன்னம் உவமையாயிற்று.*

***795. விரி மணித் தார்கள் பூண்ட***
***வேசரி வெரிநில் தோன்றும்***
***அரி மலர்த் தடங் கண் நல்லார்***
***ஆயிரத்து இரட்டி சூழ.***
***குரு மணிச் சிவிகைதன்மேல்.***
***கொண்டலின் மின் இது என்ன.***
***இருவரைப் பயந்த நங்கை.***
***யாழ் இசை முரல. போனாள்.***

***விரி மணித் தார்கள்*** *- விரிந்த கிண்கிணி மாலைகளை;* ***பூண்ட*** *- அணிந்த;* ***வேசரி வெரிநில்*** *- கோவேறு கழுதைகளின் முதுகில்;* ***தோன்றும்*** *- காணப்படுகின்ற;* ***அரி மலர்த்தடங்கண்*** *- செவ்வரி பரந்த தாமரை போன்ற விசாலமான கண்களையுடைய;* ***நல்லார்*** *- பெண்கள்;* ***ஆயிரத்து இரட்டி சூழ*** *- இரண்டாயிரவர் (தன்னைச்) சூழ்ந்து வர;* ***இருவரைப் பயந்த நங்கை*** *- (இலக்குமணன் சத்துருக்கனன் ஆகிய) இருவரையும் மக்களாகப் பெற்ற சுமித்திரை;* ***கொண்டலின் மின்*** *- மேகத்தில் தோன்றும் மின்னல்;* ***இது என்ன*** *- இவ் உருவம் என்று பார்த்தவர் கருதும்படி;* ***குருமணி சிவிகைதன்மேல்*** *- நீல இரத்தினம் இழைக்கப் பெற்ற பல்லக்கின்மேல்;* ***யாழ் இசை முரல*** *- யாழ் இசை ஒலிக்க;* ***போனாள்*** *- சென்றாள்.*

*நீலமணிப் பல்லக்கில் இருக்கும் சுமித்திரைக்கு மேகத்தில் தோன்றும் மின்னல் உவமையாயிற்று. பல்லக்கில் சுமித்திரை செல்ல. மங்கையர் இரண்டாயிரவர் கோவேறு கழுதையின் மேல் சென்றனர் என்பது.*

*796.* ***வெள் எயிற்று இலவச் செவ்வாய்***
***முகத்தை வெண் மதியம் என்று.***
***கொள்ளையின் சுற்றும் மீன்கள்***
***குழுமிய அனைய ஊர்தி.***
***தெள் அரிப் பாண்டி பாணிச்***
***செயிரியர் இசைத் தேன் சிந்த.***
***வள்ளலைப் பயந்த நங்கை.***
***வானவர் வணங்க. போனாள்.***

***வெள் எயிறு*** - *வெண்மையான பற்களையும்;* ***இலவச் செவ்வாய்*** - *சிவந்த இலவின் இதழ்போன்ற வாயையும் உடைய;* ***முகத்தை*** - *(கோசலாதேவியின்) முகத்தை;* ***வெண் மதியம் என்று*** - *வெண்மையான நிறைமதி என்று கருதி;* ***கொள்ளையின் சுற்று*** - *(வானிலே) மிகுதியாகச் சுற்றிக் கொண்டிருக்கும்;* ***மீன்கள் குழுமிய அனைய*** - *நட்சத்திரங்கள் ஒன்றாகக் கூடினாற் போல;* ***ஊர்தி*** - *சிவிகையாகிய ஊர்தியிலே;* ***வள்ளலைப் பயந்த நங்கை*** - *இராமனைப் பெற்ற கோசலாதேவி;* ***தெள் அரிப் பாண்டி*** - *தெளிந்த வண்டின் இசை போன்ற பாண்டி என்னும் தக்கேசிப் பண்ணினால்;* ***பாணிச் செயிரியர்*** - *ஆகிய இசைப் பாட்டில் வல்ல பாணர்;* ***இசைத் தேன் சிந்த*** - *இசையாகிய தேனைச் சொரியவும்;* ***வானவர் வணங்க*** - *தேவர்கள் (தன்னை) வணங்கவும்;* ***போனாள்*** - *சென்றாள்.*

*கோசலையின் முகத்தைச் சந்திரன் என்று கருதி வானெங்கும் உள்ள நட்சத்திரங்கள் ஒன்றாகக் கூடியதுபோலப் பன்னிற மணிகளால் செய்யப்பெற்ற பல்லக்கின்மேல் கோசலை சென்றாள் என்பது. - மயக்க அணியை அங்கமாகக் கொண்ட தற்குறிப்பேற்ற அணி.*

*797.* ***செங் கையில். மஞ்ஞை. அன்னம்.***
***சிறு கிளி. பூவை. பாவை.***
***சங்கு உறை கழித்த அன்ன***
***சாமரை. முதல தாங்கி.***
***‘இங்கு அலது. எண்ணுங்கால். இவ்***
***எழு திரை வளாகம்தன்னில்***
***மங்கையர் இல்லை’ என்ன.***
***மடந்தையர். மருங்கு போனார்.***

***எண்ணுங்கால்*** - *ஆராயுமிடத்து;* ***இவ் எழுதிரை*** - *இந்த ஏழு கடல்களால் சூழப்பெற்ற;* ***வளாகம் தன்னில்*** - *மண்ணுலகத்தில்;* ***இங்கு அலது*** - *இந்த இடத்தில் (அயோத்தி) அல்லாமல்;* ***மங்கையர் இல்லை*** - *பெண்கள் வேறு இடத்தில் இல்லை;* ***என்ன*** - *என்று (கண்டவர்) கருதுமாறு;(பெருந்திரளாக);* ***மடந்தையர்*** - *மகளிர்;* ***செங்கையில்*** - *தம்முடைய அழகிய கையில்;* ***மஞ்ஞை அன்னம்*** - *மயிலும் அன்னமும்;* ***சிறுகிளி*** - *சிறிய கிளியும்;* ***பூவை பாவை*** - *நாகணவாய்ப் பறவையும் பாவைகளும்;* ***சங்கு உறை கழிந்த அன்ன*** - *உறையிலிருந்து அப்போது தான் எடுத்த சங்குபோன்ற;* ***சாமரை*** - *வெண்மையான சாமரையும்;* ***முதல*** - *முதலியவற்றையும்;* ***தாங்கி*** - *தாங்கிக் கொண்டு;* ***மருங்கு*** - *சிவிகையின் அருகில்;* ***போனார்*** - *சென்றார்கள். பாங்கியர் சூழச் செல்லும் சுமித்திரையின் தோழியர் தம்முடைய கைகளில் மயில் முதலானவற்றைத் தாங்கிக் கொண்டு உடன் சென்றார்கள் என்பது.*

*மெய்காப்பாளர் காவல் புரிகை*

***798. காரணம் இன்றியேயும்***
***கனல் எழ விழிக்கும் கண்ணார்.***
***வீர வேத்திரத்தார். தாழ்ந்து***
***விரிந்த கஞ்சுகத்து மெய்யார்.***
***தார் அணி புரவி மேலார்.***
***தலத்து உளார். கதித்த சொல்லார்.***
***ஆர் அணங்கு அனைய மாதர்.***
***அடி முறை காத்துப் போனார்.***

***காரணம் இன்றியேயும்*** - *காரணம் எதுவும் இல்லாமல்;* ***கனல் எழ விழிக்கும்*** - *நெருப்புப் பொறி பறக்க விழிக்கும்;* ***கண்ணார்*** - *கண்ணகளையுடையவரும்;* ***வீரம் வேத்திரத்தார்*** - *வீரம் தோன்றும் பிரப்பங்கோலை ஏந்தியவர்களும்;* ***தாழ்ந்து விரிந்த*** - *பாதம்வரை தாழ்ந்து பரவிய;* ***கஞ்சுகத்து மெய்யார்*** - *சட்டையைத் தரித்த உடம்புடைய கஞ்சுக மாக்கள்;* ***தார் அணி புரவிமேலார்*** - *கிண்கிணி மாலை யணிந்த குதிரைகளின் மேல் இருப்பவர்களும்;* ***தலத்து உளார்*** - *தரையில் நடப்பவர்களும்;* ***கதித்த சொல்லார்*** - *பிறரை வருத்தும் கடுஞ்சொற்களை யுடையவருமாகி;* ***ஆர் அணங்கு அனைய*** - *தெய்வப் பெண்களையொத்த;* ***மாதர்*** - *மகளிரின்;* ***அடி*** - *பாதங்களை;* ***முறை*** - *முறைப்படி;* ***காத்துப் போனார்*** - *பாதுகாத்துச் சென்றார்கள்.*

*கனல் விழிக்கும் கண் முதலியவற்றையுடைய கஞ்சுக மாக்கள் குதிரைமேல் இவர்ந்தும். தரையில் நடந்தும் அரசன் தேவியருக்குக் காவலாகச் சென்றனர்.*

***799.*** ***கூனொடு குறளும். சிந்தும்.***
***சிலதியர் குழாமும். கொண்ட***
***பால் நிறப் புரவி அன்னப்***
***புள் எனப் பாரில் செல்ல.***
***தேனொடு மிஞிறும் வண்டும்***
***தும்பியும் தொடர்ந்து செல்லப்***
***பூ நிறை கூந்தல் மாதர்***
***புடை பிடி நடையில் போனார்.***

**கூனொடு குறளும்** - *கூனர்களும். குறளர்களும்;* **சிந்தும்** - *சிந்தர்களும்;* **சிலதியர் குழாமும்** - *தோழியர் கூட்டமும்;* **கொண்ட** - *ஏறிய;* **பால் நிறப் புரவி** - *பால் போன்ற நிறத்தையுடைய குதிரைகள்;* **அன்னப் புள் என** - *அன்னப் பறவையைப் போல;* **பாரில் செல்ல** - *நிலத்தில் நடந்து போக;* **தேனொடு** - *தேன் வண்டுகளும்;* **மிஞிறும்** - *மிஞிறுகளும்;* **வண்டும்** - *மற்றை வண்டுகளும்;* **தும்பியும்** - *தும்பி என்னும் வண்டுகளும்;* **தொடர்ந்துசெல்ல** - *பின் தொடர்ந்து போக;* **பூநிறை கூந்தல் மாதர்** - *மலர்கள் நிறைந்த கூந்தலை யுடைய மகளிர்;* **புடை** - *பக்கங்களின்;* **பிடி நடையில் போனார்** - *பெண் யானை போன்ற நடையிலே நடந்து சென்றார்கள்.*

*குறளர்: குள்ளர். சிந்தர்: குறளரைக் காட்டிலும் சிறிது பெரியவர்கள். வண்டும் தேனும் நல்மணமுடைய பூக்களில் படியும்; தும்பியும் மிஞிறும் எல்லா மணத்திலும் செல்லக் கூடியன என்பர் நச்சினார்க்கினியர் (சீவக. 893 உரை)*

***800.*** ***துப்பினின். மணியின். பொன்னின்.***
***சுடர் மரகதத்தின். முத்தின்.***
***ஒப்பு அற அமைத்த வையம்.***
***ஓவியம் புகழ ஏறி.***
***முப்பதிற்று-இரட்டி கொண்ட***
***ஆயிரம். முகிழ் மென் கொங்கைச்***
***செப்ப அருந் திருவின் நல்லார்.***
***தெரிவையர் சூழப் போனார்.***

**முகிழ் மென் கொங்கை** - *தாமரை அரும்பு போன்ற மெல்லிய தனங்களை யுடையவரும்;* **செப்ப அரு திருவின் நல்லார்** - *சொல்ல முடியாத படி திருமகளைக் காட்டிலும் அழகுள்ளவர்களும்;* **முப்பதிற்று இரட்டி ஆயிரம்** - *அறுபதினாயிரம் என்னும் எண்ணை;* **கொண்ட** - *கொண்டவர்களும்;* **தெரிவையர்** - *ஆகிய மகளிர்;* **துப்பினின்** - *பவளங்களினாலும்;* **மணியின்** - *இரத்தினங்களினாலும்;* **பொன்னின்** - *பொன்னாலும்;* **சுடர் மரகதத்தின்** - *ஒளி விடுகின்ற மரகதத்தாலும்;* **முத்தின்** - *முத்துக்களாலும்;* **ஒப்பு அற அமைத்த** - *(தமக்கு வேறு பொருள்) நிகரில்லை என்னுமாறு இயற்றப்பட்டுள்ள;* **வையம்** - *வண்டியில்;* **ஓவியம் புகழ ஏறி** - *சித்திரம் புகழ்ந்து கூறுமாறு ஏறி;* **சூழப் போனார்** - *(அந்தக் கோசலையை) சூழ்ந்து சென்றார்கள்.*

*அறுபதினாயிர மங்கையர் பலவகை வண்டிகளில் ஏறிக் கொண்டு கோசலையைச் சூழச் சென்றார்கள் என்பது.*

*சிவிகையில் வசிட்டர் செல்ல. பரதசத்துருக்கனர் அவர்பின் போதல்*

***801.*** **செவி வயின் அமிர்தக் கேள்வி**
**தெவிட்டினார். தேவர் நாவின்**
**அவி கையின் அளிக்கும் நீரார்.**
**ஆயிரகோடி சூழ. கவிகையின் நீழல். கற்பின்**
**அருந்ததி கணவன். வெள்ளைச்**
**சிவிகையில். அன்னம் ஊரும்**
**திசைமுகன் என்ன. சென்றான்.**

***கற்பின் அருந்ததி கணவன்*** *- கற்புடைய அருந்ததிக்குக் கணவனான வசிட்ட முனிவன்;* ***செவி வயின்*** *- (தம்) செவி மூலமாக;* ***அமுதக் கேள்வி*** *- அமுதம் போல் இனிய நூற் கேள்விகளை;* ***தெவிட்டினார்*** *- தெவிட்டும் அளவிற்கு மிகுதியாகக் கேட்டவர்களும்;* ***தேவர் நாவின்*** *- தேவர்கள் நாவினால்;* ***அவிகையின்*** *- சுவைக்கின்ற அவிசைத் தம் கைகளால்;* ***அளிக்கும் நீரார்*** *- கொடுக்கும் இயல்புடைய அந்தணர்களும்;* ***ஆயிரங்கோடி சூழ*** *- ஆயிரவர் தன்னைச் சுற்றிவர;* ***கவிதையின் நீழல்*** *- குடை நிழலிலே;* ***வெள்ளைச் சிவிகையின்*** *- வெண்மையான பல்லக்கிலே;* ***அன்னம் ஊரும்*** *- அன்ன ஊர்தியிலே ஏறிச் செல்லும்;* ***திசைமுகன் என்ன*** *- நான்முகன் போல; சென்றான் - போனான்.*

*அருந்ததி கணவனான வசிட்டன் ஆயிரங்கோடி அந்தணர் சூழக் கவிகையின் நீழலில் வெள்ளைப் பல்லக்கில் நான்முகனைப் போலச் சென்றான் என்பது. ஆயிரங்கோடி - பலர். வெள்ளைச் சிவிகையில் செல்லும் வசிட்டனுக்கு வெள்ளையன்னத்தில் செல்லும் நான்முகன் ஊர்தியாலும் தொழிலாலும் ஒப்பாவன்.*

***802.*** **பொரு களிறு. இவுளி பொன் தேர்**
**பொலங் கழல் குமரர். முந்நீர்**
**அரு வரை சூழ்ந்தது என்ன.**
**அருகுபின் முன்னும் செல்ல.**
**திரு வளர் மார்பர். தெய்வச்**
**சிலையினர். தேரர். வீரர்.**
**இருவரும். முனி பின் போன**
**இருவரும் என்ன. போனார்.**

***பொரு களிறு*** - *போர் செய்வதற்கான யானைகளும்;* ***இவுளி பொன்தேர்*** - *குதிரைகளும் அழகிய தேர்களும்;* ***பொலங் கழல் குமரர்*** - *பொன்னாலான வீரக் கழல் பூண்ட காளையரும்;* ***முந்நீர் அருவரை*** - *கடத்தற்கரிய மலையைக் கடலானது;* ***சூழ்ந்தது என்ன*** - *சூழ்ந்தாற் போல;* ***அருகு முன் பினும் செல்ல*** - *(தமக்குப்) பக்கமாக முன்னும் பின்னும் செல்ல;* ***திருவளர் மார்பர்*** - *வீரலக்குமி தங்கிய மார்பையுடையவர்களும்;* ***தெய்வச் சிலையினர்*** - *தெய்வீகத் தன்மையுள்ள வில்லை யுடையவர்களும்;* ***தேரர் வீரர்*** - *தேர்களையுடையவரும். வீரர்களுமாகிய;* ***இருவரும்*** - *(பரத - சத்துருக்கன்) இருவரும்;* ***முனிபின் போன*** - *(விசுவாமித்திர) முனிவன் பின்னே சென்ற;* ***இரு வரும் என்ன*** - *(இராம லக்குவர் என்ற) இருவரும் போல;* ***போனார்*** - *(வசிட்ட முனிவன் பின்னே) சென்றார்கள்.*

*அருவரை பரத சத்துருக்கனர்களுக்கும். கடல் நால்வகைப் படைகளுக்கும் உவமையாம். வசிட்டன் பின்னே செல்லுகின்ற பரத - சத்துருக்கனர்களுக்கு விசுவாமித்திரன் பின்னே சென்ற இராமலக்குமணர் உவமையாவர்.*

*தயரதன் சென்ற காட்சி*

***803. நித்திய நியமம் முற்றி.***
***நேமியான் பாதம் சென்னி***
***வைத்த பின். மறை வல்லோர்க்கு***
***வரம்பு அறு மணியும் பொன்னும்.***
***பத்தி ஆன் நிரையும். பாரும்.***
***பரிவுடன் நல்கி. போனான்-***
***முத்து அணி வயிரப் பூணான்.***
***மங்கல முகிழ்த்த நல் நாள்.***

***முத்து*** - *முத்துக்களினாலும்;* ***அணிவயிரம்*** - *அழகிய வயிர மணிகளாலும்;* ***பூணான்*** - *இயன்ற அணிகளைப் பூண்டவனான தசரதன்;* ***நித்திய நியமம் முற்றி*** - *(தன்) நித்தியக் கடமைகளை முடித்துவிட்டு;* ***நேமியான் பாதம்*** - *சக்கரம் ஏந்திய திருமாலின் பாதங்களை;* ***சென்னி வைத்தபின்*** - *(தன்) முடியிலே வைத்த பின்பு; (குலதெய்வமான திருமாலை வணங்கின பின்னர்);* ***மறை வல்லோர்க்கு*** - *வேதங்களில் வல்ல அந்தணர்களுக்கு;* ***வரம்பு அறு*** - *எல்லையற்ற;* ***மணியும் பொன்னும்*** - *இரத்தினமும் பொன்னும்;* ***பத்தி ஆன் நிரையும்*** - *வரிசையான பசுக் கூட்டங்களையும்;* ***பாரும்*** - *பூமியையும்;* ***பரிவுடன்*** - *மன மகிழ்ச்சியோடு;* ***நல்கி*** - *தானம் செய்து;* ***மங்கலம் முகிழ்த்த*** - *மங்கலம் மலர்ந்த;* ***நன்னாள்*** - *நல்ல நாளில்;* ***போனான்*** - *புறப்பட்டுச் சென்றான்.*

*அரசர்கள் பயணத்தைத் தொடங்குவதற்கு முன் இரத்தினம். பொன். பசு. பூமி முதலியன தானம் செய்தல் மரபு. திருவடியைச் சென்னியில் வைத்தல் என்பது வீழ்ந்து வணங்குதலாகும்.*

***804.* இருபிறப்பாளர் எண்ணா**
***யிரர். மணிக் கலசம் ஏந்தி.***
***அரு மறை வருக்கம் ஓதி.***
***அறுகு நீர் தெளித்து வாழ்த்தி.***
***வரன்முறை வந்தார். கோடி***
***மங்கல மழலைச் செவ் வாய்ப் பரு மணிக் கலாபத்தார். பல்***
***லாண்டு இசை பரவப் போனான்.***

***இருபிறப்பாளர் எண்ணாயிரர்*** - *எண்ணாயிரம் அந்தணர்கள்;* ***மணிக் கலசம் ஏந்தி*** - *இரத்தின கும்பங்களைக் கையில் ஏந்திக் கொண்டு;* ***அருமறை*** - *உணர்வதற்கு அரிய வேதமந்திரங்களின்;* **வருக்கம் ஓதி** *-தொகுதிகளை ஓதிக் கொண்டு;* ***அங்கை நீர் தெளித்து*** *- (தம்) கையால் கலச நீரைத் தெளித்து;* **வாழ்த்த** *- வாழ்த்துக் கூறவும்;* ***மங்கல மழலைச் செவ்வாய்*** *- மங்கலமான மழலைச் சொல்லைப் பேசும் சிவந்த வாயையும்;* ***பருமணிக் கலாபத்தார்*** *- பருத்த மாணிக்கங்களாலான மேகலையையும் உடையவர்களாகிய;* **வரன்முறை வந்தார்** *- பரம்பரையாக அரசருக்குப் பல்லாண்டு பாடும் குலத்தில் பிறந்தவர்களான;* **கோடி** *- கோடிக்கணக்கான பெண்கள்;* **பல்லாண்டு இசை பரவ** *- பல்லாண்டை இசையோடு பாடிவரவும்;* **போனான்** *- சென்றான்.*

*தசரதன் செல்லும்போது அந்தணர் வேத மந்திரங்களைச் சொல்லிக் கலச நீர் தெளித்து வாழ்த்த. மங்கையர் பலர் பல்லாண்டு பாடினர். இரு பிறப்பாளர் - உபநயனத்திற்குமுன் ஒரு பிறப்பும். உபநயனத்தின்பின் ஞானப் பிறப்பான மற்றொரு பிறப்பும் ஆகிய இரு பிறப்புடையவர் அந்தணர். மணிக் கலசம் - பூரண கும்பம் - மங்கலத்திற்காகப் பூரண கலசம் எடுத்தல் மரபு.*

***805.* ‘கண்டிலன் என்னை’ என்பார்;**
***‘கண்டனன் என்னை’ என்பார்;***
***‘குண்டலம் வீழ்ந்தது’ என்பார்;***
***‘குறுக அரிது. இனிச்சென்று’ என்பார்;***
***‘உண்டுகொல். எழுச்சி?’ என்பார்;***
***‘ஒலித்தது சங்கம்’ என்பார்;***
***மண்டல வேந்தர் வந்து***
***நெருங்கினர். மயங்க மாதோ.***

***சங்கம் ஒலித்தது*** - *(சிலர்) சங்கு ஒலித்தது;* ***என்பார்*** - *என்பவரும் ;* ***எழுச்சி உண்டு கொல்*** - *(அரசன்) புறப்பாடு இருக்கும்போலும்;* ***என்பார்*** - *என்பார்களும்;* ***மண்டல வேந்தர்*** - *பெருந்திரளான அரசர்கள்;* ***மயங்க வந்து*** - *ஒன்றாகச் சேர்ந்து வந்து;* ***என்னைக் கண்டிலன்*** - *(சிலர்) என்னைக் (இவ்வரசன்) காணவில்லை;* ***என்பாரும்*** - *என்பவரும்;* ***என்னைக் கண்டனன்*** - *(சிலர்) என்னைக் கண்டான்;* ***என்பாரும்*** - *என்பவரும்;* ***குண்டலம் வீழ்ந்தது*** - *(சிலர்) எனது குண்டலம் கீழே வீழ்ந்து விட்டது;* ***என்பாரும்*** - *என்பவரும்;* ***இனிச் சென்று*** - *(சிலர்) இனிமேல் போய்;* ***குறுக அரிது என்பார்*** - *(அந்த அரசனை) அணுக முடியாது என்பார்களுமாகி;* ***நெருங்கினர்*** - *(அரசனைத் தொடர்ந்து) நெருங்கி நின்றார்கள். வந்திருந்த மண்டல அரசர்கள் ஒவ்வொருவரும் இவ்வாறு கூறிக்கொண்டே வந்து தசரதனை நெருங்கினர் என்பது.*

***806. பொற்றொடி மகளிர் ஊரும்***
***பொலன் கொள் தார்ப் புரவி வெள்ளம்.***
***சுற்றுறு கமலம் பூத்த***
***தொடு கடல் திரையின் செல்ல.***
***கொற்ற வேல் மன்னர் செங் கைப்***
***பங்கயக் குழாங்கள் கூம்ப***
***மற்று ஒரு கதிரோன் என்ன.***
***மணி நெடுந் தேரில் போனான்.***

***பொன் தொடி மகளிர்*** - *பொன் வளையல் அணிந்த பெண்கள்;* ***ஊரும்*** - *ஏறிச் செல்லும்;* ***பொலன் கொள்*** - *பொன்னாலாகிய;* ***தார்ப் புரவி வெள்ளம்*** - *கிண்கிணி மாலையணிந்த குதிரைகளின் கூட்டம்;* ***சுற்று உறு கமலம்*** - *சுற்றிலும் தாமரைப் பூக்கள்;* ***பூத்த*** - *மலர்ந்துள்ள;* ***தொடுகடல்*** - *தோண்டப் பெற்ற கடலின்;* ***திரையின் செல்ல*** - *அலைகளைப் போலச் செல்ல;* ***கொற்றவேல் மன்னர்*** - *வெற்றி பொருந்திய வேல் ஏந்திய அரசர்களின்;* ***செங்கை பங்கயக் குழாங்கள்*** - *சிவந்த கைகளாகிய தாமரைக் கூட்டங்கள்;* ***கூம்ப*** - *குவிய;* ***மற்றொரு கதிரோன் என்ன*** - *வேறொரு சூரியனைப் போல;* ***மணி நெடுந் தேரில்*** - *மணிகள் கட்டிய பெரிய தேரிலே;* ***போனான்*** - *ஏறிச் சென்றான் (தசரதன்).*

*இயற்கைக்கு மாறாகத் தாமரை குவியச் செய்தலானும். மண்ணிடைச் செல்லுதலானும் மற்றொரு கதிரோன் என்றார். தாமரை மலர்களை மலர்விக்கும் சூரியனைவிட வேறுபட்டுத் தாமரை மலர்களைக் குவிக்கும் ஒரு சூரியன் இத்தசரதனுக்கு ஒப்பாகும் என்றார். - வேற்றுமையணி. மகளிரையுடைய புரவி வெள்ளம் கமலம் பூத்த கடலின் அலைக்கு உவமையாயிற்று. கமலம் பூத்த கடல் திரை - இல்பொருள் உவமை.*

***807.* ஆர்த்தது. விசும்பை முட்டி;**
**மீண்டு. அகன் திசைகள் எல்லாம்**
**'போர்த்தது; அங்கு ஒருவர்தம்மை**
**ஒருவர் கட்புலம் கொளாமை**
**தீர்த்தது; செறிந்தது ஓடி.**
**திரை நெடுங் கடலை எல்லாம்**
**தூர்த்தது. சகரரோடு**
**பகைத்தென. - தூளி வெள்ளம்.**

**தூளிவெள்ளம்** - *(சேனையால் எழுப்பப்பட்ட) புழுதிக் கூட்டம்;* **ஆர்த்தது** - *நிரம்பியதாய்;* **விசும்பை முட்டி** - *வானத்தைத் தாக்கி;* **மீண்டு** - *(மேலே செல்ல இடம் இல்லாததால்) திரும்பி;* **அகல் திசைகள் எங்கும்** - *அகன்ற திசைகள் எல்லாவற்றையும்;* **போர்த்தது** - *மூடிக் கொண்டது;* **அங்கு** - *அத்திசைகளில்;* **ஒருவர்தம்மை ஒருவர்** - *ஒருவரையொருவர்;* **கண் புலம் கொளாமை** - *கண்களால் பார்க்க முடியாதபடி;* **தீர்த்தது** - *செய்து முடித்தது;* **செறிந்தது ஓடி** - *(பின்பு அது) நெருக்கமாக விரைந்து ஓடி;* **சகரரோடு பகைத்தது என** - *சகரரோடு பகை கொண்டதுபோல;* **திரை நெடுங் கடலை எல்லாம்** - *அலைகளோடு கூடிய கடலையெல்லாம்;* **தூர்த்தது** - *தூர்த்துவிட்டது.*

*தூளிவெள்ள மிகுதியை விளக்கக் கடலைத் தூர்த்ததாகக் கூறப்பட்டது. - தொடர்பு உயர்வு நவிற்சியணி. தூர்த்தற்குப் 'பகைத்தென' என்று காரணம் கற்பித்துக் கூறியது ஏதுத் தற்குறிப்பேற்ற அணி.*

***808.* சங்கமும் பணையும் கொம்பும்**
**தாளமும் காளத்தோடு**
**மங்கல பேரி செய்த**
**பேர் ஒலி மழையை ஓட்ட.**
**தொங்கலும் குடையும் தோகைப்**
**பிச்சமும் சுடரை ஓட்ட.**
**திங்கள் வெண்குடை கண்டு ஓட.**
**தேவரும் மருள. - சென்றான்.**

**சங்கமும்** - *சங்க வாத்தியமும்;* **பணையும்** - *புல்லாங்குழலும்;* **கொம்பும்** - *ஊதுகொம்புகளும்;* **தாளமும்** - *கைத்தாளமும்;* **காளத்தோடு** - *எக்காளமும்;* **மங்கல பேரி** - *மங்கலத்தைத் தெரிவிக்கும் பேரிகையும்;* **செய்த பேரொலி** - *எழுப்பிய பெரிய ஓசையானது;* **மழையை** - *மேகத்தில் தோன்றும் இடியை;* **ஓட்ட** - *துரத்தவும்;* **தொங்கலும்** - *பூமாலைகளும்;* **குடையும்** - *குடைகளும்;* **தோகைப் பிச்சமும்** - *'மயிலின் தோகையால் செய்த பிச்சங்களும்;* **சுடரை ஓட்ட** - *வெயிலை மறைக்கவும்;* **திங்கள் வெண்குடை** - *சந்திரன் வெண்கொற்றக் குடையை;* **கண்டு ஓட** - *கண்டு ஓடவும்;* **தேவரும் மருள** - *தேவர்களும் மயங்கும்படி;* **சென்றான்** - *(தசரதன்) மேன்மையாகப் போனான்.*

*தொங்கல் முதலியன அரசர் செல்லும்போது பிடிக்கப்படும் விருதுகள். பிச்சம் - மயில்பீலியால் செய்யப் பெற்ற ஒன்று. வெண்கொற்றக் குடையின் நிறமும். குளிர்ச்சி தரும் பெருமையும் தனக்கு இல்லையே என்று சந்திரன் வெட்கப்பட்டு ஓடினான் என்பது.*

***809.*** **மந்திர கீத ஓதை.**
**வலம்புரி முழங்கும் ஓதை.**
**அந்தணர் ஆசி ஓதை.**
**ஆர்த்து எழு முரசின் ஓதை.**
**கந்து கொல் களிற்றின் ஓதை.**
**கடிகையர் கவியின் ஓதை.-**
**இந்திர திருவன் செல்ல -**
**எழுந்தன. திசைகள் எல்லாம்.**

***இந்திர திருவன்*** *- இந்திரனது செல்வம் போன்ற செல்வத்தைக் கொண்டவனாகிய தசரதன்;* ***செல்ல*** *- செல்லுகையில்;* ***மந்திர கீதம் ஓதை*** *- வேத மந்திரங்களாகிய பாட்டோசையும்;* ***வலம்புரி முழங்கும் ஓதை*** *- வலம்புரிச் சங்குகள் முழங்குகின்ற ஓசையும்;* ***அந்தணர் ஆசி ஓதை*** *- அந்தணர்களின் வாழ்த்து ஒலியும்;* ***ஆர்த்தெழு முரசின் ஓதை*** *- ஆரவாரித்து எழுகின்ற முரசங்களின் முழக்கமும்;* ***கந்து கொல்*** *- கட்டுத் தறியை முறிக்கின்ற;* ***களிற்றின் ஓதை*** *- யானைகள் பிளிறும் ஓசையும்;* ***கடிகையர் கவிதை ஓதை*** *- நாழிகைக் கணக்கரின் நாழிகைப் பாடடின் ஓசையும் (ஆகிய இவை);* ***திசைகள் எல்லாம் எழுந்தன*** *- திக்குகள் எங்கும் எழுந்தன.*

*மந்திர கீதம் - சாமகானம். நாழிகைக் கணக்கர் நாழிகையைப் பாடல் வாயிலாகக் குறிப்பர்.*

***810.*** **நோக்கிய திசைகள் எல்லாம்**
**தன்னையே நோக்கிச் செல்ல.**
**வீக்கிய கழற் கால் வேந்தர்**
**விரிந்த கைம் மலர்கள் கூப்ப.**
**தாக்கிய களிறும் தேரும்**
**புரவியும் படைஞர் தாளும்**
**ஆக்கிய தூளி. விண்ணும்**
**மண்ணுலகு ஆக்க. - போனான்.**

***நோக்கிய திசைகள் எல்லாம்*** - *பார்க்கின்ற திக்குகள் யாவும்;* ***தன்னையே நோக்கிச் செல்லும்*** - *(அரசனது பார்வை எப்போது தன் மீது பதியும் என்ற கருத்துடன்) தன்னையே பார்த்துக் கொண்டு செல்லும்;* ***கழல் வீக்கிய கால்வேந்தர்*** - *காலில் வீரக்கழல் அணிந்துள்ள அரசர்கள்;* ***விரிந்த கை மலர்கள் கூப்ப*** - *மலர்ந்த தாமரை போன்ற தம் கைகள் கூப்பவும்;* ***தாக்கிய களிறும்*** - *(ஒன்றோடு ஒன்று) மோதிக் கொண்டு செல்லும் யானைகளும்;* ***தேரும் புரவியும்*** - *தேர்களும் குதிரைகளும்;* ***படைஞர் தாளும்*** - *காலாட்படைகளின் பாதங்களும்;* ***ஆக்கிய*** - *மேலே எழுப்பிய;* ***தூளி*** - *புழுதிகள்;* ***விண்ணும்*** - *வானத்தையும்;* ***மண்ணுலகு ஆக்க*** - *மண்ணுலகமாக்கவும்;* ***போனான்*** - *சென்றான். தசரத மன்னவனின் பார்வை விழும்போது எல்லாம் அவனையே காண்கின்ற மன்னவரின் கைகள் குவிகின்றன என்பது.*

***811. வீரரும். களிறும். தேரும்.***
***புரவியும் மிடைந்த சேனை.***
***பேர்வு இடம் இல்லை; மற்று ஓர்***
***உலகு இல்லை; பெயர்க்கலாகா;***
***நீருடை ஆடையாளும்***
***நெளித்தனள் முதுகை என்றால்.***
***‘பார் பொறை நீக்கினான்’ என்று***
***உரைத்தது எப் பரிசு மன்னோ?***

***வீரரும்*** - *காலாள் வீரர்களும்;* ***களிறும் தேரும்*** - *யானையும் தேர்களும்;* ***புரவியும் மிடைந்த சேனை*** - *குதிரையும் (என்ற நால்வகைப் படையும்) நெருங்கியுள்ள சேனைகளும்;* ***பெயர்வது ஆக*** - *(இந்த இடத்தைவிட்டு) அப்பாலே செல்வதென்றாலும்;* ***பேர்வு*** - *நிலைபெயர்ந்து செல்வதற்கு;* ***இடம் இல்லை*** - *வேறொரு இடமில்லை;* ***மற்று ஓர் உலகு இல்லை*** - *(?ஏனென்றால்) வேறொரு வெற்றுலகும் இல்லையாதலால்;* ***நீர் உடைய ஆடையாளும்*** - *கடலாகிய நீரை ஆடையாக உடைய பூமிதேவியும் (அந்த நாற்படைகளின் பாரத்தைப் பொறுக்கமாட்டாமல்);* ***முதுகை நெளித்தனள்*** - *தன் முதுகை நெளித்துக் கொடுத்தாள்;* ***என்றால்*** - *என்றால் (தசரதன்);* ***பார்பொறை*** - *பூமியின் சுமையை;* ***நீக்கினான்*** - *போக்கினான்;* ***என்று உரைத்தது*** - *என்று அறிவுடையோர் கூறியது;* ***எப் பரிசு*** - *எவ்வாறு பொருந்தும்?*

*நால்வகைச் சேனைகளும் அசைந்து கொடுக்கவும் இடமில்லை; மாற்றி வைக்கவும். மற்றோர் உலகமில்லை. ஆதலால் சுமை தாங்காது பூமி நெளிந்தாள் என்றால் அரசன் பூமிபாரம் தீர்த்தான் என்று கூறல் எவ்வாறு பொருந்தும்? என்பது வஞ்சப் புகழ்ச்சியாம்.*

*சந்திரசயிலச் சாரலில் தங்குதல்*

***812.*** ***இன்னணம் ஏகி. மன்னன்***
***யோசனை இரண்டு சென்றான்;***
***பொன் வரை போலும் இந்து***
***சயிலத்தின் சாரல் புக்கான்;***
***மன்மதக் களிறும். மாதர்***
***கொங்கையும். மாரன் அம்பும்.***
***தென்வரைச் சாந்தும். நாறச்***
***சேனை சென்று. இறுத்தது அன்றே.***

***மன்னன்*** - *மன்னவர்க்கு மன்னனாகிய தசரதன்;* ***இன்னணம்*** - *இவ்வகையாக;* ***ஏகி*** - *புறப்பட்டு;* ***யோசனை இரண்டு*** - *இரண்டு யோசனை தூரம்;* ***சென்றான்*** - *சென்றான்;* ***பொன்வரை போலும்*** - *(பின்பு) மேரு மலையை ஒத்த;* ***இந்து சயிலத்தின்*** - *சந்திர சயில மலையின்;* ***சாரல் புக்கான்*** - *சாரலை அடைந்தான்;* ***மன்மதன் களிறும்*** - *மன்மதனது யானை என்று சொல்லப்படும் இரவு போன்ற பெண்களின் கூந்தலும்;* ***மாதர் கொங்கையும்*** - *மாதரின் தனங்களும்;* ***மாரன் அம்பும்*** - *மன்மதனுடைய அம்புகளாகிய மலர்களாலும்;* ***தென்வரை சாந்தும்*** - *பொதிய மலைச் சந்தனத்தின் குழம்பாலும்;* ***நாறும்*** - *நறுமணம் வீசுவதற்கு இடமாகவுள்ள;* ***சேனையும்*** - *அச்சதுரங்க சேனையும்;* ***இறுத்தது*** - *(அம் மலைச் சாரலில்) தங்கியது.*

*மன்மதனது களிறு - கங்குலாகும். மகளிர் கூந்தலை உருவகமாக 'மன்மதக் களிறு' என்றார். முறை நிரல் நிரையணி.*

## சந்திரசயிலப் படலம்

**படலத்தின் பெயரமைதி:**

தசரத மன்னனுடன் சென்ற சேனைகள் சந்திரசயிலம் என்னும் மலையைக் கண்டதுபற்றிக் கூறும் பகுதியாக இருப்பதால் இப்பெயர் அமைந்தது.

**படலத்தின் செய்திச் சுருக்கம்:**

யானை. தேர்களின் செயல்கள் கூறப்பெறுகின்றன. மகளிர் இளைப்பாறித் துயில் கொண்டார்கள். மைந்தரும் மங்கையரும் திரிந்தார்கள். பட மாடங்களில் வதிந்தார்கள். யானைகளும். குதிரைகளும் வருகின்றன; ஊற்றுநீர் சுரந்தது; வீரர்கள் மாடத்தினுள் நுழைந்தார்கள்; யானைகள் நீரைக் கலக்கின; அட்டிலில் புகை எழுந்தது. சேனைகள் பொலிவுபெற்று விளங்கின.

யானைகளின் செயல்கள்

**கலித்துறை**

**813. கோலை ஆர் வடக் கொழுங் குவடு**
**ஒடிதர நிவந்த.**
**ஆவி வேட்டன. வரி சிலை**
**அனங்கன் மேல் கொண்ட.**
**பூவை வாய்ச்சியர் முலை சிலர்**
**புயத்தொடும் பூட்ட.**
**தேவதாரத்தும். சந்தினும்.**
**பூட்டின - சில மா.**

**கோவை ஆர்** - முத்துவடம் முதலியன நிரம்ப அணைந்துள்ளனவும்; **வட கொழுங்குவடு** - வடதிசையிலுள்ள செழித்த மேருமலையும்; **ஒடிதர** - தோற்கும்படி?; **நிவந்த** - உயர்ந்துள்ளனவும்; **ஆவிவேட்டன** - (தம் காதலரான) ஆடவரின் உயிரை(க் கொள்ளை கொள்ள) விரும்பியனவும்; **வரிசிலை அனங்கன்மேல்** - கட்டமைந்த வில்லையுடைய மன்மதனால் தன் தொழிலுக்குக் (காம வேட்கை எழுப்பவும்); **கொண்ட** -ஆடவர் கருவியாகக் கொண்ட; **முலைகளை** - (தம்) கொங்கைகளை; **பூவை வாய்ச்சியர்** - நாகணவாய்ப் புள்ளைப் போல இனிய சொற்கள் பேசும் மகளிர்; **சிலர் புயத்தொடும் பூட்ட** - ஆடவர் சிலரின் புயங்களோடு அணைக்க; **கோவை ஆர் வடம்** - வானத்தையளாவிய ஆலமரத்தின்; **கொழுங் குவடு ஒடிதர** - செழித்த கிளைகள் ஒடியும்படி; **நிவந்த** - ஓங்கியனவும்; **ஆவிவேட்டன** - (தண்ணீர் பருக) தடாகத்தை விரும்பியனவும்; **வரிசிலை அனங்கன்** - கட்டமைந்த வில்லையுடைய மன்மதனைப் போன்ற வீரனை; **மேல்கொண்ட** - (தம்) மேல் கொண்டிருப்பனவுமான; **சிலமா** - சில யானைகள்; **தேவதாரத்தும்** - தேவதார மரங்களிலும்; **சந்தினும்** - சந்தன மரங்களிலும்; **பூட்டின** - கட்டப்பட்டன.

*சந்திரசயில மலையில் யானைகளின் மேல் இருந்த மகளிர். தம் தனங்கள் கணவரின் தோள்களில் படுமாறு அவரைத் தழுவியவாறு கீழே இறங்கினர்; அந்த யானைகள் மரங்களில் கட்டப்பட்டன. சிலேடையணி - கொங்கைக்கும் யானைக்கும் சிலேடை. தேவதாரு. சந்தனம் என்ற மரங்களில் யானைகள் பூட்டப்பட்டனபோல. பெண்களால் தனங்கள் ஆண்களின் தோள்களில் பூட்டப்பட்டன என்ற உவமை தொனிக்கிறது.*

*தனங்களுக்கு யானைகளும். தோள்களுக்குக் கட்டுத்தறியாக உதவும் மரங்களும் உவமை. தனங்கள் தம் காதலர்க்குக் காமவேதனையை மிகுதியாக உண்டாக்குவதால் 'அனங்கன் மேற்கொண்ட' என்றும். 'ஆவி வேட்டன' என்றும் கூறினார்.*

*முலை - 'ஆவி வேட்டன' - அகிற்புகையை விரும்பின; வரிசிலை அனங்கன்மேல் கொண்ட -கட்டமைந்த கரும்பு வில்லையும் மன்மதனையும் தொய்யிலாக மேலே எழுதப்பெற்றன.*

***814. நேர் ஒடுங்கல் இல் பகையினை***
***நீதியால் வெல்லும்***
***சோர்வு இடம் பெறா உணர்வினன்***
***சூழ்ச்சியே போல.***
***காரொடும் தொடர் கவட்டு எழில்.***
***மராமரக் குவட்டை***
***வேரொடும் கொடு. கிரி என***
***நடந்தது - ஓர் வேழம்.***

**ஓர் வேழம்** - *ஒரு யானையானது;* **நேர் ஒடுங்கல் இல்** - *நேராக அடங்காத;* **பகையினை** - *பகைவரை;* **நீதியால் வெல்லும்** - *(அரச) தந்திரத்தால் வெல்லுகின்ற;* **சோர்வு இடம்பெறா** - *மனத் தளர்ச்சியில்லாத;* **உணர்வினன்** - *நல்லுணர்வுடைய அரசனது;* **சூழ்ச்சி போல** - *ஆலோசனை போல;* **காரொடும் தொடர் கவடு** - *மேக மண்டலத்தை அளாவும் கிளைகளையுடைய;* **எழில் மராமரம்** - *அழகிய மராமரத்தின்;* **குவட்டை** - *அடிப்பகுதியை; வேரொடும் கொடு - வேரோடு பறித்துக்கொண்டு;* **கிரிஎன** - *மலைபோல;* **நடந்தது** - *நடந்து சென்றது. கட்டிய மரத்திலிருந்து தன்னை விடுவிக்க எண்ணிய யானையொன்று. தன் சூழ்ச்சியால் அம் மரம் முழுவதையும் வேரோடு சாய்த்து இழுத்துச் சென்றது. இது. தன்னைப் போரில் அகப்படுத்திய பகைமன்னனிடமிருந்து விடுவிக்க வேண்டித் தந்திரத்தைக் கையாண்ட தளராத ஊக்கமுடையவனது செயல் போன்றது. குவடு - ஆகுபெயர்.*

***815. திரண்ட தாள் நெடுஞ் செறி பணை***
***மருது இடை ஒடியப்***
***புரண்டு பின் வரும் உரலொடு***
***போனவன் போல.***
***உருண்டு கால் தொடர் பிறகிடு***
***தறியொடும். ஒருங்கே***
***இரண்டு மா மரம் இடை இற***
***நடந்தது - ஓர் யானை.***

***திரண்ட தாள்*** *- திரண்ட அடிப்பகுதியையும்;* ***நெடுஞ் செறி பணை*** *- நீண்ட செறிவான கிளைகளையும் உடைய;* ***மருது*** *- இரட்டை மருத மரங்கள்;* ***இடை ஒடிய*** *- நடுவே முறிந்து விழும்படி;* ***புரண்டு பின் வரும்*** *- புரண்டு (தன்) பின்னே வருகின்ற;* ***உரலொடு*** *- உரலுடன்;* ***போனவன்போல*** *- (அம் மரங்களின் இடையே) தவழ்ந்து சென்ற கண்ணன் போல;* ***ஓர் யானை*** *- ஒரு யானையானது;* ***உருண்டு கால் தொடர்*** *- உருண்டவாறு தன் பின்னங்கால்களின் ஊடே தொடர்ந்து;* ***பிறகிடு*** *- வருகின்ற; தறியொடும் - கட்டுத் தறியோடும்;* ***ஒருங்கு இரண்டு*** *- ஒருசேர இரண்டு;* ***மாமரம் இடை இற*** *- மாமரங்கள் (தம்முடைய) நடுப்பகுதி முறிந்து விழும்படி;* ***நடந்தது*** *- நடந்து சென்றது.*

*யசோதையால் உரலில் கட்டப்பட்ட கண்ணன் அந்த உரலோடு அருகில் இருந்த இரட்டை மருத மரங்களிடையே செல்ல அம் மரங்கள் முறிந்து வீழ்ந்தன என்பது வரலாறு.*

*தன்னைக் கட்டியிருந்த கட்டுத்தறியை இழுத்துக் கொண்டு விரைந்து செல்லுகையில் அக் கட்டுத் தறியால் இரண்டு மாமரங்கள் முறிந்துவிழச் செய்தது ஒரு யானை. இதற்குத் தன் தாயால் கட்டப்பட்ட உரலை இழுத்துச் செல்லுகையில் இரட்டை மருத மரங்களை முறித்த கண்ணனை உவமையாக்கினார் - உவமையணி.*

***816. கதம் கொள் சீற்றத்தை ஆற்றுவான்.***
***இனியன கழறி.***
***பதம் கொள் பாகனும் மந்திரி***
***ஒத்தனன்; பல் நூல்***
***விதங்களால். அவன். மெல்லென***
***மெல்லென விளம்பும்***
***இதங்கள் கொள்கிலா இறைவனை***
***ஒத்தது - ஓர் யானை.***

***கதம் கொள் சீற்றத்தை*** - *கறுவு கொள்ளும் கோபத்தை;* ***ஆற்றுவான்*** - *தணிக்கும் பொருட்டு;* ***இனியன கழறி*** - *(அந்த யானைக்கு) இனிமையான வார்த்தைகளைக் கூறி;* ***பதம் கொள்*** - *(பக்குவமாக அதனை) வசப்படுத்த முயலும்;* ***பாகனும்*** - *யானைப் பாகனும்;* ***மந்திரி ஒத்தனன்*** - *(தவறான வழியில் செல்லும் அரசனை வசப்படுத்த முயலும்) அமைச்சனை ஒத்திருந்தான்;* ***ஓர்யானை*** - *(அப்போது அப் பாகனது இன்சொல்லைக் கொள்ளாது வெறிகொண்ட) ஒரு யானையானது;* ***பன்னூல் விதங்களால்*** - *பல நூல்களில் கூறிய முறைக்கு ஏற்ப;* ***அவன்*** - *அந்த அமைச்சன்;* ***மெல்லென மெல்லென*** - *(மன்னவன் மனங்கொள்ளுமாறு) மெல்ல மெல்ல;* ***விளம்பும்*** - *சொல்லுகின்ற;* ***இதங்கள்*** - *நன்மை பயக்கும் சொற்களை;* ***கொள்கிலா*** - *காது கொடுத்துக் கேட்காத (மாறான வழிச்செல்லும்);* ***இறைவனை*** - *அரசனை;* ***ஒத்தது*** - *ஒப்பதாக ஆயிற்று.*

*பாகனுடைய இன்சொல்லைக் கேளாது மதவெறி கொண்ட யானைக்கு. அமைச்சனின் இனிய சொல்லைக் கேளாது மாறுவழியில் நடக்கின்ற மன்னவன் உவமை. 'மதக்களிறு வலியாக். கதம்தலையழியக் கந்தோடு ஆர்த்து சாமகீத ஓசையில் தணிக்கும் நூலறி பாகரொடு' - (பெருங் 1.44:61 -64*

*4*

***817. மாறு காண்கிலதாய் நின்று.***
***மழை என முழங்கும்***
***தாறு பாய் கரி. வன கரி***
***தண்டத்தைத் தடவி.***
***பாறு பின் செல. கால் எனச்***
***செல்வது. பண்டு ஓர்***
***ஆறு போகிய ஆறு போம்***
***ஆறு போன்றதுவே.***

***மாறு*** - *(தனது) பகையை;* ***காண்கிலதாய் நின்று*** - *காணப் பெறாமல் நின்று;* ***மழை என முழங்கும்*** - *மேகம் போல இடித்தொலிக்கின்றதும்;* ***தாறு பாய் கரி*** - *இரும்பு முள்ளால் குத்தப் பெற்றதுமாகியயானை;* ***வனம் கரி தண்டத்தை*** - *காட்டு யானைகள் சென்ற ஒரு வழியை;* ***தடவி*** - *பின்பற்றி;* ***பாறு பின்செல*** - *பருந்துகள் பின்னால் தொடர்ந்து வர;* ***கால் எனச் செல்வது*** - *காற்றைப் போல விரைந்து செல்வது;* ***பண்டு ஓர் ஆறு போகிய*** - *முன்பு நதி சென்ற வழியே;* ***ஆறு போம்*** - *செல்லுகின்ற;* ***ஆறு*** - *ஆற்றை;* ***போன்றது*** - *ஒத்தது. தனக்கு ஒரு பகையைக் காணமுடியாமல் காட்டு யானைகள் கூட்டமாகச் செல்லும் பெருவழியில் அவற்றின் மோப்பத்தையுணர்ந்த யானை (சேனை) யொன்று. அவை பகையினம் என்று கருதிப் பாகனுக்கும் அடங்காமல். வெறிகொண்டு அவ் யானைக் கூட்டம் சென்ற வழியே தனிவழியை உண்டாக்கிக் கொண்டு விரைந்து சென்றது. அது பழமையான நதி செல்லும் வழியை நாடியவாறு மற்றொரு சிற்றாறு பெருக்கெடுத்துச் செல்வது போன்று உள்ளது என்றார். யானையின் வேகத்தால் பறவைகள் சிதறப்பெறுவதாலும். எதிர்ந்த உயிர்களைக் கொன்று செல்வதால் அவற்றின் இறைச்சி வேட்கையாலும் 'பாறு பின்செல' என்றார். தண்டம்; யானை செல்வழி. 5*

***818. பாத்த யானையின் பதங்களில்***
***படு மதம் நாற.***
***காத்த அங்குசம் நிமிர்ந்திட.***
***கால் பிடித்து ஓடி.***
***பூத்த ஏழிலைப் பாலையைப்***
***பொடிப் பொடி ஆக.***
***காத்திரங்களால். தலத்தொடும்***
***தேய்த்தது - ஓர் களிறு.***

***பாத்த யானையின்*** - *(அணியணியாக) பிரித்துள்ள யானைகளைக் கட்டிய;* ***பதங்களில்*** - *இடங்களில்;* ***படு மதம்*** - *தோன்றும் மதநீரின்;* ***நாற*** - *மணம் போன்று (ஏழிலைப் பாலையிலிருந்து) மணம் வீசியதால்;* ***ஓர் களிறு*** - *(அதைத் தாங்காத) ஒரு யானையானது;* ***காத்த அங்குசம் நிமிர்ந்திட*** - *(தன்னைக் கட்டுப்படுத்துகின்ற பாகன் கையிலுள்ள அங்குசமானது நிமிர்ந்து விடும்படி;* ***கால்பிடித்து ஓடி*** - *(மதத்தின் மணம் வந்த) வழியைப் பற்றிக் கொண்டு ஓடிப்போய்;* ***பூத்த ஏழிலப் பாலையை*** - *(மதமணம் வருவதற்குக் காரணமான) பூத்துள்ள ஏழிலைப் பாலை மரத்தை;* ***பொடிப் பொடி ஆக*** - *சிறுசிறு தூள்களாகுமாறு;* ***காத்திரங்களால்*** - *முன்னங்கால்களால்;* ***தலத்தொடும் தேய்த்தது*** - *தரையோடு தேய்த்துவிட்டது.*

*சேனை தங்கிய சந்திர சயிலத்தின் சாரலில். ஏழிலைப் பாலை மரத்திலிருந்து யானையின் மதமணம் போன்ற மணம் வீச. யானைக் கூட்டத்திலிருந்த யானைகளில் ஒன்று மோப்பத்தால் அதையுணர்ந்து மதவெறியால் பாகனுக்கு அடங்காமல் அங்குசமும் நிமிர்ந்திட மதமணம் வந்த வழியை நாடிச் சென்று அங்குள்ள ஏழிலைப்பாலை மரத்தைப் பொடிபொடியாக ஆகுமாறு தன் முன்னங்கால்களால் தேய்த்தது என்றார். ஏழிலைப் பாலை: ஏழு நிரையாக அடுக்கிய நீண்ட இலைகளையுடைய பாலை என்பார் பரிமேலழகர் (பரிபா. 21-13) 'சப்த பர்ணீ' என்று இதனை வடமொழியில் குறிப்பர்.*

***819. அலகு இல் ஆனைகள் அநேகமும்.***
***அவற்றொடு மிடைந்த***
***திலக வாள் நுதல் பிடிகளும்.***
***குருளையும். செறிந்த***
***உலவை நீள் வனத்து. ஊதமே***
***ஒத்த; அவ் ஊதத்***
***தலைவனே ஒத்துப் பொலிந்தது.***
***சந்திரசயிலம்.***

-indent: 30"> **அலகு இல் யானைகள்** - (உருவம் வலிமைகளை) அளவிடமுடியாத ஆண் யானைகள்; **அநேகமும்** - பலவும்; **அவற்றொடு மிடைந்த** - அவ் யானைகளோடு நெருங்கியுள்ள; **திலகம் வாள் நுதல்** - சிந்துரத் திலகம் தீட்டிய ஒளியுள்ள நெற்றியையுடைய; **பிடிகளும்** - பெண்யானைகளும்; **குருளையும்** - யானைக் குட்டிகளும்; **செறிந்த** - நெருங்கியிருந்தவை; **உலவை நீள் வனத்து** - மரங்கள் மிகுந்துள்ள நீண்ட வனத்திலே; **ஊதமே ஒத்த** - வாழும் காட்டு யானைக் கூட்டத்தை ஒத்திருந்தன; **சந்திர சயிலம்** - அந்தச் சந்திர சயிலமானது; **அவ் ஊதத் தலைவனே** - அந்த யானைக் கூட்டத்தின் தலைவனை; **ஒத்துப் பொலிந்தது** - ஒத்து விளங்கியது.

சேனையிலுள்ள யானைகள் சந்திரசயிலத்து அருகில் இருந்த தோற்றம். காட்டு யானைக் கூட்டமும். யானைக் கூட்டத் தலைவனும் போன்று இருந்தது என்றார். யானைகள் யாவும் பெரிய மலையை அடுத்த சிறுசிறு குன்றும் போலிருந்தன என்பது.

கருங்கல்லைப் பொன்னாக்கிய தேர்கள்

**820. 'தெருண்ட மேலவர் சிறியவர்ச்**
**சேரினும். அவர்தம்**
**மருண்ட புன்மையை மாற்றுவர்'**
**எனும் இது வழக்கே;**
**உருண்ட வாய்தொறும். பொன் உருள்**
**உரைத்து உரைத்து ஓடி.**
**இருண்ட கல்லையும் தன் நிறம்**
**ஆக்கிய - இரதம்.**

**தெருண்ட மேலவர்** - தெளிந்த அறிவுடைய பெரியோர்; **சிறியவர் சேரினும்** - சிறியவர்களை (தாம் போய்ச்) சேர்ந்திருந்தாலும்; **மருண்ட அவர்தம்** - அறிவுத் தெளிவில்லாமல் மயங்கிய அவர்களுடைய; **புன்மையை** - இழி குணத்தை; **மாற்றுவர் எனும்** - போக்குவர் என்று சொல்லுகின்ற; **இது** - இந்த வார்த்தை; **வழக்கே** - முறைமையானதே (உலக இயல்பு); **இரதம்** - (ஏனெனில்) இரதங்கள்; **பொன் உருள் உருண்ட** - பொன்னால் இயன்ற சக்கரங்கள் உருண்டு சென்ற; **வாய்தொறும்** - இடங்கள்தோறும்; **உரைத்து உரைத்து ஓடி** - (தம்) பொன்னை உரைத்துக் கொண்டே ஓடிச் செல்வதால்; **இருண்ட கல்லையும்** - கருமையான பாறாங்கற்களையும்; **தம் நிறம் ஆக்கிய** - (தம்) பொன்னிறமாகவே செய்யலாயின.

வேற்றுப் பொருள் வைப்பணி. தேரின் பொன்னிற உருளை சென்றதால் அங்குள்ள பாறைகள் பொன்னிறத்தை அடைந்தன என்பது. சேரினும் - எதிர்மறையும்மை.

மகளிர் இளைப்பாறித் துயில்கொள்ளுதல்

***821. கொவ்வை நோக்கிய வாய்களை.***
***இந்திர கோபம்***
***கவ்வி நோக்கின என்றுகொல் -***
***காட்டு இன மயில்கள்.***
***நவ்வி நோக்கியர். நலம் கொள்***
***மேகலை. பொலஞ் சாயல்-***
***செவ்வி நோக்கின திரிவன***
***போல்வன. திரிந்த.***

***காட்டு இன மயில்கள்*** - *காட்டில் வாழும் மயில் கூட்டங்கள்;* **கொவ்வை நோக்கிய வாய்களை** - *கோவைப் பழம் போன்ற மகளிரின் வாய்களை;* **இந்திர கோபம்** - *இந்திர கோபப் பூச்சிகள்;* **கவ்வி நோக்கின** - *சென்று சேர்ந்து அடைக்கலமாகப் புக்கனவோ;* **என்று கொல்** - *என்று நினைத்ததால்தானோ;* **நலம் கொள் மேகலை** - *அழகிய மேகலையை அணிந்த;* **நவ்வி நோக்கியர்** - *மான் போன்ற கண்களைப் பெற்ற பெண்களின்;* **பொலஞ் சாயல் செவ்வி** - *சிறந்த சாயல் அழகை;* **நோக்கின** - *(எவ்வாறு உள்ளதென்று) பார்த்தவாறு; திரிவன போல;* **திரிந்த** - *திரிந்தன.*

*மகளிரின் வாய்கள் இந்திர கோபப் பூச்சிகள் போலிருத்தல் கண்ட மயில்கள் இவர்களின் சாயல் எவ்வாறு உள்ளது என்று காணுதல் பொருட்டும் தம் உணவான இந்திரகோபமோ என்று ஐயுற்றும். திரிவன போன்று இருந்தன. இந்திர கோபம்: செம்பட்டுப் பூச்சி. - ஏதுத் தற்குறிப்பேற்ற அணி. மயில் மகளிர்க்குச் சாயலில் உவமை கூறப்படுவது வழக்கமாதலால். வாய்களைப் பற்றிக் கருதிய மயில்கள் சாயல் அழகைக் கருத்தோடு நோக்கத் திரிந்தன என்றார். வேறு உரை: தாம் கவர வேண்டுமென்று கொவ்வைப்பழம் கருதியிருந்த பெண்களின் செவ்வாய் அழகை இந்திர கோபப் பூச்சிகள் கவர்ந்துள்ளன என்று காட்டு மயில்கள் கருதியதால்தானோ அந்த இந்திரகோபங்களை உண்ண விரும்பித் தாம் அதற்காகத் திரிவது தோன்றாதவாறு அப்பெண்களின் சாயல் அழகைக் காணத் திரிவன போலத் திரிந்தன என்பது.*

***822. உய்க்கும் வாசிகள் இழிந்து. இள***
***அன்னத்தின் ஒதுங்கி.***
***மெய்க் கலாபமும் குழைகளும்.***
***இழைகளும விளங்க.***
***தொக்க மென் மர நிழல் படத்***
***துவன்றிய சூழல்***
***புக்க மங்கையர். பூத்த கொம்பு***
***ஆம் எனப் பொலிந்தார்.***

***உய்க்கும் வாசிகள்*** - *தாம் ஏறிச்செலுத்தும் குதிரைகளினின்று;* ***இழிந்து*** - *இறங்கி;* ***இள அன்னத்தின்*** - *இள அன்னங்கள் போல;* ***ஒதுங்கி*** - *மெல்ல நடந்து;* ***தொக்க மெல் மரம்*** - *அடர்ந்த இளமரங்களின்;* ***நிழல்படத் துவன்றிய*** - *நிழல் படுமாறு அமைந்த;* ***சூழல் புக்க*** - *பொழிலிடத்தில் போய்ச் சேர்ந்த;* ***மங்கையர்*** - *மகளிர்;* ***மெய்*** - *(தம்) மேனிகளில்;* ***கலாபமும்*** - *இடையணிகளும்;* ***குழைகளும்*** - *காதணிகளும்;* ***இழைகளும்*** - *பிற அணிகலன்களும்;* ***விளங்க*** - *விளங்குவதனால்;* ***பூத்த கொம்பு ஆம் என*** - *மலர்கள் பூத்துள்ள கொம்புகள் என்னும்படி;* ***பொலிந்தார்*** - *திகழ்ந்தார்கள்.*

*இளமரமாதலின் அதன் அடியில் நின்ற மகளிர் அணிந்த அணிகலன்களின் பொலிவால் அம் மரத்தின் கீழே படியும் பூங்கொம்பு போலத் தோன்றினர்.*

***823. தளம் கொள் தாமரை என. தளிர்***
***அடியினும். முகத்தும்.***
***வளம் கொள் மாலை வண்டு அலமர.***
***வழி வருந்தினர் ஆய்.***
***விளங்கு தம் உருப் பளிங்கிடை***
***வெளிப்பட. வேறு ஓர்***
***துளங்கு பாறையில். தோழியர்***
***அயிர்த்திடத் துயின்றார்.***

*(பொழில் புகுந்த அப் பெண்கள்)* ***வழி வருந்தினர் ஆய்*** - *வழி நடந்த சோர்வால் வருந்தினராய்;* ***வளம்கொள் மாலை வண்டு*** - *செழுமையாக வளர்ந்த வண்டுகள்;* ***தளம் கொள் தாமரையென*** - *இதழுள்ள தாமரை மலரெனக் கருதி;* ***தளிர் அடியினும்*** - *தளிரையொத்த தம் பாதங்களிலும்;* ***முகத்தும்*** - *முகத்திலும்;* ***அலமர*** - *சுழன்று கொண்டிருக்க;* ***விளங்கு தம் உரு*** - *ஒளிவிடுகின்ற தமது வடிவம்;* ***தோழியர் அயிர்த்திட*** - *(தம் தோழியர்) ஐயப்படும்படி;* ***பளிங்கிடை*** - *பளிங்குப் பாறையில்;* ***வெளிப்பட*** - *வெளிப்படுவதால்;* ***வேறோர் துளங்கு பாறையில்*** - *விளங்கும் வேறொரு பளிங்குப் பாறையிலே;* ***துயின்றார்*** - *படுத்து உறங்கினார்கள்.*

*மங்கையர் வெகுதூரம் பயணம் வந்த களைப்பால் ஒரு பளிங்குப் பாறையில் படுத்துறங்கினர். அப்போது அவர்களின் பாதங்களையும் முகத்தையும் கண்டு வண்டுகள் தாமரை மலரென்று மயங்கி அவற்றில் மொய்க்கச் சுழல்வனவாயின. அவரது உருவம் வேறு ஒரு பளிங்குப் பாறையில் பிரதிபலித்தது. அச்சாயையே 'இது நம் தலைவியின் உருவமே' என்று தோழியர் மயங்கினர் என்பது - மயக்கவணி.*

***824.*** ***பிடி புக்கு ஆயிடை. மின்னொடும்***
***பிறங்கிய மேகம்***
***படி புக்காலெனப் படிதர.***
***பரிபுரம் புலம்ப.***
***துடி புக்கா இடைத் திருமகள்***
***தாமரை துறந்து***
***குடிபுக்காலென. குடில் புக்கார் -***
***கொடி அன்ன மடவார்.***

***மின்னொடும் பிறங்கிய*** - *மின்னல்களோடு விளங்கிய;* ***மேகங்கள்*** - *மேகங்கள்;* ***ஆ இடை*** - *அந்தச் சந்திர சயில மலைப் பக்கத்தில்;* ***படி புக்காலென*** - *பூமியில் சேர்ந்தாற் போல;* ***பிடி புக்குப் படிதர*** - *பெண்யானைகள் படிந்து நிற்க (அவற்றின் மேல் ஏறியிருந்த);* ***கொடி அன்ன மடவார்*** - *பூங்கொடி போன்ற மகளிர்;* ***துடி புக்கா இடை*** - *உடுக்கையை உவமையாகக் கூறப்பெறும் வெல்லும் இடை உடைய;* ***திருமகள் தாமரை துறந்து*** - *இலக்குமி தாமரை மலரை விட்டு;* ***குடி புக்கால் என*** - *(அங்கே) குடி புகுந்தாற் போல;* ***பரிபுரம் புலம்ப*** - *(தம் கால்களின்) பாதச் சிலம்புகள் ஒலிக்கவும் (நடந்து);* ***குடிபுக்கார்*** - *(தத்தம் விடுதிகளில்) குடி புகுந்தார்கள்.*

*பெண் யானைகளின் மேல் ஏறிவந்த சில பெண்கள் அவை பூமியில் படிந்திருக்க. அவற்றிலிருந்து இறங்கிச் சென்று ஒரு சூழலில் குடிபுகுந்தனர் என்பது. மகளிரைத் தாங்கிய பெண்யானைகளுக்கு மின்னலைத் தாங்கிய மேகங்கள் உவமை.*

*வரிசையாகக் குதிரைகளைக் கட்டிவைத்தல்*

**கலிவிருத்தம்**

***825.*** ***உண் அமுதம் ஊட்டி. இளை***
***யோர் நகர் கொணர்ந்த.***
***துண்ணெனும் முழக்கின.***
***துருக்கர் தர வந்த.***
***மண்மகள்தன் மார்பின் அணி***
***வன்ன சரம் என்ன.***
***பண் இயல் வயப் பரிகள்.***
***பந்தியில் நிரைத்தார்.***

***உண் அமுதம் ஊட்டி*** - உண்பதற்குரிய உணவை வாயினுள் ஊட்டி; ***இளையோர் நகர் கொணர்ந்த*** - இளைஞர்களால் நகரில் கொண்டு வரப்பட்டனவும்; ***துண்ணெனும் முழக்கின*** - திடுக்கிடும் கனைப்பொலியையுடையனவும்; ***துருக்கர் தரவந்த*** - சோனகர் கொண்டு வந்தனவுமான; ***பண் இயல்*** - அலங்காரம் அமைந்த; ***வயப் பரிகள்*** - வலிய குதிரைகளை; ***மண்மகள் தன் மார்பின்*** - பூமி தேவியின் மார்பில்; ***அணி வன்ன சரமென்ன*** - அணிந்த பல நிறமுள்ள நவமணி மாலை போல; ***பந்தியின்*** - குதிரைக் கூட்டத்தில்; ***நிரைத்தார்*** - ஒழுங்காகக் கட்டினார்கள்.

*பல நிறத்தோடு கூடிய குதிரைகள் வன்னசரம் போன்றுள்ளன. சோனகரால் ஏற்ற உணவளித்து வளர்க்கப்பட்ட குதிரைகள் அங்கு வந்தன என்பது.*

***826. நீர் திரை நிரைத்த என. நீள் திரை நிரைத்தார்;***
***ஆர்கலி நிரைத்த என. ஆவணம் நிரைத்தார்;***
***கார் நிரை என. களிறு காவிடை நிரைத்தார்;***
***மாருதம் நிரைத்த என. வாசிகள் நிரைத்தார்;***

***நீர் திரை நிரைத்த என*** - நீரலைகளை ஒழுங்காக அமைத்தாற்போல; ***நீள் திரை நிரைத்தார்*** - நீண்ட (சுற்றுத்) திரைகளை வரிசையாகக் கட்டினார்கள்; ***ஆர்கலி நிரைத்த என*** - கடல்கள் ஒழுங்காக அமைக்கப்பட்டன போல; ***ஆவணம் நிரைத்தார்*** - கடைத் தெருக்களை வரிசையாக அமைத்தனர்; ***கார் நிரையென*** - மேகங்களின் வரிசை என்று சொல்லும்படி; ***களிறு கா இடை*** - யானைகளைச் சோலைகளின் இடையே; ***நிரைத்தார்*** - வரிசையாக நிறுத்தினர்; ***மாருதம் நிரைத்த என*** - காற்றை ஒழுங்காக நிறுவினாற் போல; ***வாசிகள் நிரைத்தார்*** - குதிரைகளை வரிசையாகக் கட்டினர்.

*தனித் தனியே தங்கியிருக்கப் பட மாடங்கள் கட்டப்படுவதும். வேண்டிய பண்டங்களை வாங்குவதற்குக் கடைவீதிகள் அமைப்பதும் சேனைகளுக்கு இன்றியமையாதன. உடன் வந்த யானை குதிரைகளையும் அவ்வவற்றிற்கு உரிய இடங்களில் வரிசையாகக் கட்டினர்.*

*மைந்தரும் மங்கையரும் திரிந்த காட்சி*

***827. நடிக்கும் மயில் என்ன வரும் நவ்விவிழியாரும்.***
***வடிக்கும் அயில் வீரரும். மயங்கினர் திரிந்தார்;***
***இடிக்கும் முரசக் குரலின். எங்கும் முரல் சங்கின்.***
***கொடிக்களின் உணர்ந்து. அரசர் கோநகர் அடைந்தார்.***

***நடிக்கும் மயில் என்ன*** - ஆடும் மயிலைப் போல; ***வரும்*** - வருகின்ற; ***நவ்வி விழியாரும்*** - மான் போன்ற கண்களையுடைய மகளிரும்; ***வடிக்கும் அயில் வீரரும்*** - வடித்துக் கூர்மையாக்கிய வேல் வீரரும்; ***மயங்கினர் திரிந்தார்*** - மயங்கிய வண்ணம் திரிந்தனர் (தாம் போகும் இடம் இன்னதென்று தெரியாததால்); ***இடிக்கும் முரசக் குரலின*** - (பின்பு) முழங்குகின்ற மங்கள முரசின் ஒலியாலும்; ***ஏங்கும் முரல் சங்கின்*** - எங்கும் ஒலியெழும் சங்கநாதங்களாலும்; ***கொடிகளின்*** - கொடிகளாலும்; ***உணர்ந்து*** - (அரசனது மாளிகை இதுவென) தெரிந்து கொண்டு; ***அரசர் கோநகர் அடைந்தார்*** - அரசன் தங்கிய மாளிகையை அடைந்தார்கள்.

*பட மாடங்கள் பலவும் ஒரே தன்மையில் அமைந்திருந்தமையால் வேற்றுமை தெரியாமல் மயங்கி. முரசு. சங்கு. கொடிகளால் அரசன் தங்கிய மாடம் இதுவென்று அறிந்தனர் என்பது ஒவ்வொரு மாடமும் அரச மாளிகை போல இருந்தது.*

***828. மிதிக்க நிமிர் தூளியின்***
***விளக்கம் அறு மெய்யை.***
***சுதைக் கண் நுரையைப் பொருவு***
***தூசு கொடு. தூய்தா***
***உதித்தனர். இளங் குமரர்;***
***ஓவியரின் ஓவம்***
***புதுக்கினர் என. தருண***
***மங்கையர் பொலிந்தார்.***

***மிதிக்க நிமிர்*** - யானை முதலானவை மிதித்துச் செல்வதால் மேலே எழுந்த; ***தூளியின்*** - புழுதியால்; ***விளக்கம் அறு மெய்யை*** - ஒளியில்லாது அழகு மழுங்கிய மனைவியரின் மேனியை; ***இளங்குமரர்*** - அம் மங்கையரின் இளமையான கணவர்; ***சுதைக் கண் நுரை பொருவு*** - பாலின் நுரையை ஒத்த; ***தூசு கொடு*** - ஆடையைக் கொண்டு; ***தூய்தா*** - (படிந்த தூசு நீங்கும்படி) தூயதாகப் (புழுதியை); ***உதிர்த்தனர்*** - போக்கினார்கள்; ***(அதனால்) தருண மங்கையர்*** - இளமையுடைய அம் மங்கையர்; ***ஓவியர் இன் ஓவம்*** - ஓவியர் அழகிய ஓவியத்தை (மாசுநீங்க); ***புதுக்கினர் என*** - புதுப்பித்தார் என்னும்படி; ***பொலிந்தார்*** - விளங்கினார்கள்.

*கணவர் தம் மனைவியர் மீது படிந்திருந்த புழுதியைத் தனது ஆடையால் போக்க. அதனால் அம் மகளிர் ஓவியர்களால் புதுப்பிக்கப்பட்ட ஓவியம் போல விளங்கினர் என்பது.*

*படமாடங்களில் வதிதல்*

***829. தாள் உயர் தடக் கிரி இழிந்து தரை சேரும்***
***கோள் அரி என. கரிகள் கொற்றவர் இழிந்தார்;***
***பாளை விரி ஒத்து உலவு சாமரை படப் போய்.***
***வாள் எழ நிரைத்த படமாடம்அவை புக்கார்.***

***கொற்றவர்*** - *(யானையை ஊர்தியாகக் கொண்ட) அரச குமாரர்கள்;* ***தாள் உயர் தடகிரி இழிந்து*** *- தாழ்வரை உயர்ந்துள்ள பெரிய மலையிலிருந்து இறங்கி;* ***தரை சேரும்*** *- நிலத்தை அடையும்;* ***கோள் அரியென*** *- வலிய சிங்கத்தைப் போல;* ***கரிகள் இழிந்தார்*** *- யானைகளிலிருந்து கீழே இறங்கியவராய்;* ***பாளை விரி ஒத்து உலவு*** *- விரிந்த பாளையை ஒத்து (தம் இரு புறங்களிலும்) அசைகின்ற;* ***சாமரை படப் போய்*** *- சாமரைகள் வீசும்படி சென்று;* ***வாள் எழ நிரைத்த*** *- ஒளி எழும்படி ஒழுங்காக அமைத்த;* ***படமாடம் அவை*** *- கூடாரங்களில்;* ***புக்கார்*** *- புகுந்தார்கள்.*

*அரச மைந்தர்கள் யானைகளிலிருந்து இறங்கி. இருபக்கமும் வெண் சாமரைகள் வீசப் பெறக் கூடாரங்களில் புகுந்தனர் என்பது. யானைகளிலிருந்து இறங்கிய அரச குமாரர்க்கு மலையிலிருந்து இறங்கிய சிங்கம் உவமையாம். மலையடிவாரத்தில் அமைந்த குகை கூடாரத்திற்கு உவமையானது.*

***830. தூசினொடு வெண் படமுடைக் குடில்கள்தோறும்.***
***வாச நகை மங்கையர் முகம் பொலிவ. வானில்.***
***மாசு இல் மதியின் கதிர் வழங்கும் நிழல் எங்கும்.***
***வீசு திரை வெண் புனல். விளங்கியன போலும்.***

***வெண் தூசினொடு*** *- வெண்மையான ஆடைகளால் ஆகிய;* ***படம் உடை*** *- விருதுக் கொடிகளையுடைய;* ***குடில்கள்தோறும்*** *- கூடாரங்களில் எல்லாம்;* ***நகை வாச மங்கையர்*** *- புன்சிரிப்பும் இயற்கை மணமும் உள்ள மகளிரின்;* ***முகங்கள்*** *- முகங்கள்;* ***மழை வானில்*** *- மேகம் சஞ்சரிக்கும் வானத்திலேயுள்ள;* ***மாசு இல் மதியின்*** *- குற்றமில்லாத சந்திரனின்;* ***கதிர் வழங்கும் நிழல்*** *- ஒளி வீசும் பிரதிபிம்பங்களை;* ***எங்கும்*** *- எல்லா இடங்களிலும்;* ***வீசு திரை வெண்புனல்*** *- கடலின் அலை வீசும் வெண்மையான நீரில்;* ***விளங்கியன*** *- விளக்க முற்றிருப்பதை;* ***போலும்*** *- ஒத்திருக்கும்.*

*வெண்ணிறக் கூடாரங்களினுள்ளே மகளிர் முகங்கள் தோன்றுவது. கடலின் வெண்மையான நீரில் ஒளிவீசும் சந்திர பிம்பங்கள் அமைந்திருப்பது போலும் என்றார் - தற்குறிப்பேற்றவணி.*

*புழுதி படிய வரும் யானை*

***831. மண் உற விழுந்து. நெடு வான் உற எழுந்து.-***
***கண்ணுதல் பொருந்த வரு கண்ணனின் வரும் - கார்***
***உண் நிற நறும் பொடியை வீசி. ஒரு பாகம்***
***வெண் நிற நறும் பொடி புனைந்த மத வேழம்.***

***மண்ணுற விழுந்து*** - *புழுதி (தன் மேல்) படியும்படி பூமியில் விழுந்து;* ***நெடு வானுற எழுந்து*** - *வானத்தில் பொருந்துமாறு மேலே எழுந்து;* ***கார்நிறம்*** - *தனது கரிய நிறத்தை;* ***உண் நறும் பொடியை*** - *மறைக்கின்ற மணமுள்ள புழுதியை;* ***ஒருபாகம் வீசி*** - *ஒரு பக்கம் கையால் வீசிவிட்டு;* ***வெண்ணிறம் நறும்பொடி*** - *ஒரு பகுதியில் மட்டும் வெண்ணிறமான நறும்பொடியை;* ***புனைந்த*** - *அணிந்த;* ***மதவேழம்*** - *மதயானையானது;* ***கண்நுதல் பொருந்த வரு*** - *சிவன் தன்னிடம் பொருந்த வருகின்ற;* ***கண்ணனின்*** - *திருமால் போல;* ***வரும்*** - *வரும்.*

*சிவனைத் தன் வலப்பக்கத்தே உடையவன் திருமால். 'வலத்தனன் திரிபுரம் எரித்தவன்' - (திருவாய் 1-3-9). மேனியில் படிந்த பொடியை ஒரு பக்கம் நீக்கி ஒரு பக்கம் மட்டும் அணிந்திருந்த யானை சங்கர நாராயணத் திருகோலம் போலத் தோன்றியது என்பது கருத்து.*

*குதிரைகள் அடங்கி வருதல்*

***832. தீயவரொடு ஒன்றிய திறத்து அரு நலத்தோர்.***
***ஆயவரை. அந் நிலை அறிந்தனர். துறந்தாங்கு.***
***ஏய அரு நுண் பொடி படிந்து. உடன் எழுந்து ஒண்***
***பாய் பரி விரைந்து உதறி நின்றன. பரந்தே.***

***தீயரொடு ஒன்றிய*** - *தீய குணத்தவரோடு (ஆராயாமல்) நட்புக் கொண்ட;* ***அருதிறந்து நல்லோர்*** - *அரிய திறமையுடைய நல்லவர்கள்;* ***ஆயவரை*** - *அந்தத் தீயவரை;* ***அந்நிலை*** - *அந்த அளவிலே;* ***அறிந்தனர்*** - *அவர் தீயவர் என்று அறிந்தவர்களாகி;* ***துறந்தாங்கு*** - *(அவர்களைக்) கைவிட்டாற்போல;* ***ஒள்பாய்பரி*** - *பாய்ந்தோடும் நல்லிலக்கணம் பொருந்திய குதிரைகள்;* ***ஏய அரு*** - *தம் உடலில் பொருந்த;* ***நுண்பொடி படிந்து*** - *மண்ணிலே படிந்ததால் மிக நுண்ணிய புழுதியை;* ***உடன் எழுந்து*** - *உடனே எழுந்து;* ***விரைந்து உதறி*** - *விரைவாக உதறிவிட்டு;* ***பரந்து நின்றன*** - *பரவி நின்றன.*

*வழியில் வந்த இளைப்பைப் போக்க வேண்டிக் குதிரைகள் புழுதி படிந்த மண்ணில் புரளுதலும். இளைப்பு நீங்கியதும் அவை தம் மேல் படிந்த புழுதியை உதறி எழுதலும் இயல்பு. இதற்கு நற்குணமுள்ளவர் முதலில் தீயவரோடு நட்புக் கொண்டு பின்பு அவரோடு பழகி அவர்களின் தீக் குணத்தை உணர்ந்து அவர்களுடைய நட்பை அறவே துறத்தல் உவமையாகும்.*

***833. மும்மை புரி வன் கயிறு***
***கொய்து. செயல் மொய்ம்பால்***
***தம்மையும் உணர்ந்து. தரை***
***கண்டு. விரைகின்ற.***
***அம்மையினொடு இம்மையை***
***அறிந்து நெறி செல்லும்***
***செம்மையவர் என்ன. நனி***
***சென்றன - துரங்கம்.***

***மும்மை புரி*** - மூவகையாக (மண். பொன். பெண் ஆசைகள்) அமைந்த; ***வல்கயிறு*** - வலிய பிணிப்புக்களை; ***கொய்து*** - அறுத்து; ***செயல் மொய்ம்பால்*** - (தாம்) செய்யும் யோகத்தின் வலிமையால்; ***தம்மை உணர்ந்து*** - தமது ஆன்மாவின் உண்மை நிலை (ஆன்மா மலம் அற்றது; ***ஞான ஆனந்த மயமானது; கடவுளுக்கு அடிமையானது) தெரிந்து; தரை கண்டு-*** (அதனோடு நில்லாமல்) தாம் அடைய வேண்டிய பரம் பொருளின் நிலையையும் உணர்ந்து; ***விரைகின்ற*** - (அதனை அடையுமாறு) விரைந்து செல்லுகின்ற; ***இம்மையை அம்மையினொடு அறிந்து*** - இவ் உலகப் பயனை மறுமைப் பயனோடு உணர்ந்து; ***நெறி செல்லும்*** - நன்னெறியே செல்லுகின்ற; ***செம்மையவர் என்ன*** - நற்குணமுடைய யோகியரைப் போல; ***துரங்கம்*** - குதிரைகள்; ***மும்மை புரி வன் கயிறு*** - (தம்மை கட்டிய) முப்புரியாக அமைந்த வலிய கயிற்றை; ***கொய்து*** - அறுத்துக் கொண்டு; ***செயல் மொய்ம்பால்*** - (பாகனது) செயல் வல்லமையால்; ***தம்மையும் உணர்ந்து*** - தாம் செய்ய வேண்டியன இன்னவை என்று அறிந்து; ***தரை கண்டு*** - நிலத்தின் இயல்பு அறிந்து; ***விரைகின்ற*** - விரைவாகச் செல்லுகின்றனவாகி; ***நனி சென்றன*** - மிக ஒழுங்காக வந்தன.

*ஞான யோகியர் பரகதி அடைதற்குரிய நெறியில் விரைந்து செல்லும் முறை போன்று இருந்தது குதிரைகளின் ஒழுங்கான செலவு என்பது. உத்த ஆன்மா அறிவதற்குரிய ஐவகை நிலைகளாவன 1. வினைத் தடையாகிய விரோதி நிலை; 2. அத்தடையை நீக்கும் உபாய நிலை; 3. அந்த உபாயத்தை மேற்கொள்ளும் ஆன்ம நிலை; 4. அது நாடும் பரமான்ம நிலை; 5. வீடுபேறு. இவற்றையே 'அர்த்த பஞ்சகம்' என்பர். தரை கண்டு: பரம்பொருள் தங்கும் தானம். மும்மை புரி வன்கயிறு: முப்புரியாக அமைந்த திண்ணிய கயிறு; ஆணவம். கன்மம். மாயை என்ற மும்மலங்கள் - சிலேடை. சிலேடை மூலமாக வந்த உவமையணி.*

*கழங்காடும் மங்கையர் கண்கள்*

***834. விழுந்த பனி அன்ன. திரை வீசு புரைதோறும்.***
***கழங்கு பயில் மங்கையர் கருங் கண் மிளிர்கின்ற-***
***தழங்கு கழி சிந்திய தரம் பயில் தரங்கத்து.***
***எழுந்து இடை பிறழ்ந்து ஒளிர் கொழுங் கயல்கள் என்ன.***

***கழி சிந்திய*** - கழியிலே போய்விடுமாறு; ***தரம் பயில்*** - உயர்ந்து எழுகின்ற; ***தழங்கு தரங்கத்து*** - ஒலிக்கும் அலைகளிலிருந்து; ***எழுந்து*** - மேல் எழுந்து; ***இடை பிறழ்ந்து ஒளிர்*** - இடையிடையே பிறழ்ந்து விளங்குகின்ற; ***கொடுங் கயல்கள் என்ன*** - கொழுத்த கயல் மீன்கள் என்று சொல்லும்படி; ***விழுந்த பனி அன்ன*** - (வானத்திலிருந்து) விழுந்த பனியைப் போன்று; ***திரை வீசு*** - தோன்றுகின்ற திரைச் சீலைகள் (காற்றால்) மோதப்படுகின்ற; ***புரைதோறும்*** - இடங்களிலெல்லாம் (கூடாரங்களில்); ***கழங்கு பயில்*** - கழங்கு ஆடுகின்ற; ***மங்கையர் கருங்கண்*** - மகளிரின் கரிய கண்கள்; ***மிளிர்கின்ற*** - பிறழ்ந்து விளங்கின.

*காற்றினால் திரைச் சீலைகள் வீசியெறியப்படும்போது அங்குள்ள பெண்களின் கண்கள் அலை வீசுமபோது அங்கே எழுந்து தோன்றும் கயல் மீன்களைப் போலப் பிறழ்ந்தன என்பார் - தற்குறிப்பேற்ற உவமையணி. அலையும் திரைச் சீலைக்கு அலைகளும். அவற்றிடைப் பிறழும் மகளிர் கண்களுக்கு அலையில் பிறழும் கயல்மீன்களும் உவமைகளாகும்.*

*ஆறு உதவும் ஊற்று நீர்*

***835. வெள்ள நெடு வாரி அற வீசி உளவேனும்.***
***கிள்ள எழுகின்ற புனல். கேளிரின் விரும்பி.-***
***தெள்ளு புனல் ஆறு - சிறிதே உதவுகின்ற;***
***உள்ளது மறாது உதவும் வள்ளலையும் ஒத்த.***

***தெள்ளு புனல் ஆறு*** *- தெளிந்த நீருள்ள நதிகள்;* ***வெள்ள நெடு வாரி*** *- (தம்மிடத்து) வெள்ளமாகிய மிகுந்த நீர்ப் பெருக்கை;* ***அற வீசி உளவேனும்*** *- முற்றிலும் வீசிக் கொண்டிராமல் போயினும்;* ***கிள்ள எழுகின்ற புனல்*** *- தோண்டத் தோண்ட ஊறுகின்ற நீரை;* ***சிறிதே உதவுகின்ற*** *- சிறிது சிறிதாக உதவுவனவாயின (அதனால் அவை) ;* ***உள்ளது*** *- (செல்வம் இருந்த காலத்தில் வேண்டியவர்க்குக் கொடுத்து அச் செல்வம் வறண்ட காலத்தும்) தன்னிடம் உள்ள பொருளை;* ***மறாது*** *- (இல்லையென்று) மறுத்துச் சொல்லாமல்;* ***கேளிரின் விரும்பி*** *- உறவினரைப் போல விருப்பம் கொண்டு;* ***உதவும்*** *- (அவர்களுக்கு) கொடுக்கும் தன்மையுள்ள;* ***வள்ளலையும்*** *- இரக்க குணமுள்ள வள்ளல்களையும்;* ***ஒத்த*** *- ஒத்திருந்தன.*

*நதிகள் தம்மிடம் வெள்ள நீர் இருந்த காலத்தில் பலருக்கும் வேண்டியவாறு உதவி. அந்த நீர் வற்றிய காலத்தும் தோண்டத் தோண்ட மெல்ல மெல்ல ஊற்று நீரை உதவுகின்றன. வள்ளல்களுக்கு இந் நதிகள் உவமையாகும். வள்ளலையும் - 'உம்' இசைநிறை.*

*படமாடத்தினுள் நுழைகின்ற வீரர்*

***836. துன்றி நெறி பங்கிகள் துளங்க. அழலோடும்***
***மின் திரிவ என்ன. மணி ஆரம் மிளிர் மார்பர்.***
***மன்றல் மணம் நாறு படமாடம் நுழைகின்றார்.***
***குன்றின் முழைதோறும் நுழை கோள் அரிகள் ஒத்தார்.***

***துன்றி நெறி*** *- நெருங்கிப் பொதிந்த;* ***பங்கிகள்*** *- தலை மயிர்கள்;* ***துளங்க*** *- காற்றால் அசைய;* ***அழலோடும் மின்*** *- தீயோடு மின்னல்கள்;* ***திரிவ என்ன*** *- திரிவன என்று சொல்லும்படி;* ***மணி ஆரம் மிளிர்*** *- இரத்தின மாலைகள் விளங்குகின்ற;* ***மார்பர்*** *- மார்பையுடைய வீரர்கள்;* ***மன்றல் மணம் நாறும்*** *- புதுமணம் வீசுகின்ற;* ***பட மாடம்*** *- (தத்தம்) கூடாரங்களில்;* ***நுழைகின்றார்*** *- புகுகின்றவராய்;* ***குன்றில்*** *- மலையிலே (உள்ள);* ***முழைதோறும் நுழை*** *- குகைகளிலே புகுகின்ற;* ***கோள் அரிகள்*** *- கொலைத் தொழில் அமைந்த சிங்கங்களை;* ***ஒத்தார்*** *- ஒத்தார்கள்.*

பட மாடங்களில் புகும் வீரர்க்குக் குகையுள் புகும் சிங்கம் உவமையாயிற்று. பங்கி: ஆண்களின் தலைமயிர். வீரர் நடந்து செல்லுகையில் அவர்கள் மார்புகளில் இரத்தின மாலைகள் விளங்குவதை நெருப்பும் மின்னலும் திரிவன போலும் என்றார்.

*நீரைக் கலக்கும் யானைகள்*

***837.** **நெருங்கு அயில் எயிற்றனைய***
***செம் மயிரின் நெற்றிப்***
***பொருங் குலிகம் அப்பியன.***
***போர் மணிகள் ஆர்ப்ப.-***
***பெருங் களிறு - அலைப் புனல்***
***கலக்குவன; பெட்கும்***
***கருங் கடல் கலக்கும் மது***
***கயிடவரை ஒத்த.***

***நெருங்கு எயிறு அயில் அனைய*** - நெருங்கிய தந்தங்கள் வேல் போல் கூர்மையுடையன; ***செம்மயிரின் நெற்றி*** - செம்மயிர் உள்ள நெற்றியில்; ***பொருங் குவிகம்*** - (தனக்குத் தானே நிகரான) சாதிலிங்கம்; ***அப்பியன*** - அப்பியுள்ள; ***பெருங்களிறு*** - பெரிய யானைகள்; ***போர் மணிகள் ஆர்ப்ப*** - (ஒன்றோடு ஒன்று) மாறுபட்டு மணிகள் ஒலிக்க; ***அலைபுனல் கலக்குவன*** - அலைகளையுடைய பொய்கை நீரைக் கலக்குபவை; ***பெட்கும்*** - (யாவராலும்) விரும்பப்படும்; ***கருங்கடல்*** - கரிய கடலை; ***கலக்கும் மது கைடவரை*** - கலக்கிய மதுகைடப அசுரர்களை; ***ஒத்த*** - ஒத்தன.

பொருங் குலிகம் - பொருதல் - பொருந்துதல். *'பொய்பொரு முடங்குகை' - (சிலப் 15-50).* முன்பு உலகை அழிக்கும் பிரளயம் தோன்றியது. பின்னர்த் திருமால் உலகங்களை முன்போலப் படைக்க விரும்பினான். நான்முகனைத் தனது உந்திக் கமலத்தில் படைத்து வேதங்களையும் அவனிடம் கொடுத்தான். அக்கடவுள் படைப்புத் தொழிலை நடத்த முயற்சி மேற்கொள்கையில் முன்னரே திருமாலினிடத்துத் தோன்றிய மது. கைடபன் என்னும் அசுரர் இருவரும் அங்கே வந்து பிரமனைக் கண்டு அவனிடமிருந்து வேதங்கள் எல்லாவற்றையும் பறித்துக் கொண்டு அந்தப் பிரளயக் கடலின் வடகிழக்குத் திசையில் பாதாளத்தை அடைந்தார்கள். வருந்திய பிரமன் திருமாலை அணுகித் தன் குறைகளை நீக்குமாறு வேண்டினான். அத் திருமால் குதிரை முகமுள்ள உருவம் கொண்டு உத்கீதம் என்ற பண்ணிலே வேதங்களைப் பாடினான். அது பெருங்கடலெங்கும் முழங்கியது. அந்த ஓசை மது கைடபர் காதில் விழுந்தது. உடனே வேதங்களை ஒரு பக்கம் வைத்துவிட்டு அந்தக் கீதம் வந்த வழியே அவர்கள் சென்றார்கள். அப்போது திருமால் அவ் வேதங்களை மீட்டுப் பிரமனுக்கு அன்ன வடிவிலே உபதேசித்தான். கீதம் வந்த வழியைப் பற்றிக் கொண்டு வந்த அந்த மது. கைடபர் அங்கே ஒருவரையும் காணாமையால் மீண்டும் தாம் வேதங்களை வைத்த இடத்தில் தேடினார்கள். அங்கே அந்த வேதங்களைக் காணாமையால் அவற்றைக் கவர்ந்து போனவரை அக் கடலைக் கலக்கித் தேடி அங்கே திருமால் பள்ளிகொண்டு யோக நித்திரையில் இருப்பதைக் கண்டு 'இவனே வேதங்களைக் கவர்ந்தவன்' என்று உறுதி செய்து அவனைத் துயில் எழுப்பினர். திருமால் அவர்களைப் பார்த்து 'உமக்கு வேண்டிய வரங்களைக் கேளுங்கள்' என்று கூற. அவர்களோ. செருக்கின் மிகுதியால் 'உனக்கு வேண்டிய வரத்தைக் கேள் தருகின்றோம்' என்று சொன்னார்கள். உடனே திருமால் அவர்களிடம் நீங்கள் என்னால் கொல்லப்படவேண்டும்' என்று கேட்டான். அவ்வரம் அந்த அசுரர் 'இறைவனே! வேறொன்றாலும் மூடப்படாத இடத்தில் எங்களுக்கு மரணம் உண்டாகுமாறு வரம் அளிக்கவேண்டும்' என்று வேண்டினர். திருமால் அவ்வாறே வரமளித்துத் தன் தொடையில் அவர்களின் தலைகளை வைத்துச் சக்கரப்படையால் அறுத்தொழித்தான்.

***838.*** **ஒக்க நெறி உய்ப்பவர் உரைத்த குறி கொள்ளா.**
**பக்கம் இனம் ஒத்த. அயல் அலைக்க. நனி பாரா.--**
**மைக் கரி. மதத்த - விலை மாதர் கலை அல்குல்**
**புக்கவரை ஒத்தன. புனல் சிறைகள் ஏறா.**

***ஒக்க*** - *தக்கவாறு;* ***நெறி உய்ப்பவர்*** - *நல்வழியிலே செலுத்தும் பாகர்கள்;* ***உரைத்த*** - *தெரிவித்த;* ***குறி*** - *குறிப்பு மொழிகளை;* ***கொள்ளா*** - *ஏற்றுக் கொள்ளாதனவும்;* ***பக்கம்*** - *இரு பக்கங்களிலும்;* ***இனம் மொய்த்து*** - *துணைப் பாகர்கள் கூடியிருந்து;* ***அயல் அலைக்க*** - *(வேற்றிடம் செல்ல வொட்டாமல்) வருந்தித் தடுக்கவும்;* ***நனி பாரா*** - *சிறிதும் பொருட்படுத்தாதனவாய்;* ***புனல் சிறைகள் ஏறா*** - *நீர் நிலைகளிலிருந்து கரை ஏறாதனவுமான;* ***மதத்த மைக்கரி*** - *மதத்தையுடைய கரிய யானைகள்;* ***ஒக்க நெறி உய்ப்பவர்*** - *தகுதியாக நல்வழியிலே செலுத்துகின்ற பெரியவர்;* ***உரைத்த குறி கொள்ளா*** - *கூறும் நன்மொழிகளைக் கேளாமலும்;* ***பக்கம் இனம்*** - *சுற்றத்தாரும் நண்பரும்;* ***மொய்த்து அயல் அலைக்க*** - *கூட்டமாகத் திரளும் அயலவரும் இடித்துக் கூறவும்;* ***நனி பாரா*** - *(அவற்றை) கருத்தில் கொள்ளாமலும்;* ***விலைமாதர் கலை அல்குல்*** - *வேசியரின் மேகலையணிந்த அல்குலிலே;* ***புக்கவரை*** - *ஈடுபட்டு அழுந்திய காமுகரை;* ***ஒத்தன*** - *ஒத்து விளங்கின.*

*நன்னெறி உய்ப்பவரின் குறிகளைக் கொள்ளாமலும் பக்கம் இனம் அயல் அலைக்கவும் பாராமலும் நீர்நிலைகளில் (சிறை) அழுந்துவதால் மதயானைக்குக் காமுகரை உவமை கூறினார். கலை - மேகலை என்பதன் முதற்குறை. கொள்ளா. பாரா. ஏறா - வினையாலணையும் பெயர்.*

*அட்டிலில் எழும் புகை*

***839. துகில் இடை மடந்தையரொடு***
***ஆடவர் துவன்றி.***
***பகல் இடைய. அட்டிலில்***
***மடுத்து. எரி பரப்பும்***
***அகில் இடு கொழும் புகை***
***அழுங்கலின். முழங்கா***
***முகில் படு நெடுங் கடலை***
***ஒத்து உளது. அம் மூதூர்.***

***துகில் இடை மடந்தையரொடு*** - *ஆடையணிந்த இடையையுடைய மகிளரோடு;* ***ஆடவர் துவன்றி*** - *ஆண்கள் நெருங்கி;* ***பகல் இடைய*** - *கதிரவன் ஒளியும் மழுங்கும்படி;* ***அட்டலில் மடுத்த*** - *மடைப்பள்ளியிலிருந்து கொண்டு வந்த;* ***எரி*** - *நெருப்பிலே;* ***பரப்பும் அகில்*** - *பரப்பிய அகிற் கட்டைகளில்;* ***இடு கொழும்புகை*** - *உண்டாகிய மிகுதியான புகை;* ***அழுங்கலின்*** - *நெருங்குவதால்;* ***முழங்கா*** - *இடி இடிக்காத;* ***முகில்*** - *மேகங்கள்;* ***படு நெடுங்கடலை*** - *தங்கிய பெரிய கடலை;* ***அம் மூதூர்*** - *(அவர்கள் தங்கிய) பழைய நகர்;* ***ஒத்துளது*** - *ஒத்துள்ளது.*

*அகில்புகை மிகுதியாகத் தங்கிய அந்த இடத்திற்கு முகில்படுதல் உவமையாயிற்று. அந்த இடத்தின் பரப்பும். அங்குள்ளவர் எழுப்பிய அகிற் புகையின் மிகுதியும் வருணனையில் புலப்படும்.*

*சேனை மிகுதியின் பொலிவு*

அறுசீர் விருத்தம்

*840.* ***கமர் உறு பொருப்பின் வாழும்***
***விஞ்சையர் காண வந்தார்.***
***தமரையும் அறியார் நின்று***
***திகைப்புறு தகைமை சான்ற***
***குமரரும் மங்கைமாரும்***
***குழுமலால். வழுவி விண்நின்று***
***அமரர் நாடு இழிந்தது என்னப்***
***பொலிந்தது. அவ் அனீக வெள்ளம்.***

***காண வந்தார்*** - *(அச் சேனை வெள்ளத்தைக் காண வந்தவர்களான);* ***கமர் உறு பொருப்பின் வாழும்*** - *பிளவுகளைக் கொண்ட மலைகளிலே வாழுகின்ற;* ***விஞ்சையர்*** - *வித்தியாதரர்களும்;* ***தமரையும் அறியார் நின்று*** - *தம் இனத்தவரை வேறுபாடு அறியாமல்;* ***திகைப்பு உறும்*** - *திகைப்பதற்குக் காரணமான;* ***தகைமை சான்ற*** - *அழகு மிக்க;* ***குமரரும் மங்கைமாரும்*** - *ஆடவரும் மகளிரும்;* ***குழுமலால்*** - *கூடியிருத்தலால்;* ***அவ் அனீக வெள்ளம்*** - *அந்தச் சேனையின் பெருக்கு;* ***அமரர் நாடு விண் நின்று*** - *தெய்வ லோகம் விண்ணிலிருந்து;* ***வழுவி இழிந்தது என்ன*** - *நழுவி விழுந்ததோ என்னும்படி;* ***பொலிந்தது*** - *விளங்கியது.*

*பேரழகு படைத்த சேனை மாந்தரைக் கண்டு தேவர்களும் வியந்து மயங்கி நின்றனர் என்பது. பேரழகு உள்ளவர் என்று பெயர் படைத்த வித்தியாதரரும் திகைத்துப் பார்க்குமாறு அழகு வாய்ந்த மைந்தரும் மகளிரும் கூடிய அச் சேனை வெள்ளம் திரண்ட அந்த இடம் தேவலோகமே இங்கே வந்து தங்கியதோ என்று ஐயப்படும்படி இருந்தது என்பது.*

*மகளிரும் மைந்தரும் திரியும் காட்சி*

*841.* ***வெயில் நிறம் குறையச் சோதி***
***மின் நிழல் பரப்ப. முன்னம்***
***துயில் உணர் செவ்வியோரும்.***
***துனி உறு முனிவினோரும்.***
***குயிலொடும் இனிது பேசி.***
***சிலம்பொடும் இனிது கூவி.***
***மயிலினம் திரிவ என்ன.***
***திரிந்தனர் - மகளிர் எல்லாம்.***

***முன்னம் துயில் உணர்*** - *(விழித்தெழும் நேரத்திற்கு) சிறிது முன்பே உறக்கம் நீங்கிய;* ***செவ்வியோரும்*** *- அழகு உடையவரும்;* ***துனி உறு முனிவினோரும்*** *- நீண்ட ஊடலால் அமைந்த கோபத்தையுடையவருமான;* ***மகளிர் எல்லாம்*** *- மங்கையர் யாவரும்;* ***குயிலொடும் இனிது பேசி*** *- குயில்களோடு இனிமையாகப் பேசியும்;* ***சிலம்பொடும் இனிது கூவி*** *- மலை எதிரொலிக்க நன்றாகக் கூவியும்;* ***வெயில் நிறம் குறைய*** *- கதிரவன் ஒளி?யும் தமக்கு முன்னே ஒளி மழுங்குமாறு;* ***சோதி*** *- அணிகலன்களின் ஒளி;* ***மின்நிழல் பரப்ப*** *- மின்னலைப் போன்ற ஒளியைப் பரப்ப;* ***மயில் இனம் திரிவ என்ன*** *- (கண்டவர்) மயில்களின் கூட்டம் திரிவன என்று கருதுமாறு;* ***திரிந்தனர்*** *- திரிந்தார்கள்.*

*சிலம்போடு இனிது கூவி எதிரொலியுண்டாக்கி மகிழ்தல் மலைவாழ் மகளிர்க்கு வழக்கமாகும். சிலம்பொடும் இனிது கூவி - தாம் நடக்கும்போது ஒலிக்கின்ற சிலம்பு என்னும் அணியுடனே இனிதாக ஒலி செய்து என்று கூறுவதுண்டு.*

***842. தாள் இணை கழல்கள் ஆர்ப்ப.***
***தார் இடை அளிகள் ஆர்ப்ப.***
***வாள் புடை இலங்க. செங் கேழ்***
***மணி அணி வலையம் மின்ன.***
***தோள் என உயர்ந்த குன்றின்***
***சூழல்கள் இனிது நோக்கி.***
***வாள் அரி திரிவ என்ன.***
***திரிந்தனர் - மைந்தர் எல்லாம்.***

***மைந்தர் எல்லாம்*** *- வீரர்களான ஆடவர் யாவரும்;* ***தாள் இணை கழல்கள் ஆர்ப்ப*** *- (தம்) இரண்டு அடிகளிலும் வீரக் கழல்கள் ஆரவாரிக்கவும்;* ***தார் இடை அளிகள் ஆர்ப்ப*** *- (தாம் அணிந்த) மலர் மாலைகளில் (தேனைப் பருகும்படி) வண்டும் ஆரவாரம் செய்து மொய்க்கவும்;* ***வாள்புடை இலங்க*** *- வாளாயுதங்கள் இடையிலே விளங்கவும்;* ***செங்கேழ் மணி*** *- செந்நிறமுள்ள இரத்தினங்கள்;* ***அணி வலயம் மின்ன*** *- பதித்துச் செய்யப்பட்ட அழகிய தோள் வலயங்கள் ஒளி விடவும்;* ***தோள் என உயர்ந்த*** *- (தம்) தோள்களைப் போல உயர்ந்த;* ***குன்றின் சூழல்கள்*** *- அம் மலையின் சுற்றுப்பக்கங்களை;* ***இனிது நோக்கி*** *- நன்றாகப் பார்த்தவண்ணம்;* ***வாள் அரி திரிவ என்ன*** *- கொடிய சிங்கங்கள் திரிவன போல;* ***திரிந்தனர்*** *- உலாவினார்கள்.*

*தோளென உயர்ந்த குன்று - எதிர் நிலையணி. ஆடவர் மலையின் சுற்றுப் பக்கங்களைக் காணுமாறு சஞ்சரித்தனர் என்பது.*

## வரைக் காட்சிப் படலம்

***படலத்தின் பெயர் அமைதி:***

*தசரதனுடன் சென்ற சேனைகள் சந்திர சைலம் என்னும் மலையைக் கண்டது பற்றிக் கூறும் பகுதியாதலால் இப் பெயர் அமைந்துள்ளது.*

***படலச் சுருக்கம்:***

*மாண்புமிக்க சந்திரசயிலத்தின் தோற்றத்தையும் நிகழ்ச்சிகளையும் மாந்தர் காணுகின்றார்கள். சிறந்த மலைக் காட்சிகளைக் கண்டு வியக்கின்றார்கள். அம்மலைமேல் இனிதாக விளையாடுகின்றார்கள். அந்திக் காலத்தில் மலையினது காட்சியைக் கண்டு மகிழ்கின்றார்கள். இருளிலே தீப ஒளி எங்கும் விளங்குகின்றது. அப்பொழுது வானில் மதி தோன்றியதால் மகளிர் மகிழ்ச்சியடைகின்றார்கள். கூத்தர் ஆடுகின்றார்கள். மலையில் பலவகை ஓசைகள் எழுகின்றன. மாந்தர் இரவை ஒருவாறு கழிக்கின்றனர்.*

*சந்திரசயிலத்தின் தோற்றமும் மாண்பும்*

***843. சுற்றிய கடல்கள் எல்லாம்***
***சுடர் மணிக் கனகக் குன்றைப்***
***பற்றிய வளைந்தவென்ன.***
***பரந்து வந்து இறுத்த சேனை;***
***கொற்றவர். தேவிமார்கள்.***
***மைந்தர்கள். கொம்பனார். வந்து***
***உற்றவர். காணலுற்ற***
***மலை நிலை உரைத்தும் அன்றே!***

***சுற்றிய கடல்கள் எல்லாம்*** *- (உலகத்தை) சூழ்ந்துள்ள கடல்கள் யாவும்;* ***சுடர் மணிக் கனகக் குன்றை*** *- ஒளிவிடும் மணிகளைக் கொண்ட மேருமலையை;* ***பற்றிய*** *- கவர்ந்து கொள்ளும் பொருட்டு;* ***வளைந்த என்ன*** *- வளைத்துக் கொண்டன என்று சொல்லும்படி;* ***சேனை பரந்து வந்து*** *- (அம் மலை இடங்களில்) அந்தச் சேனைகள் பரவி வந்து;* ***இறுத்த*** *- தங்கின;* ***கொற்றவர் தேவிமார்கள்*** *- அரசர்களும் அவ்வரசரின் மனைவியரும்;* ***மைந்தர்கள் கொம்பு அனார்*** *- அரசிளங்குமரரும் பூங் கொம்பு போன்ற இளவரசியரும் ஆகிய;* ***வந்து உற்றவர்*** *- (அங்கு) வந்து சேர்ந்தவர்கள்;* ***காணலுற்ற மலை*** *- காண்பதற்கு அமைந்த அச் சந்திரசயிலத்தின்;* ***நிலை உரைத்தும்*** *- தன்மையை இனிச் சொல்லுவோம். மலையைச் சுற்றிய அடிவாரங்களில் சேனை தங்கியது மேரு மலையைக் கவருமாறு நாற்கடல்களும் வளைத்துள்ளன போலும் என்றார் - தற்குறிப்பேற்ற உவமையணி.*

***844. பம்பு தேன் மிஞிறு தும்பி***
***பரந்து இசை பாடி ஆட.***
***உம்பர் வானகத்து நின்ற***
***ஒளி வளர் தருவின் ஓங்கும்***
***கொம்புகள். பனைக் கை நீட்டி.***
***குழையொடும் ஒடித்து. கோட்டுத்***
***தும்பிகள். உயிரே அன்ன***
***துணை மடப் பிடிக்கு நல்கும்.***

**கோட்டுத் தும்பிகள்** - *தந்தங்களையுடைய ஆண் யானைகள்;* **பம்புதேன் மிஞிறு தும்பி** - *நெருங்கிய தேனில் மொய்க்கின்ற மிஞிறுகளும். தும்பிகளும்;* **பரந்து இசைபாடி** - *பரவிப் பண்களைப் பாடிக்கொண்டு;* **ஆடும் உம்பர் வானகத்து** - *ஆடுதற்கு இடனான மேலிடமாகிய வானுலகத்திலே;* **நின்ற ஒளிதரு தருவின்** - *உள்ள ஒளிவிடும் கற்பகத் தருவினுடைய;* **ஓங்கும் கொம்புகள்** - *உயர்ந்த கிளைகளை;* **பனைக் கை நீட்டி** - *(தம்) பனைமரம் போன்ற கைகளை நீட்டி;* **குழையொடும் ஒடித்து** - *தளிர்களோடும் முறித்து;* **உயிரே அன்ன** - *(தம்) உயிரையொத்த;* **துணை மடப்பிடிக்கு** - *மடப்பத்தையுடைய பெண் யானைக்கு;* **நல்கும்** - *கொடுக்கும்.*

*மிஞிறு. தும்பி: வண்டின் இனங்கள். மிஞிறு: வரி வண்டு. தும்பி: கருவண்டு. ஆண்யானை கற்பகத் தருவின் கிளைகளைத் தமது மடப்பிடிக்குக்கொடுக்குமென்றது - தொடர்புயர்வு நவிற்சியணி. ‘இம் மலை மிக ஓங்கியுள்ளது. இங்கு இருந்தபடியே சொர்க்கத்தை அணுகலாம் என்பது பெறப்படும்.*

***845. பண் மலர் பவளச் செவ் வாய்ப்***
***பனி மலர்க் குவளை அன்ன***
***கண் மலர்க் கொடிச்சிமார்க்குக்***
***கணித் தொழில் புரியும் வேங்கை***
***உண் மலர் வெறுத்த தும்பி.***
***புதிய தேன் உதவும் நாகத்***
***தண் மலர் என்று. வானத்***
***தாரகை தாவும் அன்றே!***

***பண்மலர் பவளச் செவ்வாய்*** - *பண்ணிசை தோற்றும் பவளம் போன்ற செவ்வாயினையும்;* ***பனிக்குவளை மலர் அன்ன*** - *குளிர்ந்த குவளை மலர் போன்ற;* ***கண் மலர்*** - *கண்களையும் பெற்ற முகத்தாமரையையுடைய;* ***கொடிச்சிமார்க்கு*** - *குறிஞ்சிநிலப் பெண்களுக்கு;* ***கணித் தொழில் புரியும்*** - *சோதிடத் தொழில் புரிந்துவரும்;* ***வேங்கை உண்மலர்*** - *வேங்கை மரத்தின் தேனையுண்ட மலர்களின் மேல்;* ***வெறுத்த தும்பி*** - *வெறுப்புற்ற கருவண்டுகள்;* ***புதிய தேன் உதவும்*** - *புதிய தேனைத் தருகின்ற;* ***நாகம் தண் மலரென்று*** - *சுரபுன்னை மலரென்று கருதி;* ***வானத் தாரகை*** - *விண்ணிலே விளங்குகின்ற நடசத்திரங்களின் மேல்;* ***தாவும்*** - *தாவுகின்றன.*

*வேங்கை நன்னாளில் மலர்தலும். அந்த நாளில் மலைமகளிர் மணம் புரிதலும். அது பூத்தபோது மகளிர் தினைப் புனங் கொய்யத் தொடங்குதலும் வழக்காதலின் அவ் வேங்கை சோதிடரை ஒப்பதாயிற்று. 'மலரின் தேனைக் குடித்ததால் தேன் நீங்கிய அந்த வேங்கை மலரை வெறுத்தது தும்பி; பின். வானத்திலே விளங்கும் விண்மீன்களைக் கண்டு அவற்றைச் சுரபுன்னை மலராக மயங்கி அவற்றின்மேல் தாவியது என்றார். மயக்கவணியை அங்கமாகக் கொண்டு வந்த தொடர்புயர்வு நவிற்சியணி. கணி: முகூர்த்தம் அறிவிப்பவன்.*

***846. மீன் எனும் பிடிகளோடும்***
***விளங்கும் வெண் மதி நல் வேழம்***
***கூனல் வான் கோடு நீட்டிக்***
***குத்திட. குமுறிப் பாயும்***
***தேன் உகு மடையை மாற்றி.***
***செந் தினைக் குறவர். முந்தி***
***வான நீர் ஆறு பாய்ச்சி.***
***ஐவனம் வளர்ப்பர் மாதோ!***

***மீன் எனும் பிடிகளோடும்*** - *நட்சத்திரங்களாகிய (தன்) பெண் யானைகளுடனே;* ***விளங்கு வெண்மதி*** - *விளங்கும் வெண்ணிறமுள்ள சந்திரனாகிய;* ***நல்வேழம்*** - *சிறந்த யானை;* ***கூன் நல் வான்கோடு*** - *வளைவும் அழகுள்ள வெண்கொம்புகளை;* ***நீட்டிக் குத்திட*** - *நீட்டிக் குத்தியதனால் (அவற்றிலிருந்து);* ***குமுறிப் பாயும் தேன்*** - *பேரொலியோடு பாய்கின்ற தேனினது;* ***உகு மடையை மாற்றி*** - *பாய்கின்ற மடையைத் தடுத்து;* ***செந்தினைக் குறவர்*** - *செந்தினைக் கொல்லைகளையுடைய மலைக் குறவர்கள்;* ***முந்தி வானம் ஆறு*** - *விரைவாக ஆகாய கங்கையின்;* ***நீர்பாய்ச்சி*** - *நீரைப் பாயச் செய்து;* ***ஐவனம் வளர்ப்பர்*** - *மலை நெல்லை வளரச் செய்வார்கள்.*

*தேன் வெள்ளத்தால் தினை விளைவதற்கு முன் அதனைத் தடுத்து உலர்ந்த ஐவன நெல்லை ஆற்றுநீர் கொண்டு மலைக் குறவர் மாற்றி விளைத்தனர் என்பது - தொடர்புயர்வு நவிற்சியணி. இவ் வருணனையால் மலையின் ஓங்கிய தன்மையும். மலைவளனும் பெறப்படும்.*

***847. குப்புறற்கு அருமையான***
***குல வரைச் சாரல் வைகி.***
***ஒப்புறத் துளங்குகின்ற***
***உடுபதி ஆடியின்கண்.***
***இப் புறத்தேயும் காண்பார்.***
***குறத்தியர். இயைந்த கோலம்;***
***அப் புறத்தேயும் காண்பார்.***
***அரம்பையர். அழகு மாதோ!***

*(ஓங்கியுள்ள அந்த மலை)* ***குப்புறற்கு*** *- கடந்து செல்வதற்கு முடியாததால்;* ***அக் குல வரைச் சாரல் வைகி*** *- ஓங்கிய அம் மலையின் சாரலிடத்தில் தங்கி;* ***ஒப்புறத் துளங்குகின்ற*** *- (இரு புறமும்) ஒரே தன்மைத்தாக விளங்குகின்ற;* ***உடுபதி ஆடியின்கண்*** *- சந்திரனாகிய கண்ணாடியிலே;* ***குறத்தியர் இயைந்த*** *- மலை மகளிர் தன் மனத்திற்கு ஏற்றவாறு அணிந்த;* ***கோலம் இப்புறத்தும்*** *- கோலங்களை (நிலவுலகமான) இந்தப் பக்கத்திலும்;* ***காண்பார்*** *- காண்பார்கள்;* ***அரம்பையர் அழகு*** *- வானுலகத் தெய்வ மகளிர் (தாம் புனைந்த) அலங்காரத்தை;* ***அப் புறத்தும் காண்பார்*** *- (வானுலகமான) அந்தப் பக்கத்திலும் காண்பார்கள்.*

*சந்திரனை அப்பாலே செல்லவொட்டாமல் ஓங்கி இம்மலை தடுத்துள்ளது. அதனால சந்திரன் இம் மலைச் சாரலிலேயே தங்கினான். அவ்வாறு தங்கிய சந்திரன் ஒரு புறம் மலைக் குறத்தியர் தமது கோலத்தைக் காண்பதற்கு உதவியது. மற்றொரு புறம் வானுலக மகளிர் தமது கோலத்தைக் காண்பதற்குப் பயன்படுவதாயிற்று என்பது - தொடர்புயர்வு நவிற்சியணி. உடுபதியாகிய கண்ணாடி (சந்திரன்) நாம் காணும் கண்ணாடி போன்றதாக அமையாமல் இருபக்கமும் பார்க்குமாறு அமைந்தது - வேற்றுமையணி. உடுபதி: சந்திரன். சந்திரன். சாரலில் தங்கும் சயிலம் ஆதலின் சந்திர சயிலம் ஆயிற்று. 5*

***848. உதி உறு துருத்தி ஊதும்***
***உலை உறு தீயும். வாயின்***
***அதி விட நீரும். நெய்யும்.***
***உண்கிலாது. ஆவி உண்ணும்***
***கொதி நுனை வேல் கண் மாதர்***
***குறத்தியர் நுதலினோடு.***
***மதியினை வாங்கி. ஒப்புக்***
***காண்குவர். குறவர் மன்னோ!***

***உதி உறு துருத்தி*** - *காற்று உண்டாக்கும் உலைத் துருத்தியால்;* ***ஊதும் உலை உறும் தீயும்*** - *ஊதப்படும் கொல்லனது உலைக்களத்தில் பொருந்திய நெருப்பையும்;* ***வாயின் அதி விட நீரும்*** - *ஆயுத அலகிலே ஊட்டப்பெற்ற கொடிய நச்சு நீரையும்;* ***நெய்யும் உண்கிலாது*** - *நெய்யையும் கொள்ளாமலே;* ***ஆவி உண்ணும்*** - *(காதலித்த ஆடவரின்) உயிரைப் பறிக்கவல்ல;* ***கொதி நுனை வேல்கண்*** - *கொதிக்கும் முனையுள்ள வேலைப் போன்ற கண்களையுடைய;* ***மாதர் குறத்தியர் நுதலினோடு*** - *அழகிய மலை மகளிரின் நெற்றியோடு;* ***குறவர் மதியினை வாங்கி*** - *குறவர்கள் (அம் மலை மேல செல்லமுடியாத) சந்திரனை எடுத்து;* ***ஒப்புக் காண்குவர்*** - *ஒப்பிட்டுப் பார்ப்பார்கள்.*

*குறவர்கள் அருகிலுள்ள பிறைச் சந்திரனைப் பிடித்துத் தம் மனைவியரின் நெற்றியோடு ஒப்பிட்டுப் பார்த்து ஒற்றுமை காண்பார்கள் என்பது - தொடர்புயர்வு நவிற்சியணி. வேலைக் கூர்மைப்படுத்த கொல்லனது உலைக் களத்தில் காய்ச்சியடிக்கப் பெறுகிறது. துருப்பிடியாமலிருக்க நெய் பூசப்படுகிறது. பகைவரது உயிரைக் கொள்ள நஞ்சு தீற்றப்படுகிறது. இத்தகு இயல்புகளோடு கூடிப் பகைவரது உயிரையுண்ணும் வேலைப் போல. இந்தக் கண்ணாகிய வேல் எந்தச் செயலும் வேண்டாமல் ஆடவரது உயிரை உண்ணவல்லதென்று வேறுபாடு காட்டியது - வேற்றுமையணி.*

***849.*** **பேணுதற்கு அரிய கோலக்**
**குருளை. அம் பிடிகள் ஈன்ற**
**காணுதற்கு இனிய வேழக்**
**கன்றொடு களிக்கும் முன்றில்.**
**கோணுதற்கு உரிய திங்கட்**
**குழவியும். குறவர்தங்கள்**
**வாள் நுதல் கொடிச்சி மாதர்**
***மகவொடு. தவழும் மாதோ!***

***அம் பிடிகள் ஈன்ற*** - *அழகிய பெண் யானைகள் பெற்றெடுத்த;* ***காணுதற்கு இனிய வேழக் கன்றொடு*** - *காண்பதற்கு இனிய யானைக் கன்றுகளோடு;* ***முன்றில் பேணுதற்கு அரிய*** - *(குடிசைகளின்) முற்றங்களிலே பேணி வளர்த்தற்கு அரிய;* ***கோலக் குருளை களிக்கும்*** - *அழகிய சிங்கக் குட்டிகளும் மனமகிழ்ந்து விளையாடும் (அல்லாமலும்);* ***கோணுதற்கு உரிய*** - *வளையும் தன்மை கொண்டுள்ள;* ***திங்கள் குழவியும்*** - *இளஞ்சந்திரனும்;* ***குறவர் தங்கள் வாள்நுதல்*** - *குறவர்களின் ஒளி பொருந்திய நெற்றியையுடைய;* ***கொடிச்சி மாதர் மகவொடு*** - *(மனைவியரான) குறத்தியர் பெற்ற குழந்தைகளோடு;* ***தவழும்*** - *தவழ்ந்து விளையாடும்.*

*யானைக் கன்றோடு சிங்கக் குருளைகள் களிக்கும் எனவும். இளஞ்சந்திரனும் குறத்தியர் குழந்தைகளோடு தவழும் எனவும் கூறினார். நிலத்தின் தன்மையால் இயற்கைப் பகையாயினவும் அப் பகைமை ஒழிந்து நட்புப் பூண்டு ஒழுகின என்பதை உணரலாம். கோலக் குருளை: அழகிய சிங்கக்குட்டி.*

***850. அஞ்சனக் கிரியின் அன்ன***
***அழி கவுள் யானை கொன்ற***
***வெஞ் சினத்து அரியின் திண் கால்***
***சுவட்டொடு. - விஞ்சை வேந்தர்***
***குஞ்சி அம் தலத்தும். நீலக்***
***குல மணித் தலத்தும். - மாதர்***
***பஞ்சி அம் கமலம் பூத்த***
***பசுஞ் சுவடு உடைத்து மன்னோ!***

*(அம் மலை)* **குல நீல மணித் தலத்தும்** *- சிறந்த இந்திர நீலக் கற்களால் அமைந்த அம்மலை (முறையே);* **அஞ்சனக் கிரியின் அன்ன** *- கரிய மலையை ஒத்த;* **அழி கவுள் யானை** *- மதநீர் ஒழுகும் கன்னம் உடையதுமான யானைகளை;* **கொன்ற வெஞ்சினத்து அரியின்** *- கொன்ற கடுங்கோபமுடைய சிங்கத்தினது;* **திண் கால் சுவட்டொடு** *- சிங்கத்தினது வலிய கால்கள் பட்ட அடித்தடங்களும்;* **விஞ்சை வேந்தர் குஞ்சி அம் தலத்தும்** *- வித்தியாதர அரசர்களின் அழகிய மயிர்முடியுள்ள தலையிலும்;* **மாதர் பஞ்சி அம் கமலம்** *- (அவர்) மனைவியரின் செம்பஞ்சு ஊட்டிய அடித் தாமரைகள்;* **பூத்த பசுஞ் சுவடு** *- படுதலால் உண்டாகிய ஈரமான சுவடுகளும்;* **உடைத்து** *- உடையதாக இருந்தது.*

*அம் மலையின் இடங்களில் யானையோடு போர்செய்து அவற்றைக் கொன்ற சிங்கங்களின் அடிச்சுவடுகள் பட்டுள்ளன (ஒரு புறம்) ஊடலில் பணிந்த தலைவரின் முடியுள்ள தலைகளில் அவர் மனைவியரின் காற்சுவடுகள் பட்டன (இன்னொரு புறம்); இவ்வாறு அம் மலையில் அச்சக் குறிகளும் இன்பக் குறிகளும் ஒருங்கே காணப்பெற்றன.*

***851. செங் கயல் அனைய நாட்டம்***
***செவி உறா. முறுவல் தோன்றா.***
***பொங்கு இருங் கூந்தல் சோரா.***
***புருவங்கள் நெரியா. பூவின்***
***அம் கையும் மிடறும் கூட்டி.***
***நரம்பு அளைந்து. அமுதம் ஊறும்***
***மங்கையர் பாடல் கேட்டு.***
***கின்னரம் மயங்கும் மாதோ!***

***மங்கையர்*** - *மகளிர்;* ***செங்கயல் அனைய நாட்டம்*** - *அழகிய கயல் மீன்களையொத்த கண்கள்;* ***செவி உறா*** - *காதுவரை சென்று மீளாதவாறும்;* ***முறுவல் தோன்றா*** - *பற்களில் ஒளி வெளியே தோன்றாவாறும்;* ***பொங்கு இருங் கூந்தல் சோரா*** - *மிகத் திரண்ட மயிர் முடிப்புக் குலைந்து விழாதபடியும்;* ***புருவங்கள் நெரியா*** - *புருவங்கள் வளைந்து தோன்றாதபடியும்;* ***பூவின் அங்கையும் மிடறும் கூட்டி*** - *தாமரை போனற தம் உள்ளங்கையையும் குரலையும் ஒருவழிப்படுத்தி;* ***நரம்பு அளைந்து*** - *நரம்பைத் துழாவி (அதனால் உண்டாக்கும்);* ***அமுதம் ஊறும்*** - *அமுதம் போல் இனிமை தோற்றும்;* ***பாடல் கேட்டு*** - *இன்னிசையைக் கேட்டு;* ***கின்னரம் மயங்கும்*** - *கின்னரப் பறவைகளும் திகைத்து நிற்கும்.*

*'அங்கையும் மிடறும் கூட்டி நரம்பளைந்து' என்றது. மிடற்றுக் குரலுக்கு ஏற்பக் கைத்தொழில் புரிந்து நரம்பில் இன்னோசை உண்டாக்கி என்றபடி. கின்னரம்: இசையின் குற்றங்களையும் குணங்களையும் அறியவல்லதாய் எப்பொழுதும் ஆணும் பெண்ணுமாக இருக்கும் ஒருவகைப் பறவை இசையில் வல்ல தேவசாதி என்றும் பொருள் கூறுவர்.*

***852. கள் அவிழ் கோதை மாதர்.***
***காதொடும் உறவு செய்யும்***
***கொள்ளை வாள்-கண்ணினார்தம்***
***குங்குமக் குழம்பு தங்கும்***
***தெள்ளிய பளிக்குப் பாறைத்***
***தெளி சுனை. மணியில் செய்த***
***வள்ளமும் நறவும் என்ன.***
***வரம்பு இல பொலியும் மன்னோ!***

***காதொடும்*** - *மகளிர் தம் அழகிய காதுகளோடு;* ***உறவு செய்யும்*** - *உறவு கொள்ளுகின்ற;* ***கொள்ளை வாள் கண்ணினார்தம்*** - *(ஆடவர் உயிரைக்) கவரவல்ல வாள் போன்ற கண்களையுடைய மகளிர் அணிந்த;* ***கள் அவிழ் கோதை*** - *தேன் சொரியும் மலர் மாலையணிந்த;* ***மாதர்தம்*** - *மகளிர் தம்;* ***குங்குமக் குழம்பு தங்கும்*** - *குங்குமச் சேறு தங்கிய;* ***தெள்ளிய பளிங்குப் பாறை*** - *தெளிந்த நிறத்தையுடைய பளிங்குப் பாறையினால் இயன்ற;* ***தெளிசுனை வரம்பு இல*** - *தெளிந்த சுனைகள் மிகப் பல;* ***மணியில் செய்த வள்ளமும்*** - *செம்மணியால் இயன்ற கிண்ணங்களும்;* ***நறவும் என்ன*** - *கள்ளும் போல;* ***பொலியும்*** - *விளங்குகின்றன.*

*குங்குமக் குழம்பை அப்பிய மாதர் நீராடுவதனால் பளிங்குச் சுனையில் குங்குமக் குழம்பு தங்கும் என்பது. அதனால் அப் பளிங்குப் பாறை செம்மணி போல் தோன்ற. அக் குங்குமம் கலந்த நீர் நறவு போலத் தோன்றும் என்பது புலனாகும் -தற்குறிப்பேற்ற அணி.*

*853.* ***ஆடவர் ஆவி சோர.***
***அஞ்சன வாரி சோர.***
***ஊடலின் சிவந்த நாட்டத்து***
***உம்பர்தம் அரம்பை மாதர்.***
***தோடு அவிழ் கோதைநின்றும்***
***துறந்த மந்தார மாலை.***
***வாடல. நறவு அறாத.***
***வயின் வயின் வயங்கும் மாதோ!***

**ஆடவர் ஆவி சோர** - *(தம்) கணவரின் உயிர் வருந்தித் தளரும்படி;* **அஞ்சனம் வாரி சோர** - *(தீட்டிய) மையுடன் கண்ணீர் பெருகுமாறு;* **ஊடலில் சிவந்த நாட்டத்து** - *புலவியால் செந்நிறம் அடைந்த கண்களையுடைய;* **உம்பர்தம் அரம்பை மாதர்** - *தேவர்களின் மனைவியர்;* **கோதை நின்றும் துறந்த** - *தம் முடிகளிலிருந்து கழற்றி எறிந்த;* **தோடு அவிழ் மந்தார மாலை** - *இதழ் விரிந்த மந்தார மாலைகள்;* **வாடல நறவு அறாது** - *வாடாதனவாகித் தேனும் நீங்காமல்;* **வயின் வயின் வயங்கம்** - *அந்தந்த இடங்களிலே விளங்கும்.*

*ஊடல் கொண்ட தேவ மாதர் தம் கணர் வருந்துமாறு சிவந்த கண்களில் கண்ணீரைப் பெருக்கிக் கழற்றியெறிந்த மந்தார மாலைகள் அம் மலையின் பல இடங்களிலும் காணப்படும் என்பது. தெய்வ மாலையாதலின் வாடாமலும். நறவு அறாமலும் இருந்தன.*

*854.* ***மாந் தளிர் அனைய மேனிக்***
***குறத்தியர் மாலை சூட்டி.***
***கூந்தல் அம் கமுகின் பாளை***
***குழலினோடு ஒப்புக் காண்பார்;***
***ஏந்து இழை அரம்பை மாதர்***
***எரி மணிக் கடகம் வாங்கி.***
***காந்தள் அம் போதில் பெய்து.***
***கைகளோடு ஒப்புக் காண்பார்.***

***மாந் தளிர் அனைய*** - *மாந் தளிரைப் போன்ற;* ***மேனிக் குறத்தியர்*** - *உடல் நிறம் கொண்ட குறப் பெண்கள்;* ***மாலை சூட்டி*** - *மலர் மாலைகளை அணிவித்து;* ***(பின்பு) கூந்தல் கமுகின் பாளை*** - *கூந்தற் கமுகின் பாளைகளை;* ***குழலினோடு ஒப்புக் காண்பார்*** - *(தம்) கூந்தலோடு வைத்து ஒப்பிட்டுக் காண்பார்கள்;* ***ஏந்து இழை அரம்பை மாதர்*** - *அழகிய அணிகலன் பூண்ட தெய்வ மாதர்கள்;* ***எரி மணிக் கடகம் வாங்கி*** - *நெருப்புப் போல ஒளிவிடும் மணிக் கடகங்களைக் கழற்றி;* ***காந்தள் போதில் பெய்து*** - *காந்தள் மலர்களிலே அவற்றை யணிந்து;* ***கைகளோடு ஒப்புக் காண்பார்*** - *(தம்) கைகளோடு உவமை காண்பார்கள். குறத்தியர் கூந்தற் கமுகின் பாளைகளிலே மலர் மாலையையணிவித்து அவை தமது கூந்தலோடு ஒப்பாவதைக் கண்டனர். தெய்வ மகளிர் தம் கடகத்தை வாங்கிக் காந்தளிலேயணிந்து அம் மலர் தம் கைக்கு ஒப்பாவதைக் காண்பார் என்பது. மண்ணுலகத்தவரும். விண்ணுலகத்தவரும் மகிழ்வதற்கு அம் மலை இடனாயுள்ளது என்றார்.*

***855. சரம் பயில் சாபம் என்னப்***
***புருவங்கள் தம்மின் ஆடா.***
***நரம்பினோடு இனிது பாடி.***
***நாடக மயிலோடு ஆடி.***
***அரம்பையர் வெறுத்து நீத்த***
***அவிர் மணிக் கோவை ஆரம்.***
***மரம் பயில் கடுவன் பூண.***
***மந்தி கண்டு உவக்கும் மாதோ.***

***சரம் பயில் சாபம் என்ன*** - *அம்பு பொருந்திய வில்லைப் போன்ற;* ***புருவங்கள் தம்மின் ஆடா*** - *புருவங்கள் தம்மிலே ஆடாமல் இருக்க;* ***நரமபினோடு இனிது பாடி*** - *யாழ் நரம்போடு பொருந்த இனிமையாகப் பாடி;* ***மயிலோடு நாடகம் ஆடி*** - *மயில்களோடு (ஒப்ப) நடனம் ஆடி;* ***அரம்பையர் வெறுத்து*** - *தெய்வ மகளிர் (கணவர் மீது) ஊடலை உட்கொண்டு;* ***நீத்த அவிர்மணிக் கோவை*** - *கழற்றியெறிந்த ஒளிரும் நவமணி மாலைகளையும்;* ***ஆரம்*** - *முத்தாரங்களையும்;* ***மரம் பயில் கடுவன்*** - *மரங்களில் பழகுகின்ற ஆண்குரங்குகள்;* ***பூண*** - *(தமக்கு) அணிவிக்க;* ***மந்தி கண்டு உவக்கும்*** - *பெண் குரங்குகள் (அந்த அணிகளின்) அழகைக் கண்டு மகிழ்ச்சியடையும்.*

*தெய்வப் பெண்கள் ஊடலால் கழற்றியெறிந்த இரத்தினமாலை முதலியவற்றை ஆண்குரங்குகள் பெண்குரங்குகளுக்கு பூட்டின; அந்த அழகைக் கண்ட அப் பெண் குரங்குகள் மகிழ்ந்தன என்பது.*

***856. சாந்து உயர் தடங்கள்தோறும்***
***தாதுராகத்தின் சார்ந்த***
***கூந்தல் அம் பிடிகள் எல்லாம்***
***குங்குமம் அணிந்த போலும்;***
***காந்து இன மணியின் சோதிக்***
***கதிரொடும் கலந்து வீசச்***
***சேந்து. வானகம். எப்போதும்***
***செக்கரை ஒக்கும் அன்றே.***

***சாந்து உயர் தடங்கள் தோறும்*** - *சந்தன மரங்கள் ஓங்கியுள்ள மலைச் சாரல்கள் தோறுமுள்ள;* ***தாது ராகத்தின் சார்ந்த*** - *காவிக் கற்களின் செந்நிறத்தோடு பொருந்திய;* ***கூந்தல் அம் பிடிகள் எல்லாம்*** - *புறமயிருள்ள பெண்யானைகள் எல்லாம்;* ***குங்குமம் அணிந்தபோலும்*** - *குங்குமக் குழம்பு அப்பியவற்றை ஒத்துள்ளன;* ***காந்து இன மணியின் சோதி*** - *ஒளி விடுகின்ற பதுமராகக் கற்களின் செந்நிற ஒளியானது;* ***கதிரொடும் கலந்து பூச*** - *சூரியன் கதிர்களோடு சேர்ந்து செந்நிறத்தைப் பூச;* ***வான் அகம் எப்போதும்*** - *வானமானது எப்பொழுதும் செந்நிறமடைந்து;* ***செக்கரை ஒக்கும்*** - *செவ்வானத்தைப் போலும்.*

*செவ்வானம் மாலைக் காலத்தில்தான் தோன்றும். ஆனால். மலையிலுள்ள பதுமராக மணியொளி சூரியக் கதிர்களோடு மேலிடமெங்கும் பரவியிருப்பதால் பகலிலும் அச் செவ்வானம் தோன்றுவதாயிற்று என்பதாம். தாதுராகம்: காவிக்கல்லின் செந்நிறம். காவிக் கற்களில் சார்வதால் கரிய யானைகள் குங்குமக் குழம்பு பூசப் பெற்றார்போலத் தோன்றும் என்பது. பிறிதின் குணம் பெறலணியும். உவமையணியும் சேர்ந்து வந்துள்ளன.*

***857. நிலமகட்கு அணிகள் என்ன***
***நிரை கதிர் முத்தம் சிந்தி.***
***மலைமகள் கொழுநன் சென்னி***
***வந்து வீழ் கங்கை மான.***
***அலகு இல் பொன் அலம்பி ஓடி.***
***சார்ந்து வீழ் அருவி மாலை.***
***உலகு அளந்தவன்தன் மார்பின்***
***உத்தரீயத்தை ஒத்த.***

***நிலமகட்கு அணிகள் என்ன*** - பூமிதேவிக்கு (இவை) அணிகள் என்னும்படி; ***நிரை கதிர் முத்தம்*** - வரிசையான கதிர்களையுடைய முத்துக்களை; ***சிந்தி மலைமகள் கொழுநன்*** - சிதறி உமாதேவியின் கணவனான சிவனது; ***சென்னி வந்து வீழ்*** - முடியில் வந்து விழுகின்ற; ***கங்கை மான*** - கங்கையைப் போல (வெண்ணிறத்தோடு); ***அலகு இல் பொன்*** - அளவில்லாத பொன்னை; ***அலம்பி ஓடி*** - கொழித்துக் கொண்டு பெருகி; ***சார்ந்துவீழ் அருவி மாலை*** - முத்துக்களோடு பொருந்தி ஓடிவரும் மலையருவியின் வரிசை; ***உலகு அளந்தவன் தன்*** - இந்த உலகத்தை அளந்தருளின திருமாலின்; ***மார்பின் உத்தரீயத்தை*** - மார்பில் அணிந்த மேலாடையை; ***ஒத்த*** - ஒத்து விளங்கிற்று.

*சந்திர சயில மலை உலகளந்த திருமாலை ஒத்துள்ளது. அதில் பொன்னை அலம்பியோடி முத்தோடு பொருந்திய அருவிமாலை அத்திருமால் மார்பில் அணிந்த உத்தரீயத்தை ஒக்கும் என்றார் - தற்குறிப்பேற்ற உவமையணி. மலையருவிகள் பூமிதேவிக்கு அணியாகுமாறு முத்துக்களைச் சிந்தும் என்பது. அருவி வெண்ணிறத்தோடு வீழ்வதால் உத்தரீயத்திற்கு ஒப்பாயிற்று.*
*மலை நிகழ்ச்சிகளை மாந்தர் காணுதல்*

***858.*** **கோடு உலாம் நாகப் போதோடு**
**இலவங்க மலரும் கூட்டிச்**
**சூடுவார். களி வண்டு ஓச்சித்**
**தூநறுந் தேறல் உண்பார்.**
**கேடு இலா மகர யாழில்**
**கின்னர மிதுனம் பாடும்**
**பாடலால் ஊடல் நீங்கும்**
**பரிமுக மாக்கள் கண்டார்.**

***கோடு உலாம்*** - கொம்புகளில் பூத்த; ***நாகப் போதோடு*** - சுரபுன்னை மலர்களோடு; ***இலவங்க மலரும் கூட்டி*** - இலவங்க மலரையும் சேர்த்து; ***சூடுவார்*** - அணிகின்றவரான அம் மலைவாணர்கள்; ***களி வண்டு ஓச்சி*** - மதுக் களிப்புள்ள வண்டுகளை ஓட்டிவிட்டு; ***தூநறுந்தேறல் உண்பார்*** - தூய மணம் பொருந்திய மதுவைக் குடிப்பவரானார்கள்; ***கேடு இலா மகர யாழின்*** - (அதனோடு) குற்றம் இல்லாத மகர வீணையோடு கூடி; ***கின்னர மிதுனம் பாடும்*** - இரட்டையர்களான கின்னரமென்னும் தேவசாதியர் பாடுகின்ற; ***பாடலால் ஊடல் நீங்கும்*** - இனிய பாடலால் (தாம்) கொண்ட ஊடல் நீங்குகின்றன; ***பரிமுக மாக்கள் கண்டார்*** - குதிரை முகங்கொண்ட தெய்வ மக்களையும் (அவர்கள்) கண்டார்கள்.

*பூவைப் பறித்துச் சூடுதலும் மதுவைப் பருகுதலும். இனிய பாடலைக் கேட்டலும் தேவசாதியினர் செயல்களைக் கண்டு மகிழ்வதுமாக அங்கே சென்ற மக்கள் இருந்தார்கள் என்பது. கின்னர மிதுனம்: ஆண் பெண்களாகக் கூடி வாழ்பவரும் இசை வல்லாருமான தேவசாதியர். பரிமுக மாக்கள்: குதிரை முகமும் மனித உடலும் கொண்ட தேவசாதியர்.*

***859.  பெருங் களிறு ஏயும் மைந்தர்***
***பேர் எழில் ஆகத்தோடு***
***பொரும் துணைக் கொங்கை அன்ன.***
***பொரு இல். கோங்கு அரும்பின் மாடே.***
***மருங்கு எனக் குழையும் கொம்பின்***
***மடப் பெடை வண்டும். தங்கள்***
***கருங் குழல் களிக்கும் வண்டும்.***
***கடிமணம் புணரக் கண்டார்.***

***பெருங்களிறு ஏயும்*** - *பெரிய ஆண் யானையை ஒத்த;* ***மைந்தர் பேரெழில் ஆகத்தோடு*** - *இளைஞர்களின் மிக்க அழகுடைய மார்பிலே;* ***பொரும் துணைக் கொங்கை*** - *தாக்கும் இரட்டையான தனங் களை;* ***அன்ன பொரு இல்*** - *ஒத்த வேறு உவமை இல்லாத;* ***கோங்கு அரும்பின் மாடு*** - *கோங்கு அரும்புகளினிடத்து;* ***மருங்கு எனக் குழையும்*** - *(அம் மகளிரின்) இடையைப் போலத் துவளுகின்ற;* ***கொம்பின்*** - *பூங்கொம்பில் தங்கும்;* ***மடப்பெடை வண்டும்*** - *இளம் பெண் வண்டுகளும்;* ***தங்கள் கருங்குழலில்*** - *தம் கரிய கூந்தலில் படிந்து;* ***களிக்கும் வண்டும்*** - *களிக்கின்ற ஆண் வண்டுகளும்;* ***கடிமணம் புணர*** - *புதுமணம் செய்து கொள்வதை;* ***கண்டார்*** - *(மக்கள்) கண்டார்கள்.*

*தம் தனம் போன்ற கோங்கு அரும்பிலே பூங்கொம்பில் வாழும் பெண் வண்டுகளும். கருங்கூந்தலில் படிந்த ஆண் வண்டுகளும் புதுமணம் புரிவதை அங்கே தங்கிய மகிளர் கண்டார் என்பது.*

***860.  'படிகத்தின் தலம்' என்று எண்ணி.***
***படர் சுனை முடுகிப் புக்க***
***சுடிகைப் பூங் கமலம் அன்ன***
***சுடர் மதி முகத்தினார்தம்***
***வடகத்தோடு உடுத்த தூசு***
***மாசு இல் நீர் நனைப்ப. நோக்கி.***
***கடகக் கை எறிந்து. தம்மில்***
***கருங் கழல் வீரர் நக்கார்.***

***படர் சுனை*** - *பரவியுள்ள நீர்ச் சுனையை;* ***படிகத்தின் தலம் என்று*** - *படிகக் கற்கள் கிடக்கும் இடமென்று;* ***எண்ணி*** - *மாறாகக் கருதி;* ***முடுகிப் புக்க*** - *விரைந்து சென்ற;* ***சுடிகைப் பூங்கமலம்*** - *சுட்டியணிந்த அழகிய தாமரையையும்;* ***சுடர் மதி அன்ன*** - *ஒளிவிடும் சந்திரனையும் ஒத்த;* ***முகத்தினார்தம் வடகத்தோடு*** - *முகத்தையுடைய மகளிரின் மேலாடையோடு;* ***உடுத்த தூசை*** - *(அரையில் கட்டிய) சேலையையும்;* ***மாசு இல் நீர் நனைப்ப*** - *கலங்காது தெளிந்த தண்ணீர் நனைக்க;* ***நோக்கி*** - *(அதை) கண்டு;* ***கடகக் கை எறிந்து*** - *கடகம் அணிந்த கைகளைக் கொட்டி;* ***கருங் கழல் வீரர்*** - *பெரிய கழலணிந்த வீரர்கள்;* ***நக்கார்*** - *சிரித்தார்கள்.*

*மகளிர் சுனையுள்ள இடத்தைப் பளிங்குத் தலமென்று கருதிச் சென்றதால். தமது ஆடை நனைந்தன. அதைப் பார்த்த வீரர்கள் கை கொட்டிச் சிரித்தனர். என்பது - மயக்கவணியும் பொதுவணியும் கலந்த கலவையணியாம்.*

***861. பூ அணை பலவும் கண்டார்;***
***பொன்னரிமாலை கண்டார்.***
***மே வரும் கோபம் அன்ன***
***வெள்ளிலைத் தம்பல் கண்டார்;***
***ஆவியின் இனிய கொண்கரைப்***
***பிரிந்து. அறிவு அழிந்த விஞ்சைப்***
***பாவையர் வைக. தீய்ந்த***
***பல்லவ சயனம் கண்டார்.****

*(அல்லாமலும்)* ***பூ அணை பலவும் கண்டார்*** *- (அங்குள்ள மக்கள்) மலர்ப் படுக்கை பலவற்றைப் பார்த்தார்கள்;* ***பொன் அரி மாலை கண்டார்*** *- (புலவியால் எறிந்த) பொன்னரி மாலைகளைக் கண்டார்கள்;* ***மேவரும் கோபம் அன்ன*** *- விரும்பத்தக்க இந்திர கோபப் பூச்சியை ஒத்த;* ***வெள்ளிலைத் தம்பல்*** *- வெற்றிலைத் தம்பலங்களை;* ***கண்டார்*** *- பார்த்தார்கள்;* ***ஆவியின் இனிய*** *- (தம்) உயிரினும் இனியரான;* ***கொண்கர் பிரிந்து*** *- கணவரைப் பிரிந்து;* ***அறிவு அழிந்த*** *- மதியை இழந்த;* ***விஞ்சைப் பாவையர் வைக*** *- வித்தியாதர மகளிர் தங்குவதால்;* ***தீய்ந்த பல்லவ சயனம்*** *- தீய்ந்துவிட்ட தளிர்ப்படுக்கைகளையும்;* ***கண்டார்*** *- பார்த்தார்கள்.*

*இவை வெவ்வேறிடங்களில் அமைந்த காட்சிகளாதலின் 'கண்டனர் கண்டனர்' என்று தனித் தனியே கூறினார். தம்பல் - தம்பலம்: வெற்றிலை பாக்கை மென்று உமிழ்ந்தது.*

***862. பானல் அம் கண்கள் ஆட.***
***பவள வாய் முறுவல் ஆட.***
***பீன வெம் முலையின் இட்ட***
***பெரு விலை ஆரம் ஆட.***
***தேன் முரன்று அளகத்து ஆட.***
***திரு மணிக் குழைகள் ஆட.***
***வானவர் மகளிர் ஆடும்.***
***வாசம் நாறு ஊசல் கண்டார்.***

***பானல் அம் கண்கள் ஆட*** - *கருங்குவளை போன்ற கண்கள் பிறழவும்;* ***பவள வாய் முறுவல் ஆட*** - *பவளம் போன்ற (தம்) வாயிலே புன் சிரிப்புத் தோன்றவும்;* ***பீன வெம்முலையின்*** - *பருத்துள்ளனவும் விரும்பத் தக்கனவுமான தனங்களிலே;* ***இட்ட பெருவிலை*** - *அணிந்த மிகுதியான விலை பெற்ற;* ***ஆரம் ஆட*** - *முத்தாரங்கள் அசையும்;* ***தேன் அளகத்து*** - *தேன் வண்டுகள் கூந்தலிலே;* ***முரன்று ஆட*** - *ஒலித்துக் கொண்டு சுழலவும்;* ***திரு மணிக் குழைகள் ஆட*** - *அழகிய மணிகள் இழைத்த குழைகள் (செவிகளில்) அசையவும்;* ***வானவர் மகளிர்*** - *தேவ மாதர்கள்;* ***ஆடும் வாசம் நாறு*** - *ஏறி ஆடுகின்ற மணம் கமழும்;* ***ஊசல் கண்டார்*** *-ஊஞ்சல்களைப் பார்த்தார்கள்.*

*தெய்வப் பெண்கள் தம் கண் முதலியன ஆட ஊஞ்சல் ஆடுவதையும் சென்றவர் கண்டவர் என்றார். ஊசலாடும் இயல்பை வருணித்தது - தன்மை நவிற்சியணி. ஆட என்ற சொல் ஒரு பொருளில் பலமுறை வந்தது - சொற்பொருள் பின்வருநிலையணி.*

***863. சுந்தர வான மாதர்***
***துவர் இதழ்ப் பவள வாயும்.***
***அந்தம்இல் சுரும்பும். தேனும்.***
***மிஞிறும் உண்டு - அல்குல் விற்கும்***
***பைந் தொடி மகளிர். 'கைத்து ஓர்***
***பசை இல்லை' என்ன விட்ட***
***மைந்தரின் - நீத்த தீம் தேன்***
***வள்ளங்கள் பலவும் கண்டார்.***

***அல்குல் விற்கும்*** - *(தம்) அல்குலை விலைக்கு விற்கின்ற;* ***பைந்தொடி மகளிர்*** - *பசும் பொன்னாலாகிய தொடிகள் அணிந்த விலை மகளிர்;* ***ஓர் பசை இல்லை*** - *(செல்வமெல்லாம் பறித்த பின்) கையிலே சிறிதும் பயனில்லை;* ***என்ன*** - *என்று கருதி;* ***கைத்துவிட்ட*** - *வெறுத்துக் கைவிடப்பட்ட;* ***மைந்தரின்*** - *ஆண்களைப் போல;* ***சுந்தர வான மாதர்*** - *அழகிய தெய்வப் பெண்களின்;* ***துவர் இதழ்*** - *சிவந்த இதழோடு;* ***பவள வாயும்*** - *கூடிய பவளம் போன்ற வாயும்;* ***அந்தம் இல் சுரும்பும்*** - *வரம்பு இல்லாத சுரும்பும்;* ***தேன் மிஞிறும்*** - *தேனும் மிஞிறும் ஆகிய வண்டினங்களும்;* ***உண்டு நீத்த*** - *பருகிக் கைவிட்ட;* ***தீந்தேன் வள்ளங்கள் பலவும்*** - *இனிய மதுக் கிண்ணங்கள் பலவற்றையும்;* ***கண்டார்*** - *பார்த்தார்கள்.*

*தெய்வப் பெண்களின் வாயும். சுரும்பும். தேனும். மிஞிறும் குடித்து நீத்த வெற்று வள்ளங்களை அங்குள்ளவர் பார்த்தார்கள். வீசி எறியப்பட்ட மதுக்கிண்ணங்களுக்குக் கையில் பொருள் உள்ளவரையிலும் தம்மிடம் வைத்துக் கொண்டு அவர்களிடம் பொருளில்லாதபோது விலைமகளிரால் கைவிடப்படும் மைந்தரை உவமை கூறினார் - உவமையணி.*

***864. அல் பகல் ஆக்கும் சோதிப்***
***பளிக்கு அறை அமளிப் பாங்கர்.***
***மல் பக மலர்ந்த திண் தோள்***
***வானவர் மணந்த. கோல.***
***வில் பகை நுதலினார். தம்***
***கலவியில் வெறுத்து நீத்த***
***கற்பகம் ஈன்ற மாலை***
***கலனொடும் கிடப்பக் கண்டார்.***

***அல் பகல் ஆக்கும் சோதி*** *- இருளையும் பகலாக்கவல்ல ஒளியுடைய;* ***பளிங்கு அறை*** *- பளிங்குப் பறையால் அமைந்த;* ***அமளிப் பங்கர்*** *- படுக்கையறையில்;* ***மல் பக மலர்ந்த*** *- மல்லரும் தோற்றோடும்படி விரிந்த;* ***திண்தோள் வானவர்*** *- வலிய தோள்களையுடைய தேவர்களால்;* ***மணந்த கோலம்*** *- கூடப்பெற்ற அழகிய;* ***வில் பகை நுதலினார்*** *- (புருவங்களால்) வில்லோடு பகைக்கும் நெற்றியை உடைய தெய்வப் பெண்கள்;* ***தம் கலவியின்*** *- தமது புணர்ச்சிக் காலத்தில் (இடையூறு தந்தமையால்);* ***வெறுத்து நீத்த*** *- வெறுப்போடு கழற்றியெறிந்த;* ***கற்பகம் ஈன்ற மாலை*** *- கற்பக மலர்களால் கட்டப் பெற்ற மாலைகள்;* ***கலனொடும் கிடப்ப*** *- அணிகலன்களோடு வீழ்ந்து கிடப்பதை;* ***கண்டார்*** *- பார்த்தார்கள்.*

*பளிங்குப் பாறையிலே தேவர்களால் கூடப் பெற்ற தெய்வ மகளிர் அந்த வானவரைத் தழுவுவதற்கு இடையூறாக இருக்கின்றன என்று கருதித் தாம் அணிந்திருந்த கற்பக மாலைகளையும். கலன்களையும் வெறுத்து எடுத்தெறிந்தனர் என்பது. வில்பகை நுதலினார்: வில்லோடு உவமையில் வேறுபடும் நெற்றியர்.*

***865. கை என மலர வேண்டி***
***அரும்பிய காந்தள் நோக்கி.***
***பை அரவு இது என்று அஞ்சி.***
***படைக் கண்கள் புதைக்கின்றாரும்;***
***நெய் தவழ் வயிரப் பாறை***
***நிழலிடைத் தோன்றும் போதை.***
***'கொய்து இவை தருதிர்' என்று.***
***கொழுநரைத் தொழுகின்றாரும்;***

***கை என மலரவேண்டி*** - *(பெண்களின்) கை போல மலர வேண்டி;* ***அரும்பிய காந்தள்*** - *அரும்பிய காந்தளை;* ***நோக்கி*** - *பார்த்து;* ***இது பை அரவு*** - *இது படத்தையுடைய பாம்பு;* ***என்று அஞ்சி*** - *என்று கருதி அச்சப்பட்டு;* ***படைக் கண்கள்*** - *(தம்) வேல் போன்ற கண்களை;* ***புதைக்கின்றாரும்*** - *(கைகளால்) மூடிக் கொள்பவரும்;* ***நெய் தவழ் வயிரப்பாறை*** - *வெண்ணெய் போல விளங்கும் வயிரப் பாறைகளின்;* ***நிழலிடைத் தோன்றும்*** - *ஒளியிலே தோன்றுகின்ற;* ***போதை*** - *மலரை (உண்மையான மலரென்று மயங்கி);* ***இவை கொய்து*** - *இம் மலர்களைப் பறித்து;* ***தருதிர் என்று*** - *தாருங்கள் என்று;* ***கொழுநரைத்*** - *(தம்) கணவரை;* ***தொழுகின்றாரும்*** - *வணங்கிக் கேட்பவரும் (பெண்களும்).*

*காந்தள் மலர்வது கை போல் இருக்கும் காந்தள் அரும்பைப் படமுடைய பாம்பாகவும். வயிரப் பாறையில் நிழலாகத் தோன்றும் மலரை உண்மையான பூவாகவும் கொண்டு மகளிர் மயங்கினர் என்பது - மயக்கவணி.*

***866. பின்னங்கள் உகிரின் செய்து.***
***பிண்டி அம் தளிர்க் கைக் கொண்ட***
***சின்னங்கள் முலையின் அப்பி.***
***தே மலர் கொய்கின்றாரும்;***
***வன்னங்கள் பலவும் தோன்ற***
***மணிஒளிர் மலையின் நில்லார்***
***அன்னங்கள் புகுந்த என்ன.***
***அகன் சுனை குடைகின்றாரும்.***

***பிண்டி அம் தளிர்*** - *அசோகின் அழகிய தளிர்களை;* ***உகிரில் பின்னங்கள் செய்து*** - *(தம்) நகங்களால் சிறு சிறு துண்டுகளாகக் கிள்ளி;* ***கைக் கொண்ட சின்னங்கள்*** - *கைக் கொண்ட அத் துண்டுகளை;* ***முலையின் அப்பி*** - *தம் தனங்களிலே அழகுபடப் பொருத்தி;* ***தேன்மலர்*** - *தேனுடைய மலர்களை;* ***கொய்கின்றாரும்*** - *பறிப்பவரும்;* ***வன்னங்கள் பலவும்*** - *பலவகையான வண்ணங்களும்;* ***தோன்ற*** - *தோன்றும்படி;* ***மணி ஒளிர் மலையின்*** - *நவமணிகள் விளங்கும் மலையிலே;* ***நில்லா அன்னங்கள்*** - *நிலையாக இருந்த வாழாத அன்னங்கள்;* ***புகுந்த என்ன*** - *(இப்போது) புகுந்தன என்று (கண்டோர்) கருதும்படி;* ***அகல்சுனை*** - *பரவியுள்ள சுனைகளிலே;* ***குடைகின்றாரும்*** - *(அச் சேனையில் உள்ள மாதர்கள்) மூழ்கிக் குளிப்பவராயினர்.*

*தளிர் முறிகளைத் தம் தனங்களில் அப்பி அலங்காரம் செய்து கொள்வது மகளிர் இயல்பாம். மாதர்கள் மலர் கொய்தலையும். சுனை குடைதலையும் செய்தனர் என்பது. அன்னப் பறவை மருதநிலக் கருப்பொருளாதலால் 'மலையின் நில்லா' என்றார்.*

*சிறந்த மலைக் காட்சிகள்*

**கலிவிருத்தம்**

*867.* ***ஈனும் மாழை இளந் தளிர் ஏய் ஒளி***
***ஈனும். மாழை இளந் தளிரே - இடை.***
***மானும். வேழமும். நாகமும். மாதர் தோள்***
***மானும் வேழமும். நாகமும் - மாடு எலாம்.***

**இடை ஈனும்** - *(அம் மலையின்) நடுப்பாகத்தில் தளிர்க்கின்ற;* **மாழை இளந்தளிர் ஏய்** - *மாமரத்தின் இளைய தளிரையொத்த;* **ஒளி ஈனும் மாழை** - *ஒளியைத் தரும் பொன்னின்;* **இளந் தளிரே** - *மெல்லிய தகடுகளாகும்;* **மாடு எலாம்** - *அந்த மலையின் பக்கங்களிலெல்லாம்;* **மானும் வேழமும்** - *மானும் யானையும்;* **நாகமும்** - *பாம்பும்;* **மாதர் தோள் மானும்** - *மகளிரின் தோளையொத்த தன்மையைக் கொண்ட;* **வேழமும் நாகமும்** - *மூங்கில்களும் சுரபுன்னை மரங்களும் (உள்ளன).*

***யமகம் என்னும் மடக்கணி. மாழை: மாமரம். பொன். நாகம்: பாம்பு. சுரபுன்னை.*** *25 868.* ***திமிர. மா உடல்***
***குங்குமச் சேதகம்***
***திமிர. மாவொடும் சந்தொடும் தேய்க்குமால்;***
***அமர மாதரை ஒத்து ஒளிர் அம் சொலார்***
***அமர. மா தரை ஒத்தது. அவ் வானமே.***

**திமிர மா உடல்** - *இருள் போன்ற கரிய நிறமுடைய காட்டுப் பன்றிகள் (தம்) உடலிலே;* **குங்குமச் சேதகம்** - *மகளிர் ஊடலில் அழித்தெறிந்த குங்குமச் சேறு;* **திமிர** - *நிரம்பியதனால்;* **மாவொடும் சந்தொடும்** - *(அச் சேறு நீங்கும்படி) மாமரத்திலும். சந்தன மரத்திலும்;* **தேய்க்கும்** - *(தம் உடம்பை) உராயச் செய்யும்;* **அமரர் மாதரை** - *(அந்த இடத்தில்) தேவ மாதரை;* **ஒத்து ஒளிர் அம் சொலார்** - *ஒப்ப விளங்கும் இனிய சொல்லையுடைய மகளிர்;* **அமர மா தாரை** - *பொருந்தியிருப்பதால் அந்தப் பெரிய மலை நிலமானது;* **அவ் வானமே ஒத்தது** - *தெய்வப் பெண்கள் தங்கும் அந்த வானுலகம் போன்றது.*

*கரும் பன்றி தன் உடலில் பட்ட குங்குமச் சேற்றைப் போக்குவதற்காக மாமரத்திலும் சந்தன மரத்திலும் தேய்க்கும். தேவ மங்கையரை ஒத்த பெண்கள் அங்கு வாழ்வதால் அம் மலை தேவருலகம் போன்று இருக்கும் என்பதாம்.*

*869.* ***பேர் அவாவொடு மாசுணம் பேர. வே***
***பேர. ஆவொடு மா சுணம் பேரவே!***
***ஆர ஆரத்தி னோடும் மருவியே***
***ஆர வாரத்தின் ஓடும் அருவியே!***

***மாசுணம்*** - பெரும் பாம்புகள்; ***பேர் அவாவொடு*** - (இரையை விரும்பியதனால்) மிகு விருப்புடன்; ***பேர*** - பெயர்ந்து செல்வதனால்; ***வே பேர*** - மூங்கில்கள் அடி பெயர்ந்து இற்றுவிழ; ***ஆவொடு மா சுணம் பேர*** - (அது கண்டு அஞ்சிய) காட்டுப் பசுக்கள் ஓடவும். (அதனால் எழுந்த) பெரும் புழுதி பறக்கவும் (ஆயின) ; ***அருவி*** - (அம்மலையில் உள்ள) நீரருவிகள்; ***ஆர ஆரத்தினோடும்*** - மிகுதியான முத்துக்களோடும்; ***மருவி*** - கலந்து; ***ஆரவாரத்தின் ஓடும்*** - பேரொலியுடன் ஓடிக் கொண்டிருக்கும்.

*மலையின் ஒருபுறத்தில் புழுதி பறக்கின்றது. மற்றொரு புறத்தில் அருவி ஓடுகின்றது. இவ்வாறு மலையின் சிறப்புக் கூறப்படுகிறது. வே: மூங்கில். சுணம்: சுண்ணம். புழுதி.*

***870. புகலும் வாள் அரிக்கு அண்ணியர் பொன் புயம்.***
***புகலும். வாள் அரிக் கண்ணியர் பூண் முலை.***
***அகிலும் ஆரமும் ஆர அங்கு ஓங்குமே!***
***அகிலும். ஆரமும் மாரவம் கோங்குமே.***

***புகலும் வாள் அரிக்கு*** - சிறப்பித்துச் சொல்லும் வாள்போல் கொடிய சிங்கத்தையொத்த; ***அண்ணியர் பொன்புயம்*** - ஆடவர்களின் அழகிய தோள்களில்; ***வாள் அரிக் கண்ணியர்*** - ஒளிமிக்க செவ்வரி பரந்த கண்களையுடைய பெண்களின்; ***பூண் முலை*** - பூண் அணிந்த தனங்கள்; ***புகலும்*** - சேர்ந்த அளவில்; ***அகிலும் ஆரமும்*** - (மார்பில் அணிந்த) அகில் குழம்பும் சந்தனக் குழம்பும்; ***ஆர அங்கு ஓங்கும்*** - நிறைந்து அத்தோள்களில் சிறப்பாக விளங்கும்; ***அகிலும்*** - (புயத்திற்கு ஒப்பான) அம் மலையிடங்களிலும்; ***ஆரமும் மாரவமும்*** - சந்தன மரங்களும். குங்கும மரங்களும்; ***கோங்கும்*** - கோங்கு மரங்களும் (பொருந்தியிருக்கும்).

*மாதர் தம் கணவரைத் தழுவுகையில் அவர்கள் அணிந்த அகிலும் ஆரமும் ஆண்களின் தோள்களில் சேர்ந்து மிகச் சிறக்கும் என்பது. வேறு உரை: வாள் அரிக் கண்ணியர்: ஒளி பொருந்திய வண்டுகள் மொய்க்கும் மாலை சூடிய வீரர் என்றும் உரைக்கலாம். மரவம்: குங்கும மரம். மாரவம் - நீட்டல் விகாரம்.*

***871. துன் அரம்பை நிரம்பிய. தொல் வரை.***
***துன் அரம்பையர் ஊருவின் தோன்றுமால்;***
***கின்னரம் பயில் கீதங்கள் என்ன. ஆங்கு.***
***இன் நரம்பு அயில்கின்றனர். ஏழைமார்.***

***தொல் வரை*** - பழைய அந்த மலையில்; ***துன் அரம்பை நெருங்கி வளர்ந்த வாழைகள்; நிரம்பிய*** - நிரம்பியவை; ***துன்னு அரம்பையர்*** - (அங்கு) வந்துள்ள தெய்வப் பெண்களின்; ***ஊருவின் தோன்றும்*** - தொடை போலத் தோன்றுவன (அங்கு); ***ஏழைமார்*** - மாதர்கள்; ***கின்னரம் பயில்*** - கின்னரம் என்ற தேவ சாதியார் பாடுகின்ற; ***கீதங்கள் என்ன*** - இனிய பாடல் என்று சொல்லும்படி (அந்த மலையில்); ***இன் நரம்பு*** - யாழினை; ***அயில்கின்றனர்*** - மீட்டுகின்றார்கள்.

*மகளிரின் தொடைக்கு உவமையாகும். வாழை இங்கே உவமேயமாகவும். தொடை உவமானமாகவும் சொல்லப்பெற்றன - எதிர்நிலையுவமையணி.*

***872. ஊறு. மா கடம் மா. உற ஊங்கு எலாம்.***
***ஊறுமா கட மா மதம் ஓடுமே;***
***ஆறு சேர் வனம் ஆ. வரை. ஆடுமே;***
***ஆறு சேர்வன. மா. வரையாடுமே.***

***மா கடம் மா** - பெரிய காட்டிலுள்ள மாமரங்கள்; **ஊறு உற** - சேதம் அடையும்படி; **ஊங்கு எலாம்** - அம் மலையிடங்களில் எல்லாம்; **ஊறுமா** - மேன்மேல் சுரக்கும்படி; **கடம் மா மதம்** - யானைகளின் மதநீர்; **ஓடும்** - பெருகி ஓடும் (அந்தப் பெருக்கால்); **ஆறு சேர் வனம்** - வழிகளில் திரண்ட காட்டிலுள்ள; **ஆ வரை ஆடும்** - ஆச்சா மரமும் மூங்கில்களும் (வேர் அறுந்து) அசைந்தாடும்; **யாறு சேர்வன** - அந்த மலையாறுகளில் நீருண்ணச் செல்பவை; **வரை யாடும் மா** - மலையாடுகளும் மற்றைய மிருகங்களுமாம்.*

*காட்டு மரங்கள் சேதம் அடையும்படி யானை மதநீர் பாய்ந்தது. அம் மதத்தால் ஆச்சா முதலிய மரங்கள் வேர் பறிந்து ஒரு புறத்தில் வீழ்கின்றன. மற்றொருபுறம் நீர் உண்ணும்படி மலையாறுகளில் வரையாடு முதலிய காட்டு விலங்குகள் செல்லுகின்றன என்பது - தொடர்பு உயர்வு நவிற்சியணி.*

***873. கல் இயங்கு கருங் குற மங்கையர்.***
***கல்லி அங்கு அகழ் காமர் கிழங்கு எடா.***
***வல்லியங்கள் நெருங்கு மருங்கு எலாம்.***
***வல் இயங்கள் நெருங்கி மயங்குமே.***

***கல் இயங்கு** - மலையில் வாழுகின்ற; **கருங் குற மங்கையர்** - கரிய குறத்தியர்; **அங்குக் கல்லி அகழ்** - அம் மலையில் தோண்டி; **காமர் கிழங்கு எடா** - அழகான கிழங்குகளை எடுப்பதற்காக; **வல்லியங்கள் நெருங்கு** - புலிகள் நெருங்கி வாழும்; **மருங்கு எலாம்** - மலைப் பக்கங்களிலெல்லாம்; **வல் இயங்கள்** - (அவற்றை விரட்ட) வலிய பறைக் கருவிகள்; **நெருங்கி மயங்கும்** - மிகுதியாக ஒலிக்கும்.*

*குறத்தியர் கிழங்குகளைத் தோண்டி எடுக்கவேண்டிய பருவமாதலால் குறவர் பலவகைத் தோற்கருவிகளை முழக்குகின்றனர் என்றார். எடா - செய்யா என்னும் வினையெச்சம்.*

***874. கோள் இபம் கயம் மூழ்க. குளிர் கயக்***
***கோளி. பங்கயம். ஊழ்கக் குலைந்தவால்;***
***ஆளி பொங்கும் மரம் பையர் ஓதி. ஏய்.***
***ஆளி பொங்கும். அரம்பையர் ஓதியே.***

**கோள் இபம்** - வலிமையுள்ள யானைகள்; **கயம் மூழ்க** - அம் மலையிலுள்ள நீர்நிலைகளில் மூழ்கி விளையாட; **குளிர் கயக் கோளி** - (அக் குளத்தின் கரையிலுள்ள) குளிர்ச்சி தரும் பெரிய ஆல மரங்களும்; **பங்கயம் ஊழ்க** - தாமரை மலர்களும் நலம் கெட்டு; **குலைந்த** - குலைந்தன; **ஆளி பொங்கும்** - சிங்கங்கள் சீறியெழும்; **மரம் பையர் ஓதி** - மரங்களைப் பக்கத்தேயுடைய மலையில்; **ஏய் அரம் பையர்** - தங்கிய தேவமாதரின்; **ஓதி ஆளி பொங்கும்** - கூந்தலில் வண்டுகள் மகிழ்ச்சியுடன் தங்குவன.

யானைகள் அம் மலையின் கயத்திலே மூழ்குவதால் அந்த நீர்நிலையிலுள்ள தாமரையும். அக் குளக் கரையிலுள்ள ஆலமரமும் அழிந்தன. ஒரு பக்கம் தேவமாதர் தங்குவதனால் அவர்களின் கூந்தலில் தேனைப் பருகி வண்டுகள் களித்து நிற்கும் என்றார். ஆளி -அளி என்பதன் நீட்டல் விகாரம். ஓதி: பெண் மயிர். மலை.

**875. ஆகம் ஆலையம் ஆக உளாள் பொலி-**
**வாக மால் ஐயன் நின்றெனல் ஆகுமால்-**
**மேக மாலை மிடைந்தன மேல் எலாம்**
**ஏக. மாலை கிடந்தது. கீழ் எலாம்.**

**மேக மாலை** - (அம் மலையில்) மேக வரிசைகள்; **மேல் எலாம் மிடைந்தன** - மேலிடம் முழுதும் நெருங்கினவாய்; **கீழ் எலாம் ஏக மாலை** - கீழிடமெல்லாம் ஒரே மாலைத் திரளாக; **கிடந்தது** - கிடக்கும் (அம் மலை) (அதனால்); **ஆகம் ஆலையம் ஆக** - (தன்) திருமார்பைக் கோயிலாகக் கொண்ட; **உளாள் பொலி** - திருமகள் விளங்குகின்ற; **வாக மால் உளார்** - அழகிய திருமால் தங்கியிருக்கின்றார்; **எனல் ஆகும்** - என்று சொல்லுவதற்குப் பொருந்தும்.

அம் மலையின் மேற்புறத்தில் எல்லாம் மேகங்கள் வரிசை வரிசையாகப் படிந்துள்ளன. கீழ்புறத்தில் மலர்மாலைகள் கிடக்கின்றன; இவற்றால் அம் மலை பலரால் அருச்சிக்கப்பட்ட மலர்மாலையைப் பூண்ட கரிய திருமால் போல விளங்கும் என்பது. வாகு (அழகு) - வாக எனத் திரிந்தது - குறிப்புப் பெயரெச்சம். மேகம் சூழ்ந்த மலை திருமாலுக்கும் மாலைகள் திருமகளுக்கும் உவமிக்கப் பெற்றன.

மலைமேல் இனிது விளையாடல்

**876. பொங்கு தேன் நுகர் பூ மிஞிறு ஆம் என.**
**எங்கும் மாதரும் மைந்தரும் ஈண்டி. அத்**
**துங்க மால் வரைச் சூழல்கள் யாவையும்**
**தங்கி. நீங்கலர். தாம் இனிது ஆடுவார்.**

***பொங்கு தேன் நுகர்*** - *பெருகும் தேனை உண்ணுகின்ற;* ***பூ மிஞிறு ஆமென*** - *பூக்களில் மொய்க்கும் வண்டுகள் போல;* ***எங்கும் மாதரும்*** - *எல்லா இடங்களிலும் மகளிரும்;* ***மைந்தரும் ஈண்டி*** - *ஆடவரும் நெருங்கி;* ***அத் துங்க மால்வரை*** - *ஓங்கிய பெரிய அம்மலையின்;* ***சூழல்கள் யாவையும்*** - *சாரல்களிலெல்லாம்;* ***தங்கி*** - *வசித்து;* ***நீங்கலார்*** - *(அம் மலையை விட்டு) பிரிந்து செல்ல மனம் இல்லாதவராய்;* ***தாம் இனிது ஆடுவார்*** - *(தாம்) இனிமையாக விளையாடினார்கள். வண்டுகள் மலர்களில் மொய்த்து அவற்றிலுள்ள தேனை உண்பது போல மைந்தரும் அம் மலைச் சாரல்களில் மொய்த்து ஆங்காங்குள்ள வளங்களை நுகர்ந்தனர் என்பது.*

***877. இறக்கும் என்பதை எண்ணிலர். எண்ணுங்கால்.***
***பிறக்கும் என்பது ஒர் பீழையது ஆதலால்.***
***துறக்கம் எய்திய தூயவரே என.***
***மறக்ககிற்றிலர். அன்னதன் மாண்பு எலாம்.***

*(அங்கே தங்கிய ஆடவரும். மகளிரும்);* ***இறக்கம் என்பதை*** - *(மலையை விட்டு) இறங்குவது என்பதை;* ***எண்ணுங்கால் அது*** - *நினைத்தால் அச் செயல்;* ***ஒர் பீழை பிறக்கும்*** - *பெருந் துன்பத்தை உண்டாக்கும்;* ***என்பது ஆதலால்*** - *என்ற காரணத்தால்;* ***எண்ணிலர்*** - *(அதை மனத்தாலும்) நினையாதவரானார்கள் (அல்லாமலும் அவர்கள்);* ***துறக்கம் எய்திய*** - *விண்ணுலக இன்பத்தை நுகர்கின்றன;* ***தூயவர் என*** - *சான்றோர் போல;* ***அன்னதன் மாண்பு எலாம்*** - *அந்த மலையின் வளங்களையெல்லாம்;* ***மறக்க கிற்றிலர்*** - *மறக்க முடியாதவர் ஆனார்கள்.*

*துறக்கம் புக்க சான்றோர் அதன் சிறப்பை எண்ணுவதல்லாமல் வேறு எதனையும் மனத்தாலும் கருதாதவாறு போல. அந்த மலையைச் சேர்ந்த ஆடவரும் மகளிரும் அம் மலைவளத்தில் ஈடுபட்டிருந்தார்களேயன்றி வேறு எதையும் நினைக்கவில்லை என்பது.*

*அந்திக் காலத்தில் மலைக்காட்சி*

***878. மஞ்சு ஆர் மலை வாரணம் ஒத்தது; வானின் ஓடும்***
***வெஞ் சாயையுடைக் கதிர். அங்கு. அதன்மீது பாயும்***
***பஞ்சானனம் ஒத்தது; மற்று அது பாய. ஏறு***
***செஞ் சோரி எனப் பொலிவுற்றது. செக்கர் வானம்.***

***மஞ்சு ஆர் மலை*** - *மேகம் தங்கிய அந்த மாலையானது;* ***வாரணம் ஒத்தது*** - *யானையைப் போன்றுள்ளது;* ***வானின் ஓடும்*** - *வானத்தில் விரைந்து செல்லுகின்ற;* ***வெம் சாயை உடை*** - *வெப்பமான கதிர்களையுடைய;* ***கதிர்*** - *சூரியன்;* ***அதன் மீது பாயும்*** - *அந்த யானைமேல் பாய்கின்ற;* ***பஞ்சானனம் ஒத்தது*** - *சிங்கத்தையொத்தது;* ***செக்கர் வானம்*** - *செவ்வானமானது;* ***அது பாய ஊறும்*** - *அச்சிங்கம் (யானைமேல்) பாய்ந்ததால் சுரக்கின்ற;* ***செஞ்சோரி என*** - *சிவந்த இரத்தம் போல;* ***பொலிவுற்றது*** - *விளங்கியது.*

அந்திப் பொழுது உண்டாகச் சூரியன் மலையைச் சேரச் செவ்வானம் தோன்றியது. இதனை ஒரு யானை மீது சிங்கம் பாய்ந்ததால் எங்கும் இரத்தம் ஊறியதைப் போன்றது என்று வருணித்தார் - தன்மைத் தற்குறிப்பேற்றவணி.

***879. திணி ஆர் சினை மா மரம் யாவையும்***
***செக்கர் பாய.***
***தணியாத நறுந் தளிர் தந்தன***
***போன்று தாழ.***
***அணி ஆர் ஒளி வந்து நிரம்பலின்.***
***அங்கம் எங்கும்.***
***மணியால் இயன்ற மலை ஒத்தது -***
***அம் மை இல் குன்றம்.***

***திணி ஆர் சினை*** - வலிமையான கிளைகள் கொண்ட; ***மா மரம் யாவையும்*** - பெரிய மரங்கள் யாவும்; ***செக்கர் பாய*** - செவ்வானத்தின் ஒளி வீசுவதால்; ***தணியாத நறுந்தளிர்*** - குறையாத சிறந்த தளிர்கள்; ***ஈன்றன போன்று தாழ*** - புதிதாகத் தழைத்தன போல விளங்க; ***அங்கம் எங்கும்*** - தன்னுடல் முழுவதும்; ***அணி ஆர் ஒளி*** - அழகிய அந்தச் செந்நிற ஒளி; ***வந்து நிரம்பலின்*** - வந்து நிறைவதால்; ***அம்மை இல் குன்றம்*** - குற்றமற்ற அந்த மலையானது; ***மணியால் இயன்ற*** - செந்நிறமுள்ள மணிகளால் இழைக்கப் பெற்றுள்ள; ***மலை ஒத்தது*** - மலையை ஒத்தது.

செவ்வானம் வீசப் பெறுவதால் செந்தளிர் புதிதாக உண்டாகப் பெற்றால் போன்ற பல மரங்கள் கவிந்த அந்தச் சந்திரசயிலம் செம்மணி கொண்டு இழைக்கப் பெற்றது போல் விளங்கிற்று என்பது - தற்குறிப்பேற்றவணி.

***880. கண்ணுக்கு இனிது ஆகி விளங்கிய***
***காட்சி யாலும்.***
***எண்ணற்கு அரிது ஆகி இலங்கு***
***சிரங்க ளாலும்.***
***வண்ணக் கொழுஞ் சந்தனச் சேதகம்***
***மார்பு அணிந்த***
***அண்ணல் கரியோன்தனை ஒத்தது -***
***அவ் ஆசு இல் குன்றம்.****

***கண்ணுக்கு இனிது ஆகி*** - கண்களுக்கு அழகுடையதாகி; ***விளங்கிய காட்சியாலும்*** - தோன்றுகின்ற தோற்றப் பொலிவாலும்; ***எண்ணற்கு அரிது ஆகி*** - எண்ணுவதற்கு அரிதாகுமாறு; ***இலங்கு சிரங்களாலும்*** - (ஆயிரக் கணக்கில்) விளங்கும் முடிகளாலும்; ***வண்ணம்*** - அழகு சேர்ந்ததாகிய; ***கொழுஞ் சந்தனச் சேதகம்*** - வளமான சந்தனக் குழம்பை; ***மார்பு அணிந்த*** - (தன்) மார்பில் அணிந்த; ***அண்ணல் கரியோன்தனை*** - பெருமையுள்ள திருமாலை; ***அவ் ஆசு இல்*** - அந்தக் களங்கம் இல்லாத; ***குன்றம் ஒத்தது*** - குன்றமானது ஒத்திருந்தது. கண்ணிற்கு இனிய காட்சியாலும் முடி ஆயிரத்தாலும் சந்தனம் மார்பில் அணிந்ததாலும் சந்திர சயில மலை திருமாலை ஒத்தது என்றார். மலைக்குச் சிரம்: சிகரம். மார்பு: நடுவிடம்.

மலையில்நின்றும் இறங்குதல்

***881. ஊனும் உயிரும் அனையார் ஒருவர்க்கு ஒருவர்.***
***தேனும். மிஞிறும். சிறு தும்பியும். பம்பி ஆர்ப்ப.***
***ஆனை இனமும் பிடியும். இகல் ஆளி ஏறும்.***
***மானும் கலையும். என. மால் வரை வந்து இழிந்தார்.***

***ஒருவர்க்கு ஒருவர்*** - ஒருவருக்கு ஒருவர்; ***ஊனும் உயிரும் அனையார்*** - உடம்பும் உயிரும் போல்பவராய் (நட்புக் கொண்ட) மகளிரும்; ***யானை இனமும் பிடியும்*** - ஆண் யானை இனமும் பெண் யானை இனமும் போலவும்; ***இகல் ஆளி ஏறும்*** - வலிமையுள்ள ஆண் சிங்கங்களும் (பெண் சிங்கங்களும்) போலவும்; ***மானும் கலையும் என*** - பெண்மான்களும் கலைமான்களும் போலவும்; ***தேனும் மிஞிறும்*** - தேனும். மிஞிறும்; ***சிறு தும்பியும்*** - சிறிய தும்பியும் ஆகிய வண்டின் சாதிகள்; ***பம்பி ஆர்ப்ப*** - நெருங்கி ஆரவாரிக்க; ***மால் வரை*** - பெரிய மலையின் அடிவாரத்தில்; ***வந்து இழிந்தார்*** - வந்து தங்கினார்கள்.

ஒருவர் மீது ஒருவர் பேரன்பு கொண்டு அங்கே சேனையோடு வந்த ஆடவரும் மகளிரும் யானை முதலியன போன்ற தோற்றத்தோடு தம் மாலைகளில் தேன் முதலிய வண்டுகள் நெருங்கி ஆரவாரிக்க அந்த மலையின் அடிவாரத்தில் வந்து தங்கினர் என்பது.

இருளும் தீப ஒளியும்

***882. கால் வானகத் தேருடை வெய்யவன்.***
***காய் கடுங் கண்***
***கோல் மாய் கதிரப் புல் உளைக்***
***கொல் சினக் கோள்அரிம்மா.***
***மேல்பால் மலையில் புக. வீங்கு இருள்.***
***வேறு இருந்த***
***மால் யானை ஈட்டம் என. வந்து***
***பரந்தது அன்றே.***

***வானகம்*** - *வானத்தில் உலாவுகின்ற;* ***கால் தேர் உடைய*** - *ஒற்றைச் சக்கரத் தேரையுடைய;* ***வெய்யவன்*** - *சூரியனாகிய;* ***காய் கடுங்கண்*** - *எரிக்கக்கூடிய கொடிய கண்களையும்;* ***கோல் மாய் கதிர்*** - *எய்யும் அம்பு மறைந்து விடுவதற்கு இடமான கதிர்களாகிய;* ***புல் உளை*** - *புல்லிய புற மயிர்களையும்;* ***கொல்சினம்*** - *கொல்லவல்ல சினத்தையும்;* ***கோள் அரிம் மா*** - *மிடுக்கையும் உடைய சிங்கமானது;* ***மேல் பால் மலையில் புக*** - *மேற்குத் திசையிலுள்ள மலையில் புகுந்ததால்;* ***வீங்கு இருள்*** - *மிக்க இருளானது;* ***வேறு இருந்த*** - *தனியாகப் பதுங்கியிருந்த;* ***மால் யானை*** - *பெரிய யானைகளின்;* ***ஈட்டம் என*** - *கூட்டம்போல்;* ***வந்து பரந்தது*** - *வந்து பரவிற்று.*

*சிங்கமானது வேறு மலைக்குச் சென்றுவிட்டதால் பதுங்கியிருந்த யானைக் கூட்டம் பிறகு வெளிவருவதுபோலச் சூரியன் மறையவே இருள் எங்கும் பரவியது என்பது - உருவகமும் உவமையும் சேர்ந்து வந்தன. வெய்யவனை அரிமா என்றதற்கு ஏற்ப அவனது வெப்பத்தைக் காய்கடுங் கண்ணாகவும். அவனுடைய கதிர்களை உளை மயிராகவும் உருவகம் செய்தார். 'கால் வானகத் தேருடை' - சிங்கம்: காலிலும் வாலிலும் நகத்திலும் அழகுடைய: 'கோல் மாய் கதிர்ப் புல்லுளை' - எய்யும் அம்புகளை மறைக்கும் புல்லிய புறமயிர்ச் செறிவுடைய - சிலேடை உருவக அணி. அரிம்மா - விரித்தல் விகாரம்.*

***883. மந்தாரம் முந்து மகரந்த மணம் குலாவும்***
***அம் தார் அரசர்க்கு அரசன்தன் அனீக வெள்ளம்.***
***நந்தாது ஒலிக்கும் நரலைப் பெரு வேலை எல்லாம்***
***செந்தாமரை பூத்தென. தீபம் எடுத்தது அன்றே.***

***மந்தாரம் முந்து மகரந்தம்*** - *மந்தார மலர்கள் சொரியும் தேனின்;* ***மணம் குலாவும்*** - *மணங் கமழப் பெற்ற;* ***அம்தார் அரசர்க்கு அரசன் தன்*** - *அழகிய மாலையணிந்த தசரதனின்;* ***அனீக வெள்ளம்*** - *சேனைக் கடலனாது;* ***நந்தாது ஒலிக்கும்*** - *குறையாமல் ஒலிக்கும்;* ***நரலை*** - *பெரு முழக்கத்தையுடைய;* ***பெரு வேலை எல்லாம்*** - *பெருங் கடலின் இடம் முழுவதும்;* ***செந்தாமரை பூத்து என*** - *செந்தாமரை மலர் பூத்தது போல;* ***தீபம் எடுத்த*** - *விளக்குகளை ஏற்றி வைத்தது.*

*சேனை தங்கியிருந்த இடம் முழுவதும் விளக்குகள் ஏற்றப்பட்டதனால் அது கடல் முழுதும் செந்தாமரை பூத்தது போல விளங்கியது என்பது - தற்குறிப்பேற்ற அணி.*

*மதியம் தோன்ற மகளிர் முகமலர்தல்*

***884. தண் நல் கடலில் துளி சிந்து தரங்கம் நீங்கி.***
***விண்ணில் சுடர் வெண் மதி வந்தது. மீன்கள் சூழ -***
***வண்ணக் கதிர் வெண்நிலவு ஈன்றன வாலுகத்தோடு***
***ஒள் நித்திலம் ஈன்று. ஒளிர் வால் வாளை. ஊர்வது***
***ஒத்தே.***

***வண்ணக் கதிர் ஈன்ற*** - அழகிய வெண்ணிறக் கதிர்களையுடைய; ***வெண்ணிலவு என*** - நிலாப் போன்ற; ***வாலுகத்தோடு*** - வெண் மணற் குவியலின் இடையே; ***ஒள் நித்திலம்*** - நல்ல நிறமுள்ள முத்துக்களை; ***ஈன்று ஒளிர்*** - பெற்று விளங்கும்; ***வால் வாளை*** - வெண்மையான சங்கு; ***ஊர்வது ஒத்து*** - சஞ்சரிப்பது போன்று; ***தண் நற்கடலில்*** - குளிர்ந்த அழகிய கடலிலே; ***தளி சிந்து*** - நீர்த் திவலைகளை வீசுகின்ற; ***தரங்கம் நீங்கி*** - அலைகளிலிருந்து வெளிப்பட்டு; ***சுடர் வெள்மதி*** - ஒளி திகழும் வெண்ணிறச் சந்திரன்; ***மீன்கள் சூழ*** - நட்சத்திரங்கள் சூழ்ந்திருக்க; ***விண்ணில் வந்தது*** - வானத்திலே வந்து விளங்குவதாயிற்று.

*கடலிலிருந்து வெளிப்பட்டு வானத்தில் நட்சத்திரங்கள் சூழப் பிரகாசிக்கும் சந்திரன் கடலிலிருந்து வெளிப்பட்டு வெண் மணலிலே முத்துக்கள் சூழ்ந்து விளங்க இடையே தோன்றும் வெண்சங்கை ஒத்தது என்பது - தற்குறிப்பேற்றவணி.*

***885.*** **மீன் நாறு வேலை ஒரு வெண்**
**மதி ஈனும் வேலை.**
**நோனாது அதனை. நுவலற்கு**
**அருங் கோடி வெள்ளம்**
**வான் நாடியரின் பொலி மாதர்**
**முகங்கள் என்னும்**
**ஆனா மதியங்கள் மலர்ந்தது.**
**அனீக வேலை.**

***மீன் நாறு வேலை*** - மீன்களின் புலால் நாற்றம் வீசும் கடலானது; ***ஒரு வெண்மதி*** - வெண்ணிறமுள்ள ஒரு சந்திரனை; ***ஈனும் வேலை*** - பெறுங் காலத்தில்; ***அதனை நோனாது*** - அந்தச் செயலைப் பொறுக்காமல்; ***அனீக வேலை*** - சேனைக் கடலானது; ***வான் நாடியரின் பொலி*** - வானுலக மகளிரைப் போல விளங்கும்; ***மாதர் முகங்கள் என்னும்*** - பெண்களுடைய முகங்கள் என்று சொல்லப்படுகின்ற; ***நுவலற்கு அருங் கோடி வெள்ளம்*** - அளவிட்டுச் சொல்ல முடியாத கோடி வெள்ளக் கணக்கான; ***ஆனா மதியங்கள்*** - கலை குறையாத முழுமையான சந்திரர்களை; ***மலர்ந்தது*** - பெற்றது.

*கடல் ஒரு சந்திரனை ஈன்றது கண்டு பொறாமை கொண்டு சேனைக் கடலானது மாதர் முகங்கள் என்ற பல சந்திரர்களைப் பெற்றது என்பது - ஏதுத் தற்குறிப்பேற்றவணி. சேனைக் கடலுக்கு மீனையுடைய கடலை விட மேன்மை தோன்றுவதற்காக வேறுபாடு கூறியது - வேற்றுமையணி.*

*கூத்தர் ஆடலும் மகளிர்கோலமும்*

***886. மண்ணும் முழவின் ஒலி.***
***மங்கையர் பாடல் ஓதை.***
***பண்ணும் நரம்பின் பகையா***
***இயல் பாணி ஓதை.***
***கண்ணும் முடை வேய் இசை. -***
***கண்ணுளர் ஆடல்தோறும்-***
***விண்ணும் மருளும்படி***
***விம்மி எழுந்த அன்றே.***

***கண்ணுளர்*** - கூத்தர் இயைந்த; ***ஆடல்தோறும்*** - ஆடு களங்களில் எல்லாம்; ***மண்ணும் முழவு*** - மார்ச்சனை அமைந்த மத்தளத்தின்; ***இன் ஒலி*** - இனிய ஓசையும்; ***மங்கையர்*** - ஆடலுக்கு இசைய பாடல் பாடும் மங்கையர்தம்; ***பாடல் ஓதை*** - கலத்தோடு (இசைக் கருவிகள்) பொருந்த அமைந்த கண்டத்து (மிடற்றுப்) பாடல் ஓசையும்; ***பண்ணும்*** - சுருதி சுத்தமாக அமைய வேண்டி முடுக்கி அமைக்கப் பட்ட; ***நரம்பின்*** - நரம்புக் கருவிகளில்; ***பகையா இயல் ஓதை*** - பகை நரம்பில் விரல் மறந்தும் பதியாவாறு அமைய எழும் ஓசையும்; ***பாணி*** - தாளம் ஒத்து அமைந்த ஓசையும்; ***கண்*** - தொளைகள்; ***உடைவேய்*** - நன்கு அமைக்கப் பெற்ற புல்லாங்குழல்களின் ஒலியும் ஆகிய இவை எல்லாம்; ***விண்ணும் மருளும்படி*** - தேவலோகத்தவரும் கேட்டு. கண்டு மருளும்படி; ***விம்மி*** - மிக்கு; ***எழுந்த*** - எழுந்தன.

தேவசாதியர் தம்முள் ஒரு வகையர் கின்னரர். இவர்கள் யாழ்த்திறம் வல்லவர். தேவர்கள் ஆடல். பாடல். மகளிர் நலம். நுகர்தல் இவற்றில் மிக்க ஆர்வத்தினர். அத்தகையரே அயோத்தி மக்கள் தம் ஆடல். பாடல் காண கேட்க நேரின் மருள்வர் என்பதாம். மார்ச்சனை: முழவிற்கு இடப்படும் ‘ரவை’ - இயைந்து பாடுங்கால் மிடற்றொலி எது? கருவி ஒலி எது? எனப் பிரிந்து அறிதல் எஃகுச் செவியர்க்கும் எளிதன்றாம். நரம்புக் கருவிகளை இயக்கு முறைகள் வார்தல். வடித்தல் முதலிய எண்வகை என்ப (சிலம்பு).

***887. மணியின் அணி நீக்கி.***
***வயங்கு ஒளி முத்தம் வாங்கி.***
***அணியும் முலையார். அகில்***
***ஆவி புலர்த்தும் நல்லார்.***
***தணியும் மது மல்லிகைத்***
***தாமம் வெறுத்து. வாசம்***
***திணியும் இதழ்ப் பித்திகைக்***
***கத்திகை சேர்த்துவாரும்.***

***மணியின் அணி*** - இரத்தின ஆபரணங்களை மார்பினின்றும்; ***நீக்கி*** - அகற்றி அவற்றினும் நொய்யது ஆன; ***வயங்கு ஒளி முத்தம்*** - விளங்குகின்ற ஒளி உடைய முத்து மாலையை (ஒருகாழ் முத்தம் - ஒற்றைவடம்); ***வாங்கி*** - தோழியரிடம் பெற்று; ***அணியும்*** - அணி கின்ற; ***அகில் ஆவி புலர்த்தும்*** - தமது குழற்காட்டை அகிற்புகையால் புலருமாறு செய்யும். (என்பதால் இவர்கள் மாலைக் குளியர் என்றாயிற்று) ; ***நல்லார்*** - அவர்கள் (அம்மகளிர்); ***தணியும் மது மல்லிகைத் தாமம்*** - மென்மையான நறுமணம் வீசுகின்ற மல்லிகை மாலையை; ***வெறுத்து*** - வெறுப்புற்றுக் களைந்து; ***வாசம் திணியும்*** - நறுமணம் மிக்க; ***இதழ்ப் பித்திகை கத்திகை*** - இதழ்களை உடைய கருமுகை மலர் மாலையை; ***சேர்த்து வாரும்*** - அணிவாரும் (ஆயினர்).

இரவிற்கோர் கோலம் கொடி இடையார் தாம் கொள்வர் என்பதால் கல் இழைத்துச் செய்த அணிகலன்களை நீக்கி ஒற்றை வட முத்து மாலை அணிந்தனர் என்க. மாலையில் நீராடிப் புறந்தூய்மை மேவினர். கூந்தற்குப் புகையூட்டிப் பொலிந்தனர். இரவை உவகையுடன் எதிர்நோக்கினர் என்பதாம்.

பலவகை ஓசைகள்

***888. புதுக் கொண்ட வேழம் பிணிப்போர்***
***புனை பாடல் ஓதை.***
***மதுக் கொண்ட மாந்தர்***
***மடவாரின் மிழற்றும் ஓதை.***
***பொதுப்பெண்டிர் அல்குல்***
***புனை மேகலைப் பூசல் ஓசை.***
***கதம் கொண்ட யானை***
***களியால் களிக்கின்ற ஓதை.***

***புதுக் கொண்ட*** - பழகிய யானைகளைக் கொண்டு கொப்பத்து வீழ்த்திப் பிடித்த புதிய; ***வேழம்*** - கதம் மிக்க களிற்றி யானையை; ***பிணிப்போர்*** - தம் வயப்படுத்தக் கருதிய பாகர்கள்; ***புனை*** - தாம் புதுவதாகப் புனைந்த; ***பாடல் ஓதை*** - பாட்டின் ஓசையும்; ***மதுக் கொண்ட மாந்தர்*** - கள் மிகுதியாகப் பருகிய ஆண்கள்; ***மடவாரின்*** - தம் உரிமை மகளிரிடத்து; ***மிழற்றும்*** - காமக்குறிப்பு தோன்ற பேசும் (குழறல். உளறல்); ***ஓதை*** - ஓசையும்; ***பொதுப்பெண்டிர்*** - வேசையர்; ***அல்குல் புனை*** - தம் இடையில் அணிந்த; ***மேகலை*** - கிண்கிணி பொருந்திய மேகலையினால் எழுப்பும்; ***பூசல் ஓதை*** - சலசலப்பு ஒலியும்; ***கதம் கொண்ட யானை*** - மதவெறி மிக்க களிறுகள்; ***களியால்*** - செருக்கு மிகையால்; ***களிக்கின்ற*** - பிளிறுகின்ற; ***ஓதை*** - ஓசையும் அப்பாடி நகரில் எழுந்தன.

*யானை வீழ்த்தும் பாகர்கள் தொழிலில் திறம் மிக்கவர். சினம் மிக்க யானைகளின் சினம் தணிவித்துப் பெரிய கம்பத்திலே சேர்த்தற்கு விரவு மொழி பயில்வர் (மலைபடு 326) வயப்படுத்த இசைப்பாடல்கள் பாடவும் செய்வர். கருங்களிற்று ஒருத்தலும். கனிந்த அவ்விசைக்கு வயப்படும் என கலித்தொகை கூறும். பொதுப் பெண்டிர் தம் இல் புக்காரை. அவர்கள் விடுதல் அறியா விரும்பினர் ஆகி தம் மருங்கின் நீங்கா வகை மாயப்பொய் செயல் பல கூட்டுவர். கால்களில் தண்டை கைகளில் குலுங்கு வளையல்கள். மேகலையின் கிண்கிணி சேர்த்துவர். அவர்தம் மெய் இயக்கத்தால். இவற்றால் இன் ஒலி எழும். காம மயக்கத்தால். கள்ளுண்ட வெறியால் ஆடவர் உரத்த குரலில் பேசுவர். அக்குளறல் மொழிகளும் களிற்றின் பிளிற்றொலியும் கலந்து எழுந்து நிறைந்தன அப்பாடி நகரில் என்க. 46*

*மாந்தர் இராப்பொழுதைக் கழித்த வகை*

***889. உண்ணா அமுது அன்ன கலைப் பொருள்***
***உள்ளது உண்டும்.***
***பெண் ஆர் அமுதம் அனையார்***
***மனத்து ஊடல் போர்த்தும்.***
***பண் ஆன பாடல் செவி மாந்திப்***
***பயன் கொள் ஆடல்***
***கண்ணால் நனி துய்யக்கவும்.***
***கங்குல் கழிந்தது அன்றே.***

***உண்ணா அமுது அன்ன*** *- (வாயால்) உண்ணப்படாத அமுதத்தை ஒத்த;* ***கலை உள்ளது பொருள்*** *- கலையின் பொருள்நுட்பங்களாக உள்ளதை;* ***உண்டும்*** *- நேரில் அனுபவித்ததாலும்;* ***பெண் ஆர் அமுதம் அனையார்*** *- பெண்களுள் கிடைத்தற்குரிய அமுதம் போன்றவரான மாதர்களின்;* ***மனத்து ஊடல்*** *- நெஞ்சத்து ஊடலை;* ***பேர்த்தும்*** *- போக்குவதனாலும்;* ***பண் ஆர்ந்த பாடல்*** *- இசையோடு பொருந்திய பாடல்களை;* ***செவி மாந்தி*** *- காதால் கேட்டு;* ***பயன் கொள்*** *- அப்பாடலின் பொருளைக் கொண்ட;* ***ஆடல் கண்ணால்*** *- நடனத்தை தம் கண்களால்;* ***நனி துய்க்கவும்*** *- நன்றாக அனுபவித்ததாலும்;* ***கங்குல் கழிந்தது*** *- அன்றைய இரவு (அச்சேனை மக்களுக்கு) நீங்கியது.*

*அச் சேனையில் இருந்த ஆடவருள் சிலர் கலையின்பத்தை நேரே அனுபவித்தும். சிலர் தம் மனைவியரின் புலவியைப் போக்கியும் சிலர் இனிய இசையோடு பாடும் பாடலைக் கேட்டும் ஆடலைக் கண்டும் அந்த இரவைக் கழித்தனர் என்பது. பாடலின் பயன்கொண்ட ஆடல் - பாடற் பொருளை அபிநயித்துக் காட்டும் அபிநய நாடகம்.*

# பூக் கொய் படலம்

*வேந்தனுடன் சென்றோர் வனங்களில் மலர்கொய்து மகிழ்வது கூறுவது:*

*தசரதச் சக்கரவர்த்தியும் நாட்டு மக்களும் காலைப் பொழுதில் சோணையாற்றங் கரையை யடைந்தனர். நண்பகல் நேரம். மாதர் மலர் கொய்யச் சோலையினை யடைந்தனர். அங்கு எய்திய அவர்கள் அழகிற்கு எதிர்நிற்க இயலாது மயில் முதலான பறவையினங்கள் நாணி ஒதுங்கின. மாதர் ஆடல் ஆடவர்க்கு மையலை நல்கிற்று. மாதர் தீண்டலால் மலர்க் கொம்புகள் மலர் ஈந்து வணங்கின. அச்சோலை. மகளிர்க்கும் மைந்தர்க்கும் புலவிக்குரிய களம் ஆயிற்று. மன்னரும் மக்களும் பல்வகை இன்பங்கள் துய்த்து மகிழ்ந்த பின்னர் நீராடப் புக்கனர்.*

*காலையில் சோணை ஆற்றை அடைதல்*

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

***890. மீனுடை எயிற்றுக் கங்குல் -***
***கனகனை வெகுண்டு. வெய்ய***
***கானுடைக் கதிர்கள் என்னும்***
***ஆயிரம் கரங்கள் ஓச்சி.***
***தானுடை உதயம் என்னும்***
***தமனியத் தறியுள் நின்று.***
***மானுட மடங்கல் என்ன.***
***தோன்றினன். - வயங்கு வெய்யோன்.***

***மீனுடை எயிற்றுக் கங்குல் கனகனை வெகுண்டு*** - *விண்மீன்களைப் பற்களாகக் கொண்ட இரவாகிய இரணியனைச் சினந்து;* ***வெய்ய கான் உடைக் கதிர்கள் என்னும்*** *- வெப்பம் உடைய செறிந்த கிரணங்கள் என்கின்ற;* ***ஆயிரம் கரங்கள் ஓச்சி*** *- ஆயிரம் கைகளை வீசி;* ***தான் உடை உதயம் என்னும்*** *- தான் தோன்றுதற்கு இடமான உதயகிரி என்கின்ற;* ***தமனியத் தறியுள் நின்று*** *- தங்கத் தூணிலிருந்து;* ***மானுட மடங்கல் என்ன*** *- நரசிங்கப் பெருமாள் (தோன்றியது) போல;* ***வயங்கு வெய்யோன் தோன்றினன்*** *- ஒளியுமிழ்ந்தவண்ணம் கதிரவன் உதித்தான். உருவகத்தை உறுப்பாகக் கொண்ட உவமையணி. சூரியன் ஆயிரமாயிரம் கிரணங்களையுடையவன். ஆதலால் ஆயிரமாயிரம் கைகளோடு தோன்றிய நரசிங்கப் பெருமானாக உவமிக்கப் பெற்றான். "ஆயிரங் கரங்கள் ஓச்சி" என்பதில் ஆயிரம் என்பது மிகுதி குறித்து நின்றது. "கையாயிரம் அல்ல கணக்கிலவால்" கம்ப. 6304 என நரசிங்கம் ஆயிரமாயிரம் கரங்களோடு தோன்றியதெனப் பின்னும் குறிப்பர். "ஆயிரந்தோள் எழுந்தாடப் பைங்கண் இரண்டு எரிகான்ற நீண்ட எயிற்றோடு பேழ்வாய்ச் சிங்க உருவின் வருவான்." (பெரிய திரு. -3-8) எனத் திருமங்கையாழ்வாரும் இக்கோலத்தை வருணிப்பார். உதய காலத்தே உதயகிரி பொன்னிறம் பெற்றுப் பொலியுமாதலின் அது நரசிங்கம் உதித்த பொன் தூணுக்கு உவமையாயிற்று. நரசிங்கம் எனும் வடசொல்லை "மானுடமடங்கல்" என மொழியாக்கம் செய்தார். மேலும் "மானுடமடங்கல்" (கம். 6304) என்பார். "நரங்கலந்த சிங்கமாய்" (இரண் திருவந். 84) "அரியும் மானுடமும் உடனாய்த் தோன்ற" (திருமங். 8-8-4) என ஆழ்வார்களும் குறிப்பர்.*

***891.*** **முறை எலாம் முடித்த பின்னர்.**
**மன்னனும். மூரித் தேர்மேல்**
**இறை எலாம் வணங்கப் போனான்;**
**எழுந்து உடன். சேனை வெள்ளம்.**
**குறை எலாம் சோலை ஆகி;**
**குழி எலாம் கழுநீர் ஆகி.**
**துறை எலாம் கமலம் ஆன**
**சோணை ஆறு அடைந்தது அன்றே.**

***முறை எலாம் முடித்த பின்னர்*** *- நாட்கடமைகளையெல்லாம் (செய்து) முடித்த பின்பு;* ***மன்னனும் மூரித் தேர்மேல்*** *- தசரதச் சக்கரவர்த்தியும் வலிமை வாய்ந்த (தன்) தேர்மேலே;* ***இறை எலாம் வணங்கப் போனான்*** *- (உடன்வந்த) மன்னர்கள் அனைவரும் வணங்கப் புறப்பட்டான்;* ***உடன் எழு சேனைவெள்ளம்*** *- அவனுடன் புறப்பட்ட படைத் தொகுதியும்;* ***குறை எலாம் சோலை ஆகி*** *- (தான் சென்றடையாத) ஆற்றிடைக் குறைகளையெல்லாம் மலர்ச் சோலையாகச் செய்தும்;* ***குழிஎலாம் கழுநீர்ஆகி*** *- தான் சென்ற பள்ளங்களையெல்லாம் செங்கழுநீர் மலர்க்கூட்டம் ஆகச் செய்தும்;* ***துறை எலாம் கமலம் ஆன*** *- (மக்கள் இறங்கும்) நீர்த்துறைகளையெல்லாம் தாமரை பூத்த தடாகங்கள் ஆகச் செய்தும் உள்ள;* ***சோணையாறு அடைந்து*** *- சோணையாற்றினை சென்றடைந்தது.*

*"முறையெல்லாம் முடித்த பின்னர்" என்பதனால் எந் நிலையிலும் தசரத வேந்தர் முறை வழாதவர் என்பது குறித்தவாறு. முறை: அன்றன்று முடிக்க வேண்டிய கடமைகள். "குழி எலாம் கழுநீர்" (கம்ப. 33) என வேறிடத்தும் குறிப்பார். ஆற்றினிடையே நீர் மூழ்காத இடம் ஆற்றிடைக் குறை எனவும். அரங்கம் எனவும் பெயர் பெறும். ஆறு உலகை அழகுக் குவியலாக மாற்றுகின்ற ஒன்று ஆதலால். "குறையெலாம் சோலை ஆகி. குழியெலாம் கழுநீர் ஆகித் துறையெலாம் கமலம் ஆன சோணையாறு" என்றார். இறுதியிரண்டடியில் உள்ள சொல் இன்பமும் சுவைக்கத் தக்கவை. கேட்டுப்பூ. கொடிப்பூ. நீர்ப்பூ. நிலப்பூ எனும் நால்வகைப் பூக்களையும் செழிக்கச் செய்து நடக்கிறது சோணை நதி என்பது குறிப்பு. சேனை வெள்ளம் சோணை வெள்ளத்தையடைந்தது என்பது ஒரு நயம்.*

*உச்சிவேளையில் சோலையைச் சார்தல்*

***892.** **அடைந்து. அவண்இறுத்த பின்னர்.***
***அருக்கனும் உம்பர்ச் சேர்ந்தான்;***
***மடந்தையர் குழாங்களோடு.***
***மன்னவரும். மைந்தர்தாமும்.***
***குடைந்து வண்டு உறையும்***
***மென் பூக் கொய்து நீராட. மை தீர்***
***தடங்களும். மடுவும் சூழ்ந்த.***
***தண் நறுஞ் சோலை சார்ந்தார்.***

***அவண் அடைந்து இறுத்த பின்னர்*** *- அச்சோணை யாற்றின் கரையில் அச்சேனைக் தொகுதி தங்கிய பின்பு;* ***அருக்கனும் உம்பர்ச் சேர்ந்தான்*** *- சூரியனும் வான் மேல் ஏறினான்;* ***மடந்தையர் குழாங்களோடும்*** *- (தத்தம்) மனைவியர் கூட்டங்களோடு;* ***மன்னரும் மைந்தர்தாமும்*** *- அரசர்களும் இளவரசர்களும்;* ***வண்டு குடைந்து உறையும் மென்பூக் கொய்து*** *- வண்டுகள் துளைத்துத் திளைக்கும் மெல்லிய மலர்களைப் பறித்து;* ***நீராட*** *- (நீரில்) மகிழ்ந்து விளையாட;* ***மைதீர் தடங்களும் மடுவும்*** *- தூய தடாகங்களும் மடுக்களும் சுற்றியுள்ள;* ***தண் நறுஞ் சோலை சார்ந்தார்*** *- குளிர்ச்சியும் மணமும் மிக்க சோலையினை அடைந்தனர்.*

*வண்டுகள் மலரைக் குடைந்து தேன் ஆடல் கண்டு இவர்களும் தடாகங்களைக் குடைந்து நீராடும் நினைவுற்றனர். என்பது குறிப்பு. தடம்: அகன்று பெரிதான நீர்நிலை. மடு: ஆழ்ந்து சிறிதான நீர்நிலை. நீராடுங்காலை. மலர்களைப் பறித்து வந்து. ஒருவர் மேல் ஒருவர் இலக்குத் தவறுதல் இன்றி வீசி விளையாடுதல் நீர் விளையாட்டு எனத் தெரிகிறது.*

*மாதரைக் கண்ட மயில் முதலிய பறவைகள்*

***893.*** ***திண் சிலை புருவம் ஆக.***
***சேயரிக் கருங் கண் அம்பால்.***
***புண் சிலர் செய்வர் என்று***
***போவன போன்ற. மஞ்ஞை;***
***பண் சிலம்பு அணி வாய் ஆர்ப்ப.***
***நாணினால் பறந்த. கிள்ளை;***
***ஒண் சிலம்பு அரற்ற. மாதர்***
***ஒதுங்குதோறு. ஒதுங்கும் அன்னம்.***

***திண் சிலை புருவம் ஆக*** *- இந்தப் பெண்கள் தங்கள் புருவங்கள் என்னும் வலிய வில்லால்;* ***சேயரிக் கருங்கண் அம்பால்*** *- செவ்வரி பரந்த கரிய கண்களாகிய அம்புகளைக்கொண்டு;* ***புண்சிலர் செய்வர் என்று*** *- (நம்மைப்) புண்கள் சிலர் செய்யக் கூடும் என்று;* ***மஞ்ஞை போவன போன்ற*** *- மயில்கள் (அஞ்சி) அங்கிருந்து வெளியேறுவது போல் வெளியேறின (மாதர்);* ***பண்சிலம்பு அணிவாய் ஆர்ப்ப*** *- அந்தப் பெண்ணின் பண்கள் போல் ஒலிக்கும் அழகியவாய் ஒலியை (கேட்டு);* ***கிள்ளை(கள்) நாணினால் பறந்த*** *- கிளிகள் (அவர்கள் போலத் தம் வாயால் இன்னொலி எழுப்ப இயலாமைக்கு) வெட்கமுற்று (அங்கிருந்து) பறந்து போயின;* ***மாதர் ஒண் சிலம்பு அரற்ற ஒதுங்கு தோறு(ம்)*** *- அப் பெண்களின் ஒலிமிக்க சிலம்புகள் ஒலிக்க அடிபெயர்த்து நடக்கும் போதெல்லாம்;* ***அன்னம் ஒதுங்கும்*** *- (அவர்களின் அந்த அணி நடைக்குத் தோற்றுப்போன (நடைக்குப் புகழ் பெற்ற) அன்னப்பறவைகள் (அங்கிருந்து) வெளியேறும்.*

*பாவையர் சோலையுள் நுழைந்தவுடன். பறவைகள் சோலையினின்றும் வெளியேறின என நயம்பட உரைத்தார். இதுகாறும் சாயலுக்கும் மொழிக்கும் நடைக்கும் தாங்களே என்று புகழ் மகுடம் சூட்டிக் கொண்டிருந்தவை. இப்பெண்டிர் வருகையால் பெருமையிழந்து வெளியேறினவாம். அன்ன நடை. இவர் நடையாதலால் இயலாமைக்கண்டு அவை ஓடி ஒளிந்தமையால் ''ஒதுங்கும் அன்னம்'' என்றார். தற்குறிப்பேற்றவணி. அன்னத்தின் ஒலி சிலம்பொலி போல் இருக்கும் என்பது. ''சிலம்பின் அன்னம் நின்றிரங்கும்'' (கம்ப. 335) என்பதனால் அறியலாம். ஆகவே. மாதர் ஒண் சிலம்பு அரற்ற. தம் இனமென்று பெண்கள் ஒதுங்கும் இடமெல்லாம் ஒதுங்கிச் சென்ற அன்னங்கள். பின் பெண்டிர் நடையழகு கண்டு நாணி வெளியேறுவன போன்று பறந்தன எனினுமாம்.*

*மாதர் ஆடலும் மைந்தர் மயங்கி நிற்றலும்*

***894. செம் பொன் செய் சுருளும் தெய்வக்***
***குழைகளும் சேர்ந்து மின்ன.***
***பம்பு தேன் அலம்ப ஒல்கி.***
***பண்ணையின் ஆடல் நோக்கி.***
***கொம்பொடும். கொடி அனாரைக்***
***குறித்து அறிந்து உணர்தல் தேற்றார்.***
***வம்பு அவிழ் அலங்கல் மார்பின்***
***மைந்தரும். மயங்கி நின்றார்.***

**செம்பொன் செய் குழையும்** - *செம்பொன்னால் செய்யப்பெற்ற ஓலையெனும் காதணியும்;* **தெய்வக் குழைகளும்** - *ஒளியுமிழ்கின்ற குழையெனும் காதணியும்;* **சேர்ந்து மின்ன** - *ஒருங்கிணைந்து மின்னவும்;* **பம்பு தேன் அலம்ப ஒல்கி** - *அணிந்துள்ள மாலைகளில் மொய்த்த வண்டுகள் ஒலிக்கவும் அசைந்து;* **பண்ணையின் ஆடல் நோக்கி** - *தோழியர் கூட்டத்தோடு அப்பெண்டிர் விளையாடுவதைப் பார்த்து;* **வம்புஅவிழ் அலங்கல் மார்பின் மைந்தரும்** - *மணம் விரிகின்ற மாலைகளையணிந்த மார்பினராய ஆடவரும்;* **கொடி அ(ன்)னாரை** - *மலர்க் கொடி அனைய மகளிரை;* **கொம்பொடும் குறித்து அறிந்து உணர்தல் தேற்றார்** - *இவை பூங்கொம்புகள். இவர் மகளிர் என்று ஊகித்து (தெளிவுற) உணர இயலாதவராக மயங்கி நின்றனர்.*

*பகுத்தறியும் தன்மையராய ஆடவரும். இவர் மகளிர். இவை மலர்க்கொடிகள் எனப் பகுத்துணர இயலாதவாறு தயங்கித் தவிக்க நேர்ந்தது என அம்மகளிரின் அழகும் அணியும் கூறி வியந்தவாறு. சுருளும் குழைகளும் மின்னுதல். தேன் அலம்ப அசைதல் பண்ணையில் ஆடல் எனும் செயல்கள் மகளிர்க்கும் மலர்க் கொம்புகட்கும் பொருந்தும் பொதுத்தன்மை கண்டு இரட்டுற மொழிந்தார்.*

*குயில்களின் நாணம்*

***895. பாசிழைப் பரவை அல்குல்.***
***பண் தரு கிளவி. தண்தேன்***
***மூசிய கூந்தல். மாதர்***
***மொய்த்த பேர் அமலை கேட்டு.***
***கூசின அல்ல; பேச***
***நாணின. குயில்கள் எல்லாம் -***
***வாசகம் வல்லார் முன் நின்று.***
***யாவர் வாய் திறக்க வல்லார்?***

***குயில்கள் எல்லாம்*** - *அந்தச் சோலையில் உள்ள குயில்கள் யாவும்;* ***பாசிழைப் பரவை அல்குல்*** - *பசும்பொன்னால் அமைந்து மணிகள் இழைத்து இயற்றிய அணிகள் பூண்ட பரந்த அல்குலையும்;* ***பண்தரு கிளவி*** - *இசையென்னுமாறு வெளிப்படும் இனிய சொற்களையும்;* ***தண்தேன் மூசிய கூந்தல் மாதர்*** - *(சூடிய மலரிலிருந்து) குளிர்ந்த தேன் பரவிய கூந்தலையும் உடைய பெண்டிரின்;* ***மொய்த்தபேர் அமலை கேட்டு*** - *நெருங்கிச் சூழ்ந்த பேரொலியைக் கேட்டு;* ***கூசின அல்ல*** - *(புதியோரைக் கண்ட) கூச்சத்தால் (வாய்மூடிக் கிடந்தன) அல்ல;* ***பேச நாணின*** - *(அந்த மகளிர்முன் தமக்குற்ற தாழ்வுணர்ச்சி மேலீட்டால்) பேசுதற்கு வெட்கமுற்று (வாய்மூடிக்) கிடந்தன;* ***வாசகம் வல்லார் முன்நின்று*** - *(இனிமையாகப்) பேச வல்லார் முன்னிலையில்;* ***யாவர் வாய் திறக்க வல்லார்?*** - *யாரே வாய் திறந்து (பேச) வல்லவர்கள்?*

*புதியோர் முன்பு பேச இயலாமை கூச்சம் எனவும். உயர்ந்தோர்முன். தன் சிறுமையினால் செயலிழந்து பேச இயலாமை நாணம் எனவும் படும். "கருமத்தால் நாணுதல் நாணு" (திருக். 1012) என்பார் வள்ளுவனாரும். சோலைக்குயில்கள் வாய்மூடிக் கிடப்பதற்குப் புதியாரைக் கண்டு இயல்பாய் வரும் கூச்சம் காரணம் அன்று; அம் மகளிரைப்போன்று இனிமை தோன்ற ஒலிக்க இயலாமற் போன செயலால் வரும் நாணம் காரணம் என்பதாம். வேற்றுப்பொருள்வைப்பணி.*

*மாதர் தீண்டப் பூங்கொம்பு தாழ்தல்*

***896. நஞ்சினும் கொடிய நாட்டம்***
***அமுதினும் நயந்து நோக்கி.***
***செஞ்செவே கமலக் கையால்***
***தீண்டலும். நீண்ட கொம்பும்.***
***தம் சிலம்பு அடியில் மென் பூச்***
***சொரிந்து உடன் தாழ்ந்த என்றால்.***
***வஞ்சிபோல் மருங்குலார் மாட்டு***
***யாவரே வணங்க லாதார்?***

***நஞ்சினும் கொடிய நாட்டம்*** - *(விரும்பாதார்க்கு) நஞ்சினைக் காட்டிலும் கொடுமையைச் செய்ய வல்ல (தம்) விழிகளைக்கொண்டு (அம் மகளிர்);* ***அமுதினும் நயந்து நோக்கி*** - *(அவை நஞ்சல்ல) அமுதினை விட நல்லவை என்று கூறுமாறு விருப்பத்தோடு பார்த்து;* ***செஞ்செவே கமலக் கையால் தீண்டலும்*** - *(தமது) செக்கச் செவேர் என்று சிவந்த தாமரைக் கைகளால் தீண்டிய அளவில்;* ***நீண்ட கொம்பும்*** - *நீண்டு வளர்ந்து நின்ற பூங்கொடிகள் (எல்லாம்);* ***தம் சிலம்பு அடியில் மென்பூ*** - *அவர்களுடைய சிலம்பணிந்த பாதங்களில். மெல்லிய பூக்களை;* ***சொரிந்து உடன் தாழ்ந்த என்றால்*** - *சொரிந்த வண்ணம் வணங்கி நின்றன என்றால்;* ***வஞ்சி போல் மருங்குலார்மாட்டு*** - *வஞ்சிக்கொடி போன்று (ஒல்கி ஒசியும்) இடையினையுடைய மகளிரிடத்தே;* ***யாவர்தம் வணங்கலாதார்?*** - *வணங்காமல் நிற்பார் (இவ்வுலகில்) யாரே உளர்? (ஒருவரும் இலர்).*

*மகளிர் தீண்டலால். ஓரறிவுடைய மலர்க்கொடிகளும் தாழ்ந்து வணங்கி மலர்களைச் சொரிந்தன என்றால். ஆறறிவுடைய ஆடவர் வணங்கித் தாழ்வர் என்பது கூற வேண்டா என்றவாறு. மகளிர் நோக்கவும் தீண்டவும் செய்யின் மரங்கள் பூச் சொரிவனவாகக் கூறல் கவிமரபு. "நித்தில முலையினார் தம் நெடுங்கணால் நோக்கப்பெற்றும். கைத்தலம் தீண்டப் பெற்றும் கனிந்தன மலர்ந்த காண்க. வைத்து அலர் கொய்யத் தாழ்ந்த மரம்" (சீவக.) என்பார் திருத்தக்கதேவரும். "பாவையர் கை தீண்டப் பணியாதார் யாவரே?" பூவையர் கை தீண்டலும் அப்பூங்கொம்பு - மேவியவர் பொன்னடியில் தாழ்ந்தனவே" (நளவெ. 2 : 5) எனும் பாடல் அப்படியே இதனை அடியொற்றியது. "வஞ்சி போல் மருங்குலார் மட்டு யாவரே வணங்கலாதார்" என்பதனால் வளையும் இடையுடைய மெல்லிய பெண்மை. வளையாத் திறலுடைய வலிய ஆண்மையை. தன் மென்மையால். அன்பால். பாசத்தால். தியாகத்தால் வளைத்து விட வல்லது என்னும் வாழ்வியல் நுட்பம் கூறப்பட்டுள்ள திறம் காண்க.* *7*

***897.** **அம்புயத்து அணங்கின் அன்னார்***
**அம் மலர்க் கைகள் தீண்ட.**
**வம்பு இயல் அலங்கல் பங்கி.**
**வாள் அரி மருளும் கோளார்-**
**தம் புய வரைகள் வந்து**
**தாழ்வன; தளிர்த்த மென் பூங்**
**கொம்புகள் தாழும் என்றல்.**
**கூறல் ஆம் தகைமைத்து ஒன்றோ!**

***அம்புயத்து அணங்கின் அன்னார்*** *- தாமரை மலரில் வாழும் திருமகளைப் போன்ற (அழகிய) அம்மகளிரின்;* ***அம்மலர்க்கைகள் தீண்ட*** *- அழகிய அம் மலர் அனைய கரங்கள் தீண்டியவுடன்;* ***வம்பியல் அலங்கல் பங்கி*** *- மணம் பொருந்திய மாலைகளையணிந்த மயிர்முடியினையும்;* ***வாள் அரி மருளும் கோளார்தம்*** *- வாள் போன்று பாயும் கொடுமையினையுடைய சிங்கங்களும் அஞ்சும் வலிமையினையும் உடைய ஆடவர்கள் தம்முடைய;* ***புய வரைகள் வந்து தாழ்வன*** *- மலையனைய தோள்கள் அம்மகளிரின் முன் வந்து தாழ்ந்து வணங்கி நிற்பன (என்றால்);* ***தளிர்த்த மென்பூங்கொம்புகள்*** *- (மெல்லிய) தளிர்களையும் மெல்லிய பூக்களையும் உடைய பூங்கொடிகள்;* ***தாழும் என்றல்*** *- அம் மகளிர் தீண்டியவுடன் தாழ்கின்றன என்பது;* ***கூறலாம் தகைமைத்து ஆமோ?*** *- சிறப்பாக எடுத்துக் கூறத்தக்கதோ?*

*'மலர்க்கைகள் தீண்டப் புய வரைகள் தாழ்வன' என்று. மலர்களின் முன் மலைகள் வீழ்ந்து கிடக்கும் வியப்புக் கண்டு கூறியவாறு. மேற் பாடலில் மகளிர்க்கு அஃறிணைகளே வணங்குகின்றன; உயர்திணைகளைப்பற்றிக் கூறவேண்டுமோ என்றவர். இப்பாடலில் உயர்திணைகளே வணங்குகையில் அஃறிணைகளைப்பற்றிக் கூற வேண்டுமோ என மாற்றிக் கூறிச் சுவையூட்டினார். ஆகவே. இருதிணை யுயிர்களும் மகளிரை வணங்கும் என்பது தெளிவாயிற்று.*

வண்டுகள் மொய்த்தல்

***898.*** ***நதியினும் குளத்தும் பூவா***
***நளினங்கள் குவளையோடு***
***மதி நுதல் வல்லி பூப்ப.***
***நோக்கிய மழலைத் தும்பி***
***அதிசயம் எய்தி. புக்கு***
***வீழ்ந்தன; அலைக்கப் போகா-***
***புதியன கண்ட போழ்து***
***விடுவரோ புதுமை பார்ப்பார்?***

***மதி நுதல் வல்லி*** *- பிறை போன்ற நெற்றிகொண்ட பெண்கள் என்னும் கொடிகள் (ஒவ்வொன்றும்);* ***நதியினும் குளத்தும் பூவா*** *- ஆறுகளிலும் குளங்களிலும் பூக்க இயலாத;* ***குவளையோடு நளினங்கள்*** *- (இரு) குவளை மலர்களோடு கூடிய தாமரை மலர் ஒன்றை (த்தம்மிடத்தில்);* ***பூப்ப நோக்கி*** *- பூத்திருப்பதைக்கண்டு;* ***மழலைத்தும்பி*** *- இன்னொலி மிழற்றும் வண்டுகள்;* ***அதிசயம் எய்திப்புக்கு வீழ்த்தன*** *- ஒரு கொடியில் வேறொரு பூவும். அப்பூவில் வேறு இன்னோர் இனமலர்களும் பூத்திருக்கும் அதிசயத்தைக்கண்டு. அவற்றின் மேல் வீழ்ந்து மொய்த்தன;* ***அலைக்கப் போகா*** *- (கைகளினால்) ஓட்டவும் (அவை) போகவில்லை. (?ஏனெனில்) ;* ***புதுமை பார்ப்பார்*** *- புதுமை நாட்டமுடையோர்;* ***புதியன கண்ட போழ்து விடுவரோ?*** *- புதுமைப் பொருள்களைக் காண நேர்கையில் (எளிதில்) விட்டுவிடுவார்களோ? (விடார் என்க).*

*கொடியனையர் பெண்கள் - அக்கொடிகளில் தாமரை பூத்திருப்பது போன்றவை அவர்கள் முகங்கள். அந்தத் தாமரையில் குவளைகள் பூத்திருப்பது போன்றவை அவர்கள் விழிகள். ஒரு கொடியில் இருவகை மலர்கள் பூப்பது புதுமையாதலால். வண்டினங்கள் ஓட்டவும் போகாது. பெண்டிர் முகத்தை மொய்த்த வண்ணம் இருந்தன. அன்றன்று பூத்த புதுமலர்களை நாடுவது வண்டுகளின் இயல்பாதலால் அவற்றைப் "புதுமை பார்ப்பார்" எனல் பொருந்தும். இயல்பான நதியிலும் குளத்திலும் இவ்வதிசய மலர்கள் பூவா என்பார். "நதியினும் குளத்தும் பூவா" என்றார். நிலத்துக் கொடிகள் நீர்ப் பூக்களைப் பூப்பதும். தாமரைகள் குவளைப் பூக்களைப் பூத்திருப்பதும் வியப்பின்மேல் வியப்பாயின. "வாவி விரி தாமரையின் மாமலரில் வாசக் காவிரி நாண்மலர் முகிழ்த்தனைய கண்ணார்". (கம்ப. 1849) என்பார் வேறிடத்தும். வேற்றுப்பொருள் வைப்பணி. கவிஞர்க்குள்ள புதுமை நாட்டத்தை வண்டின் மேல் வைத்து வெளிப்படுத்தியவாறு.*

*மலர் கொய் மகளிர் செயல்கள்*

*899.* ***உலம் தரு வயிரத் திண் தோள்***
***ஒழுகி. வார் ஒளி கொள் மேனி***
***மலர்ந்த பூந் தொடையல் மாலை***
***மைந்தர்பால். மயிலின் அன்னார்***
***கலந்தவர் போல. ஒல்கி***
***ஒசிந்தன. சில; கை வாராப்***
***புலந்தவர் போல நின்று.***
***வளைகில. பூத்த கொம்பர்.***

**உலம் தரு வயிரத் திண்தோள்** - *திரண்ட கல்லைப் போன்ற உறுதி வாய்ந்த திண்ணிய தோள்கள்;* **ஒழுகிவார் ஒளிகொள் மேனி** - *ஒழுங்குற அமைந்து. மிக்க ஒளி கொண்டமைந்த உடலையும்;* **மலர்ந்த பூந்தொடையல் மாலை** - *மலர்ந்த மலர்களால் தொடுக்கப் பட்ட மாலைகளையும்;* **மைந்தர் பால்** - *(உடைய) ஆடவரிடத்தில்;* **கலந்தவர்** - *கலந்தவரான;* **மயிலின் அன்னார்** - *மயில் அனைய மகளிர்;* **போல** - *போன்று;* **பூத்த கொம்பர் சில** - *மலர்ந்த மலர் கொடிகள் சில;* **ஒல்கி ஒசிந்தன** - *தளர்ந்து துவண்டு கிடந்தன (சில);* **கைவாராப் புலந்தவர் போல** - *சில பூங்கொடிகள் கைக்கெட்டாதன வாய் ஊடல் கொண்ட மகளிர் போல்;* **நின்று வளைகில** - *நின்றவாய் வளையாமல் இருந்தன.*

*கலந்த மகளிர் துவண்டு கிடப்பதை "அவச நிலை" என்பர் இன்பநூலார். "கலவிக் களியின் மயக்கம்" (கலிங். கடை. 14) என்பார் சயங்கொண்டார். உவமையணி. ஊடலில் நிமிர்வதும் கூடலில் குழைவதும் பெண்டிர் இயல்பு. பூங்கொடிகளாகிய அஃறிணை மேல் ஏற்றி உயர்திணை மகளிர் செயலை விளக்கியவாறு.*

*900.* **பூ எலாம் கொய்து கொள்ள.**
**பொலிவு இல துவள நோக்கி.**
**'யாவை ஆம் கணவர் கண்ணுக்கு?**
**அழகு இல இவை' என்று எண்ணி.**
**கோவையும். வடமும். நாணும்.**
**குழைகளும். குழையப் பூட்டி.**
**பாவையர். பனி மென் கொம்பை**
**நோக்கினர். பரிந்து நிற்பார்.**

***பூ எலாம் கொய்து கொள்ள*** - *(பூங்கொடியில் உள்ள) பூக்களையெல்லாம் கொய்துவிட்டமையால்;* ***பொலிவு இல துவள நோக்கி*** *- (பூக்களையிழந்தமையால் அப்பூங்கொடிகள்) அழகு இழந்து துவண்டு நின்றமையைப் பார்த்து;* ***பாவையர்*** *- சித்திரப் பாவையை ஒத்த மகளிர்;* ***இவை*** *- (அழகிழந்த) இப் பூங்கொடிகள்;* ***கணவர் கண்ணுக்கு யாவை ஆம்?*** *- கணவர்களுடைய கண்களுக்கு எப்படித் தோன்றும்;* ***என்று எண்ணி*** *- என்று கருதி;* ***கோவையும் வடமும் நாணும் குழைகளும்*** *- (தாங்கள் அணிந்திருந்த) மணிமாலைகளையும். முத்து வடங்களையும். அரைவடங்களையும். காதணிகளையும்;* ***குழையப் பூட்டி*** *- (அவை கனத்தால்) துவளும்படி அணிவித்து;* ***பனிமென் கொம்பை*** *- குளிர்ந்து மெல்லென்றிருக்கும் அப்பூங்கொம்புகளை;* ***பரிந்து நோக்கினர் நிற்பர்*** *- விருப்பத்தோடு பார்த்து நிற்பார்கள்.*

*பூங் கொடிகளின் அழகு பூக்களில் அடங்கியுள்ளமையால். ''பூ எலாம் கொய்து கொள்ளப்பொலிவில'' என்றார். கணவன்மார் கண்களுக்கு இனிமை சேர்ப்பதனையே. தம் வாழ்வின் பெரும்பயனாகவும் இலக்காகவும் கொண்டு அம் மகளிர் வாழ்ந்தனர் என்பது தோன்ற. ''யாவை ஆம் கணவர் கண்ணுக்கு அழகு இல இவை?'' என்றார். கணவர் கண்கட்கு அழகும் இனிமையும் தர. எத்துணை அரிய பொருள்களையும் கொடுக்கலாம் என்பது விளக்க. ''கோவையும் வடமும் நாணும் குழைகளும் குழையப் பூட்டி'' நின்றனர் அம்மகளிர் என்றார். அவ்வரிய அணிகளை அக்கொடிகள் பாரம் பொறாமல் வளையும் அளவிற்குப் பூடடினர் என்பார். ''குழையப் பூட்டி'' என்றார். பூட்டியபின் அவை அவை அழகு பொலிய நின்றன என்பதை. ''பரிந்து நோக்கினர் நின்றார்'' என்பதனால் உணர்த்தினார். ''நோக்கினர் பரிந்து நின்றார்'' என்பது பரிந்து நோக்கினர் நின்றார் என மாற்றிக் கூட்டப்பட்டது. கணவனை இன்புறுத்தவே அக்கால மகளிர் அணி அணிந்தனர்; வாழ்ந்தனர் எனும் அருங்கருத்தினைப் பூங்கொடி மேலிட்டுப் புலப்படுத்திய திறம் காண்க. ''கட்கினியாள்; காதலன் காதல் வகை புனைவாள்......பெண்'' (நாலடி. 384).*

*மகளிர் கூந்தல் காட்சியும் அவர்தம் நிலையும்*

**கலித்துறை**

***901. துறும் போதினில் தேன் துவைத்து உண்டு***
***உழல் தும்பி ஈட்டம்.***
***நறுங் கோதையோடு நனை சின்னமும்***
***நீத்த நல்லார்***
***வெறுங் கூந்தல் மொய்க்கின்றன;***
***வேண்டல. வேண்டு போதும்;-***
***உறும் போகம். எல்லாம். நலன்***
***உள் வழி. உண்பர் அன்றே!***

***துறும் போதினில்*** - *அடர்ந்து கிடக்கின்ற மலர்களில்;* ***துவைத்து*** - *மிதித்து;* ***தேன் உண்டு உழல்*** - *தேனையுண்டு திரிகின்ற;* ***தும்பி ஈட்டம்*** - *வண்டுகளின் கூட்டம்;* ***நறுங் கோதையோடு*** - *மணம்மிகு மலர்மாலைகளோடு;* ***நனை சின்னமும்*** - *தேன் நனையும் விடு பூக்களையும்;* ***நீத்த நல்லார்*** - *நீக்கிய பெண்டிருடைய;* ***வெறுங் கூந்தல் மொய்க்கின்றன*** - *(பூவில்லா) வெறுங் கூந்தலில் மொய்ப்பன ஆயின;* ***வேண்டும்போதும் வேண்டல*** - *(அவை முன்பு) விரும்பிய மலர்களை?யும் (இப்போது) விரும்பவில்லை;* ***நலன் உள்வழி*** - *(பெரியோர்) நற்குணங்கள் உள்ள இடத்தில்;* ***உறும் போகம் எல்லாம் உண்பர் அன்றே!*** - *அடையத்தக்க இன்பங்களையெல்லாம் (விடாது) அடைவார்கள் அல்லரோ?*

*பூங்காவில் மகளிர் பூக்கொய்ய நுழைந்தபோது. அதுவரை மலர்களைப் பெரியனவாய் எண்ணி. அவற்றில் மதுவுண்டு கொண்டிருந்தன வண்டினங்கள்; அவற்றை அறவே புறக்கணித்து. அவர்கள் நுழைந்தபின். அவர்களின் கூந்தலை மொய்க்கத் தொடங்கிவிட்டன. மலர்களில் உள்ள நறுமணத்தை விட. மகளிரின் மலர் சூடாக் கூந்தலில் உள்ள இயற்கை மணம். மிக்கிருத்தலால். ''வெறுங் கூந்தல் மொய்க்கின்றன'' என்றார். மகளிர் கூந்தலுக்கு இயற்கையிலேயே மணம் உண்டு என்பதனை. ''அரிவை கூந்தலின் நறியவும் உளவோ நீ அறியும் பூவே?''(குறுந். 2) எனும் புகழ்பெற்ற இறையனார் பாடலால் அறியலாம். இன்றைய அறிவியலும் இதனை ஒப்பும். ''போதும் (மலரும்) வேண்டல; வெறுங் கூந்தல் மொய்க்கின்றன'' என்றதனால் அம் மலர்களினும் கூந்தல் மணம் மிக்கிருந்தது என்பது புலப்படும். முன்பு சூடியிருந்த மலர்களின் மணம் அம்மலர்கள் இல்லாத போதும் நறுநெய் படிந்த கூந்தலில் தேங்கிக் கிடந்தமையால். வெறுங்கூந்தலிலும் வண்டுகள் மொய்த்தன எனினுமாம். வேற்றுப் பொருள் வைப்பணி. துறுதல்:அடர்தல். செறிதல் போது: மலர்.*

***902. மெய்ப் போதின் நங்கைக்கு அணி அன்னவள். வெண் பளிங்கில்***
***பொய்ப் போது தாங்கிப் பொலிகின்ற தன் மேனி நோக்கி.***
***'இப் பாவை எம் கோற்கு உயிர் அன்னவள்' என்ன உன்னி.***
***கைப் போதினோடு நெடுங் கண் பனி சோர நின்றாள்.***

***மெய்*** - *தன் உடம்பின் அழகால்;* ***போதின் நங்கைக்கு*** - *மலர் மகளான திருமகளுக்கு;* ***அணி அன்னவள்*** - *ஆபரணம் போன்றிருக்கும் ஒருத்தி;* ***வெண் பளிங்கில்*** - *வெண்மை நிறமுள்ள பளிங்குப் பாறையில்;* ***போது தாங்கி*** - *மலர்தாங்கிய வண்ணம்;* ***பொலிகின்ற தன் மொய்மேனி*** - *(பிரதிபலிப்பதனால்) ஒளிர்கின்ற தன் நிழல் உடலை;* ***நோக்கி*** - *பார்த்து;* ***இ பாவை*** - *இந்தப் பெண்;* ***எங்கோற்கு உயிர் அன்னவள்*** - *என் கணவனுக்கு உயிர் அனையவள் ஆவாள்;* ***என்ன உன்னி*** - *என்று நினைத்து;* ***நெடுங்கண் பனி சோர*** - *தன் நீண்ட விழிகளிலிருந்து கண்ணீர் பெருக;* ***கைப்போதினோடு நின்றாள்*** - *கையில் ஏந்திய மலரோடு நின்றாள்.*

மங்கையர்க்கெல்லாம் அணியாகிய திருமகளுக்கு. இவள் அணியாக இலங்கவல்ல அழகு உடையாள் என்பார். "போதின் நங்கைக்கு அணியன்னவள்" என்றார். தன் மேனியழகை இதுகாறும் குறைவாக நினைத்திருந்தவள் ஆதலின் பளிங்கில் தன் உருவை முழுமையுறக் கண்டு. மிக அழகு பொலியும் உருவாக இலங்குவது கொண்டு. மகளிர்க்கே உரிய ஐயவுணர்வோடு. இவளை என் கணவன் காணின் நிலை தளர்வான்; மனந் திரிவான் எனக் கருதி நெடுங்கண் பனி சோர்ந்தாள். ஒன்றைப் பிறிதொன்றாகக் கருதி மயங்குதலால் இது மயக்க அணி. கணவர் பால் தங்கட்குள்ள உரிமைப்பாட்டை. பிறர்யார்க்கும் பங்குதர அஞ்சும். மனப்பாங்கும். கணவர் மாட்டுள்ள பெரும்பற்றும் ஒருங்கு சுட்டியவாறு. பாவை - உவம ஆகு பெயர்.

***903. கோள் உண்ட திங்கள் முகத்தாள் ஒரு***
***கொம்பு. ஓர் மன்னன்.***
***தோள் உண்ட மாலை ஒரு தோகையைச்***
***சூட்ட நோக்கி.***
***தாள் உண்ட கச்சின் தகை உண்ட***
***முலைக்கண். ஆலி.***
***வாள் உண்ட கண்ணின் மழை உண்டு என.***
***வார நின்றாள்.***

**கோள் உண்ட திங்கள் முகத்தாள் ஒரு கொம்பு** - மேகத்தால் சூழப்பெற்ற நிலாப் போன்ற முகமுடைய கொடி போன்றாள் தன் கணவனான; **ஓர் மன்னன் தோள் உண்ட மாலை** - அரசன் தோளில் அணிந்துள்ள மாலையை; **ஒரு தோகையைச் சூட்ட நோக்கி** - மயில் அனையாள் ஆகிய மற்றொரு உரிமை மகளுக்கு அணிவதைப் பார்த்து தாள் உண்ட கச்சின் தகையுண்ட முலைக்கண் - முடிச்சிட்ட கச்சின் இயல்பையழித்த முலைக் கண்களின் மேல்; **வாள் உண்ட கண் ஆலி** - வாளைவென்ற கண்களிலிருந்து (வருகின்ற) கண்ணீர்த்துளிகள்; **மழையுண்டென வார நின்றாள்** - மழை பொழிவது போலப் பொழிய நின்றாள்.

தன் தலைவன் இத்தகு அன்போடு சூட்டவில்லையே எனும் ஏக்கம் அவள் கண்ணீருக்குக் காரணம் ஆயிற்று. நாருண்ட மாலையை விடவும் அவன் தோளுண்ட மாலைக்கே ஏங்கினாள் என்று கணவன் அன்புக்கு ஏங்கும் மகளிர் மனநிலை சுட்டினார். கண்களும் மழை பெய்வது உண்டு எனக் காட்டுவாள் போல் அழுதாள் என்பார். "கண்ணின் மழையுண்டென வார நின்றாள்" என்றார். "ஓர் மன்னன்" என வரற் பாலது. செய்யுள் ஆதலின் "ஒர் மன்னன்" என வந்தது. இனிவருவனற்றிற்கும் இவ்வாறே கொள்க.

கணவன் மறைவிடம் நிற்க மனைவி மறுகுதல்

904. ***மயில் போல் வருவாள் மனம் காணிய.***
***காதல் மன்னன்.***
***செயிர் தீர் மலர்க் காவின் ஒர் மாதவிச்***
***சூழல் சேர.***
***பயில்வாள். இறை பண்டு பிரிந்து***
***அறியாள். பதைத்தாள்;***
***உயிர் நாடி ஒல்கும் உடல்போல்***
***அலமந்து உழந்தாள்.***

***காதல் மன்னன்*** - *(தன் துணைவியிடத்து) பேரன்பு கொண்ட மன்னன் ஒருவன்;* ***மயில் போல் வருவாள்*** - *மயில் போன்ற அழகோடு வருகின்ற தன் மனைவியின்;* ***மனம் காணிய*** - *மன நிலையை ஆராய்ந்தறிவதற்காக வேண்டி;* ***செயிர்தீர் மலர்க்காவின்*** - *குற்றமற்ற அப்பூஞ்சோலையில் (உள்ள);* ***ஒர் மாதவிச் சூழல் சேர*** - *ஒரு குருக்கத்திப் புதரில் ஒளிந்து கொள்ள;* ***பயில்வாள்*** - *தன் துணைவனோடு இடையறாது பழகுபவளும்;* ***பண்டு இறை பிரிந்து அறியாள்*** - *(இதற்கு) முன்பு. கணவனைச் சிறிதும் பிரிந்தறியாதவளும் ஆகிய அம் மாது;* ***உயிர் நாடி ஒல்கும் உடல்போல்*** - *உயிரைத் தேடி உலையும் உடலைப் போல;* ***பதைத்தாள் அலமந்து உழன்றாள்*** - *துண்டித்து சுற்றிச் சுழன்று (தேடி) திரிவாள் ஆனாள்.*

*தன்னைப் பிரிந்தால் தன் தலைவி எவ்வாறு துயர் உறுவாள் என அறிய நினைத்து. விளையாட்டாக ஒரு பூம்புதருக்குள் ஒரு மன்னன் ஒளிந்தானாக ஒரு போதும். தன் கணவனைப் பிரிந்தறியாத அம் மங்கை. உயிரைத் தேடி உடல் ஒன்று அலைந்து தவிப்பதைப் போலத் தேடித் தவித்தாள் என்பதாம்.*

*உடல் தலைவிக்கும். உயிர் தலைவனுக்கும். உவமைகள். "உடம்பொடு உயிரிடை என்ன. மற்று அன்ன மடந்தையொடு எம்மிடை நட்பு" (திருக். 1122) என வள்ளுவனாரும் தலைவியை உடலாகவும் தலைவனை உயிராகவும் கூறியுள்ளமை காண்க.*

*உடலும் உயிரும் தொன்றுதொட்டு வேற்றுமையின்றிக் கலந்துவருதலும். இன்பதுன்பங்களை ஒருசேர. அனுபவித்தலும். ஒன்றையொன்று இன்றியமையாமையும் (பரிமே. 1122. வரை) பொருந்தி வருதலால். இத்தன்மைகளேயுடைய கணவன் மனைவியர்க்குப் பொருந்தும் உவமையாயின. பின். சீதையினை இராவணன் கவர்ந்து சென்றுவிட்ட காலை. இராமன் வந்து சீதையைக் காணாது தவித்தற்கு இவ்வாறே உயிரையும் உடலையும் உவமை கூறுவார். "கூடு தன்னுடையது பிரிந்து ஆர்உயிர். குறியா நேடிவந்து அது கண்டிலதாம் என நின்றான்" (கம்ப. 3473).*

*மனங்காணிய - மனத்தைக் காண்பதற்காக. காணிய - செய்யிய என்னும் வினையெச்சம். காரணப்பொருட்டு. செயிர்தீர் மலர்க்கா - குற்றமற்ற பூங்கா. செயிர் - குற்றம். பூங்காவுக்குக் குற்றம் இல்லாமையாவது; எப்போதும் வாட்டமின்மையும். கண்ணுக்கும் கருத்துக்கும் இதம் அளிப்பதுமாம்.*

*மாதவி - குருக்கத்தி. சூழல் - புதர். கொடிவீடு. வடமொழியில் லதாக்கிருகம். இறை - சிறிது; தலைவன் - இரட்டுறமொழிதல்.*

*உடலைத் தேடி உயிர் இயங்குமேயன்றி. உயிரைத் தேடி உடல் இயங்காது ஆதலால் இல்பொருள் உவமையணி.*

*அலமரல் - சுழல்தல் - "அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி" (தொல்: உரி: 14 மகளிரிடையே புலவிக் காட்சிகள்*

***905.** **மை தாழ் கருங் கண்கள் சிவப்பு உற***
***வந்து தோன்ற.***
***நெய் தாவும் வேலானொடு. நெஞ்சு***
***புலந்து நின்றாள்.***
***எய்தாது நின்றம் மலர் நோக்கி.***
***'எனக்கு இது ஈண்டக்***
***கொய்து ஈதி' என்று. ஓர் குயிலை. கரம்***
***கூப்பு கின்றாள்.***

**நெய்தாவும் வேலானொடு** - *நெய்பூசப் பெற்ற வேலேந்திய (தன்) கணவனோடு;* **நெஞ்சு புலந்து நின்றாள்** - *(மனத்திற்) பிணக்கம் கொண்டிருந்த ஒருத்தி;* **மைதாழ் கருங்கண்கள்** - *அஞ்சன மை தங்கிய கரிய கண்களில்;* **சிவப்பு உற வந்து தோன்ற** - *செந்நிறம் மிக வந்து தோன்றச் (சினந்து);* **எய்தாது நின்ற மலர்நோக்கி** - *(தனக்கு) எட்டாமல் இருந்த மலரைப் பார்த்து;* **இது எனக்கு ஈண்டக் கொய்து ஈதி** - *'இந்த மலர் எனக்குக் கிடைக்க அதனைக் கொய்து கொடு' என்று;* **ஓர் குயிலைக் கரம் கூப்புகின்றாள்** - *(ஊடலால் கணவனை வேண்டாது) ஒரு குயிலை நோக்கிக் கை கூப்பினாள்.*

*கணவனைக் கை கூப்புவதற்கு மாறாக. ஊடலால். குயிலைக் கரங் கூப்பினாள் குயிலைக் "கொய்து ஈதி" என வேண்டியது. "அஃறிணை மருங்கினும் அறையப்படுமே" (தொல்.) எனும் அகப்பொருள் விதியை உட்கொண்டது. நெய் தாவும் வேலான் அவன். மை தாங்கும் வேலாள் இவள். இருவர்க்கும் இடையே நடக்கும் ஊடற் போரில். நெய் தாவும் வேல் தோற்கும் என்பதைக் குறிப்பால் உணர்த்த. "கண்கள் சிவப்பு உற (மிக) வந்து தோன்ற" என்றார். "நான் வேண்டியது ஈவார் இங்கு யாரும் இல்லை; நீயாவது பறித்துத் தா!" என அவன் அருகிருக்கவும் ஊடலால் கூறினாள். ஒரு குயிலை. ஒரு குயில் கரங்கூப்பி நின்றது எனும் ஒரு நயமும் தோன்றும். நின்றம் மலர் - செய்யுளாதலின் இசைக்காக மகரம் விரிந்தது. சிவப்பு வெகுளி. "கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள்" (தொல். உரி. 76*

***906. செம்மாந்த தெங்கின் இளநீரை. ஓர்***
***செம்மல் நோக்கி.***
***'அம்மா! இவை மங்கையர் கொங்கைகள்***
***ஆகும்' என்ன.***
***'எம் மாதர் கொங்கைக்கு இவை ஒப்பன?'***
***என்று. ஒர் ஏழை.***
***விம்மா. வெதும்பா. வெயரா. முகம்***
***வெய்துயிர்த்தாள்.***

***செம்மாந்த தெங்கின் இளநீரை*** - *உயர்ந்தோங்கி நின்ற தென்னையின் இளநீரையுடைய காயை;* ***ஓர் செம்மல்*** - *ஒரு தலைவன்;* ***'அம்மா!*** - *'என்ன வியப்பு!;* ***இவை மங்கையர் கொங்கைகள் ஆகும்' என்ன*** - *இவ்விளநீர்க் காய்கள் மங்கையரின் கொங்கைகளுக்கு ஒப்பாகும் என்று கூற;* ***எம் மாதர் கொங்கைக்கு இவை ஒப்பன*** - *(அது கேட்ட அவன் மனைவி) இவ்விளநீர்கள் நீ பார்த்த எந்த எந்த மங்கைகளின் கொங்கைகளுக்கு ஒப்பாவன? ;* ***என்று*** - *என்று கேட்டு;* ***விம்மா*** - *விம்மி;* ***வெதும்பா*** - *மனம் கொதித்து;* ***முகம் வெயரா*** - *முகம் வெயர்த்து;* ***வெய்துயிர்த்தாள்*** - *வெப்பப் பெருமூச்சு விட்டாள்.*

*இளநீரை மங்கையர் கொங்கைக்குவமித்தல் மரபாதலால். "இவை மங்கையர் கொங்கைகள் ஆகும்" என்றான் தலைவன். ஆனால். 'இவை மங்கையே! நின்கொங்கைகள் ஆகும்' என்னாமல். இவை மங்கையர் கொங்கைகள் ஆகும்' எனப் பன்மையாற் கூறியது. தலைவியின் ஊடற்கு ஏதுவாயிற்று. "யாரினும் காதலம் என்றேனா ஊடினாள் யாரினும் யாரினும் என்று" எனும் அருமைத் திருக்குறள் (1314) இங்கு நினையற் பாலது. தன் கணவன் தூய்மையை வீணாக ஐயுறுகிறாள் என்பார் ஏழை என்றார்*

***907. 'போர்' என்ன வீங்கும் பொருப்பு அன்ன***
***பொலங் கொள் திண்தோள்***
***'மாரன் அனையான். மலர் கொய்து***
***இருந்தானை. வந்து ஒர்;***
***கார் அன்ன கூந்தல். குயில் அன்னவள்.***
***கண் புதைப்ப.***
***'ஆர்?' என்னலோடும். அனல் என்ன***
***அயிர்த்து உயிர்த்தாள்.***

***போர் என்ன வீங்கும்*** - *போர் என்று சொன்ன அளவிலேயே (மகிழ்ச்சியில்) பூரித்துப் பெருக்கும்;* ***பொருப்பன்ன*** - *மலையினைப் போன்ற;* ***பொலம் கொள்*** - *அழகு வாய்ந்த;* ***திண் தோள்*** - *வலிய தோள்களையுடையவனாய்;* ***மாரன் அனையான்*** - *(அழகில்) மன்மதனை ஒப்பவனாய்;* ***மலர்கொய்து இருந்தானை*** - *பூக்களைப் பறித்துக் கொண்டிருந்த (தன்) கணவனை;* ***கார் அன்ன கூந்தல்*** - *கார் மேகம் போன்ற கூந்தலையுடையவளாய்;* ***ஓர் குயில் அன்னவள்*** - *(குரலில்) ஒப்பற்ற குயிலைப் போன்றவளான ஒருத்தி;* ***வந்து*** - *(அவன் அருகில்) வந்து;* ***கண் புதைப்ப*** - *(அவன்) கண்களைப் பொத்தினாளாக;* ***ஆர் என்னலோடும்*** - *(அப்போது அவன்) (என் கண்களைப் பொத்தியவர்) யார்? என்று கேட்டவுடனே;* ***அனல் என்ன*** - *(அவள்) தீ போன்று வெதும்பி;* ***அயிர்த்து உயிர்த்தாள்*** - *ஐயமுற்று (வெப்பப்பெரு) மூச்சு விட்டாள்.*

*தான் கண்ணைப் பொத்தியவுடன். தன் பெயரைச் சொல்லிக் 'கையை எடு' என்று சொல்ல வேண்டிய தன் கணவன். 'ஆர்' என்று வினவியதால் தன்னைப் போன்றே இவன் கண் பொத்தி விளையாடும் மகளிர். வேறு சிலரும் உள்ளார்கள் போலும் என்ற ஐயத்தால் இவள் ஊடல் கொண்டாள் என்றபடி. போர் என்று சொன்னவுடன் உடம்பு பூரித்து. தோள் பெருக்கும் வீரமரபினைக் குறித்தவாறு. "கிட்டியது அமர் எனக் கிளருந் தோளினான்" (கம்ப. 2311) எனக் குகனைப் பின்பு குறிப்பார் "போர் எனிற் புகலும் புனைகழல் மறவர்" (புறம். 31.9) என்பதும் காண்க. மகளிர் தலைவர் கண்களைப் புதைத்தல் வழக்கம் என்பது: "நலம் பெறு கையின் என் கண் புதைத்தாயே!....... நீயலது உளரோ என் நெஞ்சு அமர்ந்தோரே!" (ஐங். 293. 2. 5) அக்கால் ஆடவர் வீரமும் ஈரமும் ஒருசேர இப்பாடலில் குறித்தார்.*

***908. ஊற்று ஆர் நறை நாள்மலர். மாதர்.***
***ஒருங்கு வாசச்***
***சேற்றால் விளையாத செந்தாமரைக்***
***கைகள் நீட்டி.***
***ஏற்றாரை நோக்கான். இடை ஏந்தினன்.***
***நின்று ஒழிந்தான் –***
***மாற்றான். உதவான். கடு வச்சையன்***
***போல் - ஓர் மன்னன்.***

***சேற்றால் விளையாத*** - *சேற்றில் உதிக்காத;* ***செந்தாமரைக் கைகள்*** - *செந்தாமரை மலரை ஒத்த கைகளை;* ***நீட்டி ஏற்றார் மாதர்*** - *(கணவனாகிய அரசன் பறித்துத்தர மலர்கள் வேண்டும் என்று) நீட்டிக் கேட்ட மனைவிமார்க்கு;* ***ஓர் மன்னன்*** - *ஓர் அரசன்;* ***நறை ஊற்று ஆர்நாள் மலர்*** - *தேன் சொட்டுகின்ற நிறைந்த அன்றலர்ந்த மலர்களை;* ***உதவான்*** - *கொடாதவனாய்;* ***இடை ஏந்தினன்*** - *(அவ்விருவர்க்கும்) இடையே (தானே) ஏந்தினவனாய்;* ***மாற்றான் உதவான்*** - *(யார்க்கும்) மறுக்காமலும் கொடுக்காமலும்;* ***கடு வச்சையன் போலல்*** - *கொடிய உலோபியைப் போல;* ***நின்று ஒழிந்தான்*** - *எதுவும் செய்ய இயலாமல் நின்று இருந்தான்.*

*ஓர் மன்னன் கைகள் நீட்டி ஏற்றார்க்கு உதவான் இடை ஏந்தினன் நின்றொழிந்தான் என்று கூட்டுக. மாதர் ஒருங்கு ஏற்றார் என்பதனால். மாதர் ஒருவர் அல்லர் என்பது பெறப்பட்டது. தன் மனைவியர் இருவரும் ஒருசேரக் கேட்டதனால் சமமாகப் பங்கிட்டுத்தரினும் யார்க்கு முதலில் தந்தது என்று ஊடுவர். அதனால். மலர்களைக் கொடுக்கவும் மறுக்கவும் மாட்டாமல் கொடிய உலோபியைப் போல் நின்றான் என்றார். கொடாமல் இருப்பது உலோபம். கொடுக்க மறாமலும் நிற்பது கொடும் உலோபம். உடனே மறுத்துவிடின் இரப்போர் வேறிடம் நாடி இரக்க வாய்ப்பு உண்டு; அவ்வாய்ப்பினையும் இழக்க வைப்பதால் ''கடு வச்சையின்'' என்றார்.*

***909. தைக்கின்ற வேல் நோக்கினள். தன் உயிர்***
***அன்ன மன்னன்.***
***மைக் கொண்ட கண்ணாள் எதிர்.***
***மாற்றவள் பேர் விளம்ப.***
***மெய்க் கொண்ட நாணம் தலைக்கொண்டிட***
***விம்மி. மென் பூக்***
***கைக் கொண்டு மோந்தாள்; உயிர்ப்புண்டு***
***கரிந்தது அன்றே!***

***தன் உயிர் அன்ன மன்னன்*** *- தன் உயிர் போன்ற தலைவன்;* ***மைக் கொண்ட கண்ணாள் எதிர்*** *- மை தீட்டிய கண்களையுடைய (தன்) மனைவியின்முன்;* ***மாற்றவள் பேர் விளம்ப*** *- சக்களத்தியின் பெயரைக் கூற;* ***தைக்கின்ற வேல் நோக்கினள்*** *- (மார்பில்) உருவிச் செல்கிறவாறு தன் (விழி) வேலால் நோக்கினாள்;* ***மெய்க் கொண்ட நாணந் தலைக்கொண்டு*** *- (பலர்முன்) தன் கணவனை அவ்வாறு நோக்கியமைக்காக) உடலில் வெட்கமும் மேலிட்டு;* ***விம்மி*** *- (வெளிகாட்ட இயலாத் துன்பத்தால்) விம்மலுற்று;* ***மெல் பூக் கைக் கொண்டு*** *- மெல்லிய மலர் ஒன்றைக் கையில் எடுத்து;* ***மோந்தாள்*** *- மோந்தாளாக;* ***உயிர்ப்பு உண்டு கரிந்தது*** *- அவள் (வெப்பப்) பெரு மூச்சால். முகர்ந்த அப் பூ உடனே கருகிப் போயிற்று.*

*"தன் உயிர் அன்ன மன்னன்" என்பதனால். தன்னிடந் தவிர மற்றோரிடத்தில் அவன் வாழான் என்று நினைத்திருந்தாள்; அவள். தன் கண்ணெதிரேயே இவள் நிற்பது உணராமல். மற்றொருத்தியைப் பெயர் கூறியழைத்தான்; அதனால். வெகுண்டு. அவன் நெஞ்சைத் துளைக்கும் கடும் பார்வை பார்த்தாள். பலர் முன் அவ்வெகுளிப் பார்வை பார்த்ததை எண்ணி உடனே நாணினாள்; துயரை உள்ளே அடக்கி விம்மினாள்; தன் உள்ளத்துள்ளே உள்ள துன்பத்தைக் குறிப்பால் கணவனுக்கு உணர்த்த வேண்டி பூவொன்றை மோந்து காட்டினாள் என்க. மகளிர் வெப்ப மூச்சால் பூக்கள் வாடும் என்பது: "துணையமை பிணையல். மோயினள் உயிர்த்த காலை மாமலர். மணி உரு இழந்த அணியழி தோற்றம்" (அகநா. 23) கணவன் அன்பு முழுதும் தனக்கே வேண்டும் எனும் பெண்மையின் இயல்பினை ஒரு நிகழ்வு காட்டி விளக்கியவாறு. "தன் உயிர் அன்ன மன்னன். மாற்றவள் பேர் விளம்ப. தைக்கின்ற வேல் நோக்கினள். நாணம் தலைக் கொண்டிட விம்மி மோந்தாள்: உயிர்ப்புண்டு கரிந்தது" எனக் கூட்டுக. பிறர்முன் கணவனை வெகுளுதல் வெட்கமுறத்தக்க செயல் என்பார். "தைக்கின்ற வேல் நோக்கினள் நாணம் தலைக் கொண்டிட" என்றார். வெகுளியை அடக்கியதால் வெளிப்பட்ட மூச்சு நெருப்புப் போன்றிருந்தது என்பார். "மென்பூ உயிர்ப்புண்டு கரிந்தது" என்றார். 20*

தேவிமாரொடு திரிந்த மன்னர்

***910.*** **திண் தேர் அரசன் ஒருவன். குலத்**
**தேவிமார்தம்**
**ஒண் தாமரை வாள் முகத்துள் மிளிர்**
**உண்கண் எல்லாம்**
**கண்டு ஆதரிக்கத் திரிவான். மதம்**
**கவ்வி உண்ண**
**வண்டு ஆதரிக்கத் திரி மா**
**மத யானை ஒத்தான்.**

**குலத் தேவியர் தம்** - *உயர்குலத்தைச் சார்ந்த (தன்) மனைவியரின்;* **ஒண் தாமரை வாள் முகத்துள்** - *அழகிய தாமரை போன்ற ஒளி பொருந்திய முகங்களில்;* **மிளிர் உண்கண் எல்லாம்** - *விளங்குகின்ற மையுண்ட கண்கள் யாவும்;* **கண்டு ஆதரிப்பத் திரிவான்** - *தன் பேரழகைப் பார்த்து. விரும்புமாறு திரிபவன் ஆகிய;* **திண்தேர் அரசன் ஒருவன்** - *திண்ணிய தேர் ஊர்ந்து செல்லும் அரசன் ஒருவன்;* **வண்டு ஆதரிக்க** - *வண்டுகள் விரும்புமாறு;* **திரி மாமத யானை ஒத்தான்** - *திரிகின்ற மிகு மதங்கொண்ட யானை ஒன்றினைப் போன்றவன் ஆயினான்.*

*யானைகளின் மதநீரை யுண்ணுதற்கு. வண்டுகள் யானை செல்லுமிடம் எல்லாம் உடன் செல்வது போன்று இம்மன்னன் செல்லுமிடம் எல்லாம் அவன் தேவிமார்கள் விழி வண்டுகளும் உடன் திரிய அழகுச் செருக்கில் அவன் உலவினான் என்பதாம். யானைக்கு. வண்டுகள் உடன் திரிய அதன் மதம் காரணம் ஆயிற்று. இவனுக்கு மகளிர் விழி வண்டுகள் உடன் திரிய இவன் அழகு காரணம் ஆயிற்று. வண்டுகளும். விழிகளும் விருப்பத்தோடு உடன் திரிகின்றன என்பார் ''ஆதரிக்க'' என்றார்*

*மனைவியர் சினந்து புலத்தல்*

***911. சந்திக் கலா வெண் மதி வாள் நுதலாள்தனக்கும்.***
***வந்திக்கல் ஆகும் மடவாட்கும். வகுத்து நல்கி.***
***நிந்திக்கல் ஆகா உருவத்தினன் நிற்ப. மென் பூச்***
***சிந்தி. கலாப மயிலின். கண் சிவந்து. போனார்.***

***நிந்திக்கல் ஆகா உருவத்தினன்*** *- பழித்தற்கு ஆகாத உருவத்தினையுடைய ஒருவன்;* ***சந்திக் கலா வெண்மதி வாள் நுதலாள் தனக்கும்*** *- சந்தியா காலத்தில் தோன்றி சில கலைகளை மட்டும் கொண்டுள்ள வெண்ணிறப் பிறைச் சந்திரன் போன்ற நெற்றி கொண்ட (தன்) ஒரு மனைவிக்கும்;* ***வந்திக்கல் ஆகும் மடவாட்கும்*** *- எவரும் வந்திக்கத்தக்க பேரழகியான மற்றொரு மனைவிக்கும்;* ***வகுத்து நல்கி நிற்ப*** *- (தான் கொய்த மலர்களைச்) சமமாகப் பகிர்ந்து கொடுத்து நிற்கும் போது;* ***மென் பூச் சிந்தி*** *- (அவ்விரு மனைவியரும் அவன் தந்த) அம்மெல்லிய மலர்களைத் (தரையிற்) கொட்டிவிட்டு;* ***கண் சிவந்து*** *- அவன்மேல் (கோபங்கொண்டு) கண்கள் சிவந்தவராகி;* ***கலாப மயிலின் போனார்*** *- தோகை மயில் போல (அவன் முன் நிற்க விரும்பாமல்) அப்பால் போய்விட்டனர்.*

*கணவன் தான் பறித்த மலர்களை முதலில் தந்ததால் ஒருத்தியும். சமமாகத் தந்ததால் ஒருத்தியும் ''சினங் கொண்டு ஊடினார்கள். தோகை மயில் கனம் தாளாமல் நடப்பது போல சமமாகத் தந்ததால். அவளுக்கு நான் சமமா? என்று ஊடினாள். இவர்கள் சினந் தாளாமல் நடந்தனர் என்பார். ''கலாப மயிலிற் கண் சிவந்து போனார்'' என்றார். கலாபம் - மயில்தோகை.*

*பல்திற மகளிர் ஆடவர்களின் செயல்கள்*

**கலித்துறை**

***912. வந்து. எங்கும். தம் மன் உயிரேயோ.***
***பிறிது ஒன்றோ?-***
***கந்தம் துன்றும் சோர் குழல்***
***காணார்; கலை பேணார்;***
***அந்தம்தோறும் அற்று உகும் முத்தம்***
***அவை பாரார்;-***
***சிந்தும் சந்தத் தே மலர்***
***நாடித் திரிவாரும்;***

***கந்தம் துன்றும்*** - *(அம்மகளிர்) மணம் நிரம்பியுள்ள;* ***சோர்குழல் காணார்*** - *(தம்) அவிழ்ந்துள்ள கூந்தலைக் கவனித்துப் பாராமலும்;* ***கலை பேணார்*** - *(இடையில் உடுத்திருந்த) ஆடை அவிழ்தலைப் பொருட்படுத்தாமலும்;* ***அந்தம் தோறும்*** - *(அச்சோலையின்) இறுதி வரையிலும்;* ***அற்று உரும் முத்தம் அவை பாரார்*** - *(ஓடும் வேகத்தால்) முத்துச் சரங்கள் அற்று அற்று விழுவதை மதியாமலும்;* ***தம்மன் உயிரேயோ?*** - *(இவர் தேடுவது) தமது உடம்பில் தங்கும் தன்மையினையுடைய உயிரைத் தானோ?;* ***பிறிது ஒன்றோ?*** - *(அன்றி) வேறு முக்கியமானதொரு பொருளைத் தானோ? (என்று பார்ப்பவர் கருதுமாறு) ;* ***எங்கும் வந்து*** - *(அச்சோலையின்) எவ்விடத்தும் சென்று;* ***சிந்தும் சந்தம் தேன்மலர்*** - *(தேனைச்) சிந்துவனவாகிய அழகிய மலர்களை;* ***நாடித் திரிவாரும்*** - *தேடித் திரிகின்றவர்களும்.*

*முதல் பன்னிரு கவிகளும் ஆடவர் மகளிர் பலரின் ஆர்வ நிகழ்ச்சிகளைத் தொகுத்துச் சுட்டுகின்றன. உம்மையொடு கூடிய இறுதிச் சொல்லோடு (ஆயினர்) எனும் சொல்லைக் கூட்டிப் பொருள் முடிவு கொள்க.) மலர்களின் மேல் மங்கையருக்குள்ள கொள்ளை ஆசையை அழகுறச் சுட்டுகின்றார். கூந்தல் சோர்வதும். உடை சோர்வதும். முத்து மாலைகள் அறுவதும். பெண்டிர் சிறிதும் விரும்பாதவை. பூக்கள் மேல் உள்ள விருப்பம் இவ் விரும்பாதவை விளைவதையும் பொருட்படுத்தாமல் ஓடித் திரிய வைத்தன என்பதாம். "காணார் பேணார் பாரார் வந்து எங்கும் சிந்தும் மலர் நாடித் திரிவாரும்" என வினைமுடிவு கொள்க. சோர் குழல்: வினைத்தொகை.*

***913. யாழ் ஒக்கும் சொல் பொன் அனையாள்.***
***ஓர் இகல் மன்னன்.***
***தாழத் தாழாள்; தாழ்ந்த மனத்தாள்***
***தளர்கின்றாள்;***
***ஆழத்து உள்ளும் கள்ளம் நினைப்பாள்;***
***அவன் நிற்கும்***
***சூழற்கே. தன் கிள்ளையை ஏவித்***
***தொடர்வாளும்;***

***யாழ் ஒக்கும் சொல்*** - யாழிசையை யொத்து இனிமை பயக்கும் மொழிபேசும்; ***பொன் அனையாள்*** - திருமகளைப் போன்றாள் ஒருத்தி; ***ஓர் இகல் மன்னன்*** - ஒப்பற்ற வலிமை வாய்ந்த (தன்) கணவனான அரசன்; ***தாழ*** - (தன்னை) வணங்கி நிற்க; ***தாழாள்*** - (சிறிதும்) மனம் இளகாதவளாயிருந்து; ***தாழ்ந்த மனத்தாள்*** - (அவன் அப்பாற் சென்றவுடன்) (பின்பு) மனம் இளகியவளாய்; ***தளர்கின்றா*** - (தன் செயலுக்கு) மிகவும் வருந்தியவளாய்; ***ஆழத்து உள்ளும் கள்ளம் நினைப்பாள்*** - ஆழ்ந்து எண்ணிய சூழ்ச்சியை மனத்துட் கொண்டவளாய்; ***அவன் நிற்கும் சூழற்கே*** - கணவன் நிற்கின்ற சோலையின் பகுதிக்கே (ஏகுமாறு) ; ***தன் கிள்ளையை ஏவித் தொடர்வாளும்*** - தான் வளர்த்த செல்லக் கிளியை முன்னால் ஏவிப் பின்னால் அதனைத் தொடர்ந்து செல்வாளும். தாழத் தாழாமையை "உணர்ப்பு வயின் வாரா ஊடல்" என்பர் தொல்காப்பியர். (தொல். கற்பு. 9) தன் உரிமை மிகுதியால். யாரேனும் அவன் உள்ளத்தின் ஆழத்தே குடி புகுந்திருக்கக் கூடுமோ என்று அவன் கள்ள உள்ளம் சிந்திப்பான் என்பார். "ஆழத்து உள்ளும் கள்ளம் நினைப்பாள்" என்றார். இகல் - வலிமை. சூழல் - இடம். கிள்ளை - கிளி. தாழாள். தளர்கின்றாள். நினைப்பாள் - முற்றெச்சங்கள்.

***914. அம்தார் ஆகத்து ஐங் கணை***
***நூறாயிரம் ஆகச்***
***சிந்தா நின்ற சிந்தையினான்.***
***செய்குவது ஓரான்.***
***'மந்தாரம் கொண்டு ஈகுதியோ.***
***மாதவி?' என்று. ஓர்***
***சந்து ஆர் கொங்கைத் தாழ்***
***குழலாள்பால் தளர்வானும்;***

***அம் தார் ஆகத்து*** - அழகிய மலர் மாலையணிந்த மார்பில்; ***ஐங்கணை நூறு ஆயிரம் ஆக*** - மன்மதனின் ஐந்து பூங்கணைகளும் இலட்சக்கணக்கில் பாய்ந்ததனால்; ***சிந்தா நின்ற சிந்தையினான்*** - சிந்துகின்ற (சிதறுகின்ற) சிந்தையுடையவனான ஒருவன்; ***செய்குவது ஓரான்*** - (தான்) செய்யவேண்டிய செயல் இதுவெனத் தெரியாதவனாய்; ***மாதவி*** - குருக்கத்திக் கொடியே!; ***மந்தாரம் கொண்டு ஈகுதியோ?*** - (நீ) மந்தார மலரைப் பூத்துத் தருவாயோ?; ***என்று*** - எனக் கூறி; ***சந்து ஆர் கொங்கை*** - சந்தனக் குழம்பணிந்த கொங்கையும்; ***ஓர் தாழ்குழலாள் பால்*** - தாழ்ந்த கூந்தலையும் உடையாள் ஒருத்தியிடம்; ***தளர்வானும்*** - (மனம்) தளர்ந்து நிற்பவனும்.

*மன்மதனுடைய மலர்க் கண்கள் துளைத்த மார்பினையுடைய வீரன் ஒருவன். தன் காதலி ஊடலால் நீங்கிப் போனதனை ஆற்றாமல் சிந்தை திரிந்தவனாய். மாதவிக் கொடியிடத்தில் மந்தார மலர் கேட்டு மயங்கிப் பிதற்றினான் என்பதாம். போர்க்களத்தில் பகைவர் கொடுங்கணைகளுக்கு நிலைகுலையுமாறு வெற்றி மாலைகளைச் சூடிய மார்பேந்தியவன். மன்மதனின் பூங்கணைகளுக்கு ஆற்றாது நிலை குலைந்து போனான் என்பார். காதலின் வலிமை கூறியவாறு "எண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள் நண்ணாரும் உட்கும் என் பீடு" (திருக். 1088) என்பார் திருவள்ளுவதேவரும்.*

***915. நாடிக் கொண்டாள். குற்றம் நயந்தாள்;***
***முனிவு ஆறாள்;***
***ஊடிக் காணக் காட்டும் நலத்தாள்***
***உடன் நில்லாள்;***
***தேடித் தேடிச் சேர்த்த செழும் பூ***
***நறு மாலை***
***சூடிச் சூடி. கண்ணடி நோக்கித்***
***துவள்வாளும்;***

**குற்றம் நயந்தாள் நாடிக் கொண்டாள்** - *(தன் கணவன் மேல்) குற்றங் காண விரும்பி. தேடிப் பிடித்துக் கற்பித்துக் கொண்டவளாய்;* **முனிவு ஆறாள்** - *சினம் குறையாதவளாய்;* **ஊடி** - *(தன்முன் வந்த கணவனிடம் முகங்கொடாமல்) ஊடல் கொண்டு;* **காண** - *(அதனைத் தன் கணவன்) காணுதலால்;* **காட்டும் நலத்தாள்** - *தோன்றிய இன்பத்தையுடையாள் ஒருத்தி;* **உடன்** - *உடனே;* **நில்லாள்** - *(அந்த ஊடிய நிலையிலேயே) நிற்கமாட்டாதவளாய்;* **தேடித் தேடிச் சேர்த்த நறும்பூ** - *(அச்சோலையில் பல இடங்களிலும் அவள்) தேடித் தேடித் திரட்டிய வாச மலர்களாலான;* **மாலை சூடிச்சூடி** - *மாலையினைத் தான் அணிந்து அணிந்து;* **கண்ணடி நோக்கி** - *(இவ்வொப்பனை நன்றாக உள்ளதா? எனக்) கண்ணாடியில் பார்த்து;* **துவள்வாளும்** - *(இவ்வழகை நுகர்வதற்கு அவன் அருகில் இல்லையே எனத்) துவள்கின்றவளும்.*

*"இல்லை தவறு அவற்கு ஆயினும் ஊடுதல் வல்லது அவர் அளிக்குமாறு" (திருக்.1321). "தவறிலர் ஆயினும் தாம் வீழ்வார் மென் தோள் அகறலின் ஆங்கொன்று உடைத்து" (திருக். 1325) என்னும் திருக்குறள்கள் இக்கருத்தினையுணர்த்தும். பலமுறை தேடினாள் என்பார் "தேடித் தேடி" என்றார். மாலையைப் பலமுறை பலவகையாய் அணிந்தணிந்து அழகு பார்த்து ஏங்கினாள் என்பார். "சூடிச் சூடிக் கண்ணடி நோக்கித் துவள்வாள்" என்றார். மனைவி யழகெல்லாம் கணவன் துய்த்தற்கே எனவிருந்த பழம்பண்பு கூடியவாறு. நயத்தல்: விரும்புதல். கண்ணடி: கண்ணடி.*

***916. 'மறலிக்கு ஊண் நாடும் கதிர் வேலான்.***
***இடையே வந்து***
***உற. இக் கோலம் பெற்றிலென் என்றால்.***
***உடன் வாழ்வு இப்***
***பிறவிக்கு ஒல்லேன்; என் செய்வது. இப்***
***பேர் அணி?' என்று. ஓர்***
***விறலிக்கு ஈவாள் ஒத்து. இழை எல்லாம்***
***விடுவாளும்;****

**‘மறலிக்கு ஊண் நாடும்** - கூற்றுவனுக்கு உணவு தேடித் தருகிற; **கதிர் வேலான்** - ஒளியுமிழும் வேல் ஏந்திய (என்) கணவன்; **இடையே வந்து உற** - என்னிடம் சேர்ந்து பொருந்துதற்கு; **இக்கோலம்** - இவ்வலங்காரத்தை; **பெற்றிலேன்** - (நான்) பெறவில்லை; **என்றால்** - என்னக் கூடுமாயின்; **இப்பிறவிக்கு உடன் வாழ்வு ஒல்லேன்** - இப்பிறவியில் இவ்வுடலோடு வாழ்வதற்கு (இனி நான்) உடன்படேன்; **இப்பேர் அணி என் செய்வது?** - இப் பெரிய அலங்காரம் என்ன பயனைத் தருவதாம்?; **என்னா** - என்று; **இழை எல்லாம்** - (தான் அணிந்திருந்த) ஆபரணங்களையெல்லாம்; **விறலிக்கு ஈவாள் ஒத்து** - விறலிக்கு ஈந்து விடுவாள் போன்று; **விடுவாளும்** - கழற்றித் தருபவளும். அணிகளால் தன்னைப் புனைந்து கொண்டு. கணவன் வருகைக்குக் காத்திருந்தாள் ஒருத்தி. நெடும்பொழுதாகியும் செயல் ஆற்றச் சென்ற கணவன் வாராமை. அவள் நெஞ்சை வருத்தியது. இந்த அலங்காரக் கோலத்தோடு அவனைக் கூடி மகிழப் பெறாத இவ்வணிகளும் உடலும் எதற்கு? என்று வெறுத்தவள் அணிகலன்களையெல்லாம் வேறு ஒருத்திக்குத் தந்துவிட்டாள். (தீயில் வீழ்ந்து) “இறக்கத் துணிந்தவர்கள் தமது அணிகலன்களைத் தமது விருப்பத்திற்கு இடம் ஆயினார் கையிற் கொடுப்பது மரபாதலால். விறலி கையில் கொடுத்து விடுவாளாயினள் “இழையெல்லாம் விடுவாளும்” என்றாலும் மங்கல அணியினைத் தவிர்த்து மற்றையவையெல்லாம் கொடுத்தாள் என்பது பொருளாகக் கொள்க. ஏனெனில். “ஈகையரிய இழையணி” (புறம்: 127:5) அது வாகலின். “மங்கல அணியிற் பிறிதணி மகிழாள்” (சிலம்பு: 4:50) என்பார் இளங்கோவடிகளும். “மற்றை நல் அணிகள் காண் உன் மங்கலங்காத்த” (கம். 5262) என்பார் இவரும். காதலன் காதல்வகை புனைந்து அவன் கண்ணுக்கு இனியராய் இருக்க விரும்பிய மகளிரின் பண்பு இங்குச் சுட்டியவாறு. “விறலிக்கு ஈவாள் ஒத்து” என்பதனால் பழங்காலத்தில் ஆடிப்பாடும் விறலியருக்கு ஆபரணங்களை ஈயும் வழக்கம் புலனாம்.

*917.* **வம்பின் பொங்கும் கொங்கை சுமக்கும்
வலி இன்றிக்
கம்பிக்கின்ற நுண் இடை நோவ.
கசிவாளும்;
பைம் பொன் கிண்ணம் மெல் விரல் தாங்கி.
பயில்கின்ற
கொம்பில் கிள்ளைப் பிள்ளை ஒளிக்க.
குழைவாளும்;**

**வம்பின் பொங்கும்** - கச்சுக்கு அடங்காது ததும்புகின்ற; **கொங்கை சுமக்கும் வலி இன்றி** - கொங்கைகளைச் சுமக்கின்ற வலிமையின்றி; **கம்பிக்கின்ற** - நடுங்குகின்ற; **நுண் இடை நோவ** - நுண்ணிய இடை வருந்துதலால்; **கசிவாளும்** - வருந்துவாள் ஒருத்தியும்; **பயில்கின்ற கொம்பில்** - நெருங்கியடர்ந்த கொம்புகளினிடையே; **கிள்ளைப் பிள்ளை ஒளிக்க** - (தான் வளர்த்த) கிளிப்பிள்ளை ஒளிந்து கொள்ள; **பைம்பொன் கிண்ணம்** - பசும்பொன்னாற் செய்யப்பெற்ற கிண்ணத்தை; **மெல்விரல் தாங்கி** - மெல்லிய விரல்களில் தாங்கியவாறு; **குழைவாளும்** - (அதற்கு உணவூட்ட இயலாமைக்கு) வருந்தித் தளர்வாள் ஒருத்தியும்.

*பெண்மை கட்புலன் ஆவதோர் மென்மைத் தன்மையாவதால். அவர்தம் உடல் உள்ளம் இரண்டின் மென்மையும் ஒருங்கு சுட்டுகின்றார். ''கம்பிக்கின்ற நுண்ணிடை'' என்பனதால். பெண்மையின் உடல மென்மையும். ''கிள்ளைப் பிள்ளை ஒளிக்கக் குழைவாள்'' என்பதனால். உயிர் ஓம்பும் அன்பு மயமான உள்ள மென்மையும் சுட்டினார். பச்சைக் கொடிகட்கிடையே பச்சைக் கிளிப்பிள்ளை ஒளிந்து கொண்டால். கண்டு கொள்வது அரிது ஆதலின் வருந்துவாள் என்பாள் ''கிள்ளைப்பிள்ளை ஒளிக்கக் குழைவாள்'' என்றார். பைம் பொறகிண்ணம் பெரிதாதலின் அதனை நெடுநேரம் தாங்கும் தன்மை அவள் மெல்லிய சிறு விரல்கட்கு இல்லை என்பார். ''மெல்விரல் தாங்கி'' என்றார். வம்பு: மார்புக் கச்சு. கம்பித்தல்: நடுங்குதல். அசைதல். கசிதல்: அழுதல். வருந்துதல். குழைதல்: தளர்தல். கிளிக் குஞ்சுகளைக் கிளிப்பிள்ளை என்பது மரபு. ''பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற்று இளமை'' (தொல். மரபு. 4) என்பது தொல்காப்பிய மரபியல்.*

***918.*** ***தன்னைக் கண்டாள்; மென் நடை***
***கண்டாள்; தமரேபோல்***
***துன்னக் கண்டாள்; தோழமை கொணடாள்;***
***துணை என்றாள்;***
***'உன்னைக் கண்டார் எள்ளுவர்; பொல்லாது;***
***உடு நீ' என்று.***
***அன்னக் கன்னிக்கு. ஆடை***
***அளிப்பான் அமைவாளும்;***

***மெல் நடை கண்டாள்*** *- (அன்னத்தின்) மெல்லிய நடையினைக் கண்டாள் ஒருத்தி;* ***தன்னைக் கண்டாள்*** *- அந்நடையில் தன்னையே கண்டாளாய்;* ***தமரே போல்*** *- சுற்றத்தாரையே போல;* ***துன்னக் கண்டாள்*** *- (இவள் நடை கற்க) அவ்வன்னம் நெருங்கி நெருங்கி வருவதைக் காண்பவளாய்;* ***தோழமை கொண்டாள்*** *- அதனோடு தோழமை கொண்டவளாய்;* ***துணை என்றாள்*** *- நீ என் (அருந்) துணையாவாய் என்று சொல்லியவளாய்;* ***உன்னைக் காண்பார் எள்ளுவர்*** *- (அவ்வன்னத்தை நோக்கி) நீ ஆடையின்றி இருப்பதைக் கண்டவர்கள் உன்னைப் பழிப்பார்கள்;* ***பொல்லாது*** *- (அப்படியிருப்பது) தவறு;* ***உடு நீ*** *- நீ (இந்த ஆடையை) உடுத்துக் கொள் என்று;* ***அன்னக் கன்னிக்கு*** *- இளமைமிக்க அன்னப் பெடைக்கு;* ***ஆடை அளிப்பான்*** *- (தன்) ஆடையைக் கொடுக்க;* ***அமைவாளும்*** *- உடன்படு வாளும்.*

*அன்ன நடையில் தன் நடையைக் கண்டாள் ஆதலின். "மென்னடை கண்டாள் ஆதலின். "மென்நடை கண்டாள் தன்னைக் கண்டாள்" என்றார். சுற்றி நெருங்கியிருப்பவர்கள் சுற்றத்தார் ஆதலின் "தமரே போல் துன்னக் கண்டாள்" என்றார். குருதித் தொடர்பு இன்மையின் "தோழமை கொண்டாள்" என்றார். கன்னியொருத்தி. ஆடைக்குறையோடிருப்பது ப ழிப்புக்கும் தீமைக்கும் ஏதுவாம் ஆதலின். "அன்னக்கன்னிக்கு கண்டார் எள்ளுவர்; பொல்லாது உடு நீ" என்று ஆடை அளித்தாள். கவரும் பருவத்தில். பெண்டிர் உடல் மூடி ஆடை அணிதலின் இன்றியமையாமையை அன்னத்தின் மேல் வைத்து அறிவித்தவாறாம். பெண்மையின் இரக்கப்பண்பும் உணர்ச்சி ஒட்பமும் ஒழுங்கு சுட்டியவாறு. ஆடை அளிப்பான்: ஆடையளிப்பதற்காக - பான் ஈற்று வினை எச்சம். காரணப்பொருட்டு.*

***919.*** **பாகு ஒக்கும் சொல் நுண் கலையாள்தன்**
**படர் அல்குல்**
**ஆகக் கண்டு. ஓர் ஆடு அரவு ஆம் என்று.**
**அயல் நண்ணும்**
**தோகைக்கு அஞ்சி. கொம்பின் ஒதுங்கி.**
**துணர் ஈன்ற**
**சாகைத் தம் கை. கண்கள் புதைத்துத்**
**தளர்வாளும்;**

***பாகு ஒக்கும் சொல்*** *- தீம் பாகினைப் போனற இனிய சொல்லுடைய;* ***நுண் கலையாள்*** *- மெல்லிய ஆடையை அணிந்தவளாகிய ஒருத்தி;* ***தன் படர் அல்குல்*** *- தனது பரந்த அரையிடத்தை;* ***ஆகக் கண்டு*** *- கண்கூடாகக் கண்டு;* ***ஓர் ஆடுஅரவாம்*** *- (இது) படம் எடுத்து ஆடுகின்ற ஒரு பாம்பை ஒக்கும்;* ***என்று*** *- என்று எண்ணி;* ***அயல் நண்ணும்*** *- அருகே நெருங்கும்;* ***தோகைக்கு அஞ்சி*** *- (பாம்பின் பகையான) மயிலுக்குப் பயந்து;* ***கொம்பின் ஒதுங்கி*** *- பூங்கொம்பு ஒன்றிலே பதுங்கி;* ***துணர்ஈன்ற*** *- பூங்கொத்துக்களையுடைய;* ***சாகைத் தம் கை*** *- பூங்கிளை ஒன்றைத் தன் கைகளால் எடுத்து;* ***கண்கள் புதைத்து*** *- (நாணத்தால்) கண்களைப் பொத்திக் கொண்டு;* ***தளர் வாளும்*** *- தளர்வுறுவாளும்.*

*ஒரு பூங்கொடியில் தன்னை மறைத்துக் கொள்ளுமாறு மென்மைத் தோற்றம் உடையாள் என்பார் "கொம்பின் ஒதுங்கி" என்றார். இதனால் இவள் உருவம் பூங்கொடியினும் மெல்லியது என்றவாறு. இவள் விழிகள் பூக்களைப் போன்றவையாதலால் வேற்றுமை தெரியாதிருக்க பூக்களைக் கைகளால் அள்ளிப் பொத்திக் கொண்டாள் - மயில். இது பூங்கொடியே என்று ஏமாந்து போக வாய்ப்பாகுமாறு.*

***920. ‘பொன்னே. தேனே. பூமகளே. காண்.***
***எனை’ என்னா.***
***தன் நேர் இல்லாள். அங்கு. ஒரு***
***கொய்யல் தழை மூழ்கி.***
***‘இன்னே என்னைக் காணுதி நீ’ என்று.***
***இகலி. தன்***
***நல் நீலக் கண் கையின் மறைத்து.***
***நகுவாளும்;***

***தன் நேர் இல்லாள்*** - *தனக்கு ஒப்புச் சொல்ல இயலாத அழகி ஒருத்தி;* **பொன்னே** - *பொன் போல் அருமை வாய்ந்தவளே!;* **தேனே** - *தேன் போன்று இனிமையானவளே!;* **பூமகளே** - *திருமகள் போன்று செல்வம் நிறைந்தவளே!;* ***எனைக் காண்*** - *நான் ஒளிந்து கொள்ளுகிறேன் கண்டுபிடி;* ***எனா*** - *என்று (அவள் தோழியைப் பார்த்து)ச் சொல்லி;* ***அங்கு ஒரு கொய்யல் தழை மூழ்கி*** - *அச்சோலையில் உள்ள கொய்தற்குரிய மரத்தின் தழைகளுக்கிடையே மறைந்து கொண்டு;* ***நீ இன்னே என்னைக் காணுதி*** - *இப்போது என்னைக் கண்டுபிடி பார்க்கலாம்;* ***என்று இகலி*** - *என்று விளையாட்டுப் பகையோடு;* ***தன் நல் நீலக்கண்*** - *தனது நல்ல கருங்குவளை மலர் அனைய கண்களை;* ***கையில் மறைத்து*** - *(தன்) கைகளால் மூடிக்கொண்டு;* ***நகுவாளும்*** - *சிரித்து மகிழ்வாளும்.*

*ஒளிந்து விளையாட விரும்பிய ஒருத்தி. தழையிடை மூழ்கி. தன் கண்களை மூடிக்கொண்டு. ‘என்னைக் கண்டுபிடி பார்க்கலாம்’ என்று குரல் கொடுத்தாள். குரல் வரும் வழிச் சென்று தோழி கண்டுபிடித்து விடுவாள் என்று தெரியாத குழந்தைமை சுட்டியவாறு. கண்களைக் கைகளால் மூடிக் கொள்ளும்போது. தனக்கு உலகம் இருண்டிருப்பதைப் போலவே தோழிக்கும் இருண்டிருக்கும் என்று நினைத்தாள் பேதை என்க . “பொன்னே. பூவே. பூமகளே” உவம ஆகு பெயரில் வந்த விளிகள். என்னா: என்று; செய்யா எனும் வினை எச்சம். கொய்யல்; கொய்யல் மரம். கொய்யா இன்றைய வழக்கு. “கொங்கார் கோடலோடு கொய்யல் குழைஇ” (பெருங் 1 : 51 : 51) என்பர் கொங்குவேளிரும். இன்னே: இப்பொழுதே. இகல்: பகை. மாறுபாடு. நீலம்: நீலோற்பலம். கருங்குவளைப் பூ; நகுதல்: சிரித்தல். 31*

***921. வில்லில் கோதை நாண் உற மிக்கோன்.***
***இகல் அங்கம்***
***புல்லிக் கொண்ட தாமரை மென் பூ***
***மலர் தாங்கி.***
***அல்லின் கோதை மாதர் முகப்***
***பேர் அரவிந்தச்***
***செல்வக் கானில். செங்கதிர் என்னத்***
***திரிவாரும்.***

***மிக்கோன்*** - *(தகுதிகளால்) மேம்பட்டான் ஒருவன்;* ***வில்லில் நாண்கோதை உற*** - *(தன்) வில்லினுடைய நாண் தன் இடக் கைவிரல் கவசத்திற் பொருந்த. (ஒரு கையில் வில்லேந்தியவாறு) ;* ***இகல் அங்கம்*** - *வலிமையுள்ள வலக்கையில்;* ***புல்லிக் கொண்ட தாமரை மென் பூத்தாங்கி*** - *பறித்துக் கொண்ட மெல்லிய தாமரைப் பூவைத் தரித்துக் கொண்டு;* ***அல்லின் கோதை மாதர்*** - *இருள் போன்ற கூந்தலையுடைய மகளிரின்;* ***முகச் செல்வப்பேர் அரவிந்த மலர்க் கானில்*** - *முகங்கள் என்னும் வளமுள்ள பெரிய தாமரைக் காட்டில்;* ***செங்கதிர் என்ன*** - *செந்நிறக் கதிர்களையுடைய கதிரவன் போல (மலர்ச்சியையுண்டாக்கியவாறு);* ***திரிவாரும்*** - *செருக்கோடு உலாவுவாரும்.*

*ஒரு கையில் வில்லும். ஒரு கையில் மலரும் ஏந்தியவாறு. மகளிர் முகங்கள் மலருமாறு திரிந்தான் ஓர் வீரன் என்க. இடக்கையில் நாண் ஏந்திய வில் அவன் வீரத்தைக் குறித்து நின்றது. வலக்கையில் ஏந்திய தாமரைப்பூ காதற் குறிப்பைத் தோற்றுவித்தது. வீரமும் காதலும் மேலோங்கி நின்றவர் ஆடவர் எனக் குறித்தவாறு. வில்லின் நாண் உராயாமல் தடுக்க இடக்கையில் உறை அணியும் வழக்கம் தோன்ற. ''வில்லின் நாண் கோதை உற'' என்றார். கோதை: உறை. பூவேந்திய கை வலக்கை என்பது தோன்ற. ''இகல் அங்கம்'' என்றார். இகல்: வலிமை. வலிமையுடைய கை வலக்கை எனப்படுவதாயிற்று. கோதை: பெண்டிர் கூந்தல்; வில்லாளர் கையுறை. இரண்டிற்கும் வேறுபாடு தோன்ற. ஒன்றை. ''வில்லின் கோதை'' என்றும். பிறிதொன்றை ''அல்லின் கோதை'' என்றும் குறித்தார். அல்: இருள். இனம் விலக்கிய அடைமொழிகள். இவன் வரவால். மாதர் முகம் என்னும தாமரைக் காடுகள் மலர்ந்தனவாதலால் இவனை இளஞ்சூரியன் என்பார். ''மாதர் முகப்பேர் அரவிந்தச் செல்வக் கானில் செங்கதிர் என்ன'' என்றார். செல்வம்: வளம். வளத்துக்குக் காரணம் ஆதலின் செல்வம். வளம் ஆயிற்று. அரவிந்தம்: தாமரை. கதிரவனைக் கண்ட தாமரைகள் மலர்தல் இயல்பு. வீரனைக் கண்ட மாதர்கள் மகிழ்தல் இயல்பு. முகப்பேர் அரவிந்தம் - உருவகம். சூரியனுக்கும் தாமரைமலர் கையில் உண்டு.*

***922. செய்யில் கொள்ளும் தெள் அமுதச் செஞ்***
***சிலை ஒன்று***
***கையில் பெய்யின் காமனும் நாணும்***
***கவினார். தம்***
***மையல் பேதை மாதர் மிழற்றும்***
***மழலைச் சொல்.***
***தெய்வப் பாடல் சொற்கலை என்ன.***
***தெரிவாரும்;***

**செய்யில் கொள்ளும்** - *வயலிலிருந்து கொண்டு வரப்படுகிற;* **தெள் அமுதச் செஞ்சிலை ஒன்று** - *தெளிந்த தீஞ்சாறுகூடிய (கரும்பாகிய) செந்நிற வில் ஒன்றை;* **கையில் பெய்யின்** - *கரங்களில் பெற்றால்;* **காமனும் நாணும்** - *இவர் போன்ற அழகு நமக்கில்லையே என மன்மதனும் வெட்கமுறும்;* **கவினார்** - *அழகினையுடைய ஆடவர்கள்;* **மையல் பேதைமாதர்** - *(கேட்டார்க்குக்) காம மயக்கத்தை யுண்டாக்கும் பேதைமைக் குணம் நிறைந்த தம் மனைவியர்;* **மிழற்றும் மழலைச் சொல்** - *கூறுகின்ற மென் சொல்லால் (ஆகிய) ;* **தெய்வப் பாடல்** - *தெய்வத்தன்மையுள்ள பாடல்களை;* **சொற்கலை என்ன** - *இது சொற்களால் ஆகிய கலை; (இதை ஆராய வேண்டும் என) ;* **தெரிவாரும் - ஆராய்பவரும்.**

*அந்த ஆடவர்கள் கையில் ஒரு கரும்பில்லை. ஒரு கரும்பை ஏந்தினர் ஆயின். மன்மதனை வென்ற அழகுடையவர் ஆவர்; இப்போது கரும்பேந்தாத காரணத்தால் மன்மதனுக்குச் சமமான அழகர் ஆயினார் என்பார். "செஞ்சிலை ஒன்று கையிற் பெய்யின் காமனும் நாணும் கவினார்" என்றார். பெய்யும் எனும் பாடத்தில் முதல் அடி முழுவதும் காமனுக்கே அடையாகி வெற்றெனத் தொடுத்து நிற்றலின். "பெய்யின்" எனும் பாடமே கொள்ளப் பெற்றது. இல்பொருள் உவமை. செய்: வயல். மையல் கொண்ட ஆடவர்க்கு மங்கையர் சொல்பொருள் புரியாது போயினும் தெய்வப் பாடலாய்த் தோன்றும் என்பார். "மையல் பேதை மாதர் மிழற்றும் மழலைச் சொல் தெய்வப்பாடல்" என்றார். கண்ணகியின்பால் மையலுற்றிருந்த காலத்தில் கோவலன். "குழலும் யாழும் அமிழ்தும் குழைத்த நின் மழலைத் கிளவி" (சிலம்பு. 2:58) எனப் போற்றி மகிழ்ந்தமை காண்க. மகளிரின் பொருள் புரியா மழலைச் சொற்களை. அன்பின் மிகுதியால். சாத்திரங்களை யாராய்வதுபோல் பாராட்டி ஆராயலாயினர் என்க. சொற்கலை: சொற்களால் ஆகிய கலை. சொற் சொரூபமான கலை. வேதமாகிய சொற்கலை எனக் கொள்வாரும் உளர்.*

***923.*** **சோலைத் தும்பி மென் குழல் ஆக.**
**தொடை மேவும்**
**கோலைக் கொண்ட மன்மத ஆயன்.**
**குறி உய்ப்ப.**
**நீலத்து உண்கண் மங்கையர் சூழ.**
**நிரை ஆவின்.**
**மாலைப் போதில் மால் விடை**
**என்ன வருவாரும்.**

**சோலைத் தும்பி மென்குழல் ஆக** - சோலைகளில் உள்ள வண்டுகளின் ஒலி. மெல்லிய இசையினைக் கொண்ட புல்லாங்குழல் ஒலி ஆக; **தொடை மேவும் கோலைக் கொண்ட** - மலர்மாலை கொண்டு சுற்றியுள்ள கோலை ஏந்திய; **மன்மத ஆயன்** - மன்மதனாகிய இடையன்; **குறிஉய்ப்ப** - (மனை திரும்ப வேண்டிய) அடையாளத்தைக் (குழல் மூலமாகத்) தெரிவிக்க; **மாலைப் போதில்** - மாலைக் காலத்தில்; **நிரை ஆவின்மால் விடை என்ன** - (வீடு நோக்கி வருகின்ற) பசுக்கூட்டத்தின் இடையே பெரிய காளைகள் (வருவது) போல; **நீலத்து உண்கண் மங்கையர்** - கருங்குவளைமலர் போன்ற மையுண்ட கண்களையுடைய மடந்தையர்கள்; **சூழ வருவாரும்** - (சுற்றிலும்) சூழ்ந்து வர வருகின்றவர்களும்.

*(23 ஆம் பாட்டின் இறுதியிலிருந்து இப் பாடல்வரை. திரிவாரும். தொடர்வாளும்.......... வருவாரும் (34) என வரும் உம்மைத் தொடர்களோடு 'ஆயினர்' எனும் ஒரு சொல் சேர்த்துத் தொடரை முடித்துக் கொள்க). மலர் கொய்து விளையாடிக் கொண்டிருந்த மங்கையர்கள் மாலைப் பொழுது வந்தடைந்ததை உணர்கின்றனர். தங்கள் கணவன்மாரும் பணி முடித்துத் திரும்புகின்றனர். அவர்களோடு அம்மகளிர் தங்கும் இடம் திரும்புவதைக் கற்பனைத் திறத்தோடு உருவகித்து அழகூட்டுகிறார். மாலைக் காலத்தில் பசுக்களைப் புல் மேயவிட்டிருந்த ஆயர்கள். 'இனித் தொழுவம் திரும்பலாம். என்பதற்கு அடையாளமாகத் தம் குழலில் ஓர் இசையினை எழுப்புவர். அது கேட்டுத் திரும்பிய பசுக்கூட்டங்களோடு இடையர் இல்லந் திரும்புவர். அது போன்று. மன்மதன் என்னும் இடையன். 'நீங்கள் இன்பம் நுகரும் நேரம் வந்துவிட்டது; திரும்புங்கள்' என்று அறிவிக்க. அங்கங்கே மலர் கொய்து கொண்டும். விளையாடிக் கொண்டுமிருந்த மடந்தைமார்கள். தங்கள் கணவன்மார்கள் என்னும் காளைகளைச் சூழ்ந்தவாறு பாடி வீடு திரும்பினர் என்பதாம் - உருவக அணியை உறுப்பாகக் கொண்டுவந்த உவமையணி. ''குயியுய்ப்ப'' என்பது வீடு திருப்புதற்குரிய குழல் ஓசை அடையாளம் தெரிவிக்க எனவும் கூடுதற்குரிய குறியிடத்திற் செலுத்த எனவும் சிலேடைப் பொருள் தந்தது.* **கலிவிருத்தம்**

***924. 'ஊக்கம் உள்ளத்து உடைய முனிவரால்***
***காக்கல் ஆவது. காமன் கை வில்' எனும்***
***வாக்கு மாத்திரம்; அல்லது. வல்லியில்***
***பூக் கொய்வாள் புருவக் கடை போதுமே!***

**'உள்ளத்து ஊக்கம் உடைய** - (தவம் புரிவதில்) மனத்தில் ஊக்கம் (மிகக்) கொண்ட; **முனிவரால்** - முனிவர்களிடத்தில்; **காமன் கை வில் காக்கல் ஆவது எனும்** - காமன் வில்லின் ஆற்றலைக் காக்கத் தக்க ஆற்றல் உண்டு என்று (உலகில்) சொல்லப்படுகின்ற; **வாக்குமாத்திரம் அல்லது** - வாய்ச் சொல்மட்டும் (பிரபலமே) யன்றி (உண்மையை ஆராய்ந்தால் அம்முனிவர்களின் ஆற்றலைப் பொடியாக்குதற்கு); **வல்லியில் பூக்கொய்வாள்** - பூங்கொடிகளிலிருந்து பூக்களைக் கொய்யும் ஒருத்தியின்; **புருவக் கடைபோதும்** - புருவத்தின் நுனிப் பகுதியின் கடைப் பார்வையே போது மானதாகும்.

*முனிவரால்* - உருபு மயக்கம். "கண்களவு கொள்ளும் சிறு நோக்கம் காமத்தின் செம்பாகம் அன்று பெரிது" (திருக். 1092) ஆதலின். முனிவர்களின் தவமுயற்சியை யழிக்கப் புருவ வில்லை மகளிர் முழுதும் வளைக்கத் தேவையின்றிக் கடைப்பகுதியின் வளைப்பே போதுமென்பார். "புருவக்கடை போதுமே" என்றார் - ஏ- அசை. "கறையடிக் களி யானையின் வரவினைக் கண்டு. மறுகின் உற்றவர் இரிதர மணி மருங்கிடல் போல். உறு தவத்தினர் அறிந்தனர் ஓட ஒண்ணுதற்கு. நறு மலர்ப் பதத்து அணிந்தனள் சிலம்பு ஒரு நங்கை" (பிரபு. லீலை) எனும் பாடல் ஒப்பு நோக்கற்பாலது.

***925. நாறு பூங் குழல் நன்னுதல். புன்னைமேல்***
***ஏறினான் மனத்து உம்பர் சென்று. ஏறினாள்;-***
***ஊறு ஞானத்து உயர்ந்தவர் ஆயினும்.***
***வீறு சேர் முலை மாதரை வெல்வரோ!***

***நாறு பூங்குழல் நன்னுதல்*** - மணக்கின்ற பூக்களையணிந்த கூந்தலையும் அழகிய நெற்றியையும் உடையாள் ஒருத்தி; ***புன்னைமேல் ஏறினான்*** - புன்னை மரத்தின் மீது (பூக்கொய்ய) ஏறியுள்ள தன் கணவனுடைய; ***மனத்து உம்பர் சென்று ஏறினாள்*** - மனத்தின் மீது ஏ?றி அமர்ந்திருந்தாள்; ***ஊறு ஞானத்து உயர்ந்தவர் ஆயினும்*** - மனத்தில் ஊற்றாய்ச் சுரக்கின்ற அறிவினைப் பெற்ற உயர்ந்தோர் ஆனாலும்; ***வீறுசேர் முலை மாதரை வெல்வரோ?*** - பெருமைமிக்க தனங்களையுடைய பெண்டிரை வெல்லவல்லவர் ஆவரோ? (ஆகார் என்க.)

அவன் புன்னை மேல் ஏறினான். இவளோ அவன் உள்ளத்தின் மேல் ஏறினாள். உருவுடைய மரத்தின் மேல் ஏறலினும் உருவற்ற உள்ளத்தின் மேல் ஏறல் அன்றோ உயர்வுக்குரியது என்றவாறு. வேற்றுப்பொருள்வைப்பணி. ஞானத்தால் உயர்ந்தாரும் காமத்தால் தாழ்வர் என்பது குறிப்பு. "வஞ்சி போல் மருங்குலார் மாட்டு யாவரே வணங்கலாதார்?" (896) என்று முன்பும் கூறினார்.

***926. சினையின்மேல் இருந்தான். உருத் தேவரால்***
***வனையவும் அரியாள் வனப்பின்தலை.***
***நினைவும். நோக்கமும். நீக்கலன்; கைகளால்.***
***நனையும் நாள் முறியும் கொய்து. நல்கினான்.***

***சினையின் மேல் இருந்தான்*** - (ஒரு மரத்தின்) கிளையின் மேல் (மலர் பறிக்கச்) சென்றிருந்த கணவன்; ***தேவரால் வனையவும் அரியாள் வனப்பின் தலை*** - தேவர்களாலும் வரைய இயலாத (ஓவிய) உருவினையுடைய (தன்) மனையாளின் அழகின்மேல்; ***நினைவும் நோக்கமும் நீக்கலன்*** - தான் வைத்த மனத்தையும் கண்களையும் நீக்க இயலாதவன் ஆனால்; ***கைகளால் நனையும் நாள் முறியும்*** - (மனத்தின் வழியே உறுப்புகள் செயல்படும் ஆதலால்) தன் கைகளால். பூ அரும்புகளையும் புதிய தளிர்களையும்; ***கொய்து நல்கினான்*** - கொய்து (அவள்மேல்) இட்டவண்ணம் இருந்தான்.

மாலை தொடுக்க மலர்களைக் கொய்து திரட்டிவரச் சென்றவன். வைத்த கண் வாங்காமல் தன் மனையாளையே நினைந்து. பார்த்தவண்ணமாய். செயல் மறந்து. கொய்த மலர்களையும் தளிர்களையும் அவள் மேல் இட்டு அர்ச்சித்த வண்ணம் இருந்தான் என்பதாம். ''உடல் சிந்தை வசம் அன்றோ?'' (கம்ப. 1150) என்பார் மேலும். நினைவு - ஆகுபெயர்.

927. **வண்டு வாழ் குழலாள் முகம் நோக்கி. - ஓர்**
**தண்டுபோல் புயத்தான் தடுமாறினான்.**
**'உண்டு கோபம்' என்று உள்ளத்து உணர்ந்து; - அவள்**
**தொண்டை வாயில் துடிப்பு ஒன்று சொல்லவே.**

**ஓர் தண்டு போல் புயத்தான்** - தண்டாயுதம் போன்ற தோள்களையுடையான் ஒருவன்; **வண்டு வாழ் குழலாள் முகம் நோக்கி** - வண்டுகள் தங்குகின்ற கூந்தலையுடைய (தன்) மனையாட்டியின் முகத்தைப் பார்த்து; **அவள் தொண்டைவாயில்** - அவளுடைய தொண்டைக் கனி போன்ற வாயில்; **துடிப்பு ஒன்று சொல்ல** - துடித்த துடிப்பு (குறிப்பால்) ஒன்றை உணர்த்த; **கோபம் உண்டு என்று** - (இவள் மனத்தில்) சினம் உண்டு என்று; **உள்ளத்து உணர்ந்து தடுமாறினான்** - உள்ளத்தால் உணர்ந்து (அதனை நீக்கும் நெறி தெரியாமல்) தடுமாற்றம் கொண்டான். வழக்கமாய் மாலையணிந்து பொலியும் தோள்களையுடையவன். வெறுந்தோளனாய் வருதலால். மாலையை யார்க்கு ஈந்தானோ என்று ஐயுற்று இதழ் துடிக்கச் சினங் காடடினாள் என்பது குறிப்பால் தோன்ற ''அவள் தொண்டை வாயில் துடிப்பு ஒன்று சொல்ல'' என்றார். வீர மார்பினர் ஆயினும் மெல்லிய பெண்மையின் சினத்தால் வீரமிழந்து தவித்தான் என்பார். ''தண்டுபோல் புயத்தாள் தடுமாறினான்'' என்றார்.

புனலாடப் புறப்படல்

928. **ஏயும் தன்மையர் இவ் வகையார் எலாம்.**
**தூய தண் நிழல் சோலை. துறு மலர்**
**வேயும் செய்கை வெறுத்தனர்; வெண் திரை**
**பாயும் தீம் புனல் - பண்ணை சென்று எய்தினார்.**

**ஏயும் தன்மையர்** - (இதுகாறும் கூறியவாறு பூக்கொய்தலும் புலவி கொள்ளுதலும் முதலிய) செய்கைகளை மேற்கொண்டவர்களான; **இவ் வகையார் எலாம்** - இத்தகைய ஆடவரும் பெண்டிரும்; **தூய தண் நிழல் சோலை** - தூய்மையுடைய குளிர்ந்த நிழலைத் தரும் அச்சோலையிலே; **துறுமலர் வேயும் செய்கை வெறுத்தனர்** - நெருங்கிய மலர்களைப் (பறித்துச்) சூடுகின்ற செயலின்மேல் விருப்பமில்லாதவர் ஆயினர்; **வெண்திரை பாயும் தீம்புனல் பண்ணை** - வெள்ளை அலைகள் பாயும் இனிய நீரில் விளையாடுவதில்; **சென்று எய்தினார்** - (மனம்) சென்றதனால் (நீர்நிலைகளை) அடைந்தார்கள்.

துறுமலர் - வினைத்தொகை. புனல்பண்ணை: நீர்விளையாட்டு. பழகப் பழகப் பாலும் புளிக்கும் ஆதலின் மலர்வேயும் செய்கையும் வெறுத்தனர் என்றார். செயல்மாற்றம் சோர்வு மாற்றும் ஆதலின் பூக் கொய்தோர் இனிப் புனல் விளையாடப் போகின்றனர் என அடுத்தப் படலத்துக்குத் தோற்றுவாய் அமைத்தார்.

## நீர்விளையாட்டுப் படலம்

*மகளிரும் மைந்தரும் நீர்விளையாடலைக் கூறும் பகுதி. ஆடவரும் மகளிரும் தழுவியும் புலந்தும். நீரினை இறைத்தும். இன்பத்தை நிறைத்தும் புனல்விளையாடினர். அவர்களின் உடலில் கமழ்ந்த மணத்தால். நீர்நிலைகளிலிருந்த மீன்களும் மணம் பெற்றன. குளித்தெழுந்த மகளிர் சாணைபிடித்த மணிகளைப்போல் காட்சிதந்தனர். அவர்கள் நீர்நிலைகளிலிருந்து வெளியேறிய பின்பு. தாமரைப் பூக்கள் எல்லாம் குடிபோய்விட்டன போல். தடாகங்கள் பொலிவிழந்து போயின. அப்போது. கதிரவன் மறைந்தான்; திங்கள் எழுந்தது.*

*நீர்நிலை நோக்கி மகளிரும் மைந்தரும்*

**அறுசீர் விருத்தம்**

***929.*** **புனை மலர்த் தடங்கள் நோக்கி.**
**பூசல் வண்டு ஆர்த்துப் பொங்க.**
**வினை அறு துறக்க நாட்டு**
**விண்ணவர் கணமும் நாண.**
**அனகரும். அணங்கனாரும்.**
**அம் மலர்ச் சோலைநின்று.**
**வன கரி பிடிகளோடும்**
**வருவன போல வந்தார்.**

***அனகரும் அணங்கு அ(ன்)னாரும்*** - *குற்றமற்ற ஆடவரும் தெய்வமகளிர் போன்ற பெண்டிரும்;* ***வினையறு துறக்க நாட்டு*** - *வினை (த் துன்பம்) அற்ற சுவர்க்க நாட்டில் உள்ள;* ***விண்ணவர் கணமும் நாண*** - *தேவர் இனமும் (இவர்களுடைய அழகைக் கண்டு) வெட்கி நாணம் கொள்ளுமாறு;* ***பூசல் வண்டு ஆர்த்துப் பொங்க*** - *ஆரவாரம் செய்யும் குணம்கொண்ட வண்டுகள் ஒலித்துப் பொங்கியெழ;* ***அம் மலர்ச் சோலைநின்று*** - *அந்தப் பூஞ்சோலையிலிருந்து;* ***புனைமலர்த் தடங்கள்நோக்கி*** - *அழகிய மலர்க்குளங்களை நோக்கி;* ***வனகரி பிடிகளோடு*** - *வனங்களில் வாழும் ஆண் யானைகள். (தங்கள்) பெண் யானைகளோடு;* ***வருவன என்ன வந்தார்*** - *வருதலைப் போல வந்தார்கள். வினை - துன்பம். ஆகுபெயர். அனகர் - குற்றமற்றவர். பாவம் அற்றவர். நாட்டு யானைகள் அடிமைப்படுதல் போலக் காட்டு யானைகள். யாருக்கும் அடிமைப் படாதன வாதலின். உரிமைமிக்க அவ்வாடவரையும மகளிரையும் "வனகரி"களுக்கு உவமித்தார். வனங்களில் வாழும் யானைகள் உச்சிப் போதில் வெப்பம் தீரச் சுனையாடும் வழக்கம் அறிந்திருந்த கவிஞர்பிரான். கோசல நாட்டு மகளிரையும் மைந்தரையும் "வனகரி பிடிகளோடு வருவன என்ன வந்தார்" என்று உவமித்து மகிழ்ந்தார். அவ்வுலகத்தோர் வருவதற்கு அருத்தி (விருப்பம்) புரிகின்றது அயோத்தி மாநகரம்" (கம். 93) ஆதலின். அயோத்தி நகர மகளிரும் மைந்தரும் "துறக்க நாட்டு விண்ணவர் கணமும்" நாணும் பேரழகோடு மலர்ப் பொய்கைகளை நோக்கி வருங் காட்சியை. கவிஞர் காட்டுகின்றார். "வனகரி பிடிகளோடு வருவன என்ன வந்தார்" என்னும் உவமையினால் வலிவோடும் பொலிவோடும் துணைவியரை அணைத்தவாறு ஆடவர்கள் பெருமிதப் பீடுநடையோடும் தடாகங்களில் இறங்கும் காட்சியை மன ஓவியப்படுத்துகிறார்.*

***930. அங்கு. அவர். பண்ணை நல் - நீ***
***ராடுவான் அமைந்த தோற்றம்.***
***கங்கை வார் சடையோன் அன்ன***
***மா முனி கனல. மேல்நாள்.***
***மங்கையர் கூட்டத்தோடு***
***வானவர்க்கு இறைவன் செல்வம்.***
***பொங்கு மா கடலில் செல்லும்***
***தோற்றமே போன்றது அன்றே.***

***அங்கு அவர்*** - *அந்த நீர்நிலைகளில். ஆடவரும் மகளிரும்;* ***நல்நீர்ப் பண்ண*** - *நல்ல நீர் விளையாட்டை;* ***ஆடுவான் அமைந்த தோற்றம்*** - *ஆடுவதற்குப் புறப்பட்ட காட்சியானது;* ***மேல்நாள் கங்கைவார் டையோள் அன்ன*** - *கங்கைநதி ஒழுகும் சடையையுடைய சிவபெருமானைப் போன்ற;* ***மாமுனி கனல*** - *பெருமைக்குரிய துருவாச முனிவர் வெகுண்டதனால்;* ***வானவர்க்கு இறைவன் செல்வம்*** - *தேவர்களின் தலைவன் ஆகிய இந்திரனுடைய (கற்பகத்தரு காமதேனு. வெள்ளையானை. சகங்கநிதி முதலிய) செல்வங்கள் யாவும்;* ***மங்கையர் கூட்டத்தோடும்*** - *(அவனுடைய அரம்பை. ஊர்வசி முதலிய) மகளிரின் குழுவோடு;* ***பொங்குமா கடலில் செல்லும்*** - *(பலவளங்களும் நிறைந்த) திருப்பாற்கடலுக்குள் சென்று சேர்வதற்கு (அமைந்த);* ***தோற்றம் போன்றது*** - *காட்சியினை ஒத்திருந்தது.*

தற்குறிப்பேற்ற அணி. அன்று. ஏ - அசைகள். அமைந்த - பொருந்திய. ஆயத்தமான. தேவ உலகச் செல்வமும். தேவ உலக மகளிரும் அயோத்திச் செல்வத்திற்கும். அயோத்தி மகளிர்க்கும் சமம் ஆகக் கூறினார். தேவேந்திரனின் அயிராபத யானையைப் போல ஆடவரும். அவனுடைய அரம்பை முதலிய மடந்தையரைப் போல மகளிரும். அவனுடைய சங்க நிதி. பதுமநிதிபோல மகளிர் ஆபரணச் செல்வங்களும் இருந்தன என்க. தேவ உலகச்செல்வம் அனைத்தும் அயோத்தி மகளிரிடம் இருந்தன என்பது கருத்து. மைந்தரும் மகளிரும் புனலிடை ஆடல்

***931. மை அவாம் குவளை எல்லாம்.***
***மாதர் கண்மலர்கள் பூத்த;***
***கை அவாம் உருவத்தார்தம்***
***கண்மலர்க் குவளை பூத்த;***
***செய்ய தாமரைகள் எல்லாம்.***
***தெரிவையர் முகங்கள் பூத்த;***
***தையலார் முகங்கள். செய்ய***
***தாமரை பூத்த அன்றே.***

***மை அவாம் குவளை எல்லாம்*** - கருமையை விரும்புகின்ற குவளை மலர்கள் யாவும்; ***மாதர் கண்மலர்கள் பூத்த*** - அம்மகளிரின் கண்மலர்களைப் போலப் பூத்தன; ***உருவத்தார் தம் கை அவாம்கண்*** - அழகினையுடைய அம்மகளிரின் உள்ளங்கைகளைப்போல் பெரிதாக விரும்பிய அவர் கண்கள்; ***மலர்க் குவளை பூத்த*** - மலர்ந்துள்ள குவளைகளைப் போல விளங்கின; ***செய்ய தாமரைகள் எல்லாம்*** - செந்தாமரை மலர்கள் எல்லாம்; ***தெரிவையர் முகங்கள் பூத்த*** - மங்கையரின் முகங்களைப் போலப் பூத்தன; ***தையலார் முகங்கள்*** - அம்மாதர்களுடைய முகங்கள்; ***செய்ய தாமரை பூத்த*** - செந்தாமரை மலர்போல் விளங்கின.

*குவளைகள் மாதர் கண் போன்றவையாயினும். அஞ்சன மை அவற்றிற்குக் கிட்டா ஆதலின். "மை அவாம் குவளை எல்லாம்" என்றார். அவாம் அவாவும்; விரும்பும். செய்யும் என்னும் எச்சம். மகளிர் கைகள். முகங்கட்குப் பூத்தல் என்பது விளங்கல் என்னும் பொருளது. இவற்றிற்கு வேறே உவமைகள் கிடையா; ஒன்றற்கொன்றே உவமையாம் எனச் சிறப்பித்தவாறு. மகளிர் கண்கட்கு உள்ளங்கை உவமை!" குடங்கை போல் உண்கண்" (சீவக. 342) "ஒல்கிப் போய் மாடம் சார்ந்தார் ஒரு தடங்குடங்கைக் கண்ணார்" (சீவக. 2535) இங்ஙனம். உவமையையும். பொருளையும் ஒன்றற்கு ஒன்று உவமான உவமேயங்களாகச் சொல்வதைப் புகழ் பொருள் உவமை என்பர் அணிநூலார்.*

***932. தாளை ஏய் கமலத்தாளின்***
***மார்பு உறத் தழுவுவாரும்;***
***தோளையே பற்றி வெற்றித்***
***திரு எனத் தோன்றுவாரும்;***
***பாளை வீ விரிந்தது என்ன.***
***பரந்து நீர் உந்துவாரும்;***
***வாளைமீன் உகள. அஞ்சி.***
***மைந்தரைத் தழுவுவாரும்;***

*இது முதல் எட்டுக்கவிதைகள் ஒரு தொடர்:* ***தாளை ஏய் கமலத்தாளின்*** *- தண்டுபொருந்திய கமல மலரில் வாழும் திருமகளைப் போல;* ***மார்புறத் தழுவுவாரும்*** *- (தங்கள் கணவன்மாருடைய) மார்பகங்களை அழுந்தத் தழுவி நிற்பவர்களும்;* ***தோளையே பற்றி*** *- (தங்கள் கணவர்களுடைய) தோள்களையே பிடித்துக்கொண்டு;* ***வெற்றித்திரு எனத் தோன்றுவாரும்*** *- வெற்றித் திருமகளைப் போலத் தோற்றம் அளிப்பவர்களும்;* ***பாளையே விரிந்தது என்ன*** *- பாளைகள் விரிந்தாற்போல;* ***நீர்பரந்து உந்துவாரும்*** *- நீர் பரக்குமாறு (கரங்களால்) நீரை வீசுபவர்களும்;* ***வாளைமீன் உகள அஞ்சி*** *- வாளை மீன்கள் துள்ளுதற்குப் பயந்து;* ***மைந்தரைத் தழுவுவாரும்*** *- தத்தம் கணவன்மார்களைத் தழுவிக்கொள்பவர்களும்.*

*நீர் பரந்து - நீர்பரக்க - எச்சத்திரிபு. பல திருமகள்களும். திருமால்களுமாகத் தோன்றின நீர்நிலைகள் என்றவாறு. பிரிந்தறியாதவர்கள் ஆதலால். வாளை மீன்கள் துள்ளுவதைச் சாதகமாக்கிக் கொண்டு கணவன்மார்களைத் தழுவிக்கொண்டனர் என்க.*

*திருமகள் மார்பிலும். வெற்றிமகள் தோளிலும் உறைபவர் ஆதலால் மார்பில் தழுவியோர்க்கும். தோளைத் தழுவியோர்க்கும் அவ்விருவரும் உவமையாயினர். நீரைப் பரவலாக இறைக்கும்போது பாளை விரிந்தாற்போலத் தோன்றுவதை. நுனித்துணர்ந்து. ''பாளையே விரிந்தது என்ன நீர் பரந்து உந்துவாரும்'' என்றார். கணவரைத் தழுவிக்கொள்ள அமயம் பார்த்திருப்பார்க்கு. வாளை மீன் உதவிற்று என்பார். ''வாளை மீன் உகள அஞ்சி மைந்தரைத் தழுவுவாரும்'' என்றார். பெண்மையின் இயல்புப் பண்புகளில் நான்கில் ஒன்றான அச்சச் சிறப்பும் அறிவித்தார்.*

***933.  வண்டு உணக் கமழும் சுண்ணம்.***
***வாச நெய் நானத்தோடும்***
***கொண்டு. எதிர் வீசுவாரும்;***
***கோதை கொண்டு ஓச்சுவாரும்;***
***தொண்டை வாய்ப் பெய்து. தூநீர்.***
***கொழுநர்மேல் தூகின்றாரும்;***
***புண்டரீகக் கை கூப்பி.***
***புனல் முகந்து இறைக்கின்றாரும்.***

**வண்டு உணக் கமழும் சுண்ணம்** - *(மகரந்தம்) உண்ணும் வண்டுகள் உண்ண விரும்புமாறு மணக்கும் சுண்ணப் பொடிகளை;* **வாசநெய் நானத்தோடும் கொண்டு** - *நறுமணமுள்ள தைலங்களோடும் கத்தூரியோடும் (கையிற்) கொண்டு;* **எதிர் வீசுவாரும்** - *(எதிர்) எதிராக வீசிக்கொள்வாரும்;* **கோதை கொண்டு ஓச்சுவாரும்** - *மலர்மாலைகளைக்கொண்டு வீசிக்கொள்ளுவாரும்;* **தூநீர் தொண்டை வாய்ப்பெய்து** - *தூய நீரினை. கொவ்வைக்கனிபோன்ற (தம்) வாய்களிலே கொண்டு;* **கொழுநர்மேல் தூவுவாரும்** - *தங்கள் கணவர் மேல் தூவுகின்ற வரும்;* **புண்டரீகக்கை கூப்பி** - *தாமரைமலர்கள் போன்ற (தம்) கைகளைக் குவித்து;* **புனல் முகந்து இறைக்கின்றாரும்** - *நீரை மொண்டு இறைக்கின்றவரும்.*

*"பாலொடு தேன் கலந்து அற்றே பணிமொழி; வால் எயிறு ஊறிய நீர்" (திருக். ) ஆதலின். "தூநீர் தொண்டைவாய்ப் பெய்து கொழுநர்மேல் தூவுவாரும்" என்றார். துப்பை வென்ற செந் துவர்இதழ்ச் செய்ய வாய்த் தூநீர் கொப்பளித்தனள்; ஆம்பல் அம்தேன் எனக் குடித்தான்" (திருவிளை. தருமிக்கு. 59) என்பார் பிறரும். "தொண்டைவாய்ப் பெய்து தூநீர் கொழுநர்மேல் தூவுவாரும்" என இருந்த படியே (கொண்டுகூட்டாமல்) கொண்டு. மகளிர் வாயில் நீரைப் பெய்து. நீரைத் தூய்மையாக்கிப் புனித நீராகக் கணவர்மேல் தெளித்தனர் எனவும் கொள்ளலாம். புனல்விளையாட்டில் சுண்ணமும் கோதையும் வீசலைச் சிந்தாமணி (2659)யும். பரிபாடலும் (9:39-40). கலித்தொகையும் 67:6; 128: 18-19) கூறும்.*

***934.  மின் ஒத்த இடையினாரும்.***
***வேய் ஒத்த தோளினாரும்.***
***சின்னத்தின் அளக பந்தி***
***திருமுகம் மறைப்ப நீக்கி.***
***அன்னத்தை. 'வருதி. என்னோடு***
***ஆட' என்று அழைக்கின்றாரும்;***
***பொன் ஒத்த முலையின் வந்து***
***பூ ஒற்ற. உளைகின்றாரும்;***

***மின் ஒத்த இடையினாரும்*** - *மின்னலைப்போன்ற இடைகளையுடையவர்களும்;* ***வேய் ஒத்த தோளினாரும்*** - *(இள) மூங்கிலைப் போன்ற தோள்களையுடையவரும் ஆகிய சில மகளிர்;* ***சின்னத்தின் அளகபந்தி*** - *விடுபூக்களை யணிந்த முன்உச்சி மயிர்களின் வரிசை;* ***திருமுகம் மறைப்ப நீக்கி*** - *நீரில் மூழ்கி எழுகையில் (தம்) அழகு முகத்தை மறைக்க (அவற்றைக் கரங்களால்) விலக்கி;* ***அன்னத்தை வருதி என்னோடு ஆட என்று அழைக்கின்றாரும்*** - *(அப்போது அருகில் நீந்திய) அன்னப் பறவையைப் (பார்த்து) 'என்னோடு விளையாட வா' என்று அழைக்கின்றவர்களும்;* ***பொன் ஒத்த முலையின்*** - *(தேமல் பரந்திருத்தலால்) பொன்நிறங் கொண்டுள்ள தனங்களின் மேல்;* ***வந்து பூ ஒற்ற உளைகின்றாரும்*** - *(அலையடித்தலால்) பூக்கள் வந்து படுவதற்கும் (மனம்) வருந்துகின்றவர்களும்;-*

*சின்னம் - விடுபூ. எப்போதும் மலரோடும் கூந்தல் இருக்க வேண்டுதலால். குளிக்கையில் சின்னச்சின்ன விடுபூக்களை மகளிர் அணிந்திருந்தனர். பூப்பட்டாலும் வருந்துவன என்று தனங்களின் மென்மை சுட்டியவாறு. கவிஞர் கற்பனைக் கண்ணால் கண்ணாரக்கண்டு காட்சிகளைக் கற்பார்க்குக் காட்டும் நுண்மை. "சின்னத்தின் அளகபந்தி திருமுகம் மறைப்ப. நீக்கி" என்பதனால் விளங்கும். மனப்படங்களை அடுக்கடுக்காகத் தரும் அளவிற்கு ஒரு காவியம் உயர்கிறது என்பதற்கு இத்தொடரும் சான்றாம். "பொன் வைத்த இடத்தில் பூவைத்த" நயமும் காண்க.*

***935. பண் உளர் பவளத் தொண்டை.***
***பங்கயம் பூத்தது அன்ன***
***வண்ண வாய். குவளை வாள் - கண்.***
***மருங்கு இலாக் கரும்பின் அன்னார்.***
***உள் நிறை கயலை நோக்கி.***
***'ஓடு நீர்த் தடங்கட்கு எல்லாம்***
***கண் உள ஆம்கொல்?' என்று.***
***கணவரை வினவுவாரும்;***

***பவளத் தொண்டை*** - *பவளத்தையும் கொவ்வைக் கனியையும்;* ***பங்கயம் பூத்தது என்ன*** - *தாமரைப் பூ. தன்னிடத்தே பூத்தது போன்ற;* ***பண்உளர் வண்ணவாய்*** - *இசை ஒலிக்கும் அழகிய வாயினையும்;* ***குவளை வாள்கண்*** - *குவளைமலர்போன்ற ஒளிமிக்க கண்களையும்;* ***இலா மருங்கு கரும்பின் அன்னார்*** - *இல்லையென்று சொல்லத்தக்க நுண்ணிய இடையினையுமுடைய கரும்பு என(க் கணவர்க்கு) இனிக்கத்தக்க மகளிர்;* ***உள்நிறை கயலைநோக்கி*** - *(தடாகங்களின்) உள்ளே நிறைந்துள்ள கயல்மீன்களைப் பார்த்து;* ***நீர்த்தடங்கட்கு எல்லாம்*** - *நீர்நிலைகட்கு எல்லாம்;* ***ஓடும் கண்உள ஆம்கொல் என்று*** - *ஓடிக் கொண்டேயிருக்கும் கண்கள் உளவோ என்று (ஐயுற்று);* ***கணவரை வினவுவாரும்*** - *தங்கள் கணவரைக் கேட்பவர்களும்.*

*"பேதைமை என்பதும் மாதர்க்கு ஓர் அணிகலம்" ஆதலின். கயல் மீன்களை. நீர்நிலைகளின் கண்களோ? என்று கேட்டதும். அதனால் ஓர் அழகாயிற்று. பின்வருவனவற்றிற்கும் இவ்வாறே கொள்க. கொவ்வைக் கனியையும் பவளத்தையும் தன்னகத்தே கொண்டு தாமரை பூத்தது போல் சிவந்த இதழ்களைக் கொண்டது முகம் என்றார். இல்பொருள் உவமையணி. கரும்பை மகளிர்க்கு உவமையாக்குதல் மரபு. "உண்பார்க்கு மெய்முழுதும் இனிதாயிருத்தலின் கரும்பு என்றார்" என்பார் நச்சினார்க்கினியர் (சீவக. 2453. உரை). அவர் பேச்செல்லாம் இசையாய் முடிதலின் "பண் உளர் வாய்" என்றார்.*

***936.*** **தேன் நகு நறவ மாலைச்**
**செறிகுழல் தெய்வம் அன்னாள்.**
**தானுடைக் கோல மேனி**
**தடத்திடைத் தோன்ற. நோக்கி.**
**'நான் நக நகுகின்றாள் இந்**
**நல் நுதல்; தோழி ஆம்' என்று.**
**ஊனம் இல் விலையின் ஆரம்.**
**உளம் குளிர்ந்தது உதவுவாரும்;**

**தேன் நகும் நறவமாலை** - *வண்டுகள் (உண்டு) மகிழும் தேனையுடைய மலர்மாலை (யணிந்த);* **செறிகுழல் தெய்வம் அன்னாள்** - *அடர்ந்த கூந்தலையுடைய தேவதையை ஒத்தாள் ஒருத்தி;* **தான் உடைக் கோலமேனி** - *தான்கொண்ட அழகிய உடல்;* **தடத்திடைத் தோன்ற நோக்கி** - *தடாகத்தில் (நிழலாகத்) தோன்றுவதைப் பார்த்து;* **இந்நல்நுதல் நான்நக நகுகின்றாள்** - *இந்த நல்ல நெற்றியுடையாள் நான் சிரிக்கும் போதெல்லாம் சிரிக்கின்றாள்;* **தோழி ஆம் என்று** - *(ஆகவே இவள்) என்னுடையதோழி யாவாள் என்று கூறி;* **விலையின் ஊனம் இல் ஆரம்** - *விலை மதிப்புடைய குற்றமற்ற (முத்து) மாலைகளை (நிழல் தோழிக்கு);* **உளம் குளிர்ந்து உதவுவாரும்** - *மனம் உவந்து கொடுத்து நிற்கின்றவர்களும்.*

*இன்பத்தில் இன்பமும். துன்பத்தில் துன்பமும் கூறுதல் உயிர்த்தோழியர் இயல்பு ஆதலின். "நான்நக நகுகின்றாள் இந்நன்னுதல் தோழியாம்" என்றாள். தேன் ஒருவகை வண்டு. இது நல்ல மணத்தே செல்லும் எனவும் ஊற்றறிவு முதலிய ஐயறிவும் இதற்கு உண்டு எனவும் நச்சினார்க்கினியர் கூறுவார் (சீவக. 892 உரை). குற்றமற்ற விலைமதிப்புடைய முத்துமாலையை உளம் குளிர்ந்து ஒரு பெண் ஈதல் அரியசெயல் ஆதலின் "தெய்வம் அன்னாள்" என்றார்.*

*937.* ***குண்டம் திரு வில் வீச.***
***குலமணி ஆரம் மின்ன.***
***விண் தொடர் வரையின் வைகும்***
***மென் மயிற் கணங்கள் போல.***
***வண்டு உளர் கோதை மாதர்***
***மைந்தர்தம் வயிரத் திண் தோள்***
***தண்டுகள் தழுவும் ஆசைப்***
***புனற் கரை சார்கின்றாரும்;***

***வண்டுளர் கோதை மாதர்*** - *வண்டுகள் ஒலிக்கின்ற மலர்மாலை யணிந்த மகளிர்;* ***மைந்தர்தம் வயிரத் திண்தோள்*** - *ஆடவர்களின் வயிரம்போல் வலிமை பொருந்திய திண்ணிய தோள்கள் என்னும்;* ***தண்டுகள் தழுவும் ஆசை*** - *(கடைந்தெடுத்த அழகு பொலியும்) தண்டாயுதங்களை (தோள்களை) ஆசையோடு தழுவிக்கொண்டு;* ***விண்தொடர் வரையின் வைகும்*** - *வானத்தையளாவுகின்ற மலைகளில் வாழும்;* ***மென்மயில் கணங்கள்போல*** - *மெல்லிய மயில் கூட்டங்கள் செல்வதுபோல;* ***குண்டலம் திருவில் வீச*** - *(செவிகளில் அணிந்த) குண்டலங்கள் வானவில்லினைப்போல் ஒளியுமிழ;* ***குலமணி ஆரம் மின்ன*** - *சிறந்த மணிமாலைகள் மின்னலைப்போல் ஒளிசிந்த;* ***புனல் கரை சேர்கின்றாரும்*** - *நீர்நிலையின் கரைகளை அடைகின்றவர்களும்.*

*புனல் - ஆகுபெயர். திருவில் - வானவில். வரையின் வைகும் மயிற்கணங்கள் போல. தரையின் வைகும் மயிற்கணங்கள் புறப்பட்டன என்பது ஒரு நயம்.*

*938.* ***அங்கு இடை உற்ற குற்றம்***
***யாவது என்று அறிதல் தேற்றாம்;***
***செங் கயல் அனைய நாட்டம்***
***சிவப்பு உறச் சீறிப் போன***
***மங்கை. ஓர் கமலச் சூழல்***
***மறைந்தனள்; மறைய. மைந்தன்.***
***'பங்கயம்'. 'முகம்'. என்று ஓராது.***
***ஐயுற்றுப் பார்க்கின்றானும்;***

***செங்கயல் அனைய நாட்டம்*** - *சிவந்த கயல் போன்ற கண்கள்;* ***சிவப்புறச் சீறிப்போன மங்கை*** - *(முழுதும்) மேலும் சிவப்பேறச் சினந்துபோன ஒரு நங்கை;* ***ஓர் கமலச் சூழல் மறைந்தனள்*** - *தாமரைப் பூக்கள் நிறைந்த ஒரு சூழலில் மறைந்துகொண்டாள்;* ***அங்கு இடைஉற்ற குற்றம்*** - *அங்கே. அவள் சினத்திற்குக் காரணமான பிழை;* ***யாவது என்று அறிதல் தேற்றாம்*** - *எது என்பது எம்மால் அறியக் கூடவில்லை;* ***மறைய மைந்தன்*** - *தாமரைகட்கிடையே. மறைந்த அவளைத் தேடுகிற அவள் கணவன்;* ***பங்கயம் முகம் ஒன்று ஓராது*** - *எது தாமரைப்பூ. எது மங்கையின் முகம் என்று உணர இயலாது;* ***ஐயுற்றுப் பார்க்கின்றானும்*** - *ஐயங்கொண்டு நோக்கியவாறு இருப்பவனும்.*

*அவர்களுக்குள் ஊடலுக்கான காரணங்கள் ஆயிரம் இருக்கலாம்; எது என்று நம்மால் குறிப்பிட்டுக் கூறமுடியாது ஆகையல். "அங்குடை உற்ற குற்றம்யாவது என்று அறிதல் தேற்றாம்" என்று நயந்தோன்றக் கூறினார். இவ்வாறு கவிஞர்பிரான் காவியப் போக்கில். தன்னை இடையிடையே வெளிப்படுத்திக் கொள்ளும் திறன் சுவை பயப்ப தொன்றாகும். தாமரை முகம் எனின். முகத்தை விடத் தாமரை சற்று உயர்ந்ததுதான் என்னும் பொருள்படும். "உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை" (தொல். உவம. 3) என்பர். ஆனால். இங்கே. உவமையும் பொருளும் எள்ளளவும் வேற்றுமையின்றிச் சமமாய் விட்டன; உவமை எது? பொருள் எது? வேற்றுமை தோன்றா நிலை எனக்கூறி மகளிரின் முக வனப்பை உச்சப்படுத்தினார்.*

*"மதியும் மடந்தை முகனும் அறியா. பதியிற் கலங்கிய மீன்" (திருக். 1116) என வள்ளுவக் காதலனும் ஏங்குவான்.*

***939. பொன்-தொடி தளிர்க் கைச் சங்கம்***
***வண்டொடு புலம்பி ஆர்ப்ப.***
***எற்று நீர் குடையும்தோறும். ஏந்து***
***பேர் அல்குல் நின்றும்***
***கற்றை மேகலைகள் நீங்கி.***
***சீறடி கவ்வ. 'காலில்***
***சுற்றிய நாகம்' என்று.***
***துணுக்கத்தால் துடிக்கின்றாரும்.***

***தளிர்க்கைப் பொன்சங்கத்தொடி*** - *தளிர் போன்ற கைகளில் அணிந்த பொன்னாலும் சங்குகளாலும் ஆன வளையல்கள்;* ***வண்டொடு புலம்பி ஆர்ப்ப*** - *(பொய்கையில் ஒலிக்கின்ற) வண்டுகளின் ஒலிகட்கு மாறுபட்டு ஒலிக்க;* ***எற்றும் நீர்குடையும் தோறும்*** - *(அலை) மோதுகின்ற நீரில் மூழ்கும்போதெல்லாம்;* ***ஏந்துபேர் அல்குல் நின்று*** - *உயர்ந்த பெரிய நிதம்பத்திலிருந்து;* ***கற்றை மேகலைகள் நீங்கி*** - *(அலைக்கழிக்கப் பெற்றதனால்) (பல) கோவையாகவுள்ள மேகலையென்னும் இடையணி கழன்று;* ***சீறடி கவ்வ*** - *சிறிய பாதங்களைப் பற்றும் போது;* ***காலில் சுற்றிய நாகம் என்று*** - *பாதங்களைச் சுற்றிக்கொண்ட பாம்பென்று கருதி;* ***துணுக்கத்தால் துடிக்கின்றாரும்*** - *நடுக்கத்தால் துடித்துப் போகின்றவர்களும்.*

*(ஆயினார் என்று கூட்டி. நான்காம் பாடலிலிருந்து வந்த உம் ஈற்று உயர்திணைச் சொற்களை முடித்துக்கொள்க).*

*பொற்றொடி = பொன்+தொடி. இடையணி அறுவதும் தெரியா அளவிற்கு நீர்விளையாட்டு ஆர்வம் மிக்கிருந்தது என்க. நாகம் - பொதுப் பெயராய்ப் பாம்பினைச்சுட்டி நின்றது. பலரும் மூழ்கி எழுவதால் நீர் அலையெறிந்து கொண்டிருந்தது என்பார். 'ஏற்றும் நீர்' என்றார். மேகலை காலில் சுற்றியது ஒருமுறையன்று; பலமுறை என்பார். "நீர் குடையும் தோறும்" என்றார். மேகலை காலில் சுற்றிய ஒவ்வொரு முறையும் காலில் சுற்றியது நாகமே என நினைந்த மகளிர் பேதைமை மிகுதியைச் சுட்டினார். ஒன்றை மற்றொன்றாக நினைத்து மயங்குவதால் மயக்க அணி ஆயிற்று.*

***940.*** **குடைந்து நீராடும் மாதர்**
**குழாம் புடைசூழ. ஆழித்**
**தடம் புயம் பொலிய. ஆண்டு. ஓர்**
**தார் கெழு வேந்தன் நின்றான் -**
**கடைந்த நாள். அமிழ்தினோடும்**
**கடலிடை வந்து தோன்றும்**
**மடந்தையர் சூழ நின்ற**
**மந்தரம் போல மாதோ.**

**கடைந்த நாள் கடலிடை அமிழ்தினோடும் வந்து தோன்றும்** - *திருப்பாற்கடலைக் கடைந்த பொழுது நடுவே அமிழ்தத்தோடும் எழுந்து தோன்றிய;* **மடந்தையர் சூழ நின்ற** - *(அரம்பை. ஊர்வசி. திலோத்தமை முதலிய) தேவ மங்கையர்கள் புடைசூழ விளங்கும்;* **மந்தரம் போல** - *மந்தர மலையைப் போல;* **ஆண்டு. ஆழித் தடம் புயம் பொலிய** - *அவ்விடத்திலே வாகுவலயங்கள் பொருந்திய அகன்ற தோள்கள் அழகுற விளங்க;* **தார்கெழு ஓர் வேந்தன்** - *மாலைகள் நிறைந்த ஒரு மன்னன்;* **நீர் குடைந்து ஆடும் மாதர்குழாம்** - *நீரில் மூழ்கித்திளைத்து ஆடும் மகளிரின் கூட்டம்;* **புடைசூழ நின்றான்** - *(தன்னைச்) சுற்றி நிற்க நின்றான்;* **மாது. ஓ** - *அசைகள் மந்தரம் போலும் ஓர்வேந்தன். மடந்தையர் சூழ நின்றான் என்க. படலத்தின் தொடக்கப் பாடலில் துருவாச முனிவர் சாபத்தால் கடலில் மூழ்கியவர்கட்கு. நீரில் மூழ்கியவரை உவமித்தார். இங்கு. மறவாமல். மூழ்கியவர் எழுந்தமையை வர்ணித்தார். அதே உவமை கொண்டு எழுந்தார் என்றார். நீர் நிலைக்குப்பாற் கடலும். நீர்நிலைக் கண் தோன்றும் தலைவனுக்கு மந்தர மலையும். அவனைச் சூழ்ந்து நின்ற மகளிர்க்கு திருப்பாற் கடலிலிருந்தும் எழுந்த தெய்வ மங்கையரும் உவமம் ஆயினர்.*

***941.*** **தொடி உலாம் கமலச் செங் கை.**
**தூ நகை துவர்த்த செவ் வாய்க்**
**கொடி உலாம் மருங்குல் நல்லார்**
**குழாத்து. ஒரு குரிசில் நின்றான்.-**
**கடி உலம் கமல வேலிக்**
**கண் அகன் கான யாற்று.**
**பிடி எலாம் சூழ நின்ற**
**பெய் மத யானை ஒத்தான்.**

***தொடி உலாம் கமலச் செங்கை*** - *வளைகள் இயங்குகின்ற தாமரை போன்ற சிவந்த கைகளையும்;* ***தூநகை துவர்த்த செவ்வாய்*** - *தூய சிரிப்பையும் மிகச் சிவந்த வாயினையும்;* ***கொடி உலாம் மருங்குல்*** - *கொடிபோல் நெளியும் இடையினையும் உடைய;* ***நல்லார் குழாத்து*** - *மகளிர் கூட்டத்திடையே;* ***நின்றான் ஒரு குரிசில்*** - *நின்றவன் ஆகிய அரசன் ஒருவன்;* ***கடி உலாம் கமல வேலி*** - *மணங்கமழும் தாமரைக் கொடிகளை வேலியாக உடைய;* ***கண்அகல் கானயாற்று*** - *இடமகன்ற காட்டாற்றின் (நடுவே);* ***பிடி எலாம் சூழ நின்ற*** - *பெண்யானைகள் பலவும் (தன்னைச்) சூழ்ந்து நிற்க;* ***மதம் பெய் யானை ஒத்தான்*** - *மதம் பொழிகின்ற ஓர் ஆண் யானையைப் போன்றிருந்தான்.*

*நல்லார் குழாத்து நின்றான் ஒரு குரிசில். பிடியெலாம் சூழ நின்ற மதயானை ஒத்தான் என்று வினை முடிவு செய்க. அப் பெண்டிர் "நல்லார்" என்பதற்கு. "தொடி உலாம் கமலச் செங்கை. தூநகை. துவர்த்த செவ்வாய். கொடி உலாம் மருங்குல்" ஆகியவை காரணங்கள் என்கிறார். நீர்நிலைகாட்டாற்றிற்கும். வளைத்து நிற்கும் மகளிர் பெண் யானைகட்கும். தனித்து நிற்கும் தலைவன் பெண்யானைகளால் சூழப்பட்ட ஆண்யானைக்கும் உவமையாயினர்.*

***942. கான மா மயில்கள் எல்லாம்***
***களி கெடக் களிக்கும் சாயல்***
***சோனை வார் குழலினார்தம்***
***குழாத்து. ஒரு தோன்றல் நின்றான் -***
***வான யாறு அதனை நண்ணி.***
***வயின் வயின் வயங்கித் தோன்றும்***
***மீன் எலாம் சூழ நின்ற***
***விரி கதிர்த் திங்கள் ஒத்தான்.***

***கானமா மயில்கள் எல்லாம்*** - *காட்டில் வாழும் மயில்கள் யாவும்;* ***களிகெடக் களிக்கும் சாயல்*** - *தம் (அழகுச்) செருக்கு அழியுமாறு (கண்டார்) மகிழத்தக்க பொலிவினையுடைய தோற்றம் கொண்ட;* ***சோனைவார் குழலினார்தம் குழாத்து*** - *கார்மேகம் போன்ற கூந்தலினையுடைய மடந்தையர் கூட்டத்தின் இடையே;* ***நின்றான் ஒரு தோன்றல்*** - *நின்றவனான அரசன் ஒருவன்;* ***வானயாறு அதனை நண்ணி*** - *ஆகாய கங்கையை அடுத்து;* ***வயின் வயின் வயங்கித் தோன்றும்*** - *அங்கங்கே ஒளி விளங்கித் தோன்றுகின்ற;* ***மீன் எலாம் சூழ நின்ற*** - *விண்மீன்கள் எல்லாம் சூழ்ந்திருக்க;* ***கதிர் விரி திங்கள் ஒத்தான்*** - *(அவற்றிலும்) ஒளிவிரியத் தோன்றுகின்ற சந்திரனைப் போல இருந்தான்.*

*வான யாறு. நீர்நிலைகட்கும். மகளிர் நட்சத்திரங்கட்கும். அரசன் சந்திரனுக்கும் உவமை. காட்டுமயில்களின் செருக்கையெல்லாம் இந்த வீட்டு மயில்கள் தம் அழகால் அழித்தன என்கிறார். சோனை விடாமழை துளிக்கும் கார்மேகம். அது கருமை மிக்கதாயிருக்குமாதலின் "சோனை வார் குழலினார்" என்றார். "சோனை வார்குழல் கற்றையில் சொருகிய மாலை" (கம்ப. 1491) என்பார் பின்னும். "மீன் எலாம் சூழநின்ற விரிகதிர்த் திங்கள்". "பன்மீன் நடுவண் பான்மதி போல்" (சிறுபாண். 219) எனச் சங்கச் சான்றோராலும் பாடப்பட்டுள்ளது.*

**943.** **மேவல் ஆம் தகைமைத்து அல்லால்.**
**வேழ வில் தடக் கை வீரற்கு**
**ஏ எலாம் காட்டுகின்ற**
**இணை நெடுங் கண் ஓர் ஏழை.**
**பாவைமார் பரந்த கோலப்**
**பண்ணையில் பொலிவாள். வண்ணப்**
**பூ எலாம் மலர்ந்த பொய்கைத்**
**தாமரை பொலிவது ஒத்தாள்.**

**மேவல் ஆம் தகைமைத்து அல்லால்** - (காண்பாரால்) விரும்பப்படும் தன்மையைப் பெற்றிருப்பது மட்டும் அல்லாமல்; **வேழவில் தடக்கை வீரற்கு** - கரும்பு வில்லை அகன்ற கையில் ஏந்திய (மா) வீரனாகிய மன்மதனுக்கு; **ஏ எலாம் காட்டுகின்ற** - கைக்கொள்ளும் அம்புகள் யாவும் உவமையால் தன்னிடம் கொண்டு நிற்கின்ற; **இணை நெடுங்கண் ஓர் ஏழை** - இரண்டு நீண்ட கண்களையுடைய மடந்தை ஒருத்தி; **பாவை மார் பயந்த** - பணிப்பெண்கள் செய்த அலங்காரத்தால் விளங்கும் இவள்; **கோலப் பண்ணையில்** - அழகினையுடைய மகளிர் கூட்டத்தின் இடையே (தனித்து); **பொலிவாள்** - விளங்குபவளாய்; **வண்ணப் பூவெலாம் மலர்ந்த பொய்கை** - அழகிய (குவளை. நெய்தல் முதலிய) பூக்கள் எல்லாம் மலர்ந்துள்ள பொய்கையில்; **தாமரை பொலிவது ஒத்தாள்** - (ஒரு) தாமரைப்பூ (தனித்து) விளங்குவதைப் போன்றிருந்தாள்.

பூவெனப் படுவது பொறிவாழ் பூவே யாதலின் மலர்களின் அரசியாய்த் தாமரை விளங்குவதுபோல. மகளிரின் அரசியாய் இவள் விளங்கினாள் என்க. "ஒரு தனியோங்கிய திருமலர் போன்று......(மணிமே. 15.75-77). ஏ: அம்பு. பண்ணை - மகளிர் கூட்டம்.

அருவமாய் உருவமற்ற மனத்தையும் எய்ய வல்ல மன்மதனுக்கும் அம்புகளை வழங்கவல்ல கண்களையுடையாள் என வியந்து கூறினார். மும்மூர்த்திகளையும் துணைதேட வைத்தவன் ஆதலின் மன்மதனை. "வீரன்" என்றார். உருவுடன் இயைந்த போது சிவபிரானையும். உருவிலியான போது உலகோரையும் வயப்படுத்தும் வீரன் அவன் என்க.

மேல் மூன்று பாடல்களிலும். மகளிர் சூழ நின்ற ஆடவரை வர்ணித்த கவி. இப்போது பெண்டிர் சூழ பெண்ணை வருணித்தவாறு.

***944. மிடலுடைக் கொடிய வேலே என்ன***
***வாள் மிளிர்வது என்ன.***
***சுடர் முகத்து உலவு கண்ணாள்.***
***தோகையர் சூழ நின்றாள்;***
***மடலுடைப் போது காட்டும்***
***வளர் கொடி பலவும் சூழ.***
***கடலிடைத் தோன்றும் மென் பூங்***
***கற்பக வல்லி ஒத்தாள்.***

***மிடல் உடைக் கொடிய வேலே என்ன*** - *(ஆடவர் நெஞ்சில் ஊடுருவலில்) வலிமையுடைய கொடிய வேலே போன்று;* ***வாள் மிளிர்வது என்ன*** - *(ஒளிர்வதில்) வாள் (ஒன்று) மின்னுவதே போன்று;* ***சுடர்முகத்து உலாவு கண்ணாள்*** - *ஒளிர்கின்ற முகத்திலே உலாவுகின்ற இருகண்களையுடையவளாய்;* ***தோகையர் சூழ நின்றாள்*** - *மயில் அனைய மகளிர் சூழ்ந்து நிற்க (இடையே) நின்ற ஒருத்தி;* ***மடல்உடைப் போது காட்டும்*** - *இதழ்களையுடைய மலர்களைத் தோற்றுவிக்கும்;* ***வளர்கொடி பலவும் சூழ*** - *வளர்ச்சியுடைய கொடிகள் பலவும் சூழ்ந்திருக்க;* ***கடலிடைத் தோன்றும்*** - *திருப்பாற் கடலிலிருந்து வெளிவந்த;* ***மென்பூங் கற்பக வல்லி ஒத்தாள்*** - *மெல்லிய மலர்களைக்கொண்ட கற்பக வல்லியே போன்றிருந்தாள்.*

*மண்ணகத்து மலர்க் கொடிகளுக்கிடையே. விண்ணகத்து படர்கொடிகளாய் மகளிரிடையே அவள் விளங்கினாள் என்பதாம். கற்பகவல்லி - வான் உலகக் கற்பகத்தருவில் படரும் கொடி. ''வேலே என்னலாய்'' என்றும் பாடம். வேல். மகளிர் கண்ணிற்கு உவமை யாதல்: ''ஒக்கிய முருகன் கைவேல் ஓர் இரண்டு அனைய கண்ணாள்'' (சீவக. 129) வேல். மகளிரின் நேரான பார்வைத்தாக்கிற்கும். வாள். பக்கங்களில் சுழன்று வீசும் தாக்கிற்கும் உவமையாம். இக்கண்களால் முகம் ஒளிபெறுகிறது என்பார். ''சுடர் முகத்து உலவு கண்ணாள்'' என்றார். தோகையர் பலரும் சூழநின்ற அவளுக்கு. கொடிகள் பல சூழநின்ற கற்பக வல்லி - இல்பொருள் உவமையாம்.*

***945. தேரிடைக் கொண்ட அல்குல்.***
***தெங்கிடைக் கொண்ட கொங்கை.***
***ஆரிடைச் சென்று கொள்ள***
***ஒண்கிலா அழகு கொண்டாள்.***
***வாரிடைத் தனம் மீது ஆட***
***மூழ்கினாள்; வதனம். மை தீர்***
***நீரிடைத் தோன்றும் திங்கள்***
***நிழல்என. பொலிந்தது அன்றே!***

**தேர் இடைக் கொண்ட அல்குல்** - தேரிடத்திலிருந்து பெற்ற அல்குலையும்; **தெங்கு இடைக் கொண்ட கொங்கை** - தென்னையிலிருந்து பெற்ற தனங்களையும்; **ஆர் இடைச் சென்றும்** - எவரிடத்திற்சென்றாலும்; **கொள்ள ஒண்கிலா அழகு** - பெற இயலாத அழகினையும்; **கொண்டாள்** - கொண்டிருப்பவளும்; **வார் இடைத் தனம்** - கச்சையணிந்த தனங்கள்; **மீது ஆட மூழ்கினாள்** - மேலே ததும்ப மூழ்கினவளும் ஆகிய ஒருத்தியின்; **வதனம்** - முகமானது; **மைதீர் நீரிடைத்தோன்றும்** - (தூய) நீரிலே (தெளிவுறத்) தோன்றுகின்ற; **திங்கள் நிழல்எனத் தோன்றிற்று** - சந்திரனுடைய பிம்பம் போல் விளங்கியது.

நிதம்பத்திற்கும் தனத்திற்கும் தேர்த்தட்டும் குரும்பையும் உவமைகள் ஆதலால். "தேரிடைக்கொண்ட அல்குல். தெங்கிடைக் கொண்ட கொங்கை" என்றார். உவமையணி. மேலும் "மின் வயின் மருங்குல் கொண்டாள் வேய் வயில் மென்தோள் கொண்டாள். பொன் வயின் மேனி கொண்டாள்". (கம்ப. 3133) என்பார். யாரிடத்திருந்தும் இனிப்பெற வேண்டாது எல்லா அழகும் தன்னிடத்திலேயே நிறைந்த தன் நிறைவு நிலையடைந்தவள் என்பார். "ஆரிடைச் சென்றும் கொள்ள ஒண்கிலா அழகு" என்றார். மூழ்கும் அழுத்தத்தால். கச்சிலிருந்தும் வெளியேறி மேலிருந்தது தனம் என்பார். "வாரிடைத் தனம். மீது ஆட மூழ்கினாள்" என்றார். வான்நோக்கியவாறு நீருள் மூழ்கியிருப்பாள் அங்கங்களை வருணித்த கவிஞர். இறுதியாக முகத்தை நீரில் மூழ்கிக் கிடந்த சந்திரபிம்பம் என்றார்.

நீராடிய பொய்கையும் பூம்புனலும்

கலிவிருத்தம்

946. **மலை கடந்த புயங்கள். மடந்தைமார்**
**கலை கடந்து அகல் அல்குல். கடம் படு**
**முலைகள். தம்தமின் முந்தி நெருங்கலால்.**
**நிலை கடந்து பரந்தது. நீத்தமே.**

**மலை கடந்த புயங்கள்** - மலைகளையும் (வலிமையில்) வென்ற (ஆடவரின்) தோள்களோடு; **கலைகடந்து அகல் மடந்தைமார் அல்குல் கடம்படு முலைகள்** - ஆடைக்குள் அடங்காமல் அகன்றுள்ள பெண்டிரின் அல்குலும். குடங்களைப் போன்ற (அவர்) தனங்களும்; **தந்தமில் முந்தி** - ஒன்றுக்கொன்று முந்தி; **நெருக்கலால்** - மோத முற்படுவதால்; **நீத்தம் நிலைகடந்து பரந்தது** - (நீர்நிலையிலுள்ள) வெள்ளம் தன் நிலையைக் கடந்து (வெளியே) வழியில் ஆயிற்று.

புயங்கள் - புயங்களோடு - மூன்றன் தொகை. கொள் அளவிற்கு மேல் பொருள்களை இட்டால் நீர் வழிவது இயல்பு. இங்குக் கூறிய மூன்று உறுப்புக்களும் அளவிற் பெரியன எனக் கூறுதல் கவிமரபு ஆதலின். அவை மூன்றும் ஒன்றாய் நெருக்குதலின் "நிலை கடந்து பரந்தது நீத்தம்" என்றார். நீத்தம் - வெள்ளம்; அது இங்கு நீர் என்னும் அளவில் நின்றது. வழிந்தோடும் மிகுதியும் வேகமும் கொண்டு வெள்ளம் என்றார் எனினுமாம். "மலை கடந்த புயம்" என்பதனை மலைகள் தந்த புயம் எனக் கொள்ளினும் அமையும்.

***947. செய்ய வாய் வெளுப்ப. கண் சிவப்புற.***
***மெய் அராகம் அழிய. துகில் நெக.***
***தொய்யில் மா முலை மங்கையர் தோய்தலால்.***
***பொய்கை. காதல் கொழுநரும் போன்றதே!***

**செய்ய வாய் வெளுப்ப** - *சிவந்த வாய்கள் வெண்மை நிறம் அடையுமாறும்;* **கண் சிவப்புற** - *(கருங்) கண்கள் சிவப்பு நிறம் பெறவும்;* **மெய் அராகம் அழிய** - *உடலிற் பூசியிருந்த சந்தனம் அழிந்து போகுமாறும்;* **துகில் நெக** - *(அரை) ஆடை தளர்ந்து போகுமாறும்;* **தொய்யில் மாமுலை மங்கையர்** - *(சந்தனம். குங்குமம் முதலியவற்றால்) கோலங்கள் எழுதிய பெரிய தனங்களையுடைய பெண்டிர்;* **தோய்தலால்** - *தோய்வதற்கு இடமாய் இருத்தலால்;* **பொய்கை** - *அந்த நீர்நிலை;* **காதற் கொழுநரும் போன்றது** - *இவ்வகையில் செய்யவல்ல காதல் (மிக்க) கணவனையும் ஒத்ததாய் ஆயிற்று.*

*கருங்கண் சிவப்ப. கனிவாய் விளர்ப்பக் கண்ணார் அளி பின்வருங் கண்மலைமலர் சூட்டவற்றோ? (திருக்கோவை 70) என்பர் வாதவூரர். "வாயின் சிவப்பை விழிவாங்க. மலர்க் கண்வெளுப்பை வாய்வாங்கத் தோயும் கலவி" (கலிங் கடை. 41) என்பார் சயங்கொண்டாரும். தோய்தல் - மூழ்குதல். புணர்தல் எனும் இருபொருளும் தருவது. காதலரைக் கூடுகையில் மகளிர்வாய் வெளுத்தலும். விழி சிவத்தலும். மணப்பூச்சுகள் அழிதலும். ஆடை குலைதலும் இயல்பாதலின். இச்செய்கைகள் பொய்கையிலும் நிகழ்தலின். பொய்கையும் இவை செய்த காதல் கொழுநன் போன்றாயிற்று. சந்தனத்தை. வடமொழியில் அங்கராகம் என்பராதலின். அதனைத் தமிழாக்கி. மெய்யராகம் என்றார். தொய்யில் - மார்பில் மணப்பொருள்களால் வரையும் வரிக்கோலம். சிலேடையணி.* *19*

***948. ஆன தூயவரோடு உடன் ஆடினார்***
***ஞான நீரவர் ஆகுதல் நன்றுஅரோ! -***
***தேனும். நாவியும். தேக்கு. அகில் ஆவியும்.***
***மீனும். நாறின; வேறு இனி வேண்டுமோ?***

**ஆன தூயவரோடு** - *தூய்மையான ஞானியரோடு;* **உடன் ஆடினார்** - *கூடியிருந்து பழகியவரும்;* **ஞான நீரவர் ஆகுதல் நன்று** - *நல்ல ஞான குணத்தையுடையவர் ஆவது தக்கது. (அதுபோல);* **மீனும்** - *(அம்மகளிர் நீராடிய நீர்நிலைகளில் உள்ள) மீன்களும்;* **தேனும் நாவியும் தேக்கு அகில் ஆவியும் நாறின** - *தேன் மணமும். கத்தூரி மணமும். தேக்கின் புகை மணமும் அகிலின் புகை மணமும் வீசல் ஆயின;* **வேறு இனி வேண்டுமோ?** *(இக்கருத்தை விளக்க) வேறு உவமையும் இனிவேண்டுமோ? (வேண்டா என்க.)*

*அரோ - அசை - வேற்றுப் பொருள் வைப்பணி. "தெருண்ட மேலவர். சிறியவர்ச் சேரினும் அவர்தம் மருண்ட தன்மையை மாற்றுவர்" (கம்ப.) என முன்பும் கூறினார். பெரியோர் சிறியோரைச் சேரின். சிறியோரைப் பெரியோர் ஆக்க வேண்டும்; அவரே பெரியோர். "கல்லாரே யாயிடினும் கற்றாரைச் சேர்ந்தக்கால் நல்லறிவு நாளும் தலைப்படுவர்" (நாலடி.) "செய்யரைச் சேர்ந்துள்ளோரும் செய்யராய்த் திகழ்வர் அன்றே" (கம்ப. 1125). "கலக்கினும் தண் கடல் சேறாகாது" (நறுந் தொகை) என்பனவும் காண்க. கெட்ட மணம் போகாத இயல்புடைய ஒரு பொருள் (மீன்) அக்கெட்ட மணமும் போய் நன்மணமும் பெற்றது எனக் கூறி. அம்மகளிரின் மேனிச் சிறப்புக் கூறியவாறு. "முறிமேனி. முத்தம். முறுவல். வெறி நாற்றம். வேல் உண்கண். வேய்த் தோளவட்கு" (திருக். 1113) என்பான் வள்ளுவக் காதலனும்.*

***949. மிக்க வேந்தர்தம் மெய் அணி சாந்தொடும்***
***புக்க மங்கையர் குங்குமம் போர்த்தலால்.***
***ஒக்க. நீல முகில்தலை ஓடிய***
***செக்கர் வானகம் ஒத்தது. அத் தீம் புனல்.***

*மிக்க வேந்தர் தம்* - மிகுதியாக வந்த வேந்தர்களுடைய; **மெய் அணி சாந்தொடும்** - உடம்பில் அழகு செய்த செஞ் சந்தனக் குழம்போடும்; ***புக்க மங்கையர்*** - அவ்வேந்தரோடு வந்த மங்கையருடைய; **குங்குமம் போர்த்தலால்** - குங்குமக் குழம்பும் (தன்னிடத்தே) நிரம்பியதனால்; ***அத் தீம் புனல்*** - அந்த இனிய நீர் வெள்ளம்; ***நீல முகில் தலை ஒக்க ஓடிய*** - கருநிற மேகங்களில் ஒரு சேரப் பரவிய; ***செக்கர் வானகம் ஒத்தது*** - செவ்வானத்தைப் போன்றது ஆயிற்று.

*சார்ந்ததன் வண்ணம் ஆதல் உயிர்க்கு இயல்பு என்பர்; இங்கு நீர்க்கும் இயல்பு ஆயிற்று எனச் சுவையுறக் கூறினார். ஒக்க ஓடிய எனக் கூட்டுக. நீர். நீல வானிற்கும். மகளிர் மைந்தர் நீராடலால் கரைந்து கலந்த செஞ்சாந்தும் குங்குமமும் அந்திச் செவ்வான மேகத்திற்கும் உவமைகள் ஆயின. 21*

***950. காகதுண்ட நறுங் கலவைக் களி.***
***ஆகம் உண்டது. அடங்கலும் நீங்கலால்.***
***பாகு அடர்ந்த பனிக் கனி வாய்ச்சியர்.***
***வேகடம் செய் மணி என. மின்னினார்.***

***ஆகம் உண்டது*** - உடம்பிற் பூசப் பெற்ற; ***காக துண்ட நறுங் கலவைக் களி*** - அகிலோடு சேர்ந்த நறுமணமுடைய சந்தனக் குழம்புகள்; ***அடங்கலும் நீங்கலால்*** - (நீரில் மூழ்கியாடலால்) முழுவதும் அழிந்துவிட்ட படியால்; ***பாகு அடர்ந்த பனிக்கனி வாய்ச்சியர்*** - பாகின் இனிமை மிக்க. குளிர்ந்த கொவ்வைக் கனி போன்ற வாயினையுடைய அம்மகளிர்; ***வேகடம் செய் மணி என மின்னினார்*** - சாணை பிடிக்கப் பெற்ற மாணிக்கக் கற்களைப் போல் விளங்கினர்.

*காக துண்டம் - அகில். "ஏந்து எழிற் காக துண்டம்" (சூளா. சீய. 105) என்பர். மகளிர் அங்கங்களின் இயற்கை யழகினை மறைத்திருந்த செஞ்சாந்து முதலிய மணப் பொருள்கள் நீரில் குளித்தெழுகையில் அழிந்து போய் விட்டதனால் அப் பெண்டிர் சாணை பிடித்தெடுத்த இரத்தினங்கள் போல் விளங்கினர் என்று அழகுற வருணித்தார்.*

***951. பாய் அரித் திறலான் பசுஞ் சாந்தினால்***
***தூய பொன்-புயத்துப் பொதி தூக் குறி***
***மீ அரித்து விளர்க்க ஓர் மெல்லியல்***
***சேயரிக் கருங் கண்கள் சிவந்தவே.***

***பசுஞ் சாந்தினால்** - ஈரம்மிக்க சந்தனக் குழம்பினால்; **பாய் அரித்திறலான்** - பாயும் சிங்கத்தினைப் போன்ற ஆற்றல் மிக்கான் ஒருவனுடைய; **தூய பொன் புயத்து** - தூய்மையுடைய பொன் அணிகள் பூண்ட தோள்களிலே; **பொதி தூக் குறி** - தான் எழுதிய தூய தொய்யில் கோலம்; **மீ அரித்து விளர்க்க** - (நீர்) மேலே பட்டு அழிந்துவிட்டதனாலே (தோள்) இயல்பான நிறம்பெற; **ஓர் மெல்லியல்** - அது கண்டு ஒரு மென்மைத் தன்மை கொண்ட ஒருத்தியின்; **சேய் அரிக் கருங் கண்கள் சிவந்த** - செவ்வரி படர்ந்த கருங் கண்கள் (சினத்தால்) சிவந்து போயின. தான் புனைந்த கோலம் அழிந்தது நீரால் என நினையாது. இன்னொருத்தியின் தோய்வால் என நினைந்து அவள் வெகுண்டாள் என்க. ஆடவனின் தோள்களில் இருந்த செஞ்சாந்துக் குழம்பு நீங்க இவள் கருங்கண்கள் சிவப்பாயின என நயந் தோன்றக் கூறினார். தான் தொடும் மார்பு; இதுவரையிலும் யாரும் தொடாதது. தான் பொன் போல் பாதுகாத்து வருவது என்பாள். "தூய பொன் புயத்து" என்றாள். இத்தகைய தன் பொற் புதையலை யார் தொட்டார் என்பதே கருங்கண்கள் சிவக்கக் காரணம். தூக்குறி மீ அரித்து விளர்க்க. கண்கள் சிவந்த(ன) என முடிக்க.* 23

***952. கதம்ப நாள் விரை. கள் அவிழ் தாதொடும்***
***ததும்பு. பூந் திரைத் தண் புனல் சுட்டதால்-***
***நிதம்ப பாரத்து ஓர் நேரிழை. காமத்தால்***
***வெதும்புவாள் உடல். வெப்பம் வெதுப்பவே!***

***காமத்தால் வெதும்புவாள்** - காம வெப்பத்தால் வெதும்புகின்றவளும்; **நிதம்ப பாரத்து ஓர் நேரிழை** - நிதம்பச் சுமையைத் தாங்கியவளும் அழகிய அணிகளை அணிந்தவளும் ஆன ஒருத்தியின்; **உடல் வெப்பம் வெதுப்ப** - உடம்பின் (காம) தாபம் சுட்டதனால்; **கதம்ப நாள் விரை கள்ளவிழ் தாதொடு** - பல்வகை மணப்பொடிகள் கொண்டவையும். அன்று மலர்ந்தவையும் மணங் கூடியனவுமாகி. தேன் சிந்தும் மகரந்தங்களோடும்; **ததும்பு பூ** - நிரம்பியுள்ள மலர்களைக் கொண்ட; **திரைத் தண்புனல்** - அலையடிக்கும் (அந்தக்) குளிர்ந்த நீர்த் தடாகமும்; **சுட்டது** - வெப்பம் மிக்கதாய்ச் சுட்டது.*

*நேரிழை: அன்மொழித் தொகை. "நீருட் குளிப்பினும் காமம் சுடும்; குன்றேறி ஒளிப்பினும் காமம் சுடும்" (நாலடி. 90). ஆதலால். மலர்களால் குளிர்ந்த ஒரு பெரும் நீர்த்தடாகம். ஒருத்தி வெப்பத்தால் கொதித்தது எனக் காம நெருப்பின் தீமை தெரிவித்தவாறு. காமத்தைத் தீ எனக் கூறுதல் மரபு. "நீங்கில் தெறூஉம். குறுகுங்கால் தண் என்னும் தீ யாண்டுப் பெற்றாள் இவள்?" (திருக். 1104) என்பார் வள்ளுவனாரும்.*

***953. தையலாளை ஒர் தார் அணி தோளினான்.***
***நெய் கொள் ஓதியின் நீர் முகந்து எற்றினான்-***
***செய்ய தாமரைச் செல்வியை. தீம் புனல்.***
***கையின் ஆட்டும் களிற்று அரசு என்னவே!***

***செய்ய தாமரைச் செல்வியை*** *- சிவந்த தாமரையில் உறையும் திருமகளை;* ***கையின் தீம்புனல் ஆட்டும்*** *- (தன்) கையினால் இனிய நீரை (மொண்டு நீர் ஆட்டும்);* ***களிற்றரசு என்ன*** *- ஆண் யானைகளின் அரசைப் போல;* ***ஓர் தாரணி தோளினான்*** *- மலர்மாலை யணிந்த தோளுடையான் ஒருவன்;* ***நீர் முகந்து*** *- தண்ணீரை மொண்டு;* ***தையலாளை நெய் கொள் ஓதியில்*** *- ஒருத்தியினுடைய நெய் பூசிய கூந்தலில்;* ***எற்றினான்*** *- வீசினான்.*

*உவமையணி: திருவை யானை நீராட்டுதல். "வரிநுதல் எழில் வேழம் பூ நீர் மேற் சொரி தரப் புரிநெகிழ் தாமரை மலர் அங்கண் வீறெய்தித் திருநயந்து இருந்தென்ன" (கலி. 47:5-7). எதிர் நின்று தன் இரு கைகளாலும் நீர் முகந்து தன் காதலியின் முடிமேல் நீர் சொரிவது திருமகள் இருமருங்கும் இரு யானைகள் தம் கைகளால் நீர் சொரிவது போன்றிருந்தது எனும் கற்பனையால். காதலனின் தோள் அகலும் அத் தோள்களுக்கிடையே கொடி போன்றுள்ள அவள் வடிவமென்மையும் தெய்வத்தன்மை தோற்றுவிக்கும் அவள் பேரழகும் சுட்டினார் இக் கோலமே கஜலட்சுமி சிற்பங்களாய் இன்று காணப்படும்.*

***954. சுளியும் மென் நடை தோற்க நடந்தவர்***
***ஒளி கொள் சீறடி ஒத்தன ஆம் என.***
***விளிவு தோன்ற. மிதிப்பன போன்றன-***
***நளினம் ஏறிய நாகு இள அன்னமே.***

***நளினம் ஏறிய*** *- தாமரை மலர்கள் மேல் ஏறியிருந்த;* ***நாகு இள அன்னம்*** *- மிக்க இளமை வாய்ந்த அன்னப் பறவைகள்;* ***சுளியும் மென் நடை*** *- (நாம்) பகைக்குமாறு. நம் மெல்லிய நடையினையும்;* ***தோற்க நடந்தவர்*** *- தோற்றுப் போம்படி நடக்கின்ற இம்மகளிரின்;* ***ஒளி கொள் சிறுஅடி ஒப்பன ஆம் என*** *- ஒளியுடைய சிறிய அடிகளை (இவை) ஒத்திருக்கின்றனவாம் என்று எண்ணியதனால்;* ***விளிவு தோன்ற*** *- (தம் மனத்திலுள்ள) கடுங்கோபம் வெளிப்படுமாறு;* ***மிதிப்பன போன்றன*** *- (அத் தாமரை மலர்களைத் தம் கோபம் தீர) காலால் மிதிப்பவற்றைப் போன்றிருந்தன.*

*பகைவரை வெல்ல இயலாது போயின். அவரோடு தொடர்புடையாரையும் வெறுத்து ஒறுக்கும் மன இயல்பினையுணர்ந்த கவிஞர் தம்மை நடையழகால் வென்ற மகளிர்க்குத் தாம் இயற்றலாகும். தீமை ஒன்றும் இல்லாமையால். அன்னப் பறவைகள் அம்மகளிரின் அடியிணைகளை ஒத்த தாமரை மலர்களைத் தம் ஆத்திரம் தீர மிதிப்பன போலத் தாமரை மலர்கள் மேலிருந்து தம் கால்களால் மிதித்தன என்றார் - தற்குறிப்பேற்ற அணி.*

ஆடவர் வேட்கை

***955. எரிந்த சிந்தையர். எத்தனை என்கெனோ?***
***அரிந்த கூர் உகிரால் அழி சாந்து போய்.***
***தெரிந்த கொங்கைகள். செவ்விய நூல் புடை***
***வரிந்த பொற் கலசங்களை மானவே!***

***அழி சாந்து போய்*** *- (நீர் விளையாட்டால் பூசிய) சந்தனம் அழிந்து போய்;* ***அரிந்த கூர் உகிரால்*** *- அரிந்த கூரிய நகக் குறிகளோடு;* ***தெரிந்த கொங்கைகள்*** *- தோன்றிய (மகளிரின்) தனங்கள்;* ***செவ்விய நூல்புடை வரிந்த*** *- அழகிய நூல்களைப் பக்கங்களில் சுற்றியுள்ள;* ***பொன் கலசங்கள் மான*** *- பொற்குடங்களை ஒத்திருக்க;* ***எரிந்த சிந்தையர்*** *- (அது கண்டு) மனம் கொதித்த ஆடவர்கள்;* ***எத்தனை என்கெனோ?*** *- எத்தனை பேர் (நான்) சொல்ல வல்லனோ? (வல்லேன் அல்லேன்)*

*உகிர்: நகம். நகக்குறியைக் குறித்தது - ஆகுபெயர். நூலைப் பக்கங்களில் சுற்றிய கலசங்கள் வேள்விக்குரியனவாதலால் மைந்தர்க்குக் காம வேள்வி நினைவுக்கு வந்தது. நகக் குறி கீறல்கள் பட்ட தனங்கள். வேள்விக்கு நூல் சுற்றிய பொற் குடங்கள் போல். நீராடலால் சந்தனம் கரைந்த போது காட்சிப்பட்டதால். காம வேள்வியின் கனல்பற்றி எரிந்த சிந்தையர் எத்தனைபேர் என எண்ண இயல்வில்லை என வியந்தார். சந்தனங் கரைந்தது மகளிர் மார்பில் அதனால். எரிய வேண்டியதோ அம்மகளிர் மார்பு. எரிவதோ மைந்தர் மார்பு! என்ன விந்தை இது! என வியக்க வைக்கிறார்.*

***956. தாழ நின்ற ததை மலர்க் கையினால்.***
***ஆழி மன் ஒருவன் உரைத்தான்; அது***
***வீழியின் கனிவாய் ஒரு மெல்லியல்.***
***தோழி கண்ணில். கடைக்கணிற் சொல்லினாள்.***

***ஆழி மன் ஒருவன்*** *- ஆணைச் சக்கரம் செலுத்தவல்ல மன்னன் ஒருவன்;* ***தாழ நின்ற ததைமலர்க் கையினால்*** *- மிக நீண்டு நின்ற இதழ்கள் செறிந்த தாமரை மலர் போன்ற (தன்) கைகளினால்;* ***உரைத்தான்*** *- (நாம் எங்கே; எப்போது மீண்டும் சந்திப்பது என்று) சைகையால் கேட்டான்;* ***வீழியின் கனிவாய் ஒரு மெல்லியல்*** *- வீழிப் பழம் போன்ற வாயினையுடைய மெல்லியலாள் ஒருத்தி;* ***தோழி கண்ணில் கடைக் கண்ணில் சொல்லினாள்*** *- தோழியின் கண்மூலமாகக் கடைக் கண் சாடையினால் (அவனுக்குப்) பதில் அறிவித்தாள்.*

*ஆடவனாகிய அவனைப் போலச் சைகையால் நேரடியாகப் பதில் இறுத்தல். உயர் குடிப்பெண்மைக்குச் சிறப்பு அன்று ஆதலின். தோழி கண்ணுக்கு இவள் கண்ணால் சொல்ல. அவள் அவனுக்குத் தன் கடைக் கண்ணால் தெரிவித்தாள் என்க. காதல் உலகில். நயன மொழியின் பெரும்பங்கு தெரிவித்தவாறு "சிறு நோக்கம் காமத்தின் செம்பாகம் அன்று பெரிது" திருக். ) "பெண்ணினால் பெண்மையுடைத்தென்ப கண்ணினால் காமநோய் சொல்லி இரவு" (திருக். 1280) எனும் அருமைக் குறள்கள் ஒப்பிடத்தக்கன. "காதன்மை கண்ணுளே அடக்கிக் கண் எனும். தூதினால் துணி பொருள் உணர்த்தித் தான். தமர்க்கு. ஏதின்மை படக் கரந்திட்ட வாட்கண் நோக்கு. ஓதநீர் அமுதமும் உலகும் விற்குமே" (சீவக. 1485) எனும் திருத்தக்க தேவர் வாக்கும் சிந்திக்கற்பாலது.*

***957. தள்ளி ஓடி அலை தடுமாறலால்.***
***தெள்ளு நீரின் மூழ்கு செந்தாமரை.***
***புள்ளி மான் அனையார் முகம் போல்கிலாது.***
***உள்ளம் நாணி. ஒளிப்பன போன்றவே.***

***தள்ளி ஓடி அலை தடுமாறலால்*** *- (நீராடலால் தம் நிலையிலிருந்து) தள்ளப்படுதலால். பரந்து சென்று அலைகள் தடுமாறுவதால்;* ***தெள்ளு நீரின்*** *- தெளிந்த (அந்த நீர் நிலையின்) தண்ணீரில்;* ***மூழ்கு செந்தாமரை*** *- மூழ்கிப் போகின்ற செந்தாமரை மலர்கள்;* ***புள்ளி மான் அனையார்*** *- புள்ளி மானைப் போன்ற அங்குள்ள மகளிருடைய;* ***முகம் போல் கிலாது*** *- முகங்களைப் போன்றிருக்க இயலாமையால்;* ***உள்ளம் நாணி*** *- மனத்திற்குள் வெட்கமுற்று;* ***ஒளிப்பன போன்ற*** *- (நீருக்குள்) மறைவன போன்றன. ஏ-அசை - தற்குறிப்பேற்ற அணி. தள்ளி ஓடி (அலைகள்) ஒன்றையொன்று தள்ளிக் கொண்டு ஓடி எனினுமாம். புனல் ஆடுவார் பலராதலால். அலைகள் எழுவதும் விழுவதுமாகப் பல ஆகின்றன. அதனால். ஆங்குள்ள தாமரைகள் முழுகுவதும் எழுவதுமாகத் தடுமாறுகின்றன. இதனை மனக் கண்ணாற் கண்ட கவி. புள்ளிமான் அனையார் முகம் போல்கிலாதது கண்டு உள்ளம் நாணி ஒளிப்பன போன்றிருந்தன என்று தன் கருத்தையேற்ற அழகூட்டினார் - தற்குறிப்பேற்ற அணி. நீரில் மூழ்கிய தாமரைகள் மீண்டும் வெளிப்படுமாதலின். மூழ்கின போன்றவே என்னாமல் "ஒளிப்பன போன்றவே" என்றார்.*

*நீராடியபின் ஆடையாபரணங்கள் அணிதல்*

***958. இனைய எய்தி இரும் புனல் ஆடிய.***
***வனை கருங் கழல் மைந்தரும். மாதரும்.***
***அனைய நீர் வறிது ஆக வந்து ஏறினார்.***
***புனை நறுந் துகில். பூணொடும் தாங்கினார்.***

**இனைய எய்தி** - இப்படியாக; **இரும்புனல் ஆடிய** - பெரிய (நீர் நிலைகளில்) நீராடிய; **கருங்கழல் வனை** - வலிய (வீரக்) கழல்களைப் பூண்ட; **மைந்தரும்** - ஆடவரும்; **மாதரும்** - பெண்டிரும்; **அனைய நீர்வறிதாக** - தம்மைப் பிரிதலால். அந்த நீர் நிலைகள் 'வெறிச்' சென்று ஆகும்படி; **வந்து ஏறினார்** - (அவற்றை விட்டு) வந்து (கரை) யேறினார்; **புனை நறுந்துகில்** - (தாம்) புனைவதற்குரிய மணமுடைய ஆடைகளை; **பூணொடும்** - அணிகலன்களோடும்; **தாங்கினார்** - அணிந்து கொண்டனர்.

கோசல நாட்டு மக்கள் இருக்குமிடம் எல்லாம் செல்வம் கொழிக்கும் திருவிடம் ஆதலால். அவர்கள் வெளியேறியுடன் பொய்கைகள் வறிதாகிப் போயின என்றார். எங்கும். எதிலும் வளம் செழித்துக் கிடப்பதே கவிஞர் பெரு விருப்பம். ஆதலின். மைந்தரும் மகளிரும் வெளியேறினவுடன் பொய்கை வறிதாகப் போயிற்று என்று கவிஞர் வருந்துகிறார். அவர்கள் நீர் உள்ளிருக்கையில். புனை நறுந்துகிலும் பூண்ட அணிகலன்களும் உள்ளிருந்தன. பொய்கை செல்வம் பூரித்துக் கிடந்தது. அவர்கள் வெளிப்போந்தவுடன் அவையும் வெளியேறின. ஆதலால். "அனைய நீர் வறிதாக வந்து ஏறினார்" என்றார்.

*959.* **மேவினார் பிரிந்தார்; அந்த வீங்கு நீர்.**
**தாவு தண் மதிதன்னொடும் தாரகை**
**ஓவு வானமும். உள் நிறை தாமரைப்**
**பூ எலாம் குடி போனதும். போன்றதே.**

**மேவினார் பிரிந்தார்** - (அந்நீர் நிலையுள்) விருப்பத்தோடு நீர் விளையாடிய ஆடவரும் மகளிரும் (அங்கிருந்து) பிரிந்து சென்றனர்; **அந்த வீங்கு நீர்** - (அதனால்) (நீர்) நிறைந்திருந்த அந்த நீர் நிலையானது; **தாவுதண் மதி தன்னொடும் தாரகை** - தவழ்ந்து செல்லும் குளிர் நிலாவும் விண்மீன்களும்; **ஓவு வானமும்** - விலகிச் சென்று விட்ட ஆகாயத்தையும்; **உள்நிறை தாமரைப் பூ எலாம்** - (தன்)னுள்ளே நிறைந்திருந்த தாமரை மலர்கள் யாவும்; **குடிபோனதும் போன்றது** - வேறிடத்திற்குக் குடி பெயர்ந்து போய்விட்ட பொய்கையையும் போல் ஆயிற்று.

தன்னிடம் நீராட வந்த அழகுபொலியும் கோசலநாட்டு ஆடவராலும் மகளிராலும் தனியழகு பெற்றிருந்த நீர்நிலை. அவர்கள் பெயர்ந்ததனால் விண்மீன்களை இழந்து போன வானத்தையும். தாமரை மலர்களை இழந்துவிட்ட தடாகத்தையும் போலப் பொலிவிழநது போயிற்று என்று ஏங்குகிறார். "மீன் எலாம் சூழ நின்ற விரிகதிர்த் திங்களையும்" "வண்ணப் பூவெலாம் மலர்ந்த பொய்கைத் தாமரையையும்" (கம்ப. 943) உவமித்துள்ளார் ஆதலின். இங்கு. "தண்மதி தன்னொடும். உள்நிறை தாமரைப் பூ எலாம் குடிபோனதும் போன்றது" என்று பொருத்தமுற உவமித்தார். மகளிர் வெளியேற்றத்தைப் "பூவெலாம் குடிபோனது போன்றது" எனல் மகா கவிகட்கே வாய்க்கவல்ல சொல்லாட்சி எனலாம்.

கதிரவன் கடல் புகலும் சந்திரன் எழுச்சியும்

***960. மானின் நோக்கியர் மைந்தரொடு ஆடிய***
***ஆன நீர் விளையாடலை நோக்கினான்;***
***தானும். அன்னது காதலித்தான் என்.***
***மீன வேலையை. வெய்யவன் எய்தினான்.***

***மானின் நோக்கியர்*** - *மான் கண்களை ஒத்த விழிகள் கொண்ட மங்கையர்;* ***மைந்தரொடு ஆடிய*** - *ஆடவரோடு நிகழ்த்திய;* ***ஆன நீர்விளையாடலை*** - *(காணத்)தக்க நீர் விளையாடலை;* ***நோக்கினான் வெய்யவன்*** - *நோக்கினவனான கதிரவன்;* ***தானும் அன்னது காதலித்தான் என*** - *தானும் அந்த நீர் விளையாடல் நிகழ்த்த விரும்பியவனைப் போல;* ***மீன் வேலையை எய்தினான்*** - *மீன்கள் நிரம்பி?யுள்ள (மேலைக்) கடலையடைந்தான்.*

*சிறந்த விளையாடல்களைப் பார்த்தவர்கள். தாமும் அவ்வாடலை ஆட. உடனே மனக்கிளர்ச்சியுறுதல் இயல்பாதலின் அம்மனவியல் உணர்ந்த கவிஞர் கதிரவன் மறைவை இவ்வாறு அணியுறக் கூறினார் - தற்குறிப்பேற்ற அணி. அவர்கள் விளையாடியது நீர் விளையாட்டே ஆதலின் தானும் அந்நீர் விளையாட பெரு நீர் நிலையமாகிய கடலில் கதிரவன் இறங்கினான்.*

***961. ஆற்றல் இன்மையினால் அழிந்தேயும். தம்***
***வேற்று மன்னர்தம்மேல் வரும் வேந்தர்போல்.***
***ஏற்று மாதர் முகங்களொடு எங்கணும்***
***தோற்ற சந்திரன். மீளவும் தோற்றினான்.***

***ஆற்றல் இன்மையினால் அழிந்தேயும்*** - *(தம் பகை மன்னரை வெல்ல) வலிமையில்லாமையால் (முன்பு) தோற்றுப் போயிருந்தும்;* ***தம் வேற்று மன்னர் தம்மேல்*** - *தம்முடைய பகையரசர் மேல்;* ***வரும் வேந்தர் போல்*** - *(மீண்டும் போரிடத் துணிவுபெற்று) வருகின்ற மன்னரைப் போல;* ***எங்கணும் மாதர் முகங்களொடு ஏற்று*** - *எல்லா இடத்தும். (கோசல நாட்டு) மங்கையர் முகங்களோடு எதிர்த்து;* ***தோற்ற சந்திரன் மீளவும் தோற்றினான்*** - *(முன் நிற்க இயலாமல்) தோல்வி எய்தி (மறைந்து போன) திங்கள் (கீழ்வானில்) மீண்டும் தோன்றினான்.*

*அம் மகளிர் முகத்திற்கு முன்பே பலமுறை தோன்றிப் பலமுறை தோற்றுப் போனவன் சந்திரன்; மீண்டும் தோன்றியுள்ளான். இப்போதும் வெல்லப் போவதில்லை. சிலருக்குத் தோல்வி. எந்தப் பாடத்தையும் தோற்றுவிப்பதில்லையோ? என்பார். ''தோற்ற சந்திரன் மீளவும் தோற்றினான்'' என்றார். ஆற்றல் இன்மையினால் தோல்வியால் அழிந்து போன மன்னர்கள். மீண்டும் மீண்டும் படை திரட்டி மீண்டும் மீண்டும் தோற்றுக் கொண்டிருப்பது இயல்பு.*

## உண்டாட்டுப் படலம்

*தசரதனது சேனை மதுவினை உண்டு மகிழ்ந்தாடுகிற நிகழ்ச்சிகள் கூறும் பகுதி:*

*நிலா எழுந்ததால் அதன் தண் ஒளி எங்கும் பரவுகிறது. அத் தண்ணொளியில் காமனின் ஆட்சி விரவுகிறது. மகளிர் மதுவினைப் பருகிக் காமத்தழலுக்கு நெய் வார்க்கின்றனர். மது மயக்கம் பல மயக்கங்கட்குக் காரணம் ஆகிறது. ஊடலும் கூடலுமாக இரவு கோலாகலமாகக் கழிகிறது. திங்கள் மறைகிறான். காலைக் கதிரவன் எழுகிறான்.*

*எங்கு நிலாப் பரந்து பெருகிய தோற்றம்*

***962. வெண் நிற நறை நிறை வெள்ளம் என்னவும்.***
***பண் நிறம் செறிந்து இடை பரந்தது என்னவும்.***
***உள் நிறை காமம் மிக்கு ஒழுகிற்று என்னவும்.***
***தண் நிறை நெடு நிலாத் தழைத்தது. எங்குமே.***

***வெண் நிற நறைநிறை*** *- வெண்மையான நிறமுடைய கள்ளின்;* ***வெள்ளம் என்னவும்*** *- நிறைந்த வெள்ளம் (பெருகியது) போலவும்;* ***பண்நிறம் செறிந்து இடை பரந்தது என்னவும்*** *- இசையானது வடிவம் பெற்று உலகத்தில் இடையே பரவியது போலவும்;* ***உள் நிறை காமம் மிக்கு ஒழுகிற்று என்னவும்*** *- (எல்லா உயிர் இனங்களின்) உள்ளத்துள்ளே நிரம்பிய காமம் (உள்அடங்காமையால்) மிகுதிப்பட்டு வெளியிலே ஒழுகினாற் போலவும்;* ***தண்நிறை நெடுநிலாத் தழைத்தது எங்கும்*** *- குளிர்ச்சி பொருந்திய பெருநிலாவானது எல்லாவிடத்தும் (தன் ஒளியைச் செழிக்கச் செய்தது).*

*நிறத்தால் கள்; இனிமையால் இசை; இன்ப மிகுதியால் காமவெள்ளம் என்னலாம்படி நிலவொளி பரவிற்றென்க. இனிவரும் இப்படலப் பகுதியின் பொருள் எல்லாம் தோன்றுமாறு தொகுத்துத் தோற்றுவாய் கூறினார்.*

***963. கலந்தவர்க்கு இனியது ஓர் கள்ளும் ஆய். பிரிந்து***
***உலர்ந்தவர்க்கு உயிர் சுடு விடமும் ஆய். உடன்***
***புலந்தவர்க்கு உதவி செய் புதிய தூதும் ஆய்.***
***மலர்ந்தது. நெடு நிலா - மதனன் வேண்டவே.***

***கலந்தவர்க்கு இனியது ஓர் கள்ளும் ஆய்*** - *(ஆணும் பெண்ணுமாகக்) கூடி மகிழ்ந்திருப்பவர்கட்கு இனிமை நல்கும் மதுவாகவும்;* ***பிரிந்து உலர்ந்தவர்க்கு உயிர் விடு விடமும் ஆய்*** - *(துணைவரைப்) பிரிந்து வருந்துவார்க்கு (உண்டார்) உயிரைப் போக்கவல்ல நஞ்சாகவும்;* ***உடன்புலந்தவர்க்கு உதவி செய் புதிய தூதும் ஆய்*** - *துணைவருடன் ஊடல் கொண்டவர்க்கு (இன்ப நிலையை மிகுவிப்பதால் ஊடல் நீங்கிக் கூடல் கொள்ள) உதவி செய்கின்ற புதிய தூதுவன் ஆகவும்;* ***மதனன் வேண்ட*** - *மன்மதன் (தன் தொழிலுக்கு உதவுமாறு) வேண்டியதனால்;* ***நெடுநிலா மலர்ந்தது*** - *ஒளிமிக்க நிலவானது வானில் ( ஒரு வெண்மலர் போல) மலர்ந்தது.*

*காம வேளின் பணிக்கு இரவும் நிலவும் பெரிதும் வேண்டப் படுவதாதலின் ''மதனன் வேண்ட நெடுநிலா மலர்ந்தது'' என்றார். ஒரு பொருள் மக்கள் மனநிலைக்கேற்ப பல்வகைப் பயன்தரும் என்கிறார். நிலா. கூடுவார்க்கு மேலும் மேலும் கூடும் விருப்பம் உண்டாக்கும் ஆதலின் மேலும் மேலும் உண்ண விருப்பம் ஊட்டும் கள் ஆகவும்; பிரிந்தவர்க்கு. விடம்மேலும் மேலும் உயிரை நெருக்குவதுபோல் நிலா உயிரை நெருக்குதலால் நஞ்சு ஆகவும்; ஊடியவர்க்கு வேட்கை மிகுவித்துக் கூட உந்துதலால் நிலா. ஒரு புதிய தூது ஆகவும் ஆயிற்று. பாணன் பாடினி. தோழியர் இருக்கவும். இது. அவரினும் மிகு நெருக்கும் தூது ஆதலின் ''புதிய தூதும் ஆய்'' என்றார்.*

***964. ஆறு எலாம் கங்கையே ஆய; ஆழிதாம்.***
***கூறு பாற்கடலையே ஒத்த; குன்று எலாம்***
***ஈறு இலான் கயிலையே இயைந்த; என் இனி***
***வேறு நாம் புகல்வது. நிலவின் வீக்கமே?***

***ஆறு எலாம் கங்கையே ஆய*** - *(நிலவொளி பரவியதால்) ஆறுகள் யாவும் (வெண்ணிறம் பெற்று) கங்கையாற்றினையே ஒத்தவை ஆயின;* ***ஆழிதாம் கூறுபாற் கடலையே ஒத்த*** - *கடல்கள் யாவும் (சிறப்பித்துக்) கூறப்படும். திருப்பாற்கடலையே ஒத்தவை ஆயின;* ***குன்று எலாம் ஈறு இலான் கயிலையே இயைந்த*** - *மலைகள் யாவும் (வெள்ளிப் பனிமலையாய்ச்) சிவ பெருமான் வாழும் திருக்கயிலை மலைக்கு ஒப்புச் சொல்லலாம்படி இருந்தன;* ***நிலவின் வீக்கம் வேறு நாம் இனி என் புகல்வது?*** - *நிலவொளியின் பெருக்கிற்குத் தனியாக யாம் இனிப்புகல என்ன உள்ளது? நிலவொளியால் உலகு வெண்மையில் மூழ்கிக் கிடந்தமைக்கு வெண்மையிற் சிறந்த மூன்று உலகப் பொருள்களை உவமையாக்கி விளக்கி விட்ட மனநிறைவில். ''என் இனி வேறு நாம் புகல்வது?'' என்கின்றார். நிலாக் கதிரின் வெண்மை வீச்சால். (கரிய) யமுனை முதலிய ஆறுகள் கங்கை ஆயின; பிற கருங்கடல்கள் யாவும் பாற்கடல் ஆயின; (நீல) மலைகள் யாவும் கயிலை ஆயின என்றார். சிவபிரானை. ''ஈறு இலான்'' என்றதனால். கவிஞரின் சமயப் பொறை விளங்கும். 3*

***965. எள்ள அருந் திசைகளோடு யாரும். யாவையும்.***
***கொள்ளை வெண் நிலவினால் கோலம் கோடலால்.***
***வள் உறை வயிர வாள் மகர கேதனன்***
***வெள்ளணி ஒத்தது - வேலை ஞாலமே.***

***எள்ள அருந்திசைகளோடு யாரும் யாவையும்*** - இகழ்தற்கு அரிய திக்குகளுடனே அத்திக்குகளிலே உள்ள உயர்திணையாரும் அஃறிணைப் பொருள்களும்; **கொள்ளை வெண் நிலவினால் கோலம் கொள்ளலால்** - கொட்டிக் கிடக்கிற நிலவின் ஒளியால் (வெண்ணிறக்) கோலம் கொண்டதனால்; **வேலை ஞாலம்** - கடல் சூழ்ந்த இவ்வுலகம்; **வள் உறை வயிரவாள் மகர கேதனன்** - கூர்மை தங்கும் வலிமை பொருந்திய வாளினையுடைய மகர மீனைக் கொடியாக உடைய மன்மதனுக்கு; **வெள்ளணி ஒத்தது** - பிறந்தநாள் விழாக் கொண்டாடுவது போன்றிருந்தது.

*உலகத்து உயிர்கள் யாவும் பிறக்க உதவியவன்; இன்பத்தைத் தருபவன் மன்மதன் ஆதலால். அவையாவும் அவனுக்கு நன்றி மறவாமல் வெள்ளாடையணிந்து பிறந்த நாள் கொண்டாடியது போன்றிருந்தது உலகை நிலா ஒளி குளிப்பாட்டிய கோலம் என்றார். பிறந்த நாள் விழாவிற்கு வெள்ளாடையணிதல் மரபு ஆதலை "வெள்ளணி நாள்" எனும் சொல்லே குறித்தது. வெள்ளணி நாள் - பிறந்தநாள்: பு.வெ. 212. மகர கேதனன் - மகர மீனைக் கொடியில் பொறித்த மன்மதன். மகரம்: சுறா மீன். கேதனம்: கொடி.*

*மகளிர் மதுப் பருகுதல்*

***966. தயங்கு தாரகை புரை தரள நீழலும்.***
***இயங்கு கார் மிடைந்த கா எழினிச் சூழலும்.***
***கயங்கள் போன்று ஒளிர் பளிங்கு அடுத்த கானமும்.***
***வயங்கு பூம் பந்தரும். மகளிர் எய்தினார்.***

***தயங்கு தாரகை புரை தரள நீழலும்*** - ஒளிர்கின்ற விண்மீன்களைப் போன்ற முத்துப் பந்தலின் நிழலிலும்; **இயங்குகார் மிடைந்த கா எழினிச் சூழலும்** - வானில் இயங்கும் மேகம் நெருங்கித் தங்குகின்ற சோலைகளில் திரைச் சேலைகளிட்ட இடங்களிலும்; **கயங்கள் போன்று ஒளிர் பளிங்கு அடுத்த கானமும்** - குளங்கள் போல ஒளிர்கின்ற பளிங்கறைகள் பொருந்திய தோட்டங்களிலும்; **வயங்கு பூம்பந்தரும் மகளிர் எய்தினர்** - (மணம்) விளங்கும் மலர்ப்பந்தல்களிலும் பெண்டிர் சென்று அடைந்தனர்.

*முத்துப் பந்தல். திரைப்பந்தல். பளிங்கறை. மலர்ப்பந்தல். ஆகியவற்றின் குளிர் நிழல்களில் மெல்லியல் மகளிர் தங்கினர் எனச் செல்வ வளமும். அவர் தம் மென்மைப் பாங்கும் ஒருங்கு சுட்டினார். கரிய திரைகளை நாற்புறமும் சூழவிட்டு அவற்றின் மேல் மாலைகளைத் தொங்கவிட்டுப் பாடி வீடு அமைக்கும் வழக்கம் ஆதலின் தார்மிடைந்த எனப் பாடங்கொண்டு "இயங்கு தார்மிடைந்த கா எழினிச் சூழலும்" என்றார் எனினுமாம். எழினி: திரை. தார்: மாலை.*

***967. பூக்கமழ் ஓதியர். போது போக்கிய***
***சேக்கையின் விளை செருச் செருக்கும் சிந்தையர்.***
***ஆக்கிய அமிழ்து என. அம் பொன் வள்ளத்து***
***வாக்கிய பசு நறா. மாந்தல் மேயினார்.***

***பூக்கமழ் ஓரியர்*** - *பூக்களின் நறுமணம் கமழ்கின்ற கூந்தலையுடைய பெண்டிர்;* ***போது போக்கிய சேக்கையின் விளைசெரு*** - *மலர்கள் (மிகப்) பரப்பிய படுக்கைகளிலே விளைகின்ற கலவிப் போரிலே;* ***செருக்கும் சிந்தையர்*** - *களிக்க வேண்டுமென்ற மனத்தினராய்;* ***ஆக்கிய அமிழ்தென*** - *அப்போரில் வெல்வதற்கென ஆக்கப்பட்ட அமிழ்தம் போல;* ***அம்பொன் வள்ளத்து வாக்கிய பசு நறை*** - *அழகிய பொற்கிண்ணத்தில் ஊற்றிய புதுமதுவைப்;* ***மாந்தல் மேயினார்*** - *பருகத் தொடங்கினர்.*

*சோர்வு. களைப்பு ஆகியவை போக்கி. இறப்பு நீக்கி. இளமை நல்க வல்லது அமிழ்து ஆதலின். கலவிப் போர்க்கு இவை செய்யும் அமிழ்தென்று மதுவுண்டனர் என்க. போது போக்கிய: மலர்கள் போடப்பட்ட பொழுது போக்குவதற்காக. சிலேடை. அவனிப் போருக்கு ஆக்கிய மது அன்று இது: அமளிப் போருக்கு என்றே ஆக்கிய அமிழ்தம் இது என்பார். "சேக்கையின் விளை செருச் செருக்கும் சிந்தையர் ஆக்கிய அமிழ்தென்" என்றார். சேக்கை: படுக்கை. அமளி. செரு: போர். வாக்கிய: வார்த்த. செம்பொன் வள்ளம் வளம் மிகுதி குறித்தது.*

***968. மீனுடைய விசும்பினார். விஞ்சை நாட்டவர்.***
***ஊனுடை உடம்பினார் உருவம் ஒப்பு இலார்.***
***மானுடை நோக்கினார் வாயின் மாந்தினார்-***
***தேனுடைய மலரிடைத் தேன் பெய்தென்னவே.***

***மீன் உடை விசும்பினார்*** - *விண்மீன்களையுடைய வானுலக மங்கையரும்;* ***விஞ்சை நாட்டவர்*** - *வித்தியாதர உலகத்து வித்தியாதர மகளிரும்;* ***ஊனுடை உடம்பினார்*** - *ஊன் உடம்பினராகி இம் மகளிர்க்கு;* ***உருவம் ஒப்பிலார்*** - *அழகில் ஒப்பாகார் (எனத் தக்க) ;* ***மாதனுடைய நோக்கினார்*** - *மானை வென்ற விழியினராகிய மங்கையர்;* ***தேனுடை மலரிடை*** - *தேனையுடைய மலரின் கண்ணே;* ***தேன் பெய்தென்ன*** - *(மேலும்) தேனைச் சொரிந்தாற் போல;* ***வாயில் மாந்தினர்*** - *(தங்கள் மலர்) வாயால் மதுவுண்டனர்.*

*மகளிர் வாய். மலர் போன்றும். அதில் ஊறும் நீர். தேன் போன்றும் இருத்தலால். அவர்கள் மேலும் தேன் எனப்படும் மதுவையுண்ணுதல் "தேனுடை மலரிடை தேன் பெய்ததற்கு" நிகர் ஆயிற்று. வால் எயிற்று ஊறிய நீர் தேன் என வள்ளுவரும் உரைப்பார். (திருக். 1121) விண்ணக மகளிரும் வித்தியாதர மகளிரும் ஒளிமேனிப் படைத்தவர் ஆயினும். ஊன்மேனி படைத்த இவ்வுலகப் பெண்களுக்கு ஒப்பாகார். அவர்கள் இமையா நாட்டம் பெற்றவர் ஆயினும் இமைத்து மருட்டும் இம்மடந்தையர்க்கு ஈடாகார் என்பார் "மான் உடை நோக்கினார்" என்ற நுட்பம் உணர்க. உடைதல்; தோற்றல்.*

***969. உக்க பால்புரை நறா உண்ட வள்ளமும்.***
***கைக் கொள் வாள் ஒளிபடச் சிவந்து காட்ட. தன்***
***மைக் கணும் சிவந்தது; ஓர் மடந்தை வாய்வழிப்***
***புக்க தேன் அமிழ்தமாய்ப் பொலிந்த போன்றவே.***

***ஓர் மடந்தை வாய்வழிப் புக்க தேன்*** - ஒரு மங்கையின் வாய்வழியாகப் புகுந்த மது; ***அமிழ்தமாய்ப் பொலிந்த போன்றவே*** - அமிழ்தமாக அவளுக்குள் விளங்கியது; ***உக்கபால் புரை நறா உண்ட வள்ளமும்*** - சிந்திய பாலினை ஏற்று நிற்பது போன்ற வெண்ணிற மதுவினை ஏந்தியிருந்த (பளிங்காலான) மதுக்கிண்ணமும்; ***கைக்கொள் வாள் ஒளி படச் சிவந்து காட்ட*** - (மதுவைப் பருக எடுத்த அவளுடைய சிவந்த கைகள் கொண்டுள்ள சிறந்த ஒளிபடுதலால் செந்நிறமாகத் தோன்ற; ***தன்மைக்கணும் சிவந்தது*** - அவளுடைய கருங்கண்ணும் (மதுவின் வேகத்தால்) செந்நிறம் பெற்றது.

*அவளுக்கு. மதுவின் வேகத்தால் கண் சிவந்தது இயல்பு; ஆனால் அவள் மதுவுண்ட மதுக் கிண்ணமும் சிவந்தது என நயந்தோன்ற மதுவின் கடுமை கூறியவாறு. கள் உண்பார்க்குக் கண் சிவத்தல் இயல்பு. இனி. நறாவும் நறா உண்ட வள்ளமும் சிவந்த என இயைப்பினுமாம். நறா கைபடச் சிவந்து தேன் ஆயிற்று. வாய்படத் தண்ணிய அமுதாக்கிற்று. வள்ளத்தைச் சிவப்பாக்கிற்று என்று மதுதொட்ட எதையும் மாற்றாமல் விடாது என்றார் எனினுமாம்.*

***970. தாமமும் நானமும் ததைந்த. தண் அகில்***
***தூமம். உண். குழலியர் உண்ட தூ நறை.***
***ஓம வெங் குழி உகு நெய்யின். உள் உறை***
***காம வெங் கனலினைக் கனற்றிக் காட்டிற்றே.***

***தாமமும் நானமும் ததைந்த தண்ணகில் தூமம் உண்குழலியர்*** - மலர்மாலையும். புனுகும் நிறைந்த. குளிர்ந்த அகில்புகை யூட்டப் பெறும் கூந்தலையுடைய மகளிர்; ***உண்ட தூநறை*** - உண்ட தூய மது; ***வெங்குழி உகு ஓம நெய்யின்*** - கனல் நிறைந்த யாககுண்டத்திலே பெய்த ஓமநெய்யைப் போன்று; ***உள்நிறை வெங்கனலினைக் கனற்றிக் காட்டிற்று*** - (அவர்தம்) உள்ளத்துள்ளே உறைகின்ற கொடிய காமக் கனலினை (மேலும்) சூடேற்றச் செய்தது.

*நெய்யால் கனல் அணையாது மேலும் மிகுதல் போல. மதுவால் காமம் அடங்காது மேலும் மிகும் என்றுணர்த்தியவாறு. அவர்கள் உள்ளக் குழிக்குள் நீறுபூத்த நெருப்பாய்க் காமக்கனல். முன்பே உறைந்து கிடந்தது. அக் கனலை நெய்யூற்றி எழுப்புதல் போல. மது ஊற்றிச் சுடர்விடச் செய்தனர் என்பார். ''உள்நிறை காம வெங்கனலினைக் கனற்றி'' என்றார். ஓம வேள்விக்கு. நெய்போல. காம வேள்விக்கு மது உந்துசக்தி. குழலுக்கு அகிற்புகையூட்டலும். மாலை சூட்டலும். புனுகு பூசலும். கள்ளால் மிகுந்த காமத்தை மேலும் கொழுந்திடச் செய்யும் வாயில்களாம்.*

*“அளிந்து அகத்து எரியும் தீயை நெய்யினால் அவிக்கின்றார்” (கம்ப: 4359)* *என்பார் பின்னும்.*

*கள் மயக்கத்தால் நிகழ்ந்த தடுமாற்றங்கள்*

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

***971. விடன் ஒக்கும் நெடிய நோக்கின்***
***அமிழ்து ஒக்கும் இன்சொலார்தம்***
***மடன் ஒக்கும் மடனும் உண்டே? -***
***வாள் நுதல் ஒருத்தி காணா.***
***தடன் ஒக்கும் நிழலை. ‘பொன் செய்***
***தண் நறுந் தேறல் வள்ளத்து***
***உடன் ஒக்க உவந்து நீயே***
***உண்ணுதி. தோழி!’ என்றாள்.***

***வாள் நுதல் ஒருத்தி*** *- ஒளி நிறைந்த நெற்றியுடையாள் ஒருத்தி;* ***தடன் ஒக்கும் நிழலை*** *- (தன்னைப் போன்றே அழகின்) பெருமையில் ஒத்திருக்கும் தனது நிழலை;* ***பொன்செய் தண்நறும் தேறல் வள்ளத்துக் காணா*** *- பொன்னால் செய்யப்பட்ட குளிர்ந்த மணமுள்ள மதுவின் கிண்ணத்தில் கண்டு;* ***தோழி. உடன் ஒக்க உவந்து நீயும் உண்ணுதி என்றாள்*** *- “தோழியே! நீயும் என்னோடு இணைந்து மகிழ்ந்து (இம்மதுவினை) உண்ணுவாய்!’ என்று வேண்டினாள்;* ***விடன் ஒக்கும் நெடியநோக்கின்*** *- (விரும்பாதார்க்கு) நஞ்சனைய நீண்டவிழிகளையும்;* ***அமிழ்து ஒக்கும் இன்சொலார்தம்*** *- (உண்பாரை நீண்டு வாழ்விக்கும்) அமிழ்தம் போல. கேட்டார் செவிக்கு நெடுநாள் இனிக்கும் இன் மொழியும் உடைய மகளிருடைய;* ***மடன் ஒக்கும் மடனும் உண்டே?*** *- அறியாமை போன்ற அறியாமை வேறு எவரிடத்தும் உண்டோ? (இல்லை என்க)*

*அச்சம். மடம். நாணம். பயிர்ப்பு என்னும் மகளிர் நாற்குணங்களுள் ஒன்றான இம் மடம் பெண் இயல்புக்கு மேலும் அழகு சேர்ப்பதனை இப்பாடலாலும் காண்க.*

*வேற்றுப் பொருள் வைப்பணி. காணா - கண்டு ; செய்யா என்னும் எச்சம். “இருநோக்கு இவள் உண்கண் உள்ளது; ஒரு நோக்கு நோய் நோக்கு” (திருக். 1091) என்பராதலின். “விடன் ஒக்கும் நோக்கு” என்றார். கேட் பார்க்குப் பேரின்பம் தருதலின்.” அமிழ்தொக்கும் இன்சொல்” என்றார். “அமிழ்து படுதீஞ்சொல்” (பெருங் 1:43:35*

*972.* ***அச்ச நுண் மருங்குலாள். ஓர்***
***அணங்கு அனாள். அளகபந்தி***
***நச்சுவேல் கருங் கண் செவ் வாய்***
***நளிர்முகம். மதுவுள் தோன்ற.***
***'பிச்சி நீ என் செய்தாய்? இப்***
***பெரு நறவு இருக்க. வாளா.***
***எச்சிலை நுகர்தியோ?" என்று.***
***எயிற்று அரும்பு இலங்க நக்காள்.***

***அச்ச நுண் மருங்குலாள்*** - *(இது முறிந்து விடக்கூடும் எனக் கண்டார்) அஞ்சுமாறு நுண்ணிய இடையினையுடையவளாய்த் தெய்வப் பெண் போன்றிருக்கும் ஒருத்தி;* ***அளகபந்தி. நச்சுவேல் கருங்கண் செவ்வாய் நகைமுகம்*** - *(தன்) கூந்தல் தொகுதியும் நஞ்சு பூசிய வேல் போன்ற கருங்கண்களும். சிவந்தவாயும். நகையோடு கூடிய முகமும்;* ***மதுவுள் தோன்ற*** - *பருகும் வள்ளத்து மதுவில் பிரதி பிம்பமாய்த் தோன்ற;* ***பிச்சிநீ என்செய்தாய்*** - *பித்துப் பிடித்தவளே! நீ என்ன செய்கிறாய்;* ***இப்பெரு நறவு இருக்க*** - *இதோ இச்சாடியில் பெரிய அளவில் மது நிறைந்திருக்க;* ***வாளா எச்சிலை நுகர்தியோ*** - *வீணே வள்ளத்தில் நான் உண்ட எச்சில் மதுவையா நுகர்கின்றாய்;* ***என்று எயிற்று அரும்பு இலங்க நக்காள்*** - *என்று (இவள் நிழலை வேறொரு பெண்ணாகக் கருதி) பற்களாகிய முல்லை அரும்பு வெளித்தோன்றி ஒளிரச் சிரித்தாள்.*

*மது வுண்பார் நிழலையும் உருவையும் பிரித்தறிய இயலாதவர் ஆவார் என்றபடி. மிகுந்த கள்ளிருக்கவும். உண்டு எஞ்சிய எச்சிலையா உண்பது? என்று கேட்டு. இது பித்தாவார் குணம் ஆதலின் "பிச்சிநீ" என்றாள். அவளைப் பிச்சி என்னும் இவளும் நிழலை உண்மை உருவென்று நினைந்து பேசும் பிச்சி என்பது அறியாள். மதுவுண்பார் தன்பிழையுணராது பேசும் தகவை அழகுற இயம்பியுள்ள அருமையை உணர்க.*

*973.* ***புறம் எலாம் நகைசெய்து ஏசப்***
***பொரு அரு மேனி வேறு ஓர்***
***மறம் உலாம் கொலை வேல் கண்ணாள்.***
***மணியின் வள்ளத்து. வெள்ளை***
***நிற நிலாக் கற்றை பாய.***
***நிறைந்தது போன்று தோன்ற.***
***நறவு என. அதனை. வாயின்***
***வைத்தனள்; நாண் உட்கொண்டாள்.***

***வேறு ஓர் மறம் உலாம் கொலை வேல் கண்ணாள்*** - *கொடுமை திகழும் கொலைத் தொழிலைச் செய்யும் வேல் போன்ற கண்ணினையுடைய வேறு ஒரு மங்கை;* ***மணியின் வள்ளத்து வெள்ளை நிலாக் கற்றை பாய*** - *(தான் ஏந்திய) மணிகள் பதித்த (பளிங்கு மதுக்) கிண்ணத்தில் வெள்ளை நிற நிலாக்கதிர்கள் பாய்ந்ததனால்;* ***நிறைந்தது போன்று தோன்ற*** - *(அந்தப் பளிங்குக் கிண்ணம் மது) நிறைந்திருப்பது போலத் தோன்றியதனால்;* ***நறவு என அதனை வாயின் வைத்தனள்*** - *மதுவென்று கருதி. அக் கிண்ணத்தை வாயில் வைத்தாள்;* ***புறம் எலாம் நகைசெய்து ஏச நாண் உட்கொண்டாள்*** - *பக்கத்தில் உள்ளவர்கள் எல்லோரும் (வெறுங் கிண்ணத்தை இவள் வாய் வைத்து உறிஞ்சுவது கண்டு) நகைத்து இகழ. தானும் தன்னுள்ளே நாணம் (மிகக்) கொண்டாள்.*

*மது உண்ணா முன்னமே. அதன் நினைவுகூட மயக்கம் செய்விக்க வல்லது என்றவாறு. புறம் எல்லாம் நகை செய்யவும். தானும் வெட்கமுறவும் செய்ய வல்லது மது விருப்பம் என்று நிகழ்ச்சியொன்றின் வாயிலாய் உணர்த்தினார். கொலைவேற் கருவியிருந்தும் நாணம் தவிர்க்க இயலாதாயிற்று. நறவு உட் செல்லுமுன் நாணம் உட்சென்றது என்றுரைத்த நயம் காண்.க.*

***974. 'யாழ்க்கும். இன் குழற்கும். இன்பம்***
***அளித்தன இவை ஆம்' என்ன***
***கேட்கும் மென் மழலைச் சொல் ஓர்***
***கிஞ்சுகம் கிடந்த வாயாள்.***
***தாள் கருங் குவளை தோய்ந்த***
***தண் நறைச் சாடியுள். தன்***
***வாள்-கணின் நிழலைக் கண்டாள்;***
***வண்டு என ஓச்சுகின்றாள்.***

***யாழ்க்கும் இன்குழற்கும் இன்பம் அளித்தன இவை ஆம் என்ன*** - *வீணையின் இசைக்கும். இனிய குழலிசைக்கும் (இசை) இன்பம் கொடுத்தவை இவள் சொற்கள்தாம் என்னுமாறு;* ***கேட்கும் மென் மழலைச் சொல் ஓர் கிஞ்சுகம் கிடந்தவாயாள்*** - *(இனிதான ஒலி) கேட்கச் செய்கிற மெல்லிய மழலை மொழியினையும். முருக்க மலர் அனைய சிவந்த வாயினையும் உடையாள் ஒருத்தி;* ***தாள் கருங்கு குவளை தோய்ந்த தண் நறைச் சாடியுள்*** - *தண்டினையுடைய கருங்குவளை மலர் இடப் பட்டுள்ள குளிர்ந்த கள்ளினையுடைய சாடியின் உள்ளே;* ***தன் வாள்க(ண்)ணின் நிழலைக் கண்டாள்*** - *தன்னுடைய வாள்போன்ற கண்களின் நிழலைப் பார்த்தாள் (நிழலென அறியாது.);* ***வண்டென ஓச்சுகின்றாள்*** - *(உள்ளே உள்ள குவளை மலர்களில் மது வுண்ண வந்த வண்டுகள் என்று) தன்கண்நிழலை ஓட்டலானாள்! எல்லா இனிமைப் பொருட்கும் இனிமைகொடுக்க வல்லவை குழலும் யாழும். அவற்றுக்கும் இனிமை கொடுக்க வல்லவை இவள் மழலைச் சொற்கள் என்க.*

*கட் சாடியுள் மணத்திற்காகக் குவளை. தாமரை முதலிய மலர்களை இட்டு வைத்தல் மரபு. அந்த மலர்களை மொய்க்க வண்டுகள் வந்து விட்டன என்று கருதிச் சாடியுள் தெரிந்த தன் விழி நிழலை ஓட்டுகின்றாள்! மதுப்பழக்கம் நகைப்பிற்கு இடம் ஆனவற்றையே செய்யும் என மேலும் உணர்த்தியவாறு.*

***975. களித்த கண் மதர்ப்ப. ஆங்கு ஓர்***
  ***கனங் குழை. கள்ளின் உள்ளால்***
***வெளிப்படுகின்ற காட்சி***
  ***வெண் மதி நிழலை நோக்கி.***
***'அளித்தனென் அபயம்; வானத்து***
  ***அரவினை அஞ்சி நீ வந்து***
***ஒளித்தனை; அஞ்சல்!' என்று ஆங்கு.***
  ***இனியன உணர்த்துகின்றாள்.***

**ஆங்கு. ஓர் கனங்குழை** - *அங்கே. பொன்னாலியன்ற குழையணிந்தாள் ஒருத்தி;* **கள்ளின் உள்ளால்வெளிப்படுகின்ற காட்சி வெண் மதி நிழலை** *- மதுவின் உள்ளே பிரதிபலித்துக் தோன்றுகின்ற அழகிய வெள்ளைத் திங்களினது பிம்பத்தை;* **களித்த கண் மதர்ப்ப நோக்கி** *- கள்ளுண்டதனால் வந்த களிப்பு. தன் கண்களில் தோன்றுமாறு பார்த்து;* **நீ வானத்து அரவினை அஞ்சி வந்து ஒளித்தனை** *- மதியே. நீ வானத்தில் உன்னைத் தீண்ட வரும் பாம்புகளுக்கு அஞ்சி இங்கு வந்து ஒளிந்திருக்கின்றாய்;* **அளித்தனென் அபயம் அஞ்சல்** *- (ஆகையால். நான் உனக்கு) அபயம் அளித்தேன்;* **அஞ்சற்க; என்று ஆங்கு இனியன உணர்த்துகின்றாள்** *- என்பன போன்ற இனிய மொழிகளைக் கூறுபவள் ஆனாள்.*

*சந்திர பிம்பத்தை வெண்மதி எனப் பிழையாகக் கருதி. அதற்கு அபயமும் கொடுக்கின்றாள் என்பதனால். மது வெறி. பிழையின் மேல் பிழைபுரிவிக்க வல்லது என உணர்த்தியவாறு. குடிவெறியினும் அபயம் நல்கும் குணமுடையார் கோசல நாட்டார் என்பதும் குறித்தவாறு.*

***976. அழிகின்ற அறிவினாலோ.***
  ***பேதைமையாலோ. ஆற்றில்***
***சுழி ஒன்றி நின்றது அன்ன***
  ***உந்தியாள் தூய செந் தேன்***
***பொழிகின்ற பூவின் வேய்ந்த***
  ***பந்தரைப் புரைத்துக் கீழ்வந்து***
***இழிகின்ற கொழு நிலாவை.***
  ***நறவு என. வள்ளத்து ஏற்றாள்.***

***ஆற்றில் சுழி ஒன்றி நின்றது அன்ன உந்தியாள் ஒருத்தி*** *-ஆற்று வெள்ளத்தில் உண்டாகின்ற நீர்ச்சுழியானது. ஓரிடத்தில் நிலைத்து நிற்பதைப் போன்ற கொப்பூழையுடையாள் ஒருத்தி;* ***செந்தேன் பொழிகின்ற பூவின் வேய்ந்த பந்தரை*** *- செந்நிறத்தேனைப் பொழியும் பூக்களால் வேயப்பெற்றுள்ள பந்தரை;* ***புரைத்துக் கீழ்வந்து இழிகின்ற கொழுநிலாவை*** *- துளைத்துக் கொண்டு கீழே இறங்குகின்ற செழுமை மிக்க நிலவொளியை;* ***அழிகின்ற அறிவினாலோ பேதைமை யாலோ*** *- (மதுவுண்டதால்) அறிவு அழிந்ததாலோ அன்றி (மகளிர்க்குரிய) பேதைமைக் குணத்தினாலோ;* ***நறவு என வள்ளத்து ஏற்றாள்*** *- மது வென்று (மயங்கி) (மதுக்) கிண்ணத்தில் பிடிக்க முயன்றாள்.*

*மது வுண்டதால் அறிவு அழியும் எனத் தெளிவித்தவாறு. ஆற்றின் சுழியைக் கொப்பூழ் ஆகிய உந்திக்கு உவமித்தல் மரபு. வெள்ளை நிலவொளியை வெள்ளை மதுவாய் எண்ணிப் பூம்பந்தலைப் பொத்துக் கொண்டு வீணே ஒழுகுவதாக எண்ணி. கிண்ணத்தில் ஏந்தித் தன் மது வெறியை வெளிப்படுத்தினாள் ஒருத்தி என்க. வெட்கமுறத் தக்க செயல்களை. வெட்கமுறாது செய்வது மது வெறியின் இலக்கணமே என்றவாறு.*

*977.* ***மின் என நுடங்குகின்ற***
***மருங்குலாள் ஒருத்தி. வெள்ளை***
***இன் அமிழ்து அனைய தீம் சொல்.***
***இடை தடுமாறி என்ன.***
***வன்ன மேகலையை நீக்கி.***
***மலர்த் தொடை அல்குல் சூழ்ந்தாள்;***
***பொன்னரிமாலை கொண்டு.***
***புரி குழல் புனையலுற்றாள்.***

***மின் என நுடங்குகின்ற மருங்குலாள் ஒருத்தி*** *- மின்னல் என நெளிகின்ற இடையினையுடையாள் ஒருத்தி;* ***வெள்ளை இன் அமுது என்ன செஞ்சொல் இடைதடுமாறி*** *- வெண்ணிற இனிய அமிழ்தம் போன்ற செவ்விய பேச்சு (மதுவின் மயக்கால்) இடையில் குழறுண்டு;* ***அல்குல் வன்ன மேகலையை நீக்கி மலர்த்தொடை சூழ்ந்தாள்*** *- (தனது) இடைப் பகுதியில் அணிந்திருந்த அழகிய மேகலையைக் கழற்றிவிட்டு. அங்கே மலர் மாலையைச் சுற்றிக் கொண்டாள்;* ***பொன்அரி மாலை கொண்டு புரிகுழல் புனையல் உற்றாள்*** *- அதுமட்டும் அன்றி. கழுத்தணியாகிய பொன்அரி மாலையை எடுத்துச் சுருண்ட கூந்தலில் அணியத் தொடங்கினாள்! பொன்னரி மாலை கழுத்தணியாவதை. "சுடர் மணித் தோளில் தோன்றும் பொன் அரி மாலை" (கம்ப. 7636) என்று பின்னும் குறிப்பர்.*

*மது மயக்கு. இடையில் அணிவதைத் தலை அணியாக்கும் தலையில் அணிவதை இடையணியாக்கும் என எள்ளுகின்றார்.*

*"இருதனத்து இரவிக்கை தனை அரையில் உடைதொடுவார்; இந்த உடை ரவிக்கையெனச் சந்த முலைக்கு இடுவார்" (குற். குற. 22) என்பதும் இதனையொட்டி எழுந்தது எனலாம்.*

***978. கள் மணி வள்ளத்துள்ளே***
***களிக்கும் தன் முகத்தை நோக்கி.***
***விண் மதி மதுவின் ஆசை***
***வீழ்ந்தது என்று ஒருத்தி உன்னி.***
***'உள் மகிழ் துணைவனோடும்***
***ஊடு நாள். வெம்மை நீங்கி.***
***தண் மதி ஆகின். யானும்***
***தருவென். இந் நறவை' என்றாள்.***

**ஒருத்தி** - *ஒருமங்கை;* **கள் மணி வள்ளத்துள்ளே** - *கள்ளினை வார்த்த அழகிய கிண்ணத்தின் உள்ளே;* **களிக்கும் தன்முகத்தைநோக்கி** - *கள் வெறி தோற்றும் தன் முகத்தின் பிரதிபிம்பத்தைக் கண்டு;* **விண்மதி மதுவின் ஆசை வீழ்ந்தது என்று உன்னி** - *வானத்துத் திங்கள் மதுவின் ஆசையால் கிண்ணத்துள். மது வுண்ண வந்து வீழ்ந்து கிடக்கிறது என்று நினைத்து;* **உள்மகிழ் துணைவனோடும் ஊடு நாள்** - *மன மகிழ்ச்சி நல்கும் என் கணவனோடு (நான்) ஊடல் கொள்ளும் காலத்து;* **வெம்மை நீங்கித் தண்மதி ஆகின்** - *(உன் இயல்புக்குமாறாக) வெப்பந் தருவதை நீக்கி. குளிர்ந்த நிலவாகவே நடந்து கொள்வாய் ஆனால்;* **இந்நறவைத் தருவென் என்றாள்** - *இம்மதுவை. (இப்பொழுது உனக்கு நல்குவேன் என்றாள்.)*

*மது உண்பார்க்கு அனைவரும் தம்மைப் போன்றே மது உண்பவராகவே தோன்றுவர். மேல். 975-ஆம் பாடலில். பாம்புக்கு அஞ்சி வந்து ஒளித்த நிலாவாகத் தன் முக நிழலைக்கண்டாள். இங்கு. மதுவாசையால் வந்து ஒளிந்த நிலாவாகத் தன் முக நிழலைக் காண்கின்றாள். ஆபத்தில் இருப்பாரைக் காப்பாற்று முன். தனக்கு ஆம் செயல் புரிய உறுதிபெற நினைப்பது மக்கள் இயல்பாதலின். "ஊடு நாள்.... தண்மதி ஆகின் தருவென்" என்றாள்.*

***979. எள் ஒத்த கோல மூக்கின்***
***ஏந்திழை ஒருத்தி. முன்கை***
***தள்ள. தண் நறவை எல்லாம்***
***தவிசிடை உகுத்தும். தேறாள்.***
***உள்ளத்தின் மயக்கம் தன்னால்.***
***'உப் புறத்து உண்டு' என்று எண்ணி.***
***வள்ளத்தை. மறித்து வாங்கி.***
***மணி நிற இதழின் வைத்தாள்.***

***எள் ஒத்த கோல மூக்கின் ஏந்திழை ஒருத்தி*** - *எள்ளுப் பூப்போன்ற அழகிய மூக்கினையுடையாளாய் அணிகலம் பூண்டாள் ஒருத்தி;* ***முன்கை தள்ளத் தண்நறவையெல்லாம்*** - *முன்னங் கை நடுங்கியதனால் குளிர்ந்த மது முழுவதும்;* ***தவிசு இடை உகுத்தும் தேறாள்*** - *(தன்) ஆசனத்திற் சிந்திவிட்டதை;* ***தேறாள்*** - *(சிறிதும்) உணராதவளாய்;* ***உள்ளத்தின் மய்ககம் தன்னால்*** - *மனத்தின் உள்ளே உள்ள மதுவின் மயக்கத்தினால்;* ***உப்புறத்து உண்டு என்று எண்ணி*** - *மதுக்கிண்ணத்தின் பின்புறத்தில் மது இருக்கும் என்று கருதி;* ***வள்ளத்தை மறித்து வாங்கி*** - *மதுக்கிண்ணத்தைக் கீழ்மேலாகக் கொண்டு;* ***மணி நிற இதழின் வைத்தாள்*** - *பதுமராக மணி போன்ற தன் சிவந்த அதரத்தில் வைத்துக்கொண்டாள்.*

*கீழ்மேல் தெரியாது உழலும் மதுமயக்கின் அவலம் கூறியவாறு. முன் கை தள்ளத் தண் மதுவையெல்லாம் தவிசிடை உகுத்ததும் அவளுக்குத் தெரியாமைக்குக் காரணம் கண்மயக்கம்; கண் மயக்கத்திற்குக் காரணம் மது வுண்பார்க்கு வரும் உள் மயக்கம். அதனால். "உகுத்தும் தேறாள். உள்ளத்தின் மயக்கம் தன்னால்". என்றார். மேலும். "மாயையின் மயங்குகின்றாம்; மயக்கின்மேல் மயக்கும் வைத்தாம்" (கம்ப. 4358) என்பார்.*

***980.*** **வான்தனைப் பிரிதல் ஆற்றா**
**வண்டு இனம் வச்சை மாக்கள்**
**ஏன்ற மா நிதியம் வேட்ட**
**இரவலர் என்ன ஆர்ப்ப.**
**தேன் தரு கமலச் செவ் வாய்**
**திறந்தனள் நுகர நாணி.**
**ஊன்றிய கழுநீர் நாளத்**
**தாளினால். ஒருத்தி. உண்டாள்.**

***வச்சை மாக்கள் ஏன்ற மாநிதியம்*** - *உலோபிகளிடம் பொருந்திய பெருஞ் செல்வத்தை;* ***வேட்ட இரவலர் என்ன*** - *(பெறுவதற்காக) விரும்பி வந்துள்ள யாசகர்கள்போல்;* ***பிரிதல் ஆற்றா வான்தனை வண்டு*** - *பிரிய மாட்டாமல் வான் அளவும் மொய்த்துக் கொண்டுள்ள வண்டுகளின் கூட்டம்;* ***ஒருத்தி தேன்தரு கமலச் செவ்வாய்*** - *(கண்ட) ஒருத்தி. தேன் சொரிகின்ற தாமரைப் பூப் போன்ற தன் சிவந்த வாயை;* ***திறந்தனள் நுகரநாணி*** - *திறந்தால். வண்டுகள் உட்சென்று விடுமென்று நாணமுற்று;* ***ஊன்றிய கழுநீர் நாளத் தாளினால் உண் டாள்*** - *கிண்ணத்தில் ஊன்றி வைத்த செங்கழுநீரின் (உள்துளை கொண்ட) தண்டினால் (மதுவை உறிஞ்சி) உண்டாள்.*

*வண்டுகளையும் உட்கொள்ள நேரும் அபாயம் உள்ளது மது வுண்ணும் பழக்கம் என்று அதன் இழிவு சுட்டியவாறு. "நெளிந்து உறை புழுவை நீக்கி. நறவு உண்டு நேர்கின்றேன்". (கம்ப 4359) என்று சுக்கிரீவன் வாயாலும் மதுவுண்ணும் சூழலை உரைப்பார். இன்று குளிர்பானங்கள். பல்லில் படாமல் உறிஞ்சு குழலால் பருகும் முறை. அன்றே இருந்ததை இதனால் அறிக.*

***981. புள் உறை கமல வாவிப்***
***பொரு கயல் வெருவி ஓட.***
***வள் உறை கழித்த வாள்போல்***
***வசி உற வயங்கு கண்ணாள்.***
***கள் உறை மலர் மென் கூந்தல்***
***களி இள மஞ்ஞை அன்னாள்.***
***'உள் உறை அன்பன் உண்ணான்'***
***என் உன்னி. நறவை உண்ணாள்.***

***புளஉறை கமல வாவிப் பொருகயல் வெருவி ஓட*** - *(நீர்ப்)* பறவைகள் வாழ்கின்ற தாமரைத் தடாகங்களில் ஒன்றை யொன்று மோதுகின்ற கயல் மீன்கள். *(இவற்றிற்கு)* ஒப்பாக இயலாதென்று அஞ்சி ஓடுமாது; **வள் உறை கழித்த வாள்போல் வசி உற வயங்கு கண்ணாள்** - தோல் உறையிலிருந்து உருவியெடுத்து வாள்போன்ற கூர்மை மிக மிளிர்கின்ற கண்களையுடையவளும்; **கள்உறை மலர் மென் கூந்தல் களி இள மஞ்ஞை அன்னாள்** - தேன்தங்கும் மலர்களை யணிந்த மெல்லிய கூந்தலையுடைய களித்த இளமயிலை ஒப்பவளும் ஆகிய ஒருத்தி; **உள் உறை அன்பன் உண்ணான் என உன்னி நறவை உண்ணாள்** - *(தன்)* உள்ளத்துள் *(எப்போதும்)* உறைகின்ற *(தன்)* காதலன் *(மது)* உண்ணான் என்ற காரணத்தால் *(தானும்)* மதுவை உண்ணாதவள் ஆயினாள்.

உண்மைக் காதல் புலன் இன்பத்தைத் துறக்கவும் ஒருப்படும் என்பது உணர்த்தியவாறு. அவன் வெளியே உறைந்து மறைபவன் அல்லன் என்பாள். "உள் உறை அன்பன்" என்றாள். "நெஞ்சத்தார் காதலராக வெய்துண்டல் அஞ்சுதும் வேபாக்கு அறிந்து" *(திருக். 1128)* என்பாள் வள்ளுவக் காதலியும். கணவன் ஒழுக்கத்திற்கு ஊறு செய்யாத வாழ்க்கைத்துணை இவள்.

**கலிவிருத்தம்**

***982. கூற்று உறழ் நயனங்கள் சிவப்ப. கூன் நுதல்***
***ஏற்றி. வாள் எயிறுகள் அதுக்கி. இன் தளிர்***
***மாற்ற அருங் கரதலம் மறிக்கும் - மாது. ஒரு***
***சீற்றம் ஆம் அவிநயம் தெரிக்கின்றாரினே.***

***ஒருமாது. சீற்றம்ஆம் அபிநயம் தெரிக்கின்றாரின்*** - ஒருபெண். வெகுளியுற்றோர் அபிநயம் *(இது என்று தெரிந்து கொள்ளுங்கள் எனக்)* காட்டுவாள் போன்று; **கூற்று உறழ் நயனங்கள் சிவப்ப** - *(விரும்பாதார்க்கு)* இயமனைப் போன்று துன்பம் செய்யும் இருவிழிகளும் *(மது வேகத்தால்)* சிவந்து போகவும்; **கூன் நுதல் ஏற்றி** - வளைவுகள் நெற்றியில் தோன்றுமாறு புருவங்களை *(நெரித்து)* மேல் ஏற்றி; **வாள் எயிறுகள் அதுக்கி** - ஒளியுடைய பற்களைக் கடித்து; **இன்தளிர்மாற்று அருங் கரதலம் மறிக்கும்** - கண்ணுக்கு இனிய தளிரின் அழகைத் *(தமக்கு முன்னே தலையெடுக்க* இயலாதவாறு போக்குகின்ற *(அழகுடைய கைத்தலங்களை மடக்குவாள்.)*

*மதுவுண்டால் நிகழும் மெய்ப்பாடுகளோடு வெகுண்டோர் மெய்ப்பாடுகள் ஒக்கும் என்பதால். அது வெறுக்கத்தக்கதென்று உணர்த்தியவாறு.*

*வெகுண்டோன் அவிநயம். "மடித்த வாயும் மலர்ந்த மார்பும். துடித்த புருவமும். சுட்டிய விரலும். கன்றிய உள்ளமொடு கை புடைத்திருத்தலும்" (சிலம். மேற். அடியார். 3.12.)ஆம்.*

***983. துடித்த வான் துவர் இதழ்த் தொண்டை. தூ நிலாக்***
***கடித்த வாள் எயிறுகள் அதுக்கி. கண்களால்***
***வடித்த வெங் குருதி வேல் விழிக்கும் மாதர் மெய்***
***பொடித்த வேர். புறத்து உகு நறவம் போன்றவே!***

***துடித்த வான் துவர் இதழ்த் தொண்டை*** *- துடிக்கின்ற மிகச் சிவந்த வாய் இதழ்களாகிய கொவ்வைக் கனியை;* ***தூநிலாக் கடித்த வாள் எயிறுகள் அதுக்கி*** *- வெண்ணிற நிலாவினைக் துண்டு செய்து வைத்துள்ளது போன்ற ஒளிபொருந்திய பற்களாற் கடித்து;* ***வெடித்த வெங்குருதி வேல் கண்களால் விழிக்கும்*** *- கூர்மை செய்யப்பட்டு (பகைவரின்) கொடுங்குருதி தோயப்பெற்ற வேல்களைப் போன்று. மதுவால் சிவந்து போனதன் கண்களால் பார்க்கின்ற;* ***மாதர் மெய் உகும் பொடித்த வேர்*** *- ஒருத்தியின் உடம்பில் சிந்தும் வியர்வை நீர்;* ***புறத்து உகு நறவம் போன்றது*** *- உடலுட் சென்ற மது வெளியே சிந்துவது போன்றிருந்தது. உள்ளே சென்ற மதுவே பெண்தன்மைக்கு மாறான இத்தகைய மெய்ப்பாடுகளைத் தோற்றுவித்தவாறு வெளியே சிந்தியது. குடித்தகள் உள்ளே நிரம்பி அங்கு இடமின்மையால். மயிர்க்கால் தோறும் வெளியே கசிவது போல. உடல் வெயர்த்தது என்பதாம். உள்ளே இடமில்லாது போனாலும். ஊற்றிக் கொண்டே இருப்பதால். நுண் துளை வழியாக உட்சென்றது வெளியே புறப்பட்டது எனினுமாம். 22*

***984. கனித் திரள் இதழ் பொதி செம்மை கண் புக.***
***நினைப்பது ஒன்று. உரைப்பது ஒன்று. ஆம் ஒர் நேரிழை.***
***தனிச் சுடர்த் தாமரை முகத்துச் சாபமும்***
***குனித்தது; பனித்தது. குழவித் திங்களே.****

***கனித்திரள் இதழ் பொதி செம்மை கண்புக*** *- கொவ்வைக் கனிபோன்று திரண்ட இதழ்களில் மிகுந்திருக்கிற செந்நிறம் கண்களில் போய்ச்சேர;* ***நினைப்பது ஒன்று உரைப்பது ஒன்று ஆம் ஒர் நேரிழை*** *- மனத்தால் நினைப்பது ஒன்றும். வாயால் சொல்வது ஒன்றுமாக ஆகிப்போன சிறந்த அணிகள் பூண்டாள் ஒருத்தியின்;* ***தனிச் சுடர்த் தாமரை முகத்துச் சாபமும்*** *- தனி ஒளி வீசும் (அவள்) தாமரை முகத்தில் உள்ள வில்போன்ற புருவங்களும்;* ***குனித்தது; குழவித்திங்கள் பனித்தது*** *- வளைந்தன; நெற்றியென்னும் பிறைச் சந்திரனும் வியர்த்தது.*

*கோபத்தின் குணங்கள் யாவும் கள் உண்பார்க்கு உளவாதல் சுட்டியவாறு. ''திங்களுள் தீத் தோன்றியற்று'' (கலி 41: 24) என்றாற் போல. ''திங்களும் வியர்த்தது'' என மதுவின் கொடுமை கூறியவாறு. மதுவுண்பார் உள்ளமும் உரையும் ஒன்றுபடாமல் நினைப்பது ஒன்றும் உரைப்பது ஒன்றும் ஆக ஆவார் என்பார். ''நினைப்பது ஒன்று உரைப்பது ஒன்று ஆம் ஒர் நேரிழை'' என்றார்.*

***985.*** **இலவு இதழ் துவர் விட. எயிறு தேன் உக.**
**முலை மிசை. கச்சொடு கலையும் மூட்டு அற.**
**அலை குழல் சோர்தர. அசதி ஆடலால்.**
**கலவி செய் கொழுநரும் கள்ளும் ஒத்தவே.**

**இலவு இதழ் துவர்விட** - *இலவம் பூவை ஒத்த (வாய்) இதழ்கள் (தமக்குரிய) செந்நிறம் நிங்கவும்;* **எயிறு தேன் உக** - *பற்களின் இடையே ஊறும்நீர் இனிக்குமாறு சுரக்கவும்;* **முலைமிசை கச்சொடு கலையும் மூட்டு அற** - *தனங்களின் மீது அணிந்த கச்சுடனே (இடையில் அணிந்த) ஆடையும் முடிச்சு அவிழவும்;* **அலைகுழல் சோர்தர** - *கூந்தல் அலைவதனால் சரிந்து வீழவும்;* **அசதி ஆடலால்** - *பரிகாசச் சிரிப்புத் தோன்றுவதனால்;* **கொழுநர் செய் கலவியும் கள்ளும் ஒத்த** - *கணவர் (தம்மோடு) செய்கின்ற கலவியும். மாதர்உண்ட கள்ளும் சமம் ஆயின.*

*எச்சங்கள் குறிக்கும் செயல்கள் எல்லாம் கலவிக்கும் கள்ளுக்கும் பொதுவாதலால். ''கொழுநர் செய் கலவியும் ''என மாற்றிக்'' கூட்டப்பட்டது. உதடு வெளுத்தல். பல் அடியில் இனிய நீர் சுரத்தல். ஆடையும் கச்சும் அவிழ்தல். கூந்தல் குலைதல். பரிகசித்தல் ஆகியவை மது வுண்ணல். கலவி புரிதல் ஆகிய இரு செயல் செய்வார்க்கும் பொது நிகழ்வுகள் ஆகும். அசதியாடல் - பரிக சித்தல். ''ஒறுக்கப் படுவார் இவர் என்று அங்கு அசதியாடி'' (சீவக. 1871) என்பது காண்க; கள் இச் செயல்களைச் செய்தலால். இவற்றைச் செய்யும் கொழுநரோடு அது ஒத்தது எனக் கிடந்தவாறே பொருள் கொள்ளினும் அமையும். ''கொழுநரும் கள்ளும் ஒத்த'' - திணை வழுவமைதி. உண்டாட்டுப் படலமாதலால் கள்ளுக்குச் சிறப்பளித்து அஃறிணை முடிவினை உயர்திணைக்கும் ஈந்தார். கள் உண்பார் அஃறிணை முடிவினை உயர்திணைக்கும் ஈந்தார். கள் உண்பார் அஃறிணைக்குச் சமம் எனக் கருதினார்.*

***986.*** **கனை கழல் காமனால் கலக்கம் உற்றதை.**
**அனகனுக்கு அறிவி' என்று. அறியப் போக்கும் ஓர்**
**இன மணிக் கலையினாள். 'தோழி! நீயும் என்**
**மனம் எனத் தாழ்தியோ? வருதியோ?' என்றாள்.**

***கனைகழல் காமனால் கலக்கம் உற்றதை*** - *ஒலிக்கும் வீரக்கழல்களை யணிந்த காமதேவனால். (காம நினைவால்) யான் கலக்கம் உற்றுள்ளேன் என்பதை;* ***அனகனுக்கு அறிவி*** - *குற்றமற்ற (என்) கணவனுக்கு அறிவிப்பாயாக;* ***என்று அறியப் போக்கும் ஓர் இனமணிக் கலையினாள்*** - *என்று கூறி (தன்தோழியை). பிரிந்துள்ள தன் கணவனிடம் அனுப்ப முன்வந்த உயர் மணிகள் அழுத்திய மேகலையணிந்த மாது ஒருத்தி;* ***தோழி நீயும் என் மனம் எனத் தாழ்தியோ? வருதியோ? என்றாள்*** - *(தன் தோழியை நோக்கி) தோழியே! நீயும் என் மனத்தினைப் போல (அவனிடத்திலேயே) தங்கி விடுவாயோ? மீண்டு வருவாயோ? என்று (ஐய வினா) எழுப்பினாள்.*

*என் மனம் என்னிடம் இல்லை என்பதை நயமுற விளக்கியவாறு. உண்டு களித்திருக்கும் இப்போது. அவன் இல்லாமையால் மன்மதன் அம்பால் மிக வருந்துகின்றேன்; அவனைச் சென்று உடனே அழைத்து வருவாயா? அல்லது என் மனம் போல. அவனிடமே இருந்து விடுவாயா? என்று ஓயாது அவனையே நினைத்திருக்கும் மனத்தை. தோழிக்குக் கூறுவாள் போல் சாடுகிறாள். நெஞ்சம் அவனிடம் சென்றது. "கெட்டார்க்கு நட்டார் இல் என்பதோ நெஞ்சே நீ. பெட்டாங்கு அவர்பின் செலல்" (திருக். 1293*

*25*

***987. மான் அமர் நோக்கி. ஓர் மதுகை வேந்தன்பால்.***
***ஆன தன் பாங்கியர் ஆயினார் எலாம்.***
***போனவர் போனவர் தொடரப் போக்கினாள்;***
***தானும். அங்கு. அவர்கள்பின் தமியள் ஏகினாள்.***

***மான் அமர் நோக்கி ஓர் மதுகை வேந்தன்பால்*** - *மான்கள் விரும்பும் கண்ணுடையாள் ஒருத்தி. ஒப்பற்ற வலிமை வாய்ந்த (தன்) கணவனிடத்தில்;* ***ஆனதன் பாங்கியர் ஆயினார் எலாம்*** - *(தனக்கு) விருப்பமான தோழியர் ஆனவரையெல்லாம்;* ***போனவர் போனவர் தொடரப் போக்கினாள்*** - *(பின்னே) சென்றவர்கள் (முன்னே) சென்றவர்களைத் தொடருமாறு தொடர்ந்து அனுப்பிய வண்ணம் இருந்தாள்;* ***தானும் அங்கு அவர்கள் பின் தமியள் ஏகினாள்*** - *(இனி அனுப்பத் தோழியர் இல்லை யாதலால்) தன்னைத் தானே தூதாக்கி. கணவன் இருக்குமிடம் நோக்கி (இவளும்) அவர்கள் பின்னே தனியாளாய்ப் புறப்பட்டாள்!*

*மதுவுண்டவுடன் எழுந்த காம வேட்கையால். கணவனிடம் சென்று சேரும் கால இடை வெளி தராமலேயே தூதனுப்பித் தூதனுப்பி இனி அனுப்ப யாரும் இல்லை யாதலால் தானும் தூதானாள் எனத் தலைவியின் ஆரா அன்பும் தீரா வேட்கையும் அறிவித்தவாறு. கால இடை வெளியின்றி அடுக்கடுக்காகத் தோழியரை அனுப்பிக் கொண்டே இருந்தாள் என்பதனை. "போனவர் போனவர் தொடரப் போக்கினாள்" எனும் அடுக்கால் உணர்த்திய திறம் காண்க. மிக வேட்கை உயர்வு பாராது ஆதலால். தான் தலைவி நிலையிலிருந்தும் தாழ்ந்து தானும் தூதியானாள் என்பார். "தானும் அங்கு அவர்கள் பின் தமியள் ஆயினாள்" என்றார்.*

***988. விரை செய் பூஞ் சேக்கையின் அடுக்க மீமிசை.
கரை செயா ஆசை அம் கடல் உளாள். ஒரு
பிரைச மென் குதலையாள். கொழுநன் பேர் எலாம்
உரைசெயும் கிள்ளையை உவந்து புல்லினாள்.***

***விரைசெய் பூஞ்சேக்கையின் அடுக்கம் மீமிசை*** - *மணம் மிகும் மலர்ப்படுக்கையின் அடுக்குகளின் மேலே;* ***கரை செயா ஆசை அம் கடல்உளாள்*** - *கரையிட்டுத் தடுக்க இயலாக் காதல் கடலில் மூழ்கியுள்ளவளான;* ***ஒரு பிரைசமென் குதலையாள்*** - *தேன் என இனிக்கும் மழலை மொழி உடையாள் ஒருத்தி;* ***கொழுநன் பேர் எலாம் உரைசெயும் கிள்ளையை*** - *(தன்) கணவனுக்கு உரிய பெயர்களையெல்லாம் சொல்லுகின்ற கிளியை (எடுத்து);* ***உவந்து புல்லினாள்*** - *(உள்ளம்) மகிழ்ந்து தழுவிக் கொண்டாள்.*

*''அடுத்த மீமிசை'' என்பதிலும் ''அடுக்க மீமிசை'' என்பது இடத்திற்கேற்ற பொருட் சிறப்புறுதலால் அப்பாடமே கொள்ளப் பெற்றது.*

*கணவனைப் பிரிந்த பெருந் துன்பப் பெருக்கில் வருந்துவார்க்குக் கணவன் பெயர் கேட்டலும் பேரின்பம் தரும் செயல் ஆகும். ஆதலின். கணவன் பெயர் அனைத்தும் உரைக்கின்ற கிளி மிகப்பேரின்பம் தருவது ஒன்று ஆதலின். ''கொழுநன் பேர் எலாம் உரை செயும் கிள்ளையை உவந்து புல்லினாள்'' என்றார். ''ஆவதொன்று அருளாய் எனது ஆவியை. கூவுகின்றிலை. கூறலை சென்று எனா பாவை பேசுவபோல கண் பனிப்புறப் பூவையோடும் புலம்?புகின்றார் சிலர்'' (கம்ப: ) என்பதும் இங்கு ஒப்பு நோக்கற்குரியது.*

***989. மன்றல் நாறு ஒரு சிறை இருந்து. ஓர் வாணுதல்.
தன் துணைக் கிள்ளையைத் தழீஇ. 'என் ஆவியை
இன்றுபோய்க் கொணர்கிலை; என் செய்வாய் எனக்கு?
அன்றிலோடு ஒத்தி' என்று அழுது. சீறினாள்.***

***மன்றல் நாறு ஒருசிறை இருந்து ஓர் வாள்நுதல்*** - *மணம் வீசும் ஓர் இடத்திலே இருந்து கொண்டு. ஒளிபெறும் நெற்றியை யுடையாள் ஒருத்தி;* ***தன் துணைக் கிள்ளையைத் தழீஇ*** - *தனக்குத் துணையாகவுள்ள கிளியைத் தழுவி;* ***என் ஆவியை இன்று போய்க் கொணர்கிலை*** - *என் உயிர் நாயகனை இன்று (தூதாகப்) போய் அழைத்து வந்தாய் அல்லை;* ***என் செய்வாய் எனக்கு*** - *(இந்த உதவியைத் தவிர வேறு) எனக்கு என்ன உதவி செய்ய இருக்கிறாய்?;* ***அன்றிலோடு ஒத்தி*** - *(பிரிந்தாரைத் தன் ஒலியால் வருத்தும்) அன்றிலைப் போலவே நீயும் இருக்கிறாய்;* ***என்று அழுது சீறினாள்*** - *என்று கூறிப் புலம்பி வெகுண்டு கொதித்தாள்.*

*பிரிந்தாரைச் சேர்க்கும் உதவியிலும் பெரிய உதவி உலகில் வேறு இல்லை. நீ. போய் அவரை அழைத்து வாராமல் அவர் பெயரை மட்டும் ஓயாது கூவி என்னை துயர் உறுத்துகிறாய்; அன்றில் வெளியே கூவுகிறது; நீ உள்ளே கூவுகிறாய். ஆக. துயர் உறுத்துவதில் இரண்டுபேரும் ஒன்றே; இடமே வேறுபாடு என்கிறாள். மேல் பாடலில் கிளி கூவலில் மகிழ்ந்தாள். இப்பாடலில். அதுவும் வெறுத்தாள். பிரிந்தார்க்குத் துயர்தரும் பொருள்களுள் அன்றிலும் ஒன்று.*

***990. வளை பயில் முன்கை ஓர் மயில் அனாள்தன்கு***
***இளையவள் பெயரினைக் கொழுநன் ஈதலும்.***
***முளை எயிறு இலங்கிட முறுவல் வந்தது;***
***களகள உதிர்ந்தது கயற்கண் ஆலியே.***

**கொழுநன் இளையவள் பெயரினைத் தனக்கு ஈதலும்** - *(தன்) கணவன். (தனக்கு) இளையாளாய் வந்தாள் பெயரை (மது மயக்கால்) தனக்கு இட்டு அழைத்தலும்;* **வளை பயில் முன்கை மயில் அனாள்** - *வளைகள் நெருங்கிய கைகளையுடைய மயில்போன்ற ஒருத்திக்கு;* **முளை எயிறு இலங்கிட முறுவல் வந்தது** - *(தன் கணவனின் சொற் சோர்வுகண்டு) முல்லை மொக்குகளைப் போன்ற பற்கள் ஒளிருமாறு (முதலில் அவளுக்குப்) புன்னகை வந்தது;* **கயற்கண் ஆலி களகள வென உதிர்ந்தது** - *பின்பு. தன் கணவன் (இளையாள்மாட்டு தன் மாட்டுக் கொண் டிருப்பதைவிடப் பேரன்பு கொண்டு அவள் பேர் மொழிகிறான் என்னும் நினைவு வந்தவுடன்) அவள் கயல்போன்ற கண்களிலிருந்து களகளவென்று கண்ணீர்த் துளிகள் சிந்தின.*

*கணவன் அன்பு பங்கிடப் பெறுதலைப் பொறாத காரிகையர் மன இயல்பு விளக்கியவாறு. களகள விரைவும் மிகுதியும் குறித்த இரட்டைக் கிளவி. மது மயக்கால் விளைந்த சொற்சோர்?வு என்ற நினைப்பில் முதலில் நகையும். இளை யாள் மாட்டு அன்புடையான் என அறிந்த நினைப்பில் அழுகையும் சேர விளைந்தன.*

***991. செற்றம் முன் புரிந்தது ஓர் செம்மல். வெம்மையால்***
***பற்றலும். அல்குலில் பரந்த மேகலை***
***அற்று உகு முத்தின் முன்பு. அவனி சேர்ந்தன.***
***பொன்-தொடி ஒருத்தி கண் பொறாத முத்தமே.***

**முன் செற்றம் புரிந்தது ஓர் செம்மல்** - *முன்னர்ச் செய்த தவறு நினைந்த தலைவன் ஒருவன்;* **வெம்மையால் அல்குலில் பரந்த மேகலை பற்றலும்** - *(தன் மனைவி. தன் அத் தவற்றை நினைந்து கொண்டுள்ள ஊடலைத் தீர்க்கும்) விருப்பத்தால். அவள் இடைப்பகுதியில் பரவியிருந்த மேலையைக் (கையினால்) பிடித்தவுடன்;* **அற்று உகு முத்தின் முன்பு** - *(ஊடல் நீடி அவள் எழத்தொடங்கியதால்) அம்மேகலையில் இருந்த முத்துக்கள் எல்லாம் அறுந்து (நிலத்தில்) வீழும் முன்பாகவே;* **பொற்றொடி ஒருத்திகண் பொறாத முத்தம் அவனி சேர்ந்தன** - *பொன்னாலான வளையணிந்த அம்மங்கையின் கண்களிலிருந்து (கணவன் செயலைப் பொறுக்காமல் எழுந்த) கண்ணீர் முத்துக்கள் நிலத்தில் வீழ்ந்தன.*

*பொற்றொடி - பொன்தொடி. அணி முத்து வீழும்முன் கண் மணிமுத்து வீழ்ந்தன என்று கணவன் குறை திருத்தும் மகளிர் நிறைச் சிறப்புக் கூறியவாறு. இடையிலிருந்து விழ்வது முன்னும். கண்ணிலிருந்து வீழ்வது பின்னும் (இட உயர்வு கருதின்) வீழ்ந்திருக்க வேண்டும். ஆனால். உணர்ச்சியின் உயர்ச்சியினால் இடை முத்தை. கண் முத்து முந்திக் கொண்டது எனக் கூறுவார்.*

***992. தோடு அவிழ் கூந்தலாள் ஒருத்தி. 'தோன்றலோடு***
***ஊடுகெனோ? உயிர் உருகு நோய் கெடக்***
***கூடுகெனோ? அவன் குணங்கள் வீணையில்***
***பாடுகெனோ?' எனப் பலவும் பன்னினாள்.***

***தோடு அவிழ் கூந்தலாள் ஒருத்தி*** *- மலர் இதழ்கள் மலரப்பெற்ற கூந்தலையுடையாள் ஒரு மங்கை;* ***தோன்றலோடு ஊடுகெனோ?*** *- (பிரிந்துள்ள என் கணவன் வரப்பெற்றால்) அவனோடு நான் (பிரிவுத் துயர் தந்ததற்காக) ஊடல் கொள்வேனா;* ***உயிர் உருகும் நோய்கெடக் கூடு கெனோ?*** *- என் உயிரை உருக்கிக் கொண்டுள்ள காமநோயைத் தீர்த்துக் கொள்ள (உடனே அவனைக்) கூடுவேனோ?;* ***அவன் குணங்கள் வீணையில் பாடுகெனோ?*** *- (அவனுக்கு உவகை மிகுமாறு) அவன் குணங்களை வீணையில் இசைத்துப் பாடுவேனோ? என்று பலவும் பன்னினாள் - (அவன் வந்தவுடன் செய்ய வேண்டியவை எவை எவை) என்று (இவ்வாறு) பலவழிகளை (மனத்துள்) ஆராய்ந்து கொண்டிருந்தாள்! கொண்டானை மகிழ்விக்கத் திட்டமிடத் திண்டாடும் மகளிர் உயர் பண்பு கூறியபடி. "புலப்பன் கொல்; புல்லுவேன் கொல்லோ; கலப்பென் கொல்; கண்ணன்ன கேளிர்வரின்" திருக்குறள் (1267*

*31*

***993. மாடகம் பற்றினள்; மகர வீணை தன்***
***தோடு அவிழ் மலர்க் கரம் சிவப்பத் தொட்டனள்;***
***பாடினள் - ஒருத்தி. தன் பாங்குளார்களோடு***
***ஊடினது உரைசெயாள். - உள்ளத்து உள்ளதே.***

***ஒருத்தி. ஊடினது தன் பாங்குளார்களோடு உரை செயாள்*** *- ஒரு மங்கை. தான் தன் கணவனோடு பிணங்கியுள்ளதைத் தன் தோழியரோடு வாய்திறந்து சொல்லாதவளாய்;* ***மாடகம் பற்றிய மகர வீணையை*** *- முருக்காணி பொருந்திய மகரமீன் வடிவமைந்த வீணையினை;* ***தன் தோடு அவிழ் மலர்க்கரம் சிவப்பத் தொட்டனள்*** *- இதழ்கள் விரிந்த தாமரைப் பூப்போன்ற தன் கரங்கள் சிவப்புறும்படி தொட்டு;* ***தன் உள்ளத்து உள்ளது பாடினள்*** *- தன் உள்ளத்துள்ளே மறைந்த ஊடற் காரணங்களைத் (தன் கணவன் மட்டுமே குறிப்பால் உணர்ந்து கொள்ளுமாறு வீணையிலிட்டுப்) பாடினாள்.*

*தன் உள்ளத்துள்ளதைப் பாங்கிமார் அறியின். அவனைத் தூற்றுவர்; அதனை இவள்பொறாள் ஆதலின். "உரை செயாள்; பாடினாள்" என்றார். கணவன் குறையைப் பிறர் அறியாமல் பேணும் பெண்மையின் தனிப்பண்பு சுட்டினார்.*

***994.** **குழைத்த பூங் கொம்பு அனாள்
ஒருத்தி. கூடலை
இழைத்தனள்; அது. அவள்
இட்டபோது எலாம்
பிழைத்தலும். அனங்க வேள்
பிழைப்பு இல் அம்பொடும்
உழைத்தனள்; உயிர்த்தனள்.
உயிர் உண்டு என்னவே.***

***குழைத்த பூங்கொம்பு அ(ன்)னாள் ஒருத்தி** - தளிர்த்துள்ள பூங்கொடி போன்றாள் ஒருமங்கை; **கூடலை இழைத்தனள்** - (தன் கணவன் வருகையை யறிய)க் கூடல் சுழிகளை (விரலால்) கீறினாள்; **அது அவள் இட்ட போது எலாம் பிழைத்தலும்** - (அக்கூடற்சுழிகள் கூடும் என்று நினைத்துக்) கீறிய போதெல்லாம் கூடாமல் போனதும்; **அனங்க வேள் பிழைப்பு இல் அம்பொடும் உழைத்தனள்** - மன்மதன் இட்ட பிழையாத அம்புகளால் தூளாக்கப்பெற்று வருந்தினள்; **உயிர் உண்டு? என்ன உயிர்த்தனள்** - உயிர் இவளுக்கு உண்டோ என்னும் ஐயம் தீர்க்க மூச்சு விட்டனள். கணவனைக் கூடுவது கூடுமோ என அறிய. விழிகளை மூடித் தரையில் சுழியிட்டு. சுழியின் இருமுனையும் கூடின். கணவனைக் கூடலாகும் என அறியும் ஒரு பண்டை வழக்கு. "கூடற் பெருமானைக் கூடலார் கோமானைக் கூடப்பெறுவேனேல் கூடு என்று. கூடல் இழைப்பாள் போல் கூடல் இழையாது இருந்தாள் பிழைப்பின் பிழைபாக்கு அறிந்து" (முத்தொள். 31*

*33*

***995.** **பந்து அணி விரலினாள் ஒருத்தி. பையுளாள்.
சுந்தரன் ஒருவன்பால் தூது போக்கினாள்;
'வந்தனன்' என. கடை அடைத்து மாற்றினாள்;
சிந்தனை தெரிந்திலம்; சிவந்த. நாட்டமே.***

***பந்து அணிவிரலினாள் ஒருத்தி பையுளாள்** (பந்தாடுகையில் ஏந்திய) பந்துக்கு அழகு செய்யும் விரலுடையாள் ஒருத்தி. பிரிவுத் துயரம் உடையவளாய்; **சுந்தரன் ஒருவன்பால் தூது போக்கினாள்** - கட்டழகில் ஒப்பற்றவனாகிய தன் கணவனிடம் (தோழியைத்) தூது அனுப்பினாள்; **வந்தனன் எனக் கடை அடைத்து மாற்றினாள்** - அவன் வந்தானாக வாயிற்கதவை அடைத்துத்(உள்ளே வர இயலாதவாறு) தடுத்தாள்; **சிந்தனை தெரிந்திலம்; நாட்டம் சிவந்த** - (அவளது) எண்ணம் இன்னதென யாம் அறிய இயலவில்லை. (அவள்) கண்கள் (மட்டும்) (வெகுளியால்) சிவந்த வண்ணம் இருந்தன.*

*'தூது வந்தால் அன்றி. வர இயலாதோ?' எனக் கணவன் மாட்டுச் சினத்தாள் போலும். இல்லம் தன் சாம்ராச்சியம் ஆதலின் தலைவன் தன் மாட்டு அன்பில்லாத எதிரி எனக்கருதி. மன்னர் கோட்டைக் கதவை யடைத்துத் தாழிடல் போல. தன் இல்லக்கதவினை யடைத்துத் தாழிட்டாள் என்க. உண்மை அன்பு இல்லையென்று குற்றம் சுமத்தியபடி. நுணுகியுணரவேண்டிய புலவி இது வாதலின் இது புலவிநுணுக்கம்.*

***996.* உய்த்த பூம் பள்ளியின் ஊடல் நீங்குவான்**
**சித்தம் உண்டு. ஒருத்திக்கு; அது. அன்பன் தேர்கிலான்;**
**பொய்த்தது ஓர் மூரியால் நிமிர்ந்து போக்குவாள்.**
**'எத்தனை இறந்தன கடிகை. ஈண்டு?' என்றாள்.**

**உய்த்த பூம்பள்ளியின் ஊடல் நிங்குவான்** - *(தோழி) அமைத்திருந்த மலர்ப்படுக்கையில். (தான் கணவனிடம் கொண்ட) ஊடலை முடித்துக்கொள்ள;* **ஒருத்திக்குச் சித்தம் உண்டு** - *அவளுக்கு எண்ணம் உண்டு;* **அது. அன்பன் தேர்கிலன்** - *அந்த எண்ணத்தை அவள் கணவன் அறியாதவனாக இருந்தான்;* **பொய்த்ததோர் மூரியால் நிமிர்ந்து போக்கினாள்** - *(அப்போது. ஒரு தூக்கம் தூங்கியெழுந்தவள் போலப்) பொய்யாகக் (கைகால்களை அவன் மேல் படும்படியாக)ச் சோம்பல் முறித்தாளாய்;* **எத்தனை இறந்தன கடிகை ஈண்டு என்றாள்** - *'இப்பொழுது. எத்தனை நாழிகைகள் கழிந்ததுள்ளன?' என்று (தூக்கத்தில் அனைத்தும் மறந்தவள் போல்) கேட்டாள். தன் பெருமையும் மதிப்பும் இழவாமல். பெண்மை ஊடலை. முடித்துக் கொள்ளும் நுட்பம் சுட்டியபடி. "ஊடல். உணர்தல். புர்தல் இவை காமம் கூடியயார் பெற்ற பயன்" (திருக். 1109) என்பது வள்ளுவ வாசகம். நீங்குவான் - நீங்க; வினை எச்சம் தூக்கத்தில் காலம் உணர இயலாது ஆதலின். "எத்தனை இறந்தன கடிகை?" என்று வினாவினாள்.*

***997.* விதைத்த மென் காதலின் வித்து. வெஞ் சிறை**
**இதைப் புனல் நனைத்திட முளைத்ததே என -**
**பதைத்தனள். ஒருத்தன்மேல். ஒருத்தி பஞ்சு அடி**
**உதைத்தலும். - பொடித்தன. உரோம ராசியே.**

**ஒருத்தி. பதைத்தனள் ஒருத்தன் மேல் பஞ்சு அடிஉதைத்தலும்** - *ஒரு மங்கை. (தன் கணவன்மேல் கொண்ட ஊடலால்) பதைபதைத்தவளாகி. அவனைத் தன் பஞ்சனைய மெல்லடியால் உதைத்தவுடன்;* **வெஞ்சிறை இதைப்புனல் நனைத்திட** - *கடிய வேலியையுடைய (உடம்பாகிய) தினைப்புனத்தில் (உதையால் உண்டாகிய இன்பப் புனல்) நனைத்ததனால்;* **விதைத்த மென்காதலின் வித்து முளைத்ததே என** - *விதைக்கப்பட்ட மெல்லிய காதலாகிய முளைகள் (உடனே) முளைத்து விட்டதைப்போல;* **உரோம ராசி பொடித்தன** - *அவன் உடம்பில் உள்ள மயிர்க்கூட்டங்கள் சிலிர்த்து நின்றன.*

*பிற விதைகள் காலந்தாழ்த்து முளைக்கும்; காதல் விதை உடனே முளைக்கும் எனக் கூறி வியந்தவாறு. அவள் பாதம் பட்டவுடன் அவன் புளகாங்கிதம் அடைந்தான்; உரோமஞ்சலி உண்டாயிற்று என்பதை அழகுற உருவகித்தார். உடம்பைக் கொல்லையாகவும். காதலை வித்தாகவும். விதைத்த இன்பத்தை நீராகவும். உரோம ராசியைக் காதல் முளையாகவும் உருவகித்தார். ஒருத்தி பதைத்தனள்; உதைத்தலும் இதைப் புனல் நனைத்திட. விதைத்த மென்காதலின் வித்து முளைத்தவே யென உரோம ராசி பொடித்தன எனக் கூட்டுக. 36*

***998.*** **பொலிந்த வாள் முகத்தினான்.**
**பொங்கி. தன்னையும்**
**மலிந்த பேர் உவகையால். -**
**மாற்று வேந்தரை**
**நலிந்த வாள் உழவன். ஓர்**
**நங்கை கொங்கை போய்**
**மெலிந்தவா நோக்கி. - தேன்**
**புயங்கள் வீங்கினான்.**

***மாற்றுவேந்தரை நலிந்த வாள் உழவன்*** *- பகை மன்னர்களை வருத்திய வாட்படையையுடைய வீரன் ஒருவன்;* **ஓர் நங்கை கொங்கை போய் மெலிந்தவா நோக்கி** *- கொங்கைகள் (தன் பிரிவினால்) மெலிந்து போய் இருப்பதைப் பார்த்து;* **பொங்கி. தன்னையும் மலிந்த பேர் உவகையன்** *- (தன் மேல் அவள் வைத்துள்ள காதலின் அளவை அம்மெலிவால் கண்டு) (மனம்) பொங்கி. தன்னையும் மிஞ்சிய பேருவகையடைந்தவனாய்;* **புயங்கள் வீங்கினான்** *- தன் தோள்கள் பூரித்து நின்றான்.*

*பிரிவில். கற்புடையாள் மெலிவு. கணவன் பூரிப்புக்குக் காரணமாம் என்றபடி. மாற்று வேந்தரை நலியும் வாள் உழவன் பெருமை முழுவதும் இவள் மெலிவுக்குள் அடங்கிற்று என்றபடி.*

***999.*** **ஏய்ந்த பேர் எழிலினான் ஒருவன் எய்தினான்.**
**வேய்ந்தபோல் எங்கணும் அனங்கன் வெங் கணை**
**பாய்ந்த பூம் பள்ளியில் படுத்த பல்லவம்**
**தீய்ந்தன நோக்கினன். திகைக்கும் சிந்தையான்.**

***ஏய்ந்த பேர் எழிலினான் ஒருவன்*** *- பேரழகு அமைந்தவனான ஒருவன்;* **எய்தினன்** *- (பிரிவால் வருந்தும் தன் மனையாள் இருக்கும் பள்ளியறையை) அடைந்தான்;* **அனங்கன் வெங்கணை வேய்ந்த போல் எங்கணும் பாய்ந்து பூம்பள்ளியில்** *- மன்மதனது கொடுங்கணைகள் எங்கும் பரவிக் கிடப்பனபோல் மலர்கள் பரவிக் கிடந்த மலர்ப்படுக்கையில்;* **படுத்த பல்லவம் தீய்ந்தன நோக்கினன்** *- (அவள் சாய்ந்த போது) பரப்பிய தளிர்கள் அத்தனையும் கருகிப் போவதைப் பார்த்தான்;* **திகைக்கும் சிந்தையான்** *- (தன் பிரிவு பாதித்துள்ள அளவினை அறிந்து) திகைப்புற்ற மனமுடையோன் ஆனான்.*

*தன்னை அவன் பிரிவு எவ்வளவு பாதித்துள்ளது என்பதனைத் தளிர்களின் மேல் சாய்ந்து காட்டினள் என்க. வெப்பத்தைக் குறைக்க. படுக்கையில் பரப்பியுள்ள தளிர்கள் இவன் இல்லாத போது. காமன்விட்ட கணைகள் போன்றிருந்தன என்பார். ''அனங்கன் வெங்கணை வேய்ந்த போல் பாய்ந்த பல்லவம்'' என்றார். ''எழிலினான் ஒருவன் எய்தினன்; பல்லவம் தீய்ந்தன நோக்கினன்; திகைக்கும் சிந்தையான்'' எனக் காட்டுக.*

***1000. ஊட்டிய சாந்து வெந்து உலரும் வெம்மையால்.-***
***'நாட்டினை அளித்தி நீ' என்று நல்லவர்.***
***ஆட்டு நீர்க் கலசமே என்னல் ஆன - ஓர்***
***வாள் தொழில் மைந்தற்கு. ஓர் மங்கை கொங்கையே.***

***ஊட்டிய சாந்து வெந்து உலரும் வெம்மையால்*** *- ஊட்டப்பெற்ற சந்தனக் குழம்பு வெந்து உலர்வதற்குக் காரணமான வெம்மையோடு கூடிய;* ***ஓர் மங்கை கொங்கை*** *- ஒரு மங்கையினுடைய தனங்கள்;* ***ஓர் வாள் தொழில் மைந்தற்கு*** *- வாளால் (போர்த்) தொழில் புரியும் ஒரு வீரனுக்கு;* ***நீ நாட்டினை அளித்தி என்று நல்லவர்*** *- நீ இந்த நாட்டினை (உன் போர்த்திறத்தால்) காப்பாயாக என்று கூறி. நல்லோர்கள்;* ***ஆட்டுநீர்க்கலசம் என்னல் ஆன*** *- பட்டாபிடேகஞ் செய்ய வைத்துள்ள (புனித) நீர்க்கலசங்களைப் போன்றிருந்தன.*

*இன்ப நாட்டிற்குரிய கலசங்களாதலின் இவ்வாறு கூறினார்; தற்குறிப்பேற்ற அணி.*

*நாடுகாக்கும் போருக்காகப் பிரிந்து. வென்றி வாகை சூடி வரும் தவைனை வரவேற்கப் பூரண கும்பமேந்தி நிற்கின்றாள் என்க. அவன் பெற்ற துன்பம் எல்லாம் நீங்க இன்பநாட்டிற்கு அழைக்கும் பொற்கலசத்தோடு. 'அந்த நாட்டை அளித்தாய்; இந்த நாட்டினையும் ஏற்பாயாக என்று வரவேற்பது போன்றிருந்தன பொங்கும் கொங்கைப் பொற்குடங்கள் என்பது கருத்து. 39*

***1001. பயிர் உறு கிண்கிணி. பரந்த மேகலை.***
***வயிர வான் பூண் அணி. வாங்கி நீக்கினாள்;***
***உயிர் உறு தலைவன்பால் போக உன்னினாள்;***
***செயிர் உறு திங்களைத் தீய நோக்கினாள்.***

*(ஒருத்தி)* ***உயிர்உறு தலைவன்பால் போக உன்னினாள்*** *- (ஒரு மங்கை) தன் உயிர் அனைய கணவனிடம் பிரிவுத்துயர் தாங்காது உடனே போக நினைத்தாள்;* ***பயிர்உறு கிண்கிணி. பரந்த மேகலை. வயிர வான்பூண் அணிவாங்கி நீக்கினாள்*** *- (பிறர் அறியச் செய்து விடும் இவையென்று) ஒலிமிகுகின்ற கிண்கிணிகளையும். பரவிய மேகலையையும். உயர்ந்த வயிரமணி அணிகளையும் கழற்றிப் போக்கினாள்;* ***செயிர் உறு திங்களைத் தீய நோக்கினாள்*** *- பிரிவில் தன் ஒளியால் வருத்திய பகைத்திங்கள் (இப்போதும்) எல்லோரும் அறிய வெளிச்சம் தருவது கண்டு (அதனைக் கண்களில் கனல் எழ நோக்கினாள்.*

*பிறர் காணாமற் செல்ல அணிகளைக் கழற்றி எறிந்தமை போல். வானத்துத் திங்களை ஒன்றும் செய்ய இயலாமை பற்றிக் கனல் எழ நோக்கினாள் என்க. இரகசியமாகச் செய்யும் பணிகட்கு ஒலிக்கும் இயல்புடையார் ஆகார். ஆதலின். "தலைவன் பால் போக உன்னினாள்.....பூண் அணி வாங்கி நீக்கினாள்" என்றார். "கலன் கழித்து அகல நீத்தார். அறைபறையனைய நீரார் அருமறைக்கு ஆவரோதான்?" (கம்ப. 1017) என்பார் பின்னும்.*

***1002.** **ஏலும் இவ் வன்மையை என் என்று உன்னுதும்-***
***ஆலை மென் கரும்பு அனான் ஒருவற்கு. ஆங்கு. ஒரு***
***சோலை மென் குயில் அனாள் சுற்றி வீக்கிய***
***மாலையை நிமிர்ந்தில. வயிரத் தோள்களே?***

**ஆலைமென் கரும்பு அனான் ஒருவற்கு** - *ஆலையில் அரைபட்ட மெல்லிய கரும்பு போலப் (பிரிவுத் துயரால்) வருந்திய ஒரு வீரனுக்கு;* ***ஆங்கு ஒரு சோலைமென் குயில் அனாள்*** - *அங்கு. சேலையில் உள்ள மெல்லிய குயில் போன்ற குரல் உடையாள் ஒருத்தி;* ***சுற்றி வீக்கிய மாலையை*** - *(அவனைச்) சுற்றிக் கட்டிய (மலர்) மாலையை;* **வயிரத் தோள்கள் நிமிர்ந்தில** - *அவ்வீரனுடைய வயிரம் போன்ற வலிய தோள்கள் மீறி நிமிர்ந்தெழ இயலவில்லை;* ***ஏலும் இவ்வன்மையை என் என்று உன்னுதும்?*** - *அவனைக் கட்டியுள்ள இம் மாலையில் அமைந்துள்ள வலிமையை என்னென்று கருதுவோம்?*

*காதலின் வலிமையை மாலையின் மேலிட்டுக் கூறியவாறு. வயிரதத்தோள்கள் அவனுடையவை - ஆனால். மாலையை அறுக்க மாட்டாத வயிரத்தோள்கள் என வியந்தார். மாலையால் காதலரை மங்கையர் கட்டுதல்: "எல்லியம்போது இனிதிருத்தல் இருந்ததோர் இடவகையில். மல்லிகைமா மாலை கொண்டு அங்கு ஆர்த்தமோர் அடையாளம்" (பெரியாழ். திரு. 3: 10 :2) ; "கங்குல் பால் புகுந்த கள்வன் இவன் எனக் கதுப்பில் தாழ்ந்த தொங்கலால் முன்கை யாத்து" (சீவக. 1988) என வருதல் காண்க.*

***1003.** **சோர் குழல் ஒருத்தி தன் வருத்தம் சொல்லுவான்.***
***மாரனை நோக்கி. ஓர் மாதை நோக்கினாள்;***
***காரிகை இவள். அவள் கருத்தை நோக்கி. ஓர்***
***வேரி அம் தெரியலான் வீடு நோக்கினாள்.***

**சோர் குழல் ஒருத்தி** - *தாழ்ந்த கூந்தலையுடையாள் ஒருத்தி;* **தன் வருத்தம் சொல்லுவான்** - *தனது வருத்தத்தைச் சொல்லும் பொருட்டு;* ***மாரனை நோக்கி ஓர் மாதை நோக்கினாள்*** - *சித்திர கூடத்திலிருந்து மன்மதனின் ஓவியத்தைப் பார்த்து. தன் தோழியை நோக்கினாள்;* ***காரிகை இவள். அவள் கருத்தை நோக்கி*** - *அத்தோழி. தான் மன்மதன் கணையால் வருந்தும் எனும் கருத்தை. (குறிப்பால்) அவள் உணர்த்துகிறாள் என்பதை தன் (குறிப்பால் அறிந்து);* **ஓர்வேரியந் தெரியலான் வீடுநோக்கினாள்** - *தேனுடைய மாலையை யணிந்த அவள் கணவன் இருக்கும் மனையை நோக்கி நடக்கலுற்றாள்.*

*"தாம் உறு காமத்தன்மை தாங்களே உரைப்பது என்பது அருங்குல மகளிர்க்கு ஆகாது" (கம்ப.) ஆதலின். குறிப்பால் உணர்த்தியவாறு. சொல்லுவான் - வினையெச்சம். காரணப்பொருட்டு. மன்மதனை நோக்கியது; அவனால் படும் வருத்தம் உரைக்க. மாதை நோக்கியது: அவ்வருத்தம் உன்னால் தான் களையப்படவேண்டும் என்பது குறிக்க.... தோழி. இவள் வருத்தம் போக்க. அவன் வரவேண்டும் எனும் குறிப்புணர்ந்து கணவன் இருக்குமிடம் நோக்கினாள். "குறிப்பிற் குறிப்புணர் வாரை உறுப்பினுள் யாது கொடுத்தும் கொளல்" (திருக். 703*

*42*

***1004. சினம் கெழு வாட் கை ஓர் செம்மல்பால். ஒரு***
***கனங் குழை மயில் அனாள் கடிது போயினாள்;***
***மனம் குழை நறவமோ? மாலைதான் கொலோ?***
***அனங்கனோ? யார் கொலோ. அழைத்த தூதரே?****

***சினம்கெழு வாள்கை ஓர் செம்மல் பால்*** *-வெகுளி மிகும் வாளைக் கையில்கொண்டுள்ள ஒரு வீரனிடத்து;* ***ஒரு கனம் குழை மயில் அனாள் கடிது போயினாள்*** *- பொற்குழை யணிந்த மயில் போன்றாள் ஒருத்தி. விரைந்து சென்றாள்;* ***அழைத்த தூதர்*** *-(அவ்வாறு அவள் தானே விரைந்து செல்வதற்குக் காரணமாய்) அவளை அழைத்த தூதுக்குரியவர்;* ***மனம் குழை நறவமோ?*** *- மனத்தைக் குழையச் செய்யவல்ல மது தானோ?;* ***மாலை தான்கொலோ?*** *- மாலைப்பொழுது தானோ?;* ***அனங்கனோ? யார்கொலோ?*** *- மன்மதன் தானோ? வேறு யாரேனுமோ? (யார் அறிவார்?)*

*கொல் - அசைநிலைகள். ஐயம் எனினுமாம். மதுவும். மாலையும். மன்மதனும் நாண்துறந்து ஏகுமாறு காமவேட்கையை மிகுவிக்கும் பொருள்களாம் என்றவாறு அவளுக்குரிய நாணைப் பிரித்து அழைத்துச் செல்லுதலின் கள்ளோ என்றும். புலப்படா நிறம் தருதலின் மாலையோ என்றும். ஊரார் உற்று நோக்காது விரைந்து செலுத்துதலின் அநங்கனோ என்றும் ஒன்றும் துணிய இயலாமையின் ஐயுற்று யார்கொலோ என்றும் கூறினார். கள். நாணம் போக்கும் என்பது: "நாண் என்னும் நல்லாள் புறங்கொடுக்கும் கள் என்னும் பேணாப் பெருங்குற்றத் தார்க்கு" (திருக். 924) உடம்பும் உயிரும் வாடியக் காலும். என்னுற்றன கொல் இவையெனின் அல்லது. கிழவோற் சேறல் கிழத்திக்கு இல்லை" (தொல் பொருளியல் 9) என்பராதலின். மரபை மீறி இவள் காதலனை நோக்கிச் சென்றதற்குக் காரணம் மதுவா. மாலையா. மன்மதனா? இல்லை மூன்றுமா? எனத் தெரியோம் என்ற போக்கில் அதிகாரத்தால் மதுவைப் பழித்தவாறு.*

***1005. தொகுதரு காதற்குத் தோற்ற சீற்றத்து ஓர்***
***வகிர் மதி நெற்றியாள் மழைக் கண் ஆலி வந்து***
***உகுதலும். 'உற்றது என்?' என்று. கொற்றவன்***
***நகுதலும். நக்கனள். நாணும் நீங்கினாள்.***

***தொகுதரு காதற்குத் தோற்ற*** - *நிறைந்த காதலின் ஆற்றற்குத் தோற்றுப்போன: சீற்றத்து ஓர்வகிர்மதி நெற்றியாள் - வெகுளியையுடைய (எண்ணாட்) பிறை போன்று வகிர்ந்த நெற்றியினையுடையாள் ஒருத்தி;* ***மழைக்கண் ஆலிவந்து உகுதலும்*** - *(பிரிவுத் துயர் வெளிப்படுமாறு) மழைபோன்று கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகளை விட்டவுடன்;* ***உற்றது என்? என்று கொற்றவன் நகுதலும்*** - *உனக்கு என்ன நேர்ந்தது? என்று கணவன் சிரித்த அளவில்;* ***நாணும் நீங்கினாள்*** - *(அவளும் நாணம் நீங்கி);* ***நக்கனள்*** - *சிரித்து மகிழ்ந்தாள்.*

*நான் வந்தது அழுகைக் குரியதோ? சிரித்து மகிழ்தற்கு உரியதோ. மகிழ்விற்குரியது எனின் நீ சிரித்தாக வேண்டும் என. வேறு வழியின்றி. நாணம் விட்டுச் சிரித்தனள் என்க.*

***1006. பொய்த் தலை மருங்குலாள் ஒருத்தி. புல்லிய***
***கைத்தலம் நீக்கினள். கருத்தின் நீக்கலள்;***
***சித்திரம் போன்ற அச் செயல். ஓர் தோன்றற்குச்***
***சத்திரம் மார்பிடைத் தைத்தது ஒத்ததே.***

***பொய்த்தலை மருங்குலாள்*** - *(இடையுண்டென்பதைப்) பொய்யாக்க வல்ல (நுண்ணிய) இடையுடையாள் ஒருத்தி;* ***கருத்தின் நீக்கலள்; புல்லிய கைத்தலம் நீக்கினள்*** - *(தன்) மனத்திலிருந்து (கூடும் உணர்வை) நீக்காதவளாய். (மதுமயக்கால் புறத்தே தன் கணவனைத்) தழுவிய கைகளை எட்டும் எடுத்து விட்டாள்;* ***சித்திரம் போன்ற அச் செயல்*** - *விசித்திர நிகழ்ச்சி போன்ற அந்தச் செயல்;* ***ஓர் தோன்றற்கு - கணவன் ஒருவனுக்கு; சத்திரம் மார்பிடைத் தைத்தது ஒத்தது*** - *கைவாள் ஒன்று (அவன்) மார்பின் இடையே உருவியது போன்றிருந்தது.*

*"வீழும் இருவர்க்கு இனிதே. வளியிடைப் போழப் படாமுயக்கு" (திருக். 1108) ஆதலின். அவள் கைத்தலம் நீக்கியது. அவனுக்கு வாள் இடைப்புகுந்தது போன்ற துயர் விளைத்தது என்க. சித்திரம் - விசித்திரம். "புல்லிக்கிடந்தேன்; புடைபெயர்ந்தேன் அவ்வளவில் அள்ளிக் கொள்வு அற்றே பசப்பு" (திருக். 1187) என்ப வாகலின். கைத்தலம் நீக்கியது (விசித்திரம் போன்ற செயல் ஆனது. கருத்தின் நீக்காதவள் (மதுமயக்கத்தால்) கைத்தலம் நீக்கினள் என்க. மதுமயக்கம் இல்லையெனில். கைத்தலம் நீக்கல் நிகழ்ந்தே இருக்காது என்பதாம். "பூ இடைப் படினும் யாண்டுகழிந்தன்ன நீருறை மகன்றில் புணர்ச்சி போலப் பிரிவு அரிதாகிய தண்டாக்காமம்" (குறுந். 57) என்க.*

***1007. மெல்லியல் ஒருத்தி. தான் விரும்பும் சேடியை***
***புல்லிய கையினள். 'போதி தூது' எனச்***
***சொல்லுவான் உறும்; உற. நாணும்; சொல்லலள்;***
***எல்லை இல் பொழுது எலாம் இருந்து. விம்மினாள்.***

**மெல்லியல் ஒருத்தி** - *மென்மைத் தன்மைபொருந்திய ஒருத்தி;* **தான் விரும்பும் சேடியை** - *தன் விருப்பத்திற்குரிய ஒருதோழியை;* **புல்லிய கையினள்** - *தழுவிய கையினையுடையவளாய்;* **போதி தூது எனச் சொல்லுவான் உறும்** - *(எனக்காகக் கணவனிடம்) தூது போவாயாக எனச் சொல்ல வருவாள்;* **உற. நாணும்; சொல்லலள்** - *அப்படிச் சொல்லவருமிடத்து நாணம் வந்து தடுக்கும்; அதனாற் சொல்லமாட்டாள்;* **எல்லை இல் பொழுது எலாம் இருந்து விம்மினாள்** - *(இவ்வாறு அவள் காதலால் சொல்ல நினைப்பதும். நாணத்தால் சொல்லாமல் விடுவதுமாக) அளவில்லாத காலம் முழுவதும் (வீணே கழித்து வெறிதே) இருந்து புலம்பினாள்.*

*"இராப்பொழுது முழுதும் இருந்து விம்மினாள் மெல்லியள் ஒருத்தி" என்பதனால் அவள் ஒருத்தியாக இருந்து தூதனுப்ப எண்ணியும் நாணத்தால் இயலாமற்போனதனை நினைந்து. அவள் மெல்லியள் ஆயிற்றே என் ஆவளோ என்று கவிஞர் வருந்தும் வருத்தம் பாட்டில் கேட்கிறது.*

***1008. ஊறு பேர் அன்பினாள் ஒருத்தி. தன் உயிர்***
***மாறு இலாக் காதலன் செயலை. மற்று ஒரு***
***நாறு பூங் கோதைபால் நவில நாணுவாள்;***
***வேறு வேறு உற. சில மொழி விளம்பினாள்.***

**ஊறுபேர் அன்பினாள் ஒருத்தி** - *மேன்மேற் சுரக்கின்ற பேரன்பினையுடையாள் ஒருமங்கை;* **தன் உயிர் மாறு இலாக்காதலன் செயலை** - *தன்னையன்றி வேறு உயிர் இல்லாதவன் ஆகிய (தன்) காதலன் செய்த (பிழைச்) செயல்களை;* **மற்று ஒரு நாறுபூங் கோதைபால் நவில நாணுவாள்** - *மணம் வீசும் மலர்மாலைகள் அணிந்த வேறொருத்தியினிடம் கூறுதற்கு. (அழைத்த பின் கூறாது) நாணம் உறுவாள்;* **வேறு வேறு உளசில மொழி விளம்புவாள்** - *(அழைத்தற்கு ஏதாவது பேசவேண்டுமே என்று) தொடர்பற்ற பல்வேறு சொற்களைச் சொல்லிக் கொண்டிருந்தாள்.*

*"தான் எவ்வம் கூரினும் நீ செய்த அருளின்மை. என்னையும் மறைத்தாள் என்தோழி; அது கேட்டு நின்னையாள் பிறர்முன்னர்ப் பழிகூறல் தான் நாணி" (கலி: . 8-10) எனும் சான்றோர் மொழியினைக் கற்றவள் ஆதலின் மற்றொரு கோதைபால் காதலன் செயலை நவில நாணினாள். அவளோடு ஏதாவது பேசவேண்டுமே என்று ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத வேறு வேறு சொற்களைப் பேசிக்கொண்டிருந்தாள் என்றவாறு "எள்ளின் இளிவாம் என்று எண்ணி அவர்திறம் உள்ளும் உயிர்க்காதல் நெஞ்சு" (திருக். 1298) எனும் வள்ளுவக் காதலி போன்றாள் இவள் என்க.*

***1009. கருத்து ஒரு தன்மையது; உயிரும் ஒன்று; தம்***
***அருத்தியும் அத் துணை ஆய நீரினார்;***
***ஒருத்தியும் ஒருத்தனும் உடம்பும் ஒன்று எனப்***
***பொருத்துவர் ஆம் எனப் புல்லினார் அரோ.***

***கருத்து ஒரு தன்மையது*** - *கருத்தை ஆராய்ந்தாலும் (இருவர்) கருத்தும் ஒன்றுக்கொன்று சமமாம்;* ***உயிரும் ஒன்று*** - *(இருவர்க்கும் வெவ்வேறு உடம்பில் இருப்பினும்) உயிரும் ஒன்றேயாகும்;* ***தம் அருத்தியும் அத்துணை ஆய நீரினார்*** - *(ஒருவர் மீது ஒருவர் கொண்டுள்ள) காதலும் (அழகும் உயிரும்போல) ஒரு தன்மையதேயாம்;* ***ஒருத்தியும் ஒருத்தனும் உடம்பும் ஒன்று எனப் பொருத்துவர் இவர்எனப் புல்லினார்*** - *(இப்படி எல்லாம் ஒன்று ஆகவே இருப்பதால். உடல்மட்டும் ஏன் இரண்டாக ஆவது என நினைந்து) அக்கணவனும் மனைவியும் உடலையும் ஒன்றாக்கிவிட என்னுகின்றனரோ என்று (கண்டோர்) நினைத்திடுமாறு இறுகத் தழுவினர்.*

*அரோ - அசை "உருத்தெரி தன்மையும் உயிரும் ஒன்று" என்பது "கருத்தொரு தன்மையது உயிரும் ஒன்று" என்னும் பாடத்திலும் மோனைச் சிறப்புடைய பாடபேதம். "ஒன்றா விதித்திலனே உயிர்போல உடம்பையுமே" (தஞ்சை. வா.கோ) என ஏங்குவர் காதலர். இவர்கள் ஈருயிரை ஓருயிர் ஆக்குவதில் வெற்றிகண்டவர் ஆதலின். இப்போது ஈருடலையும் ஓருடலாக்கும் முயற்சியில் முனைந்துள்ளனர் என்பார். "உடம்பும் ஒன்றெனப் பொருத்துவர் ஆம் எனப்புல்லினர்" என்றார். உடம்பும் என்ற உம்மை உயிரே யன்றி உடம்பும் எனும் பொருள்குறித்து நின்றது.*

***1010. வெதிர் பொரு தோளினாள் ஒருத்தி. வேந்தன் வந்து***
***எதிர்தலும். தன் மனம் எழுந்து முன் செல.***
***மதிமுகம் கதுமென வணங்கினாள்; அது.***
***புதுமை ஆதலின். அவற்கு அச்சம் பூத்ததே.***

**வெதிர் பொரு தோளினாள் ஒருத்தி** - *மூங்கில் போன்ற தோளுடையாள் ஒரு மாது;* **வேந்தன் வந்து எதிர்தலும்** - *(ஊடல் உற்றிருந்த அவள்முன்) கணவன் வந்து எதிர் நின்றவுடன்;* **தன் மனம் எழுந்து முன் செல** - *(அவன்பால் உள்ள விருப்பத்தால் இவளையறியாது) இவள் மனம் எழுந்து அவன்பால் செல்ல;* **மதிமுகம் கதுமென வணங்கினாள்** - *(தன்) மதியனைய வதனத்தை (சாய்த்து) அவன் எதிர்பாராத வண்ணம்) வணங்கி நின்றாள்;* **அது புதுமை ஆதலின் அவற்கு அச்சம் பூத்தது** - *இப்படி வணங்கி நிற்பது. (இவளிடம் இது வரை காணாப்) புதுமையாதலின். (எத்தனை வெகுளியையுள்ளடக்கியதோ இவ்வணக்கம் என்று) அவனுக்குப் (பெரியதோர்) அச்சம் உண்டாயிற்று.*

*"மனைவி உயர்வும் கிழவோன் பணிவும். நினையுங் காலைப் புலவியுள் உரிய" (தொல். பொருள். 31) ஆதலின். மரபு மீறி மனைவி பணிந்த இப்புதுமை. பெரு வெகுளியின் குறியீடு எனக் கணவன் அஞ்சினன் என்க*

***1011. துனி வரு நலத்தொடு சோர்கின்றாள். ஒரு***
***குனி வரு நுதலிக்கு. கொழுநன் இன்றியே***
***தனி வரும் தோழியும். தாயை ஒத்தனள்-***
***இனி வரும் தென்றலும் இரவும் என்னவே.***

***துனி வருநலத்தொடு சோர்கின்றாள் ஒரு குனி வரு நுதலிக்கு*** - *ஊடலால் வரும் இன்பத்தை எண்ணிக் (கணவன் வந்த போது வெகுண்டு. அவன் சென்ற பின்பு அவன் சென்றதற்கு) வருந்திச் சோர்பவளாகிய வளைந்த நெற்றியுடையாள் ஒருத்திக்கு;* ***கொழுநன் இன்றியே தனி வரும் தோழியும்*** - *(தூதாகப் போய்) கணவன் இல்லாமல் தனித்து வரும் தன் (உயிர்த்) தோழியும்;* ***இனி வரும் தென்றலும் இரவும் என்ன*** - *(தனியே இருக்கும் இவளை வருத்துதற்கு) இனிமேல் வரும் தென்றலையும் இரவையும் போல;* ***தாயை ஒத்தனள்*** - *(இடித்துரை கூறி இவளை இரவெல்லாம் வருத்த) இவள் தாயைப் போன்றவள் ஆயினாள். "காமம் புணர்தலின் ஊடல் இனிது" (திருக். 1326) ஆதலின். "துனி வருநலத்தை" விரும்பினாள். உப்பினைப் போன்ற (திருக். 1302) அது. சிறிது மிகினும் கசப்பைத் தந்து விடுமாதலின் இக் "குனிவரு நுதலி சோர்கின்றாள்" என்க. பிரிவில் வருந்துவார்க்கு. தென்றல். இரவு. தோழி. தாய் - நால்வரும் சமமாகத் துன்பம் தருவர் என்றபடி.*

***1012. ஆக்கிய காதலாள் ஒருத்தி. அந்தியில்***
***தாக்கிய தெய்வம் உண்டு என்னும் தன்மையள்.***
***நோக்கினள். நின்றனள்; நுவன்றது ஓர்கிலள்;***
***போக்கின தூதினோடு. உணர்வும் போக்கினாள்.***

***ஆக்கிய காதலாள் ஒருத்தி*** - *(கணவனின் அழகு பண்பு முதலியவற்றால்) உண்டாக்கப்பெற்ற காதலையுடையாள் ஒருத்தி;* ***போக்கின தூதினோடு உணர்வும் போக்கினாள்*** - *தன் கணவனை அழைத்து வர அனுப்பிய தூதினுடனேயே தன் மன உணர்வையும் (சேர்த்து) அனுப்பி விட்டாள்;* ***அந்தியில் தாக்கிய தெய்வம் உண்டு என்னும் தன்மைகள்*** - *(ஆதலால்) மாலைப் பொழுதில். இவளை ஒரு தெய்வம் தாக்கியிருக்கக் கூடும் என்று (கண்டார்) கூறத்தக்க தன்மையளாய்; நோக்கினள்;* ***நின்றனள் நுவல்வது ஓர்கிலள்*** - *(விழித்த கண் இமையாமல்) கணவன் வரஉள்ள திசையினை நோக்கியவாறே நிற்கின்றாள்; (அருகிருப்பார்) கூறுவனவற்றை யெல்லாம் அவள் உணரவே இல்லை.*

*காதல் தாக்கணங்கெனத் தாக்கும் சக்தியது என்றபடி. காதல். "பிறப்பு. குடிமை. ஆண்மை. ஆண்டு அழகு. அறிவு முதலியவற்றின் (தொல். மெய்ப்பாட். 25) வாயிலாய் விதிகூட்ட ஆவது ஆதலின் "ஆக்கிய காதலாள் ஒருத்தி" என்றார். தெய்வம் தீண்டப் பெற்றவர்கள் உலகியற் செயலற்று நிற்பர் ஆதலின். "தாக்கிய தெய்வம் உண்டு என்னும் தன்மையள்" ஆனாள். காதலாள் ஒருத்தி. தூதினோடு உணர்வு போக்கினாள்; தாக்கிய தெய்வம் உண்டு என்னும் தன்மையாள்; நோக்கினள்; நின்றனள்; நுவல்வது ஓர்கிலள் எனக் கூட்டுக.*

***1013. மறப்பிலள். கொழுநனை வரவு நோக்குவாள்.***
***பிறப்பினொடு இறப்பு எனப் பெயரும் சிந்தையாள்._***
***துறப்ப அரு முகிலிடைத் தோன்றும் மின் என.***
***புறப்படும். புகும்; - ஒரு பூத்த கொம்பு அனாள்.***

***கொழுநனை மறப்பிலள் வரவு நோக்குவாள்*** - *(தன் காதற்) கணவனைச் சிறுபொழுதும் மறக்க இயலாதவளாய். அவன் வரவை எதிர்நோக்கிய வண்ணமே இருப்பாள் ஒரு மங்கை;* ***பிறப்பினொடு இறப்பு எனப் பெயரும் சிந்தையாள்*** *- பிறப்பும் இறப்பும் மாறி மாறி வருவதுபோல. அவன் வருவான் என மகிழ்வும் வாரானோ எனத் துயரமும் மாறிமாறி வரும் மனம் உடையவள் ஆனாள்;* ***துறப்பு அரும் முகில் இடைத் தோன்றும் மின் என்*** *- யாராலும் நீக்கற்கு இயலாத மேகத்தினிடையே தோன்றித் தோன்றி மறையும் மின்னற் கொடிபோல;* ***ஒரு பூத்த கொடியன்னாள் புறப்படும் புகும்*** *- ஒப்பிலாப் பூங்கொடி போன்ற அவள் (வந்திருப்பான் என்று இருப்பிடத்திலிருந்து) வெளிப்படுவாள்; (வரவில்லையென்று உட்சென்று) மறைவாள் (ஆகி ஆயினாள்).*

*பூத்த கொடி இப்போது மின்னற் கொடியும் ஆயிற்று என்றபடி "வருவார் கொழுநர் எனத் திறந்தும். வாரார் கொழுநர் என அடைத்தும் திருகு குடுமி விடியளவும் தேயும்" (கலிங். கடை. 49) என்பார் சயங்கொண்டாரும். "ஒரு பூத்த கொம்பனாள். கொழுநனை மறப்பிலள்; வரவு நோக்குவாள்; பெயரும் சிந்தையாள்; மின் எனப் புறப்படும் புகும்" எனக் கூட்டுக. மேகத்தே மின்னல் தோன்றிக் கணந்தோறும் மறைவது போல. வீட்டின் முன் இவளும் கணந்தோறு தோன்றி மறைதலால் மின்னலுக்கு உவைமயானாள்.*

***1014. எழுத அருங் கொங்கைமேல் அனங்கன் எய்த அம்பு***
***உழுத வெம் புண்களில். வளைக் கை ஒற்றினாள்;***
***அழுதனள்; சிரித்தனள்; அற்றம் சொல்லினாள்;***
***தொழுதனள் ஒருத்தியை. தூது வேண்டுவாள்!***

*(ஒருத்தி)* ***எழுத அரும் கொங்கை மேல்*** *- ஒரு மங்கை ஓவியத்தால் எழுதுவதற்கரிய பொலிவுடைய (தன்) தனங்களின் மீது;* ***அனங்கன் எய்த அம்பு உழுத வெம்புண்களில்*** *- மன்மதன் தொடுத்துவிட்ட அம்புகள் துளைத்ததனால் விளைந்த கொடும் புண்களின்மேல்;* ***வளைக்கை ஒற்றினாள்*** *- வளையல்கள் அணிந்த (தன்) கரங்களை (வைத்து வைத்து) ஒற்றினாள்;* ***அழுதனள்; சிரித்தனள்*** *- துயர் மிகுதியால் அழுவாள்; தன் நிலையை எண்ணி (துன்பச் சிரிப்பு) சிரிப்பாள்;* ***அற்றம் சொல்லி ஒருத்தியைத்தூது வேண்டித் தொழுதாள் -*** *தான் படும் துன்பங்களையெல்லாம் தோழி ஒருத்திக்குச் சொல்லி. தூது செல்ல வேண்டிக் (கைகூப்பித்) தொழுவாள்.*

*அநங்கன் செய்த வெம்புண்களை ஆற்றத் தன் கரங்களால் இயலாதாகையால். ஆற்றுங் கரமுடையானை அழைத்து வரற்குத் தூதேகுமாறு தொழுது தவித்தாள் என்க. "உடம்பும் உயிரும் வாடியக்காலும் என்னுற்றன கொல் இவையெனின் அல்லது கிழவோற் சேறல் கிழத்திக்கு இல்லை" (தொல். பொருளியல். 9) என்பது இம்மண்ணின் மரபாதலின் அவனை அழைத்து வருமாறு தோழியைத் தொழுதாள்.*

*1015.* ***'ஆர்த்தியும். உற்றதும்.***
***அறிஞர்க்கு. அற்றம்தான்***
***வார்த்தையின் உணர்த்துதல்***
***வறிது அன்றோ?' என***
***வேர்த்தனள்; வெதும்பினள்;***
***மெலிந்து சோர்ந்தனள்;***
***பார்த்தனள். ஒருத்தி தன்***
***பாங்கு அனாளையே.***

***ஆர்த்தியும் உற்றதும் அற்ற(மும்)*** *- (தனக்கு நேர்ந்துள்ள) காம நோயும் (அதன் பின்) விளைவுகளும் (இவ்விரண்டால் எழுந்ததுள்ள உடல் உள) குறைகளும்;* ***அறிஞர்க்கு வார்த்தையின் தான் உணர்த்துதல் வறிது அன்றோ? எனா*** *- (குறிப்பால் உணரவல்ல) குறைகளும் அறிஞர் ஆயினோர்க்கு வாய்மொழியால் தானே சென்று உரைத்து விளக்குவது வீண் அன்றோ? என்று கருதி; வேர்த்தனள்;* ***வெதும்பினள் மெலிந்து சோர்ந்தனள் -*** *(தோழிக்குத் தன் துயர்களை வாயால் உரையாது) உடல் வெயர்த்து மனம் வெதும்பி மிக வாடிச் சோர்ந்து (அணையில்) சாய்ந்தாள்;* ***தன் பாங்கு அனாளைப் பார்த்தனள் -*** *(என் நிலை கண்டும். கணவனை வருவித்தற்குரிய வழிதுறை நாடாமல் வாளா இருத்தியோ? எனும் குறிப்போடு) தன் அருகுள்ள தோழியை (ஏக்க விழிக்ளோடு) பார்த்தாள்.*

*குறிப்பால் உணரும் திறம் குறித்துக் கவிஞர்க்கு உள்ள விருப்பமும் மதிப்பும் இப்பாடலிலும் இலங்கல் காணலாம். தோழியைக் குறிப்பால் உணரவல்ல அறிவுத் திறமுடையவளாகத் தலைவி கருதும் பாங்கு இங்குத் தெளிவாம்.*

*1016.* ***தனங்களின் இளையவர்தம்மின். மும் மடி;***
***கனம் கனம் இடை இடைக் களிக்கும் கள்வன் ஆய்.***
***மனங்களில் நுழைந்து. அவர் மாந்து தேறலை***
***அனங்கனும் அருந்தினான் ஆதல் வேண்டுமால்.***

***தனங்களின் இளையவர் தம்மின் மும்மடி*** *- தனங்களையுடைய இள மகளிர்களைக் காட்டிலும் மும்மடங்காக;* ***கனம் கனம் இடை இடைக் களிக்கும் கள்வன் ஆய்*** *- மிக அதிகமாக அவ்வவ்விடங்களில் களிப்புக் கொண்டு (யார்க்கும் தெரியாமல்) கள்வனைப் போல்;* ***மனங்களில் நுழைந்து*** *- (ஆடவர் பெண்டிர் ஆகிய இருபாலார்) மனங்களுக்குள்ளே புகுந்து;* ***அவர் மாந்து தேறலை*** *- அவர்கள் பருகின மதுவின் தெளிவினை;* ***அனங்கனும் அருந்தினான் ஆதல் வேண்டும்*** *- மன்மதனும் உண்டிருப்பான் ஆதல் வேண்டும்.*

*ஆல் -அசை. மன்மதன் சித்தத்தில் உதிப்பவன் எனும் பொருள் தரும் 'சித்தசன்' எனும் பெயருடையான் ஆதலின். உள்வந்த மதுவை. உள்ளே உள்ள இவனும் உண்டிருப்பானாதலினால் அங்கிருப்பாரினும் அவன் மும்மடங்கு (மகிழ்வில்) பொலிந்தான் என்றார்*

*ஊடலும் கூடலும்*

***1017.** நறை கமழ் அலங்கல் மாலை*
*நளிர் நறுங் குஞ்சி மைந்தர்.*
*துறை அறி கலவிச் செவ்வித்*
*தோகையர் தூசு வீசி.*
*நிறை அகல் அல்குல் புல்கும்*
*கலன் கழித்து அகல நீத்தார்;-*
*அறை பறை அனைய நீரார்*
*அரு மறைக்கு ஆவரோதான்?*

***நறைகமழ் அலங்கல் மாலை நளிர் நறும் குஞ்சி மைந்தர்** - தேன் மணம் மிகுந்து அசைகின்ற மலர் மாலை சூடிச் செறிந்து மணம் வீசும் குடுமியினையுடைய ஆடவர்கள்; **துறை அறி கலவி செவ்வித் தோகையர் தூசு வீசி** - இன்பக் கலவையின் துறைகளையறிந்து பக்குவமற்ற மகளிரின் ஆடைகளை அப்பால் எறிந்துவிட்டு; **நிறை அகல் அல்குல் புல்கும் கலன் கழிந்து அகல நீத்தார்** - (மேலும்) நிறைந்து அகன்ற இடைப் பகுதியைத் தழுவியிருந்த மேகலையென்னும் அணியையும் வெறுத்து அப்பால் வீசினர்; **அறைபறை யனைய நீரார்** - (ஏன் எனில்) (செய்திகளைக் கூவி) அறைகின்ற பறை போன்று (எப்போதும் வாய்விட்டுக் கத்தும்) தன்மையினர்; **அருமறைக்கு ஆவரோ?** - வெளிப்படுத்தக் கூடாத இரகசியச் செயல் நிகழ்கையில் உடன் இருக்கும் தகுதியுடையார் ஆவாரோ? (ஆகார்)*

*தான் - அசை. ''தாம் கேட்ட மறை பிறர்க்கு உய்த்து உரைக்கலான் அறைபறை யன்னர் கயவர்'' என்னும் திருவள்ளுவப் பெருந்தகையின் திருக்குறள் (1076) கருத்தை. பொன்னணியில் பதித்த நல் மணியாய்ப் பொதிந்து ஒளிரச் செய்துள்ளார் - வேற்றுப்பொருள் வைப்பணி.*

***1018.** பொன் அருங் கலனும். தூசும்.*
*புறத்து உள துறத்தல் வம்போ?*
*நல் நுதல் ஒருத்தி. தன்பால்*
*அகத்து உள நாணும். நீத்தாள்;-*
*உன்ன அருந் துறவு பூண்ட*
*உணர்வுடை ஒருவனேபோல்.*
*தன்னையும் துறக்கும் தன்மை*
*காமத்தே தங்கிற்று அன்றே.*

***புறத்துள் பொன் அரும் கலனும் தூசும் துறத்தல் வம்போ?*** - *(உடலின்) வெளியேயுள்ள அணிகலன்களையும் ஆடைகளையும் (ஒரு மங்கை) துறந்தாள் (முன்பு) புகன்றது (ஒரு) புதுமையோ?;* ***நல்நுதல் ஒருத்தி*** - *அழகிய நெற்றியினையுடையாள் ஆகிய (இன்னும்) ஒருத்தி;* ***தன்பால் அகத்துள் நாணும் நீத்தாள்*** - *தன்னிடத்தே. (பிரிதற் கியலால் கிடந்த) உடலின் உள் உள்ள நாணத்தையும் து றந்துவிட்டாள்;* ***உன்ன அருந்துறவு பூண்ட உணர்வுடை ஒருவனே போல்*** - *நினைப் பதற்கும் அருமையான துறவினைப் பூண்ட மன உறுதிமிக்க ஒரு துறவியைப்போல;* ***தன்னையும் துறக்கும் தன்மை காமத்தே தங்கிற்று அன்றே!*** - *தான் என்று சொல்லத் தக்கதையும் துறந்து விடக்கூடிய இயல்பு. காமத்தினிடத்தில் மட்டுமே தங்கியுள்ளதன்றோ?*

*கலனும் தூசும் அகற்றியபின் வரும் நாணுந்துறந்து அவசமுற்றிருந்தாள். உயிரினும் சிறந்தது பெண்மைக்கு நாணம் (தொல். கல. ) ஆதலின். அதனைத் துறத்தல். தன்னையே துறத்தல் ஆயிற்று. காமக் கணிச்சி உடைக்கும் நிறையென்னும் நாணுத்தாழ் வீழ்த்த கதவு" (திருக். 1251) - வேற்றுப் பொருள் வைப்பணி.*

***1019.*** **பொரு அரு மதனன் போல்வான்**
**ஒருவனும். பூவின்மேல் அத்**
**திருவினுக்கு உவமை சால்வாள்**
**ஒருத்தியும். சேக்கைப் போரில்**
**ஒருவருக்கு ஒருவர் தோலார்.**
**ஒத்தனர்; - 'உயிரும் ஒன்றே**
**இருவரது உணர்வும் ஒன்றே'**
**என்ற போது யாவர் வெல்வார்?**

***பொரு அறு மதனன் போல்வான் ஒருவனும்*** - *(அழகில் தனக்கு) உவமை சொல்ல ஒருவனும் இல்லாத மன்மதனைப் போல் வான் ஒருவனும்;* ***பூவின் மேல் அத் திருவினுக்கு உவமை சால்வாள் ஒருத்தியும்*** - *(தாமரை) மலர் மேல் வாழும் மங்கையாகிய திருமகளுக்கு உவமிக்கத் தகுதியுடையாள் ஒருத்தியும்;* ***சேக்கைப் போரில்*** - *மஞ்சத்தில் நிகழ்ந்த கலவிப் போரிலே;* ***ஒருவருக்கு ஒருவர் தோலார் ஒத்தனர்*** - *ஒருவருக்கு ஒருவர் பின்னடையாமல் சமநிலையிலேயே (இன்பப் போர் புரிதலில்) இருந்தனர்;* ***இருவரது உயிரும் ஒன்றே உணர்வும் ஒன்றே என்ற போது யாவர் வெல்வர்*** - *ஏன் எனில் இருவருக்கும் உயிரும் உணர்ச்சியும் ஒன்றேயாக இருக்கையில் யார் வெல்ல இயலும்? (யார் தோற்க இயலும்)*

*உடல் அன்றி உயிர் ஆற்றலும் உணர்வாற்றலுமே வெற்றி தோல்வியை நிர்ணயிப்பன; அவை இரண்டும் இவ்விருவர்க்கும் சமம் ஆதலின். கலவிப் போரில் ஒருவர்க்கொருவர் தோற்காமல் போர் புரிந்தனர். ஒருவரும் தோற்க இயலாத போது ஒருவரும் வெற்றி பெறலும் இயலாது என்பார். "ஒருவருக்கு ஒருவர் தோலார் ஒத்தனர்" என்றும். காரணம். "இருவரது உயிரும் ஒன்றே; உணர்வும் ஒன்றே என்றபோது யாவர் வெல்வார்?" என்றார்.*

***1020. கொள்ளைப் போர் வாள் - கணாள் அங்கு***
***ஒருத்தி. ஓர் குமரன் அன்னான்***
***வள்ளத் தார் அகலம்தன்னை***
***மலர்க்கையால் புதைப்ப நோக்கி.***
***' "உள்ளத்து. ஆர் உயிர் அன்னாள்மேல்***
***உதைபடும்" என்று. நீர் நும்***
***கள்ளத்தால் புதைத்தி' என்னா.***
***முன்னையின் கனன்று மிக்காள்.***

**கொள்ளைப் போர் வாட்கண்ணாள் ஒருத்தி** - *(உயிரை) கொள்ளை கொள்ளும் போரில் வழங்கும் வாள் போன்ற கண்ணினாள் ஒருத்தி;* **அங்கு ஓர் குமரன் அன்னான் வள்ளத்தார் அகலம் தன்னை** - *அங்கே. முருகக் கடவுளைப் போன்ற அழகினையுடையான் ஒருவன் வளம்மிக்க மாலையணிந்த மார்பினை;* **மலர்க்கையால் புதைப்ப நோக்கி** - *(அவள் ஊடலால் உதைப்பின் தன் மார்பில் அணிந்த மாலை அவர் அனிச்ச அடியை வருத்தும் என்று) தன் மலர் போன்ற கைகளால் மறைப்பதனைப் பார்த்து;* **உள்ளத்து ஆர் உயிர் அன்னாள் மேல் உதை படும் என்று** - *உம் உள்ளத்தில் கள்ளத்தால் வைத்திருக்கும் உயிர் அனையவள்மீது என் உதைபடும் என்று கருதி ;* **நீர்நும் கள்ளத்தால் புதைத்திர் என்று** - *மற்றொருத்தியைக் காக்கக் கை கொண்டு மறைத்தீர் என்று கூறி;* **முன்னையின் கனன்று மிக்காள்** - *முன்பைவிடக் கடுமையாக ஊடல் கூடினாள்.*

*"இல்லை தவறு அவர்க்கு ஆயினும் ஊடுதல் வல்லது அவர் அளிக்குமாறு" எனும் அருமைத் திருக்குறட்கு (திருக். 1321) இலக்கியம் ஆயினான் இக்குமரன் என்க. அவன் செய்யும் அன்புச் செயல்களே அவள் இவன் ஊடல் மிகக் கொள்ள ஏது ஆயினமை காண்க.*

***1021. பால் உள பவளச் செவ் வாய்.***
***பல் வளை. பணைத்த வேய்த் தோள்.***
***வேல் உள நோக்கினாள். ஓர்***
***மெல்லியல். வேலை அன்ன***
***மால் உள சிந்தை ஆங்கு. ஓர்***
***மழை உள தடக் கையாற்கு.***
***மேல் உள அரம்பை மாதர்***
***என்பது ஓர் விருப்பை. ஈந்தாள்.***

***பால் உள பவளச் செவ்வாய்*** *- பால் போன்ற சுவையும் பவளம் போன்ற சிவந்த நிறமும் உடைய வாயினையும்;* ***பல்வளை. பணைத்த மென்தோள்*** *- பல்வகை வளையல்கள் (அணிந்த கைகளையுடைய) பெருத்த தோள்களையும்;* ***வேல் உல நோக்கினாள் ஓர் மெல்லியல்*** *- வேலினையொத்த விழிகளையுமுடைய ஒரு மெல்லியலாள்;* ***வேலையன்ன மால் உள சிந்தையின்*** *- கடல் அனைய காதல் மனம் கொண்டவனும்;* ***ஓர் மழை உள தடக்கையாற்கு*** *- (கைம்மாறு கருதாது கொடுப்பதனால்) மேகத்தை ஒத்து நீண்ட கைகளையுடையவனான ஒருவனுக்கு;* ***மேல்வினை அரம்பை மாதர் என்பதோர் விருப்பை ஈந்தாள்*** *- வான் உலகில் உள்ள அரம்பை மாது இவள் என்று கருதத் தக்க பேரின்பத்தினை அளித்தாள்.*

*கறையற்ற காதல். வானகத்து இன்பத்தை எல்லாம் மண்ணுக்குக் கொண்டு வரவல்லது என்றபடி. "வேலையன்ன மால்" என்பது கடலன்ன காமம் (திருக். 1137) எனும் குறட்பகுதியோடு ஒத்தது. வானுலக இன்பத்தை வையகத்தே தந்ததாலும் குன்றாது கொடுத்ததாலும். அவள் விண்ணுலக அரம்பை ஆயினாள்.*

**கலிவிருத்தம்**

***1022. புனத்து உள மயில் அனாள்.***
***கொழுநன் பொய் உரை***
***நினைத்தனள் சீறுவாள்***
***ஒருத்தி. நீடிய***
***சினத்தொடு காதல்கள்***
***செய்த போரிடை.***
***மனத்து உறை காதலே***
***வாகை கொண்டதே.***

***புனத்து உள மயில் அனாள்*** *- குறிஞ்சி நிலக் கொல்லைகளில் வாழும் மயிலையொத்தவளாய்;* ***கொழுநன் பொய்உரை நினைத்தனள் சீறுவாள் ஒருத்தி*** *- கணவன் உரைத்த பொய்ம் மொழிகளை நினைத்து வெகுள்பவளாகிய ஒருத்தியின்;* ***நீடிய சினத்தொடு காதல்கள் செய்த போரிடை*** *- (மனத்தில் கொண்ட) (ஊடல்) சினத்தோடு. இருவர் உள்ளத்திலும் எழுந்த காதல் வேட்கைகள் மோதிய போரினில்;* ***மனத்து உறை காதலே வாகை கொண்டது*** *- மனத்தில் எழுந்த காதல் வேட்கையே வெற்றி பெற்றது.*

*ஏ - அசைநிலை. ஊடலில் தோற்றுக் காதலில் வெல்வது (திருக். 1330) உயர் மரபு ஆதலால். "மனத்துள காதலே வாகை கொண்டது" என்று மகிழ்ந்தார். வருவேன் என்று சொல்லி வராத அவன் பொய்யுரைக்கு வெகுளி பிறந்தது. அவன் வந்தால் இணங்கக்கூடாது என. அதனால் அவளுக்கு ஊடல் பிறந்தது. ஆனால். அவன் வந்தவுடன் உள்ளத்தில் காதல் பிறந்தது. இருவர் காதலும் சேர்ந்து இவள் ஊடலோடு மோதல் பிறந்தது. அப்போரில் ஊடல் தோற்றுக் காதல் வெற்றிக் கொண்டது என்றார். "ஊடலில் தோற்றவர் வென்றார் அது மன்னும் கடலிற் காணப்படும் (திருக். ) என்பது வள்ளுவம்.*

***1023. கொலை உரு அமைந்தெனக்***
***கொடி நாட்டத்து ஓர்***
***கலை உருவு அல்குலாள்.***
***கணவற் புல்குவாள்.***
***சிலை உரு அழிதரச்***
***செறிந்த மார்பில் தன்***
***முலை உருவின என.***
***முதுகை நோக்கினாள்.***

***கொலை உரு அமைந்து எனக் கொடிய நாட்டத்து*** - *கொலைச் செயல் (ஒரு) வடிவம் பெற்றாற் போன்ற கொடுமையான கண்களையும்;* ***ஓர் கலை உருவு அல்குலாள்*** *- ஆடையை ஊடுருவிப் புறப்படும் இடைப் பகுதியினையும் உடையாள் ஒருத்தி;* ***கணவற் புல்குவாள்*** *- (தன்) கணவனை இறுகத் தழுவினாள்;* ***சிலை உரு அழிதரச் செறிந்த மார்பில்*** *- மலையும் உருவழியும் படியாகத் திண்ணிதான (தன் கணவன்) மார்பில்;* ***தன் முலை உருவின என முதுகை நோக்கினாள்*** *- தன் இரு தனங்களும் ஊடுருவிப் போயிருக்கக்கூடும் என (அவன்) முதுகை (எட்டிப்) பார்த்தாள்.*

*அணைப்பின் வன்மை அறிவித்தவாறு யானையின் கொம்புகள் அனைய வன்மையும் வளைவும் உடைய அவள் மார்பகங்கள். இறுக அணைத்ததனால். அவன் மார்பைத் துளைத்து மறுபக்கம் வந்திருக்கக்கூடும் என அவன் முதுகைப் பார்த்தாள் - உயர்வு நவிற்சி.*

***1024. குங்குமம் உதிர்ந்தன; கோதை சோர்ந்தன;***
***சங்கு இனம் முரன்ற; கலையும் சாறின;***
***பொங்கின சிலம்புகள் பூசலிட்டன;-***
***மங்கையர் இள நலம் மைந்தர் உண்ணவே.***

***மங்கையர் இளநலம் மைந்தர் உண்ண*** *- மாதர்களுடைய புதிய இன்பத்தை ஆடவர் நுகர்கையில்;* ***குங்குமம் உதிர்ந்தன*** *- (மங்கையர் மார்புக்) குங்குமக் கோலங்கள் உதிர்ந்தன;* ***கோதை சோர்ந்தன*** *- கூந்தல்கள் அவிழ்ந்தன;* ***சங்கு இனம் முரன்றன*** *- (கையில் அணிந்திருந்த) சங்கு வளையல்கள் ஆரவாரித்தன;* ***கலையும் சாறின*** *- ஆடைகளும் நழுவின;* ***சிலம்புகள் பொங்கின பூசல் இட்டன*** *- காலில் உள்ள சிலம்புகள் மிகுந்து ஒலி செய்தன.*

*ஒரு செயலுக்காக இத்தனை செயல்கள் நிகழ்ந்தன என வியந்தவாறு. மங்கையர் இளநலம் மைந்தர் உண்ண - குங்குமம் உதிர்ந்தன; கோதைகள் சோர்ந்தன; சங்கு இனம் முரன்றன; கலைகள் நழுவின; சிலம்புகள் பொங்கின; பூசல் இட்டன எனக் கூட்டுக. மைந்தர்கள் உண்பதற்காக மங்கையரிடத்தே இளமையும் நலமுமாகிய பெருவிருந்து படைத்து வைக்கப்பட்டுள்ளமையறிந்து துய்த்து மகிழ்ந்தனர் என்க. முதல் மூன்றடிகளிலும் ஒரு போர்க்களத்தின் சூழலைச் சுட்டினார் கலவிப் போர் ஆதலின்.*

***1025. துனி உறு புலவியைக் காதல். சூழ் சுடர்***
***பனி என. துடைத்தலும் பதைக்கும் சிந்தையாள்.***
***புனை இழை ஒரு மயில். பொய் உறங்குவாள்.***
***கனவு எனும் நலத்தினாள். கணவற் புல்லினாள்.****

***காதல்*** *- காதலானது;* ***துனிஉறு புலவியை*** *- துயர்மிகச் செய்யும் ஊடலை;* ***சூழ் சுடர்பனி எனத் துடைத்தலும்*** *- (கதிரவன்) சுற்றிப் பரப்பும் கிரணங்களால் பனியை அழிப்பது போல நீக்கி விட்டவுடன்;* ***புனை இழை ஒருமயில்*** *- அணிகள் அணிந்த மயில் அனைய ஒரு மங்கை;* ***பதைக்குஞ் சிந்தையாள்*** *- (ஊடல் நீங்கியவுடன் கூடத்) தவிக்கும் மனம் உடையவளாய்;* ***பொய் உறங்குவாள்*** *- (உடனே தழுவின் தன் பெருமை குன்றும் என்று) உறங்குபவள் போல் பொய்யாக உறங்கி;* ***கனவு எனும் நலத்தினால் கணவற் புல்லினாள்*** *- (அஞ்சத்தக்க கனவு கண்டவள் போல்)கனவு தரும் நல் உதவியினால் கணவனை இறுகத் தழுவிக் கொண்டாள்.*

*பள்ளியறையில் "கிழவோள் உயர்வு" (தொல். பொருள். 31) பாதிக்கப் படாதிருக்க நிகழும் சாகசங்களுள் ஒன்று சுட்டியவாறு. கதிரவன் பனியைத் துடைத்தல் போல் காதல் ஊடலைத் துடைத்தது. வலியத் தழுவின் பெண்மையின் உயர்வு தாழும் என்று. பொய் உறக்கம் கொண்டு. அதில் பொய்க் கனவும் கண்டு. அச்சக் கனவால் அணைப்பாள் போல் அணைத்து மகிழ்ந்தாள்.*

***1026. வட்ட வாள் முகத்து ஒரு மயிலும். மன்னனும்.***
***கிட்டிய போது. உடல் கிடைக்கப் புல்லினார்;-***
***விட்டிலர்; கங்குலின் விடிவு கண்டிலர்;-***
***ஒட்டிய உடல் பிரிப்பு உணர்கிலாமையால் -***

***வட்டவாள் முகத்து ஒருமயிலும் மன்னனும்*** *- வட்டமாகிய ஒளிமுகமுடைய ஒரு மயில் போன்றாளும் (அவள்) கணவனும்;* ***கிட்டிய போது உடல் கிடைக்கப் புல்லினார்*** *- (ஒருவர்க்கொருவர்) நெருங்கியபோது. கிடைக்க (இறுகத் தழுவ ஏற்ற வாய்ப்பொன்று) கிட்டியதனால் தம் உடல் இறுகத் தழுவினர்;* ***ஒட்டிய உடல் பிரிப்பு உணர்கிலாமையால்*** *- (ஒன்றாக) ஒட்டிக் கொண்ட உடல்களை. (இரண்டாகப்) பிரிக்க அறிய மாட்டாமையால்;* ***விட்டிலர்; கங்குலின் விடிவு கண்டிலர்*** *- தழுவிய கரங்களை விடாதவர் ஆயினர்; இரவு விடிந்து போனதையும் அறியாதவர் ஆயினர்.*

*ஒன்று தெரிந்து ஒன்று தெரியாமையால் உற்ற இடர் உரைத்தவாறு. தழுவத்தெரிந்தது; விடத் தெரியவில்லை. இரவு விட்டதும் தெரியாது. தழுவல் விடாமற் கிடந்தனர் என்பார். "விட்டிலர் கங்குலின் விடிவு கண்டிலர்" என்றார். "குக்கூ என்றது கோழி; அதன் எதிர் துட்கென் றன்றென் தூய நெஞ்சம்" (குறுந். 157) எனக் காதலர் விடியலை விரும்பாமை கூறப்படும். "காதலற் பிரியாமல் கவவுக்கை நெகிழாமல்" (சிலம்பு. 1: 61-62) வாழும் வகை இது. வீழும் இருவர்க்கு வழியிடைப் போழப் படா முயக்கு இனிது (திருக்) என்பார் வள்ளுவனாரும்.*

***1027. அருங் களி மால் களிறு அனைய வீரர்க்கும்.***
***கருங் குழல் மகளிர்க்கும். கலவிப் பூசலால்.***
***நெருங்கிய வன முலை சுமக்க நேர்கலா***
***மருங்குல் போல் தேய்ந்தது - அம் மாலைக் கங்குலே.***

***அருங்களி மால்களிறு அனைய வீரர்க்கும்*** - *(தணித்தற்கு) அரிய மதமயக்கங் கொண்ட ஆண் யானைகளைப் போன்ற வீரர்கட்கும்;* ***கருங்குழல் மகளிர்க்கும்*** - *கரிய கூந்தலுடைய மகளிர்க்கும்;* ***கலவிப் பூசலால்*** - *(நிகழ்ந்த) கலவிப் போரில் மிதிபட்டதனால்;* ***அம்மாலைக் கங்குல் நெருங்கிய வனமுலை சுமக்க நேர்கலா மருங்குல் போல் தேய்ந்தது*** - *அந்த மயக்கந்தரும் இரவு (ஒன்றோடொன்று) நெருங்கியுள்ள அழகிய தனங்கள் சுமப்பதற்கு ஆற்றலற்ற (மங்கையர்) இடையினைப் போல் வரவரக் (குறைந்து) தேய்ந்து போயிற்று.*

*மழ களிறு அனையார்க்கும் மயில் அனையார்க்கும் இடை நிகழ்ந்த கலவிப் போரில் இடையே சிக்கிய இரவு. "தேய்புரி பழங்கயிறு போல (நற். 284) மகளிர் இடையாய்த் தேய்ந்தது என்க. மாலைக் கங்குல். வீரர்க்கும் மகளிர்க்கும் கலவிப் பூசலால். வனமுலை சுமக்கலா மருங்குல் போல் தேய்ந்தது எனக் கூட்டுக - தற்குறிப்பேற்ற அணி.*

*சந்திரன் மறைவும் சூரியன் தோற்றமும்*

***1028. கடை உற நல் நெறி காண்கிலாதவர்க்கு***
***இடை உறு திரு என. இந்து நந்தினான்.***
***படர் திரைக் கருங் கடல் பரமன் மார்பிடைச்***
***சுடர் மணிக்கு அரசு என. இரவி தோன்றினான்.***

***நல்நெறி கடையுறக் காண்கிலா தவர்க்கு*** - *புண்ணியச் செயல்களை முடிவு வரை முற்றச் செய்யாதவர்கட்கு;* ***இடை உறு திருவென இந்து நந்தினான்*** - *நடுவே (சில காலம் சேர்ந்திருந்த) செல்வம் (இடையே) அழிவது போல் சந்திரன் மறைந்தான்;* ***பரமன் மார்பிடை சுடர் மணிக்கு அரசு என*** - *பரம்பொருளாகிய திருமாலின் மார்பினிடையே ஒளிர்கின்ற. மணிகளுக்குள் அரசாகிய கவுத்துமணி (தோன்றுவது) போல;* ***படர்திரைக் கருங்கடல் இரவி தோன்றினான்*** - *பரவிய அலைகளையுடைய கரிய கடலிடையே சூரியன் தோன்றினான்.*

*நெறி: நெறி காட்டும் புண்ணியச் செயல்களைக் குறித்தது; ஆகுபெயர். இறுதி வரை நற்செயல்களைக் கடைப்பிடியாது போவார் வாழ்க்கை இருள் சூழும் என்பதாயிற்று. தற்குறிப்பேற்றுதலில் தனக்குரிய தனித்துவத்தை இப்பாடலிலும் கவிஞர்பிரான் ஏற்றியுள்ள எழில் கண்டு மகிழ்க. திருமால் மார்பில் உள்ளது கவுத்துவ மணி தன் அருகில் உள்ள திருமகளாம் சீதையெனும் பெண்மணியை மணக்க உள்ள காலமும் அருகில் உள்ளதென நினைப்பித்தவாறு. சுடர்மணிக்கு அரசு - கவுத்துவ மணி.*

## எதிர்கொள் படலம்

தயரத வேந்தனைச் சனக மன்னன் எதிர்கொண்டு வரவேற்கும் பகுதி. தயரத வேந்தன் தன் படைக் கூட்டத்துடன் கங்கையைக் கடந்து மிதிலையை அடைகிறான். சனக மன்னன் அவனை எதிர்கொண்டு வரவேற்க வருகின்றான். இருபெருஞ் சேனைகளும் ஒன்றிக் கலக்கின்றன. ஞாயிறும் திங்களுமாகிய இருபெருஞ் சுடர்களும் ஒன்றுவது போலத் தயரதன் சனகன் இருவரும் ஒன்றித் தழுவி மகிழ்கின்றனர். இராம இலக்குவர் பரத சத்துருக்கன் தந்தையைத் தொழுதெழத் தயரதன் பேருவகை யெய்துகிறான். நால் வேதமே போல் நால்வரும் அங்கு விளங்கினர். மக்கட் செல்வத்தை வழிநடத்துக எனும் தந்தை ஏவலை ஏற்றுப் படைகளை நடத்தி இராமன் மிதிலை நகர் வீதியினை அடைகிறான்.

மணமுறைகளில் பெண் இல்லத்தை நோக்கி வந்த மணமகன் தாய் தந்தையர். சுற்றத்தார் முதலியோரைப் பெண் வீட்டார் எதிர்கொண்டு அழைத்து உபசரித்தலும். பின் மணமகனை ஊர்வலமாக அழைத்து வருதலும். பின் மணமகளைக் கோலஞ் செய்து மண மண்டபத்துக்கு அழைத்து வருதலும். மணமக்கள் ஒருவரையொருவர் பார்த்த பிறகு. திருமண நாள் நிச்சயித்தலும். பின்பு நிச்சயித்த நாளில் திருமணம் இனிதே நிகழ்ந்தேறலும் இன்றும் உள்ள மரபு. இம் மரபே. அன்றும் இருந்தது என்பது எதிர்கொள் படலம். உலாவியல் படலம். கோலங்காண் படலம். கடிமணப் படலம். ஆகிய படலங்களின் முறை வைப்பால் இனிதே உணரலாம்.

*தசரதன் படைகளுடன் கங்கைக் கரையடைதலும் மிதிலை சேரலும்*

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

***1029.*** **அடா நெறி அறைதல்செல்லா**
**அரு மறை அறைந்த நீதி**
**விடா நெறிப் புலமைச் செங்கோல்**
**வெண்குடை வேந்தர் வேந்தன்.**
**படா முக மலையில் தோன்றிப்**
**பருவம் ஒத்து அருவி பல்கும்**
**கடா நிறை ஆறு பாயும்**
**கடலொடும். கங்கை சேர்ந்தான்.**

***அருமறை அடா நெறி யறைதல்செல்லா*** - *செல்லத் தகாதவை யென்று அரிய மறைகள் சொன்ன நெறிகளில் செல்லாது;* ***நீதி அறைந்த நெறி விடா புலமை*** - *(இவ்விவ் வழிகள்) நீதி அமைந்தவை யென்று மறைகள் சொன்ன வழிகளை விடாமற்சென்று பின்பற்றும் (உயர்) ஞானத்தினையும்;* ***செங்கோல் வெண்குடை வேந்தர் வேந்தன்*** - *செங்கோலினையும். வெண் (கொற்றக்) குடையினையும் (தரித்த) வேந்தர்க்கு எல்லாம் வேந்தனாகிய தசரதச் சக்கரவர்த்தி;* ***முக படாம் மலையில் தோன்றும்*** - *முக படாத்தினையுடைய மலை போன்ற யானைகளிடத்திலிருந்தும் உண்டாகி;* ***பருவம் ஒத்து அருவி பல்கும்*** - *பருவகாலத்துக் கேற்ப அருவிகளாகப் பெருகுகின்ற;* ***கடாம் நிறை ஆறு பாயும்*** - *மத நீர் ஓடும் ஆறுகள் (தன்னிடத்தே) வந்து பாய்கின்ற;* ***கடலொடும் கங்கை சேர்ந்தான்*** - *(சேனையெனும்) சமுத்திரத்துடனே கங்கையாற்றின் கரையினை யடைந்தான்.*

*வேதம் செல்லத்தக்க நெறிகளை யுணர்த்துவது; அதுகாட்டும் செந்நெறியிலேயே சென்றவன் தயரதன் என்பதாம். கங்கை கடலைச் சேரும்; இங்கே. கடல் கங்கையைச் சேர்ந்தது என்பது ஒரு நயம். முதல் இரண்டடிகளிலும் வேதம் இன்னது என்பதும். அதனை விடாமற் பின் பற்றியதால். தசரதன் வெண்குடையும் செங்கோலும் ஞானமும் சிறந்து வேந்தர் வேந்தன் ஆயினான் என்பது சுருங்கச் சொல்லி விளங்க வைத்தார். பாயா வேங்கை. பறவாக் கொக்கு எனபது போல. யானையை முகபடாம்மலை என்றார். குறிப்புப் பொருள்.*

***1030. கப்புடை நாவின் நாகர்***
***உலகமும் கண்ணில் தோன்ற.***
***துப்புடை மணலிற்று ஆகி.***
***கங்கை நீர் சுருங்கிக் காட்ட.***
***அப்புடை அனீக வேலை***
***அகன் புனல் முகந்து மாந்த.***
***உப்புடைக் கடலும். தெண் நீர்***
***உண் நசை உற்றது அன்றே.***

***கப்பு உடை நாவின் நாகர் உலகமும் கண்ணில் தோன்ற*** - *பிளவுபட்ட நாக்கினையுடைய நாகர்களின் உலகம் ஆகிய பாதாள லோகமும் கண்ணுக்குத் தோன்றுமாறு;* ***துப்புடை மணலிற்று ஆகிக் கங்கை நீர் சுருங்கிக் காட்ட*** - *தூய்மையுடைய மணலைப் பெற்றதாய். கங்கைநதி தண்ணீர் குறைந்து தோன்றும்படி;* ***அப்பு உடை அனீக வேலை அகன் புனல் முகந்து மாந்த*** - *அம்பு முதலிய ஆயுதங்கள் மிகுந்த அந்தச் சேனா சமுத்திரம். அகன்று கிடந்த அக்கங்கை நீரை எடுத்துப் பருகியதனால்;* ***அன்று. உப்புடைக் கடலும் தெண்ணீர் உள்நசை யுற்றது*** - *உப்புத்தன்மையுடைய (உவர் நீர்க்) கடலும் அப்பொழுது தெளிந்த அக்கங்கையின் நீர் (போய்ச் சேராததனால்) நீர் வேட்கை கொண்டது. உப்புக் கடலுக்குச் சென்று சேரும் கங்கையை. சேனைக் கடல் உண்டு விட்டது என்தாம். உப்பு நீர். தாகம் தீர்க்காது. அதனை மிகுதிப் படுத்தும். ஆதலால் உப்புக் கடலை உண்டு தன் தாகம் தீர்த்து வந்தது. இன்று. தசரதன் படைக் கடல் கங்கைப் பெருக்கை உண்டு விட்டதனால். உப்புக்கடலாகிய சமுத்திரம் அன்று தாகம் மிகக் கொண்டது என்று. சேனையின் பெருமை கூறியவாறு. உயர்வு நவிற்சியணி.*

***1031. ஆண்டு நின்று எழுந்து போகி.***
***அகன் பணை மிதிலை என்னும்***
***ஈண்டு நீர் நகரின் பாங்கர்***
***இரு நிலக் கிழவன் எய்த.***
***தாண்டு மா புரவித் தானைத்***
***தண்ணளிச் சனகன் என்னும்***
***தூண் தரு வயிரத் தோளான்***
***செய்தது சொல்லலுற்றாம்.***

**இருநிலக் கிழவன் ஆண்டு நின்று எழுந்து போகி** - *பெரிய நிலத்துக்குரியவனான தசரதன். அக் கங்கை நதியைக் கடந்து சென்று;* **அகன்பணை மிதிலை என்னும்** - *அகன்ற வயல்கள் சூழ்ந்த மிதிலை யெனும் பெயருடைய;* **ஈண்டு நீர் நகரின் பாங்கர் எய்த** - *நீர் வளம் மிக்க நகரத்தின் அருகில். சேர்ந்த அளவில்;* **தாண்டும்மா புரவித்தானை** - *பாய்வதில் பெருமையுடைய குதிரைப்படைகளையும்;* **தண்ணளிச் சனகன் என்னும்** - *(நெஞ்சில்) கருணையையும் உடைய சனகன் என்னும் பெயரிய;* **தூண்தரு வயிரத் தோளான்** - *தூண்களைப் போன்ற உறுதிமிக்க தோள்களையுடையவன்;* **செய்தது சொல்லல் உற்றாம்** - *செய்த செயல்களைச் சொல்லத் தொடங்குகிறோம்.*

*கவிக்கூற்று. வெளியே படைகளும்.. உள்ளே கருணையும் நிறைந்தான் எனச் சனகனின் வீரமும் ஈரமும் ஒரு சேரக் கூறியவாறு. 3*

*தயரதனைச் சனகன் எதிர்கௌ வருதல்*

***1032. 'வந்தனன் அரசன்' என்ன.***
***மனத்து எழும் உவகை பொங்க.***
***கந்து அடு களிறும். தேரும்.***
***கலின மாக் கடலும். சூழ***
***சந்திரன் இரவிதன்னைச்***
***சார்வது ஓர் தன்மை தோன்ற.***
***இந்திரதிருவன் தன்னை***
***எதிர் கொள்வான் எழுந்து வந்தான்.***

***வந்தனன் அரசன் என்ன*** - *தசரத மன்னன் வந்தனன் என்ற (செய்தி கேட்ட சனக மன்னன்);* ***மனத்து எழும் உவகை பொங்க*** - *தன் உள்ளத்தில் எழுந்த உவகை. உடலில் (மெய்ப்பாடாய்) பெருகாநிற்க;* ***கந்து அடுகளிறும் தேரும் கலினமாக் கடலும் சூழ*** - *கட்டுத் தறிகளை முறிக்கவல்ல ஆண்யானைகளும். தேர்ப்படைகளும். கடிவாளம் இட்ட குதிரைகளும் ஆகிய சேனைகள் சமுத்திரம் போல் தன்னைச் சுற்றிவர;* ***சந்திரன் இரவிதன்னைச் சார்வதோர் தன்மை தோன்ற*** - *சந்திரன் சூரியனை வந்தடைகின்ற தன்மையினை ஒப்ப;* ***இந்திர திருவன் தன்னை எதிர் கொள்வான் எழுந்து வந்தான்*** - *தேவேந்திர உலகத்தின் செல்வங்களைப் போன்ற செல்வங்களையுடைய தசரதனை. எதிர்கொண்டு அழைக்கும் பொருட்டுப் புறப்பட்டு வந்தான்.*

*சூரிய குலததுத் தசரதனை. சந்திர குலத்துச் சனகன் வரவேற்க வருகின்றான் ஆதலின். "சந்திரன் இரவிதன்னைச் சார்வதோர் தன்மை தோன்ற" என அழகுறக் கூறினார். தசரதனை "இந்திரன் என" (கம்ப. 318) முன்னும் உவமிப்பார்.*

***1033. கங்கை நீர் நாடன் சேனை.***
***மற்று உள கடல்கள் எல்லாம்***
***சங்கு இனம் ஆர்ப்ப வந்து***
***சார்வன போல. சார.***
***பங்கயத்து அணங்கைத் தந்த***
***பாற்கடல் எதிர்வதேபோல்.***
***மங்கையைப் பயந்த மன்னன்***
***வள நகர் வந்தது அன்றே.***

***மற்று உள கடல்கள் எல்லாம்*** - *(பாற் கடலைத் தவிர) மற்றைய கடல்கள் யாவும்;* ***சங்கு இனம் ஆர்ப்பவந்து சார்வன போல*** - *சங்குகளின் கூட்டம் ஆரவாரம் செய்த வண்ணம் வந்து. (திருப்பாற்கடலை) சேர்வன போன்று;* ***கங்கைநீர் நாடன் சேனை சார*** - *கங்கைபாயும் கோசல நாட்டுத் தசரத மன்னனது சேனைகள் மிதிலை வந்து சேர;* ***மங்கையைப் பயந்த மன்னன் வளநகர்*** - *சீதையை மகளாகப் பெற்ற சனக மன்னனது வளம் மிக்க மிதிலை நகர்;* ***பங்கயத்து அணங்கைத் தந்த பாற்கடல் எதிர்வதேபோல்*** - *தாமரை மலரில் வதியும் திருமகளைத் தந்த திருப்பாற்கடலானது (பிற கடல்களை) எதிர்கொண்டு வர வேற்பது போன்று;* ***அன்று வந்தது*** - *அப்பொழுது. தசரத சேனையினை எதிர்கொண்டு வரவேற்றது.*

*சீதை திருமகளின் கூறு ஆதலால் அவள் தோன்றிய திருப்பாற் கடலைச் சீதை இப்போது தோன்றியுள்ள மிதிலைக்குப் பொருத்த முற உவமித்தார். தசரத சேனையைப் பிறகடல்கள் அனைத்துமாக உவமித்தலால் அதன் பெருக்கம் தெரிவித்தார். சங்கங்கள் முழங்கச் சேனை எதிர் வருவது. சங்குகள் முழங்கும் கடலுக்கு உவமை. அது பெருமையாலும். ஒலியினாலும் பொருந்தும் உவமையாயிற்று.*

*சரயு நதிதான். கோசலத்துக் குரிய ஆறு எனினும். கோசல நாடு கங்கை நதி வரையும் பரவியிருத்தலின்'' கங்கை நீர் நாடன்'' என்றார். இலக்குவனை. ''கங்கைக்கு இறைவன்'' (கம்ப. 1718) என்பார்.*

*தயரத மன்னனின் தானைச் சிறப்பு*

**கலிவிருத்தம்**

***1034. இலை குலாவு அயிலினான்***
***அனிகம். ஏழ் என உலாம்***
***நிலை குலாம் மகர நீர்***
***நெடிய மா கடல் எலாம்.***
***அலகு இல் மா களிறு. தேர்.***
***புரவி. ஆள். என விராய்.***
***உலகு எலாம் நிமிர்வதே***
***பொருவும் ஓர் உவமையே.***

***இலைகுலாவு அயிலினான் அனிகம்*** *- அரசிலை வடிவுடன் திகழும் கூரிய வேற்படையினை ஏந்திய தசரதனின் சேனைக்கு;* ***ஏழ் என உலாம்*** *- ஏழு என்னும் எண்ணிக்கை கொண்டனவாய்;* ***நிலை குலாம் மகரநீர் நெடியமா கடல் எலாம்*** *- நிலைபெற்று விளங்கும். சுறா மீன்கள் உலாவும். நீண்டு அகன்ற கடல்கள் யாவும்;* ***அலகு இல் மா களிறு. தேர் புரவி. ஆள் எனை விராய்*** *- அளவற்ற பெரிய யானைகளும் தேர்களும். குதிரைகளும். காலாட்களும் என்னும் நால்வகை வடிவுபெற்றுக் கலந்து;* ***உலகு எலாம் நிமிர்வதே பொருவும் ஓர் உவமை*** *- உலகம் முழுவதிலும் பொங்கிப் பரவி வருவதே ஏற்றதோர் உவமையாகும்.*

*கணக்கிட இயலாமையாலும். ஆர்ப்பொலியாலும் கடலும் படையும் சமம் ஆயின என்க. ''நிமிர்வதே'' - ஏகாரம் பிரிநிலை. ஏழ்கடலும் நால்வகைச் சேனை வடிவம் பெற்று. உலகம் முழுவதிலும் பொங்கி மிதிலையை நோக்கி நகர்ந்தது என்பது தயரதன் சேனை வெள்ளத்திற்குப் பொருந்தும் உவமையாம் என்றார். தன்மைத் தற்குறிப்பேற்ற அணி. உயர்வு நவிற்சியுமாம். மகரம் - கடலில் மட்டுமே வாழும் சுறாமீன். ''கடல் வாழ் சுறவும்'' (தொல். மரபு. 41) என்பார் தொல்காப்பியனார். இது பற்றி. கடலுக்கு ''மகராலயம்'' எனும் ஒரு பெயர் வட மொழியில் உண்டென்பர்.*

***1035. தொங்கல். வெண்குடை. தொகைப் பிச்சம். உட்பட விராய்.***
***எங்கும் விண் புதைதரப் பகல் மறைந்து. இருள் எழ.***
***பங்கயம். செய்யவும். வெளியவும். பலபடத்***
***தங்கு தாமரையுடைத் தானமே போலுமே.***

***தொங்கல் வெண்குடை தொகைப்பிச்சம் உட்பட விராய்*** - *மாலைகளையுடைய வெண் கொற்றக் குடைகளும். தொகுதியான மயிற் பீலிக் குஞ்சங்களும் உட்பட (தாமரை. கொடி. மகரதோரணம் முதலிய அரச சின்னங்கள்) கலந்து;* ***எங்கும் விண்புதைதர*** *- (அதனால்) எவ்விடத்தும் ஆகாயம் மறைவதனால்;* ***பகல் மறைந்து இருள் எழ*** *- சூரியன் ஒளி மறைந்து இருள் உண்டாக;* ***பங்கயம் செய்யவும் வெளியவும்*** *- தாமரை மலர்கள் செம்மையாகவும். வெண்மையாகவும்;* ***பலபடத்தங்கு தாமரையுடைத்தானமே போலும்*** *- பலப்பலவாகத் தோன்றும் தாமரைத் தடாகத்தையே அச் சேனை ஒத்திருந்தது.*

*வானம் முழுவதும் அரச சின்னங்கள் மறைப்பதாகக் கற்பித்து. அதன் பின்னும் கற்பனைக் கண்ணைச் செலுத்தி பகலை இரவாக்கி. உலகைத் தாமரைத் தடாகமாகக் கொண்டு மகிழும் கவிஞரின் கற்பனைத் திறம் நினைக்க இனிக்கவல்லது. சேனையில் வெண்ணிறக் குடைகளும். அவற்றில் செந்நிறமாகத் தொங்கும் குஞ்சங்களும் நிறைந்த காட்சி வெண்டாமரையும் செந்தாமரையும் கலந்து மலரும் தாமரைக் குளம் போன்றிருந்தது என்பதாம். குடைகளால் கதிரவன் மறைந்து பகல் இருளாவதை மேலும் (கம்ப. 786. 8411) குறிப்பர்.*

***1036. கொடி உளாளோ? தனிக் குடை உளாளோ? குலப்***
***படி உளாளோ? கடற் படை உளாளோ? பகர்***
***மடி இலா அரசினான் மார்பு உளாளோ? வளர்***
***முடி உளாளோ? தெரிந்து உணர்கிலாம் - முளரியாள்.***

*முளரியாள் - செந்தாமரை மலரில் வதியும் திருமகள்;* ***பகர் மடிஇலா அரசினான்*** *- (புகழ்ந்து) கூறப்படுகிற சோம்பல் இல்லாத அரசாட்சி செய்யும் தசரத மன்னனுடைய;* ***கொடி உளாளோ*** *- கொடியில் உள்ளாளோ?;* ***தனிக் குடை உளாளோ?*** *- ஒப்பற்ற வெண் கொற்றக் குடையிலே இருக்கின்றாளோ;* ***குலப்படி உளாளோ*** *- பரம்பரை பரம்பரையாக வருகின்ற அவனது இராச்சியத்தில் இருக்கின்றாளோ;* ***கடல் படை உளாளோ?*** *- கடல் போன்ற அவன் சேனையிலே இருக்கின்றாளோ?;* ***மார்பு உளாளோ?*** *- அம் மன்னர் மன்னனின் மார்பிடத்தே இருக்கின்றாளோ?;* ***வளர் முடி உளாளோ?*** *- அழகு வளரும் அவன் மணிமகுடத்தில் இருக்கின்றாளோ?;* ***தெரிந்து உணர்கிலாம்*** *- திருமகள் இருக்குமிடம் இன்னது எனத் தெளிந்தறியக் கூடவில்லை.*

*மன்னர்களிடம் திருமகள் வாசம் புரியத்தக்க இவையனைத்திலும் ஏதோ ஓரிடத்தில் வசிப்பது அவள் வழக்கம்; தரசதன் ஆட்சியில் அவள் அனைத்திலும் உள்ளாள் என்றவாறு. ''மடியிலான் தாள் உளாள் தாமரையினாள்'' (திருக். 617) எனும் அருமைத் திருக்குறளின் கவிதை விளக்க வுரையாவது இது.*

*1037.* ***வார்முகம் கெழுவு கொங்கையர்***
***கருங் குழலின் வண்டு***
***ஏர் முழங்கு அரவம் - ஏழ்***
***இசை முழங்கு அரவமே!***
***தேர் முழங்கு அரவம் - வெண்***
***திரை முழங்கு அரவமே!***
***கார் முழங்கு அரவம் - வெங்***
***கரி முழங்கு அரவமே!***

**வார்முகம் கெழுவு கொங்கையர் கருங்குழலின்** - *கச்சில் நிறைந்து வழியும் கொங்கைகளையுடைய மகளிரின் கரிய கூந்தலில் மொய்க்கும்;* **வண்டு ஏர் முழங்கு அரவம்** - *வண்டுகள் அழகாக ஒலிக்கும் ஓசை;* **ஏழ் இசை முழங்கு அரவமே** - *ஏழ்வகைச் சுரங்கள் ஒலிக்கின்ற இசையேயாகும்;* **தேர் முழங்கு அரவம்** - *(அச்சேனையில்) தேர்கள் ஒலிக்கின்ற ஓசை;* **வெண்திரை முழங்கு அரவமே** - *வெண்ணிறக் கடல் அலைகள் ஒலிக்கும் ஓசையே யாகும்;* **வெங்கரி முழங்கு அரவம்** - *வலிய யானைகள் பிளிறும் ஓசை;* **கார் முழங்கு அரவமே** - *கார்காலத்து (மேகங்கள் ஒலிக்கும் இடி) முழங்கும் முழக்கமே யாகும்.*

*"படை யியங்கு அரவம்" (தொல். புறத். 3) எனும் புறப் பொருளை நினைவில் கொண்டு. தசரத வேந்தன் படையில் இயங்கும் அரவங்களைப் பல்வகையாக ஒப்பிட்டு மகிழ்ந்தவாறு. மகளிரின் பெருந்தொகுதியும். யானை தேர்ப்படைகளின் மிகுதியும் கூறியவாறு.*

*1038.* ***சூழு மா கடல்களும் திடர் பட. துகள் தவழ்ந்து.***
***ஏழு பாரகமும் உற்றுளது எனற்கு எளிதுஅரோ-***
***ஆழியான் உலகு அளந்த அன்று. தாள சென்ற அப்***
***பூழையூடே பொடித்து. அப்புறம் போயதே!***

***துகள்*** - (அச்சேனையின் இயக்கத்தால் எழுந்த) புழுதி; ***சூழும்மா கடல் எலாம் திடர்பட*** - (உலகைச்) சூழ்ந்துள்ள கடலகள் எல்லாம் மேடாகும்படி; ***தவழ்ந்து ஏழு பாரகமும் உற்று உளது எனற்கு எளிது*** - பரவிச் சென்று. மேல் ஏழ் உலகத்திலும் போய்ப் பரவியது என்று சொல்லுதற்கு (வழி) (மிக) எளிதேயாம்; ***ஆழியான் உலகு அளந்த அன்று*** - (எங்ஙனம் எனில்) சக்கரப் படையையுடைய திருமால். உலகங்களை அளந்த அக்காலத்தில்; ***தாள் சென்ற அப்பூழையோடே பொடித்து*** - (அவனது) திருவடி என்று (மேலே துளைத்துச்) சென்ற அந்த (அண்டகடாகத்து மேல் முகட்டுத்) துளைவழியினூடே நுழைந்து சென்று; ***அப்புறம் போயது*** - (இவ் வண்டத்துக்கு வெளியே உள்ள) அவ்வண்டத்திலும் (அத்தூளி) பரவிற்று. ஆழியான் திருவடிகள் உலகளந்த அன்று உண்டாக்கிய துளையின் வழியால் படையால் எழுந்த புழுதி வெளியண்டத்திலும் பரவுதல் எளிதாயிற்று என்க. இன்றேல். இவ்வுலகம் புழுதி மிகுதியால் திக்குமுக்காடியிருக்கும் என்பது கருத்து. அண்ட கடாகத்திலும் தூளி பரவிற்று என்றதனால். இவ் வேழ் உலகில் பரவியமை சொல்ல வேண்டா ஆயிற்று. அரோ - அசை. உயர்வு நவிற்சியணி. பூழை - சிறுதுளை.

***1039. மன் நெடுங் குடை மிடைந்து***
***அடைய வான் மறைதர.***
***துன்னிடும் நிழல் வழங்கு இருள்***
***துரப்பு எளிதுஅரோ-***
***பொன் இடும். பூண் இடும்.***
***புனை மணிக் கலன் எலாம்***
***மின் இடும்; வில் இடும்;***
***வெயில் இடும்; நிலவு இடும்!***

***மன்நெடுங் குடை மிடைந்து அடைய வான் மறை தர*** - அந்தச் சேனையில் மன்னர்களின் நீண்டகுடைகள் நெருங்கி. (அதனால்) வானம் முழுவதும் மறைபட; ***துன்னிடும் நிழல் வழங்கு இருள்துரப்பு எளிது*** - (அங்கு) நிறைந்த நிழலானது தருகின்ற இருட்டை ஓட்டுவது எளியதேயாம்; ***பொன் இடும் பூண்இடும் புனைமணிக் கலன் எலாம் மின் இடும்*** - (எங்ஙனமெனில்) பொன்னால் செய்யப்பட்ட அணிகளை இட்டு (அதன் மேல்) அழகிய மணிகளைப் பதித்த (அச்சேனையினர்) ஆபரணங்கள் எல்லாம் மின்னலைப்போல் ஒளிவிடும்; ***வில்இடும்*** - பன்னிற மணிகள் (தம்) ஒளிவீச்சால் வானவில் போல் பலநிற ஒளிகள் சிந்தும்; ***வெயில் இடும்*** - (சில மணியாபரணங்கள்) கதிரவனின் வெப்ப ஒளியை வீசும்; ***நிலவு இடும்*** - (சில மணியணிகள்) சந்திரனின் குளிர்ந்த ஒளிகளை உமிழும்.

*'புவியிடும் "எனும் பாடத்திலும்" பூண் இடும்" எனும் பாடம் பொருட்சிறப்புடையது. இறுதியிரண்டடிகள் உயர் கவிகளுக்கேயுரிய சொல் இன்பச்சுவை பிலிற்றி நிற்றலை ஓதி யுணர்க. படையின் செலல். இருள் நீங்கி ஒளிமிகுவதை "எரிந்தெழுபல் படை"(கம்ப: 8329) எனும் பாடலிலும் உரைப்பார்.*

*சனக மன்னன் வருகின்ற வழிக் காட்சி*

***1040.* தா இல் மன்னவர்பிரான் வர. முரண் சனகனாம்**
**ஏ வரும் சிலையினான். எதிர் வரும் நெறி எலாம்.**
**தூவு தண் சுண்ணமும். கனக நுண் தூளியும்.**
**பூவின் மென் தாது உகும் பொடியுமே - பொடிஎலாம்.**

***தாஇல் மன்னவர் பிரான் வர*** - *குற்றமில்லாத மன்னர்க்கு மன்னனான தசரதச் சக்கரவர்த்தி. தனது நகரத்திற்கு வருகைபுரிகையில்;* ***முரண் சனகனாம் ஏவரும் சிலையினான்*** - *வலிமை மிகும் சனகனாகிய அரிய அம்புகள் தொடுக்கவல்ல வில் வீரனாகிய அரசன்;* ***எதிர்வரும் நெறிஎலாம்*** - *எதிர் கொண்டு அழைத்துவர உள்ள வழிகள் முழுவதும்;* ***தூவுதண் சுண்ணமும் கனக நுண் தூளியும்*** - *மங்கல நிகழ்ச்சிகளில் மேலே தூவப்படுகிற குளிர்ச்சி தரும் வாசனைப் பொடிகளும் (அணிகளின் உராய்வினால்) சிந்துகின்ற) பொன்னாபரணங்களின் நுட்பமான பொற் பொடிகளும்;* ***பூவின் மென் தாது உகும் பொடியுமே*** - *மலர்களிலிருந்து சிந்துகிற மெல்லிய மகரந்தப் பொடிகளும் ஆகிய இவையே;* ***பொடி எலாம்*** - *(அங்குச் சிந்திய) பல்வகைத் தூசுகள் ஆகும்.*

*உலகில். எளியவையே தூசு எனப்பட. அங்கு மதிப்பு மிக்கவையே தூசுகள் ஆயின என்க. தா இல் - குற்றமற்ற;கேடு அற்ற எனினுமாம். "தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்" (தொல். புறத். 5) இரப்போர் கடலை ஈந்தே கடந்து (கம்ப. 172). மண்ணின்மேல் வான் புகழ் நாட்டான் ஆதலின். தசரதனை. "தா இல் மன்னவர் பிரான் வர"எனறார்.*

***1041.* நறு விரைத் தேனும். நானமும். நறுங் குங்குமச்**
**செறி அகில் தேய்வையும். மான்மதத்து எக்கரும்.**
**வெறியுடைக் கலவையும். விரவு செஞ் சாந்தமும்.**
**செறி மதத் கலுழி பாய் சேறுமே - சேறு எலாம்.**

**நறுவிரைத் தேனும் நானமும்** - நறுமணமுடைய தேனும். *(கூந்தலில் கலந்தொழுகும்)* புனுகும்; **நறுங்குங்குமச் செறிஅகில் தேய்வையும்** - நல்ல வாசனையுடைய குங்குமப் பூவோடு சேர்ந்த திண்ணிய அகிற்கட்டைத் தேய்வினால் ஆகிய குழம்பும்; **மானமதத்து எக்கரும்** - மான்மதமாகிய கத்தூரியின் மிகுதியும்; **வெறியுடைக் கலவையும்** - பரிமளமுடைய பல்வேறு வாசனைப் பொருள்களின் சேர்க்கையும்; **செஞ்சாந்தமும்** - செந்நிறச் சந்தனமும்; **விரவு செறி மதக் கலுழியாய் சேறுமே** - சேர்தலால் உண்டான சேறுகளுடனே. மிகுந்த யானைகளின் திரள்களில் உண்டான மதநீர் பாய்கின்ற சேறுகளும்; **சேறு எலாம்** - *(சேர்ந்த கலவையே படைசெல்லும் வழியில் உள்ள)* சேறுகள் யாவும்.

இழிகுணச் சேறின்றி. நறுமணச் சேறே வழியெங்கும் என்று கற்பித்து. செல்வ வளமும். நாகரிகச் செழுமையும் சுட்டியவாறு. கலுழி - வெள்ளம்.

*1042.* ***மன்றல் அம் கோதையார்***
***மணியினும் பொன்னினும்.***
***சென்று வந்து உலவும் அச்***
***சிதைவு இலா நிழலின் நேர்.***
***வென்ற திண் கொடியொடும்.***
***நெடு விதானமும் விராய்.***
***நின்ற வெண்குடைகளின்***
***நிழலுமே - நிழல் எலாம்.***

***மன்றல் அம்கோதையார் மணியினும் பொன்னினும்*** - *மணம் மிக்க அழகிய மாலையினை யணிந்த மகளிரது பொன் ஆபரணங்களிலும். மணியாபரணங்களிலும்;* ***அச்சிதைவிலா நேர் நிழலின் சென்று வந்து உலவும்*** - *(அங்குள்ள சேனைகளின் வெண்குடை. கொடி முதலியவற்றின்) சிதைவில்லாத (எதிர் ஒளி) நிழல்கள் நேராகச் சென்று உலாவி வரும்;* ***வென்ற திண்கொடியோடும்*** - *இவற்றோடு வெற்றிக்கு அறிகுறியான வலிய துவசங்களுடன்;* ***விதானமும் விராய்*** - *மேற்கட்டிகளும் கலந்து நின்ற;* ***வெண் குடைகளின் நிழல்களே*** - *வெண் கொற்றக் குடைகளின் நிழல்களே;* ***நிழல் எலாம்*** - *அவ்வழியில் உள்ள) நிழல்கள் எல்லாம்.*

*இரு மன்னர்களின் குடைகள் இன்றும் நிழல் தரத் தவறவில்லை என்றபடி. எதிர் ஒளிபட்டு வரும் ஒளிகளில் வெப்பம் வாராது குளிர்வே வரும் என்பது அன்றே உணர்ந்திருந்தனர் என்பது. "மன்றலங்கோதையார் மணியினும் பொன்னினும் சென்று வந்து உலாவும் அச்சிதைவு இலா நிழல்" என்றார். சந்திரன் ஒளி குளிர்வதற்கும் அது சூரியனின் எதிர் ஒளியாவதே காரணம் என்பார். மகளிர் அணியில் பட்டு வரும் எதிர் ஒளி நிழலும். கொற்றக் குடை நிழலும் அங்கு நிழல் என்றார்.*

*இருபெரு மன்னர் சேனையும் ஒன்றுதல்*

*1043.* ***மாறு இலா மதுகையான் வரு பெருந் தானைமேல்.***
***ஊறு பேர் உவகையான் அனிகம் வந்து உற்றபோது.***
***ஈறு இல் ஓதையினொடும். எறி திரைப் பரவைமேல்***
***ஆறு பாய்கின்றது ஓர் அமலைபோல் ஆனதே.***

***மாறு இலா மதுகையான் வருபெருந்தானை மேல்*** - *ஒப்பிலாத வலிமையுடைய தசரதனுடைய தாய் வருகின்ற பெரிய சேனைக்கு எதிரே;* ***ஊறு பேர் உவகையான் அனிகம் வந்து உற்றபோது*** - *மேன்மேற் பொங்குகின்ற பெருங்களிப்பையுடைய சனகனது சேனை வந்து சேர்ந்த அப்போது;* ***ஈறுஇல் ஓதையினொடும் எறிதிரைப் பரவைமேல்*** - *எல்லையில்லாத ஓசையுடனே வீசுகின்ற அலைகளையுடைய கடலின் மேலே;* ***ஆறுபாய்கின்றது ஓர் அமலை போல் ஆனது*** - *ஆறு ஒன்று சென்று பாய்கின்றதனால் உண்டாகிற ஓசைபோல ஒரு பேராரவாரம் உண்டாயிற்று.*

இங்கும் தசரத சேனை மிகப் பெரியது எனக் குறிக்கக் கடலை உவமித்தார்: சனக சேனை அவ்வளவு பெரியது அன்று என்று உணர்த்த ஆற்றை உவமித்தார். இரண்டு சேனைகளும் கடலும் ஆறும் சந்திப்பது போன்ற பேர் ஆரவாரத்தோடு சந்தித்தன என்றார். எதிர் கொள் படலம் எனும் படலப் பெயர் இப்பாடலால் விளங்கும். மாறு - ஒப்பு. ''மாறின்மையின் மறம்வாடும் என்று இளையோரையும் எறியான்'' (சீவக. 261) என்புழிப் போல.

சனகனைத் தயரதன் தழுவுதல்

*1044.* **கந்தையே பொரு கரிச் சனகனும். காதலோடு**
**உந்த. ஓத அரியது ஓர் தன்மையோடு. உலகு உளோர்**
**தந்தையே அனைய அத் தகவினான் முன்பு. தன்**
**சிந்தையே பொரு. நெடுந் தேரின் வந்து எய்தினான்.**

**கந்தையே பொரு கரிச் சனகனும்** - கட்டுந்தூணை முறித்துத் தள்ளும் வலிமையுடைய யானைச்சேனையை யுடைய சனக மன்னனும்; **காதலோடு உந்த ஓத அரியது ஓர் தன்மையோடு** - ஆசையால் உந்தப் பெற்று. சொல்லுதற்கரியதோர் இயல்புடனே; **உலகு உளோர் தந்தையே அனைய அத் தகவினான் முன்பு** - உலகுள்ளோர் அனைவர்க்கும் தந்தையைப் போன்ற பண்பாளனான அந்தத் தசரதன் முன்பு; **தன் சிந்தையே பொரு நெடுந்தேரின் வந்தெய்தினான்** - தன் மனத்தினைப் போன்று (விரைவிற்) செல்லும் நெடிய தேர் (ஒன்றில்) வந்து அடைந்தான்.

உலகீன்ற பரம் பொருளை உலகுக்கு ஈன்று தந்தவன் ஆனதனாலே. தயரத மன்னன். உலகோர் அனைவர்க்கும் தந்தையாகும் தகவுடையோன் என்று நினைவூட்டுகின்றார். மூவுலகும் ஈன்றானை முன் ஈன்றான் ஆதலின். ''மூவுலகுளோர் தந்தையே அனைய அத் தகவினான்'' என்றார். கந்து - யானை கட்டுந்தறி. அதனை முறிக்கும் திறல் வாய்ந்த யானைப் படைக்குடையவன் சனகன். வாயு வேகத்திலும் சிறந்தது மனோ வேகம் ஆதலின். ''தன் சிந்தையே பொரு நெடுந்தேர்'' எனத் தேரின் ஒப்பற்ற விரைவு குறித்தும். உலகு உள்ளோர்க்கு ''மகன் அறிவு தந்தை யறிவு'' (நாலடி 367) ஆதலின் தந்தையே யனைய என்றார் எனினுமாம்.

*1045.* **எய்த. அத் திரு நெடுந் தேர் இழிந்து. இனிய தன்**
**மொய் கொள் திண் சேனை பின் நிற்க. முன் சேறலும்.**
**கையின் வந்து. 'ஏறு' என. கடிதின் வந்து ஏறினான்; ஐயனும்.**
**முகம் மலர்ந்து. அகம் உறத் தழுவினான்.**

***எய்த அத்திருநெடுந்தேர் இழிந்து*** - *தசரதன் தேர் அருகே வந்து அடைந்த சனகன் தன் அழகிய நீண்ட தேரிலிருந்து இறங்கி;* ***இனிய தன் மொய் கொள் திண்சேனை பின் நிற்க முன் சேறலும்*** - *அழகிய தனது வலிமை கொண்ட சேனை பின்னே நிற்க. தான் முன்னே சென்ற அளவில்;* ***கையின் 'வந்து ஏறு' என*** - *தசரதன் தனது கரங்களைச் சைகையால் காட்டி. வந்து தேரில் ஏறுக என்று தெரிவிக்க;* ***கடிதின் வந்து ஏறினான்*** - *விரைந்து வந்து (சனகன்) தசரதன் தேரில் ஏறினான்;* ***ஐயனும் முகம் மலர்ந்து அகம் உறத் தழுவினான்*** - *(அப்பொழுது) தசரதச் சக்கரவர்த்தியும் முக மலர்ச்சி பெற்று. மனத்திலும் மலர்ச்சி பொருந்தத் தழுவினான்.*

*சேனை பின் நிற்கச் சனகன் முன் செல்லலும். தயரதன் கையால் சைகை காட்டித் தேர் ஏறச் செய்தலும் முகமும் அகமும் மலர இருவரும் தழுவுதலும் ஒரேபாடலில் சொல் ஓவியப் படிவம் ஆக்கியிருத்தல் சுவைத்தற் பாலது. அக்காலத்து. விருந்தினராம் வேந்தரை வரவேற்கும் ஒழுங்காசாரம் தெளிவுறச் சுட்டப்படலும் உணர்க. ''கையின் வந்து ஏறு'' என்பதற்கு. கைகொடுத்து. வந்து ஏறுக என்றான் எனினுமாம். ''முகத்தான் அமர்ந்து இனிது நோக்கி அகத்தான் ஆம் இன் சொலினதே அறம்'' (திருக். 93) ஆதலின். ''ஐயனும் முகம் மலர்ந்து அகம் உறத்தழுவினான்'' என்றார்.*

***1046. தழுவி நின்று. அவன் இருங் கிளையையும். தமரையும்.***
***வழு இல் சிந்தனையினான். வரிசையின் அளவளாய்.***
***'எழுக முந்துற' எனா. இனிது வந்து எய்தினான்.-***
***உழுவை முந்து அரி அனான். எவரினும் உயரினான்.***

***உழுவை முந்து அரி அனான்*** - *முந்தி வந்து புலி ஒன்றால் வரவேற்கப்படுகிற சிங்கத்தை ஒத்தவனும்;* ***எவரினும் உயரினான்*** - *(அங்கிருந்த) அனைவரிலும் உயர்ந்தவனுமான தசரதச் சக்கரவர்த்தி;* ***தழுவி நின்று. அவன் இருங்கிளையையும் தமரையும்*** - *சனக மன்னனை அணைத்து நின்று. சனகனின் பெருஞ்சுற்றத்தாரையும். நண்பர்களையும்;* ***வழுவில் சிந்தனையினான் வரிசையின் அளவாய்*** - *குற்றமற்ற (தூய) எண்ணத்தினனாய் முறைப்படி நலம் வினவி;* ***'முந்துற எழுக (எனா*** - *'முன்னாற் செல்லுங்கள்' எனக் கூறி. (பின்னால் சனகனைப் பின்பற்றி);* ***இனிது வந்து எய்தினான்*** - *இனிதே வந்து மிதிலை நகர் அடைந்தான்.*

*அறிமுகமானவரிடம். முறைப்படி முகமன் உரை கூறும் முறை பற்றி. ''வரிசையின் அளவளாய்'' என்றார். இதுவும் தொன்மை ஒழுங்காசாரம் சுட்டியது. பரம்பொருளை மகனாகப் பெற்ற தந்தை யாதலால் ''எவரினும் உயர்ந்தான்'' எனக் கூறத் தட்டில்லை யாதல் உணர்க. வரவேற்கப் பட்டார் பின் ஆகி. வரவேற்றார் முன் ஆகி வழி கூட்டியவாறு செல்லுதல் மரபாதலின் ''முந்துற எழுக'' என்றான் தசரதன்.*

இராமனின் வருகை

**1047. இன்னவாறு. இருவரும். இனியவாறு ஏக. அத்**
**துன்னு மா நகரின்நின்று எதிர்வரத் துன்னினான் -**
**தன்னையே அனையவன். தழலையே அனையவன்.**
**பொன்னின் வார் சிலை இறப் புயம் நிமிர்ந்து அருளினான்.**

**இன்னவாறு இருவரும் இனியவாறு ஏக** - இவ்வாறு. *(தசரதன். சனகன் ஆகிய)* இருவரும். இனிதே மிதிலையையடைய; **தன்னையே அனையவன்** - தனக்கு உவமை தானே ஆகி நின்றவனும்; **தழலையே அனையவன் பொன்னின் வார்சிலை** - நெருப்பினை ஒத்த நிறத்தினன் ஆன சிவ பெருமானின் அழகிய வில்; **இறப் புயம் நிமிர்ந்து அருளினான்** - இற்று விழுமாறு தோள் ஆற்றலால் எடுத்தருளியவனுமான இராமபிரான்; **அத்துன்னுமா நகரின் நின்று எதிர்வரத் துன்னினான்** - அழகு நெருங்கும் மாநகராகிய மிதிலையிலே நின்று. எதிர் வரும் தந்தையை வரவேற்க நெருங்கினான்.

*"தன்னையே அனையவன்" - தனக்கு உவமை இல்லாதான்" (திருக். 7) "தன் ஒப்பார் இல்அப்பன்" (திருவாய். 6:3:7) எனும் ஆன்றோர் வாக்குகளை நினைப்பிப்பது. சிவன் கையில் ஏந்திய பொன்மயமான மேரு வில்லானது ஆதலான் "தழலையே அனையவன் பொன்னின் வார்சிலை" என்றார். "வடவரை வார்சிலை ஏங்கும் மாத்திரத்து இற்று இரண்டாய் விழ வீங்குதோள்" (கம்ப. 5089) ஆதலின். "சிலை இறப்புயம் நிமிர்ந்து அருளினான்" என்றார். தயரதன் இங்கு வருதற்கு அப்புயமே காரணம் ஆதலான். அதனையே இராமனுக்கு அடையாக்கினார். வில் ஒடித்த புயத்தைக் காட்டியவாறு. வீதியில் வருகிறான் தந்தையை வரவேற்கத் தசரத ராமன் என்க*

**1048. தம்பியும். தானும். அத் தானை மன்னவன் நகர்ப்**
**பம்பு திண் புரவியும். படைஞரும். புடை வர.**
**செம் பொனின். பசு மணித் தேரின் வந்து எய்தினான்-**
**உம்பரும் இம்பரும் உரகரும் தொழ உளான்.**

**உம்பரும் இம்பரும் உரகரும் தொழ உளான்** - மேலுலகத் தேவர்களும். இவ்வுலக மனிதர்களும். கீழ் உலக நாகர்களும் *(என மூவுலகத்து உயிர்களும்)* வணங்கி மகிழ உள்ளவனாகிய இராமபிரான்; **பம்புதிண் புரவியும். படைஞரும் புடை வா** - நெருங்கிய வலிமைமிக்க குதிரைகளும். படை வீரர்களும் சூழ்ந்து வர; **அத்தானைமன்னவன் நகர்** - படைப்பெருமை மிக்க சனக மன்னருடைய அந்நகரத்தினின்றும்; **செம்பொனின் பசுமணித் தேரின் வந்து எய்தினான்** - சிவந்த பொன்னால் செய்யப் பெற்று. பச்சை மணிகள் பதிக்கப் பெற்ற தேரில் ஏறி. *(தன் தந்தையை)* எதிர் கொள்ள வந்தடைந்தான்.

*"மூவுலகும் தொழ உள்ளான்" தந்தையைத் தொழ உள்ளான் என்றபடி. இராமனுடன் வரும் சேனை. சனகன் சேனையே. சேனையின்றிஅரச குலத்தார் சிறப்பு நிகழச்சிகளில் வாரார் எனும் மரபு தெரிவித்தவாறு. மூவுலகத்தாறும் வணங்கவுள்ள பெருமான். ஓருலகத்தில் ஒரு பகுதியை ஆள்கின்ற தசரதனைத் தொழ வருகிறான் என்று அவதாரத்தின் எளிவந்த கருணைத்திறமாகிய (சௌலப்பியம்) நீர்மை சுட்டியவாறு.*

***1049. யானையோ. பிடிகளோ. இரதமோ. இவுளியோ.***
***ஆன பேர் உறை இலா நிறைவை யார் அறிகுவார்-***
***தானை ஏர் சனகன் ஏவலின். நெடுந் தாதை முன்***
***போன பேர் இருவர்தம் புடை வரும் படையினே?***

***நெடுந்தாதை முன்பேர் இருவர் தம் புடை*** *- (பெருமைக்குணம்) மிக்க தம் தந்தையான தசரதனது எதிரிற் சென்று பெருமைக்குரிய (இராம. இலக்குவர்) இருவரின் பக்கத்திலே;* ***தானை ஏர் சனகன் ஏவலில் வரும் படையின்*** *- படைக்குரிய அழகினையுடைய சனகனின் ஏவலினால் உடன் வரும். சேனையில்;* ***யானையோ. பிடிகளோ. இரதமோ. இவுளியோ*** *- (ஆண்) யானைகளோ? பெண் யானைகளோ? தேர்களோ? குதிரைகளோ? (இவற்றுள் எவையோ மிகுந்தவை?);* ***ஆனபேர் உறைஇலா நிறைவை யார் அறிகுவார்?-*** *பெரிய எண்களை எண்ணுவதற்கான உறையென்னும் குறிப்பிலககம் இட்டும் எண்ணமுடியாத (அந்த யானை முதலியவற்றின்) நிறைவினை அறிந்து கூறவல்லவர் யாவருளர்?*

*உறை - ஓர் இலக்கக் குறிப்பு. பொருள்களை எண்ணுங் காலத்து ஒவ்வொரு பெரிய எண்ணுக்கும் கழற்சிக்காய். குன்றிமணிகளை ஒவ்வொரு விழுக்காடு வைக்கும் சிறு குறியீடு. "உறைபோடக் காணாது" என்னும் வழக்கம் காண்க. "ஒழிந்த பேர் உயிர்கள் எல்லாம் அரக்கருக்கு உறையும் போதா" (கம்ப. 4868) ; "அம்பண அளவை உறை குறித்தாங்கு" (பதிற். 11:5) ; "இவ்வரக்கர்........உறையிடவும் போதார்" (கம்ப. 5344) எனவருவனவும் காண்க.*

*பணிந்த இராமலக்குவரைத் தயரதன் தழுவுதல்*

***1050. காவியும். குவளையும். கடி கொள் காயாவும் ஒத்து.***
***ஓவியம் சுவை கெடப் பொலிவது ஓர் உருவொடே.***
***தேவரும் தொழு கழல் சிறுவன். முன் பிரிவது ஓர்***
***ஆவி வந்தென்ன வந்து. அரசன்மாடு அணுகினான்.***

***காவியும் குவளையும் கடிகொள் காயாவும் ஒத்து*** - *நீலோற்பல மலரையும். கருங்குவளை மலரையும் வாசனைகொண்ட காயாம் பூவையும் போன்று;* ***ஓவியம் சுவைகெடப் பொலிவதோர் உருவொடு*** - *சித்திரத்தில் எழுதும் உருவம் இனிமையின்றிப் போகும்படி விளங்குகின்ற ஒப்பற்ற வடிவத்துடனே;* ***தேவரும் தொழுகழல் சிறுவன்*** - *தேவர்களும் வந்து வணங்குதற்குரிய திருவடிகளையுடைய (சக்கரவர்த்தித் திருமகனான) இராமன்;* ***முன் பிரிவது ஓர் ஆவிவந்தென்ன*** - *இரா மனை தா என்று விசுவாமித்திரர் கேட்டபோது (தசரதனைவிட்டு) நீங்கிய உயிர் (மீண்டும் அவனுடம்பில்) வந்து சேர்ந்தாற்போலே;* ***அரசன் மாடு அணுகினான்*** - *தசரதச் சக்கரவர்த்தியிடம் வந்து எய்தினான்.*

*''தேவரும் தொழு கழல் சிறுவன்'' என்பதனால். தெய்வத்தன்மை சுட்டியதோடு. காட்சியை நடையோவியப் படுத்துகிறார். முன்பு - ''நின்புதல்வர் நால்வரிலும் கரிய செம்மல் ஒருவனைத் தந்திடுதி என உயிர் இரக்கும் கடுங்கூற்றின் (விசுவாமித்திரர்) உளையச் சொன்ன'' (கம்ப. 324) போது என விரிக்க. விசுவாமித்திரரிடம் தசரதன் இராம லக்குவரைக் கையடைப்படுத்திய போது. மன்னன் இன்னுயிர் வழிக்கொண்டால் என'' (கம்ப.) என்று கவிஞர் பிரான் உவமித்திருந்ததை மறவாமல் நினைவுகூர்ந்து அன்றுபிரிந்த உயிரை இன்று இணைக்கின்றார் என்க. ''ஓவியத்து எழுத ஒண்ணா உருவத்தாய்'' (கம்ப. 4020) எனப்படுபவன் ஆதலின். ''ஓவியம் சுவைகெடப்பொலிவதோர் உருவொடே'' என்றார்.*

***1051. அனிகம் வந்து அடி தொழ.***
***கடிது சென்று. அரசர்கோன்***
***இனிய பைங் கழல் பணிந்து***
***எழுதலும். தழுவினான்;***
***மனு எனும் தகையன்***
***மார்பிடை மறைந்தன. மலைத்***
***தனி நெடுஞ் சிலை இறத்***
***தவழ் தடங் கிரிகளே.***

*(இராமன்)* ***அனிகம் வந்து அடிதொழக் கடிது சென்று*** - *(இராமபிரான் தன் தந்தையின்)* சேனைகள் வந்து தன் திருவடிகளை வணங்க. விரைந்து சென்று; ***அரசர் கோன் இனிய பைங்கழல் பணிந்து எழுதலும்*** - தசரதச் சக்கரவர்த்தியின் *(காண்பதற்கு)* இனிய பசுங்கழல்கள் அணிந்த பாதங்களை வீழ்ந்து வணங்கி எழுந்தவுடன்; ***தழுவினான்*** - *(சக்கரவர்த்தி தனது பெறற்கரிய மைந்தன் இராமனை)* அணைத்துக் கொண்டான்; ***மனுஎனும் தகையன் மார்பிடை*** - ஆதிமனுச் சக்கரவர்த்தி என்று சொல்லத்தக்க குணங்களையுடைய தசரதனின் மார்பிலே; ***மலைத்தனிநெடுஞ்சிலை இறத்தவழ் தடங்கிரிகள் மறைந்தன*** - மேருமலை யாகிய ஒப்பற்ற சிவதனுசு ஒடியும்படி செய்த *(இராமனுடைய)* தோள்களாகிய மலைகள் மறைந்து போயின. "மார்பிடைத் தோள்கள் மறைந்தன" என்றதனால். தயரதனின் மார்பகலம் வியந்தவாறு. "மலையை முறித்த மலை" என்று இராமனின் தோள்களை ஒரு நயம்படக் கூறினார். தயரதன் நாடாண்ட நேர்த்தியை. "மனு எனுந்தகையன்" என ஒரு தொடரால் உணர்த்திவிட்ட திறம் உணர்க. "தனு அன்றித்துணை இல்லான்; தருமத்தின் கவசத்தான்; மனுவென்ற நீதியான்" (கம்ப. 650) என முன்பும் புகழ்ந்த திறம் ஓர்க. 23

***1052. இளைய பைங் குரிசில் வந்து.***
***அடி பணிந்து எழுதலும்.***
***தளை வரும் தொடையல் மார்பு***
***உற உறத் தழுவினான்.***
***களைவு அருந் துயர் அறக்***
***ககனம் எண் திசை எலாம்***
***விளைதரும் புகழினான்.***
***எவரினும் மிகுதியான்.***

***களைவு அருந்துயர் அறக் ககனம் எண்திசை எலாம்*** - *(பிறரால்)* நீக்குதற்கு அரிய *(சம்பரன் முதலிய அசுரர்களால் உலகோர்க்கு நேர்ந்த)* துயரங்களையெல்லாம். நீக்கியதால் விண்ணிலும் எண்திசைகளிலும். பிறஎல்லா இடங்களிலும்; ***விளைதரும் புகழினான் எவரினும் மிகுதியான்*** - பரவிய புகழினையுடையவனும். எல்லோரினும் சிறந்தவனுமான தசரதன்; ***இளைய பைங்குரிசில் வந்து அடிபணிந்து எழுதலும்*** - பசும்பொன்னின் நிறம் வாய்ந்த இளைய பெருமாள் வந்து *(தன்னுடைய)* திருவடிகளை வணங்கி எழுந்த அளவிலே; ***தளைவரும் தொடையல் மார்புற உறத்தழுவினான்*** - கட்டப்பட்ட மாலைகள் நிறையும் மார்பில் பொருந்துமாறு. நன்கு அணைத்துக்கொண்டான்.

*இராமனாகிய மூத்தோனைக் காக்கத் தானாகப் பின்சென்ற தகுதியோன் ஆதலால். இலக்குவனை "மார்புற. உறத்தழுவினான்" என்க. தசரதன். "துனி இன்றி உயிர் செல்ல. சுடர் ஆழிப்படை வெய்யோன் பனி வென்றபடி என்ன. பகைவென்று படி காப்போன்" (கம்ப. 650) ஆதலால். "களைவரும் துயர் அறக் ககனம் எண்திசை எலாம் விளைதரும் புகழினான்" என்றார். பரம்பொருளாகிய இராமனை ஈன்றதால் "எவரினும் புகழினோன்" ஆனான். இலக்குவன் பொன்னிறத்தன் என்பதனை. "வில் ஏந்தும் எனில் செம்பொன் பருவரை" (கம்ப. 658) என்பதனால் உணர்க. கொலையிற் கொடியாரை வேந்து ஒறுத்தல் பைங்கூழ் களைகட் டதனோடு நேர் (திருக். 550) ஆதலால் "களைவரும் துயர்அற" நாடாண்டான் எனினுமாம்.*

*இராமன் தாயாரை வணங்குதல்*

***1053. கற்றை வார் சடையினான்***
  ***கைக் கொளும் தனு இற.***
***கொற்ற நீள் புயம் நிமிர்த்***
  ***தருளும் அக் குரிசில். பின்***
***பெற்ற தாயரையும். அப்***
  ***பெற்றியின் தொழுது. எழுந்து***
***உற்றபோது. அவர் மனத்து***
  ***உவகை யார் உரை செய்வார்?***

***கற்றைவார் சடையினான் கைக்கொளும் தனு இற*** *- (தொகுதி) தொகுதியாக நீண்ட சடைகளையுடையவனான சிவபெருமான் கையில் தரித்த வில்லை முறியும்படி செய்த;* ***கொற்ற நீள் புயம்நிமிர்த்து அருளும் அக்குரிசில்பின்*** *- வெற்றியினை யுடைய நீண்ட தோள்களை நிமிர்த்தி நடந்தருளும் அந்த இராமபிரான். பின்பு;* ***பெற்ற தாயரையும் அப்பெற்றியின் தொழு எழுந்து உற்றபோது*** *- தன்னை ஈன்றதாயர் ஆகிய கௌசலை. கையேயி. சுமித்திரை ஆகிய மூவரையும். முன்பு தசரதனைத் தொழுது முறைமையிலேயே பணிந்து எழுந்து. அவர்கள் அருகினில் அடைந்தபோது;* ***அவர் மனத்து உவகை யார் உரைசெய்வார்?*** *- அம் மூவர் மனங்களிலும் உண்டான மகிழ்ச்சிப் பெருக்கினை. (அளவிட்டு) உரைப்பார் யார் உளர்?*

*தாடகையை வதைத்து. வேள்வியைக் காத்து. சிவதனுசை ஒடித்த "சான்றோன் எனக்கேட்ட தாயர்" (குறள். 69) ஆதலின். அவர்தம் உவகைப் பெருக்கினை உரையிட முடியாது என்றார். தசரதனை வணங்கியபோது. இராமன் புயவலிமையைப் போற்றியது போலவே. தாயரை வணங்கியபோதும் புயவலியே புகழப் பெற்றமை காண்க. மக்கள் பூத உடலிலும். புகழ்உடலே. தாயர்க்கு ஈன்ற ஞான்றினும் பெரிது உவக்கச் (புறம் 278) செய்யும்*

*தொழுத பரதனை இராமன் தழுவுதல்*

*1054.* ***உன்னு பேர் அன்பு மிக்கு***
***ஒழுகி ஒத்து. ஒண் கண் நீர்***
***பன்னு தாரைகள் தர.***
***தொழுது எழும் பரதனை.***
***பொன்னின் மார்பு உற அணைத்து.***
***உயிர் உறப் புல்லினான்-***
***தன்னை அத் தாதை முன்***
***தழுவினான் என்னவே.***

***உன்னு பேர்அன்பு மிக்கு ஒழுகி ஒத்து*** - *(எப்போதும் இராமனையே) நினைக்கும் தன்மையுள்ள சிறந்த அன்பு (மனத்திலே) மிகுந்து. (அங்கு அடங்காமல் கண் வழியாகச்) சிந்தியது போன்று;* ***ஒண்கண்நீர் பன்னு தாரைகள் தர*** - *ஒளிபொருந்தும் கண்களில் நீர். அடர்ந்து தாரை தாரையாகப் பெருக;* ***தொழுது எழும் பரதனை*** - *(தன்னை) வணங்கி எழுகின்ற (தம்பி) பரதனை;* ***தன்னை அத்தாதை முன் தழுவினான் என*** - *இராமன் தன்னைத் தந்தை தசரதன் முன் தழுவியது போலவே;* ***பொன்னின் மார்புஉற அணைத்து உயிர்உறப் புல்லினான்*** - *பொன்போன்ற தன்மார்பிலே அழுந்த அணைத்துக்கொண்டு உயிரும் உயிரும் பொருந்துமாறு தழுவினான் (இராமன்).*

*அறம் வளர்க்கும் கண்ணாளராகிய இருவர் உயிரும் ஒன்று என்பது தோன்ற "உயிர் உறப்புல்லினான்" என்றார். அன்பு தாழ் உடைத்து வெளிப் படும் தன்மையது (திருக். 71) ஆதலால். பரதனின் கண்ணீரை. "உன்னுபேர் அன்புமிக்கு ஒழுகிஒத்து" என்றார். "தள்ளரிய பெருநீதித் தனியாறு புக மண்டும் பள்ளமெனும் தகையாள் பரதன் எனும் பெயரான் (கம்ப. 657) ஆதலால். பரதனைத் தனித்துக் கூறினார். 'எள்ளரிய குணத்தாலும் எழிலாலும் இவ்இருந்த வள்ளரையே அனையான்" (கம்ப. 657) எனப்படுபவன் பரதன் ஆதலின். "தன்னை அத்தாதை முன் தழுவினான்" எனப் புல்லினான் என்றார்.*

இலக்குவன் பரதனையும் சத்துருக்கன் இராமனையும் பணிதல்

*1055.* ***கரியவன் பின்பு சென்றவன்.***
***அருங் காதலின்***
***பெரியவன் தம்பி. என்று***
***இனையது ஓர் பெருமை அப்***
***பொரு அருங் குமரர். தம்***
***புனை நறுங் குஞ்சியால்.***
***இருவர் பைங் கழலும். வந்து.***
***இருவரும் வருடினார்.***

***கரியவன் பின்பு சென்றவன்*** - *கருமை நிறத்தினனான இராமன் பின்னே தொடர்ந்தவனான இலக்குவனும்;* ***அருங்காதலில் பெரியவன் தம்பி*** - *பிறரால் கொள்ளற்கு அரியதான இராம பக்தி கொண்டவனான பரதன் பின்செல்லுந் தம்பியான சத்துருக்கனனும்;* ***என்ற இனையதோர் பெருமை*** - *என்ற இத்தகைய ஒப்பற்ற பெருமையுடைய;* ***அப்பொரு இல் குமரர் இருவரும்*** - *ஒப்பிலாத அந்தக் குமரர்கள் இரண்டு பேரும்;* ***வந்து. தம்புனை நறும்குஞ்சியால்*** - *அருகில் வந்து. தம் மணம்மிகும் முடிக்கொண்டு;* ***இருவர் பைங்கழலும் வருடினார்*** - *(முறையே பரதன். இராமன் என்னும்) இருவரது பசும்பொன்னாலான வீரக் கழலணிந்த திருவடிகளையும் வணங்கினர்.*

*பைங்கழல் - ஆகுபெயர். பரதனை இலக்குவனும். இராமனைச் சத்துருக்கனனும் வணங்கினர் என்க. பரதனது அன்பை இடங்கிட்டும் போதுஎல்லாம் உயர்த்தும் கவிஞர் பிரானின் ஆசை. "அருங்காதலின் பெரியவன்" என இங்கும் வெளிப்படல் காண்க. இராமனும். இலக்குவனும். பரதனும் சத்துருக்கனனும் பிரியாமல் வாழ்ந்ததை. "பரதனும் இளவலும் ஒருநொடி பகிராது..........எனை ஆள் வரதனும் இளவலும் என மருவினர்" (கம்ப. 307) என முன்பே உரைத்தார்.*

*குமரர்கள் நால்வரும் விளங்கிய காட்சி*

***1056. 'கோல் வரும் செம்மையும்.***
***குடை வரும் தண்மையும்.***
***சால் வரும் செல்வம்' என்று***
***உணர் பெருந் தாதைதன்.***
***மேல் வரும் தன்மையால்.***
***மிக விளங்கினர்கள். தாம்-***
***நால்வரும் பொரு இல்***
***நான்மறை எனும் நடையினார்.***

**கோல்வரும் செம்மையும் குடைவரும் தண்மையும்** - *அரசாளும் முறையில் பொருந்தின நீதியும். ஆளுகையில் (மக்கட்குக்) குளிர்ச்சி தரும் கருணையும்;* **சால்வரும் செல்வம் என்று உணர் பெருந்தாதை தன்** - *(தனக்கு) 'மிகப் பொருந்திய செல்வம்' என்று உணர்கின்ற பெருமைக்குரிய தந்தையாகிய தயரத வேந்தருடைய;* **மேல்வருந் தன்மையால்** - *மேன்மையை நல்கும் பண்புகளால்;* **பொருவு இல் நான்மறை எனும் நடையினார்** - *ஒப்பில்லாத நான்கு வேதங்களே இந்நால்வரும் எனச் சொல்லத்தக்க ஒழுக்கத்தையுடையவராய்;* **தாம் மிக விளங்கினர்** - *நான்கு குமாரர்களும் (தந்தையைப் போலவே) (அங்கு) மிகச்சிறந்து விளங்கினர்.*

*தசரதன் தன் செல்வம் எனக் கருதியது தன்நாட்டு மக்களுக்குக் காட்டும் நீதியும் கருணையுமே. "சதுமறையெனக் குமரர்கள் வளர்ந்தனர்" என முன்பும் (கம்ப. 302) சுட்டுவார். "அலையாழியென வளர்ந்தார் மறைநான்கும் அனையார்கள்" (கம்ப. 659) என்பதும் காண்க. இனி. "சால்வரும் செல்வம்" என்றதற்கு ஊன்றுசாலில் இடப்பட்டவிதையின் குணம் கதிரிலும் அப்படியே விளைவது போல. கோல்வரும் செம்மையும் குடைவரும் தண்மையும் மக்கட்கும் அப்படியே விளைந்துள்ளன எனக் கொள்ளினும் ஆம். ஒப்பு. "உழுபடை ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன்பயனே" (புறம். 35).*

*இராமனுக்குத் தயரதன் தந்த பணி*

***1057. சான்று எனத் தகைய செங்***
***கோலினான். உயிர்கள்தாம்***
***ஈன்ற நல் தாய் எனக்***
***கருது பேர் அருளினான்.***
***'ஆன்ற இச் செல்வம் இத்***
***தனையும் மொய்த்து அருகு உற'***
***தோன்றலை. 'கொண்டு முன்***
***செல்க!' எனச் சொல்லினான்.***

***சான்று எனத்தகைய செங்கோலினான்*** *- (யாவர்க்கும்) உதாரணமாகக் காட்டத்தக்க செங்கோல் முறைமையுடையவனும்;* ***உயிர்கள் தாம் ஈன்ற நல்தாய் எனக்கருது பேர் அருளினான்*** *- அனைத்து உயிர்களும் தம்மைப்பெற்ற நல்லதாய் என்று எண்ணத்தக்க பெருங் கருணையுடையவனுமான தசரதச் சக்கரவர்த்தி;* ***ஆன்ற இச்செல்வம் இத்தனையும் மொய்த்து அருகு உற*** *- செல்வம் என்று கருதுகிற இச் சேனையாகிய செல்வங்களை உன்னை நெருங்கி அருகே சூழ்ந்திருக்குமாறு;* ***'கொண்டு முன் செல்க' என்று; (அணைத்துக்) கொண்டு மக்களை வழிநடத்திச் செல்க என்று; தோன்றலை அருளினான்*** *- (தன் அருமைக் குமாரனாகிய) இராமனை (நோக்கிப்) பணித்தருளினான்.*

*தயரதனை. "தாய் ஒக்கும் அன்பில்" கம்ப. 171) என்பார் முன்னும். செங்கோல் தசரதனைப் போல் செலுத்தவேண்டும் என்னுமாறு ஆண்டான் ஆதலின். "சான்று எனத்தகைய செங்கோலினன்" என்றார் - வையகம் முற்றும் வறிஞன் ஓம்பு மோர் செய்எனக் காத்து இனிது அரசு செய்தவன் அவன் (கம்ப. 179) ஆதலின் இல்லறத் திருவை ஏற்க இருக்கும் இராமனுக்கு. ஏற்ற தருணம் எனக்கருதி. அரச திருவை எங்ஙனம் கொண்டுசெல்லவேண்டும் எனத் தந்தை மகனுக்கு உரைத்த அருமை வாசகங்கள் இவை. அரசச் செல்வம் எவையென மேற்பாடலிலும் இப்பாடலிலும் தெளிவுறச் சுட்டியுள்ளமை இக்காலத்துக்குப் பொருந்துமாறு இலங்குதல் காண்க.*

***1058. காதலோ! அறிகிலம். கரிகளைப் பொருவினார்;***
***தீது இலா உவகையும். சிறிதுஅரோ? பெரிதுஅரோ?***
***கோதை சூழ் குஞ்சி அக் குமரர் வந்து எய்தலும்.***
***தாதையோடு ஒத்தது. அத் தானையின் தன்மையே!***

*கரிகளைப் பொருவினார் - யானைகளைப் போன்ற அப்படை வீரர்களுடைய;* ***காதலோ அறிகிலம்*** *- (அரச குமாரர்களிடத்து வைத்துள்ள) அன்பின் மிகுதியோ (இவ்வளவென்று) எம்மால் அறியமுடியாததாய் உள்ளது;* ***தீது இலா உவகையும் சிறிதரோ? பெரிதரோ?*** *- (அவர்கட்கு அப்போது உண்டான) மாசற்ற மகிழ்ச்சிப் பெருக்கு குறுகிய காலத்ததா? நீண்ட காலத்ததா? (அறியோம்.);* ***கோதை சூழ் குஞ்சிக் குமரர் வந்து எய்தலும்*** *- மாலைகளைச் சூடிய மயிர் முடியோடு காணப்பெறும் அரசகுமாரர்கள் வந்து அடைந்த அளவிலே;* ***அத்தானையின் தன்மை தாதை யோடு ஒத்தது*** *- அந்தப் படையின் இயல்பு (இராம இலக்குவர்களைக் கண்ட) தந்தையாகிய தசரதன் இயல்போடு சமமாகியது.*

*அரோ - அசைகள்: "தாதையோடு ஒத்தது" என்றதனால். தசரதன் அடைந்த பேருவகையினைப் படைகளும் அடைந்தன என்றார். எனவே. இராம இலக்குவர் அத்தனை பேர்க்கும் மக்களாயினர்; அத்தனை பேரும் இராம இலக்குவர்க்குத் தந்தையர் ஆயினர் என்பது கருத்தாகக் கொள்க.*

*இராமனும் தம்பியரும் சென்ற காட்சி*

***1059. தொழுது இரண்டு அருகும். அன்புடைய***
***தம்பியர் தொடர்ந்து.***
***அழிவு இல் சிந்தையின் உவந்து.***
***ஆடல் மாமிசை வர.***
***தழுவு சங்குடன் நெடும்***
***பணை தழங்கிட. எழுந்து.***
***எழுத அருந் தகையது ஓர்***
***தேரின்மேல் ஏகினான்.***

***இரண்டு அருகும் அன்புடைய தம்பியர் தொழுது தொடர்ந்து*** *- (தனது) இருமருங்கிலும் அன்புடைய தம்பியர் மூவரும் வணங்கி தொடர்ந்து;* ***அழிவில் சிந்தையின் உவந்து ஆடல் மா மிசை வர*** *- (என்றும் தமையன் மாட்டு) நிலைத்த அன்புடைய மனத்திலே பெருமகிழ்ச்சி கொண்டவராய் வெற்றிக் குதிரைகளின்மேலே ஏறிவரவும்;* ***தழுவு சங்குடன் நெடும்பணை தழங்கிட*** *- (கைகளால்) தழுவி (வாயில்) வைத்து ஊதப்படுகிற பெரிய சங்கவாத்தியங்களுடன் பெரிய பேரிகைகள் முழங்கவும்;* ***எழுந்து எழுதருந்தகையது ஓர் தேரின்மேல் ஏகினான்*** *- (இராமபிரான்) புறப்பட்டு. ஓவியத்தாலும் எழுதுதற்கரிய அழகுடையதொரு தேரின்மேல் (ஏறிச்) சென்றான்.*

*இராமன் மாட்டுத் தம்பியர் வைத்துள்ள அழியா அன்பின் ஆழத்தையும் கனத்தையும் முதல் இரண்டடிகளிலும் சொல் ஓவியப்படுத்தியுள்ளமை காண்க. மெய்காப்பார் பணியினை இராமன் மாட்டுள்ள அன்பின் மிகுதியால் தம்பியரே ஏற்று. இருமருங்கும் புடைசூழவந்தனர் என்க. இத்தகைய பவனிக்கெனப் பயிற்றப் பட்ட ஆடும் பரிகள் இருந்தன என்பது. ''ஆடல்மா பிசைவர'' என்பதனால் பெற்றாம்.*

*மிதிலை நகர வீதிக்கு இராமன் வருகை*

***1060. பஞ்சி சூழ் மெல் அடிப்***
***பாவைமார் பண்ணைசூழ்.***
***மஞ்சு சூழ் நெடிய***
***மாளிகையின் வந்து. இடை விராய்.***
***நஞ்சு சூழ் விழிகள் பூ***
***மழையின் மேல் விழ நடந்து.***
***இஞ்சி சூழ் மிதிலை மா***
***வீதி சென்று எய்தினான்.***

***பஞ்சி சூழ்மெல்லடிப் பாவைமார் பண்ணை*** *- செம்பஞ்சுக் குழம்பு ஊட்டப்பட்ட மென்மையான பாதங்களையுடைய சித்திரப் பாவையினையொத்த மகளிரின் கூட்டம்;* ***சூழ் மஞ்சுசூழ்நெடிய மாளிகையின் வந்து இடைவிராய்*** *- (வானில்) சுற்றியுள்ள மேகங்கள். நீண்ட மாளிகையில் வந்து தங்குமாறு உயர்ந்த (மாடங்களையுடைய) மாளிகைகளிலிருந்து (வெளி) யிடங்களில் வந்து (மகளிரோடு மகளிர்) கலந்து நிற்க;* ***நஞ்சுசூழ் விழிகள்*** *- நஞ்சு போன்ற அவர்களின் கண்கள்;* ***பூமழையின் மேல்விழ நடந்து*** *- மலர் மாரிபோல் (தன்) மேலே விழும்படி. சென்று;* ***இஞ்சிசூழ் மிதிலைமா வீதி சென்று எய்தினான்*** *- மதில்கள் சூழ்ந்த மிதிலை நகரின் பெரிய வீதிகளை (இராமன்) அடைந்தான்.*

*நஞ்சும் மலராக்க வல்ல நாயகன் இராமன் என்க. மகளிர். கண் அம்பு மழையோடு. அவர் சொரிந்த கடிமலர் மழையும் இராமன்மேல் இடையீடின்றி வீழ்ந்தன என்க. உயர்குடி மகளிராதலின். வீதிக்கு வாராமல் மாளிகை மேலிருந்து மலர்மழையும். விழிவீச்சு மழையும் பெய்தனர் எனினுமாம்.*

***1061. சூடகம் துயல்வர. கோதை***
***சோர்தர. மலர்ப்***
***பாடகம் பரதநூல்***
***பகர. வெங் கட கரிக்***
***கோடு அரங்கிட எழும்***
***குவி தடங் கொங்கையார்.***
***ஆடு அரங்கு அல்லவே -***
***அணி அரங்கு அயல் எலாம்.***

***அணி அரங்கு அயல்எலாம்*** - *(அந்த நரகத்து வீதிகளிலுள்ள) அழகிய மண்டபங்களின் பக்கங்களில் எல்லாம்;* ***சூடகம் துயல் வர. கோதை சோர்தர*** *- தம் கைவளைகள் அசையவும். கூந்தல் தளர்ந்து சரியவும்;* ***மலர்ப் பாடகம் பரத நூல் பகர*** *- செந்தாமரை மலர் போன்ற மெல்லிய பாதங்களில் பாடகம் என்னும் காலணிகள் (நாட்டிய சாத்திரமாகிய) பரத நூலிற் கூறப்பட்ட தாளவிதி முறைகளைத் (தம் ஒலியால்) வெளிப்படுத்தவும்;* ***வெங்கடகரிக்கோடு அரங்கிட எழும் குவிதடங்கொங்கையர்*** *- கொடிய மதமுடைய யானைகளின் கொம்புகள் (அழகு) கெடும்பிடியாக. எழுந்து குவிந்து அகன்ற பெரிய தனங்களையுடைய மகளிர்;* ***ஆடுஅரங்கு அல்ல*** *- ஆடல்புரியும் நடன அரங்குகள் போல (எங்கும்) தோன்றினும் நடன அரங்கங்கள் என்று கருதவேண்டா;அவர்கள் வாழும் மாளிகைகளே அவை என்று துணிக. துணிக.*

*வளை ஒலியும். குழல் சரிவும். காரணித் தாளமுமாகச் சூழ மங்கையர் ஒல்கி ஒசிந்து நிற்கும் இடம் எல்லாம் ஆடரங்கம் என்றே தோன்றும்; ஏமாற வேண்டா; அவரவர் மாடமாளிகைகளே எனச் சுறையுறக் கூறினார். மாளிகைகள் யாவும் அன்று மகளிர் ஆடரங்கம் போல மகிழ்வில் திளைத்தன என்பதாம்.*

***1062.* பேதைமார் முதல் கடைப்**
**பேரிளம் பெண்கள்தாம்.**
**ஏதி ஆர் மாரவேள்**
**ஏவ. வந்து எய்தினார்.**
**ஆதி வானவர் பிரான் அணுகலால்.**
**அணி கொள் கார்**
**ஓதியார் வீதிவாய்**
**உற்றவாறு உரைசெய்வாம்.**

***ஆதி வானவர்பிரான் அணுகலால்*** *- முதன்மையான தேவர்க்கும் முதல்வனாகும் திருமாலின் அவதாரமான இராமபிரான் (தங்கட்கு) அருகில் வந்தடைவதால்;* **பேதைமார் முதல் கடைப் பேரிளம் பெண்கள்தாம்** *- பேதைப் பருவத்தினர் முதலாகப் பேரிளம் பெண்ணுப் பருவத்தினர் இறுதியான மகளிர்;* ***ஏதி ஆர் மாரவேள் ஏவ வந்து எய்தினார்*** *- ஆயுதங்கள் நிரம்பின மன்மதன் ஏவியதனால் வந்தடைந்தவர்களால்;* ***அணிகொள் கார் ஓதியார்*** *- அழகமைந்த கருங்கூந்தலினையுடையவராய்;* ***வீதிவாய் உற்றவாறு உரை செய்வாம்*** *- (மிதிலை நகரத்) தெருக்களில் வந்து அடைந்த நிலைமையை (இனிக்) கூறுவோம்.*

பரம பத நாதன் கைக்கெட்டுந் தூரத்தில் வந்துள்ளான் ஆதலின். ஆன்ம நாயகனைத் தரிசிக்க அத்துணைப்பருவ மங்கையரும் தெருவில் நின்றனர் என்க. உயிர்கள் ஆன்ம நாயகனிடத்தில் வேட்கை கொள்ளுதல் கற்பு வழு அன்று என்பது தோன்ற. "ஆதி வானவர்பிரான் அணுகலால்" என்றார். எழுவகைப் பருவ மங்கையர்: பேதை (5-7) ;பெதும்பை (8 -11) ; மங்கை (12-13) ; மடந்தை (14-19) ; அரிவை (20-25) ; தெரிவை (26-31) ; பேரிளம் பெண் (32-40). தாமாக வரவில்லை. அழியா அழகன் வீதிவந்தடைந்துள்ளான்; போய்க் கண்பெற்ற பயன்கொள்ளுங்கள் என்று. மன்மதன் செலுத்த வந்துள்ளனர் என்பார். "மாரவேள் ஏவ வந்து எய்தினார்" என்றார். வரும் படலத்திற்குத் தோற்றுவாயும் செய்தார்.

## உலாவியற் படலம்

இராமன் தேர் ஏறி வீதி உலா வருவதைக் கூறும் பகுதி.

இராமனைக் கண்டு மகிழ மிதிலை நரகத்து மகளிர் மொய்க்கின்றனர். பெண்களாய்ப் பிறந்ததன் பயன் எய்த முந்துவார்போல் பல பருவ மகளிரும் ஆன்ம நாயகனைக் கண்டு களிக்க முந்தினர். யாவர் கண்களிலும் இராமனே இருந்தான். மகளிர் நெருக்கத்தால் உதிர்ந்த பொன்னும் மணிகளுமாய் வீதிகள் மின்னின. இராமன் வடிவினை முழுதும் கண்டார் யாவரும் இலர்;சீதை பெற்ற தவப் பயனை எண்ணி எண்ணி மகளிர் வியந்தார்கள். இத்தனை மகளிர் விழியம்புகளையும் ஏறெடுத்தும் நோக்காது. இராமன். மண்டபம் அடைந்து விசுவாமித்திரன் ஏவிய ஆதனத்து அமர்ந்தான். அறஞ்செய் காவற்கு அயோத்தியில் தோன்றிய இராமனின் தந்தை தயரதனும் மண்டபம் அடைந்தான். மகளிர் பல்லாண்டிசை பாடினர். அனைவரும் சனக மன்னனின் அன்பினில் திளைத்தனர்.

இராமனைக் காண வந்த மகளிரின் தன்மை

***1063.** **மான் இனம் வருவ போன்றும்.**
**மயில் இனம் திரிவ போன்றும்.**
**மீன் இனம் மிளிர வானில்**
**மின் இனம் மிடைவ போன்றும்.**
**தேன் இனம் சிலம்பி ஆர்ப்ப.**
**சிலம்பு இனம் புலம்ப எங்கும்.-**
**பூ நனை கூந்தல் மாதர் -**
**பொம்மெனப் புகுந்து. மொய்த்தார்.***

**பூ நனை கூந்தல் மாதர்** - (தேன் நிறைந்த மலர்களைச் சூடலால்) பூவிலிருந்து வரும் தேனால் நனைகின்ற கூந்தலையுடைய (மிதிலை நகர்) மகளிர்; **மான் இனம் வருவ போன்றும். மயில் இனம் திரிவ போன்றும்** - மான்களின் இனங்கள்(கூட்டமாக) வருவன போலவும் மயிலின் கூட்டங்கள் திரிவன போலவும்; **மீன் இனம் மிளிர்வ போன்றும். மீன் இனம் மிடைவ போன்றும்** - விண்மீன்களின் கூட்டம் வானில் மிளிர்வது போலவும். மின்னற் கூட்டங்கள் நெருங்குவன போலவும்; **தேன்இனம் சிலம்பி ஆர்ப்ப சிலம்பினம் புலம்ப** - (கூந்தலில் உள்ள தேனுக்கு) வண்டுக் கூட்டங்கள் கூடிய ஒலியெழுப்ப. (காலில் அணிந்துள்ள) சிலம்பும் அதன் இனங்களாகிய பிற காலணிகளும் ஒலிதரவும்; **எங்கும் 'பொம்' எனப் புகுந்து மொய்த்தார்** - காணுமிடமெல்லாம் (தெருவில்) விரைவோடு வந்து நிரம்பினார்கள்.

முதல் இரண்டடிகளில் கண் விருந்தும் பின் இரண்டடிகளில் செவி விருந்தும் அளித்தவாறு மகளிர் திரண்டனர் என்க. மிளிர - மிளிரும். எச்சத்திரிபு.

சிலம்பினமும் வண்டினமும் ஒலிக்க ஒலிக்க. மானினம் போலவும் மயிலினம் போலவும் மகளிர் விழிக்கும் செவிக்கும் விருந்தாய்த் திரிந்தனர் என்பதாம். உலாவியற் படலம் என்பதற்கேற்ப. முதற் பாட்டிலேயே. மானாக. மயிலாக. மீனாக. மின்னாக உலாவ விட்டுள்ள திறம் காண்க. கோசல விருந்தினரின் கோலம் காண. மகளிர். கூட்டம் கூட்டமாகத் தெருவில் வருவதும். திரிவதுமாக இருந்தனர் என்பார். ''மானினம் வருவ போன்றும். மயில் இனம் திரிவ போன்றும்'' என்றார். மகளிரின் அடியும் உடையும் நோக்க. மானின் துள்ளலும் மயிலின் தோகையும் நினைவில் வர. மானையும் மயிலையும் உவமித்த கவிஞர். மேல் நிமிர்ந்து பார்த்தவுடன். அம்மகளிர் அணிந்துள்ள அணிகளின் ஒளிவெள்ளம். விண்மீனையும் மின்னலையும் நினைவுக்குக் கொண்டு வந்ததனால். மீனினம் ''மிளிர வானில் மின்னினம் மிடைவ போன்றும்'' என்றார். அவர்களின் பின்னழகு கண்ட கவிஞரின் பார்வைக்குக் கூந்தலில் மொய்க்கும் வண்டுகளும் மலர்களும் காட்சிப்பட்டதனால். ''தேன் இனம் சிலம்பி ஆர்ப்ப.... பூநனைக் கூந்தல்மாதர்'' என்றார். காட்சித்தேனை உண்டு திளைக்க ஈண்டிய மகளிரின் அடர்த்தியைக் குறிக்க. ''பொம்மெனப்புகுந்து மொய்த்தார்'' என்றார்.

***1064. விரிந்து வீழ் கூந்தல் பாரார்;***
***மேகலை அற்ற நோக்கார்;***
***சரிந்த பூந் துகில்கள் தாங்கார்;***
***இடை தடுமாறத் தாழார்;***
***நெருங்கினர்; நெருங்கிப் புக்கு.***
***'நீங்குமின். நீங்குமின்' என்று. -***
***அருங் கலம் அனைய மாதர் -***
***தேன் நுகர் அளியின் மொய்த்தார்.***

***அருங்கலம் அனைய மாதர்*** - *(அந்த மிதிலை நகருக்கு) அரிய அணிகலம் போன்று அழகு ஊட்டும் மகளிர்;* ***விரிந்து வீழ் கூந்தல் பாரார்*** - *(கூட்டத்தால் நெருக்குண்டு) விரிந்து வீழ்கின்ற தம் கூந்தலைப் பொருட்படுத்தார்;* ***மேகலை அற்ற நோக்கார்*** - *(இடையில் அணிந்துள்ள) மேகலைகள் அற்று வீழ்ந்தனவற்றைப் பொருட்படுத்தார்;* ***சரிந்த பூந்துகில்கள் தாங்கார்*** - *பூப்போன்ற மெல்லிய ஆடைகளின் இடையிலிருந்து சரிவதைப்பிடித்து ஏந்தவும் கருதார்;* ***இடை தடுமாறத் தாழார் நெருங்கினர்*** - *தங்கள் நுண்ணிய இடைகள் (ஆற்றாது) நிலைதளர்வது கண்டு சிறிதும் தாழாமல். (இராமபிரானை) நெருங்கினார் ஆகிய மகளிர்;* ***நெருங்கிப்புக்கு நீங்குமின் நீங்குமின் என்று*** - *நெருங்கிய வாறே நுழைந்து வழிவிடுங்கள். வழிவிடுங்கள் என்று கூறிய வண்ணமே;* ***தேன்நுகர் அளியின் மொய்த்தார்*** - *தேன்பருகத் துடிக்கும் வண்டுகளைப்போல. (இராமபி ரானை) மொய்த்தனர்.*

*''செவிக்குத்தேனா''கிய (கம்ப. ) இராமபிரான் கண்ணுக்கும் தேனானான்;காணவந்த மகளிர் உண்ண வந்த வண்டானார் என்க.*

*இராமன் அழகெனும் தேனைப்பருக வந்த மகளிர். ஒருவர்க்கு ஒருவர் இடித்துக்கொண்டு நெருக்கியவாறு முந்துதலால். கூந்தல்கள் சரிந்தன; மேகலைகள் அற்றன; மெல்லிடைகள் நெளிந்தன என்றார். உள்ளம் ஒன்றில் தோய்ந்து விட்டால். உடலும் உடல் சார்ந்த பொருள்களும் ஒரு பொருட்டாகக் கவனம் பெறுவதில்லை என்னும் உளவியல் தத்துவத்தை. இராமன்கோலம் காண வந்த மகளிரின் அலங்கோலம் கொண்டு விளக்கியுள்ள திறம் காண்க.*

***1065. பள்ளத்துப் பாயும் நல் நீர்***
***அனையவர். பானல் பூத்த***
***வெள்ளத்துப் பெரிய கண்ணார்.***
***மென் சிலம்பு அலம்ப. மென் பூத்***
***தள்ள. தம் இடைகள் நோவ.***
***தமை வலித்து. 'அவன்பால் செல்லும்***
***உள்ளத்தைப் பிடித்தும் நாம்' என்று.***
***ஓடுகின்றாரும் ஒத்தார்.***

***பள்ளத்துப் பாயும் நன்னீர் அனையர்*** *- பள்ளம் நோக்கிப் பாயும் (தன்மையுடைய) நல்ல நீரின் தன்மையுடையவர்களாய்;* **வெள்ளத்துப் பானல் பூத்த பெரிய கண்ணார்** *- நீர் ஓடையில் பூத்த கருங்குவளை மலர்களிலும் பெரிய கண்களையுடையவர்களாகிய மகளிர்;* **மென்சிலம்பு அலம்ப. மென்பூத் துள்ள தம் இடைகள் நோவ** *- மெல்லிய சிலம்புகள் ஒலிக்கவும். மெல்லிய மலர்கள் சரியவும். தம் மெல்லிய இடைகள் வருந்தவும்;* **தமைவலித்து அவன் பால் செல்லும்** *- தம்மை (பின்னே வர) இழுத்துக்கொண்டு அவனிடத்து (முன்) செல்கின்ற;* **உள்ளத்தை நாம் பிடித்தும் என்று** *- (தமது) மனத்தை நாம் (ஓடிப்போய்ப்) பிடிக்க வேண்டும் என்று;* **ஓடுகின்றாரும் ஒத்தார்** *- ஓடுகின்றவர்களையும் போன்று (மனோ வேகத்தில்) விரைந்தனர்.*

*பெரும் பள்ளமாகிய கடலில் போய்ச் சேர்ந்தபின். இயக்கத்தை நிறுத்தித் தனித்தன்மை நீங்கி விடும் நதிகளைப்போல. உயிர்கள்யாவும் இறைவனிடத்தில் சென்று அடங்கும் தன்மையன என்னும் தத்துவக் கருத்தினை அடியிற் காண்க.*

*வெள்ளம் பள்ளம் பாயும் இயல்பினது ஆதலின் "பள்ளத்துப் பாயும் நல் நீர்" என்றார். இன்பத்தைப் பள்ளமடை என்னும் வழக்கு உண்மையின். "பள்ளத்துப் பாயும் நன்னீர் அனையவர்" என்றார். மகளிர் வெள்ளத்தின் வேகத்தில் விரைந்தார் எனினுமாம். வெள்ளத்துப் பானல் (போல்) பூத்த பெரிய கண்ணார் எனப்பொருள் இயல்புக்கேற்ப மாற்றிக் கூட்டப்பட்டது. பானல் - கருங்குவளைப்பூ; வெள்ளம் என் தனைக் கடல் எனக் கொண்டு. உயர்வு நவிற்சியாகக் கடலினும் பெரிய கண்ணார் என்றார் எனினுமாம். "கடலினும் பெரிய கண்கள்" (கம்ப. 3136) என்பார் மேலும். இராமனுடன் சென்றுவிட்ட உள்ளத்தைப் பிடிக்க ஓடுவார்போல் மகளிர் ஓடினர் என்பதால் மனோ வேத்தில் ஓடினர் என்றாயிற்று. உடலை இழுத்துக்கொண்டு மனம் ஓடிற்று என்று உரைத்தவாறு மென்பூப்போன்ற அவர்கள் பாதங்கள் அசைவதற்குரியன; ஓடுதற்குரியன அல்ல; ஓடுவதனால் தள்ளாடின என்பார். "மென்பூத்தள்ள" என்றார்.*

***1066.* 'கண்ணினால் காதல் என்னும்**
**பொருளையே காண்கின்றோம்; இப்**
**பெண்ணின் நீர்மையினால் எய்தும்**
**பயன் இன்று பெறுதும் என்பார்;**
**மண்ணின் நீர் உலந்து. வானம்**
**மழை அற வறந்த காலத்து.**
**உண்ணும் நீர் கண்டு வீழும்**
**உழைக் குலம் பலவும் ஒத்தார்.**

***கண்ணினால் காதல் என்னும் பொருளையே காண்கின்றோம்** - (நம்முடைய) கண்களினாலேயே. (காட்டலாகாப்பொருளாகிய) காதல் என்னும் பொருளின் (வடிவத்தையே) இங்குக் காண்கின்றோம்; **இப்பெண்ணின் நீர்மையினால் எய்தும் பயன் இன்று பெறுதும் என்பார்** - (ஆதலால்) இந்தப்பெண்தன்மை கொண்டதனால் வாழ்நாளில் அடையத்தக்க. பயனை. (இவனை இப்போது கண்டதனால்) இன்றே பெற்றுவிடுவோம் என்று நினைப்பாராய்; **மண்ணின் நீர் உலந்து. வானம் மழையற வறந்த காலத்து** - பூமி முழுவதும் நீர் வற்றி. விண்ணில் மேகங்கள் மழை பொழியாது வறண்டு போன காலத்தில்; **உண்ணும் நீர் கண்டு. வீழும் உழைக்குலம் பலவும் ஒத்தார்** - பருகத்தக்க நன்னீரை. (ஓரிடத்திலே) கண்டு. அதனைக் குடித்தற்குத் தாவும் மான் கூட்டங்களைப் போன்று (மகளிர்) இராமனைக் காண மொய்த்தார்கள். பண்புப் பொருள்கள் எல்லாம் கண்ணால் காண இயலாதவை. நாட்டிய மரபின் நெஞ்சு கொளின் அல்லது காட்டலாகாப் பொருள் என்ப (தொல். பொருளியல். 51) என்பவாதலின். கண்ணால் காணவியலாத காதல் எனும் பண்புப் பொருள் மானுட வடிவம் பெற்று வந்துள்ளது; வாருங்கள்; பெண்ணாய்ப் பிறந்த பயனை இன்று பெற்று விடுவோம் என்று இராமனைக் காண மிதிலை மகளிர் ஓடினர் என்க. உலகில் தெய்விகக் காட்சி காண்டற்கு அரியதாதலின் மழை வறண்ட காலத்து. உண்ணும் நீர் கண்டுவிட்ட மான் இனத்துக்கு மகளிரை உவமையாக்கினார். 4*

***1067. அரத்தம் உண்டனைய மேனி***
***அகலிகைக்கு அளித்த தாளும்.***
***விரைக் கருங் குழலிக்காக***
***வில் இற நிமிர்ந்து வீங்கும்***
***வரைத் தடந் தோளும். காண.***
***மறுகினில் வீழும் மாதர்.***
***இரைத்து வந்து. அமிழ்தின் மொய்க்கும்***
***ஈஇனம் என்னல் ஆனார்.***

**அரத்தம் உண்டு அனையமேனி அகலிகைக்கு அளித்த தாளும்** - செம்மையெனும் நிறத்தையே உணவாக உட்கொண்டாற்போன்ற *(சிவந்த)* வடிவினையுடைய அகலிகைக்கு அருளிய *(இராமபிரானின்)* திருவடிகளையும்; **விரைக் கரும் குழலிக்காக வில் இற நிமிர்ந்து வீங்கும் வரைத்தடம் தோளும்** - மணத்தோடு சேர்ந்த கருங்கூந்தலையுடைய சீதையைப்பெறுவதற்காக வில்லை ஒடித்து. உயர்ந்து பருத்த மலைபோன்ற தோள்களையும்; **காண மறுகினில் வீழும் மாதர்** - கண்டு களிப்பதற்கு *(அரச)* வீதியில் வந்து கூடுகின்ற மகளிர்.; **இரைத்து வந்து அமிழ்தின் மொய்க்கும் ஈ இனம் என்னல் ஆனார்** - ஒலியெழுப்பிய வாறு வந்து. அமிழ்தத்தில் மொய்க்கின்ற வண்டுகளின் கூட்டம் என்று உவமிக்கும்படியானார்கள்.

கோசிக முனிவன் மட்டும் கண்டு மகிழ்ந்த இராமபிரானின் கை வண்ணத்தையும் கால் வண்ணத்தையும் *(கம்ப. 475)*. எல்லோரும் காணும் வாய்ப்பை. மிதிலை நல்கியுள்ளதால். வாய்ப்பை நழுவ விடாது. மிதிலை நகரத்துப் பெண்கள். அமிழ்தத்தை உண்ண மொய்க்கின்ற வண்டினம் போல. இராமபிரானின் அழகு எனும் அமிழ்தத்தை உண்டு திளைக்க மொய்த்தனர் என்க. அமிழ்தம் சாவாமைக்குக் காரணமாவது மட்டுமன்றிப் பெருஞ்சுவையும் நல்க வல்லது. இறைவன் அடிசார்ந்த உயிர்கள் அழியாநிலை எய்திப் பேரின்பம் உறுதலைக் குறிப்பால் அறிவித்தார். அகலிகைக்கும் சீதைக்கும் அருள் செய்ததாளும் தோளும். நாமும் பெண்களாதலால். நமக்கும் அருள் செய்தே தீரும் எனும் நினைவில் மகளிர் மொய்த்தார் எனினுமாம். அரத்தம் - சிவப்புநிறம்.

***1068. வீதிவாய்ச் செல்கின்றான்போல்.***
***விழித்து இமையாது நின்ற***
***மாதரார் கண்களூடே***
***வாவும் மான் தேரில் செல்வான்.***
***யாதினும் உயர்ந்தோர். தன்னை.***
***“யாவர்க்கும் கண்ணன்” என்றே***
***ஓதிய பெயர்க்குத் தானே***
***உறு பொருள் உணர்த்திவிட்டான்.***

***வீதிவாய்ச் செல்கின்றான்போல்*** - *(மிதிலை நகரத்து) வீதிகளின் வழியே செல்பவனைப்போல;* ***விழித்து இமையாது நின்ற*** - *இமைக்கவும் செய்யாமல் விழித்துக்கொண்டு நின்ற;* ***மாதரார் கண்கள் ஊடே வாவுமான் தேரில் செல்வான்*** - *மகளிர் கண்களின் வழியே தாவிப் பாய்கின்ற குதிரைகள் பூட்டிய தேரின் மீது செல்பவன் ஆனான். (இராமபிரான்);* ***யாதினும் உயர்ந்தோர் தன்னை யாவர்க்கும் கண்ணன் என்றே ஓதிய பெயர்க்கு*** - *எல்லாப் பொருள்களிலும் சிறந்த பெரியோர்கள் தன்னைக் கண்ணன் என்று கூறியுள்ள திருப்பெயருக்கு;* ***தானே உறு பொருள் உணர்த்திவிட்டான்*** - *மிகுதியாக (மேலும் ஒரு) பொருளைத் தானே. (மகளிர் கண்களுக்குட் சென்ற செயலால் புதியதாக) உணர்த்திவிட்டான்.*

*கண்ணன் என்பதற்குரிய பல பெருள்களுள் அடங்காது. மாதர் கண்களுட் செல்கின்றவன் என்ற புதிய பொருளும் உண்டாக்கி. இமையாது விழித்து நோக்கிய மிதிலை மகளிர் கண்களுள் எல்லாம் நிறைந்தான் என்பதாம். "கண்ணன் என்று ஓதிய பெரியோர்." "கண்ணன் கண் அல்லது இல்லை ஓர் கண்ணே". (திருவாய் 2. 2.1) என்ற நம்மாழ்வாரைப்போன்றோர் என்க.*

*கிருஷ்ணன் என்னும் வடசொலுக்குக் கருநிறமுடையவன்;யாவர் மனத்தையும் கவரும் தன்மையவன் என்று பொருள் என்பர். கண்ணன் என்னும் தமிழ்ச்சொல். அனைவரிடத்தும் கண்ணோட்டமாகிய அருளையுடையவன் என்றும். யாவருக்கும் கண் போன்ற அருமையுடையவன் என்றும். ஞானக் கண்ணை அளிப்பவன் என்றும். எல்லாவிடத்தும் உள்ளவன் என்றும் பொருள் தரும். இப்போது கண்ணன் என்னும் திருநாமத்துக்கு. அனைத்து மகளிருடைய கண்களினூடேயும் செல்லுபவன் என்று மேலும் ஒரு மிகுதியான பொருளைச் சேர்த்துவிட்டான் என்று சுவைப்படக் கூறினார். உறுபொருள் - மிகுதியான பொருள். உறு - மிகுதியெனும் பொருள் பலவாகும் ஓர்உரிச்சொல். இமைப்பின் இராமன் அழகு கோடி பிழைக்கும் என்று "விழித்து இமையாது நின்ற மாதரார் கண்கள்" என்றார். "இமைப்பின் கரப்பாக்கு அறிவல்" (திருக். 1129) என்பது வள்ளுவர் கூறும் காதலிக் கூற்று.*

***1069. 'எண் கடந்து. அலகு இலாது. இன்று.***
***ஏகுறும் இவன் தேர்' என்று***
***பெண்கள் தம்தம்மின் நொந்து***
***பேதுறுகின்ற காலை.***
***'மண் கடந்து. அமரர் வைகும்***
***வான் கடந்தானை. தான் தன்***
***கண் கடவாது காத்த***
***காரிகை பெரியளே காண்!'***

**இவன் தேர்** - இந்த இராமபிரானது தேர்; **எண்கடந்து அலகு இலாது. இன்று ஏகுறும்' என்று** - மன வேகத்திலும் மிகுந்து. (விரையும் வேகத்திற்கு) அளவே இல்லாமல். இப்பொழுது கண் கடந்து செல்கின்றது' என்று கூறி; **பெண்கள் தாம் தம்மின் நொந்து பேதுறுங்காலை** - (அந்நகரத்துப்) பெண்டிர் (கண்ணிலிருந்து இராமன் மறைவதற்கு) தங்களுக்குள் வருந்தி. மதிமயங்கும்போது; **மண்கடந்து அமரர் வைகும் வான் கடந்தானை** - (முன்பு திருவித்கிரம அவதாரத்தில்) மண்ணை ஓரடியால் அளந்துவிட்டு. வானையும் ஓரடியால் அளந்து மூன்றாம் அடிக்கு இடம்கேட்டவனான அந்த இராமனை; **தன்தன் கண் கடவாது காத்த காரிகை** - தான். தனது கண்களை விட்டு நீங்கவிடாமல் பாதுகாத்துக்கொள்ள இருக்கிற சீதை; **பெரியளே காண்** - எல்லாரினும் பெரியவளே ஆவாள்! (என்றனர்).

ஓங்கி உலகளந்த பெரியரிற் பெரியனானவனை. தன் கண்களில் அடக்கிக் காப்பவளாகிய சானகி. அவனிலும் பெரியவளே என்று கவிஞர்பிரான். சமற்காரம் தோன்ற வியந்தவாறு. காண் - அசை. உலகளந்த. தன் காதற் கொழுநனைத் தன் கண்வட்டத்தில் வைத்துக் காக்கும் வாய்ப்பினைப் பெற்றுவிட்ட சீதையின் பெரும்பேற்றினை எண்ணிப் பெண்மைக்குரிய வியப்புணர்வோடு பெருமூச்செறிந்தவாறு.

**1070. பயிர் ஒன்று கலையும். சங்கும்.**
**பழிப்ப அரு நலனும். பண்பும்.**
**செயிர் இன்றி அலர்ந்த பொற்பும்.**
**சிந்தையும். உணர்வும். தேசும்.**
**வயிரம் செய் பூணும். நாணும்.**
**மடனும். தன் நிறையும். மற்றும்**
**உயிர் ஒன்றும். ஒழிய எல்லாம்**
**உகுத்து. ஒரு தெரிவை நின்றாள்.**

**ஒரு தெரிவை** - *(வேட்கை பிறந்த பருவமாகிய) தெரிவைப் பருவம் உடையாள் ஒருத்தி;* **தன்பயிர் ஒன்று கலையும் சங்கும். பழிப்பறு நலனும் பண்பும்** - *தனது பயிர்ப்பு என்னும் குணத்தையும். உடலைப் பிரியாது இணைந்திருந்த ஆடையையும். சங்க வளையல்களையும். பழித்தற்கியலாத நற்செயல்களையும். இயற்கை இயல்பையும்;* **செயிர்இன்றி அலர்ந்த பொற்பும் சிந்தையும் உணர்வும் தேசும்** - *குற்றமற்று மிக்கு விளங்கும் அழகையும். மனத்தையும். அறிவையும். ஒளியையும்;* **வயிரம் செய் பூணும். நாணும். மடனும் தன்நிறையும் மற்றும்** - *வயிரங்கள் பதித்த நகைகளையும். நாணத்தையும் மடம் எனும் பெண்மைக் குணத்தையும். மன அடக்கத்தையும். மற்றுமுள்ள பெண்மைக்குரிய இயல்புகளையும்;* **உயிர் ஒன்றும் ஒழிய எல்லாம் உகுத்து ஒரு தெரிவை நின்றாள்** - *உயிர் ஒன்றைத்தவிர. எல்லாவற்றையும் சிந்தவிட்டு (இராமன் சென்றுவிட்டதனால் செய்வதறியாது) நின்றாள். தெரிவை - 26 -31 வயதுடையவள். உலகியற்பொருள்கள் அனைத்தையும் தாமே தம்மை விட்டு நீங்குமாறு செய்வது ஆன்ம நாயகன் மேல் கொள்ளும் அன்பு என்பது குறித்தவாறு. பயிர்ப்பு- பிற ஆடவர்பொருள்கள்படின் பெண்மைப்படும் அருவருப்பு. "உயிரினும் சிறந்தது நாணே நாணினும் செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று" (தொல். களவு. 23) என்பவாதலின். இவள் எப்படி இவற்றையும் உகுத்தாள் என வியந்தவாறு.*

***1071. குழை உறா மிளிரும் கெண்டை***
***கொண்டலின் ஆலி சிந்த.***
***தழை உறாக் கரும்பின் சாபத்து***
***அனங்க வேள் சரங்கள் பாய்ந்த***
***இழை உறாப் புண் அறாத***
***இள முலை ஒருத்தி சோர்ந்து.***
***மழை உறா மின்னின் அன்ன***
***மருங்குல்போல் நுடங்கி. நின்றாள்.***

**குழைஉறா மிளிரும் கெண்டை** - *காதணியின் மேல்சென்று ஒளிரும் கெண்டை மீன்களைப் போன்ற கண்கள்;* **கொண்டலின் ஆலிசிந்த** - *மேகங்கள் துளிகளைப் பொழிதல் போல. கண்ணீர்த்துளிகளைச் சிந்தி நிற்க;* **தழைஉறாக் கரும்பின் சாபத்து அனங்கவேள் சரங்கள் பாய** - *தழையில்லாத கரும்பினை வில்லாகக்கொண்ட மன்மதன் (மலர்க்) கணைகள் (தன்மேல்) பாய்வதனால்;* **புண்அறாத** - *புண்கள் நீங்காத;* **இழை உறா இளமுலை ஒருத்தி சேர்ந்து** - *நூல் இழை நுழையும் அளவும் வெற்றிடம் இல்லாத இளைய தனங்களையுடையாள் ஒருத்தி. தளர்ந்தவளாய்;* **மழை உறா மின்னி அன்ன மருங்குல் போல் நுடங்கி நின்றாள்** - *மேகத்தில் உதிக்காமல் (மண்ணில் உதித்த) மின்னற்கொடி போன்ற (தனது) இடையினைப் போலவே (மற்றையங்கங்களும் இளைத்து) (இராமன் சென்றுவிட்டதனால்) சோர்ந்து போய் நின்றாள்.*

*மழை உறா மின்: தழைஉறாக் கரும்பு - இல்பொருள் உவமைகள். இடையைப்போல. உடல் முழுதும் இளைத்தது என்றதனால். இடையின் இளைப்பை உய்த்துணர்க. என்பது குறிப்பு. "மென்மருங்குல்போல் வேறுள அங்கமும் மெலிந்தாள்". (கம்ப. 5072) என்பார் மேலும்.*

*1072. பஞ்சு அணி விரலினார்தம்*
*படை நெடுங் கண்கள் எல்லாம்.*
*செஞ்செவே ஐயன் மெய்யின்*
*கருமையைச் சேர்ந்தவோதாம்?*
*மஞ்சு அன மேனியான்தன்*
*மணி நிறம். மாதரார்தம்*
*அஞ்சன நோக்கம் போர்க்க.*
*இருண்டதோ? அறிகிலேமால்.*

***பஞ்சு அணி விரலினார் தம் படை நெடுங்கண்கள் எல்லாம்*** *- செம்பஞ்சுக்குழம்பை அணிந்த (மெல்லிய) விரலினையுடைய அப்பெண்டிரின் வாள் போன்ற கண்கள் யாவும்;* ***செஞ்செவே ஐயன் மெய்யின் கருமையைச் சேர்ந்தவோதாம்?*** *- இராமபிரானின் உடலின் கருமையை அவை அடைந்தனவோ?;* ***மஞ்சு அன மேனியான்தன் மணிநிறம்*** *- (அல்லது) மேகத்தை ஒத்த மேனியான் ஆகிய இராமபிரானின் அழகிய நிறம்;* ***மாதரார்தம் அஞ்சன நோக்கம் போர்க்க இருண்டதோ?*** *- பெண்டிரின் அஞ்சன மையிட்ட கண்கள் (அவனது திருமேனியில்) மொய்த்துக் கிடந்தமையால் அது கருமையையடைந்ததோ?;* ***அறிகிலேமால்*** *- (இவ்விரண்டில் எது நிகழ்ந்தது? என) எம்மால் துணிந்து அறியக் கூடவில்லை.*

*ஐயனின் மேனியும் அரிவையர் விழிகளும் நிறத்தில் ஒன்றுக்கொன்று கொண்டு கொடுத்துக் கொள்ளும் தகுதியுடையனவாய் இருந்தன என்பது கருத்து. பெண்கள் தம் கண்கள் அவன் திருமேனியில் ஊன்றிக்கிடந்தன என்பதாம். பஞ்சு அணி விரலினார் - செம்பஞ்சுக்குழம்பு ஊட்டப்பட்ட விரலினையுடைய மகளிர்.*

*1073. மாந் தளிர் மேனியாள் ஓர்*
*வாணுதல். மதனன். எங்கும்*
*பூந் துணர் வாளி மாரி*
*பொழிகின்ற பூசல் நோக்கி.*
*'வேந்தர் கோன் ஆணை நோக்கான்;*
*வீரன் வில் ஆண்மை பாரான்;*
*ஏந்து இழையாரை எய்வான் யாவனோ*
*ஒருவன்?' என்றாள்.*

***மாந்தளிர் மேனியாள் ஓர் வாள் நுதல்*** - *மாவின் தளிர்போன்ற (மென்மையான) மேனியுடைய ஒளிபொருந்திய நெற்றியையுடையாள் ஒருத்தி;* ***மதனன் எங்கும் பூந்துணர் வாளி மாரி பொழிகின்ற பூசல் நோக்கி*** - *மன்மதன். (பெண்களின் மேல்) எவ்விடத்தும் பூங்கொத்துக்கள் ஆகிய அம்புமழையைப்பெய்கின்ற போர்த்திறத்தைப் பார்த்து;* ***வேந்தர்கோன் ஆணைநோக்கான் வீரன்வில் ஆண்மைபாரான்*** - *தசரதச் சக்கரவர்த்தியின் ஆணைச்சிறப்பை மதியாது (வீரருட்சிறந்த) வீரனாகிய இராமபிரானுடைய வில்லின் ஆற்றலையும் உணராது;* ***ஏந்திழையாரை எய்வான்*** - *(ஆயுதங்கள் அணியாது) அணிகளை யணிகிற பெண்டிரின் மீது அம்பெய்து வருத்துகிறவன்;* ***யாவனோ ஒருவன் என்றான்*** - *(ஆகிய) அந்த ஒப்பற்ற வீரன் யாரோ? என்று வினவினாள். மன்மதன் கை ஓங்கியுள்ளதாகச்சுட்டி. இராமனது அழகின் சிறப்பை உயர்த்தியவாறு. வேந்தருள் மிக்கானும். வீரருள் மிக்கானும் ஒருங்கு இருக்கும் போது. மகளிரைத் துன்புறுத்தும் துணிவுமிக்க வீரனும் உளனோ? அவன் பேர்தான் யாதோ? என வினவுகின்றாள். பெண்கள்மேல் அம்பெய்யும் வீரனும் யாரோ? அவனும் வீரனோ? என்ற இகழ்ச்சியும் அடங்க "யாவனோ ஒருவன்?" என்றாள்.*

***1074. சொல் நலம் கடந்த காமச்***
***சுவையை ஓர் உருவம் ஆக்கி.***
***இன் நலம் தெரிய வல்லார்***
***எழுதியது என்ன நின்றாள்-***
***பொன்னையும் பொருவு நீராள்.***
***புனைந்தன எல்லாம் போக.***
***தன்னையும் தாங்கலாதாள்.***
***துகில் ஒன்றும் தாங்கி நின்றாள்.***

***பொன்னையும் பொருவும் நீராள்*** - *(மகளிற் சிறந்தவள் ஆகிய) திருமகளைத் தனக்கு உவமையாகக் கூறத்தக்கவள் ஆகிய ஒருத்தி;* ***புனைந்தன எல்லாம் போக்கி*** - *தான் அணிந்திருந்த அணிகலன்கள் யாவற்றையும் தன் உடல் இளைப்பால் கழன்று போக விட்டு;* ***தன்னையும் தாங்கலாதாள்*** - *தன் உடலையும் தான் தாங்கும் வலிமையற்றவள் ஆகி நிற்கையில்;* ***துகில் ஒன்றும் தாங்கிநின்றாள்*** - *(மானம் மிக்கவள் ஆனபடியால்) தன் ஆடை ஒன்றைமட்டும் (அவ்வணிகள் போல்) நழுவி விடாதபடி தாங்கிப் பிடித்து நின்றாள்;* ***சொல் நலம் கடந்த காமச் சுவையை ஓர் உருவம் ஆக்கி*** - *(அவள் அப்படிப் பிடித்துக் கொண்டு) சொல் நலத்தால் அகப்படாத அகப்பொருளாகிய காமத்தின் சுவை முழுவதற்கும் ஒருவடிவம் கொடுத்து;* ***இன் நலம் தெரியவல்லார் எழுதியது என்ன நின்றாள்*** - *இன்ப (நூல்) நலம் தெரிந்த வல்லவர்கள் எழுதிய ஓவிய வடிவம் இது என்னுமாறு நின்றாள்.*

*கட்புலனாகாத காமச்சுவையைக் கட்புலப்படுத்த வந்த உயிர் ஓவியம் அவள் என்க. அன்றைய ஓவியக்கலையின் ஆட்சியும் மானம் பேணலின் மாட்சியும் ஒருங்கு தெரிவித்த வாறு. செல்லுக்குள் அகப்படாத சுவையுடையது காமச்சுவையே ஆதலின். "சொன்னலங்கடந்த காமச்சுவை" என்றார். அகம் என்று காதற்சுவை பெயர்பெறக் காரணமும் இதுவே என்பர். "மகட்குத்தாய் தன்மணாளனோடு ஆடிடும் சுகத்தைச் சொல் எனில் சொல்லுமாறு எங்ஙனே?"*

*1075.* ***வில் தங்கு புருவம் நெற்றி***
***வெயர் வர. பசலை விம்மிச்***
***சுற்று எங்கும் எறிப்ப. உள்ளம்***
***சோர. ஓர் தோகை நின்றாள். -***
***கொற்றம்செய்கொலை வேல் என்னக்***
***கூற்று எனக்கொடிய கண்ணாள்-***
***மற்று ஒன்றும் காண்கிலாதாள்.***
***'தமியனோ வள்ளல்?' என்றாள்.***

**கொற்றம்செய் கொலை வேல் என்னக் கூற்று எனக் கொடிய கண்ணாள் ஓர் தோகை** - *வெற்றியைத் தரும் கொல்லும் செயலையுடைய (கூர்) வேல்போலவும். கூற்றுவன் போலவும் கொடுமை செய்யும் கண்களையுடைய மயில்போல்வாள் ஒரு மங்கை;* **வில் தங்கு புருவம் நெற்றி வெயர்வர. பசலை விம்மிச் சுற்று எங்கும் எறிப்ப** - *வளைவதனால் வில்லின் தன்மை பொருந்திய புருவங்களிலும். நெற்றியிலும் வேர்வை ஒழுகவும் (பிரிந்தார்க்குத் தோன்றும்) பசலை நிறம் தன் உடல் முழுதும் பரவி விளங்கவும்;* **உள்ளம் சோர நின்றாள் மற்றொன்றும் காண்கிலாதாள்** - *தன்மனம் தளரவும் நின்றவளாய். தன் மனம் இராமனுடன் சென்று சேர்ந்ததனால். அவனுடன் செல்லும் பரிவாரங்களையும் காணாதவளாய்;* **'வள்ளல் தமியனோ' என்றாள்** - *வள்ளலாகிய இராமபிரான் தனியாகவா செல்லுகின்றான்? என்று கூறி. (அவனது தனிமைக்கு) வருந்தினாள்.*

*ஒன்றில் ஊன்றிய மனம் பிறவற்றைக் காணாது என்னும் உளவியல்பால். அவன்தனிமைகண்டு இரங்கினாள்; தனியன் ஆயின். தழுவி மகிழ்தற்காகவும் வினவினாள் எனலுமாம். இராமன் தனக்கு அருளவே தனியாக வந்துள்ளான் எனக்கொண்டு. அவனை "வள்ளல் என்றாள். ஐந்து பேரறிவும் கண்களே கொள்ளும் நிலையுற்ற அவள் கண்களை. இராமன் வடிவு ஒன்று மட்டுமே கொள்ளை கொண்டுள்ளதனால். நால்வகைப்படைகளும். மகளிரும். மைந்தரும் கண்ணில் படாது போயினர். "காமத்திற்குக் கண்ணில்லை" எனும் வழக்கும் காண்க.*

*1076.* ***மைக் கருங் கூந்தல். செவ் வாய்.***
***வாள் நுதல். ஒருத்தி உள்ளம்***
***நெக்கனள் உருகுகின்றாள்.***
***'நெஞ்சிடை வஞ்சன் வந்து***
***புக்கனன்; போகாவண்ணம்.***
***கண் எனும் புலம் கொள் வாயில்***
***சிக்கென அடைத்தேன்; தோழி!***
***சேருதும் அமளி' என்றாள்.***

***மைக் கருங்கூந்தல் செவ்வாய். வாள்நுதல் ஒருத்தி*** - *அஞ்சனமை போன்ற கரிய கூந்தலையும். சிவந்த வாயினையும். ஒளிபொருந்திய நெற்றியினையும் உடையாள் ஒரு மங்கை;* ***உள்ளம் நெக்கனள் உருகுகின்றாள்*** - *(இராம பிரானை நினைந்து) மனம்நெகிழ்ந்து) உருகுகின்றவளாய். (தன் தோழியை நோக்கி);* ***'தோழி! நெஞ்சிடை வஞ்சன் வந்து புக்கனன்*** - *(என் உயிர்த்) தோழியே! வஞ்சகனாகிய இராமன் என்நெஞ்சினுள்ளே (கண்வழியாக வந்து) உட்புகுந்து அகப்பட்டுக்கொண்டான்;* ***போகாவண்ணம் கண் எனும் புலம்கொள் வாயில் சிக்கென அடைத்தேன்*** - *அவன் இனி வெளியேறிவிடாதபடி என் கண் இமைகளை அவன் உள் நுழைந்த வாயிற்கதவைச் சிக்கென அடைத்துவிட்டேன்;* ***அமளிசேருதும் என்றாள்*** - *(எனக்கு வழிகாட்டு) அவனை நுகர்தற்கு மஞ்சம் சேர்வேன் என்று கூறினாள்.*

*தலைவி. கண்களை மூடிக்கொண்டதனால். தோழியின் உதவியை நாடினாள். உரியவர் அறியாது நெஞ்ச வீட்டுள் புகுந்து. அங்கிருந்த நாணம். நிறை முதலிய உயர் பொருள்களைக் கவர்தலால் இராமன் வஞ்சன் ஆனான். 'கண் விழி நுழையுமோர் கள்வனே கொலாம் (கம்ப. 535) என்பார் முன்னும். "தளையவிழும் பூங்கோதைத் தாயரே ஆவி களையினும் என்கண்திறந்து காட்டேன் - வளை கொடுபோம். வன்கண்ணன் வாள் மாறன் மால் யானை தன்னொடும் வந்து என்கண் புகுந்தான் இரா" எனும் முத்தொள்ளாயிரம் இங்கு நினையற்பாலது.*

***1077.*** **தாக்கு அணங்கு அனைய மேனி.**
**தைத்த வேள் சரங்கள் பாராள்;**
**வீக்கிய கலனும் தூசும்**
**வேறு வேறு ஆனது ஓராள்; -**
**ஆக்கிய பாவை அன்னாள்**
**ஒருத்தி - ஆண்டு. அமலன் மேனி**
**நோக்குறுவாரை எல்லாம்**
**எரி எழ நோக்குகின்றாள்.**

***ஆக்கிய பாவை யன்னாள் ஒருத்தி*** - *(கைவல்லான் ஒருவனால்) ஆக்கப்பட்ட பதுமை போன்றாள் ஒருத்தி;தாக்கு அணங்கு அனைய மேனி;* ***தைத்த வேள் சரங்கள் பாராள்*** - *தாக்கி வருத்தும் தெய்வ நங்கை போன்ற தனது மேனியில் பாய்ந்த மன்மத அம்புகளை மதியாதவளாய்;* ***வீக்கிய கலையும் தூசும் வேறுவேறு ஆனது ஓராள்*** - *தான் இடையில் கட்டியிருந்த மேகலையும் ஆடையையும் வேறுவேறாகப் பிரித்துள்ளதையும் உணராதவளாய்;* ***ஆண்டு அமலன் மேனி நோக்குவாரை எல்லாம்*** - *அங்கே. தூயவனான இராமனின் திருமேனியை (அன்போடு) பார்ப்பவரையெல்லாம்;* ***எரி எழ நோக்குகின்றாள்*** - *(கண்களிலிருந்து) தீப்பொறி எழுமாறு (சினத்துடன்) நோக்குவாள் ஆனாள்.*

*எரி எழ நோக்கியதற்கு ஏது பெருமானின் திருமேனிக்குக் கண்ணேறு படக்கூடும் என்பது. தன் காதற்குரியவனைப் பிறர் பார்ப்பது பொறாமையினாலும் எரி எழ நோக்கினாள் ஆதல்வேண்டும். தாக்கணங்கு - தீண்டி வருந்துகின்ற மோகினி என்னும் அழகுத் தெய்வம் "தாக்கணங்கு தானைக் கொண்டன்ன துடைத்து" (திருக். 1082*

*15*

***1078. களிப்பன. மதர்ப்ப. நீண்டு***
***கதுப்பினை அளப்ப. கள்ளம்***
***ஒளிப்பன. வெளிப்பட்டு ஓடப்***
***பார்ப்பன. சிவப்பு உள் ஊற***
***வெளுப்பன. கறுப்ப. ஆன***
***வேல்கணாள் ஒருத்தி. உள்ளம்***
***குளிர்ப்பொடு காண வந்தாள்.***
***வெதுப்பொடு கோயில் புக்காள்.***

***களிப்பன. மதர்ப்ப. நீண்டு கதுப்பினை அளப்ப** - (இயல்பாகிய) களிப்புத் தோன்றுவனவும். செழிப்புத் தோன்றுவனவும் நீளமாய்ச் சென்று கூந்தலை அளப்பனவும்; **கள்ளம் ஒளிப்பன வெளிப்பட்டு ஓடப் பார்ப்பன** - உள்ளத்து உள்ளதை மறைக்கும் கள்ளம் உள்ளனவும். இமைகளுக்கு வெளியே வந்து ஓடப் பார்ப்பன போன்றனவும்; **சிவப்பு உள் ஊற வெளுப்பன கறுப்ப ஆன வேற்கணாள்** - உள்ளுள்ள சிவந்த (நரம்பில்) இரேகைகள் வெளித் தெரிவனவும் (சில பகுதிகள்) வெளுத்தும் (சில பகுதிகள்) கறுத்தும் உள்ளதுமாகிய வேல் போன்ற விழிகளையுடையாள் ஒருத்தி; **உள்ளம் குளிர்ப்பொடு காண வந்தாள்** - உள்ளங் குளிர்ந்த மகிழ்வோடு (இராமனைக் காண வந்தாள்); **வெதுப்பொடு கோயில் புக்காள்** - கண்டவுடன் வந்த (காதல்) வெப்பத்தைச் (சுமந்தவாறு) தன் மாளிகைக்குள் சென்று சேர்ந்தாள்.*

*இத்துணைச் சிறப்புக்களையும் உடைய கண்கள் குளிர்ச்சியோடு வந்தவளை வெப்பத்தோடு போக உதவின என்று வியந்தவாறு. தன் பார்வையிலிருந்தும் இராமன் விலகியவுடன் எழுந்த காமதாபம் நெருப்பாகச் சுட்டதால் "வெதுப்பொடும் கோயில் புக்காள்" என்றார். முதல் மூன்றடிகளிலும் கண்ணின் சிறப்பை உரைத்துள்ள திறம் ஓர்க. மதர்ப்பு: செழிப்பினால் உண்டான செருக்கு.*

***1079. கருங் குழல் பாரம். வார் கொள்***
***கன முலை. கலை சூழ் அல்குல்.***
***நெருங்கின மறைப்ப. ஆண்டு ஓர்***
***நீக்கிடம் பெறாது விம்மும்***
***பெருந் தடங் கண்ணி. காணும்***
***பேர் எழில் ஆசை தூண்ட.***
***மருங்குலின் வெளிகளூடே.***
***வள்ளலை நோக்குகின்றாள்.***

***கருங் குழல் பாரம்*** - *(தனக்கு முன்னே வந்து. இராமனைக் காண இடம்பிடித்துக் கொண்டுள்ள மாதர்களின்) கரிய கூந்தலின் தொகுதியும்;* ***வார்கொள் கனமுலை*** - *கச்சணிந்த பருத்த மார்புகளும்;* ***கலை சூழ் அல்குல்*** - *மேகலை சூழப்பெற்ற இடைசார் பகுதியும் (எங்கும்);* ***நெருக்கின மறைப்ப ஆண்டு ஓர் நீக்கிடம் பெறாது*** - *நெருக்கம் உற்றனவாய் (இராமன் திருமேனி காணாவாறு) மறைத்து நிற்றலால் இவையற்ற இடம் இல்லாமையால்;* ***விம்மும் பெருந்தடங்கண்ணி*** - *வருந்தி மறுகும் மிகப் பெரிய கண்களையுடையாள் ஒருத்தி;* ***பேர் எழில் ஆசை தூண்ட*** - *(அவள் கேள்வியுற்ற இராமனது) பேரழகு. அவனைப் பார்த்தாக வேண்டும் என்றும் ஆசையினைத் தூண்டுதலால்;* ***மருங்குலின் வெளிகளூடே வள்ளலை நோக்குகின்றாள்*** - *முன்னே மறைந்து நிற்கும் மகளிரின் இடையின் இடைவெளிகளிடையே வள்ளலாகிய இராமபிரானைப் பார்த்துக்கொண்டிருக்கின்றாள்.*

*“அகல் அல்குல் தோள் கண் என மூவழிப்பெருகி. நுதல். அடி. நுசுப்பு என மூவழிச் சிறகி” (கலி. 108) எனும் உத்தம மங்கையர் இலக்கணம் முற்றும் அமைந்த மகளிரே அங்கே உள்ளோர் அனைவரும் எனும் கருத்தைச் சுவையுறக் கூறியவாறு.*

*இராமன் உலா வந்த வீதிகளின் நிலை*

***1080. வரிந்த வில் அனங்கன் வாளி***
***மனங்களில் தைப்ப மாதர்***
***எரிந்த பூண் இனமும். கொங்கை***
***வெயர்த்தபோது இழிந்த சாந்தும்.***
***சரிந்த மேகலையும். முத்தும்.***
***சங்கமும் தாழ்ந்த கூந்தல்***
***வரிந்த பூந்தொடையும். அன்றி***
***வெள்ளிடை அரிது - அவ் வீதி.***

***வரிந்த வில் அனங்கன் வாளி மனங்களில் தைப்ப*** - வரிந்து கட்டிய மன்மதனது அம்புகள் (அங்குள்ள மாதர்) மனங்களில் (வந்து) பாய்கையில்; ***மாதர் எரிந்த பூண் இனமும்*** - அம்மகளிரின் (விரக தாபம் மிக்க உடம்பிலே படுதலால்) தீய்ந்து விழுகின்ற அணிகளின் தொகுதியும்; ***கொங்கை வெயர்த்த போது இழிந்த சாந்தும்*** - (வெப்பத்தால்) தனங்கள் வெயர்த்தபோது அங்கிருந்து கரைந்தொழுகிய சந்தனமும்; ***சரிந்த மேகலையும் முத்தும் சங்கமும்*** - விரகத்தால் உடல் இளைத்தமையால் கழன்று சரிந்த மேகலையும் முத்து மாலைகளும் சங்கு வளையல்களும்; ***தாழ்ந்த கூந்தல் விரிந்த பூந் தொடையும் அன்றி*** - நீண்ட கூந்தல் அவிழ்ந்து விரிவதால் வீழ்ந்த மலர்மாலை அல்லாமல்; ***அவ்வீதி வெள்ளிடை அரிது*** - வெற்றிடமாக ஓரிடமும் அவ்வீதியில் இல்லை. மகளிர் நெருக்கத்தை மேலிட்டுக் கொண்டு. ஆங்குள்ள வளத்தின் பெருக்கமும் மாதர் பெருக்கமும் உரைத்தவாறு தெருக்களில் மகளிர் கவனியாது கழலவிட்ட அணிகலக் குவியல்களும். சந்தனச் சேறும். சரிந்த மாலைகளும் குப்பையாகக் கிடந்தன என்றவாறு.

*இராமனின் மேனி அழகு*

***1081. தோள் கண்டார். தோளே கண்டார்.***
***தொடு கழல் கமலம் அன்ன***
***தாள் கண்டார். தாளே கண்டார்;***
***தடக் கை கண்டாரும். அஃதே;***
***வாள் கொண்ட கண்ணார் யாரே.***
***வடிவினை முடியக்கண்டார்?-***
***ஊழ் கொண்ட சமயத்து அன்னான்***
***உருவு கண்டாரை ஒத்தார்.***

***தோள் கண்டார் தோளே கண்டார்*** - (அங்குள்ள மகளிருள்) இராமபிரானது தோள் அழகைக் கண்டவர்கள் (அவ்வழகை முற்றும் கண்டுகளித்து முடியாமையால் அதனால் பிற உறுப்புக்களின் அழகைப் பார்க்க இயலாமையால்) அத்தோள் அழகினையே கண்ட வண்ணம் இருந்தார்கள்; ***தொடுகழல் கமலம் அன்ன தாள் கண்டார் தாளே கண்டார்*** - வீரக் கழல்கள் அணிந்த தாமரைப் பூக்கள் போன்ற (இராமனது) திருவடிகளைப் பார்த்தவர்கள் (வேறு பார்க்காது) அவற்றையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்; ***தடக்கை கண்டாரும் அஃதே*** - (அவனது) பெரிய திருக்கரங்களின் அழகைப் பார்த்தவர்களும் அவ்வாறே (பிற நோக்காது) அவற்றையே பார்த்துக்கொண்டிருந்தார்கள்; ***வாள் கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்*** - ஆகவே. வாள் போன்ற கண்களையுடைய பெண்டிருள் இராமனது திருமேனியழகினை முழுவதும் பார்த்தவர்கள் யாவர் உள்ளனர் (ஒருவருமில்லை) ; ***ஊழ் கொண்ட சமயத்து அன்னான் உருவு கண்டாரை ஒத்தார்*** - (தமக்குத் தாமே ஒவ்வொரு) முறையினைக் கொண்ட சமயங்கள். பிறசமயங்கள் கூறும் இறை வடிவங்களை நோக்காது. தம் வடிவங்களையே நோக்கியவாறு இருப்பது போல இராமனைக் காண வந்த மகளிர் (அப்பெருமானின்) உறுப்புக்கள் பலவும் நோக்காது ஓர் உறுப்பின் அழகிலேயே ஊன்றி நின்று விட்டனர்.

*சமயங்கள் ஒரு பரம் பொருளின் பல கூறுகள் என்றவாறு "வணங்கும் துறைகள் பலப் பலவாக்கி மதிவிகற்பால் பிணங்கும் சமயம் பலப்பலவாக்கி அவை அவை தோறும் அணங்கும் பலப்பல ஆக்கி நின் மூர்த்தி பரப்பி வைத்தாய்" (திருவிருத். 69) எனும் நம்மாழ்வார் பாசுரத்தின் கருத்துப் பதிவு "ஊழ்கொண்ட சமயத்து அன்னாள் உருவு கொண்டாரை ஒத்தார்" எனும் உவமையில் பதிந் துள்ளமை காண்க. முழுமுதற் பரம்பொருளின் பல்வேறு வடிவங்களும் ஒரு வடிவத்தையோ அல்லது ஒரு பகுதியினையோ கண்ட ஒவ்வொரு சமயத்தவரும் அந்தந்த ஒரு வடிவினையே அல்லது பகுதியினையே முடிவாகக் கொண்டு விட்டது போலிருந்தது இப்பெண்களின் நிலை என்றவாறு. கவிஞர் பிரானின் கடவுட் கொள்கை துல்லியமாக விளங்கும் இடங்களுள் இதுவும் ஒன்று எனலாம். அந்தந்த அங்கங்களைக் கண்டவர்கள் அங்கங்கேயே நின்று கொண்டு. அடுத்த அங்கங்களின் அழகைக் காண விழிகளைப் பெயர்க்க முடியாமற் போனமை. அவர்கள் குறையில்லை என்று உணர்த்தும்.*

*பற்பல மகளிரின் நிலைகள்*

**கலி விருத்தம்**

***1082. தையல். சிற்றிடையாள். ஒரு தாழ்குழல்.***
***உய்ய மற்றுஅவள் உள்ளத்து ஒடுங்கினான்-***
***வையம் முற்றும் வயிற்றின் அடக்கிய***
***ஐயனின் பெரியார் இனி யாவரே?***

***தையல் சிற்றிடையாள் ஒரு தாழ் குழல்*** *- பார்ப்பவர் உள்ளத்தில் தைக்கும் அழகினையுடையாளும். சிறிய இடையினையுடையாளும் தாழ்ந்த கூந்தலினையுடையாளும் ஆகிய ஒருமங்கை ;* ***உய்ய மற்று அவள் உள்ளத்து ஒடுங்கினான்*** *- (வருந்தாமல்) வாழுமாறு அவள் உள்ளத்துக்குள்ளே (இராமபிரான்) அடங்கியிருந்தான்;* ***அவள் யார் எனின்;வையம் முற்றும் வயிற்றின் அடக்கிய -*** *உலகம் முழுவதையும் தன்திரு வயிற்றிலே (ஒருகாலத்தே) அடக்கி வைத்த;* ***ஐயனில் பெரியார் யார் இனியாவர் -*** *தலைவன் அப்பெருமானை விடப் பெரியவர் வேறு யாவர் உளர்?*

***1083. அலம்பு பாரக் குழலி ஓர் ஆயிழை.***
***சிலம்பும் மேகலையும் ஒலி செய்திட.***
***நலம் பெய் கொம்பின் நடந்து வந்து எய்தினாள்.***
***புலம்பு சேடியர் கைமிசைப் போயினாள்.***

***அலம்பு பாரக் குழலி ஓர் ஆயிழை*** - *(மிகுந்த கனத்தால்) அலைகின்ற கூந்தலையுடைய ஆய்ந்தெடுத்த அணிகலன்களையணிந்த ஒரு மங்கை;* ***சிலம்பும் மேகலையும் ஒலி செய்திட*** - *(காலில்) சிலம்பும் (இடையில்) மேகலையும் ஒலியெழுப்ப;* ***நலம்பெய் கொம்பின் நடந்து வந்து எய்தினாள்*** - *(இராமனைக் காண) அழகுமிக்க பூங்கொடி ஒன்று நடந்து வருவது போல வந்தடைந்தாள்;* ***புலம்பு சேடியர் கைமிசைப் போயினாள்*** - *இராமனைக் கண்ணுற்றலால் வந்த விரகதாப மிகுதியால் தன்வயம் இழந்து பரவயப் பட்டு சோர்ந்து இவள் நிலை கண்டு வருந்தும் தோழியர் கைத் தாங்கலில் போய்ச் சேர்ந்தாள். இராமனைக் காண மகிழ்ச்சியும் உல்லசாமும் ஒய்யாரமும் துள்ள வந்தவள். கண்டபின் அடைந்த நிலை கூறப்படுகிறது. சிலம்பும் மேகலையும் ஒலிக்க ஆர்ப்பரித்து நடந்து வந்த கொடி ஒலியடங்கிக் கைக்குள் எடுத்துச் செல்லுமாறு துவண்டு போனது என்க. இறையழகால் ஈர்க்கப்படும் உயிர்கள் ஆர்ப்படங்கிச் செயலிழந்து மெய்ம் மறக்கும் திறம் செப்பியவாறு.*

***1084. அருப்பு மென் முலையாள். அங்கு. ஓர் ஆயிழை.***
***'இருப்பு நெஞ்சினையேனும். ஓர் ஏழைக்கா.***
***பொருப்பு வில்லைப் பொடி செய்த புண்ணியா!***
***கருப்பு வில் இறுத்து ஆட்கொண்டு கா' என்றாள்.****

***அங்கு அருப்பு மென்முலையாள் ஓர் ஆயிழை*** - *அப்பொழுது (தாமரை) மொக்கினைப் போன்ற மார்பகங்களையுடைய ஆய்ந்தெடுத்த அணிகலன்களை யணிந்தாள் ஒருத்தி;* ***இருப்பு நெஞ்சினைப் போலும்*** - *(இராமனை நோக்கி) எனக்கு இரங்காமையால் இரும்பு போன்ற வலிய மனமுடையாய் ஆயினும்;* ***ஓர் ஏழைக்கா பொருப்பு வில்லைப் பொடி செய்த புண்ணியா!*** - *ஒரு பேதைப் பெண்ணாகிய சீதைக்காக மலை போன்ற சிவதனுசையொடித்த புண்ணியனே!;* ***கருப்புவில் இறுத்து ஆட்கொண்டு கா என்றாள்*** - *(நானும் ஒரு பெண் ஆதலால்) (எனக்காக) (என்மேல் மலர்க்கணை பொழியும் மன்மதனின்) கரும்புவில்லை ஒடித்து என்னைக் காப்பாற்றுக என்று வேண்டினாள்.*

*எனக்காக மிக வலிய மலையை ஒடிக்க வேண்டா; மிக எளிய கரும்பை ஒடித்துக் காப்பாற்றுக என்று நயமுறக் கேட்டவாறு. அரும்பு அருப்பு எனவும் இரும்பு இருப்பு எனவும் கரும்பு கருப்பு எனவும் எதுகைக்காக வலிந்தது. (ஒரு பெண்ணுக்கு வாழ்வுதர வேண்டி மேருமலையனைய வில்லை ஒடித்து அவளைக் காத்தவனே! நானும் ஒரு பெண் தானே? எனக்காக மன்மதன் பிடித்துள்ள வில்லை ஒரு கரும்பு வில்லை ஒடித்துக் காப்பாற்றல் ஆகாதா? என்று மன்றாடுகிறாள். செயலில் உள்ள நியாயத்தையும் செயலாற்ற வேண்டுவாற்குரிய ஆற்றலையும் உணர்த்தி வேண்டியவாறு. சீதையே ஏழையென்றால் நான் எத்தனை பெரிய ஏழை? எண்ணிப்பார் என்று இறைஞ்சியவாறு.*

***1085. மை தவழ்ந்த கருங் கண் ஓர் வாணுதல்.***
***'செய் தவன் தனித் தேர்மிசைச் சேறல் விட்டு.***
***எய்த வந்து எதிர் நின்றமைதான் இது***
***கைதவம்கொல்? கனவுகொலே?' என்றாள்.***

***மை தவழ்ந்த கருங்கண் ஓர் வாள் நுதல்*** - *மை தீட்டப்பட்ட கரிய கண்களையும் ஒளி பொருந்திய நெற்றியையும்;* ***செய் தவன் தனித்தேர் மிசைச் சேறல்விட்டு*** - *தவமெல்லாம் செய்து முடித்த இந்த இராமன் தன் ஒப்பற்ற தேரின் மேல் செல்லுதலை விட்டுவிட்டு;* ***தான் எய்த வந்து எதிர் நின்றமை தான் இது*** - *என் கண் எதிரில் வந்து நிற்றலாகிய இது;* ***கை தவம் கொல்? கனவு கொலோ? என்றாள்*** - *மாயைதானோ? (அல்லது) கனவுக் காட்சிதானோ என்று வினாவினாள்.*

*ஆங்குள்ள அத்தனை பொருள்களும் மறைந்து இராமன் ஒருவன் மட்டுமே கண்ணில் படுவதால் மந்திரமோ? கனவோ? என மயங்க நேர்ந்தது. பக்தர் உலகம் இந்நிலையைத் 'தீவிர பக்தி' என்னும். வாள்நுதல் - அன் மொழித் தொகை. "உருவின் மிக்கதோர் உடம்பது பெறுவது அரிது" (சீவக. சிந். 154) ஆகலான். இத்தகைய பேரழகைப் பெற்றிட இராமன் பெருந்தவம் புரிந்திருக்க வேண்டும் என்பாள் "செய்தவன்" என்றாள். இராமன். உருவம் உருவெளித் தோற்றமாய். இவள் கண்முன் நின்றான் ஆதலின் இவ்வாறு உரைத்தாள். கைதவம் - இழிந்த தவம்; வஞ்சனை; மாயை. என்னை இத்தகைய வேட்கை கொளச் செய்தவன் என்றும் பொருள் கொளலாம்.*

***1086. மாது ஒருத்தி. மனத்தினை அல்லது ஓர்***
***தூது பெற்றிலள். இன் உயிர் சோர்கின்றாள்.***
***'போது அரிக் கண் பொலன் குழைப் பூண் முலைச்***
***சீதை எத் தவம் செய்தனளோ?' என்றாள்.***

***மாது ஒருத்தி மனத்தினை அல்லது ஓர் தூது பெற்றிலள்*** - *ஒரு மங்கை (தன் மனத்தினைத் தவிர (இராமனிடம் அனுப்ப) வேறு ஒரு தூதரைப்பாரைப் பெறாதவள் ஆகினாள்;* ***இன்னுயிர் சோர்கின்றாள்*** - *(இராமன் மேல் கொண்ட வேட்கையால்) தன் இனிய உயிர் தளர்ந்து சோர்வுற்றாள்;* ***போது அரிக்கண் பொலன் குழைப் பூண் முலைச் சீதை*** - *(தாமரை) மலர் அனைய சிவந்த வரி படர்ந்த கண்களையும். பொன்னால் ஆன குழைகளையும் அணிகலன்கள் தவழும் செவிகளையும் தனங்களையும் உடைய சீதை;* ***எத்தவம் செய்தனளோ? என்றாள்*** - *(இந்த இராமனை மணந்து கொள்ள) எத்தகைய பெருந்தவம் செய்தாளோ? என ஏங்கினாள்.*

*இறைப் பேற்றிற்குத் தவம் இன்றியமையாதது என்று குறித்தவாறு. "தவமும் தவமுடையார்க்கு ஆகும்" (திருக். 292). தவம் புரியாத என் போன்றவர்கள் இராமனையடைய அவாவுவது வீண் என நொந்து கொண்டனள். வேறு யாரிடமும் சொல்ல இயலாது. தன் மனத்தை நோக்கித் தானே கூறிக் கொண்டதனால். "மனத்தினை யல்லது ஓர் தூது பெற்றிலள்" என்றார். அவனைக் கண்டு மகிழக் கண்களும் அவன் இன்னுரை கேட்டு மகிழச் செவிகளும். அணைத்து மகிழத் தனங்களையும் சீதை பெற்றுள்ளாள் என ஏங்குவாள். அவ்வுறுப்புகளை விதந்து எடுத்துக் கூறினாள். குழை - ஆகுபெயர். 24*

***1087.*** **பழுது இலா ஒரு பாவை அன்னாள். பதைத்து.**
**அழுது. வெய்துயிர்த்து. அன்புடைத் தோழியைத்**
**தொழுது. சோர்ந்து அயர்வாள். 'இந்தத் தோன்றலை**
**எழுதலாம்கொல். இம் மன்மதனால்?' என்றாள்.**

**பழுது இலா ஒரு பாவை அன்னாள்** - *(எவ்வுறுப்பிலும்) ஒரு குற்றமும் அற்ற ஓவியப் பாவையைப் போன்றாள் ஒருத்தி;* **பதைத்து. அழுது. வெய்துயிர்த்து** - *(இராமனையடையும் வேட்கையால்) துடித்துக் கண்ணீர் விட்டு வெப்ப மூச்சினை வெளிப்படுத்தி;* **அன்புடைத் தோழியைத் தொழுது சோர்ந்து அயர்வாள்** - *தன் அன்பு மிக்க (உயிர்த்) தோழியை நோக்கிக் கைகூப்பி வணங்கி. தளர்ந்து சோர்வாளாய்;* **இந்தத் தோன்றலை இம்மன்மதனால் எழுதல் ஆம்கொல்? என்றாள்** - *இந்த இராமபிரானை இந்த மன்மதனைக் கொண்டு ஓவியமாய் எழுதி வைத்துக்கொள்ள ஆகுமோ என்று கூறுவாள்.*

*இராமன் "ஓவியத்து எழுத ஒண்ணா உருவத்தினையுடையான்" (கம்ப. 4020) ஆதலின். "எழுதல் ஆம் கொல்?" என்று ஐயுற்றவாறு. காதலர் உருவை மனக்கிழியில் தீட்டும் கைவல்ல ஓவியன் மன்மதன் ஆதலால். "இம் மன்மதனால்" என்றாள். "மதனற்கும் எழுத ஒண்ணாச் சீதை" (கம்ப. 483) என்பார் முன்னும். "தேவு தெண்கடல் அமுது கொண்டு அநங்கவேள் செய்த ஓவியம் புகையுண்டது." (கம்ப. 5079) என்பதும் காண்க. அழகிய வடிவங்களை மன்மதன் ஓவியமாகத் தீட்டுவான் என்பது கவிமரபாதல் காண்க. இவன் கண் முன் இல்லாத போது பார்த்து மகிழ ஓர் ஓவியம் தேவை. இவன் உருவை நம்மால் வரைய இயலாது; மன்மதனை வேண்டினாலும்; அவனாலும் இவன் வடிவை எழுதிவிட இயலுமா? என்று தோழியை வருந்தக் கேட்டாள்.*

***1088.*** **வண்ண வாய் ஒரு வாணுதல். 'மானிடற்கு.**
**எண்ணுங்கால். இவ் இலக்கணம் எய்திட**
**ஒண்ணுமோ? இது உணர்த்துகின்றேன். இவன்**
**கண்ணனே! இது கண்டிரும். பின்' என்றாள்.**

***வண்ணவாய் ஒரு வாள் நுதல்*** - *அழகிய வாயையும் ஒளி பொருந்திய நெற்றியினையும் உடையாள் ஒருத்தி;* ***எண்ணுங்கால் மானுடற்கு இவ் இலக்கணம் எய்திட ஒண்ணுமோ?*** - *''எண்ணிப் பார்த்தால் மனிதன் ஒருவனுக்கு இத்தகைய வடிவழகையுடைய உத்தமலட்சணம் பொருந்த இயலுமா? (இயலாது) (ஆகவே) ;* ***இவன் கண்ணனே இது உணர்த்துகின்றேன்*** - *(இவன் மானுடன் அல்லன்) இவன் திருமாலே ஆவான். இதனை. நான் அனுமானத்தால் உங்கட்கெல்லாம் இப்போது உணர்த்துகின்றேன்;* ***இதுபின் கண்டிரும் என்றாள்*** - *(நான் சொல்வது உண்மையென்பதனைப் பிரத்தியட்சமாக) நீங்கள் எல்லோரும் பின்னால் கண்ணால் காணப் போகின்றீர்கள்!' என்றாள்.*

*இராமனைக் கண்ணன் என்றுணர்ந்து உணர்த்திய இவள் வாய் வார்த்தை மற்றைப் பெண்கள் வார்த்தையிலும் அழகியதாய்த் தோன்றியமையின் அதனை உரைத்த வாயை ''வண்ணவாய்'' என்று போற்றி மகிழ்கின்றார். மனித உருவிலே காணப்படாத பேரழகு இவன் வடிவில் காணப்படுதலின். இவன் கண்ணனாகிய திருமாலே எனும் முடிவுக்கு வந்தாள். முன்னும் (1068) இராமனைக் கண்ணன் என்றமை காண்க.*

***1089. கனக நூபுரம் கை வளையோடு உக.***
***மனம் நெகும்படி வாடி. ஒர் வாணுதல்.***
***'அனகன் இந் நகர் எய்தியது. ஆதியில்.***
***சனகன் செய்த தவப் பயனால்' என்றாள்.***

***ஒர்வாள் நுதல்*** - *ஒளி பொருந்திய நெற்றியினாள் ஒரு மங்கை;* ***கனக நூபுரம் கைவளையோடு உக*** - *பொன்னாலான கால்சிலம்பு. கைவளையோடு சேர்ந்து (உடல் மெலிவால்) கழன்று விழவும்;* ***மனம் நெகும்படி வாடி*** - *நெஞ்சு நெகிழ்ந்து உருகுமாறு வாட்டமுறவும்;* ***அனகன் இந்நகர் எய்தியது*** - *குற்றமற்றவனான இராமபிரான் (நம்) மிதிலை நகருக்கு வந்தடைந்தது;* ***ஆதியில் சனகன் செய்த தவப் பயனால் என்றாள்*** - *(நம் மன்னன்) சனகன் முன்பு செய்த தவத்தின் விளைவினால் என்று கூறினாள்.*

*உயர்ந்தோர் வருகை தவப்பயனால் தான் கூடும் என்பதனை. ''நகர் நீ வலஞ்செய்து வணங்க எளிவந்த இது முந்து என் குலம் செய்தவம்'' (கம்ப. 320) எனத் தசரதன் கூற்றாய் முன்பும் குறித்தார். சனகன் தவஞ்செய்தான். சீதைக்கு இராமன் கிடைத்தான்; என் தந்தை இவ்வாறு தவம் செய்யவில்லையே என ஏங்கினாள். மன வாட்டத்தால் உடல் வாடும் என்பதனை ''மனம் நெகும்படி வாடி கனக நூபுரம் கைவளையோடு உக'' என்றார். பிரிவில் வருந்துவாரின் உடல் மெலிவால் கைவளை முதலிய அணிகள் நெகிழ்ந்து வீழ்வதாக உரைத்தல் கவி மரபு. ''துறைவன் துறந்தமை தூற்றா கொல்; முன் கை. இறை இறவா நின்றவளை'' (திருக். 1157) என்பதும் காண்க.*

***1090. நனி வருந்தி. நலம் குடிபோயிட.***
***பனி வரும் கண் ஓர் பாசிழை அல்குலாள்.***
***'முனிவரும் குல மன்னரும் மொய்ப்புற அற.***
***தனி வரும் கொல் கனவின்தலை?' என்றாள்.***

***பனிவரும் ஓர் பாசிழை அல்குலாள்*** - *கண்ணீர் நீர்த்துளிகள் ததும்பிய கண்ணையும் பச்சைக் கற்கள் பதித்த (மேகலை முதலிய) அணிகலனையும் அணிந்த இடைப் பக்கத்தையும் உடையாள் ஒருத்தி;* ***நலம் குடிபோயிட நனி வருந்தி*** *- (இவ்வளவு நாளும் தன் உடலில் குடியிருந்த) தன் அழகு இடம் பெயர்ந்து நீங்கிடுமாறு (இராமன் மேற்கொண்ட வேட்கையில்) மிகவும் துயருற்று;* ***முனிவரும் குலமன்னரும் மொய்ப்பு அற*** *- (இவ்விராமன்) முனிவர்களும் மன்னர் குலத்தினரும் (இப்போது) மொய்த்துக் கிடப்பது போல் அல்லாமல்;* ***கனவின் தலை தனிவரும் கொல் என்றாள்*** *- என் கனவில் தனியாய் வருவானோ?' என்று (ஏக்கத்தோடு) கூறினாள். தனித்து வந்தால் தன்வேட்கை தீரத் தழுவி மகிழ்வேன் என்பது குறிப்பு. கூடி இருப்பார் முன் தழுவல் நாணத்தால் இயலாது. நனவில் தழுவுதல் தவமின்மையால் இயலாது. ஆதலால். ''கனவில் தனிவருங்கொல்'' என்றாள். 28*

***1091. புனம் கொள் கார் மயில் போலும் ஓர் பொற்கொடி.***
***மனம் கொள் காதல் மறைத்தலை எண்ணினாள்;***
***அனங்கவேள். அது அறிந்தனன்;- அற்றம்தான்.***
***மனங்கள் போல. முகமும் மறைக்குமே?***

***புனம் கொள் கார் மயில் போலும் ஓர் பொற்கொடி*** *- காட்டில் வதிந்து கார்காலத்து மேகங்களைக் கண்டு மகிழ்கின்ற மயில் போலவும் பொற்கொடி ஒன்று போலவும் அழகு உடைய ஒரு மங்கை;* ***மனம் கொள் காதல் மறைத்தலை எண்ணினாள்*** *- தன் மனத்தகத்தே (இராமன் மேற்)கொண்ட காதலை வெளித் தெரியாமல் மறைத்தற்கு எண்ணினாள்;* ***அனங்க வேள் அது அறிந்தனன்*** *- (மனத்தில் தோன்றுபவனாகிய) மன்மதன் அதனை அறிந்து கொண்டான்;* ***அற்றம் தான் மனங்கள் போல் முகமும் மறைக்குமே?*** *- (அவள் மனத்துள் உள்ள காதலை முகத்தில் அவன் வெளிப்படுத்திவிட்டான். ஆகவே) (தெரியாது மறைந்திருக்கும் மனங்களில் மறை பொருள்களை மறைக்கலாம்.) எல்லோர்க்கும் தெரியும் பொருளாகிய முகங்களில் மறைபொருள்கள் வெளிப்பட்டுவிடும் (மனம் போல் மறைத்தல் இயலாது).*

*கார் கண்டு மகிழும் காட்டு மயில் போலக் கார்முகில் வண்ணனாம் இராமபிரானைக் கண்டு களித்தாடும் வீட்டு மயில் இவள் என்பார். ''கார்மயில் போலும்'' என்றார். ''பளிங்கு போல் நெஞ்சம் கடுத்தது காட்டும் முகம்'' (திருக். 706). ஆதலால் மனங்கள் போல முகங்கள் மறைக்குமே'' என்றார்.*

*1092.* ***இணை நெடுங் கண் ஒர் இந்து முகத்தி பூ***
***அணை அடைந்து. இடியுண்ட அரா என.***
***புணர் நலம் கிளர் கொங்கை புழுங்கிட.***
***உணர்வு அழுங்க. உயிர்த்தனள் ஆவியே.***

***இணை நெடுங்கண் ஒர் இந்து முகத்தி*** - *(ஒன்றோடொன்று ஒத்த) இரண்டு கண்களையுடைய சந்திரன் போன்ற முகமுடையாள் ஒருத்தி;* ***பூ அணை யடைந்து*** - *(இராமன் மேல் கொண்ட வேட்கையால் நிற்கவும் இயலாமல்) மலர்கள் பரப்பப்பட்ட மஞ்சத்தையடைந்து;* ***இடியுண்ட அரா என*** - *இடியோசை கேட்ட பாம்பினைப் போல;* ***புணர் நலம் கிளர் கொங்கை புழுங்கிட*** - *நெருங்கிய அழகுமிக்க மார்பகங்கள் வியர்த்துப் போக;* ***உணர்வு அழுங்க ஆவி உயிர்த்தனள்*** - *அறிவு மழுங்கிடப் பெருமூச்செறிந்து கொண்டிருந்தாள்.*

*அணையா வேட்கை அடைவிக்கும் சில மெய்ப்பாடுகள் சுட்டியபடி. இராமன் போய் விட்டான் என்ற தோழி கூற்று. அவளுக்கு இடியோசை கேட்ட நாகம் வளைகளில் ஓடி ஒளிந்து கொள்வது போல. தன் அறை அடைந்து பூ அணைக்குள் புகுந்தாள் என்பதாம். நிலா. பாம்புக்கு அஞ்சும் ஆதலால். இவளை "இந்து முகத்தி" எனப் பொருந்தக் கூறினாள். இந்து: சந்திரன் - உவமையணி.*

*1093.* ***ஆம்பல் ஒத்த அமுது ஊறு செவ் வாய்ச்சியர்.***
***தாம் பதைத்து உயிர் உள் தடுமாறுவார்.***
***தேம்பு சிற்றிடைச் சீதையைப்போல். சிறிது***
***ஏம்பல் பெற்றிலர்; எங்ஙனம் உய்வரே?***

***ஆம்பல் ஒத்து அமுது ஊறு செவ்வாய்ச்சியர்*** - *செவ்வாம்பல் மலரைப் போன்று. அமுதம் போன்ற இனிமையூறுதற்கு இடமான சிவந்த வாயினையுடைய மகளிர் பலரும்;* ***தாம் பதைத்து உள்உயிர் தடுமாறுவார்*** - *(இராம வேட்கையால் மனமும் உடம்பும்) துடித்து. உடலினுள் உள்ள உயிர் நிலை கலங்கினர்;* ***தேம்பு சிற்றிடைச் சீதையைப் போல்*** - *வருந்தும் மெல்லிய இடையுடையாள் ஆகிய சீதையினைப் போல;* ***ஏம்பல் சிறிது பெற்றிலர்*** - *மகிழ்தற்கான காரணத்தைச் சிறிதும் பெறாதவர்களாகிய இவர்கள்;* ***எங்ஙனம் உய்வரே?*** - *எவ்வாறு பிழைப்பார்? மகிழ்தற்குக் காரணம் சிறிதே இருப்பினும் மகளிர் பிழைத்துக் கொள்வர்; இன்றேல் பிழைத்தல் இயலாது எனக் கவிஞர் பெண்மையின் மென்மை நினைந்து ஏங்கியவாறு. அமுது ஊறியும் பயன் கொள்ளப்படாமல் உள்ளது என்பார். "அமுது ஊறு வாய்ச்சியர்" என்றார்.*

*1094.* ***'வேர்த்து. மேனி தளர்ந்து. உயிர் விம்மலோடு.***
***ஆர்த்தி உற்ற மடந்தையர் ஆரையும்.***
***தீர்த்தன். இத்தனை. சிந்தையின். செங் கணின்.***
***பார்த்திலான்; உள் பரிவு இலனோ?' என்றாள்.***

***மேனி வேர்த்து உயிர் தளர்ந்து*** -*(இராம வேட்கையுற்றாள் ஒருத்தி) உடல் வியர்த்து உயிர்நிலை குலைந்து;* ***விம்மலோடு ஆர்த்தியுற்ற மடந்தையர் ஆரையும்*** - *விம்முதலோடு அருந்துயர் உற்ற பெண்டிர் எவரையும்;* ***தீர்த்தன் சிந்தையின் செங்கணின் இத்தனை பார்த்திலான்*** - *தூயோனான இராமபிரான். உள்ளத்தாலும் சிவந்த கண்களாலும் சிறிதேனும் நோக்கினான் அல்லன்;* ***உன் பரிவிலனோ என்றாள்*** - *அப்பெருமான் உள்ளத்தே (சிறிதேனும்) அன்பு என்பதே இல்லாதவனோ? என்று (துயரோடு) வினாவினாள்.*

*எத்தனை மகளிர் மொய்ப்பினும் ஏறெடுத்தும் நோக்காத இராமனின் இயல்புத் திறம் கூறி. இராமபிரானின் ஏக பத்தினி விரதத்தின் ஏற்றத்திற்கு அடித்தளம் இட்டவாறு. "இந்த இப்பிறவிக்கு இரு மாதரைச் சிந்தையாலும் தொடேன்" (கம்ப. 5378) என்ற செம்மையன் இராமன் ஆதலான் "தீர்த்தன் இத்தனை சிந்தையின். செங்கணின் பார்த்திலன்" என்றார். ஆகவே. இத் துணைப் பெண்கள் மொய்ப்பதாகக் கூறுவதெல்லாம் இராமபிரானின் ஏற்றம் உயர்த்தவே என்பதனை உய்த்துணர்க.*

***1095. வையம் பற்றிய மங்கையர் எண்ணிலர்.***
***ஐயன் பொற்புக்கு அளவு இலைஆதலால்.***
***எய்யும் பொன் சிலை மாரனும். என் செய்வான்?***
***கை அம்பு அற்று. உடைவாளினும் கை வைத்தான்.***

***வையம் பற்றிய மங்கையர் எண்ணிலர்*** - *அந்நகரத்தை வாழ் இடமாகக் கொண்ட பெண்டிர் தொகைக்கும் அளவு என்பது இல்லை; ஐயன் பொற்புக்கு அளவிலை இராம பிரானது அழகுக்கும் அளவு என்பது இல்லை;* ***ஆதலால். எய்யும் பொன் சிலை மாரனும் என் செய்வான்? -*** *(அந்த மங்கையர் உள்ளத்தில் எய்ய வேண்டிய மலர்க் கணைகளின் தேவைக்கும் ஓர் அளவில்லை) ஆதலினால் (மலர்) அம்பெய்கின்ற அழகிய வில்லினையுடைய மன்மதனும் யாது செய்வான்?;* ***கை அம்பு அற்று*** - *(தன்) கையில் உள்ள (மலர்) அம்புகள் எல்லாம் தீர்ந்து போய்;* ***உடைவாளினும் கை வைத்தான்*** - *(அம்மாதர் மேல் பாய்ச்சும் பொருட்டு) உடைவாளின் மேலும் கையை வைத்தான்.*

*காமன் "கையம்பு அற்று உடைவாளினும் கை வைக்க" நேர்ந்தது எனக் குறித்தவாற்றால் மன்மதன் தோல்வியும் மகளிர் ஆற்றாமையும் இராமனின் உடல் அழகும் குண அழகும் ஒருங்கே வெளிப்படுத்தியவாறு மன்மதனுக்கும் அங்குள்ள மகளிர்க்கும் நடந்த போரின் தீவிர நிலை தெரிவித்தவாறுமாம். தொலைவிலிருந்தால் அம்பாலும் அருகிலிருந்தால் வாளாலும் தாக்குவது போர் முறையாதலின். மன்மதன் மகளிரை மிக நெருங்கி வந்துவிட்டான் என்பதை "உடை வாளினும் கை வைத்தான்" என்பதனால் உணர்த்தினார்.*

***1096. நான வார் குழல் நாரியரோடு அலால்.***
***வேனில் வேளொடு. மேல் உறைவார்களோடு.***
***ஆன பூசல் அறிந்திலம்; அம்பு போய்***
***வான நாடியர் மார்பினும் தைத்தவே.***

***நான வார் குழல் நாரியரோடு அலால்*** - *புனுகு (முதலிய மணப்பொருள்கள்) நிறைந்த நீண்ட கூந்தலுடைய மிதிலைப் பெண்களோடு மன்மதனுக்கு நடந்த போரினை அல்லாமல்;* ***வேனில் வேளொடு மேல் உறைவார்களோடு ஆன பூசல் அறிந்திலம்*** *- இளவேனில் பருவத்துக்குரிய மன்மதனுக்கும் வானக மங்கையர்க்கும் இடையே என்ன போர் என்று நாம் அறியக் கூடவில்லை;* ***அம்பு போய் வான நாடியர் மார்பினும் தைத்த*** *- (ஏன் எனில்) மன்மத அம்புகள் போய் (இராமன் உலாவைப் பார்க்க வந்திருந்து) வான நாட்டுப் பெண்களின் மார்பகங்களிலும் போய்த் தைத்தன. இராமன் திருமேனியழகை மேல் நின்று பார்த்துக் கொண்டிருக்க வான் உலக மங்கையரும் மையல் வயப்பட்டனர் என்பதனைக் கவித்துவ அழகோடு இவ்வாறு கூறினார். ''மண்ணையும்'' விண்ணையும் ஒரு சேரப் பாதித்தது இராமனின் பேரழகு ஆயினும் அவன் யாராலும் பாதிக்கப்படவில்லை என்பது கருத்து. இராமனின் பேராண்மையைப் போகும் போக்கில் கவி உணர்த்திச் செல்லும் அழகு இது.*

***1097. 'மருள் மயங்கு மடந்தையர்மாட்டு ஒரு***
***பொருள் நயந்திலன் போகின்றதே; இவன்***
***கருணை என்பது கண்டு அறியான்; பெரும்***
***பருணிதன்கொல்? படு கொலையான்!' என்றாள்.***

***மருள் மயங்கு மடந்தையர் மாட்டு ஒரு பொருள் நயந்திலன்*** *- 'இராமன் (ஆகிய இவன் எது கேட்டாலும் தரவுள்ள) மோக மயக்கில் உள்ள மகளிர் எவரிடத்திருந்தும் ஒரு பொருளையும் விரும்பாதவனாய்;* ***இவன் போகின்றதே!*** *- இவன் இப்படிப் போகின்றானே! (இது தகுமா?);* ***கருணை என்பது கண்டறியான்*** *- (இவன்) அருள் என்னும் (பெருங்) குணத்தின் தன்மையைச் (சிறிதும்) அனுபவித்து அறியானோ?;* ***பெரும் பருணிதன்கொல்?*** *- (மகளிரைச் சிறிதும் விரும்பாக் குணம்) பரிணமித்த சிறந்த ஞானியோ?;* ***படுகொலையான் என்றாள்*** *- (ஞானி மணந்து கொள்ளச் செல்லான்) ஆதலின் (இவன் பெண்களைக் கொல்லும்) படுகொளையாளனே ஆகல் வேண்டும் என்றாள் ஒருத்தி.*

*பருணிதன்: குணங்கள் பரிணமித்த பக்குவ ஞானி. புன்னகை. கடைக்கண் வீச்சு முதலியவை மங்கையர் மாட்டு ஆடவர்க்குக் கிடைக்கும் பொருள்கள். இராமன் இத்தகைய எந்தப் பொருளையும் மகளிரிடத்துப் பெற விரும்பாமல் செல்கின்றானே என்பாள். ''மடந்தையர் மாட்டு ஒரு பொருள் நயந்திலன்; போகின்றதே! என வியந்தாள். விருப்பு வெறுப்பு ஆகியவற்றையெல்லாம் இந்த இளம் வயதிலேயே வென்றுவிட்ட பக்குவ ஞானி போலும் இவன் என்பாள் ''பருணிதன் கொல்!'' என்று மேலும் வியந்தாள்.*

***1098. தொய்யில் வெய்ய முலை. துடி போல் இடை***
***நையும் நொய்ய மருங்குல். ஓர் நங்கைதான்.***
***கையும் மெய்யும் அறிந்திலள்; கண்டவர்.***
***'உய்யும். உய்யும்!' எனத் தளர்ந்து ஓய்வுற்றாள்.***

***தொய்யில் வெய்யமுலை*** - *சந்தனத்தால் எழுதிய கோலத்தைக் கொண்டும் வெப்பம் உடைய தனங்களையும்;* ***துடி போல் இடை*** - *உடுக்கை போன்று இடை;* ***நையும் நொய்ய மருங்குல் ஒர் நங்கை தான்*** - *இடையே சிறுத்து இருமருங்கும் பெருத்து மென்மையான இடையினையும் உடையாள் ஒருத்தி;* ***கையும் மெய்யும் அறிந்திலள்*** - *(இராம வேட்கையால்) தன் ஒழுக்க நிலையையும் உடல் நிலையினையும் உணராதவளாய்;* ***கண்டவர் உய்யும் உய்யும் எனத் தளர்ந்து ஓய்வுற்றாள்*** - *அவள் நிலையைக் கண்டவர்கள் இவள் பிழைப்பாளோ 'பிழைத்துக் கொள்வாள்' என (ஒருவருக்கொருவர் தம்முள் ஐயுற்றுப் பேசும்படி) உடலும் உள்ளமும் சோர்ந்து தளர்ந்து கிடந்தாள்.*

*தொய்யில்: மணப்பொருள்களால் மார்பில் எழுதப்படும் கோலம். கை: ஒழுக்கம். உய்யும் உய்யும்? என்பதை வினாவாக்கி இவள் இனிப் பிழைப்பாளோ என்று வினவிக் கொண்டனர் எனினுமாம். அவர்கள் அவ்வாறு எண்ணியமைக்குக் காரணம் கூறுவார். "தொய்யில் வெய்ய முலை. துடிபோல் இடை நையும் நொய்ய மருங்குல்" என்றார். தனமோ கனத்தது. அதன் மேல் தொய்யில் கனத்தையும் சேர்ப்பார்களோ? என்பார். "தொய்யில் வெய்ய முலை" என்றார்.*

***1099. பூக ஊசல் புரிபவர்போல். ஒரு***
***பாகின் மென்மொழி. தன் மலர்ப் பாதங்கள்***
***சேகு சேர்தர. சேவகன் தேரின்பின்.***
***ஏகும். மீளும்; இது என் செய்தவாறுஅரோ?***

***ஒரு பாகு இன்மொழி*** - *(கருப்பஞ் சாற்றின்) பாகு போன்ற இனிக்கும் மொழி பேசுவாள் ஒருத்தி;* ***பூக ஊசல் புரிபவர் போல்*** - *பாக்கு மரங்களுக்கிடையே கட்டப்பட்ட ஊஞ்சலில் விரும்பி ஆடுபவர் போன்று;தன் மலர்ப் பாதங்கள் சேகு சேர்தரச் சேவகன் தேரின்பின் ஏகும்;* ***மீளும்*** - *தன்னுடைய செந்தாமரைப் பூப்போன்ற சிவந்த பாதங்கள் மேலும் சிவந்து போகும்படி உயர் வீரனான இராமனின் தேர் ஏகுகையில் பின்னால் செல்வாள். நாணத்தால் மீள்வாள்;* ***இது என் செய்த வாறு?*** - *(தொடர்ந்து ஏகவும் மீளவும் இருக்கும் இவள்) என்ன கருதி இவ்வாறு செய்கிறாள்?*

*அரோ - அசை. ஒன்று. போக வேண்டும்;அல்லது திரும்பிவிட வேண்டும். இரண்டில் ஒன்று செய்யாமல் இரண்டும் செய்கிற இவள் உகந்தது என் என வியந்தார். மையல் கொண்டார் ஊசல் ஆடும் உளத்தினராய்த் தவிப்பவர் எனச் சுட்டியவாறு "கமுகு பூண்ட ஊசலில். மகளிர் மைந்தர் சிந்தையோடு உலவக் கண்டார்" (கம்.488) எனவும் "ஊசல் ஆடி வளையும் உளத்தினான்" (கம்ப. 5167) எனவும் தடுமாறு நிலைக்கு ஊசலை உவமிப்பார்.*

***1100. பெருத்த காதலின் பேதுறு மாதரின்***
***ஒருத்தி. மற்று அங்கு ஒருத்தியை நோக்கி. 'என்***
***கருத்தும் அவ் வழிக் கண்டது உண்டோ?' என்றாள்-***
***அருத்தி உற்றபின் நாணம் உண்டாகுமோ?***

***பெருத்த காதலின் பேதுறு மாதரின் ஒருத்தி*** - வரம்பிகந்த வேட்கையினால் மதி மயக்கமுற்ற மங்கையர்களுக்குள்ள ஒருத்தி; ***மற்று அங்கு ஒருத்தியை நோக்கி*** - அவ்விடத்து வந்த இன்னொருத்தி யைப் பார்த்து; ***அவ்வழி என் கருத்தும் கண்டது உண்டோ என்றாள்*** - நீ. இராமனை நாடிச் சென்ற அவ்வழியிடையே என்னுடைய மனத்தை (அங்கு எங்காவது) பார்த்தது உண்டோ? எனக் கேட்டாள்; ***அருத்தி உற்றபின் நாணம் உண்டாகுமோ? ஆசை மிகுந்த பின்பு வெட்கம் உள்ளதாகுமோ?***

*கருத்து - ஆகு பெயராய் அது தோன்றும் மனத்தைக் குறித்தது. ஆசை வெட்கம் அறியாது என்பது பழமொழி - வேற்றுப்பொருள் வைப்பணி. அணுவடிவினதாய்க் கண்ணுக்குப் புலன் ஆகாத மனத்தை. ''வரும் வழியில் கண்டாயோ?'' எனக் கேட்டது. வரம்பிகந்த ஆசையினால் வெட்கமறியாது கேட்டது என்க. என் மனத்தை வரும் வழியில் பார்த்தாயா என்று வினவினால் பிறர் ஏளனம் செய்வார்கள்; அது வெட்கப்படவைக்கும் என்பதனை அவளால் அவள் வேட்கை மிகுதியால் நினைக்கக் கூடவில்லை. பெண்மைக்குரிய நாற்பண்புகளுள் ஒன்றான நாணத்தை வேட்கை உண்டு விடும் என்றவாறு ''காமம் விடு ஒன்றோ நாண் விடு நன்நெஞ்சே! யானோ பொறேன் இவ்விரண்டு'' என்பாள் திருக்குறள் காதலியும் (திருக். 1247*

*38*

***1101. நங்கை. அங்கு ஒரு பொன். 'நயந்தார் உய்ய.***
***தங்கள் இன் உயிரும் கொடுத்தார். தமர்;***
***எங்கள் இன் உயிர் எங்களுக்கு ஈகிலா***
***வெங்கண். எங்ஙன் விளைத்தது. இவற்கு?' என்றாள்.***

***அங்கு நங்கை ஒரு பொன்*** - அங்கே. பெண்களுட் சிறந்தவளாய திருமகளைப் போன்றாள் ஒருத்தி; ***தமர் நயந்தார் உய்ய. தங்கள் இன்னுயிரும் கொடுத்தார்*** - இந்த இராமபிரானுடைய குலத்தினர். தம்மை விரும்பி அடைந்தவர்கள் பிழைக்குமாறு தங்களுடைய இனிய உயிரையும் ஈந்தவர் ஆவர்; ***எங்கள் இன்னுயிர் எங்களுக்கு ஈகலா வெங்கண்*** - (அப்படியிருக்க) எங்களுக்கு உரிய இனிய உயிரையும் (கவர்ந்து கொண்டு) எங்களுக்குக் கொடுத்திடாத கொடுந்தன்மை; ***இவற்கு எங்ஙன் விளைந்தது? என்றாள்*** - இந்த இராமனுக்கு எவ்வாறு உண்டாயிற்று என்று வினவினாள்.

*பொன்: திருமகள். புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகை (கம்ப. 243) யாகிய சிபி வேந்தனின் குலத்து வேந்தனா இவன்? என்கிறாள். குல வேந்தரில் மாறுபட்ட ஒரில் உடைய குணவேந்தன் என்பதனால் இராமன் புகழே மேம்படல் காண்க. இவன் முன்னோர். நயந்தோர்க்கு உயிர் கொடுக்க. இவன் உயிர் எடுக்க உள்ளான் ஆனது எப்படி என்று வியக்கிறாள்.*

***1102. நாமத்தால் அழிவாள் ஒரு நன்னுதல்.***
***'சேமத்து ஆர் வில் இறுத்தது. தேருங்கால்.***
***தூமத்து ஆர் குழல் தூ மொழித் தோகைபால்***
***காமத்தால் அன்று. கல்வியினால்' என்றாள்.***

***நாமத்தால் அழிவாள் ஒரு நன்னுதல்*** - *(இராம வேட்கை எனும்) அச்சத்தால் நிலை குலைந்தவளான நல்ல நெற்றியினையுடையாள் ஒருத்தி;* ***சேமத்து ஆர் வில் இறுத்தது தேருங்கால்*** - *(ஆயுத சாலையில்) காவல் நிறைந்திருந்த சிவதனுசை (எடுத்து) இராமன் முறித்த காரணத்தை ஆராயுமிடத்து;* ***தூமத்து ஆர்குழல் தூமொழித் தோகைபால் காமத்தால் அன்று*** - *(அகில்) புகை (மணம்) நிறையும் கூந்தலையுடைய தூய மொழியினைப் பேசும் மயில் அனையாள் ஆகிய சீதையினிடத்துக் கொண்ட ஆசையால் அன்று என்றே தோன்றுகிறது;* ***கல்வியினால் என்றாள்*** - *(அவன் தான் கற்ற) வில் வித்தையாகிய கல்வியின் திறம் வெளிப்படச் செய்த செயலாகவே தோன்றுகிறது என்றாள்.*

*வேட்கை மிகுந்தவர்கள் நிகழும் செயல்களைத் தமக்குச் சாதகமாகவே நோக்குவர் என்னும் உள இயலை அழகுறக் கூறியவாறு. இராமன் பிற மகளிரிடத்து எவ்விதக் காமக் குறிப்பும் அற்றிருந்த நிலையை நோக்கிச் சீதையிடத்தும் அவ்வாறே இருப்பான் எனத் தனக்குத் தானே ஆறுதல் கொள்கிறாள். நாமத்தால் அழிந்தாள் என்பதற்கு. இராம நாமத்தைச் சொல்லி மெலிந்தாள் எனினுமாம். சேமம்: காவல்.*

***1103. ஆரமும். துகிலும். கலன் யாவையும்.***
***சோர. இன்உயிர் சோரும் ஓர் சோர்குழல்.***
***'கோர வில்லிமுன்னே எனைக் கொல்கின்ற***
***மாரவேளின் வலியவர் யார்?" என்றாள்.***

***ஆரமும் துகிலும் கலன் யாவையும்*** - *முத்து மாலையும். சேலையும் பிற ஆபரணங்கள் யாவற்றையும் (இராம வேட்கையால் வந்த) ;* ***சோர இன்னுயிர் சோரும் ஓர் சோர் குழல்*** - *(தன் உடல் இளைப்பால்) கழலவிட்டு உயிரும் தளர்ந்து விழும் நிலையுடைய தளர்ந்த கூந்தலாள் ஒருத்தி;* ***கோர வில்லி முன்னே எனைக் கொல்கின்ற மாரவேளின்*** - *'அச்சம் தரத்தக்க வில்லை ஏந்தியுள்ள இந்த இராமன் முன்னிலையிலேயே அஞ்சாமல் வில் எய்து என்னைக் கொல்கின்ற மன்மதனைப் போன்ற;* ***வலியவர் யார்?' என்றாள்*** - *வலிமையுடையார் உலகில் யாவர் உளர்?' என்று கேட்டாள்.*

*பெருவீரனின் முன் எதிர் நிற்கும் துணிவே பெருவீரம். ஆம். ஆதலால். இராமன் என்னும் பெருவீரன் கண்முன்னே அபலைகளை எய்கின்ற மன்மதன் பெருவீரன்தான் என்று குறிப்பால் இகழ்ந்தவாறு. அபலைகளை எய்கின்ற ஒருவனைத் தட்டிக் கேட்காது நிற்கின்ற இராமனின் நிலையையும் குறிப்பால் சுட்டி வருந்தினாள் என்க. ஆரமும். துகிலும். கலன் யாவையும் சோர்வதனால் இன் உயிர் சோர்கின்றமை தெரிவித்தவாறு.* *முனிவர் ஏவ. இராமன் ஆசனத்து அமர்தல்*

***1104. மாதர் இன்னணம் எய்திட. வள்ளல் போய்.***
***கோது இல் சிந்தை வசிட்டனும் கோசிக***
***வேத பாரனும் மேவிய மண்டபம்.***
***ஏதி மன்னர் குழாத்தொடும் எய்தினான்.***

***மாதர் இன்னணம் எய்திட*** - *(பல்வேறு பருவத்து) மகளிரும் இத்தகைய நிலையினை அடைந்திட;* ***வள்ளல் போய்*** - *இராம பிரான் சென்று;* ***கோதில் சிந்தை வசிட்டனும்*** - *குற்றமற்ற மனத்தினனாகிய வசிட்ட மாமுனிவனும்;* ***கோசிக வேத பாரனும்*** - *கோசிக முனி என்கின்ற வேதங்களின் கரைகளைக் கண்ட விசுவாமித்திரனும்;* ***மேவிய மண்டபம்*** - *வந்து வீற்றிருக்கின்ற மண்டபத்தை;* ***ஏதி மன்னர் குழாத் தொடும் எய்தினான்*** - *படைக்கலம் ஏந்திய அரசர் குழாத்துடனே அடைந்தான்.*

*பாரம்: அக்கரை. வேதபாரன்: வேதத்தின் கரையாகிய பொருளினை நன்கு உணர்ந்த விசுவாமித்திரன் என்க. "தவஞ் செய்வோர்கள் வெருவரச் சென்றடை காம வெகுளியெலாம் (கம்ப. 324) வென்றவன் வசிட்ட பகவான் ஆதலின். "கோதில் சிந்தை வசிட்டன்" என்றார். காம. வெகுளிகளை வெல்லப் போராடி அரச குலத்துப் பிறந்து வேதபாரகனாய். முயற்சியால். "பிரம்ம இருடி" ஆனவன் ஆதலால் விசுவாமித்திரனை "வேதபாரகன்" என்றார். மாதர்கள் இந்நிலையில் வருந்திட இராமன் தன் நிலையில் சற்றும் மாறாமல் பொருட்படுத்தாமல் போனான் என்பதனைத் தொனிப்பொருளாய் உணர்த்த. "மாதர் இந்நிலை எய்திட வள்ளல் போய்" என்றார்.*

***1105. திருவின் நாயகன். மின் திரிந்தாலெனத்***
***துருவு மா மணி ஆரம் துயல்வர.***
***பருவ மேகம் படிந்ததுபோல் படிந்து.***
***இருவர் தாளும் முறையின் இறைஞ்சினான்.***

**திருவின் நாயகன். மின் திரிந்தால் எனத் துருவு மாமணி ஆரம்துயல் வர** - *திருமகளின் நாயகனாகிய இராமபிரான் மின்னல் உலாவித் திரிந்தாற்போல. தேடி எடுத்துப் பதித்த சிறந்த (இரத்தின) மணிமாலைகள் தன் மார்பில் அசைந்து ஒளி வீச;* **பருவமேகம் படிந்தது போல் படிந்து** - *கார் காலத்து (நீர்கொண்ட கரிய) மேகம் (பூமியிலே வந்து) தாழப்படிந்தது போல. கீழே தாழ்ந்து;* **இருவர் தாளும் முறையின் இறைஞ்சினான்** - *வசிட்டன் விசுவாமித்திரன் என்னும் இருவரின் திருவடிகளையும் முறையே வணங்கினான்.*

*கார்மேகம் மண் நோக்கித் தாழ்வது. உலகு வளம் செழிப்பதற்கு ஆதலின். இராம மேகமும் உலகுக்கு நலம் செழிக்கத் தாழ்ந்தது என்க. வசிட்டன் குலகுரு. விசுவாமித்திரன் இடைவந்த குரு. ஆகவே. வசிட்டனை முதலில் வணங்கி. அடுத்து விசுவாமித்திரனை வணங்கினான் என்பதுணர்த்த. "இருவர் தாளும் முறையின் (முறைப்படி) வணங்கினான்" என்றார்.*

***1106. இறைஞ்ச. அன்னவர் ஏத்தினர்; ஏவ. ஓர்***
***நிறைஞ்ச பூந் தவிசு ஏறி. நிழல்கள்போல்.***
***புறஞ்செய் தம்பியருள் பொலிந்தான் அரோ -***
***அறம் செய் காவற்கு அயோத்தியில் தோன்றினான்.***

***அறம் செய்காவற்கு அயோத்தியில் தோன்றினான்*** - *தருமம் அழியாது காப்பதற்காக அயோத்தி மாநகரத்தில் அவதரித்தவனான இராமபிரான்;* ***இறைஞ்ச அன்னவர் ஏத்தினர் ஏவ*** - *(வசிட்டரையும் விசுவாமித்திரரையும் இவ்வாறு) வணங்க. (உடனே) அவர்கள் (அவனை) வாழ்த்தி. (இவ்வாசனத்தில் வீற்றிரு) என நியமிக்க;* ***ஓர் நிறைஞ்ச பூந்தவிசு ஏறி*** - *ஒப்பற்றதான பூவேலைகள் நிறைந்த ஆசனம் ஒன்றின்மேல் ஏறியமர்ந்து;* ***நிழல்கள் போல் புறம்செய் தம்பியருள் பொலிந்தான்*** - *தனது நிழல்களைப்போல் தன்னை விடாமல் நிற்கின்ற தம்பியர் மூவரோடும் பொலிந்து நின்றான்.*

*“அயோத்தியில் தோன்றியது அறஞ்செய் காவற்கே” என அறுதியிட்டவாறு. இராவணனை அழித்தல் முதலிய அனைத்தும் அறங்காக்கவே ஆதல் தெளிவாம். “அறந்தலை நிறுத்தி வேதம் அருள் சுரந்து அறைந்த நீதித் திறம் தெரிந்து. உலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர் இறந்து உக நூறித் தக்கோர் இடர் துடைத்து ஏக ஈண்டுப் பிறந்தனன்” (கம்ப. 5885) என்பதிலும் அறந்தலை நிறுத்தலையே முதற்கடமையாகக் குறிப்பிட்டுள்ளமை காண்க.*

*தயரதனும் மண்டபத்திற்கு வந்து அமர்தல்*

***1107. ஆன மா மணி மண்டபம் அன்னதில்***
***தானை மன்னன் தமரொடும் சார்ந்தனன் -***
***மீன் எலாம் தன் பின் வர. வெண்மதி.***
***வான் நிலா உற வந்தது மானவே.***

***மீன் எலாம் தன்பின்வர*** - *எல்லா நட்சத்திரங்களும் தனக்குப் பின்னேவர;* ***வெண்மதி வான்நிலா உற வந்தது மான*** - *வெண்ணிறச் சந்திரன் வானத்தை ஒளியுறச் செய்து வருவது போல;* ***தானை மன்னன்*** - *சேனைகளையுடைய தசரத சக்கரவர்த்தி;* ***ஆன மாமணி மண்டபம் அன்னதில் சார்ந்தனன்*** - *பெருமைக்குரிய மணிகள் பொருந்திய அந்த மண்டபத்தை அடைந்தான்.*

*மீனுக்கும் வானுக்கும் திங்களின் வருகை தனிப்பொலி வூட்டுதல் போல. அம்மண்டபமும் அங்குள்ளோரும் தசரதன் வருகையால் தனிப்பொலிவெய்தினர் என்க.*

***1108. வந்து. மா தவர் பாதம் வணங்கி. மேல்***
***சிந்து தே மலர் மாரி சிறந்திட.***
***அந்தணாளர்கள் ஆசியொடு. ஆசனம்.***
***இந்திரன் முகம் நாணுற. ஏறினான்.***

***வந்து மாதவர் பாதம் வணங்கி*** - *(தசரத சக்கரவர்த்தி அவ்வாறு) வந்து பெருந்தவத்தினராகிய வசிட்டரையும் விசுவாமித்திரரையும் (அடியுறத் தொழுது);* ***சிந்து தேமலர் மாரி சிறந்திட*** - *(தன்மேல் அங்குள்ளோர் பலராலும்) சொரியப்படுகிற தேன் நிறைந்த மலர்கள் மழைபோல் நிறைய;* ***அந்தணாளர்கள் ஆசியொடு*** - *(அறவோர் ஆகிய) அந்தணர்கள் வாழ்த்துரைக்க;* ***இந்திரன் முகம் நாணுற ஏறினான்*** - *(தேவர்கள் தலைவனாகிய) இந்திரனும். (இவனுக்கு வாய்த்துள்ள பேறு தனக்கில்லையே யென்று) முகங்கவிழ்ந்து வெட்கமுறுமாறு (ஆதனத்தில்) ஏறி வீற்றிருந்தான்.*

*இராமனாகிய மகப்பேறும். சீதையாகிய மருமகட்பேறும் இந்திரனுக்கில்லை யாதலால் இந்திரன் முகம் நாணினான் என்க. முன்பு கோசிக முனிவனைப் பணிய அயோத்தியில் எழுந்தபோது தசரதனை. "இந்திரன் எனக்கடிது எழுந்து அடிபணிந்தான்" (கம்ப. 318) எனத் தசரதனை இந்திரனோடு ஒப்பிட்ட கவிஞர்பிரான். இங்கு இந்திரன் நாண எழுந்து பணிந்தான் என்றதன் காரணம். இந்திரனுக்குத் திருமகளை மருமகளாகப் பெறும் வாய்ப்பு இன்மையால் என்க.*

*மண்டபத்துள் வந்து திரண்ட மன்னர்கள்*

***1109. கங்கர். கொங்கர். கலிங்கர். குலிங்கர்கள்.***
***சிங்களாதிபர். சேரலர். தென்னவர்.***
***அங்க ராசர். குலிந்தர். அவந்திகர்.***
***வங்கர். மாளவர். சோளர். மராடரே.***

***கங்கர். கொங்கர். கலிங்கர். குலிங்கர்கள்*** - *கங்க நாட்டரசரும் கொங்கு நாட்டரசரும் கலிங்க மன்னரும் குலிங்க மன்னரும்;* ***சிங்கள அதிபர். சேரலர். தென்னவர்*** - *சிங்கள அரசரும். சேர மன்னரும். பாண்டிய அரசரும்;* ***அங்கராசர் குலிந்தர். அவந்திகர்*** - *அங்க நாட்டரசரும். குலிந்தநாட்டரசரும். அவந்தி மன்னரும்;* ***வங்கர். மாளவர். சோளர். மராடர்*** - *வங்க மன்னரும். மாளவதேசத்தரசரும். மராட மன்னரும்.*

*இப்பாடலுடன் மேல் வரும் இருபாடல்களும் சேர்ந்து ஒரு தொடர். இப்பாடலில். அடைமொழியே இன்றி. அரசர் பெயர்களையே இணைத்து கவியோசை குன்றாமல் இணைத்திருக்கும் திறம் காண்க.*

***1110. மான மாகதர். மச்சர். மிலேச்சர்கள்.***
***ஏனை வீர இலாடர். விதர்ப்பர்கள்.***
***சீனர். தெங்கணர். செஞ் சகர். சோமகர்.***
***சோனகேசர். துருக்கர். குருக்களே.***

**மான மாகதர். மச்சர். மிலேச்சர்கள்** - *பெருமை மிக்க மாகத மன்னரும் மச்ச நாட்டரசரும். மிலேச்ச தேசத்தரசரும்;* - **ஏனை வீர இலாடர். விதர்ப்பர்கள்** - *மற்றுமுள்ள வீரமிக்க இலாட மன்னரும். விதர்ப்ப மன்னரும்;* **சீனர். தெங்கணர். செஞ்சகர். சோமகர்** - *(மகா) சீன தேசத்தரசரும். தெங்கண தேசத்தரசரும். செம்மையான சக தேசத்தரசரும். சோமக நாட்டரசரும்;* **சோனகேசர். துருக்கர். குருக்களே** - *சோனக நாட்டரசரும். துருக்க தேச மன்னரும். குருநாட்டரசர்களும்.*

***1111. ஏதி யாதவர். ஏழ் திறல் கொங்கணர்.***
***சேதி ராசர். தெலுங்கர். கருநடர்.***
***ஆதி வானம் கவித்த அவனி வாழ்***
***சோதி நீள் முடி மன்னரும் துன்னினார்.***

**ஏதி யாதவர். ஏழ்திறல் கொங்கணர்** - *ஆயுதங்கள் ஏந்திய யாதவ அரசரும். ஏழு பகுப்பினையுடைய கொங்கண அரசர்களும்;* **சேதிராசர். தெலுங்கர் கருநடர்** - *சேதி நாட்டு மன்னர்களும். தெலுங்கு தேசத்தரசரும். கருநாடக மன்னரும்;* **ஆதி வானம் கவித்த அவனி வாழ் சோதி நீள்முடி மன்னரும் துன்னினார்** - *(இவ்வாறு பஞ்ச பூதங்களுள்) முதலாவதான ஆகாயத்தாற் சூழப்பட்டுள்ள மண்ணுலகில் வாழும் ஒளிமிக்க மகுடங்களையணிந்த அத்தனை அரசர்களும் அம்மண்டபத்தில் வந்து நெருங்கினார்கள்.49*

*மங்கையரின் சாமரை வீச்சும் பல்லாண்டும்*

***1112.***

***தீங் கரும்பினும் தித்திக்கும் இன் சொலார்***
***தாங்கு சாமரை. மாடு தயங்குவ:***
***ஓங்கி ஓங்கி வளர்ந்து. உயர் கீர்த்தியின்***
***பூங் கொழுந்து பொலிவன போன்றவே.***

***தீங்கரும்பினும் தித்திக்கும் இன் சொலார்*** - இனிய கரும்பினும் இனிக்கின்ற இன்சொற்களைப்பேசும் மகளிர்; ***தாங்கு சாமரை மாடு தயங்குவ*** - வீசுகின்ற சாமரங்கள் (தசரத வேந்தரின்) பக்கங்களில் விளங்குபவை; ***ஓங்கி ஓங்கி வளர்ந்து உயர் கீர்த்தியின் பூங்கொழுந்து பொலிவன போன்ற*** .- மிக உயர்ந்து (விண்ணகம்முட்ட) வளர்ந்து மற்றெல்லோர் புகழினும் உயர்ந்துள்ள (தசரதசக்கரவர்த்தியின்) மிகு புகழாகிய (பருமரத்தின்) அழகிய இளந்தளிர்கள் மின்னுவதை ஒத்திருந்தன. புகழை வெண்ணிறமுடையது என ஓதும் மரபு பற்றி. சாமரங்கள் தசரதனது புகழின் கொழுந்துகள் போன்றிருந்தன என்று உவமித்தார். கொழுந்துகள் பொலிவன என்றதனால். அவற்றையுடைய மரங்கள் செழித்து வளர்ந்திருப்பது கூறாமலேயே விளங்கும் என்க.

***1113.***

**சுழலும் வண்டும். மிஞிறும். சுரும்பும். சூழ்ந்து**
**உழலும் வாச மது மலர் ஓதியர்.**
**குழலினோடு உற. கூறு பல்லாண்டு ஒலி.**
**மழலை யாழ் இசையோடு மலிந்தவே.**

***சுழலும் வண்ம் மிஞிறும் சுரும்பும் சூழ்ந்து உழலும்*** - சுற்றிச் சுற்றி ஒலிக்கும் இயல்புடைய வண்டுகளும். அவற்றின் இனமான மிஞிறும் சுரும்புகளும் சுற்றித்திரிதலுக்கு இடமான; ***வாச மது மலர் ஓதியர்*** - நறுமணமும் தேனும் நிறைந்த மலர்களையுடைய கூந்தலுக்குரிய பெண்டிர்; ***குழலினோடு உறக கூறு பல்லாண்டு ஒலி*** - புல்லாங்குழலோடு பொருந்துமாறு. (தசரத வேந்தனைப்) பல்லாண்டு வாழ்க என வாழ்த்தும் (இசை) ஒலி; ***மழலையாழ் இசையோடு மலிந்த*** - அம்மகளிருடைய கொஞ்சு மொழிக்குச் சமமான யாழ் இசையோடு மிக்கு ஒலித்தன.

*மிடற்றுக்கருவி. துளைக்கருவி. நரம்புக்கருவி எனும் இசைபிறக்கும் கருவி வகைகளின் இன்னொலியோடு வண்டினங்களின் ஒலியும். மகளிர் கூந்தலின் கொடையாகச் சேர்ந்து கொண்டன எனக் கூறியவாறு. மன்னனுக்கு பல்லாண்டு (அஃறிணை) வண்டுகளும் பாடின என்று குறிப்பால் உரைத்தார்.*

*வெண்குடை விளங்கி காட்சி*

***1114.***

**வெங் கண் ஆனையினான் தனி வெண்குடை.**
**திங்கள். தங்கள் குலக்கொடிச் சீதை ஆம்**
**மங்கை மா மணம் காணிய வந்து. அருள்**
**பொங்கி ஓங்கித் தழைப்பது போன்றதே.**

***வெங்கண் ஆனையினான் தனி வெண்குடை*** - *கொடுங்கண்களையுடைய யானைப்படைக்குரிய தசரத வேந்தனின் ஒப்பற்ற வெண்கொற்றக்குடை;* ***திங்கள்*** - *சந்திரன் ஆனவன்;* ***தங்கள் குலக்கொடிச் சீதை ஆம் மங்கை*** - *தம்குலத்தில் உதித்த மலர்க்கொடியனைய சீதையாகிய மகளின்;* ***மாமணங்காணிய வந்து அருள் பொங்கி ஓங்கித் தழைப்பது போன்றது*** - *சிறப்புக்குரிய திருமணத்தைக் கண்டுகளிப்பதற்காக வந்து கருணைமிக்குப் பூரித்து விளங்குவதைப் போன்றிருந்தது.*

*தண்மையினாலும் வெண்மையினாலும். வேந்தர்களின் கொற்றக்குடைகளைத் திங்களோடு உவமிக்கும் மரபு பற்றிக் கூறினும். சந்திர குல மங்கை மணம் காணக் குல முதல்வன் வந்தான் எனப் புதுச்சுவை சேர்ந்திருக்கும் திறம் காண்க. தற்குறிப்பேற்ற அணி.*

*தயரதனின் படைப் பெருக்கம்*

***1115. ஊடு பேர்விடம் இன்றி. ஒன்று ஆம் வகை***
***நீடு மா கடல் தானை நெருங்கலால்.***
***ஆடல் மா மத ஆனைச் சனகர் கோன்***
***நாடு எலாம். ஒரு நல் நகர் ஆயதே.***

***ஊடு பேர்வு இடம் இன்னி*** - *(இருந்த) இடத்திலிருந்து நிலை பெயர்ந்து நகர்தற்குரிய இடைவெளி சிறிதும் இன்றி;* ***நீடு மாகடல் தானை நெருங்கலால்*** - *நீண்ட பெருங்கடல் போன்று (தசரத வேந்தனின்) படைத்தொகுதி (அந்நாட்டிடம் முழுவதும்) நெருங்கிப் பரவி நிற்றலால்;* ***ஆடல் மாமத ஆனைச் சனகர் கோன் நாடு எலாம்*** - *வெற்றியினையே ஏந்தும் பெரிய மத யானைப்படைக்குரிய சனக மன்னனின் (விதேக) நாடு முழுவதும்;* ***ஒரு நல் நகர்ஆயது*** - *(சன நெருக்கம் மிக்க) ஒரே ஒரு நல்ல நகரமாக ஆய்விட்டது.*

*கவிஞர்பிரான் தன் கற்பனைத் திறத்தால். நாட்டை ஒரு நகரமாக்கி மகிழும் திறம் காண்க. போதுமான இடமின்றி நெருங்கியிருத்தலும். படைகள் மிக இருத்தலும் நகரத்தின் இயல்பாய் அன்றும் இருந்திருத்தல் காணலாம். நாட்டும்புறம் இவையிரண்டுமின்றியிருத்தல் இன்றும் இயல்பாதல் காண்க.*

*அனைவரையும் சனகன் உபசரித்தல்*

***1116 ஒழிந்த என் இனி? ஒண்ணுதல் தாதைதன்***
***பொழிந்த காதல் தொடர. பொருள் எலாம்***
***அழிந்து மன்றல் கொண்டாடலின். அன்புதான்***
***இழிந்துளார்க்கும் இராமற்கும் ஒத்ததே.***

***ஒள்நுதல் தாதை*** - *ஒளிமிகும் நெற்றியாள் ஆகிய சீதையின் தந்தையாகிய சனக மன்னன்;* ***தன் பொழிந்த காதல் தொடரப் பொருள் எலாம் அழிந்து*** - *பொழிகின்ற அன்பின் வழிபட்டு. தன் செல்வம் முழுவதையும் செலவழித்து;* ***மன்றல் கொண்டாடலின்*** - *இத்திருமண விழாவைக் கொண்டாடுவதால்;* ***அன்புதான் இழிந்துளார்க்கும் இராமற்கும் ஒத்தது*** - *அந்த சனக மன்னனின் அன்பு (வெள்ளம்) தாழ்ந்த நிலையில் உள்ளார்க்கும். (அனைவரிலும் உயர்ந்த) இராமனுக்கும் சமமாகவே வாய்ந்தது;* ***ஒழிந்த என் இனி?*** - *(இதற்கு மேல் இம் மண நிகழ்வுபற்றிக் கூற) மீதம் உள்ளவை யாவை?. பொழிந்த. தொடர. அழிந்து என்னும் சொற்போக்கால். சனக மன்னனின் அன்பை வெள்ளமாக்கியுள்ள குறிப்பை உணரலாம். சனக மன்னது உள்ளம் எனும் மலையில் உதித்த அன்பு வெள்ளம் பொருள்களையெல்லாம் உருட்டி மக்கட்பரப்பிலேயே பாய்ந்தது என்க. இன்னார். இனியார் உயர்ந்தார். தாழ்ந்தார் வேற்றுமை வெள்ளத்திற்கில்லையாதலால். ''அன்புதான் இழிந்துளார்க்கும் இராமற்கும் ஒத்தது'' என்றார். அழிந்து - மெலித்தல் விகாரம். மன்றல் கொண்டாடல் - மணங்கொண்டு வருதல் வெள்ளத்திற்கும் பொருந்துவது காண்க. ஜனகன் சமதிருஷ்டி உடைய ஞானி ஆகையால். மருமகனாகிய இராமனிடத்தும் ஏழை எளியவரிடத்து ஒருதக அன்பு செய்தான் என்பதைப் புலப்படுத்தினான் என்க.*

## கோலம் காண் படலம்

*சீதைக்குத் தோழியர் மணக்கோலஞ்செய்து கண்டு மகிழ்வது கூறம் பகுதி. மணமண்டபத்திற்குச் சீதையை அழைத்து வருமாறு வசிட்டன் சனகனை வேண்டினன். சனகன் தாதியர்க்கு அச்செய்தி தெரிவித்தான். சீதைக்குத் தாதியர் அமிழ்தினைச் சுவை செய்வது போல் அழகினுக்கு அழகு செய்து பாதாதிகேசமாக அணிகள் பூட்டி. மணமண்டபத்திற்கு அழைத்து வந்தனர். தசரதனும் முனிவர் இருவரும் தவிர. அத்தனை பேர் கரங்களும் சீதையைத் தெய்வமெனக் கருதிச் சிரமேல் குவிந்தன. கன்னிமாடத்தருகே கண்ட காதற் காட்சிக்குரியவரே என இராமனும் சீதையும் ஒருவரை ஒருவர் அறிந்து ஐயம் நீங்கி அகம் பூரித்தனர். திருமணநாள் 'நாளை' எனக்குறித்த பிறகு தத்தம் இருப்பிடங்களை அனைவரும் அடைந்தனர்.*

*சீதையைக் கொணருமாறு வசிட்டன் சனகனுக்குக் கூறுதல்*

**அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

***1117. தேவியர் மருங்கு சூழ.***
***இந்திரன் இருக்கை சேர்ந்த***
***ஓவியம் உயிர் பெற்றென்ன***
***உவந்து. அரசு இருந்தகாலை.***
***தா இல் வெண் கவிகைச் செங்கோல்***
***சனகனை இனிது நோக்கி.***
***'மா இயல் நோக்கினாளைக்***
***கொணர்க!' என. வசிட்டன் சொன்னான்.***

***ஓவியம் உயிர்பெற்று என்ன*** *- சித்திர வடிவங்கள் உயிர்பெற்று இயங்குவது போன்ற;* ***தேவியர் மருங்கு சூழ*** *- தம் மனைவியர்கள் தன் அருகே சூழ்ந்திருக்க;* ***இருக்கை சேர்ந்த இந்திரன்*** *- (என்ன)* ***அரசு உவந்து இருந்த காலை*** *- ஆசனத்தில் அமர்ந்துள்ள தேவேந்திரன் என்னுமாறு தசரத வேந்தன் (அம்மணி மண்டபத்துச் சிங்காதனத்தில்) மகிழ்ச்சிபொங்க வீற்றிருக்கும் போது;* ***வசிட்டன் தா இல்வெண்கவிகைச்செங்கோல் சனகனை இனிது நோக்கி*** *- (அவன் குலகுருவாகிய) வசிட்ட மாமுனி. குற்றமற்ற வெண்கொற்றக் குடையும். செங் கோலும் தாங்கும் சனக மன்னனை இனிமையுடன் பார்த்து;* ***மா இயல் நோக்கினாளைக் கொணர்க எனச்சொன்னான்*** *- 'மான்விழி போன்ற கண்ணாள் ஆகிய சீதையை அழைத்து வருக' என்று கூறியருளினான்.*

*முன்பும் (கம்ப. 316. 318) தசரதவேந்தனுக்கு இந்திரனை உவமிப்பார். ஓவியத்திற்குத் தயரதன் மனைவியர் அழகு வடிவமும். அவர்கள் இயக்கத்திற்கு ஓவியம் உயிர் பெறுதலும் உவமையாம். இல்பொருள் உவமை. தயரதனோடு தயரதன் தேவியர் பலரும் உடன் வந்தனர் என்பதனை. "நெறியிடைப்படர வேந்தன் நேயமங்கையர் தாம் செல்வார்" (கம். 793) என எழுச்சிப் படலத்தும் உரைத்தார். "மாவியல் நோக்கினாள்" என்பதற்கு. மாவடு போன்றவிழியினாள்; பெரிய அகன்ற விழியினாள் எனவுமாம். குலகுரு முன்னர். தசரதன் ஓவியர் உயிர்பெற்றது போல் அடங்கியிருந்தனன் என இரண்டாம் அடிக்குப் பொருள் கூறுப.*

*சனகன் ஏவிய மாதர் தாதியர்க்குச் செய்தி அறிவித்தல்*

***1118. உரைசெய. தொழுத கையன்.***
***உவந்த உள்ளத்தன். 'பெண்ணுக்கு***
***அரைசியைத் தருதிர் ஈண்டு***
***என்று. ஆயிழையவரை ஏவ.***
***கரை செயற்கு அரிய காதல்***
***கடாவிட. கடிது சென்றார்.***
***பிரைசம் ஒத்து இனிய சொல்லார்.***
***பேதை தாதியரில் சொன்னார்.***

***உரை செய*** - *(இவ்வாறு) வசிட்ட முனி சொல்லியருள;* ***தொழுத கையன். உவந்த உள்ளத்தன்*** - *(அது கேட்டு) கூப்பி வணங்கிய கரங்களையும். மகிழ்ச்சி பொங்கிய மனத்தையும் உடையவனான சனக மன்னன்;* ***பெண்ணுக்கு அரசியைத் தருதிர் ஈண்டு என்று ஆயிழையவரை ஏவ*** - *பெண்ணினத்தின் பேரரசியாம் (பெருமாட்டியான) சீதையை இங்கே அழைத்து வாருங்கள் என்று ஆய்ந்தணிந்த அணிகளையுடைய மங்கையர் சிலரிடம் ஆணையிட;* ***பிரைசம் ஒத்து இனிய சொல்லார்*** - *தேன் அனைய இன்சொல் பேசும் அப்பெண்கள்;* ***கரை செயற்கு அரிய காதல் கடாவிடக்கடிது சென்றார்*** - *அளவிடற் கரியதாய்ச் (சீதை மேல் உள்ள) அன்பு உந்தித்தள்ள விரைந்து சென்றவர்களாய்;* ***பேதை தாதியரில் சொன்னார்*** - *இளைய பருவத்தினளான சீதையின் தோழியரிடம் அச்செய்தியை (உடனே) போய்ச் சொன்னார்கள்.*

*கவிஞர்பிரான் அரண்மனை நடைமுறைகளை நன்கறிந்தவர் என்பதனை இப்பாவும் உணர்த்தும். ஆணைகளை முறைப்படி ஒருவர். தமக்குக் கீழ் இருக்கும் ஒருவர்க்கு உரைக்க. அவர் அவர்க்குக் கீழ் இருப்பாரிடம் உரைக்கும் முறை பண்டே யிருந்தமை இப்பாடலால் தெளியலாம். மாமுனி வசிட்டனின் ஏவல் ஆனதனால் "உரைசெயத் தொழுத கையன் உவந்த உள்ளத்தன்" ஆனான் சனகன். சீதை. திருமகள் ஆதலால். "பெண்ணுக்கு அரசி" என்றார். "கரை செயற்கு அரிய காதல் கடாவிட" ஆய மகளிர் சென்றனர் என்பதனால். சீதை மாட்டு அவர்கள் வைத்திருந்த பேரன்பு புலனாம். மகிழ்ச்சியால் அவர்கள் சொற்கள் தேன்போன்று இனித்தன என்பார். "பிரைசம் ஒத்து இனிய சொல்லார்" என்றார். பிரைசம் - தேன்.*

*தாதியர் சீதைக்கு அழகு செய்தல்*

*1119.* ***அமிழ் இமைத் துணைகள். கண்ணுக்கு***
***அணி என அமைக்குமாபோல்.***
***உமிழ் சுடர்க் கலன்கள். நங்கை***
***உருவினை மறைப்பது ஓரார்.***
***அமிழ்தினைச் சுவை செய்தென்ன.***
***அழகினுக்கு அழகு செய்தார்-***
***இமிழ் திரைப் பரவை ஞாலம்***
***ஏழைமை உடைத்து மாதோ!***

***அமிழ் இமைத்துணைகள் கண்ணுக்கு அணி என அமைக்கு மாபோல்*** - *(கண்கள்) மறைதற்குக் காரணமான இரண்டு இமைகளும் அக்கண்களுக்கு அழகென்று (இறைவனால்) அமைக்கப்பட்டிருப்பது போல;* ***உமிழ் சுடர்க் கலன்கண் நங்கை உருவினை மறைப்பது ஓரார்*** - *(சீதைக்கு அணிசெய்யும் மகளிர்) ஒளிவீசும் ஆபரணங்கள் சீதையின் (அழகிய) வடிவத்தை மறைக்கும் என்னும் உண்மையை உணராதவர்களாய்;* ***அமிழ்தினைச் சுவை செய்தென்ன*** - *(இயல்பாகவே) (அத்துணைச் சுவைகளையும் பெற்றிருக்கிற) அமிழ்துக்கு. (கற்கண்டு சர்க்கரை முதலியவை கொண்டு) மேலும் சுவை கூட்டும் முயற்சியைப் போல;* ***அழகினுக்கு அழகு செய்தார்*** - *(இயற்கையிலேயே) பேர் அழகுவாய்ந்த (சீதையின் உறுப்புகளுக்கு) (மேலும் புதிதாக) அழகு செய்யத் தொடங்கினார்கள்;* ***இமிழ்திரைப் பரவை ஞாலம் ஏழைமை உடைத்து*** - *அலை ஒலிக்கும் கடல்சூழ்ந்த இந்நிலவுலகத்து மக்கள் (நன்மை புரிவதாக நினைத்துப் பிழைபுரியும்) அறியாமையுடையவர்கள்.*

*மாது. ஓ - அசைகள். நினைக்கும் நினைவு நல்லதாயினும். அதற்கு மாறான செயல் புரியத் தொடங்குதல் பேதைமை. சீதைக்கு அணிசெய்யக் கருதுதலின் மேல் வைத்து அப்பண்பினை விளக்கியவாறு. பிறமகளிர் அணி தரித்து அழகு செய்வர். சீதை அணி பறித்து அழகு செய்வாள் என (கம்ப : 6991) அவள் அழகின் பெருமை அறிவித்தவாறு. "அணிகலம் அணிவோர் அணியிலோரே.... இவள்போல் உறுப்பே அணிகலமாக உடையோர்" (பெருங். 4:17) ஏழைமை. அறியாமை குறித்து நின்றது. "செய்யாக் கோல மோடு வந்தீர்" (சிலப் :11) எனக் கண்ணகியின் அணியா அழகு புகழப்படும். கேசாதி பாதமாகச் சீதைக்கு அணிந்த அணிகள்*

*குழலில் மாலை யணிதல்*

*1120.*

***கண்ணன்தன் நிறம். தன் உள்ளக்***
***கருத்தினை நிறைத்து. மீதிட்டு.***
***உள்நின்றும் கொடிகள் ஓடி.***
***உலகு எங்கும் பரந்ததன்ன***
***வண்ணம் செய் கூந்தல் பார***
***வலயத்து. மழையில் தோன்றும்***
***விண் நின்ற மதியின். மென் பூஞ்***
***சிகழிகைக் கோதை வேய்ந்தார்.***

***கண்ணன் தன் நிறம்தன் உள்ளக் கருத்தினை நிறைத்து மீதிட்டு*** - *திருமாலின் நிறமானது. சீதையினது மனத்தினை நிரப்பி மேல் எழுந்து;* ***உள்நின்றும் கொடிகள் ஓடி உலகெங்கும் பரந்தது அன்ன*** - *அங்கிருந்தும் பரந்து. கொடிகளாக ஓடி உலகம் முழுவதும் பரவியது போல;* ***வண்ணம்செய் கூந்தல் பார வலயத்து*** - *அழகுசெய்கின்ற கூந்தல் எனும் கனமுடைய வட்டவடிவத்தில்;* ***மழையில் தோன்றும் விண்நின்ற மதியின்*** - *மேகத்தின் இடையே தோன்றும் சந்திரனைப் போல;* ***மென் பூஞ் சிகழிகைக் கோதை சேர்த்தார்*** - *மென்மை வாய்ந்த மலர்களால் ஆன சிகழிகை என்னும் மாலையைச் (சீதைக்குத் தோழியர்) சூட்டினர்.*

*உள்ளத்தின் நினைவுகள் முற்றின் உடலிற் பரவி மெய்ப்பாடுகள் ஆகும்; இங்கு அந்நினைவுகள் கூந்தல் ஆயின எனச் சுவைபடக் கூறியவாறு. உயர்வு நவிற்சியால் கூந்தல் உலகு எங்கும் பரந்தது எனப்பெற்றது. இராமனது காயாம்பூ நிறம் உள்ளத்து முற்றி. முளைத்து. செழித்து. படர்ந்து கூந்தலாகிக் கொழுந்து விட்டுப் படர்ந்தன என உருவகித்தார். (நிறம் பற்றிய) எண்ணம் செயலாயிற்று என்றவாறு. சிகழிகை - சிரத்தைச் சுற்றி யணியும் மாலை. கூந்தலுக்கு மேகமும். வட்டமான பூமாலைக்கு மேகத்திடையேயுள்ள வட்ட வெண்மதியும் உவமைகளாயின. "சோனை. வார்குழல் கற்றையில் சொருகிய மாலை. வானமாமழை நுழைதரும் மதி" (கம்ப. 1491) என்பார் மேலும். இராமனைக் கண்ணன் என முன்பும் (கம்ப. 1068) குறிப்பார்.*

*சுட்டி யணிதல்*

*1121.* ***விதியது வகையால் வான***
***மீன்இனம் பிறையை வந்து***
***கதுவுறு கின்ற தென்னக்***
***கொழுந்து ஒளி கஞலத் தூக்கி.***
***மதியினைத் தந்த மேகம்***
***மருங்கு நா வளைப்பதென்ன.***
***பொதி இருள் அளக பந்தி***
***பூட்டிய பூட்டும் இட்டார்.***

***விதியது வகையால் வானமீன் இனம் பிறையை வந்து கதுவுறுகின்றது என்ன*** - *கூடுதற்கரிய முறைப்படி வானத்து மீன் கூட்டம் பிறைத் திங்களைப் பற்றிக் கொள்வது போல;* ***கொழுந்து ஒளி கஞலத்தூக்கி*** - *சுட்டி என்னும் (விண்மீன்கள் வடிவினதாகிய) ஒளியுமிழும் அணியை (நெற்றியில்) தொங்க விட்டு;* ***மதியினைத் தந்த மேகம் மருங்கு நா வளைப்பது என்ன*** - *சந்திரன் என்னும் கன்றைப் பெற்ற மேகம் என்னும் தாய் தன் நாவால் (வெளிப்புறத்திலிருந்து கன்றைத் தடவ) நீட்டி வளைப்பது போல்;* ***பொதி இருள் அளக பந்தி பூட்டிய sபூட்டும் இட்டார்*** - *இருள் பொதிந்த முன் நெற்றி மயிரின் ஒழுங்கிலே பூட்டுதற்கு உரிய பூட்டு என்னும் ஆபரணத்தையும் பூட்டினர் (தோழியர்.)*

*சிறு விண்மீன் வரிசைபோன்று இணைந்து நெற்றிச் சுட்டி நெற்றியில் தொங்குவது. விண்மீன்கள் பிறையைக் கவ்வ வந்தது போன்றது என்றார். இறுதியடியிரண்டில். மேகம் தாய்க்கும். முகம் சந்திரனுக்கும். பூட்டு எனும் அணி தாயின் நாக்கிற்கும் உவமையாம். இது இல்பொருள் உவமை. நெற்றிச் சுட்டியை உச்சி வகிட்டில் இணைத்துப் பூட்டும் அணிபூட்டு. கூந்தல் தாய்ப்பசு போலவும். நெற்றிச்சுட்டி தாயின் கன்று போலவும். இவற்றை இணைக்கும் பூட்டு. தாய்ப்பசுவின் நாக்குப் போலவும் இருந்தன என்க.*

*குழை யணிதல்*

***1122.***

***‘வெள்ளத்தின் சடிலத்தான்தன்***
***வெஞ் சிலை இறுத்த வீரன்***
***தள்ளத் தன் ஆவி சோர.***
***தனிப் பெரும் பெண்மைதன்னை***
***அள்ளிக்கொண்டு அகன்ற காளை***
***அல்லன்கொல்? ஆம்கொல்? என்பாள்’***
***உள்ளத்தின் ஊசலாடும்***
***குழை நிழல் உமிழ இட்டார்.***

***வெள்ளத்தின் சடிலத்தான்தன் வெஞ்சிலை இறுத்த வீரன்*** - *கங்கை நீர் வெள்ளத்தைத் தன் சடையிலே தரித்துள்ள சிவபெருமானது வலியவில்லை ஒடித்த வீரன்;* ***தன் ஆவி சோரத்தள்ள தனிப் பெரும் பெண்மைதன்னை*** - *தனது உயிர் சோருமாறும் (உடல்) தளர்ந்து போகுமாறும் ஒப்பற்ற தன் பெண்தன்மையை;* ***அள்ளிக் கொண்டு அகன்ற காளை அல்லன் கொல் ஆம்கொல் என்பாள்*** - *கவர்ந்து கொண்டு அகன்ற (கன்னிமாடத்திலிருந்து நான் பார்த்த) இளைஞன் அல்லனோ? அவ்விளைஞனே தானோ? என்று ஐயுறும் சீதையினுடைய;* ***உள்ளத்தின் ஊசல் ஆடும் குழை நிழல் உமிழ விட்டார்*** - *மனம் (அலைந்து தவிப்பது) போல. அசைகின்ற குழை என்னும் காதணிகளை ஒளியுமிழுமாறு சீதையின் காதுகளில் (தோழியர்) பூட்டினர்.*

*வில் ஒடித்த வீரன். கன்னி மாடத்தில் தன் கண்வழி நுழைந்து இதயத்தில் நிறைந்துள்ள அவனே என்பதனைத் தெளிவாக அறியாமையால். சீதை தவித்த தவிப்பினை உணர்த்துவதற்கு. கவிஞர் பிரானுக்கு. காதணியின் அசைவு போதுமானதாயிற்று. இந்த ஐயம் விடற்காக "கைவளை திருத்துபு கடைக்கணின் உணர்வதாக" (கம். 1153) மேலே கூறுவார். "தள்ளத்தன் ஆவிசோர" என்பதனை. "தன் ஆவி சோரத் தள்ள" எனக்கூட்டுக. இராமன். சீதை பெண்மையினை அள்ளிக்கொண்டு போனதை. "சிந்தையும் நிறையும் மெய்ந்நலனும் பின்செல. மைந்தனும் முனியொடு மறையப் போயினான்." (கம்ப. 518) என முன்பு கூறினார். சடிலம் - சடை.*

*கழுத்தணி யணிதல்*

***1123. கோன் அணி சங்கம் வந்து***
***குடியிருந்தனைய கண்டத்து.***
***ஈனம் இல் கலங்கள் தம்மின்***
***இயைவன அணிதல் செய்தார்;***
***மான் அணி நோக்கினார்தம்***
***மங்கலக் கழுத்துக்கு எல்லாம்***
***தான் அணி ஆன போது.***
***தனக்கு அணி யாது மாதோ?***

***கோன் அணி சங்கம் வந்து குடியிருந்து அனைய கண்டத்து*** *- தலைவனான திருமால் தாங்கும் சங்கு (இங்கு) வந்து குடியிருந்தாற் போன்ற (சீதையின்) கழுத்தில்;* ***ஈனம் இல் கலங்கள் தம்மில் இயைவன அணிதல் செய்தார்*** *- குற்றமற்ற ஆபரணங்களில் பொருந்துவனவற்றைப் பூட்டினார்கள்;* ***மான் அணி நோக்கினார் தம் மங்கலக் கழுத்துக்கு எல்லாம்*** *- மானின் விழிகளையுடைய (உலகத்து) மங்கையர் மாங்கலிய நாணோடு கூடிய கழுத்துகளுக்கு எல்லாம்;* ***நான் அணி ஆனபோது*** *- (திரு என்னும் அடையோடுகூடித் திருமாங்கல்யம் என்று) தானே ஓர்ஒப்பற்ற அலங்காரமாயிருக்கும்போது;* ***தனக்கு அணியாது*** *- தன் கழுத்துக்கு ஏற்ற அணியாவது எது? (ஒன்றும் இல்லை.)*

*சீதையின் கழுத்துக்கு அழகுதரும் சிறப்புடைய அணிகள் உலகில் எதுவும் இல்லையாயினும். தோழியர் உலக முக்குக்கேற்ப இருப்பனவற்றில் சிறப்புளவற்றைப் பூட்டினர் என்க. பிராட்டியின் அவதாரம் இலக்குமியாகிய திருவின் அவதாரமாதலின். உலகத்து மகளிர் கழுத்தில் அணியும் "திரு"மாங்கலியம். ஆக இருக்கும் இவள் கழுத்திற்கு யாரால் தகுந்த அணி அணிய இயலும் என்று வியந்தவாறு ஒரு பெண். மணங்கொள்ளுங் காலை. அவள் பொன்னும் பொருளும் வாழ்க்கையின் புனிதத் தன்மையும் அப்பொழுதுதான் அவள் அடைகின்றாள் ஆதலின். திருமகள் அவளை அப்பொழுது தான் வந்து அடைகிறாள் எனக்கருதி. மணத்திற்குத் திருமணம் எனப் பெயரிட்டனர் முன்னோர். அவளுக்கு அவன் அடையாளமாகப் பூட்டும் மங்கல நாணிற்கு. "திரு" என்று பெயர் இட்டனர். மாங்கல்யம் சூட்டுதலை. "திருப்பூட்டு" என்று இன்றும் வழங்குவர். இவற்றையெல்லாம் கருத்துட் கொண்டு. "மான் அணி நோக்கினார் தம் மங்கலக் கழுத்துக்கெல்லாம் தான் அணி ஆனது" என்றார். இவளே எல்லாப் பெண்கள் கழுத்துக்குள் "திருமங்கலம்" ஆம் போது. இவள் கழுத்திற்கு எதைப் பூட்டுவது என வியந்தார். சீதை திருமணச் சடங்கில் மாங்கலியம் தரித்தது கூறப்பட வில்லையே எனும் வினாவிற்கு விடைதருவார் போல. மகளிர் கழுத்துக்கெல்லாம். "தான் அணி ஆனபோது. தனக்கு அணியாது?" என்று வியந்தார்.*

*முதனூலில். திருமாங்கலிய தாரணம் குறிக்கப்படவில்லையாயினும். கம்பர்பிரான் காலத்தில் அது வழக்கிலிருந்தது எனக் குறிப்பிப்பார் போல. "மற்றைநல் அணிகள் காண் உன் மங்கலங் காத்தது" (கம்ப. 5262) எனக் குறிப்பிப்பார். "மங்கல அணியை நீக்கி மணியணி துறந்து" (கம்ப. 4320) எனத் தாரையைக் குறிப்பார்.*

*"ஈகையரிய இழையணிமகளிர் (புறம். 127) எனும் புறப்பாட்டின் தொடருக்கு. "பிறிதோர் அணிகலமுமின்றிக் கொடுத்தற்கரிய மங்கலிய சூத்திரத்தை யணிந்த மகளிர்" என அதன் உரையாளர் வரைந்த உரையும். "மங்கல அணியிற் பிறிதணி மகிழாள்" (சிலப். அந்தி: 50) எனும் சிலம்பின் தொடரும் இங்கு நினைவு கூரத்தக்கன.*

*முத்த மாலை யணிதல்*

***1124.***

***கோண் இலா வான மீன்கள்***
***இயைவன கோத்தது என்கோ?***
***வாள் நிலா வயங்கு செவ்வி***
***வளர் பிறை வகிர்ந்தது என்கோ?***
***நாணில் ஆம் நகையில் நின்ற***
***நளிர் நிலாத் தவழ்ந்தது என்கோ?-***
***பூண் நிலாம் முலைமேல் ஆர***
***முத்தை - யான் புகல்வது என்னோ?***

***பூண்நிலாம் முலைமேல் ஆரமுத்தை*** - ஆபரணங்கள் உலாவும் சீதையின் தனங்களின் மேல் உள்ள முத்துமாலையை; **கோண் இலா வானமீன்கள் இயைவன கோத்தது என்கோ?** - கோணுதல் இன்றித் தத்தமக்குரிய வானப்பாதைகளில் உலாவும் விண்மீன்களில் பொருந்துவனவற்றை எடுத்துக் கோத்தது (இது) என்பேனோ?; **வாள்நிலா வயங்கு செவ்வி வளர்பிறை வகிர்ந்தது என்கோ** - ஒளி நிலவும் அழகுத்தோற்றமுடைய வளர்பிறைச் சந்திரனைத் துண்டாக்கிச் செய்யப்பட்டது (இது) என்பேனோ?; **நாணில் ஆம் நகையில் நின்ற நளிர் நிலாத் தவழ்ந்தது என்கோ?** - பலரும் நிறைந்த சபையில் இராமனைக் காண (பிராட்டி) நுழைய வேண்டியிருப்பதனால். அவள் முகத்தில் எழுந்த நாணம் கலந்த புன்னகையில் பொருந்திய செறிந்த வெளிச்சம் தவழ்ந்த கோலம் (இது) என்பேனோ?; **யான் புகல்வது என்?** - நான் என்ன வென்று வண்ணிப்பேன்?

*முத்து வெண்மை நிறத்தது ஆதலின். உயர்வெண்மை நிறத்தவற்றையெல்லாம் உவமித்தார். மூன்றாம் அடியின் வர்ணனை உயர் கவிகளுக்கே உரிய ஒன்று. அவையோரைக்காண இருப்பதால் வெட்கமும். இராமனைக்காண இருப்பதால் புன்னகை தவழும் முகத்தை மனக்கண்ணால் காணவைக்கிறார். குனிந்து நிற்கும் அவள் புன்னகை வெளிச்சம் அவள் மார்பின்மேல் முத்து மாலையாகிக் கிடந்தது என்க. விண்மீன்கள் யாவும் ஒரு தன்மையன அல்ல ஆதலின். “வான்மீன்கள் இயைவன கோத்த என்கோ?” என்றார். என்கோ - என்பேனோ? - தன்மை ஒருமை வினைமுற்று வினாவில் வந்தது. நான்கு ஓகாரங்களும் கவிஞர் பிரானின் தவிப்பை யுணர்த்தின.*

***1125.***

**மொய் கொள் சீறடியைச் சேர்ந்த**
**முளரிக்கும் செம்மை ஈந்த**
**தையலாள் அமிழ்த மேனி**
**தயங்கு ஒளி தழுவிக்கொள்ள.**
**வெய்ய பூண்முலையில் சேர்ந்த**
**வெண் முத்தம் சிவந்த; - என்றால்.**
**செய்யவர்ச் சேர்ந்துளாரும்**
**செய்யராய்த் திகழ்வர் அன்றே?**

**மொய்கொள் சீறடியைச் சேர்ந்த முளரிக்கும் செம்மை ஈந்த தையலாள்** - *செம்பஞ்சுக் குழம்பு முதலிய சாந்துகள் மொய்த்துக் கிடக்கின்ற (தனது) சிறிய அடிகளை (ஒப்பாக இயலாமல்) சரண் அடைந்த தாமரை மலர்களுக்கும். (தனது) அடிகளின் செம்மை நிறத்தைக் கொடுத்துள்ள சீதையினுடைய;* **அமிழ்தமேனி யங்குஒளி தழுவிக்கொள்ள** - *அமுதம் போன்று அரிய செந்நிறத் திருமேனியிலே விளங்குகின்ற செம்மை நிற ஒளி. (தம் மேலே) வந்து படுதலால்;* **வெய்ய பூண்முலையில் சேர்ந்த வெண் முத்தம்சிவந்த என்றால்** - *விருப்பத்தை நல்கும் அணிகள் அணிந்த மார்பகங்களில் பொருத்தியுள்ள வெண்ணிறம் அமைந்த முத்துக்களும் செந்நிறம் அடைந்தன என்றால்;* **செய்யவர்ச் சேர்ந்துளாரும் சய்யராய்த் திகழ்வர் அன்றே?** - *செம்மைக் குணம் பொருந்தியவரைச் சேர்ந்தவகளும் செம்மைக் குணம் பெற்றுத் திகழ்வார்கள் (என்பது உண்மை) அன்றோ?*

*திருமகளின் திருவடிக்கீழ் இருக்கும் தாமரை. செந்தாமரையாய் இருப்பதற்குக் கற்பித்துக் கூறிய திறம் அழகியது. வெண்முத்தம் சேர்க்கையால். செய் முத்தம் ஆனாற்போல். மக்களும் சேர்க்கையின் உயர்வால் சிறப்புறுவர் என்றவாறு. வேற்றுப் பொருள் வைப்பணி. "நிலத்து இயல்பால் நீர் திரிந்து அற்றாகும்; மாந்தர்க்கு இனத்து இயல்பது ஆகும் அறிவு" (திருக். 452) இங்கு நினைவு கூரற்பாலது.*

*செய்யர் - செம்மையான பண்புடையவர்கள். "மொய்கொள் சீறடியயைச் சேர்ந்த முளரிக்கும் செம்மை ஈந்த தையலாள் அமிழ்த மேனி" என்பதனோடு. "அழலாடி அங்கை சிவந்ததோ அங்கை அழகால் அழல் சிவந்த வாறோ?" (அற்புதத் திருவந். 98) எனும் காரைக்கால் அம்மையார் திருவாக்கையும். முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ? அடிச்சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ? (திருவாய் : 3:1:1) என்றும் நம்மாழ்வார் திருவாய் மொழிப் பாசுரத்தையும் ஒப்பிடுக.*

***1126.***

**கொமை உற வீங்குகின்ற**
**குலிகச் செப்பு அனைய கொங்கைச்**
**சுமை உற நுடங்குகின்ற**
**நுசுப்பினாள் பூண் செய் தோளுக்கு.**
**இமை உற இமைக்கும் செங் கேழ்**
**இன மணி முத்திேனாடும்**
**அமை உற அமைவது உண்டு ஆம்**
**ஆகின். ஒப்பு ஆகும் அன்றே.**

***கொமை உற வீங்குகின்ற குலிகச் செப்பு அனைய கொங்கை*** - திரட்சியமையப் பூரித்திருக்கிற இங்குலிகச் செப்புகளைப் போன்றுள்ள மார்பகங்களின்; ***சுமை உற நுடங்குகின்ற நுசுப்பினாள்*** - கனம் மிகுதலால். துவண்டு வருந்தும் இடையினையுடைய சீதையினது; ***பூண்செய் தோளுக்கு இமையுற இமைக்கும் செங்கேழ் இன மணி முத்தினோடும்*** - தக்க அணிகளை யணிந்த தோள்களுக்கு (காண்பார் கண்களைத் தம் ஒளியால் கூசச் செய்து) (அவர்கள்) இமைகளை மூடச் செய்ய வல்ல ஒளியுமிழும் சிவந்த நிறத்தோடு கூடிய கூட்டமான பதுமராகக் கற்களோடும் முத்துக்களோடும்; ***உற அமைவது அமை உண்டு ஆம் ஆகின். ஒப்பு ஆகும்*** - பொருந்தி அமைகின்ற மூங்கில்கள் உண்டாம் என்றால் அத்தகைய மூங்கில்களே சமமாக வல்லவையாம்.

*அமை - மூங்கில். பிறபெண்டிரின் தோளுக்கு உவமையாகும் மூங்கில். செம்பதுமராகக் கற்களும் முத்து மாலைகளும் அணிந்து வந்தால்தான் சீதையின் தோளுக்கு உவமையாம் என்பதாம். இல் பொருள் உவமையணி. சீதையின் தோள்கட்குப் பதுமராகக் கற்கள் பதித்த அணிகளையும். முத்து மாலைகளையும். அணிந்தனர் என்பது கருத்து. மகளிர் தோள்களுக்குக் கணுக்கள் அற்ற மூங்கிலை உவமை கூறல் கவிமரபு. "வேயடித் திரண்ட மென்றோள்" (சீவ. 2923) "ஆடமைத் தோள் நல்லார்". (நன்னூல் பொதுப்பா.) என வருதல் காண்க.*

*கைக் கடகம் அணிதல்*

***1127. "தளை அவிழ் கோதை ஓதிச்***
***சானகி தளிர்க்கை என்னும்***

***-left: 10">***
***முளரிகள். இராமன் செங் கை***
***முறைமையின தீண்ட நோற்ற;***
***அளியன; கங்குல் போதும்***
***குவியல ஆகும்' என்று. ஆங்கு.***
***இள வெயில் சுற்றியன்ன***
***எரி மணிக் கடகம் இட்டார்.***

***தளை அவிழ் கோதை ஓதிச் சானகி தளிர்க்கை என்னும் முளரிகள்*** - *இதழ்களின் கட்டவிழ்ந்த மலர்மாலைகளை யணியும் கூந்தலையுடைய சீதையின் தளிர் போன்ற மென்மையுடைய கைகள் ஆகிய செந்தாமரை மலர்கள்;* ***இராமன் செங்கை முறைமையின் தீண்ட நோற்ற அளியன*** - *இராம பிரானுடைய சிவந்த கைகளால் சாத்திர முறையின்படி தீண்டப்படுவதற்கு. தவம் (மிகச்) செய்துள்ளன. (இராமபிரானது) அன்புக் குரியன;* ***கங்குல் போதும் குவியல ஆகும் என்று ஆங்கு*** - *(அத்தாமரைகள்) இரவுப் பொழுதில் குவிந்தால் இராமபிரானது அன்பினையிழக்க நேருமோ என்று இரவுப் பொழுதிலும் அவை குவியாதிருக்க வேண்டும் என்று அக்கைகளிலே;* ***இளவெயில் சுற்றியன்ன எரிமணிக் கடகம் இட்டார்*** - *(சூரிய ஒளியிருப்பின் தாமரைகள் குவியா ஆதலால்) (கதிரவன்) இளவெயிலைச் சுற்றிக் கட்டினாற்போன்று ஒளிவிடும் பதுமராக மணிக்கறக்கள் பதித்த கடகம் என்னும் அணியினைத் (தோழியர்) இட்டனர்.*

*இரவும் பகலும் வியாத் தாமரைக் கைகளாகச் சீதை கரங்களை ஆக்கினர் என்க. இராமனைச் சூரியன் ஆகவும் சீதை கைகளைத் தாமரைகளாகவும் உருவகித்தார். கங்குற்போதும் குவியாத தாமரை - இல்பொருள் உவமை. கடகம் இருபாலர்க்கும் உரிய கையணி எனத் தெரிகிறது. "கங்கைக்கு இறைவன் கடகக்கை புடைத்து நக்கான்" (கம்ப. 1718) என இலக்குவனுக்கும் "கடகக்கை" கூறப்பெற்றித்தல் காண்க. 11*

***1128. சில் இயல் ஓதி கொங்கைத்***
***திரள் மணிக் கனகச் செப்பில்.***
***வல்லியும் அனங்கன் வில்லும்***
***மான்மதச் சாந்தின் தீட்டி.***
***பல் இயல் நெறியின் பார்க்கும்***
***பரம் பொருள் என்ன. யார்க்கும்.***
***'இல்லை.' 'உண்டு'. என்ன நின்ற***
***இடையினுக்கு இடுக்கண் செய்தார்.***

***சில் இயல் ஓதி கொங்கைத் திரள் மணிக் கனகச் செப்பில்*** - *சில வகைகளாக வகுத்து அலங்கரிக்கப்படும் கூந்தலையுடைய சீதையின் தனங்களாகிய திரண்ட மணி பதிக்கப்பட்ட பொற்செப்புக்களில்;* ***வல்லியும் அனங்கன் வில்லும் மான் மதச் சாந்தின் தீட்டி*** - *பூங்கொடிகளையும். மன்மதனது வில்லாகிய கரும்புகளையும் கத்தூரி. சந்தனக் குழம்புகளால் (ஓவியமாக) எழுதி;* ***பல்இயல் நெறியில் பார்க்கும் பரம்பொருள் என்ன*** - *பலவகையான (சமய) நெறிகளால் பலவாறாகப் (உண்டு. இல்லை யென்று) பார்க்கப்படுகிற பரம் பொருளாகிய கடவுளின் வடிவத்தினைப் போல;* ***யார்க்கும் இல்லை. உண்டு என்ன நின்ற இடையினுக்கு இடுக்கண் செய்தார்*** - *உண்டோ இல்லையோ என்று யாவர்க்கும் ஐயம் உண்டாம் படியிருக்கிற (சீதையின்) மெல்லிய இடைக்கு (ஓவியம் எழுதி) மேலும் வருத்தத்தைத் (தோழியர்) விளைவித்தனர்.*

*உண்டோ இல்லையோ என்று இடை ஐயப்படுமாறு கூறப்படினும் இடையென்று என்று இருப்பது யாவர்க்கும் ஐயத்திற் கிடமில்லாத் துணி பொருள் ஆதல்போல. இல்லையோ. உண்டோ எனப் பல்வகையால் ஐயுறப்படும் பரம்பொருளும் ஐயத்திற்கிடமில்லாத் துணி பொருளாய் உள் பொருளே என உவமையால் பெற வைத்த அருமையினை ஓர்ந்துணர்க. "அன்றே என்னின் அன்றே ஆமே. ஆம் என்னின் ஆமே யாம்" (கம்ப. 6059) என்று உரைத்து. அன்றெனவும் ஆம் எனவும் கூறப்பட ஆம் ஒருபொருள் உண்டு என மேலும் உரைப்பார். "தொட்ட எற்கு உணரலாம் மற்று உண்டெனும் சொல்லும் இல்லை" (கம்ப. 4484) என்பான் இராமபிரான். "கண்கொளா நுடங்கு இடையை உண்டெனத் தமர் மதிப்பர்; நோக்கினார் பிறர் எல்லோரும் உண்டு இல்லையென ஐயம் அல்லது ஒன்று உணர்வு அரிதே" (சீவக. 172)12*

## மேகலையும் தாரகைச் சும்மையும் அணிதல்

***1129.*** **நிறம் செய் கோசிக நுண் தூசு**
**நீவி நீவாத அல்குல் -**
**புறம் செய் மேகலையின் தாழத்**
**தாரகைச் சும்மை பூட்டி.**
**திறம் செய் காசு ஈன்ற சோதி**
**பேதை சேயொளியின் சேந்து**
**கறங்குபு திரிய. தாமும்**
**கண் வழுக்குற்று நின்றார்.**

***நிறம் செய் கோசிக நுண்தூசு நீவி நீவாத அல்குல்*** *- வண்ணம் பொருந்திய பட்டாகிய மிக மெல்லிய ஆடையின் கொய்சகத்தை நீங்காத இடைக்கு;* ***புறம்செய் மேகலையின் தாழத் தாரகைச் சும்மை பூட்டி*** *- வெளியே (அழகு) செய்கின்ற மேகலை என்னும் அணியையும். அதன் கீழ்ப்பட. தாரகைச் சும்மை என்னும் மணிவடத் தொகுதியையும் (தோழியர்) அணிவித்து;* ***திறம்செய்காசு ஈன்ற சோதி*** *- (அந்த அணிகலன்களிலிருந்து) எழுகின்ற பல்வகைப்பட்ட மணிகள் வெளிவிட்ட ஒளி வெள்ளம்;* ***பேதை சேய் ஒளியின் சேந்து*** *- சீதையினது சிவந்த உடல் ஒளியோடு சேர்ந்து சிவந்து;* ***கறங்குபு திரிய. தாமும் கண் வழுக்குற்று நின்றார்*** *- சுற்றிச் சுழன்று உலாவ (அணி செய்து கொண்டிருந்த தோழியர்) தாமும் (கலப்பு ஒளியின் மிகுதியினால்) கண் கூச்சமுற்று நின்றார்கள்.*

*தாரகைச் சும்மை - நட்சத்திரங்களின் கூட்டம் போல் வடிவமைந்து முத்துக்களால் ஆகிய ஓர் இடையணி. அணிவிப்பாரையே ஒளியால் அயரவைக்கும் ஆபரணங்கள் என்றவாறு. "கதிர் முத்தம் இடம் தொறும் கிடந்து இமைப்பன எக்கு இளஞ் செக்கர் படர்ந்த வான் இடைத் தாரகை நிகர்ப்பன பாராய்" (கம்ப. 2072) எனும் இடத்தில் முத்துக்களுக்கு. தாரகைகளை உவமித்துள்ளது காண்க. நீவி - கொய்சகம். கோசிகம் - பட்டு. "கோசிகத் துகில் உற்ற கொழுங்கனல்" (கம்ப. 5967) என்பார் மேலும் கண் கூசுதலைக் "கண் வழுக்குறுதல்" என்பது அரிய சொற் பிரயோகம்.*

*சிலம்பு அணிதல்*

***1130. ஐய ஆம் அனிச்சப் போதின்***
***அதிகமும் நொய்ய. ஆடல்***
***பை அரவு அல்குலாள்தன்***
***பஞ்சு இன்றிப் பழுத்த பாதம்;***
***செய்ய பூங் கமலம் மன்னச்***
***சேர்த்திய சிலம்பு. 'சால***
***நொய்யவே; நொய்ய' என்றோ.***
***பலபட நுவல்வது? அம்மா!***

***பை அரவு அல்குலாள் தன் பஞ்சின்றிப் பழுத்த பாதம்*** - *பாம்பின் படம் அனைய அல்குலையுடைய சீதையினது. செம்பஞ்சுக் குழம்பு ஊட்டப்படாமலேயே (சிவப்பு) முற்றிய திருவடிகள்;* ***ஐய ஆம் அனிச்சப் போதின் அதிகமும் நொய்ய*** - *(மலர்களிலேயே மிக) மென்மையதாகிய அனிச்சமலரினும் மிகவும் மென்மையான;* ***செய்ய பூங் கமலம் மன்னச் சேர்த்திய சிலம்பு பலபட நுவல்வது*** - *செந்தாமரை மலர் போன்றுள்ள அந்த மெல்லிய பாதங்களில் நிலைத்திருக்கத் (தோழியர்) சேர்த்திய அச்சிலம்பென்னும் காலணிகள். பலுமுறை (இடைவிடாது) ஒலிப்பது;* ***சால நொய்யவே நொய்ய என்றோ?*** - *(பிராட்டியின் திருவடிகள்) மிகவும் மெல்லியன! ஓ மிகவும் மெல்லியன (அறிந்து செயல்படுங்கள்) என்று அறிவிப்பது தானோ?*

*அம்ம - வியப்பிடைச்சொல். தற்குறிப்பேற்றவணி. சிலம்பின் ஒலிக்குப் புதுப்பொருள் கற்பித்தவாறு. மெல்லிய அனிச்ச மலரினும் மெல்லியன மகளிர் பாதம் என்பதனை. "அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம்" (திருக். 1120) எனும் திருக்குறளும் கூறும். பொருளின் மென்மை புரியாமல். அன்பு காரணமாகப் பெருஞ்சுமை யேற்றித் துன்பம் விளைத்து விடாதீர்கள் என்று கூறுவதாகச் சிலம்புகள் ஒலித்தமைக்கு அழகிய காரணம் கற்பித்தார். "மோப்பக் குழையும் அனிச்சம்" (திருக். 90) எனுமிடத்தே. அனிச்சத்தின் மென்மை குறித்திருப்பதையுணர்க.*

## விழிகட்கு மையிடுதல்

*1131.*

***நஞ்சினோடு அமுதம் கூட்டி***
***நயனங்கள் ஆன என்ன.***
***செஞ்செவே நீண்டு. மீண்டு.***
***சேயரி சிதறி. தீய***
***வஞ்சமும் களவும் இன்றி.***
***மழை என மதர்த்த கண்கள்.***
***அஞ்சன நிறமோ? அண்ணல்***
***வண்ணமோ? அறிதல் தேற்றாம்.***

**நஞ்சினோடு அமுதம் கூட்டி நயனங்கள் ஆன என்ன** - *நஞ்சை இடையே வைத்துச் சுற்றிலும் அமுதினை வைத்து ஆனவை போன்றவை (பிராட்டியின்) கண்கள் என்று கூறுமாறு இருந்து;* **செஞ்செவே நீண்டு மீண்டு சேயரி சிதறி** *-கோணல் எதுவும் இன்றி. நேராகச் சென்று. திரும்பி. சிவந்த இரேகைகள் சிந்தப் பெற்று;* **தீய வஞ்சமும் களவும் இன்றி மழை என மதர்த்த கண்கள்** - *தீய வஞ்சனையும் கள்ளத்தனமும் இல்லாமல். மழை போலக் குளிர்ந்த சீதையின் கண்களில்;* **அஞ்சனநிறமோ? அண்ணல் வண்ணமோ? அறிதல்தேற்றாம்** - *(அப்பொழுது) தோழியர் இட்டது அஞ்சன வண்ணத்தையா? அல்லது இராமபிரானின் மேனி நிறத்தையா? எனத் தெளிவாக எம்மால் அறியக் கூடவில்லை.*

*உகந்தார்க்கு அமுதாகவும். உகவாதார்க்கு நஞ்சாகவும் அமைந்தன தேவியின் விழிகள். இராமனுக்கு அமுதாக இருந்த அவ்விழிகள். இராவணனுக்குத் "திட்டியின் விடம் (கம்ப.) ஆவதை உரைப்பதே இக்காவியம் ஆவது உணர்க. மேல் கன்னிமாடத்தில். அண்ணலும் நோக்கி. அவளும் நோக்கியபோது (கம்ப. 514). அவள் விழிகளில் அவன் கருமை நிறம் நிறைந்தது என நினைவூட்டுவார் போல. 'அண்ணல் வண்ணமோ?' எனக் கூறினார் எனலுமாம். மகளிர் விழிகளில் நஞ்சும் அமுதும் கலந்துள்ளன என்பதை. "நஞ்சும் அமிர்தமும் போல் குணத்த" (சீவக. 167) எனவும். "நஞ்சினும் கொடிய நாட்டம் அமிர்தினும் நயந்து நோக்கி" (கம்ப. 896) எனவும் வருவன காண்க. பிராட்டியின் கண்களின் அக அழகும் புற அழகும் இப்பாடலில் வருணிக்கப்பட்டுள்ள திறம் காண்க. இராமபிரானைத் தவிரப் பிறரிடத்தில் பொது நோக்கமே கொண்டு. சிறப்பு நோக்காகிய காதல் நோக்கு இல்லாமையை. "வஞ்சமும் களவும் இன்றி" என்பதனால் சுட்டினார். இராம பிரானைக் கன்னிமாடத்திற் கண்டபோதிருந்து. அவன் வடிவமும் வண்ணமுமே அவள் விழிகளில் நிறைந்து வழிந்தமையால் அவ்விழிகள் அவன் நிறம் பெற்றனவோ? என வியந்தார். "அவர்தம் நீல நிறத்தை எல்லோரும் நினைக்க. அதுவாய் நிரம் பியதோ?" (கம்ப. 546) என்பார் முன்னும். செஞ்செவே நீண்டு - கோணுதலின்றி நீண்டு. "செஞ்செவே கமலக்கையால் தீண்டலும்" (கம்ப. 896) என்பார் முன்பும். 15*

## திலகம் தீட்டுதல்

*1132.* ***மொய் வளர் குவளை பூத்த***
***முளரியின் முளைத்த. முந்நாள்***
***மெய் வளர் மதியின் நாப்பண்***
***மீன் உண்டேல். அனையது ஏய்ப்ப.***
***வையக மடந்தைமார்க்கும்.***
***நாகர் கோதையர்க்கும். வானத்***
***தெய்வ மங்கையர்க்கும். எல்லாம்.***
***திலகத்தைத் திலகம் செய்தார்.***

***மொய்வளர் குவளை பூத்த முளரியின் முளைத்த*** - *(இதழ்கள் மொய்த்துள்ள குவளை மலர்கள் இரண்டு பூத்துள்ள ஒரு தாமரைப் பூவினிடத்தே முளைத்துள்ள;* ***முந்நாள் மெய்வளர்மதியின் நாப்பண் மீன் உண்டேல் அனையது ஏய்ப்ப*** - *நாள்தோறும் வளர்கின்ற இயல்புடைய சந்திரனின் மூன்றாம் நாட் பிறையின் நடுவே ஒரு விண்மீன் ஒளிர்வது உண்டாயின் அதனை ஒக்கும்படி;* ***வையக மடந்தை மார்க்கும் நாகர் கோதையர்க்கும் வானத் தெய்வ மங்கையர்க்கும் எல்லாம்*** - *(இடையுலகாகிய) மண்ணக மங்கைமாரும். (கீழ் உலகாகிய) நாக உலக மங்கையரும் (மேல்உலகாகிய) வான் உலக மங்கையரும் ஆகிய மூவுலக மங்கையர் எல்லோர்க்கும்;* ***திலகத்தைத் திலகம் செய்தார்*** - *திலம் போலச் சிறந்து விளங்கும் பிராட்டியின் (நெற்றியில் தோழிமார்) திலகமிட்டு அழகு செய்தனர்.*

*தாமரையில் குவளை பூத்தது போன்றன. பிராட்டியின் முகத்தே விளங்கும் கண்கள்; தாமரையின் உதித்த மூன்றாம் பிறை போன்றது அவள் முகத்தே தோன்றும் நெற்றி. மூன்றாம் நாள் திங்களிடையே உதித்த விண்மீன் ஒன்று போன்றது அவள் நெற்றியில் இட்ட திலகம். மூவுலக மங்கையர் திலகத்துக்கு ஒரு திலகம் இட்டனர் என்க. "திலகத்தைத் திலகம் செய்தார்" - என்பது நினைக்க இனிக்கும் தொடர். மாகவிகட்கே வாய்ப்பது. "மடந்தை மார்களில் திலகமே!" (கம்ப. 2072) "வனிதையர் திலகத்தின் மனத்தின் மாண்பையோ?" (கம்ப. 5137) என மேலும் பிராட்டியை ஏத்துவார். குவளை பூத்த முளரி. மதியின் நாப்பண் மீன் - இல் பொருள் உவமைகள். நாப்பண் -நடு*

## மலர் பல சூட்டுதல்

*1133.*

***சின்னப் பூ, செருகும் மென் பூ,***
***சேகரப் போது. கோது இல்***

கன்னப் பூ கஞல. மீது.
கற்பகக் கொழுந்து மான
மின்ன. பூஞ் சுரும்பும் வண்டும்
மிஞிறும் தும்பிகளும் பம்ப.
புன்னைப் பூந் தாது மானும்
பொற் பொடி அப்பிவிட்டார்.*

**பூஞ்சுரும்பும் வண்டும் மிஞிறும் தும்பிகளும் பம்ப** - *அழகிய சுரும்புகளும். வண்டுகளும். மிஞிறுகளும். தும்பிகளும் மொய்க்குமாறு;* **சின்னப்பூ, செருகும் மென்பூ, சேகரப்போது. கோதுஇல் கன்னப் பூ கஞல** - *விடுபூவும். பின்னலில் செருகும் பூவும். தலைமுடி உச்சியிலே சூடற்குரிய பூவும். குற்றமற்ற காதுகளிலே வைக்கத்தக்க பூவும் (என்னும் இவற்றை) அங்கங்கே விளங்குமாறு வைத்து;* **மீது கற்பகக் கொழுந்து மான மின்ன** - *அவற்றின் மேலே. கற்பகவிருட்சத்தின் தளிர்கள் மின்னுவது போல மின்னுமாறு;* **புன்னைப் பூந்தாது மானும் பொற் பொடி அப்பிவிட்டார்** - *புன்னைமலர்களின் மகரந்தப் பொடிகளை ஒக்கின்ற பொற் பொடிகளை எடுத்துத் (தோழியர்) அப்பிவிட்டனர்.*

*சுரும்பு. வண்டு. மிஞிறு. தும்பி என்பவை வண்டின் இனங்கள். "காவில் வாழ்பவர் நால்வருளர்" (சீவக. 891) என்று தேவரும் கூறுவார். மான -ஒப்ப உவம உருபு. கஞலல் - ஒளிர்தல்.*

## அயினி சுற்றிக் காப்பிடுதல்

*1134.*

நெய் வளர் விளக்கம் ஆட்டி.
நீரொடு பூவும் தூவி.
தெய்வமும் பராவி. வேத
பாரகர்க்கு ஈந்து. செம் பொன்
ஐயவி நுதலில் சேர்த்தி.
ஆய் நிற அயினி சுற்றி.
கை வளர் மயில் அனாளை
வலம் செய்து. காப்பும் இட்டார்.

***நெய்வளர் விளக்கம் ஆட்டி*** - *(அணிசெய்து முடித்த தோழியர். பிராட்டிக்குக் கண்ணேறு படும் என்று) நெய் நிறைந்த விளக்கொளியைச் சுற்றிக்காட்டி. நீரொடு பூவும் தூவி - புனித நீரினோடு கூடிய பூக்களையும் முன்னால் இறைத்து;* ***தெய்வமும் பராவி வேத பாரகர்க்குச் செம்பொன் ஈந்து*** - *தெய்வத்தினையும் வழிபட்டு வேதங்களைக் கரைகண்டறிந்த அந்தணாளர்க்குச் செம்பொன் தானம் அளித்து;* ***ஐயவி நுதலில் சேர்த்தி. ஆய்நிற அயினிசுற்றி*** - *சிறுவெண் கடுகின் பொடிகளை நெற்றில் தீற்றி. ஆராய்ந்தெடுத்த செந்நிற ஆலத்தி நீரைச சுழற்றி;* ***கைவளர் மயில் அனாளை வலம் செய்து காப்பும் இட்டார்*** - *கைகளினால் எடுத்து வளர்க்கப்பட்ட மயிலைப் போன்ற பிராட்டியை வலப்புறஞ் சுற்றிக் காப்பு நாணையும் இட்டனர்.*

*அயினி - செஞ்சோறு. ஆகு பெயராய் அதனோடு சேர்ந்த ஆலத்தி மஞ்சள் நீரையும் குறித்தது. வெண்சிறு கடுகினை அப்புதல் தொல் மரபு. கானில் வளர்கின்ற மயில்கள் உண்டு; இது. சனகன் கரங்களில் வளர்ந்த மயில் என்பார். "கைவளர் மயில் அன்னாளை" என்றார். கண்ணேறு கழிக்கும் பழைய மரபினைத் தொகுத்து உரைத்தவாறு. ஆலத்தி நீரில் கையைத் தோய்த்து நெற்றியில் அதைக் கொண்டு பொட்டிடுதலைக் காப்பிடுதல் என்பர்.*

## ***சீதையின் அழகில் மங்கையர் மயங்கல்***

***1135. கஞ்சத்துக் களிக்கும் இன் தேன்***
***கவர்ந்து உணும் வண்டு போல.***
***அம் சொற்கள் கிள்ளைக்கு எல்லாம்***
***அருளினாள் அழகை மாந்தி.***
***தம் சொற்கள் குழறி. தம்தம்***
***தகை தடுமாறி நின்றார்-***
***மஞ்சர்க்கும். மாதரார்க்கும்.***
***மனம் என்பது ஒன்றே அன்றோ?****

***கஞ்சத்துக் களிக்கும் இன்தேன் களித்து உணும் வண்டு போல*** - *தாமரை மலரிலிருந்து களிப்பையுண்டாக்கும் தேனைக் கவர்ந்து உண்டு (மகிழும்) வண்டுகளைப்போல;* ***அம் சொற்கள் கிள்ளைக்கு எல்லாம் அருளினாள் அழகை மாந்தி*** *- (சீதைக்கு அணி செய்த மாதர்கள்) அழகிய சொற்களைக் கிளிகளுக்கெல்லாம் கற்பித்தருளிய அப்பிராட்டியினது அழகைப் பருகி;* ***தம் சொற்கள் குழறித் தம்தம் தகை தடுமாறி நின்றார்*** *- (அந்த அழகு எனும் மது தந்த மயக்கத்தால்) தங்களுடைய சொற்கள் (இயல்பான) நிலையிலிருந்து குழறவும். தங்கள் தங்களது இயற்கையான (நாணம் முதலிய) பெண்மையின் குணங்கள் மாறு படவும் நின்றார்கள்;* ***மஞ்சர்க்கும் மாதரார்க்கும் மனம் என்பது ஒன்றே அன்றோ!*** *- (இம் மண்ணுலகில்) ஆடவர்களுக்கும். மகளிர்க்கும் (வடிவு வேறுபடினும்) மனம் என்பது ஒருதன்மையதே அன்றோ!*

*மது ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒரு தன்மைத்தாகவே நிலை வேறுபாட்டை விளைவிக்கும்; சீதையின் அழகும் மதுவும் ஆண்கட்கு உண்டாக்கும் அதே நிலையினை மகளிர்க்கும் உண்டாக்கிற்று எனக் கூறி. சீதையின் அழகின் பேரெல்லையையும். மதுவின் வெறியினையும் ஒருங்கே விளக்கியவாறு. வேற்றுப் பொருள் வைப்பணி. "கண்களிற் காணவே களிப்பு நல்கலால் மங்கையர்க்கு இனியதோர் மருந்துமாய்" (கம்ப. 512) என்றார் முன்னும். "ஆண் விருப்புற்று நின்றார் அவ்வளைத் தோளினாரே" (சீவக. 2447) என்பார்தேவரும். மஞ்சர் - மைந்தர்; போலி. கிளியின் மொழிகளில் உள்ள இனிமை இந்தக் கிளி அங்கே கிளிகட்கும் கொடுத்த பிச்சை என்பார். "அஞ் சொற்கள கிள்ளைக்கெல்லாம் அருளினாள்" என்றார்.*

*காவியம் நெடுகிலும் உளநூற் கருத்துக்களை. இயலும் இடமெல்லாம் தெளித்துச் செல்வது கவிஞர் பிரானின் சிறப்புக்களுள் ஒன்றாகும். ஆணுக்கும் பெண்ணுக்கும் உடல் வேறுபாடு உண்டே தவிர. மனச்சிந்தனைகளில் வேறுபாடு இல்லை என்கிறார் இங்கு. உயிர்கள் அழகால் ஈர்க்கப்படுதல் ஆண் பெண் வேறுபாடின்றி நிகழும் ஒரு பொது இயல்பு ஆகும் என்பார். மஞ்சர்க்கும் மாதரார்க்கும் மனம் என்பது ஒன்று என்பது. சீதையின் அழகை மாந்தித் தோழியர் தம்தகை தடுமாறி நின்றதால் தெளிவாம் என்கிறார். பிராட்டியைக் கண்ட சூர்ப்பனகை. "கண்பிற பொருளில் செல்லா; கருத்தெனின் அஃதே; கண்ட பெண் பிறந்தேனுக்கு என்றால் என்படும் பிறருக்கு?" (கம்ப. 2781) என்பாள். இராமனைக் கோசிகர். "ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்! "(கம்ப. 362) என்பதும் காண்க. "பெண்டிரும் ஆண்மை வெஃகிப் பேதுறும் முலையினாள்" (சீவக. 587) என்பார் தேவரும். "ராகவா உன் வடிவு கண்டால் மன்மதனும் மடவாராக ஆதரஞ் செய்வன்" (திருவரங்கத் 60) என்பார் திவ்வியகவியும்.*

*"அஞ்சொற்கள் கிள்ளைக்கெல்லாம் அருளினாள்" என்பதனால். சீதையின் சொற்கள் கிளிமொழியினும் பலமடங்கு இனிமையில் உயர்ந்தவை என்றவாறாம். "தண்டமிழ் யாழினும் இனிய சொற்கிளியே" (கம்ப. 2073) என இராமனும் விளிப்பான்.*

***1136.*** **இழை குலாம் முலையினாளை.**
**இடை உவா மதியின் நோக்கி.**
**மழை குலாவு ஓதி நல்லார்.**
**களி மயக்குற்று நின்றார்-**
**உழை குலாம் நயனத்தார்மாட்டு.**
**ஒன்று ஒன்றே விரும்பற்கு ஒத்த**
**அழகு எலாம் ஒருங்கே கண்டால்.**
**யாவரே ஆற்றவல்லார்?**

***மழை குலாவு ஓதிநல்லார்*** - *கார் மேகம் போன்ற கரிய கூந்தலையுடைய சீதையின் தோழியர்;* ***இழைகுலாம் முலையினாளை இடை உவா மதியின் நோக்கி*** - *அணிகலன்கள் விளங்குகின்ற தனங்களையுடைய பிராட்டியை முழு மதியைப் பார்ப்பது போலப் பார்த்து;* ***களிமயக் குற்று நின்றார்*** - *களிப்பினால் மயக்கமுற்று நின்றனர்;* ***உழை குலாம் நயனத்தினார்மாட்டு ஒன்றொன்றே விரும்பற்கு ஒத்த*** - *(உலகில் உள்ள) மான்விழி பெற்ற மங்கையரிடத்தே ஒவ்வோர் உறுப்பே ஒவ்வொருவருக்கு விரும்புவதற் கேற்ற அழகுடையதாயிருக்கும்;* ***அழகு எலாம் ஒருங்கே கண்டால் யாவரே ஆற்ற வல்லார்*** - *(உலகில் உள்ள) அழகுகள் எல்லாவற்றையும் ஓரிடத்திலே காண நேர்ந்தால். யார்தாம் (உள்ளம்பறி கொடுக்காமல்) தாங்க வல்லவர்கள்? உலகத்து மங்கையர் எல்லோரையும் எல்லோரும் விரும்பாமைக்கும். பிராட்டியை எல்லோரும் விரும்புதற்கும் காரணம் கூறியவாறு. பிராட்டி அழகின் குவியல். சர்வாங்க சுந்தரி என்றவாறு. ஒவ்வோர் உறுப்பே அழகுடைய மங்கையரே. ஆடவரின் இத்தனை மோகத்துக்குக் காரணம் ஆவர் என்றால். அனைத்துறுப்புகளும் அழகு கொழிக்கும் சீதையின்மேல் உலகினர் பெருவிருப்பங் கொள்ளுதல் வியப்பன்று என்றவாறு. சீதை. எல்லா உறுப்பாலும் அழகியள் என்பதனை. "பெண்கள் ஆனார்க்குள் நல்ல உறுப்பெல்லாம் பெருக்கி ஈட்டி" (கம்ப.) என இராவணன். வாயாலும் உரைப்பார். "இருதிறத்தார்க்கும் செய்த வரம்பு இவர் இருவர்" (கம்ப. 2792) எனவும். " தெரிவை மார்க்கு ஒரு கட்டளையெனச் செய்த திருவே" (கம்ப. 2078) எனவும் வருவன காண்க.*

***1137.***

***சங்கம் கை உடைமையாலும்.***
***தாமரைக் கோயிலாலும்.***
***எங்கு எங்கும் பரந்து வெவ்வேறு***
***உள்ளத்தின் எழுதிற்றென்ன.***
***அங்கு அங்கே தோன்றலாலும்.***
***அருந்ததி அனைய கற்பின்***
***நங்கையும் நம்பி ஒத்தாள்;***
***நாம் இனிப் புகல்வது என்னோ?***

***சங்கு அம்கை உடைமையாலும்*** - *பாஞ்ச சன்னியம் என்னும் சங்கினை அழகிய (இடக்) கையில் ஏந்தியுள்ளமையாலும். (சங்கு வளையல்களைக் கைகளிற் கொண்டுள்ளமையாலும்);* ***தாமரைக் கோயிலாலும்*** - *(நினைப்பவர்) (உள்ளத்) தாமரையை இடமாகக் கொண்டிருத்தலாலும்); (செந்தாமரை மலரைத் தன் வாழிடமாகக் கொண்டிருந்தாலும்) ;* ***எங்கு எங்கும் பரந்து வெவ்வேறு உள்ளத்தின் எழுதிற்று என்ன அங்கு அங்கே தோன்றலாலும் -*** *எல்லா இடங்களிலும் பரவி. தனித்தனியாக. அவரவர் மனத்தில் எழுதியது போல. அவ்வவ்விடங்களில் தோன்றுவதாலும்;* ***அருந்ததி அனைய கற்பின்நங்கையும் -*** *அருந்ததி தேவியைப் போன்ற கற்பினையுடைய பிராட்டியும் ;* ***நம்பி ஒத்தாள் -*** *ஆடவரிற் சிறந்த இராமன் ஆகிய திருமாலுக்குச் சமமானாள் ;* ***நாம் இனிப் புகல்வது என்னோ?*** *- (இதனினும் சிறப்பாக) நாம் இனிப் பிராட்டிக்கு உவமை கூறுவது எவ்வாறு?*

*சீதைக்குப் பெண்குலத்தில் உவமை இல்லாமையால் புருட உத்தமனாகியவனையே தம் சாதுரியத்தால் உவமையாக்கி நிறுவினார். தலைவன் தலைவி இருவருக்கும் ஒருவர்க்கு ஒருவரை உவமை கூறுவதால். அழகு. குணம் முதலிய பொருத்தங்கள். சிறப்புகள் அனைத்திலும் உள்ள ஒப்புமை உணர்த்தப் படுகின்றமை ஓர்க. திருமாலுக்கு மட்டுமின்றி. இராமனுக்கும் திருக்கையில் இரேகையாகச் சங்கு உள்ளதை. ''சங்கு சக்கரக் குறியுள தடக்கையின்'' (கம்ப. 3859) எனச் சுட்டுவார் பின்னும். சிலேடையடியாக வந்த உவமையணி. உள்ளத் தாமரையைக் கோயிலாக உடைமை ''மலர்மிசை ஏகினான்'' (திருக்) எனும் திருக்குறளாலும். அதன் பரிமேலழகர் உரையாலும் உணரலாம். சங்குவளை அணிந்தகை; தாமரைப் பூவில் இருக்கை. எல்லார் உள்ளத்திலும் நினைக்கப்படுதல் ஆகியன பிராட்டிக்கும். பாஞ்சசன்னியம் ஏந்தல். அன்புடையார் இதய மலர்மிசை ஏகல். எங்கும் பரந்துள்ள வியாபகத்துவம் ஆகியன இராமனுக்கும் ஏற்பன வாதல் காண்க.*

*தோழிமார் புடை சூழச்சீதை மன்னர் வீற்றிருந்த மண்டபம்அடைதல்*

***1138.*** **பரந்த மேகலையும். கோத்த**
**பாத சாலகமும். நாகச்**
**சிரம் செய் நூபுரமும். வண்டும்.**
**சிலம்பொடு சிலம்பி ஆர்ப்ப.**
**புரந்தரன் கோற்கீழ் ஆனோர்**
**அரம்பையர் புடை சூழ்ந்தென்ன.**
**வரம்பு அறு சும்மைத் தீம் சொல்**
**மடந்தையர் தொடர்ந்து சூழ்ந்தார்.**

***பரந்த மேகலையும் கோத்த பாத சாலகமும்*** *- பரவின மேகலையாகிய இடையணியும். பாத சாலகம் எனும் காலணியும்;* ***நாக சிரம் செய் நூபுரமும்*** *- பாம்பின் தலைவடிவில் முகப்புடைய நூபுரம் என்னும் காலணியும்;* ***வண்டும். சிலம்பொடு சிலம்பி ஆர்ப்ப*** *- கைவளையல்களும். காற்சிலம்பும் ஒலித்து ஆரவாரமுண்டாக்க;* ***புரந்தரன் கோல் கீழ் ஆனோர் அரம்பையர் புடை சூழ்ந்து என்ன*** *- இந்திரன் ஆட்சிக்குட்பட்ட அரம்பை முதலிய தேவப் பெண்கள் பக்கங்களில் சூழ்ந்துவந்தாற் போல;* ***வரம்பு அறு சும்மைத் தீம் சொல் மடந்தையர் மருங்கு சூழ்ந்தார்*** *- அளவு கடந்தவர்களாய். இனிய ஒலிக் குதலைச் சொல்லினராய். தோழிப் பெண்கள் பலர். பிராட்டியின் மருங்கே இடையீடின்றிச் சூழ்ந்து சென்றனர்.*

*பாத சாலகம். நூபுரம். சிலம்பு - கால் அணி இனங்கள். வண்டு - கைவளை. அணிகளின் இன்னொலியும். அணியிழையார் இன்னொலியும் சூழப் பிராட்டி சென்றாள் என்றவாறு. சிலம்புதல் - ஒலித்தல். சிலம்பு - ஒலித்தல் காரணமாக வந்தபெயர். இங்கு. சிலம்பின் பெயர்க் காரணம் அறிவிப்பார் போல. ''சிலம்பொடு சிலம்பி'' என்றார். ''சீறடிய கிண்கிணி சிலம்பொடு சிலம்ப'' (சீவக. 2019) என்பார் திருத்தக்க தேவரும். சும்மை - ஒலி. சிலம்பும் நூபுரமும் தனித் தனிக் காலணிகள் என்பது. ''நூபுரம் புலம்பிடச் சிலம்பு நொந்தழ'' (கம்ப. 9931) எனும் இடத்தால் உணரலாம். நூபுரம் - பாத தண்டை எனக் கொள்ளலாம்.*

*1139.*

***சிந்தொடு. குறளும். கூனும்.***
***சிலதியர் குழாமும். தெற்றி***
***வந்து. அடி வணங்கிச் சுற்ற***
***மணி அணி விதான நீழல்.***
***இந்துவின் கொழுந்து விண்மீன்***
***இனத்தொடும் வருவது என்ன.***
***நந்தல் இல் விளக்கம் அன்ன***
***நங்கையும் நடக்கலுற்றாள்.***

**சிந்தொடு குறளும் கூனும் சிலதியர் குழாமும் தெற்றிவந்து அடி வணங்கிச் சுற்ற** - *சிந்தர். குறளர். கூனர். (ஏனைத்) தோழியர் கூட்டமும் நெருங்கி வந்து பிராட்டியின் திருவடிகளை வணங்கிச் சூழ்ந்து கொள்ள;* **மணி அணி விதான நீழல்** - *மணிகளால் அணி செய்யப்பட்ட மேற்கட்டியின் நிழலின் கீழே;* **இந்துவின் கொழுந்து விண் மீன் இனத்தொடும் வருவது என்ன** - *இளந்திங்கள் விண் மீன் கூட்டத்திடையே வருவது போல;* **நந்தல் இல் விளக்கம் அன்ன** - *நந்தா விளக்கனைய;* **நங்கையும் நடக்கல் உற்றாள்** - *பெண்களுட் சிறந்த பிராட்டி நடந்து செல்லத் தொடங்கினாள்.*

*உடற் குறையுடைய குறளர். சிந்தர். கூனர் முதலோர். அக்காலத்தே அரண்மனையில் பணிதந்து பராமரிக்கப்பட்டனர் ஆதலின் அவர்களும் பிராட்டியைப் பணிந்து வாழ்த்தினர் என்க. அவர்களும் வந்து அடி வணங்கினர் எனக் குறிப்பிடுவதனால் தீனர்கள் மேல் கவிஞர் பிரான் கொண்டுள்ள பரிவும் பாசமும் புலனாம். இரண்டடி உயரம் உள்ளோரைக் குறளர் எனவும். மூன்றடி உயரம் உள்ளோரைச் சிந்தர் எனவும் வழங்கல் மரபு (தொல். செய். பேரா. உரை) இயல்பாகவே சோதியுடையவள் பிராட்டியாதலின். "நந்தல் இல் விளக்கே!" என்றார். "நந்தா விளக்கே நாமிசைப்பாவாய்" என்பது மணி மேகலை. (14:18) "வீறு பஞ்சினின் அமுத நெய் மாட்டிய விளக்கே" (கம்ப. 2060) என விளிப்பான் இராம பிரானும்.*

**கலிவிருத்தம்**

*1140* ***வல்லியை உயிர்த்த நிலமங்கை. 'இவள் பாதம்***
***மெல்லிய உறைக்கும்' என அஞ்சி. வெளி எங்கும்.***
***பல்லவ மலர்த் தொகை பரப்பினள் என. தன்***
***நல் அணி மணிச் சுடர் தவழ்ந்திட. நடந்தாள்.***

***வல்லியை உயிர்த்த நிலமங்கை*** - *பூங்கொடியனைய (மென்மையும் அழகும் வாய்ந்த) சீதையைப் பெற்ற மண்மகள்;* ***இவள் மெல்லிய பாதம் உறைக்கும்' என அஞ்சி*** - *இவளுடைய மென்மைவாய்ந்த திருவடிகள் (ஒன்றும் பாவாத வெறுந்தரையில் நடந்தால்) (தரை) உறுத்தி வருத்தக் கூடும் என்று நினைத்து அஞ்சியவளாய்;* ***வெளி எங்கும் பல்லவம். மலர்த்தொகை பரப்பினள் என*** - *(தன்மகள் நடந்து செல்லும் இடம் எல்லாம்) மென்மையான தளிர்களையும் மலர்களின் தொகுதிகளையும் பரப்பிவைத்தாள் எனக் கூறுமாறு;* ***தன் நல் அணி மணிச்சுடர் தவழ்ந்திட நடந்தாள்*** - *தான் அணிந்துள்ள சிறந்த அணிகலன்களில் பதித்துள்ள மாணிக்க மணிகளின் ஒளிச்சுடர் (பல வண்ணங்களில்) முன்னே பரவிச் செல்ல (சீதை) நடந்தாள்.*

*பிராட்டி நடந்து செல்லும்போது. பல்வகை மணிகளால் ஆன அணிகலன்களின் ஒளித்தொகுதிகள் பல நிறச் சுடர்களைத் தரையில் உமிழ்ந்தன. அவ்வாறு பல்வகை நிறமுடைய தளிர்களையும் மலர்களையும் தரையில் பரப்பி மண்மகன் வைத்திருந்தமைக்கு உமித்தார். மண்மகள் பெற்ற மகள் ஆதலால். பொருத்தமுற 'வல்லி' (கொடி) என்று உருவகித்தார். தரையிலே கொடி தோன்றல் இயல்பு ஆதலால் தற்குறிப்பேற்ற அணி. சனகன் யாகம் செய்யப் பொன்ஏர் பூட்டி உழும்போது. உழுகின்ற கொழுமுகத்தில் உதித்திட்ட பெண்கொடியாதலின். 'வல்லியை யுயிர்த்த நில மங்கை' (கம்ப.682) என்றார் எனினுமாம்.*

***1141.***

**தொழும் தகைய மென் நடை**
**தொலைந்து. களி அன்னம்.**
**எழுந்து. இடைவிழுந்து. அயர்வது**
**என்ன. அயல் எங்கும்**
**கொழுந்துடைய சாமரை**
**குலாவ. ஒர் காலபம்**
**வழங்கு நிழல் மின்ன வரும்**
**மஞ்ஞை என. வந்தாள்.**

***களி அன்னம்*** - *(தனக்குச் சமமாக நடக்க எண்ணி உடன்வந்த களிப்புடைய அன்னங்கள்);* ***தொழும் தகைய மென்நடை தொலைந்து இடை விழுந்து அயர்வது என்ன*** - *யாவராலும் தொழத்தக்க மென்மையான (தனது) நடைக்குத் தோற்றுப்போய்; இடையிடையே கீழே வீழ்ந்தும். (முயன்று மீண்டும்) எழுந்தும் வருந்துவதுபோல;* ***கொழுந்துடைய சாமரை அயல் எங்கும் குலாவ ஒர்கலாபம் நிழல் வழங்க மின்னவரும் மஞ்ஞை என வந்தாள்*** - *தன் இருமருங்கும். நுனிசீர்த்த சாமரைகள் சுழல. ஒப்பற்ற (காலபம்) ஒளி வீச மின்னிக் கொண்டுவரும் ஒரு மயில்போலப் (பிராட்டி) (மண்டபம் நோக்கி) வந்தாள்.*

*வெள்ளை நிறச் சாமரங்கள். கீழும் மேலுமாக வீசப்படல். அன்னம் சீதையின் அழகுநடைக்குத் தோற்று விழுவதும் எழுவதும் போல இருப்பதாகக் கற்பித்தவாறு. தற்குறிப்பேற்ற அணி இரட்டுற மொழிலாக மயிலுக்குக் கலாபம் தோகையினையும். சீதைக்குக் கலாபம். இடையணியினையும் குறித்துத் தோகை ஒளிர மயில் ஒன்று வருவது போன்று வந்தாள். பிராட்டி என்க; அவள் நடைக்கும் விழுந்தும் எழுந்தும் அடித்துக் கொண்டோடும் அன்னங்கள் போல் வெண்சாமரம் இரட்டப் பிராட்டி வந்தாள் என்க.*

***1142. மன் முதல் அனைத்து உலகின்***
***மங்கையருள் எல்லாம்.***
***கண் மணி எனத் தகைய.***
***கன்னி எழில் காண.***
***அண்ணல் மரவின் சுடர்.***
***அருத்தியொடு தான் அவ்***
***விண் இழிவது ஒப்பது ஓர்***
***விதான நிழல் வந்தாள்.***

***மண்முதல் அனைத்து உலகின் மங்கையருள் எல்லாம்*** *- பூவுலகம் முதலான எல்லாவுலகிலும் உள்ள பெண்டிர் அனைவர்க்கும்;* ***கண்மணி எனத் தகைய கன்னி எழில் காண*** *- கண்ணின் உள்ளே உள்ள கருமணி போன்ற அருமையுடைய கன்னியாகிய பிராட்டியினது அழகைக் காண்பதற்காக;* ***அண்ணல் மரபின் சுடர்*** *- (இவள் கொழுநனாகவுள்ள) இராமபிரானது குலத்துக்கு ஆதிபுருடனான சூரியன்;* ***அருத்தியொடு தான் அவ் விண் இழிவது ஒப்பது ஓர விதான நிழல் வந்தாள்*** *- மிக்க விருப்பத்தோடு. தான் அந்த விண்ணிலிருந்து இறங்கி வந்திருப்பதைப் போன்ற தன்மையதான பேரொளியுடைய ஒரு மேற்கட்டியின் நிழலில் சீதை வந்தடைந்தாள்.*

*சூரியன் தன் குலக் கொழுந்தாவான் வாழ்க்கை சிறக்க வந்தடைகிற கன்னி ஆகிய மணப் பெண்ணை. மூத்தான் காண விரும்புவது இயல்பாதல் பற்றிக் கதிரவன் மேலும் அவ்விருப்பை ஏற்றிக் கூறினார். தற்குறிப்பேற்ற அணி.*

***1143.***

***கற்றை விரி பொற்கடை பயிற்றுறு கலாபம்***
***சுற்றும் மணி புக்க இழை மிக்கு. இடை துவன்றி.***
***வில் தவழ. வாள் நிமிர. மெய் அணிகள் மின்ன.***
***சிற்றிடை நுடங்க. ஒளிர் சீறடி பெயர்த்தாள்.***

***கற்றை விரி பொற் கடை பயிற்றுறு கலாபம்*** - *ஒளிக்கதிர்கள் விரிகின்ற பொன்னைக் கடைந்ததனால் எழுகின்ற ஒளி மிகும் பதினாறு கோவையணியும்;* ***இடை சுற்றும் மணிபுக்க இழை மிக்கு துவன்று*** - *(தன்) இடையைச் சுற்றிலும் மணிகள் இழைக்கப்பட்டுள்ள மற்றை அணிகலன்களும் மிகுந்து நெருங்கி;* ***வில் தவழ. வாள் நிமிர மெய் அணிகள் மின்ன*** - *அவற்றின் ஒளி எங்கும் பரவவும். (நடுவில்) தன்மேனி ஒளி விளங்கவும். தன் உடலில் அணிந்துள்ள பிற அணிகள் மின்னிடவும்;* ***சிற்றிடை நுடங்க ஒளிர் சீறடி பெயர்ந்தாள்*** *-(அணி கலங்களின் பாரத்தால்) நுண்ணிய இடை வருந்த. ஒளி மிகும் தன் சிறிய பாதங்களை எடுத்து வைத்தாள். அரச குடும்பத்தினர் செல்லுங்கால். விற்படையும் வாட்படையும் ஏந்தி மெய்காவலர் உடன் சூழச் செல்லும் மரபு தோன்ற. ''வில் தவழ. வாள் நிமிர. மெய் அணிகள் மின்னச் - சிற்றடி பெயர்த்தாள்'' எனச் சீதை நடந்ததை நயந்தோன்றக் கூறினார். வில். வாள். மின் முதலிய ஒளி வெள்ளங்கட்கிடையே வந்தாள் என்பதனால். பிராட்டி உலகச் சோதியாக விளங்கினாள் எனினுமாம்.*

***1144. பொன்னின் ஒளி. பூவின் வெறி.***
***சாந்து பொதி சீதம்.***
***மின்னின் எழில். அன்னவள்தன்***
***மேனி ஒளி மான.***
***அன்னமும். அரம்பையரும்.***
***ஆர் அமிழ்தும். நாண.***
***மன் அவை இருந்த மணி***
***மண்டபம் அடைந்தாள்.***

***அன்னவள் தன் மேனி ஒளி*** - *அந்தச் சீதை. தன் உடலில் எழும் பொலிவுக்கு;* ***பொன்னின் ஒளி. பூவின் வெறி. சாந்து பொதி சீதம். மின்னின் எழில்மான*** - *பொன்னின் ஒளியையும். பூவின் மணத்தையும். சந்தனத்துக் குளிர்ச்சியையும். மின்னலின் அழகையும் ஒப்புச் சொல்லுமாறு;* ***அன்னமும் அரம்பையரும் ஆர் அமிர்தும் நாண*** - *(தன் நடைக்குத் தோற்று) அன்னப் பறவையும். (தன் அழகுக்குத் தோற்று) தெய்வ உலகப் பெண்டிரும். (தன் இனிமைக்குத் தோற்று) அரிய தேவ அமுதமும் வெட்கமுறுமாறு;* ***மன் அவை இருந்த மணி மண்டபம் அடைந்தாள்*** - *அரசவையில் அமைந்திருந்த மணி மண்டபத்தை அடைந்தாள்.*

*பொன்னின் ஒளியும். பூவின் நறுமணமும். சந்தனத்துக் குளிர்ச்சியும். மின்னலின் அழகும் இயல்பாகவே ஒன்று கூடிய சேர்க்கை பிராட்டியின் திருவுடற் பொலிவு என்றவாறு. தன் வருகைச் செயல் ஒன்றால் பலவற்றின் தோல்வியை அறிவித்து வருகிறாள் என்பார். ''அன்னமும் அரம்பையரும் ஆர் அமிழ்தும் நாண..... மண்டபம் அடைந்தாள்'' என்றார்.*

## ***யாவரும் சீதையின் அழகில் ஈடுபடல்***

*1145.* ***சமைத்தவரை இன்மை மறை***
***தானும் எனலாம். அச்***
***சுமைத் திரள். முலைத் தெரிவை***
***தூய் வடிவு கண்டார்.***
***அமைத் திரள் கொள் தோளியரும்.***
***ஆடவரும் எல்லாம்***

***இமைத்திலர். உயிர்த்திலர்கள்.***
***சித்திரம் எனத் தாம்.***

***சமைத்தவரை இன்மை மறைதானும் எனலாம்*** - *இயற்றியவர் இன்னார் என்று சொல்ல இயலாமையால். வேதத்தின் வடிவம்தான். இவள் என்று சொல்லத்தக்க;* **அச்சுமைத்திரள். முலைத் தெரிவை தூய்வடிவு கண்டார்** - *கனந்திரண்ட தனங்களையுடைய அப்பிராட்டியினுடைய தூய திருமேனியைக் கண்டு;* **அமைத்திரள் தோளியரும் ஆடவரும் எல்லாம்** - *(இள) மூங்கில் போன்று திரண்ட தோள்களையுடைய பெண்டிரும். ஆண்களும் ஆகிய அனைவரும்;* **சித்திரம் எனத் தாம் இமைத்திலர்** *;* **உயிர்த்திலர்கள் -** *(மிகுந்த வியப்பால் திகைப்புற்று) ஓவியப் படிவங்களை போன்று இமைக்கவும் இல்லை; மூச்சு விடவும் இல்லை.*

*தண்டார் - முற்றெச்சம். வேதம் இறைவனால் வெளியிடப் பட்டதன்றி. ஒருவராலும். உண்டாக்கப்பட்டதில்லை. அதுபோல. பிராட்டியும் சனகரால் எடுத்து வளர்க்கப்பட்டவளே அல்லாமல் பெற்று வளர்க்கப்பட்டவள் அல்லள் (அயோ நிஜ) என்று உவமை கொண்டு விளக்கியவாறு. ஒரு புருடரால் செய்யப்படாமை பற்றி. வேதம் "அபௌருஷேயம்" எனப்படும். பிராட்டியின் தூய வடிவு அனைவரையும் பெருவியப்பில் ஆழ்த்தி. ஆடாமல் அசையாமல் உயிர்க்கவும் செய்யாமல் ஓவியம் ஆகிற்று என்பதாம். " ஓவியம் ஒப்ப உயிர்ப்பு அடங்கி ஓயும்" (கம்ப. 1508) என்பார் மேலும். பால் வேறுபாடின்றி. எல்லோரையும் செயல் இழக்கச்செய்யும் தெய்விகப் பேரழகு பிராட்டியினுடையது என உணர்த்தியவாறு.*

### *சீதையைக் கண்ட இராமனது மகிழ்ச்சி*

*1146.*

***அன்னவளை. 'அல்லள்' என.***
***'ஆம்' என. அயிர்ப்பான்.***
***கன்னி அமிழ்தத்தை எதிர்***
***கண்ட கடல் வண்ணன்.***
***உன் உயிர் நிலைப்பது ஓர்***
***அருத்தியொடு உழைத்து. ஆண்டு.***
***இன் அமிழ்து எழ. களி கொள்***
***இந்திரனை ஒத்தான்.***

***கன்னி அமிழ்தத்தை எதிர்கண்ட கடல் வண்ணன்*** - *அமிழ்த மயமானதொரு கன்னிகை போன்ற சீதையைக் கண் எதிரிலே கண்ட கடல் போன்ற நிறத்தனான இராமபிரான்;* ***அன்னவளை அல்லள் என ஆம் என அயிர்ப்பான்*** - *அந்தச் சனக மன்னன் திருமகளை. (தான் கன்னிமாடத்தருகே கண்ட) அம்மங்கை யல்லளோ என்றும். அம்மங்கையே ஆவாளோ என்றும். உண்டான ஐயமுடையவனாய் (இருந்த ஐயம் நீங்கி. அவளே இவள் என்று அறிந்த மகிழ்ச்சியினால்);* ***உன் உயிர் நிலைப்பது ஓர் அருத்தியொடு உழைத்து*** - *மதித்தற்குரிய உயிர். (என்றும்) உடலில் நிலைத்திருக்கவேண்டிய விருப்பத்தினால் மிகப்பாடுபட்டு. (அதன் பயனாய்);* ***ஆண்டு இன்னமிழ்து எழக் களி கொள் இந்திரனை ஒத்தான்*** - *அக்கடலிடத்தே இனிய அமிழ்தம் எழுவதைக்கண்டு களிகூர்ந்த தேவேந்திரனைப் போன்றவன் ஆனான்.*

*இராமனை "அல்லன் கொல். ஆம்கொல்" என்று சீதை ஐயுற்றுத் தவித்தது கோலங்காண்படலத்தில் (கம்ப. ) கூறப்பட்டது. கன்னிமாடத்துக் கண்டவளே இவள் என இராமன் இங்கு ஐயந் தீர்ந்தான்;கன்னிமாடத்தருகில் கண்டவனே இவன் எனச் சீதை "எய்யவில் வளைத்தும்" (கம்ப. 1151) எனும் பாடலில் ஐயந்தீர்வாள். கடலிற் பிறந்த அமிழ்தத்தை மீண்டும் ஒருமுறை அக்கடல் கண்ணுற்றது என்பார். "கன்னி அமிழ்தத்தை. எதிர் கண்ட கடல் வண்ணன்" என்றார். கடலில் எழுந்த அமிழ்தம்" என்றார். பிராட்டிக்கு அமிழ்தம். பாற்கடலில் தோன்றியதாலும். அனைவராலும் விரும்பப் படுதலாலும். இன்பம் விளைத்ததாலும். மரணத்தைத் தவிர்ப்பதாலும் உவமை என்க.*

*1147.*

***'நறத்து உறை முதிர்ச்சி உறு***
***நல் அமுது பில்குற்று.***
***அறத்தின் விளைவு ஒத்து. முகடு***
***உந்தி. அருகு உய்க்கும்.***
***நிறத் துவர் இதழ்க் குயில்***
***நினைப்பினிடை அல்லால்.***
***புறத்தும் உளதோ?" என***
***மனத்தொடு புகன்றான்.***

***நறத்து உறை முதிர்ச்சி உறு நல்அமுது பில்குற்று*** - தேனில் உறைகின்ற இனிமை முற்றி வளைவது போன்று இனிமைதரும் நல்ல தேவாமுதத்தைத் துளித்து; ***அறத்தின் விளைவு ஒத்து*** - அறச்செயல்கள் முற்றிவிளைகின்ற விளைவினைப் போன்று; ***முகடு உந்தி அருகு உய்க்கும்*** - (நலம் அனைத்தும் தந்து) (அக கன்னிமாடத்தின்) உச்சியிலிருந்து இறங்குவித்து என் அருகே செலுத்தப் பெற்றிருக்கும்; ***துவர் நிற இதழ்க்குயில்*** - செந்நிறங் கொண்ட இதழ்களையுடைய குயில் ஒன்று; ***நினைப்பின் இடை அல்லால் புறத்தும் உளதோ? என மனத்தொடு புகன்றான்*** - என் மனத்தின் இடத்தில்தான் இருந்தது. அப்படியன்றி. அக்குயில் வெளியேயும் உள்ளதோ எனச் சீதையை அருகில் கண்ட இராமபிரான் தன் மனத்தோடு கூறிக்கொண்டான்.

*பில்குதல் - சிந்துதல். தேன்எனும் பொருளதாகிய 'நற' எனும் சொல் அத்துச் சாரியை பெற்று. 'நறத்து' என வந்தது. சீதை போன்ற அரியபொருள் அறத்தின் விளைவால் அன்றி எய்துதல் அரிது என்பது கவிஞர் பிரானின் கருத்து. கன்னி மாடத்துக் கண்ட காட்சி. கணப்போதும் நீங்காது தன் உளத்திருந்தது என்பது தோன்ற. "முகடு (மாடி) உந்தி அருகுய்க்கும் குயில்" என்றான். "அன்று அம்மாடத்து உம்பர் அளிக்கும் அமுது அன்னாள்" (கம்ப.) என முன்பும் கூறினார். மாடக்குயில் மனக்குயில் ஆயிற்று. அந்த அகக்குயில் இப்போது கண்காணும் புறக்குயிலும் ஆயிற்றோ என வியந்தவாறு - குயில் - உவம ஆகுபெயராய்ச் சீதைக்காயிற்று. விடாது ஒரு பொருளை நினைத்திருப்பார் முன்பு. நினைத்த பொருள்போல் பிற பொருள்களின் வடிவும் தோன்றல் உலகியல்பு. "நோக்குவ வெல்லாம் அவையே போறல்" (தொல். களவு. 9) என்று இதனைச் சுட்டுவர் தொல்காப்பியனார்.*

வசிட்ட முனிவரின் மகிழ்ச்சி

***1148 'எங்கள் செய் தவத்தினில்.***
***இராமன் என வந்தோன்.***
***சங்கினொடு சக்கர***
***முடைத் தனி முதற் பேர்***
***அம் கண் அரசு; ஆதலின்.***
***அவ் அல்லி மலர் புல்லும்***
***மங்கை இவள் ஆம்' என.***
***வசிட்டன் மகிழ்வுற்றான்.***

***வசிட்டன்*** - *(சீதையைக்கண்ட) வசிட்ட மாமுனிவன்;* ***எங்கள் செய்தவத்தினில் இராமன் என வந்தோன்*** - யானும் என்னனைய முனிவர்களும் செய்த தவத்தினால் இராமன் ஆக அவதரித்துள்ள பெருமான்; ***சங்கினொடு சக்கரம் உடைத் தனி முதற்பேர் அங்கண் அரசு ஆதலின்*** - சங்கம். சக்கரம் என்னும் திவ்விய ஆயுதங்களை ஏந்திய ஒப்பற்ற முதற் பொருளாகிய பெரிய கண்களையுடைய (யாவர்க்கும்) தலைவனான திருமாலே ஆதலின்; ***அவ் அல்லி மலர் புல்லும் மங்கை இவள் ஆம் என மகிழ்வுற்றான்*** - செந்தாமரை மலரைத் தங்கும் இடமெனக் கொண்டு வாழும் திருமகளே இச்சீதையாவாள் என மகிழ்வு கொண்டான்.

இராமன் திருமாலே என்பது ஐயத்திற்கிடம் அற்ற உண்மையாதலின். அவனை மணக்க இருப்பவள் திருமகளே என ஐயந்தெளிந்தான் வசிட்டன் என்க அல்லிமலர் - தாமரை மலர். "அல்லிசேர் அணங்கிற்கு அணங்கு அன்னவள் (சீவக. 162) என வருவதும் காண்க. இராமன் நல்லோர் செய்தவத்தால். அறந்தலை நிறுத்தி. தீயோர் இறந்துக நூறித் தக்கோர் இடர்துடைத்து ஏகப் பிறந்தவன் (கம்ப. 5885) ஆதலின் "எங்கள் செய் தவத்தினில்" என்றார். "ஆய அந்தணர் இயற்றிய அருந்தவத்தாலும்" (கம்ப. 1483) "அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும்" (கம்ப. 1484) என வருவனவும் ஒப்புநோக்கற் பாலன.

தயரதன் உவகை

*1149.* ***துன்று புரி கோதை எழில் கண்டு. உலகு சூழ்வந்து***
***ஒன்று புரி கோலொடு தனித் திகிரி உய்ப்பான்.***
***'என்றும். உலகு ஏழும். அரசு எய்தி உளனேனும்.***
***இன்று திரு எய்தியது; இது என்ன வயம்!' என்றான்.****

**உலகு சூழ்ந்து ஒன்றுபுரி கோலொடு தனித்திகிரி உய்ப்பான்** - உலகம் அனைத்தும் சுற்றிவந்து (அறம்) ஒன்றையே புரிகின்ற செங்கோலோடு ஒப்பற்ற ஆணைச் சக்கரத்தையும் செலுத்தும் தசரத வேந்தன்; **துன்றுபுரி கோதைஎழில் கண்டு** - அடர்ந்த கூந்தலையுடைய சீதையின் அழகினை நோக்கி; **என்றும். உலகு ஏழும் அரசு எய்தி உளனேனும்** - எக்காலத்தும் நான். உலகேழையும் ஆள்கின்ற அரசாட்சியைப் பெற்றுள்ளேன் ஆனாலும்; **இன்று திரு எய்தியது இது என்ன வயம்? என்றான்** - இன்றைக்குத் தான் திருமகள் என்னையடைந்தாள்; ***யான் அடைந்தவற்றுள் எல்லாம் இது எத்தகைய (உயர்) வெற்றி! என்று உவந்தான்.***

வயம் - வெற்றி. திரு - திருமகள்; தெய்வத்தன்மை. நான் உலகேழையும் வெற்றிகொண்டது மனிதத் தன்மையதே. இன்று தான் அதற்குத் தெய்வத்தன்மை கிட்டியது எனினுமாம். கவிஞர் பிரான். வசிட்டர். தசரதன் முதலிய ஒவ்வோர் உள்ளத்துள்ளும் நுழைந்து அவ்வவர் மகிழ்வினை. அவ்வவர் இயல்புக்கேற்பக் கண்டு காட்டுவது மிகவும் போற்றற் பாலது. பல செல்வங்களையும் முன்பு பெற்றேன்; இன்றுதான் செல்வத்தின் செல்வத்தைப் பெற்றேன்; பூரணச் செல்வத்தைப் பெற்றேன் என்று தயரதச் சக்கரவர்த்தி பூரித்தான் என்க.

*1150* ***நைவளம் நவிற்று மொழி நண்ண வரலோடும்.***
***வையம் நுகர் கொற்றவனும். மா தவரும். அல்லார்***
***கைகள் தலைபுக்கன; கருத்துளதும் எல்லாம்***
***தெய்வம் என உற்ற; உடல் சிந்தை வசம் அன்றோ?***

***நைவளம் நவிற்று மொழி நண்ண வரலோடும்*** -நைவளம் என்னும் குறிஞ்சி யாழ்ப் பண்ணின் வகையாகிய நட்டபாடைப்பண் போல இனியமொழிபேசும் பிராட்டி. அருகே நெருங்கி வருகின்ற அளவில்; ***வையம் நுகர் கொற்றவனும் மாதவரும் அல்லார் கைகள் தலைபுக்கன*** -பூவுலகை ஆண்டு. அதன் (இன்பதுன்பங்களை) நுகர்கின்ற தசரத வேந்தனும் (வசிட்டன். விசுவாமித்திரன்) ஆகிய முனி சிரேட்டர களும் அல்லாத அனைவர் கரங்களும் (பிராட்டியை வணங்குமுகமாக) அவரவர் தலைகளின் மேலே (இயல்பாகவே) சென்று குவிந்தன; ***கருத்து. உளதும் எல்லாம் தெய்வம் என உற்ற*** - ஏன் எனில். அனைவரது மனமும். மற்றும் உள்ள புத்தி முதலிய அந்தக் கரணங்கள் யாவையும் (பிராட்டியைத்) தெய்வம் என்றே கருதின; ***உடல் சிந்தை வசம் அன்றோ?*** - (செயல்கருவியாகிய) உடல் (எண்ணுதற் கருவியாகிய) மனத்தின் வசப்பட்டுச் செயல்படுவதன்றோ? வையம் நுகர் மாதவர் என்பதில். இரட்டுற மொழிதலாகக் கொண்டு இராமனையும் சனகனையும் அடக்குவர். கருத்தும் (மற்றும்) உளதும் எல்லாம் எனற்பாலது உம்மை விகாரத்தால் தொக்கு கருத்துளதும் எல்லாம் என்றாகியது. பிராட்டியைத் தெய்வம் எனத் தான் கருதும் கருதுகோளை. இடம் அறிந்து ஏற்றி. வணங்குவித்த கவிஞர்பிரான் திறம் உணர்க. உளதும் எல்லாம் - ஒருமை பன்மை மயக்கம். சீதை வணங்குரியார் சிலர் தவிர. அவையிருந்த ஏனையோர் அனைவரின் கரங்களும் சிரமேற் குவிந்தன என்பதற்கு. உளநூல் அறிஞரான கவிஞர் பிரான் கூறும் காரணம்: உடல் சிந்தை வசம் என்பது. சிந்தை சீதையைத் தெய்வம் என நினைக்க. கடையுடைக் காவலாளர் (மெ.நா.9) அனைவோர் கரங்களும் தெழுது செயற்படுத்தின. மனந்தூயதாயின். ஒழிந்த மொழியும் செயலும் தாமே தூயவாகும் எனும் அடிப்படையில் ''மனத்துக்கண் மாசிலன் ஆதல்'' (திருக். 34) என மொழிந்தமையும் இங்கு நினைக.

*சீதை முறைப்படி வணங்கற் குரியாரை வணங்கித்*

*தந்தையின் அருகிருத்தல்*

***1151*** **மா தவரை முற்கொள வணங்கி. நெடு மன்னன்**
**பாத மலரைத் தொழுது. கண்கள் பனி சோரும்**
**தாதை அருகு இட்ட தவிசில். தனி இருந்தாள்-**
**போதினை வெறுத்து. அரசர் பொன் மனை புகுந்தாள்.**

***மாதவரை முன்கொள வணங்கி*** - (யாவராலும்) (வணங்கற்குரிய) மாதவமுனிவர்களை முதன்மை கொண்டு வணங்கி; ***நெடு மன்னன் பாதமலரைத் தொழுது*** - நீள்புகழுக்குரிய தசரதவேந்தனின் அடித்தாமரைகளை அடுத்து வணங்கி; ***கண்கள் பனிசோரும் தாதை அருகிட்ட தவிசில்*** - ஆனந்தக் கண்ணீர்ச்சொரிகின்ற தன் தந்தை சனகமன்னர் அருகே இட்டுள்ள ஆதனத்தில்; ***போதினை வெறுத்து அரசர் பொன்மனை புகுந்தாள் இனி இருந்தாள்*** - (குறை நயப்பார் இல்லாத வைகுந்தத்தில்) செந்தாமரை மலர்மேல் இருக்க வெறுத்து. (பூவுலகில் மக்கள் துயர்தீர்க்க) மன்னர் மனைகளில் புக விரும்பி வந்துள்ள பிராட்டி தனித்து அமர்ந்தாள்.

*பரம பதத்திலிருக்கும் போது. அங்குத் தன்னை விடக் குறைந்தார் இல்லாமையாலே. தம்மைவிடக் குறைந்தார்க்கு அளிக்கையாகிற நிறைவு பெறாத குறைவு (தனிச்சு. வியாக்.1. 131-132) உண்டாகையாலே பரமபத இருக்கையாகிய "பூவினை வெறுத்து" என்றார். இவ்வாறே "அந்தரத்து அனந்தர் (சோம்பல்) நீங்கி அயோத்தியில் வந்த வள்ளல்" (கம்ப. 10368) என்று இராமபிரானையும் குறிப்பார். அருமையாய் வளர்த்த மகளைப் பிரியும்காலம் அணுகுவது நினைந்து தந்தையாகிய சனகன் கண்கள் நீர்சொரிந்தன எனும் பொருளும் பட உரைத்துள்ள திறம் ஓர்க. மக்கட் பாசத்தை உணர்ந்து உணர்த்துவதில் கவிஞர் பிரான் தன்னிகரற்றவர் என்பது மேலும் வருமிடங்களிலும் விளங்கும். இனி. கணவனாகிய திருமாலைப் பிரிந்து கழிக்கும் பொழுதினை வெறுத்து என்றும். "போதினை வெறுத்து" என்பதற்குப் பொருள்கொள்ள லாம். "ஐயன் அயோத்தியில் பிறந்தபின்னும் பிரிவிலள் ஆயினாள்" (கம்ப. 1824) என்பதும் காண்க.*

விசுவாமித்திரர் வியப்பு

***1152 அச்சு என நினைத்த முதல்***
***அந்தணன் நினைந்தான்;***
***'பச்சை மலை ஒத்த படிவத்து.***
***அடல் இராமன்.***
***நச்சுடை வடிக் கண் மலர்***
***நங்கை இவள் என்றால்.***
***இச் சிலை கிடக்க; மலை.***
***ஏழையும் இறானோ?'***

***அச்சு என நினைத்த முதல் அந்தணன்*** *- உலகத்து உயர்குண மாதர்களுக்கெல்லாம் ஆதாரம் சீதையே எனக் கருதிய முதன்மைச் சிறப்புக்குரிய விசுவாமித்திரமுனிவன்;* ***நச்சுடை வடிக்கண் மலர்நங்கை இவள் என்றால்*** *- வில்வினை முறித்தால் கிடைத்தற்குரிய பரிசு. நஞ்சு தோய்ந்த கூரிய கண்களையுடைய மலர்மங்கையாகிய இச்சீதை என்றால்;* ***பச்சைமலை ஒத்த படிவத்து அடல் இராமன்*** *- பசியமலை போன்ற வடிவுடைய வலிமை படைத்த இராமபிரான்;* ***இச்சிலை கிடக்க மலை ஏழையும் இறானோ நினைந்தான்*** *- (ஒரு மலை போன்ற) இந்தவில் கிடக்கட்டும்; ஏழுமலைகளைக் கொண்டுவந்து இட்டாலும் (இவளைப் பெறும் காதல் நினைவால் அத்தனையையும் உடனே) முறித்துப் போடமாட்டானோ? என்று நினைத்திருந்தான்.*

*"ஒருவில் பெண்மை. என்று உரைக்கின்ற. உடலினுக்கு உயிர்" (கம்ப. 2059) என்றும். "மடந்தைமார்களில் திலதம்" (கம்ப. 2072) எனவும். "தெரிவைமார்க் கொரு கட்டளை" (கம்ப.. 2078) எனவும் உரைக்கப்படுவாளாகிய சீதையை மடந்தை மார்க்கு இவள் ஓர் 'அச்சு' அனையவள் என விசுவாமித்திர முனிவன் பொருத்தமுற நினைத்தான். தவத்திற்கோர் உதாரணப்படிவம் (அச்சு) என நினையத்தக்க விசுவாமித்திர முனிவன் என. "அச்சென நினைத்த முதல் அந்தணன்" எனற்குப் பொருள் உரைப்பாருமுளர். "பச்சைமலை ஒத்த படிவத்து அடல் இராமன்" என்பது. பச்சை மா மலைபோல் மேனி" (திருமாலை. 2) எனும் தொண்டர் அடிப்பொடி ஆழ்வார் பாசுரத்தை நினைப்பிப்பது. சிலை என்பது மலை. வில் எனும் இருபொருளிலும் வந்தது. கிடைக்கும் பொருள் உயர்ந்ததாயின் அரிய செயலும் எளியதாகும் என்பது முனிவன் கருத்து.*

*கடைக் கண்ணினால் சீதை இராமனைக் கண்டுகளித்தல்*

***1153 எய்ய வில் வளைத்ததும் இறுத்ததும் உரைத்தும்.***
***மெய் விளைவு இடத்து. முதல் ஐயம் விடலுற்றாள்.***
***ஐயனை. அகத்து வடிவே அல. புறத்தும்.***
***கைவளை திருத்துபு. கடைக் கணின் உணர்ந்தாள்.***

***எய்யவில் வளைத்ததும் இறுத்ததும் உரைத்தும்*** *- இலக்கையடைய வில்லை வளைத்ததையும். அதனைமுறித்ததையும் (பலர் வாயிலாக) உரைக்கக் கேட்டதும்;* ***மெய்விளைவு இடத்தும்*** *- உண்மை முடிவாகத் தெரிதலால்;* ***முதல் ஐயம் விடல் உற்றாள்*** *- (கன்னி மாடத்தில் கண்டவனோ வேறு ஒருவனோ வில் முறித்தவன்) என்று தெருவிற்கண்ட முதற்காட்சி காரணமாக எழுந்த ஐயத்தை ஓரளவு நீக்கிவிட்ட பிராட்டி;* ***ஐயனை அகத்து வடிவே அல புறத்தும்*** *- தலைவனாகிய இராமனை அன்று முதல் தன் அகமாகிய மனத்திலே நிலை நிறுத்தியிருந்த வடிவத்தால் கண்டுகளித்து வந்தவள். வெளியேயும் (அவன் வடிவத்தைக் கண்ணாரக் காண) ;* ***கைவளை திருத்துபு கடைக்கணின் உணர்ந்தாள்*** *- (பெண்மையின் இயல்பான நாணந் தடுத்தலால். நேராக நோக்காது) கைவளையல்களைச் செப்பம் செய்யும் காரணத்தைக் கொண்டு. கடைக் கண்ணாலே அவனைத் தரிசித்து அவனே இவன் என உணர்ந்து மகிழ்ந்தாள்.*

*நீலமாலை கூற்றால். முன்பே ஓரளவு போக்கியிருந்த ஐயத்தை மீண்டும் முழுதும் போக்கிடத் துணிந்தாள் என்க. பெண்மைக்குத் தனிப்பெருமை சேர்க்கும் நாணத்தைப் பெண்ணரசியாகிய பிராட்டிக்கும் சேர்த்து அதனைமேலும் பெருமை பெற வைத்துள்ள பெருந்திறம் காண்க.* ***வரிசிலை யண்ணலும் வாட்கண் நங்கையும் இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தி*** *(கம்ப. 516)* ***யவர்*** *ஆதலின். அகத்தில் இருந்த ஐயனைத் தொடும் அளவு அருகில் இருந்தும். நேராகத் திரும்பிப் பார்க்க இயலாமல் தடுத்த நாணத்தை வெல்ல. கைவளையைத் திருத்தும் முகமாகத் தலைசாய்க்காமல் கண்சாய்த்துக் கண்ட நேர்த்தியைச் சொல்வலைப் படுத்தியுள்ள திறம் எண்ணி எண்ணி மகிழத் தக்கது. காலில் தைத்த முள்ளைப் பிடுங்கும் முகமாகச் சகுந்தலை. துஷ்யந்தனைத் திரும்பப் பார்த்த நிகழ்ச்சியைக் காளிதாசன் கட்டுரைத்தமை நினைவுகூர்க.*

***1154 கருங் கடை நெடுங் கண் ஒளி***
***யாறு நிறை கண்ணப்***
***பெருங் கடலின் மண்ட. உயிர்***
***பெற்று இனிது உயிர்க்கும்.***
***அருங் கலன் அணங்கு-அரசி.***
***ஆர் அமிழ்து அனைத்தும்.***
***ஒருங்குடன் அருந்தினரை***
***ஒத்து. உடல் தடித்தாள்.***

***கருநெடுங் கண்கடை ஒளியாறு நிறை*** *- கருத்து நீண்ட கண்ணின் கடைப் பகுதியிலிருந்து இராமனை நோக்கிப் பாய்ந்த ஒளிவெள்ளம் ஆகிய ஆறு;* ***கண்ணப் பெருங்கடலின் மண்ட*** *- இராமபிரானின் மேனி யென்னும் கடலிற் போய்ச் சங்கமிக்க;* ***உயிர் பெற்று*** *- ஐயம் அனைத்தும் நீங்கி. கன்னி மாடத்தில் கண்டவனே இவன் என்னும் துணிவால். (ஊசலாடிய உயிர்) புத்துயிர்ப்பெய்தி;* ***இனிது உயிர்க்கும்*** *- வெய்துயிர்த்தல் நீங்கி. இனிமைதவழும் மூச்செறிந்தாள்;* ***அருங்கலன் அணங்கு அரசி*** *- பிறர்க்கு அரிய அணிகலன்களை யணிந்துள்ள தெய்வமங்கையாகிய சீதை;* ***ஆர்அமிழ்து அனைத்தும் ஒருங்கு உடன் அருந்தினரை ஒத்து உடல் தடித்தாள்*** *- (பேருவகையால்) பெறுதற்கு அரிய அமிர்தம் முழுவதையும் (தாமே) உண்டவரைப் போன்று உடம்பு பூரித்தாள்.*

*இராமனின் திருமேனி. பிராட்டிக்குக் கடலுமாயிற்று. அதிற் பிறந்த அமிழ்தும் ஆயிற்று. ஆகவே. இராமன் திருமேனி. பிராட்டிக்கு. ''திருக்கண்ணமுது'' ஆயிற்று என்க.*

***1155. கணங் குழை. 'கருத்தின் உறை***
***கள்வன் எனல் ஆனான்.***
***வணங்கு வில் இறுத்தவன்'***
***எனத் துயர் மறந்தாள்;***
***அணங்குறும் அவிச்சை கெட.***
***விச்சையின் அகம்பாடு***
***உணர்ந்து. அறிவு முற்று பயன்***
***உற்றவரை ஒத்தாள்.***

***கணங்குழை*** - *திரண்டு ஒருங்கிருந்த குழைகளையுடைய சீதை;* ***கருத்தின் உறை கள்வன் எனல் ஆனான் வணங்குவில் இறுத்தவன*** - *தான் கன்னிமாடத்திலிருந்து கண்ட நாள் முதலாகத் தன் மனத்துள்ளே தங்கிய கள்வனாயிருந்த அவனே வளையும் வில்லை முறித்தவனானான்;* ***எனத் துயர் மறந்தாள்*** - *என்று (ஐயத்திற் கிடமின்றி அறிந்து) (முன்பு தான் கொண்டிருந்த ஐயத்தாலான) துயரம் முழுவதையும் மறந்தவள் ஆனாள்;* ***அணங்குறும் அவிச்சை கெட*** - *(பிறவித்) துன்பம் அடைவதற்குக் காரணம் ஆன (ஒன்றை இன்னொன்றாக உணரும்) விபரீத உணர்வு அழிந்தவுடன்;* ***விச்சையின் அகம்பாடு உணர்ந்து*** - *தத்துவ அறிவு எழுவதால். கிட்டும் உண்மை ஞானத்தால்;* ***மனத்தில் வாழும் பரம்பொருளை அகக் கண்ணால் கண்டுணர்ந்த பின்பு; அறிவுமுற்று பயன் உற்றவரை ஒத்தாள்*** - *முற்றறிவால் எய்தும் (முத்திப்) பயனாம் அந்தமில் இன்பத்தை அடைந்தவரைப் போன்றவளானாள்.*

*இம்மூன்று பாடல்களாலும். "வில் ஒடித்தவனே அன்று கண்ட வீரன்" என்று ஐயமின்றி அறிந்ததனால் எழுந்த சீதையின் உள. உடல் விகசிப்பையே கூறிச் சீதை மகிழ்வதாகக் கவிஞர் மகிழும் திறம்உணர்க. வேற்றவன் ஆனால். சீதை கொண்ட முதற்காதல் முழுதும் பழுதாகும் என்று அவள் தவிப்பை வெளிப்படுத்தி. சீதையின் தகவை வெளிப்படுத்தியவாறு. "சொல்லிய `குறிப்பின் அத்தோன்றலே; அவன் அல்லனேல் இறப்பன் (கம்ப. 728) என அவள் கூற்றையும் உணர்க. தன்னை யுணர்ந்து. தலைவனையறிய உதவும் மெய்ஞ்ஞானம் தலைப்பட்டவர் பேரா இன்பம் பெறுகுவர். அவ்வின்பம் பெறத் தடையாயுள்ள மயக்க அறிவு நீங்கியவுடன் தன்னையறிந்து தலைவனை உணரும் நிலைகூடும்; அப்போது அந்தமில் இன்பத்து அழிவில் வீடும் கூடும் என்பது பின் இரண்டடியின் கருத்து. இருள் நீங்கி இன்பம் பயக்கும் மருள் நீங்கு மாசறு காட்சியவர்க்கு. (352) என்பார் திருவள்ளுவர்.*

**திருமண நாள் குறித்தல்**

***1156 கொல் உயர் களிற்று அரசர் கோமகன் இருந்தான்.***
***கல்வி கரை உற்ற முனி கௌசிகனை. 'மேலோய்!***
***வல்லி பொரு சிற்றிடை மடந்தை மண நாள் ஆம்.***
***எல்லையில் நலத்த. பகல் என்று? உரைசெய்க!' என்றான்.***

***கொல்உயர் களிற்று அரசர் கோமகன்*** - *வருத்தும் பெரியயானைப் படையினையுடைய தசரதச் சக்கரவர்த்தி;* ***இருந்தான் கல்விகரை உற்ற முனி கௌசிகனை*** - *அங்கு ஆதனத்தில் வீற்றிருந்தவனாகிய கல்விக் கடலின் கரை கண்டவனாம் விசுவாமித்திர முனிவரை நோக்கி;* ***மேலோய்*** - *மேன்மைக்குணம் வாய்ந்தோய்;* ***வல்லி பொருசிற்றிடை மடந்தை*** - *மலர்க்கொடியனைய சிற்றிடையையுடைய சீதையின்;* ***மண நாளாம் எல்லையில் நலத்த பகல் என்று?*** *திருமண நாளாகும் பேறுபெற்ற. அளவற்ற புண்ணியம் படைத்த அந்நாள் எந்நாள் என்று;* ***உரைசெய்க என்றான்*** - *கூறியருளுக என்று வேண்டினான்.*

*நாள்களால் நலமுறுவார் பலர். சிலரால் நாள்கள் நலம்பெறும். ஆதலால். சீதை மணத்தால் புனிதம் பெறும் அந்நாள் எந்நாள் என்று தயரதன் வினவினன் என்க. அந்நாள் பங்குனி உத்தரம் என்று முதல்நூலாகிய வான்மீகத்தால் அறியப்படும். உலகின் துயர் நீங்க இராவண வதம் நிகழ. இம்மண நாள் மூலவித்து ஆவதும் தோன்ற''எல்லையில் நலத்த பகல்'' என்றார்.*

***1157 'வாளை உகள. கயல்கள் வாவி படி மேதி***
***மூளை முதுகைக் கதுவ. மூரிய வரால் மீன்***
***பாளை விரியக் குதி கொள் பண்ணை வள நாடா!***
***நாளை' என. 'உற்ற பகல்' நல் தவன் உரைத்தான்.***

***வாளை உகள*** *வாளை மீன்கள்துள்ளிக் குதிக்க;* ***கயல்கள் வாவிபடி மேதி மூளைமுதுகைக் கதுவ*** - *(அஞ்சிய) கயல் மீன்கள். நீர்நிலையில் கிடந்த எருமைகளின் தலையையும். முதுகையும் கவ்வ;* ***மூரிய வரால் மீன்*** - *வலிமை வாய்ந்த வரால் மீன்கள்;* ***பாளை விரியக் குதிகொள் பண்ணை வளநாட்*** - *பாளைகள் விரியும்படி (கமுக மரத்தில் தாவிக்) குதிக்கின்ற வயல் வளமுடைய கோசல நாட்டு மன்னனே!;* ***உற்றபகல் நாளை என நல் தவன் உரைத்தான்*** - *திருமணத்திற்குப் பொருந்திய நாள் நாளையாகும் என்று நல்லதவம் மிகுந்த விசுவாமித்திர முனிவன் உரைத்தான்.*

*தரசதன் முதலியோர் இருப்பிடம் செல்லலும்*

*கதிரவன் மறைதலும்*

***1158. சொற்ற பொழுதத்து. அரசர்***
***கைதொழுது எழ. தன்***
***ஒற்றை வயிரச் சுரி கொள்***
***சங்கின் ஒலி பொங்க.***
***பொன்-தடமுடிப் புது***
***வெயில் பொழிதர. போய்.***
***நல் தவர் அனுச்சை கொடு.***
***நல் மனை புகுந்தான்.***

***சொற்ற பொழுதந்து*** - *(இங்ஙனம் கோசிக முனிவன்) கூறிய பொழுதில்;* ***அரசர் கைதொழுது எழ*** - *(தசரதன்) மற்றையரசர் எல்லோரும் தன்னைக் கைகூப்பி அஞ்சலி செய்து எழவும்;* ***தன் ஒற்றை வயிரச் சுரிகொள் சங்கின் ஒலிபொங்க*** - *தனக்கு உரிய ஒப்பற்ற வயிரப் பூண் அணிந்த. உள்சுழிகின்ற (வெற்றிச்) சங்கின் ஒலி பொங்கியெழவும்;* ***பொற்றடமுடிப் புது வெயில் பொழிதரப் போய்*** - *பொன்னாலான (தன்) அகன்ற மணிமகுடம் இளவெயில் வீசச்சென்று;* ***நல்தவர் அனுச்சைகொடு நல்மனை புகுந்தான்*** -*சிறந்த முனிவர்களின் இசைவைப் பெற்றுக்கொண்டு (தனக்குரிய) சிறந்த மாளிகைக்குச் சென்றடைந்தான்.*

*நில அரசர்கள் எழுந்து நின்று விடைதர. தவஅரசர்களைப் பணிந்து நின்று அனுமதி வேண்டி விடைபெற்றான் எனக் கூறி. தசரதனின் வீரமும் அருளின் ஈரமும் தோற்றுவித்த திறம் உணர்க. அனுச்சை - அநுமதி. இசைவு.*

***1159. அன்னம் அரிதின் பிரிய.***
***அண்ணலும் அகன்று. ஓர்***
***பொன்னின் நெடு மாட வரை***
***புக்கனன்; மணிப்பூண்***
***மன்னவர் பிரிந்தனர்கள்;***
***மா தவர்கள் போனார்;***
***மின்னு சுடர் ஆதவனும்.***
***மேருவில் மறைந்தான்.***

***அன்னம் அரிதின் பிரிய*** - *அன்னப் பறவை அனைய சீதை. இராமனைப் பிரியமனமின்றிப் பிரிந்த பின்பு;* ***அண்ணலும் அகன்று ஓர் பொன்னின் நெடுமாடவரை புக்கனன்*** - *அவ்வாறே இராமனும் சீதையைப் பிரிய மனமின்றி அம்மண்டபத்தினின்றும் அகன்று பொன்மயமான மலைபோன்ற (தனக்குரிய) மாளிகையைச் சென்றடைந்தான்;* ***மணிப்பூண் மன்னவர் பிரிந்தனர்கள்*** - *மணியாபரணங்களை யணிந்த மன்னவர்களும் பிரிந்து. தத்தமக்குரிய இருப்பிடங்களைச் சென்றடைந்தனர்;* ***மாதவர்கள் போனார்*** - *பெருந்தவ முனிவர்களும் சென்றார்கள்;* ***மின்னுசுடர் ஆதவனும் மேருவில் மறைந்தான்*** - *ஒளிமின்னுகின்ற கிரணங்களையுடைய கதிரவனும் (பிரியமனமின்றி) மேருமலைக்கு அப்பாற் சென்று மறைந்தான்.*

*இயல்பு நவிற்சியிலும் தனியழகு தோன்ற உரைக்கும் கவிஞர் பிரானின் திறத்தை இப்பாடலிலும் காணலாம். தயரதன். இராமன் முதலிய தன் குலத்தோன்றல்கள் இருப்பிடம் அடைய. தானும் தன் ஓய்விடம் அடைவான்போல. மேருமலையில் கதிரவன் மறைந்தான் என்றார். தன்குலத் தோன்றல்களின் மகிழ்ச்சிப் பெருக்கைக் காண அவர்கள் இருக்கும்வரை வானில் இருந்தான் என்பது கருத்து. சூரியன் கிழக்கே உதயகிரியில் தோன்றி. மேற்கே அத்தமனகிரியில் மறைவதாகக் கூறுவது கவிமரபு ஆகும்*

## கடிமணப் படலம்

இராமபிரானுக்கும் சானகிக்கும் நிகழ்ந்த திருமணம்பற்றிய நிகழ்வுகளைக் குறிக்கும்பகுதி எனப் பொருள்படும். (கடி-சிறப்பு. உரிச்சொல்). மிதிலையில் அனைவரும் மகிழ்வில் திளைத்திருக்க. இராமனும் சீதையும் காதல் வேட்கையால் துயர் உறுகின்றனர். மணமுரசு அறைகிறது. நகரம் அணிபெறுகிறது. அழகிய மணமண்டபத்தில் தரசதன் முதலிய அனைவரும் குழுமுகின்றனர். மங்கல நீராடி மணக்கோலம் பூணுகின்றான் இராமபிரான். தேர்ஏறி மண்டபம் அடையுங்கால். வானத்துத் தேவர்கள் வாழ்த்தெடுக்கின்றனர். சீதையும் மணமண்டபம் அடைய. வசிட்டன் மணச்சடங்குகள் புரிகின்றான். தீவலம் செய்து. அம்மி மிதித்து அருந்ததி பார்க்க மணச்செயல்கள் இனிதே நிறைவுறுகின்றன. மாமியாரைச் சீதை வணங்க. அவர்கள் ஆசியும் அரும் பொருளும் பரிசாக அளிக்கின்றனர். இராமன் சீதையுடன் பள்ளியடைகிறான். வசிட்டன் மங்கல நெருப்பினை வளர்க்க. தம்பியர் மூவர்க்கும் மணம் நிகழ்கிறது. தரசதனும் சனகனும் விரும்புவார்க்கு விரும்புவன எல்லாம் அள்ளிக் கொடுத்து மகிழ்கின்றனர். தசரதன் சில நாட்கள் மிதிலையிலேயே தங்கிச் சிறப்பிக்கிறான். நாட்கள் சில மெல்ல நகர்கின்றன.

*மிதிலையில யாவரும் மகிழ்ந்திருத்தல்*

***1160.*** **இடம் படு புகழ்ச் சனகர் கோன் இனிது பேண.**
**கடம் படு களிற்று அரசர் ஆதி. இடை கண்டோர்.**
**தடம் படு புயத்த சிறு தம்பியர்கள்காறும்.**
**உடம்பொடு துறக்க நகர் உற்றவரை ஒத்தார்.**

***இடம்படு புகழ்ச் சனகர் கோன் இனிது பேண*** - *பரந்து விரிந்த புகழையுடைய சனக மன்னன் இனிமை தவழ உபசரித்த பாங்கினால்;* ***கடம்படு களிற்று அரசர் ஆதி*** - *மதம் பொழி ஆண் யானைகளையுடைய மன்னர்கள் முதலாக;* ***தடம்படு புயத்த சிறு தம்பியர்கள் காறும்*** - *அகன்ற தோள்களையுடைய அம்மன்னர்கள் முதல் இளவரசர்கள் வரையில் உள்ளோரும்;* ***இடை கண்டோர்*** - *இவ்விரு பாலோர்க்கும் இடை வரிசையிலே காணப்பட்டோரும் ஆகிய அனைவரும்;* ***உம்பொடு துறக்க நகர் உற்றவரை ஒத்தார்*** - *(இவ்வுலகத்திற்குரிய உடம்பை விடாமல்) இவ்வுடம்போடேயே சொர்க்க உலகின் தேவேந்திரன் தலைநகரான அமராவதி நகரையடைந்து விட்டவர்கள் போன்ற மகிழ்ச்சியை மிதிலை நகரத்தில் அடைந்தார்கள். விண்ணுலகத்து இன்பத்தை மண்ணுலகிலேயே அடைய வைத்தது சனகரின் இனிய விருந்து உபசரிப்பு எனச் சனக மன்னனின் விருந்தோம்பலின் பெருமை தெரிவித்தவாறு. "உடம்பொடு துறக்க நகர் உற்றவரை ஒத்தார்" என்பதனால் அவ்வாறு அடைதலின் அருமை தெரிவித்தார். நாவாரச் சிறந்த அமுதுண்ணல். கண்கள் ஆரக் கலை நிகழ்ச்சிகள் காண்டல். செவிகளார இனிய இசை கேட்டல் முதலியன விண்ணுலகத்திலிருப்பதுபோல் மிதிலையிலும் நிகழ்ந்தன என்பதாம். தவம் புரிவோர். இம்மையிலே துறக்க இன்பம் உறுவர் என்பது. "தவஞ்செய் மாக்கள் உடம்பு இடாது - அதன் பயன் எய்திய அளவைமான" (பொரு. 91 -92) என்னும் தொடரால் அறியலாம். இவர்களை. "சீவன் முக்தர்" என்பர். உடம்பொடு துறக்கம் உறுதலை. "மெய்யினோடு அருந்துறக்க முற்றார் என வியந்தான்" (கம்ப. 10106) எனவும் "உடல் உறு பாசம் வீசாது உம்பர் செல்வாரும் ஒத்தார்" (கம்ப. 4750) எனவும் மேலும் உரைப்பார். இதனைச் 'சதேக முத்தி' என்பர்.*

### சீதையின் சிந்தையும் சொல்லும்

*1161.* **தேட அரு நலத்த புனல் ஆசை தெறலுற்றார்.**
**மாடு ஓர் தடம் உற்று. அதனை எய்தும் வகை காணார்.**
**ஈடு அழிவுற. தளர்வொடு ஏமுறுவர் அன்றே?**
**ஆடக வளைக் குயிலும். அந்நிலையள் ஆனாள்.**

***தேட அருநலத்த னல் ஆசை தெறல் உற்றார்*** - *தேடிப்பெறுவதற்கு அரியதான தூய நீரைப்பருகும் வேட்கையால். வருத்தமுற்றவர்கள்;* ***மாடு ஓர் தடம் உற்று அதனை எய்தும் வகை காணார்*** - *அருகிலேயே ஒரு நீர்நிலை இருக்கக்கண்டும். அந்நீர்நிலையில் (இறங்கும் படிகள் இன்மையால்) அதனை அடையும் வழிவகை காணாதவராயின்.;* ***ஈடு அழிவுறத் தளர்வொடு ஏமுறுவர் அன்றே?*** - *தம் வலிமை குன்றிச் சோர்வுற்றுக் கலக்கம் அடைவார் அன்றோ?;* ***ஆடக வளைக் குயிலும் அந்நிலையள் ஆனாள்*** - *பொன்னலான வளையல்கள் அணிந்த குயில் போன்ற பிராட்டியும் அந்த நிலையினையடைந்து (இராம வேட்கையால்) தவித்துக் கலங்கினாள்.*

*"நீர் இன்றி அமையாது உலகு" (திருக். 20) ஆதலின். "தேட அரு நலத்த புனல்" என்றார். மாற்றுத் தேடற்கு அரியதான புனல் எனினுமாம். இராமபிரான் எனும் அழகின் தடாகம் அருகிலிருந்தும் திருமண நிகழ்வுகள் முற்றுறாமையால். சீதை நுகர இயலாமல் தவித்த தவிப்பை அழகுற விளக்கியவாறு. உவமையணி. ஓர் என்பது சந்த இன்பம் நோக்கி ஓர் என ஆயிற்று. பின் முன் வருவனவற்றிற்கும் இவ்வாறே கொள்க. ஏம் உறல் - கலக்கமுறல். வளையல் அணிந்த மணிக்குயில் ஒன்றிருந்தால். பிராட்டிக்கு உவமையாம் என்பார். "ஆடக வளைக்குயில்" என்றார். இல்பொருள் உவமை. ஆடகம் -கைவளை.*

*சீதை இரவொடு கூறல்.*

***(வேறு) கலிவிருத்தம்***

***1162. "உரவு ஏதும் இலார் உயிர் ஈதும்" எனா.***
***கரவே புரிவார் உளரோ? கதிரோன்***
***வரவே. எனை ஆள் உடையான் வருமே!-***
***இரவே! - கொடியாய். விடியாய்' எனுமால்.***

***இரவே! கொடியாய்!*** *- இரவுப்பொழுதே! கொடுமையை உடையாய்!;* ***உரவு ஏதும் இலார் உயிர் ஈதும் எனா*** *- வலிமை சிறிதும் அற்ற மெல்லியராகிய பெண்டிர்க்கு வாழ்வளிப்போம் என்று நினையாமல்;* ***கரவே புரிவார் உளரோ?*** *- வஞ்சனை புரிந்து உயிர்வாங்குவார் உள்ளனரோ? (உள்ளனர் என உன்னால் உணர்ந்தேன்);* ***கதிரோன் வரவே எனை ஆள் உடையான் வருமே!*** *- நாளைப்பொழுது புலர்ந்தவுடனே. என்னை ஆளாக உடைய எம்பெருமான் இராமன் (என்னருகே) வந்து விடுவானே!;* ***விடியாய்! எனும்*** *- விரைவில் விடிந்து விடு! (இன்றேல் வீரர்க்கு வீரனாகிய அவனைக் கொண்டு உன்னைத் தண்டிப்பேன்) என்று சீதை இரவை நோக்கிக் கூறினள்.*

*காதல் நோய் மாலை மலர்ந்து இரவில் காய்த்து வருத்துதல் இயல்பு. காதல் நோயாளர்க்கு ஓர் இரவு பலயுகமாகத் தோன்ற. பேசாதவற்றிடம் எல்லாம் பேசிப்புலம்பலும். கேளாதவற்றிடம் எல்லாம் அவை கேட்பது போலப் பேசலும் இயல்பு ஆகும். (தொல். பொருளியல். 2) இனி வருவனவற்றிற்கும் இது பொருந்தும். பெண்கள் அபலைகள் எனப்படுதலால் "உரவு ஏதும் இலார்" என்றார். துணையற்ற பெண்களிடம் இகலுதல் என்ன வீரம்? என்பது குறிப்பு.*

*நெஞ்சொடு கூறல்.*

***1163. கரு நாயிறு போல்பவர் காலொடு போய்.***
***வரு நாள். அயலே வருவாய்;- மன்னே!-***
***பெரு நாள். உடனே. பிரியாது உழல்வாய்;***
***ஒரு நாள் தரியாது ஒழிவார் உளரோ?***

***மன்னே!*** *-என் மனமே!;* ***கரு நாயிறு போல்பவர் காலொடு போய்*** *- கரிய நிறமுடைய ஒரு சூரியனைப் போன்ற இராமனின் திருவடியோடு கூடவே சென்று;* ***வரு நாள் அயலே வருவாய்*** *- அவன் திரும்பி வருகின்ற நாளில் (அவன் காலோடேயே திரும்பி) என் அருகில் வருவதாக இருக்கிறாய்!;* ***பெருநாள் உடனே பிரியாது உழல்வாய்!*** *- நான் பிறந்த நாள் தொட்டுப் பலநாட்களாய் என்னோடயே சுற்றித் திரிந்து வந்த நீ!;* ***ஒருநாள் திரியாது உழல்வார் உளரோ?*** *(இன்னும் ஒரு நாளில் நினைத்த பலன் கைகூட இருக்கையில். அந்த) ஒரு நாள் பொறுத்திருக்கமுடியாமல்(இத்தனை நாள். கூட வாழ்ந்திருந்தாரைக்) கைவிட்டு நீங்குவார் (உன்னையன்றியுலகில் வேறு எவரேனும் உளரோ?.*

*'ஆத்திரக்காரர்க்குப் புத்தி மட்டு' என்பாராதலின். ஒரு நாள்தரியாது உழல்வதாக மனத்தைச் சாடினாள் பிராட்டி. உலகத்துப்பொருள்கள் இராமன் திருமேனிக்கு ஒவ்வாமையுணர்ந்து. "கரு ஞாயிறு போல்பவர்" என்று இல்பொருளை உமையாக்கினாள். இராமனைக் "கைவளை திருத்துபு கடைக்கணின் உணர்ந்த" காலந்தொட்டு. அவள் நெஞ்சு அவளைத் துறந்து இராமன் திருவடியைத் தொடர்ந்து சுற்றிதிரிவதாயிற்று. இதனால். இராமன் திருவடியழகு. சீதை நெஞ்சிற்பதிந்து நின்ற நிலையைக் கவிச்சுவையொடு கவிஞர்பிரான் அறிவித்தவாறு. நான் தோன்றிய நாள் தொட்டு என்னோடிருந்த நீ. இடையே ஒரு நாள் அவரைக்கண்டவுடன் என்னைக் காணாது அவரோடு ஏகினாயே! என்று இரங்குகின்றாள். நாளை அவர் என்னருகில் வருவார். அவர் காலைச் சுற்றிக்கொண்டிருக்கிற நீ. அப்போது என்னிடம் வந்து தானே ஆக வேண்டும் என்பாள். "வரு நாள் அயலே வருவாய் மனனே!" என்றாள். ஆக்கப்பொறுத்தும் ஆறப்பொறாதது போல். இன்னும் ஒரு நாள் பொறாமல் அவர் உடன் ஓடிவிட்ட உன்னைப்போல் யாருளார்?" ஒரு நாள் தரியாது ஒழிவார் உளரோ?" என்றாள். "மண்வழி நடந்து அடி வருந்தப் போனவன்" (கம்ப. 535) எனவும். "நடந்தது கிடந்தது என் உள்ளம் நண்ணியே" (கம்ப. 537) எனவும் பிராட்டி. பெருமானின் திருவடிக்கும் நடைக்கும் மனம் பறிகொடுத்ததை முன்பும் கூறினார்.*

*அன்றிலொடு கூறல்*

***1164. 'கனை ஏழ் கடல்போல். கரு நாழிகைதான்.***
***வினையேன் வினையால் விடியாவிடின். நீ***
***தனியே பறவாய்; தகவு ஏதும் இலாய் -***
***பனைமேல் உறைவாய்! - பழி பூணுதியோ?***

***பனைமேல் உறைவாய்*** *- பனைமரத்தின் மேல் தங்குகின்ற அன்றில் பறவையே!;* ***கனை ஏழ்கடல்போல்*** *- ஒலியெழுப்பும் எழுகடலைப் போல;* ***கரு நாழிகை*** *- இரவு;* ***வினையேன் வினையால்*** *- இராமனையடைய முயலும் அடியேனின் (தீ) வினைப்பயனால்;* ***விடியாவிடின்*** *- விடியாமல் போய்விட்டால்;* ***தகவேதும் இலாய்*** *- (தனித்திருப்போரைச் சோடியாகச்சென்று வருத்துதல் கூடாது என்னும்) பண்பாடு சிறிதும் இன்றி;* ***தனியே பறவாய்*** *- தனித்துப்பறவாமல் உன்துணையோடு பறக்கின்றாய்!;* ***பழிபூணுதியோ?*** *- ஏன் (துணையற்றாரைத் துன்புறுத்தும் இத்தகைய) பழிச்செயல்களை(த்துணிந்து) மேற்கொள்கின்றாய்?.*

*கரு நாழிகை - அன்மொழித்தொகையாய் இரவைக் குறித்தது. தனித்திருக்கும் காதலர்க்கு. இணைந்திருப்பார் காட்சி மிகத் துன்புறுத்தும் ஒன்றாதலின். தனியே பறவாய் (இணைந்து பறந்து) பழிபூணுதியோ என்றாள்.*

*நிலவு. இரவு. தென்றல். அன்றில். கடல் முதலிய பொருள்கள் காமத்தை மிகுவிக்கும் பொருள்கள் ஆதலால் அவற்றைக் "காமோத்தீபகம்" என்பர். பின் வரும் பாடல்களில் அவை பேசப்படுதல் காணலாம். கரு நாழிகை - கரிய நேரம் - இருள். "கரும் பொழுது அகலும் முன்னே கொல்லுதல் கருமம் என்றான்" (வில்லி. கிருட். தூ.17) என வருதல் காண்க. பிரிந்திருப்பார்க்கு இரவு எல்லை காணாத ஒன்றாய் நீளுதலின் எல்லை காணாக்கடலை உவமித்தார். அதுவும் ஒரு கடல் அன்று என்பார். "கனை ஏழ் கடல்" போல் கரு நாழிகை என்றார். அன்றில் காதல் அன்பிற்குப் புகழ்பெற்ற பறவை. "அன்றில் ஒரு கண் துயின்று. ஒரு கண் ஆர்வத்தால் இன்றுணை மேல் வைத்து உறங்கும்" (நள. வெ. சுயம். 117) காதலர். (பனை) மடல் ஏறுதல் பழிப்புக்குரிய செயல் எனும் மரபும் தொனிக்க. "பனைமேல் உறைவாய் பழி பூணுதியோ?" என்றுரைத்த நயம் காண்க.*

*நிலாவிடம் கூறல்.*

***1165. 'அயில் வேல் அனல் கால்வன ஆம்; நிழல் ஆய்.***
***வெயிலே என நீ விரிவாய்;- நிலவே!***
***செயிர் ஏதும் இலார். உடல் தேய்வு உறுவார்.***
***உயிர் கோள் உறுவார். உளரோ? உரையாய்!***

***அயில் வேல். கனல். கால்வன ஆம்*** *- கூரிய வேலின் துளைக்கும் கொடுமையையும் தீயின் வெப்பத்தையும். உமிழ்கின்றனவாகிய;* ***நிழல் ஆய் வெயிலே என நீ விரிவாய் நிலவே!*** *- ஒளிக்கிரணங்களைக் கொண்டு. சுடுவதில் வெயில்போலப் பரவுகின்ற சந்திரனே!;* ***செயிர் ஏதும் இலார் உடல் தேய்வுறுவார்*** *- வன்மம் ஏதும் இல்லாதவர்களும். (பிரிவுத்துயரால்) உடல் தேய்ந்து வருபவர்களுமாகிய (மெல்லியலாராகிய) பெண்களின்;* ***உயிர்கோள் உறுவார் உளரோ? உரையாய்!*** *- உயிரைப்பறிப்பவர்கள் உன்னையன்றி உலகில் வேறு ஒருவர் உள்ளாரோ? நீயே சொல்வாயாக.*

*பெண்டிரைப்பேணல் பேரறம்: பெண்டிரைக்கோறல் பெரும் பாவம் என்னும் பண்டையறம் ஒன்று பகர்ந்தவாறு. நிலவொளி பிணைந்தார்க்குப் பேரின்பமும். பிரிந்தார்க்குப் பெருந்துன்பமும் தருவது ஆதலின். பிரிந்துள்ள பிராட்டி. நிலவினை உயிர்கோள் உறுவார் என்றாள்.*

*நான் உடல் தேய்வது போல். நீயும் உடல் தேயும் வழக்கம் உடையையன்றோ? அத்துயர் உனக்குத் தெரியாதா? என்பாள். "உடல் தேயுறுவார் உயிர் கோள் உறுவார் உளரோ?" என்றாள். உடல் மெலிந்தார் உயிர்கொள்வது இரக்கம் அற்ற செயல் என்பதாம். பிரிந்தார்க்கு நிலவின் ஒளி. "அனல் கால்கின்ற நிழல்" ஆகும். இல்பொருள் உவமை. கூரிய வேலின் துளைப்பினைப் போல் நிலாக்கதிர் துளைக்கும்; அத்துளை வழியே நெருப்பு நுழையும் என்பார். "அயில் வேல் அனல் கால்வன" என்றார். நின் ஒளி நிழல் வேடத்தில் வரும் தகிக்கும் வெயில் என்பார். "நிழல் ஆய் வெயிலே" என்றார். உனக்கும் எனக்கும் முன்னைய வன்மம் ஏதும் இல்லையே! பின் ஏன் என்னை இங்ஙனம் வருத்துகின்றாய்? என்பாள் "செயிர் ஏதும் இலார் உயிர்கோள் உறுவார் உளரோ?" என்றாள். செயிர் வன்மம்.*

தென்றலிடம் கூறல்

***1166.* ‘மன்றல் குளிர் வாசம் வயங்கு அனல் வாய்.**
**மின் தொத்து. நிலா நகை. வீழ் மலயக்**
**குன்றில். குல மா முழையில். குடிவாழ்**
**தென்றற் புலியே! இரை தேடுதியோ?**

**வீழ்மலயக் குன்றில் குலமா முழையில் குடிவாழ் தென்றல் புலியே!** - *விரும்பப்படும் தென்பொதிகை மலையில் உள்ள சிறந்த பெரிய குகைகளைக் குடியிருப்பாகக் கொண்ட தென்றல் எனும்புலியே;* **மன் றல் குளிர் வாசம்** - *நறுமணத்திற்கும் குளிர்ச்சிக்கும் இடமான நீ;* **வயங்கு அனல் வாய்** - *நெருப்புக்கக்கும் வாயினைக்கொண்டு;* **மின்தொத்து நிலாநகை** - *ஒளியுடைய நிலாக்கற்றைகளைப் பற்களாக்கி;* **இரை தேடுதியோ?** - *(என்போன்று பிரிந்து வாடும் பெண்டிரின் உயிரை) இரையாகத் தேடிப் புறப்பட்டு விட்டாயோ?.*

*பிரிந்தார்க்குத் துயர்தந்து விழுங்குமாதலின். தென்றலும் புலியாயிற்று; அதன் குளிர்மணம் அனலாக ஆயிற்று. நிலாக்கற்றை பற்களாயிற்று. அதன் மெது நடை பாய்ச்சலாயிற்று; அதன் உலாவல் இரைதேடுதல் ஆயிற்று. மணக்கும்போது. குளிர்ச்சியும் நறுமணமும் உடைய உன் வாய். பிரிந்திருக்கும் இப்போது. "வயங்கு அனல் வாய்" ஆயிற்றே என்று இரங்குகின்றாள். மன்றல் - மணம். மெல்லிய தென்றலை. கவி. தன் சொல் ஆற்றலால் வலிய புலியாக்கிக் காட்டும் திறம் காண்க.*

***1167.* ‘தெருவே திரிவார். ஒரு சேவகனார்.**
**இரு போதும் விடார்; இது என்னை கொலாம்?**
**கரு மா முகில் போல்பவர். கன்னியர்பால்**
**வருவார் உளரோ. குல மன்னவரே?**

**ஒரு சேவகனார் தெருவே திரிவார்** - *ஒப்பற்ற வீரர் ஒருவர் (இங்கே) தெருவிடத்தே திரிகின்றார்;* **இரு போதும் விடார்** - *பகல் இரவு என்னும் இரண்டு வேளைகளிலும் என்னைவிட்டு நீங்குவதும் இல்லை;* **இது என்னை கொல்ஆம்?** - *(தெருவிலும் என்னிடத்திலுமாக) ஒருவரே இரண்டிடத்திலும் இருப்பது எப்படிச் சாத்தியமாம்?;* **கருமாமுகில் போல்பவர்** - *கரிய மேகம்போன்ற திருமேனியுடைய அவர்;* **குல மன்னவர்** - *(மகளிரைக்காக்கும் குலமாகிய) மன்னர் குலத்தவர் ஆவார்;* **கன்னியர்பால் வருவார் உளரோ?** - *அப்படி மதிப்புக்குரிய மன்னவர் தனித்திருக்கும் கன்னியரிடம் (கண்ணியமின்றி) இப்படி விடாமல் வந்து தொல்லை தருவாரோ?.*

*கன்னியரை ஓயாது சுற்றல் குல மன்னர்க்கு மாண்பு தருவதாகாது எனப் பழிப்பது போல் புகழ்ந்து. இராமன் தன் நெஞ்சிலும் நினைவிலும் நீங்கா இடம் பெற்றுவிட்டதை நயமுடன் எடுத்தியம்பியவாறு. கன்னியாகிய என்னிடம் கருணை மழை பொழிவார் என்னும் குறிப்பை. "கருமா மழை போல்பவர்" என்பதனால் வெளிப்படுத்தினார். கன்னிமாடத்தில் நின்று. இராம பிரானைத் தெருவில் கண்ட காட்சி. கண்ணிலேயே நிற்பதனால் "தெருவதிரிவார்" என்றாள். அக் காட்சி. வீரருள் வீரராகிய சேவகக் கோலமாய்ப் பதிந்துள்ளது என்பாள் "ஒரு சேவகனார்" என்றாள். தொல்லை கொடுப்பார் பகலோ இரவோ ஒரு நேரத்தில்தான் கொடுப்பர்;இவரோ "இருபோதும்விடார்" என்றாள். இரவில் கனவிலும் பகலில் உரு வெளியிலும் ஓயாது. பெருமானின் சேவகக்கோலம். பிராட்டியின் கண்முன் நின்றது என்பதாம். "துஞ்சுங்கால் தோள் மலர் ஆகி. விழிக்கும்கால். நெஞ்சத்தர் ஆவர் விரைந்து" (திக்.1218) எனும் அருமைக் குறளை நினைவு கூர்க. ஒரு குல மன்னவர். கன்னியரை. இருபோதும் விடாமல் சுற்றுவது நாகரிகச் செயலாகத் தெரியவில்லை என்பதாம். திரிதல் பலகால் செல் லல். இருபோதும் தெருவே திரிவார்; இருபோதும் கன்னி மாடத்திருக்கும் என்னையும் விடார்; இது எப்படி நிகழ்தல் சாத்தியம்? என்று வியக்கிறாள். எங்கும் நிறைதன்மையை எடுத்துக் குறிப்பால் உணர்த்தியவாறு*

. இரவைப் பழித்தல்

***1168.*** **'தெருளா வினை தீயர் சேர் நரகோ?**
**அருளான் நெறி ஓடும் அவாவதுவோ?**
**கருள் ஆர் கடலோ? கரை காண்பு அரிதால்! -**
**இருளானதுதான் - எனை ஊழிகொலாம்?**

***இருளானது தான்*** - *(இங்குச் சூழ்ந்துள்ள) இருள் என்று சொல்லப்படுவதுதான்;* ***தெருளா வினை தீயவர் சேர் நரகோ*** - *தெளிவற்ற பாவச் செயல்களைச் செய்வார் சென்றடையும் நரகமே தானோ? (இந்த இருளில்);* ***அவா அதுவோ அருளான் நெறி ஓடும்*** - *என்னுடைய காதல் வேட்கையோ. என்னிடம் இன்னும் அருள் காட்டாதவனாகிய இராமன் இருக்கும் இடமே நோக்கி ஓடுகின்றது!;* ***கருள் சேர் கடலோ?*** - *(விடிந்தால் அவனை அடையலாம் எனில்) (இந்த இரவோ) கருமை நிறைந்து (எல்லையற்ற தாதலின் கடல் என முன்நிற்கிறது);* ***கரை காண்பு அரிதால்*** - *(இவ்விரவு எனும் கடல் மெல்லியலாள் ஆகிய நான்) நீந்திக் கடந்து கரை காண்பதற்கும் அரிதாகிறது;* ***எனை ஊழி கொல் ஆம்?*** - *எத்தனை ஊழிக்காலம் சேர்ந்து (இந்த ஓர் இரவு) ஆகியுள்ளது?*

*பிரிவில் தவிப்பார்க்கு ஒரு நொடியும் ஒரு யுகமாகத் தோன்றும் ஆதலால் ''எனை ஊழி கொலாம்'' என்று பிராட்டி தவித்தனள் என்க. எனை - எத்தனை. ''ஒருநாள் எழுநாள் போல் செல்லும் சேண் சென்றார் வருநாள் வைத்து ஏங்குபவர்க்கு'' (திருக். 1296) எனும் கூற்றையும் ஒப்பிடுக. கடல் நீந்தற்கு அரியது என்பாள் ''இருள் கருள் சேர் கடல்; கரை காண்பு அரிது'' என்றாள். ''காமக் கடும் புனல் நீந்திக் கரை காணேன்; யாமத்தும் யானேயுளேன்'' (திருக் 1167); ''இன்பம் கடல் மன்னும் காமம்; அஃது அடுங்கால். துன்பம் அதனில் பெரிது'' (திருக். 1166*

*9*

***1169. 'பண்ணோ ஒழியா; பகலோ புகுதாது;***
***எண்ணோ தவிரா; இரவோ விடியாது;***
***உள் நோவு ஒழியா; உயிரோ அகலா;***
***கண்ணோ துயிலா; இதுவோ கடனே?***

***பண்ணோ ஒழியா*** - *(நகரின்) இசைகளோ அடங்குவதாக இல்லை;* ***பகலோ புகுதாது*** - *பகற்பொழுதோ வந்தடைவதாக இல்லை;* ***எண்ணோ தவிரா*** - *(இராமனைப் பற்றிய) எண்ணங்களோ நீங்குவதாக இல்லை;* ***இரவோ விடியாது*** - *(இந்தக் கொடிய) இரவுப் பொழுதோ விடிவதாக இல்லை;* ***உள் நோவு ஒழியா*** - *(என்) உள்ளத்துத் துன்பங்களோ ஒழிவதாக இல்லை;* ***உயிரோ அகலா*** - *என் உயிரும் உடம்பை விட்டு அகலுவதாகவும் இல்லை;* ***கண்ணோ துயிலா*** - *என் கண்களும் உறங்குவதாகவும் இல்லை;* ***இதுவோ கடனே?*** - *இங்ஙனம் வருந்தித் தவிப்பதோ பெண்ணாய்ப் பிறந்த எனது கடமையானது?*

*''உயிரோ அகலாது'' எனற்பாலது - ''உயிரோ அகலா'' என வந்தது செய்யுள் ஆதலின் வந்த ஒருமை பன்மை மயக்கம். துயரங்கள் அடுக்கடுக்காக வருவதைப் போல் வாக்கியங்களையும் அடுக்கடுக்காக அடுக்கிக் காட்டுகிறார். ''பஞ்சப்பிராணன்'' என்பதனால் ''உயிரோ ஒழியா'' எனப் பன்மையால் கூறினார் எனவுமாம்.*

*கடலிடம் உரைத்தல்*

***1170. ‘இடையே வளை சோர. எழுந்து. விழுந்து.
அடல் ஏய் மதனன் சரம் அஞ்சினையோ?
உடல் ஓய்வுற. நாளும். உறங்கலையால்!-
கடலே!- உரை! நீயும். ஒர் கன்னிகொலாம்?”***

***கடலே!*** *- சமுத்திரமே!;* ***இடையே வளை சோர எழுந்து விழுந்து*** *- உன் இடத்திலிருக்கும் வளைகள் (சங்குகள்) விழும்படி எழுந்திருந்து. (நிற்க ஆற்றலின்றி உடனே) கீழே விழுந்து;* ***உடல் ஓய்வு உற நாளும் உறங்கலையால்*** *- உடல். செயலின்றிச் சோர்வுமுற்ற. நாள்தோறும் (இரவிலும் கூட) என்னைப் போலத் தூங்குகிறாய் இல்லை;* ***ஆதலால். நீயும் ஒர் கன்னி கொல் ஆம்*** *- நீயும் (என்னைப் போலவே) மணமாகாத ஒரு மங்கையா?;* ***அடல் ஏய் மதனன் சரம் அஞ்சினையோ? உரை*** *- (என் போலவே) நீயும் ஆற்றல் மிக்க மன்மதனின் அம்புகளுக்கு அஞ்சித் தவிக்கின்றாயோ? (எனக்கு) உரைப்பாயாக.*

*‘‘காமுற்ற கையறவோடு எல்லே இராப்பகல். நீ முற்றக்கண் துயிலாய். நெஞ்சுருகி ஏங்குதியால். தீமுற்றத் தென் இலங்கையூட்டினான் தாள் நயத்த. நாம் உற்றது உற்றாயோ வாழி கனை கடலே’’ எனும் நம்மாழ்வாரின் திருவாய்மொழிப் (2:2:3) பாசுரத்தை அடியொற்றியுள்ளது இப்பாடல். உடல் மெலிதலும். வளை சோர்தலும். எழுதலும். வீழ்தலும். உறங்காமையும் சீதைக்கும் கடலுக்கும் பொதுவாதல் காண்க. சிலேடையணி. நீயும் - இறந்தது தழீஇய எச்ச உம்மை.*

*இரவில் இராமனது எண்ண அலைகள்*

***1171. என. இன்னன பன்னி. இருந்து உளைவாள்.
துனி உன்னி. நலம்கொடு சோர்வுறுகால்.
மனை தன்னில். வயங்குறும் வைகு இருள்வாய்.
அனகன் நினைகின்றன யாம் அறைவாம்;***

***என இன்னன பன்னி இருந்து உளைவாள்*** *- என்று இவ்வாறான வார்த்தைகளைப் பலமுறையும் சொல்லிச் சொல்லி வருந்துபவளாய்;* ***துனி உன்னி. நலம் கொடு சோர்வுறுகால்*** *- (தனக்கு வந்த) துன்பங்களை நினைந்து நினைந்து (பெண்மைக்குரிய நாண் முதலிய) குணங்களையும் விட இயலாமல் பற்றிக் கொண்டு (பிராட்டி) தளர்வுறுகின்ற அந்த இரவுப் பொழுதில்;* ***மனைதன்னில் வயங்குறும் வைகு இருள் வாய்*** *- (தனக்கு ஒதுக்கியுள்ள) திருமாளிகையிலே. இருள்மிகும் இரவுப்பொழுதிலே;* ***அனகன் நினைகின்றன யாம் அறைவாம்*** *- குறை கலவாத இராமபிரான் (மனத்தே) நினைவாய் நிகழ்கின்றனவற்றை (இனி) யாம் உரைப்போம்.*

*கவிக்கூற்று. அனகம்: குற்றம். குறை: பாவம்.*

*1172.* ***'முன் கண்டு. முடிப்ப அரு வேட்கையினால்.***
***என் கண் துணைகொண்டு. இதயத்து எழுதி.***
***பின் கண்டும். ஒர் பெண் கரை கண்டிலெனால்;-***
***மின் கண்டவர் எங்கு அறிவார் வினையே?***

***முன் கண்டு முடிப்பரு வேட்கையினால்*** *- முன்பே (அப்பெண்ணை) கன்னிமாடத்தில் கண்டு முடிவற்ற பெருங்காதலினால்;* ***என் கண் துணை கொண்டு*** *- என்னுடைய இரண்டு கண்கள் என்னும் தூரிகைகளைக் கொண்டு;* ***இதயத்து எழுதி*** *- என் இதயம் என்னும் திரையிலே (ஓவியமாக) எழுதி வைத்துக் கொண்டு;* ***பின் கண்டும்*** *- பின்பு (இன்று) நேரிலே பார்த்தும்;* ***ஓர் பெண் கரை கண்டிலென்*** *- அப்பெண்ணின் அழகு (ஓவியத்துக்கும் அடங்காது; கண்களுக்கும் அடங்காது) அது (எல்லையற்ற) கரை காணாப் பேர் அழகு என்பதனைக் கண்டு கொண்டேன்;* ***மின் கண்டவர் எங்கு அறிவார் வினையே?*** *- மின்னலின் ஒளியை நேரே பார்த்தவர்கள் (கண் ஒளி மங்கித் திகைப்பதேயன்றி) அவ்வொளிமயத்தை எங்ஙனம் வரைந்து காட்ட இயலும்.*

*சீதையின் அழகு வெளிச்சம் அடித்தவுடனே கண்கள் ஒளியிழந்து போகின்றன. ஆதலால் அவள் அழகு காண முடியாக் கடல் எல்லை போன்றாயிற்று என்க. பெண் - ஆகு பெயராய் அழகைக் குறித்து நின்றது. இறுதியடி. மின் ஒளியை நேரே பார்த்தவர்கள் கண் ஒளி மங்கிவிடுவதனால் அம்மின் ஒளியின் முழுத் தன்மையைத் தெரிந்திருப்பாய்; கூறுக என்றால் எங்ஙனம் கூற இயலும்? எனினுமாம். சீதையின் சமுதாய சோபை அழகால். அவயவ அழகைத் தனித்தனியாய்ப் பார்த்து முடிக்க இயலவில்லையென்று பெருமான் இரங்கினான் எனினுமாம். முன் கன்னிமாடத்தில் கண்டு மனத்தில் எழுதிக்கொண்ட ஓவியத்தை. பின் மணமண்டபத்தில் கண்ட உருவோடு ஒப்பிட்டுப் பார்க்கையில் கடல் அளவு அவள் அழகில் வேற்றுமை கண்டதனால் இவள் அழகு கரை காணாக் கடற் பேரழகு எனத் துணிந்தான் எனினுமாம். இதனைப் ''பின் கண்டும் ஓர் பெண் (அழகு) கரை கண்டிலெனால்'' என்றார் என்பதாம் - எடுத்துக்காட்டுவமையணி.*

*1173.* ***'திருவே அனையாள் முகமே! தெரியின்***
***கருவே. கனியே. விளை காம விதைக்கு***
***எருவே! மதியே! இது என் செய்தவா?***
***ஒருவேனொடு நீ உறவாகலையோ?***

**திருவே அனையாள் முகமே** - *திருமகள் போன்ற சீதையின் முகமண்டலம் போன்றவனே!;* **மதியே தெரியின் கருவே. கனியே விளைகாம விதைக்கு எருவே.** - *சந்திரனே! ஆராய்ந்தால் காய்களையும் கனிகளையும் உண்டாக்கிக் காமம் என்னும் விதை வளர எருவாக விளங்குகின்றாயே;* **இது என் செய்தவா?** - *இது என்ன காரியம் நீ செய்தது;* **ஒருவே னொடு நீ உறவு ஆகலையோ?** - *(கதாலித்தவளைக் கூடாது) தனித்திருக்கும் என்னோடு நீ நண்பனாக மாட்டாயோ? (பகைப்பதென்று முடிவோ?)*

*பிரிந்திருப்பார்க்குச் சந்திரன் பகைவன் என்பது இறுதியடியிற் கூறப்பட்டது. "முகமே தெரியின்" என்பது மோனை சிறத்தலால் அப்பாடமே கொள்ளப்பட்டது. உயிரின் எனும் பாடத்திற்கு உயிர்களின் தோற்றத்திற்கு மூல காரணமானவனே! என்பது பொருளாகும். உணவுக்குரிய பயிர்கள் முதலியன விளைவதற்குச் சந்திரன் ஒளியே மூலம் என்பர். கரு: காய். "காமம் கனியும் கருக்காயும் அற்று" (குறள்.) என்ப. திங்கள். காமத்தை மிகுவிக்கும் பொருள்களுள் மிகச் சிறந்த ஒன்றாதலின். "விளை காம விதைக்கு எருவே. கருவே. கனியே" என்றார். காலை அரும்பிப் பகல் எல்லாம் போதாகி. மாலை மலர்ந்து (குறள். 1227) நிலவொளியில் கனியாகிக் காமம் கனிந்து உயிர்த் தோற்றத்துக்கு உதவுவது என்றவாறு. கருவே கனியே என்பதற்கு கருக்காயாகிய துனியையும். கனியான புலவியையும் விளைக்கும் காமமாகிய விதைக்கு எருவே எனப் பொருள் கொள்ளலும் ஆகும். "துனியும் புலவியும் இல்லாயின் காமம் கனியும் கருக்காயும் அற்று" (திருக். 1306) என்பார் வள்ளுவனாரும்.*

***1174 'கழியா உயிர் உந்திய காரிகைதன்***
***விழி போல வளர்ந்தது; வீகிலதால்;***
***அழி போர் இறைவன் பட. அஞ்சியவன்***
***பழி போல. வளர்ந்தது - பாய் இருளே!***

***பாய் இருள்*** *- எங்கும் பரவியுள்ள இருளானது;* ***கழியா உயிர் உந்திய காரிகை தன் விழிபோல வளர்ந்தது; வீகிலதால்*** *- என் உடலினின்றும் நீங்காத உயிரை வெளியே உந்தித் தள்ளும் சீதையின் விழியின் கருமை போல வளர்ந்து நின்றது; குறையும் பாட்டைக் காணோம்;* ***இறைவன் அழிபோர் பட அஞ்சியவன் பழி போல வளர்ந்தது*** *- (தன்னைக் காத்த) மன்னன் அழிகின்ற போரில் பகைவரால் மரணம் உற. தன் உயிருக்கு அஞ்சி (அவனைப் பாதுகாவாமல் கைவிட்டோடிய) ஒரு படை வீரனின் பழி வளர்வது போல் (மேன்மேலும்) வளர்ந்தது. 'புரந்தார் கண் நீர் மல்கச் சாக' (குறள். 780) வேண்டியவன. ஊறு வந்தபோது தலைவனைக் கைவிட்டு. உயிர் கொண்டோடிய பழி. உலகம் உள்ளளவும் தேயாது வளரும் எனும் நீதியுரைத்தவாறு. "அமர் அகத்து ஆற்று அறுக்கும் கல்லாமா அன்னார் தமரில் தனிமை தலை" (814) என்னும் திருக்குறள். போரில் தலைவனுக்காக உயிர் தருபவன் நடுக்கல்லாய்க் காலத்தை வென்று நிற்பான்; கைவிட்டோடியவன் படுபழியாய்க் காலம் உள்ளளவும் நிற்பான்; காலம் செல்லச் செல்ல அவன் பழி வளரும் என்றவாறு. பருகிய நோக்கு எனும் பாசத்தால் (கம்ப. ) பிராட்டி பிணித்து. கண்ணொடு கண்ணிணை கல்வி நோக்கிய நோக்கு எனும் நுதிகொள் வேல் இணையால் (கம்ப. 515) பிராட்டி பெருமானைத் தாக்கித் துயருறுத்தி உள்ளாள் ஆதலால். "கழியா உயிர் உந்தியகாரிகை" என்றான். `அவள் விழி நடத்திய போராட்டம் நெஞ்சில் நிலைத்திருப்பதனால். உயிர் உந்திய காரிகை தன் விழி போல் இருள் வளர்ந்தது என்றான். "கடலினும் பெரிய கண்கள்" (கம்ப. 3136) அவட்கு அன்றோ? - உவமையணி.*

***1175. 'நினைவாய் ஒரு கால்; நெடிதோ நெறிதான்?***
***வினவாதவர்பால். விடை கொண்டிலையோ? -***
***புன மான் அனையாரொடு போயின ஏன்***
***மனனே! - எனை நீயும் மறந்தனையோ?***

***புன மான் அனையாரொடு போயின என் மனனே!*** *- வனத்தில் வாழும் மானைப் போன்ற பார்வையினையுடைய சீதையோடு உடன் சென்றுவிட்ட என் மனமே! ஒருகால் நினையாய் - என்னை ஒரு முறையேனும் நினைக்க எண்ணாயோ?;* ***நெறி தான் நெடிதோ?*** *- திரும்பி வரும் வழி மிகு தொலைவோ?;* ***வினவாதவர் பால் விடை கொண்டிலையோ?*** *- (நீ யார்? வந்தது எதற்கு?) என்று கூட உன்னைக் கேளாதவரிடமிருந்து உடனே விடை கொண்டு வந்துவிட வேண்டும் (எனும் அறிவும் உனக்கு) இல்லையாய் விட்டதோ?;* ***எனை நீயும் மறந்தனையோ?*** *- (அல்லது) என்னை அறவே (அவளைப் போல) மறந்தே போனாயோ?*

மதியாதவர் இல்லம் மிதியாமை சிறப்பாயிருக்க இன்னும் ஏன் நீ அங்குக் கிடந்து தவிக்கின்றாய்? உடனே திரும்பிவிட வேண்டியதுதானே? என்பான். "வினவாதவர் பால் விடை கொண்டிலையோ?" என்றான். "பிரிந்தவர் நல்கார் என்று ஏங்கிப் பரிந்து அவர் பின் செல்லும் என் பேதை நெஞ்சு" *(குறள். 1248)* என்று வள்ளுவக் காதலனும் ஏங்குவான். 'நீயும் மறந்தனையோ?' என்பதில் உள்ள உம்மை அவளேயன்றி நீயும் என்னும் பொருள் தந்து நின்றது. இறந்தது தழீஇய எச்ச உம்மை. கணப்பொழுதும் என்னை விட்டு நீங்கா நீயும் - என்னும் உயர்வு சிறப்புப் பொருளும் உடன் தந்து நின்றது. வாயு வேகத்திலும் விரைவாகச் செல்லவல்லது மனவேகம் என்பார்கள். அத்தகைய என் மனமாகிய உனக்கு. அடுத்திருக்கிற அரண்மனையைத் தாண்டி என்னிடம் வந்து சேர நெடுந் தொலைவாகிவிட்டதோ? என்பான். "நெடிதோ நெறிதான்?" என்றான். மனத்திற்கு இன்றியமையாப்பண்பு. செய்ந்நன்றி மறவாமையாயிருக்க. இத்துணை நாள். நான் வளர்த்த நீ. அந்நன்றி துறந்து என்னை மறந்து அவளை நினைந்து என்னை ஒரு முறை கூட நினையா நிலை பெற்றனையே என ஏங்குவான். "நினையாய் ஒருகால்" என்றான். பலகால் வேண்டா; ஒருகால் நினைத்திருக்கலாம் என் பான். "ஒருகால்" என்றான். வினவாதவர் எனப் பிராட்டியைப் பலர்பாலாற் கூறுவது உலகப் பொதுக் கருத்து உரைத்தவாறு.

***1176. 'தன் நோக்கு எரி கால். தகை. வாள் அரவின்***
***பல் நோக்கினது என்பது பண்டுகொலாம்;***
***என் நோக்கினும். நெஞ்சினும். என்றும் உளார்***
***மென் நோக்கினதே - கடு வல் விடமே!***

கடுவல்விடம் - மிகக் கொடிய வலிமை வாய்ந்த விடமானது; **தன் நோக்கு எரிகால் தகைவாள் அரவின் பல் நோக்கினது** - தன் கண்களினின்று தீ கக்கும் தன்மையுடைய வாள் போற் கொடிய பாம்பினது பல்லை இடமாகக் கொண்டுள்ளது; **என்பது பண்டு கொல் ஆம்** - என்பது பழைய செய்தி போலும்; **என் நோக்கினும் நெஞ்சினும் என்றும் உளார் மெல் நோக்கினது** - (இப்பொழுதோ அக்கொடிய நஞ்சு) என் விழிகளிலும் நெஞ்சினிலும் எப்போதும் நீங்காது இருப்பவராகிய அந்நங்கையரின் குளிர்ந்த பார்வையையே இடமாகக் கொண்டுள்ளது என்பது தெளிவு ஆயிற்று.

சனகியின் பார்வை காதல் நோயை மிகுவித்துப் பெருந்துன்பம் தருவது குறித்து விடமாகக் கூறப்பட்டது. "இரு நோக்கு இவள் உண்கண் உள்ளது ஒரு நோக்கு நோய் நோக்கு" *(குறள். 1091)* என்பர் ஆதலின் நோய் நோக்கின் வலிமை குறித்தவாறு. இராமன் நோக்கியிருத்தல் உருவெளித் தோற்றத்தில் இருத்தல்; நெஞ்சில் இருத்தல் எப்போதும் நினைவாய் இருத்தல். நோக்கில் நஞ்சு எரிகால்வது ஒன்றை விலக்கிப் பிறிதொன்றாக நிறுவுவதால் அவநுதியணி.

*1177.* ***'கல். ஆர் மலர் சூழ் கழி. வார் பொழிலோடு.***
***எல்லாம் உளஆயினும். என் மனமோ-***
***சொல் ஆர் அமுதின் சுவையோடு இனிது ஆம்***
***மெல் ஓதியர்தாம் விளையாடு இடமே!****

***கல் ஆர் மலர்சூழ் கழி. வார் பொழிலோடு*** - *செய்குன்றுகளும். நிறைந்தமலர் சூழ்ந்த உப்பங்கழிகளும். நீண்ட மலர்ச் சோலைகளும் விளையாடும்;* ***எல்லாம் உள ஆயினும்*** - *மற்றும் பல ஆடிடங்களும் இடங்களாக இருக்கவும்;* ***சொல் ஆர் அமுதின் சுவையோடு இனிது ஆம்*** - *பேசும் சொற்களைப் பெறுதற்கரிய அமுதச் சுவையினும் இனியவாகப் பேசுகின்ற;* ***மெல் ஓதியர்தாம் விளையாடு இடம்*** - *மெல்லிய கூந்தலையுடைய அப்பெண்டிர் விளையாடும் இடமாகக் கொண்டது;* ***என் மனமோ*** - *என் மனந்தானோ?*

*உயர்பண்புடைய மகளிர். தலைவனது நெஞ்சினையே விளையாடுகளமாகக் கொள்வர். ஓயா நினைவில் அவர் உள்ளத்துலாவுதலால் விளையாடிடம் ஆயிற்று நெஞ்சம் என்க. மலைச் சோலை. கழிக்கானல் மலர்ப் பூங்கா எனப் பலப்பல ஆடிடங்கள். அரசிளங் குமரியாகிய அவளுக்கு விளையாடக் காத்திருக்க. என் மனத்தை ஏன் அவள் ஆடுகளமாகத் தேர்ந்தாளோ என வியந்தவாறு.* *மண முரசறையச் சனகன் ஆணை*

***(வேறு) கலிவிருத்தம்***

*1178.* ***மானவர் பெருமானும்.***
***மண நினைவினன் ஆக.***
***"தேன் அமர் குழலாள்தன்***
***திருமணவினை. நாளை;***
***பூ. நகு மணி வாசம்.***
***புனை நகர் அணிவீர்!" என்று***
***ஆனையின்மிசை. யாணர்.***
***அணி. முரசு அறைக!' என்றான்.***

***மானவர் பெருமானும்*** - *மனிதகுலத் திலகனாகிய சனகனும்;* ***மணநினைவினனாக*** - *(இராமன் சீதை இருவரின்) திருமணமே நினைவாக இருந்தான் ஆதலின்;* ***'தேன் அமர் குழலாள்தன் திருமணவினை நாளை*** - *வண்டுகள் விரும்பும் கூந்தலையுடைய சனகியின் திருமண நிகழ்வு. நாளை யாகும்;* ***பூநகு மணிவாசம் புனைநகர் அணிவீர் என்று*** - *மலர்களாலும் ஒளிர்கின்ற மணிகளாலும் நறுமணப் பொருள்களாலும். இயல்பாகவே அழகுடைய மிதிலை மாநகரை மேலும் புதிதாக அலங்கரிப்பீர்களாக என்று;* ***ஆனையின் மிசை யாணர் அணிமுரசு அறைக என்றான்*** - *யானையின் மேலே அழகிய அணிகள் அணியப்பெற்ற முரசினை ஏற்றி அதனை அடிப்பித்து (மக்கட்குத்) தெரிவியுங்கள் என ஆணையிட்டான்.*

*மணமுரசு. கொடை முரசு. விழாமுரசு. என மூவகை முரசுகளில் இது மணமுரசு என்பதனை. "மணம் நாளை அணிமுரசு அறைக" என்பதனால் தெரிவித்தார். ஆனாலும் இம் மணவிழாவில் பிறர்க்குக் கொடையளித்தலால் கொடைமுரசுமாய். மிதிலை நகரமே விழாக்கோலங் கொள்ளுதலால். விழாமுரசுமாய் மும்முரசுமாகி முழங்குவது இனிவரும்பாடல்களில் உணர்த்தப்படும். திருமண வினை நாளை என்பதனால். முரசறைந்தது முந்தைய நாள் இரவு எனக்கொள்க. இதுமுதல் இருபது கவிகளில் உள்ள சந்த இன்பம். கற்பார் உளத்தைக் களிகூர வைக்கும்.*

## மக்களின் மகிழ்ச்சி

***1179. முரசு அறைதலும். மான***
***முதியரும். இளையோரும்.***
***விரை செறி குழலாரும்.***
***விரவினர் விரைகின்றார்;***
***உரை செறி கிளையோடும்.***
***உவகையின் உயர்கின்றார்;***
***கரை தெரிவு அரிது ஆகும்***
***இரவு ஒரு கரை கண்டார்.***

***முரசு அறைதலும்*** *- (கட்டளைப்படியே) முரசு அறிவித்தவுடன்;* ***மான முதியரும் இளையோரும் விரைசெறி குழலாரும்*** *- பெருமைக்குரிய முதியவர்களும். இளையவர்களும். மணம்மிக்க கூந்தலையுடைய மகளிரும்;* ***விரவினர் விரைகின்றார்*** *- தம்மிற் கலந்தவர்களாய் (நகரை அழகு செய்ய) விரைந்தவராய்;* ***உரைசெறி கிளையோடும் உவகையின் உயர்கின்றார்*** *- சுற்றத்தாரோடு உரையாடிச் சீதை மணம் எண்ணி. களிப்பில் உயர்ந்தவராய்;* ***கரைதெரிவு அரிது ஆகும் இரவு ஒருகரை கண்டார்*** *- (என்று பொழுது விடியுமோ சீதைமணங்காண என்ற தவிப்பால்) கரைகாண இயலாததாய் நீண்டிருந்த அந்த இருட்கடலினைக் கடந்து விடியல் எனும் கரையினை அடைந்தவர் ஆயினர்.*

*விடியலை. ஒரு 'கரை' கண்டார் என்பதனால். இரவு கடல் ஆயிற்று. ஏகதேச உருவகம். இராமபிரானும் பிராட்டியும் விரகவேட்கையால் விடியலுக்கு ஏங்கித் தவித்தது போலவே. இவர் மணங்காணத் துடிக்கும் காட்சி வேட்கையில். மிதிலையிலிருந்து மக்களும் விடியலுக்கு ஏங்கியிருந்தனர் என்பதனை "கரை தெரிவு அரிதாகும் விடிவு ஒரு கரை கண்டார்" என்பதனால் உணர்த்தியதிறம் காண்க.*

சூரியன் தோற்றம்

***1180. ‘அஞ்சன ஒளியானும்.***
***அலர்மிசை உறைவாளும்.***
***எஞ்சல் இல் மணம். நாளைப்***
***புணர்குவர்’ எனலோடும்.***
***செஞ் சுடர் இருள் கீறி.***
***தினகரன். ஒரு தேர்மேல்.***
***மஞ்சனை அணி கோலம்***
***காணிய என. வந்தான்.***

**அஞ்சன ஒளியானும்** - அஞ்சன மை போன்ற கருநிறங் கொண்ட (திருமாலாகிய) இராமனும்; **அலர்மிசை உறைவாளும்** - தாமரைப் பூவில் வாழ்பவளாம் திருமகளாகிய சீதையும்; **எஞ்சல் இல் மணம் நாளைப் புணர்குவர் எனலோடும்** - நாளை (ஒருவகையிலும்) குறைவில்லாத திருமணம் கூடுவார்கள் என்று முரசறைந்த செய்தி கேட்டவுடன்; **தினகரன். மஞ்சனை அணிகோலம் காணிய எனச் செஞ்சுடர் இருள்கீறி ஒருதேர்மேல் வந்தான்** - சூரியன். தனது குல மைந்தனான இராமனின் திருமணக் கோலத்தைக் காணத் (அவாவிப் புறப்பட்டான் போல) தனது ஒப்பற்ற தேர்மேல் தன் சிவந்த ஒளிக்கற்றைகளால் இருளைக் கீறிக் (கீழ்வானில்) உதித்தான்.

குலப்பாட்டன் கொள்ளுப்பேரன் திருமணம் காண வந்தாற்போல வந்தான் எனச் சூரிய உதயத்தை இடம் காலத்திற்கேற்றவாறு புனைந்துரைக்கும் திறம் காண்க. ஏதுத்தற்குறிப்பேற்ற அணி.

அஞ்சனம் கருமை நிறம் உடையதேனும். அதுவும் ஒளி கூடியதாயின் இராமன் நிறத்துக்கு ஒவ்வும் என்பார். “அஞ்சன ஒளியானும்” என்றார். எனவே. கருமையில் ஒளிகூடின் காகுத்தன் நிறமாகும் என்றவாறு. “அலர் மிசை உறைவாளும்” என்பது. அஞ்சன ஒளியானின் இதய அலர்மிசை உறைவாளும் எனும் பொருளும் தோன்ற நிற்பது காண்க. அவள் விளையாடிடம் என் மனம் (கம்ப. 1177) என்று சற்று முன்பு பெருமான் கூறியுள்ளமை காண்க.

## நகரை அணி செயல்

***1181. தோரணம் நடுவாரும்.***
***தூண் உறை பொதிவாரும்.***
***பூரண குடம் எங்கும்***
***புனை துகில் புனைவாரும்.***
***கார் அணி நெடு மாடம்***
***கதிர் மணி அணிவாரும்.***
***ஆரண மறைவாணர்க்கு***
***இன் அமுது அடுவாரும்.***

**தோரணம் நடுவாரும் தூண்உறை பொதிவாரும்** - *(அந்நகரத்து மக்கள். அப்போது) தோரணங்களை வீதிகளில் நடுவார்களும். தூண்களுக்கெல்லாம் (பட்டு) உறைகளைப் பொத்துவார்களும்;* **பூரண குடம் எங்கும் புனைதுகில் புனைவாரும்** - *பூரண குடங்களை எங்கும் வைத்து. (அவற்றின்மேல்) அழகிய ஆடைகளை அணிவாரும்;* **காரணி நெடு மாடம் கதிர் மணி அணிவாரும்** - *மேகங்கள் (உச்சியில்) அணிந்திருக்கிற உயர்ந்த மாட வீடுகளில். ஒளியுடைய மணிகளைப் பதித்து அழகு செய்வாரும்;* **ஆரணமறை வாணர்க்கு இன் அமுது அடுவாரும்** - *வேதங்களில் உள்ள மறை பொருள்களை விளக்கும் திறமுடைய வேதியருக்கு இட இனிய உணவுகளைச் சமைப்பவர்களும் (ஆயினர்.)*

*இது முதற் பதினாறு பாடல்களுக்கும் 'ஆயினர்' எனும் ஒருசொல் வருவித்து வினைமுடிவு செய்க. இப்பதினாறு கவிகளிலும். அக்காலத்து அரச குடும்ப மணவிழாக்களுக்கு நகரும். மாந்தரும் அழகு செய்யும் வகை. முறை முழுதும் தொகுத்துரைக்கப்பட்டிருத்தல் காண்க.*

***1182.* அன்ன மென் நடையாரும்.**
**மழ விடை அனையாரும்.**
**கன்னி நல் நகர். வாழை**
**கமுகொடு நடுவாரும்.**
**பன்ன அரு நிறை முத்தம்**
**பரியன தெரிவாரும்.**
**பொன் அணி அணிவாரும்.**
**மணி அணி புனைவாரும்.**

**அன்ன மெல் நடையாரும்** - *அன்னம்போல் நடக்கும் நடையுடைய (மிதிலைநகரப்) பெண்டிரும்;* **மழவிடை அனையாரும்** - *இளமைபொருந்திய காளைகளின் பீடுநடையுடைய ஆடவரும்;* **கன்னி நல் நகர்** - *பிற மன்னரால் வெற்றி கொள்ளப்படாத அந்நன்னகரில் எங்கும்;* **வாழை கமுகொடு நடுவாரும்** - *வாழை மரங்களையும் கமுக மரங்களையும் கொண்டுவந்து நாட்டுபவர்களும்;* **பன்ன அரு நிறை முத்தம் பரியன தெரிவாகும்** - *விலைகூற முடியாத மதிப்புடைய நிறைந்த முத்துக்களில். பெரியனவாகவுள்ள முத்துக்களைத் தேர்ந்து எடுத்து அணிந்துகொள்வார்களும்;* **பொன் அணி அணிவாரும்** - *பொன்னால் ஆன அணிகளே (போதுமென) அணிந்துகொள்பவர்களும்;* **மணிஅணி புனைவாரும்** - *மணியால் ஆன அணிகளே (எமக்கு வேண்டும் என) அலங்கரித்துக் கொள்பவரும் (ஆயினர்).*

*சுவையும் விருப்பமும் மாந்தர்க்கு மாந்தர் வேறுபடுவன ஆதலின். "பொன் அணி அணிவாரும். மணி அணி புனைவாரும்" என்றார். பெண்மையின் மென்மையும். ஆண்மையின் வன்மையும் இணைகிற போது. உலகு அழகு சிறத்தலால். "அன்ன மென்நடையாரும். மழவிடையனையாரும்" என இணைத்துள்ள அழகுத்திறம் காண்க. அவர்களை வாழ்நாளில் மிகப்பெரிய திருநாள் இதுவே யாதலால். இருக்கும் முத்துக்களில் பெரிய முத்துக்களை அணியத் தேடுகின்றனர் என்பார். "பன்னரும் நிரைமுத்தம் பரியன தெரிவாரும்" என்றார். ஏராளமான விலை மதிப்பு உரைக்க அரிய முத்துவளம் ஒவ்வோர் இல்லத்திலும் உண்டு எனப் பொருள்வளம் சுட்டுவார். பன்னரு நிறைமுத்தங்களுள் பரியன தேடுவார் என்றார்.*

***1183.*** **சந்தனம். அகில். நாறும்**
**சாந்தொடு. தெரு எங்கும்**
**சிந்தினர் திரிவாரும்.**
**செழுமலர் சொரிவாரும்.**
**இந்திரதனு நாணும்**
**எரி மணி நிரை மாடத்து.**
**அந்தம் இல் விலை ஆரக்**
**கோவைகள் அணிவாரும்.**

**நாறும் சந்தனம் அகில் சாந்தொடு** - *மணக்கின்ற சந்தனம். அகில் ஆகியவற்றைத் தேய்த்து அரைத்த குழம்பை;* **தெரு எங்கும் சிந்தினர் திரிவாரும்** - *வீதிகளில் எங்கும் தெளித்துத் திரிபவர்களும்;* **செழுமலர் சொரிவாரும்** - *வாடா மலர்களை (வீதிகளில் எல்லாம்) (மழை போல்) பெய்பவர்களும்;* **இந்திர தனுநாணும் எரிமணி நிரை மாடத்து** - *இந்திரவில் எனப்படும் வானவில் நாணுமாறு ஒளிவீசும் மணிகள் பதிக்கப்பட்டுள்ள மாடங்களாகிய உப்பரிகைகளில்;* **அந்தம் இல் விலை ஆரக் கோவைகள் அணிவாரும்** - *அளவற்ற விலைமதிப்புடைய முத்து வடங்களைத் தொங்க விட்டு அலங்கரிப்பவர்களும் (ஆயினர்). முந்தைய பாடலில். முத்தும் மணியும் அணியாகப் பெண்கள் அணிந்ததைக் கூறிய கவிஞர்பிரான். இப்பாடலில் அவர்கள் இருக்கும் மணிமாட வீடுகளும் அவ்வணிகளை யணியத் தொடங்கின என்று. நகரத்தின் வள மிகுதி கூறுகின்றார்.*

*அந்நகர மங்கையரே மணப்பொருள்களின் சங்கமம்; ஆதலால். அவர்கள் செல்லுமிடம் எல்லாம் நறுமணங்களைச் சிந்திச் சென்றார்கள் என்பார். ''சந்தனம். அகில். நாறும் சாந்தொடு தெரு எங்கும் சிந்தினர். திரிவாரும்'' என்றார். இல்லத்தை நறுமணமாக்கிய இவர்கள். இப்பொழுது. தெருவில் திரிந்து. தெருவையெல்லாம் நறுமணமாக்குகின்றனர் என்க. தாங்கள் அணிந்தது போக. எஞ்சிக் கிடந்த விலைமதிப்பற்ற முத்து. மணிமாலைகளை மாளிகைகளுக்குச் சூட்டத் தொடங்கினர் என்பார். ''நிரை மாடத்து அந்தமில் விலையாரக் கோவைகள் அணிவாரும்'' என்றார். அந்த மணி மாடங்கள் முன்பே நவரத்தினங்கள் பதிக்கப் பெற்று. இந்திரவில்லை நாணும்படி செய்யும் ஒளியுடையன என்பார். ''இந்திர தனுநாணும் எரிமணி நிலை மாடம்'' என்றார். இம்மாடங்கள் ஒன்பது வகை நிறமுடைய நவமணிகள் பதிக்கப்பெற்றவை; வான வில்லோ ஏழுநிறமே கொண்டது ஆதலால். தாழ்வுணர்ச்சியால் அது நாணும் என்பார். ''இந்திர தனுநாணும்'' என்றார்.*

*சாந்து - தைலம் எனினுமாம். இறை திருமேனிகட்குச் சாத்தும் தைலக்காப்பை. ''சாந்து சாத்துதல்'' என்பர்.*

***1184. தளம் கிளர் மணி கால.***
***தவழ் சுடர் உமிழ் தீபம்.***
***இளங் குளிர் முளை ஆர் நல்***
***பாலிகை இனம். எங்கும்.***
***விளிம்பு பொன் விரை நாற.***
***வெயிலொடு நிலவு ஈனும்.***
***பளிங்குடை உயர் திண்ணைப்***
***பத்தியின் வைப்பாரும்.***

*__விளிம்பு பொன் விரை நாற__ - ஓரங்கள் எல்லாம் பொன் பதிக்கப் பெற்றுள்ள பொன் தகடுகள் மணம் கமழ; __வெயிலொடு நிலவு ஈனும்__ - ஞாயிற்றின் வெப்பமும். நிலவின் தண்மையும் ஒருங்கே உமிழும் (சூரிய. சந்திர காந்தக் கற்கள் என்னும்); __பளிங்குடை உயர் திண்ணைப் பத்தியின்__ - படிகக் கற்கள் பதிக்கப்பெற்ற உயர்ந்த திண்ணைகளின் வரிசைகளில்; __தளம் கிளர் மணி கால__ - அடித்தளத்தில் பதிக்கப் பெற்றுள்ள மாணிக்கங்கள் ஒளிசிந்தவும்; __தவழ் சுடர் உமிழ்தீபம்__ - பரவுகின்ற ஒளி உமிழ்கின்ற தீபங்களையும்; __குளிர் இளமுளை ஆர் நல் பாலிகை இனம்__ - குளிர்ந்த இளமையான விதைமுளைகள் பொருந்தின நல்ல பாலிகைக் கிண்ணங்களின் வகைகளையும்; __எங்கும் வைப்பாரும்__ - (அந்நகரத்தில்) எவ்விடத்திலும் வைப்பாரும் (ஆயினர்).*

*சூரிய ஒளியில் வெயிலும். சந்திர ஒளியில் தண்ணீரும் உமிழ்வது சூரிய காந்தக் கல். சந்திரக்கல் எனும் இரண்டின் இயல்பாதலின். அவை இரண்டும் பதிக்கப்பெற்ற திண்ணைகளில் ''வெயிலொடு நிலவு ஈனும்'' எனப்பட்டன. சுடர் என்பது மணித் தீபத்தையும். உமிழ் தீபம் என்பது. தீச்சுடர் விளக்குகளையும் குறித்தன.*

***1185. மந்தர மணி மாட
முன்றிலின்வயின் எங்கும்.
அந்தம் இல் ஒளி முத்தின்.
அகல் நிரை ஒளி நாறி.
அந்தர நெடு வான் மீன்
அவண் அலர்குவது என்ன.
பந்தரின் நிழல் வீச.
படர் வெயில் கடிவாரும்.***

***அந்தர நெடுவான்மீன் இவண் அலர்குவது என்ன*** - *விண்வெளியாகிய நெடுவானத்து விண்மீன்களின் தொகுதி எல்லாம் சேர்ந்து இங்கு ஒளிவீசுவதுபோல்;* ***மந்தரமணிமாடம் முன்றிலின் வயின் எங்கும்*** - *மந்தரகிரி போன்ற அழகிய மாட வீடுகளின் முன்புறத்தின் இடம் முழுவதிலும்;* ***அந்தம் இல் ஒளிர்முத்தில் அகல்நிரை ஒளிவீச*** - *அளவற்றனவாய். ஒளிரும் தன்மையனவான முத்துக்களின் அகன்ற வரிசை ஒளி வீசா நிற்க (இடப்பட்ட);* ***பந்தரின் நிழல்வீச*** - *(முத்துப்) பந்தரின் நிழல் பரவுதலினால்;* ***படர்வெயில் கடிவாரும்*** - *(எங்கும்) பரவுகிற வெயிலைத் தடுப்பவர்களும் (ஆயினர்.)*

*முத்துக்கள் குளிருந் தன்மையவாதலின். வெயிலுக்குக் குளிர்ச்சி நல்க அவற்றால் பந்தல் இட்டனர் என்பதனால். நகரத்தின் வளமிகுதி உணர்த்தியவாறு. திருமணம் நிகழ்நாள். பங்குனி உத்தர நாள் ஆதலின். வெயிலின் கடுமை நீங்க. வீடுகள்தோறும் பந்தர் இட்டனர்; அதுவும் முத்துப் பந்தர் என்றவாறு.*

***1186. வயிரம் மின் ஒளி ஈனும்.
மரகத மணி வேதி.
செயிர் அற ஒளிர் தீபம்
சிலதியர் கொணர்வாரும்.
வெயில் விரவிய பொன்னின்
மிடை கொடி. மதி தோயும்
எயிலினில் நடுவாரும்.
அகில் எரி இடுவாரும்.***

***வயிரம் மின் ஒளிஈனும் மரகத மணி வேதி*** - *வயிரம் என்னும் மணிகள் (சுற்றிலும்) ஒளிவீசும். பச்சை இரத்தினங்கள் பதிக்கப்பட்ட மேடைகளில்;* ***செயிர் அற ஒளிர்தீபம் சிலதியர் கொணர்வாரும்*** - *குற்றமற்று விளங்குகின்ற விளக்குகளை. பணிப்பெண்கள் கொண்டு வந்து வைப்பர்;* ***வெயில் விரவிய பொன்னின் மிடை கொடி*** - *சூரிய ஒளிக்குச் சமமான ஒளிபொருந்திய பொன்னால் ஆகிய காம்போடு கூடிய கொடிகளை;* ***மதிதோயும் எயிலினில் நடுவாரும்*** - *மதிமண்டலத்தை அளாவுகின்ற மதில்களின் மேல் நாட்டிவைப்பர்;* ***அகில் எரி இடுவாரும்*** - *(எங்கும்) அகிற்கட்டைகளை (மணம் பரப்புதற்கு) நெருப்பில் இடுவாரும் (ஆயினர்.)*

*மதிதோயும் எயில் - உயர்வு நவிற்சி.*

***1187.*** **பண்டியில் நிறை வாசப் பனி மலர் கொணர்வாரும்.**
**தண்டலை இலையோடு. கனி பல தருவாரும்.**
**குண்டலம் வெயில் வீசக் குரவைகள் புரிவாரும்.**
**உண்டை கொள் மத வேழத்து ஓடைகள் அணிவாரும்.***

***பண்டியில் நிறைவாசப் பனிமலர் கொணர்வாரும்*** *- வண்டிகளிலே நிறைந்த வாசமுடைய குளிர்ந்த மலர்களைக் கொண்டு வருபவர்களும்;* ***தண்டலை இலையோடு கனிபல தருவாரும்*** *- சோலைகளிலேயுள்ள (வாழை முதலிய) இலைகளையும் (பல்வகைக்) கனிகளையும் கொண்டு வருபவர்களும்;* ***குண்டலம் வெயில்வீசக் குரவைகள் புரிவாரும்*** *- தங்கள் குண்டலம் என்னும் காதணிகள் (அசைவதனால்) ஒளி வீசப் (பலர் கை கோத்து ஆடும்) (குரவைக் கூத்து) ஆடுபவரும்;* ***உண்டைகொள் மதவேழத்து ஓடைகள் அணிவாரும்*** *- கவளம் கவளமாக உண்ணும் வழக்கமுடைய மதயானைகளின் நெற்றியில் முக படாங்களை அணிகின்றவர்களும் (ஆயினர்).*

*வெயிற்கடுமை நீங்க. பொது இடங்களில் பரப்பவும் பந்தர் இடவும் இலைகளையும். மலர்களையும். விருந்தோம்புதற்குக் கனிகளையும் வண்டி வண்டியாகக் கொண்டுவந்தனர் என்பதாம்.*

***1188.*** **கலவைகள் புனைவாரும். கலை நல தெரிவாரும்.**
**மலர் குழல் மலைவாரும். மதிமுகம் மணி ஆடித்**
**திலகம் முன் இடுவாரும். சிகழிகை அணிவாரும்.**
**இலவு இதழ் பொலி கோலம் எழில் பெற இடுவாரும்.***

***கலவைகள் புனைவாரும்*** *- கலவைச் சந்தனங்களைப் பூசிக் கொள்வாரும்;* ***கலைநல தெரிவாரும்*** *- நல்ல ஆடைகளை ஆராய்ந்து அணிந்து கொள்வாரும்;* ***மலர் குழல் மலைவாரும்;-*** *கூந்தலிலே மலர்களைச்சூடி கொள்வாரும்;* ***மதிமுக மணி ஆடித்திலதம் முன் இடுவாரும் -*** *அழகிய கண்ணாடிமுன் நின்று. தம் மதிப்போன்ற முகங்களில் திலகத்தை இட்டுக் கொள்வாரும்;* ***சிகழிகை அணிவாரும்*** *- சிகழிகை என்னும் தலைமாலைகளை அணிந்து கொள்வாரும்;* ***இலவு இதழ்பொலிகோலம் எழில்பெற இடுவாரும்*** *- இலவம் பூப்போலச் சிவந்த தங்கள் அழகிய உதடுகளிலே அழகுறக் கோலம் இட்டுக் கொள்பவர்களும் (ஆயினர்).*

*இறுதியடிக்கு இலவின் இதழ் போன்ற செம்பஞ்சுக் குழம்பினை (அடிகளில்) இட்டுக் கொள்வாரும் எனவுமாம்.*

*1189.* **தப்பின மணி காசும். சங்கமும். மயில் அன்னார்**
**ஒப்பனை புரி போதும். ஊடலின் உகு போதும்.**
**துப்பு உறழ் இள வாசச் சுண்ணமும். உதிர் தாதும்.**
**குப்பைகள் என. வாரிக்கொண்டனர் களைவாரும்.**

***மயில் அன்னார்*** - *மயில் அனைய சாயற் பெண்டிர்;* **ஒப்பனை புரிபோதும்** - *அலங்காரம் செய்கின்ற காலத்தும்;* **ஊடலின் உகுபோதும்** - *ஊடற்காலத்தில் வெகுண்டு வீசுகிற காலத்தும்;* ***தப்பின மணிகாசும் சங்கமும் துப்புறழ் இளவாசச் சுண்ணமும் உதிர்தாதும்*** - *உதிர்ந்து வீழ்ந்த மணிகளையும். (தங்கக்) காசுகளையும். சங்கு வளையல்களையும். பவழம்போன்று சிவந்த மெல்லிய வாசமுடைய நறுமணப்பொடிகளையும். உதிரும் இயல்புடைய பூந்துகள்களையும்;* **குப்பைகள் எனவாரிக் கொண்டனர் களைவாரும்** - *(களையத்தக்க) குப்பைகள் போல. குவியலாக வாரித்திரட்டிக்கொண்டு போய் அப்பால் எறிபவர்களும் (ஆயினர்).*

*விலையுயர்ந்த வெனக்கருதும். பொருள்கள் எல்லாம் அந்நகரப் பெண்டிர்க்கு மிக இழிந்த குப்பைகளாயின என்று நகரின் மிகுவளம் கூறியவாறு. மிதிலை நகரத்துக் குப்பைகளின் மூலப் பொருள்கள் இவையென வியந்த வாறுமாம்.*

*1190.* **மன்னவர் வருவாரும். மறையவர் நிறைவாரும்.**
**இன் இசை மணி யாழின் இசை மது நுகர்வாரும்.**
**சென்னியர் திரிவாரும். விறலியர் செறிவாரும்.**
**கன்னலின் மண வேலைக் கடிகைகள் தெரிவாரும்.**

***மன்னவர் வருவாரும்*** - *(திருமணத்திற்கென) அரசர்கள் வந்து சேர்பவர்களும்;* ***மறையவர் நிறைவாரும்*** - *வேதியர்கள் வந்து நிறைபவர்களும்;* **இன்இசை மணியாழின் இசைமது நுகர்வாரும்** - *இனிய இசை பொழிகின்ற அழகிய யாழ் இசையெனும் தேனை நுகர்பவர்களும்;* **சென்னியர் திரிவாரும்** - *(இன்னிசை பாடியவாறே) பாணர்கள் (எங்கும்) சஞ்சரிப்பவர்களும்;* **விறலியர் செறிவாரும்** - *விறல்படப் (பாணர்பாட்டுக் கேற்ப) ஆடும் விறலியராகிய மகளிர் நெருங்குவாரும்;* ***கன்னலின் மண வேலைக் கடிகைகள் தெரிவாரும்*** - *நாழிகை வட்டில்களைக் கொண்டு. திருமண நேரத்தைத் (துல்லியமாக) ஆராய்ந்து கொண்டிருப்பவர்களும் (ஆயினர்.) வருவாரும் நிறைவாரும். நுகர்வாரும். திரிவாரும். செறிவாரும். தெரிவாரும் எனும் வினைகளை அடுக்கியே மணம் நிகழவுள்ள மிதிலை நகரின் ஆரவாரத்தையும். ஆர்வத்தையும் துடிப்பையும் கற்பார் மனக்கண்முன் கொண்டுவந்து காட்டி விடுகிறார்.*

***1191.* கணிகையர் தொகுவாரும்.**
**கலை பல பயில்வாரும்.**
**பணி அணி இன முத்தம்.**
**பல இரு நில மன்னர்**
**அணி நெடு முடி ஒன்று ஒன்று**
**அறைதலின். உகும் அம்பொன்**
**மணி மலை தொகுமன்னன்**
**வாயிலின் மிடைவாரும்.**

***கணிகையர் தொகுவாரும்*** *- நடனம் முதலிய கலைகளில் வல்ல கணிகையர் திரளாகக் கூடுவாரும்;* ***கலைபல பயில்வாரும்*** *- அறுபத்து நான்கு வகைக் கலைகளிற் பலவற்றின் திறங்காட்டப் பயின்று கொண்டிருப்பாரும்;* ***பல இருநில மன்னர் பணிஅணி இனமுத்தம்*** *- பல வகைப்பட்ட பெருநில மன்னர்களின் ஆபரணங்களில் அணிந்துள்ள சிந்திய பலவகை முத்துக்களும்;* ***அணிநெடுமுடி யொன்று ஒன்று அறைதலின் உகும் அம்பொன்மணி*** *-அழகிய நீண்ட (தத்தம்) கிரீடங்கள் ஒன்றொடொன்று நெருங்குதலால் சிந்து கின்றனவும் ஆகிய அழகிய பொன்களும் மணிகளும்;* ***மலைதொகு மன்னன் வாயிலின் மிடைவாரும்*** *- மலையாகக் குவிந்து கிடக்கிற சனக மன்னனின் அரண்மனை வாயிலிலே நெருங்குபவர்களும் (ஆயினர்).*

*மன்னர்கள் நெருக்கத்தால். அற்றுவீழ்ந்த மணியணிகள் அரண்மனையின் ஆசார வாசலில் மலையெனக் குவிந்தன என்க. உயர்வுநவிற்சி.*

***1192.* கேடகம் வெயில் வீச. கிளர் அயில் நிலவு ஈன.**
**கோடு உயர் நெடு விஞ்சைக் குஞ்சரம்அது போல.**
**ஆடவர் திரிவாரும். அரிவையர் களி கூர.**
**நாடகம் நவில்வாரும். நகை உயிர் கவர்வாரும்.**

***கேடகம் வெயில் வீச*** *- (இடக்கையில் ஏந்தும் பொன் பொதிந்த) கேடயம் (பொன்னிற) வெயிலை உமிழவும்;* ***கிளர் அயில் நிலவு ஈன*** *- (வலக்கையில் ஏந்திய) கூர்மையான சேல் நிலவின் ஒளியை வீசவும்;* ***கோடு உயர்நெடுவிஞ்சைக் குஞ்சரம் அதுபோல*** *- கொம்புகள் நீண்ட போர்த் தொழில்வல்ல யானைகள்போல்;* ***ஆடவர் திரிவாரும்*** *- ஆண்கள் (பீடுநடையோடு) உலாவவும்;* ***அரிவையர் களிகூர நாடகம் நவில்வாரும்*** *- பெண்டிர். (அந்த ஆடவர்) மகிழ்ச்சி மிகுதற்கு ஏது வான நடனங்களை ஆடவும்;* ***நகை உயிர் கவர்வாரும்*** *- (அவ்வாறு அவர் ஆடும் நடனத்திடையே) புன்னகை பூக்கவும். ஆடவர் உயிரை அவர்கள் கொள்ளை கொண்டனர்.*

*விழாக் காலங்களில் விளையாட்டுப் போர் நிகழ்த்திக் காட்டுதல் வழக்காதலின். அவர்கள் கேடயமும். வேலும் ஏந்தி. போர்த்திறங்களை நடித்துக் காட்டினர் என்க. ''ஆடவர் திரிவார்;அரிவையர் கவர்வார்'' என்று அழகுறக் கூறினார்.*

***1193. கதிர் மணி ஒளி கால.***
***கவர் பொருள் தெரியாவாறு.***
***எதிர் எதிர் சுடர் விம்முற்று***
***எழுதலின். இளையோரும்.***
***மது விரி குழலாரும்.***
***மதிலுடை நெடுமாடம்***
***அது. இது. என ஓராது.***
***அலமரல் உறுவாரும்.****

***கதிர் மணி ஒளி கால*** - *ஒளிக்கற்றைகளையுடைய மாணிக்கங்கள் ஒளியை உமிழ்தலால்;* ***கவர்பொருள் தெரியாவாறு*** - *கண் ஒளி சென்று பற்றக் கூடிய பொருள்கள் தெரியாத வண்ணம்;* ***எதிர் எதிர் சுடர் விம்முற்று எழுதலின்*** - *எதிர்வருவார் அணிகளின் ஒளி. அவர்கட்கு எதிர் வருவார் அணிகளின் ஒளியோடு மோதி எதிர்ஒளித்துப் பரவுவதால்;* ***இளையோரும் மதுவிரி குழலாரும் மதிலுடை நெடு மாடம் அது இது என ஓராது*** - *(கண்கள் கூசுவதால்) அந்நகரத்து இளைஞர்களும். தேன்வண்டுகள் மொய்க்கும் கூந்தலுடைய மங்கையரும் தங்கள் தங்கள் மதில் சூழ்ந்த நெடியமாட வீடு அதுவோ இதுவோ என அறியமாட்டாது;* ***அலமரல் உறுவாரும்*** - *மனஞ் சுழல்பவர்களும் (ஆயினர்).*

*ஒளியும் ஒளியும் மோதி ஒளிமுறிவு ஏற்படுங்கால் இடையுள்ள பொருள்கள் தெரியா எனும் ஒளியியல் தத்துவம் தெளிவுற உரைக்கப்பட்டிருத்தல் காண்க. மணிஒளிகால. எதிர் பொருள் தெரியாவாறு. சுடர் விம்முற்று எழுதலின். அது இது என ஓராது. அலமரல் உறுவார் எனக் கூட்டுக.*

***1194. தேர்மிசை வருவாரும். சிவிகையில் வருவாரும்.***
***ஊர்தியில் வருவாரும். ஒளி மணி நிரை ஓடைக்***
***கார்மிசை வருவாரும். கரிணியில் வருவாரும்.***
***பார்மிசை வருவாரும். பண்டியில் வருவாரும்.****

**தேர்மிசை வருவாரும்** - *தேர்களின் மேல் வருபவர்களும்;* **சிவிகையில் வருவாரும்** - *பல்லக்குகளில் வருபவர்களும்;* **ஊர்தியில்வரு வாரும்** - *பிறவாகனங்களிலும் வருபவர்களும்;* **ஒளிமணிநிரை ஓடைக் கார்மிசை வருவாரும்** - *ஒளிநிறையும் மணிகள் பதித்த முகபடாம் அணிந்த மேகம்போற் கரிய (ஆண்) யானைகளின்மேல் வருவாரும்;* **கரிணியில் வருவாரும்** - *பெண்யானைகளின்மேல் வருவாரும்;* ***பார் மிசை வருவாரும்*** - *பூமியின்மேல் நடந்து வருபவர்களும்;* **பண்டியில் வருவாரும்** - *வண்டிகளில் வருபவர்களும் (ஆயினர்).*

*கார் - மேகம். நிற ஆகுபெயராய் யானையைக் குறித்தது. கரி என்பதன் பெண்பாலாய். கரிணி என்பது பெண் யானையைக் குறித்து நின்றது. வருவார் இத்தனை வகையினர் ஆயினர் என்க. கார் - மேகம் எனக்கொண்டு உவமையாகு பெயராய் யானையைக் குறித்தது எனினுமாம். அப்போது. கார்மேகம் யானைகளையும் அவையணிந்த முகபடாமின் ஒளிகள் மின்னலினையும் குறித்தன என்க.*

***1195. முத்து அணி அணிவாரும்.***
***மணி அணி முனிவாரும்.***
***பத்தியின் நிமிர் செம் பொற்***
***பல கலன் மகிழ்வாரும்.***
***தொத்து உறு தொழில் மாலை***
***சுரி குழல் அணிவாரும்.***
***சித்திர நிரை தோயும்***
***செந் துகில் புனைவாரும்.***

***முத்து அணி அணிவாரும்*** *- முத்துக்களாலான நகைகளைப் (புதிதாக) அணிபவர்களும்;* ***மணி அணி முனிவாரும்*** *- முன்பே அணிந்திருந்த மணியாபரணங்களை வெறுத்து நீக்குபவர்களும்;* ***பத்தியின் நிமிர் செம்பொன் பலகலன் மகிழ்வாரும்*** *- வரிசை வரிசையாக. உயர்ந்த செம்பொன்னால் ஆகிய பல்வகை நகைகளை அணிந்து மகிழ்பவர்களும்;* ***தொத்துஉறு தொழில் மாலை சுரிகுழல் அணிவாரும்*** *- பூங்கொத்துகளை வைத்து கைத்திறன் காட்டிப் புனையப் பட்ட மாலைகளை. நெளிந்த கூந்தலில் அணிபவர்களும்;* ***சித்திர நிரை தோயும் செந்துகில் புனைவாரும்*** *- ஓவிய வரிசைகள் அமையப்பெற்ற செந்நிறப் பட்டாடையை உடுப்பவர்களும் (ஆயினர்).*

*புதியன புனைதற்கு மகளிர்க்கு உள்ள விருப்பம் சுட்ட. ''முத்து அணி அணிவாரும் மணியணி முனிவாரும்'' என்றார். பெண்மை அழகுருவம் ஆதலின். அழகு மேலும் மேலும் ஆரா அழகுபெறத் தவிக்கும் தவிப்பை இப்பாடல் சுட்டுவது காண்க. இத்தனை வகையில் அணிந்து வந்தனர் என்க.*

***1196. விடம் நிகர் விழியாரும்.***
***அமுது எனும் மொழியாரும்.***

***கிடை புரை இதழாரும்.***
***கிளர் நகை வெளியாரும்.***
***தட முலை பெரியாரும்.***
***தனி இடை சிறியாரும்.***
***பெடை அன நடையாரும்.***
***பிடி என வருவாரும். -***

**விடநிகர் விழியாரும்** - *(விரும்பாதார்க்கு) நஞ்சினையொத்த கண்ணினரும்;* **அமுது எனும் மொழியாரும்** - *(விரும்புவார்க்கு) அமுதினை யொத்த மொழியினரும்;* **கிடைபுரை இதழாரும்** - *சிவந்த நெட்டியை யொத்த உதட்டினை யுடையாரும்;* **கிளர்நகை வெளியாரும்** - *விளங்கும் பற்களோ வெண்ணிறமாக உடையாரும்;* **தடமுலை பெரியாரும்** - *அகன்ற தனங்களின் பெருமை கொண்டவர்களும்;* **தனிஇடை சிறியாரும்** - *தனித்தன்மை வாய்ந்த மிகச்சிறிய இடையினை உடையவர்களும்;* **பெடை அன நடையாரும்** - *பெண் அன்னத்தின் நடையினை யுடையவர்களும்;* **பிடி என வருவாரும்** - *பெண்யானையைப் போல நடந்து வருபவர்களும் (ஆகிய பெண்டிர் எங்கும்) (ஆயினர்).*

*ஒவ்வோர் அடியிலும் முரண் தொடையிட்டுப் பெண்மையினை வர்ணித்துள்ள திறம் ஓர்க. விடம் என அவர்களை வெறுத்து விடற்கு இல்லை; அருகிலேயே அமுதனைய மொழியும் உண்டு என்பார். "விடநிகர் விழியாரும். அமுதெனும் மொழியாரும்" என்றார்.*

*1197.* ***உள்நிறை நிமிர் செல்வம்***
***ஒரு துறை செல என்றும்***
***கண்ணுறல் அரிது என்றும்***
***கருதல் அரிது அம்மா!***
***எண்ணுறு சுடர் வானத்து***
***இந்திரன் முடி சூடும்***
***மண்ணுறு திருநாளே***
***ஒத்தது-அம் மண நாளே.***

***உள்நிறை நிமிர் செல்வம் ஒரு துறை செல என்றும் கண்ணுறல் அரிது*** - *மிதிலை நகரத்துள் நிறைந்துள்ள செல்வம் முழுவதனையும் ஒரே இடத்தில் செல்லக் காணுதல் என்பது என்றும் அரிய செயலாகும்;* ***என்றும் கருதுதல் அரிது அம்மா!*** - *அவ்வாறு செல்வதை மனத்தால் நினைத்துப் பார்ப்பது கூட என்றும் அரியதொரு வியப்பாகும்! (அன்று அது நிகழ்ந்தது!);* ***எண்ணுறு சுடர் வானத்து இந்திரன்*** - *மதித்தற்குரிய ஒளியுலகாகிய வான நாடாளும் தேவேந்திரன்;* ***முடி சூடும் மண்ணுறு திருநாளே ஒத்தது அம் மணநாள்*** - *தூயதாக்கித் தன் திருமுடியைச் சூடிக் கொள்ள (விழா) எடுத்த நாளைப் போன்றதே ஆயிற்று. மிதிலையில் நிகழ்வுறும் அந்த மணநாள்.*

*மிதிலை நகரத்துச் செல்வம் அனைத்தும் மணநாள் அன்று வீதியில் காணப்பட்டது என்பது முதல் இரண்டடிகளின் கருத்து. நினைக்கும் பொருள் எல்லாம் நிறைந்து கிடக்கும் அந்நெடு வீதிகள் மிக்க அந்த நீள் நகர் மிதிலை. நினைக்கும் பொருள் எல்லாம் நிறைந்து கிடக்கும் வானநாட்டு வேந்தன் முடிசூடும் அன்றுள்ள வான் நகரே கவிஞர் நினைவுக்கு வந்தது என்க. மண்ணுறு திருநாள் - மகுடாபிடேகத் திருநாள். இதனை. ''மண்ணுமங்கலம் (புறப். வெண். பாடாண். 36) என்பர்.*

*மணவினை மண்டபத்திற்குத் தயரதன் வருகை*

***(வேறு) கலிவிருந்ததம்***

***1198. கரை தெரிவு அரியது. கனகம் வேய்ந்தது.***
***வரை என உயர்ந்தது. மணியின் செய்தது.***
***நிரைவளை மணவினை நிரப்பு மண்டபம்.***
***அரைசர்தம் அரசனும் அணுகல் மேயினான்.***

***கரை தெரிவு அரியது*** - *(அகல நீளங்களின்) எல்லை தெரியக் கடினமானதும்;* ***கனகம் வேய்ந்தது*** - *பொன் வேயப்பட்டதும்;* ***வரை என உயர்ந்தது*** - *மலை போன்று உயர்ச்சியுடையதும்;* ***மணியின் செய்தது*** - *மாணிக்கங்கள் பதிக்கப்பட்டதும்;* ***நிரை வளை மண வினை நிரப்பு மண்டபம்*** - *வரிசையாக வளையல்கள் அணிந்தவளான சீதையின் திருமண நிகழ்வுகளுக்குரிய மங்கலப் பொருள்களை நிரப்பி வைத்துள்ளதுமான அந்த மண மண்டபத்தை;* ***அரசர் தம் அரசனும் அணுகல் மேயினான்*** - *அரசர்க்கரசனாகிய தசரத வேந்தனும் வந்தடைந்தான்.*

*நிரைவளை - அன்மொழித் தொகை. சீதையைக் குறித்தது - உயர்வு நவிற்சியணி.*

***1199. வெண்குடை இள நிலா விரிக்க. மின் எனக்***
***கண் குடை இன மணி வெயிலும் கான்றிட.***
***பண் குடை வண்டினம் பாட. ஆடல் மா***
***மண் குடை தூளி விண் மறைப்ப. - ஏகினான்.***

***வெண்குடை இளநிலா விரிக்க*** - வெண் கொற்றக் குடை இளநிலவின் ஒளிவீச; ***மின் எனக் கண்குடை இனமணி வெயிலும் கான்றிட*** - மின்னல் போன்று. காண்பாருடைய கண்களைக் கூசுமாறு (நிலவொளியேயன்றி) வெயிலின் ஒளியையும் அக்குடை வீச; ***குடை வண்டினம் பண்பாட*** - மலர்களைக் குடைகின்ற வண்டினங்கள் பண் இசை பாட; ***ஆடல் மா மண்குடை தூளி விண் மறைப்ப எய்தினான்*** - வெற்றிக் குதிரைகள் மண்ணைக் கால்களால் மிதித்தலால் உண்டான புழுதி வானத்தை மறைக்கத் (தசரதன்) வந்தடைந்தான்.

*மங்கல நிகழ்ச்சிகளின் அணிவகுப்பில் வருவதற்கு எனப் பயிற்றுவிக்கப்பட்ட ஆடற்குதிரைகள். நிலம் புழுதிபட ஆடி வந்தன என்பார். ‘‘ஆடல்மா மண் குடை தூளி விண் மறைப்ப எய்தினான்’’ என்றார்.*

***1200. மங்கல முரசு இனம் மழையின் ஆர்த்தன;***
***சங்குகள் முரன்றன; தாரை. பேரிகை.***
***பொங்கின; மறையவர் புகலும் நான்மறை.***
***கங்குலின் ஒலிக்கும் மா கடலும் போன்றதே.***

***மங்கல முரசு இனம் மழையின் ஆர்த்தன*** - (அப்பொழுது) மங்களகரமான மண முரசுகளின் கூட்டம் மழை மேகங்களின் ஒலியைப் போல் முழங்கின; ***சங்குகள் முரன்றன*** - (மங்கலச்) சங்கின் கூட்டங்களும் ஒலித்தன; ***தாரை. பேரிகை பொங்கின*** - தாரையென்னும் ஊது குழலும். பேரிகையென்னும் தோற் கருவியும் மிக்கொலித்தன; ***மறையவர் புகலும் நான்மறை*** - வேதம் வல்லார் ஒலிக்கின்ற நான்கு வேதங்களின் ஒலி; ***கங்குலின் ஒலிக்கும் மாகடலும் போன்றதே*** - இரவுப் பொழுதில் மிக்கு ஒலிக்கும் பெருங் கடலின் ஓசையை ஒத்தது ஆயிற்று.

*ஒலிகளை அடுக்கிக் கூறி. மணக்காட்சியைக் கற்பார் மனக்கண் முன் கொண்டுவருகிறார் கவிஞர்.*

***1201. பரந்து தேர். களிறு. பாய் புரவி. பண்ணையில்***
***தரம் தரம் நடந்தன; தானை வேந்தனை***
***நிரந்தரம் தொழும் எழும் நேமி மன்னவர்.***
***புரந்தரன் புடை வரும். அமரர் போன்றனர்.***

***பரந்த தேர். களிறு. பாய்புரவி*** - பரவின தேர்களும். யானைகளும் பாய்ந்து செல்லும் திறமுடைய குதிரைகளும்; ***பண்ணையின் தரம்தரம் நடந்தன*** - கூட்டம் கூட்டமாய். இனவாரியாக நடந்து சென்றன; ***தானை வேந்தனை நிரந்தரம் தொழுது எழும் நேமி மன்னவர்*** - சேனைகள் மிக்க தசரதச் சக்கரவர்த்தியை எப்போதும் (பின்பற்றித்) தொழுதெழுந்து செல்கின்ற ஆணைச் சக்கரமுடைய அரசர்கள்; ***புரந்தரன் புடை வரும் அமரர் போன்றனர்*** - இந்திரனைப் புடை சூழ வரும் தேவர்களைப் போன்று உடன் சூழ்ந்து சென்றனர்.

மேல் இந்திரன் முடிசூட்டு விழாவன்று தேவர் தலைவன் இந்திரன் தலை நகர் அமராவதி போன்றிருந்தது மிதிலை மாநகர் என்றார். இங்கு. மொய்த் துள்ள அரசர்கள் எல்லோரும் தேவர்கள் போலவும். தயரதச் சக்கரவர்த்தி தேவேந்திரன் போலவும் திகழ்ந்தனர் என்கிறார். தசரதனைத் தேவர் தலைவனுக்கு ஒப்பிட்டுப் பன்முறை மேலேயும் கூறியுள்ளார்.

தயரதன். சனகன் முதலியோர் ஆசனத்து அமர்தல்

***1202. அனையவன். மண்டபம் அணுகி. அம் பொனின்***
***புனை மணி ஆதனம் பொலியத் தோன்றினான்;***
***முனிவரும். மன்னரும். முறையின் ஏறினார்;***
***சனகனும். தன் கிளை தழுவ. ஏறினான்.***

***அனையவன் மண்டபம் அணுகி*** - அத்தன்மையனாய் வந்த தசரத வேந்தன் மண மண்டபத்தை நெருங்கி; ***அம்பொ(ன்)னின் புனை மணி ஆதனம் பொலியத் தோன்றினான்*** - அழகிய பொன்னினால் செய்து மணிகளால் அலங்கரிக்கப்பட்ட ஆசனத்தில். அவ்வாசனம் அழகு பெறுமாறு ஏறி வீற்றிருந்தான்; ***முனிவரும் மன்னரும் முறையின் ஏறினார்*** - முனிவர்களும் அரசர்களும் தத்தம் தகுதிக்கேற்ப இருக்கைகளில் ஏறி அமர்ந்தனர்; ***சனகனும் தன் கிளை தழுவ ஏறினான்*** - (பின்பு) சனக மன்னனும் தன் சுற்றத்தார் புடை சூழ ஓர் ஆசனத்தில் ஏறியமர்ந்தான்.

அனைவரும் தத்தமது தகுதிக்கேற்ற முறைப்படியிடப்பட்டுள்ள இருக்கைகளில் அமர்ந்தனர் என்பார் "முறையின் ஏறினார்" என்றார். தசரதன் பெருவேந்தன் ஆதலாலும் மணமகனின் தந்தை ஆதலாலும். விருந்தினன் ஆதலாலும். அவன் இருக்கையில் அமர்ந்தபின் சனக மன்னன் தன் இருக்கையில் அமர்ந்தனன். முனிவர்கள் மதித்தற்குரியார் ஆதலானும். அரசர்கள் விருந்தினர் ஆதலாலும். அவர்களும் அமர்ந்த பின்பே சனகன் அமர்ந்தான். ஆதலால். சனகன் அமர்வை இறுதியில் கூறியுள்ளார்.

மண்டபம் மேருமலையாதல்

***1203. மன்னரும். முனிவரும். வானுளோர்களும்.***
***அன்ன மென் நடை அணங்கு அனைய மாதரும்.***
***துன்னினர் துவன்றலின். சுடர்கள் சூழ்வரும்***
***பொன் மலை ஒத்தது - அப் பொரு இல்கூடமே.***

**மன்னரும் முனிவரும் வானுளோர்களும்** - அரசர்களும் முனிவர்களும் வானத்துத் தேவர்களும்; **அன்னமென் நடை அணங்கு அனைய மாதரும் துன்னினர் துவன்றலின்** - அன்னப் பறவையென மெது நடை நடக்கும் தேவ மகளிரை ஒத்த பெண்டிரும் நெருங்கி நிறைதலால்; **அப்பொரு இல் கூடம் சுடர்கள் சூழ்வரும் பொன்மலை ஒத்தது** - ஒப்புவமையில்லாத அத் திருமண மண்டப மானது சூரியன் முதலிய எல்லாச் சுடர்களும் சூழ்ந்து வலம் வருகின்ற மேருமலையைப் போன்றதாயிற்று. சுடர்கள் சுற்றி நிற்பதாலும். பொன் மயமாய்ப் பொலிவதாலும் மணமண்டபம் பொன்மயமான மேருமலைக்கு நிகர் ஆயிற்று. மன்னர்கள் முனிவர்கள் சூரியன் ஆயினர்; மாதர்கள் சந்திரன் ஆயினர்; அவர்கள் சூழ இருப்பதால். சூரிய சந்திரர் ஆகிய இரு சுடர்கள் சுற்றிவரு மேருகிரியாயிற்று அத்திருமண மண்டபம் என்பதாம்.

மண்டபம் அண்டகோளம் ஆதல்

1204. புயல் உள. மின் உள. பொரு இல் மீன் உள.
இயல் மணிஇனம் உள. சுடர் இரண்டு உள.
மயன் முதல் திருத்திய மணி செய் மண்டபம்.
அயன் முதல் திருத்திய அண்டம் ஒத்ததே.

**மயன் முதல் திருத்திய மணிசெய் மண்டபம்** - மயன் எனும் தெய்வச் சிற்பியால். ஆதியிலே செப்பமுற மணிகள் பதித்துச் செய்யப்பட்ட (அந்த) மணமண்டபத்தில்; **புயல்உள** - (கைம்மாறு கருதாமல் கொடை கொடுக்கும் தன்மையுள்ளோர் பலர் கூடியிருத்தலால்) மேகங்கள் உள்ளன; **மின் உள** - (ஒளி மயமான ஒல்கி ஒசியும் மெல்லியலார் பலர் உள்ளமையால்) (அங்கு) மின்னல்கள் உள்ளன; **பொருஇல் மீன் உள** - (புகழ்) ஒளிரும் மன்னர்கள் பலர் கூடியுள்ளமையால் ஒப்பற்ற நட்சத்திரங்களும் (அங்கு) உள்ளன; **இயல்மணி இனம் உள** - (அவர்கள் அணிந்துள்ள மாணிக்க அணிகளின் வகையினால்) நவரத்தினக் குலங்களும் (அங்கு உள்ளன; **சுடர் இரண்டு உள** - (சூரிய குலத் தசரதனும் சந்திர குலச் சனகனும் இருத்தலால்) சூரிய சந்திரர் எனும் இரண்டு சுடர்க் கடவுள்களும் அங்கு உள்ளனர்; **அயன் முதல் திருந்திய அண்டம் ஒத்ததே** - (ஆதலால். அம் மண்டபம்) நான்முகனால் ஆதியில் அழகுறப் படைக்கப்பட்ட அண்ட கோளம் போலவே இருந்தது.

மயன்: தெய்வத் தச்சன். ''மயன் முதல் தெய்வத் தச்சரும்'' (கம்ப. 96); மண்டபம் ஒன்றை. அண்ட கோளமாக ஆக்கிக் காட்டுகிறார். வான்வெளியில் உள்ள முகில். மின்னல். சூரிய சந்திரர். நட்சத்திரங்கள். கோள்கள் ஆகியன அங்கு இருப்பதனால். மயன் படைத்த மண்டபம் அயன் படைத்த அண்டம் என்பதற்குத் தட்டில்லை என நிரூபித்தவாறு. புயல் உள என்பதற்கு. மேகம் போன்ற மகளிர் கூந்தல்கள் உள எனினுமாம். தயரதனையும் சனகனையும் சூரிய சந்திரராக ''சந்திரன் இரவி தன்னைச் சார்வதோர் தகைமை தோன்ற'' (1032) என எதிர்கொள் படலத்தும் உரைப்பார்.

## மண்டபம் மாலின் வயிற்றை ஒத்தல்

1205. எண் தவ முனிவரும். இறைவர் யாவரும்.
அண்டரும். பிறரும். புக்கு அடங்கிற்று; ஆதலால்.
மண்டபம் வையமும் வானும் வாய்மடுத்து
உண்டவன் மணி அணி உதரம் ஒத்ததே.*

**எண்தவ முனிவரும் இறைவர் யாவரும்** - *(அனைவராலும்) மதிக்கத்தக்க (வசிட்டன். விசுவாமித்திரன் முதலிய) முனிவர்களும். (தசரதன். சனகன் முதலிய) அனைத்து மன்னர்களும்;* **அண்டரும் பிறரும் புக்கு அடங்கிற்று** - *தேவர்களும் மற்றையோரும் வந்தடையப் பெற்று (இவர் அனைவரையும்) தன்னுள் அடக்கி வைத்திருந்தது (அம் மணிமண்டபம்);* **ஆதலின் மண்டபம்** - *ஆதலால் அம்மண்டபமானது;* **வையமும் வானும் வாய்மடுத்து உண்டவன்** - *மண்ணையும் விண்ணையும் (யுக முடிவுக் காலத்தில்) தன் திருவாயில் இட்டு உட்கொண்டருளுபவனான திருமாலினுடைய;* **அணி மணி உதரம் ஒத்தது** - *நீல மணியின் நிறமுடைய அழகிய திருவயிற்றினைப் போன்றதாயிற்று.*

*மேல் அணி மண்டபத்தை அயன் படைத்த அண்டமாக்கிக் காட்டியவர் இப்பாடலில். அயனையும் படைத்த பெருமானின் திருவயிறு ஆக்கிக் காட்டுகிறார். "ஒரு பகல் உலகு எலாம் உரைத்துள் பொதிந்து. அருமறைக்கு உணர்வரும் அவன்" (கம்ப. 282) என்னும் "வையம் முற்றும் வயிற்றின் அடக்கி ஐயன்" (கம்ப. 1082) என்றும் முன்பும் உரைப்பர். அண்டங்கள் யாவையும் உண்டடக்கும் திருவயிற்றான் என்பதையுணர்த்த. அவற்றின் காரணமான ஐம்பூதங்களுள் முதலும் இறுதியுமாகிய வையத்தையும் வானத்தையும் கூறினார். இடையிலுள்ளவை தானே இவற்றுள் அடங்குமாதலின்.*

1206. தராதலம் முதல் உலகு அனைத்தும் தள்ளுற.
விராவின. குவிந்தன. விளம்ப வேண்டுமோ?
அரா - அணை துறந்து போந்து. அயோத்தி எய்திய
இராகவன் செய்கையை இயம்புவாம்அரோ:

**தராதலம் முதல் உலகு அனைத்தும் தள்ளுற விராவின; குவிந்தன** - *பூவுலகம் முதலான எல்லா உலகத்துள்ளோரும் (இத்திருமணத்தைக் காண வேண்டும் எனும் ஆசையின் உந்துதலால்) வந்துகலந்து குவிந்தனர்;* **விளம்ப வேண்டுமோ?** - *யாம் இனித் தனித்தனியாக எடுத்தியம்ப வேண்டுமா? (இல்லையாதலால்);* **அரா அணை துறந்து போந்து** - *ஆதிசேடன் எனும் பாம்பின் படுக்கையை நீங்கி வந்து;* **அயோத்தி எய்திய** - *(மன்பதையைக் காக்க) அயோத்தி நகரில் அவதரித்துள்ள;* **இராகவன் செய்கையை விளம்புவாம்** - *இராம பிரானது செய்தியை (இனிக்) கூறத் தொடங்குவோம்.*

*அரோ - அசை. தராதலம்: பூமியாகிய இடம். தள்ளூறல்: (ஆசையின்) உந்துதல். எல்லா உலகத்தோரும் வந்து குவிதலின். இன்னார் இவ்வுலகினர் என எடுத்தியம்பல் இயலாததாயிற்று என்பார். ''உலகு அனைத்தும் விராவின;குவிந்தன'' என்றார்.*

*மங்கல நீராடி இராமன் மணக்கோலம் பூணல்*

***1207. சங்கு இனம் தவழ் கடல் ஏழில் தந்தவும்.***
***சிங்கல் இல் அரு மறை தெரிந்த தீர்த்தமும்.***
***கங்கையே முதலிய கலந்த நீரினால்.***
***மங்கல மஞ்சனம் மரபின் ஆடியே.***

***சங்கு இனம் தவழ் கடல் தந்தவும்*** *- சங்குக் கூட்டங்கள் தவழ்கின்ற ஏழ்கடல்களிலிருந்தும் கொண்டு வரப்பெற்ற தீர்த்தங்களையும்;* ***சிங்கல் இல் அருமறை தெரிந்த தீர்த்தமும்*** *- அழிவற்ற அரிய வேதங்களால் ஆராய்ந்து கூறப்பட்ட (புனித) தீர்த்தங்களையும்;* ***கங்கையே முதலிய கலந்த நீரினால்*** *- கங்கை நதி முதலிய (புனித) நதிகளின் தீர்த்தங்களையும் கலந்து ஆக்கிய புனித நீரால்;* ***மங்கல மஞ்சனம் மரபின் ஆடி*** *- மரபின் முறைப்படி இராமபிரான் மங்கல நீராடிய பின்.*

***1208. கோது அறு தவத்துத்தம் குலத்துளோர் தொழும்***
***ஆதிஅம் சோதியை அடி வணங்கினான் -***
***காது இயல். கயல்விழிக் கன்னிமார்களை.***
***வேதியர்க்கு அருமறை விதியின் நல்கியே.***

***காது இயல் கயல் விழிக் கன்னிமார்களை*** *- காதளவோடிய கயல் போன்ற கண்ணியர்களாகிய கன்னிப் பெண்டிரை;* ***வேதியர்க்கு அருமறை விதியின் நல்கி*** *- வேதம் வல்லார்க்கு அரிய வேதத்தில் விதித்த வண்ணம் ஈந்து;* ***கோது அறு தவத்து*** *- குற்றமற்ற தவமுடைமையினாலே;* ***தம் குலத்துளோர் தொழும்*** *- தமது குலத்தே உதித்த அரசர்கள் எல்லோரும் வணங்கி வருகிற (தனது குல தெய்வமான);* ***ஆதி அம் சோதியை அடி வணங்கினான்*** *- ஆதியாய் நிற்கும் அழகிய ஒளி வடிவமான திருவரங்க நாதனைத் திருவடி தொழு வணங்கினான்.*

*நான்முகனது ஆராதன மூர்த்தியாக இருந்த பாற்கடலில் பள்ளிகொண்ட திருவுருவாகிய திருவரங்கநாதனை இட்சுவாகு வேந்தன் வரத்தால் பெற்று. திருவயோத்தியில் வைத்துத் தன்குலத் துதித்தோர் எல்லோரும் வணங்கும் தெய்வமாக்கினான். ஆதலின். "தம் குலத்துளோர் தொழும் ஆதியஞ் சோதியை" என்றார். இதனை. "பிணி அரங்க. வினை அகலப் பெருங்காலம் தவம் பேணி. மணியரங்கு நெடு முடியாய்! மலர் அயனே வழிபட்டு. பணி அரங்கப் பெரும் பாயல் பரஞ்சுடரை யாம் காண. மணி அரங்கம் தந்தான்" (கம்ப. 637) எனக் குலமுறை கிளத்தும்போதும் கூறியுள்ளமை காண்க. "ஆதியஞ் சோதி உருவை அங்குவைத்து இங்குப் பிறந்த வேத முதல்வன்" (திருவாய். 3.5.3) என்பர் நம்மாழ்வார். "உலகனைத்தும் விளங்கும் சோதி. வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த் தோன்றி விண்முழுதும் உயக்கொண்ட வீரன் (பெருமாள் திரு. 10.1) என்பார். குலசேகரப் பெருமானும். அரசர்களும் சமய குரவர்களும். வேற்றிடஞ் செல்லுங்கால். தாம் வழிபடும் தெய்வ வடிவங்களை. உடன் கொண்டு செல்லுதல் மரபாதலால். அயோத்தி வேந்தர்கள் வழிபடும் இட்சுவாகு குலதனமாகிய மூர்த்தமே மிதிலைக்குக் கொண்டு வரப்பட்டு. வழிபடப்பட்டது எனலாம். அரசர்கள் கன்னிகாதானமாக ஒரு மணமகளை அடையுமுன் மணமாகா அந்தணர்க்குக் கன்னிகைகளைத் தானமாக ஈதல் மரபு ஆதல். "காது இயல் விழிக் கன்னிமார்களை வேதியர்க்கு அருமறை விதியின் நல்கி" என்பதனால் தெரிகிறது. இதுமுதல் பதினெட்டுப் பாடல்கள் இராமன். மணக்கோலம் புனைந்த மாட்சி கூறுவன:*

*இராமன் கலவைச் சாந்து அணிதல்*

***1209. அழி வரு தவத்தினொடு. அறத்தை ஆக்குவான்.***
***ஒழிவு அருங் கருணை ஓர் உருவு கொண்டென.***
***எழுத அரு வடிவு கொண்டு. இருண்ட மேகத்தைத்***
***தழுவிய நிலவு என. கலவை. சாத்தியே;***

***அழிவரு தவத்தினொடு அறத்தை ஆக்குவான்*** *- காப்பவரின்றி அரக்கர்களால் அழிவெய்தி வந்த தவத்தையும் தருமத்தையும் மீண்டும் வளர்த்திடும் பொருட்டு;* ***ஒழிவு அருங்கருணை ஓர் உருவு கொண்டென*** *- (இறைவனிடத்திருந்து என்றும்) நீங்காத அருளானது ஒரு வடிவு கொண்டு வந்தாற் போல;* ***எழுத அரும் வடிவு கொண்டு*** *- ஓவியத்தில் எழுத ஒண்ணா உருவத்தைப் பெற்று;* ***இருண்ட மேகத்தைத் தழுவிய நிலவு என*** *- இருள் நிறம் பெற்றதான ஒரு கருமேகத்தைத் தழுவிடுகின்ற வெண்ணிலாவைப் போல;* ***கலவை சாத்தி*** *- கலவைச் சந்தனத்தை யெடுத்து (இராமன் அணிந்தான்.)*

*"தர்மம் குன்றி அதர்மம் மிகும் போது நான் யுகந்தோறும் தோன்றுவேன்" (கீதை. 4:8) எனும் கீதைக் கருத்து முதலடியில் கூறப்பட்டது. "இறைவனுக்குக் கருணையே இயல்பு. "கோபம் வந்தேறி" (திருவாய். ஈடு 9:2:10) என்பது "ஒழிவரு கருணை" என்பதனால் பெறப்பட்டது. இறைவனின் திருமேனியழகு. "எழுதரு வடிவு" என்பதனாற் கூறப்பட்டது. இராமபிரான் பிறப்பு அறங்காக்கவே என்பது. "அறந்திறம்பும் என்று ஐயன் அயோத்தியில் பிறந்த பின்பு" (கம்ப. 1824) முதலாகக் காவியம் நெடுகிலும் கவிஞர் மீண்டும் மீண்டும் உரைப்பார். கருணையின் அடர்த்தியினால் செறிந்து பொழியக் காத்திருக்கும் மேகம் என்பார். "கருணை ஓர் வடிவு கொண்டு இருண்ட மேகத்தை" என்றார். "ஆறாக் கனல் ஆற்றுமோர் அஞ்சன மேகம்" (கம்ப. 1726) என்பார் பின்னும். மேகத்தைத் தழுவிய நிலவு போல. நீலத் திருமேனியில் சாத்திய சந்தனக் குழம்பு நிலவியது என்பதாம். ஆதியஞ் சோதி மூர்த்தியை வழிபட்டபின். அத்தெய்வ மேனியில் பூசப்பட்டிருந்த உயர் சாந்து இராமபிரான் இப்போது பூசிய கலவை என்க. "மெய்யிட நல்லதோர் சாந்தமும் தந்து " (திருப்பல்.9) என்னும் பெரியார் மொழியாலும் இம்மரபு தெரியலாகும். இதனைக் "கோயிற் சாந்து" என்பர். இதுமுதல் பதினெட்டுப் பாடல்கள் இராமன். மணக்கோலம் புனைந்த மாட்சி கூறுவன.*

*முடிக்கு அழகு செய்தல்*

***1210. மங்கல முழு நிலா மலர்ந்த திங்களை.***
***பொங்கு இருங் கருங் கடல் பூத்தது ஆம் என.***
***செங்கிடைச் சிகழிகை. செம் பொன் மாலையும்.***
***தொங்கலும். துயல்வர. சுழியம் சூடியே.***

***மங்கல முழு நிலா மலர்ந்த திங்களை*** *- மங்கலப் பொருள்களுள் ஒன்றான முழுக் கலைகளும் நிறைந்த முழு நிலாவை;* **பொங்கு இருங் கருங்கடல் பூத்தது ஆம் என** *- அலைகள் பொங்கும் பெரிய கரிய கடல் தன்னிடத்தே பூக்கப் பெற்றது போலும் என்று உவமை கூறுமாறு;* **செம்கிடை சிகழிகை** *- செந்நெட்டி மாலையும்;* **செம்பொன் மாலையும்** *- செம்பொன்னாலான மாலையும்;* **தொங்கலும் துயல் வர** *- பூமாலையும் அசையா நிற்க;* ***சுழியும் சூடியே*** *- சுழியம் என்னும் அணியை முடியில் (இராமன் அணிந்தான்).*

*"பொங்கு இருங் கருங்கடல்" - அலைபோல் நெளியும் குழல் தொகுதிக்கும். "முழுநிலாத் திங்கள்" அம்முடியில் அணியப் பெற்ற. வயிர மணிகளாலான சுழியம் என்னும் அணிக்கும் உவமைகள் ஆயின. பெருமானின் திருமுடி அலங்காரமே மணம் நிகழும் பங்குனி யுத்தர நாளின் தோற்றத்தையுணர்த்தியது என்பார். "மங்கல முழுநிலா மலர்ந்த திங்களை" என்றார். பங்குனி உத்தர நாள் முழு நிலவன்றே வரும் ஆதலான். சிகழிகை - நெற்றியில் வட்டமாகக் குஞ்சங்களுடன் சூடும் மாலை. சுழியம் - கொண்டையில் அதனைக் கட்டும் வட்டவடிமான அணிவகை. "துளவியல் தும்பையஞ் சுழியம் சூடினான்" (கம்ப.) எனவும். "செங்கையினில் பொற் செண்டும் திருமுடியில் சுழியமுடன்" (பெரிய புரா. கழறிற். 112) எனவும் வருதல் காண்க.*

குண்டலம் அணிதல்

***1211.*** ***ஏதம் இல் இரு குழை. இரவு. நன் பகல்.***
***காதல் கண்டு உணர்ந்தன. கதிரும் திங்களும்.***
***சீதைதன் கருத்தினைச் செவியின் உள்ளுற.***
***தூது வந்து உரைப்பன போன்று தோன்றவே.***

***இரவு நன்பகல் காதல் கண்டு உணர்ந்தன கதிரும் திங்களும்*** - இரவிலும் நல்ல பகலிலும் (சீதை படுகிற) காதல் நோயைக் கண்கூடாகக் கண்டு உணர்ந்தவர்களாகிய சூரியனும் சந்திரனும்; ***தூதுவந்து*** - தூதாக (இராமனிடம்) வந்து; செவியின் உள்உற ;- சீதை காதல் நோயைப் பிறர்க்கும் தெரியாவண்ணம் உரைக்க வேண்டி இராமனின் காதுகளின் உள்ளே சென்றடையும்படி; ***சீதைதன் கருத்தினை உரைப்பன போன்று*** - அச்சீதையினது எண்ணத்தைச் சொல்பவை போன்று; ***ஏதம் இல் இருகுழை தோன்ற*** - குற்றமற்ற இரண்டு குண்டலங்களைத் (தன் செவிகளில்) விளங்க (இராமன் அணிந்தான்). "தூது சென்று" என்னும் பாடத்தினும் "தூது வந்து" எனும் பாடமே பொருட் சிறப்புடைமையின் கொள்ளப்பெற்றது. குண்டலத்துக்கு ஒளியாலும் வட்டவடிவத்தாலும் சூரிய சந்திரர். உவமையாயினர் - தற்குறிப்பேற்ற அணி. இரு சுடர்களும் தெய்வமாதலின். பிராட்டியின் உள்ளத்துள் உள்ளதையுணர்ந்து வந்து. பிறர் அறியாவண்ணம் இராமன் திருச்செவிகளில் ஓதுவது போல் இரு குண்டலங்களும் செவியில் நிலவின என்பதாம். சூரியன். தன் வழித் தோன்றலான இராமனுக்கு அந்தரங்கத் தூதுவனாக வந்துரைப்பவனாகவும் சந்திரன் தன் வழியினளான சீதைக்கு அந்தரங்கத் தூதுவனாக வந்துரைப்பவனாகவும் கொள்க. அந்தரங்கச் செய்திகளை அரசர்க்கு உரைக்கும் தூதர். இவ்வாறு செவியுள் ஓதுதல் வழக்காதலை. "மின்னிற மருங்குலாய். செவியின் மெல் எனப் பொன்னிறத் தும்பி வந்து ஊதிப் போயதால்" (கம்ப. 5105) எனப் பிராட்டிக்கு அனுமன் தூதாக வருவதனைக் கனாவாகக் கண்டு சொன்ன திரிசடை கூற்றாலும் உணரலாம். 52

வீரபட்டமும் திலகமும் அணிதல்

***1212.*** ***கார் விடக் கறையுடை. கணிச்சி. வானவன்***
***வார் சடைப் புடையின். ஓர் மதி மிலைச்ச. தான்***
***சூர் சுடர்க் குலம் எலாம் சூடினான் என.***
***வீர பட்டத்தொடு திலகம் மின்னவே;***

***கார்விடக் கறை உடைக் கணிச்சிவானவன்*** - கரிய நஞ்சாலான கருநிறத்தைக் கழுத்திலே உடைய மழுவேந்திய சிவபெருமான்; ***வார்சடைப் புடையின் ஓர் மதி மிலைச்ச*** - நீண்ட தன் சடையின் மேலிடத்தில். பிறை மதியைச் சூடியருள; ***தான் சூர்சுடர்க் குலம் எலாம் சூடினான் என*** - அது கண்டு தெய்வத்தன்மையுள்ள சூரியன். தீ முதலிய சுடர்க் கூட்டங்களையெல்லாம் ஒருங்கே தான் தன் தலைமேலே சூடுவான் போல; ***வீரபட்டத்தொடு திலகம் மின்னவே*** - நெற்றியின் மேலே அணியும் வீர பட்டிகையென்னும் அணியையும் திலகம் என்னும் அணியையும் (இராமன் அணிந்தான்.) வீரபட்டம்: வீரர் நெற்றியில் அணியும் பொன் முத்துக்களால் ஆயதோர் அணி. பட்டம் எனவும். வீரபட்டிகை எனவும் இது வழங்கும். "நுதல் அணி ஓடையில் பிறழும் வீர பட்டத்தில்" (கம்ப. 3033) என்பார் மேலும். திலதம் - சுட்டி. இது வீரபட்டத்திற்கு அருகில் இணைந்திருப்பது. "சுட்டி சேர்வாளார் நுதற்பட்டம்" (ஆதியுலா. 17) எனவும். "நித்திலம் செய் பட்டமும் நெற்றித் திலதமும் ஒத்திலங்க" (பெருந்தொகை. 426) எனவும் வருதல் காண்க. சூரியன். தீ. சந்திரராகிய முச்சுடர்களுள் ஒன்றையே சிவபெருமான் சூடினானாக. இராமன் மற்றையிரண்டு சுடர்களையும் சேர்த்துச் சூடினமை போல வீர பட்டமும் திலதமும் ஒளி சிந்தின என்பதாம். 53 முத்துமாலை அணிதல்

***1213. சக்கரத்து அயல் வரும் சங்கம் ஆம் என***
***மிக்கு ஒளிர் கழுத்து அணி தரள வெண் கொடி.***
***மொய்க் கருங் குழலினாள். முறுவல் உள்ளுறப்***
***புக்கன நிறைந்து. மேல் பொடிப்ப போன்றவே.***

***சக்கரத்து அயல்வரும் சங்கம் ஆம் என*** -(திருமாலின் சுதரிசனம் எனும்) சக்கராயுதத்துக்கு அருகில் ஏந்தியுள்ள பாஞ்சசன்னியம் என்னும் சங்கு இது என்னுமாறு; **மிக்கு ஒளிர் கழுத்து அணி தரள வெண்கொடி** - மிக ஒளிதரும் கழுத்திலே முத்தாலான வெண்மை ஒளி தரும் மாலை வரிசைகள்; **மொய்க் கருங்குழலினாள் முறுவல்** - அடர்ந்த கருங் கூந்தலையுடையவளான சீதையின் புன்சிரிப்புக்கள்; **உள்ளுறப்புக்கன நிறைந்து மேல் பொடிப்ப போன்ற** - (இராமன்) மனத்தின் உள்ளே புகுந்து. உள்ளிடம் முழுதும் நிறைந்து உடம்பின் மேலே வெளிப்பட்டன என்னுமாறு தோன்றின. கொடி: வரிசை. முத்தனைய பற்கள் சிறிதே தோன்ற முறுவலிக்கும் பிராட்டியின் புன்னகை இராமன் நெஞ்சமெல்லாம் நிறைந்து கிடந்தது என்பதோடமையாது அம்முறுவல் பொங்கி வழியும் அளவு மிக்கும் இருந்தது என. கழுத்தில் அணியும் முத்துமாலை கொண்டு தன் குறிப்பை ஏற்றிக் கூறியவாறு. தரளம்: முத்து. சக்கரம் இராமனது திருமுகத்துக்கும். சங்கு அவன் கழுத்துக்கும் ஒளிபற்றிய உவமைகள் ஆயின. பிராட்டியின் புன் முறுவல் பெருமானின் நெஞ்சம் கொண்ட பெருமை வாய்ந்தது என்பதனை "வாள் நிலா முறுவற் கனிவாய் மதி காணலாவதோர் காலம் உண்டாம் கொல்" (கம்ப. 622) எனவும். "உண்ண வந்த நகையும் என்று ஒன்று உண்டால்" (கம்ப.623) எனவும் பிறவிடத்தும் ஓதுவதால் உணரலாம்.

54 தோள்வளை அணிதல்

*1214.* ***பந்தி செய் வயிரங்கள் பொறியின் பாடு உற***
***அந்தம் இல் சுடர் மணி அழலின் தோன்றலால்.***
***சுந்தரத் தோள் அணி வலயம். தொல்லை நாள்***
***மந்தரம் சுற்றிய அரவை மானுமே.***

***பந்தி செய்வயிரங்கள் பொறியின் பாடுற*** *-ஒழுங்குறப் பதிக்கப்பட்ட வச்சிர மணிகள் (பாம்பின் படப்) புள்ளிகள் போல் ஒளி பொருந்த;* ***அந்தம் இல் சுடர் மணி அழலின் தோன்றலால்*** *- எல்லையிலாத செந்நிறமாய் விளங்கும் மாணிக்க மணிகள் தீயின் செந்நிறம் போலத் தோன்றுவதனால்;* ***சுந்தரத் தோள் அணிவலயம்*** *- (இராமனின்) அழகிய தோள்களில் அணியப்பெற்ற தோள்வளைகள்;* ***தொல்லை நாள் மந்தரம் சுற்றிய அரவை மானும்*** *- முன்பு. பாற்கடல் கடைந்த காலத்தில். மத்தாக நின்ற மந்தர மலையைச் சுற்றிப் பிணைத்திருந்த கடைகயிறாகிய (வாசுகி என்னும்) பாம்பைப் போன்றிருந்தன.*

*இராம பிரானின் திருத்தோள்கட்கு. மந்தர மலையும் அவற்றைச் சுற்றியுள்ள தோள் வளைக்கு. வாசுகியும் உவமைகள் ஆயின. தோள் வளையின் வாய்ப் பொருத்தில் பதிக்கப் பெற்றுள்ள மணி. வாசுகியின் தலையில் ஒளியுமிழும் சீவரத்தினத்துக்கு உவமையாம். “இருள் இரியச் சுடர் மணிகள் இமைக்கும் நெற்றி” (பெருமாள். திரு. 1. 1) என்பவாதலால். “அந்தமில் சுடர் மணி அழலின் தோன்றலால்” என்றார்.*

*முத்துக் குஞ்சம் அணிதல்*

*1215.* ***கோவையின் பெரு வட முத்தம் கோத்தன.***
***காவல் செய் தடக் கையின் நடுவண் காந்துவ.***
***‘மூவகை உலகிற்கும் முதல்வன் ஆம்’ என.***
***ஏ வரும் பெருங் குறி இட்ட போன்றவே.***

***முத்தம் கோத்தன கோவையின் பெருவடம்*** *- முத்துக்கள் கோக்கப்பட்ட மூன்று கோவையாலான பெரிய வடங்கள்;* ***காவல் செய் தடக்கையின்.நடுவண் காந்துவ*** *- உலகைக் காக்கின்ற இராமனின் அகன்ற கரங்களின் நடுவிடத்தே அணியப்பட்டு விளங்குபவை;* ***‘மூவகை உலகிற்கும் முதல்வன் ஆம்’ என*** *- ‘மூன்று வகைப்பட்ட உலகிற்கும் இவனே முதல்வன் ஆவான் என்று;* ***ஏவரும் பெருங்குறி இட்ட போன்றவே*** *- எல்லோரும் இசைந்து பெரியதோர் அடையாளம் இட்டாற்போன்றிருந்தன.*

*மூன்று வடமாய்ப் பிரிந்தவையாய்த் தோள் அணிக்குக் கீழே கட்டப்பட்ட முத்துக்குஞ்சங்கள். இராமன் மூவுலகுக்கும் நாதன் என்று ஒப்பிய உலக மக்கள் அனைவரும் ஒப்பியதற்கடையாளமாக அணிவித்த விருதுச் சின்னம் போன்றிருந்தன என்க. "ஆம் முதல்வன் இவன் என்று தன் தேற்றி (திருவாய். 7. 9.3) என்று நம்மாழ்வாரைத் தேற்றித் தெளிவித்துள்ளமையும் காண்க. தற்குறிப்பேற்ற அணி. பெருமானின் திருவடி அநுக்கிரக சக்தியாகவும் திருக்கைகள் நிக்கிரக சக்தியாகவும் விளங்குதலின் "காவல் செய்தடக்கை" என்றார். "கைவண்ணம் அங்குக் கண்டேன்; கால்வண்ணம் இங்குக் கண்டேன்" (கம்ப.) என்பதன் நுண்பொருளும் அது.*

*கடகம் பூண்டமை*

***1216. மாண்ட பொன் மணி அணி வலயம் வந்து. எதிர்***
***வேண்டினர்க்கு உதவுவான் விரும்பி. கற்பகம்***
***ஈண்டு. தன் கொம்பிடை ஈன்றது ஆம் என.***
***காண்தகு தடக் கையில் கடகம் மின்னவே;***

***கற்பகம்*** *- கற்பகத் தருவானது;* ***எதிர்வந்து வேண்டினர்க்கு உதவுவான் விரும்பி*** *- தன் எதிரில் வந்து விரும்பிக் கேட்பார்க்குக் கொடுக்க மனங் கொண்டு;* ***மாண்ட பொன் மணி அணிவலயம்*** *- சிறந்த பொன்னாலும். மணிகளாலும் ஆகிய வளைகளை;* ***ஈண்டு தன் கொம்பு இடை ஈன்றது ஆம் என*** *- செறிந்த தன் கிளைகளிலே உண்டாக்கி வைத்தாற் போன்று;* ***காண் தகு தடக்கையில் கடகம் மின்ன*** *- காணத்தக்க தன் அழகிய அகன்ற கரங்களில் மின்னும் கடகம் என்னும் அணிகளை (இராமன் அணிந்தான்.)*

*கற்பகம் இராமனுக்கும். அதன் கொம்புகள் அவன் கரங்களுக்கும் உவமைகள். கலைஞர்களுக்குக் கடகம் இட்டுச் சிறப்பித்தல் இயல்பு. அவ்வாறு சிறப்பிக்க. கற்பகத்தரு. இராமன் கரங்களில் கடகங்களை மாட்டி வைத்திருந்தது என்பதாம். "கற்பகக் கா அன்ன நற்பல தோளார்க்கு" (திருவாய். 6. 6.6.) எனும் நம்மாழ்வார் கருத்தை அடியொற்றியது.*

***1217. தேனுடை மலர்மகள் திளைக்கும் மார்பினில்.***
***தான் இடை விளங்கிய தகையின் ஆரம்தான்.***
***மீனொடு சுடர்விட விளங்கும் மேகத்து.***
***வான் இடு வில் என. வயங்கிக் காட்டவே;***

***தேன் உடை மலர் மகள்*** - தேனையுடைய செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள்; ***திளைக்கும் மார்பினில்*** - மகிழ்ந்துறையும் (திரு) மார்பில்; ***தான் இடை விளங்கிய தகையின் ஆரம் தான்*** - இடையே விளங்குகிற அழகிய (பல்வகை மணிகள் பதித்த) மாலையானது; ***மீனொடு சுடர்விட விளங்கும் மேகத்து வான் இடு வில் என*** - விண்மீன்களொடு ஒளிர்கின்ற மேகக் கூட்டத்தில் வான் வில்லும் எழுந்தது போன்று; ***வயங்கிக் காட்டவே*** - விளங்கித் தோன்றுமாறு (இராமன் அணிந்தான்.)

*மார்பு கார் மேகத்திற்கும் மணிமாலையின் பல்வகை மணிகள் விண் மீன்களுக்கும். அவற்றின் ஒளிக்கூட்டம் வான் இடு வில்லிற்கும் உவமைகள் ஆயின. மேகத்தில் விண்மீன்கள் விளங்கித் தோன்றா; இங்குத் தோன்றின என்பதால் இல்பொருள் உவமையணி. தான் - அசைகள். வான் இடுவில்: இந்திரவில். "வானிடு வில்லின் வரவு அறியா வாய்மையால்" (நாலடி. 1*

*மேலாடை (உத்தரீயம்) அணிதல்*

***1218. நணுகவும் அரியதா நடக்கும் ஞானத்தர்***
***உணர்வு என. ஒளி திகழ் உத்தரீயம்தான்.***
***தணிவு அருங் கருணையான் கழுத்தில் சாத்திய.***
***மணி உமிழ் கதிர் என. மார்பில் தோன்றவே;***

***நணுகவும் அரியதா நடக்கும் ஞானத்தர் உணர்வு என*** - *(எளிய மக்களால்) அணுகுவதற்கும் அரிய ஞான நடையினைப் பூண்டொழுகும் ஞானிகள் தூய அறிவு போல;* ***ஒளி திகழ் உத்தரீயம் தான்*** *- ஒளிவிடுகின்ற மேலாடையானது;* ***தணிவு அருங் கருணையான கழுத்தில் சாத்திய மணி உமிழ் கதிர் என*** *- குறையாது மேன்மேற் பெருகுங்கருணையே வடிவினனான இராமபிரானின் கழுத்திலே சாத்தப்பட்ட மணிகள் சிந்திய ஒளியினைப் போல;* ***மார்பில் தோன்றவே*** *- திருமார்பில் தோன்றுமாறு (இராமன் அணிந்தான்.) ஞானம்: மெய்யுணர்வு. அஃதாவது பிறப்பு. வீடுகளையும் அவற்றின் காரணங்களையும். விபரீத. ஐய அறிவுகளால் அல்லாமல் உண்மையாக அறிதல். இதனையே 'தத்துவ ஞானம்' என்பர். (திருக். 36 அதி. முன் பரிமே) மேல். "ஒழிவரு கருணையான்" என அவனிடம் உள்ள கருணையின் நீங்காத் தன்மை கூறினார். இங்கு. "தணிவருங் கருணை" என கொடுக்கக் கொடுக்கக் குறையாத அதன் பூரணத் தன்மை கூறினார். ஞானியர் உணர்வு மாசற்றதாகலின் மாசற்ற உத்தரீயத்திற்கு உவமையாயிற்று. கழுத்தணியின் ஒளி வெள்ளம் மார்பில் பாய்ந்தது போன்றும் இது இலங்கிற்று என்பதாம். 59*

*முப்புரி நூலின் தோற்றம்*

*1219.* ***மேவ அருஞ் சுடர் ஒளி விளங்கும் மார்பின் நூல்.***
***'ஏவரும் தெரிந்து இனிது உணர்மின் ஈண்டு' என்.***
***தேவரும். முனிவரும். தெரிக்கலா முதல்***
***மூவரும். தான் என. முடித்தது ஒத்ததே.***

**மேவு அரும் சுடர் ஒளி விளங்கும் மார்பின்நூல்** -*(மிகு ஒளியில் அருகில்)* *நெருங்குவதற்கரிய சூரியன். சந்திரன். தீ எனும் முச்சுடர்கள் போலே. மார்பில் விளங்குகின்ற முப்புரி நூலானது;* **தேவரும் முனிவரும் தெரிக்கலா முதல் மூவரும் தான் என** - *தேவர்களும் முனிவர்களும் இன்னதென்று அறிவித்து விட இயலாத மும்மூர்த்திகளின் வடிவமும் தானே (இராமனே) என்று;* **ஈண்டு ஏவரும் தெரிந்து இனிது உணர்மின் என** - *இங்கே எல்லோரும் ஆராய்ந்து. இனிதாய் அறிந்துணருங்கள் (முடிவுக்கு வாருங்கள்) என்று;* **முடித்தது ஒத்ததே** - *(அதற்கு அடையாளச் சின்னமாக) (முடியிட்டதைப் போன்று) முடியப்பட்டிருந்தது. மூன்று மூர்த்திகளின் ஒருங்கிணைந்த வடிவமே இராமன் என ஆனான் என்னும் தமது கடவுட் கொள்கையைக் கம்பர் இங்குத் தெளிய உணர்த்தும் திறம் காண்க. "மூன்று கவடாய் முனைத்தெழுந்த மூலமே" (கம்ப. 3682) "செங்கண்மால் நான்முகன் சிவன் என்றே கொலோ எங்கள் நாயகனையும் நினைத்தி ஏழை நீ" (கம்ப. 5194) "முத்தேவரின் மூல முதற் பொருளாம் அத்தேவர் இம் மானிடர்" (கம்ப. 3416) எனவும் மேலும் பல இடங்களில் உணர்த்திப் போவதை ஆங்காங்குக் கண்டு தெளியலாம்.* *60*

*உதர பந்தனம் அணிதல்*

*1220.* ***சுற்றும் நீள் தமனியச் சோதி பொங்க. மேல்***
***ஒற்றை மா மணி உமிழ் உதரபந்தனம்.***
***மற்றும் ஓர் அண்டமும். அயனும். வந்து எழ.***
***பொன் தடந் தாமரை பூத்த போன்றதே.***

***சுற்றும் நீள்தமனியச் சோதி பொங்க*** - சுற்றுப்புறங்களில் எல்லாம் நீண்டு பொன் மயமான ஒளி பரவ; ***மேல் ஒற்றை மாமணி உமிழ் உதர பந்தனம்*** - மேலே ஒற்றையாகப் பெரிய மாணிக்கம் ஒன்றை ஒளிவிளங்கப் பதித்த உதர பந்தனம் எனத் திருவயிற்றின் மேல் இட்ட அணியானது; ***மற்றும் ஓர் அண்டமும் அயனும் வந்து எழ*** - (இப்பொழுதுள்ள அண்டங்களேயன்றி) வேறும் ஓர் அண்டமும். அதனைப் படைக்கும் பிரமனும் வந்து தோன்றும்படி; ***பொன் தடந்தாமரை பூத்த போன்றதே*** - பொன்நிறமான பெரிய தாமரை மலர் ஒன்றைத் திருநாபி பூத்ததைப் போன்றிருந்தது. அரை ஆடை நழுவாமல் வயிற்றின் மீது அணியும் அணி உதர பந்தனம் ஆகும். இராமன் அவ்வணியை அணிந்தது இன்னுமோர் அண்டத்தையும் இன்னுமோர் பிரமனையும் படைக்கக் கருதி. தன் நாபியில் மேலும் ஒருகமலத்தைப் பூத்தது போன்றிருந்தது எனத் தன் குறிப்பை ஏற்றிக் கூறினார். உதர பந்தனத்தைச் சுற்றியெழுந்த பொன்மயமான ஒளி வெள்ளத்தை அண்ட கோளமாகவும். உந்தித் தாமரை. உதர பந்தத்தின் முகப்பாகவும் அவ்வணியின் நடுவில் திகழும் மணியைப் பிரமனாகவும் கொள்க. திருமால் தன் நாபிக் கமலத்தில் பிரமனைப் படைக்கின்றான்; அவன் பொன்மயமான அண்டங்களைப் படைக்கின்றான் என்பது நூற் கொள்கை.

*வெண்பட்டு அணிதல்*

***1221. 'மண்ணுறு' சுடர் மணி வயங்கித் தோன்றிய***
***கண்ணுறு கருங் கடல்அதனை. கை வளர்***
***தண் நிறப் பாற்கடல் தழீஇயது ஆம்' என.***
***வெண் நிறப் பட்டு. ஒளி விளங்கச் சாத்தியே;***

***மண் உறு சுடர்மணி வயங்கித் தோன்றிய கண்ணுறு கருங்கடல் அதனை*** - சாணைப் பிடித்துத் தீற்றிய ஒளி விளங்குகின்ற மாணிக்கங்கள் தோன்றுதற்கு இடமாய்க் கண்ணுக்குப் புலப்படுகின்ற கரிய கடலை; ***கைவளர் தண் நிறப் பாற் கடல் தழீஇயது ஆம் என*** - அலைக்கரங்கள் வளர்கின்ற குளிர்ந்த தன்மையையுடைய பாற்கடல் தழுவிய காட்சி இது என்று கூறலாம்படி; ***வெண்நிறப் பட்டு ஒளி விளங்கச் சாத்தியே*** - வெண்மை நிறமுடைய பட்டாடையை ஒளி விளங்குமாறு தன் இடையிலே உடுத்து (அணி செய்தான் இராமன்).

*கருங்கடல் பாற்கடல் உடுத்தது போல. இராமன் தன் கரிய திருமேனியில் வெண்பட்டை உடுத்தான் என்க. மண்ணுதல்; கழுவுதலுமாம். முத்து முதலிய இரத்தினங்கள் நீராற் கழுவித் தூயதாக்கலின் ''மண்ணுறு சுடர்மணி'' என்றார் எனினுமாம். ''கற்பால் உமிழ்ந்த மணியும் கழுவாது விட்டால். நாற்பால அழியும்'' (சீவக. அவையடக்) என்பர். மணி அணிகள் பல அணிந்து விளங்கும் கருநீலக் கடலும் உடுத்திருந்த வெண் பட்டாடைக்குப் பாற்கடலும் உவமை. மங்கல நிறமாதலின் வெண்பட்டாடை கூறினார்.*

*உடைவாள் அணிதல்*

*1222.* ***சலம் வரு தரளமும். தயங்கு நீலமும்.***
***அலம்வரு நிழல் உமிழ் அம் பொன் கச்சினால்.***
***குலம் வரு கனக வான் குன்றை நின்று உடன்***
***வலம்வரு கதிர் என. வாளும் வீக்கியே;***

***சலம் வரு தரளமும். தயங்கு நீலமும்*** - *கடல் நீரில் தோன்றுகின்ற (வெண்) முத்துக்களும். ஒளிகின்ற நீல நிறமுடைய மாணிக்கங்களும்;* ***அலம் வரு நிழல் உமிழ் அம்பொன் கச்சினால்*** - *அசைவத னால் ஒளி உமிழ்கின்ற அழகிய பொன்னால் ஆகிய இடைக் கச்சினால்;* ***குலம் வரு கனகவான் குன்றை நின்று உடன் வலம் வரு கதிர் என*** - *சிறப்புடைய பொன்மயமான மேருமலையைச் சேர வலம் வந்து நிற்கின்ற சூரியனைப் போல;* ***வாளும் வீக்கியே*** - *உடை வாளினை இடையில் கட்டி (இராமன் அணிசெய்தான்.)*

*இராமனது திருமேனி கரிய நிறத்தது ஆயினும். அணிந்த அணிகளின் ஒளியால் பொன்னிறம் பெற்றதாதலின் இடையினை. கனகக் குன்றாகிய மேரு மலைக்கும். உடைவாளினைச் சூரியனுக்கும் உவமித்தார். தரளம்: முத்து. கனகம்: பொன்.* *63*

*அரைப் பட்டிகை அணிதல்*

*1223.* ***முகை விரி சுடர் ஒளி முத்தின் பத்தி வான்***
***தொகை விரி பட்டிகைச் சுடரும் சுற்றிட.***
***தகை உடைவாள் எனும் தயங்கு வெய்யவன்***
***நகை இள வெயில் என. தொங்கல் நாற்றியே;***

***முகைவிரி சுடர்ஒளி முத்தின் பத்தி வான் தொகைவிரி பட்டிகைச்*** *சுடரும் - அரும்பி விரிக்கின்ற ஒளியுடைய முத்துக்களின வரிசைகள் மிகுந்து இணைந்து விரிகின்ற அரைப்பட்டிகை எனும் அணியின் ஒளியும்;* ***சுற்றிட. தகை உடைவாள் எனும் தயங்கு வெய்யவன்*** - *இடையைச் சுற்றி நிற்கையில் கச்சில் பொருந்தியுள்ள உடை வாள் என்னும் ஒளிமிகு சூரியனின்;* ***நகை இளவெயில் என*** - *ஒளிர்கின்ற இளவெயில் போலத் தோன்றிடுமாறு.;* ***தொங்கல் நாற்றியே*** - *தொங்குவதாகிய மணிமாலையை (அந்தவாளின் அருகில்) தொங்கவிட்டு (இராமன் அணிந்தான்).*

*உடை வாளைச் சூரியன் என்றதற்கு ஏற்ப. அவ்வாளின் அருகே தொங்கவிடப்பட்ட செம்மணி மாலையை. அச் சூரியனது இளவெயில் என்று உருவகித்தார்.*

*தொடையணி அணிதல்*

***1224. காசொடு கண் நிழல் கஞல. கைவினை***
***ஏசறு கிம்புரி எயிறு வெண் நிலா***
***வீசலின். மகரவாய் விளங்கும் வாள் முகம்.***
***ஆசையை ஒளிகளால் அளந்து காட்டவே;***

*__காசொடு கண் நிழல் கஞல__ - மணிகளின் ஒளியோடு காண்பார் கண் ஒளியும் இணைந்து விளங்க; __கைவினை ஏசறு கிம்புரி__ - கைகளால் செய்யப்படுகிற விசித்திர வேலைப்பாடுகளில் குற்றமில்லாத கிம்புரி என்னும் அணியானது (சுறா மீனின் திறந்த வாய் வடிவமாகச் செய்யப் படுவதாதலின் அச்சுறா மீனின்); __எயிறு வெண்நிலா வீசலின்__ - பற்க ளாகப் பதித்துள்ள மணிகளிலிருந்து வெண்ணிறமான ஒளி வீசுவதால்; __மகரவாய் விளங்கும் வாள் முகம்__ - அந்தக் கிம்புரி என்னும் அணியினது ஒளி விளங்கும் முகம்; __ஆசையை ஒளிகளால் அளந்து காட்டவே__ - திக்குகளின் எல்லையை இவ்வளவு என்று அளந்து காட்ட (இராமன் அணிந்தான்) கஞலல்: விளங்கல். ஆசை: திசை. கிம்புரி: மகர மீனின் திறந்த வாய் போன்ற தாய்த் தொடையில் அணியப்படும் ஓர் அணி. இதனைக் ''குறங்கு நெறி'' என்பர். ''மகரவாய்'' என்று கூறுதலும் உண்டு.*

*65 காலில் கழலும் அணிதல்*

***1225. 'இனிப் பரந்து உலகினை அளப்பது எங்கு?' என.***
***தனித்தனி தடுப்பன போலும் சால்பின;***
***நுனிப்ப அரு நுண் வினைச் சிலம்பு நோன் கழல்.***
***பனிப் பருந் தாமரைப் பாதம் பற்றவே;***

*__'இனிப் பரந்து உலகினை அளப்பது எங்கு' என__ - 'இனிமேல் பரந்த வடிவு கொண்டு (திரு விக்கிரம அவதாரத்தில்) உலகினை அளந்தது போல். இத்திருவடிகள் எப்படி அளந்து விடும்' பார்ப்போம் என்று கூறித்; __தனித்தனி தடுப்பன போலும் சால்பின__ - தனித்தனியே தடை செய்வன போன்ற இயல்பினையுடையனவாய்; __நுனிப்ப அரும் நுண்வினைச் சிலம்பும் நோன் கழல்__ - நுனித்து நோக்கினும் முழு நுட்பமும் கண்டறிய இயலாதவாறு செய் தொழிலையுடைய ஒலிக்கின்ற வலிய வீரக் கழலையும்; __பனிப்பரும் தாமரைப் பாதம் பற்றவே__ - குளிர்ந்த பெரிய செந்தாமரை மலர் போலும் திருவடிகளைச் (சுற்றிலும்) பற்றிக் கொள்ள (இராமன் அணிந்தான்.)*

*"பனிப்பரும் தாமரைப் பாதம்" என்பதற்கு. பனிப்பு அருந் தாமரைப் பாதம் எனப் பிரிந்து. பற்றினார் அஞ்சி நடுங்க வேண்டாத தாமரைப் பாதங்கள் எனினும் பொருந்தும். காவிய நாயகர்கள் தெய்வமாயின் கேசாதிபாதமாக வருணித்தல் வேண்டும் எனும் மரபையொட்டி 1210ஆம் பாட்டில் முடியணி வருணனையில் தொடங்கி. இப்பாடலில் அடியணியாகிய சிலம்பும் கழலும் அணியும் வருணனையோடு முடித்திருக்கும் திறம் நோக்குக. சிலம்பும் - நோன் கழல். சிலம்பு - சிலம்புதல். ஒலித்தல். வில்லோன் காலன கழல். மெல்லடி மேலவும் சிலம்பு (குறுந் தொகை).*

***1226. இன்னணம் ஒளிர்தர. இமையவர்க்கு எலாம்.***
***தன்னையே அனையது ஓர் கோலம் தாங்கினான் -***
***பன்னக மணி விளக்கு அழலும் பாயலுள்***
***அன்னவர் தவத்தினால் அனந்தல் நீங்கினான்.***

***மணி விளக்கு அழலும் பன்னகப் பாயலுள் அனந்தல்*** *- தனது மாணிக்கங்களாகிய ஒளி விளக்குகள் ஒளிர்கின்ற ஆதிசேடனாகிய படுக்கையிடத்தே அறிதுயில் கொள்ளுதலை;* **அன்னவர் தவத்தினால் நீங்கினான்** *- அந்தத் தேவர்கள் செய்த தவத்தின் பயனால் நீத்து அயோத்தியில் உதித்தவனாகிய இராமபிரான்;* **இன்னணம் ஒளிர்தர இமையவர்க்கு எலாம்** *- இவ்வாறு விளங்குமாறு தேவ காரியம் காரணமாய்;* **தன்னையே அனையது ஓர் கோலம் தாங்கினான்** *- (வேறு ஒப்புக் கூற உவமை இல்லாமையால்) தன்னையே தான் ஒப்பதான ஓர் அழகுக் கோலம் பூண்டு' நின்றான்.*

*இமையவர்க்கு: இமையவர் பொருட்டு. நான்கன் உருபு பொருட்டு எனும் பொருளில் வந்தது. சீதை மணம் இராவண வதத்திற்கு அடிகோலி. தேவர் துயர் நீக்கத்திற்கும் வழியமைத்தலின் இமையவர் அறிதுயில் நீங்கினான். இமையவர்க்காகத் தன்னையே அனையதோர் கோலம் தாங்கினான் என்றார். இறைவனின் அவதாரமான இராமன் இறைவனைப் போன்றே ஒப்பிலியப்பன் ஆவான் ஆதலினி. "தன்னையே அனையதோர் கோலம் தாங்கினான்" என்றார். "தனக்குவமையில்லாதான்" (திருக். 7) என்பார் வள்ளுவனாரும். தன் ஒப்பார் இல்லப்பன் (திருவாய்.6:3:9) என்பார் நம்மாழ்வாரும்" மணி விளக்காம்...... திருமாற்கு அரவு" (இயற். முதல் திருவந்.53) என்பர் ஆதலின் "பன்னக மணி விளக்கு ஒளிரும் பாயல்" என்று ஆதிசேடப் படுக்கையைக் குறித்தார்.*

***1227. முப் பரம் பொருளிற்குள் முதலை. மூலத்தை***
***இப் பரம் துடைத்தவர் எய்தும் இன்பத்தை.***
***அப்பனை. அப்பினுள் அமிழ்தை. தன்னையே***
***ஒப்பனை. ஒப்பனை உரைக்க ஒண்ணுமோ?***

***முப்பரம் பொருளிற்குள் முதலை மூலத்தை*** - *(எல்லாப் பொருள்களிலும் சிறந்தன என்பதனால் பரம்பொருள்கள் எனப்படும் அயன் அரி அரன் ஆகிய மூர்த்திகள் மூவருள்ளும் முதல்வன் ஆனவனை அம்மூன்று பரம்பொருள்களுக்கும் மூலப் பொருளாய் நிற்பவனை;* ***இப்பரம் துடைத்தவர் எய்தும் இன்பத்தை*** - *இவ்வுலகப் பொருள்களின் தொடக்கை அறுப்பவர்கள் (பரம பதத்தில் சென்றடையும்) பேரின்பத்தை;* ***அப்பனை*** - *அனைத்துயிர்க்கும் தந்தையை;* ***அப்பினுள் அமிழ்தை*** - *பாற்கடலில் கிடக்கும் அமிழ்தத்தை;* ***தன்னையே ஒப்பனை*** - *தனக்குத் (உவமை வேறின்மையால்) தானே உவமையாவானை;* ***ஒப்பனை உரைக்க ஒண்ணுமோ?*** - *அவன் அணிசெய்த திறம் (முழுதும் நம்மால்) உரைசெய்ய இயலுமோ?*

*"ஒப்பனை ஒப்பனை" என்பதில். முன்னது ஒப்பானவனை என்றும். பின்னது அலங்காரத்தை என்றும் பொருள்படும். மேல் முதல் இப்பாடல் 1227 முடிய 21 பாடல்களில் இராமன் அணி செய்த கோலங் கூறியும். மனம் நிறைவுறாத கவிஞர்பிரான் ஆராமையால். "ஒப்பனை உரைக்க ஒண்ணுமோ?" என்ற தவிப்போடு முடித்தார். "மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலப் பொருள்" (கம்ப. 3682) இராமபிரான் ஆதலின் முப்பரம் பொருளிற்குள் முதலை. மூலத்தை" என்றார். "தானும் சிவனும் பிரமனும் ஆகிப் பணைத்த தனி முதலை" (திருவாய்.8:8:5) "திருமால். நான்முகன். செஞ்சடையோன் என்றிவர்கள் எம் பெருமான் தன்மையை யார் அறிகிற்பார்?" (திருவாய். 8:4:9) எனும் நம்மாழ்வார் கருத்துக்களோடு அப்படியே "முப்பரம் பொருளிற்குள் முதலை" என்பது ஒத்திருத்தல் காணலாம்.*

*ஆதியஞ் சோதியுருவாய் உள்ள மூலப் பரம்பொருளிலிருந்து முப்பரம் பொருள்கள் கிளைத்தன எனும் கம்பர் கருத்தோடு நம்மாழ்வார் கருத்து முழு ஒற்றுமையுடையதாதலை. "தான் ஓர் உருவே தனிவித்தாய்த் தன்னின் மூவர் முதலாய வானோர் பலரும் முனிவரும் மற்றும் மற்றும் முற்றுமாய்" (திருவாய். 1:5:4) எனும் திருவாய்மொழிப் பாசுரத்தாலும் அறியலாம். இவ்வுலகப் பற்றும். உடற்பற்றும் குறையக் குறைய. இறைவனின் அந்தமில் இன்பம் பெருகுமாதலின். "இப்பரந்துடைத்தவர் எய்து இன்பத்தை" என்றார். 68 இராமன் தேர் ஏறுமுன் தானம் நல்கல்*

***1228. பல் பதினாயிரம் பசுவும். பைம் பொனும்.***
***எல்லை இல் நிலனொடு. மணிகள் யாவையும்.***
***நல்லவர்க்கு உதவினான்; நவிலும் நான்மறைச்***
***செல்வர்கள் வழுத்துற. தேர் வந்து ஏறினான்.***

**பல்பதின் ஆயிரம் பசுவும் பைம் பொன்னும்** - *(பின்பு) பத்தாயிரக் கணக்கான பசுக் கூட்டங்களையும் பசும் பொன்னையும்;* **எல்லை இல் நிலனொடு மணிகள் யாவையும்** - *வரம்பில்லாத நிலங்களையும் நவரத்தினங்களையும்;* **நல்லவர்க்கு உதவினான்** - *நல்லொழுக்கமுடைய அருளாளர்கட்குக் கொடையாகக் கொடுத்தவனாகிய இராமன்;* **நவிலும் நான்மறைச் செல்வர்கள் வழுத்துற** - *போற்றற்குரிய நான்கு வேதங்களையே தம் செல்வமாக உடைய அந்தணாளர்கள் வாழ்த்துக்கள் நிறைய;* **தேர் வந்து ஏறினான்** - *தேரில் வந்து ஏறினான்.*

*கோதானமும். பூதானமும் ஸ்வர்ண தானமும் இரத்தின தானமும் நல்லோர் மகிழக் கொடுத்து இராமன் தேர் ஏறினன் என்க. நற்பெருஞ் செயல்கள் புரியப் புகுமுன். கொடை கொடுத்து. நல்லோரை மகிழச் செய்யும் மரபை மறவாமல் இங்குக் குறித்தார். உதவினான் - வினையால் அணையும் பெயர். உதவினான் என்பதனை முற்றெச்சமாகக் கொள்ளின் இராமன் என்னும் (தோன்றா) எழுவாயை வருவித்துப் பொருள் கூறுக. "அறப்பயன். தக்கார் கைப்பட்டக்கால் வான் சிறிதாப் போர்த்துவிடும்" (நாலடி. 38) ஆதலால். "நல்லவர்க்கு உதவினான்" என்றார்.*

*இராமபிரான் தேர்க் காட்சி*

***1229. பொன் திரள் அச்சது; வெள்ளிச் சில்லி புக்கு***
***உற்றது; வயிரத்தின் உற்ற தட்டது;***
***சுற்று உறு நவ மணி சுடரும் தோற்றத்தது;***
***ஒற்றை ஆழிக் கதிர்த் தேரொடு ஒப்பதே.***

**பொன் திரள் அச்சது** - *பொன்னால் ஆன திரண்ட அச்சினையுடையதும்;* **வெள்ளிச் சில்லி புக்கு உற்றது** - *வெள்ளியினால் ஆன சக்கரங்கள் நுழையப் பொருந்தியதும்;* **வயிரத்தின் உற்ற தட்டது** - *வச்சிர மணியால் ஆன தட்டினையுடையதும்;* **சுற்று உறு நவமணி சுடரும் தோற் றத்தது** - *சுற்றிலும் பொருந்திய நவமணிகளால் நெடுந் தொலைவின் அளவும் ஒளிவீசும் காட்சியையுடையதும் ஆகிய அந்த இராமபிரான் ஏறிய தேர்;* **ஒற்றை ஆழிக் கதிர்த் தேரொடு ஒத்ததே** - *ஒற்றைச் சக்கரத்தையுடைய சூரியனது தேரொடு ஒத்து விளங்கியது.*

*சூரியனது ஒற்றைச் சக்கரத் தேர். ஒளியாலும் வேகத்தாலும் உவமையாயிற்று. சூரிய மண்டல மத்தியில் சூரிய நாராயணன் எழுந்தருளியிருப்பதாலும் உவமையாம் எனினுமாம்.*

***1230. நூல் வரும் தகையன. நுனிக்கும் நோன்மைய.***
***சால் பெருஞ் செவ்விய. தருமம் ஆதிய***
***நாலையும் அனையன. புரவி நான்கு. ஒரு***
***பாலமை உணர்ந்தவன் பக்கம் பூண்டவே.****

***நூல் வருந் தகையன*** - *அசுவ சாத்திரத்தில் கூறப்படும் உத்தம இலக்கணங்களை உடையவையும்;* ***நுனிக்கும் நோன்மைய*** - *கூர்ந்து உணர்தற்கேற்ற ஆற்றலையுடையவையும்;* ***சால் பெரும் செவ்விய*** - *நிரம்பிய பேரழகுடையவையும்;* ***தருமம் ஆதிய நாலையும் அனையன*** - *அறம். பொருள். இன்பம். வீடு என்னும் நால்வகைப் புருடார்த்தங்களைப் போன்று யாவராலும் அடைய விரும்பப்படுபவையும் ஆகிய;* ***புரவி நான்கு ஒரு பாலமை உணர்ந்தவன் பக்கம் பூண்டவே*** - *நான்கு குதிரைகள் உயிர்களின் ஒப்பற்ற உள்ளத்தின் தன்மையை உணரவல்லவனாகிய இராம பிரானுடைய தேரில் பூட்டப்பெற்றுள்ளன.*

*பாலமை: பான்மை: தன்மை. அறம். பொருள். இன்பம். வீடு எனும் புருடார்த்தங்கள் நான்கின் பயிற்சியும் உயர்நிலை எய்தும் ஆன்மக் கூட்டத்திற்கு இலக்கையடைய உதவுவதுபோல. உரிய இலக்கை எளிதில் அடைய பயிற்சிமிக்க இக்குதிரைகள் நான்கும் உதவும் என்பதாம்.*

***1231. அனையது ஓர் தேரினில். அருணன் நின்றெனப்***
***பனி வரு மலர்க்கண் நீர்ப் பரதன் கோல் கொள.***
***குனி சிலைத் தம்பி பின் கூட. ஏனையன்***
***இனிய பொற் கவரி கால் இயக்க. ஏகினான்.***

***அனையதோர் தேரினில்*** - *அத்தகையதொரு தேரில்;* ***அருணன் நின்று என*** - *சூரியனின் தேர்ப்பாகனாகிய அருணன் என்பவன் நின்றாற் போல;* ***பனிவரு மலர்க்கண் நீர்ப் பரதன் கோல்கொள*** - *இன்பக் கண்ணீர் சொரிகின்ற மலர் போன்ற கண்களையுடைய பரதன். முன்னே தேரோட்டியாய் நின்று குதிரைகளை ஓட்டும் கோலினைக்கையிற் கொள்ள;* ***குனி சிலைத் தம்பி பின்கூட ஏனையன்*** - *வளைத்தற்குரிய வில்லை ஏந்திய தம்பியான இலக்குவனும் அவனுடன் கூடிச் செல்ல. மற்றொரு தம்பியாகிய சத்துருக்கனும்;* ***இனைய பொற்கவரிகால் இசைக்க ஏகி னான்*** - *கண்ணுக்கினிய பொற்காம்பு அமைந்த சாமரங்களைக் காற்றுண்டாக வீசவும் இராமன் தேரில் சென்றான்.*

*பகைவர் இல்லாத காலத்தும் வில்லை வளைத்தவண்ணம். மெய்காப்பாளர் மேனி காவல் பணிபுரிவது மரபாதலின். "குனி சிலைத் தம்பி பின் கூட" என்றார். இராமன் நிலை கண்டு ஆனந்தக் கண்ணீரோ. அவலக்கண்ணீரோ இரண்டில் ஒன்று எப்போதும் மாறாமல் இருக்கும் கண்களையுடையவன் பரதன் என்பது உணர்த்துவார். "பனிவரும் மலர்க் கண் நீர் பரதன்" என்றார். இப்போது இராமன் மணக்கோலம் கண்டு மகிழ்ச்சிக் கண்ணீர்ப் பரதன் ஆகிறான்.*

*மண்ணவரும் விண்ணவரும் மகிழ்வுற்றமை*

***1232. அமைவு அரு மேனியான் அழகின் ஆயதோ?***
***கமை உறு மனத்தினால் கருத வந்ததோ?***
***சமைவு உற அறிந்திலம்; தக்கது ஆகுக -***
***இமையவர் ஆயினார் இங்கு உளாருமே!***

***அமைவு அரு மேனியான் அழகின் ஆயதோ?*** - *(யாவர்க்கும்) அமைய இலாத சிறந்த திருமேனியையுடைய இராமபிரானின் (மிகு) அழகின் காரணமாகத் தோன்றியதோ (அல்லது);* ***கமை உறு மனத்தினால் கருத வந்ததோ?*** - *பொறுமை மிகும் தம் மனத்தால் இராமன் அழகையே நினைத்துக் கொண்டிருப்பதனால் வந்ததோ;* ***சமைவு உற அறிந்திலம்*** - *(இவ்விரண்டினுள் ஒன்றில்) எது பொருந்துவது என்று அறிந்தோம் இல்லை;* ***தக்கது ஆகுக*** - *(இவ்விரண்டினுள்) எது பொருந்துவதோ அக்காரணத்தை (நீங்கள்) எடுத்துக் கொள்க;* ***இங்கு உளாருமே இமையவர் ஆயினார்*** - *(இவ்விரண்டில் ஒரு காரணத்தால் நிகழ்ந்த காரியம் யாது எனில்) இராமனைக் கண்ட இவ்வுலக மனிதர்களும் (கண்ணிமையாதவர் ஆனமையால் கண்ணிமையாத) வான உலகத் தேவர்கள் ஆகிவிட்டனர்.*

*கண்ணிமையால் காண்பார் அனைவரும் இராமன் அழகைப் பருகினர் என்பது கருத்து. மிக அழகியவையும். ஊன்றி நோக்க உரியவையும் கண் இமைத்தலை மறக்கச் செய்துவிடல் இயல்பு. நம் நினைவின்றியே இயங்கவல்ல கண் இமைகளும் இமைக்கும் நினைவின்றி மறந்தன என இராமனின் பேரழகை வியந்தவாறு. மன ஒருமை எனும் தியானம் பொறுமையால் வந்து கூடுவதாதலின். "கமை உறு மனத்தினால் கருத வந்ததோ?" என்றார். "கரியவனைக் காணாத கண் என்ன கண்ணே! கண் இமைத்துக் காண்பார் தம் கண் என்ன கண்ணே! (சிலம்பு. ஆய்ச்சி. 17:36) என்பது இளங்கோவடிகளின் வாக்கு. "இமையா நாட்டம் பெற்றிலம் என்பார்; இரு கண்ணால் அமையாது என்பார்; அந்தர வானத்தவர் எல்லாம்" (கம்ப. 504) எனும் தொடரும் இங்கு ஒப்பு நோக்கற் பாலது. தேவர்கட்கு இமையவர் எனும் பெயர் இமைத்தலில் விசேடத் தன்மை வாய்ந்தவர் என்பதனால் வந்தது. அந்தச் சிறப்புத் தன்மையை மண்ணுலக மக்களும் இன்று பெற்று விட்டதனால். இவர்களும் தேவர்கள் ஆகிவிட்டனர் என்பதாம்.*
*73*

***1233. 'வரம்பு அறும் உலகினை வலிந்து. மாய்வு இன்றி.***
***திரம் பயில் அரக்கர்தம் வருக்கம் தேய்வு இன்று***
***நிரம்பியது' எனக் கொடு. நிறைந்த தேவரும்.***
***அரம்பையர் குழாத்தொடும். ஆடல் மேயினார்.***

***வரம்புறும் உலகினை வலிந்து*** - *எல்லையற்ற உலகங்கள் யாவற்றையும் துன்புறுத்தி;* ***மாய்வு இன்றித் திரம் பயில் அரக்கர் தம் வருக்கம்*** - *தாம் அழியாமல் நிலைத்து நிற்கின்ற அரக்கரது கூட்டத்தின்;* ***தேய்வு இன்று நிரம்பியது எனக் கொடு*** - *அழிவு இன்றோடு நிறைவேறிற்று என்று எண்ணிக் கொண்டு;* ***நிறைந்த தேவரும். அரம்பையர் குழாத்தொடும் ஆடல் மேயினார்*** - *(வானத்திலே வந்து) நிரம்பியிருந்த தேவர்கள் அனைவரும் அரம்பை முதலிய தேவ மாதர்கள் கூட்டத்துடனே ஆனந்த நடனம் புரியத் தொடங்கினர்.*

*சீதை திருமணம் அரக்கர் அழிவுக்கு இட்ட கால்கோள்; விரைவில் இனி அரக்கர் அழிவர் என்பது உறுதியானதால். தேவர்கள் ஆனந்தக் கூத்தாடினர். விரைவும் உறுதியும் பற்றி அரக்கர் தேய்வு. ''இனி நிரம்பும் என்று கூற வந்தவர்கள்'' இன்று நிரம்பியது எனக் கூத்தாடினர் என்க. ''வாராக் காலத்தும் நிகழும் காலத்தும் ஓராங்கு வரூஉம் வினைச் சொற் கிளவி. இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல். விரைந்த பொருள்'' என்பது தொல்காப்பியம் (தொல். சொல். நூற். 44) கால வழுவமைதி. தேவரும் என்ற இறந்தது தழுவிய எச்ச உம்மையால். மண்ணுலகத்தவரும் ஆடல் மேவிக் கொண்டிருந்தனர் என்பது உணர்த்தினார்.*

***1234. சொரிந்தனர் மலர் மழை; சுண்ணம் தூவினர்;***
***விரிந்து ஒளிர் காசு. பொன். தூசு. வீசினர்;***
***பரிந்தனர்; அழகினைப் பருகினார்கொலோ?***
***தெரிந்திலம். திருநகர் மகளிர் செய்கையே!***

***மலர் மழை பொழிந்தனர் சுண்ணம் தூவினர்*** - *(அந் நகரத்து மகளிர் எல்லோரும்) (இராம பிரானின் மீது) பூ மழை பொழிந்தனர்;* ***நறுமணப் பொடிகளைத் தூவினர்; விரிந்து ஒளிர் காசு. பொன். தூசு வீசினர்*** - *ஒளி பரவி மிளிர்கின்ற இரத்தினங்களையும் பொன்னையும். ஆடைகளையும் (யாவர்க்கும் மகிழ்ச்சி மிகுதியால்) அள்ளி வீசினர்;* ***பரிந்தனர். அழகினைப் பருகினார் கொலோ?*** - *(இதற்குக் காரணம்) இராமபிரானது பேரழகை விரும்பிக் குடித்தார்கள் போலும்!;* ***திருநகர் மகளிர் செய்கை தெரிந்திலம்*** - *அழகு மிகும் அந்நகரத்து மகளிர் செயல்கட்கு (இதனை விட வேறு காரணம் எதுவும்) எமக்குத் தெரியவில்லை.*

*இராமனது பேரழகுப் பெருங்காட்சி கண்டு பிறர்க்கு மணியும் பொன்னும் ஆடையுமாக அள்ளிக் கொடுத்தனர் என்க.*

***1235. வள்ளலை நோக்கிய மகளிர். மேனியின்***
***எள்ள அரும் பூண் எலாம் இரிய. நிற்கின்றார்-***
***'உள்ளன யாவையும் உதவி பூண்டவும்***
***கொள்ளையிற் கொள்க!' எனக் கொடுக்கின்றாரினே.***

***உள்ளன யாவையும் உதவி*** - *(தம்மிடம்) உள்ள பொருள்கள் யாவற்றையும் (பிறர்க்குக்) கொடையாகக் கொடுத்துவிட்டு;* ***'பூண்டவும் கொள்ளையிற் கொள்க' எனக் கொடுக்கின்றாரின்*** - *தாம் 'அணிந்துள்ளவற்றையும் மொத்தமாகக் கொள்வீராக' என்று கூறிக் கொடுப்பவர்களைப் போல;* ***வள்ளலை நோக்கிய மகளிர்*** - *இராமபிரானைப் பார்த்த மகளிர் அனைவரும்;* ***மேனியின் எள்ள அரும் பூண் எலாம் இரிய நிற்கின்றார்*** - *(இராம வேட்கையால் நிகழ்ந்த மேனி இளைப்பால்) பழிப்பற்ற ஆபரணங்கள் எல்லாம் தம் உடம்பிலிருந்து கழன்றுவிழ நின்றார்கள்.*

மேற்பாட்டில் பொன்னும் மணியும் ஆடையும் கொடுத்தவர்கள். இப்பாட்டில். தம் அணிகளையும் இழக்க நிற்பதால். "உள்ளன யாவையும் உதவிப் பூண்டவும் கொள்ளையிற் கொள்கெனக் கொடுக்கின்ற" வள்ளல்கள் போன்றனர் மகளிர் என உவமித்தார். கொள்ளையிற் கொள்வார் முழுவதும் எடுத்துச் செல்வர் ஆதலின். கொள்ளையிற் கொள்ளல். முழுவதும் கொள்ளல் எனும் பொருள் தந்து நின்றது. இராமபிரான் ஆகிய வள்ளலை நோக்கி மகளிர் தாமும் அவ்வள்ளலின் தன்மையைப் பெற்றுவிட்டனர் என்பதாம். அவனைக் கண்டதால் எழுந்த விரக தாபத்தால் விளைந்த உடல் இளைப்பால் அணிந்திருந்த அணிகளும் கழன்று வீழ்ந்ததனால். "உள்ளி உள்ளவெல்லாம் உவந்து ஈயும்" (கம்ப.15) வள்ளல்கள் போன்று ஆயினர் அம்மகளிர் என்க. 76

மண்டபஞ் சார்ந்த இராமன் தந்தையையும் முனிவரையும்

தொழுது அமர்தல ௌ

அறுசீர் ஆசிரிய விருத்தம்

*1236.* **எஞ்சல் இல் உலகத்து உள்ள**
**எறி படை அரச வெள்ளம்**
**குஞ்சரக் குழாத்தின் சுற்ற.**
**கொற்றவன் இருந்த கூடம்.**
**வெஞ் சினத் தனுவலானும்.**
**மேரு மால் வரையில் சேரும்**
**செஞ் சுடர்க் கடவுள் என்ன.**
**தேரிடைச் சென்று சேர்ந்தான்.**

**எஞ்சல் இல் உலகத்து உள்ள** - யாரும் எஞ்சாமல் உலகம் முழுவதும் உள்ள; **எறிபடை அரச வெள்ளம்** - வீசுகின்ற ஆயுதங்களை ஏந்திய அரசர்களின் மிகுதியான கூட்டம்; **குஞ்சரக் குழாத்தின் சுற்ற** - யானைகளின் கூட்டம் போல் சுற்றிலும் நிற்க; **கொற்றவன் இருந்த கூடம்** - தசரதச் சக்கரவர்த்தி வீற்றிருந்த அந்தத் திருமண மண்டபத்தை; **வெம்சினத் தனுவலானும்** - கொடுங் கோபமுடைய வில் தொழிலில் வல்லவனான இராமபிரானும்; **மேருமால் வரையில் சேரும் செஞ்சுடர்க் கடவுள் என்ன** - மேரு என்னும் பெரிய மலையைப் போய்ச் சேருகிற சிவந்த கதிர்களையுடைய சூரியனைப் போல; **தேரிடைச் சென்று சேர்ந்தான்** - தேரின் மேலே சென்று சேர்ந்தான்.

மேரு மாமலை. அந்த மண மண்டபத்திற்கும். அம்மலையடைந்த சூரியன் இராமபிரானுக்கும் உவமைகள் ஆயின. அரசர்களை யானைக் கூட்டமென்றார். தசரதனைச் சிங்க ஏறு என்றற்கு. இராமன். வில் ஒன்றைத் தவிர. வேறு ஆயுதங்கள் எவையும் ஏந்தாத வில்வலான் ஆதலின். "வெஞ்சினத் தனுவலான்" என்று ஒரு பெயர் ஈந்தார். திருக்கோவில் படிவங்களிலும் கையும் வில்லுமாகவே இராமபிரானின் திருவுருவங்கள் காட்சி நல்குவதும் காணலாகும்.

*1237.* ***இரதம் ஆண்டுஇழிந்த பின்னர்.***
***இரு மருங்கு. இரண்டு கையும்.***
***பரதனும் இளைய கோவும்.***
***பரிந்தனர் ஏந்த. பைந் தார்***
***வரதனும் எய்தி. மை தீர்***
***மா தவர்த் தொழுது. நீதி***
***விரத மெய்த் தாதை பாதம் வணங்கி.***
***மாடு இருந்த வேலை.***

***பைந்தார் வரதனும்*** - *பசுமையான மலர் மாலைகளை யணிந்து வேண்டுவார்க்கு வேண்டும் வரம் ஈயவல்ல இராமபிரானும்;* ***இரதம் ஆண்டு இழிந்த பின்னர்*** - *அவ்விடத்தில் தேரின் நின்றும் இறங்கிய பின்பு;* ***இருமருங்கு இரண்டு கையும் பரதனும் இளைய கோவும் பரிந்தனர் ஏந்த எய்தி*** - *இரு பக்கங்களிலும். தனது இரு திருக்கரங்களையும் பரதனும் அவனுக்கு இளையவனான இலக்குவனும் அன்பு கொண்டு (தம் கரங்களால்) ஏந்தா நிற்க. (அந்த மண மண்டபத்தை) அடைந்து;* ***மைதீர் மாதவர்த் தொழுது*** - *குற்றமில்லாத (வசிட்டன். விசுவாமித்திரன் முதலிய) பெருந்தவ முனிவர்களைத் தொழுது;* ***நீதி விரத மெய்த் தாதை பாதம் வணங்கி*** - *முறை தவறாது (மக்கட்கு) நீதி செலுத்துவதையே தன் விரதம் ஆகக் கொண்டுள்ள சத்திய வேந்தனாகிய தன் தந்தை தசரதச் சக்கரவர்த்தியின் பாதங்களை வணங்கி;* ***மாடு இருந்த காலை*** - *(அத்தந்தையின்) பக்கத்திலே வீற்றிருந்த பொழுதில் (சீதா தேவி வந்தாள் எனும் வரும் பாடலோடு இயையும்).*

*துறவியரும் தந்தையரும் ஒருங்கிருந்தால் மக்கள் துறவியரையே முதலில் வணங்குதல் வேண்டும் எனும் மரபும் உணர்த்தியவாறு. பேரரசர்களை அழைத்துச் செல்கையில் கைலாகு (கையலகு) கொடுத்துச் செல்வது மரபாதலின் ''இரு மருங்கு இரண்டு கையும் பரதனும் இளைய கோவும் பரிந்தனர் ஏந்த'' என்றார். மாதவர்: வசிட்டர். கோசிகர். சதானந்தர் முதலாயினோர். சக்கரவர்த்தியைத் தொழுது அவனடிக் கீழ் வீற்றிருந்தான் இராமன் என்றது பெரியோர்கள் அநுமதி பெற்ற பின்பே மணத்தவிசு ஏற வேண்டும் என்னும் மரபு குறித்தது.*

*மணமண்டபத்துள் சீதை வந்த காட்சி*

*1238.* ***சிலையுடைக் கயல். வாள் திங்கள்.***
***ஏந்தி. ஓர் செம் பொன் கொம்பர்.***
***முலை இடை முகிழ்ப்ப. தேர்மேல்***
***முன்திசை முளைத்தது அன்னாள்.***
***அலை கடல் பிறந்து. பின்னை***
***அவனியில் தோன்றி மீள***
***மலையிடை உதிக்கின்றாள் போல்.***
***மண்டபம் அதனில் வந்தாள்.***

***ஓர் செம்பொன் கொம்பர்*** - *சிவந்த பொன்னின் நிறமுடைய ஒரு பூங்கொம்பு;* ***சிலை உடைக் கயல் வாள் திங்கள் ஏந்தி*** - *வில்லை மேற்புறத்தில் உடைய கயல்மீன்களை இடையிலே பெற்ற. ஒளியுடைய (பூரண) சந்திரனை ஏந்தி;* ***இடை மு(ல்)லை முகிழ்ப்ப*** - *அச்சந்திரனுக்கு இடையிலே முல்லையரும்பு சிறிதே மலர;* ***தேர்மேல் முன்திசை முளைத்தது அன்னாள்*** - *தேரின் மேல் கிழக்குத் திக்கிலே தோன்றியதனைப் போன்ற பிராட்டி;* ***அலைகடல் பிறந்து பின்னை அவனியில் தோன்றி*** - *அலைகளையுடைய திருப்பாற்கடலிலே (திருமகளாகப்) பிறந்து. பின்பு மண்ணுலகில் (சீதையாக) அவதரித்து;* ***மீள மலையிடை உதிக்கின்றாள் போல். மண்டபம் அதனில் வந்தாள்*** - *மீண்டும் ஒரு மலையினிடத்தே பிறக்கின்றாள போலே அம்மண்டபத்தில் வந்தடைந்தாள்.*

*ஒரு பொன்னிறப் பூங் கொம்பு வில்லையும் கயலையும் உடைய ஒரு சந்திரனை ஏந்தி. முல்லை மலர் அரும்ப வந்தால் சானகிக்கு உவமையாம் என்பதனால் இஃது இல்பொருள் உவமையணி. பொன்னிறப் பூங்கொம்பு சீதையின் வடிவுக்கும். வில் புருவத்திற்கும். கயல் கண்கட்கும். முல்லை முறுவற்கும். திங்கள் முகத்திற்கும் உவமைகளாயின. மலை: மண்டபத்திற்கு உவமையாம்.*

*பிராட்டிக்கு. ''வேறு ஒப்பு எங்கே கொண்டு எவ்வகை நாடி உரை செய்வாம்'' (கம்ப. 503). 'யாழும் எழுதி' என்ற திருக்கோவையார் பாடல் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.*

*மணவணி காண வானத்தே வானவர் வருதல்*

***1239. நன்றி வானவர் எலாம். இருந்த நம்பியை.***
***'துன்று இருங் கருங் கடல் துவைப்பத் தோன்றிய***
***மன்றல் அம் கோதையாள் மாலை சூட்டிய***
***அன்றினும். இன்று உடைத்து அழகு' என்றார் அரோ.***

***நன்றி வானவர் எலாம்*** - *நன்றியுணர்வுடைய தேவர் எல்லோரும்;* ***இருந்த நம்பியை*** - *அங்கு வீற்றிருந்த இராமபிரானை (நோக்கி);* ***துன்று இருங் கடல் துவைப்பத் தோன்றிய*** - *(அலை) செறிந்த பெருங்கடலாகிய பாற்கடலைக் கடைந்த காலத்துத் தோன்றிய;* ***மன்றல் அம் கோதையாள் மாலை சூட்டிய அன்றினும்*** - *மணம்மிக்க அழகிய கூந்தலையுடைய திருமகள் (திருமாலுக்கு) மாலை சூட்டிய அந்தத் திருநாளைக் காட்டிலும்;* ***இன்று அழகு உடைத்து என்றார்*** - *இவளுக்கு நீ மாலை சூட்டும் இந்நாள் (மிக) அழகியது என்று கூறி மகிழ்ந்தார்கள்.*

இன்று நிகழும் ‘திரு’மணம் “தீயோர் இறந்து உக நூறித் தக்கோர் இடர் துடைத்தற்கு” (கம்ப. 5885) ஆதலின். “அன்றினும் இன்று அழகுடைத்து” என்றனர் தேவர் என்க. தம் பொருட்டுப் பெருமான் அவதரித்துள்ளான் ஆதலால் அந்நன்றியுணர்வோடு தேவர்கள் நிறைந்திருந்தனர் என்பார். “நன்றி வானவர்” என்றார். பாற்கடல் கடைந்த அன்று நஞ்சு எழுந்தது;அமுதத்தை அசுரர்க்குத் தராமல் ஏய்த்த கசப்பு தேவாசுரப் போர் - முதலிய இடையீடுகள் பின் நிகழ்ந்தன. அத்தகைய ஊறுகள் எதுவுமின்றி இத்திருமணம் இனிதே நிகழ்வதால் இரண்டையும் கண்ணுற்ற தேவர்கள் “அன்றினும் இன்று உடைத்து அழகு என்றார்” எனினுமாம். தேவ வடிவினர் திருமணத்தினும் மானுடம் புக்க இவ்விருவர் திருமணம் அழகிற்று என்பதாம்.

*1240.* **ஒலி கடல் உலகினில். உம்பர். நாகரில்.**
**பொலிவது மற்று இவள் பொற்பு; என்றால். இவள்**
**மலிதரு மணம் படு திருவை. வாயினால்.**
**மெலிதரும் உணர்வினேன். என் விளம்புகேன்?**

**ஒலிகடல் உலகினில் உம்பர் நாகரில் பொலிவது மற்று இவள் பொற்பு என்றால்** - ஒலிக்கும் கடல் சூழ்ந்த இம் மண்ணுலகிலும் தேவ உலகிலும் நாக உலகிலும் உள்ள அனைவர் அழகினையும் ஒரு சேர வைப்பினும் இச்சீதையழகே மேல் ஓங்கிப் பொலிந்து நிற்கும் என்றால்; **இவள் மலிதரு மணம் படு திருவை** - இவளது மணம் நிறைந்த திருமண வைபவத்தை; **மெலிதரும் உணர்வினேன் என் விளம்புகேன்?** - சிறிய அறிவினையுடைய யான் என்னவென்று சொல்லவல்லேன்?

பேரழகுப் பெட்டகத்தின் திருமண வைபவத்தைச் சிற்றறிவுடைய யான் எப்படிச் செப்புவேன் என்று கவிஞர். இத்துணை வர்ணனை புரிந்தும் மனம் நிறைவுறாத ஏக்கத்தை கவிக் கூற்றாய் வெளிப்படுத்தியவாறு. மூவுலகிலும் உள்ள அழகுக் கூறுகள் அனைத்தும் திருவின் கூறு என்பது கருத்து. மூவுலகத்தோர் எல்லோரும் மணப் பெண்களின் அழகுக்கு உவமிக்கப்படும் அந்த அழகின் மூலப் பெட்டகமே. மணப்பெண்ணாக அமர்ந்திருக்கையில் (கம்ப. 503) இவள் மணம்படு பேரழகை “வாயினால் மெலிதரும் உணர்வினேன் என் விளம்புகேன்” என உரைக்க இயலாமையை உரைத்தவாறு.

*1241.* **இந்திரன் சசியொடும் எய்தினான்; இளஞ்**
**சந்திர மௌலியும் தையலாளொடும்**
**வந்தனன்; மலர் அயன் வாக்கினாளுடன்**
**அந்தரம் புகுந்தனன்;- அழகு காணவே.**

***அழகு காண*** - *இராமன் சீதை இருவரின் மணக் கோல அழகு காண;* ***அந்தரம் இந்திரன் சசியொடும் எய்தினான்*** - *வான்வெளியில் தேவேந்திரன் தன் மனைவி சசிதேவியுடன் வந்து அடைந்தான்;* ***இளஞ் சந்திர மௌலியும் தையலாளொடும் வந்தனன்*** - *இளம்பிறையைச் சூடிய சிவபெருமானும் உமையாளொடும் வந்தடைந்தான்;* ***மலர் அயன் வாக்கினாளுடன் புகுந்தனன்*** - *தாமரையில் வாழ்கின்ற நான்முகனும் கலைமகளொடு வந்தடைந்தான்.*

*இரு திறத்தார்க்கும் செய்த வரம்பு இவர் இருவர் ஆதலின் இருவரின் பேரழகுப் பெருக்கினைச் சுட்ட வானத்துத் தேவர் தலைவர்கள் மணங்காண வந்தனர் என்னாது. "அழகு காண" வந்தனர் என்றார். மணக்கோல அழகு நெஞ்சில் நிற்கும் அழகு ஆதலின் "மணவணி காண மகிழ்ந்தனர்" (சிலம்பு.) என்பார் இளங்கோவடிகளும்.*

*வசிட்டன் திருமணச் சடங்கு செய்தல* ் 

***1242. நீந்த அருங் கடல் என. நிறைந்த வேதியர்.***
***தோய்ந்த நூல் மார்பினர். சுற்ற. தொல் நெறி***
***வாய்ந்த நல் வேள்விக்கு. வசிட்டன். மை அற***
***ஏய்ந்தன கலப்பையோடு இனிதின் எய்தினான்.***

***நூல் வேய்ந்த மார்பினர்*** - *முப்புரி நூல் பூண்ட மார்பினையுடையவர்களான;* ***நிறைந்த வேதியர்*** - *வேதம் நிறைந்த அந்தணர்கள்;* ***நீந்து அரும் கடல் எனச் சுற்ற*** - *நீந்துதற்கரிய கடல் போன்ற எண்ணற்கரியராய்ச் சுற்றிலும் வர;* ***வசிட்டன்*** - *வசிட்ட மாமுனிவன்;* ***தொல்நெறி வாய்ந்த நல் வேள்விக்கு*** - *பழைமை நெறி முறைப்படியமைந்த திருமணச் சடங்குகளை நிகழ்த்துதற்கு;* ***மை அற ஏய்ந்தன கலப்பையோடு இனிதின் எய்தினான்*** - *குற்றமில்லாமல் (சாத்திர முறைக்குப்) பொருந்திய கருவிகளுடன மகிழ்வோடு (அங்கு) வந்தடைந்தான்.*

*கலப்பை: துணைக் கருவிகள் கொண்ட பை "காவினம் கலனே: சுருக்கினெம் கலப்பை" (புறம். 206 -10) என்பார்.*

***1243. தண்டிலம் விரித்தனன்: தருப்பை சாத்தினன்;***
***மண்டலம் விதிமுறை வகுத்து. மென் மலர்***
***கொண்டு நெய் சொரிந்து. எரி குழும. மூட்டினன்;***
***பண்டு உள மறை நெறி பரவிச் செய்தனன்.***

***தண்டிலம் விரித்தனன்*** - *(வசிட்ட மாமுனிவன்) (அக்கினி வளர்க்கும் இடத்தே பரப்ப வேண்டிய) மணலைப் பரப்பினான்;* ***தருப்பை சாத்தினன்*** - *தருப்பைகளை உரிய இடங்களில் வைத்தான்;* ***மண்டலம் விதிமுறை வகுத்து*** - *(அக்கினி வைத்தற்குரிய) வட்டமான இடத்தை வேத விதிப்படி ஏற்படுத்தி;* ***மென்மலர் கொண்டு நெய் சொரிந்து எரிகுழும மூட்டினான்*** - *மெல்லிய மலர்களைக் கொண்டு நெய்யை ஆகுதியாகச் சொரிந்து ஓம அக்கினி குவிந்தெழுமாறு செய்தான்;* ***பண்டு உள மறை நெறி பரவிச் செய்தனன்*** - *தொன்று தொட்டு வந்த வேத நெறிப்படி (மந்திரங்களால்) தொழுது. (மணச் சடங்கினைச்) செய்தான்.*

*தண்டிலம்: மணல்;வடசொல். "அக்கினியைப் பிரதிட்டிக்குமிடத்தே சதுரமாகப் பரப்புகின்ற மணல்" (சீவக.) என்பர் நச்சினார்க்கினயர் "தருமணல். தருப்பை ஆர்ந்த சமிதை இம்மூன்றினானும் விரிமலர் அணிந்த கோல வேதிகை" (சீவக. 2463) என்பார் தேவரும்.*

*மணத் தவிசில் இராமனும் சீதையும்*

***1244. மன்றலின் வந்து. மணத் தவிசு ஏறி.***
***வென்றி நெடுந் தகை வீரனும். ஆர்வத்து***
***இன் துணை அன்னமும். எய்தி இருந்தார்;***
***ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தார்.***

***மன்றலின் வந்து*** - *(நறுமணப் பொருள்களின் திருமணத்தோடு வந்து;* ***மணத்தவிசு ஏறி*** - *திருமணத்துக்குரிய ஆசனங்களில் ஏறி;* ***வென்றி நெடுந்தகை வீரனும்*** - *வெற்றியினையும் பெருமைக் குணங்களையும் உடைய வீரனான இராம பிரானும்;* ***ஆர்வத்து இன்துணை அன்னமும் எய்தியிருந்தார்*** - *அந்த இராமபிரான்பால் பேரன்பினை யுடையவளாய் (அவனுக்கு) இனிய துணையாக ஆகவுள்ள அன்னம் அனைய சீதையும் நெருக்கமாக வீற்றிருந்தார்கள்;* ***ஒன்றிய யோகமும் போகமும் ஒத்தார்*** - *(ஒன்றோடொன்று) ஒன்றியிணைந்த பேரின்பத்தையும் (அதற்கு உபாயமான) யோக நிலையினையும் ஒத்தவர்கள் ஆனார்கள்.*

*இராமன் போகத்தையும். சீதை யோகத்தையும் ஒத்தனர் என்க. இறைவன் பேரின்பப் பெருவீட்டை நல்குபவன்; அதற்குப் பிராட்டி சேர்ப்பிக்கும் வாயிலாக (புருடகார பூதையாக) இயங்குவாள் என்னும் மரபு பற்றி இங்ஙனங் கூறினார். அன்பு செய்தற்கு அன்னம்: "ஆதரம் பெருகுகின்ற அன்பினால் அன்னம் ஒத்தும்" (சீவக. 189) என்னும் இடத்தும் காண்க. போகம்: அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டில் இறைவன் முன்னிலையில் எய்தும் நிரதிசய இன்பமாம் அப்பேரின்பப் பெருநிலையை எய்துதற்கு வாயிலாய் அமைவது போகம். "இருள் நீங்கி இன்பம் பயக்கும் மருள் நீங்கி மாசறு காட்சியவர்க்கு" (திருக். 352) என்பார் வள்ளுவனாரும். இருள் நீங்கிய இன்பம் என்பது ஒன்றிய போகம் ஆகவும் மாசறு காட்சி என்பது யோகம் ஆகவும் கூறப்பட்டிருத்தல் காணலாம். இறைவனோடு சமமாகும் நிலையுடைய முத்தியாதலின் ஒன்றிய போகம்" என்றார். இறைவன் ஒருவனே; பிராட்டி உயிர்களின் வாயிலாய் இலங்கி உயிர்களுள் தலையாயவளாய் சாமிய நிலையையடைந்தவள் எனும் தத்துவக் கருத்தும் பிராட்டியை யோகம் எனக் குறித்ததனால் தோன்றும் என்பர். வீரனும் அன்னமும் போகமும் யோகமும் ஒத்தார். வீரன் போகம் அன்னம் யோகம் என நிரல் நிரையாகப் பொருள் கொள்க.*
*85*

*சனகன் தாரை வார்த்துக் கொடுத்தல்*

***1245. கோமகன் முன் சனகன். குளிர் நல் நீர்***
***'பூமகளும் பொருளும் என. நீ என்.***
***மா மகள் தன்னொடும். மன்னுதி' என்னா.***
***தாமரை அன்ன தடக் கையின். ஈந்தான்.***

***கோமகன் முன் சனகன்*** *- (தசரதச்) சக்கரவர்த்தித் திருமகனான இராமனின் எதிர்நின்று சனக மன்னன்;* ***'நீ பொருளும் பூ மகளும் என என் மாமகள் தன்னொடும் மன்னுதி' என்னா*** *- 'நீ (பரம்) பொருளாகிய திருமாலும். தாமரையில் வாழும் திருமகளும் போல என்னுடைய பெருமைக்குரிய திருமகளான சீதையுடனே நிலைபெற்று வாழ்க' என்று கூறி;* ***குளிர் நல் நீர் தாமரை அன்ன தடக்கையின் ஈந்தான்*** *- குளிர்ந்த தூய நீரைத் (தாரை வார்த்து) தாமரை மலர் போன்ற (இராமனது) வலத் திருக்கையில் கொடுத்தான்.*

*"பூ மகளும் பொருளும்" போல எனற்கு. பூமித் தாயும் அவளிடத்துள்ள பொருளும் போல எனவும். திருமகள் செல்லுமிடம் எல்லாம் செல்லும் செல்வம் போல எனவும் பொருள் கொள்ளலுமாம். பூமகள்: அலர்மேல் மங்கையாகிய திருமகள். "அகல கில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கையுறை" மார்பன்' (திருவாய். 6:10:10) ஆதலின் "பரம் பொருளும் பூமகளும் என மன்னுதி" என்றான். பொருளில் சிறந்த பொருள் இறைவனே ஆதலின் அடையின்றிப் "பொருளும்" என்றார். அடையின்மை சிறப்பைக் குறித்தலைத் திருக்கோவையார் முதற்பாடலில் பேராசிரியர் குறித்த உரையால் அறிக.*

*வாழ்த்து ஒலியும் மலர் மழையும்*

***1246. அந்தணர் ஆசி. அருங் கல மின்னார்***
***தந்த பல்லாண்டு இசை. தார் முடி மன்னர்***
***வந்தனை. மா தவர் வாழ்த்து ஒலியோடு***
***முந்திய சங்கம் முழங்கின மாதோ.***

***அந்தணர் ஆசி*** - *(அவ்வாறு சனகன் சீதையை இராமன் திருக்கையில் தரும்போது) அந்தணர்களின் ஆசி ஒலியும்;* ***அருங்கல மின்னார் தந்த பல்லாண்டு இசை*** *- (உலகிற்கு) அரிய அணிகலம் போன்றுள்ள மாதர்கள் பாடுகின்ற பல்லாண்டு இசை ஒலியும்;* ***தார்முடி மன் னர் வந்தனை*** *- மலர்மாலை யணிந்த மன்னர்களின் வாழ்த்து ஒலியும்;* ***மாதவர் வாழ்த்து ஒலியோடு*** *- பெருந்தவ முனிவர்கள் வாழ்த்து ஒலியும் ஆகிய இவற்றோடு (இணைந்து);* ***முந்திய சங்கம் முழங்கின*** *- (மங்கலக் கருவிகளுள்) முந்தியனவாகிய சங்கங்கள் பேரொலியை எழுப்பின.*

*மாது. ஓ - அசைநிலைகள். மறையவர் ஓதும் வேதமுழக்கம் எல்லாம் ஆசியுரைகளே யாதலின். "அந்தணர் ஆசி" என்றார். மாதர்க்குள் அரிய அணி அனைய மகளிர் பல்லாண்டு இசையோடு கூறினர் என்பார். "அருங்கல மின்னார் தந்த பல்லாண்டிசை" என்றார். "புதல்வற் பயந்த திதலை அவ்வயிற்று. வாலிழை மகளிர் நால்வர் கூடி. கற்பினின் வழாஅ நற்பல உதவிப் பெற்றோற்பெட்கும் பிணையை ஆக!" (அகம்.86) எனச் சங்க காலத்தும் மகளிர் வாழ்த்துண்மை அறிக.*

***1247. வானவர் பூ மழை. மன்னவர் பொன் பூ.***
***ஏனையர் தூவும் இலங்கு ஒளி முத்தம்.***
***தான் நகு நாள்மலர். என்று இவைதம்மால்.***
***மீன் நகு வானின் விளங்கியது. இப் பார்.***

***வானவார் பூமழை*** *- வானத்துத் தேவர் பொழிந்த (கற்பக) மலர் மாரியும்;* ***மன்னவர் பொன் பூ*** *- மண்ணகத்து மன்னர்கள் பொழிந்த பொன்னால் ஆகிய பூக்களும்;* ***ஏனையர் தூவும் இலங்கு ஒளி முத்தம்*** *- மற்றையோர் பொழிந்த விளங்கும் ஒளி முத்துக்களும்;* ***தான் நகு நாள் மலர்*** *- தானாக மலர்ந்த பூக்களும்;* ***என்று இவை தம்மால்*** *- என்று (கூறப்படும்) இவற்றால்;* ***இப்பார் மீன் நகுவானின் விளங்கியது*** *- இம் மண்ணுலகம் (அன்று) மீன்கள் ஒளிர்கின்ற வான் உலகம் போல விளங்கியது.*

*"என்ற" எனும் பெயர் எச்சத்தின் அகரம் தொக்கு "என்று" என நின்றது. பெருமான். பிராட்டி திருமணத்தன்று. மண்ணுலகம் விண்ணுலகமாயிலங்கியது எனக் கூறக் கருதிய கவிஞர்பிரான் அன்று சொரிந்த பொருள்களை வைத்தே தன் நினைப்பை முடித்துக் காட்டினார். பூக்களும் பொன்னும் முத்தும் எங்கும் மொய்த்துக் கிடந்து மண்ணகத்தை வானகமாக்கிற்று என்பதாம்.*

*இராமன் சீதையுடன் தீவலம் வருதல்*

*1248.* **வெய்ய கனல்தலை வீரனும். அந் நாள்.**
**மை அறு மந்திரம் மும்மை வழங்கா.**
**நெய் அமை ஆவுதி யாயையும் நேர்ந்தான்.**
**தையல் தளிர்க் கை தடக் கை பிடித்தான்.**

**வீரனும் அந்நாள்** - *மாவீரனாகிய இராமபிரான் அப்பொழுது;* **மையறு மந்திரம் மும்மை வழங்கா** - *குற்றமற்ற மந்திரங்களை மும் முறை கூறி;* **வெய்ய கனல் தலை** - *வெம்மை மிக்க தீயின்கண்;* **நெய் அமை ஆவுதி யாவையும் நேர்ந்தான்** - *நெய்யோடு கூடிய அவியுணவுள் யாவற்றையும் பெய்தான். (அதன்பின்);* **தையல் தளிர்க்கை தடக்கை பிடித்தான்** - *அழகிய சீதையினுடைய தளிர் அனைய மெல்லிய கரத்தினைத் தனது அகன்ற திருக்கரத்தாற் பற்றினான்.*

*மும்மை வழங்குதல் என்பது மந்திரத்தை உச்சரித்து நெய்யை மும்முறை மண்ணுதல் என்பர். "நெய்யை முனை முதிர் தருப்பை தன்னால் மந்திரத்து அமைய முக்கால் மண்ணி" (சீவக. 2465) எனும் தேவர் அடிகளும் அவற்றிற்கு நச்சர் உரையும் காண்க. இனி. அறம் தளிர்ப்பதற்கு ஆவனவெல்லாம் புரிய உள்ள கைஎனும் பொருளும் தோன்ற. "தையல் தளிர்க்கை தடக்கை பிடித்தான்" என்றார்.*

*1249.* **இடம் படு தோளவனோடு. இயை வேள்வி**
**தொடங்கிய வெங் கனல் சூழ்வரு போதின்.**
**மடம் படு சிந்தையள். மாறு பிறப்பின்.**
**உடம்?பு உயிரைத் தொடர்கின்றதை ஒத்தாள்.**

**இடம்படு தோளவனோடு** - *இடம் அகன்ற தோளினனான இராமனோடு;* **இயை வேள்வி தொடங்கிய** - *அவ்வச்சயமத்திற்கு ஏற்றவாறு ஓமம் முதலிய வைதிகச் சடங்குகளைச் செய்வதற்காகத் தொடங்கப் பெற்ற;* **வெம்கனல் சூழ்வரு போதின்** - *வெம்மையுடைய (வேள்வித்) தீயைச் சுற்றி வருகின்ற பொழுதில்;* **மடம்படு சிந்தையள்** - *(பெண்மைக்குரிய) பேதைமைக் குணம் (இயல்பாய்) அமைந்தமனத்தினளான சீதை;* **மாறு பிறப்பின் உடம்பு உயிரைத் தொடர்கின்றதை ஒத்தாள்** - *மாறி மாறி வருகின்ற இயல்பினையுடைய பிறவிகளில் (உயிர் உடம்பைத் தொடர்கின்ற வழக்கத்திற்கு மாறாக) உடம்பு உயிரைத் தொடர்கின்றதைப் போல. இராமனைப் பின் தொடர்ந்தாள்.*

*உயிர்தான். தான் நுகரவுள்ள வினைகட்கேற்ற உடலைப் பெற்று. பிறவி தோறும் உடலைப் பின் தொடரும் வினைகள் அற்ற தெய்விகத் தம்பதியர் ஆதலின். "உடம்பு உயிரைத் தொடர்ந்தது" போல் சீதை இராமனைப் பின் தொடர்ந்தாள் என்றார். இல்பொருள் உவமையணி. மடம்: பெற்றோரும் கணவனும் கற்பித்தபடி வழுவாது ஒழுகும் குணம். கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை என்பர். இக் குணச் சிறப்பால் இராமன் ஆகிய உயிர் செல்வழியெல்லாம் இனிச் செல்ல இருப்பவள் என்பது உணர்த்தினார்.*

*அம்மி மிதித்து அருந்ததி காணல்*

***1250. வலம்கொடு தீயை வணங்கினர். வந்து.
பொலம் பொரி செய்வன செய் பொருள் முற்றி.
இலங்கு ஒளி அம்மி மிதித்து. எதிர் நின்ற
கலங்கல் இல் கற்பின் அருந்ததி கண்டார்.***

*__வலம்கொடு தீயை வணங்கினர்__ - (இராமனும் சீதையும்) (வேள்வித்) தீயினை வலம் வந்து வணங்கினர்; __வந்து பொலம் பொரி செய்வன செய்பொருள் முற்றி__ - அவ்வாறு. வலம் வந்து வணங்கியபின் அழகிய பொரியிடுதல் முதலிய செய்யத்தக்க பொருள்கள் கொண்டு செய்யத்தக்கனவற்றைச் செய்து முடித்து; __இலங்கு ஒளி அம்மி மிதித்து__ - விளங்கும் ஒளியுடைய அம்மிக்கல்லை (காலால்) மிதித்து; __எதிர்நின்ற கலங்கல் இல் கற்பின் அருந்ததி கண்டார்__ - எதிரிலே நின்று கொண்டுள்ள நிலைகலங்காத கற்பென்னும் திண்மை பூண்ட அருந்ததியினையும் கண்டனர்.*

*அம்மி மிதித்தலும் அருந்ததி காணலும் சீதைக்குரிய செயல்களே ஆயினும். மலரும் மணமும் போல சீதையும் இராமனும் இணைந்திருக்கும் ஒன்றுபட்ட தன்மை பற்றி இருவர் செயலாகவே கூறினார் என்க. அம்மி மிதித்தல் - இல் கல் போன்று கற்பினில் திண்மை பெறுக என உணர்த்தற்காம். அருந்ததி காட்டல் - எத்தகு சோதனையிலும் அருந்ததி போன்று கற்பினிற் கலங்கா நிலை எய்துதற்காம். நட்சத்திர நிலையிலும் கணவனாகிய வசிட்டனைப் பிரியாதிருத்தல் அருந்ததி ஒருத்திக்கே உரியதாம். இங்கு விண்மீன் நிலையில் அன்றி. நேரேயே அருந்ததி கண்காண நின்றாள் என்பார். "எதிர்நின்ற அருந்ததி" என்றார். மங்கல நாண் அணிதலை. "மங்கலக் கழுத்துக்கெல்லாம் தான் அணி" (கம்ப.) "மற்றை நல் அணிகள் காண் உன் மங்கலம் காத்த மன்னோ" (கம்ப. 1118). "கழுத்தின் நாண்" (கம்ப. 1653) என்று கவிஞர்பிரான் பலவிடங்களில் கூறியிருந்தும் இங்கு மணச் சடங்குகளில் ஒன்றாகக் கூறாதது உலக வழக்கான அதனை. வேத வழக்காகவே நிகழ்வுறும் சடங்குகளுடன் இங்குக் கூற அவர் விரும்பவில்லை போலும் என்று உரைப்பர். மனித வழக்குக்குரிய ஒரு நிகழ்வைத் தெய்வ மணநிகழ்வில் சேர்க்கக் கவிஞர் விரும்பவில்லை யெனினுமாம். அதனால்தான். "மான் அணி நோக்கினார் தம் மங்கலக் கழுத்துக் கெல்லாம் தான் அணியான போது தனக்கு அணியாது மாதோ" (கம்ப. 1118) என்று பீடிகையிட்டுக் கொண்டார் போலும்.*

*மனைவியுடன் இராமன் மாளிகை புகுதல்*

***1251. மற்று உள. செய்வன செய்து. மகிழ்ந்தார்;
முற்றிய மா தவர் தாள் முறை சூடி.
கொற்றவனைக் கழல் கும்பிடலோடும்.
பொற்றொடி கைக்கொடு நல் மனை புக்கான்.***

***மற்றுள செய்வன செய்து*** - *(இராமன்) இன்னும் செய்யத் தக்கவையான சடங்குகளையெல்லாம் செய்து முடித்து;* ***மகிழ்ந்தார் முற்றிய மாதவர் தாள் முறை சூடி*** *- மகிழ்ச்சியால் திளைத்து நிற்கும் பெருந்தவம் முற்றிய (வசிட்டன். விசுவாமித்திரன் முதலிய) முனிவர்களின் திருவடிகளை முடியில் சூடுமாறு பணிந்து;* ***கொற்றவனைக் கழல் கும்பிடலோடும்*** *- (தந்தையான) தசரதச் சக்கரவர்த்தியின் பாதங்களில் வீழ்ந்து கும்பிட்டவுடன்;* ***பொற்கொடி கைக்கொடு நல்மனை புக்கான்*** *- பொன்வளைகள் பூண்ட சீதையின் கைகளைப் பற்றியவாறு நல்லனவெல்லாம் கொண்ட (தனக்குரிய) மாளிகையினுள் சென்றான்.*

*அவதார நோக்கம் நிறைவேறுதற்குரிய ஒரு பெரும்பணி. முதற்பணி. எவ்வித ஊறுமின்றி இனிதே நிறைந்தமை கொண்டு முனிவர் குழாம் பெருமகிழ்வு எய்தியது என்பார். "மகிழ்ந்தார் முற்றிய மாதவர்" என்றார். மண மேடையில். நுழைந்ததுபோலவே. அதனை விட்டுச் செல்கையிலும் சான்றோரை மறவாமல் வணங்குதல் வேண்டும் எனும் மரபை நினைப்பிப்பார். "மாதவர் தாள் முறைசூடி. கொற்றவனைக் கழல் கும்பிடலோடும்" என்றார். பொற்றொடி - அன்மொழித்தொகை; பிராட்டியைக் குறித்தது.*

*மங்கல ஆரவாரம்*

***1252. ஆர்த்தன பேரிகள்; ஆர்த்தன சங்கம்;***
***ஆர்த்தன நான்மறை; ஆர்த்தனர் வானோர்;***
***ஆர்த்தன பல் கலை; ஆர்த்தன பல்லாண்டு;***
***ஆர்த்தன வண்டு இனம்; ஆர்த்தன வேலை.***

***ஆர்த்தன பேரிகள்*** *- அப்பொழுது மங்கல பேரிகைகள் முழங்கின;* ***ஆர்த்தன சங்கம்*** *- சங்க வாத்தியங்கள் முழங்கின;* ***ஆர்த்தன நான்மறை*** *- நான்கு வேதங்களும் முழங்கின;* ***ஆர்த்தனர் வானோர்*** *- தேவர்கள் (ஆனந்தத்தால்) முழங்கினர்;* ***ஆர்த்தன பல்கலை*** *- பல் வகைக்கலைகளும் ஆர்ப்பரித்தன;* ***ஆர்த்தன பல்லாண்டு*** *- பல்லாண்டு இசைகள் (எங்கும்) ஒலித்தன;* ***ஆர்த்தன வண்டு இனம்*** *- (மலர் மாலைகளில் மொய்த்த) வண்டினங்களும் (இம்மகிழ்ச்சி வெள்ளத்தில் பங்கு கொள்பவைபோல்) ஆரவாரித்தன;* ***ஆர்த்தன வேலை*** *- கடல்களும் (மகிழ்ச்சியில் பங்குபெற்று) ஆர்ப்பரித்தன!*

*உலகுக்கு நலம் விளைக்கும் பெருநிகழ்வுகள் நிகழுங்காலத்தே. இயற்கைக் கூறுகளும் பங்குபெறும் எனக்குறிக்கும் இலக்கிய மரபு பற்றி. அறந்தலை நிறுத்த வந்த மணம் இதுவாதலின். "ஆர்த்தன வண்டினம்; ஆர்த்தன வேலை" என்றார். சொற்பொருட் பின்வருநிலையணி.*

*அன்னையரை வணங்குதல்*

*1253.* ***கேகயன் மா மகள் கேழ் கிளர் பாதம்.***
***தாயினும் அன்பொடு தாழ்ந்து வணங்கா.***
***ஆய தன் அன்னை அடித் துணை சூடி.***
***தூய சுமித்திரை தாள் தொழலோடும்.***

***கேகயன் மாமகள் கேழ்கிளர் பாதம்*** - *(இராமன்) கேகய மன்னனின் மகளான கைகேயியின் ஒளிமிகுந்த திருவடிகளை;* ***தாயினும் அன்பொடு தாழ்ந்து வணங்கா*** - *(தன்னைப்பெற்ற) தாயான கோசலையி னிடத்துக் கொண்டுள்ள அன்பைக்காட்டிலும் மிகு அன்புடனே வீழ்ந்துவணங்கி;* ***ஆய தன் அன்னை அடித்துணை சூடி*** - *(பின்பு) தன்னைப் பெற்ற தாயான கோசலையின் இணையடிகளைத் தலைக்கு அணியாகச் சூடி. (வணங்கி);* ***தூய சுமித்திரை தாள் தொழலோடும்*** - *(அதன்பின்பு) உளத் தூய்மை மிக்கவளான சுமித்திரையின் திருவடிகளை வணங்கிய அளவிலே.*

*இப்பாடல் குளகம். அடுத்தபாடல் கருத்தொடு முடியும். "தாய் கையில் வளர்ந்திலன்; வளர்த்தது தவத்தால் கேகயன் மடந்தை" (யிடம்) (கம்ப. 1591) என்பர் ஆதலாலும். இனிவரும் அவதார நோக்க நிகழ்ச்சிகள் யாவுக்கும் இவள் வித்தாவாள் என உணர்தலாலும். "தாயினும் அன்பொடு தாழ்ந்து" கைகேயியை வணங்கினான் என்றார். அடியாரின் ஏவல் செய்தி என இராமனைக் காப்பதற்காகத் தன் மகனைத் தொடக்கத்திலிருந்தே அர்ப்பணித்த தூய நெஞ்சினள் ஆதலின். "தூய சுமத்திரை" என்றார். இராமனைப் பயந்த எற்கு இடர் உண்டோ?" (கம்ப. 1453) என்று தன் வாயால் உரைத்தாள் அல்லளோ. மந்தரை நுழையு முன் இந்த மாதரசி கைகேயி. இதனால் அன்றோ. "என்னையீன்ற எம்பிராட்டி" (கம்ப. ) என்று பெருமான் ஏத்தியதும் என்க. இறுதியில் இராமபிரான் "தீயள் என்று நீ துறந்த என்தெய்வம்" (கம்ப. 10079) என்றதும் உணர்க.*

*சீதை பணிதலும் மாமியர் மகிழ்வும்*

*1254.* ***அன்னமும். அன்னவர் அம் பொன் மலர்த் தாள்***
***சென்னி புனைந்தனள்; சிந்தை உவந்தார்.***
***கன்னி. அருந்ததி. காரிகை. காணா.***
***'நல் மகனுக்கு இவள் நல் அணி' என்றார்.***

***அன்னமும் அன்னவர் அம்பொன் மலர்த்தாள் சென்னி*** *புனைந்தாள் - அன்னப்பெடை போன்ற சீதையும். அத்தேவிமார் மூவரின் அழகிய பொன்போல் அருமையான திருவடித்தாமரை மலர்களைத் தன் தலைக்கு அணியாகக்கொண்டு வணங்கினாள்;* ***சிந்தை உவந்தார்*** - *(அப்போது அவர்கள் மூவரும்) சிந்தை மகிழ்ந்தவர்களாகி;* ***கன்னி அருந்ததி காரிகை காணா*** - *கற்பழிவில்லாத அருந்ததி போன்ற அழகிய மங்கையாகிய சானகியைப் பார்த்து;* ***நல்மகனுக்கு இவள் நல் அணி என்றார்*** - *'நம்' சிறப்பிற்குரிய (செல்வ) மகனுக்கு. இச்சீதை சிறப்பிற்குரிய அணிகலம் ஆவாள்' என்றனர்.*

*மாமியர் மூவரும். மணமக்கள் பொருத்தம் தோன்ற. ''நல் மகனுக்கு இவள் நல் அணி'' என்றார். நம் நல் மகனுக்கு இவள் நல்ல அணிகலமாகி அழகு கூட்டுவாள் எனப் பிராட்டியின் ஏற்றம் கூறியவாறுமாம். சீதை. இராமன் வாழ்வுக்கு அழகூட்டுவாள் என்பதாம். காணா - கண்டு. செய்யா என்னும் வினையெச்சம்.*

***1255. சங்க வளைக் குயிலைத் தழீஇ நின்றார்.***
***'அம் கணனுக்கு உரியார் உளர் ஆவார்***

***-family: GIST-TMOTChanakya; font-size: 19; color: navy">***
***பெண்கள் இனிப் பிறர் யார் உளர்?' என்றார்;***
***கண்கள் களிப்ப. மனங்கள் களிப்பார்.***

***சங்க வளைக்குயிலைத் தழீஇ நின்றார்*** - *(தசரதனின் மனைவியராகிய அம்மூன்று தேவிமார்களும்) சங்கவளையல்களையணிந்த ஒரு குயில் போன்ற சானகியை (அன்புமிகத்) தழுவி மகிழ்ந்தார்கள்;* ***'அம் கணனுக்கு உரியார் உளர் ஆவார் பெண்கள் இனிப்பிறர் யார் உளர்?'*** - *அழகிய திருக்கண்களையுடைய (நம்) இராமனுக்கு ஏற்ற துணைவியாகத் தக்கார். பெண்களில் இவளைத்தவிர (மூவுலகிலும்) வேறு யார் உள்ளார்கள்?';* ***என்று கண்கள் களிப்ப. மனங்கள் களிப்பார்*** - *என்று கூறி. தங்கள் கண்கள் (இவளைக்கண்டதனால்) களிப்படைய (இவளை மருகியாகப் பெற்றதனால்) மனமும் களிப்படைந்தவர் ஆயினர்.*

*மூவர்க்கும். கண் விருந்தும் மனவிருந்தும் படைத்தாள் பிராட்டி என்பது கருத்து. குயில் - உவமையாகுபெயர். அங்கணன் அழகிய திருக்கண்களை யுடையவனாகிய இராமன். இராமனாகிய நம் செல்வனின் திருக்கண்களுக்கு நல்விருந்து கிட்டியுள்ளது என்பார். ''அங்கணனுக்கு'' என்றார். கண்களின் களிப்பு! மனத்துக்கு இறங்கிற்று என்பார். ''கண்கள் களிப்ப மனங்கள் களிப்பார்'' என்றார். தாயர் மூவர் மனநிலையும் ஒன்றாகவே இருந்ததால். மூவர் கூற்றையும் ஒரு கூற்றாகவே உரைத்தார். தாயர்மூவரின் பேதமிலாப் பெருநிலை சுட்டியவாறு.*

தேவியர் சீதைக்குப் பரிசளித்தல்

***1256. 'எண் இல கோடி பொன். எல்லை இல் கோடி***
***வண்ண அருங் கலம். மங்கையர் வெள்ளம்.***
***கண் அகல் நாடு. உயர் காசொடு தூசும்.***
***பெண்ணின் அணங்கு அனையாள் பெறுக!' என்றார்.***

**'எண் இல கோடி பொன்** - *(மேலும் அத்தேவியர் மூவரும்) 'அளவற்ற கோடிப்பொற் காசுகளையும்;* **எல்லை இல் கோடி வண்ண அருங்கலம்** - *அளவற்ற கோடியான அழகிய கிடைத்தற்கரிய அணிகலங்களையும்;* **மங்கையர் வெள்ளம்** - *பணிப்பெண்களின் பெருந்திரளினையும்;* **கண்அகல் நாடொடு** - *இடமகன்ற (சில) நாடுகளையும்;* **காசு உயர் தூசும்** - *விலையுயர்ந்த பட்டாடைகளையும்;* **பெண்ணின் அணங்கு அனையாள் பெறுக' என்றார்** -*பெண்களுக்குத் தெய்வம்போலச் சிறந்தசானகி பெறுவாளாக' என்று கூறிக்கொடுத்தனர்.*

*இராமன் பிராட்டியோடு பள்ளி அடைதல்.*

***1257. நூற் கடல் அன்னவர் சொற் கடன்நோக்கி.***
***மால் கடல் பொங்கும் மனத்தவளோடும்.***
***கால் கடல்போல் கருணைக்கடல்; பண்டைப்***
***பாற்கடல் ஒப்பது ஒர் பள்ளி அணைந்தான்.***

**கால்கடல் போல் கருணைக்கடல்** - *(நீர்பொங்கும்) கருநிறமுள்ள கடல் அனைய கருணைபொங்கும் கடலாகிய இராமபிரான்;* **நூல்கடல் அன்னவர் சொல் கடன் நோக்கி** - *கடல் போன்றுள்ள நூல்களைக்கற்று உயர்ந்த பெரியோர்கள் சொல்லியுள்ள (சாத்திரங்களது) சொற்களின் முறைமையை நோக்கி;* **மால்கடல் பொங்கும் மனத்தவளோடும்** - *கடல் எனப்பொங்கும் ஆசையுடைய மனத்தவளாகிய சீதையோடும்;* **பண்டைப் பாற்கடல் ஒப்பதோர் பள்ளியடைந்தான்** - *தொன்று தொட்டுத் தான் பள்ளிக்கொள்ளும் பாற்கடலில் உள்ள ஆதிசேடப்பள்ளி போன்றதொரு திருப்பள்ளியைச் சென்றடைந்தான். கடலில் நீர் பொங்கும்;பெருமான் உள்ளத்தில் கருணை பொங்கும். கடல் நீருக்கு அளவு இல்லைபோல. இவன் உள்ளத்திற் பொங்கும் கருணைக்கும் அளவில்லையென்க. கருணை அலையடிக்கும் கண்ணாளன் என்பார். "கார்க் கடல் அன்ன கருணைக்கடல்" என்றார். கால் - கருமை: காற்றுமாம் - இராமபிரான் கருணையின் கடல்; பிராட்டியோ அவன் மேல் வைத்த அன்பின் கடல் என்பார் "மால் கடல் அன்ன மனத்தவளோடும்" என்றார். தெய்வத் தம்பதியர்க்கு இச்சடங்குகள் எல்லாம் தேவையோ என்னும் வினாவை ஆசங்கித்து. மக்கள் வாழ. வாழ்ந்து காட்டப்பிறந்தவன் ஆதலின். கற்றோர் சொற்படி நடந்தான் என்பார். "நூல்கடல் அன்னவர் சொற்கடன் நோக்கி" என்றார். 98 மங்கல அங்கி வசிட்டன் வளர்த்தல்*

***1258. பங்குனி உத்தரம் ஆன பகற்போது.***
***அங்க இருக்கினில். ஆயிர நாமச்***
***சிங்கம் மணத் தொழில் செய்த திறத்தால்.***
***மங்கல அங்கி. வசிட்டன் வகுத்தான்.***

***பங்குனி உத்தரம் ஆன பகல்போது*** - *பங்குனி மாதத்து உத்திர நட்சத்திரம் கூடியுள்ள பகற் பொழுதிலே;* ***ஆயிர நாமச் சிங்க மணத்தொழில் செய்த திறத்தால்*** - *ஆயிரந்திருப்பெயர்களையுடைய சிங்கமே போன்ற இராமனது திருமணச் சடங்குகளைச் செய்து முடித்ததிறங்கூடிய;* ***வசிட்டன்*** - *வசிட்ட மாமுனிவன்;* ***அங்க இருக்கினில் மங்கல அங்கி வளர்த்தான்*** - *உப அங்கங்களையுடைய. வேதவிதிப்படி. மங்கலகரமான ஓமாக்கினியை வளர்த்தான்.*

*"தாள்கள் ஆயிரத்தாய் பேர்கள் ஆயிரத்தாய்" (திருவாய். 8. 1.10) என்பவாதலின் ஆயிர நாமச் சிங்கம் என்றார். உத்திர நாளோடு கூடிய பௌர்ணமியன்று திருமணம் நிகழ்ந்து முடிந்தபின் மணவேள்வியைத் தொடங்கிய வசிட்டபகவானே அதனை மங்கலமாக முடித்து வைத்தான் என்க. இராம நாமம் ஒன்றே. திருமாலின் ஆயிரம் நாமங்கட்கும் சமம் என்பது சகச்சிர நாமத்தின் இறுதித் துதியாதலால். "ஆயிர நாமச்சிங்கம்" என்றார் எனினுமாம்.*

*மங்கல அங்கி வளர்த்தல் வேள்வியில் மங்களகரமாக ஓமத்தீப் பொங்கியெழுமாறு பூரணாகுதி வழங்கல்.* *பரதன் முதலிய மூவர்க்கும் திருமணம்.*

***1259. வள்ளல் தனக்கு இளையோர்கள் தமக்கும்***
**எள்ளல் இல் கொற்றவன். 'எம்பி அளித்த**
**அள்ளல் மலர்த் திரு அன்னவர் தம்மைக்**
**கொள்ளும்' எனத் தமரோடு குறித்தான்.***

***எள்ளல் இல் கொற்றவன்*** -*பழிப்பில்லாத வெற்றிகளையே கொண்ட சனகன்;* ***எம்பி அளித்த அள்ளல் மலர்திரு அன்னவர்தம்மை*** - *என்பின் பிறந்தவனான தம்பி (குசத்துவசன்) பெற்ற. சேற்றில் மலரும் செந்தாமரையில் வாழும் திருமகள் அனைய மகளிரையும்;* ***கொள்ளும் என*** - *மணஞ்செய்து கொள்ளுங்கள் என்று;* ***வள்ளல் தனக்கு இளையோர்கள் தமக்கும்*** - *வரையாது அருளும் இராமபிரானது தம்பியராகிய. பரத இலக்குவ. சத்துருக்கனர்க்கும்;* ***தமரோடு குறித்தான்*** - *(தசரத சக்கரவர்த்தி முதலிய) உறவினர்களோடு மணம் பேசி நிச்சயித்தான்.*

*சீதையை வளர்த்தபின் சனகனுக்குப்பிறந்த பெண்ஆகிய ஊர்மிளையை இலக்குவனுக்கும். தம்பி மகளிராகிய மாண்டவியைப் பரதனுக்கும் சுருதகீர்த்தியைச் சத்துருக்கனுக்கும் நிச்சயித்தனர் என்பது முதனூலால் பெறப்படும்.*

***1260. கொய்ந் நிறை தாரன். குசத்துவசப் பேர்***
**நெய்ந் நிறை வேலவன். மங்கையர் நேர்ந்தார்;**
**மைந் நிறை கண்ணியர். வான் உறை நீரார்.**
**மெய்ந் நிறை மூவரை மூவரும் வேட்டார்.***

***கொய்ந்நிறை தாரன்*** - *மலர்களைக்கொய்து தொடுத்து நிறைந்த மாலைகளையணிந்த மார்பினனாகிய சனகனும்;* ***குசத்துவசப்பேர் நெய்ந்நிறை வேலவன்*** - *குசத்துவசன் என்னும் பெயரையுடைய நெய்நிறையப் பூசப்பெற்றுள்ள வேல் ஏந்திய சனகனின் தம்பியும் (ஆகிய இருவரின்);* ***மங்கையர் நேர்ந்தார்*** - *மகளிர் மூவரும் திருமணத்திற்குப் பொருந்தியவர் ஆயினர்;* ***மைந்நிறை கண்ணியர்*** - *மை நிறைந்த கண்களை யுடையவரும்;* ***வான்உறை நீரார்*** - *வான மகளிரின் தன்மையையுடையவரும்;* ***மெய்ந்நிறை மூவரை*** - *பருவம் நிரம்பினவரும் ஆகிய அம்மூவரையும்;* ***மூவரும் வேட்டார்*** - *(இராம பிரானின் தம்பியராகிய) மூவரும் மணஞ்செய்து கொண்டனர்.*

*மெய் - ஆகு பெயராய்ப் பருவத்தைக்குறித்தது. சத்திய ஒழுக்கத்தையும். நிறையென்னும் பெண்மை ஒழுக்கத்தையும் கொண்ட மகளிர் என்று "மெய்ந்நிறை மூவர்" எனுந்தொடர்க்குப் பொருள் கொள்ளினும் அமையும்.*
*மிதிலையில் தசரதன் சில நாள் தங்கியிருத்தல்*

***1261. வேட்டு அவர் வேட்டபின். வேந்தனும். மேல்நாள்***
***கூட்டிய சீர்த்தி கொடுத்திலன் அல்லால்.***
***ஈட்டிய மெய்ப் பொருள் உள்ளன எல்லாம்***
***வேட்டவர் வேட்டவை வேண்டளவு ஈந்தான்.***

***அவர் வேட்டு வேட்டபின்*** - *அவர்கள் அனைவரும் (ஒருவர்க்கொருவர்) விரும்பி மணஞ்செய்து கொண்ட பின்பு;* ***வேந்தனும்*** - *சனக மன்னனும்;* ***மேல்நாள் கூட்டிய கீர்த்தி கொடுத்திலன் அல்லால்*** - *முன்னே. பல்லாண்டுகளாகத் தான் ஈட்டி வைத்திருந்த புகழ் ஒன்றை மட்டுமே கொடாமல் வைத்துக்கொண்டானே அல்லாமல்;* ***ஈட்டிய மெய்ப்பொருள் உள்ளன எல்லாம்*** - *தான் இத்துணைக் காலமும் சத்தியத்தோடு ஈட்டி வைத்திருந்த அத்தனை பொருள்களையும்;* ***வேட்டவர் வேட்டவை வேண்டு அளவு ஈந்தான்*** - *விரும்பினவர் விரும்பினவற்றையெல்லாம் அவர்கள் விரும்பும் அளவும் (பெறுக எனக்) கொடையாகக் கொடுத்தான்.*

*இராமன் முன்னமே சீதையை கன்னிமாடத்தில் கண்டு. விரும்பிய பின்பு. காதல் மணம் புரிந்தான் எனக்கூறிய தமிழ் மரபுக்கேற்ப. தம்பியர் மணங்களும் ஒருவர்க்கொருவர் விரும்பிய பின்பே நிகழ்ந்தன என்பார். "வேட்டு அவர் வேட்டபின்" என்றார்.*

*கீர்த்தி - மிகுபுகழ். கொடுப்பவன் மிகுபுகழை எக்காரணம் கொண்டும் கொடுக்க இயலாது; கொடுக்கக் கொடுக்க து மிகுமாதலின். "கூட்டிய சீர்த்தி கொடுத்திலன் அல்லால்" என்று அழகுறக் கூறினார்.*

*1262.* **ஈந்து. அளவு இல்லது ஒர் இன்பம் நுகர்ந்ததே.**
**ஆய்ந்து உணர் கேள்வி அருந் தவரோடும்.**
**வேந்தனும். அந் நகர் வைகினன்; மெள்ளத்**
**தேய்ந்தன நாள் சில; செய்தது உரைப்பாம்;**

**வேந்தனும்** - *தசரதச்சக்கரவர்த்தியும்;* **ஈந்து அளவு இல்லது ஒர் இன்பம் நுகர்ந்ததே** - *(சனகனைப்போலவே) கொடை கொடுத்து. அதனால் வரும் எல்லையற்றதும் ஒப்பற்றதும் ஆகிய இன்பத்தை நுகர்ந்து;* **ஆய்ந்து உணர் கேள்வி அருந்தவரோடும்** - *ஆராய்ந்து உணரும் கேள்விச் செல்வத்தையும். அரிய தவச்செல்வத்தையும் உடைய முனிவர்களுடனே (அளாவி மகிழ்ந்து);* **அந்நகர் வைகினன்** - *அந்த மிதிலை நகரத்திலே தங்கியிருந்தனன்;* **நாள் சில மெள்ளத் தேய்ந்தன** - *சில நாட்கள் மெல்லக் கழிந்தன;* **செய்தது உரைப்பாம்** - *அதன்பின்பு நிகழ்ந்ததை (இனிமேல் வரும் படலத்தில்) கூறுவோம். ஒன்றைக்கொடுத்து. அக்கொடையால். பெறுவார் பெறும்இன்பத்தைக் கண்டு தாம் மகிழும் இன்பத்திற்கு ஈடான இன்பம் உலகில் இல்லையாதலின். "ஈந்து. அளவில்லதோர் இன்பம் நுகர்ந்து" என்றார். "ஈந்து உவக்கும் இன்பம்" (திருக். 228) எனும் அருமைக்குறளும் அதற்குப் பரிமேலழகர் வரைந்த உரையும் இங்கு நோக்கத் தகுவன. கேள்விச் செல்வம் மிக்க தவ முனிவரோடு தத்துவச் செல்வங்களை ஆய்ந்து நாள் போவது தெரியாமல் சம்பந்தியாகிய சனகன் நகரில் தசரதன் தங்கியிருந்தான் என்பார். "மெள்ளத் தேய்ந்தன நாள் சில" என்றார். தன் நகரம் செல்வதைக் கூட மறக்கச்செய்தது கலைவல்ல முனிவர்களிடம் கேட்ட கேள்விச் செல்வம் என்பது குறிப்பு.*

## பரசுராமப் படலம்

*இராமபிரான் பரசுராமனை எதிர்கொண்டு வெற்றி கொண்டதை உரைக்கும் பகுதி.*

*தயரதனும். இராமன் முதலிய அரசிளங் குமரர்களும். தேவியரும். உடன் வந்து படை வீரர்களுடன் மிதிலையிலிருந்து. அயோத்தி மாநகரம் புறப்படுகின்றனர். வழியில் தீ நிமித்தங்களும் நன்னிமித்தங்களும் சேர்ந்து தோன்றுகின்றன. நிமித்திகள். "இன்றே வரும் இடையூறு: அது நான்றாய் விடும்" என்கிறான். அப்போது. தன் தந்தையைக் கொன்ற மன்னர் குலத்தை. இருபத்தொரு தலைமுறை கருவறுப்பேன் என்று சபதம் இட்டுள்ள பரசுராமன் பெருஞ்சினத்தோடு எதிர் நிற்கிறான். அபயம் வேண்டுகிறான் தசரதன். "முன்பே முறிந்துபோன சிவதனுசை ஒடித்த வீரம் என்ன வீரம்? இதனை வளை; உன் வீரம் உணர்வேன்" எனவுரைத்து வில்லின் வரலாறு உரைக்கிறான் பரசுராமன். மிக எளிதாக. இராமன் அவ்வில்லை வளைத்து. வில்லின் கணைக்கு இலக்குக் கேட்க. தான் ஈட்டிய தவத்தையெல்லாம் எடுத்துக் கொள்க என்கிறான் அவன். தவம் அனைத்தும் இழந்த பரசுராமன். நீ துளவ மாலையணிந்த திருமாலே என உணர்ந்தேன் என்று கூறி விடை பெறுகிறான். தயரதன். இராமன் பெருமையினை யுணர்ந்து. உச்சி மோந்து. ஆனந்தக் கண்ணீர் அருவியாட்டுகிறான். வருணனிடம். பரசுராமன் வில்லை வைத்திருக்கப் பணித்த இராமன் பரிவாரங்களுடன் அயோத்தி எய்துகிறான். கேகய மன்னன் ஓலைப்படி. மாமன் உதாசித்தோடு பரத சத்துருக்கனர் கேகய நாட்டினை ஏழு நாள்களில் சென்றடைகின்றனர். இனிமேல் நிகழ்வன அயோத்தியா காண்டம் ஆகும் விசுவாமித்திரர் விடை பெறல்*

*(வேறு)* கலிவிருத்தம்

***1263.*** **தான் ஆவது ஓர் வகையே நனி**
**சனகன் தரு தயலும்**
**நானா விதம் உறு போகமும்**
**நுகர்கின்ற அந் நாள்வாய்.**
**ஆனா மறை நெறி ஆசிகள்**
**முனி கோசிகன் அருளி.**
**போனான் வட திசைவாய். உயர்**
**பொன் மால் வரை புக்கான்.**

***சனகன் தரு(¬)தயலும்*** - *சனகன் தந்த பெண்ணாகிய சீதையும்;* ***தான் ஆவது ஓர் வகையே நனி நானா விதம் உறு போகமும்*** - *இராமனும். எடுத்த அவதாரத்திற்கேற்ப மிகுதியான பல்வகைப் போகங்களையும்;* ***நுகர்கின்ற அந்நாள் வாய்*** - *அநுபவிக்கின்ற அக்காலத்திலே;* ***முனிகோசிகன் ஆனாமறை நெறி ஆசிகள் அருளி*** - *நெறி நன்கு உணர்ந்த விசுவாமித்திர முனிவன் அழியாத வேத ஆசிகளை (மணமக்களுக்கு) அருளிச்செய்து விட்டு;* ***போனான்*** - *புறப்பட்டான்;* ***வடதிசைவாய் உயர் பொன்மால் வரை புக்கான்*** - *வடக்குத் திசையில் சென்று உயர்ந்தோங்கிய அழகிய பெருமலையாகிய இமயமலையை (தவஞ்செய்தற் பொருட்டுச்) சென்றடைந்தான்.*

*"தானும்" என்பதில் உள்ள உம்மை தொக்குத் "தான்" என் நின்றது. அது. இராமனைக் குறித்தது.*

*தயரதனின் அயோத்தி புறப்பாடு*

***1264. அப் போதினில். முடி மன்னவன்.***
***'அணி மா நகர் செலவே.***
***இப்போது. நம் அணிகம்தனை***
***எழுக!' என்றுஇனிது இசையா.***
***கைப் போ தகம் நிகர் காவலர்***
***குழு வந்து. அடி கதுவ.***
***ஒப்பு ஓத அரு தேர் மீதினில்.***
***இனிது ஏறினன். உரவோன்.***

***அப்போதினில்*** - *அந்நாள்களில் ஒரு நாளில்;* ***முடி மன்னவன்*** - *மகுடம் அணிந்த தசரதச் சக்கரவர்த்தி;* ***அணிமா நகர் செலவே*** - *'அழகிய மாநகராகிய அயோத்திக்குச் செல்ல;* ***இப்போது நம் அனிகம்தனை எழுக*** - *இப்பொழுது. நம் சேனைகள் யாவும் (நம்முடன்) புறப்படுக;* ***என்று இனிது இசையா*** - *என்று இனிமையுடன் கூறி;* ***கைப் போதகம் நிகர்காவலர் குழு*** - *(சனகனிடம் விடைபெற்று) துதிக்கைகளையுடைய யானைகளைப் போன்ற அரசர்களிடன் கூட்டம்;* ***அடிகதுவ*** - *தனது பாதங்களை வணங்கி நெருங்கிச் சூழ்ந்து வர;* ***ஒப்பு ஓத அரு தேர் மீதினில்*** - *உவமை கூறற்கு அரிய (அழகிய தன்) தேரின்மேல்;* ***உரவோன் இனிது ஏறினன்*** - *வலிமை மிக்கோனாய். நெஞ்சு இனிக்க ஏறினான். இராமனின் திருமணம். தசரத வேந்தனுக்குப் புதிய ஆற்றலையும். பெருமகிழ்வையும் தந்து நெஞ்சினிக்க வைத்த நிகழ்ச்சியொன்று ஆதலின். "அந்த இனிமை நிகழ்வினை நெஞ்சில் சுமந்தவாறு அயோத்தி புறப்படத் தேர் ஏறினான் என்பார். "தேர்மீதினில் உரவோன் இனிது ஏறினான்" என்றார். இசையா - இசைத்து. செய்யா எனும் வினையெச்சம்.*

***1265. தன் மக்களும். மருமக்களும்.***
***நனி தன் கழல் தழுவ.***
***மன் மக்களும். அயல் மக்களும்.***
***வயின் மொய்த்திட. மிதிலைத்***
***தொல் மக்கள்தம் மனம் உக்கு. உயிர்***
***பிரிவு என்பது ஓர் துயரின்.***
***வன்மைக் கடல் புக. உய்ப்பது ஓர்***
***வழி புக்கனன் மறவோன்.***

***மறவோன்*** *- வலிமை மிக்க தசரத வேந்தன்;* ***தன் மக்களும் மருமக்களும் தன்கழல் நனிதழுவ*** *- தன்னுடைய புதல்வர்கள் நால்வரும். மருகிகள் நால்வரும் தனது பாதங்களை நன்கு வணங்கி உடன் வரவும்;* ***மன் மக்களும் அயல் மக்களும் வயின் மொய்த்திட*** *- அரச குமாரர்களும் மற்றைய குடிமக்களும் தன் பக்கங்களில் நெருங்கி வரவும்;* ***மிதிலைத் தொல்மக்களும்*** *- மிதிலை நகரத்தில் பன்னெடு நாள் வாழ்ந்த பெரியோர்களும்;* ***மனம் உக்கு*** *- மனம் நெகிழ்ந்து;* ***உயிர் பிரிவு என்பதோர் துயரின்*** *- உயிர் உடம்பை விட்டுப் பிரியும் துன்பம் போன்றதொரு துன்பமெனும்;* ***வன்மைக் கடல்புக*** *- வலிய கடலுள் நுழையவும்;* ***உய்ப்பது ஓர் வழிபுக்கனன்*** *- அயோத்திக்குச் செல்லுவதோர் வழியை யடைந்தான்.*

*தசரதன். இராமன். தம்பியர். சீதை முதலியோர் உயிர்போல நேசிக்கப்பட்டனர் ஆதலின். அவர் பிரிவு. உடலிலிருந்து உயிர்பிரிவது அன்ன வேதனையை மிதிலை மக்களுக்குத் தந்தது என்பது தோன்ற. ''உயிர் பிரிவு என்பதோர் துயரின் வன்மைக் கடல்புக'' என்றார். ''சாதலின் இன்னாதது இல்லை'' (திருக்.) என்பார் வள்ளுவனாரும். அப்பிரிவுத் துயரைப் பொறுத்துக் கொள்ளும் வலிமையைப் பெற்றிருந்தான் தசரதன் என்பார். ''மறவோன்'' என்றார். உவமையணி.*

*தம்பியரொடு இராமன் சென்ற காட்சி*

***1266. முன்னே நெடு முடி மன்னவன்***
***முறையில் செல. மிதிலை***
***நன் மா நகர் உறைவார் மனம்***
***நனி பின் செல. நடுவே.***
***தன் ஏர் புரை தரு தம்பியர்***
***தழுவிச் செல. மழைவாய்***
***மின்னே புரை இடையாளொடும்.***
***இனிது ஏகினன் வீரன்.***

***நெடுமுடி மன்னவன்*** - *பெரிய மணிமுடியணிந்த தசரத வேந்தன்;* ***முறையின் முன்னே செல*** - *(தனக்குரிய) மரபுப்படி முன்னே செல்லவும்;* ***மிதிலை நல் மாநகர் உறைவார் மனம்*** - *அழகிய மிதிலை மாநகரத்து மக்களின் மணங்கள் யாவும்;* ***நனி பின் செல*** - *(தன்) பின்னே மிகுதியாக வரவும்;* ***நடுவே தன்ஏர்புரை தரு தம்பியர் தழுவிச்செல*** - *இடை நடுவே. தன்னையே அழகில் ஒத்த தம்பியர்கள் தழுவி வரவும்;* ***மழைவாழ் மின்னே புரை இடையாளொடும்*** - *மேகத்தில் வாழ்கின்ற மின்னலையொத்த இடையுடையாளாகிய சானகியுடனே;* ***வீரன் இனிது ஏகினன்*** - *மாவீரனாகிய இராமபிரான் இனிதே சென்றான்.*

*முன்னே தசரதன்; பின்னே மிதிலை வாழ் மக்களின் மனங்கள்; இடையே தம்பியர் சூழ தான் மின்னிடையாளொடு சென்றான் எனக் கூறி. செல்லும் காட்சியை மன ஓவியப்படுத்துகிறார். வீரன் என்றால். அது இராமனையே குறிக்கும் ஆதலால். அடைமொழி எதவும் இன்றி ''வீரன்'' என்றார். ''வீரர்களுள் நான் இராமனாய் இருக்கிறேன்'' (கீதை; 10;31) என்பது கண்ணன் வாக்கு. ''எள்ளரிய குணத்தாலும் எழிலாலும் இந் நின்ற வள்ளலையே அனைய'' (கம்ப. 656) தம்பியர் ஆதலின். ''தன் ஏர் புரை தம்பியர்'' என்றார். தன் நேர்புரை எனப் பிரிக்கினுமாம். இராமன் மழைமேகம் அனைய நிறத்தினன்; சீதை மின்னைப்போன்ற நிறத்தினளும் இடையினளும் ஆதலின். ''மழைவாழ் மின்னேபுரை இடையாளொடும் ஏகினன்'' என்றார். இனி. இந்த மழை மேகத்திடம் அந்த மின்னற் கொடி வாழப்போகிறது என்பதைக் குறிப்பால் உணர்த்த. ''மழை வாழ் மின்'' என்றார். மிதிலை வாழ் மக்கள் இவர்கள் மேல் கொண்ட அன்பின் மிகுதியால். அவர்கள் உடல் திரும்பினும். உள்ளம் திரும்பாமல் தசரதக் குழுவோடு செல்கிறதாம். அதனை. ''மிதிலை நன்மாநகர் உறைவார் மனம் நனிபின் செல்'' என்று அழகுறக் குறித்தார். இராமன் இருமருங்கினும் தம்பியர் பாதுகாப்புக் கவசம் போலச் சென்றனர் ஆதலின். ''நடுவே. தம்பியர் தழுவிச் செல'' என்று குறித்தார்.*

*பறவைச் சகுனம்*

***1267. ஏகும் அளவையின் வந்தன.***
***வலமும் மயில். இடமும்***
***காகம் முதலிய. முந்திய***
***தடை செய்வன; கண்டான்;***
***நாகம் அனன். 'இடை இங்கு உளது***
***இடையூறு' என நடவான்;***
***மாகம் மணி அணி தேரொடு***
***நின்றான். நெறி வந்தான்.***

***ஏகும் அளவையின்*** - *(இவ்வாறு) செல்கின்ற போது;* ***மயில்*** - *மயில் (முதலிய சில பறவைகள்);* ***வலமும் வந்தன*** - *(சுபசகுனமாக) வலப்புறமாகவும் வந்தன வாகி;* ***காகம் முதலிய*** - *காகம் முதலான சில பறவைகள்;* ***இடமும்*** - *(தீய சகுனமாக) இடப்புறமாகவும்;* ***முந் திய*** - *முற்பட்டுச் சென்றனவாகி;* ***தடை செய்வன கண்டான்*** - *தடை செய்வனவற்றைக் கண்டான்;* ***நாகம் அனன்*** - *பெருமித நடையழகால்) யானையைப் போன்றவனான தசரத வேந்தன்;* ***'இங்கு இடையூறு உளது' என*** - *'இவ் வழியில் ஏதோ தடை ஏற்பட உள்ளது' என்று;* ***நடவான்*** - *(மேலும்) செல்லாதவனானான்;* ***நெறிவந்தான்*** - *அறநெறியின் வழி வந்தனாகிய தசரதன்;* ***மாகம்மணி அணி தேரொடு நின்றான்*** - *விண் அளாவிய அழகிய தேரோடு அங்கேயே நின்று விட்டான்.*

*சகுன நூலார். கருடன். காடை. கழுகு. ஆந்தை. உடும்பு. கீரி. குரங்கு முதலியவை வலமிருந்து இடம் போயின் உத்தமம் என்றும். நாரை. காக்கை. செம்போத்து. கிளி. கொக்கு. மயில். கோழி. ஓணான். புள்ளிமான். புனுகுப்பூனை. புலி. நரி. முதலியவை வலமிருந்து இடமாயின உத்தமம் என்றும் உரைப்பவர். இவற்றுள் இடம் ஆகுபவை வலமும். வலம் ஆகுபவை இடமும் ஆயின் சகுனத்தடையாம். தசரதனுக்கு உத்தம சகுனமும் தடைச் சகுனமும் ஒருங்கு நிகழ்ந்தனவாதலின். மேலே பயணம் தவிர்ந்து நின்றான். மலை போன்றவன் எனினும் சகுனத்துக்கு அஞ்சினான்; "அஞ்சுவது அஞ்சாமை பேதைமை" (திருக். 422) யாதலின். தொன்றுதொட்டு அறநெறி தவறாத இட்சுவாகு குலத்து உதித்தவனாதலின் தசரதனை "நெறிவந்தான்" என்றார். "நெறி வந்தான் வலமும் வந்தன (எனினும்) காகம் முதலியன தடை செய்வன கண்டான். இடையூறுளதென நடவான். நின்றான்" என வினை முடிபு செய்க.*

*நிமித்திகன் விடை*

***1268. நின்றே. நெறி உணர்வான். ஒரு***
***நினைவாளனை அழையா.***
***'நன்றோ? பழுது உளதோ?***
***நடு உரை நீ. நயம்' என்ன.***
***குன்றே புரை தோளான் எதிர்.***
***புளளின் குறி கொள்வான்.***
***'இன்றே வரும் இடையூறு; அது***
***நன்றாய்விடும்' என்றான்.***

***நின்று*** - தசரதன் (இவ்வாறு) நின்று; ***நெறியுணர்வான் ஒரு நினைவாளனை அழையா*** - சகுன நூலின் நெறி முறைமையை நன்கு அறிகின்ற ஆய்வாளன் ஒருவனை (நிமித்திகனை) அழைத்து; ***'நன்றோ? பழுது உளதோ?*** - (இச்சகுனத்தால்) 'நன்மை விளையுமா? தீமை விளையுமா?; ***நீ நயம் நடு உரை'*** - நீ விளைவை நடுநிலைமையுடன் சொல்வாய்; ***என்ன*** - என்று வினாவ; ***குன்றே புரை தோளான் எதிர்*** - மலையினையே போன்ற தோள்களையுடைய அத்தசரத வேந்தனின் எதிரில்; ***புள்ளின் குறி கொள்வான்*** - பறவைகளின் (நிமித்தக்) குறிகளை அறிபவனாகிய அந்நிமித்திகன்; ***இடையூறு இன்றே வரும்*** - இடையூறு ஒன்று இப்பொழுதே வரும்; ***அது நன்றாய் விடும் என்றான்*** - (வந்த விரைவிலேயே) அவ்விடையூறு நன்றாகவும் முடிந்துவிடும் என்று கூறினான்.

*நிமித்தம் - காரணம். சகுனத்தின் காரணங்களை அறிந்து கூறுவான் நிமித்திகன் ஆதலின். அவனை "நெறியுணர்வான் நினைவாளன்" என்றார். அழையா - செய்யா என்னும் வினை எச்சம். காகம் முதலியன இடம் ஆதலின். இடையூறு வரும் என்றும். மயில் முதலிய வலம் ஆதலின் அது நன்மையாய் முடியும் என்றும் நிமித்திகன் கூறினான்.*

*பரசுராமனது வருகையும். தசரதன் சோர்வும்*

***1269. என்னும் அளவினில். வானகம்***
***இருள் கீறிட. ஒளியாய்***
***மின்னும்படி புடை வீசிய***
***சடையான்; மழு உடையான்;***
***பொன்னின் மலை வருகின்றது***
***போல்வான்; அனல் கால்வான்;***
***உன்னும் தழல்விழியான்; உரும்***
***அதிர்கின்றது ஓர் மொழியான்;***

***என்னும் அளவினில்*** - என்று (நிமித்திகன்) சொல்லி முடிக்கும் போதிலே; ***வான் அகம் இருள் கீறிட*** - ஆகாயத்தில் பொருந்தியிருந்த இருள் சிதைந்து ஒழிந்து; ***ஒளிஆய் மின்னும்படி*** - ஒளி செய்து விளங்கும்படி; ***புடை வீசிய*** - பக்கங்களில் எல்லாம் பரவுமாறு; ***சடையான்*** - சடையினை யுடையவனும்; ***மழுவுடையான்*** - கோடரிப் படையையுடையவனும்; ***பொன்னின் மலை வருகின்றது போல்வான்*** - பொன் மயமான மேரு மலை நடந்து வருவது போல் வருபவனும்; ***அனல் கால்வான்*** - மூச்சில் நெருப்புச் சிந்துபவனும்; ***உன்னும் தழல் விழியான்*** - (யாரிடம் இத்துணை வெகுளியென்று காண்பார்) நினைக்குமாறு தழல் சிந்தும் விழிகளையுடையவனும்; ***உரும் அதிர்கின்றது ஓர் மொழியான்*** - இடியும் அஞ்சி நடுங்கும் தன்மையுடையன் கூடிய ஒப்பற்ற சொற்களையுடையவனும்.

இவை யனைத்தும் பரசுராமனுக்கு அடைமொழிகள். ''என்னும் அளவினில்'' எனும் இத் தொடர் மேல் வரும் ''மழுவாளவன் வந்தான்'' (கம்ப.) என்பதோடு முடியும். ''சடையான்'' என்பதனால் முனிவன் என்பதையும் ''மழுஉடை யான்'' என்பதனால் அம் முனிவன் பரசுராமன் என்பதனையும் முதலிலேயே தோன்ற வைத்த திறம் காண்க. மழு - பரசு. ''சடையான் மழுஉடையான்'' என்பதனில் உள்ள சொல் இன்பம் நினைக்க இனிப்பது. நடவாதது மலை; இவனோ நடக்கும் பொன்மலை என்பார். ''பொன்னின் மலை வருகின்றது போல்வான்'' என்றார். இல்பொருள் உவமை. அனல் மூச்சும். தழல் விழி யும் இடி மொழியும் அவன் கொண்டுள்ள வெகுளியின் அளவு காட்டின. இனிப் பரசுராமனின் வண்ணனையாக வரும் பாடல்களின் சந்தம். வெகுளிப் பொருளுக்கேற்ற சந்தமும் மிடுக்கும் என அமைந்துள்ளன.

-indent: 30px">(இது முதல் ஒன்பது கவிகள் பரசுராமனின் வருணனை)

*1270.* **கம்பித்து. அலை எறி நீர் உறு**
**கலம் ஒத்து. உலகு உலைய.**
**தம்பித்து. உயர் திசை யானைகள்**
**தளர. கடல் சலியா**
**வெம்பித் திரிதர. வானவர்**
**வெருவுற்று இரிதர. ஓர்**
**செம் பொன் சிலை தெறியா. அயில்**
**முக வாளிகள் தெரிவான்;**

**அலை எறி நீர் உறு கலம் ஒத்து** - அலைகளை வீசும் கடல் நீரிடையே சிக்குண்ட மரக்கலம் போன்று; **உலகு கம்பித்து உலைய** - உலகமும் உயிர்களும் நடுங்கி நிலைகுலையவும்; **தம்பித்து உயர் திசை யானைகள் தளர** - தூண்களைப் போல் அசைவற்று (என் செய்வதென்று தெரியாமல்) சிறந்த எட்டுத் திசையானைகளும் தளர்ச்சியடையவும்; **கடல் சலியா வெம்பித்திரிதர** - கடல் பொங்கிக் கொதித்து நிலை வேறுபாடடையவும்; **வானவர் வெருவுற்று இரிதர** - மேல் உலகத்துள்ள தேவர்களும் அஞ்சி இடம்விட்டு ஓடவும்; **ஓர் செம்பொன் சிலை தெறியா** - செம்பொன் மயமானதொருவில்லை நாண் ஏற்றித் தெறித்து; **அயில்முக வாளிகள் தெரிவான்** - கூரிய நுனியுடைய அம்புகளை ஆராய்ந்து எடுப்பவனும்.

*பரசுராமனின் சினம் அளக்க இயலாத கொந்தளிக்கும் கடல் போன்றது என்றும். அச் சினத்திடைப்பட்ட உலகும் உயிரினங்களும். கொந்தளிக்கும் கடலிடைப்பட்ட மரக்கலமும். அதன் உள் சிக்கிய பொருள்களும் போன்றன என்பார். "அலை எறிநீர் உறும் கலம் ஒத்து. உலகு கம்பித்து உலைய" என்றார். உலகம் நிலைகுலையாமல் தாங்கி நிற்பவை திக்குயானைகள்; அவையும் இவன் சினத்தால் செய்வதறியாது. தம்பித்துத் தளர்ந்தனவாம்; "தம்பித்து உயர் திசை யானைகள் தளர" என்றார். தம்பம் - ண். தம்பித்தல் - தூண் என நிற்றல். சலியா. தெறியா என்பன செய்யா எனும் வினை எச்சங்கள். திசையானைகளே திசை தெரியாமல் திக் பிரமை கொண்டன என்றும் பொருள் கொளலாம். வானவர் அஞ்சி ஓடினர் என்பதனால். பரசுராமன் வானவரிலும் மிக்க தவவலிமை பெற்றவன் என்பது தெளிவாம். வில்லாளர். நாண் இறுகியுள்ளதா என அறிய வில்லின் நாணைக் கைவிரல்களால் தெறித்துப் பார்ப்பர். அவ் வொலியால் இவ்வளவு நிலைப்பிறழ்?வுகள் நிகழ்ந்தன எனினுமாம்.*

***1271. 'விண் கீழுற என்றோ? படி***
***மேல்கீழ் உற என்றோ?***
***எண் கீறிய உயிர் யாவையும்***
***யமன் வாய் இட என்றோ? -***
***புண் கீறிய குருதிப் புனல்***
***பொழிகின்றன புரையக்***
***கண் கீறிய கனலான் முனிவு -***
***யாது?' என்று அயல் கருத;***

***புண்கீறிய குருதிப்புனல்*** *- புண்ணைக் கீறியதனால் கொட்டும் இரத்தமாகிய செந்நீர்;* ***பொழிகின்ற புரைய*** *- சொரிகின்றவற்றைப் போல;* ***கண்கீறிய கனலான் முனிவு*** *- கண்களைக் கீறிக் கொண்டு வருகின்ற சினத்தீயினையுடைய அம் முனிவனது பெருவெகுளி;* ***விண் கீழ் உற என்றோ?*** *- சுவர்க்க உலகம் மண்ணுக்கு வந்து வீழ வேண்டும் என்றோ?;* ***படிமேல் கீழ்உற என்றோ*** *- பூவுலகம் வானிடத்தில் சென்று பொருத்த வேண்டும் என்றோ?;* ***எண் கீறிய உயிர்யாவையும் யமன் வாய் இட என்றோ?*** *- எண்ணலை ஒழித்த இவ்வுலக உயிர்கள் யாவற்றையும் கூற்றுவன் வாயில் கொடுக்க வேண்டும் என்றோ?;* ***யாது? என்று அயல்கருத*** *- யாது காரணத்தாலோ? என்று அயலிலுள்ளார் (ஐயத்தால்) எண்ணவும் -*

*சினம் மிக்கார் கண்கள் செந் தீப்போலச் சிவக்கும் ஆதலால். ''கண் கீறிய கனலான்'' என்றார். சினத்தால் எழும் கண்ணின் சிவப்பு. கண்ணின் இயல்பான நிறம் அன்று; செயற்கையானதே. அதுபோல. அருள்பொழியும் பானவையாகிய முனிவனுக்குக் கண்கள் சிவப்பது இயல்பன்று. எளிய மக்களின் சினமே. இயல்பாய் உள்ளவற்றைத் தாறு மாறாக்கும் தன்மை வாய்ந்ததாயிருக்க. பேராற்றல் பெற்ற தவமுனிவன் சினமாதலின். வானையும் மண்ணையும் தாறுமாறாக்க. எழுந்ததோ என அருகிலுள்ளோர் அஞ்சினர் என்பதாம். உலகில் உள்ள உயிர்கள் யாவும் நாட் செல்லச் செல்ல யமன் வாயிற் போய் இவ்வுலக வாழ்க்கையை முடித்துக் கொள்ளும் இயல்பின. ஆனால். இவன் சினம். உலகத்து உயிர்கள் யாவற்றையும் ஒரே நாளில் இயமன் வாயிற் கொண்டு தள்ள எழுந்ததோ என ஐயுற்றனர் என்பார். ''எண் கீறிய உயிர் யாவையும் யமன் வாய் இட என்றோ'' என்றார். ''கீறிய'' என்னும் சொல் மூன்றடிகளிலும் பொருட் பொருத்தம். சிறக்க அமைந்துள்ளது.*

***1272. போரின்மிசை எழுகின்றது ஓர்***
***மழுவின் சிகை புகைய.***
***தேரின்மிசை மலை சூழ் வரு***
***கதிரும் திசை திரிய.***
***நீரின்மிசை வடவைக் கனல்***
***நெடு வான் உற முடுகி.***
***பாரின்மிசை வருகின்றது ஓர்***
***படி வெஞ் சுடர் படர.***

*__போரின் மிசை எழுகின்றது__ - போர் எழுந்தால் எழுகின்றதாகிய; __ஓர் மழுவின் சிகை புகைய__ - ஒப்பற்றதான அவன் கோடரியின் உச்சியில் புகை எழவும்; __தேரின்மிசைமலைசூழ் வரு கதிரும்__ - தனது ஒற்றைச் சக்கரத் தேரில் ஏறி. மேருமலையை வலம்வரும் கதிரவனும்; __திசை திரிய__ - (இவனது உக்கிரத்தால்) திசைதடுமாறிச் செல்லவும்; __நீரின் மிசை வடவைக்கனல்__ - கடல் நீரின் மேலெழுந்து தோன்றும் தன்மையதான வடவாமுகாக்கினியும்; __நெடுவான் உற முடுகி__ - நீண்ட வானளாவ விரைந்து; __பாரின் மிசை வருகின்றது ஓர்படி__ - (எழுந்து) பூமியின் மேலே (நடந்து) வருகின்றதொரு விதம் போல; __வெஞ்சுடர் படர__ - தன் உடலிலிருந்து வெம்மை ஒளி வீசவும் -*

*யுக முடிவில். கடலில் குதிரை முகவடிவில் எழும் பெருந்தீயால் உலகு அழியும் என்பதும் அத்தீயை வடவா முகாக்கினி என்றழைப்பதும் புராண மரபு ஆதலின். ''நீரின் மிசை வடவைக் கனல் நெடுவானுற முடுகி. பாரின் மிசை வருகின்றது ஒர்படி'' என்றார். புயல் எழுகையில் கடல் அலைகளின் உச்சியில் தீ எழும் என்பதை இன்றைய அறிவியல் ஆந்திரப் புயலில் கண்கூடாகக் கண்டு உணரத் தொடங்கியுள்ளமை குறிக்கொள்ளத்தக்கது. குதிரையினுடைய - கழுத்து வளைவு போல. கடல் அலைகள் உச்சி வளைத்து வருவதால் குதிரை முகத்திற்கு அதனை உவமிப்பது பொருந்துவது காண்க. தம்மைத் தற்குறிப்பேற்ற அணி. சிகை புகைய. திசை திரிய. கனல் நெடுவான் உற முடுகி. வருகின்றது ஓர்படி வெஞ்சுடர் படர எனக் கூட்டுக.*

***1273.  பாழிப் புயம் உயர் திக்கிடை***
***அடையப் புடை படர.***
***சூழிச் சடைமுடி விண் தொட.***
***அயல் வெண் மதி தோற்ற.***
***ஆழிப் புனல். எரி. கால். நிலம்.***
***ஆகாயமும். அழியும்***
***ஊழிக் கடை முடிவில். திரி***
***உமை கேள்வனை ஒப்பான்;***

***பாழிப் புயம்*** - *வலிமைவாய்ந்த தோள்கள்;* ***உயர்திக்கிடை அடையப்புடை படர*** - *உயர்ந்த திக்குகளின் எல்லையிடையே சென்றடையுமாறு பக்கங்கள் விரியவும்;* ***சடைமுடிச் சூழி விண்முடி தொட*** - *சடையை முடித்துக் கட்டிய தன் உச்சி விண்ணின் முகட்டைத் தொடவும்;* ***வெண்மதி அயல் தோன்ற*** - *வெண்ணிறமுள்ள நிலா முடியின் அருகிலே தோன்றவும்;* ***ஆழிப்புனல். எரி. கால். நிலம். ஆகாயமும் அழியும் ஊழிக் கடை முடிவில்*** - *கடல் வடிவான நீரும். நெருப்பும். காற்றும். நிலமும். வானமும் ஆகிய (பஞ்ச பூதங்களும்) அழிகின்ற ஊழியாகிய யுகமுடிவுக் காலத்தில்;* ***திரிஉமை கேள்வனை ஒப்பான்*** - *நடம்புரிகின்ற உமையம்மையின் மணாளனாகிய சிவபெருமானை ஒப்பான் ஆகவும் - ''சடை முடிச்சூழி விண்முடி தொட'' எனப் பொருள் இயைபுக் கேற்ப மாற்றிக் கூட்டுக. ''ஊழிக்கடை முடிவில் தனி உமை கேள்வன்'' என்பதிலும். ''திரி உமை கேள்வன்'' என்பதே பொருள் சிறப்பதால். அப்பாடமே கொள்ளப்பட்டது. தோன்றிய முறைக்கேற்ப. ஆகாயம். கால். அனல். புனல். நிலம் எனக் கூறலே முறை யாயினும் செய்யுளாதலின் பிறழக் கூறப் பெற்றது. ஊழி முடிவில். சிவபெருமான் சர்வ சங்காரனாய். ஊழிக் கூத்தாடுகையில் ஐம் பூதங்களும் அழியும்; அப்போது அம்மைகாண நடமாடுவான் என்பது பற்றி. ''ஆழிப்புனல். எரி. கால். நிலம். ஆகாயமும் அழியும் ஊழிக் கடை முடிவில் திரி உமைகேள்வனை ஒப்ப'' என்றார். புயம் திக்கடைய விரியலும். சடைவிண் தொடுதலும். அயலே வெண்மதி தோன்றலும் சிவபிரானுக்கும் பரசுராமனுக்கும் சிலேடையாயின.*

***1274.  அயிர் துற்றிய கடல் மா நிலம்***
***அடைய. தனி படரும்***
***செயிர் சுற்றிய படையான். அடல்***
***மற மன்னவர் திலகன்.***
***உயிர் உற்றது ஓர் மரம் ஆம் என.***
***ஓர் ஆயிரம் உயர்தோள்***
***வயிரப் பணை துணிய. தொடு***
***வடி வாய் மழு உடையான்;***

***அயிர் துற்றிய கடல் மாநிலம் அடைய*** -மணல்கள் செறிந்த கடல் சூழ்ந்த நிலவுலகம் முழுவதும்; ***தனி படரும்*** - (யார் துணையும் இன்றி) தனித்தே செல்ல வல்ல; ***செயிர் சுற்றிய படையான்*** - வலிமை மிக்க சேனையையுடையவனும்; ***அடல் மறமன்னவர் திலகன்*** - வீரம்மிக்க மன்னர்களுக்கு எல்லாம் திலகம் போன்றவனும் (ஆகிய கார்த்தவீரியர்ச்சுனன்); ***உயிர் உற்றது ஓர் மரம் ஆம் என*** - உயிரோடு கூடிய ஒரு மரம் போல் எதிர் நிற்க. (அவனது); ***ஓர் ஆயிரம் உயர் தோள்வயிரப் பணை துணிய*** - ஓராயிரம் எண்ணிக்கையினையுடைய உயர்ந்த தோள்களாகிய வயிரம் பாய்ந்த கிளைகள் எல்லாம் துண்டுபடுமாறு; ***தொடு வடிவாய் மழு உடையான்*** - எடுத்த கூரிய நுனியுடைய பரசு என்ற போர்க் கருவியை உடையவனும் - கார்த்த வீரியார்ச்சுனன் இராவணனை வென்று சிறை வைத்தவன் ஆதலின். "அடல் மற மன்னர் திலகன்" எனப்பட்டான். ஆயிரங் கைகளையுடைய அவன் பரசுராமனின் மழுவாயுதத்தால் கொல்லப்பட்டான்." ஆயிரம் தடக்கையான் நின் ஐந்நான்கு கரமும் பற்றி. வாய் வழி குருதி பொங்கக் குத்தி வான்சிறையின் வைத்த தூயவன் வயிரத் தோள்கள் துணித்தவன் தொலைந்த மாற்றம் நீயறிந்திலையோ?" (கம்ப. 5203) என்னும் சீதைக் கூற்றால் இதனை உணரலாம். மரமும் ஓரறிவு பெற்ற உயிர் ஆதலால். "உயிர் உற்றதொர் மரமாம்" என்பதற்கு ஆறறிவு உயிர் பெற்றதொர் மரம்போல என்பது பொருளாகக் கொள்க. நூற்றுக்கணக்கான கிளைகளையுடைய மரம்போலக் கைகளையுடையவன் ஆதலின் மரம் எனப்பட்டான். மரத்தின் கிளைகளைக் கோடாரியால் வெட்டிச் சரிப்பதுபோல. அவன் தோள்கள். பரசுராமனின் கோடரியால் வெட்டிச்சரிக்கப்பட்டன வாதலின் 'ஓராயிரம் உயர்தோள் வயிரப் பணை துணிய' என்றார். பணை - கிளை.

***1275. நிருபர்க்கு ஒரு பழி பற்றிட.***
***நில மன்னவர் குலமும்***
***கரு அற்றிட. மழுவாள் கொடு***
***களை கட்டு. உயிர் கவரா.***
***இருபத்தொரு படிகால். இமிழ்***
***கடல் ஒத்து அலை எறியும்***
***குருதிப் புனல்அதனில். புக***
***முழுகித் தனி குடைவான்;***

***நிருபர்க்கு ஒருபழிபற்றிட*** - (உலகாளும்) அரசர்கட்கு எல்லாம் (தன் தந்தையைக் கொன்றதனால்) ஒப்பற்ற பழியொன்று பற்றிக்கொள்ள; ***நிலமன்னவர்குலமும்*** - அவ் அரசர் குலம் முழுவதும்; ***கரு அற்றிட*** - கரு அற்று ஒழியும்படி; ***இருபத்தொரு படிகால்*** - இருபத்தொரு தலைமுறை; ***மழுவாள் கொடு*** - (தன்) மழுவாயுதத்தைக் கொண்டு; ***உயிர் கவரா*** - அவர்களைக் கொன்று உயிர்களை வாங்கி; ***களைகட்டு*** - இங்ஙனம். (பூமியிலுள்ள) களைகளைப் பறித்து; ***எழுகடல் ஒத்து அலை எறியும்*** - (பொங்கி) எழும்கடலைப் போன்று அலை வீசுகின்ற; ***குருதிப் புனல் அதனில்*** - (அம் மன்னர்களின்) இரத்த வெள்ளத்தில்; ***புக முழுகித் தனி குடைவான்*** - (தன்னுடல்) அமிழும்படி மூழ்கித் தனியே நீராடுபவனும் -

*பரசுராமன் கார்த்த வீரியார்ச்சுனனைக் கொன்றமைக்காக. கார்த்த வீரியனின் மக்கள். பரசுராமனின் தந்தையைக் கொன்று ப ழிவாங்கினர். பரசுராமனின் தாய். கணவன் இறந்தவுடன் இருபத்தொரு முறை. மார்பில் அடித்து அழுததற்காக. இருபத்தொரு தலைமுறை அரச குலத்தைப் பழிவாங்குவேன் எனப் பரசுராமன் சபதமிட்டதாகப் பாகவதம் கூறும். அரசர்கள் இரத்தத்தில் சியமந்த பஞ்சகம் எனும் ஐந்து இரத்தக் குளங்களை ஏற்படுத்தி. பரசுராமன் அதில் குளித்தான் ஆதலால். "இமிழ் கடல் ஒத்து அலை எறியும் குருதிப் புனல் அதனில் புக முழுகி" என்றார். ஓர் அரசன் ஒரு நிரபராதியைக் கொன்றதனால் வந்த பழி. அரச குலம் முழுவதையும் பாதித்த செயலுக்கு வருந்துபவராய். "நிருபர்க்கு ஒரு பழிபற்றிட என்றார்" படிகால் - தலை முறை "ஏழேழ் படிகால் எமையாண்ட எம்மான்" (1086 -9) என்பது தேவாரம்.*

***1276. கமை ஒப்பது ஓர் தவமும். சுடு***
***கனல் ஒப்பது ஓர் சினமும்;***
***சமையப் பெரிது உடையான்; நெறி***
***தள்ளுற்று. இடை தளரும்***
***அமையத்து. உயர் பறவைக்கு இனிது***
***ஆறு ஆம் வகை. சீறா.***
***சிமையக் கிரி உருவ. தனி***
***வடி வாளிகள் தெரிவான்;***

***கமை ஒப்பது ஓர்தவமும்*** *- பொறுமை என்னும் குணமே (வடிவு பெற்றது) எனலாம் படியான தவத்தையும்;* ***சுடுகனல் ஒப்பது ஓர் சினமும்*** *- சுடுகின்ற தீயே (வடிவு பெற்றது) எனலாம் படியான சீற்றத்தையும்;* ***பெரிதும் சமைய உடையான்*** *- மிகவும் பொருந்தியிருப்பவனும்;* ***எதிர் தளர்வுற்று இடை தவிரும் அமையத்து*** *- (மானச வாவிக்குச் செல்லுகையில்) எதிரே (பறக்கும் வழியை) இடையே தவற விட்டுத் தளர்ந்த போது;* ***உயர் பறவைக்கு*** *- உயர்ந்த (அன்னப்) பறவைகட்கு;* ***இனிது ஆறு ஆம் வகை*** *- இனிய வழியாகும்படி;* ***சீறா*** *- சீற்றம் கொண்டு;* ***சிமையக் கிரி உருவ*** *- சிகரத்தையுடைய (கிரௌஞ்ச) மலையைத் துளைத்து ஊடுருவிச் செல்லுமாறு;* ***தனி வடிவாளிகள்*** *- ஒப்பற்ற கூரிய அம்புகளைத்;* ***தெரிவான்*** *- தெரிந்து ஏவ வல்லானும் -*

*பரசுராமனும் முருகப் பெருமானும். சிவ பிரானிடம் வில்வித்தை பயின்று முடித்த பின்பு. ஆற்றல் அறிய. கிரௌஞ்ச கிரியின் சிகரமொன்றைத் துளைக்குமாறு. சிவபெருமான் ஆணையிட. முருகன் தயங்குகையில். பரசுராமன் தயங்காது கணையைச் செலுத்தி. அச்சிகரத்தைத் துளைக்க. பருவ மாற்றங்களில் இடம் மாறும் அன்னம் முதலிய பறவைகள் செல்வதற்கு. இவன் சிகரந் துளைத்த வழி மிகவும் உதவிற்று என்னும் கதையை உட்கொண்டது பின் இரண்டடியில் உள்ள கருத்து ஆகும். இவன் தவம் புரிவது பொறுமைக்குணமே தவம் புரிவது போலிருந்தது என்பார். கமை ஒப்ப தோர்தவமும் என்றார். கமை - பொறை. வெகுண்டால் தீப்போல் வெகுள்வான்; பொறுத்தால் பொறையே ஆவான் என இவன் இருகுணங்களின் எல்லையாகவே இருந்தமை குறிப்பித்தவாறு. பரசுராமன் கிரௌஞ்ச கிரியைத் துளைத்து. பறவைகட்கு வழியமைத்த அரிய செய்தி முதல் நூலாம் வான் மீகத்தில் இல்லை என்பர்.*

***1277. சையம் புக நிமிர் அக் கடல்***
***தழுவும்படி சமையவான்;***
***மையின் உயர் மலை நூறிய***
***மழுவாளவன் வந்தான்.***
***ஐயன்தனை அரிதின் தரும்***
***அரசன் அது கண்டான்.***
***'வெய்யன் வர நிபம் என்னைகொல்?'***
***என வெய்துறும் வேலை.***

***சையம் புக*** *- மலையும் தன் அடித்தளத்தில் புகுந்து;* ***நிமிர் அக்கடல்*** *- ஆழுமாறு அலை உயர்ந்திருந்த அக்கடலை;* ***தழுவம்படி சமைவான்*** *- (தன் அடியைத்) தன் ஆணையை ஏற்குமாறு செய்பவனும்;* ***மையின் உயர் மலை நூறிய*** *- மேகம் தழுவும் கிரௌஞ்ச மலையின் செருக்கு ஒழித்தவனும் ஆகிய;* ***மழுவாளவன் வந்தான்*** *- மழுவென்னும் பரசு ஆயுதத்தையுடைய பரசுராமன் வந்தான்;* ***ஐயன்தனை அரிதின் தரும் அரசன்*** *- (யாவர்க்கும்) தலைவனான இராமபிரானை. அருமையாக (உலகிற்குத்) தந்த தசரதன்;* ***அது கண்டான்*** *- அதனைப் பார்த்தவனாய்;* ***வெய்யன் வர*** *- கொடியனான இவன் (இங்கு) வர;* ***நிபம் என்னைகொல் என*** *- காரணம் என்னவோ என்று;* ***வெய்துறும் வேலை*** *- வெப்பப் பெருமூச்சு விடும் காலத்தில் -*

பரசுராமன். தான் வென்ற உலகம் முழுவதையும் காசியப முனிவனுக்குத் தானஞ் செய்துவிட. பரசுராமனைக் கருவபங்கஞ் செய்ததற்காக. "தானஞ் செய்த இடத்தில் வசிக்கலாமோ?" எனக் காசியபர் கேட்க. பரசுராமன் வருணன் அனுமதியுடன் சைய மலையிலிருந்து தன் கோடரிப்படையை வீச. அது விழுந்த இடம் வரையிலும் கடல் விலகிச் சென்றது. அவ்விடத்தைத் தனக்கு இருப்பிடமாகக் கொண்டவன் பரசுராமன் என்பது முன்னிரண்டடியில் உள்ள பொருள். இன்றும் கேரளம். "பரசுராம க்ஷேத்திரம்" என அம்மக்களால் வழங்கப்படுகிறது. பரசுராமன் பல கொடுமைகளைச் செய்திருந்தமையால். அவனைக் கண்ட தயரதன். "வெய்யன்" என்று துடித்தான் என்க. காசியப முனிவருக்குத் தானஞ் செய்துவிட்டு அந்நிலத்தில் இராத் தங்குவதில்லை என மலையில் சென்று தங்கி. 'இனி அரசர்களைக் கொல்வதில்லை' என்று தவமேற் கொண்ட பரசுராமன் இப்படி வெய்யனாய் வரக் காரணம் என்னவோ என்று தசரதன் திகைத்தான் என்க.

எதிரே வந்த பரசுராமனை. 'யார்?' என. இராமன் கேட்டல்

*1278.* **பொங்கும் படை இரிய. கிளர்**
**புருவம் கடை நெரிய.**
**வெங் கண் பொறி சிதற. கடிது**
**உரும்ஏறு என விடையா.**
**சிங்கம் என உயர் தேர் வரு**
**குமரன் எதிர். சென்றான்.**
**அம் கண் அரசவனும் இவன்**
**"ஆரோ?" எனும் அளவில்.**

**பொங்கும் படை இரிய** - மகிழ்ந்து செல்கின்ற படைகள் பயந்தோடும்படி; **கிளர் புருவம் கடை நெரிய** - பரசுராமன் சினத்தால் உந்திய புருவங்கள் நுனியில் நெளியவும்; **வெங்கண் பொறிசிதற** - கொடுமையுடைய கண்களில் நெருப்புப் பொறி சிதறவும்; **கடிது உரும் ஏறு என விடையா** - விரைவாக (விழும்) பேரிடி போலப் பெருஞ்சினம் கொண்டு; **உயர்தேர் வரு சிங்கம் என** - உயர்ந்த தேரில் ஏறி வரும் சிங்கம் போல; **குமரன் எதிர் சென்றான்** - சக்கரவர்த்தித் திருக்குமாரனான இராமனின் எதிரே சென்றான்; **அங்கண் அரசு அவனும்** - அழகிய கண்களையுடைய (அனைவர்க்கும்) தலைவனான இராமனும்; **இவன் ஆரோ? எனும் அளவில்** - இவன் யாரோ என்று வினாவும் அப்போதே. (தசரதன்) (அரசன் அடிமேல் உறவிழலும் எனும் அடுத்த பாடலின் தொடரோடு முடியும்.)

புருவ நுனி நெளிதலும். கண் பொறி பறத்தலும் ஆகிய சினத்தின் மெய்ப்பாடுகளைக் கண்டு படைகள் தாம் அஞ்சி ஓடினவே தவிர. இராமன் மகிழ்வோடே. அச்சம் அணுத்துணையும் இன்றி எதிர்கொண்டான் எனக் காட்ட "அங்கண் அரசு அவனும்" என்றார். அச்சம் கண்ணில் விளங்குமாதலின். விடையா - விடைத்து. பெருஞ்சினம் கொண்டு. வினைஎச்சம் "விடைத்து வரும் இலங்கைக் கோன்" (தேவா: 159:10) எனல் காண்க.

தசரதன் வணங்க

***1279. அரைசன். அவனிடை வந்து.***
***இனிது ஆராதனை புரிவான்.***
***விரை செய் முடி படிமேல் உற***
***அடிமேல் உற விழவும்.***
***கரை சென்றிலன் அனையான். நெடு***
***முடிவின் கனல் கால்வான்;***
***முரைசின் குரல் பட. வீரனது***
***எதிர் நின்று இவை மொழிவான்;***

***அரைசன்*** - *தசரதச் சக்கரவர்த்தி;* ***அவன் இடை வந்து*** - *பரசுராமனிடத்திலே வந்து;* ***இனிது ஆராதனை புரிவான்*** - *இனிய முறையிலே அவனுக்கு அதிதி பூசை புரிந்து;* ***விரை செய் முடி படிமேல் உற*** - *மணங்கமழும் (தனது) தலை. பூமியிலே படுமாறு;* ***அடிமேல் உற விழவும்*** - *(பரசுராமனின்) திருவடிகளிலே வீழ்ந்து வணங்கிய அளவில்;* ***அனையான்*** - *அப் பரசுராமன்;* ***கரை சென்றிலன்*** - *(தனது கோபக் கடலுக்கு ஒரு) கரை காணாதவனாய்;* ***நெடு முடிவின் கனல் கால்வான்*** - *யுக முடிவில் எழும் வடவைத் தீயின் வெப்பத்தை உமிழ்பவனாய்;* ***முரைசின் குரல்பட*** - *முரைசின் குரலுக்கு ஒப்பாக;* ***வீரனது எதிர் நின்று இவை மொழிவான்*** - *இராமபிரானுக்கு எதிரில் நின்று பின்வருமாறு கூறலானான்.*

*"கரை சென்றிலன்" என்றதற்கேற்ப. சினம் கடல் ஆயிற்று. ஏகதேச உருவகம். தயரதன் பரசுராமனின் கொடுமையை எண்ணி. அருமை மைந்தன் இராமனுக்கு அவனால் தீங்கேதும் நிகழ்ந்துவிடக் கூடாவண்ணம் அவன் சினம் தணிக்க. ஆவனவெல்லாம் புரியவும். அவன் சினம் தணிவதற்கு மாறாக. கரை காணா அளவிற்கு மிகுந்தது என்பார். "கரை சென்றிலன்;நெடுமுடிவின் கனல் கால்வான்" என்றார். "காவாக்கால் தன்னையே கொல்லும் சினம்" (திருக். 305) ஆதலின். அச்சினம் அவனுக்கு நெடுமுடிவைத் தந்தது எனும் பொருளும் தோன்ற" நெடுமுடிவின் கனல் கால்வான்" என்றார்.*

*பரசுராமன் சினவுரை*

***1280. 'இற்று ஓடிய சிலையின் திறம்***
***அறிவென்; இனி. யான் உன்***
***பொன் தோள் வலி நிலை சோதனை***
***புரிவான் நசை உடையேன்;***
***செற்று ஓடிய திரள் தோள் உறு***
***தினவும் சிறிது உடையேன்;***
***மற்று ஓர் பொருள் இலை; இங்கு இது***
***என் வரவு' என்றனன் உரவோன்.***

***யான். இற்று ஓடிய சிலையின் திறம் அறிவென்*** -நான். (முன்னமே நீ) முறித்து ஒழித்த வில்லின் திறத்தை (அது முன்பே முறிந்திருந்தது என்பதை) அறிவேன்; ***இனி உன் பொன் தோள்வலி நிலை*** - இப்பொழுது நான் உன்னுடைய அழகிய தோள் வலிமையின் நிலையை; ***சோதனை புரிவான் நசை உடையேன்*** - சோதித்து அறிய விருப்பம் சிறிது உடையேன்; ***செற்று*** - (அரசர்களை) அழித்து; ***ஓடிய*** - மேம்பட்ட; ***திரள் தோள் உறு தினவும்*** - திரண்ட தோள்களில் பொருந்தின தினவும் சிறிது எனக்கு உண்டு; ***இங்கு இது என் வரவு மற்று ஓர் பொருள் இ(ல்)லை*** - இங்கு எனது வருகைக்குக் காரணம் இதுவே வேறு ஒரு காரணமும் இல்லை என்று; ***உரவோன் என்றனன்*** - வலிமை மிக்க பரசுராமன் கூறினான் சிவ பெருமான் வில் முன்பே முறிந்தவில்;அதனை முறித்ததற்காகக் கர்வங் கொள்ளாதே எனக் குற்றம்கூறும் பரசுராமன் தான் மிகப்பெருங் கர்வத்தோடு பேசுகிறான்; கர்வங் கொள்பவர் தன் குற்றம் அறியார் என்பது குறித்தார். புரிவான் - பொருட்டுப்பொருளில் வந்த வினையெச்சம். உன் தோள் வலிவைச் சோதனையிடவும். என் தோள் தினவைச் சிறிது அடக்கிக் கொள்ளவும் ஆகிய இரு செயல்களுக்காகவே இங்கு வந்தேன்; வேறோர் காரியமில்லை என்கிறான் பரசுராமன்.

## பரசுராமனிடம் தயரதன் அபயம் வேண்டல்

***1281. அவன் அன்னது பகரும்***
***அளவையின். மன்னவன் அயர்வான்.***
***'புவனம் முழுவதும் வென்று. ஒரு***
***முனிவற்கு அருள்புரிவாய்!***
***சிவனும். அயன். அரியும் அலர்;***
***சிறு மானிடர் பொருளோ?***
***இவனும். எனது உயிரும். உனது***
***அபயம். இனி' என்றான்.***

***அவன்*** - அந்தப் பரசுராமன்; ***அன்னது*** - அவ்வாறு; ***பகரும் அளவையின்*** - கூறியபொழுதில்; ***மன்னவன்*** - தயரதச் சக்கரவர்த்தி; ***அயர்வான்*** - மனந் தளர்வானாய்; ***புவனம் முழுவதும் வென்று*** - 'உலகாளும் மன்னர்கள் அனைவரையும் வென்று; ***ஒரு முனிவற்கு அருள்புரிவாய்*** - ஒப்பற்ற முனிவனாகிய காசியபனுக்குத் தானமாக அருளியவனே!; ***சிவனும் அயன். அரியும் அலர்*** - சிவன். பிரமன். திருமால் ஆகிய மூவரும் (உனக்கு ஒரு பொருள்) அல்லர்; ***சிறு மானிடர் பொருளோ?*** - இச்சிறிய மானிடர்கள் உனக்கு ஒரு பொருள் ஆவரோ? (ஆகார்); ***'இனி இவனும் எனது உயிரும் உனது அபயம்' என்றான்*** - 'இப்போது. (என் மகனாகிய) இந்த இராமனும். என்னுடைய உயிரும் உனது அடைக்கலப் பொருள்கள்' (காத்தருள்) என்றான்.

வீரத்தால் வென்ற உலகம் முழுவதையும் தானமாகக் கொடுத்திட்ட. நீ. இப்போது எங்கள் உயிர்கள் இரண்டையும் தானமாகத் தந்தருளவேண்டும் என தசரதன் வேண்டினான். அயர்வான் - முற்றெச்சம்.

*1282.* ***'விளிவார் விளிவது. தீவினை***
***விழைவாருழை அன்றோ?***
***களியால். இவன் அயர்கின்றன***
***உளவோ? - கனல் உமிழும்***
***ஒளி வாய் மழு உடையாய்!-***
***பொர உரியாரிடை அல்லால்.***
***எளியாரிடை வலியார் வலி***
***என் ஆகுவது?' என்றான்.***

***கனல் உமிழும் ஒளிவாய் மழு உடையாய்!*** *- 'தீயைச் சிந்தும் ஒளியமைந்த மழு என்னும் படையை ஏந்தியவனே!;* ***விளிவார் விளிவது*** *- சினங் கொள்வார் சினங் கொள்வது;* ***தீவினை விழைவார் உழை அன்றோ?*** *- தீவினைகளை விரும்புவோரிடம் அன்றோ?;* ***இவன் களியால் அயர்கின்றன உளவோ?*** *- இந்த இராமன் (கல்வி. செல்வம். அதிகாரம் முதலியவற்றால் வரும்) செருக்கினால் அறிவு தளர்ந்து நின்பால் புரிந்த தீங்குகள் (எவையேனும்) உள்ளனவோ?;* ***பொர உரியாரிடை அல்லால்*** *- போரிடற்கு உரிய ஆற்றல் உடையாரிடத்து அன்றி;* ***எளியாரிடை*** *- வலிமையற்ற எளியோரிடத்தே;* ***வலியார் வலி என் ஆகுவது? என்றான்*** *- வலியோரின் ஆற்றல் என்ன பயனைச் செய்யவல்லது' என்றான் (தசரதன்). விளிவு: கடுங்கோபம். ''செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான்'' (திருக். 301) ''செல்லா இடத்துச் சினம் தீது'' (திருக். 302) என்ப ஆதலான். நின்கடுங்கோபம் அல்லா இடத்தில் செல்கின்றது என்றும் தீவினையே புரியாத இவனிடம் உள்ள செருக்கின் காரணம் ஆகச் சினமுறலாமே எனின் ''களியால் இவன் அயர்கின்றன உளவோ?'' என்றும் கெஞ்சிக் கேட்கிறான் தசரதன். போர் எனும் சொல்லே பொரு எனும் சொல்லடியாகப் பிறந்தது. பொருதல்: ஒத்திருத்தல் (பொருநர்: ஒத்த வேடம் இட்டிருப்போர்). நீ உனக்குச் சமமாகாத ஒரு பாலகனிடம் போரிட நினைப்பது உன் பேராற்றற்கு என்றும் தீராத இழுக்காக முடியும் என்பான். ''பொர உரியாரிடையல்லால். எளியாரிடை வலியார் வலி என்னாகுவது?'' என்றான். ''மாறன் மையின் மறம் வாடும் என்று இளையோரையும் எறியான்'' (சிந்தா. 2661) என்பார் பிறரும்.*
*20*

*1283.* ***'நனி மாதவம் உடையாய்! "இது***
***பிடி நீ" என நல்கும்***
***தனி நாயகம். உலகு ஏழையும்***
***உடையாய்! இது தவிராய்;***
***பனி வார் கடல் புடைசூழ் படி***
***நரபாலரை அருளா.***
***முனிவு ஆறினை; முனிகின்றது***
***முறையோ?' என மொழிவான்.****

***'நனி மாதவம் உடையாய்!*** - 'மிக்க பெருந்தவம் உடையவனே!; ***"நீ இது பிடி" என*** - "நீ இந்தப் பூமிதானத்தைப் பிடி" என்று; ***நல்கும்*** - காசிபனுக்குக் கொடுத்திட்டதால்; ***உலகு ஏழையும் தனி நாயகம் உடையாய்!*** - ஏழு தீவுகளின் வடிவாக உள்ள பூவுலகம் முழுவதிலும் (புகழின்) தனியாட்சி கொண்டவனே!; ***இது தவிராய்!*** - இப்போது. எம்மேல் கொண்டுள்ள கோபத்தைத் தவிர்ப்பாயாக!; ***பனிவார் கடல் புடை சூழ் படி*** - குளிர்ந்த நீண்ட கடல் நாற்புறமும் சூழ்ந்துள்ள உலகில் வாழும்; ***நரபாலரை அருளா*** - மக்களைக் காக்கும் மன்னர்களாகிய (எம் போன்றோர் மேல்) அருள் செய்து; ***முனிவு ஆறினை*** - (இனிக் கொல்வதில்லை என்று) கோபந் தணிந்தாய்; ***முனிகின்றது முறையோ?' என மொழிவான்*** - (மீண்டும் அரசர்களாகிய) எங்களைச் சினப்பது நீதி முறையாகுமா?' எனக் கேட்டு மேலும் கூறுவான் வேந்தன்.

*தான் மன்னரை வென்று கொண்ட நாடுகள் அனைத்தையும் துச்சமாக மதித்த. காசிபருக்கு. "இந்தா பிடி நீ" எனக் கொடுத்த கொடையால் வந்த புகழால். ஏழ் உலகிலும் இவன் புகழ் தனியாட்சி செலுத்திற்று என்பதாம். ஏழுலகையும் தனியாளும் உரிமையைப் பெற்றிருந்தவனே! என உடையாய் எனும் குறிப்பு வினைமுற்றை. இறந்தகாலப் பொருளில் விரிக்கினுமாம். "இது பிடி நீ" என்றது கொடுத்த விரைவினைக் குறித்து நின்றது. "நரபாலரையருளா" என்றது. காசிபருக்குத் தரணியைத் தானமாக ஈந்து. "இனி மன்னரைக் கொல்லேன்" எனத் தவஞ் செய்யச் சைய மலைக்குச் சென்றபோது உரைத்ததைக் குறித்து நின்றது. அருளா: அருளி. செய்யா எனும் எச்சம். அருள் புரிந்து சென்றவர். சொன்ன சொல்லைக் கடந்து. சினம் புரிந்து வருவது நீதியாகாது என்பான். "அருளா முனிவாறினை: முனிகின்றது முறையோ?" என்றான்.21*

***1284. 'புறன் நின்றவர் இகழும்படி.***
***நடுவின் தலை புணராத்***
***திறன் நின்று. உயர் வலி என்? அது***
***ஒர் அறிவின் தகுசெயலோ?***
***அறன் நின்றதன் நிலை நின்று. உயர்***
***புகழ் ஒன்றுவது அன்றோ.***
***மறன் என்பது? மறவோய்! இது***
***வலி என்பது வலியோ!***

***புறன் நின்றவர்*** - *அருகிலிருப்பவர்கள்;* ***இகழும்படி*** - *இகழ்ந்து கூறும்படி;* ***நடுவின் தலை புராணத்திறன் நின்று*** - *நடுவு நிலையில் பொருந்தாத வகையில் நின்று;* ***உயர் வலி என்?*** - *உயர்கின்ற வலிமை (தனக்கும் உலகுக்கும்) என்ன பயனைத் தருவதாம்? (தராது);* ***அது ஒர் அறிவின் தகு செயலோ?*** - *அது ஒப்பற்ற அறிவிற்குத் தக்க செயல் எனப்படுமோ? (படாது);* ***அறன் நின்றதன் நிலை நின்று*** - *(உலகில்) (நிலைத்த) அறம் நிற்கின்ற நிலை எதுவோ அதன் வழியிலே நிலைத்து நின்று;* ***உயர் புகழ் ஒன்றுவது அன்றோ*** - *உயர்ந்த புகழுடன் பொருந்துவது அன்றோ;* ***மறன் என்பது*** - *வலிமை (வீரம்) என்று சிறப்பித்துக் கூறப்படுவது?;* ***மறவோய்*** - *வீரனே!: இது - (சரணமடைந்த) எம்மை யழிக்க நினைக்கும் இச்செய்கை அறமுமன்று நீதியுமன்று: வலியென்பது வலியோ? வலிமையென்று கூறத்தக்க வலிமை யாகிடுமா? (என்று கேட்டான் தசரதன்).*

*எது வலிமை? எது அறிவு? எது உயர் புகழ்? எது மறம்? எனும் நான்கு வினாக்கட்கு இப்பாடலில் அழகிய விளக்கம் அளித்துள்ளார். நீதியினின்றும் வழுவாது அயலிருப்பார் இகழ இயலாதவாறு உயர்ந்து நிற்பது வலிமை: நீதி வழுவாது. அயலார் புகழுமாறு உயரத்தக்க வழிகாட்டுவது அறிவு: அறம் எவ்வழிச் செல்கின்றதோ அவ்வழியில் நிலைத்து நிற்பது உயர் புகழ்: அறவழியில் நின்று உயர்புகழ் எய்துமாறு புரியும் வலிய செயல்கள் மறம். சரண் என்று அபயம் புக்காரை ஒழிக்க முந்துவது வலிமையும் அன்று: தக்க அறிவும் அன்று: உயர்புகழும் அன்று: அறமும் அன்று: மறமும் அன்று எனத் தயரதன் பரசுராமனிடம் வேண்டியவாறாம். நடுவு - ஒருபாற் கோடாத நீதியறம். "சீர்தூக்கும் கோல் போல் அமைந்து ஒரு பாற் கோடாமை சான்றோர்க்கு அணி" (திருக்.118) யாக இருக்க. சினம் ஏதுவாக. 'அரசரொடு போர் இடேன்' என்ற வாய்மையையும். சரணடைந்தாரைக் காக்காது அழிக்க நினைக்கும் பெரும் பாவத்தையும் புரியக் கருதும் பரசுராமன் அறத்தின்பால் நிலைத்து நிற்காதவன் ஆனான். "சென்றவிடத்தால் செலவிடா தீது ஒரீஇ நன்றின்பால் உய்ப்பது" (திருக். 422) அறிவின் செயல் ஆதலால். நன்றின் பால் உய்க்காத இவன் செயல். "அறிவின் தகு செயலோ" எனக் கேட்கப்பட்டது.*

***1285. 'சலத்தோடு இயைவு இலன். என் மகன்;***
***அனையான் உயிர் தபுமேல்.***
***உலத்தோடு எதிர் தோளாய்! எனது***
***உறவோடு. உயிர் உகுவேன்;***
***நிலத்தோடு உயர் கதிர் வான் உற***
***நெடியாய்! உனது அடியேன்;***
***குலத்தோடு அற முடியேல்; இது***
***குறை கொண்டனென்" என்றான்.***

***'என் மகன் சலத்தோடு இயைபு இலன்*** - 'என் மகனாகிய இராமன் (உன்னோடு) பகைமை பூண்டவன் அல்லன்; ***அனையான் உயிர் தபுமேல்*** - அவனுடைய உயிர் உடலை விட்டு ஒழியுமாயின்; ***உலத்தோடு எதிர் தோளாய்*** - திரண்ட கல்லை ஒத்த தோளானே; ***எனது உறவோடு*** - என்னுடைய சுற்றத்தாரோடும்; ***நிலத்தோடு உயர் கதிவான்உற உயிர் உகுவேன்*** - என் நாட்டாரோடும் உயர் நிலையுடைய வானுலகையடையுமாறு என் உயிரை ஒழித்து இறப்பேன்; ***நெடியாய்*** - உயர்ந்தோங்கியவனே! உனது அடியேன் - நான் உன் அடியில் சரண் என்று கிடக்கிறேன்; ***குலத்தோடு அறமுடியேல்*** - என் குலத்தோடு என்னை அழித்தொழித்து விடாதே!; ***இது குறை கொண்டனன்' என்றான்*** - இவ் வேண்டுகோளை உன்னிடம் விண்ணப்பித்துக் கொண்டேன்' என்று (இரந்து) வேண்டினான் (தசரதன்).

*பகைவரையும் மன்னிப்பது தெய்வப்பண்பு; பகைவரை அழிக்க நினைப்பது மானுடப் பண்பு; பகையாதவரையும் அழிக்க நினைப்பது மிகத் தாழ்ந்த அசுரப்பண்பு ஆதலின். அதனை நினைவூட்டுவான் போல. ''சலத்தோடு இயைவிலன் என்மகன்'' என்றான். சலம்: பகைமை. இவனை மட்டும் அழித்தல் உன்னால் இயலாது: இவன் அழிவோடு என் அழிவும். என் நாட்டு மக்கள் அழிவும் பின்னிப் பிணைந்துள்ளது. ''குலத்தோடு அற முடியேல்'' என நெஞ்சுருக வேண்டினான். சினத்தோடு நிமிர்ந்து நிற்கும் பரசுராமன் பாதங்களின் மேல் தசரதன் கவலையால் சுருங்கி வீழ்ந்து கிடப்பதை ''நெடியாய்! உனது அடியேன்'' எனச் சொல் ஓவியமாக்கிக் காட்டுகிறார். உலம்: திரண்ட கல். தபுத்தல்: அழித்தல்.*

*மன்னன் உரையை மதியாது பரசுராமன் மேற் செல்லல்*

***1286. என்னா அடி விழுவானையும்***
***இகழா. எரி விழியா.***
***பொன் ஆர் கலை அணிவான் எதிர்***
***புகுவான் நிலை உணரா.***
***தன்னால் ஒரு செயல் இன்மையை***
***நினையா. உயிர் தளரா.***
***மின்னால் அயர்வுறும் வாள் அரவு***
***என. வெய்துறல் உற்றான்.***

***என்னா*** - என்று சொல்லி வேண்டி; ***அடி விழுவானையும்*** - (தன்) பாதங்களில் வீழ்ந்து வணங்குகின்ற தசரதனையும்; ***இகழா*** - இகழ்ந்து (ஒரு பொருளாக மதியாமல்); ***எரி விழியா*** - தீ சிந்துமாறு விழித்து நோக்கி; ***பொன் ஆர்கலை அணிவான் எதிர்*** - பொன்னாலாகிய பீதாம்பர ஆடையை அணிந்துள்ள இராமபிரானது எதிரிலே; ***புகுவான் நிலை உணரா*** - செல்பவனாகிய பரசுராமனின் (கொடிய) நிலைமையையுணர்ந்து; ***தன்னால் ஒரு செயலின்மையை நினையா*** - தன்னால் இயலக்கூடிய செயல் ஒன்றும் இல்லாமையை நினைத்து; ***உயிர் தளரா*** - உயிர் தளர்ந்து; ***மின்னால் அயர்வுறும் வாள் அரவு என*** - மின்னலினால் தளர்ச்சியுறும் கொடிய பாம்பு போன்று; ***வெய்துறல் உற்றான்*** - (மனம்) வெதும்புதல் அடைந்தான் (தசரதன்)

*என்னா. இகழா. விழியா. உணரா. நினையா. தளரா என்னும் செய்யா என்னும் எச்சங்கள் உடன்பாட்டுப் பொருளைத் தந்து உற்றான் எனும் வினை முடிபு கொண்டன. அடிவிழுவானையும் என்பதில் உள்ள உம்மை அடிவிழுவானைப் புறக்கணிக்கவும் ஒரு முனிவனால் எப்படி முடிந்தது எனும் வியப்புத் தோன்றுமாறு நின்றது. சம்பராசுரனை வென்ற தோளாற்றல் வாய்ந்த தசரதன். தவத்தின் ஆற்றலின் முன் ஒன்றும் செய்ய இயலாமல் தவித்தான் என்பது தோன்ற. "தன்னால் ஒரு செயலின்மையை நினையா" என்றார். மின்னலின் ஒளி பாம்புகளை மிகப் பாதிக்கும் என்பது மரபு.*

***1287. மானம் மணி முடி மன்னவன்.***
***நிலை சோர்வுறல் மதியான்.***
***தான் அந் நிலை உறுவான் உறு***
***வினை உண்டது தவிரான்;***
***'ஆன(ம்) முடை உமை அண்ணலை***
***அந் நாள் உறு சிலைதான்***
***ஊனம் உளது; அதன் மெய்ந்நெறி***
***கேள்!' என உரைப்பான்;***

***மானம் மணிமுடி மன்னவன்** - மானத்தையே அணியாகக் கொண்டமணி முடி சூடிய தசரதன்; **நிலை சோர்வுறல் மதியான்** - (அந்த மானம் நிலை தளர்வது எண்ணி) மயங்கும் நிலையடைவதைச் (சிறிதும்) கருதாதவன் ஆனான் (பரசுராமன்); **அந்நிலை தான் உறுவான் உறுவினை உண்டது தவிரான்** -அந்த நிலையை (விரைவில்) தான் அடைய இருப்பதற்கான ஊழ்வினை உண்டாயிருப்பதை விலக்க வகையற்றவனாய்; **ஆனம் உடை** - எருதை வாகனமாகவுடைய; **உமை அண்ணலை** - உமையவள் கேள்வனாகிய சிவ பெருமானை; **அந்நாள் உறுசிலை தான்** - அக்காலத்தில் அடைந்த வில்லானது; **ஊனம் உளது** - குறைபாடுடையது; **அதன் மெய்ந் நெறிகேள்!** - (அதனால் அதனை முறித்துவிட்டாய்) அந்த வில் வந்த உண்மையான வழியை (இப்போது உரைக்கிறேன்) கேள்! என உரைப்பான் - என்று பரசுராமன் கூறத் தொடங்கினான்: அரசர்கட்கு. மானமே அணியாக உடையவர் எனும் பொருளுடைய "மானாபரணர்" என ஒரு பெயருள்ளமை கருதி. "மானம் அணி முடி மன்னவன்"என்றார். செய்யுளாதலின் ஓசை யின்பங்கருதி. "மானம் அணி" என்பது "மானம்மணி" என விரிந்து வந்தது. மூன்றாம் அடியில் "மானம் உடை" என்பதும் இவ்வாறே "மானம்முடை" என ஆயிற்று. பரசுராமன் பின்வருவதை முன் அறியும் திறம்வல்ல முனிவன் ஆக இருந்தும் தனக்குச் சில விநாடிகளின் பின் வரவுள்ள தீமையையும் அகங்காரத்தால் அறியாதவன் ஆனான் என்பார். "தான் அந்நிலையுறுவான்......அது தவிரான்" என்றார்.*

*1288.* **'ஒரு கால் வரு கதிர் ஆம் என**
**ஒளி கால்வன. உலையா**
**வரு கார் தவழ் வட மேருவின்**
**வலி சால்வன. வையம்**
**அருகா வினை புரிவான் உளன்:**
**அவனால் அமைவனதாம்**
**இரு கார்முகம் உள; யாவையும் ஏலாதன. மேல் நாள்;**

***ஒருகால் வரு கதிராம்*** - *ஒற்றைச் சக்கரத்தினையுடைய தேரின் மீது வருகிற சூரியன்;* ***என ஒளிகால்வன*** - *என்னுமாறு ஒளி விடுவனவும்;* ***உலையா*** - *(எளிதில்) அழிக்கப்படாதனவும்;* ***வருகார் தவழ் வடமேருவின் வலி சால்வன*** - *வானில் தவழும் மேகம் உலாவும் வடமேரு மலையினது வலிமை பொருந்தியனவும்;* ***வையம் அருகா வினை புரிவான் உளன் அவனால் அமைவனதாம்*** - *நிலவுலகத்தார் நெருங்குதற்கும் இயலாத (தெய்வத் தன்மையுள்ள) சிற்பத் தொழிலைப் புரிபவனான விசுவ கர்மாவினால் (வடிவு) அமைக்கப்பட்டனவும்;* ***யாவையும் ஏலாதன*** - *எவற்றையும் தமக்கு உவமையாக ஏற்காதவையுமாகிய;* ***இருகார் முகம்*** -*இரண்டு விற்கள்;* ***மேல்நாள் உள*** - *முற்காலத்தில் இருந்தன.*

*''ஒருகால் வரு கதிர்'' என்பதில் கால் என்பது சினையாகுபெயராய். ஒரு காலையுடைய சூரியன் தேரினைக் குறித்தது. வையம் - இடவாகு பெயராய் வையத்து மக்களைக் குறித்து நின்றது. ''அவன் திறமைக்குப் பக்கத்தில் யாரும் செல்ல முடியாது'' எனும் வழக்கையும்கொண்டு. ''வையம் அருகா வினைபுரிவான்'' என்று விற்களையுருவாக்கிய விசுவகர்மனைப் புகழ்ந்தார்.*

*-indent: 30px">இது முதல் ஆறு கவிகள் - சிவதனுசின் வரலாறு.*

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

*1289.* **'ஒன்றினை உமையாள் கேள்வன்**
**உவந்தனன்; மற்றை ஒன்றை நின்று உலகு அளந்த**
**நேமி நெடிய மால் நெறியின் கொண்டான்; என்று இது**
**உணர்ந்த விண்ணோர். "இரண்டினும் வன்மை எய்தும்**
**வென்றியது யாவது?" என்று விரிஞ்சனை வினவ. அந் நாள்.**

***ஒன்றினை*** - *(அவ்விரண்டு விற்களுள்) ஒரு வில்லை;* ***உமையாள் கேள்வன்*** - *உமையம்மையின் கொழுநனான சிவபெருமான்;* ***உவந்தனன்*** - *விரும்பியெடுத்துக் கொண்டான்;* ***மற்றையொன்றை*** - *மற்றொரு வில்லை;* ***நின்று உலகு அளந்த நேமி நெடியமால்*** - *(திரிவிக்கிரமனாய்) உயர்ந்து நின்று. உலகங்களைத் (திருவடியால்) அளவிட்ட சக்கரப் படையினை ஏந்திய நெடியோனாகிய திருமால்;* ***நெறியின் கொண்டான்*** - *முறைப்படி தன் கைகளில் கொண்டான்;* ***என்று இது உணர்ந்த*** - *என்ற இச்செய்தியை யறிந்த;* ***விண்ணோர்*** - *தேவர்கள்;* ***"இரண்டினும் வன்மை எய்தும் வென்றியது எது"*** - *''இவ்விரண்டு விற்களுள்ளும் வலிமை பொருந்திய வெற்றி தரும் வில் எது?'';* ***என்று விரிஞ்சனை வினவ; அந்நாளில் -*** *என்று பிரமனைக் கேட்ட அந்த நாளில் (அவன். ''அமர் மூட்டிவிட்டான்'' எனும் மேற் கவியோடு முடியும்).*

*இடப்பாகமாக உமையம்மையை ஏற்றுள்ள திறம் நோக்கி. ''உமையாள் கேள்வன்'' எனச் சிவபெருமானைச் சிறப்பித்தார். ''ஓங்கி உலகளந்த உத்தமன்'' (திருப்பா. 3) ஆன சிறப்புப் பற்றி ''நின்று உலகு அளந்த நேமி நெடியமால்'' என்று திருமாலைச் சிறப்பித்தார். விரிஞ்சன்: நான்முகன்.*

***1290. "சீரிது தேவர்தங்கள்***
***சிந்தனை" என்பது உன்னி.***
***வேரி அம் கமலத்தோனும்.***
***இயைவது ஓர் வினயம்தன்னால்***
***யாரினும் உயர்ந்த மூலத்து***
***ஒருவர் ஆம் இருவர்தம்மை.***
***மூரி வெஞ் சிலை மேல் இட்டு.***
***மொய் அமர் மூட்டிவிட்டான்;***

**வேரி அம்கமலத் தோனும்** - *நறுமணம் கொள்ளும் அழகிய தாமரை மலரில் வாழும் நான்முகனும்;* **'தேவர் தங்கள் சிந்தனை சீரிது'** - *'தேவர்களுடைய (இவ்வாராய்ச்சி) எண்ணம் சிறந்தது;* **என்பது உன்னி** - *என்பதை நினைத்து;* **இயைவது ஓர் வினயம் தன்னால்** - *பொருந்துகின்ற ஒரு தந்திரத்தினால்;* **யாரினும் உயர்ந்த மூலத்து** - *யாரினும் மேம்பட்ட காரணநிலையில்;* **ஒருவராம் இருவர்தம்மை** - *ஒருவராய்க் காரிய நிலையில் இருவரானவரையும் (சிவபிரானையும் திருமாலையும்);* **மூரி வெஞ்சிலை மேலிட்டு** - *வலிமை மிக்க இருவிற்களைக் காரணமாக வைத்து;* **மொய் அமர் மூட்டிவிட்டான்** - *வலிய போர் (ஒன்றைப்) புரியுமாறு தூண்டிவிட்டான்.*

*கம்பர் பெருமானின் கடவுட் கோட்பாடு தெளிவுற விளங்கும் இடங்களில் இப்பாடல் சிவந்தவற்றுள் சிறந்த ஒன்றாகும். ஒரே மூலப் பரம்பொருள். காரியப்படும்போது. அளிக்கும் செயலுக்குத் திருமால் எனவும். அழிக்கும் செயலுக்குச் சிவபெருமான் எனவும் பெயரளவில் இரண்டாக வேறுபடுகிறது. ''மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலம்'' (கம்ப. 3682) என்பதனை இங்குத் தெளிவுபட விளக்கியுள்ள திறம் காண்க. பரம்பொருள் என்பதனை ''யாரினும் சிறந்த மூலம்'' என அழகுற மொழிப்படுத்தினார். ''அரன் அதிகன். உலகளந்த அரி அதிகன் என்று உரைக்கும் அறிவிலோர்க்குப் பரகதி சென்று அடைதல் அரிது'' (கம்ப. 4470) என்பது கவிஞர்பிரானின் கருத்தாலின். அதனை உணராது நான்முகன் இப்போரினைத் தொடங்கியது தக்கது அன்று என்பார். ''யாரினும் உயர்ந்த மூலத்து ஒருவராம் இருவர் தம்மை. மூரி வெஞ்சிலை மேலிட்டு மொய்யமர் மூட்டிவிட்டான்'' என்றார். ''மூட்டுதல் எனும் சொல் வழக்கு. இன்றும் உயர் வழக்காகாமை யுணரலாம். ''பொன் திகழும் மேனிப் புரிசடை எம் புண்ணியனும். நின்றுலகம் தாய நெடுமாலும் - என்றும் இருவர் அங்கத்தால் திரிவரேனும் ஒருவன் ஒருவன் அங்கத்து என்றும் உளன்'' தாழ்சடையும் நீள் முடியும். ஒண் மழுவும் சக்கரமும். சூழ் அரவும் பொன் நாணும் தோன்றுமால் - சூழும் திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து'' என்னும் பொய்கையாழ்வார் (முதல் திரு. 99. 63) புனித வாக்குகள் இங்கு ஆழ்ந்து சிந்தித்தற்குரியன. வேரி - மணம். மொய் - வலிமை. வினயம் - விரகு. தந்திரம்.*

*1291.* ***'இருவரும். இரண்டு வில்லும்***
***ஏற்றினர்; உலகம் ஏழும் வெருவர. திசைகள் பேர. வெங்***
***கனல் பொங்க. மேன்மேல். செரு மலைகின்ற***
***போழ்தில். திரிபுரம் எரித்த தேவன். வரி சிலை இற்றது***
***ஆக. மற்றவன் முனிந்து மன்னோ.***

**இருவரும்** - *(அரி. அரன் என்னும்)* இரண்டு பேரும்; **இரண்டு வில்லும் ஏற்றினர்** - இரு விற்களையும் நாணேற்றி; **உலகம் ஏழும் வெருவர** - ஏழுலகங்களும் அஞ்சுமாறு; **திசைகள் பேர** - திசைகள் நிலைகுலைய; **வெங்கனல் பொங்க** - கடிய சினத்தீ பொங்கியெழ; **மேன்மேல்** - மேலும் மேலும்; **செருமலைகின்ற போழ்தில்** - போர் புரிகின்ற; **திரிபுரம் எரித்த தேவன்** - முப்புரிமெரித்த சிவபெருமானின்; **வரிசிலை இற்றது ஆக** - கட்டமைந்த வில் முரிந்துபோக; **மற்று. அவன் முனிந்து** - அச் சிவபிரான் மிக்க சினங்கொண்டு.

*மன். ஓ - அசைநிலைகள். "முனிந்து மீட்டும் போர் தொடங்கும் வேலை" என மேற்பாடலோடு இயையும். மற்று - வினைமாற்றுப் பொருளில் வந்தது.*

*1292.* ***'மீட்டும் போர் தொடங்கும் வேலை.***
***விண்ணவர் விலக்க. வல் வில்***
***நீட்டினன் தேவர்கோன் கை.***
***நெற்றியில் கண்ணன்; வெற்றி காட்டிய கரிய***
***மாலும். கார்முகம் அதனை. பாரில்.***

***ஈட்டிய தவத்தின் மிக்க***
***இரிசிகற்கு ஈந்து போனான்;***

**மீட்டும் போர்** - மீண்டும் போரானது; **தொடங்கும் வேலை** - தொடங்கும் போது; **விண்ணவர் விலக்க** - தேவர்கள் *(இடையே)* வந்து விலக்கிட; **நெற்றிக் கண்ணன்** - நெற்றிக் கண்ணனாகிய சிவபெருமான் *(போர் ஒழிந்து)*; **வல்வில் தேவர் கோன் கை நீட்டினன்** - *(அந்த)* வலிய வில்லைத் தேவேந்திரனின் கைகளில் கொடுத்தான்; **வெற்றி காட்டிய கரியமாலும்** - வெற்றியைக் காட்டி நின்ற கரிய நிறத்திருமாலும்; **கார்முகம் அதனை** - *(தன் கையிலிருந்த ஒடியா)* வில்லாகிய அதனை; **பாரில் ஈட்டிய தவத்தின் மிக்க** - பூமியில் *(தான்)* செய்து சேர்த்த தவத்திற் சிறந்த; **இரிசிகற்கு ஈந்து போனான்** - *(என் தந்தையின் தந்தையாகிய)* இரிசிக முனிவரிடம் அளித்து விட்டுச் சென்றான்.

*வல்வில்: வலிமை மிக்க வில். (முறிந்ததனால்) இகழ்ச்சிக் குறிப்புமாம். கீழே. கார்முகப் படலத்தில். இவ்வில்லைச் சிவபிரான் தக்கன் வதத்திற்கு எடுத்துச் சென்று வென்று வந்ததாகக் குறிப்பு உள்ளது (கம்ப.) விசுவ கர்மன் செய்த இருவில்களுள் ஒன்றையெடுத்துச் சென்று. சிவபெருமான். தக்கனை வென்றான். பிறகு தேவர் விரும்பியவாறு வலிமையறியச் சிவபிரானுக்கும் திருமாலுக்கும் போர் நடக்கையில் சிவதனுசு முறிந்ததால். அதனை மிதிலை மன்னனாகிய தேவராதனுக்கு. சிவபிரான் தந்துவிட்டுச் சென்றான். அது சனகன் கைக்கு வந்து என வில்லின் வரலாற்றை விரித்துணர்ந்து கொள்க. இரிசிகன்: பரசுராமனின் பாட்டன். பரசுராமனின் தந்தையாகிய சமதக்கினியின் தந்தை.*

***1293. 'இரிசிகன் எந்தைக்கு ஈய.***
***எந்தையும் எனக்குத் தந்த***
***வரி சிலை இது. நீ நொய்தின்***
***வாங்குதிஆயின். மைந்த!***
***குரிசில்கள் நின்னொடு ஒப்பார்***
***இல்லை; யான் குறித்த போரும்***
***புரிகிலென். நின்னொடு; இன்னம்***
***புகல்வது கேட்டி' என்றான்.***

***இரிசிகன் எந்தைக்கு ஈய*** *- இரிசிக முனிவன் (தன் மகனாகிய) என் தந்தைக்கு அளித்திட;* ***எந்தையும் எனக்குத் தந்த வரிசிலை இது*** *- என் தந்தையாகிய சம தக்கினி முனிவர் என்னிடம் கொடுத்த அழகிய வில் இது;* ***நீ நொய்தின் வாங்குதி ஆயின்*** *- நீ (இதனை) எளிதாய் (வளைத்திடுவாய்) என்றால்;* ***மைந்த*** *- வல்லமை வாய்ந்த மகனே;* ***நின்னொடு ஒப்பார் குரிசில்கள் இல்லை*** *- உனக்கு ஒப்பாகும் மன்னர்களே (உலகில்) இல்லை (என்பேன்);* ***நின்னொடு யான் குறித்த போரும் புரிகிலென்*** *- உன்னோடு நான் புரியக் கருதி வந்த போரினை யும் புரியேன்;* ***இன்னம் புகல்வது கேட்டி' என்றான்*** *- மேலும் சொல்வேன் கேட்பாய் என்று உரைத்தான் பரசுராமன்.*

*பரசுராமன் இந்த வில்லினைக் கொண்டு 21 தலைமுறை மன்னர் குலத்தை வேர் அறுத்தவன். ஆதலால். இந்த வில்லை நீ வளைத்துவிட்டாய் ஆனால். உன்னை வெல்லும் மன்னர் உலகம் முழுதிலும் இல்லையென்று மன்னர் வலியநுபவமும் தன் வில் அநுபவமும் படக் கூறினான். இவ்வில்லை வளைப்பது அவன் வலிமையை வளைப்பதாகும். ஆதலின். ''வாங்குதியாயின் குறித்த போரும் புரிகிலென்'' என்றான். ''நொய்தின் - வாங்குதி ஆயின்.' என்பது எளிதாகக் கையில் வாங்குவாய் ஆயின் என்றும் பொருள்படும். பரசுராமன் குறித்தமட்டில் அவ்வில் அவன் தவிர மற்றையரால் கைக்கொள்ளவும் அரிது என்பதாம்.*

***1294. ‘ஊன வில் இறுத்த மொய்ம்பை***
***நோக்குவது ஊக்கம் அன்றால்;***
***மானவ! மற்றும் கேளாய்;***
***வழிப் பகை உடையன் நும்பால்;***
***ஈனம் இல் எந்தை. “சீற்றம்***
***நீக்கினான்” என்ன. முன் ஓர்***
***தானவன் அனைய மன்னன்***
***கொல்ல. யான் சலித்து மன்னோ.***

***ஊனவில் இறுத்த*** - *பழுதுபட்ட ஒரு வில்லை முறித்த;* **மொய்ம்பை நோக்குவது** - *வலிமையைப் (பெரிதாகக்) கருதுவது;* **ஊக்கம் அன்று** - *சிறந்த ஆற்றல் ஆகாது;* ***மானவ!*** - *(வைச்சுத) மனுகுலத்து உதித்த மன்னவனே!;* ***மற்றும் கேளாய்*** - *இன்னும் கேட்பாய்;* **நும்பால் வழிப் பகையுடையன்** - *(அரசர் குல வழிவந்தவர்களாகிய உம்மிடத்துத் தொடர் பகையுடையவன் (நான்);* ***ஈனம் இல் எந்தை*** - *(ஒரு) குற்றமுமம் புரியாத என் தந்தை;* ***“சீற்றம் நீக்கினான்” என்ன*** - *சினத்தை யழித்தவனாகிய முனிவன் ஆதலின். (சினவான் என்று கருதி);* ***முன் ஓர் தானவன் அனைய*** - *முன்னொரு நாளில் அரக்கனைப் போன்ற;* **மன்னன் கொல்ல** - *ஒரு மன்னன் (என் தந்தையைக்) கொன்றுவிட;* ***யான் சலித்து*** - *நான் மனங்கலங்கி; (வேந்தையெல்லாம் வேரறக்களை கட்டு” எனவரும் பாடலில் முடியும்)*

*ஆல். மன். ஓ - அசைகள். முனிவர் என்பதற்குச் சீற்றத்தை முனிந்தவர் என்பது பொருளாதலின். “சீற்றம் நீக்கினான்” என. சமதக்கினி முனிவரைக் குறித்தார். முனியாத முனிவரைச் சினந்து கொன்றது. மானுட மன்னனை அரக்கன் ஆக்கிற்று ஆதலால். “தானவன் அனைய மன்னன்” என்றார். அரக்கத் தன்மை குணத்தால் வருவது எனக் குறித்தவாறு.*

***1295. ‘மூ-எழு முறைமை. பாரில்***
***முடியுடை வேந்தை எல்லாம்.***
***வேவு எழு மழுவின் வாயால்.***
***வேர் அறக் களைகட்டு. அன்னார்***
***தூ எழு குருதி வெள்ளத்***
***துறையிடை. முறையின். எந்தைக்கு.***
***ஆவன கடன்கள் நேர்ந்தேன்;***
***அருஞ் சினம் அடக்கி நின்றேன்.***

***மூ எழு முறைமை*** - இருபத் தொரு தலைமுறைகள்; ***பாரில்*** - உலகத்தில்; ***முடியுடை வேந்தை எல்லாம்*** - முடி சூடிய வேந்தர்கள் அனைவரையும்; ***வேவு எழு மழுவின் வாயால்*** - (பகைவர் தசை மேல்) வெம்மை கொண்டெழும் பரசு எனும் கருவியின் முனையால்; ***வேர் அறக் களை கட்டு*** - வேரோடு நீங்கக் களையெடுத்துக் கொன்று; ***அன்னார் தூ எழு குருதி வெள்ளத் துறையிடை*** - அவர்கள் தசையிலிருந்து பெருகிய (குருதியினைக் குளமாக்கி) அக்குருதித் துறையிலே; ***எந்தைக்கு முறையின் ஆவன கடன்கள் நேர்ந்தேன்*** - (இறந்தார்க்குச் செய்ய வேண்டிய) முறைப்படி என் தந்தைக்குச் செய்யத்தக்க கடன்களைச் செய்து முடித்தேன்; ***அருஞ்சினம் அடக்கி நின்றேன்*** - (அதன் பிறகு) என் அரிய வெகுளியை அடக்கி வந்துள்ளேன்.

*வேவு: வெம்மை. தூ: தசை. குருதி வெள்ளத்துறை. பரசுராமன் மன்னர்களை வெட்டி. அவர் குருதியால் உருவாக்கிய "சியமந்த பஞ்சகம்" எனும் ஐந்து குருதிக் குளங்கள். இருபத்தொரு தலைமுறை மன்னரை யழித்தும் சினம் ஆறவில்லையாம்; அடக்கிக் கொண்டானாம்! " அடக்கிநின்றேன்" என்றான். சினத்திற்கு உணவிட இட. அது. குறையாது வளரும் ஆதலால். தீ என உருவகித்துத் திருவள்ளுவரும். "சினம் என்னும் சேர்ந்தாரைக்கொல்லி" (திருக். 306) என்றார். முனிவனாயிருந்தும். அருளைப் பொருள் என்று கொள்ளாது. சினத்தைப் பொருள் என்று கொண்டவன் பரசுராமன் என்பது. இருபத்தொரு தலைமுறை முடியுடை வேந்தரையெல்லாம் வேர் அறக் களைகட்டு. அருஞ்சினம் அடக்கினேன் என்பதனால் தெளியலாம். சினத்தைப் பொருள் என்று கொண்டவன் கேடு நிலத்து அறைந்தான் கைபிழையாது அற்று" (திருக். 307) என்பது வள்ளுவ வாசகம்.*

***1296. 'உலகு எலாம் முனிவற்கு ஈந்தேன்.***
***உறு பகை ஒடுக்கிப் போந்தேன்.***
***அலகு இல் மா தவங்கள் செய்து. ஓர்***
***அருவரை இருந்தேன்; ஆண்டை***
***சிலையை நீ இறுத்த ஓசை***
***செவி உற. சீறி வந்தேன்;***
***மலைகுவென்; வல்லை ஆகின்.***
***வாங்குதி. தனுவை!' என்றான்.***

***உலகுஎலாம் முனிவற்கு ஈந்தேன்*** - அதன்பின்பு (நான் வென்ற) உலகங்களையெல்லாம் காசிப முனிவருக்குத் தானமாகத் தந்தேன்; ***உறுபகை ஒடுக்கிப் போந்தேன்*** - பெரும்பகைகள் அனைத்தையும் அடக்கி வந்தேன்; ***அலகு இல் மாதவங்கள்செய்து*** - அளவற்ற பெருந்தவங்களைப் புரிந்து; ***ஓர் அருவரை இருந்தேன்*** - ஒப்பற்றதான அரிய மகேந்திர மலையிலே தங்கியிருந்தேன்; ***நீ சிலையை இறுத்த ஓசை*** - நீ வில்லை முறித்ததனால் எழுந்த ஓசை; ***ஆண்டை செவிஉற*** - அவ்விடத்தில் வந்து என் காதுகளில் மோதியதால்; ***சீறி வந்தேன்*** - (அதுகேட்டு) வெகுண்டு (இங்கு) வந்தடைந்தேன்; ***வல்லை ஆகின்*** - வலிமையுடையவன் நீஎன்றால்; ***தனுவை வாங்குதி*** - (இந்த) வில்லை வளைத்திடு; ***மலைகுவென் என்றான்*** - (உன்னோடு) யான் போர் செய்ய உள்ளேன் என்றான் (பரசுராமன்).

*உறுபகை - பெரும்பகை; பல அரசர்களது பகை. இது போலவே. வில் ஒடித்த ஓசை. அயோத்திக்கு எட்டியது என்பதைத் தசரதன் கூற்றாக. "தக்கன் வேள்வியில். கற்றை வார்சடைக் கணிச்சி வானவன். முற்ற ஏழ் உலகையும் வென்ற மூரிவில் இற்ற பேர் ஒலிகொல் அன்று இடித்தது ஈங்கு" (கம்ப. 736) என்று குறிப்பிடுவார். இவ் வில் முறிந்த ஓசை இலங்கையிலும் கேட்டுளது என்பதனை. மாலியவான் கூற்றாக. கங்கை சூடிதன் கடுஞ்சிலை ஒடித்த அக்காலம். உங்கள் வான்செவி புகுந்திலதோ முழங்கு ஓதை?" (கம்ப. 9288) என்று குறிப்பிடுவர்.*

*வில் ஒடித்த அமயத்தில். வில்ஒலி கேட்டு. அண்டகோளம் பிளந்தது; பாதலம் நடுங்கிற்று; "பாரிடையுற்ற தன்மை பகர்வது என்? "(கம்ப. 700) எனப் பொதுவாகக் கூறிச் சென்ற கவிஞர்பிரான். வில் ஒடித்த ஆற்றலை மனத்துட் பொதிந்து வைத்திருந்து. இடம் அறிந்து காண்டங்கள் கடந்து நினைவாற்றலோடு பொருந்த இணைக்கும் திறம் நினைந்து நினைந்து மகிழ்தற்குரியது.*

*வில்லை வளைத்த இராமன் அம்புக்கு இலக்கு என் எனல்*

***1297. என்றனன் என்ன. நின்ற***
***இராமனும் முறுவல் எய்தி.***
***நன்று ஒளிர் முகத்தன் ஆகி.***
***'நாரணன் வலியின் ஆண்ட***
***வென்றி வில் தருக!' என்ன.***
***கொடுத்தனன்; வீரன் கொண்டு. அத்***
***துன்று இருஞ் சடையோன் அஞ்ச.***
***தோளுற வாங்கி. சொல்லும்:***

***என்றனன்*** *- (பரசுராமன்) இவ்வாறு கூறினான்;* ***என்ன*** *- (அவன்) இவ்வாறு கூற;* ***நின்ற இராமனும்*** *- (இவற்றைக் கேட்டு) நின்ற இராமனும்;* ***முறுவல் எய்தி*** *- புன்னகை பூத்து;* ***நன்று ஒளிர் முகத்தன் ஆகி*** *- (மகிழ்வால்) நன்றாக விளக்கம் பெற்ற முகத்தின னாகி;* ***நாரணன் வலியின் ஆண்ட வென்றிவில் தருக என்ன*** *- திருமால் வலிமையினால் எடுத்துப் பயின்ற வெற்றி வில்லைத் தருக என்று கூற;* ***கொடுத்தனன்*** *- (பரசுராமன் உடனே வில்லைக்) கொடுத்திட்டான்;* ***வீரன் கொண்டு*** *- வில்லை (இராமன்) வாங்கிக் கொண்டவனாய்;* ***துன்று இருஞ்சடையோன் அஞ்ச*** *- நெருங்கிப் பெருத்த சடையுடையோனாகிய பரசுராமன் அஞ்சுமாறு;* ***தோளுற வாங்கிச் சொல்லும்*** *- அவ்வில்லைத் தன் தோள்வரையில் வருமாறு வளைத்துக் கொண்டு கூறுவான்.*

*இராமன் திருமுகம் அழகியது. அது புன்னகை பூக்குங்கால் மேலும் பேரழகு பெறும் என்பார். "முறுவல் எய்தி நன்றுஒளிர் முகத்தன் ஆகி" என்றார். உள்ளிருந்த வீரம் முகத்தில் பொங்கியதால் நன்று ஒளிர்ந்தது முகம். நகை எள்ளல் அடியாகப் பிறந்தது. திருமால் கையாண்ட வில் தனக்கு வரவேண்டியதே தருக என்பார். "நாரணன் வலியின் ஆண்ட வென்றிவில்" என்றார். வென்றி வில் - என்றும் தோலாத வெற்றியையே யுடைய வில்.*

***1298.*** ***‘பூதலத்து அரசை எல்லாம்***
***பொன்றுவித்தனை; என்றாலும்.***
***வேத வித்து ஆய மேலோன்***
***மைந்தன் நீ; விரதம் பூண்டாய்;***
***ஆதலின் கொல்லல் ஆகாது;***
***அம்பு இது பிழைப்பது அன்றால்.***
***யாது இதற்கு இலக்கம் ஆவது?***
***இயம்புதி விரைவின்!’ என்றான்.***

***‘பூதலத்து அரசையெல்லாம்*** - *‘மண்ணுலகத்தையாண்ட அரசர்களையெல்லாம்; பொன்றுவித்தனை நீ கொன்றாய் (ஆகவே நான் உன்னைக் கொல்லலாம்);* ***என்றாலும் வேதவித்து ஆய மேலோன் மைந்தன் நீ*** - *ஆனாலும். வேதங்களை அழியாது காக்கும் வித்தினைப் போன்ற மேலோன் ஒருவனின் மகன் நீ!;* ***விரதம் பூண்டாய்*** - *(அன்றியும்) தவவேடமும் தரித்துள்ளாய்;* ***ஆதலின் கொல்லல் ஆகாது*** - *ஆகவே. உன்னைக் கொல்லக்கூடாது;* ***அம்பு இது பிழைப்பது அன்று*** - *(எனினும் வில்லில் நான் நாண் ஏற்றித் தொடுத்துள்ள) இந்த அம்பு தவறுதல் கூடாது;* ***இதற்கு இலக்கு ஆவது*** - *இந்த அம்புக்குக் குறியாகும் பொருள் யாது?;* ***விரைவில் இயம்புதி’ என்றான்*** - *காலந் தாழ்த்தாமல் கூறுக’ என்றான் இராமன்.*

*பூதலத்தைக் காக்கப் பிறந்த அரசையெல்லாம் நீ அழிக்கப் பிறந்தாய் என்பார். ‘‘பூதலத்து அரசையெல்லாம் பொன்றுவித்தனை’’ என்றார். ஓரிருவர் கூடத் தப்பாமல் கொன்றமை தோன்ற. ‘‘அரசையெல்லாம்’’ என்றார். சத்திரியர்களைக் கொன்ற உன்னைச் சத்திரியனாயுள்ள நான் கொல்வது சத்திரிய தருமமே; உன்னைக் கொல்வது அறமே; ஆயினும் கொல்லவில்லை என்னும் கருத்தை ‘‘என்றாலும்’’ என்பதில் உள்ள உம்மை குறித்து நின்றது. கொல்லாமல் விடுவதற்குக் காரணங்கள் இரண்டுள. வேத வித்தாய மேலோன் மைந்தன் நீ என்பது ஒன்று; தவ வேடம் பூண்டது மற்றொன்று என்கிறான் பெருமான். உனக்காக உன்னை நான் கொல்லாமல் விடவில்லை; உன் தந்தைக்காகவும் நீ பூண்டுள்ள வேடத்துக்காகவுமே உன்னை கொல்லாமல் விடுகிறேன் என்கிறான். வேடம் கூடப் போற்றத்தக்கது என்பதனை. ‘‘மெய்த்தவ வேடமே மெய்ப்பொருள்’’ (பெரியபு. மெய்ப். 15) என்றமெய்ப்பொருள்நாயனார் வாழ்வு உணர்த்தும். ‘‘மால் அற நேயமும் மலிந்தவர் வேடமும். ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே’’ (சிவஞா. போ. 12) என்பார் மெய்கண்ட தேவரும்.*

*இராம பாணம் தொடங்கிய செயல் முடிக்காது மீளாது. வெறும் வாயோடு மீளும் வழக்கம் இல்லாதது எனும் மரபு பற்றி. ‘‘ அம்பு இது பிழைப்பது அன்று’’ என்றார். கொலைத் தொழிலில் சிறத்தல் தவமாதல் இல்லை யென்க. ‘‘உற்ற நோய் நோன்றல்’’ உயிர்க்கு உறுகண் செய்யாமை (திருக். 261) இரண்டுமே தவத்தின் அடையாளங்கள் என்பது வள்ளுவர் வாய்மொழி. அம்புக்குத் தவத்தை இலக்கு ஆக்குதல்*

***(வேறு) கலிவிருத்தம்***

***1299. ‘நீதியாய்! முனிந்திடேல்; நீ இங்கு யாவர்க்கும்
ஆதி; யான் அறிந்தனென்; அலங்கல் நேமியாய்!
வேதியா இறுவதே அன்றி. வெண் மதிப்
பாதியான் பிடித்த வில் பற்றப் போதுமோ?***

***நீதியாய்!*** - *நன்னெறி பூண்டவனே!;* ***முனிந்திடேல்*** - *நீ வெகுளாதே!;* ***நீ இங்கு யாவர்க்கும்*** - *நீ இவ்வுலகில் உள்ளோர் யாவர்க்கும்;* ***ஆதி. யான் அறிந்தனென்*** - *முதல்வன் என்பதனை யான் (கண்கூடாக) அறிந்தேன்; அலங்கல் நேமியாய்; - துழாய் மாலையணிந்த சக்கரம் ஏந்திய திருமாலே;* ***வேதியா!*** - *வேதியனே!;* ***வெண்மதிப் பாதியான்*** - *வெள்ளிய மதியின் பகுதியைச் சூடியுள்ள சிவபெருமான்;* ***பிடித்த வில்*** - *(முன்பு கையில்) பற்றிய வில்லானது;* ***இறுவதே அன்றி*** - *பிளந்து முறிவதேயல்லாமல்;* ***பற்றப் போதுமோ?*** - *உனது கையிற் பிடித்தற்கும் போதுமோ? (போதாது) (என்றான் பரசுராமன்)*

*திருமாலின் கூறல்லாத எவரும் இவ்வில்லைப் பற்றி எடுக்கவும் கூடுமோ எனப் புகழ்ந்தான் எனினுமாம். இராம பிரானை வேதியன் என்று பல இடங்களில் கம்பர் பெருமான் குறிப்பிடுவார். “அரசர் உருக்கொண்டமைந்த வேதியா!” (கம்ப. 7625) எனவும். “நீ செப்பும் வேத நாயகன்” (கம்ப. 6994) எனவும். “விராவரும் புவிக்கெலாம் வேதமே யன இராமன்” (கம்ப. 1453) எனவும் வருவன காண்க.*

***1300. ‘பொன்னுடை வனை கழல் பொலம் கொள் தாளினாய்!
மின்னுடை நேமியான் ஆதல் மெய்ம்மையால்;
என் உளது உலகினுக்கு இடுக்கண்? யான் தந்த
உன்னுடை வில்லும். உன் உரத்துக்கு ஈடு அன்றால்.***

***பொன்னுடை வனைகழல்*** - *பொன்னால் செய்யப்பட்டு அணிதற்குரிய வீரக் கழலையும்;* ***பொலம் கொள் தாளினாய்*** - *அழகினையும் கொண்ட திருவடிகளையுடையவனே!;* ***மின் உடை நேமியான் ஆதல் மெய்ம்மையால்*** - *நீ மின்னுகின்ற சக்கரப் படையை ஏந்திய திருமால் என்பது உண்மையானதால்;* ***உலகினுக்கு இடுக்கண் என் உளது?*** - *இனி. உலகத்து மக்கட்கு (நிகழவுள்ள) துன்பங்கள் எப்படி இருக்கும்?;* ***யான் தந்த உன்னுடை வில்லும்*** - *நான் இப்பொழுது உனக்குத் தந்த (பழைய) உன்னுடைய வில்லும்;* ***உன் உரத்துக்கு ஈடு அன்று*** - *உன்னுடைய வலிமைக்கு ஏற்றது ஆகாது.*

*இராமனை இறைவனாகக் கொண்டு திருவடிகளை முதலில் வருணித்தான். உரம்: வலிமை. மார்பு எனக் கொண்டு. வில் வளைத்த நேர்த்தி கண்டு மார்பினைப் புகழ்ந்தவாறுமாம். ஆகவே. இராமன் “கைவண்ணமும் கால்வண்ணமும்” (கம்ப. 475) கண்டு கௌசிக முனிவர். “இனி இந்த உலகுக்கு எல்லாம் உய்வண்ணம் அன்றி மற்றோர் துயர்வண்ணம் உறுவதுண்டோ?” (கம்ப. 475) என்று மகிழ்ந்தது போலவே அவை கண்டு. பரசுராமனும் இங்கு. “என் உளது உலகினுக்கு இடுக்கண்?” என்கின்றான் என்க.*

*1301.* ***'எய்த அம்பு இடை பழுது எய்திடாமல். என்***
***செய் தவம் யாவையும் சிதைக்கவே!' என.***
***கை அவன் நெகிழ்தலும். கணையும் சென்று. அவன்***
***மை அறு தவம் எலாம் வாரி. மீண்டதே.***

***எய்த அம்பு*** *- (நீ இப்போது) எய்யப் பிடித்திருக்கிற அம்பானது;* ***இடை பழுது எய்திடாமல்*** *- இடையிலே வீணாகாதபடி;* ***என் செய் தவம் யாவையும்*** *- என்னால் செய்யப்பட்ட தவத்தின் பயன் அனைத்தையும்;* ***சிதைக்கவே என*** *- (இலக்காகக் கொண்டு) அழிக்க வேண்டுகிறேன் என்று பரசுராமன் கூற;* ***அவன் கை நெகிழ்தலும்*** *- அப்போது. இராமனின் கை நெகிழ்ந்த உடனே;* ***கணையும் சென்று*** *- அம்பும் உடனே சென்று;* ***அவன் மையறு தவம்எலாம்*** *- பரசுராமன் ஈட்டியிருந்த தவத்தின் பயன்கள் யாவற்றையும்;* ***வாரி மீண்டது*** *- வாரிக் (கவர்ந்து கொண்டு) (அம்பறாத் தூணியை) மீண்டும் வந்தடைந்தது.*

*எய்யவிருக்கிற அம்பு விரைவு கருதி. ''எய்த அம்பு'' எனப்பட்டது கால வழுவமைதி. இராமன் அம்பு பூட்டிய பிறகு. இலக்கையடையாமல் திரும்பியதில்லை என்னும் மரபு இடையே என்னால் பழுதடைய வேண்டா என்பான். ''இடை பழுது எய்திடாமல்'' என்றான். தவம்: தவத்தின் பயனைக் குறித்து நின்றது. இராமன் அம்பு பரசுராமன் தவத்தின் பயனையெல்லாம் கவர்ந்தது என்பதனால் உருவற்ற அருவத்தையும் அது இலக்காகக் கொள்ளும் வன்மையது என்பது உணர்த்தியவாறு.* *பரசுராமன் வாழ்த்தி விடைபெறுதல்*

*1302.* ***'எண்ணிய பொருள் எலாம் இனிது முற்றுக!***
***மண்ணிய மணி நிற வண்ண! வண் துழாய்க்***
***கண்ணிய! யாவர்க்கும் களைகண் ஆகிய***
***புண்ணிய! விடை' எனத் தொழுது போயினான்.***

***மண்ணிய மணிநிற வண்ண!*** *- ''கழுவித் தூய்மை செய்யப் பெற்ற நீல மணியின் நிறமுடைய இராமனே!;* ***வண்துழாய்க் கண்ணிய!*** *- அழகிய துழாய் மாலையணிந்தவனே!;* ***யாவர்க்கும் களை கண் ஆகிய புண்ணிய!*** *- (மூவுலகங்களிலும் வாழ்கின்ற) அனைவர்க்கும் புகல் இடமாகிற புண்ணியனே!;* ***எண்ணிய பொருள் எலாம் இனிது முற்றுக!*** *- நீ. கருதி வந்துள்ள பொருள்கள் எல்லாம் (கருதியவாறே) இனிதே நிறைவேறுவனவாகுக;* ***விடை எனத் தொழுது போயினான்*** *- யான் விடை பெறுகின்றேன்'' என்று கூறி வணங்கிச் சென்றான் (பரசுராமன்).*

*நீல மணி வண்ணமும் பைந்துழாய்க் கண்ணியும் உடைய நீ சரணாகதி வத்சலன் ஆகிய பரம்பொருளே. இனி. உலகு உன்னால் நலம் அனைத்தும் பெறும். நான் பெற வேண்டியது விடை எனப் பரசுராமன் விடை பெற்றனன் என்க. மண்ணுதல்: கழுவுதல். நீராட்டுதல். "மண்ணிய சென்ற ஒண்ணுதல் அரிவை" (குறுந். 292) "மண்ணி வாரா அளவை" (புறம். 50). களைகண்: புகலிடம். சரணாகதி நல்குதல்.*

*இராமன் தந்தையைத் தொழுது துயர்போக்கல்*

***1303. அழிந்து. அவன் போனபின்.***
***அமலன். ஐ-உணர்வு***
***ஒழிந்து. தன் உயிர் உலைந்து***
***உருகு தாதையை.***
***பொழிந்த பேர் அன்பினால்.***
***தொழுது. முன்பு புக்கு.***
***இழிந்த வான் துயர்க் கடல்***
***கரைநின்று ஏற்றினான்.***

***அழிந்து அவன் போனபின்*** - *அப் பரசுராமன் (தன் செருக்கும் தவமும்) சிதைந்து போன பின்பு:* ***அமலன்*** - *குற்றம் அற்ற இராமபிரான்;* ***ஐ-உணர்வு ஒழிந்து*** - *ஐம்புல உணர்வும் நீங்கி;* ***தன் உயிர் குலைந்து*** - *தன் உயிர் நிலை குலைந்து;* ***உருகு தாதையை*** - *(தன்னை) எண்ணி மனம் உருகும் தந்தையாகிய தசரதனை;* ***பொழிந்த பேரன்பினால்*** - *பொங்கி வழிகின்ற அன்பினால்;* ***தொழுது*** - *வணங்கி;* ***முன்பு புக்கு*** - *அவன் கண் எதிரே சென்று;* ***இழிந்த வான் துயர்க் கடல்*** - *அவன் இறங்கி அமிழ்ந்திருந்த பெரிய துயர்க்கடலிலிருந்து;* ***கரை நின்று ஏற்றினான்*** - *கரை ஏற்றினான். தசரதன் மண்ணில் கிடக்கவில்லை வரம்பற்ற துக்க வாரிதியுள் மூழ்கிக் கிடந்தான் என்பார். "இழிந்த வான் துயர்க்கடல்" என்றார். துக்கசாகரத்தில் மூழ்கிக்கிடக்கும் எண்ணற்ற உயிர்களைப் பிறவிக் கடலிலிருந்து கரையேற்ற வந்துள்ள பெருமான். தன் தந்தையையும் துயரக் கடலிலிருந்து மீட்டான் என்பார். "துயர்க் கடல் கரை நின்று ஏற்றினான்" என்றார். தனக்காக உயிர் குலைந்து. உருகிக் கிடக்கிற தந்தை நிலைகண்டு. பெருமான் தானும் உருகி. அன்பு பொங்கி வழியத் தொழுது. தந்தையைத் துக்க சாகரத்திலிருந்து கரையேற்றி ஒரு மகனுக்கு இலக்கணமாயினான் என்க.*

*தசரதன் களிப்புக் கடலுள் ஆழ்தல்*

***1304. வெளிப்படும் உணர்வினன். விழுமம் நீங்கியே.***
***தளிர்ப்பு உறு மத கரித் தானையான். இடை***
***குளிப்ப அருந் துயர்க் கடற் கோடு கண்டவன்.***
***களிப்பு எனும் கரை இலாக் கடலுள் ஆழ்ந்தனன்.***

***வெளிப்படும் உணர்வினன்*** - *(முன்பு துயரால் அழிந்து போன) புலன் உணர்வுகள் யாவும் வெளிப்பட்டவன் ஆகி;* ***விழுமம் நீங்கி*** *- துன்பங்கள் நீங்கி;* ***தளிர்ப்பு உற*** *- மனந் தழைக்கின்ற;* ***மத கரித் தானையான்*** *- மதம் மிக்க யானைச் சேனையான் ஆகிய தசரதன்;* ***இடை குளிப்பு அரும்*** *- இடையிலே மூழ்குவதற்கு அரியதான;* ***துயர்க் கடல் கோடு கண்டவன்*** *- துன்பமாகிற பெருங்கடலின் எல்லையைக் கண்டுணர்ந்தவன்;* ***களிப்பு எனும்*** *- (பின்பு) களிப்பு என்கின்ற;* ***கரை இலாக் கடலுள் ஆழ்ந்தனன்*** *- கரை காணாத கடலிடையே மூழ்கினான்.*

*"வெளிப்படும் உணர்வினன்" என்பதற்கு துயரத்தால் உடலை விட்டுப் புறப்பட்டுக் கொண்டிருந்த உயிரின் உணர்வுடையவன் எனினுமாம். பரசுராமனால். தன் அருமை இராமனுக்கு நேருவதைக் காணச் சகியாது துன்பக் கடலுள் மூழ்கி மறைந்தன். தன் மகன் பெற்ற வெற்றியைக் காண இராமன் கரையேற்ற சென்ற பாடலில் கரை ஏறிய தசரதன். இப்பாடலுள். மீண்டும் மூழ்கினான் எனும் நயம் தோன்றக் கூறினார். அந்தத் துயரக் கடல். இராமனால் மீட்கப் பட்டதால் கரையுளது ஆயிற்று; இந்த இன்பக் கடல் இராமனாலும் கரையேற்ற இயலாதது என்பார். "கரை இலாக் கடலுள் ஆழ்ந்தனன்" என்றார்.*

***1305. பரிவு அறு சிந்தை. அப் பரசுராமன் கை***
***வரி சிலை வாங்கி. ஓர் வசையை நல்கிய***
***ஒருவனைத் தழுவிநின்று. உச்சி மோந்து. தன்***
***அருவி அம் கண் எனும் கலசம் ஆட்டினான்.***

***பரிவு அறு சிந்தை*** *- இரக்க அற்றம் மனத்தினையுடைய;* ***அப்பரசுராமன் கை*** *- அந்தப் பரசுராமன் கையில் (இருந்த);* ***வரிசிலை வாங்கி*** *- அழகிய வில்லைத் தன்கையில் வாங்கிக் கொண்டு;* ***ஓர் வசையை நல்கிய*** *- ஒப்பற்றதோர் பழியினை அவனுக்குக் கொடுத்துவிட்ட;* ***ஒருவனைத் தழுவி*** *- ஒப்புயர்வற்ற தன்மகன் இராமனைத் தழுவி நின்று;* ***உச்சி மோந்து*** *- அவனது உச்சியை (அன்பால்) மோந்து;* ***தன் அருவி அம் கண் எனும்*** *- அருவி போல் பெருகுகின்ற தன் கண்கள் என்னும்;* ***கலசம் ஆட்டினான்*** *- கலசங்களால் நீராட்டினான் (தசரதன்). வில்லை வாங்கிக் கொண்டு மாறாகப் பழியினைப் பரசுராமனுக்குக் கொடுத்தான் என அணிபெறக் கூறினார். ஒன்றைக் கொடுத்து ஒன்றை மாற்றிக் கொள்ளுதலை மாற்று நிலையணி என்பர். "உயிர் கொடுத்துப் பழிகொண்ட பித்தா!" என்பார் பின்னும் (கம்ப. 9927). கலசம் - ஆகுபெயராய் அதில் உள்ள தீர்த்தத்தைக் குறித்தது. கலச நீருக்கு நீர் அளவு உண்டு; இது. அருவி புகுந்த அளவற்ற நீர்க் கலசம் என்பார். "அருவி அம் கண் எனும் கலசம் ஆட்டினான்" என்றார். அருஞ்செயல் புரிந்த மகனுக்கு. தந்தை ஆனந்தக் கண்ணினால் மங்கல நீராட்டி மகிழ்ந்தான் என்க. "ஐயனே. அவர்கள் தாமும் அன்பும் தழுவி. தம்தம் செய்யதாமரைக் கண்நீரால் மஞ்சனத் தொழிலும் செய்தார்" (கம்ப. 10276) என்பார் வேறிடத்தும்.*

***1306. ‘பொய்ம்மை இல். சிறுமையில்***
***புரிந்த. ஆண் தொழில்.***
***மும்மையின் உலகினால்***
***முடிக்கல் ஆவதோ?***
***மெய்ம்மை இச் சிறுவனே.***
***வினை செய்தோர்களுக்கு.***
***இம்மையும் மறுமையும்***
***ஈயும்’ என்றனன்.***

**பொய்ம்மை இல்** - *வஞ்சனையில்லாத;சிறுமையில்;- (இந்த) இளம் பருவத்தில்;* **புரிந்த ஆண் தொழில்** - *(இச்சிறுவனாகிய இராமன்) ஆற்றியுள்ள இவ்வீரச் செயல்;* **மும்மையின் உலகினால்** - *மூன்று உலகத்தாராலும் (சேர்ந்தாயினும்);* **முடிக்கல் ஆவதோ?** - *செய்து முடித்தற்கு இயலுவதோ? (இயலாது);* **இச்சிறுவனே** - *இவ்விளைஞனே;* **வினை செய்தோர்களுக்கு** - *நல்வினை தீவினைகளைப் புரியும் உயிர்கட்கு;* **இம்மையும் மறுமையும் ஈயும்** - *(அவரவர் வினைகட்கு ஏற்ப) இம்மைப் பயனையும் மறுமைப் பயனையும் அளித்தருளுகின்றவன்;* **மெய்ம்மை என்றனன்** - *(இது) உண்மை என்றுரைத்தான் (தசரதன்)*

*மூவுலகத்தாரும் ஒருங்கு கூடி முயன்றாலும் முடித்தற்கு அரியதொரு செயலை. மிக எளிதாக ஓர் இளைஞன் இயற்றியுள்ளான் எனின். அவன் மூவுலகத்தவரிலும் உயர்ந்தவன் என்பது தெளிவு; அவ்வாறு உயர்ந்தவன் இறைவன் ஒருவனே. ஆகவே இராமன் இறைவன் எனும் முடிவுக்குத் தயரதன் வந் தான் என்க. வினைகள் சடப் பொருள்கள் ஆதலால் அவரவர் செய்த வினைப் பயன்களை நுகர. அறிவுமான வடிவான இறைவனே வழிவகுக்கின்றான் என்னும் தத்துவ உண்மை பற்றி. ‘‘இச்சிறுவனே வினைசெய்தோர்களுக்கு இம்மையும் மறுமையும் ஈயும்’’ என்றார். இம்மை மறுமை - ஆகுபெயர்கள்.*

*வருணனிடம் வில்லைத் தந்து அயோத்தி அடைதல்*

***1307. பூ மழை பொழிந்தனர் புகுந்த தேவருள்***
***வாம வேல் வருணனை. ‘மான வெஞ் சிலை***
***சேமி’ என்று உதவி. தன் சேனை ஆர்த்து எழ.***
***நாம நீர் அயோத்தி மா நகரம் நண்ணினான்.***

***பூ மழை பொழிந்தனர்*** - *(அப்பொழுது) பூமாரி பொழிந்தனராகி;* ***புகுந்த தேவருள்*** - *அங்கு வந்து அடைந்த தேவர் கூட்டத்துள்;* ***வாம வேல் வருணனை*** - *அழகிய வேற்படையினையுடைய வருண தேவனை (நோக்கி இராமபிரான்);* ***'மான வெஞ்சிலை சேமி'*** - *பெருமையும் கடுமையுமுடைய இந்த வில்லைப் பாதுகாத்து வைத்திரு';* ***என்று உதவு*** - *என்று கூறி. அவன்பால் அவ்வில்லைத் தந்து;* ***தன் சேனை ஆர்த்து எழ*** - *தன் சேனைகள் (வெற்றிக் களிப்பால்) ஆரவாரித்து (உடன்) புறப்பட;* ***நாமநீர் அயோத்தி மாநகரம் நண்ணினான்*** - *புகழ் மிகும் நீர்வளமுள்ள அயோத்தி மாநகரத்தைச் சென்றடைந்தான்.*

*இங்கு வருணனிடம் ஒப்படைக்கப்பட்ட வில் இராமன் கரனிடம் போரிடும் போது பெறப்படுகிறது. "அண்டர் நாதன் தடக்கையின் அத்துணைப் பண்டுபோர் மழு வாளியைப் பண்பினால் கொண்ட வில்லை வருணன் கொடுத்தனன்" (கம்ப. 3052) என்று பின்னர் மறவாமல் குறிப்பார். பொழிந்தனர் - முற்றெச்சம். வாமம்: அழகு. நாமம்: புகழ். அச்சமெனக் கொண்டு பகைவர் அஞ்சும் அகழிகளையுடைய அயோத்தி எனினுமாம். வருணனிடம் தந்தது அவன் அவதாரப் பணியில் (சேதுசமைக்க) பின்னர் உதவ உள்ளான் என்னும் திருவுளக் குறிப்பை யுட்கொண்டது.*

*தசரதன். பரதனைக் கேகய நாட்டிற்கு அனுப்பல்*

***1308. நண்ணினர். இன்பத்து வைகும் நாளிடை.***
***மண்ணுறு முரசு இனம் வயங்கு தானையான்.***
***அண்ணல். அப் பரதனை நோக்கி. ஆண்தகை.***
***எண்ண அருந் தகையது ஓர் பொருள் இயம்புவான்:***

***நண்ணினர்*** - *(யாவரும் அயோத்தியை) அடைந்தவர்களாய்;* ***இன்பத்து வைகும் நாளிடை*** - *இன்பத்தில் திளைக்கும் நாளில் (ஒரு நாள்);* ***ஆண்தகை*** - *ஆண்மைப் பண்புகள் நிறைந்தவனும்;* ***மண்ணுறு முரசு இனம் வயங்கு தானையான்*** - *மார்ச்சனை பொருந்திய பேரிகைகளின் கூட்டம் விளங்குகின்ற சேனையையுடையவனுமான தய ரதன்;* ***அண்ணல் அப்பரதனை நோக்கி*** - *பெருமைக்குரிய அப்பரதனைப் பார்த்து;* ***எண்ணருந் தகையது ஓர் பொருள்*** - *யாவரும் எண்ணாத ஒரு பொருளை;* ***இயம்புவான்*** - *சொல்லலானான்.*

*மார்ச்சனை: தோற்கருவிகள் சிலவற்றுள் தக்கவாறு ஒலியெழும்புதற்கேற்ப அடிக்கும் இடத்தைத் தகுதியாக அமைத்தற்கு உதவுவது. "அண்ணல் அப்பரதன்" எனும் தொடரில் அடைமொழிகள் பரதன் மாட்டுக் கவிஞர் பிரானுக்குரிய மதிப்பினைக் குறித்து நின்றன. இராமனுக்குப் பட்டம் சூட்ட வேண்டும்; அதற்குப் பரதன் தடையாய் இருத்தல்கூடும் என்று தயரதன் எண்ணியிருக்கலாம் என்பதை. ஒருவாறு உய்த்துணருமாறு. "எண்ணருந்தகையது ஓர்பொருள்" எனும் தொடரைக் கவிஞர் பிரான் அமைத்தார் எனக் கருதலாம்.*

***1309. 'ஆணையின் நினது மூதாதை. ஐய! நிற்***
***காணிய விழைவது ஓர் கருத்தன்; ஆதலால்.***
***கேணியில் வளை முரல் கேகயம் புக.***
***பூண் இயல் மொய்ம்பினாய்! போதி என்றனன்.***

***'ஐய!*** - ஐயனே!; ***மூதாதை ஆணையின்*** - உன்னுடைய பாட்டன் (இட்டுள்ள அன்புக்) கட்டளையின் வண்ணம்; ***நிற்காணிய விழைவது ஓர் கருத்தன்*** - உன்னைக் காண விரும்புகின்ற கருத்துடையவன் (எனத் தெரிகிறது); ***ஆதலால்*** - ஆகவே; ***கேணியில் வளை முரல் கேகயம் புக*** - நீர்நிலைகளிலே (ஓயாது) சங்குகள் ஒலித்தற்கு இடமான (நீர்வளமிக்க) கேகய நாட்டிற்குச் செல்ல; ***பூண் இயல் மொய்ம்பினாய்!;*** - அணிகள் விளங்கும் மார்பினையுடைய பரதனே!; ***போதி என்றனன் -*** புறப்படுவாயாக! என்று கூறினான் (தசரதன்).

*பரதனின் தாய் மாமன் யுதாசித்து. தன் தந்தை தான் பரதனைக் காண அழைத்து வருமாறு இட்ட கட்டளைப்படி அயோத்தி வர. அவர்கள் திருமணத்திற்காக மிதிலை சென்றிருப்பதையறிந்து மிதிலைக்குச் சென்று. அவர்களோடேயே அயோத்தி வந்து. பரதனை அழைத்துச் செல்லக் காத்திருந்தனன் எனும் முதல் நூற் கதைப்பகுதி இங்கு விளக்கம் பெற உதவும். மூதாதை - பாட்டன்; மாதா மகன். மொய்ம்பு - வலிமை. ஆகுபெயராய் மார்பினைக் குறித்தது. மங்கல நாதமாகிய சங்கொலி நீர்நிலைகள் எல்லாம் ஒலித்துக் கொண்டிருக்கும் மங்கல நாடு கேகயம் என்பதாம்.*

பரதன் கேயகம் செல்லல்

***1310. ஏவலும். இறைஞ்சிப் போய். இராமன் சேவடிப்***
***பூவினைச் சென்னியில் புனைந்து. போயினான் -***
***ஆவி அங்கு அவன் அலது இல்லை ஆதலான்.***
***ஓவல் இல் உயிர் பிரிந்து உடல் சென்றென்னவே.***

***ஏவலும்*** - (சக்கரவர்த்தியாகிய தந்தை) (இவ்வாறு) கட்டளையிட்ட பொழுதில்; ***இறைஞ்சிப் போய்*** - (பரதன் தந்தையை) வணங்கிச் சென்று; ***இராமன் சேவடிப் பூவினை*** - இராமபிரானது சிவந்த திருவடி மலர்களை; ***சென்னியில் புனைந்து*** - தன் திருமுடியிலே தரித்து (வணங்கி); ***அங்கு அவன் அலது ஆவி இல்லை ஆதலால்*** - அவ்விடம் உள்ள அந்த இராமபிரானையல்லாமல் (தனக்கு) வேறு உயிர் இல்லையாகையால்; ***ஓவல் இல் உயிர் பிரிந்து*** - (ஒரு பொழுதும்) நீங்குதல் இல்லாத உயிரைப் பிரிந்து; ***உடல் சென்று என்ன*** - உடல் தனித்துச் சென்றாற் போல; ***போயினான்*** - (இராமனை விட்டுப் பரதன்) புறப்பட்டான்.

*உடலைப் பிரிந்து உயிர் செல்லல் இயல்பாயிருக்க. இங்கு உயிரைப் பிரிந்து உடல் செல்வதைக் காண்க என்கிறார் கவிஞர்பிரான். இல்பொருள் உவமையணி. இராமன் பரதனின் உயிர் என்பதனை. "கானிடைப் போகிய கமலக் கண்ணனைத் தான் உடை உயிரினைத் தம்பி கண்டனன்" (கம்ப. 10260) எனும் மீட்சிப் படலப் பாடலாலும் உணரலாம். பக்தர் முடியில் சூடும் பூ எது என்பதனை. "சேவடிப் பூவினைச் சென்னியில் புனைந்து" என்பதனால் உணர்த்தினார். இறைவனும் அடியவரும் உயிரும் உடலும் ஆவர்.*

*கேகய நாடு அடைதல்*

***1311.* உளை விரி புரவித் தேர் உதாசித்து எனும்**
**வளை முரல் தானையான் மருங்கு போதப் போய்.**
**இளையவன் தன்னொடும். ஏழு நாளிடை.**
**நளிர் புனல் கேகய நாடு நண்ணினான்.**

**உளை விரி புரவித் தேர்** - *பிடரி மயிர்கள் பரந்த குதிரைகள் பூட்டிய தேரில்;* **உதாசித்து எனும்** - *உதாசித்து என்று சிறப்பிக்கப்படுகிற;* **வளைமுரல் தானையான்** - *சங்குகள் முழங்கும் சேனைக் குடையவன்;* **மருங்கு போத** - *தன் அருகில் வர;* **இளையவன் தன்னொடும் போய்** - *தன் தம்பியான சத்துருக்கனனோடும் சென்று;* **ஏழு நாளிடை நளிர்புனல் கேகய நாடு நண்ணினான்** - *ஏழு நாட்களிலே தண்ணிய நீர்வளம் மிக்க கேகய நாட்டையடைந்தான் (பரதன்).*

*அழைப்பு. பரதனுக்கேயாயினும் சத்துருக்கனனும் அழையாமலேயே உடன் சென்றது. அடியார்க்கு அடியன் ஆகும். சத்துருக்கனனின் திறம் உணர்த்தும். பரதனும் சத்ருக்கனனும் வடிவும் நிழலும் போல்வர். ஆதலின் பரதனுடன் பிரியாமற் செல்லல் சத்துருக்கனனுக்கு நேர்ந்தது. இருவரும் இணை பிரியாதவர் என்பதனை. "பரதனும் இளவலும் ஒரு நொடி பகிரா வரதனும் இளவலும் என மருவினரே" (கம்ப. 307) என முன்னும் உரைத்தார். இலக்குவன்" பகவானுக்கு அடிமை" எனும் பண்புச் சிறப்பை விளக்கவும். சத்துருக்கனன். "பாகவதர்க்கு அடிமை" எனும் பன்புச் சிறப்பினை விளக்கவும் படைக்கப்பட்ட பாத்திரங்கள் எனவும் பிரபந்தப் பேருரையாளர்கள் விளக்குவர்.*

*கவிக்கூற்று*

***1312.* ஆனவன் போனபின். அரசர் கோமகன்**
**ஊனம் இல் பேர் அரசு உய்க்கும் நாளிடை.**
**வானவர் செய்த மா தவம் உண்டு ஆதலால்.**
**மேல் நிகழ் பொருள் இனி விளம்புவாம்அரோ.**

**ஆனவன் போனபின்** - *அந்தப் பரதன் கேகய நாடு சென்ற பின்பு;* **அரசர் கோமகன்** *- அரசர்க்கு அரசனான தயரதன்;* **ஊனம் இல் பேரரசு** *- குற்றமற்ற பேரரசாட்சியை;* **உய்க்கும் நாளிடை** *- செலுத்தி வரும் நாட்களில்;* **வானவர் செய்த** *- தேவர்கள் புரிந்த;* **மா தவம் உண்டு ஆதலால்** *- (இராவணன் சங்காரம் குறித்த) பெரிய தவம் உள்ளதாதலால்;* **மேல் நிகழ் பொருள்** *- மேலே நிகழவுள்ள செயல்களை;* **இனி விளம்புவாம்** *- இனிமேல் (வரும் காண்டங்களில்) கூற உள்ளோம்.*

*ஒரு பேரரசைக் குற்றமேதும் இன்றிச் செலுத்துதல் அரியதாதலின். "ஊனமில் பேரரசு உய்க்கும் நாளிடை" என்று சிறப்பித்தார். இனிமேல் கைகேயி. கூனி வடிவில் ஊனங்கள் நுழையவுள்ளதையும் குறிப்பால் உணர்த்தினார். இனிமேல் நிகழ்வனவெல்லாம் வானவர் செய்த மாதவத்தால் நிகழ்வனவாம். "அரக்கர் பாவமும் அல்லலர் செய்திட்ட அறமும் துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழி மடமான்" (கம்ப. 1484) என்பது காண்க. "தேவர் செய் தவத்தினால் செம்மல் ஏகினான்" (கம்ப. 3337) என்பதும் அது.*

***பாலகாண்டம் நிறைந்தது***

## மிகைப் பாடல்கள்

### காப்பு

*1.* ***ஒன்று ஆய். இரண்டு சுடர் ஆய்.***
***ஒரு மூன்றும் ஆகி.***
***பொன்றாத வேதம் ஒரு நான்கொடு.***
***ஐம் பூதம் ஆகி.***
***அன்று ஆகி. அண்டத்து அகத்து ஆகி.***
***புறத்தும் ஆகி.***
***நின்றான் ஒருவன்; அவன் நீள் கழல்***
***நெஞ்சில் வைப்பாம்.***

***ஒன்றாய்*** - *பரம்பொருள் ஒன்றால்;* ***இருசுடர்*** - *பரிதி. மதி என்று இருசுடர்;* ***ஒரு மூன்று*** - *பிரமன் -திருமால் -சிவன்;* ***பொன்றாத வேதம்*** - *அழியாத வேதம்;* ***அன்று*** - *இல்லை;* ***நீள்கழல்*** - *நெடிய பாதம்.*

*2.* ***நீலம் ஆம் கடல். நேமி அம் தடக் கை***
***மாலை மால் கெட. வணங்குதும் மகிழ்ந்தே.***

***நீலம் ஆம் கடல்*** - *கடல் போன்ற நீல நிறமும்;* ***நேமி அம் தடக்கை*** - *திரு வாழி ஏந்திய நீண்ட கைகளையும் உடைய;* ***மாலை*** - *திருமாலை;* ***மால்கெட*** - *மயக்கம் நீங்க;* ***மகிழ்ந்து வணங்குதும்*** - *மகிழ்ந்து வணங்குவோமாக.*

*3.* ***காயும் வெண் பிறை நிகர் கடு ஒடுங்கு எயிற்று***
***ஆயிரம் பணாமுடி அனந்தன் மீமிசை.***
***மேய நான்மறை தொழ. விழித்து உறங்கிய***
***மாயன் மா மலர் அடி வணங்கி ஏத்துவாம்.***

*கடு* - ***நஞ்சு;*** *விழித்து உறங்கல்* - ***அறிதுயில்;*** *ஆயிரம் பணா முடி* - ***ஒப்பு பரிபாடல். 'கடுவொடு ஒடுங்கிய தூம்புடை வால்எயிறு' முருகாற்றுப்படை;*** *மாயன்* - ***கரியன்;*** *மாயம் வல்லவன்.*

***4. மாதுளங் கனியை. சோதி***
***வயங்கு இரு நிதியை. வாசத்***
***தாது உகு நறு மென் செய்ய***
***தாமரைத் துணை மென் போதை.***
***மோது பாற்கடலின் முன்நாள்.***
***முளைத்த நால் கரத்தில் ஏந்தும்***
***போது தாயாகத் தோன்றும்***
***பொன் அடி போற்றிசெய்வாம்.***

***மாதுளங்கனியை*** *- மாதுளங்கனி போன்ற நிறத்தினளை;* ***சோதி*** *- ஒளி;* ***வயங்குதல்*** *- விளங்குதல்;* ***நிதி*** *- செல்வம்;* ***தாது*** *- மகரந்தம்;* ***உகு*** *- சிந்தும்;* ***துணை*** *- இரண்டு;* ***போது*** *- மலர்;* ***தாய்*** *- இலக்குமி.*

***5. பராவ அரு மறை பயில் பரமன். பங்கயக்***
***கராதலம் நிறைபயில் கருணைக் கண்ணினான்.***
***அரா - அணைத் துயில் துறந்து அயோத்தி மேவிய***
***இராகவன். மலர்அடி இறைஞ்சி ஏத்துவாம்.***

***பராவ அருமறை*** *-போற்றுதற்கரிய வேதங்கள்;* ***பங்கயம்*** *- தாமரை;* ***கராதலம்*** *- கைகள்;* ***அராவணை*** *- பாம்புப்படுக்கை;* ***இராகவன்*** *- இராமன்;* ***இறைஞ்சி*** *- வணங்கி.*

***6. கலங்கா மதியும். கதிரோன் புரவிப்***
***பொலன் கா மணித் தேரும். போகா இலங்கா***
***புரத்தானை. வானோர் புரத்து ஏறவிட்ட***
***சரத்தானை. நெஞ்வே! தரி.***

***கலங்கா*** *- கலங்காத;* ***மதி*** *- சந்திரன்;* ***கதிரோன்*** *- சூரியன்;* ***பொலன்*** *- அழகிய;* ***இலங்காபுரத்தான்*** *- இராவணன்;* ***சரம்*** *- அம்பு;* ***சரத்தான்*** *- இராமன்;* ***தரி*** *- தரிக்கச் செய்:*

***7. 'நாராயணாய நம!' என்னும் நல் நெஞ்சர்***
***பார் ஆளும் பாதம் பணிந்து. ஏத்துமாறு அறியேன்;***
***கார் ஆரும் மேனிக் கருணாகர மூர்த்திக்கு***
***ஆராதனை என் அறியாமை ஒன்றுமே.***

***நல் நெஞ்சர்*** - *நல்ல மனமுடைய சான்றோர்;* ***ஏத்துமாறு*** - *போற்றும் வகை;* ***கார்*** - *மேகம்;* ***கருணாகரன்*** - *கருணை வடிவினன்;* ***மூர்த்தி*** - *வடிவம்;* ***ஆராதனை*** - *நிவேதனம்.*

***8.*** ***பராவரும் இராமன். மாதோடு***
***இளவள் பின் படரக் கான் போய்.***
***விராதனை. கரனை. மானை.***
***கவந்தனை. வென்றிகொண்டு.***
***மராமரம். வாலி மார்பு.***
***துளைத்து. அணை வகுத்து. பின்னர்.***
***இராவணன் குலமும் பொன்ற***
***எய்து. உடன் அயோத்தி வந்தான்.***

***பராவரும்*** - *துதிப்பதற்கு அரிய;* ***மாது*** - *சீதை;* ***இளவல்*** - *இலக்குவன்;* ***பின்படர*** - *பின்தொடர்ந்து வர;* ***கான்*** - *காடு;* ***துளைத்து*** - *துளைசெய்து;* ***அணை வகுத்து*** - *அணை அமைத்து;* ***பொன்ற*** - *அழிய;* ***எய்து*** - *அம்பெய்து.*

***9.*** ***தருகை நீண்ட தயரதன்தான் தரும்***
***இரு கை வேழத்து இராகவன்தன் கதை***
***திருகை வேலைத் தரைமிசைச் செப்பிட.***
***குருகை நாதன் குரை கழல் காப்பதே.***

***தருகை*** - *தருகின்ற கை (வினைத் தொகை) ;* ***வேழம்*** - *யானை;* ***திருகை வேலை*** - *சூழ்ந்துள்ள கடல்;* ***குருகைநாதன்*** - *திருக்குருகை நாதனான நம்மாழ்வார்;* ***குரை*** - *ஒலிக்கும்;* ***கழல்*** - *பாதங்கள்;* ***காப்பதே*** - *காக்குமாக.*

***10.*** ***அஞ்சிலே ஒன்று பெற்றான்.***
***அஞ்சிலே ஒன்றைத் தாவி.***
***அஞ்சிலே ஒன்று ஆறு ஆக.***
***ஆர் உயிர் காக்க ஏகி.***
***அஞ்சிலே ஒன்று பெற்ற***
***அணங்கைக் கண்டு. அயலார் ஊரில்***
***அஞ்சிலே ஒன்று வைத்தான்.***
***அவன் எம்மை அளித்துக் காப்பான்.***

***அஞ்சிலே ஒன்று*** - *காற்று;* ***அஞ்சிலே ஒன்றை*** - *கடலை;* ***அஞ்சிலே ஒன்று ஆறு ஆக*** - *வான் வழியாக;* ***ஆருயிர்*** - *சீதாபிராட்டியின் உயிர்;* ***அஞ்சிலே ஒன்று பெற்ற*** - *நிலமகள் பெற்ற;* ***அணங்கு*** - *சீதை;* ***அயலார்*** - *பகைவர்;* ***அஞ்சிலே ஒன்று*** - *நெருப்பு.*

*11.* ***எவ் இடத்தும். இராமன் சரிதை ஆம்***
***அவ் இடத்திலும். அஞ்சலி அத்தனாய்.***
***பவ்வ மிக்க புகழ்த் திருப் பாற்கடல்***
***தெய்வ தாசனைச் சிந்தை செய்வாம்அரோ.***

***சரிதை*** *- கதை;* ***அஞ்சலி அத்தம்*** *- கூப்பிய கை (அத்தம் - கை) ;* ***பவ்வமிக்க புகழ்*** *- கடல் போல் திரண்ட புகழ்;* ***தெய்வ தாசன்*** *- தெய்வத்தின் தொண்டன் (இங்கு அனுமன்).*

*12.* ***பொத்தகம். படிகமாலை. குண்டிகை.***
***பொருள் சேர் ஞான***
***வித்தகம் தரித்த செங் கை***
***விமலையை. அமலைதன்னை.***
***மொய்த்த கொந்து அளக பார***
***முகிழ் முலைத் தவள மேனி***
***மைத் தகு கருங் கண் செவ் வாய்***
***அணங்கினை. வணங்கல் செய்வாம்.***

***பொத்தகம்*** *- ஏட்டுச்சுவடி;* ***படிகமாலை*** *- வெண் பளிங்கு மாலை;* ***குண்டிகை*** *- கமண்டலம்;* ***ஞான வித்தகம்*** *- ஞானமுத்திரை;* ***விமலை*** *- குற்றமற்றவள் (கலைமகள்);* ***கொந்து*** *- கொத்து;* ***அளக பாரம்*** *- கூந்தல்;* ***தவளமேனி*** *- வெண்மைநிறமான உடம்பு;* ***மைத்தரு*** *- மை போன்ற;* ***அணங்கு*** *- தெய்வ மகள்.*

*13.* ***தழை செவி. சிறு கண். தாழ் கைத்***
***தந்த சிந்துரமும். தாரை***
***மழை மதத் தறுகண் சித்ர***
***வாரண முகத்து வாழ்பவை.***
***இழைஇடைக் கலசக் கொங்கை***
***இமகிரி மடந்தை ஈன்ற***
***குழவியைத் தொழுவன். அன்பால் -***
***'குறைவு அற நிறைக' என்றே.***

***தழை செவி*** *- தழைத்த காது;* ***சிறுகண்*** *- சிறியகண்;* ***தாழ்கை*** *- நீண்டகை;* ***தாரை மழை மதம்*** *- மழைத்தாரையாய்ப் பொழியும் மதநீர்;* ***தறுகண்*** *- வலிமை;* ***சித்ரவாரணம்*** *- அழகிய யானை;* ***இழை*** *- நூல்;* ***கலசம்*** *- குடம்;* ***இமகிரிமடந்தை*** *- இமயமலை யரசன் மகள்;* ***குழவி*** *- குழந்தை (விநாயகன்);* ***தொழுவன்*** *- வணங்குவேன்;* ***குறைவு அற*** *- குறைகள் நீங்க;* ***நிறைக*** *- நன்மை நிறைய.*

*14.* ***எக் கணக்கும் இறந்த பெருமையன்.***
***பொக்கணத்தன். புலி அதள் ஆடையன்.***

***முக்கண் அத்தன். வரம் பெற்ற மூப்பனை.***
***அக் கணத்தின் அவன் அடி தாழ்ந்தனம்.***

*எக்கணக்கும் - எந்தக் கணக்கையும்;* ***பொக்கணம்*** *- ஒரு வகைப் பை;* ***புலிஅதள்*** *- புலித் தோல்;* ***முக்கண் அத்தன்*** *- முக்கண் மூர்த்தி (சிவபெருமான்);* ***அப்பன்*** *- தலைவன்;* ***அக்கணத்தின்*** *- அந்தக் கணத்திலே.*

***தனியன்***

*15.* ***நாரணன் விளையாட்டு எல்லாம்***
***நாரத முனிவன் கூற.***
***ஆரணக் கவிதை செய்தான்.***
***அறிந்த வான்மீகி என்பான்;***
***சீர் அணி சோழ நாட்டுத்***
***திருவழுந்தூருள் வாழ்வோன்.***
***கார் அணி கொடையான். கம்பன்.***
***தமிழினால் கவிதை செய்தான்.***

***நாரணன் விளையாட்டு*** *- திருமாலின் திருவிளையாடல்;* ***ஆரணம்*** *- வேதம்;* ***சீர்அணி*** *- சிறப்புடைய;* ***திருவழுந்தூர்*** *- தேரழுந்தூர்;* ***கார்அணி*** *- மேகம் போன்ற;* ***கொடை*** *- ஈகை;* ***கவிதை*** *- செய்யுள்.*

*16.* ***அம்பிலே சிலையை நாட்டி***
***அமரர்க்கு அன்று அமுதம் ஈந்த***
***தம்பிரான் என்ன. தானும்***
***தமிழிலே தாலை நாட்டி.***
***கம்ப நாடு உடைய வள்ளல்.***
***கவிச் சக்ரவர்த்தி. பார்மேல்***
***நம்பு பாமாலையாலே***
***நரர்க்கும் இன் அமுதம் ஈந்தான்.***

***அம்பு*** *- தண்ணீர் (இங்குப் பாற்கடல்);* ***சிலை*** *- மலை (மந்தர மலை);* ***அமரர்*** *- தேவர்கள்;* ***அமுதம் ஈந்த தம்பிரான்*** *- திருமால்;* ***தால்*** *- நாவு;* ***நரர்க்கு*** *- மானிடர்களுக்கு;* ***ஈந்தான்*** *- தந்தான்.*

***17.*** ***வாழ்வு ஆர்தரு வெண்ணெய் நல்லூர்ச்***
***சடையப்பன் வாழ்த்துப் பெற.***
***தாழ்வார் உயர. புலவோர்***
***அகஇருள் தான் அகல***
***போழ் வார் கதிரின் உதித்த***
***தெய்வப் புலமைக் கம்ப நாட்டு***
***ஆழ்வார் பதத்தைச் சிந்திப்பவர்க்கு***
***யாதும் அரியது அன்றே.***

***வாழ்வு ஆர்தரு*** - *நல்வாழ்வு பொருந்திய;* ***அகஇருள்*** - *உள் இருள் (அகம் - மனம்);* ***அகல*** - *நீங்க;* ***போழ்வார் கதிர்*** - *காலத்தில் மிக்குப் பொலியும் பரிதி;* ***சிந்திப்பவர்க்கு*** - *நினைப்பவர்களுக்கு;* ***அரியது*** - *செய்தற்கரியசெயல்.*

***18.*** ***அம்பு அரா அணி சடை அரன் அயன் முதல்***
***உம்பரால். முனிவரால். யோகரால். உயர்***
***இம்பரால். பிணிக்க அரும் இராம வேழம் சேர்***
***கம்பர் ஆம் புலவரைக் கருத்து இருத்துவாம்.***

***அம்பு*** - *நீர் (கங்கை);* ***அரா*** - *பாம்பு;* ***அணி*** - *அணிந்த;* ***உம்பர்*** - *தேவர்;* ***இம்பர்*** - *இவ்வுலகத்தோர்;* ***பிணிக்க*** - *கட்ட;* ***வேழம்*** - *யானை;* ***கருத்து*** - *உள்ளத்தில்;* ***இருத்துவாம்*** - *இருக்கச் செய்வோம்.*

***19.*** ***சம்பு. அ(ந்)நாள். தன் உமை செவி சாற்று பூங்***
***கொம்பு அனாள்தன் கொழுநன் இராமப் பேர்***
***பம்ப நாள் தழைக்கும் கதை பாச் செய்த***
***கம்பநாடன் கழல் தலையில் கொள்வாம்.***

***சம்பு*** - *சிவபிரான்;* ***உமைசெவி*** - *உமாதேவியின் காதுகளில்;* ***பூங்கொம்பு அன்னாள்*** - *மலர்க் கொம்பு போன்றவள் (சீதை) ;* ***கொழுநன்*** - *கணவன்;* ***பாச்செய்த*** - *பாக்களால் செய்த;* ***பம்ப*** - *பொலிய.*

***20.*** ***இம்பரும் உம்பர்தாமும்***
***ஏத்திய இராம காதை***
***தம்பமா முத்தி சேர்தல்***
***சத்தியம் சத்தியம்மே;***
***அம்பரம் தன்னில் மேவும்***
***ஆதித்தன் புதல்வன் ஞானக்***
***கம்பன் செங் கமல பாதம்***
***கருத்துற இருத்துவாமே.***

***இம்பர்*** *- இவ்வுலகத்தோர்;* ***உம்பர்*** *- விண்ணுலகத்தோர்;* ***ஏத்திய*** *- போற்றிய;* ***தம்பம்*** *- பற்றுக்கோடு;* ***ஞானக் கம்பன்*** *- ஞானத்தை உடைய கம்பன்;* ***செங்கமலம்*** *- செந்தாமரை;* ***கருத்துற*** *- உள்ளத்தில் பொருந்தி நிற்க;* ***ஆதித்தன்*** *- கம்பனது தந்தையின் பெயர் என்பர்.*

***21.*** ***ஆதவன் புதல்வன். முத்தி***
***அறிவினை அளிக்கும் ஐயன்.***
***போதவன் இராம காதை***
***புகன்றருள் புனிதன். மண்மேல்***
***கோது அவம் சற்றும் இல்லான்.***
***கொண்டல் மால்தன்னை ஒப்பான்.***
***மா தவன் கம்பன் செம் பொன்***
***மலர்அடி தொழுது வாழ்வாம்.***

***ஐயன்*** *- தலைவன்;* ***அளிக்கும்*** *- கொடுக்கும்;* ***போதவன்*** *- அறிவு மிக்கவன்;* ***புகன்று*** *- கூறி;* ***புனிதன்*** *- தூய்மையாளன்;* ***கோது*** *- குற்றம்;* ***அவம்*** *- வீணான;* ***கொண்டல்மால்*** *- மேகம் போன்ற திருமால்;* ***செம்பொன்*** *- செம்மையானபொன்.*

***22.*** ***ஆவின் கொடைச் சகரர் ஆயிரத்து நூறு ஒழித்து.***
***தேவன் திருவழுந்தூர் நல் நாட்டு - மூவலூர்ச்***
***சீர் ஆர் குணாதித்தன் சேய் அமையப் பாடினான்***
***கார் ஆர் காகுத்தன் கதை.***

***ஆவின் கொடை*** *- ஆக்களைக் கொடையாக அளித்த;* ***திருவழுந்தூர் நல் நாட்டு மூவலூர்*** *- திருவழுந்தூர் நாட்டைச் சேர்ந்த மூவலூர்;* ***குண ஆதித்தன்*** *- நல்ல குணம் உள்ள ஆதித்தன்;* ***சேய்*** *- பிள்ளை;* ***கார்ஆர்*** *- மேகம் போன்று நிறம்;* ***காகுத்தன்*** *- இராமன்.*

23. ***எண்ணி சகாத்தம் எண்ணூற்று***
***ஏழின்மேல். சடையன் வாழ்வு***
***நண்ணிய வெண்ணெய் நல்லூர்***
***தன்னிலே கம்பநாடன்***
***பண்ணிய இராம காதை***
***பங்குனி அத்த நாளில்.***
***கண்ணிய அரங்கர் முன்னே.***
***கவி அரங்கேற்றினானே.***

*சகாத்தம்* - ***சாலிவாகன சகாப்தம் (807) ;*** *பங்குனி அத்த நாள்* - ***பங்குனி மாதம் அஸ்தம நட்சத்திரத்தன்று;*** *அரங்கர் முன்னே* - ***திருவரங்கப் பெருமான் முன்பு;*** *அரங்கேறினான்* - ***அரங்கேற்றம் செய்தான்.***

24. ***கழுந்தராய் உன கழல் பணியாதவர்***
***கதிர்மணி முடிமீதே***
***அழுந்த வாளிகள் தொடு சிலை இராகவ!***
***அபிநவ கவிநாதன்***
***விழுந்த நாயிறுஅது எழுவதன்முன்.***
***மறை வேதியருடன் ஆராய்ந்து.***
***எழுந்த நாயிறு விழுவதன்முன்***
***கவி பாடியது எழுநூறே.***

***கழுந்தராய்*** - *கழுந்து போன்றவராய் (கழுந்து - உலக்கை);* ***உன கழல்*** - *உனது பாதங்களை;* ***வாளி*** - *அம்பு;* ***தொடு*** - *எய்த;* ***சிலை*** - *வில்;* ***அபிநவம்*** - *புதுமை;* ***கவிநாதள்*** - *கவிஞர்தலைவன்;* ***நாயிறு*** - *சூரியன்.*

25. ***கரை செறி காண்டம் ஏழு.***
***கதைகள் ஆயிரத்து எண்ணூறு.***
***பரவுறு சமரம் பத்து.***
***படலம் நூற்றிருபத்தெட்டே;***
***உரைசெயும் விருத்தம் பன்னீ***
***ராயிரத்து ஒருபத்தாறு;***
***வரம் மிகு கம்பன் சொன்ன***
***வண்ணமும் தொண்ணூற்றாறே.***

*காண்டம் எழு ;கதைகள் ஆயிரத்து எண்ணூறு;போர்கள் பத்து; படலம் நூற்று இருபத்தெட்டு; வண்ணம் (சந்தம்) தொண்ணூற்று ஆறு;* ***வரம் மிகு கம்பன்*** - *வரபலம் மிகுந்த கம்பன்.*

***26.	தராதலத்தின் உள்ள தமிழ்க் குற்றம் எல்லாம்***
***அராவும் அரம் ஆயிற்று அன்றே -இராவணன்மேல்***
***அம்பு நாட்டு ஆழ்வான் அடி பணியும் ஆதித்தன்***
***கம்ப நாட்டு ஆழ்வான் கவி.***

***தராதலம்*** - *உலகம்;* ***அரம்*** - *இரும்பை ராவும் கருவி;* ***அம்பு நாட்டு ஆழ்வான்*** - *அம்பை நாட்டி ஆழ்த்தியவன் (இராமன்);* ***கம்ப நாட்டாழ்வான்*** - *கம்பன்.*

***27.	இம்பர் நாட்டில் செல்வம் எல்லாம்***
***எய்தி. அரசு ஆண்டு இருந்தாலும்.***

***உம்பர் நாட்டில் கற்பகக் கா***
***ஓங்கும் நீழல் இருந்தாலும்.***
***செம்பொன்மேரு அனைய புயத்***
***திறல் சேர் இராமன் திருக் கதையில்***
***கம்பநாடன் கவிதையில்போல்.***
***கற்றோர்க்கு இதயம் களியாதே.***

***இம்பர் நாட்டின்*** - *இவ்வுலகத்தின்;* ***எய்தி*** - *அடைந்து;* ***அரசாண்டு*** - *ஆட்சி செய்து;* ***உம்பர் நாட்டின்*** - *விண்ணுலகத்தின்;* ***கற்பகக் கா*** - *கற்பகச் சோலை;* ***நீழல்*** - *நிழல்;* ***மேரு அனைய*** - *மேரு மலை போன்ற;* ***புயம்*** - *தோள்;* ***திறல்*** - *வலிமை;* ***கவிதை*** - *பாடல்;* ***இதயம்*** - *மனம்;* ***களியாது*** - *மகிழாது.*

***28.	நாரதன் கருப்பஞ் சாறாய்.***
***நல்ல வான்மீகன் பாகாய்.***
***சீர் அணி போதன் வட்டாய்.***
***செய்தனன்; காளிதாசன்.***
***பார் அமுது அருந்தப் பஞ்ச -***
***தாரையாய்ச் செய்தான்; கம்பன்.***
***வாரம் ஆம் இராமகாதை***
***வளம் முறை திருத்தினானே.***

***கருப்பஞ்சாறு*** - *கரும்புச் சாறு;* ***பாகு*** - *சக்கரைப் பாகு;* ***வட்டு*** - *வெல்லக்கட்டி;* ***பஞ்சதாரை*** - *சர்க்கரை;* ***பார் அமுது அருந்த*** - *உலகம் அமுதாக உண்ண;* ***வாரம்*** - *அன்பு.*

*29.* ***நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே;***
***தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே;***
***சென்மமும் மரணமும் இன்றித் தீருமே -***
***இம்மையே இ'ராம' என்று இரண்டு எழுத்தினால்.***

***நல்கும்*** *- வழங்கும்;* ***தின்மை*** *- தீமை;* ***தேயும்*** *- தேய்ந்து போகும்;* ***சென்மம்*** *- பிறப்பு;* ***மரணம்*** *- இறப்பு;* ***இன்றி*** *- இல்லாது;* ***இம்மையே*** *- இவ்வுலகிலேயே;*

*30.* ***ஓர் ஆயிரம் மகம் புரி பயனை உய்க்குமே;***
***நராதிபர் செல்வமும் புகழும் நல்குமே.***
***விராய் எணும் பவங்களை வேர் அறுக்குமே -***
***'இராம' என்று ஒரு மொழி இயம்பும்காலையே.***

***மகம்*** *- வேள்வி;* ***உய்க்கும்*** *- சேர்க்கும்;* ***நராதிபர்*** *- அரசர்;* ***விராய்*** *- கலந்து;* ***எணும்*** *- எண்ணும்;* ***பவம்*** *- பிறப்பு;* ***இயம்பும் காலை*** *- சொல்லும் போது;* ***வேர் அறுக்கும்*** *- வேருடன் அழிக்கும்.*

*31.* ***மற்று ஒரு தவமும் வேண்டா;***
***மணி மதில் இலங்கை மூதூர்***
***செற்றவன் விசயப் பாடல்***
***தெளிந்து. அதில் ஒன்றுதன்னைக்***
***கற்றவர். கேட்போர். நெஞ்சில்***
***கருதுவோர். இவர்கள் பார்மேல்***
***உற்று அரசு ஆள்வர்; பின்னும்***
***உம்பராய் வீட்டில் சேர்வார்.***

***மணி மதில்*** *-அழகிய மதில்;* ***மூதூர்*** *- பழமையான ஊர்;* ***விசயம்*** *- வெற்றி;* ***செற்றவன்*** *- வென்றவன்;* ***உம்பராய்*** *- தேவராய்;* ***வீட்டில்*** *- பேரின்ப வீட்டில்.*

*32.* ***வென்றி சேர் இலங்கையானை***
***வென்ற மால் வீரம் ஓத***
***நின்ற ராமாயணத்தில்***
***நிகழ்ந்திடு கதைகள் தம்மில்***
***ஒன்றினைப் படித்தோர் தாமும்.***
***உரைத்திடக் கேட்டோர் தாமும்.***
***'நன்று இது' என்றோர் தாமும்.***
***நரகம்அது எய்திடாரே.***

***வென்றி*** - *வெற்றி;* ***இலங்கையான்*** - *இராவணன்;* ***மால்*** - *திருமால்;* ***ஓத*** - *கூற;* ***நின்ற*** - *நிலைபெற்ற;* ***நிகழ்ந்திடு*** - *நடைபெறுகின்ற;* ***நரகம் அது எய்திடார்*** - *நரகத்தை அடைய மாட்டார்கள்.*

***33. இறு வரம்பில் 'இராம' என்றோர். உம்பர்***
***நிறுவர் என்பது நிச்சயம்; ஆதலால்.***
***மறு இல் மாக்கதை கேட்பவர் வைகுந்தம்***
***பெறுவர் என்பது பேசவும் வேண்டுமோ?***

***இறுவரம்பு*** - *இறுதிக்காலம் (உயிர் விடும் போது);* ***உம்பர்*** - *சுவர்க்கம்;* ***நிறுவர்*** - *நிலைப்பர்;* ***மறு இல்*** - *குற்றமில்லாத;* ***மாக்கதை*** - *சிறந்த கதை;* ***பெறுவர்*** - *அடைவர்;* ***பேசவும்*** - *சொல்லவும்.*

***34. அன்னதானம். அகில நல் தானங்கள்.***
***கன்னி தானம். கபிலையின் தானமே.***
***சொன்ன தானப் பலன் எனச் சொல்லுவார் -***
***மன் இராம கதை மறவார்க்குஅரோ.***

***அன்னம்*** - *சோறு;* ***அகிலம்*** - *எல்லாம்;* ***கபிலை*** - *பசு;* ***சொன்னம்*** - *பொன்;* ***மன்*** - *நிலைபெற்ற;* ***மறவார்க்கு*** - *மறக்காதவர்க்கு.*

***35. வட கலை. தென் கலை. வடுகு. கன்னடம்.***
***இடம் உள பாடை யாது ஒன்றின்ஆயினும்.***
***திடம் உள ரகு குலத்து இராமன்தன் கதை***
***அடைவுடன் கேட்பவர் அமரர் ஆவரே.***

***வடகலை*** - *வட மொழி;* ***தென்கலை*** - *தென் மொழி (தமிழ்);* ***வடுகு*** - *தெலுங்கு;* ***பாடைகள்*** - *மொழிகள் (பாஷை) ;* ***திடம்*** - *வல்லமை;* ***ரகுகுலம்*** - *சூரிய குலம்;* ***அடைவுடன்*** - *முறையாக;* ***அமரர்*** - *விண்ணவர்.*

***36. இத் தலத்தின் இராமாவதாரமே***
***பத்திசெய்து. 'பரிவுடன் கேட்பரேல்.***
***புத்திரர்த் தரும்; புண்ணியமும் தரும்;***
***அத் தலத்தில் அவன் பதம் எய்துமே.***

**இத்தலத்தின்** - *இவ்வுலகத்திலே;* **இராமாவதாரம்** - *இராமாயணம்;* **பத்தி** - *பக்தி;* **பரிவுடன்** - *அன்புடன்;* **அத்தலம்** - *மறு உலகம்;* **அவன்பதம்** - *பரமபதம்;* **எய்தும்** - *அடையும்.*

***37.*** ***'ஆதி "அரி ஓம் நம" நராயணர் திருக் கதை***
***அறிந்து. அனுதினம் பரவுவோர்.***
***நீதி அனுபோக நெறி நின்று. நெடுநாள் அதின்***
***இறந்து. சகதண்டம் முழுதுக்கு***
***ஆதிபர்களாய் அரசு செய்து. உளம் நினைத்தது***
***கிடைத்து. அருள் பொறுத்து. முடிவில்***
***சோதி வடிவு ஆய். அழிவு இல் முத்தி பெறுவார்' என***
***உரைத்த. சுருதித் தொகைகளே.***

*நராயணர்* ***- நாராயணர்;*** *அனுதினம்* ***- நாள்தோறும்;*** *பரவுவோர்* ***- சொல்லுவோர்;*** *சகதண்டம்* ***- உலகம் முழுவதுக்கும்;*** *ஆதிபர்* ***- அதிபர் (உரியவர்);*** *சோதி வடிவு* ***- ஒளி வடிவம்;*** *சுருதித் தொகை* ***- நூல்களின் தொகை.***

***38.*** ***இராகவன் கதையில். ஒரு கவிதன்னில்***
***ஏக பாதத்தினை உரைப்போர்.***
***பராவ அரும் மலரோன் உலகினி. அவனும்***
***பல் முறை வழுத்த. வீற்றிருந்து.***
***புராதன மறையும் அண்டர் பொன் பதமும்***
***பொன்றும் நாள் அதனினும். பொன்றா***
***அரா-அணை அமலன் உலகு எனும் பரம***
***பதத்தினை அடைகுவர் அன்றே.***

**இராகவன்** - *இராமன்;* **ஏக பாதம்** - *ஒரு வரி;* **பராவரும்** - *பரவுதற்கு அரிய;* **மலரோன்** - *பிரமன்;* **வழுத்த** - *துதிக்க;* **புராதன** - *பழமையான;* **அண்டர் பொன்பதம்** - *தேவருலகம்;* **பொன்றும்** - *அழியும்;* **அரா அணை** - *பாம்புப் படுக்கை;* **அமலன்** - *திருமால்.*

***39.*** ***இனைய நல் காதை முற்றும்***
***எழுதினோர். வியந்தோர். கற்றோர்.***
***அனையதுதன்னைச் சொல்வோர்க்கு***
***அரும் பொருள் கொடுத்துக் கேட்டோர்.***
***கனை கடல் புடவி மீது***
***காவலர்க்கு அரசுஆய் வாழ்ந்து.***
***வினையம் அது அறுத்து. மேல் ஆம்***
***விண்ணவன் பதத்தில் சேர்வார்.***

***இனைய*** - *இத்தகைய;* ***காதை*** - *கதை;* ***முற்றும்*** - *முழுவதும்;* ***அரும்பொருள்*** - *அரிய செல்வம்;* ***கனைகடல்*** - *ஒலிக்கும் கடல்;* ***புடவி மீது*** - *உலகத்தின் மேல்;* ***காவலர்*** - *மன்னர்;* ***வினையம்*** - *தீவினை;* ***விண்ணவர் பதம்*** - *பேரின்ப வீடு.*

***40. நாடிய பொருள் கைகூடும்;***
***ஞானமும் புகழும் உண்டாம்;***
***வீடு இயல் வழிஅது ஆக்கும்;***
***வேரி அம் கமலை நோக்கும்;-***
***நீடிய அரக்கர் சேனை***
***நீறுபட்டு அழிய. வாகை***
***சூடிய சிலை இராமன்***
***தோள் வலி கூறுவோர்க்கே.***

***நாடிய*** - *விரும்பிய;* ***ஞானம்*** - *மெய்யறிவு;* ***வீடு*** - *பேரின்ப வீடு;* ***வேரி*** - *மணம்;* ***கமலை*** - *மலர்மகள்;* ***நீடிய*** - *நீண்ட;* ***நீறு*** - *புழுதி;* ***வாகை*** - *வெற்றிமாலை;* ***சிலை*** - *வில்.*

***41. வான் வளம் சுரக்க! நீதி***
***மனு நெறிமுறை எந் நாளும்***
***தான் வளர்ந்திடுக! நல்லோர்***
***தம் கிளை தழைத்து வாழ்க!***
***தேன் வளர்ந்து அறாத மாலைத்***
***தெசரத ராமன் செய்கை***
***யான் அளந்து அறிந்த பாடல்***
***இடையறாது ஒளிர்க. எங்கும்!***

***வான்*** - *வானம் (மழை);* ***கிளை*** - *சுற்றம்;* ***அறாத*** - *நீங்காத;* ***தெசரத ராமன்*** - *தசரத ராமன் (மோனை கருதி 'தெச' என்றார்);* ***இடை அறாது*** - *இடைவிடாமல்;* ***ஒளிர்க*** - *விளங்குக.*

**பாயிரம்**

***42.*** ***எறிகடல் உலகம்தன்னுள்***
***இன்தமிழ்ப் புலவர்க்கு எல்லாம்***
***முறுவலுக்கு உரியதாக***
***மொழிந்தனென்; மொழிந்த என்சொல்***
***சிறுமையும். சிலை இராமன்***
***கதைவழிச் செறிதல் தன்னால்.***
***அறிவுடை மாந்தர்க்கு எல்லாம்***
***அமிழ்தம் ஒத்து இருக்கும் அன்றே.***

***எறிகடல்*** - *ஒலிக்கும் கடல்;* ***இன்றமிழ்*** - *இனிய தமிழ்;* ***முறுவல்*** - *புன்சிரிப்பு;* ***மொழிந்த*** - *கூறிய;* ***சிறுமை*** - *தாழ்வு;* ***செறிந்த*** - *சேர்ந்த;* ***அமிழ்தம்*** - *அமுதம்;* ***ஒத்து*** - *போல. -1*

***நாட்டுப் படலம்***

***43.*** ***காளையர் சேறுதன்னைக்***
***கலந்து. உடன் மிதித்து. நட்ட***
***தாள்களும் கழுநீர் நாறும்;***
***தடக் கையும் அதுவே நாறும்;***
***ஆளையும் சீறிப் பீறி.***
***அணி மலர்க் கமுகில் பாய்ந்த***
***வாளையும். பாளை நாறும்;***
***வயல்களும் அதுவே நாறும்.***

***காளையர்*** - *காளை போன்றவர் (மழவர்);* ***கழுநீர்*** - *செங்கழு நீர் மலர்;* ***தடம் கை*** - *பெரிய கை;* ***அணிமலர் கமுகு*** - *அழகிய மலரை உடைய கமுகு. -1 உழவர்கள் சேற்றை மிதிக்க அங்கு மலர்ந்துள்ள செங்கழுநீர் மலரின் மணத்தால் தாள்களும் கைகளும் அந்த மலர்மணமே கமழும். வாளைமீன்கள் கமுகில் பாய்வதால் அந்த வாளை மீன்களும் வயல்களும் கமுகம் பாலை மணம்கமழும்.*

***நகரப் படலம்***

*44.* ***எங்கும் பொலியும் பரஞ் சுடர் ஆகி.***
***எவ் உயிரும்***
***மங்கும் பிறவித் துயர் அற.***
***மாற்று நேசம்***
***தங்கும் தருமத்து உரு ஆகி.***
***தரணி மீது***
***பொங்கும் கருணைப் புத்தேள் கருத்து***
***யாம் எவன் புகல்வோம்?***

***பொலியும்*** *- விளங்கும்;* ***பரஞ்சுடர்*** *- மேலான ஒளி;* ***தரணி*** *- உலகம்;* ***புத்தேள்*** *- இறைவன்;* ***தருமத்து உரு*** *- அறத்தின் வடிவம். **-1***

*45.* ***வேதம்அதனுள் விளை பொருள்***
***விகற்பத்துள் அடங்காச்***
***சோதி மயமாய்த் துலங்கி.***
***தொல்உயிர்த் தொகை பலவாய்.***
***ஓது புவனம் உதரத்துள்***
***ஒடுக்கியே. பூக்கும்***
***ஆதி முதல்வன் அமர் இடம்***
***அயோத்தி மா நகரம்.***

***விளைபொருள்*** *- விளைந்த பொருள்;* ***விகற்பம்*** *- வேறுபாடு;* ***தொல் உயிர்*** *- பழைமையான உயிர்;* ***புவனம்*** *- உலகம்;* ***உதரம்*** *- வயிறு;* ***ஆதி முதல்வன்*** *- ஆதியாகிய முதல் பொருள்;* ***அமர்*** *- அமர்ந்திருக்கும். - **2***

***அரசியற் படலம்***

*46.* ***விரி கதிர் பரப்பி. மெய்ப் புவனம் மீது இருள்***
***பருகுறும் பரிதி அம் குலத்தில். பார்த்திவன்***
***இரகு. மற்று அவன் மகன் அயன் என்பான். அவன்***
***பெருகு மா தவத்தினில் பிறந்த தோன்றலே.***

***விரிகதிர்*** *- விரிந்த கிரணங்கள்;* ***பருகுறும்*** *- உண்ணுகின்ற;* ***பார்த்திபன்*** *- அரசன்;* ***பெருகு*** *- பெருகிய;* ***தோன்றல்*** *- மகன் (தயரதன்).*

*47.* ***'பொறை இலா அறிவு. போகப்***
***புணர்ப்பு இலா இளமை. மேவத்***
***துறை இலா வனச வாவி.***
***தூசு இலார் போலித் தூய்மை.***
***நறை இலா மலரும். கல்வி***
***நலம் இலாப் புலமை. நன்னீர்ச்***
***சிறை இலா நகரும். போலும்.***
***சேய் இலாச் செல்வம்' என்றான்.***

***பொறை*** *- பொறுமை;* ***போகப்புணர்வு*** *- இன்ப நுகர்ச்சி;* ***துறை*** *- இறங்குதுறை;* ***வனசவாவி*** *- தாமரைத் தடாகம்;* ***நறை*** *- மணம்;* ***சேய்*** *- குழந்தை. -1*

*48.* ***கறை மிடற்று அண்ணலும் கடவுளோர்களும்***
***மறை முதற் கிழவனை வந்து நண்ணலும்***
***முறைமையின் கடன் முறை முற்றி. முண்டகத்து***
***இறைவனும். அவரொடும் இனிதின் ஏகினான்.***

***கறை மிடறு*** *- கறுத்த மிடறு;* ***அண்ணல்*** *- சிவபிரான்;* ***மறை*** *- வேதம்;* ***கிழவன்*** *- பிரமன்;* ***முண்டகம்*** *- தாமரை;* ***இனிதின்*** *- மகிழ்வுடன். -2*

*49.* ***என்று இனையன பல இயம்பி. 'எங்கணும்.***
***கன்றி. அவ் அரக்கரை அழித்துக் காத்தியேல்.***
***ஒன்றிய உயிர்களும். உலகு யாவையும்***
***இன்று நீ படைத்தி' என்று இசைத்து. பின்னரும்.***

***இனையன*** *- இத்தகைய;* ***ஒன்றிய*** *- நெருங்கிய;* ***எங்கணும்*** *- எங்கும்;* ***காத்தியேல்*** *- காப்பாயானால்;* ***இசைத்து*** *- கூறி;* ***பின்னரும்*** *- மறுபடியும். -4*

*50.* ***ஆயவர் அயன் முதல் அமரர். ஈறு இலா***
***நாயகன் இரு பதம் நயந்து. சிந்தைமீது***
***ஓய்வு இலாது. அவன் அரு மறைகள் ஓதியே.***
***நேயமோடு இருந்து. இவை நிகழ்த்தல் மேயினார்.***

*ஆயவர் - அத்தகையோர்; ஈறு இலா - முடிவில்லாத; பதம் - பாதம்; அருமறை - அரிய மறைகள்; ஓதி - கூறி; மேயினார் - தொடங்கினர். 8 -1*

*51.* ***‘காத்தி நீ எமை; காக்கிலர் தம்மை யாம்***
***ஏத்தியே இளைத்தோம்; இறைவா! இடர்ப்***
***பார்த்தியோ? - திருப் பாற்கடற் பள்ளியின்***
***மூர்த்தியே! முதல்வா! முகில் மேனியாய்!***

***காத்தி*** *- காப்பாயாக;* ***காக்கிலர்*** *- காக்க இயலாதவர்கள்;* ***இடர்*** *- துன்பம்;* ***ஏத்தி*** *- துதித்து;* ***முகில்*** *- மேகம்;* ***மேனி*** *- உடல். -2*

*52.* ***‘அந்தகாரத்து அரக்கர் செய் தீமையால்.***
***நொந்துளோம்! இறைவா! நொடிப் போதினில்***
***வந்து மாற்றிடும் வண்ணம் எமக்கு அருள் -***
***எந்தையே! கருணாகரனே!’ எனா.***

***அந்தகாரம்*** *- பேரிருட்டு;* ***செய்தீமை*** *- செய்த தீமை (வினைத் தொகை) ;* ***நொடிப் போதினில்*** *- ஒரு நொடிப் பொழுதில் (விரைவாக)* ***எனா*** *- என்று. -3*

*53.* ***அறி துயில் எழுந்தனன். அமரர் கூப்பிடும்***
***மறை மொழித் துதி ஒலி வந்து இசைக்கவே;***
***நிறை குணத்து அமரர்கள் நினைத்து அழைப்பதை.***
***இறைவனும். திரு உளத்து அறிந்து. அங்கு எய்தவே.***

***அறிதுயில்*** *-யோக நித்திரை;* ***அமரர்*** *- தேவர்கள்;* ***மறை*** *- வேதம்;* ***இசைக்க*** *- கேட்க;* ***இறைவன்*** *- திருமால்;* ***எய்த*** *- அடைய. -1*

*54.* ***வானவர் அம் முறை வழங்க. மா மதித்***
***தேன் உறும் இதழி அம் தெரியல் வேணியான்***
***ஆனவர்தமைக் கரம் அமைத்து. அங்கு. ஐயனைத்***
***தான் முகம் நோக்கியே சாற்றல் மேயினான்.***

*வானவர் - தேவர்கள்; இதழி - கொன்றை; தெரியல் - மாலை; வேணி - சடைமுடி; சாற்றல் மேயினான் - சொல்லத் தொடங்கினான்.*
*9 -1*

***55. எனக் கலை மா முகச் சிருங்கன் இவ் உரை -***
***தனைச் சொல. தரணிபர்க்கு அரசன்தான் மகிழ்ந்து.***
***அனைத்து உலகு உயிரொடும் அறங்கள் உய்ய. தம்***
***மனத் துயர் அகன்றிட. வணங்கிக் கூறுவான்.***

**கலை மாமுகம்** - *மான்முகம்;* **தரணிபர்** - *அரசர்;* **உய்ய** - *வாழ. -1*

***56. மேடம் ஆம் மதி; திதி நவமி; மீன் கழை;***
***நீடு உறு மாலை கற்கடகம்; நீதி சேர்***
***ஓடை மா களிறு அனான் உதய ராசி கோள்***
***நாடின். ஏகாதசர் நால்வர் உச்சரே.***

**ஓடை** - *நெற்றிப் பட்டம்;* **களிறு அனான்** - *யானை போன்றவன் (இராமன்);* **உதயம்** - *இலக்கினம் (கடகம்);* **மதி மேடம்** - *திங்கள் சித்திரை;* **மீன்** - *நட்சத்திரம்;* **கழை** - *புனர் பூசம்;* **மால்** - *புதன்;* **ஐ** - *பத்தாமிடம்;* **கோள்** - *கிரகங்கள்;* **நால்வர்** - *செவ்வாய். குரு. சுக்கிரன். சனி. ஜென்ம இலக்கினத்திலிருந்து பதினொன்று. பதினொன்றுக்குரியவர் நால்வரும் தங்களது உச்ச வீடுகளான நான்கில் இருந்தனர் என்பது கருத்து. -1*

***57. என்றனர் சாதகம் ஈசற்கு; ஏனையர்***
***தம் தமக்கும் தகும் முறையில். தாம் தெரிந்து.***
***ஒன்றிய தமனியத்து எழுதி ஓதினார் -***
***வன் திறல் சுரர்குரு வாழ்த்து எடுப்பவே.***

**ஈசன்** - *இறைவனாகிய இராமன்;* **தகும் முறை** - *தகுந்த முறையில்;* **தமனியம்** - *பொன்;* **ஓதினார்** - *படித்தார்கள்;* **சுரர்குரு** - *வியாழன். -2*

***58. நோக்கினன் களிப்பு எழ; நுணங்கு கேள்வி நூல்***
***ஆக்கிய முனிவனை வணங்கி. 'ஐய! என்***
***பாக்கியம் பலித்தது. இப் பாலர்' என்று. பார்***
***காக்குறும் அரசனும். கழறல் மேயினான்.***

**நோக்கினன்** - *பார்த்தான்;* **பாக்கியம்** - *பேறு;* **பார்காக்குறும் அரசன்** - *தயரதன்;* **கழறல்** - *கூறல். -1*

***59. சுந்தரப் பொடிகளும் செம் பொற் சுண்ணமும்***
***சந்தனம் நீரொடு கலந்து. தையலார்***
***பந்தியில். சிவறியால் சிதற. பார்மிசை***
***இந்திரவில் எனக் கிடந்தது எங்குமே.***

**சுந்தரப் பொடி** - *மணப் பொடி;* **பொற்சுண்ணம்** - *பரிமளப் பொடி;* **தையலார்** - *பணிப் பெண்கள்;* **பந்தியில்** - *வரிசையில்;* **சிவிறி** - *விசிறி;* **இந்திரவில்** - *வானவில்;* **பார்மிசை** - *தரை மேல். -1*

***60. அரு மறை நெறி வழி. அரசனும். அன்னப்***
***பிரசனம் மதலையர் பெறு வழி உதவி.***

***கரை அறு திரு நகர் விழவொடு களியா.***
***இருமையும் உதவுறு தானமும் ஈந்தான்.***

**அன்னப் பிரசனம்** - *முதன் முதல் குழந்தைக்கு உணவூட்டுதலாகும்;* **கரை அறு** - *அளவற்ற;* **களியா** - *களிப்படைய;* **இருமை** - *இம்மை. மறுமை. -1*

**கையடைப் படலம்**

***61. அப் பெருந் திருவொடும் 'அகில நாதன்' என்று.***
***எப் பெரும் புவனமும் இறைஞ்சி ஏத்தவே.***
***தப்ப அருந் தருமமும் தயாவும் தாங்கியே.***
***ஒப்புரவுடன் அவன் உவந்து வாழும் நாள்.***

**பெருந்திரு** - *பெருஞ் செல்வம்;* **அகில நாதன்** - *அகிலத்துக்குத் தலைவன்;* **புவனம்** - *உலகம்;* **தப்ப அரும்** - *தப்ப அரிய;* **தயா** - *கருணை;* **ஒப்புரவு** - *பரோபகாரம்;* **உவந்து** - *மகிழ்ந்து. -1*

***62. அரி - அணைமிசைதனில். அழகு மன்றினில்.***
***புரி தவம் மிகு பதப் பொற்பின் நீடு அருள்***
***அரசர்கள் முடி படி அணைய. அம் பொனின்***
***உரை பொடி மலை குவை ஒப்ப குப்பையோ.***

**அரியணை** - *சிம்மாசனம்;* **மன்று** - *மன்றம் (அரசவை) ;* **நீடு** - *நீண்ட;* **படி அணைய** - *நிலத்தில் பட;* **பொனின்** - *பொன்னின்;* **உரை** - *உரையும். -2*

***63.  '"இனைய சோலை மற்று யாவது?" என்று. மா***
***முனிவ! கூறு' என முதல்வன் கூறலும்.***
***பனுவல் வேத நூல் பகரும் மா தவன்.***
***'தனு வலாய்! இதன் தன்மை கேள்' எனா.***

***இனைய*** - *இத்தகைய;* ***முதல்வன்*** - *இராமபிரான்;* ***பனுவல்*** - *நூல்;* ***பகரும்*** - *சொல்லும்;* ***தனுவல்லாய்*** - *விற்போரில் வல்லவனே.* *24 -1*

***64.  'சம்பரப் பெயர்த் தானவ(ன்)னுடன்***
***உம்பர் கோமகன் அமர் உடன்ற நாள்.***
***வெம்பி. மற்று அவன் வெற்றி கொண்ட போது.***
***அம்பரம் இழந்து. அவனி வந்தனன்;***

***தானவன்*** - *அரக்கன்;* ***உம்பர் கோமகன்*** - *தேவர்களுக்கு அரசன்;* ***அமர்*** - *போர்;* ***உடன்று*** - *புரிந்து;* ***அம்பரம்*** *-விண்ணுலகம்.* *-2*

***65.  'அவனி வந்து. மன்னவர் இடம்தொறும்.***
***தவனன் என்னவே தான் உழன்று. அறிந்து.***
***"இவனில் வேறு மற்று இல்லை எற்கு" எனா.***
***உவன் விரும்பி வந்து. உந்தை நாடு உறா.***

***அவனி*** - *மண்ணுலம்;* ***தவனன்*** - *சூரியன்;* ***உழன்று*** - *திரிந்து;* ***இவனில்*** - *இவனை விட;* ***எற்கு*** - *எனக்கு;* ***உந்தை*** - *உனது தந்தை (தயரதன்);* ***எனா*** - *என்று;* ***உறா*** - *உற்று;* **இரண்டும் செயா என்ற வாய்ப்பாட்டு வினை எச்சங்களாகும்.** *-3*

***66.  'இந்த இவ் இடத்து எய்தி. இந்திரன்.***
***"சந்த வார் பொழில் தரு ஒர் ஐந்தையும்***
***வந்து நிற்க" எனா. மன நினைப்பின்முன்.***
***முந்து வந்து மா முரல நின்றவால்.***

***எய்தி*** - *அடைந்து;* ***சந்த*** - *அழகிய;* ***வார்*** - *நீண்ட;* ***தரு*** - *மரம் (கற்பகம் முதலிய ஐந்து);* ***நினைப்பின் முன்*** - *நினைக்கும் முன்;* ***மாமுரல*** - *வண்டுகள் ரீங்கரிக்க.* *-4*

***67.*** ***‘நின்ற சோலைவாய். நியமம் நித்தமும்***
***குன்றல் இன்றியே செய்து கொண்டு. அவன்***
***நன்றியால் இருந்து. அரசை நண்ணியே.***
***துன்று சோலையின் தொழில் உணர்த்தினான்.***

***சோலைவாய்*** - *சோலையிடம்;* ***குன்றல்*** - *குறைதல்;* ***அரசை நண்ணி*** - *அரசை விரும்பி;* ***துன்று சோலை*** - *நெருங்கிய சோலை. -5*

***68.*** ***‘உருவம் மாறி. வேறு உருமாகியே.***
***நிருப! நின் குடை நிழலின் நிற்றலும்.***
***பரிவின் நோக்கி. “நீ பகர்தியால்” எனத்***
***தருவின் நாயகன்தான் விளம்பினான்;***

***உருவம்*** *மாறி - வேறு வடிவம் கொண்டு;* ***நிருப*** - *அரச;* ***பரிவு*** - *அன்பு;* ***பகர்தியால்*** - *கூறுக;* ***தருவின் நாயகன்*** - *கற்பக மரத்தின் தலைவன். -6*

***69.*** ***‘“சதமகன்தனைச் சம்பரன் எனும்***
***மத மகன் துரந்து அரசு வவ்வினான்;***
***கதம் அகன்றிடாக் கனக வெற்பு அவன்***
***விதம் அகன்று வந்து. உன்னை மேவினேன்.”***

***சதமகன்*** - *இந்திரன்;* ***மதுமகன்*** - *மதம் கொண்ட அரக்கன் (சம்பரன்);* ***துரந்து*** - *வென்று;* ***கதம்*** - *கோபம்;* ***மேவினேன்*** - *அடைந்தேன். -7*

***70.*** ***‘என்றபோது தன் இரதம் ஏறியே***
***சென்று. மற்று அவன் சேனையோடு உகக்***
***கொன்று. வாசவன் அரசு கொள்ளவே***
***அன்று அளித்து. மீண்டு அயோத்தி மேவினான்.***

***என்றபோது*** *- எனக் கூறிய போது;* ***உக*** - *அழிய;* ***வாசவன்*** - *இந்திரன்;* ***கொள்ள*** - *அடைய;* ***அளித்து*** - *ஈந்து;* ***மேவினான்*** - *சேர்ந்தான். -8*

***71.*** ***‘அன்னது ஆதலின் அவனி வந்த கா***
***இன்ன நாமம். இச் சோலை’ என்றலும்.***
***மன்னர்மன்னவன் மதலை. ‘நன்று’ எனா.***
***பின்னை நன்று உயிர்ப் பிரியம் ஆயினார்.***

***அவனி*** - *பூமி;* ***கா*** - *சோலை;* ***இன்ன நாமம்*** - *இந்தப் பெயர்;* ***மன்னவர் மன்னவன்*** - *தயரதன்;* ***மதலை*** - *மகன்;* ***பின்னை*** - *பிறகு.* *-9*

***தாடகை வதைப் படலம்***

***72. 'கல் நவில் தோளினாய்! கமலத்தோன் அருள்***
***மன்னுயிர் அனைத்தையும் வாரி வாய் மடுத்து.***
***இன் உயிர் வளர்க்கும் ஓர் எரி கொள் கூற்றமே***
***அன்னவள் யாவள் என்று அறையக் கேட்டியால்:***

***கல்நவில் தோள்*** - *கல்லையும் வென்ற தோள்;* ***கமலத்தோன்*** - *பிரமன்;* ***வாய் மடுத்து*** - *வாயில் பெய்து;* ***கூற்றம்*** - *எமன்;* ***அறைய*** - *கூற.* *-1*

***73. 'இயக்கர்தம் குலத்துளான்.***
***உலகம் எங்கணும்***
***வியக்குறும் மொய்ம்பினான்.***
***எரியின் வெம்மையான்.***
***மயங்கு இல் சற்சரன். எனும்***
***வலத்தினான். அருள்***
***துயக்கு இலன் சுகேது என்று***
***உளன் ஒர் தூய்மையான்.***

***இயக்கர்*** - *கந்தருவர்;* ***மொய்ம்பு*** - *வலிமை;* ***வியக்குறும்*** - *வியப்படையும்;* ***வெம்மை*** - *வெப்பம்;* ***துயக்கு*** - *குற்றம் (சற்சரன் மகன் சுகேதுவாம்).* *-2*

***74. 'அன்னவன் மகவு இலாது அயரும் சிந்தையான்.***
***மன் நெடுந் தாமரை மலரின் வைகுறும்***
***நல் நெடு முதல்வனை வழுத்தி. நல் தவம்***
***பல் நெடும் பகல் எலாம் பயின்ற பான்மையான்.***

***அன்னவன்*** - *அந்த சுகேது;* ***மகவு*** - *குழந்தை;* ***இலாது*** - *இல்லாது;* ***வைகுறும்*** - *தங்கும்;* ***முதல்வன்*** - *பிரமன்;* ***வழுத்தி*** - *வணங்கி;* ***பல்நெடும் பகல்*** - *பல நாட்கள்;* ***பயின்ற*** - *செய்த;* ***பான்மை*** - *தன்மை.* *-3*

*75.* ***'முந்தினன் அரு மறைக்***
***கிழவன். "முற்றும் நின்***
***சிந்தனை என்?" என.***
***"சிறுவர் இன்மையால்***
***நொந்தனென்; அருள்க" என.***
***"நுணங்கு கேள்வியாய்!***
***மைந்தர்கள் இல்லை; ஒரு மகள்***
***உண்டாம்" என்றாள்.***

***முந்தினன்*** *- முன் வந்தான்;* ***அருமறை*** *- அரிய மறை;* ***கிழவன்*** *- தலைவன்;* ***சிந்தனை*** *- எண்ணம்;* ***நுணங்கு கேள்வி*** *- நுட்பமான கேள்வியறிவு. -4*

*76.* ***"பூ மட மயிலினைப் பொருவும் பொற்பொடும்.***
***ஏமுறு மதலை ஈர்-ஐஞ்ஞூறுடைத்***
***தாம் மிகு வலியொடும். தனயை தோன்றும்; நீ***
***போ" என. மலர் அயன் புகன்று போயினான்.***

***பூ மட மயில்*** *- அழகிய இளமையான மயில்;* ***பொருவும்*** *- ஒக்கும்;* ***பொற்பு*** *- அழகு;* ***மதமலை*** *- மதங் கொண்ட யானை;* ***ஈர்ஐந்நூறு*** *- ஆயிரம்;* ***வலி*** *- வலிமை;* ***தனயை*** *- மகள்;* ***மலர் அயன்*** *- பிரமன். -5*

*77.* ***'ஆயவன் அருள்வழி. அலர்ந்த தாமரைச்***
***சேயவள் என வளர் செவ்வி கண்டு. "இவட்கு***
***ஆயவன் யார்கொல்?" என்று ஆய்ந்து. தன் கிளை***
***நாயகன். கந்தன் என்பவற்கு நல்கினான்.***

***ஆயவன்*** *- அந்த பிரமன்;* ***அலர்ந்த*** *- மலர்ந்த;* ***சேயவள்*** *- திருமகள்;* ***செவ்வி*** *- தன்மை;* ***இவட்கு ஆயவன்*** *- இவளுக்கு உரிய கணவன்;* ***நாயகன்*** *- தலைவன்;* ***என்பவற்கு*** *- என்பவனுக்கு;* ***நல்கினான்*** *- தந்தான். 20-6*

*78.* ***' "காமனும் இரதியும் கலந்த காட்சி ஈது***
***ஆம்" என. இயக்கனும் அணங்கு அனாளும். வேறு***
***யாமமும் பகலும் ஓர் ஈறு இன்று என்னலாய்.***
***தாம் உறு பெருங் களிச் சலதி மூழ்கினார்.***

***காமன்*** - மன்மதன்; ***இயக்கன்*** - சுந்தன்; ***அணங்கு*** - தெய்வ மகள்; ***அனாளும்*** - அன்னாளும்; ***யாமம்*** - இரவு; ***ஈறு*** - முடிவு; ***சலதி*** - கடல்; **பெருங்களி** - பெரும் களிப்பு; ***தாம் உறு*** - தாம் உற்ற. *20. 7*

***79. 'பற்பல நாள் செலீஇ. பதுமை போலிய***
***பொற்பினாள் வயிற்றிடை. புவனம் ஏங்கிட.***
***வெற்பு அன புயத்து மாரீசனும். விறல்***
***மல் பொரு சுவாகுவும். வந்து தோன்றினார்.***

**செலீஇ** - சென்று; **பதுமை** - பாவை; **போலிய** - போன்ற; **புவனம்** - உலகம்; **வெற்பு** - மலை; **விறல்** - வலிமை. *-8*

***80. 'மாயமும். வஞ்சமும். வரம்பும் இல் ஆற்றலும்.***
***தாயினும் பழகினார் தமக்கும் தேர்வு ஒணாது.***
***ஆயவர் வளர்வுழி. அவரை ஈன்ற அக்***
***காய் சினத்து இயக்கனும். களிப்பின் மேன்மையான்.***

**வரம்பு** - எல்லை; **இல்** - இல்லாத; **தேர்வு ஒணாது** - தேர இயலாது; **வளர்வுழி** - வளரும் போது; **இயக்கன்** - கந்தர்வனாகிய சுந்தன். *20 -9*

***81. தீது உறும் அவுணர்கள் தீமை தீர்தர.***
***மோதுறு கடல் எலாம் ஒரு கை மொண்டிடு***
***மா தவன் உறைவிடம் அதனின் வந்து. நீள்***
***பாதவம் அனைத்தையும் பறித்து வீசினான்.***

**தீது உறும்** - தீங்குடைய; **அவுணர்** - அரக்கர்; **தீமை தீர்தர** - தீங்கு தீர; **எலாம்** - எல்லாம்; **மாதவன்** - அகத்தியன்; **நீள் பாதவம்** - பெரிய மரம் (மலையுமாம்.) *-10*

***82. 'விழைவு அறு மா தவம் வெஃகினோர் விரும்பு***
***உழை. கலை. இரலையை உயிர் உண்டு. ஓங்கிய***
***வழை முதல் மரன் எலாம் மடிப்ப. மா தவன்***
***தழல் எழ விழித்தனன்; சாம்பல் ஆயினான்.***

**விழைவு** - விருப்பம்; **உழை** - பசு (மானுமாம்); **கலை** - கலைமான்; **இரலை** - புல்வாய்; **வழை** - சுரபுன்னை; **மரன்** - மரம்; **மடிப்ப** - அழிக்க; **தழல்** - நெருப்பு; **என** - என்னும்படி; **விழித்தனன்** - விழித்தான். *-11*

***83.  'மற்றவன் விளிந்தமை மைந்தர் தம்மொடும்***
***பொற்றொடி கேட்டு. வெங் கனலின் பொங்குறா.***
***'முற்றுற முடிக்குவென் முனியை' என்று எழா.***
***நற்றவன் உறைவிடம் அதனை நண்ணினாள்.***

**விளிந்தமை** - *இறந்ததனை;* **பொற்றொடி** - *பொன் வளையல் அணிந்த தாடகை;* **கனல்** - *தீ;* **பொங்குறா** - *பொங்கி;* **முற்றுற** - *அடியோடு (முழுதும்);* **எழா** - *எழுந்து;* **நற்றவன்** - *அகத்தியன்;* **நண்ணினான்** - *அடைந்தான். -12*

***84.  'இடியொடு மடங்கலும் வளியும் ஏங்கிட.***
***கடி கெட அமரர்கள். கதிரும் உட்கிட***
***தடியுடை முகில் குலம் சலிப்ப. அண்டமும்***
***வெடிபட. அதிர்த்து. எதிர் விளித்து. மண்டவே.***

**வளி** - *காற்று;* **அடங்கலும்** - *எல்லாமும்;* **கடிகெட** - *மகிழ்ச்சி நீங்க;* **கதிர்** - *சூரியன்;* **தடி உடை** - *மின்னலை உடைய;* **மண்ட** - *நெருங்க. -13*

***85.  'தமிழ் எனும் அளப்ப அருஞ் சலதி தந்தவன்***
***உமிழ் கனல் விழி வழி ஒழுக. உங்கரித்து***
***"அழிவன செய்தலால் அரக்கர் ஆகியே***
***இழிக!" என உரைத்தனன். அசனி எஞ்சவே.***

**அளப்ப அரும் சலதி** - *அளக்க அரிய கடல்;* **தந்தவன்** - *தந்த அகத்தியன்;* **கனல் உமிழ்** - *நெருப்பை உமிழ்கின்ற;* **உங்கரித்து** - *ஊங்காரம் செய்து;* **இழிக** - *இழிந்தவர்களாகுக;* **அசனி** - *இடி. 20 -14*

***86.  'வெருக்கொள. உலகையும் விண்ணுளோரையும்***
***முருக்கி. எவ் உயிரும் உண்டு. உழலும் மூர்க்கராம்***

***அரக்கர்கள் ஆயினர். அக் கணத்தினில்***
***உருக்கிய செம்பென உமிழ் கண் தீயினர்.***

**வெருக்கொள** - *அஞ்ச;* **முருக்கி** - *அழித்து;* **உழலும்** - *திரியும்;* **உருக்கிய செம்பு** - *உருக்கப்பட்ட செம்பு;* **உமிழ் கண்** - *உமிழ்கின்ற கண்.-15*

***87.	‘ஆங்கு அவன். வெகுளியும். அறைந்த சாபமும்***
***தாங்கினர்; எதிர் செயும் தருக்கு இலாமையின்.***
***நீங்கினர்; சுமாலியை நேர்ந்து. “நிற்கு யாம்***
***ஓங்கிய புதல்வர்” என்று. உறவு கூர்ந்தனர்.***

***வெகுளி*** *- சினம்;* ***அறைந்த*** *- கூறிய;* ***தருக்கு*** *- வலிமை;* ***நேர்ந்து*** *- அடைந்து;* ***நிற்கு*** *- உனக்கு;* ***கூர்ந்தனர்*** *- அணுகினர். -16*

***88.	‘அவனொடும் பாதலத்து அநேக நாள் செலீஇ.***
***தவன் உறு தசமுகன் தனக்கு மாதுலர்***
***இவர் என. புடைத்து அழித்து. உலகம் எங்கணும்***
***பவனனின் திரிகுநர். பதகி மைந்தவர்கள்.***

***அநேக நாள் செலீஇ*** *- பல நாட்கள் சென்று;* ***தவன்*** *- தவம்;* ***தசமுகன்*** *- இராவணன்;* ***மாதுலர்*** *- மாமன்மார்;* ***பவனன்*** *- சூரியன்;* ***திரிகுநர்*** *- திரிபவர்கள்;* ***பதகி*** *- பாதகி (தாடகை).-17*

***89.	‘மிகும் திறல் மைந்தரை வேறு நீங்குறா.***
***தகும் தொழில் முனிவரன் சலத்தை உன்னியே.-***
***வகுந்துவின் வசுவரி வதிந்தது இவ் வனம்***
***புகுந்தனள். - அழல் எனப் புழுங்கும் நெஞ்சினாள்.***

***மிகும் திறல்*** *- மிகுந்த வலிமை;* ***நீங்குறா*** *- நீங்காத;* ***சலம்*** *- சினம்;* ***வகுந்துவின்*** *- வழிவழியாக;* ***வசுவரி*** *- வசுக்களின் தலைவனான இந்திரனது குற்றக் குறி;* ***வதிந்தது*** *- தங்கியது;* ***அழல்*** *- நெருப்பு. 20 -18*

***90.	‘மன்னர் மன்னவன் காதல்! மற்றும் ஒன்று***
***இன்னம் யான் உரைக்கின்றது யாது எனின்.***
***முன் ஒர் காலம் நிகழ்ந்த முறைமை ஈது’***
***என்ன ஓதலுற்றான் தவத்து ஈறு இலான்.***

***மன்னர் மன்னவன்*** *- தயரதன்;* ***மற்றும் ஒன்று*** *- இன்னும் ஒன்று;* ***உரைக்கின்றது*** *- சொல்லுவது;* ***ஓதல்*** *- கூறுதல்;* ***ஈறுஇலான்*** *- முடிவில்லாதவன்.-1*

***91.*** ***‘பிருகு என்னும் பெருந் தவன்தன் மனை***
***வரு கயல் கண் கியாதி. வல் ஆசுரர்க்கு***
***உருகு காதலுற. உறவாதலே***
***கருதி. ஆவி கவர்ந்தனன். நேமியான்.***

***பிருகு*** - *பிருகு முனிவன்;* ***கயல்கண்*** - *கயல் போன்ற கண்;* ***வல் ஆசுரர்க்கு*** - *வலிய அசுரர்களுக்கு;* ***உறவாதல்*** - *உறவு உடையவதனால்;* ***கருதி*** - *எண்ணி;* ***ஆவி*** - *உயிர்;* ***நேமியான்*** - *ஆழிப்படையுடைய திருமால். -2*

***92.*** ***“வானகத்தினில். மண்ணினில். மன்னுயிர்***
***போனகம் தனக்கு” என்று எணும் புந்திய***
***தானவள் குமுதிப் பெயராள்தனை***
***ஊன் ஒழித்தனன் வச்சிரத்து உம்பர்கோன்.***

***போனகம்*** - *உணவு;* ***எணும்*** - *எண்ணும்;* ***புந்தி*** - *மனம்;* ***ஊன் ஒழித்தல்*** - *கொல்லுதல்;* ***வச்சிரத்து உம்பர்கோன்*** - *இந்திரன். 39-3*

***93.*** ***‘ஆதலால். அரிக்கு. ஆகண்டலன்தனக்கு.***
***ஓது கீர்த்தி உண்டாயது அல்லால். இடை***
***ஏதம் என்பன எய்தியவோ? சொலாய்-***
***தாது அடர்ந்து தயங்கிய தாரினாய்!’***

***அரி*** - *திருமால்;* ***ஆகண்டலன்*** - *இந்திரன்;* ***கீர்த்தி*** - *புகழ்;* ***ஏதம்*** - *குற்றம்;* ***சொலாய்*** - *சொல்லாய்;* ***தாது*** - *மகரந்தம்;* ***அடர்ந்து*** - *செறிந்து;* ***தயங்கிய*** - *விளங்கிய;* ***தார்*** - *மாலை.-4*

***94.*** ***ஏக்கமோடும் இமையவர் எங்கணும்.***
***வாக்கின் முந்துற மாயை வளர்ப்பவள்.***
***மூக்கும் வார் செவியும் முறை போயிட.***
***தாக்கும் வள்ளற்கு இளவலும் தாக்கினான்.***

***வாக்கின்*** - *பேச்சுக்கு;* ***முந்துற*** - *முன்னம்;* ***மாயை*** - *மாயைச் செயல்;* ***போயிட*** - *போக;* ***இளவல்*** - *இலக்குவன்.-1*

***95.*** ***விலக்கி நின்று. அவன் வெங் கணை***
***விரைவினில் விலக்கி.***

*96.* **கலக்கம் வானவர் தவிர்ந்திட.**
**காலனும் கலங்கத்**
**துலக்கி. வையகத்து இடுக்கணும்**
**முனிவர்தம் துயரும்**
**உலக்க. ஊழித் தீ ஒப்பது ஓர் கணை**
**தொடுத்து எய்தான்.**

**வெங்கணை** - *கொடிய அம்பு;* **காலன்** - *எமன்;* **இடுக்கண்** - *துன்பம்;* **உலக்க** - *நீங்க;* **ஊழித்தீ** - *ஊழிக்காலத்துத் தீ;* **ஒப்பது** - *ஒத்தது.-2*

*8* **வேள்விப் படலம்**

*96.* **'குசன். குசநாபன். கோது இல்**
**குணத்தின் ஆதூர்த்தன். கொற்றத்து**
**இசை கெழு வசு. என்று ஓதும்**
**இவர் பெயர்; இவர்கள் தம்முள்**
**குசன் கவுசாம்பி. நாபன்**
**குளிர் மகோதயம். ஆதூர்த்தன்**
**வசை இல் தன்மவனம். மற்றை**
**வசு கிரிவிரசம். வாழ்ந்தார்.**

**கோது இல்** - *குற்றமில்லாத;* **இசை கெழு** - *புகழ் விளங்கும்;* **ஓதும்** - *கூறும்;* **குளிர்** - *குளிர்ந்த;* **வசை இல்** - *குற்றமில்லாத. -1*

*97.* **குறியவன் கையில் நீர் விழாமல். குண்டிகை**
**மறிபட. வாமனன் மலர்க் கைத் தர்ப்பையால்.**
**செறிவது நீக்கிட. சிதைந்து கண் உடைந்து**
**உறு துயர் வெள்ளியும் ஒதுங்கிப் போயினான்.**

**குறியவன்** - *வாமனன்;* **குண்டிகை** - *கமண்டலம்;* **மறிபட** - *தடுத்து நிற்க;* **செறிவது** - *செறிந்து நிற்பது;* **உடைந்து** - *கெட்டு;* **உறுதுயர்** - *மிக்க துயர். -1*

*98.* **நீட்டிய வேலையில் நீரை மாற்றினான்;**
**நாட்டம்அது அகத்துளான். சிலம்பின் நாமத்தான்.**
**ஓட்டினன் தருப்பையை; உடை கண் நீர் விழ.**
**வாட்டம் இல் அந்தணன் மலர்க்கை நீட்டினான்.**

**வேலை** - *சமயம்;* **சிலம்பின் நாமத்தன்** - *வெள்ளி;* **அந்தணர்** - *வாமனன்;* **வாட்டம் இல்** - *வாட்டமில்லாத;* **மலர்க் கை** - *மலர் போன்ற கை.-2*

## *9 அகலிகைப் படலம்*

***99.*** ***‘இனைய சோலை மற்று யாது?’ என***
***இராகவன் வினவ.***
***வினை எலாம் அற நோற்றவன்***
***விளம்புவான்; ‘மேல்நாள்***
***தனையவர் ஆனவர்க்கு இரங்கியே.***
***காசிபன் தனது***
***மனையுளாள் தவம் புரிந்தனள்.***
***இவண்’ என வலித்தான்.***

***வினை எலாம் அற நோற்றவன்*** *- விசுவாமித்திரன்;* ***வலித்தான்*** *- தெளிவாகச் சொன்னான்.*

*காசிபன் மனைவி திதி என்பவள் தன் மக்களான அசுரர்கள் தேவர்களால் அடியுண்டு மடிந்து போனதால் மிகத் துயரம் அடைந்து இந்திரனைக் கொல்லவும். மூவுலகையும் ஆளவும் ஒரு மகனைப் பெறுமாறு தன் கணவனிடம் அனுமதி பெற்றுப் பல காலம் தவம் புரிந்த இடம் இது என்று விசுவாமித்திரன் கூறினான். -1*

***100.*** ***‘அண்ட கோளகைக்கு அப்புறத்து.***
***என்னை ஆளுடைய***
***கொண்டல் நீள் பதத்து எய்தி. ஓர்***
***விஞ்சையர் கோதை.***
***புண்டரீக மென் பதத்தியைப்***
***புகழ்ந்தனள்; புகழ.***
***வண்டு அறா மது மாலிகை***
***கொடுத்தனள் மகிழ்ந்து.***

***நீள்பதம்*** *- வைகுண்டம்.*

*ஒரு வித்தியாதரப் பெண். செந்தாமரையில் உள்ள திருமகளைப் பாடித் துதித்தாள். அது கேட்டு மகிழ்ந்த இலக்குமி மனமுவந்து தனது பூமாலையை அவள் கையில் கொடுத்தாள் என்பது.-2*

***101.*** ***‘அன்ன மாலையை யாழிடைப்***
***பிணித்து. அயன் உலகம்.***
***கன்னி மீடலும். கசட்டுறு***
***முனி எதிர் காணா.***

***“என்னை ஆளுடை நாயகிக்கு***
***இசை எடுப்பவள்” என்று.***
***அன்னள் தாள் இணை வணங்கிநின்று***
***ஏத்தலும். அனையாள்.***

*அந்த வித்தியாதரப்பெண் பூமாலையை யாழிலே கட்டிக்கொண்டு பிரம்மலோகம் திரும்பினாள். அப்பொழுது துருவாச முனிவன் அவளை எதிரே கண்டு அவளடிகளில் வீழ்ந்து வணங்கினான் என்பது. இதனால் துருவாசரின் திருமால் பக்தி புலனாகிறது. இவன் பிறரைச் சபிக்கச் சபிக்கத் தவம் வளரும் வரம் பெற்றவன். இவன் அத்திரி முனிவன் மகன்.-3*

***102. ‘ “உலகம் யாவையும் படைத்து. அளித்து.***
***உண்டு. உமிழ். ஒருவன்***
***இலகு மார்பகத்து இருந்து. உயிர்***
***யாவையும் ஈன்ற***
***திலக வாணுதல் சென்னியில்***
***சூடிய தெரியல்.***
***அலகு இல் மா முனி! பெறுக” என***
***அளித்தனள் அளியால்.***

***உலகம் யாவையும் படைத்து. அளித்து. உண்டு உமிழ் ஒருவன்*** *-திருமாலின் முத்தொழில் பேசப்பெறுகின்றன.*

*அவ்வித்தியாதர மகள் தன் யாழில் கட்டிய அப் பூமாலையைத் துருவாச முனிவனுக்குக் கொடுத்தாள் என்பது.-4*

***103. ‘ “தெய்வ நாயகி சென்னியில்***
***சூடிய தெரியல.***
***ஐய! யான் பெறப் புரிந்தது***
***எத் தவம்?” என ஆடி.***
***வெய்ய மா முனி சென்னியில்***
***சூடியே. வினை போய்***
***உய்யும் ஆறு இது***
***என்று உவந்து வந்து. உம்பர் நாடு அடைந்தான்.***

***வினை போய் உய்யுமாறு*** - கருமம் ஒழிந்து நற்கதி பெறும்விதம் இதுவென்று; **தெய்வ நாயகன்** - திருமால்; **தெய்வ நாயகி** - திருமகள். தேவர்களின் தலைவியான திருமகளின் பூமாலையைத் தான் பெறுவதற்கு என்ன மாதவம் செய்தேன் என மகிழ்ந்து அதைத்தன் முடியிலே சூடிக்கொண்டு தெய்வலோகம் சென்றான் என்பது. -5

***104. 'பெய்யும் மா முகில் வெள்ளிஅம்***
***பிறங்கல் மீப் பிறழும்***
***செய்ய தாமரை ஆயிரம்***
***மலர்ந்து. செங் கதிரின்***
***மொய்ய சோதியை மிலைச்சிய***
***முறைமை போன்று ஒளிரும்***
***மெய்யினோடு. அயிராவதக்***
***களிற்றின்மேல் விளங்க.***

***யானைக்கு மலை உவமை*** - வலிமை. பெருமை. மதநீர் அருவியுடைமை பற்றி; ***ஐராவதம்*** - இந்திரனது பட்டத்து யானை; நான்கு தந்தங்களையுடையது; **வெண்மை நிறமுடையது.**

இந்திரன் ஐராவத யானைமேல் வீற்றுள்ள சிறப்பைச் சொல்வது இப்பாடல். ஐராவதத்தின் மேல் வீற்றிருப்பதால் இந்தரனுக்குச் சிறப்பு; இந்திரன் வீற்றிருப்பதால் ஐராவதத்திற்குச் சிறப்பு.-6

***105. 'அரம்பை. மேனகை. திலோத்தமை.***
***உருப்பசி. அனங்கன்***
***சரம் பெய் தூணியின் தளிர் அடி***
***நூபுரம் தழைப்ப.***
***கரும்பையும் சுவை கைப்பித்த***
***குதலையர். விளரி***
***நிரம்பு பாடலோடு ஆடினர்.***
***வீதிகள் நெருங்க.***

***அரம்பை*** - நளகூபரனின் போகமடைந்தை; **திலோத்தமை** - பிரமனால் படைக்கப்பட்டவள்; ***ஊர்வசி*** - நாராயண முனிவனது தொடையிலிருந்து (ஊரு) தோன்றியவள்.

அரம்பை முதலான தேவதாசிகள் நால்வரும் பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் தெருக்களில் சென்றார்கள் என்பது. -7

*106.* ***‘நீல மால் வரை தவழ்தரு***
***கதிர் நிலாக் கற்றை***
***போலவே. இரு புடையினும்.***
***சாமரை புரள.***

***கோல மா மதி குறைவு அற***
***நிறைந்து. ஒளி குலாவி.***
***மேல் உயர்ந்தென***
***வெள்ளி தம் தனிக் குடை விளங்க.***

*நீல மலையின் இருப்பக்கத்தும் சஞ்சரிக்கும் நிலாக்கற்றைபோல இந்திரனின் இரு பக்கங்களிலும் வெண் சாமரங்கள் அசையவும். வானத்தில் விளங்கும் முழுமதிபோல ஒற்றைக் குடை ஒளிரவும் சென்றான் என்பது. -8*

*107.* ***‘தழங்கு பேரியும். குறட்டொடு***
***பாண்டிலும். சங்கும்.***
***வழங்கு கம்பலை மங்கல***
***கீதத்தை மறைப்ப.***
***முழங்கு நான்மறை. மூரி நீர்***
***முழக்கு என. உலகை***
***விழுங்க. மால் வரும் விழா அணி***
***கண்டு உளம் வியந்தான்.***

***‘மங்கல கீதத்தை மறைப்ப’*** *- இந்திரனுக்கு இனிமேல் வரவிருக்கின்ற துன்பத்தைக் குறிப்பாக உணர்த்துவது - அமங்கலம். பூமிக்கு முன்பு கடல் படைக்கப்பட்டது - அதனால் ‘மூரிநீர்’ என்றார்.*

*பேரிகை முதலான பலவகை வாத்தியங்கள் முழங்கும் ஓசை ஓங்கவும் நான்மறை ஓசை ஒலிக்கவும் இந்திரன் உலாவரும் திருவிழாக் காட்சியைக் கண்டு துருவாசன் வியந்து நின்றான் என்பது. -9*

*108.* ***‘தனை ஒவ்வாதவன் மகிழ்ச்சியால்.***
***வாசவன்தன் கை***
***வனையும் மாலையை நீட்டலும்.***
***தோட்டியால் வாங்கி.***
***துனை வலத்து அயிராவதத்து***
***எருத்திடைத் தொடுத்தான்; படை செய் கையினால்***
***பறித்து அடிப்படுத்தது. அப் பகடு.***

***வாசவன்*** - *இந்திரன். அஷ்ட வசுக்களுக்குத் தலைவன். எல்லாச் செல்வங்களும் உடையவன். ஐராவதத்தின் துதிக்கைக்குப் பனைமரம் உவமை. (திரட்சி. உருட்சி. நீட்சி வடிகால்). துருவாசன் அம் மாலையை இந்திரனுக்குக் கொடுக்க. அவன் அங்குசத்தால் அதைப்பெற்று யானையின் தலைமேல் வைக்க. அந்த யானை அதைக் காலால் தேய்த்தது என்பது.-10*

***109.*** ***' "கண்ட மா முனி விழி வழி***
***ஒழுகு வெங் கனலால்.***
***அண்ட கூடமும் சாம்பராய்***
***ஒழியும்"என்று. அழியா.***
***விண்டு நீங்கினர் விண்ணவர்;***
***இரு சுடர் மீண்ட;***
***எண் திசாமுகம் இருண்டது;***
***சுழன்றது எவ் உலகும்.***

*அதைக்கண்ட துருவாசன் பெருங்கோபம் கொள்ள வானவர் யாவரும் ஓடிப்போகத் திசைகள் எங்கும் இருண்டன என்பது. சந்திர சூரியரும் தம் கதியிற் செல்லத் தடுமாறினர் என்றார்.-11*

***110.*** ***'புகை எழுந்தன. உயிர்த்தொறும்; எயில் பொடித்தவனின் நகை எழுந்தன; நிவந்தன புருவம். நல் நுதலில; சிகை எழும் சுடர் விழியினன். அசனியும் திகைப்ப. "மிகை எழுந்திடு சதமக! கேள்" என வெகுண்டான்.***

***சதமகன்*** *- இந்திரன் - நூறு அசுவமேத வேள்விகளைச்செய்து இந்திர பதவி பெற்றவன்;* ***எயில்*** *- பட்டணம் - ஆகுபெயர்.*

*கோபத்தால் துருவாச முனிவனின் மூச்சில் புகை கிளம்பியது; சிரிப்பு எழுந்தது; புருவங்கள் நெற்றியில் ஏறின என்றார்.-12*

***111.*** ***' "பூத நாயகன். புவிமகள்***
***நாயகன். பொரு இல்***
***வேத நாயகன். மார்பகத்து***
***இனிது வீற்றிருக்கும்***
***ஆதி நாயகி விருப்புறு***
***தெரியல் கொண்டு அணைந்த***
***மாதராள்வயின் பெற்றனென்.***
***முயன்ற மா தவத்தால்.***

***பூத நாயகன்*** *- பஞ்ச பூதங்களையும் படைத்து அவற்றை நியமிப்பவன்;* ***ஆதி நாயகி*** *- கலைமகள். மலைமகள். இந்திராணி முதலான தேவியர்களுக்கு நாயகி என்றபடி.*

*துருவாச முனிவன் அந்த மலரைப்பெற்ற பாங்கினை எடுத்துரைப்பது இப்பாடல்.-13*

***112. ' "இன்று நின் பெருஞ் செவ்வி கண்டு.***
***உவகையின் ஈந்த***
***மன்றல்அம் தொடை இகழ்ந்தனை; நினது மா நிதியும் ஒன்று***
***அலாத பல் வளங்களும் உவரி புக்கு ஒளிப்ப. குன்றி. நீ துயர்***
***உறுக" என உரைத்தனன். கொதித்தே.***

***உவரி*** *- உப்புச் சுவையுடையது; இங்கே பாற்கடலைக் குறித்தது;* ***குன்றி -*** *பெருமை குறைதல். மனவேதனையால் உடல் குன்றுதல்.*

*'உலா வருகின்ற உன் சிறப்பைக் கண்டு இம் மாலையை உனக்குத் தந்தேன்; நீயோ அதனை இகழ்ந்தாய். ஆதலால். உன் பெருநிதிகளும். செல்வங்களும் மறையட்டும்' என்று துருவாசன் இந்திரனை நோக்கிச் சபித்த செய்தி கூறுவது இப்பாடல்.-14*

***113. 'அரமடந்தையர். கற்பகம்.***
***நவ நிதி. அமிர்தம்.***
***சுரபி. வாம் பரி. மதமலை.***
***முதலிய தொடக்கத்து***
***ஒரு பெரும் பொருள் இன்றியே***
***உவரி புக்கு ஒளிப்ப***
***வெருவி ஓடின. கண்ணன் வாழ்***
***வெண்ணெய் மேவாரின்.***

***நவநிதி*** *- மகா பதுமம். பதுமம். சங்கம். மகரம். கச்சபம். முகுந்தம். குந்தம். நீலம். வரம் என்பன; புதியனவாகிய சங்க நிதி. பதுமநிதி.*

*துருவாசன் சாபத்தால் இந்திரன் செல்வங்களான தேவ மாதர். கற்ப மரங்கள். நவநிதிகள். பாலைக்கறக்கும் காமதேனு. வெண் குதிரை. ஐராவத யானை ஆகியன பாற்கடலில் மறைந்தன என்பது. -15*

*114.* ***'அந்த வேலையில். இந்திரன்***
***சிந்தை நொந்து அழிந்து.***
***வந்து. வானவ முனிவனை***
***வழிபட்டு வழுத்த.***
***"நந்தும் நின் பெருஞ் செல்வம் மால்***
***அருளினால். நயக்க***
***முந்தும்" என்று சாபத்தினின்***
***மோக்கமும் மொழிந்தான்.***

*-indent: 30px">* ***நந்துதல்*** *- குறைதல். செழித்தல்.*

*இந்திரன் மனம் நொந்து துருவாசனை வழிபட்டு நிற்க. 'தேய்ந்த உன் செல்வம் திருமால் அருளால் உனக்குக் கிடைக்கும்' என்று அம்முனிவன் சாப விமோசனம் தருவது என்பது.-16*

*115.* ***'வெய்ய மா முனி வெகுளியால் விண்ணகம் முதலாம்***
***வையம் யாவையும் வறுமை நோய் நலிய. வானோரும்.***
***தையல் பாகனும். சதுமுகக் கடவுளும். கூடி.***
***செய்ய தாமரைத் திரு மறு மார்பனைச் சேர்ந்தார்.***

***மறு*** *- திருமாலின் மார்பில் உள்ள உத்தமக்குறி. திருமகள் பிறர் மார்பை மறுத்தற்குக் காரணமான மார்பு;* ***தையல் பாகன்*** *- சிவன்.*

*வானுலகு எங்கும் வறுமை நோய் வாட்டத் தேவர்களும். சிவனும். நான்முகனும் திருமாலை அடைந்து முறையிட்ட செய்தியைக் கூறுவது. செல்வத்தை இழந்த தேவர்கள் அச்செல்வத்திற்குத் தலைவியான திருமகளின் கணவனை அடைந்தனர் என்றார். -17*

*116.* ***'வெஞ் சொல் மா முனி வெகுளியால்***
***விளைந்தமை விளம்பி.***
***கஞ்ச நாள்மலர்க் கிழவனும்.***
***கடவுளர் பிறரும்.***
***"தஞ்சம் இல்லை; நின் சரணமே***
***சரண்" எனச் செப்ப.***
***"அஞ்சல். அஞ்சல்! என்று உரைத்தனன்.***
***உலகு எலாம் அளந்தோன்.***

***உலகெலாம் அளந்தோன்*** - மூவுலகங்களையும் தன் அடிகளால் அளந்தவன் - திருமால்; ***தஞ்சம்*** - புகலிடம். தேவர்கள் துருவாச முனிவனது சாபத்தின் விளைவைத் திருமாலிடம் எடுத்துச் சொல்ல. அத்திருமாலும். 'அஞ்சாதீர்' என்று அவர்களுக்கு அபயம் தரும் பாங்கு இதில் கூறப்படுகிறது.-18

***117. "மத்து மந்தரம்; வாசுகி***
***கடை கயிறு; அடை தூண்***
***மெத்து சந்திரன்; சுராசுரர்***
***வேறு வேறு உள்ள***
***கொத்து இரண்டு பால் வலிப்பவர்;***
***ஓடதி கொடுத்து.***
***கத்து வாரிதி மறுகுற.***
***அமிழ்து எழக் கடைமின்;***

***மந்தர மலை*** - மத்து; ***வாசுகி என்னும் பாம்பு*** - கடை கயிறு; ***சந்திரன்*** - அடை தூண்; ***தேவர். அசுரர்*** - இருபக்கமும் கயிற்றைப் பிடித்துக் கடைபவர்; ***ஓடதி*** - ஒஷதி;அமிர்த வல்லி என்னும் மூலிகை.

இழந்த செல்வங்களைப் பெறும் பொருட்டுப் பாற்கடலைக் கடையுமாறு அத்தேவர்களுக்குத் திருமால் கட்டளையிட்டான் என்பது. -19

***118. ' "யாமும் அவ் வயின் வருதும்; நீர்***
***கதுமென எழுந்து***
***போமின்" என்று அருள்புரிதலும்.***
***இறைஞ்சினர் புகழ்ந்து.***
***"நாமம் இன்று" எனக் குனித்தனர்.***
***நல்குரவு ஒழிந்தது***
***ஆம் எனும் பெருங் களி துளக்***
***குறுதலால். அமரர்.***

***நாமம்*** - அச்சம்; ***துளக்குறுதல்*** - ஆட்டுதல்; ***குனித்தனர்*** - கூத்தாடினர்.

பாற்கடல் கடையுங்கால் தானும் துணை வருவதாகக் கூற. அத்தேவர் மகிழ்ந்து இனித் தம் வறுமை அகலுமென்று துணிந்து கூத்தாடினர் என்றார். -20

***119. 'மலை பிடுங்கினர்; வாசுகி பிணித்தனர்; மதியை***
***நிலை பெறும்படி நட்டனர்; ஓடதி நிரைத்தார்;***
***அலை பெறும்படி பயோததி கடைந்தனர்; அவனி***
***நிலை தளர்ந்திட. அனந்தனும் கீழுற நெளித்தான்.***

***பயோததி - பயஸ்*** *- பால்; **உததி** - கடல்;பாற்கடல்; **அனந்தன் -** பிரளய காலத்தும் அழிவில்லாமல் என்றும் ஒரு தன்மையாக நித்தியனாயிருப்பவன்; இவன் பூமியின் கீழ் இருந்து ஆயிரந்தலைகளாலும் பூமியைத் தாங்குகின்றான் என்பது நூற்கொள்கை.*

*தேவர்களும் அசுரர்களும் கடல் கடையப் பூமி நிலைகுலைய ஆதிசேடனாகிய பாம்பும் உடல் நெளித்தான் என்றார். -21*

***120.*** ***'திறல் கொள் ஆமை ஆய்.***
***முதுகினில் மந்தரம் திரிய.***
***விறல் கொள் ஆயிரம் தடக் கைகள்***
***பரப்பி. மீ வலிப்ப.***
***மறன் நிலாம் முனி வெகுளியால்***
***மறைந்தன வரவே.***
***அறன் இலா மனத்து அடைகிலா***
***நெடுந் தகை அமைத்தான்.***

***மறன் இல் ஆம்*** *- கோபத்துக்கு இடமான; **மறன் நில்லா** - கோபம் மனத்தில் அடங்கி நிற்கப் பெறாத; **மறன் நிலாம்** - கோபம் உலாவி விளங்குதற்கு இடமான.*

*திருமால் ஆமை வடிவெமடுத்துத் தன் முதுகின் மேல் மந்தர மலை சுழலும்படி. மந்தர மலையை மேலே அழுத்தும்படி ஆயிரம் கைகளைப் பரவச்செய்தும் நீங்கின பொருள்கள் மீண்டு வர உதவினான் என்பது. -22*

***121.*** ***'இறந்து நீங்கின யாவையும்.***
***எம்பிரான் அருளால்.***
***பிறந்த; அவ்வயின் சுராசுரர்***
***தங்களில் பிணங்க.***
***சிறந்த மோகினி மடந்தையால்.***
***அவுணர்தம் செய்கை***
***துறந்து மாண்டனர்; ஆர் அமிர்து***
***அமரர்கள் துய்த்தார்.***

***மோஹிநீ*** *- மோகினி (தன்னைக்கண்டவரை); மதிமயங்கச் செய்யும் அழகுடைய தெய்வமகள் கடலில் சென்று ஒளித்த தெய்வலோகப் பொருள்கள் யாவும் மீண்டும் தோன்றின; அவ்வாறு தோன்றிய அமிர்தம் காரணமாகத் தேவர் அசுரர்க்குப் பிணக்கு உண்டாகத் திருமால் சூழ்ச்சி செய்து அவ் அமுதத்தைத் தேவர்களுக்கே கொடுத்தான் என்பது.-23* .

*122.* ***'வெருவும் ஆலமும் பிறையும்***
***வெள் விடையவற்கு அளித்து.***
***தருவும் வேறு உள தகைமையும்***
***சதமகற்கு அருளி.***
***மருவு தொல் பெரு வளங்களும்***
***வேறு உற வழங்கி.***
***திருவும் ஆரமும் அணிந்தனன்.***
***சீதர மூர்த்தி.***

***ஆலகாலம். பிறை நிலா*** *- சிவனுக்கு பஞ்ச தருக்கள். தேவமாதர். நிதிகள். உச்சைச் சிரவம்;* ***ஐராவதம். சிந்தாமணி*** *- இந்திரனுக்கு;* ***புட்பகம்*** *- குபேரனுக்கு;* ***இலக்குமி. இரத்தினம்*** *- திருமாலுக்கு;* ***சீ*** *- இலக்குமி. ஒளி;* ***பிறை*** *- பிறப்பது (இளஞ்சந்திரனுக்கு) - காரணக்குறி.*

*பாற்கடலில் தோன்றிய பொருள்களைப் பங்கிட்ட வகை இதிற் கூறப்பெறுகிறது. -24*

*123.* ***'அந்த வேலையில் திதி பெருந்***
***துயர் உழந்து அழிவாள்.***
***வந்து காசிபன் மலரடி***
***வணங்கி. "என் மைந்தர்***
***இந்திராதியர் புணர்ப்பினால்***
***இறந்தனர்; எனக்கு ஓர்***
***மைந்தன் நீ அருள். அவர்தமை***
***மடித்தலுக்கு" என்றாள்.***

***வேலை*** *- காலம்;* ***காசிபன்*** *- திதியின் கணவன்.*

*அசுரர்களைக் கொன்ற தேவர்களைப் பழிவாங்கும் பொருட்டு ஒரு மகனைத் தரவேண்டும் என்று திதி என்பவள் தன் கணவனிடம் கேட்டாள் என்பது. -25*

*124.* ***'என்று கூறலும். "மகவு உனக்கு***
***அளித்தனம்; இனி. நீ.***
***சென்று பாரிடை. பருவம்***
***ஓர் ஆயிரம் தீர.***
***நின்று. மா தவம் புரிதியேல்.***
***நினைவு முற்றுதி" என்று***

*அன்று கூறிட. புரிந்தனள்.*
*அருந் தவம். அனையாள்.*

*-indent: 30">* **திதி தவம் செய்த இடம் -** *குசப்லவம்.*

*காசிபன் தன் மனைவியான திதிக்குத் தவம் செய்து மகவு பெற அனுமதி தந்தான்; அவளும் ஆயிரம் ஆண்டு கடுந்தவம் செய்தாள் என்பது.-26*

*125. 'கேட்ட வாசவன். அன்னவட்கு*
*அடிமையில் கிடைத்து.*
*வாட்டம் மா தவத்து உணர்ந்து.*
*அவள் வயிற்று உறு மகவை*
*வீட்டியே எழு கூறு செய்*
*திடுதலும். விம்மி.*
*நாட்டம் நீர் தர. "மருத்து" எனும்*
*நாமமும் நவின்றான்.*

*-indent: 30">* **மருத்து** *-வாயு.*

*திதி என்பவள் தன்னைக் கொல்லும் மகனைப் பெறத் தவம் புரிகிறாள் என்பதையறிந்த இந்திரன் அவளுக்குப் பணியாளாக அமைந்தான்; அவளது கருப்பத்தைப் பிளந்து சிதைத்தான்; அவள் விருப்பப்படி அந்த ஏழு துண்டங்களுக்குச் சப்த மருத்துக்கள் என்னும் பெயரிட்டான் என்பது.-27*

*126. 'ஆயது இவ் இடம்; அவ் இடம்*
*அவிர் மதி அணிந்த*
*தூயவன் தனக்கு உமைவயின்*
*தோன்றியே. தொல்லை*
*வாயுவும் புனல் கங்கையும்*
*பொறுக்கலா வலத்த*
*சேய் வளர்ந்தருள் சரவணம்*
*என்பதும் தெரித்தான்.'*

***சரம்*** *- நாணல்;* **வன ம் -** *காடு;* ***சரவணம்*** *- நாணற்காடு.*

*சிவனுக்கு உமை வாயிலாகப் பிறந்த சுப்பிரமணியக்கடவுள் வளர்ந்த சரவணக் காடு இது என்று விசுவாமித்திரன் கூறினான் என்பது.-28*

***127. ‘இந்த மா நதிக்கு உற்று உள***
***தகைமைய யாவும்.***

***எந்தை! கூறுக’ என்று இராகவன்***
***வினவுற. ‘எனை ஆள்***
***மைந்த! நின் திரு மரபு உளான்.***
***அயோத்தி மா நகர் வாழ்***
***விந்தை சேர் புயன். சகரன்.***
***இம் மேதினி புரந்தான்.***

***சகரன்** - நஞ்சோடு பிறந்தவன்; **கரம்** - விடம்; **மேதிநீ** - திருமாலால் வதைக்கப்பட்ட மதுகைடபர்களின் மேதசால் (கொழுப்பு) நனைந்தது என்னும் பொருளது.*

*சூரிய குலத்தவன் அயோத்தியை ஆண்டவன் சகரன் என்பவன். விசுவாமித்திரன் கங்கையின் வரலாற்றை இராமனுக்குச் சொல்ல முற்படுகையில் அச்சகரனைக் குறித்துக் கூறுகிறான் என்பது.-1*

***128. ‘விறல் கொள் வேந்தனுக்கு உரியவர்***
***இருவரில். விதர்ப்பை***
***பொறையின் நல்கிய அசமஞ்சற்கு***
***அஞ்சுமான் புதல்வன்;***
***பறவை வேந்தனுக்கு இளைய மென்***
***சுமதி முன் பயந்த***
***அறனின் மைந்தர்கள் அறுபதி***
***னாயிரர் வலத்தார்.***

***சுமதி** - காசிபனுக்கு விநதையிடம் தோன்றியவள்; **சுமதி** - நல்லறிவுடையவள் என்பது பொருள்.*

*சகரனுக்கு இரு மனைவியர். முதல் மனைவியான கேசினிக்கு ஒரு மகன் - அசமஞ்சன்; இளையவள் சுமதிக்கு அறுபதினாயிரவர். -2*

***129. ‘திண் திறல் புனை சகரனும்.***
***தனையர் சேவகங்கள்***
***கண்டு. முற்றிய அய மகம்***
***புரிதலும். கனன்று.***
***வண்டு துற்று தார் வாசவற்கு***
***உணர்த்தினர். வானோர்;***
***ஒண் திறல் பரி கபிலனது***
***இடையினில் ஒளித்தான்.***

*அசுவமேத யாகம் செய்யக் கருதிய சகரன் குதிரையை அனுப்பினான்; அக்குதிரையை இந்திரன் மாயையால் கவர்ந்துசென்று தவத்திலுள்ள கபில முனிவனுக்குப்பின்னே ஒரு மரத்தில் கட்டிச்சென்றான் என்பது.*

*நூறு அசுவமேத யாகங்கள் செய்பவன் இந்திர பதவி அடைவான். அதனால் இந்திரனால் அந்த யாகத்தை ஏற்க முடியவில்லை. -3*

***130. ‘வாவு வாசிபின் சென்றனன்***
***அஞ்சுமான் மறுகி.***
***பூவில் ஓர் இடம் இன்றியே***
***நாடினன் புகுந்து.***
***தேவர் கோமகன் கரந்தமை***
***அறிந்திலன். திகைத்து.***
***மேவு தாதைதன் தாதைபால்***
***உரைத்தனன். மீண்டு.***

***வாசி*** *- குதிரை;* ***பூ*** *- பூமி.*

*குதிரைக்குக் காவலாக இருந்த அம்சுமானுக்கு இந்திரனது வஞ்சகம் தெரியவில்லை; காணாத குதிரையை அம்சுமான் பூமியெங்கும் தேடியும் கிடைக்கவில்லை; தந்தை சகரனிடம் சொன்னான் என்பது. -4*

***131. ‘கேட்ட வேந்தனும். மதலையர்க்கு***
***அம் மொழி கிளத்த.***
***வாட்டம் மீக்கொள. சகரர்கள்***
***வடவையின் மறுகி.***
***நாட்டம் வெங் கனல் பொழிதர.***
***நானிலம் துருவி.***
***தோட்டு நுங்கினர் புவியினை.***
***பாதலம் தோன்ற.***

***வடவை*** - *பெண்குதிரை (நெருப்பு) - இடவாகு பெயர். கடலிடையே வாழும் ஒரு பெண் குதிரையின் முகத்திலே நெருப்பு எப்பொழுதும் அவியாமல் உள்ளது என்றும். பிரளய காலத்தில் அது வெளிப்பட்டு உலகை எரித்து அழிக்குமென்றும் கூறுவர். வேள்விக் குதிரை காணாதுபோன செய்தியைச் சகரன் தன் மக்களிடம் கூறல் - அவர்கள் மிக்க கோபத்தோடு சென்று எங்கும் தேடுதல் - காணாமையால் பூமியைத் தோண்டுதல் - என்பது. -5*

***132. ‘நூறு யோசனை அகலமும் ஆழமும் நுடங்கக்***
***கூறு செய்தனர். என்பரால். வட குணதிசையின்;***
***ஏறு மா தவக் கபிலன்பின் இவுளி கண்டு. எரியின்***
***சீறி. வைதனர்; செருக்கினர். நெருக்கினர்; செறுத்தார்.***

***யோசனை*** - *பேரளவு - சமணநூல் வழக்கு;* ***குணக்கு*** - *கிழக்கு.*

*சகர குமாரர் வடகிழக்குத் திசையிலே நூறு யோசனை அகலமும் ஆழமும் அமையத் தோண்டினர்;கபிலன் பின் இருந்த குதிரையைப் பார்த்தனர்; கோபத்தால் அம் முனிவனை ஏசினர் என்பது.-6*

***133. ‘மூளும் வெஞ் சினத்து அருந் தவன்***
***முனிந்து. எரி விழப்ப.***
***பூளைசூடிதன் நகையினில்***
***எயில் பொடிந்தனபோல்.***
***ஆளும் மைந்தர் ஆறு - அயுதரும்***
***சாம்பர் ஆய் அவிந்தார்;***
***வேள்வி கண்ட நல் வேந்தனுக்கு***
***உரைத்தனர். வேயர்.***

***பூளை சூடி*** - *சிவன்;* ***பூளை*** - *(மலர்) - முதலாகுபெயர். இதனை உழிஞை என்பர்.*

*தவம் கலைந்த கபில முனிவன் கோபத்தால் சீறினான் - அவனது சாபத்தால் அரச மைந்தர் அறுபதினாயிரவர் சாம்பரானார்கள் - இச்செய்தி சகரனுக்கு எட்டியது என்பது. -7*

***134.*** ***'உழைத்த வெந் துயர்க்கு ஈறு காண்கிலன்;***
***உணர்வு ஒழியா.***
***அழைத்து மைந்தன்தன் மைந்தனை.***
***"அவர் கழிந்தனரேல்.***
***இழைத்த வேள்வி இன்று இழப்பதோ?"***
***என. அவன் எழுந்து.***
***தழைத்த மா தவக் கபிலன் வாழ்***
***பாதலம் சார்ந்தான்.***

***ஏல்*** *- (என்னில்) எதிர்கால வினையெச்சத்திரிபு;* ***அம்சுமான்*** *- சகரனுடைய மைந்தனுக்கு மைந்தன். தன் மைந்தர் அறுபதினாயிரவர் மாய்ந்தது கேட்டுச் சகரன் வருந்தினான். அங்ஙனம் வருந்தினும் வேள்வியைச் செய்து முடிக்க உறுதி கொண்டான் என்பது. -8*

***135.*** ***'விண்டு நீங்கினர் உடல் உகு***
***பிறங்கல் வெண் நீறு***
***கண்டு. துண்ணெனும் மனத்தினன்.***
***கபில மா முனிதன்***
***புண்டரீக மென் தாள் தொழுது***
***எழுந்தனன் புகழ.***
***"கொண்டு போக. நின் இவுளி!" என்று***
***உற்றதும் குறித்தான்.***

*அம்சுமான் இறந்துவிட்ட தன் தந்தையரின் சாம்பல் மலைபோலக் குவிந்து கிடப்பதைப் பார்த்துத் திடுக்கிட்டான். கபில முனிவனை வணங்கிக் குதிரையைக் கொண்டுபோகக்கேட்டான். கபிலனும் உடன் பட்டான் என்பது. -9*

***136.*** ***'பழுதிலாதவன் உரைத்த சொல்***
***கேட்டலும். பரிவால்***
***தொழுது. வாம் பரி கொணர்ந்து. அவி***
***சுரர்களுக்கு ஈயா.***
***முழுதும் வேள்வியை முற்றுவித்து.***
***அரசனும் முடிந்தான்-***
***எழுது கீர்த்தியாய்! - மைந்தனுக்கு***
***அரசியல் ஈந்து.***

***பழுது*** *- காமம். வெகுளி. மயக்கம் என்பன;* ***எழுது கீர்த்தி*** *- எழுதப்படுகின்ற புகழ்.*

*அம்சுமான் கொண்டுவந்த குதிரையை வைத்துச் சகரன் வேள்வியை முடித்தான். தேவர்களுக்கு அவிசு தந்தான். பெயரனான அம்சுமானுக்கு முடிசூட்டி இறந்தான் என்பது. -10*

***137. 'சகரர் தொட்டலால். "சாகரம்"***
***எனப் பெயர் தழைப்ப.***
***மகர வாரிதி சிறந்தது;***
***மகிதலம் முழுதும்***
***நிகர் இல் மைந்தனே புரந்தனன்;***
***இவன் நெடு மரபில்.***
***பகிரதன் எனும் பார்த்திபன்***
***பருதி ஒத்து உதித்தான்.***

*அக்கடல் சகரர் தோண்டியதால் சாகரம் எனப்பட்டது;அம்சுமான் மரபிலே பகீரதன் என்பவன் தோன்றினான் என்பது.*

*அம்சுமான் மைந்தன் திலீபன்; திலீபன்; மகன் பகீரதன்.-11*

***138. 'உலகம் யாவையும் பொது அறத்***
***திகிரியை உருட்டி.***
***இலகும் மன்னவன் இருந்துழி.***
***இறந்தவர் சரிதம்.***
***அலகு இல் தொல் முனி ஆங்கவற்கு***
***உரைத்திட. அரசன்***
***திலகம் மண் உற வணங்கி நின்று.***
***ஒரு மொழி செப்பும்:***

***பொது அற*** *- பல அரசர்க்குப் பொது என்னும் தன்மை நீங்கித் தனக்கே உரிமையாகும்படி.*

*பகீரதன் தன் குலகுருவான வசிட்டனிடம் தன் முன்னோர் வரலாறு கேட்டான் என்பது. -12*

***139.*** ***‘ “கொடிய மா முனி வெகுளியின்***
***மடிந்த எம் குரவர்***
***முடிய நீள் நிரயத்தினில்***
***அழுந்திடு முறைமை***
***கடியுமாறு. எனக்கு அருந் தவம்***
***அமைகுறு கருமம்.***
***அடிகள்! சாற்றுக” என்றலும்.***
***அந்தணன் அறைவான்:***

*பகீரதன். தன் முன்னோர் நரகத்தில் அழுந்திடும் தன்மையை நீக்கும் விதமே தனக்கு அருந்தவம் என்றும் அதற்கு இசைவான செயலைச் சொல்லுக என்றும் வசிட்டனிடம் கூறினான் என்பது.*

*முனிவர்களின் சாபத்தால் இறக்கின்றவர்களுக்கு நற்கதியில்லை என்பது நூல் துணிபு. -13*

***140.*** ***‘ “வையம் ஆளுடை மன்னவர்***
***மன்னவ! மடிந்தோர்***
***உய்ய. நீள் தவம் ஒழிவு அறு***
***பகல் எலாம் ஒருங்கே.***
***செய்ய. நாள்மலர்க் கிழவனை***
***நோக்கி. நீ செய்தி;***
***நையல்!” என்று இனிது உரைத்தனன்.***
***நவை அறு முனிவன்.***

***மலர்க்கிழவன்*** *- நான்முகன்;* ***நவையறு முனிவன்*** *- வசிட்டன்.*

*பிரமனை நோக்கி நீ தவம் செய்தால் உனது முன்னோர் நற்கதியடைய வேண்டும் என்ற உனது எண்ணம் ஈடேறும் என்று வசிட்டன் பகீரதனிடம் உரைத்தான் என்பது.-14*

***141.*** ***‘ஞாலம் யாவையும் சுமந்திரன் தன்வயின் நல்கி.***
***கோலும் மா தவத்து இமகிரி மருங்கினில் குறுகி.***
***காலம் ஓர் பதினாயிரம் அருந் தவம் கழிப்ப.***
***மூல நான்மறைக் கிழவனும் வந்து. இவை மொழிவான்:***

***சுமந்திரன்*** *- நல்ல ஆலோசனையுடையவன் என்பது பொருள்.*

*வசிட்டனது மொழிப்படி இமயமலைச் சாரலில் பதினாயிரம் ஆண்டு பகீரதன் கடும் தவம் செய்தான்; அத் தவத்திற்கு மகிழ்ந்த பிரமனும் அம் மன்னன்முன் தோன்றினான் என்பது.-15*

***142.*** ***' "நின் பெருந் தவம் வியந்தனம்;***
***நினது நீள் குரவர்.***
***முன்பு இறந்தனர். அருந் தவன்***
***முனிவின்; ஆதலினால்.***
***மன் பெரும் புவிஅதனில்.***
***வான் நதி கடிது அணுகி.***
***என்பு தோயுமேல். இருங் கதி***
***பெறுவர்" என்று இசைத்தான்.***

**கதி** - *இறந்தபின் அடையும் பதவி;* **வான் நதி** - *ஆகாய கங்கை.*

*'சாம்பரான சகரர் நற்கதியடைய வானகங்கை மண்ணுலகம் வந்து அவ்வெலும்புகள் மேல் படிய வேண்டும் என்று பிரமன் பகீரதனிடம் கூறினான் என்பது.-16*

***143.*** ***' "மாக மா நதி புவியிடை நடக்கின்.***
***மற்று அவள்தன்***
***வேகம் ஆற்றுதல் கண்ணுதற்கு***
***அன்றி வேறு அரிதால்;***
***தோகை பாகனை நோக்கி. நீ***
***அருந் தவம் தொடங்கு" என்று***
***ஏகினான். உலகு அனைத்தும் எவ்***
***உயிர்களும் ஈன்றான்.***

**வேறு** - *(வேற்றோர்) - பண்பாகு பெயர்;* **கண்ணுதல்** - *அன்மொழித்தொகை;* **தோகை பாகன்** - *சிவன்.*

*ஆகாய கங்கையைத் தாங்கும் வல்லமை பூமிக்கு இல்லை; அவ்வல்லமை சிவனிடமே உள்ளது; அவனை நோக்கித் தவம் செய்யுமாறு பகீரதனிடம் நான்முகன் கூறினான் என்பது.-17*

144. ‘மங்கை பாகனை நோக்கி. முன்
மொழிந்தன வருடம்
தங்கு மா தவம் புரிதலும்.
தழல் நிறக் கடவுள்
அங்கு வந்து.”நின் கருத்தினை
முடித்தும்” என்று அகன்றான்;
கங்கையைத் தொழ. காலம்
ஐயாயிரம் கழித்தான்.

**மங்கை பாகன்** - *சிவன்;* **தழல் நிறக் கடவுள்** - *சிவன்.*

*பகீரதன் சிவன் அருளை வேண்டிப் பதினாயிரம் ஆண்டுகள் தவம் செய்தான்; சிவனும் அரசனின் கருத்துக்கு இசைந்தான்; பின்னர்க் கங்கையை நோக்கி ஐயாயிரம் ஆண்டுகள் தவம் கிடந்தான் பகீரதன் என்பது.-18*

145. ‘ஒரு மடக் கொடி ஆகி வந்து.
“உனது மா தவம் என்?
பொரு புனல் கொடி வரின். அவள்
வேகம் ஆர் பொறுப்பார்?
அரன் உரைத்த சொல் வினோதம்;
மற்று இன்றும் நீ அறிந்து.
பெருகு நல் தவம் புரிக!” என.
வர நதி பெயர்ந்தாள்.

**அரன்** - *ஊழிக் காலத்தில் எல்லா உயிர்களையும் அழிப்பவன்; எப்பொழுதும் தன்னைச் சரண் புகுந்தவர்களின் துயரை அழிப்பவன்;* **வரநதி** - *சிறந்த நதியான கங்கா தேவி.*

*பகீரதனது வழிபாட்டை ஏற்றுக் கொண்ட கங்காதேவி இந்தக் கங்கை மண்ணுலகம் வந்தால் அதன் வேகத்தைச் சிவனால் தாங்க முடியுமா என்பதை அறியுமாறு கேட்டாள் என்பது. -19*

146. ‘கரந்தை. மத்தமோடு. எருக்குஅலர்.
கூவிளை. கடுக்கை.
நிரந்த பொற் சடை நின்மலக்
கொழுந்தினை நினையா.
அரந்தை உற்றவன். இரண்டரை
ஆயிரம் ஆண்டு
புரிந்து நல் தவம் பொலிதர.
வரை உறை புனிதன்.

***கரந்தை*** - ஒரு பூண்டு; ***கூவிளை*** - (இலை) - முதலாகு பெயர் (வில்வம்); ***மத்தம்*** - உன்மத்தம். ஊமத்தம்: முதற்குறை: ***வரைமகள் புனிதன்*** - பார்வதி கொழுநனான சிவன். கரந்தை. ஊமத்தம். எருக்கு. வில்வம். கொன்றை ஆகியன சிவனுக்கு உரியவை.

*கங்காதேவியின் மொழியைக் கேட்டுப் பகீரதன் மீண்டும் சிவனை நோக்கிக் தவம் புரிந்தான் என்பதும் சிவன் அவன்முன் தோன்றிக் காட்சி தந்தான் என்பதும் இதிற் சொல்லப்பெறுகின்றன.-20*

***147.*** ***'எதிர்ந்து. "நின் நினைவு என்?" என.***
***இறைஞ்சி. "எம் பெரும!***
***அதிர்ந்து. கங்கை ஈது அறைந்தனள்"***
***என்றலும். "அஞ்சேல்!***
***பிதிர்ந்திடா வகை காத்தும்"***
***என்று ஏகிய பின்றை.***
***முதிர்ந்த மா தவம் இரண்டரை***
***ஆயிரம் முடித்தான்.***

***பிதிர்ந்திடாவகை*** - கங்கை நீர் சிந்தாதபடி; ***முதிர்ந்த மாதவம்*** - சிறந்த பெருந்தவம்.

*பகீரதன் முன் எழுந்தருளிய சிவன் கங்கையைத் தாங்குவதாகப் பகீரதனுக்கு உறுதி தந்தான் என்பதும். மீண்டும் அவ் வரசன் கங்கையை நோக்கித் தவமிருந்து தனது கருத்தை நிறைவு செய்தான் என்பதும் இதிற் சொல்லப்பெறுகின்றன. -21*

***148.*** ***'பெருகும் நீரொடு. பூதியும்.***
***வாயுவும். பிறங்கு***
***சருகும். வெங் கதிர் ஒளியையும்.***
***துய்த்து. மற்று எதையும்***
***பருகல் இன்றியே. முப்பதி***
***னாயிரம் பருவம்.***
***உருகு காதலின் மன்னவன்***
***அருந் தவம் உழந்தான்.***

*பகீரதனின் தவச் சிறப்பு. சொல்லப்பெறுகிறது. அவன் பிரமனைக் குறித்துப் பதினாயிரமும். கங்கையைக் குறித்து. ஏழாயிரத்தைந்நூறும். சிவனை நோக்கிப் பன்னீராயிரத்து ஐந்நூறும் ஆக முப்பதாயிரம் ஆண்டுகள் கடுந்தவம் புரிந்தான் என்பது.*

*அவன் சருகு. சாம்பல். நீர். காற்று. வெயில் ஆகியவற்றையே உண்டும். இறுதியில் அவ் வெயிலையும் நுகராமலும் தவம் செய்தான் என்றார். -22*

***149.*** ***‘உந்தி அம்புயத்து உதித்தவன்***
***உறைதரும் உலகும்.***
***இந்திராதியர் உலகமும்.***
***நடுக்குற இரைத்து.***
***வந்து தோன்றினள் வர நதி;***
***மலைமகள் கொழுநன்***
***சிந்திடாது. ஒரு சடையினில்***
***கரந்தனன் சேர.***

***அம்புயம்*** - *நீரில் பிறப்பது;* ***உந்தி அம்புயத்து உதித்தவன்*** - *பிரமன்.*

*கங்கா நதி சத்திய லோகமும். சொர்க்கலோகமும் நடுங்கும்படி ஆரவாரித்துக்கொண்டு மண்ணுலகிற்கு வந்தது; அதனைச் சிவன் தனது சடையில் சிறிதும் சிதறாமல் தாங்கினான் என்பது.-23*

***150.*** ***‘புல் நுனித் தரு பனி என.***
***வர நதி. புனிதன்***
***சென்னியில் கரந்து ஒளித்தலும்.***
***வணங்கினன். திகைத்து.***
***மன்னன் நிற்றலும். “வருந்தல்; நம்***
***சடையள். வான் நதி இன்று”***
***என்ன விட்டனன். ஒரு சிறிது;***
***அவனி போந்து இழிந்தாள்.***

***போந்து*** - *புகுந்து - மருஉ மொழி;* ***புல் நுனி தரு பனி என*** - *கங்கைக்கு உவமை.*

*கங்கை சிவனது சடையில் மறைந்துவிட்டதைப் பகீரதன் கண்டு திகைத்தான். அச்சிவன் அவன் கலக்கத்தைப் போக்கிக் கங்கையில் சிறிதுவிட அது பூமியில் பெருகியது என்பது. -24*

***151.*** ***‘இழிந்த கங்கைமுன். மன்னவன்***
***விரைவொடும் ஏக.***
***கழிந்த மன்னவர் கதி பெற***
***முடுகிய கதியால்.***
***அழுந்தும் மா தவச் சன்னுவின்***
***வேள்வியை அழிப்ப.***
***கொழுந்து விட்டு எரி வெகுளியன்.***
***குடங்கையில் கொள்ளா.***

*பூவுலகில் இறங்கிய கங்கையின் பின்னே பகீரதன் விரைந்து வந்தான்; அக் கங்கையின் வேகத்தால் சன்னு முனிவனின் தவம் கலைந்தது; வெகுண்ட அம் முனி அந் நீரை உள்ளங் கையில் மொண்டு கொண்டான் என்பது.*

*சன்னு முனிவன் பருகிக் காதுவழி வெளியிட்டதால் கங்கைக்குச் 'சானவி' என்னும் பெயர் உண்டு.-25*

***152.** **உண்டு உவந்தனன். மறை முனிக்***
***கணங்கள் கண்டு உவப்ப.***
***கண்ட வேந்தனும் வணங்கி. முன்***
***நிகழ்ந்தன கழற.***
***"கொண்டு போக!" என. செவிவழிக்***
***கொடுத்தனன்; குதித்து.***
***விண்டு நீங்கினர் உடல் உகு***
***பொடியில் மேவினளே.***

*சன்னு முனிவன் அக் கங்கை நீரைப் பருகினான். பகீரதனும் அம்முனிவனை வணங்கிச் செய்திகளைச் சொல்ல இரங்கிய முனிவனும் காது வழியாக அந்த நீரை விட்டான் என்பது.* ***மறைமுனிக் கணங்கள்*** *- வேதங்களைத் தாம் ஓதுதலும். பிறர்க்கு ஓதுவித்தலும். அவற்றின் விதிப்படி ஒழுகுதலையுமுடைய முனிவர். 5 -26*

***153.** **'நிரையம் உற்று உழல் சகரர்கள்***
***நெடுங் கதி செல்ல.***
***விரை மலர் பொழிந்து ஆர்த்தன.***
***விண்ணவர் குழாங்கள்;***
***முரைசம் முற்றிய பல்லியம்***
***முறை முறை முழங்க.***
***அரைசன் அப்பொழுது. அணி மதில்***
***அயோத்தி மீண்டு அடைந்தான்.***

***முறை முறை*** *- அடுக்கு மிகுதிப் பொருள் பற்றியது.*

*நரகத்திற் புகுந்த சகரர் நற்கதி உற்றனர்; விண்ணவர் மகிழ்ந்து மலர் சொரிந்தனர்; பல்லியங்கள் ஆர்த்தன; பகீரதனும் அயோத்தி அடைந்தான் என்பது.-27*

***154. ‘அண்ட கோளகைப் புறத்தது ஆய்.***
***அகிலம் அன்று அளந்த***
***புண்டரீக மென் மலரடிப்***
***பிறந்து. பூமகனார்***
***கொண்ட தீர்த்தம் ஆய். பகிரதன்***
***தவத்தினால் கொணர.***
***மண்தலத்து வந்து அடைந்தது.***
***இம் மா நதி. மைந்த!***

*திருமால் உலகம் அளந்த காலத்தில் அப்பரமன் திருவடி சத்தியலோகம் செல்லப் பிரமன் தன் கைக் கமண்டல நீர் கொண்டு அத்திருவடியைக் கழுவினான். அந்தப் புனித நீரே கங்கையாகியது என்பது அக் கங்கையைப் பகீரதன் தவத்தால் பூவுலகு கொணர்ந்தான் என்றான் விசுவாமித்திரன். -28*

***155. ‘சகரர்தம்பொருட்டு அருந் தவம்***
***பெரும் பகல் தள்ளி.***
***பகிரதன் கொணர்ந்திடுதலால்.***
***“பகிரதி” ஆகி.***
***மகிதலத்திடைச் சன்னுவின்***
***செவி வழி வரலால்.***
***நிகர் இல். “சானவி” எனப் பெயர்***
***படைத்தது. இந் நீத்தம்.***

***பகல்*** *- (நாள்) - ஆகு பெயர்.*

*கங்கை நதி பகீரதன் கொண்டு வந்ததால் ‘பாசீரதி’ என்னும் பெயரைப் பெற்றது; பூவுலகிலே சன்னுவின் காது வழியாக வெளிப்பட்டதால் ‘சானவி’ என்னும் பெயரை அடைந்தது என்பது. 5-29*

***156. என்று கூறலும். வியப்பினோடு***
***உவந்தனர். இறைஞ்சி.***
***சென்று தீர்ந்தனர் கங்கையை;***
***விசாலை வாழ் சிகரக்***
***குன்றுபோல் புயத்து அரசன் வந்து.***
***அடி இணை குறுக.***
***நின்று. நல் உரை விளம்பி.***
***மற்று அவ் வயின் நீங்கா.***

***விசாலை*** *- இட்சுவாகு - அலம்புசை மகனான விசாலன் ஏற்படுத்தியது.*

*விசுவாமித்திரன் கங்கையின் வரலாற்றைக் கூறியபின். மூவரும் கங்கையைக் கடந்து விசாலையை அடைந்தார் என்பது. -30*

***157. மது மலைந்த வெண் தரளமும்.***
***(வயிரமும்). மணியும்.***
***கதிர் வளம் செயும் பவளமும்.***
***கழுத்திடைக் காட்டி.***
***எதிர் மலைந்த பைங் கூந்தலை***
***இன வண்டு (நணுக).***
***புது மணம் செயும் மடந்தையர்***
***போன்றன - பூகம்.***

*முத்தும். வயிரமும். மணியும் கழுத்தை அலங்கரிக்க. மது நிறைந்த கூந்தலில் வண்டுகள் மொய்க்கப் புது மணத்தை எங்கும் பரப்பும். மடந்தையரைப் போன்றன கமுகுகள். -1*

***158. அந்த இந்திரனைக் கண்ட***
***அமரர்கள். பிரமன் முன்னா***

***வந்து. கோதமனை வேண்ட.***
***மற்று அவை தவிர்த்து. மாறாச்***
***சிந்தையின் முனிவு தீர்ந்து.***
***சிறந்த ஆயிரம் கண் ஆக்க.***
***தம் தமது உலகு புக்கார்;***
***தையலும் கிடந்தாள். கல் ஆய்.***

*இந்திரனுக்கு நேர்ந்த சாபத்தைப் போக்குமாறு தேவர்கள் கௌதமனை வேண்டினர்; அக் கௌதம முனிவனும் ஆயிரம் கண்களாகுமாறு அருளிச் சென்றான்; அகலிகை கல்லாய்க் கிடந்தாள் என்பது.-1*

159. ‘வண்ண வார் குழலினாட்கும்
வானவர்தமக்கும் ஆகேன்;
எண்ணி நான் செய்த குற்றம்.
முனிவ! நீ பொறுத்தி’ என்ன.
‘பண்ணிய உறுப்பில் கோடல்
பத்து நூறு அவையும் போக.
அண்ணிய விண்ணில் ஆளிக்கு
ஆயிர நயனம்’ என்றான்.

இந்திரன் அகலிகையைச் சேர விருப்பமுடையவனாயினும் பெருந்தவமுடைய கௌதமன் முன் தோற்றான்; தன் தவற்றையுணர்ந்த. இந்திரனும் முனிவனிடம் மன்னிப்புக் கோரினான்; ஆயிரம் கண்கள் பெற்றான்.-2

### 10 மிதிலைக் காட்சிப் படலம்

160. இன்ன பல் வளங்கள் எல்லாம்
இனிதுற நோக்கி. யார்க்கும்
முன்னவன் ஆய தேவும்.
முனிவனும். இளைய கோவும்.
பொன்னகர் இறையும் மற்றைப்
பூதலத்து அரசும் ஒவ்வா
மன்னவன் சனகன் கோயில்
மணி மதில் புறத்தைச் சேர்ந்தார்.

**முன்னவன் ஆய தேவு** - இராமன்; **கோயில்** - அரண்மனை.

வழியிலே மூவரும் பல காட்சிகளைக் கண்டு மகிழ்ந்தனர். இராமனும். இலக்குவனும். விசுவாமித்திரனும் சிறந்த மன்னவனாகிய சனகனின் அரண்மனையின் மதில்புறம் சேர்ந்தார்கள். -1 161. நங்கையர் விழிக்கு நல் விழவும் ஆய். அவர்
இங்கிதத்தொடு தொழுது இறைஞ்சும் தேவும் ஆய்.
அங்கு அவர்க்கு அமுதும் ஆய். வந்த சானகி
எங்கள் நாயகற்கு இனி யாவது ஆம்கொலோ?

சீதை பெண்களின் கண்களுக்குச் சிறந்த காட்சிப் பொருளாக. அவர்கள் தொழுது வணங்கும் தெய்வமாக. அவர்களுக்கு அமுதமாக ஆயவள் எங்கள் நாயகனான இராமனுக்கு இனி எவ்வகை அமைவாளோ என்பது.-1

***162. தீங்கு செய் அரக்கர்தம் வருக்கம் தீயவும்.***
***ஓங்கிய தவங்களும். உலகும். வேதமும்***
***தாங்கி மேல் வளரவும். தழைத்த சானகி***
***ஆங்கு அவன் வடிவினை அகத்தில் உன்னுவாள்.***

*அரக்கரை அழிக்கவும். உயர் தவங்களும். உலகும். வேதமும் மேன்மேல் வளரவும் தோன்றிய சீதை இராமனது திருமேனியைத் தன் உள்ளத்தில் எண்ணினாள் என்பது. அரக்கரை அழிக்கவே சீதை பிறந்தாள். -1*

***163. அப் புறத்து அலை கடல் அர்ந்த தாமரை***
***ஒப்புற இந்து என்று உதித்த ஔ் அழல்***
***வெப்புறு வெங் கதிர் பரப்ப. விண் எலாம்***
***கொப்புளங் கொண்டென. உடுக்கண் கூர்ந்தவே.***

*கடலிடத்து மலர்ந்த தாமரை போலத் தோன்றிய சந்திரனாகிய நெருப்பு வெம்மைக் கதிர்களைப் பரப்பியது; வானம் எங்கும் கொப்புளங்கள் ஏற்பட்டன போல விண்மீன்கள் பரவின என்றார்.-1*

***164. நின்றனன் அரசன் என்றான்; நீ எனைக் கொண்டு போகை***
***நன்று என மொழிந்து நின்றான். நல்கிய தாயை நோக்கி. 'இன்று***
***எனைக் கொடுத்தியோ?' என்று இறைஞ்சினன் கசிந்து***
***நின்றான்; தன் துணை மார்பில் சேர்த்துத் தழுவலும். அவனை***
***நோக்கி.***

***நடுக் குமரனான சுனச்சேபன் தன்னைப் பலியிடக் கொண்டு போகுமாறு மன்னனிடம் சொன்னான்; தன்னைப் பெற்ற தா யை***
***நொந்து கொண்டான்; வருந்திய தாயும் அவனைத் தழுவி உருகினாள்-1***

***165. 'என்று கூறி. இமையவர் தங்கள்முன்***
***வன் தபோத வசிட்டன் வந்து. என்னையே***
***"நின்ற அந்தணனே" என நேர்ந்தவன்***
***வென்றி வெந் திறல் தேவர் வியப்புற.***

**தபோத வதிட்டன்** - *தவ வலிமை மிக்க வசிட்டன்.*

*தேவர்களின் வேண்டுகோளை ஏற்ற வசிட்டன் அவர்கள் முன் விசுவாமித்திரனை நோக்கித் தவ முனிவரே! அந்தணரே என்று தேவர்களும் வியப்புற அழைத்து வாழ்த்தினான் என்பது. -1*

**166.** **காதலால் ஒருத்தியை நினைப்ப. கண் துயில்**
**மாதராள் அவன்திறம் மறுப்ப. கங்குல் மான்.**
**'ஏதிலான் தமியன்' என்று. 'ஏகலேன்' என.**
**ஆதலால் இருந்தனன்; அளியன் என் செய்வான்?**

*அன்பினால் அவளைத் தழுவக் கருதினான்;தூங்குகின்ற அவளோ அவனது எண்ணத்தை மறுத்தாள்; இரவோ இவன் அயலான். தனித்துள்ளான். நான் அகலமாட்டேன் என்று கூறத் தலைவனும் காம வேதனையோடு இருந்தான். அதைத் தவிர அவன் வேறு என்னதான் செய்வான்! என்பது.-1*

*11* **குலுமுறை கிளத்து படலம்**

**167.** **அந்தரத்தில் உருள்சேர.**
**அடு சனி வந்து உறும் அளவில்.**
**சிந்தை மகிழ் தசரதனும் சென்று அவன்மேல்**
**சரங்கள் தொடுத்து.**
**'இந்த வழி போகு அரிது' என்று**
**இயைந்தவனை எந்நாளும்**
**உந்தும் என உலகுதனக்கு**
**உறுதுயர் தீர்த்திடும் உரவோன்.**

*தசரதன் சனியை அம்புகளால் வதைத்து மக்களின் துயர்துடைப்பவன் என்பது. -1*

**168.** **'கோதமன் தன் மனைக்கிழத்திக்கு**
**உரைத்த கொடுஞ் சாபம் எனும்**
**ஓத அருங் கல் உருத் தவிர்த்து.**
**முன்னை உருக் கொடுத்தது இவன்**
**பாதமிசைத் துவண்டு எழுந்த**
**பசும் பொடி மற்று அது கண்டாய்;**
**ஈது இவன்தன் அருள் வடிவம்**
**வரலாறும்' என உரைத்தான்.**

*'கோதமன் தன் மனைவியான அகலிகையைக் கல்லாகச் சபித்தான்; அக் கல்லுருவத்தை நீக்கி அவளது முன்னை உருவைத் தந்தவன் இந்த இராமன்; அவனது பாத தூளிப்பட்டுச் சிதைந்து பொடியாகிக் கிடப்பது அக்கல்; இது அவனது அருள் புலப்படுத்தும் வரலாறு' என்று விசுவாமித்திரன் உரைத்தான் என்பது. அகலிகையின் சாபத்தை நீக்கிப் பெண்ணுருத் தந்தவன் இராமன்.*

***169.*** ***புக்கனர்; சனகர் கோன்.***
***'பொரு இல் நீங்கள்தாம்***
***ஒக்கவே வில்லினை***
***உரத்து அடுத்து எடுத்து.***
***இக் கணத்து எய்துவீர்'***
***என்றனன்; என.***
***மிக்கவர் அவ் உரை***
***விளம்பினார் அரோ.***

*சனகன் இராம லக்குவரை நோக்கி. 'நீங்கள் இவ்வில்லை எடுத்து நாணேற்றி அம்பு எய்யுங்கள் என்று கூறினன் என்பது.-1*

***170.*** ***புக்கனர். அவர்களைப் பொருந்த நோக்கி. 'இம்***
***முக்கணன் வில்லினை மொய்ம்பின் ஆற்றலோடு***
***இக் கணத்து அளித்திர் என்று. எம்மை ஆளுடை.***
***மிக்குறு சனகனும் விளம்பினான்' என்றார்.***

*உள்ளே புகுந்த இராமலக்குவரைப் பார்த்து 'இச் சிவ தனுசை உங்கள் ஆற்றலால் வளைத்திட வேண்டும். இது இந்நாட்டு மன்னன் வேண்டுவது' என்று சதானந்தன் உரைத்தான் என்பது.-2*

***171.*** ***என்று சாலவே வெதும்பி***
***இன்ன இன்னவாறெலாம்***
***ஒன்றலாது பன்னி ஆவி***
***ஊசலாட வாடுவாள்***

***மன்றல் நாறு மாலை மீளி***
***மான யானை போல முன்***
***சென்ற வீதியூடு பார்வை***
***செல்லநிற்கும் எல்லையே.***

*சீதை இவ்வாறு இராமனை நினைந்து பலவாறு சொல்லித் தன் உயிர் ஊசலாட வருந்துவாள்; சிறந்த வீரனைப் போலவும் யானை போலவும் வீதியிலே சென்ற வீரனைக் காணத் துடிக்கிறாள் என்பது.-1*

***172. என்று மாதராள் நினைந்து. இவ்***
***இடரின் மூழ்கு போதினில்.***
***குன்றுபோல் எழுந்த கொங்கை***
***மங்கை கொம்பை அன்னவள்.***
***வென்றி வீரன் இங்கு வந்து***
***வில் இறுத்த மேன்மையை***
***சென்று கூறுவோம்' எனத்***
***தெளிந்து சிந்தை முந்துவாள்.***

*சீதை அவ்வீரனை (இராமனை) நினைந்து வருந்துகையில் இராமன் வில் இறுத்த செய்தியைக் கூறுவதற்காகத் தோழி விரைந்து செல்கின்றாள் என்பது. -1*

***13 எழுச்சிப் படலம்***

***173. 'ஓது நீதியின் கோசிக***
***மா முனி ஓலை***
***தாது சேர் தொடைத் தயரதன்***
***காண்க! தற் பிரிந்து***
***போது கானிடைத் தாடகை***
***பொருப்பு எனப் புகுந்து.***
***வாது செய்து நின்று. இராகவன்***
***வாளியால் மாண்டாள்.***

*கோசிக முனிவன் தசரதனுக்குத் தூதுவர் மூலம் ஓலை போக்குகிறான்; காட்டில் தாடகை என்னும் அரக்கி மலையென வந்து போர் செய்து இராமனது அம்பினால் மடிந்தாள் என்பது.-1*

***174. 'சிறந்த வேள்வி ஒன்று அமைத்தனென்; அதுதனைச் சிதைக்க.***
***இறந்த தாடகை புதல்வர் ஆம்***
***இருவர் வந்து எதிர்த்தார்;***
***அறம் கொள் மாலவன்***
***வாளியால் ஒருவன் தன் ஆவி***
***குறைந்து போயினன்; ஒருவன் போய்க்***
***குரை கடல் குளித்தான்.***

*விசுவாமித்திரன் அமைத்த வேள்வியைச் சிதைக்க இறந்து போன தாடகையின் மைந்தர் இருவர் வர. அவர்களுள் ஒருவன் இராமனது கணையால் மடிய. மற்றவன் கடலில் சென்று ஒளிந்து கொண்டான் என்பது.-2*

***175. ‘கூட மேவு போர் அரக்கரை***
***இளையவன் கொன்று.***
***நீடு வேள்வியும் குறை படாவகை***
***நின்று நிரப்பி.***
***பாடல் மா மறைக் கோதமன்***
***பன்னி சாபத்தை.***
***ஆடல் மா மலர்ச்சோலையில்.***
***இராகவன் அகற்றி.***

*எதிர்த்த அரக்கரை இலக்குவன் கொல்ல. வேள்வியும் இனிதாக முற்றியது; கௌதமன் மனைவி அகலிகைக்கு நேர்ந்த சாபத்தை இராமன் போக்கினான் என்பது.-3*

***176. ‘பொரு இல் மா மதில் மிதிலையில்***
***புகுந்து. போர் இராமன்***
***மருவு வார் சிலை முறித்தலின்.***
***சனகன் தன் மகளை.***
***“தருவென் யான்” என இசைந்தனன்; தான் இங்கு விரைவின்***
***வருக’ என்பதாம் வாசகம் கேட்டு. உளம் மகிழ்ந்தான்.***

***பின்னர் மூவரும் மிதிலை சேர்தல்;அங்கே இராமன் சிவ தனுசை முறித்தது; மகிழ்ந்த சனகன் தன் மகளான சீதையை இராமனுக்கு மணமுடிக்க இசைந்தது; தசரதனை விரைந்து வருமாறு வேண்டியது ஆகிய செய்திகளைக் கூறுவது இப் பாடல்.-4***

***177. பன்னும்***
***நான்மறை வசிட்டனாம்***
***பராவ அரு முனிக்கும்.***
***அன்னைமார்க்கும். தன் அமைச்சர்க்கும்.***
***சோபனம் அறிவித்து.***
***இன்ன வாசக ஓலை அங்கு***
***இட்ட தூதர்க்குச்***
***சொன்னம் ஆயிரம் கோடியும்***
***தூசுடன் கொடுத்தான்.***

***சொன்னம்*** *- பொன்;* ***தூசு*** *- ஆடை.*

*நான்மறை வசிட்டன். அரசியர் அமைச்சர் ஆகியோர்க்குத் தசரதன் மங்கலச் செய்தி தெரிவித்தது;ஓலை தாங்கி வந்த தூதர்க்குப் பொன்னும். பட்டாடையும் தந்தது - இச்செய்திகளை இப்பாடல் எடுத்துரைக்கிறது. -5*

***178. மாண்ட பின்னரும் மந்திர வேள்வியும் இயற்றித்***
***தூண்டு அரும் பெரும்......... ................. ..................***
***................ ............. ................ .............. ..................***
***................ .............. சனகனும் மகட்கொடை நேர்ந்தான்.***

*விசுவாமித்திரன் வேள்வியை நிறைவு செய்ததும். தசரதன் இராமன் - சீதை மணத்தை ஏற்றுக் கொண்டதும் இப்பாடலால் கூறப்பெறுகின்றன. -6*

***179. மன்னன் அங்கு அவர் பெருமகம்***
***காணிய வருவான்***
***அன்ன வசிட்டன் அந்தணர்***
***அரசர் ஆபாலர்***
***இன்னர் இன்றியே வருக என***
***எழுதினன்; இச் சொல்***
***சொன்ன வாசகம் சொல்தொறும்***
***அமுது எனச் சொரிந்த.***

*தசரதன் அவர்களின் திருமணத்தின் பொருட்டு வசிட்டன். அந்தணர். அரசர் ஆகியோரை உடனே புறப்படுமாறு ஓலை விடுத்த செய்தி இதில் கூறப்படுகிறது.-7*

***180. சாற்றிய முரசு ஒலி செவியில் சாருமுன்.***
***கோல் தொடி மகளிரும். கோல மைந்தரும்.***
***வேல் தரு குமரரும். வென்றி வேந்தரும்.***
***காற்று எறி கடல் எனக் களிப்பின் ஓங்கினார்.***

*மண முரசு முழங்கியது; கேட்ட மகளிர் ஆடவர். வேல் தாங்கிய வீரர். அரசர் ஆகியோர் காற்றினால் பொங்கும் கடலென மகிழ்ந்தனர் என்னும் செய்திகள் இதிற் சொல்லப் பெறுகின்றன.-1*

***181. எதிர் கொண்டு ஏந்தி ஓர் ஏந்திழை கொங்கை பூண்***
***அதிர. மார்பம் அழுந்தத் தழுவினான்.***
***'முதிரும் தோள் மலையோ முலைக் குன்றமோ***
***அதிகம் என்பது அறிக வந்தேன்' என்றான்.***

***சேனைகள் மிதிலை செல்லும் காட்சி*** *- வீரன் ஒருவன் தன் மனைவியை மார்போடு தழுவிய செய்தி இப் பாடலால் கூறப்பெறுகிறது. -1*

***18 உண்டாட்டுப் படலம்***

*182.* ***அரம்பையரினும். இவர் ஆடல் நன்று எனப்***
***புரந்தரன் கலவியின் பூசல் நோக்கி. வான்***
***நிரம்பிய கண்களை முகிழ்ந்து. நீள் நகர்***
***கரந்தது கடுத்து உடுக்கணங்கள் மாண்டவே.***

***புரந்தரன்*** - *இந்திரன்;* ***உடு*** - *தாரகைகள்;* ***கரத்தல்*** - *ஒளித்தல். -1*

*22* ***கடிமணப் படலம்***

*183.* ***எரி கால் சுடர் ஏக. எழுந்த நிலா***
***வரும் ஈரமும். மா மயில் சானகிதன்***
***திருமேனியின்மீது சினந்து சுட.***
***தரியாது. உளம் நொந்து. தனித்து உறைவாள்.***

***தரியாது*** - *பொறாது. -1*

*184.* ***என்று. ஐயன் மனத்தொடும் எண்ணினன்; மற்று அன்று அங்கு***
***அவை நிற்க. அருட் சனகன் முன் தந்த தவத்து உறு***
***மொய்குழலாள் துன்றும் மணம் உற்றது சொல்லிடுவாம்.***
*துன்றும்* ***- பொருந்தும் இது கவிக்கூற்று. -1*** *185.* ***கதிரவன்***
***எழலோடும். கடி நகர் இடம் எங்கும்***
***மதி முக மடவாரும் மைந்தரும் முதியோரும்***
***விதி புரி செயல்போலும். மேல் உலகினும் இல்லாப்***
***புதுமையின் உறு. கோலம் புனைதலை முயல்வுற்றார்.***

***கடி*** - *காவல்;* ***விதி*** - *பிரமன்;* ***முயல்வுறல்*** - *முயற்சி தலைப்படுதல். -1*

*186.* ***என்றும். நான்முகன் முதல் யாரும். யாவையும்.***
***நின்ற பேர் இருளினை நீக்கி. நீள் நெறி***
***சென்று மீளாக் குறி சேரச் சேர்த்திடு***
***தன் திரு நாமத்தைத் தானும் சாத்தியே.***

***நாமம்*** - *பெயர். திருமண்; திருமண் இடல் சிறப்பு உரைத்தவாறு. -1*

*23* ***பரசுராமப் படலம்***

*187.* ***கயிலைக் கிரிதனை மூடிய அன்றிற்கிரி கந்தன்***
***அயிலைப் புக விடர்விட்டதுபோல் ஏழ் வழியாகச்***
***சயிலத் துளைபட எய்தனை. அயில் தெற்றிய அதனால்***
***முயலுற்றவர் நிருபக்குலம் மூ-ஏழ் முறை முடித்தான்.***

**அன்றில் கிரி** - *கிரௌஞ்சம்;* **அயில்** - *வேல்;* **சயிலம்** - *சைலம் - சிலா - கல் - மலை;* **நிருபக்குலம்** - *மன்னர் மரபு. -1*